# மத்தேயு எழுதிய சுவிசேஷம்

### இயேசுவின் குடும்ப வரலாறு

(லூக்கா 3:23-38)

1 இயேசு கிறிஸ்துவின் குடும்ப வரலாறு
பின்வருமாறு. தாவீதின் வழி வந்தவர்
இயேசு. தாவீது ஆபிரகாமின் குடும்பத்தைச்
சேர்ந்தவர்.

2 ஆபிரகாமின் மகன் ஈசாக்கு.
ஈசாக்கின் மகன் யாக்கோபு.
யாக்கோபின் பிள்ளைகள் யூதாவும்
அவன் சகோதரர்களும்.
3 யூதாவின் மக்கள் பாரேசும்
சாராவும் (அவர்களின் தாய் தாமார்.)
பாரேசின் மகன் எஸ்ரோம்.
எஸ்ரோமின் மகன் ஆராம்.
4 ஆராமின் மகன் அம்மினதாப்.
அம்மினதாபின் மகன் நகசோன்.
நகசோனின் மகன் சல்மோன்.
5 சல்மோனின் மகன் போவாஸ்.
(போவாசின் தாய் ராகாப்.)
போவாசின் மகன் ஓபேத்.
(ஓபேத்தின் தாய் ரூத்.)
ஓபேத்தின் மகன் ஈசாய்.
6 ஈசாயின் மகன் அரசனான தாவீது.
தாவீதின் மகன் சாலமோன்.
(சாலமோனின் தாய் உரியாவின்
மனைவி.)

7 சாலமோனின் மகன் ரெகொபெயாம்.
ரெகொபெயாமின் மகன் அபியா.
அபியாவின் மகன் ஆசா.
ஆசாவின் மகன் யோசபாத்.
யோசபாத்தின் மகன் யோராம்.
யோராமின் மகன் உசியா.
9 உசியாவின் மகன் யோதாம்.
யோதாமின் மகன் ஆகாஸ்.
ஆகாஸின் மகன் எசேக்கியா.
10 எசேக்கியாவின் மகன் மனாசே.
மனாசேயின் மகன் ஆமோன்.
ஆமோனின் மகன் யோசியா.
11 யோசியாவின் மக்கள் எகொனியாவும்
அவன் சகோதரர்களும்.
(இக்காலத்தில் தான் யூதர்கள்
பாபிலோனுக்கு அடிமைகளாகக்
கொண்டு செல்லப்பட்டனர்.)
12 அவர்கள் பாபிலோனுக்குக் கொண்டு
செல்லப்பட்ட பின்:
எகொனியாவின் மகன் சலாத்தியேல்.
சலாத்தியேலின் மகன்
சொரொபாபேல்.
13 சொரொபாபேலின் மகன் அபியூத்.
அபியூத்தின் மகன் எலியாக்கீம்.
எலியாக்கீமின் மகன் ஆசோர்.
14 ஆசோரின் மகன் சாதோக்.
சாதோக்கின் மகன் ஆகீம்.
ஆகீமின் மகன் எலியூத்.
15 எலியூத்தின் மகன் எலியாசார்.
எலியாசாரின் மகன் மாத்தான்.
மாத்தானின் மகன் யாக்கோபு.
16 யாக்கோபின் மகன் யோசேப்பு.
யோசேப்பின் மனைவி மரியாள்.
மரியாளின் மகன் இயேசு.
கிறிஸ்து* என அழைக்கப்பட்டவர்
இயேசுவே.

17எனவே ஆபிரகாம் முதல் தாவீதுவரை
பதினான்கு தலைமுறைகள். தாவீது முதல்
யூதர்கள் அடிமைப்பட்டு பாபிலோனுக்குக்
கொண்டு செல்லப்பட்டது வரைக்கும் பதி
னான்கு தலைமுறைகள். யூதர்கள் பாபி
லோனுக்குக் கொண்டு செல்லப்பட்டதிலிருந்து
கிறிஸ்து பிறக்கும்வரை பதினான்கு தலை
முறைகள்.

### இயேசு கிறிஸ்துவின் பிறப்பு

(லூக்கா 2:1-7)

18இயேசு கிறிஸ்துவின் தாய் மரியாள்.
இயேசுவின் பிறப்பு இப்படி நிகழ்ந்தது. மரி
யாள் யோசேப்புக்கு நிச்சயிக்கப்பட்டிருந்
தாள். அவர்கள் திருமணத்திற்கு முன்பே மரி
யாள் தான் கருவுற்றிருப்பதை அறிந்தாள்.
பரிசுத்த ஆவியின் வல்லமையால் மரியாள்
கருவுற்றிருந்தாள். 19மரியாளின் கணவனா
கிய யோசேப்பு மிகவும் நல்லவன். மக்களின்
முன்னிலையில் மரியாளை அவன் அவம
திக்க விரும்பவில்லை. எனவே யோசேப்பு
மரியாளை இரகசியமாகத் தள்ளிவிட நினைத்
தான். 20யோசேப்பு இந்த சிந்தையாயிருக்கும்
பொழுது, கர்த்தருடைய தூதன் யோசேப்பின்
கனவில் தோன்றி, “தாவீதின் மகனாகிய*
யோசேப்பே, மரியாளை உன் மனைவியாக

---

**கிறிஸ்து** அபிஷேகம் பண்ணப்பட்டவர். (மேசியா) அல்லது தேவனால் தேர்ந்தெடுக்கப் பட்டவர்.

**தாவீதின் மகன்** தாவீதின் குடும்பத்திலிருந்து வந்தவர், இஸ்ரவேலின் இரண்டாவது அரசன், கிறிஸ்துவுக்கு 1000 ஆண்டுகளுக்கு முற்பட்டவன்.

ஏற்றுக்கொள்ளத் தயங்காதே. அவள் கருவி
லிருக்கும் குழந்தை பரிசுத்த ஆவியான
வரால்* உண்டானது. 21அவள் ஒரு மகனைப்
பெற்றெடுப்பாள். அக்குழந்தைக்கு இயேசு*
எனப் பெயரிடு. அவர் தமது மக்களின் பாவங்
களை நீக்கி இரட்சிப்பார்” என்றான்.

22இவையெல்லாம் தீர்க்கதரிசியின்* மூல
மாகத் தேவன் சொன்னவைகளின் நிறை
வேறுதல்களாக நடந்தன. தீர்க்கதரிசி சொன்
னது இதுவே: 23“கன்னிப் பெண் ஒரு மகனைப்
பெற்றெடுப்பாள். அவருக்கு இம்மானுவேல்
என்று பெயரிடுவார்கள்.”* (இம்மானுவேல்
என்பதற்கு, “தேவன் நம்முடன் இருக்கிறார்”
என்று பொருள்.)

24விழித்தெழுந்த யோசேப்பு, கர்த்தருடைய
தூதன் சொன்னபடியே மரியாளை மணந்
தான். 25ஆனால் மரியாள் தன் மகனைப்
பெற்றெடுக்கும் வரை யோசேப்பு அவளை
அறியவில்லை. யோசேப்பு அவருக்கு
‘இயேசு’ எனப் பெயரிட்டான்.

## ஞானிகளின் வருகை

2 யூதேயாவிலுள்ள பெத்லகேம் நகரில்
இயேசு பிறந்தார். அவர் ஏரோது* மன்னன்
காலத்தில் பிறந்தார். அதன் பின்பு இயேசு
பிறந்தவுடன், சில ஞானிகள் எருசலேமுக்குக்
கிழக்கிலிருந்து வந்தனர். 2அவர்கள் மக்
களைப் பார்த்து “புதிதாகப் பிறந்த யூதர்களின்
அரசரான குழந்தை எங்கே? அவர் பிறந்துள்
ளதை அறிவிக்கும் நட்சத்திரத்தைக் கண்
டோம். கிழக்கு திசையில் அந்நட்சத்திரம்
மேலெழுவதைக் கண்டோம். நாங்கள் அவரை
வணங்க வந்துள்ளோம்” என்று சொன்னார்
கள். 3ஏரோது மன்னன் யூதர்களின் இப்புதிய
அரசரைப்பற்றிக் கேள்வியுற்றான். அதைக்
கேட்டு ஏரோது மன்னனும் எருசலேம் மக்கள்
அனைவரும் கலக்கம் அடைந்தனர். 4ஏரோது
தலைமை ஆசாரியர் மற்றும் வேதபாரகரின்
கூட்டத்தைக் கூட்டினான். கிறிஸ்து எங்கே
பிறந்திருப்பார் என அவர்களைக் கேட்டான்.
5அதற்கு அவர்கள், “யூதேயாவிலுள்ள பெத்ல
கேமில் பிறப்பார். ஏனெனில்,

6 ‘யூதேயாவிலுள்ள பெத்லகேமே, உனக்கு
யூதேயாவின் ஆட்சியாளர்களுக்கிடை
யில் முக்கியத்துவம் உண்டு. ஆம்,
உன்னிலிருந்து ஒரு பிரபு தோன்றுவார்.
அவர் இஸ்ரவேல் என்னும் என்
மக்களை வழி நடத்துவார்’
மீகா 5:2

என்று தீர்க்கதரிசி வேத வாக்கியங்களில்*
எழுதியுள்ளார்” என்று கூறினார்கள்.

7பின், கிழக்கிலிருந்து வந்த ஞானிகளுடன்
ஏரோது இரகசியமாகப் பேசி அவர்கள் முதன்
முதலில் நட்சத்திரத்தைக் கண்ட காலத்தை
அவர்களிடமிருந்து அறிந்தான். 8ஏரோது அந்த
ஞானிகளிடம் “நீங்கள் சென்று அந்தக் குழந்
தையைக் கவனமாகத் தேடுங்கள். நீங்கள் அக்
குழந்தையைக் கண்டதும் என்னிடம் வந்து
சொல்லுங்கள். பின் நானும் சென்று அக்குழந்
தையை வணங்க இயலும்” என்று கூறி
அவர்களைப் பெத்லகேமுக்கு அனுப்பி வைத்
தான். 9மன்னன் இவ்வாறு கூறியதைக் கேட்ட
ஞானிகள் அங்கிருந்து செல்லும்போது அவர்
கள் கிழக்கில் தாங்கள் கண்ட அதே நட்சத்தி
ரத்தை மீண்டும் பார்த்தனர். ஞானிகள் அந்த
நட்சத்திரத்தைப் பின்தொடர்ந்தனர். நட்சத்திரம்
அவர்களுக்கு முன்னாலேயே சென்று
குழந்தை பிறந்த இடத்திற்கு மேலாக வந்து
நின்றது. 10நட்சத்திரத்தைக் கண்ட ஞானிகள்
மிகவும் மகிழ்ந்தனர். 11குழந்தை இருந்த வீட்
டிற்கு ஞானிகள் வந்தனர். அவர்கள் குழந்
தையை அதன் தாய் மரியாளுடன் பார்த்தனர்.
ஞானிகள் குழந்தையைத் தாழ விழுந்து
வணங்கினர். குழந்தைக்காகத் தாங்கள்
கொண்டு வந்த பரிசுப்பொருட்களை எடுத்து
வைத்தனர். அவர்கள் தங்கத்தாலான பொருட்
களையும் தூபவர்க்கத்தையும் வெள்ளைப்
போளம் முதலான வாசனைப் பொருட்க
ளையும் கொடுத்தனர். 12அதன் பின்னர்
தேவன் ஞானிகளின் கனவில் தோன்றி அவர்
களை ஏரோது மன்னனிடம் திரும்பிச் செல்ல
வேண்டாம் என எச்சரித்தார். எனவே, ஞானி
கள் வேறு வழியாகத் தங்கள் நாட்டிற்குத்
திரும்பினர்.

## எகிப்திற்குத் தப்பிச் செல்லுதல்

13ஞானிகள் சென்றபின், யோசேப்பின்
கனவில் ஒரு தேவதூதன் தோன்றி, “எழுந்
திரு! குழந்தையையும் அதன் தாயையும்
கூட்டிக்கொண்டு எகிப்துக்குத் தப்பிச்செல்.
ஏரோது குழந்தையைத் தேடத் தொடங்குவான்.
ஏரோது குழந்தையைக் கொல்ல விரும்புகி
றான். எனவே, நான் சொல்லுகிற வரைக்கும்
எகிப்தில் தங்கியிரு” என்று சொன்னான்.

14எனவே யோசேப்பு விழித்தெழுந்து
குழந்தையுடனும் அதன் தாயுடனும் இரவிலே
எகிப்துக்குப் புறப்பட்டான். 15ஏரோது
மரிக்கும் வரையில் அவர்கள் எகிப்தில் தங்கி

---

**பரிசுத்த ஆவி** தேவனுடைய ஆவி, கிறிஸ்துவின் ஆவி, தேற்றுபவர். தேவனோடும் கிறிஸ்துவோடும் சேர்ந்தவர், தேவனுடைய பணிகளை உலகில் மக்களுக்கிடையில் செய்பவர்.

**இயேசு** இயேசு என்ற பெயருக்கு இரட்சிப்பு என்று பொருள்.

**தீர்க்கதரிசி** தேவனுக்காகப் பேசும் ஒருவர். அவர் அவ்வப்போது வருங்காலத்தில் நடப்பதைப்பற்றிக் கூறுபவர்.

**கன்னி … பெயரிடுவார்கள்** ஏசாயா 7:14.

**ஏரோது** முதல் (பெரிய) ஏரோது. கி.மு. 40 முதல் கி.மு. 4வரை யூதேயாவை அரசாண்டவன்.

**வேத வாக்கியங்கள்** பரிசுத்த எழுத்துக்கள் பழைய ஏற்பாடு.

யிருந்தனர். "எகிப்திலிருந்து என் மகனை
வெளியே வரவழைத்தேன்"* என்று தீர்க்க
தரிசியின் வழியாகத் தேவன் சொல்லியதின்
நிறைவேறுதலாக இது நடந்தேறியது.

### பெத்லகேமின் ஆண் குழந்தைகளைக் கொல்லுதல்

16ஞானிகள் தன்னைச் சந்திக்காமல்
சென்றுவிட்டதை அறிந்த ஏரோது மிகுந்த
கோபமுற்றான். குழந்தை பிறந்த காலத்தை
ஏரோது ஞானிகளிடமிருந்து அறிந்திருந்தான்.
இதற்குள் இரண்டு வருடங்களாகி இருந்தன.
எனவே, பெத்லகேமிலும் அதைச் சுற்றியுள்ள
பகுதிகளிலும் உள்ள எல்லா ஆண்குழந்தை
களையும் கொல்ல ஏரோது ஆணையிட்டான்.
ஆகவே, இரண்டும் அதற்குக் குறைவான
வயதுடையதுமாகிய எல்லா ஆண்குழந்தை
களையும் கொன்றுவிட ஆணையிட்டான்.
17தீர்க்கதரிசி எரேமியாவின் மூலமாகத்
தேவன் கீழ்க்கண்டவாறு சொன்னது நடந்
தேறியது:

18 "ராமாவிலே ஒரு குரல் கேட்டது.
துக்கத்தின் மிகுதியில் வந்த கதறல் அது.
தன் குழந்தைகளுக்காக அழுகிறாள்,
ராகேல். அவளைத் தேற்ற முடியாது,
ஏனெனில் அவளது குழந்தைகள் இறந்து
விட்டன."

*எரேமியா 31:15*

### எகிப்தில் இருந்து திரும்புதல்

19ஏரோது இறந்தபின், யோசேப்பின்
கனவில் கர்த்தருடைய தூதன் ஒருவன் தோன்
றினான். இது யோசேப்பு எகிப்தில் இருக்கும்
போது நடந்தது. 20தூதன் அவனிடம், "எழுந்
திரு! குழந்தையையும் அதன் தாயையும்
அழைத்துக்கொண்டு இஸ்ரவேலுக்குச் செல்.
ஏனெனில் குழந்தையைக் கொல்ல முயன்ற
வர்கள் இப்பொழுது இறந்து விட்டனர்" என்
றான். 21ஆகவே, யோசேப்பு குழந்தையையும்
அதன் தாயையும் அழைத்துக்கொண்டு
இஸ்ரவேல் சென்றான். 22அப்பொழுது யூதே
யாவின் மன்னனாக அர்கெலாயு இருந்தான்
என்பதை யோசேப்பு கேள்வியுற்றான். தன்
தந்தை ஏரோது இறந்த பின் அர்கெலாயு
யூதேயாவின் மன்னனானான். இவ்வாறு,
யூதேயாவுக்குச் செல்ல யோசேப்பு தயங்கி
னான். யோசேப்பு கனவில் எச்சரிப்படைந்து
அங்கிருந்து கலிலேயா பகுதிக்குச் சென்றான்.
23யோசேப்பு நாசரேத் என்னும் நகருக்குச்
சென்று அங்கு வசித்தான். எனவே தேவன்
தீர்க்கதரிசிகள் வாயிலாக "கிறிஸ்து நச
ரேயன்* என்று அழைக்கப்படுவார்" என
சொன்னது நடந்தேறியது.

---

**'எகிப்த் ... வரவழைத்தேன்'** ஓசியா 11:1

**நசரேயன்** நாசரேத் என்ற நகரத்தவன். 'கிளை' என்ற பொருள் தரும் பெயர். ஏசாயா 11:1.

### ஸ்நானகன் யோவானின் திருப்பணி

(மாற்கு 1:1-8; லூக்கா 3:1-9, 15-17; யோவான் 1:19-28)

3 அந்நாட்களில் யோவான் ஸ்நானகன்
யூதேயாவின் வனாந்தரத்தில் வருகை
புரிந்து, 2"உங்கள் மனதையும் வாழ்வையும்
சீர்ப்படுத்துங்கள். ஏனென்றால் பரலோக
இராஜ்யம் சமீபித்திருக்கிறது" என்று போ
தனை செய்தான்.

3"'கர்த்தருக்கான வழியை ஆயத்தம் செய்
யுங்கள்; அவரது பாதையைச் சீர்படுத்
துங்கள்' என்று வனாந்தரத்தில் ஒருவன்
சத்தமிடுகிறான் "

*ஏசாயா 40:3*

என தீர்க்கதரிசியாகிய ஏசாயா குறிப்பிட்டது
இந்த யோவான் ஸ்நானகனைப் பற்றிதான்.
4ஒட்டக உரோமத்தால் ஆன ஆடையை
அணிந்து தோல்கச்சையொன்றைத் தன் இடுப்
பில் இவன் கட்டியிருந்தான். வெட்டுக் கிளியும்
காட்டுத்தேனும் அவன் உணவாயிருந்தன.
5யோவானின் போதனையைக் கேட்க எருச
லேமிலிருந்தும் யூதேயா முழுவதிலிருந்தும்
யோர்தான் நதிக்கரை முழுவதிலிருந்தும் மக்
கள் வந்தனர். 6அம் மக்கள் தங்கள் பாவங்
களை அறிக்கை செய்தனர். யோவான் அவர்
களுக்கு யோர்தான் நதியில் ஞானஸ்நானம்*
கொடுத்தான்.
7ஞானஸ்நானம் கொடுத்துக்கொண்டிருந்த
இடத்திற்கு பரிசேயர்* மற்றும் சதுசேயரில்*
பலரும் வந்தனர். அவர்களைக் கண்டதும்
யோவான், "நீங்களெல்லோரும் பாம்பின்
குட்டிகள். வரப்போகும் தேவனின் கோபத்தி
லிருந்து தப்பிச்செல்ல உங்களை எச்சரித்தது
யார்? 8உங்கள் மனமும் வாழ்வும் திருந்தி
விட்டன என்பதை நிரூபிக்கக் கூடிய செயலை
நீங்கள் செய்யவேண்டும். 9நாம் ஆபிரகாமின்
பிள்ளைகள் எனப்பெருமை பேசித் திரிய
லாம் என எண்ணாதீர்கள். நான் சொல்
கிறேன். ஆபிரகாமுக்குப் பிள்ளைகளை இங்
குள்ள கற்களிலிருந்தும் உண்டாக்க தேவன்
வல்லவர். 10மரங்களை வெட்டக் கோடரி தயா
ராக இருக்கிறது. நற்கனிகளைத் தராத எல்லா
மரங்களும் வெட்டப்பட்டுத் தீயிலிடப்படும்.
11"உங்கள் மனமும் வாழ்வும் திருந்தி
விட்டன என்பதைக் காட்ட நான் உங்களுக்குத்
தண்ணீரால் ஞானஸ்நானம் தருகிறேன்.

---

**ஞானஸ்நானம்** இதற்கு மூழ்குதல், அமிழ்த்துதல் அல்லது ஒருவனையோ ஒரு பொருளையோ நீருக் குள் புதைத்தல் என்று பொருள்.

**பரிசேயர்** பரிசேயர்கள் யூதமதக் குழுவினர். இவர்கள் யூத சட்டங்களையும் வழக்கங்களையும் கவனமாக கடைபிடிப்பவர்கள்.

**சதுசேயர்** இவர்கள் முன்னனி யூத மதக் குழுவி னர். இவர்கள் பழைய ஏற்பாட்டின் முதல் ஐந்து நூல்களை மட்டுமே ஏற்றுக்கொள்பவர்கள். இறப்பிற் குப்பின் மறுவாழ்வு இல்லை என நம்பியவர்கள்.

ஆனால், என்னிலும் பெரியவர் ஒருவர் வரப் போகிறார். அவர் காலணிகளை அவிழ்க் கவும் நான் தகுதியற்றவன். அவர் பரிசுத்த ஆவியினாலும் அக்கினியினாலும் உங் களுக்கு ஞானஸ்நானம் கொடுப்பார்.
[12]அவர் தானியங்களைச் சுத்தம் செய்யத் தயாராக வருவார். அவர் பதரிலிருந்து நல்ல தானிய மணிகளைப் பிரித்தெடுத்துச் தன் களஞ்சியத் தில் சேர்ப்பார். பதரையோ அணைந்து போ காத தீயிலிட்டு எரிப்பார்" என்றான்.

### இயேசுவின் ஞானஸ்நானம்

(மாற்கு 1:9-11; லூக்கா 3:21-22)

[13]அப்பொழுது இயேசு கலிலேயாவிலி ருந்து யோர்தான் நதிக்கரைக்கு வந்தார். இயேசு யோவானிடம் சென்று தனக்கு ஞானஸ்நானம் கொடுக்கும்படி கேட்டார்.
[14]ஆனால் யோவானோ இயேசுவுக்கு தான் ஞானஸ்நானம் கொடுக்குமளவுக்கு மேன்மை யானவன் அல்ல என்று அவரைத் தடுக்க முயன்றான். எனவே யோவான் இயேசுவிடம், "நீர் என்னிடம் ஞானஸ்நானம் பெறலாகுமோ? நான் தான் உம்மிடம் ஞானஸ்நானம் பெற வேண்டும்" என்றான்.
[15]அதற்கு இயேசு, "தற்பொழுது நான் சொல்லுகிறபடியே செய். தேவன் எதிர் பார்க்கும் நீதியான செயல்கள் அனைத்தையும் நான் செய்யவேண்டும்" என்று பதில் சொன் னார். ஆகவே, யோவான் இயேசுவுக்கு ஞானஸ்நானம் கொடுக்கச் சம்மதித்தான்.
[16]இயேசு ஞானஸ்நானம் பெற்று, நீரி லிருந்து மேலெழுந்து வந்தபோது. வானம் திறந்து, தேவ ஆவியானவர் ஒரு புறாவைப் போலக் கீழிறங்கி அவரிடம் வருவதைக் கண்டார்.
[17]வானத்திலிருந்து ஒரு குரல் கேட்டது. அக்குரல், "இவர் (இயேசு) என் குமாரன். நான் இவரை நேசிக்கிறேன். நான் இவரிடத்தில் பிரியமாயிருக்கிறேன்" எனக் கூறியது.

### இயேசுவுக்குண்டான சோதனைகள்

(மாற்கு 1:12-13; லூக்கா 4:1-13)

4 பின்னர் பரிசுத்த ஆவியானவர் இயே சுவை வனாந்தரத்துக்கு அழைத்துச் சென் றார். பிசாசினால் சோதிக்கப்படுவதற்காக இயேசு அங்கு அழைத்துச் செல்லப்பட்டார்.
[2]அங்கு நாற்பதுநாள் இரவும் பகலும் இயேசு உணவேதும் உட்கொள்ள வில்லை. அதன் பின், இயேசுவுக்கு மிகுந்த பசியுண்டாயிற்று.
[3]அப்போது அவரை சோதிக்க பிசாசு வந்து, அவரிடம், "நீர் தேவனுடைய குமாரன் என் பது உண்மையானால், இந்தக் கற்களை அப் பங்களாக மாறும்படிச் சொல்லும்" என்றான்.
[4]அதற்கு இயேசு,

"'மக்களை வாழவைப்பது வெறும் அப்பம்
மட்டுமல்ல. மக்களின் வாழ்வு தேவனின்
வார்த்தைகளைச் சார்ந்துள்ளது'
உபா. 8:3

என்று வேதவாக்கியங்களில் எழுதப்பட் டுள்ளதே" என்று பதிலளித்தார்.
[5]பின்பு பிசாசு இயேசுவைப் பரிசுத்த நகரமான எருசலேமுக்கு அழைத்துச் சென் றான். பிசாசு இயேசுவைத் தேவாலயத்தின் மிக உயரமான இடத்தில் கொண்டுபோய் நிறுத்தி,
[6]"நீர் தேவனுடைய குமாரன் என்பது உண்மையானால், இங்கிருந்து கீழே குதியும். ஏனென்றால்,

''தேவன் உமக்காகத் தன் தூதர்களுக்கு
கட்டளையிடுவார், தூதர்களின் கரங்கள்
உன்னைப் பற்றும். ஆகவே உன் கால்கள்
பாறைகளில் மோதாது'
சங்கீதம் 91:11-12

என்று வேதவாக்கியங்களில் எழுதியிருக்கி றது" எனக் கூறினான்.
[7]அதற்கு இயேசு,

"'தேவனாகிய உன் கர்த்தரை சோதிக்கக்
கூடாது' உபா. 6:16

என்றும் வேதவாக்கியங்களில் எழுதப் பட்டுள்ளதே" என்று பதில் சொன்னார்.
[8]பிசாசு பின்னர் இயேசுவை மிக உயர மான ஒரு மலைச் சிகரத்திற்கு அழைத்துச் சென்று, உலகின் எல்லா நாடுகளையும் அவற்றின் மகிமைகளையும் பொருட்களை யும் காட்டினான்.
[9]பிறகு பிசாசு இயேசுவிடம், "நீர் சாஷ்டாங்கமாய் விழுந்து என்னை வணங்கினால், இவை அனைத்தையும் நான் உமக்குத் தருவேன்" என்றான்.
[10]இயேசு பிசாசை நோக்கி, "சாத்தானே! என்னை விட்டு விலகிச் செல்!

'நீ உன் தேவனாகிய கர்த்தரை மட்டுமே
வணங்கவேண்டும். அவருக்கு மட்டுமே
சேவை செய்யவேண்டும்!.'
உபா. 6:13

என்றும் வேத வாக்கியங்களில் எழுதப் பட்டுள்ளது" என்று கூறினார்.
[11]எனவே பிசாசு இயேசுவை விட்டு விலகி னான். அதன் பிறகு சில தூதர்கள் வந்து அவருக்குச் சேவை செய்தனர்.

### கலிலேயாவில் இயேசுவின் ஊழியம்

(மாற்கு 1:14-15; லூக்கா 4:14-15)

[12]யோவான் சிறையிலடைக்கப்பட்டதை இயேசு கேள்வியுற்றார். எனவே, இயேசு கலிலேயாவிற்குத் திரும்பிச் சென்றார்.
[13]இயேசு நாசரேத்தில் தங்கவில்லை. அவர் கலிலேயா ஏரிக்கு அருகிலிருந்த கப்பர்நகூம் நகருக்குச் சென்று வசித்தார். செபுலோனுக் கும் நப்தலிக்கும் அருகில் உள்ளது கப்பர் நகூம்.
[14]தீர்க்கதரிசி ஏசாயா கீழ்க்கண்டவாறு சொன்னது நடந்தேறும்படி இயேசு இவ்வாறு செய்தார்:

15 "செபுலோன் என்னும் இடமும் நப்தலி
என்னும் இடமும் யோர்தான் நதியைக்
கடந்து கடலுக்குப் போகும் சாலையில்
16 யூதர்கள் அல்லாத பிற இனத்தவர் வாழும்
இடமாக உள்ளது கலிலேயா. பாவ
இருளில் வாழ்ந்த அவர்கள் மிகப்பெரிய
வெளிச்சமொன்றைக் கண்டனர். ஒரு சுடு
காட்டைப்போல இருளடைந்து கிடக்கும்
அப்பூமியில் வாழும் மக்களை நோக்கி
அந்த வெளிச்சம் வந்தது."

*ஏசாயா 9:1-2*

### சீஷர்களைத் தேர்ந்தெடுத்தல்
*(மாற்கு 1:16-20 லூக்கா 5:1-11)*

17 அச்சமயத்திலிருந்து இயேசு "உங்கள்
மனதையும் வாழ்வையும் திருத்துங்கள்,
ஏனென்றால் பரலோக இராஜ்யம் விரைவில்
வர இருக்கிறது" என்று போதனை செய்யத்
தொடங்கினார்.
18 இயேசு கலிலேயா ஏரிக்கரையோரம்
நடந்து கொண்டிருந்தார். பேதுரு என்றழைக்
கப்பட்ட சீமோனையும் அவன் சகோதரன்
அந்திரேயாவையும் அவர் கண்டார். மீனவர்க
ளான அச்சகோதரர்கள் இருவரும் ஏரியில்
வலைவிரித்து மீன் பிடித்துக் கொண்டிருந்
தனர். 19 இயேசு அவர்களிடம், "என்னைத்
தொடர்ந்து வாருங்கள். உங்களை மாறுபட்ட
மீனவர்களாக்குவேன். மீன்களை அல்ல
மனிதர்களை சேகரிக்கும் வேலையைச் செய்
வீர்கள்" என்று சொன்னார். 20 சீமோனும்
அந்திரேயாவும் தங்கள் வலைகளை விட்டு
இயேசுவைப் பின் தொடர்ந்தார்கள்.
21 இயேசு கலிலேயா ஏரிக்கரையோரம்
தொடர்ந்து நடந்து செல்லும்போது செபெதேயு
வின் புதல்வர்களான யாக்கோபு மற்றும்
யோவான் ஆகிய சகோதரர்களைக் கண்டார்.
அவர்கள் இருவரும் ஒரு படகில் தம் தந்தை
யோடு இருந்தனர். அவர்கள் மீன் பிடிப்பதற்
காகத் தங்களது வலையைத் தயார் செய்து
கொண்டிருந்தனர். இயேசு அந்தச் சகோதரர்
களைத் தம்முடன் வருமாறு அழைத்தார்.
22 எனவே, அச்சகோதரர்கள் தங்கள் படகை
யும் தந்தையையும் விட்டு இயேசுவைப் பின்
தொடர்ந்தனர்.

### போதனையும் குணமாக்குதலும்
*(லூக்கா 6:17-19)*

23 இயேசு கலிலேயா நாடு முழுவதும் உள்ள
இடங்களுக்குச் சென்றார். அவர்கள் ஜெப
ஆலயங்களில்* இயேசு தேவனுடைய இராஜ்
யத்தைப் பற்றிய நற்செய்திகளைப் போதித்
தார். மேலும், மக்களின் அனைத்து விதமான
நோய்களையும் வியாதிகளையும் இயேசு
குணப்படுத்தினார். 24 இயேசுவைப் பற்றிய
செய்தி சீரியா தேசம் முழுவதும் பரவியது.
நோயுற்ற மக்கள் அனைவரையும் இயேசு
விடம் அழைத்து வந்தனர். நோயுற்ற அம்
மக்கள் பலவிதமான வியாதிகளாலும் வலியி
னாலும் அவதியுற்றனர். சிலர் மிகுந்த வலியி
னாலும், சிலர் பிசாசு* பிடித்தும், சிலர்
வலிப்புநோயாலும்,* சிலர் பாரிச வியாதி
யாலும் பாதிக்கப்பட்டிருந்தனர். இயேசு அவர்
கள் அனைவரையும் குணமாக்கினார்.
25 பற்பல மக்கள் இயேசுவைப் பின்தொடர்ந்
தார்கள். அம்மக்கள் கலிலேயா, பத்துநகரங்
கள்,* எருசலேம், யூதேயா மற்றும் யோர்தான்
நதியின் அக்கரை முதலான பகுதிகளிலிருந்து
வந்திருந்தனர்.

### இயேசுவின் மலை பிரசங்கம்
*(லூக்கா 6:20-23)*

5 அங்குக் கூட்டமாயிருந்த மக்களைப்
பார்த்த இயேசு ஒரு குன்றின் மீது சென்று
அமர்ந்தார். அவரது சீஷர்கள் அவரிடம்
வந்தார்கள். 2 இயேசு மக்களுக்கு கீழ்க்கண்ட
வாறு போதனை செய்தார்.

3 "ஆவியில் எளிமை கொண்ட மனிதர்கள்
ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். பரலோக இரா
ஜ்யம் அவர்களுக்குரியது.
4 இம்மையில் துக்கம் அடைந்த மனிதர்கள்
ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். தேவன் அவர்
களைத் தேற்றுவார்.
5 பணிவுடையவர்கள் ஆசீர்வதிக்கப்பட்ட
வர்கள். தேவன் வாக்களித்த இடத்தை*
அவர்கள் பெறுவார்கள்.
6 மற்ற எதைக் காட்டிலும் நீதியான
செயல்களைச் செய்ய விரும்புகிறவர்கள்
ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். அவர்களுக்கு
முழுத்திருப்தியைத் தேவன் அளிப்பார்.
7 மற்றவர்களுக்குக் கருணை காட்டுகிறவர்
கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். அவர்
களுக்குக் கருணை காட்டப்படும்.
8 தூய்மையான எண்ணமுடையவர்கள்
ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். அவர்கள்
தேவனின் அருகாமையிலிருப்பார்கள்.
9 அமைதிக்காகச் செயலாற்றுகிறவர்கள்
ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். தேவன் அவர்
களைத் தன் குமாரர்கள் என அழைப்
பார்.

---

**ஜெப ஆலயங்கள்** யூதர்கள் ஜெபத்திற்காவும் வேதவாக்கியங்களை வாசிக்கவும் ஏனைய கூட்டங்களை நடத்தவும் கூடுமிடம்.

**பிசாசு** பிசாசுகள் என்பவை சாத்தானிடமிருந்து வரும் கெட்ட ஆவிகள்.

**வலிப்பு நோய்** இந்நோய்கொண்ட மக்கள் சில வேளையில் தம் சரீரத்தைக் கட்டுப்படுத்தும் சக்தியை இழப்பர்.

**பத்துநகரங்கள்** (கலிலேயா ஏரியின் கிழக்குப் பக்கமுள்ள பகுதி.) கிரேக்கத்தில் தெக்காபோலீஸ் என்ற இடத்தில் ஒரு காலத்தில் 10 நகரங்கள் இருந்தன.

**'தேவன் வாக்களித்த இடம்'** சங்கீதம் 37:11.

10 நன்மை செய்வதற்காகத் தண்டிக்கப்படுகி
றவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். பர
லோக இராஜ்யம் அவர்களுக்குரியது.

11“உங்களுக்கெதிராகத் தீய சொற்களைப்
பேசி மக்கள் உங்களைத் துன்புறுத்துவார்கள்.
நீங்கள் என்னைப் பின்பற்றுவதினிமித்தம்
எல்லாவிதமான தீய சொற்களையும் உங்க
ளுக்கெதிராகச் சொல்வார்கள். ஆனால் மக்கள்
உங்களுக்கு அவற்றைச் செய்யும்பொழுது
நீங்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். 12அதற்காக
மகிழ்ச்சியடையுங்கள். தேவனுடைய மகத்
தான வெகுமதி உங்களுக்குக் காத்திருக்கிறது.
உங்களுக்கு முன்பு வாழ்ந்த தீர்க்கதரிசிகளுக்
கும் மக்கள் அதே விதமான தீமைகளைச்
செய்தார்கள்.

### உப்பு, ஒளி உவமைகள்

(மாற்கு 9:50; லூக்கா 14:34-35)

13“பூமிக்கு நீங்கள் உப்பாக இருக்கிறீர்கள்.
தன் சுவையை உப்பு இழந்தால் மீண்டும்
அதை உப்பாக மாற்றவோ, வேறு எதற்கும்
பயன் படுத்தவோ முடியாது. அது தெருவில்
எறியப்பட்டு மக்களால் மிதிக்கப்படும்.
14“உலகுக்கு ஒளிதரும் விளக்கு நீங்களே.
ஒரு குன்றின்மேல் அமைந்த பட்டணம் மறைந்
திருக்க முடியாது. 15மக்கள் எரிகின்ற விளக்
கைக் குடத்தின் கீழ் வைத்து மறைப்பதில்லை.
மாறாக, அதை மக்கள் விளக்குத் தண்டின்
மீது வைக்கிறார்கள். அப்பொழுது தான்
விளக்கு வீட்டிலுள்ள அனைவருக்கும்
வெளிச்சம் தருகிறது. 16அது போலவே, நீங்க
ளும் மற்ற மனிதர்களுக்கு விளக்காக விளங்க
வேண்டும். உங்களது நற்செயல்களை மற்ற
வர்கள் காணும்படி வாழுங்கள். பரலோகத்
திலிருக்கும் உங்கள் பிதாவை மக்கள் புகழ்ந்து
பேசுமாறு நீங்கள் வாழுங்கள்.

### இயேசுவும் பழைய ஏற்பாடும்

17“மோசேயின் சட்டங்களையோ அல்லது
தீர்க்கதரிசிகளின் போதனைகளையோ அழிப்
பதற்காக நான் வந்துள்ளதாக நினைக்காதீர்
கள். அவர்களது போதனைகளை அழிப்பதற்
காக நான் வரவில்லை. அவர்களின் போத
னைகளின் முழுப் பொருளையும் நிறைவேற்
றவே வந்துள்ளேன். 18நான் உங்களுக்கு உண்
மையைக் கூறுகிறேன். வானமும் பூமியும்
உள்ளவரைக்கும் கட்டளைகளில் எதுவும்
மறையாது. அனைத்தும் நிறைவேறுகிற
வரைக்கும் கட்டளைகளின் ஒரு சிறு எழுத்
தோ அல்லது ஒரு சிறு எழுத்தின் பகுதியோ
கூட மறையாது. 19ஒருவன் ஒவ்வொரு கட்ட
ளையையும் கடைப்பிடிக்கவேண்டும். சிறிய
தாகத் தோன்றும் கட்டளையைக் கூடக் கடைப்
பிடிக்கவேண்டும். கட்டளைகளில் ஏதேனும்
ஒன்றைத் தான் கடைப்பிடிக்காமலும் மற்றவர்
களையும் அதைக் கடைப்பிடிக்கவேண்டா
மென்றும் கூறுகிறவன் பரலோக இராஜ்யத்
தில் கடைசி ஆளாயிருப்பான். ஆனால், கட்ட
ளைகளைக் கடைப்பிடித்து மற்றவர்களையும்
கடைப்பிடிக்கச் சொல்லுகிறவன் பரலோக
இராஜ்யத்தில் மகத்தான இடத்தைப் பெறு
வான். 20சட்டங்களைப் போதிக்கிறவர்களை
விடவும் பரிசேயர்களை விடவும் நீங்கள் சிறப்
பாகச் செயல்படவேண்டும் என்று உங்
களுக்குச் சொல்கிறேன். அவர்களை விடவும்
சிறப்பாகச் செயல்படாவிட்டால், நீங்கள்
பரலோக இராஜ்யத்தில் நுழையமாட்டீர்கள்.

### கோபத்தைப் பற்றிய போதனை

21“ ‘எவரையும் கொல்லாதே.* கொலை
செய்கிறவன் தண்டிக்கப் படுவான்’ என்று
வெகு காலத்திற்கு முன்னரே நமது மக்களுக்
குச் சொல்லப்பட்டிருப்பதை அறிவீர்கள்.
22ஆனால் நான் உங்களுக்குச் சொல்கிறேன்.
யாரிடமும் கோபம் கொள்ளாதீர்கள். அனைவ
ரும் உங்கள் சகோதரர்களே. நீங்கள் மற்றவர்
களிடம் கோபம் கொண்டால், நீங்கள் நியாயந்
தீர்க்கப் படுவீர்கள். மற்றவருக்கு எதிராகத்
தீயவைகளைச் சொன்னால் யூத ஆலோச
னைக் குழுவினால் தண்டிக்கப்படுவீர்கள்.
வேறொரு மனிதனை முட்டாள் என்று நீங்கள்
அழைத்தால், நரகத் தீயின் ஆபத்துக்குள்ளா
வீர்கள்.
23“எனவே, நீங்கள் தேவனுக்கு உங்கள்
காணிக்கையைப் பலிபீடத்தில் செலுத்தும்
பொழுது மற்றவர்களையும் நினைத்துப்
பாருங்கள். நீங்கள் உங்கள் காணிக்கையைச்
செலுத்தும்பொழுது, உங்கள் சகோதரன் உங்
கள் மீது வருத்தத்துடன் இருப்பது உங்கள்
நினைவிற்கு வந்தால், 24உங்கள் காணிக்
கையைப் பலிபீடத்திற்கு முன் வைத்துவிட்டு,
சென்று அவனுடன் சமாதானமாகுங்கள். பின்
னர் வந்து உங்கள் காணிக்கையைச் செலுத்
துங்கள்.
25“உங்கள் எதிரி உங்களை நீதிமன்றத்
திற்கு அழைத்தால், அவனுடன் விரைவாக
நட்பாகுங்கள். நீதிமன்றத்திற்குச் செல்வதற்கு
முன்பே அதைச் செய்ய வேண்டும். நீங்கள்
அவனுடன் நட்பாகாவிட்டால், அவன் உங்
களை நீதிபதியிடம் ஒப்படைப்பான். மேலும்,
நீதிபதி உங்களைச் சிறையிலடைக்க காவலரி
டம் ஒப்படைப்பார். 26நான் சொல்கிறேன்,
நீங்கள் கொடுக்கவேண்டியது அனைத்தையும்
கொடுத்துத் தீர்க்கிறவரையிலும் உங்களால்
அந்தச் சிறையை விட்டு மீளமுடியாது.

### கற்பைக் குறித்த போதனை

27“ ‘பிறன் மனைவியுடன் உறவுகொள்ளும்
பாவத்தைச் செய்யாதே’* என்று கூறப்
பட்டுள்ளதை நீங்கள் அறிவீர்கள். 28ஆனால்
நான் சொல்கிறேன். ஒரு பெண்ணைக் காமக்

---

**‘எவரையும் … கொல்லாதே’** யாத். 20:13; உபா. 5:17.

**‘பிறன் … செய்யாதே’** யாத். 20:14, உபா. 5:18.

கண் கொண்டு நோக்கி அவளுடன் உடலுறவு
கொள்ள விரும்பினாலே, அவன் அவளுடன்
விபச்சாரம் செய்தவனாகிறான். 29உங்கள்
வலது கண் நீங்கள் பாவம் செய்யக் காரண
மானால், அதைப் பிடுங்கி எறியுங்கள். உங்
கள் சரீரம் முழுவதும் நரகத்தில் வீழ்வதைக்
காட்டிலும் அவ்வுடலின் ஓர் உறுப்பை இழப்
பது நன்று. 30உங்கள் வலது கை உங்களைப்
பாவம்செய்ய வைத்தால், அதை வெட்டி எறி
யுங்கள். உங்கள் சரீரம் முழுவதும் நரகத்தில்
வீழ்வதைக் காட்டிலும் அவ்வுடலின் ஒரு பகு
தியை இழப்பது நன்று.

### விவாகரத்துப்பற்றிய போதனை

(மத்தேயு 19:9; மாற்கு 10:11-12; லூக்கா 16:18)

31"'தன் மனைவியை விவாகரத்து செய்கிற
எவரும் அவளுக்கு எழுத்தின் மூலமாக
சான்றிதழ் அளிக்கவேண்டும்'* என்றும்
சொல்லப்பட்டிருக்கிறது. 32ஆனால் நான் உங்
களுக்குச் சொல்லுகிறேன்; தன் மனைவியை
விவாகரத்து செய்கிறவன் அவளை விபசா
ரப் பாவத்தின் குற்ற உணர்வுக்குள்ளாக்கு
கிறான். தன் மனைவி வேறொரு ஆடவனுடன்
சரீர உறவு வைத்திருப்பது மட்டுமே ஒருவன்
தன் மனைவியை விவாகரத்து செய்யத்தக்க
காரணமாகும். விவாகரத்து செய்யப்பட்ட அப்
பெண்ணை மணம் புரிகிறவனும் விபசாரம்
செய்தவனாகிறான்.

### வாக்குறுதிகளைப்பற்றிய போதனை

33"'நீ ஒரு சத்தியம் செய்தால், அதை மீறக்
கூடாது என்றும், கர்த்தருக்குச் செய்வதாகச்
சொன்ன வாக்குறுதியை நிறைவேற்று
வாயாக'* என்றும் வெகு காலத்திற்கு முன்
னரே நமது மக்களுக்குச் சொல்லப்பட்டி
ருப்பதை அறிவீர்கள். 34ஆனால் நான் உங்
களுக்குச் சொல்லுகிறேன்; ஒருபோதும்
சத்தியம் செய்யாதீர்கள். பரலோக இராஜ்
யத்தின் பெயரால் சத்தியம் செய்யாதீர்கள்.
ஏனென்றால், பரலோக இராஜ்யம் தேவனின்
அரியாசனம். 35பூமியின் பெயராலும் சத்தியம்
செய்யாதீர்கள். ஏனென்றால், பூமி தேவனுக்
குச் சொந்தமானது. எருசலேம் நகரத்தின்
பெயராலும் சத்தியம் செய்யாதீர்கள். ஏனென்
றால், எருசலேம் மகா இராஜாவின் நகரம்.
36உங்கள் தலைமீதும் சத்தியம் செய்யாதீர்கள்.
உங்கள் தலையின் ஒரு முடியைக் கூட உங்
களால் வெள்ளையாக்கவோ கறுப்பாக்கவோ
இயலாது. 37'ஆம்' அல்லது 'இல்லை' என்று
மட்டுமே கூறுங்கள். 'ஆம்' அல்லது 'இல்லை'
என்பதற்கு மேலாக ஏதும் நீங்கள் கூறினால்
அது பொல்லாங்கனாகிய பிசாசின் வார்த்தை
களாயிருக்கும்."

**'தன் ... வேண்டும்'** உபா 24:1

**'நீ ... அறிவாயாக'** லேவி. 19:12: எண். 30:2: உபா. 23:21.

### பழிவாங்குதல் பற்றிய போதனை

(லூக்கா 6:29-30)

38"'கண்ணுக்குக் கண். பல்லுக்குப் பல்'*
என்று கூறப்படுவதை நீங்கள் அறிவீர்கள்.
39ஆனால் நான் உங்களுக்குச் சொல்கிறேன்:
தீயவனை எதிர்க்காதீர்கள். ஒருவன் உங்கள்
வலது கன்னத்தில் அறைந்தால், அவனுக்கு
உங்கள் மறு கன்னத்தையும் காட்டுங்கள்.
40உங்கள் மேலாடைக்காக ஒருவன் உங்கள்மீது
வழக்குத் தொடர்ந்தால் அவனுக்கு உங்கள்
சட்டையையும் கொடுத்து விடுங்கள். 41ஒரு
படைவீரன் உங்களை ஒரு மைல்தூரம் நடக்க
வற்புறுத்தினால், நீங்கள் அவனுடன் இரண்டு
மைல்தூரம் நடந்து செல்லுங்கள். 42ஒருவன்
உங்களிடம் எதையேனும் கேட்டால், அவ
னுக்கு அதைக் கொடுத்து விடுங்கள். உங்களி
டமிருந்து கடன் கேட்கிறவனுக்குக் கொடுப்
பதற்கு மறுக்காதீர்கள்.

### அனைவரையும் நேசியுங்கள்

(லூக்கா 6:27-28, 32-36)

43"'உன் சினேகிதனை நேசி.* உன் பகை
வனை வெறு, என்று கூறப்பட்டுள்ளதை நீங்
கள் அறிவீர்கள். 44ஆனால் நான் உங்களுக்குச்
சொல்லுகிறேன். உங்கள் பகைவர்களையும்
நேசியுங்கள். உங்களுக்குத் தீமை செய்கிற
வர்களுக்காக ஜெபியுங்கள். 45நீங்கள் இதைச்
செய்தால் பரலோகத்திலிருக்கும் உங்கள் பிதா
வுக்கு உண்மையான குமாரர்களாவீர்கள்.
உங்கள் பிதாவானவர் நல்லவர்களுக்கும் தீய
வர்களுக்கும் சூரியனை உதிக்கச் செய்கிறார்.
உங்கள் பிதாவானவர் நன்மை செய்பவர்
களுக்கும் தீமை செய்கிறவர்களுக்கும்
மழையை அனுப்புகிறார். 46உங்களை நேசிக்
கிறவர்களை மட்டுமே நீங்கள் நேசித்தால்,
உங்களுக்கு எந்த வெகுமதியும் கிடைக்காது.
வரிவசூலிப்பவர்கள் கூட அப்படிச் செய்கி
றார்கள். 47உங்கள் நண்பர்களுடன் மட்டுமே
நீங்கள் இனிமையுடன் பழகினால், மற்றவர்
களை விட நீங்கள் எவ்வகையிலும் சிறந்த
வர்கள் அல்ல. தேவனை மறுக்கிறவர்கள்
கூட, தங்கள் நண்பர்களுக்கு இனிமையானவ
ராய் இருக்கிறார்கள். 48பரலோகத்திலிருக்கும்
உங்கள் பிதா மிகச் சிறந்த நற்குணங்கள்
கொண்ட பூரணராயிருப்பது போல நீங்களும்
பூரணராக இருக்க வேண்டும்.

### தர்மம் செய்வதைப் பற்றிய போதனை

6 "நீங்கள் நற்செயல்களைச் செய்யும்பொ
ழுது, அவற்றை மக்களின் முன்னிலையில்
செய்யாதபடி எச்சரிக்கையுடன் இருங்கள்!
மக்கள் காணவேண்டும் என்பதற்காக அவற்
றைச் செய்யாதீர்கள். நீங்கள் அவ்வாறு செய்
தால், பரலோகத்திலிருக்கும் உங்கள் பிதாவிட
மிருந்து எந்த வெகுமதியும் கிடைக்காது.

**'கண் ... பல்'** யாத் 21:24; லேவி. 24:20.

**'உன் ... நேசி'** லேவி. 19:18.

2“நீங்கள் ஏழை மக்களுக்கு உதவும்பொ
ழுது, நீங்கள் உதவுவதை விளம்பரம் செய்யா
தீர்கள். நல்லவர்களைப்போல நடிக்கும்
மனிதர்களைப்போல் நீங்கள் செய்யாதீர்கள்.
அப்படிப்பட்டவர்கள் தாங்கள் பிறருக்கு உதவு
வதற்கு முன்னர் குழல் ஊதி அறிவிப்பார்கள்.
அவர்கள் யூத ஆலயங்களிலும் தெருக்களிலும்
அவ்வாறு செய்கிறார்கள். அவர்கள் மற்ற
வர்கள் தங்களை மதிக்கவேண்டும் என
விரும்புகிறார்கள். 3எனவே, நீங்கள் ஏழை
மக்களுக்கு உதவும்பொழுது மிக இரகசியமாக
உதவுங்கள். மற்றவர் எவரும் அறியாதவாறு
உதவுங்கள். 4உங்கள் உதவி இரகசியமாகச்
செய்யப்படவேண்டும். உங்கள் பிதாவாகிய
தேவன் இரகசியமாகச் செய்யப்படும் செயல்
களையும் காண வல்லவர். எனவே அவர்
உங்களுக்கு வெகுமதியளிப்பார்.

### பிரார்த்தனை பற்றி போதித்தல்

(லூக்கா 11:2-4)

5“நீங்கள் பிரார்த்தனை செய்யும்பொழுது,
நல்லவர்களைப்போல நடிக்கும் தீயவர்களைப்
போல் நடக்காதீர்கள். போலியான மனிதர்கள்
ஜெப ஆலயங்களிலும் தெரு முனைகளிலும்
நின்று உரத்த குரலில் பிரார்த்தனை செய்ய
விரும்புகிறார்கள். தாம் பிரார்த்தனை செய்
வதை மற்றவர்கள் காண அவர்கள் விரும்
புகிறார்கள். நான் உங்களுக்கு உண்மையைச்
சொல்கிறேன். அவர்கள் ஏற்கெனவே அதற்
குரிய பலனை அடைந்து விட்டார்கள். 6நீங்கள்
பிரார்த்திக்கும் பொழுது உங்கள் அறைக்குச்
சென்று கதவை மூடிவிட வேண்டும். பின்னர்,
உங்கள் கண்களுக்குப் புலப்படாத உங்கள்
பிதாவிடம் பிரார்த்தியுங்கள். இரகசியமாகச்
செய்யப்படும் செயல்களையும் காண வல்ல
வர் உங்கள் தந்தை அவர் உங்களுக்கு வெகு
மதியளிப்பார்.

7“நீங்கள் பிரார்த்திக்கும்பொழுது, தேவ
னை அறியாதவர்களைப் போல நடந்து
கொள்ளாதீர்கள். பொருளற்ற வார்த்தைகளை
அவர்கள் தொடர்ந்து கூறுகிறார்கள். அவ்
வாறு பிரார்த்திக்காதீர்கள். பலவற்றையும்
அவர்கள் சொல்வதனால் தேவன் அவர்
களைக் கவனிப்பார் என்று அவர்கள்
நினைக்கிறார்கள். 8அவர்களைப்போல இருக்
காதீர்கள். உங்கள் பிதா நீங்கள் கேட்பதற்கு
முன்னரே உங்களின் தேவைகளை அறிவார்.
9நீங்கள் பிரார்த்திக்கும்பொழுது கீழ்க்கண்ட
வாறு பிரார்த்திக்க வேண்டும்.

‘பரலோகத்திலிருக்கும் எங்கள் பிதாவே
உமது பெயர் என்றென்றும் புனிதமா
யிருக்கப் பிரார்த்திக்கிறோம்.
10 உமது இராஜ்யம் வரவும் பரலோகத்தில்
உள்ளது போலவே பூமியிலும் நீர் விரும்
பியவை செய்யப்படவும் பிரார்த்திக்
கிறோம்.
11 ஒவ்வொரு நாளும் எங்களுக்குத் தேவை
யான உணவை எங்களுக்கு அளிப்பீ
ராக.
12 மற்றவர் செய்த தீமைகளை நாங்கள்
மன்னித்தது போலவே எங்கள் குற்றங்
களையும் மன்னியும்.
13 எங்களைச் சோதனைக்கு உட்படப்
பண்ணாமல் பிசாசினிடமிருந்து காப்
பாற்றும்.’ *

14நீங்கள் மற்றவர் செய்யும் தீயவைகளை
மன்னித்தால், பரலோகத்திலிருக்கும் உங்கள்
பிதாவானவரும் உங்கள் தீயச்செயல்களையும்
மன்னிப்பார். 15ஆனால், மற்றவர்கள் உங்
களுக்குச் செய்யும் தீமைகளை நீங்கள் மன்னிக்
காவிட்டால் பரலோகத்திலிருக்கும் உங்கள்
பிதாவும் நீங்கள் மற்றவர்களுக்குச் செய்யும்
தீமைகளை மன்னிக்கமாட்டார்.

### உபவாசத்தைப் பற்றிய போதனை

16“நீங்கள் உபவாசம் இருக்கும்பொழுது,
சோகமாகக் காட்சியளிக்காதீர்கள். மாயக்
காரர்கள் மட்டுமே அவ்வாறு செய்கிறார்கள்.
நீங்களும் அவர்களைப்போல நடிக்காதீர்கள்.
தாங்கள் உபவாசம் இருப்பதை மற்றவர்கள்
காண்பதற்காகத் தங்கள் முகத்தை விநோத
மாக வைத்துக் கொள்கிறார்கள். அவர்கள்
தங்கள் முழு பலனை அடைந்துவிட்டார்கள்.
17எனவே, நீங்கள் உபவாசம் இருக்கும்
பொழுது, மகிழ்ச்சியாகக் காணப்படுங்கள்.
முகம் கழுவிக் கொள்ளுங்கள். 18எனவே, நீங்
கள் உபவாசம் இருப்பது மற்றவர்களுக்குத்
தெரியாது. ஆனால் நீங்கள் காணமுடியாத
உங்கள் பிதாவானவர் உங்களைக் காண்பார்.
உங்கள் பிதாவானவர் இரகசியமாகச் செய்
யப்படும் செயல்களையும் காண வல்லவர்.
மேலும் அவர் உங்களுக்கு வெகுமதியளிப்
பார்.

### பணமும் தேவனும்

(லூக்கா 12:33-34; 11:34-36; 16:13)

19“உங்களுக்காக இப்பூமியில் செல்வம்
சேர்த்து வைக்காதீர்கள். பூச்சிகளாலும் துரு
வாலும் பூமியிலுள்ள செல்வம் அழியும்.
மேலும் திருடர்கள் உங்கள் வீட்டை உடைத்து
உங்கள் செல்வங்களைக் கொள்ளையடித்துப்
போவார்கள். 20எனவே உங்கள் செல்வங்
களைப் பரலோகத்தில் சேமியுங்கள். பூச்சி
களும் துருவும் அவற்றை அழிக்க இயலாது.
பரலோகத்திலிருக்கும் செல்வத்தைத் திருடர்
களும் திருட முடியாது. 21உங்கள் செல்வம்
எங்கேயோ அங்கே உங்கள் உள்ளமும் இருக்
கும். 22உடலுக்கு ஒளிதருவது கண். உங்கள்
கண்கள் நன்றாக இருந்தால், உங்கள் சரீரம்

---

**வசனம் 13** இராஜ்யமும் வல்லமையும் பெலனும் உம்முடையவை, ஆமென் என்று சில கிரேக்க எழுத்துக்கள் முடிக்கின்றன.

முழுவதும் ஒளியுடன் திகழும். [23]ஆனால், உங்கள் கண்கள் கெட்டுப் போனால், உங்கள் சரீரம் முழுவதும் ஒளியிழந்து போகும். உங்களிலுள்ள வெளிச்சம் இருளாயிருந்தால் அவ்விருள் எவ்வளவு கொடியதாயிருக்கும்.

[24]"எந்த மனிதனாலும் ஒரே நேரத்தில் இரண்டு முதலாளிகளுக்கு வேலை செய்ய முடியாது. அவன் ஒரு முதலாளியை நேசித்து மற்ற முதலாளியை வெறுக்க நேரிடும். அல்லது ஒரு முதலாளியின் பேச்சைக் கேட்டும் மற்ற முதலாளியின் பேச்சை மறுக்கவும் நேரிடும். எனவே, நீங்கள் ஒரே நேரத்தில் தேவனுக்கும், பணத்திற்கும் பணிபுரிய முடியாது.

### தேவ இராஜ்யத்திற்கு முதலிடம்
*(லூக்கா 12:22-34)*

[25]"எனவே, நான் சொல்கிறேன், நீங்கள் உயிர் வாழத் தேவையான உணவிற்காகக் கவலை கொள்ளாதீர்கள். உங்கள் உடலுக்குத் தேவையான உடைக்காகவும் கவலை கொள்ளாதீர்கள். உணவைவிடவும் முக்கியமானது ஜீவன். உடையைவிடவும் முக்கியமானது சரீரம். [26]பறவைகளைப் பாருங்கள். அவைகள் விதைப்பதோ அறுவடை செய்வதோ களஞ்சியங்களில் சேமித்து வைப்பதோ இல்லை. ஆனால் உங்கள் பரலோகப் பிதா அவைகளுக்கு உணவளிக்கிறார். பறவைகளைக் காட்டிலும் நீங்கள் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தவர்கள் என நீங்கள் அறிவீர்கள். [27]கவலைப்படுவதினால் உங்களால் உங்கள் வாழ்நாளைக் கூட்ட இயலாது.

[28]"உடைகளுக்காக ஏன் கவலை கொள்கிறீர்கள்? தோட்டத்தில் உள்ள மலர்களைப் பாருங்கள். அவை எப்படி வளர்கின்றன என்பதைப் பாருங்கள். அவைகள் வேலை செய்வதுமில்லை, தங்களுக்கான உடைகளைத் தயார் செய்வதுமில்லை. [29]ஆனால் நான் சொல்கிறேன் மாபெரும் பணக்கார மன்னனான சாலமோன் கூட இந்தப் பூக்களில் ஒன்றைப்போல அழகாக உடை அணியவில்லை. [30]அவ்வாறே தேவன் வயல்களிலுள்ள புற்களுக்கும் உடை அணிவிக்கிறார். இன்றைக்கு உயிருடன் இருக்கும் புல், நாளைக்கு தீயிலிடப்பட்டு எரிக்கப்படும். எனவே, தேவன் உங்களுக்குச் சிறப்பாக உடையணிவிப்பார் என்பதை அறியுங்கள். தேவனிடம் சாதாரணமான நம்பிக்கை வைக்காதீர்கள். [31]'உண்பதற்கு என்ன கிடைக்கும்?' அல்லது 'குடிப்பதற்கு என்ன கிடைக்கும்?' அல்லது 'உடுப்பதற்கு என்ன கிடைக்கும்?' என்று கவலைகொள்ளாதீர்கள். [32]தேவனை அறியாத மக்களே இவற்றைப் பெற முயற்சிக்கிறார்கள். நீங்களோ கவலைப்படாதீர்கள், பரலோகத்திலிருக்கும் உங்கள் பிதா இவைகள் உங்களுக்குத் தேவை என்பதை அறிவார். [33]தேவனின் இராஜ்யத்தையும் நீங்கள் செய்ய வேண்டுமென தேவன் விரும்பும் நற்செயல்களைச் செய்தலையுமே நீங்கள் நாடவேண்டும். அப்போது தேவன் உங்களது மற்றத் தேவைகளையும் நிறைவேற்றுவார். [34]எனவே, நாளையைக் குறித்துக் கவலை கொள்ளாதீர்கள். ஒவ்வொரு நாளும் தொல்லை உண்டு. நாளையக் கவலை நாளைக்கு.

### நியாயம் தீர்ப்பதைப்பற்றி போதனை
*(லூக்கா 6:37-38; 41-42)*

7 "மற்றவர்களை நீங்கள் நியாயம் தீர்க்காதீர்கள். அப்பொழுது தேவன் உங்களை நியாயம் தீர்க்கமாட்டார். [2]நீங்கள் மற்றவர்களை எப்படி நியாயம் தீர்க்கிறீர்களோ அவ்வாறே தேவன் உங்களை நியாயம் தீர்ப்பார். மற்றவர்களுக்கு நீங்கள் வழங்கும் மன்னிப்பு உங்களுக்கும் வழங்கப்படும். [3]உங்கள் கண்ணில் இருக்கும் மரத்துண்டினைக் கவனிக்காது, உங்கள் சகோதரனின் கண்ணில் உள்ள தூசியைக் காண்கிறீர்கள். அது ஏன்? [4]'உன் கண்ணிலிருந்து தூசியை நான் அகற்றிவிடுகிறேன்' என்று ஏன் உங்கள் சகோதரனிடம் சொல்கிறீர்கள்? உங்களை முதலில் கவனியுங்கள். உங்கள் கண்ணில் இன்னமும் பெரிய மரத்துண்டு உள்ளது. [5]மாயக்காரரான நீங்கள் முதலில் உங்கள் கண்ணிலிருந்து அம்மரத்துண்டை அகற்றுங்கள். பின்னரே, உங்கள் சகோதரனின் கண்ணிலிருந்து தூசியை அகற்ற முன்வாருங்கள். [6]புனிதமானவற்றை நாய்களுக்குக் கொடுக்காதீர்கள். அவை திரும்பி உங்களைத் துன்புறுத்தவே செய்யும். முத்துக்களைப் பன்றிகளின் முன் போடாதீர்கள். நீங்கள் அப்படிச் செய்தால் அவைகள் முத்துக்களைக் காலால் மிதித்து சேதப்படுத்தும்.

### தேவனிடம் கேட்டுப்பெறுதல்
*(லூக்கா 11:9-13)*

[7]"தொடர்ந்து கேளுங்கள், தேவன் கொடுப்பார். தொடர்ந்து தேடுங்கள் கிடைக்கும். தொடர்நது தட்டுங்கள் திறக்கப்படும். [8]ஆம், ஒருவன் தொடர்ந்து கேட்டால், அவன் அதைப் பெறுவான். ஒருவன் தொடர்ந்து தேடினால், அவன் கண்டடைவான். ஒருவன் தொடர்ந்து தட்டினால், கதவு அவனுக்காகத் திறக்கப்படும்.

[9]"உங்களில் யாருக்கேனும் மகன் உண்டா? உங்கள் மகன் அப்பத்தைக் கேட்டால், அவனுக்குக் கல்லைத் தருவீர்களா? இல்லை. [10]அல்லது, உங்கள் மகன் மீனைக் கேட்டால், அவனுக்குப் பாம்பைக் கொடுப்பீர்களா? இல்லை. [11]நீங்கள் தேவனைப்போல அல்லாமல், பொல்லாதவர்களாய் இருக்கும் உங்களுக்கே குழந்தைகளுக்கு நற்பொருட்களைத் தரத்தெரியும்போது, பரலோகத்திலிருக்கும் உங்கள் பிதாவும் தம்மிடம் கேட்கிறவர்களுக்கு நன்மையானவற்றைக் கொடுப்பார் அன்றோ?

### மிகமுக்கியமான சட்டம்

[12]"மற்றவர்கள் உங்களுக்கு எதைச் செய்ய வேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்களோ,

அதையே மற்றவர்களுக்கு நீங்கள் செய்யுங்கள். இதுவே மோசேயின் கட்டளை மற்றும் தீர்க்கதரிசிகளின் போதனைகளின் பொருளாகும்.

### இரண்டு வழிகள்

(லூக்கா 13:24)

13"பரலோகத்திற்குச் செல்லும் குறுகிய
வாசலுக்குள் நுழையுங்கள். நரகத்திற்குச் செல்
லும் பாதையோ எளிமையானது. ஏனெனில்
நரகத்தின் வாசல் அகன்றது. பலர் அதில்
நுழைகிறார்கள். 14ஆனால், மெய்யான வாழ்
விற்கான வாசல் மிகவும் குறுகியது. மெய்
யான வாழ்விற்குக் கொண்டு செல்லும்
பாதையோ கடினமானது. மிகச் சிலரே அப்
பாதையைக் கண்டடைகிறார்கள்.

### மக்களின் செயல்களைக் கவனியுங்கள்

(லூக்கா 6:43-44; 13:25-27)

15"போலி தீர்க்கதரிசிகளிடம் எச்சரிக்
கையாய் இருங்கள். உங்களிடம் வரும் போலி
தீர்க்கதரிசிகள் செம்மறியாட்டைப் போல
இனிமையானவர்களாய்க் காணப்படுவார்
கள். ஆனால் உண்மையில் அவர்கள் ஓநாய்
களைப்போல அபாயமானவர்கள். 16அவர்
களது செயல்களிலிருந்து நீங்கள் அவர்களைக்
கண்டு கொள்ளலாம். எவ்வாறு திராட்சைப்
பழம் முட்புதரிலும், அத்திப்பழம் முட்செடி
களிலும் காய்ப்பதில்லையோ அவ்வாறே
நல்லவை தீய மனிதர்களிடமிருந்து வருவ
தில்லை. 17அதுபோலவே, ஒவ்வொரு நல்ல
மரமும் நல்ல கனிகளையே கொடுக்கும். தீய
மரங்கள் தீய பழங்களையே கொடுக்கும்.
18அதுபோலவே, நல்ல மரம் தீய கனியைத்
தரமுடியாது. கெட்ட மரம் நல்ல கனியைத்
தரமுடியாது. 19நல்ல கனிகளைத் தராத
மரங்கள் வெட்டப்பட்டு நெருப்பில் வீசப்படும்.
20போலியான மனிதர்களை அவர்களின்
செயல்களிலிருந்து நீங்கள் அறியலாம்.

21"என்னைத் தம் கர்த்தர் என்று கூறும்
எல்லோரும் பரலோகத்திற்குள் நுழைய முடி
யாது. பரலோகத்தில் உள்ள என் பிதா விரும்
பும் செயல்களைச் செய்கிறவர்கள் மட்டுமே
பரலோக இராஜ்யத்தில் நுழைய முடியும்.
22இறுதி நாளன்று பலர் என்னிடம் 'நீரே
எங்கள் கர்த்தர். உம்மைப் போற்றினோம்.
அசுத்த ஆவிகளை உம் பெயரால் விரட்டி
னோம். அற்புதங்கள் பல செய்தோம்' என்று
கூறுவார்கள். 23அவர்களிடம் நான் 'என்னை
விட்டு விலகுங்கள். தவறு செய்தவர்கள் நீங்
கள். உங்களை எனக்குத் தெரியாது' என்று
வெளிப்படையாகவே சொல்வேன்.

### இரண்டுவித மனிதர்கள்

(லூக்கா 6:47-49)

24"என் போதனைகளைக் கேட்டு அதன்படி
நடக்கிற எவனும் புத்தியுள்ளவன் ஆவான்.
புத்தியுள்ள மனிதன் தன் வீட்டைப் பாறையின்
மேல் கட்டினான். 25கன மழை பெய்து வெள்
ளம் பெருக்கெடுத்தது. காற்று வீசி வீட்டைத்
தாக்கியது. பாறையின் மேல் கட்டப்பட்டதால்
அந்த வீடு இடிந்து விழவில்லை. 26என் போத
னைகளைக் கேட்டுவிட்டு அதன்படி நடக்காத
வர்கள் புத்தியற்ற மனிதனைப் போன்றவர்
கள். புத்தியற்ற மனிதன் மணல் மீது தன்
வீட்டைக் கட்டினான். 27கன மழை பெய்தது.
வெள்ளம் பெருக்கெடுத்தது. காற்றுவீசி வீட்
டைத்தாக்கியது. பலத்த ஓசையுடன் வீடு
இடிந்து விழுந்தது."

28இயேசு இவற்றைக் கூறி முடித்தபொழுது,
மக்கள் அவரது போதனைகளைக் குறித்து
வியப்படைந்தனர். 29வேதபாரகராகிய நியா
யப்பிரமாண ஆசிரியர்களைப் போலல்லாது,
இயேசு அதிகாரம் மிக்கவராகப் போதனை
செய்தார்.

### தொழு நோயாளி குணமடைதல்

(மாற்கு 1:40-45; லூக்கா 5:12-16)

8 இயேசு குன்றின் மீதிருந்து கீழிறங்கி வந்
தார். ஏராளமான மக்கள் அவரைத் தொ
டர்ந்தார்கள். 2அப்பொழுது தொழு நோயால்
பீடிக்கப்பட்ட ஒருவன் அவரிடம் வந்தான்.
அவன் இயேசுவின் முன்பாக பணிந்து, "கர்த்
தாவே, நீர் விரும்பினால், என்னைக் குணப்
படுத்த முடியும். அவ்வல்லமையைப் பெற்
றிருக்கிறீர்" என்று சொன்னான்.
3இயேசு அவனைத் தொட்டு, "நான் உன்
னைக் குணப்படுத்த விரும்புகிறேன். குணம்
அடைவாயாக!" என்று சொன்னார். உடனே
அந்த மனிதன் தொழு நோயிலிருந்து குண
மாக்கப்பட்டான். 4பின் இயேசு அவனிடம்,
"என்ன நடந்தது என்பதை எவரிடமும்
கூறாதே. ஆனால் ஆசாரியரிடம் சென்று உன்
னைக் காட்டு.* நோயிலிருந்து குணம் அடைந்
தவர்கள் செலுத்தவேண்டிய காணிக்கையை
மோசே கட்டளையிட்டபடி செலுத்து. அதுவே
நீ குணமடைந்ததை மக்களுக்குக் காட்டும்"
என்று கூறி அனுப்பினார்.

### அதிகாரியின் வேலைக்காரன் குணமாகுதல்

(லூக்கா 7:1-10; யோவான் 4:43-54)

5இயேசு கப்பர்நகூம் நகருக்குச் சென்றார்.
இயேசு அந்நகரத்திற்குள் நுழைந்த பொழுது,
படை அதிகாரி* ஒருவன் வந்து அவரிடம்
உதவி கேட்டுக் கெஞ்சினான். 6அந்த அதிகாரி,
"கர்த்தாவே, என் வேலைக்காரன் மிக நோய்
வாய்ப்பட்டு வீட்டில் படுத்திருக்கிறான். அவ
னால் சரீரத்தை அசைக்கக்கூட முடியவில்லை.
மிகுந்த வலியினால் அவதிப்படுகிறான்"
என்று சொன்னான்.

7இயேசு அவனிடம் "நான் வந்து அவனைக்
குணப்படுத்துகிறேன்" என்று கூறினார்.

---

**ஆசாரியரிடம் ... காட்டு** ஒரு ஆசாரியன்தான் தொழுநோயுற்ற யூதன் குணமானவன் என்று சொல்லவேண்டும் என்பது மோசேயின் சட்டம்.

**அதிகாரி** நூற்றுக்கு அதிகாரி ரோமானிய படை அதிகாரி இவர் 100 வீரர்களுக்கு அதிகாரி.

[8]அதற்கு அந்த அதிகாரி, "கர்த்தாவே, நீர் என் வீட்டிற்குள் வருமளவிற்கு நான் மேலானவனல்ல. நீர் செய்யவேண்டுவதெல்லாம், என் வேலைக்காரன் குணமடையட்டும் என்று கட்டளையிடுவது மட்டுமே. அப்போது அவன் குணம் அடைவான்.

[9]நான் என்னிலும் அதிகாரம் மிக்கவர் கீழ்ப் பணிபுரிகிறேன். என் அதிகாரத்திற்குக் கீழும் படைவீரர்கள் உள்ளனர். நான் ஒரு வீரனிடம் 'போ' என்றால், அவன் போகிறான். மற்றொரு வீரனிடம் 'வா' என்றால், அவன் வருகிறான். நான் என் வேலைக்காரனிடம் 'இதைச்செய்' என்றால், அவன் அதைச் செய்கிறான். (அதைப்போலவே நீரும் வல்லமை பெற்றவர் என்பதை நான் அறிவேன்)" என்றான்.

[10]இதைக் கேட்ட இயேசு வியப்படைந்தார். தன்னுடன் இருந்த மக்களிடம் இயேசு, "உண்மையைச் சொல்லுகிறேன். நான் பார்த்த மனிதர் அனைவரிலும், இஸ்ரவேலிலும் கூட, இவனே அதிக விசுவாசம் உடையவன். [11]பலர் கிழக்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் வருவார்கள். அவர்கள் ஆபிரகாம், ஈசாக்கு மற்றும் யாக்கோபு* ஆகியோருடன் அமர்ந்து பரலோக இராஜ்யத்தில் உணவு உண்பார்கள். [12]ஆனால் பரலோக இராஜ்யத்தை அடையவேண்டியவர்களான யூதர்களோ வெளியே இருட்டில் எறியப்படுவார்கள். அங்கு அவர்கள் பற்களைக் கடித்துக் கூக்குரலிடுவார்கள்" என்று கூறினார்.

[13]பிறகு இயேசு அதிகாரியிடம், "வீட்டிற்குச் செல். நீ எவ்வாறு விசுவாசித்தாயோ அவ்வாறே உன் வேலைக்காரன் குணமாவான்" என்று சொன்னார். அந்த நேரத்திலேயே அந்த அதிகாரியின் வேலைக்காரன் குணமாக்கப்பட்டான்.

### இயேசு அநேகரைக் குணமாக்குதல்

(மாற்கு 1:29-34; லூக்கா 4:38-41)

[14]இயேசு பேதுருவின் வீட்டிற்குச் சென்றார். அங்குப் பேதுருவின் மாமியார் அதிக காய்ச்சலுடன் படுத்திருந்ததைக் கண்டார். [15]இயேசு அவளது கையைத் தொட்டார். உடனே அவளது காய்ச்சல் நீங்கியது. பின்னர் அவள் எழுந்து இயேசுவுக்குப் பணிவிடை செய்தாள்.

[16]அன்று மாலை, பிசாசு பிடித்த பல மக்களை அவரிடம் அழைத்து வந்தனர். இயேசு தமது வார்த்தையினால் அப்பிசாசுகளைத் துரத்தி, வியாதியாய் இருந்த அனைவரையும் குணமாக்கினார்.

[17] "அவர் எங்களது நோய்களைத் தீர்த்தார்;
பிணிகளை நீக்கினார்"
ஏசாயா 53:4

என்று ஏசாயா தீர்க்கதரிசி சொன்னது நடந்தேறும்படியாக இயேசு இவற்றைச் செய்தார்.

### இயேசுவைப் பின்தொடர்தல்

(லூக்கா 9:57-62)

[18]அனைத்து மக்களும் தன்னைச் சுற்றி இருப்பதை இயேசு கண்டார். எனவே, இயேசு தன் சீஷர்களிடம் ஏரியின் மறு கரைக்குச் செல்லுமாறு கூறினார். [19]பின் வேதபாரகரில் ஒருவன் இயேசுவிடம் வந்து, "போதகரே, நீர் போகுமிடமெல்லாம் நான் உங்களைத் தொடர்ந்து வருவேன்" என்றான்.

[20]அதற்கு இயேசு, "நரிகள் தாம் வாழ குழிகளைப் பெற்றுள்ளன. பறவைகள் தாம் வாழ கூடுகளைப் பெற்றுள்ளன. ஆனால், மனிதகுமாரனுக்குத்* தலை சாய்க்க ஓரிடமும் இல்லை" என்று கூறினார்.

[21]இயேசுவின் சீஷர்களில் மற்றொருவன் அவரிடம், "போதகரே, நான் போய் முதலில் என் தந்தையை அடக்கம் செய்துவிட்டுப்பின், உம்மைத் தொடர்ந்து வருகிறேன்" என்றான்.

[22]ஆனால் இயேசு அவனிடம், "என்னைப் பின்பற்றி வா. மரித்தோர் தம் மரித்தோரை அடக்கம் செய்துகொள்ளட்டும்" என்றார்.

### இயேசு ஒரு புயலை நிறுத்துதல்

(மாற்கு 4:35-41; லூக்கா 8:22-25)

[23]இயேசு ஒரு படகில் ஏறினார். அவரது சீஷர்கள் அவரைப் பின்தொடர்ந்தனர். [24]படகு கரையை விட்டுப் புறப்பட்ட பின்னர், கடலில் மிகப் பலமான புயல் உருவானது. படகை அலைகள் சூழ்ந்தன. ஆனால், இயேசு அமைதியாக உறங்கிக் கொண்டிருந்தார். [25]அவரது சீஷர்கள் அவரிடம் சென்று அவரை எழுப்பினார்கள். அவர்கள், "ஆண்டவரே! எங்களைக் காப்பாற்றும். இல்லையேல் நாங்கள் மூழ்கிவிடுவோம்!" என்று சொன்னார்கள்.

[26]இயேசு அவர்களிடம், "நீங்கள் ஏன் பயப்படுகிறீர்கள். உங்களுக்குப் போதிய விசுவாசம் இல்லை" என்று கூறினார். பின்பு, இயேசு எழுந்து நின்று காற்றுக்கும் அலைகளுக்கும் ஒரு கட்டளை பிறப்பித்தார். காற்று நின்றது. கடல் மிகவும் அமைதியானது.

[27]படகிலிருந்தவர்கள் வியப்புற்று, "எப்படிப்பட்ட மனிதர் இவர்? காற்றும் கடலும் கூட இவருக்குக் கீழ்படிகின்றனவே!" என்று கூறி வியப்படைந்தனர்.

### இருவரிடமிருந்து பிசாசுகளை விரட்டுதல்

(மாற்கு 5:1-20; லூக்கா 8:26-39)

[28]இயேசு கெதரேனே மக்கள் வசிக்கும் ஏரியின் மறு கரையை வந்தடைந்தார். அங்கு இருவர் இயேசுவிடம் வந்தனர். அவர்களுக்குப் பிசாசுகள் பிடித்திருந்தன. அவர்கள் இரு

---

**ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு** பழைய ஏற்பாட்டின் காலத்தில் உள்ள மூன்று மிக முக்கியமான யூதத் தலைவர்கள்.

**மனித குமாரன்** இயேசு. தானியேல் 7:13-14. இது மேசியாவின் பெயர், தம் மக்களைப் பாதுகாக்க தேவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒருவர்.

*வரும் கல்லறைகள் இருக்குமிடத்தில் வாழ்ந்*
*தனர். மிக அபாயமானவர்கள் அவர்கள்.*
*எனவே, மக்கள் அவர்கள் வசித்த கல்லறை*
*களுக்கு அருகில் சென்ற பாதைகளை உப*
*யோகிக்க இயலவில்லை.* **29***இயேசுவிடம் வந்த*
*அவ்விருவரும், "தேவகுமாரனே, எங்களிடமி*
*ருந்து என்ன வேண்டும்? தக்க சமயத்திற்கு*
*முன்பாகவே எங்களைத் துன்புறுத்த வந்*
*தீரோ?" என்று சத்தமிட்டனர்.*

**30***அந்த இடத்திற்கு அருகில் பன்றிகள்*
*கூட்டமாக மேய்ந்து கொண்டிருந்தன.* **31***அவர்*
*களைப் பிடித்திருந்த பிசாசுகள் இயேசுவிடம்,*
*"இவர்களை விட்டு எங்களை வெளியேற்று*
*வதானால், தயவுசெய்து நாங்கள் அந்த பன்றி*
*கூட்டத்திற்குள் செல்லவிடுங்கள்" என்று கெஞ்*
*சின.*

**32***இயேசு பிசாசுகளிடம், "செல்லுங்கள்"*
*என்றார். உடனே, அப்பிசாசுகள் அவர்களை*
*விட்டு நீங்கி பன்றி கூட்டத்திற்குள் சென்றன.*
*பிறகு, அப்பன்றிக் கூட்டம் முழுவதும் குன்*
*றிலிருந்து கீழிறங்கி ஏரிக்குள் ஓடின. எல்லாப்*
*பன்றிகளும் நீரில் மூழ்கின.* **33***பன்றிகளை*
*மேய்த்துக்கொண்டிருந்த ஆட்கள் நகரத்திற்குள்*
*ஓடினார்கள். அவர்கள் நகர மக்களிடம் பிசாசு*
*பிடித்திருந்த இருவருக்கும் பன்றிகளுக்கும்*
*என்ன நடந்தது என்பதைக் கூறினார்கள்.*
**34***பிறகு, அந்த நகர மக்கள் அனைவரும்*
*இயேசுவைக் காணச் சென்றனர். இயேசுவைக்*
*கண்ட மக்கள், அவர்களது இடத்தை விட்டு*
*அவரை விலகிச் செல்லுமாறு கெஞ்சினர்.*

### பக்கவாத வியாதிக்காரன் குணமாகுதல்
*(மாற்கு 2:1-12; லூக்கா 5:17-26)*

**9** *இயேசு ஒரு படகில் ஏரியைக் கடந்து*
*மீண்டும் தம் சொந்த நகருக்குத் திரும்*
*பினார்.* **2***பக்கவாத வியாதியினால் பாதிக்கப்*
*பட்ட ஒருவனைச் சிலர் இயேசுவிடம்*
*அழைத்து வந்தனர். அவன் படுக்கையில்*
*படுத்திருந்தான். அம்மக்கள் மிகுந்த நம்பிக்கை*
*யோடு வந்திருந்ததை இயேசு கண்டார்.*
*எனவே இயேசு அந்த வியாதிக்காரனிடம்,*
*"வாலிபனே, மகிழ்ச்சியாயிரு. உன் பாவங்*
*கள் மன்னிக்கப்பட்டன" என்றார்.* **3***இதைக்*
*கேட்ட சில வேதப்போதகர்கள், "இந்த மனிதன்*
*(இயேசு) தேவனைப் போலவே பேசுகிறான்.*
*இது தேவனை நிந்திக்கும் செயல்" என்று*
*தங்களுக்குள்ளே பேசிக்கொண்டார்கள்.*

**4***அவர்கள் இவ்வாறு எண்ணியதை இயேசு*
*அறிந்தார். எனவே இயேசு, "நீங்கள் ஏன்*
*தீய எண்ணங்களைச் சிந்திக்கின்றீர்கள்?*
**5***பக்கவாத வியாதிக்காரனிடம் 'உன் பாவங்*
*கள் மன்னிக்கப்பட்டன என்று கூறுவது*
*எளிதா? அல்லது எழுந்து நட, என்று கூறு*
*வது எளிதா?* **6***ஆனால் மனித குமாரனுக்கு*
*பூமியில் பாவங்களை மன்னிக்கும் வல்லமை*
*இருப்பதை நான் உங்களுக்கு நிரூபிப்பேன்"*
*என்று சொன்னார். பிறகு அந்த வியாதிக்*
*காரனிடம் இயேசு "எழுந்திரு. உன் படுக்*
*கையை எடுத்துக்கொண்டு வீட்டிற்குச் செல்!"*
*என்று கூறினார்.*

**7***அம்மனிதன் எழுந்து வீட்டுக்குச் சென்*
*றான்.* **8***இதைக்கண்ட மக்கள் வியப்புற்றனர்.*
*இத்தகைய வல்லமையை மனிதனுக்கு அளித்*
*ததற்காக அவர்கள் தேவனைப் புகழ்ந்தார்கள்.*

### இயேசு மத்தேயுவைத் தேர்ந்தெடுத்தல்
*(மாற்கு 2:13-17 லூக்கா 5:27-32)*

**9***அங்கிருந்து இயேசு செல்லும்பொழுது,*
*மத்தேயு என்ற மனிதனைக் கண்டார். மத்தேயு*
*வரி அலுவலகத்தில் அமர்ந்திருந்தான். "என்*
*னைத் தொடர்ந்து வா" என்று மத்தேயுவிடம்*
*இயேசு கூறினார். உடனே மத்தேயு எழுந்தி*
*ருந்து இயேசுவைப் பின் தொடர்ந்தான்.*

**10***இயேசு மத்தேயுவின் வீட்டில் விருந்துண்*
*டார். வரி வசூலிப்பவர்கள் பலரும் தீயவர்கள்*
*பலரும் வந்திருந்து இயேசுவுடனும் அவரது*
*சீஷர்களுடனும் விருந்துண்டனர்.* **11***அத்தகைய*
*மனிதர்களுடன் இயேசு விருந்துண்டதைப் பரி*
*சேயர்கள் கண்டனர். பரிசேயர்கள் இயேசு*
*வின் சீஷர்களிடம், "ஏன் உங்கள் குருவான*
*வர் வரி வசூலிப்பவர்களுடனும் தீய மனிதர்*
*களுடனும் உணவு உண்கிறார்?" என்று கேட்*
*டனர்.* **12***பரிசேயர்கள் இவ்வாறு கூறுவதை*
*இயேசு கேட்டார். எனவே, இயேசு பரிசேயர்*
*களிடம், "ஆரோக்கியமானவர்களுக்கு மருத்*
*துவர் தேவையில்லை. நோயாளிகளுக்குத்*
*தான் மருத்துவர் தேவை.* **13***நான் உங்களுக்கு*
*ஒன்றைக் கூறுகிறேன். அதன் பொருளைத்*
*தெரிந்து கொள்ளுங்கள். விலங்குகளைப் பலி*
*யிடுவதை நான் விரும்பவில்லை.** *நான்*
*மக்களிடம் கருணையை விரும்புகிறேன்.*
*நல்லவர்களை அழைக்க நான் வரவில்லை.*
*பாவம் செய்தவர்களை அழைக்கவே நான்*
*வந்தேன்" என்று கூறினார்.*

### வித்தியாசமான போதனை
*(மாற்கு 2:18-22; லூக்கா 5:33-39)*

**14***பின்னர், யோவானின்** *சீஷர்கள் இயேசு*
*விடம் வந்தார்கள். அவர்கள் இயேசுவிடம்,*
*"நாங்களும் பரிசேயர்களும் அடிக்கடி உப*
*வாசம் இருக்கிறோம். ஆனால், உங்கள் சீஷர்*
*கள் உபவாசம் இருப்பதில்லை. ஏன்?" என்று*
*கேட்டார்கள்.*

**15***அதற்கு இயேசு அவர்களிடம், "திருமணத்*
*தின்போது, மணமகன் உடன் இருக்கும்பொ*
*ழுது அவன் நண்பர்கள் சோகமாக இருப்ப*
*தில்லை. ஆனால் மணமகன் அவர்களிடமி*
*ருந்து பிரிக்கப்படும் நேரம் வரும். அப்பொ*
*ழுது மணமகனின் நண்பர்கள் வருத்தம் அடை*
*கிறார்கள். அப்பொழுது அவர்கள் உபவாசம்*
*இருப்பார்கள்.*

---

**'நான் ... விரும்பவில்லை'** *ஓசியா* 6:6.

**யோவான்** *யோவான் ஞானஸ்நானம் தருபவர். அவர் மக்களிடம் கிறிஸ்துவின் வருகையைப் பற்றி பிரச்சாரம் செய்தார்.*

[16]“ஒருவன் தன் பழைய சட்டையிலுள்ள
ஒரு ஓட்டையை தைக்கும்பொழுது, சுருக்கம
டையாத புதிய துணியைப் பயன்படுத்துவ
தில்லை. அப்படிச் செய்தால், இணைத்த துண்
டுத் துணியானது சுருங்கி சட்டையிலிருந்து
கிழிந்துவிடும். அதனால் ஓட்டை மேலும் மோ
சமடையும். [17]மேலும், மக்கள் ஒருபோதும்
புதிய திராட்சை இரசத்தைப் பழைய
திராட்சை இரசம் இருக்கும் பைகளில் வைப்ப
தில்லை. ஏனென்றால் பழைய திராட்சை
இரசம் இருக்கும் பைகள் கிழிந்துவிடும்.
திராட்சை இரசமும் சிந்திவிடும். திராட்சை
இரசப் பைகளும் வீணாகும். அதனால், மக்கள்
எப்பொழுதும் புதிய திராட்சை இரசத்தை
புதிய பைகளிலேயே ஊற்றுகிறார்கள்.
அதனால் திராட்சை இரசமும் பைகளும் நன்
றாக இருக்கும்” என்றார்.

### மரித்த பெண் உயிரடைதல், நோயாளிப் பெண் சுகமடைதல்

*(மாற்கு 5:21-43; லூக்கா 8:40-56)*

[18]இயேசு இவற்றைக் கூறிக்கொண்டிருந்த
பொழுது, யூத ஆலயத் தலைவன் ஒருவன்
அவரிடம் வந்தான். அவன் இயேசுவை
வணங்கி, “என் மகள் சற்றுமுன் இறந்துவிட்
டாள். ஆனாலும், நீர் வந்து உமது கையால்
அவளைத் தொடும். அவள் மீண்டும் உயிர்
பிழைப்பாள்” என்றான்.
[19]உடனே, இயேசு எழுந்து அவனுடன் சென்
றார். இயேசுவின் சீஷர்களும் அவரைத்
தொடர்ந்தார்கள்.
[20]அப்பொழுது பன்னிரெண்டு வருடங்
களாக இரத்தப் போக்கினால் அவதியுற்றுக்
கொண்டிருந்த ஒரு பெண் இயேசுவின் பின்
வந்து அவரது மேலங்கியின் நுனியைத் தொட்
டாள். [21]அந்தப் பெண், “நான் இந்த மேலங்
கியைத் தொட்டால் குணமடைவேன்” என
எண்ணிக் கொண்டிருந்தாள்.
[22]இயேசு திரும்பி அந்தப் பெண்ணைப்
பார்த்து அவளிடம், “பெண்ணே, மகிழ்ச்சி
யாயிரு. நீ சுகமாக்கப்பட்டாய். ஏனென்றால்,
நீ விசுவாசத்தினால் குணமாக்கப்பட்டாய்”
என்றார். உடனே அந்தப்பெண் குணமாக்கப்
பட்டாள்.
[23]இயேசு அந்தத் தலைவனுடன் தொடர்ந்து
சென்று, அவனது வீட்டிற்குள் சென்றார். சரீர
அடக்கத்திற்கான இசை இசைப்போரை
இயேசு அங்கு கண்டார். அந்தச் சிறுமி இறந்து
விட்டதனால், அழுதுகொண்டிருந்த பலரையும்
இயேசு கண்டார்.
[24]இயேசு, “விலகிச் செல்லுங்கள். இச்
சிறுமி இறக்கவில்லை. இவள் தூக்கத்திலிருக்
கிறாள்” என்று சொன்னார். அதைக் கேட்ட
அங்கிருந்த மக்கள் இயேசுவைப் பார்த்து
நகைத்தனர். [25]அவர்கள் வீட்டிலிருந்து வெளி
யேற்றப்பட்டதும், இயேசு சிறுமியின் அறைக்
குள் நுழைந்தார். இயேசு சிறுமியின் கரத்தைப்
பிடித்தார். சிறுமி எழுந்து நின்றாள். [26]இச்
செய்தி அத்தேசம் முழுவதும் பரவியது.

### இயேசு பலரைக் குணமாக்குதல்

[27]இயேசு அவ்விடத்தை விட்டுப் புறப்பட்
டதும் இரு குருடர்கள் அவரைத் தொடர்ந்தார்
கள். அக்குருடர்கள் உரத்த குரலில், “தாவீதின்
குமாரனே,* எங்களுக்குக் கருணை காட்டும்”
என்று சொன்னார்கள்.
[28]இயேசு வீட்டிற்குள் சென்றார். குருடர்கள்
இருவரும் அவருடன் வீட்டிற்குள் நுழைந்தனர்.
இயேசு அவர்களைப் பார்த்து, “நீங்கள்
பார்வை பெறுமாறு செய்ய என்னால் முடியு
மென்று விசுவாசிக்கிறீர்களா?” என்று கேட்
டார். அதற்கு குருடர்கள் “ஆம், போதகரே,
நாங்கள் விசுவாசிக்கிறோம்” என்று
பதிலளித்தனர்.
[29]பிறகு இயேசு அவர்களது கண்களைத்
தொட்டு, “நீங்கள் பார்வை பெறுமாறு செய்ய
என்னால் முடியுமென்று நம்புகிறீர்கள்.
எனவே அது நடக்கும்” என்று சொன்னார்.
[30]உடனே அவர்களால் பார்க்கமுடிந்தது. பின்
அவர், “இதைக் குறித்து யாரிடமும் கூறாதீர்
கள்” என்று கண்டிப்புடன் சொல்லி அனுப்
பினார். [31]ஆனால் அவர்கள் அங்கிருந்து
சென்று இயேசுவைக் குறித்த செய்திகளை
அப்பிர தேசமெங்கும் பரப்பினார்கள்.
[32]அவர்கள் இருவரும் புறப்பட்டுச்சென்ற
பின், சிலர் வேறொரு மனிதனை இயேசுவிடம்
அழைத்து வந்தார்கள். இம்மனிதனைப் பிசாசு
பிடித்திருந்ததினால் அவனால் பேச இயல
வில்லை. [33]இயேசு அம்மனிதனிடமிருந்த
பிசாசை விரட்டினார். பிறகு ஊமையான
அம்மனிதனால் பேச முடிந்தது. அதனால்
வியப்படைந்த மக்கள்,” இஸ்ரவேலில் நாங்கள்
ஒருபோதும் இப்படிபட்ட ஒன்றைக் கண்ட
தில்லை” என்று கூறினார்கள்.
[34]ஆனால் பரிசேயர்கள், “பிசாசுகளை
விரட்டுகிற வல்லமையை இயேசுவிற்குக்
கொடுத்தது பிசாசுகளின் தலைவனே” என்று
சொன்னார்கள்.

### இயேசுவின் கரிசனை

[35]இயேசு எல்லா நகரங்கள் மற்றும் கிராமங்
கள் வழியாகப் பயணம் செய்தார். பரலோக
அரசைப் பற்றிய நற்செய்தியை இயேசு யூதர்
களின் ஜெப ஆலயங்களில் மக்களுக்குக்
கூறினார். இயேசு எல்லாவகையான நோய்
களையும் குணமாக்கினார். [36]திரளான மனிதர்
களைக் கண்ட இயேசு அவர்களுக்காக வருத்
தமடைந்தார். ஏனென்றால், மக்கள் கவலை
கொண்டும் ஆதரவற்றும் இருந்தனர். மேய்ப்
பன் இல்லாத ஆட்டு மந்தையைப்போல மக்கள்
தங்களை வழிநடத்த மேய்ப்பனின்றி இருந்

---

**தாவீதின் குமாரன்** இது கிறிஸ்துவின் பெயர். இவர் இஸ்ரவேலின் அரசனான தாவீதின் குடும்பத்திலிருந்து வந்தவர்.

தனர். 37இயேசு தம் சீஷர்களிடம், “ஏராளமான
மக்கள் அறுவடைக்காக (காப்பாற்றப்பட)
உள்ளனர். ஆனால் அவர்களை அறுவடை
செய்வதற்கோ மிகச் சில பணியாளர்களே
உள்ளனர். தேவனுக்கு உரியது அறுவடை
(மக்கள்). 38பிரார்த்தனை செய்யுங்கள். தேவன்
மேலும் பலரைத் தம் அறுவடையைச் சேக
ரிக்க அனுப்புவார்” என்றார்.

### அப்போஸ்தலர்களை அனுப்புதல்

*(மாற்கு 3:13-19; 6:7-13; லூக்கா 6:12-16; 9:1-6)*

10 இயேசு தமது பன்னிரெண்டு சீஷர்களை
யும் ஒன்றாய் அழைத்தார். தீய ஆவி
களை மேற்கொள்ளும் வல்லமையை இயேசு
அவர்களுக்கு வழங்கினார். எல்லா விதமான
நோய்களையும் பிணிகளையும் குணப்படுத்
தும் வல்லமையையும் இயேசு அவர்களுக்கு
வழங்கினார். 2அந்தப் பன்னிரெண்டு அப்
போஸ்தலர்களின்* பெயர்கள் வருமாறு:
சீமோன் (மற்றொரு பெயர் பேதுரு.) மற்றும்
அவரது சகோதரன் அந்திரேயா, செபதேயு
வின் மகன் யாக்கோபு மற்றும் அவரது
சகோதரன் யோவான், 3பிலிப்பு மற்றும்
பார்த்தலோமியு, தோமா மற்றும் வரி வசூலிக்
கும் அதிகாரியான மத்தேயு, அல்பேயுவின்
மகன் யாக்கோபு, ததேயு, 4சீலோத்தியனாகிய*
சீமோன் மற்றும் யூதா ஸ்காரியோத்து. இயே
சுவை அவரது எதிரிகளிடம் காட்டிக்கொடுத்
தவன் இந்த யூதாஸ் ஆவான்.
5இயேசு இந்தத் தமது பன்னிரெண்டு சீஷர்
களுக்கும் சில கட்டளைகளைப் பிறப்பித்தார்.
பின் அவர்களை மக்களுக்குப் பரலோக
இராஜ்யத்தைப்பற்றிக் கூறுவதற்கு அனுப்
பினார். இயேசு அவர்களிடம், “யூதர்களல்லாத
வர்களிடம் செல்லாதீர்கள். மேலும் சமாரிய
மக்கள்* வசிக்கும் நகரங்களுக்கும் செல்லா
தீர்கள்.
6ஆனால் இஸ்ரவேல் மக்களிடம் (யூதர்
களிடம்) செல்லுங்கள். அவர்கள் காணாமல்
போன ஆடுகளைப் போன்றவர்கள். 7நீங்கள்
சென்று, ‘பரலோக இராஜ்யம் விரைவில் வர
இருக்கிறது’ என்று போதியுங்கள்.
8நோயுற்றவர்களைக் குணமாக்குங்கள். இறந்த
வர்களுக்கு மீண்டும் உயிர் கொடுங்கள். தொழு
நோயாளிகளைக் குணப்படுத்துங்கள். பிசாசு
பிடித்தவர்களிடமிருந்து பிசாசுகளை
விரட்டுங்கள். இவ்வல்லமைகளை உங்களுக்
குத் தாராளமாய் வழங்குகிறேன். எனவே,
மற்றவர்களுக்குத் தாராளமாய் உதவுங்கள்.
9உங்களுடன் தங்கம், வெள்ளி அல்லது செம்பு
நாணயங்களை எடுத்துச் செல்லாதீர்கள்.
10பைகளைக் கொண்டு போகாதீர்கள். உங்கள்
பயணத்திற்கு நீங்கள் அணிந்திருக்கும் உடை
யையும் காலணிகளையும் மட்டுமே எடுத்துச்
செல்லுங்கள். ஊன்றுகோலை எடுத்துச் செல்
லாதீர்கள். பணியாளனுக்குத் தேவையா
னவை கொடுக்கப்படவேண்டும்.
11“நீங்கள் ஒரு நகரத்திலோ ஊரிலோ நுழை
யும்பொழுது, தகுதிவாய்ந்த மனிதரைக் கண்டு
நீங்கள் அவ்விடத்தை விட்டு விலகிச்செல்லும்
வரை அவருடன் தங்கி இருங்கள். 12நீங்கள்
அவர் வீட்டினுள் நுழையும் பொழுது ‘உங்க
ளுக்குச் சமாதானம் உண்டாகட்டும்’ என்று
சொல்லுங்கள். 13அவ்வீட்டில் உள்ளவர்கள்
உங்களை வரவேற்றால், உங்கள் சமாதானத்
திற்கு அவர்கள் தகுதியுள்ளவர்கள். நீங்கள்
அவர்களுக்கு விரும்பிய சமாதானம் அவர்
களுக்குக் கிடைக்கட்டும். வீட்டிலுள்ளவர்கள்
உங்களை வரவேற்காவிட்டால், உங்கள் சமா
தானத்திற்கு அவர்கள் தகுதியுள்ளவர்களல்ல.
அவர்களுக்கு நீங்கள் விரும்பிய சமாதானத்
தைத் திரும்பப் பெறுங்கள். 14ஒரு வீட்டிலுள்ள
வர்களோ அல்லது நகரத்திலுள்ளவர்களோ
உங்களை வரவேற்கவோ அல்லது உங்கள்
பேச்சைக் கேட்கவோ மறுத்தால், அவ்வி
டத்தை விட்டு விலகுங்கள். உங்கள் கால்களில்
படிந்த தூசியைத் தட்டிவிடுங்கள். 15நான் உங்
களுக்கு உண்மையைச் சொல்லுகிறேன்.
நியாயத்தீர்ப்பு நாளிலே சோதாம் மற்றும்
கொமோரா* ஆகிய ஊர்களுக்கு நேர்ந்ததைக்
காட்டிலும் மோசமானது அவ்வூருக்கு நடக்
கும்.

### பிரச்சனைகளைப்பற்றிய எச்சரிக்கை

*(மாற்கு 13:9-13; லூக்கா 21:12-17)*

16“கவனியுங்கள்! நான் உங்களை அனுப்
புகிறேன். நீங்கள் ஓநாய்களுக்கிடையில் அகப்
பட்ட வெள்ளாட்டினைப்போல இருப்பீர்கள்.
எனவே, பாம்புகளைப்போல சாதுரியமாய்
இருங்கள். ஆனால் புறாவைப்போல கபடற்ற
வர்களாயிருங்கள். 17மக்களிடம் எச்சரிக்கை
யாயிருங்கள். அவர்கள் உங்களைக் கைது
செய்து கொண்டுபோய் நீதிமன்றத்தில் ஒப்
படைத்து விடுவார்கள். உங்களை (அவர்
களது) ஜெப ஆலயங்களில் வைத்து சாட்
டையால் அடிப்பார்கள். 18ஆளுநர்களுக்கும்
மன்னர்களுக்கும் யூதர் அல்லாதவர்களுக்கும்
முன்னால் நிறுத்தப்படுவீர்கள். என்னிமித்தம்
உங்களுக்கு மக்கள் இதைச் செய்வார்கள்.
அப்போது நீங்கள் என்னைப் பற்றி அம்
மன்னர்களுக்கும் ஆளுநர்களுக்கும் யூதரல்லாத
மக்களுக்கும் எடுத்துச் சொல்வீர்கள். 19நீங்கள்
கைது செய்யப்படும்பொழுது, எதைச் சொல்
வது எப்படிச் சொல்வது என்று கவலை

---

**அப்போஸ்தலர்** இயேசுவால் தமது சிறப்பு உதவியாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்.

**சீலோத்** சீலோத்தியர்கள் யூதர்களின் அரசியல் பிரிவினர்.

**சமாரியர்கள்** சமாரிய நாட்டு மக்கள். இவர்கள் யூதர்களில் ஒரு பகுதியினர். ஆனால் யூதர்கள் இவர்களைச் சுத்தமான யூதர்கள் என்று ஏற்பதில்லை.

**சோதோம், கொமோரா** இவை தேவனால் அங்கு வாழ்ந்த தீயவர்களினிமித்தம் அழிக்கப்பட்ட நகரங்கள்.

கொள்ளாதீர்கள். அந்தச் சமயத்தில் நீங்கள்
பேச வேண்டியவை அருளப்படும். 20அப்பொ
ழுது உண்மையில் பேசுவது நீங்களாயிருக்க
மாட்டீர்கள். உங்கள் பிதாவின் ஆவியானவர்
உங்கள் மூலமாகப் பேசுவார்.
21“சகோதரர்களே தமது சகோதரர்களுக்கு
எதிராகத் திரும்பி அவர்களை மரணத்துக்கு
ஒப்புக் கொடுப்பார்கள். தந்தையரே தம் பிள்
ளைகளுக்கு எதிராக திரும்பி அவர்களை
மரணத்துக்கு ஒப்புக் கொடுப்பார்கள். பிள்ளை
களே தமது பெற்றோர்களுக்கு எதிராக
சண்டையிட்டு அவர்களை மரணத்திற்கு ஒப்பு
கொடுப்பார்கள். 22நீங்கள் என்னைப் பின்
பற்றுவதனிமித்தம் எல்லா மக்களும் உங்
களை வெறுப்பார்கள். ஆனால், இறுதிவரை
உறுதியாயிருக்கிறவன் இரட்சிக்கப்படுவான்.
23ஒரு நகரத்தில் நீங்கள் மோசமான முறையில்
நடத்தப்பட்டால், வேறொரு நகரத்திற்குச் சென்
றுவிடுங்கள். உங்களுக்கு நான் உண்மையைச்
சொல்லுகிறேன். மனிதகுமாரன் வருகிற
வரைக்கும், நீங்கள் எல்லா யூதர்களின் நகரங்
களுக்கும் செல்ல முடியாது.
24“ஒரு மாணவன் ஆசிரியரைக் காட்டிலும்
சிறப்பானவனல்ல. ஒரு வேலைக்காரன் தன்
முதலாளியை காட்டிலும் சிறப்பானவனல்ல.
25ஒரு மாணவன் தன் ஆசிரியரின் அளவிற்கு
முன்னேறுவதில் திருப்தியடையவேண்டும்.
ஒரு வேலைக்காரன் தன் எஜமானைப்போல
முன்னேற்றமடைவதில் திருப்தியடையவேண்
டும். ஒரு வீட்டின் தலைவனே ‘பெயல்செபூல்’*
என்றழைக்கப்பட்டால், அக்குடும்பத்திலுள்ள
மற்றவர்கள் அதனிலும் மோசமான பெயரால்
அழைக்கப்படுவார்கள்.

### யாருக்குப் பயப்படுவது

(லூக்கா 12:2-7)

26“எனவே, அத்தகைய மக்களைக் கண்டு
பயப்படாதீர்கள். மறைந்துள்ள யாவும்
வெளியே வரும். மர்மமாயுள்ள அனைத்தும்
தெளிவாக அறியப்படும். 27நான் இவற்றை
இருளில் (இரகசியமாக) கூறுகிறேன். ஆனால்
நீங்கள் இவற்றை வெளிச்சத்தில் கூறவேண்டு
மென நான் விரும்புகிறேன். நான் இவற்றை
அமைதியாக உங்களுடன் மட்டும் மெதுவாகப்
பேசுகிறேன். ஆனால் நீங்கள் இவற்றைத் தாரா
ளமாக எல்லா மக்களுக்கும் கூற வேண்டும்.
28மக்களைக் கண்டு பயப்படாதீர்கள். அவர்க
ளால் சரீரத்தை மட்டுமே கொல்ல முடியும்.
அவர்களால் ஆத்துமாவைக் கொல்ல முடி
யாது. சரீரத்தோடு ஆத்துமாவையும் சேர்த்து
கொல்லக்கூடிய ஒருவரிடம் (தேவனிடம்) மட்
டுமே நீங்கள் பயம் கொள்ளவேண்டும். அவர்
சரீரத்தையும் ஆத்துமாவையும் நரகத்திற்கு
அனுப்ப வல்லவர். 29பறவைகள் விற்கப்படும்
பொழுது, இரண்டு சிறிய பறவைகளின்
விலை ஓரணா மட்டுமே. ஆனால். இரண்டில்
ஒன்றுகூட உங்கள் பிதாவானவரின் அனுமதி
இன்றி சாக முடியாது. 30உங்கள் தலையி
லுள்ள முடிகளின் எண்ணிக்கையைக்கூட
தேவன் அறிவார். 31எனவே பயப்படாதீர்கள்.
பல பறவைகளைக் காட்டிலும் நீங்கள் அதிக
மதிப்பு வாய்ந்தவர்கள்.

### விசுவாசத்தை வெளிபடுத்துங்கள்

(லூக்கா 12:8-9)

32“ஒருவன் மற்றவர்களுக்கு முன்னால்
(நின்றுகொண்டு) என்னிடம் நம்பிக்கை உடை
யவனாய் இருப்பதாகக் கூறினால், அவன்
எனக்குப் பாத்திரவான். நான் பரலோகத்தில்
உள்ள என் பிதாவின் முன்னிலையில் இப்
படியே கூறுவேன். 33மாறாக, ஒருவன் மற்ற
வர்களுக்கு முன்னால் என்னிடம் நம்பிக்கை
உடையவனல்ல எனக் கூறினால், அவன்
எனக்குப் பாத்திரவானல்ல. நான் பரலோகத்
தில் உள்ள என் பிதாவின் முன்னிலையில்
இப்படியே கூறுவேன்.
34“பூமியில் சமாதானத்தை ஏற்படுத்துவதற்
காக நான் வந்திருப்பதாய் நினைக்காதீர்கள்.
சமாதானத்தை ஏற்படுத்த நான் வரவில்லை.
ஒரு பட்டயத்தைக் கொண்டுவருவதற்காக நான்
வந்துள்ளேன். 35-36கீழ்க்கண்டவை நடந்தேறவே
நான் வந்துள்ளேன்.

> ‘தன் குடும்பத்து மக்களே ஒருவருக்கு
> ஒருவர் எதிராவார்கள். மகன் தன்
> தந்தைக்கும், மகள் தன் தாய்க்கும், மரு
> மகள் தன் மாமியாருக்கும், எதிராவார்
> கள்.’ *மீகா 7:6*

37“என்னைவிடவும் தன் தந்தையையும்
தாயையும் அதிகம் நேசிக்கிறவன் என்னைப்
பின்பற்றத் தக்கவனல்ல. என்னைவிடவும் தன்
மகனையும் மகளையும் அதிகம் நேசிக்கிறவன்
என்னைப் பின்பற்றத் தக்கவனல்ல. 38என்
னைப் பின்பற்றும்பொழுது உண்டாகும் துன்
பத்தை ஏற்றுக்கொள்ளாதவன், என்னைப்
பின்பற்றத்தனல்ல. 39என்னைவிடவும் தன்
வாழ்வை அதிகம் நேசிக்கிறவன், மெய்யான
வாழ்வை இழக்கிறான். எனக்காகத் தன்
வாழ்வை அர்ப்பணிக்கிறவன், மெய்யான
வாழ்வை அடைவான். 40உங்களை ஏற்றுக்
கொள்கிறவன் என்னையும் ஏற்றுக்கொண்
டவன். என்னை ஏற்றுக்கொள்கிறவன்,
என்னை அனுப்பியவரையும் (தேவனையும்)
ஏற்றுக் கொண்டவன். 41தீர்க்கதரிசியைக்
கண்டு அவரை ஒப்புக்கொள்கிறவன், தீர்க்க
தரிசி பெறும் வெகுமதியைப் பெறுவான்.
நல்லவரை அவர்கள் நல்லவர்கள் என்பதற்
காக ஏற்றுக்கொள்கிறவன், நல்லவர்களுக்குக்
கிடைக்கும் வெகுமதியைப் பெறுவான்.
42யாரேனும் என்னைப் பின்பற்றுகிறவர்
களுக்குச் சிறிய அளவேனும் உதவினால்,
அவன் தக்க வெகுமதியை நிச்சயம் பெறு
வான். என்னைப் பின்பற்றுகிறவர்களுக்கு

---

**பெயல்செபூல்** *பிசாசுகளின் தலைவன்.*

ஒரு குவளைத் தண்ணீர் கொடுத்திருந்தாலும்,
அவனுக்குத் தக்க வெகுமதி நிச்சயம் கொடுக்
கப்படும்.”

### இயேசுவும் யோவான்ஸ்நானகனும்

(லூக்கா 7:18-35)

11 இயேசு தமது பன்னிரெண்டு சீடர்களுக்
கும் இவற்றைக் கூறி முடித்தார். பின்னர்
அங்கிருந்து கலிலேயாவின் நகரங்களுக்குப்
போதனை செய்வதற்காகச் சென்றார்.
2யோவான் ஸ்நானகன் சிறையிலிருந்தான்.
கிறிஸ்து செய்து கொண்டிருந்த பணிகளை
யோவான் கேள்வியுற்றான். எனவே,
யோவான் தனது சீஷர்கள் சிலரை இயேசு
விடம் அனுப்பினான். 3யோவானின் சீஷர்கள்
இயேசுவைக்கண்டு, “யோவான் வருவதாகக்
கூறிய மனிதர் நீங்கள்தானா அல்லது நாங்கள்
வேறொருவரின் வருகைக்குக் காத்திருக்க
வேண்டுமா?” என்று கேட்டனர்.

4இயேசு அவர்களிடம், “யோவானிடம்
திரும்பிச் சென்று நீங்கள் கேள்வியுறுவனவற்
றையும் காண்பவற்றையும் கூறுங்கள். 5குருடர்
கள் பார்வை பெறுகிறார்கள். முடவர்கள்
நடக்கிறார்கள். தொழு நோயாளிகள் குண
மாகிறார்கள். செவிடர்கள் கேட்கும் சக்தி பெறு
கிறார்கள். இறந்தவர்கள் மீண்டும் உயிர்த்
தெழுகிறார்கள். ஏழைகளுக்கு நற்செய்தி அறி
விக்கப்படுகிறது. 6என்னை ஏற்றுக்கொள்
கிறவன் ஆசீர்வதிக்கப்படுகிறான்” என்று
பதில் சொன்னார்.

7யோவானின் சீஷர்கள் புறப்பட்டுப் போன
பின்பு, இயேசு அங்கிருந்த மக்களிடம் யோவா
னைப்பற்றிப் பேசலானார். இயேசு அவர்
களிடம், “வனாந்திரத்திற்கு எதைக்காண்
பதற்குப் போனீர்கள்? காற்றில் அசையும்
நாணலைக் காண்பதற்காகவா? இல்லை.
8உண்மையில் எதைக்காணச் சென்றீர்கள்?
சிறந்த ஆடைகளை உடுத்திய மனிதனைக்
காண்பதற்கா? இல்லை சிறந்த ஆடைகளை
உடுத்திக்கொள்கிறவர்கள் அரண்மனைகளில்
தான் வசிக்கிறார்கள். 9அப்படியானால்
எதைக் காண வனாந்திரத்திற்குப் போனீர்
கள்? தீர்க்கதரிசியையா? ஆம், நான் சொல்லு
கிறேன், தீர்க்கதரிசியைக் காட்டிலும்
யோவான், மேலானவன். 10ஏற்கெனவே வேத
வாக்கியங்களில் யோவானைப்பற்றி இவ்
வாறு எழுதப்பட்டுள்ளது:

‘கவனியுங்கள்! நான் என் உதவியாளை
உங்களுக்கு முன்பாக அனுப்புவேன்.
உங்களுக்கான பாதையை அவன் தயார்
செய்வான். ’

மல்கியா 3:1

என்று கூறினார்.

11நான் உங்களுக்கு உண்மையைச் சொல்
லுகிறேன். ஞானஸ்நானம் வழங்கும்
யோவான் இவ்வுலகில் வாழ்ந்த எந்த மனித
னைக் காட்டிலும் மேலானவன். ஆனால், பர
லோக இராஜ்யத்தில் மிகவும் அற்பமான
மனிதன்கூட யோவானைக் காட்டிலும் முக்கிய
மானவன். 12யோவான் வந்த காலந்தொட்டு
இன்றுவரை பரலோக இராஜ்யம் வலுவ
டைந்து வருகிறது. மக்கள் வலிமையைப்
பயன்படுத்திப் பரலோக இராஜ்யத்தை
அடைய முயன்று வந்திருக்கிறார்கள். 13எல்
லாத் தீர்க்கதரிசனங்களும் மோசேயின் நியா
யப்பிரமாணமும் யோவானின் வருகை
வரைக்கும் தீர்க்கதரிசனம் உரைத்தன. நடக்க
விருந்த செயல்களை அவை கூறின. 14நியா
யப்பிரமாணம் கூறியவற்றையும் தீர்க்கதரி
சிகள் கூறியவற்றையும் நீங்கள் நம்பினால்,
யோவானே எலியா* என்பதையும் நீங்கள்
நம்புவீர்கள். நியாயப்பிரமாணமும் தீர்க்கதரி
சனங்களும் அவன் வருவான் எனச் சொல்
கின்றன. 15என் பேச்சைக் கேட்பவர்களே,
கவனியுங்கள்.

16“இன்றைக்கு வாழ்ந்து கொண்டிருக்கும்
மனிதர்களைக் குறித்து நான் என்ன சொல்ல
முடியும்? எப்படிப்பட்டவர்கள் அவர்கள்?
கடைவீதியில் அமர்ந்திருக்கும் பிள்ளைக
ளைப் போன்றவர்கள் இன்றைய மக்கள். ஒரு
கூட்ட பிள்ளைகள் மற்றொன்றைப் பார்த்து,

17‘உங்களுக்காக இசைத்தோம், ஆனாலும்,
நீங்கள் நடனமாடவில்லை. சோகப்பாடல்
ஒன்றைப் பாடினோம், ஆனாலும், நீங்கள்
சோகம் கொள்ளவில்லை’

என்று அழைக்கிறது.

18மக்கள் அப்படிப்பட்டவர்கள் என்று நான்
ஏன் கூறுகிறேன்? யோவான் மற்றவர்களைப்
போல உண்ணவில்லை; திராட்சை இரசம்
குடிக்கவில்லை. ஆனால் மக்கள் ‘யோவானுக்
குள் ஒரு பிசாசு இருக்கிறது’ என்று சொல்
கிறார்கள். 19மனிதகுமாரன் வந்திருந்து மற்ற
வர்களைப் போலவே உண்ணுகிறார்:
திராட்சை இரசமும் குடிக்கிறார். மக்களோ,
‘அவரைப் பாருங்கள்!’ அதிகமாக உண்ணுகி
றார். அதிகமாக திராட்சை இரசமும் குடிக்கி
றார். வரி வசூலிப்பவர்களுக்கும் தீயவர்களுக்
கும் அவர் நண்பர் என்று சொல்கிறார்கள்.
ஆனால் ஞானம் அதன் செயல்களால் தீர்மா
னிக்கப்படுகிறது.”

### நம்பிக்கையற்றோருக்கு எச்சரிப்பு

(லூக்கா 10:13-15)

20பிறகு, தாம் பெரும்பாலான அற்புதங்
களை நிகழ்த்திய நகரங்களை இயேசு விமர்
சித்தார். ஏனென்றால் அந்நகரங்களிலுள்ள
மக்கள் அதற்குப்பின் தமது வாழ்க்கை
முறையை மாற்றிக்கொண்டு பாவம் செய்

**எலியா** மல்கியா 4:5-6. (பார்க்க)

வதை நிறுத்தவில்லை. 21இயேசு, “கோராசின்
நகரமே, பெத்சாயிதா* நகரமே, இது உங்க
ளுக்கு மிகவும் கொடுமையானது. உங்களுக்கு
நான் பல அற்புதங்களை நிகழ்த்தினேன். அதே
அற்புதங்களைத் தீரு மற்றும் சீதோன்* நகரங்
களில் நடத்தியிருந்தால், அம்மக்கள் வெகு
நாள் முன்பே மனந்திருந்தியிருப்பார்கள்.
தங்கள் பாவங்களுக்காகத் தம் வருத்தத்தைத்
தெரிவிக்க சாக்குத்துணி ஆடையை அணிந்து
சாம்பல் பூசிக்கொண்டிருப்பார்கள். 22நியாயத்
தீர்ப்பு வழங்கும் நாளன்று தீரு மற்றும்
சீதோன் மக்களைவிடவும் உங்களுக்கு மிகத்
துன்பம் ஏற்படும் என்று நான் சொல்கிறேன்.
23கப்பர்நகூம் மக்களாகிய நீங்கள் வானம்
வரை உயர்த்தப்படுவீர்களோ? இல்லை! நீங்
கள் மரணக்குழியில் தள்ளப்படுவீர்கள். உங்
களிடம் பல அற்புதங்களைச் செய்தேன் நான்.
அந்த அற்புதங்களைச் சோதோம் நகரில்
நிகழ்த்தியிருந்தால், அந்நகர மக்கள் பாவம்
செய்வதை நிறுத்தியிருப்பார்கள். இன்னும்
ஒரு நகரமாகவே அது இருந்திருக்கும்.
24ஆனால் நியாயத்தீர்ப்பு வழங்கப்படுகிற
நாளன்று சோதோம் நகர மக்களைக் காட்
டிலும் மிகத்துன்பம் உங்களுக்கு ஏற்படும்
என்று சொல்கிறேன்” என்று கூறினார்.

### இயேசு தரும் இளைப்பாறுதல்

*(லூக்கா 10:21-22)*

25பிறகு இயேசு, “பரலோகத்திற்கும் பூலோ
கத்திற்கும் ஆண்டவராகிய பிதாவே! உமக்கு
நான் நன்றி கூறுகிறேன். ஏனென்றால்,
இவற்றை நீர் ஞானவான்களிடமிருந்து மறைத்
துள்ளீர். ஆனால் இவற்றைக் குழந்தையைப்
போன்ற மக்களுக்கு வெளிப்படுத்தியிருக்
கிறீர். 26ஆம். பிதாவே, நீர் மெய்யாகவே இவை
நடைபெற வேண்டும் என விரும்பியதால்
இப்படிச் செய்தீர்” என்றார்.

27“என் பிதா எனக்கு எல்லாவற்றையும்
கொடுத்துள்ளார். குமாரனை வேறு யாரும்
அறியார்; பிதாவே குமாரனை அறிவார்.
அதைப் போலவே, பிதாவைக் குமாரன்
மட்டுமே அறிவார்; வேறு யாரும் அறியார்.
மேலும், பிதாவானவரைப்பற்றி அறிந்தவர்
களையே குமாரனும் போதனை செய்யத்
தேர்ந்தெடுக்கிறார்.

28“களைப்படைந்து மிகுந்த பாரம் சுமக்கிற
வர்களே என்னிடம் வாருங்கள். நான் உங்
களுக்கு ஓய்வு அளிப்பேன். 29என் பணிகளை
ஏற்றுக்கொண்டு என்னிடமிருந்து கற்றுக்
கொள்ளுங்கள். நான் சாந்தமும் பணிவும்
கொண்டவன். உங்கள் ஆத்துமாவிற்கு ஓய்
வைக் கண்டடைவீர்கள். 30நான் உங்களை
ஏற்றுக்கொள்ளச் சொல்லும் வேலை எளிதா
னது. நான் உங்களைச் சுமக்கச் சொல்லும்
பளு இலேசானது” என்று இயேசு கூறினார்.

### இயேசுவைக்குறித்த விமர்சனம்

*(மாற்கு 2:23-28; லூக்கா 6:1-5)*

12 அப்போது இயேசு, யூதர்களுக்கு முக்
கியமான வாரத்தின் ஓய்வு நாளன்று*
வயல் வெளியில் நடந்து கொண்டிருந்தார்.
இயேசுவின் சீடர்கள் அவருடன் இருந்தனர்.
அவர்கள் பசியுடனிருந்தனர். எனவே, சீடர்
கள் கதிர்களைப் பிடுங்கி உண்டனர். 2இதைப்
பரிசேயர்கள் பார்த்தார்கள். அவர்கள் இயேசு
விடம், “பாருங்கள். யூதச்சட்டத்துக்கு எதிராக
ஓய்வு நாளில் செய்யக்கூடாததை உங்கள் சீடர்
கள் செய்கிறார்கள்” என்றனர்.

3இயேசு அவர்களிடம், “தாவீது* என்ன
செய்தான் என்பதை நீங்கள் வாசிக்கவில்
லையா?” 4தேவனுடைய வீட்டிற்குச் சென்
றான். தேவனுக்குக் காணிக்கையாக்கப்பட்ட
அப்பத்தைத் தாவீதும் மற்றவர்களும் உண்
டார்கள். அந்த அப்பத்தை உண்டது குற்றமா?
ஆசாரியர்கள் மட்டுமே அந்த அப்பத்தை
உண்ணலாம். 5நீங்கள் மோசேயின் நியாயப்
பிரமாணத்தில் படித்திருக்கிறீர்கள். அதாவது
ஓய்வு நாளில் ஆலயங்களில் ஆசாரியர்கள்
ஓய்வு கொள்ளாமல் சட்டத்தைப் புறக்கணிக்
கிறார்கள் என்று. ஆனால், அவ்வாறு செய்
யும் ஆசாரியர்கள் குற்றம் செய்தவர்கள் அல்ல.
6நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.
ஆலயத்தைக்காட்டிலும் மேலானவர் இங்கே
இருக்கிறார். 7வேதாகமம் கூறுகிறது, ‘எனக்கு
விலங்குகளைப் பலியிடுவது விருப்பமான
தல்ல. மக்களிடம் இரக்கத்தையே நான் விரும்
புகிறேன்,’* அவ்வார்த்தைகளின் உண்மை
யான பொருள் உங்களுக்குத் தெரியாது. அதன்
பொருளை நீங்கள் அறிந்திருந்தால்
குற்றமற்றவர்களைக் குற்றவாளிகளாக்கமாட்
டீர்கள்.

8“மனித குமாரனே ஓய்வு நாளுக்கும் ஆண்ட
வராயிருக்கிறார்” என்று பதிலுரைத்தார்.

### சூம்பிய கையைக் குணமாக்குதல்

*(மாற்கு 3:1-6; லூக்கா 6:6-11)*

9இயேசு அவ்விடத்தைவிட்டு, ஜெப ஆலயத்
துக்குள் நுழைந்தார். 10ஜெப ஆலயத்துக்குள்
சூம்பிய கையுடன் ஒருவன் இருந்தான். இயேசு
வின்மேல் குற்றம் சுமத்துவதற்கான ஒரு கார
ணத்தைத் தேடி சில யூதர்கள் அங்கிருந்தனர்.
எனவே அவர்கள் இயேசுவிடம், “ஓய்வு
நாளில் குணப்படுத்துவது சரியா?”* என்று
கேட்டார்கள்.

---

**கோராசின், பெத்சாயிதா, கப்பர்நகூம்** *மக்களுக்கு இயேசு பிரச்சாரம் செய்த கலிலேயோ ஏரிக்கரை நகரங்கள்.*

**தீரு, சீதோன்** *தீய மக்கள் வாழ்ந்த நகரங்கள்.*

**ஓய்வுநாள்** *யூத வாரத்தின் ஏழாவது நாள். இது யூத மக்களுக்கு மதத்திற்குரிய சிறப்பான நாளாகும்.*

**தாவீது** *இஸ்ரவேலின் அரசன், கிறிஸ்துவுக்கு* 1000 *ஆண்டுகளுக்குமுன் வாழ்ந்தவர்.*

**‘எனக்கு … விரும்புகிறேன்’** *ஓசியா* 6:6.

**ஓய்வுநாள் … சரியா** *ஓய்வுநாளில் பணிபுரிவது யூதச் சட்டத்திற்கு எதிரானது.*

[11]இயேசு, "உங்களில் யாருக்கேனும், ஓர்
ஆடு இருந்து அது ஓய்வு நாளில் ஒரு குழியில்
விழுந்தால், நீங்கள் அதைக் குழியில் இருந்து
தூக்கி எடுப்பீர்கள் அல்லவா? [12]ஓர் ஆட்டைக்
காட்டிலும் மனிதன் நிச்சயமாக மேலானவன்.
எனவே, ஓய்வு நாளில் நற்செயல்களைச்
செய்ய மோசேயின் நியாயப்பிரமாணம் அனு
மதிக்கின்றது" என்று பதிலளித்தார்.
[13]பிறகு, இயேசு சூம்பியக் கையுடைய மனி
தனிடம், "எங்கே உன் கைகளைக் காட்டு!"
என்றார். அவன் இயேசு காணுமாறு தன்
சூம்பிய கையை நீட்டினான். அது மற்ற
கையைப்போல குணமாயிற்று. [14]ஆனால்
பரிசேயர்கள் இயேசுவைக் கொல்லத் திட்டம்
தீட்டியவாறு அங்கிருந்து விலகிச் சென்றனர்.

### இயேசு தேவனின் ஊழியர்

[15]பரிசேயர்களின் எண்ணத்தை அறிந்த
இயேசு, அவ்விடத்தை விட்டு நீங்கினார்.
ஏராளமான மக்கள் இயேசுவைப் பின்தொடர்ந்
தார்கள். இயேசு நோயாளிகள் அனைவரை
யும் குணமாக்கினார். [16]ஆனால், தான் யாரென்
பதை மற்றவர்களிடம் கூறக்கூடாது என அவர்
களை எச்சரித்தார். [17]ஏசாயா தீர்க்கதரிசி
சொன்னது நடக்கும்படிக்கு இயேசு இவ்வாறு
செய்தார். ஏசாயா சொன்னது இதுவே,

[18]"இதோ என் ஊழியன் நான் இவரைத்
தேர்ந்தெடுத்திருக்கிறேன். நான் இவரை
நேசிக்கிறேன்; இவரைக்குறித்து நான்
மகிழ்ச்சியாயிருக்கிறேன். என் ஆவியை
இவர் மேல் அமரச்செய்வேன். இவர்
தேசங்களுக்கு (என்) நேர்மையான
நியாயத்தைக் கூறுவார்
[19] இவர் வாக்குவாதம் செய்யார்; கூக்குரல்
செய்யார். வீதிகளில் உள்ள மக்கள் இவர்
குரலைக் கேளார்.
[20] ஏற்கெனவே வளைந்த நாணலைக்கூட
இவர் உடைக்கமாட்டார். அணையப்
போகிற விளக்கைக் கூட இவர் அணைக்
கமாட்டார். நியாயத்தீர்ப்பு செய்து முடிக்
கும்வரை இவர் தம் முயற்சியில் தளர
மாட்டார்.
[21] எல்லா மக்களும் இவரிடம் நம்பிக்கை
கொள்வார்கள்."

*ஏசாயா 42:1-4*

### இயேசுவின் வல்லமை

*(மாற்கு 3:20-30; லூக்கா 11:14-23; 12:10)*

[22]பின்னர், சிலர் இயேசுவிடம் ஒரு மனி
தனை அழைத்து வந்தனர். குருடனான
அவனால் பேசவும் முடியவில்லை. ஏனென்
றால் அவனுக்குள் ஒரு பிசாசு இருந்தது.
இயேசு அவனைக் குணப்படுத்தினார். அவ
னால் பார்க்கவும் பேசவும் முடிந்தது. [23]வியப்
புற்ற மக்கள், "தேவன் தாம் அனுப்பிவைப்
பதாக வாக்களித்த தாவீதின் குமாரன் இவர்
தான் போலும்!" என்றனர்.

[24]மக்கள் இவ்வாறு கூறுவதைப் பரிசேயர்
கள் கேட்டனர். பரிசேயர்கள், "பெயல்செபூ
லின் வல்லமையையே இயேசு பிசாசுகளை
ஓட்டுவதற்குப் பயன்படுத்துகிறார்" என்று
கூறினர். பெயல்செபூல் பிசாசுகளின் தலை
வன்.
[25]இயேசு பரிசேயர்களின் எண்ணங்களை
அறிந்தார். எனவே இயேசு, "தனக்குள் சண்
டையிட்டுக்கொள்ளும் பிரிவுகளைக் கொண்ட
எந்த இராஜ்யமும் அழிந்துவிடும். பிரி
வுகொள்ளுகின்ற எந்த நகரமும் நிலைக்
காது. பிரிகின்ற எந்தக் குடும்பமும் முன்
னேற்றம் அடையாது. [26]எனவே, சாத்தான்*
தன்னுடைய பிசாசுகளையே துரத்தினால்,
சாத்தான் பிரிந்திருக்கிறான். எனவே சாத்தா
னின் இராஜ்யம் நிலைத்திருக்காது. [27]நான்
பிசாசுகளை விரட்டும்பொழுது சாத்தானின்
வல்லமையை நான் பயன்படுத்துவதாக நீங்
கள் கூறுகிறீர்கள். அது உண்மையெனில்,
உங்கள் மனிதர்கள் பிசாசுகளை விரட்ட எந்த
சக்தியைப் பயன்படுத்துகிறார்கள்? எனவே,
உங்கள் மக்களே நீங்கள் சொல்வது பொய்
என்று நிரூபிக்கிறார்கள். [28]ஆனால், பிசாசு
களை விரட்ட நான் தேவ ஆவியின் வல்ல
மையைப் பயன்படுத்துகிறேன். தேவனுடைய
இராஜ்யம் உங்களிடம் வந்துள்ளது என்பதை
இது காட்டுகிறது.
[29]"ஒருவன் வலிமையான மனிதனின் வீட்
டுக்குள் புகுந்து திருட நினைத்தால், முதலில்
அவ்வலிமையான மனிதனைக் கட்டிப்போட
வேண்டும். பின்னரே, அவன் அவ்வலிமை
யான மனிதனின் வீட்டிலிருந்து பொருட்
களைத் திருட முடியும்.
[30]"என்னுடன் இல்லாதவன் எனக்கு
எதிரானவன். என்னுடன் சேர்ந்து செயல்
புரியாதவன் எனக்கு எதிராகச் செயல்படு
கிறவன். [31]அதனால் நான் சொல்லுகிறேன்,
மனிதர்கள் எல்லாப் பாவங்களிலிருந்தும்
மன்னிக்கப்படுவார்கள். மேலும் மனிதர்கள்
சொல்லுகின்ற எல்லாத் தீயவற்றுக்கும் மன்
னிப்புண்டு. ஆனால், பரிசுத்த ஆவிக்கு எதி
ராகப் பேசுகிறவனுக்கு மன்னிப்பு கிடைக்
காது. [32]மனித குமாரனுக்கு எதிராகப் பேசு
கிறவனுக்கு மன்னிப்பு கிடைக்கும். ஆனால்
பரிசுத்த ஆவியானவருக்கு எதிராகப் பேசு
கிறவனுக்கு மன்னிப்பு கிடையாது. இப்பொ
ழுதோ அல்லது எதிர்காலத்திலோ அவன்
மன்னிக்கப்படமாட்டான்.

### செயல்கள் வெளிபடுத்தும் உண்மை

*(லூக்கா 6:43-45)*

[33]"நல்ல பழங்கள் தேவையெனில், நல்ல
மரத்தை வளர்க்க வேண்டும். மரம் தீயதா
னால், பழங்களும் தீயனவாகும். ஒரு மரத்தின்

---

**சாத்தான்** பிசாசுகள் இலக்கிய வழக்குப்படி 'சாத்
தான் சாத்தானைக் கட்டாயப்படுத்தி வெளியேற்றி
னால்.'

தரம் அதன் பழங்களைக் கொண்டே அறியப்
படும். 34பாம்புகள் நீங்கள்! பொல்லாதவர்கள்
நீங்கள்! நீங்கள் எப்படி நல்லவற்றைக் கூற
முடியும். உள்ளத்திலுள்ளதையே வாய் பேசு
கிறது. 35ஒரு நல்லவன் தன் உள்ளத்தில்
நல்லவைகளை வைத்திருக்கிறான். எனவே
அவன் நல்லவைகளை உள்ளத்திலிருந்து
பேசுகிறான். ஆனால் பொல்லாத மனிதன்
தன் உள்ளத்தில் பொல்லாதவைகளைச்
சேர்த்து வைத்திருக்கிறான். எனவே அவன்
பொல்லாதவைகளைத் தன் உள்ளத்திலிருந்து
பேசுகிறான். 36மனிதர்கள் தாங்கள் பேசுகிற
கவனமற்ற வார்த்தைகள் ஒவ்வொன்றுக்கும்
கணக்கு ஒப்புவிக்கவேண்டும். இது நியாயத்
தீர்ப்பு வழங்கப்படுகிற நாளில் நடக்கும்.
37உங்களது வார்த்தைகளே உங்களுக்கு நியா
யம் வழங்க பயன்படுத்தப்படும். உங்களது
வார்த்தைகளே உங்களை நல்லவரென்றும்
உங்கள் வார்த்தைகளே உங்களைத் தீயோர்
என்றும் நியாயம் தீர்க்கும்" என்று சொன்
னார்.

### யூதர்கள் ஆதாரம் கேட்டல்

(மாற்கு 8:11-12; லூக்கா 11:29-32)

38பின்னர், பரிசேயர்கள் சிலரும் வேத
பாரகர்கள் சிலரும் இயேசுவுக்கு மறுமொழி
கூறினார்கள். அவர்கள் "போதகரே, உம்மை
நிரூபிக்கும்படியாக ஓர் அற்புதம் செய்து
காட்டும்" என்று கேட்டனர். 39அதற்கு இயேசு,
"பொல்லாதவர்களும் பாவிகளும்தான் அற்பு
தங்களை ஆதாரமாகக் கேட்பார்கள். ஆனால்,
எந்த அற்புதமும் அவர்களுக்கு ஆதாரமாகக்
காட்டப்படமாட்டாது. தீர்க்கதரிசி யோனா
விற்கு நிகழ்ந்த அற்புதம்மட்டுமே ஆதாரமாக
கொடுக்கப்படும். 40யோனா ஒரு பெரிய மீனின்
வயிற்றில் மூன்று பகலும் மூன்று இரவுகளும்
இருந்தான். அதைப் போலவே, மனித குமா
ரனும் கல்லறைக்குள் மூன்று பகலும் மூன்று
இரவுகளும் இருப்பார். 41மேலும் நியாயத்
தீர்ப்பு வழங்கும் நாளில் நினிவே* பட்டணத்து
மனிதர் உயிர்த்தெழுந்து இன்று வாழ்கின்ற
உங்கள் தவறுகளை நிரூபிப்பார்கள். ஏனென்
றால், யோனாவின் போதனையைக் கேட்டு,
அவர்கள் மனந்திரும்பினார்கள். நான் சொல்
லுகிறேன், நான் யோனாவைக் காட்டிலும்
மேன்மையானவன். 42நியாயத்தீர்ப்பு வழங்
கும் நாளில், தென்திசையின் அரசி* உயிர்த்
தெழுந்து உங்கள்மேல் குற்றம் சுமத்துவாள்.
ஏனென்றால், அந்த அரசி மிகத் தொலைவி
லிருந்து சாலமோனின் ஞானம் செறிந்த போத
னைகளைக் கேட்க பயணப்பட்டு வந்தாள்.
நான் சொல்லுகிறேன், நான் சாலமோனைக்
காட்டிலும் மேலானவன்.

### திரும்பி வரும் தீய ஆவி

(லூக்கா 11:24-26)

43"பிசாசின் பொல்லாத ஆவி ஒரு மனித
னுக்குள்ளிருந்து வெளியில் வரும்பொழுது,
வறண்ட நிலப்பகுதியில் ஓய்விடம் தேடி
அலைகிறது. ஆனால், அதற்கு ஓய்விடம்
கிடைப்பதில்லை. 44எனவே, அந்த ஆவி,'நான்
புறப்பட்ட இடத்திற்கே திரும்பச் செல்வேன்'
என்று சொல்லி அந்த ஆவி திரும்பி அதே
மனிதனிடம் வரும்பொழுது, அது இருந்த இடம்
வெறுமையாயும் சுத்தமாயும் ஒழுங்குடனும்
இருப்பதை அறிகிறது. 45பின்னர், வெளி
யேறித் தன்னிலும் பொல்லாத மேலும்
ஏழு பொல்லாத ஆவிகளை அழைத்து
வருகிறது. எல்லா ஆவிகளும் அவனுக்குள்
புகுந்து வசிக்கின்றன. முன்பைவிட அவ
னுக்கு ஆழ்ந்த தொல்லை ஏற்படுகிறது. இன்று
வாழ்கின்ற பொல்லாதவர்களுக்கும் அப்ப
டியே நேரும்" என்று பதிலளித்தார்.

### இயேசுவின் குடும்பத்தினர் யார்?

(மாற்கு 3:31-35; லூக்கா 8:19-21)

46இயேசு மக்களிடம் பேசிக்கொண்டிருந்த
பொழுது அவரது தாயும் சகோதரர்களும்
வெளியில் நின்றிருந்தனர். அவர்கள் இயேசு
விடம் பேச விரும்பினர். 47ஒருவன் இயேசு
விடம், "உம் தாயும் சகோதரர்களும் வெளியில்
காத்திருக்கின்றனர். அவர்கள் உம்மிடம் பேச
விரும்புகிறார்கள்" என்றான்.

48இயேசு, "யார் என் தாய்? யார் என்
சகோதரர்கள்?" என்று கேட்டார். 49தன் சீஷர்
களைச் சுட்டிக் காட்டி, "பாருங்கள்! இவர்களே
என் தாயும் சகோதரர்களும். 50பரலோகிலிருக்
கும் என் பிதா விரும்பும் செயல்களைச்
செய்கிறவர்களே என் உண்மையான சகோதர
சகோதரிகளும் தாயும் ஆவார்கள்" என்று
அவனுக்கு பதிலளித்தார்.

### விதையைப்பற்றிய உவமை

(மாற்கு 4:1-9; லூக்கா 8:4-8)

13 அன்றைய தினமே இயேசு வீட்டை
விட்டு வெளியில் சென்று ஏரிக்கரை
யில் அமர்ந்தார். 2ஏராளமான மக்கள் அவ
ரைச் சூழ்ந்தனர். எனவே இயேசு ஒரு படகில்
ஏறி அமர்ந்தார். மக்கள் ஏரிக்கரையோரம்
அமர்ந்தார்கள். 3பிறகு உவமைகளின்*
மூலமாக இயேசு மக்களுக்குப் பலவற்றையும்
போதித்தார். இயேசு, "ஒரு விவசாயி விதை
களை விதைக்கப்போனான். 4அவன் விதை
களைத் தூவியபோது, சில விதைகள் பாதை
யோரம் விழுந்தன. பறவைகள் வந்து அவை

---

**நினிவே** யோனா பிரச்சாரம் செய்த நகரம். யோனா 3.

**தென்திசை அரசி** ஷீபா நாட்டு ராணி. சாலமோனிடமிருந்த தேவனுடைய ஞானத்தைப் பற்றி அறிய 1000 மைல்கள் பயணம் செய்தாள். வாசிக்க 1இராஜா 10:1-13.

**உவமை** நீதிபோதனையை விளக்குவதற்குப் பயன்படுத்தப்படும் சிறிய கதை அல்லது சம்பவம்.

யாவற்றையும் தின்று விட்டன. 5சில விதை
கள் பாறைகளின் மேல் விழுந்தன. அங்கு
போதுமான அளவிற்கு மண் இல்லை.
எனவே, விதைகள் வேகமாக முளைத்தன.
6ஆனால் சூரியன் உதித்ததும், அவை கருகிப்
போயின. ஆழமான வேர்கள் இல்லாமையால்
அச்செடிகள் காய்ந்தன. 7இன்னும் சில விதை
கள் முட்புதர்களுக்கிடையில் விழுந்தன. களை
கள் முளைத்து அந்த விதைகளின் செடிகள்
வளராதவாறு தடுத்தன. 8சில விதைகள் நல்ல
நிலத்தில் விழுந்தன. அந்நிலத்தில், விதைகள்
முளைத்து நன்கு வளர்ந்தன. சில செடிகள்
நூறு மடங்கு தானியங்களைக் கொடுத்தன.
சில அறுபது மடங்கும் சில முப்பது மடங்கும்
தானியங்களைக் கொடுத்தன. 9நான் சொல்
வதைக் கேட்கிறவர்களே, கவனியுங்கள்”
என்று இயேசு கூறினார்.

### உவமைகள் ஏன்?

(மாற்கு 4:10-12; லூக்கா 8:9-10)

10இயேசுவின் சீஷர்கள் அவரிடம் வந்து,
“மக்களுக்குப் போதனை செய்ய நீங்கள் ஏன்
இந்த உவமைகளைப் பயன்படுத்துகிறீர்கள்?”
என்று கேட்டனர்.

11இயேசு மறுமொழியாக, “பரலோக இராஜ்
யத்தின் ரகசியங்களை நீங்கள் மட்டுமே அறிய
முடியும். அவற்றை மற்றவர்கள் அறிய முடி
யாது. 12சிறிது புரிந்தவன் மேலும் விளக்கம்
பெறுவான். தேவையானதை விடவும் அவ
னுக்கு அதிகம் கிடைக்கும். அதிகம் புரியாத
வன், தான் அறிந்ததையும் இழப்பான். 13அத
னால் தான் நான் மக்களுக்குக் உவமைகளின்
மூலம் போதனை செய்கிறேன். மக்கள் பார்க்
கிறார்கள்; கேட்கிறார்கள். ஆனால் அவர்கள்
உண்மையில் பார்ப்பதுமில்லை, புரிந்து
கொள்வதுமில்லை. 14எனவே ஏசாயா தீர்க்க
தரிசி இவர்களைப்பற்றிக் கீழ்க்கண்டவாறு
சொன்னது உண்மை என்பதை இம்மக்கள்
காட்டுகிறார்கள்:

‘மக்களே! நீங்கள் கவனித்து கேட்பீர்கள்.
ஆனாலும் புரிந்து கொள்ளமாட்டீர்கள்.
மக்களே! நீங்கள் நோக்கி பார்ப்பீர்கள்.
ஆனாலும், நீங்கள் பாரப்பதைப் புரிந்து
கொள்ளமாட்டீர்கள்.

15 ஆம். இறுகியிருக்கிறது இம்மக்களின்
மனம். காதுகளிருந்தும் கேட்பதில்லை.
உண்மையைக் கண்டுகொள்ள மறுக்
கிறார்கள். தங்கள் காதால் கேளாதிருக்
கவும் தங்கள் கண்ணால் பார்க்காதிருக்
கவும் தங்கள் மனதால் அறியாதிருக்கவும்
இவ்வாறு நடந்துள்ளது. குணம் பெற
என்னிடம் வராதிருக்குமாறும் இவ்வாறு
நடந்துள்ளது.’

ஏசாயா 6:9-10

16“ஆனால் நீங்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்
கள். கண்களால் பார்ப்பதை நீங்கள் புரிந்து
கொள்கிறீர்கள். காதால் கேட்பதைப் புரிந்து
கொள்கிறீர்கள். 17நான் உண்மையைச் சொல்
கிறேன். பல தீர்க்கதரிசிகளும் நல்லவர்களும்
நீங்கள் இப்பொழுது காண்பவற்றைக் காண
விரும்பினார்கள். ஆனால் அவர்கள் இவற்
றைக் காணவில்லை. நீங்கள் இப்பொழுது
கேட்பவற்றைக் கேட்பதற்குப் பல தீர்க்கதரிசி
களும் நல்லவர்களும் விரும்பினார்கள்.
ஆனால், அவர்கள் இவற்றைக் கேட்கவில்லை.

### விதைகளின் உவமையின் விளக்கம்

(மாற்கு 4:13-20; லூக்கா 8:11-15)

18“எனவே, விவசாயியைப் பற்றிய
உவமையின் பொருளைக் கவனியுங்கள்.
19சாலையின் ஓரம் விழுந்த விதை யாரைக்
குறிக்கிறது? அது பரலோக இராஜ்யத்தைப்
பற்றிக் கேள்வியுற்றும் அதைப் புரிந்து
கொள்ளாத மனிதனைக் குறிக்கிறது. அவனது
மனதில் விதைக்கப்பட்டவற்றைச் சாத்தான்
கவர்ந்து கொள்கிறான். 20பாறைகளின் மேல்
விழுந்த விதை யாரைக் குறிக்கிறது? அது
போதனைகளைக் கேட்டு உடனடியாக மகிழ்ச்
சியுடன் ஏற்றுக்கொள்ளும் மனிதனைக் குறிக்
கிறது. 21அவன் போதனைகளைத் தன் மன
தில் ஆழமாகப் பதிய வைத்துக்கொள்வ
தில்லை. அவன் போதனைகளைத் தன் மன
தில் குறைந்த காலத்திற்கே வைத்திருக்கிறான்.
போதனைகளைக் ஏற்றுக்கொண்டதினால்
உபத்திரவமோ, துன்பமோ ஏற்படும்பொழுது,
அவன் விரைவாக அதை விட்டு விடுகிறான்.
22முட்புதருக்கிடையில் விழுந்த விதை யாரைக்
குறிக்கிறது? அது போதனைகளைக் கேட்டும்
இவ்வுலக வாழ்வின் மீதும் பணத்தின் மீதும்
கொண்ட ஆசையினால் போதனைகள்
தன்னுள் நிலையாதிருக்கச் செய்பவனைக்
குறிக்கிறது. எனவே, போதனைகள் அவன்
வாழ்வில் பயன்* விளைவிப்பதில்லை.
23ஆனால், நல்ல நிலத்தில் விழுந்த விதை
யாரைக் குறிக்கிறது? அவ்விதை போதனை
களைக் கேட்டுப் புரிந்துகொள்ளும் மனி
தனைக் குறிக்கிறது. அத்தகைய மனிதன்
வளர்ந்து, சில சமயம் நூறு மடங்கும் சில
சமயம் அறுபது மடங்கும் சில சமயம் முப்பது
மடங்கும் பலன் தருகிறான்” என்றார்.

### கோதுமை, களையின் உவமை

24பிறகு, இயேசு மற்றொரு உவமையின்
மூலம் போதனை செய்தார். “பரலோக
இராஜ்யம் தனது வயலில் நல்ல விதையை
விதைத்த மனிதனைப் போன்றது. 25அன்
றைக்கு இரவில், அனைவரும் உறங்கிக்
கொண்டிருந்தனர். அவனது பகைவன் வந்து
கோதுமை விதைகளுக்கிடையில் களைகளை
விதைத்துவிட்டுப் போய்விட்டான். 26பிறகு,
கோதுமை விதைகள் முளைவிட்டன. செடிகள்
முளைத்தன. ஆனால், அதே சமயம் களை

**பயன்** தேவன் தன்மக்கள் செய்யவேண்டும் என
விரும்பும் நற்செயல்கள்.

களும் முளைத்தன. **27**அவனது வேலைக்
காரர்கள் அவனிடம் சென்று, ‘நல்ல விதை
களையே நீங்கள் உங்கள் வயலில் விதைத்
தீர்கள். ஆனால், களைகள் எங்கிருந்து
வந்தன?’ என்று கேட்டார்கள்.

**28**“அதற்கு அவன், ‘ஒரு பகைவன் களை
களை விதைத்துவிட்டான்’ என்றான் வேலை
க்காரர்கள், ‘நாங்கள் களைகளை நீக்கவேண்
டுமா?’ என்று கேட்டார்கள்.

**29**“அதற்கு அந்த விவசாயி, ‘தேவை
யில்லை. ஏனென்றால், நீங்கள் களையெடுக்
கும்பொழுது கோதுமை செடிகளையும் பிடுங்
குவீர்கள். **30**களைகளும் கோதுமையும் அறு
வடைக் காலம்வரையிலும் ஒன்றாக வளரட்
டும். அறுவடையின்பொழுது அறுவடை செய்
பவர்களிடம் நான், ‘முதலில் களைகளைத்
தீயிலிடுவதற்காக சேர்த்துக் கட்டுங்கள், பின்
னர் கோதுமையைச் சேகரித்து என் களஞ்சி
யத்திற்குக் கொண்டு வாருங்கள் என்று சொல்
வேன்’ என பதில் சொன்னான் என்று இயேசு
கூறினார்.

### மேலும் பல உவமைகள்

*(மாற்கு 4:30-34; லூக்கா 13:18-21)*

**31**பிறகு இயேசு மக்களுக்கு வேறொரு
உவமையைக் கூறினார். “பரலோக இராஜ்
யமானது கடுகைப் போன்றது. ஒருவன் தன்
வயலில் கடுகு விதையை விதைக்கிறான்.
**32**விதைகளிலெல்லாம் மிகச் சிறியது கடுகு.
ஆனால், அது முளைக்கும்பொழுது மிகப்
பெரிய செடிகளில் ஒன்றாக வளர்கிறது. அது
மரமாக வளர்ந்து பறவைகள் அதன் கிளை
களில் கூடு கட்டுகின்றன” என்றார்.

**33**இயேசு மக்களுக்கு மேலும் ஒரு உவமை
யைக் கூறினார். “பரலோக இராஜ்யமானது
ஒரு பெண் மாவுடன் கலக்கும் புளித்த பழைய
மாவைப் போன்றது. புளித்த மாவானது
அனைத்து மாவையும் புளிக்கவைக்கிறது”
என்றார்.

**34**இவை அனைத்தையும் மக்களுக்குப்
போதிப்பதற்காக இயேசு உவமைகளைக்
கையாண்டார். எப்பொழுதும், மக்களுக்குப்
போதனை செய்ய இயேசு உவமைகளையேக்
கையாண்டார். **35**இது தீர்க்கதரிசி கீழ்க்கண்
டவாறு சொன்னபடியே நடந்தது.

“நான் உவமைகளின் வழியாகப் பேசு
வேன், உலகம் வந்தது முதல் இரகசிய
மாயுள்ளவற்றை நான் சொல்வேன்”
சங்கீதம் 78:2

### கடினமான உவமையை விளக்குதல்

**36**இயேசு மக்களை விட்டு வீட்டிற்குள் சென்
றார். அவரது சீஷர்கள் அவரிடம் வந்து,
“வயலில் முளைத்த களையின் உவமை கூறும்
உண்மைப் பொருளை எங்களுக்கு விளக்கும்”
என்று கேட்டனர்.

**37**இயேசு மறுமொழியாக, “நல்ல விதை
களை வயலில் விதைத்தவன் மனித குமாரன்
தான். **38**இவ்வுலகமே வயல். நல்ல விதைகள்
பரலோகத்திற்குரிய நல்ல பிள்ளைகள். களை
கள் பிசாசின் பிள்ளைகள். **39**பிசாசே களை
களை விதைத்தப் பகைவன். உலகின்* முடி
வுக் காலமே அறுவடைக் காலம். தேவதூதர்
களே அறுவடை செய்பவர்கள்.

**40**“களைகள் பிடுங்கப்பட்டு தீயிலிடப்படு
கின்றன. உலகின் முடிவுக் காலத்திலும் அப்
படியே இருக்கும். **41**மனித குமாரன் தனது
தேவதூதர்களை அனுப்புவார். அவரது தூதர்
கள் பாவம் செய்கிறவர்களைக் கண்டு பிடிப்
பார்கள். அத்தூதர்கள் அவர்களை மனித
குமாரனின் இராஜ்யத்திலிருந்து வெளியேற்று
வார்கள். **42**அவர்களை அத்தேவ தூதர்கள்
சூளையின் நெருப்பில் தள்ளுவார்கள். அங்கு
அவர்கள் வேதனையால் கூக்குரலிடுவார்கள்;
தங்கள் பற்களைக் கடிப்பார்கள். **43**நல்ல
மனிதர்கள் சூரியனைப் போல ஒளிவீசுவார்
கள். அவர்கள் பிதாவின் அரசாட்சியில் இருப்
பார்கள். என் வார்த்தைகளைக் கேட்பவர்
களே, இதை கவனித்துக்கொள்ளுங்கள்.

### புதையல், முத்து பற்றிய உவமைகள்

**44**“பரலோக இராஜ்யம் புதைத்து வைக்கப்
பட்ட செல்வத்தைப் போன்றது. புதைத்து
வைக்கப்பட்ட செல்வத்தை ஒருவன் ஒருநாள்
கண்டு பிடித்தான். புதையல் கிடைத்ததால்
அவன் மிக மகிழ்ந்தான். மீண்டும் அவன்
அச்செல்வத்தைப் புதைத்து வைத்து அந்த
நிலத்தை வாங்குவதற்காகத் தன்னிடமிருந்த
எல்லாவற்றையும் விற்றான்.

**45**“மேலும், பரலோக இராஜ்யம் நல்ல
முத்துக்களைத் தேடும் வியாபாரியைப்
போன்றது. **46**ஒரு நாள் அவ்வியாபாரி மிகச்
சிறந்த முத்து ஒன்றைக் கண்டான். அம்முத்தை
வாங்குவதற்காகத் தன்னிடமிருந்த அனைத்
தையும் அந்த வியாபாரி விற்றான்.

### வலையைப்பற்றிய உவமை

**47**“பரலோக இராஜ்யம் ஏரியில் விரிக்கப்
பட்ட வலையைப் போன்றது, ஏரியில் விரிக்
கப்பட்ட ஒருவலை, பல வகையான மீன்
களைப் பிடித்தது. **48**நிரம்பிய வலையை, மீன
வர்கள் கரைக்கு இழுத்தனர். நல்ல மீன்களை
மீனவர்கள் ஒரு கூடையிலிட்டனர். பின், தகுதி
யற்ற மீன்களைத் தூர எறிந்தனர். **49**இவ்
வுலகின் முடிவுக் காலத்திலும் அவ்வாறே
நடக்கும். தேவதூதர்கள் வந்து நல்ல மனிதர்
களைத் தீயவர்களிடமிருந்து பிரிப்பார்கள்.
**50**அந்தத் தேவதூதர்கள் தீயவர்களைச் சூளை
யின் நெருப்பில் எறிவார்கள். அங்கு அவர்கள்
வலியினால் கூக்குரலிட்டுப் பற்களைக் கடிப்
பார்கள்.”

---

**உலகம்** இலக்கிய வழக்குப்படி ‘இக்காலம்’ அல்
லது ‘இந்நேரம்.’

51பிறகு, இயேசு தம் சீஷர்களிடம், “உங்
களுக்கு இவைகள் புரிகின்றனவா?” என்று
கேட்டார். சீஷர்கள், “ஆம், எங்களுக்குப் புரி
கின்றன” என்று பதிலுரைத்தனர்.
52பின்பு இயேசு தம் சீஷர்களிடம், “பரலோக
இராஜ்யத்தைப்பற்றி அறிந்த வேதபாரகர்கள்
ஒவ்வொருவரும் ஒரு வீட்டின் சொந்தக்
காரனைப் போன்றவர்கள். வீட்டின் சொந்தக்
காரன் தன் வீட்டில் புதியதும் பழையதுமான
பொருட்களைச் சேமித்து வைத்திருக்கிறான்.
அவன் புதியதும் பழையதுமான பொருட்
களைக் கொண்டு வருகிறான்” என்றார்.

### தன் சொந்த ஊரில் இயேசு

(மாற்கு 6:1-6; லூக்கா 4:16-30)

53இந்த உவமைகளைக் கூறி முடித்த இயேசு,
அவ்விடத்தை விட்டு அகன்று, 54தாம் வளர்ந்த
நகருக்குச் சென்றார். ஜெப ஆலயங்களில்
இயேசு மக்களுக்குப் போதித்தார். மக்கள்
வியப்புற்று “இம்மனிதன் இந்த ஞானத்தையும்
அற்புதங்கள் செய்யும் வல்லமையையும் எங்
கிருந்து பெற்றான்? 55தச்சுத் தொழிலாளியின்
மகன் தானே இவன். இவன் தாய் மரியாள்.
யாக்கோபு, யோசே, சீமோன் மற்றும் யூதா
ஆகியோர் இவன் சகோதரர்கள். 56இவனது
எல்லா சகோதரிகளும் நம்முடன் உள்ளார்கள்.
அப்படியிருந்தும், இந்த ஞானத்தையும் அற்
புதங்கள் நிகழ்த்தும் வல்லமையையும் இம்
மனிதன் எங்கிருந்து பெற்றானோ?” என்று
பேசிக்கொண்டார்கள். 57அது மட்டுமின்றி,
இயேசுவை ஏற்றுக்கொள்ள மக்கள் மறுத்
தனர்.
“மற்றவர்கள் ஒரு தீர்க்கதரிசிக்கு மதிப்பு
கொடுக்கிறார்கள். ஆனால், அத்தீர்க்கதரிசி
யின் சொந்த நகரத்து மக்களே அவனுக்கு
மதிப்பு கொடுக்க மறுக்கிறார்கள்” என்று
இயேசு அம்மக்களுக்குச் சொன்னார்.
58அம்மக்கள் இயேசுவிடம் நம்பிக்கை
வைக்கவில்லை. எனவே, இயேசு மேலும்
பல அற்புதங்களை அங்கு நடத்தவில்லை.

### ஏரோது இயேசுவைப்பற்றி அறிதல்

(மாற்கு 6:14-29; லூக்கா 9:7-9)

14 அப்போது கலிலேயாவின் மன்னனா
யிருந்த ஏரோது இயேசுவைப்பற்றி
மக்கள் பேசியவைகளைக் கேள்வியுற்றான்.
2எனவே, ஏரோது தன் வேலைக்காரர்களிடம்,
“இந்த மனிதனே உண்மையில் யோவான்
ஸ்நானகன். மரணத்திலிருந்து அவன் மீண்டும்
எழுந்திருந்திருக்க வேண்டும். அதனால் தான்
அவனால் இத்தகைய அற்புதங்களைச் செய்ய
முடிகிறது” என்று கூறினான்.

### யோவான் ஸ்நானகனின் மரணம்

3இதற்கு முன்னர், ஏரோது யோவானைக்
கைது செய்திருந்தான். ஏரோது யோவானைச்
சங்கிலியால் கட்டி சிறையிலிட்டிருந்தான்.
ஏரோதியாளின் நிமித்தம் யோவானை
ஏரோது கைது செய்திருந்தான். ஏரோதுவின்
சகோதரன் பிலிப்புவின் மனைவி ஏரோதி
யாள். 4“நீ ஏரோதியாளை உன்னோடு வைத்தி
ருப்பது சரியல்ல” என்று யோவான் ஏரோது
விடம் கூறியதால் யோவானை ஏரோது கைது
செய்தான். 5யோவான் தீர்க்கதரிசியென மக்
கள் நம்பியிருந்தார்கள். எனவே, யோவா
னைக் கொல்ல விரும்பிய ஏரோது பயந்தான்.
6ஏரோதின் பிறந்த நாளன்று, ஏரோதியா
ளின் மகள் ஏரோதுவையும் அவன் நண்பர்
களையும் மகிழ்விக்க நடனமாடினாள். அவள்
நடனத்தால் ஏரோது மிக மகிழ்ந்தான். 7என
வே, அவள் எதை விரும்பினாலும் தருவதாக
வாக்களித்தான். 8தன் மகள் எதைக் கேட்க
வேண்டும் என்பதை ஏரோதியாள் முன்னமே
அறிவுறுத்தியிருந்தாள். ஆகவே, அவள் ஏரோ
துவிடம், “எனக்கு யோவான் ஸ்நானகனின்
தலையை ஒரு தட்டில் வைத்துத் தாருங்கள்”
என்று கூறினாள். 9இதனால் மன்னன் ஏரோது
மிகுந்த துக்கம் கொண்டான். ஆனால், தன்
மகள் எதை விரும்பினாலும் தருவதாக வாக்
களித்திருந்தான். ஏரோதுவுடன் உணவருந்திக்
கொண்டிருந்தவர்கள் அவன் வாக்குறுதி
யைக் கேட்டிருந்தார்கள். எனவே, அவள்
விரும்பியதை நிறைவேற்ற ஏரோது கட்டளை
யிட்டான். 10சிறையிலிருந்த யோவானின்
தலையை வெட்டுவதற்கு அவன் ஆட்களை
அனுப்பினான். 11அவர்கள் யோவானின்
தலையை ஒரு தட்டில் வைத்துக் கொண்டு
வந்து அதை அவளிடம் கொடுத்தனர். பின்னர்,
அப்பெண் அத்தலையைத் தன் தாய்
ஏரோதியாளிடம் எடுத்துச் சென்றாள்.
12யோவானின் சீஷர்கள் அவனது உடலைப்
பெற்று அடக்கம் செய்தனர். பின், அவர்கள்
இயேசுவிடம் சென்று நடந்ததைக் கூறினார்
கள்.

### 5000 பேருக்கு உணவளித்தல்

(மாற்கு 6:30-44; லூக்கா 9:10-17;
யோவான் 6:1-14)

13யோவானுக்கு நேர்ந்ததைக் கேள்வியுற்ற
இயேசு, ஒரு படகில் புறப்பட்டுச் சென்றார்.
யாருமற்ற ஒரு தனியிடத்திற்குத் தன்னந்தனி
யே சென்றார். இயேசு புறப்பட்டுச் சென்றதை
மக்கள் கேள்விப்பட்டனர். எனவே, அவர்
களும் தங்கள் நகரங்களை விட்டு இயேசுவைப்
பின்தொடர்ந்தனர். இயேசு சென்ற இடத்திற்கு
அவர்கள் தரைவழியே சென்றனர். 14இயேசு
அங்கு வந்தபொழுது, அங்கே ஏராளமான
மக்களைக் கண்டார். அவர்களுக்காக வருத்த
முற்ற இயேசு, அங்கிருந்த நோயாளிகளைக்
குணப்படுத்தினார்.
15அன்று பிற்பகல், இயேசுவின் சீஷர்கள்
அவரிடம் வந்து, “மனிதர் யாரும் இங்கு வசிப்
பதில்லை. மேலும் நேரமுமாகிவிட்டது. மக்
களைத் திருப்பி அனுப்புங்கள். அப்பொழுது
தான் அவர்கள் தங்கள் ஊர்களுக்குச் சென்று
உணவை வாங்க முடியும்” என்று சொன்னார்

கள். 16இயேசு, “மக்கள் திரும்பிச் செல்லவேண்
டியத் தேவையில்லை. நீங்களே அவர்களுக்கு
உணவு அளியுங்கள்” என்று பதிலளித்தார்.
17அதற்குச் சீஷர்கள் “ஆனால், நம்மிடம்
ஐந்து அப்பங்களும் இரண்டு மீன்களும் தானே
உள்ளன” என்று பதில் சொன்னார்கள்.
18“அப்பத்தையும் மீனையும் என்னிடம்
கொண்டு வாருங்கள்” என்று இயேசு கூறி
னார். 19பிறகு, அங்கிருந்த மக்களை இயேசு
புல்வெளியில் அமரச் சொன்னார். இயேசு
ஐந்து அப்பங்களையும் இரண்டு மீன்களையும்
கையிலெடுத்துக் கொண்டார். இயேசு வானத்
தைப் பார்த்து அந்த உணவுக்காகத் தேவ
னுக்கு நன்றி சொன்னார். பின்னர் இயேசு
அப்பங்களைச் சீஷர்களிடம் கொடுத்தார். சீஷர்
கள் மக்களுக்குக் கொடுத்தார்கள். 20மக்கள்
அனைவரும் திருப்தியாக உண்டார்கள்.
மக்கள் உண்டது போக எஞ்சிய உணவைப்
பன்னிரெண்டு கூடைகளில் நிரப்பினார்கள்.
21அங்கு சுமார் ஐயாயிரம் ஆண்கள் உணவு
உண்டனர். மேலும், பல பெண்களும் குழந்
தைகளும் கூட உணவு உண்டனர்.

### இயேசு தண்ணீரின் மேல் நடத்தல்

*(மாற்கு 6:45-52; யோவான் 6:15-21)*

22பிறகு இயேசு தமது சீஷர்களைப் படகில்
ஏறச் சொன்னார். இயேசு அவர்களை ஏரி
யின் மறுகரைக்குப் போகச் சொன்னார். தாம்
பின்னர் வருவதாக அவர்களிடம் கூறினார்.
23மக்களிடம் விடை பெற்றுக்கொண்ட இயேசு
குன்றின்மீது ஏறினார். தனியே பிரார்த்தனை
செய்வதற்காக இயேசு அங்கு சென்றார்.
24அந்தச் சமயம், படகு ஏற்கெனவே வெகு
தொலைவு சென்றிருந்தது. படகு. அலைகளி
னால் தொல்லைகளுக்கு உள்ளானது. படகு
சென்ற திசைக்கு எதிராகக் காற்று வீசியது.
25அதிகாலை, மூன்று மணியிலிருந்து ஆறு
மணிவரை இயேசுவின் சீஷர்கள் படகிலேயே
இருந்தனர். இயேசு தண்ணீரின் மேல் நடந்து
அவர்களிடம் வந்தார். 26இயேசு தண்ணீரின்
மேல் நடப்பதைக் கண்ட சீஷர்கள் பயந்து
போனார்கள். “அது ஒரு ஆவிதான்” என்று
அவர்கள் பயத்தில் அலறினார்கள்.
27உடனே இயேசு அவர்களிடம், “கவலை
கொள்ளாதீர்கள் நான்தான்! பயப்படாதீர்கள்”
என்று கூறினார்.
28அதற்குப் பேதுரு, “ஆண்டவரே, மெய்
யாகவே இது நீர்தானென்றால், என்னை உம்
மிடம் தண்ணீரின் மேல் நடந்துவரக் கட்டளை
யிடும்” என்று சொன்னான்.
29இயேசு அவனிடம், “வா, பேதுரு” என்று
கூறினார்.
பின்னர், பேதுரு படகிலிருந்து இறங்கி,
தண்ணீரின் மேல் இயேசுவை நோக்கி நடந்
தான். 30ஆனால், தண்ணீரின் மேல் நடந்து
சென்றபொழுது பேதுரு காற்றடிப்பதையும்
அலைகள் வீசுவதையும் கண்டான். பயந்து
போன பேதுரு, நீரில் மூழ்க ஆரம்பித்தான்.
உடனே பேதுரு, “ஆண்டவரே, என்னைக்
காப்பாற்றும்” என்று அலறினான்.
31உடனே இயேசு தமது கையால் பேதுரு
வைப் பற்றிக் கொண்டார். இயேசு அவனிடம்,
“உன் விசுவாசம் சிறியது. நீ ஏன் சந்தேகம்
கொண்டாய்?” என்று சொன்னார்.
32பேதுருவும் இயேசுவும் படகில் ஏறியதும்
காற்று அமைதியடைந்தது. 33அதன்பிறகு
படகிலிருந்த சீஷர்கள் இயேசுவை வணங்கி,
“உண்மையிலேயே நீர் தேவகுமாரன் தான்”
என்று சொன்னார்கள்.
34அவர்கள் ஏரியைக் கடந்து, கெனசெ
ரேத்து என்ற இடத்தை அடைந்தார்கள். 35அங்
கிருந்த மக்கள் இயேசுவைக் கண்டனர்.
அவர்கள் அவர் யார் என்பதை அறிந்திருந்
தனர். எனவே, அவர்கள் அப்பிரதேசத்தைச்
சுற்றியிருந்த மற்றவர்களிடம் இயேசு வந்திருப்
பதைக் கூறினார்கள். நோயாளிகள் அனை
வரையும் இயேசுவிடம் அழைத்து வந்தனர்.
36அவரது மேலாடையைத் தொடுவதற்குமட்டு
மாவது அனுமதித்து குணம் பெறத் தங்களை
அனுமதிக்குமாறு இயேசுவிடம் மக்கள் கெஞ்
சிக் கேட்டனர். இயேசுவின் மேலாடையைத்
தொட்ட நோயாளிகள் அனைவரும் குணம
டைந்தனர்.

### தேவனின் பிரமாணங்களும் மனிதர் விதிமுறைகளும்

*(மாற்கு 7:1-23)*

15 அப்பொழுது பரிசேயர்கள் சிலரும்
நியாயப்பிரமாண போதகர்களில் சில
ரும் இயேசுவிடம் வந்தார்கள். எருசலேமி
லிருந்து வந்த அவர்கள் இயேசுவிடம், 2“நமக்கு
முன்னர் வாழ்ந்த பெரியோர்கள் நமக்கு இட்ட
கட்டளைகளை உமது சீஷர்கள் ஏன் பின்பற்று
வதில்லை? உணவு உண்பதற்கு முன் உமது
சீஷர்கள் ஏன் கைகளைக் கழுவுவதில்லை?”
என்று கேட்டனர்.
3இயேசு அவர்களுக்கு, “உங்கள் சட்டங்
களைப் பின்பற்றும்படிக்கு நீங்கள் ஏன்
தேவனின் கட்டளைகளுக்கு கீழ்ப்படிய மறுக்
கிறீர்கள்? 4‘உன் தாய் தந்தையரை நீ மதிக்க
வேண்டும்’* என்று தேவன் சொன்னார்.
மேலும் ‘தந்தையிடமோ தாயிடமோ தீயசொற்
களைக் கூறுகிறவன் கொல்லப்படுவான்’*
என்றும் தேவன் சொல்லியுள்ளார். 5ஆனால்
நீங்கள் ஒருவனுக்கு தன் தாய் தந்தையரிடம்,
‘நான் உங்களுக்கு ஒரு உதவி செய்யமுடியும்.
ஆனால், அதை உங்களுக்குச் செய்யமாட்
டேன். அதைத் தேவனுக்குக் காணிக்கையாக்
குவேன்” என்று கூறுவதற்குப் போதிக்கிறீர்
கள். 6தந்தையை மதிக்காதிருக்க நீங்கள்
போதிக்கிறீர்கள். தேவன் சொன்னதைச் செய்
வது முக்கியமல்ல என்று நீங்கள் போதிக்கி
றீர்கள். நீங்கள் ஏற்படுத்தியுள்ள சட்டதிட்டங்

---

**‘உன் ... வேண்டும்’** *யாத்.* 20:12, *உபா.* 5:16.

**‘தந்தை ... வேண்டும்’** *யாத்.* 21:17.

களைப் பின்பற்றுவதே முக்கியமானதென்று
நீங்கள் எண்ணுகிறீர்கள். 7நீங்கள் மாயமான
வர்கள்! உங்களைப்பற்றி ஏசாயா சரியாகவே
இவ்வாறு சொல்லியிருக்கிறார்:

8 "இவர்கள் என்னை மதிப்பதாகக் கூறு
கிறார்கள். ஆனாலும் மெய்யாகவே
அவர்கள் வாழ்வில் நான் முக்கிய
மில்லை.
9 என்னை வணங்குவதில் பொருளில்லை.
அவர்கள் போதிப்பதெல்லாம் மனிதர்
உண்டாக்கிய சட்டங்களே!"
ஏசாயா 29:13

10இயேசு மக்களைத் தன்னருகில் அழைத்து,
"நான் சொல்வதைக் கவனமாகக் கேட்டுப்
புரிந்துகொள்ளுங்கள். 11ஒருவன் வாய்க்
குள்ளே போகிறது அவனை அசுத்த மாக்காது.
மாறாக, ஒருவன் பேசும் சொற்களாலேயே
அசுத்தமடைகிறான்" என்று சொன்னார்.

12பின்னர், அவரது சீஷர்கள் இயேசுவிடம்
வந்து, "நீங்கள் சொல்லியவற்றால் பரிசேயர்
கள் கோபமாயுள்ளார்கள் என்பது உங்களுக்
குத் தெரியுமா?" என்று கேட்டார்கள்.
13அதற்கு இயேசு, "பரலோகத்தில் இருக்கும்
என் பிதாவால் நடப்படாத செடிகள் ஒவ்
வொன்றும் வேருடன் பிடுங்கப்படும். 14பரிசே
யர்களிடமிருந்து விலகியிருங்கள். குருடர்கள்
குருடர்களை வழிநடத்துவது போல் அவர்கள்
மக்களை வழிநடத்துகிறார்கள். ஒரு குருடன்
மற்றொரு குருடனை வழிநடத்தினால், இரு
வருமே பள்ளத்தில் வீழ்வார்கள்" என்றார்.
15அப்பொழுது பேதுரு, "நீர் மக்களுக்கு
முதலில் சொல்லியதன் பொருளை எங்
களுக்கு விளக்கும்" என்று கேட்டான்.
16அதற்கு இயேசு, "புரிந்து கொள்வதில்
இன்னமுமா சிரமம்? 17ஒரு மனிதனின் வாய்க்
குள் செல்லும் உணவு அனைத்தும் அவனது
வயிற்றை அடைவது உனக்குத் தெரியும். பின்
அந்த உணவு அவன் உடலை விட்டு வெளி
யேறுகிறது. 18ஆனால், ஒருவன் பேசும் தீய
சொற்கள் அவன் மனதிலிருந்து தோன்றுகின்
றன. இவையே ஒருவனைத் அசுத்தமாக்கு
கின்றன. 19தீய எண்ணங்கள், கொலை, விப
சாரம், பாலியல் பாவங்கள், திருட்டு, பொய்,
மற்றவர்களைத் தூற்றுதல் ஆகிய எல்லா
தீமைகளும் ஒருவனது உள்ளத்திலேயே தோன்
றுகின்றன. 20இவை ஒருவனை அசுத்தமாக்கு
கின்றன. ஆனால் உணவு உண்பதற்கு முன்பு
கைகளைக் கழுவாதிருப்பது ஒருவனை அசுத்
தமாக்குவது இல்லை" என்றார்.

### யூதரல்லாத பெண்மணிக்கு உதவுதல்
(மாற்கு 7:24-30)

21இயேசு அவ்விடத்தை விட்டு தீரு மற்றும்
சீதோன் பிரதேசங்களுக்குச் சென்றார். 22அப்
பிரதேசத்தைச் சேர்ந்த கானான் ஊர் பெண்
ஒருத்தி இயேசுவிடம் வந்தாள். அவள் இயேசு
விடம் கதறியழுது, "ஆண்டவரே! தாவீதின்
குமாரனே! எனக்கு உதவும்! என் மகளைப்
பிசாசு பிடித்திருக்கிறது. அவள் மிகவும் துன்
பப்படுகிறாள்" என்றாள்.
23ஆனால் இயேசு அவளுக்கு மறு மொழி
கூறவில்லை. எனவே, இயேசுவின் சீஷர்கள்
அவரிடம், "அந்தப் பெண்ணைப் போகச்
சொல்லும். நம்மைத் தொடர்ந்து வந்து கதறு
கிறாள்" என்று கெஞ்சினார்கள்.
24இயேசு, "தேவன் காணாமல் போன
இஸ்ரவேலின் ஆடுகளிடம்மட்டுமே என்னை
அனுப்பினார்" என்று கூறினார்.
25அப்போது அப்பெண் இயேசுவின் முன்
னர் வந்து மண்டியிட்டு, "ஆண்டவரே, எனக்கு
உதவும்" எனக் கூறினாள்.
26இயேசு, "குழந்தைகளின் அப்பத்தை
எடுத்து நாய்களுக்குக் கொடுப்பது சரியல்ல"
என்று பதில் சொன்னார்.
27அதற்கு அப்பெண், "ஆம் ஆண்டவரே!
ஆனால் எஜமானனின் மேஜையிலிருந்து சித
றும் அப்பத்துண்டுகளை நாய்கள் உண்ணு
கின்றனவே" என்றாள்.
28பின்னர் இயேசு அவளை நோக்கி,
"பெண்ணே, உனக்கு மிகுந்த விசுவாசம்
இருக்கின்றது! நான் செய்ய வேண்டுமென்று
நீ விரும்பியதை நான் செய்கிறேன்" என்று
கூறினார். அதே நேரத்தில் அப்பெண்ணின்
மகள் குணப்படுத்தப்பட்டாள்.

### இயேசு பலரையும் குணமாக்குதல்

29பின் இயேசு அவ்விடத்தைவிட்டு விலகி,
கலிலேயா ஏரிக்கரைக்குச் சென்றார். இயேசு
ஒரு குன்றின்மீதேறி அங்கே அமர்ந்தார்.
30ஏராளமான மக்கள் இயேசுவிடம் வந்தார்
கள். அவர்கள் நோயாளிகள் பலரையும்
அழைத்து வந்து, அவர்களை இயேசுவின்
முன் கொண்டுவந்தனர். அங்கு முடவர்களும்
குருடர்களும் செவிடர்களும் இன்னும் பல
வகை நோயாளிகளும் இருந்தனர். இயேசு
அவர்கள் அனைவரையும் குணமாக்கினார்.
31ஊமையர் பேசியதைக் கண்ட மக்கள் வியப்
புற்றனர். முடவர்கள் மீண்டும் நடந்தனர். குரு
டர்கள் பார்வை பெற்றனர். மக்கள் அனை
வரும் இஸ்ரவேலின் (யூதர்களின்) தேவனுக்கு
அதற்காக நன்றி கூறினார்கள்.

### நாலாயிரத்துக்கும் அதிகமான மக்களுக்கு உணவு அளித்தல்
(மாற்கு 8:1-10)

32இயேசு தம் சீஷர்களை அருகில் அழை
த்து, "இம்மக்களுக்காக நான் வருந்துகிறேன்.
இவர்கள் மூன்று நாட்களாக என்னுடன் இருக்
கிறார்கள். ஆனால், இப்பொழுது அவர்களுக்கு
உணவு ஏதுமில்லை. அவர்களைப் பசியுடன்
அனுப்ப எனக்கு விருப்பமில்லை. வீட்டிற்குத்
திரும்பும்பொழுது அவர்கள் சோர்வடைய
லாம்" என்றார்.

[33]இயேசுவின் சீஷர்கள் அவரிடம், “இவர்கள் அனைவருக்கும் போதுமான அப்பத்துக்கு நாம் எங்கே போக முடியும்? எந்த நகரமும் இங்கிருந்து வெகு தொலைவில் உள்ளது” என்றார்கள்.

[34]இயேசு, “எத்தனை அப்பங்கள் உங்களிடம் உள்ளன?” என்று கேட்டார். அதற்கு அவரது சீஷர்கள், “எங்களிடம் ஏழு அப்பங்களும் சில மீன்களும் உள்ளன” என்றனர்.

[35]இயேசு மக்களைத் தரையில் உட்காரச் சொன்னார். [36]இயேசு ஏழு அப்பங்களையும் மீன்களையும் எடுத்துக் கொண்டார். பின் அவர் அவ்வுணவுக்காகத் தேவனுக்கு நன்றி கூறி, அவ்வுணவைத் தம் சீஷர்களுக்குக் கொடுத்தார். சீஷர்கள் மக்களுக்கு உணவை அளித்தனர். [37]மக்கள் அனைவரும் திருப்தியாய் உண்டனர். அதன் பின்னர், எஞ்சிய உணவைச் சீஷர்கள் ஏழு கூடை நிறைய நிறைத்தார்கள். [38]அங்கு சுமார் 4000 ஆண்கள் உணவருந்தினர். மேலும் பல பெண்களும் குழந்தைகளும் உணவு உண்டார்கள். [39]அவர்கள் உண்டபின், இயேசு அவர்களைத் திரும்பிச் செல்லப் பணித்தார். இயேசு ஒரு படகில் ஏறி, மக்தலாவின் பிரதேசத்திற்குச் சென்றார்.

### யூதத் தலைவர்களால் சோதனை

(மாற்கு 8:11-13; லூக்கா 12:54-56)

16 இயேசுவைச் சோதிப்பதற்காகப் பரிசேயர்களும் சதுசேயர்களும் அவரிடம் வந்தார்கள். அவர்கள் இயேசு தேவனிடமிருந்து வந்தவர் என்பதை நிரூபிக்க ஒரு அற்புதம் நிகழ்த்துமாறு கேட்டனர்.

[2]இயேசு அவர்களிடம், “சூரியன் மறைவதை நீங்கள் காணும்பொழுது, காலநிலை எப்படியிருக்கும் என்பதை நீங்கள் அறிவீர்கள். செவ்வானமாயிருந்தால், நல்ல காலநிலை என்கிறீர்கள். [3]சூரிய உதயத்தைக் காலையில் காண்கிறீர்கள். அப்பொழுது வானம் இருண்டும் சிவந்துமிருந்தால், மழை பெய்யும் என்கிறீர்கள். இவை கால நிலையின் அறிகுறிகள். இவைகளை வானத்தில் கண்டு, அவற்றின் பொருளை அறிகிறீர்கள். அது போலவே, தற்பொழுது நடப்பவைகளை நீங்கள் காண்கிறீர்கள். இவைகளும் அறிகுறிகளே. ஆனால், இவற்றின் பொருளை நீங்கள் அறியவில்லை. [4]தீயவர்களும் பாவிகளும் அற்புதங்களை அறிகுறிகளாகத் தேடுகிறார்கள். ஆனால், அவர்களுக்கு, யோனாவின் அடையாளத்தையன்றி* வேறெந்த அடையாளமும் கிடைக்காது” என்று கூறினார். பின் இயேசு அவர்களை விட்டு அகன்றார்.

### யூதத்தலைவர்களைக் குறித்து எச்சரிக்கை

(மாற்கு 8:14-21)

[5]இயேசுவும் அவரது சீஷர்களும் கலிலேயா ஏரியைக் கடந்து சென்றார்கள். ஆனால், சீஷர்கள் அப்பங்களைக் கொண்டுவர மறந்தனர். [6]இயேசு தம் சீஷர்களிடம் “எச்சரிக்கையாயிருங்கள்! பரிசேயர் சதுசேயரின் புளித்த மாவைக் குறித்து ஜாக்கிரதையாயிருங்கள்,” என்று கூறினார்.

[7]அவரது சீஷர்கள் அதன் பொருளைக் குறித்து விவாதித்தனர். “நாம் அப்பங்களைக் கொண்டுவர மறந்ததினாலா இயேசு இவ்வாறு கூறினார்?” என்று அவர்கள் விவாதித்தனர்.

[8]தமது சீஷர்கள் இதைக் குறித்து விவாதித்ததை இயேசு அறிந்தார். எனவே, இயேசு அவர்களிடம், “அப்பங்கள் இல்லாததைக் குறித்து ஏன் பேசுகிறீர்கள்? உங்கள் விசுவாசம் குறைவுள்ளது. [9]இன்னமும் நீங்கள் புரிந்துகொள்ளவில்லையா? ஐந்து அப்பங்களால் ஐயாயிரம் பேருக்கு உணவளித்தது ஞாபகமில்லையா? மக்கள் உண்டதில் மீதியைப் பல கூடைகளில் இட்டு நிரப்பியதும் ஞாபகமில்லையா? [10]ஏழு அப்பங்களைக் கொண்டு நான்காயிரம் பேருக்கு உணவளித்தது ஞாபகமில்லையா? பின் மக்கள் உண்டு மீந்ததைப் பல கூடைகளில் நிரப்பியதும் ஞாபகமில்லையா? [11]எனவே, நான் அப்பத்தை குறித்து உங்களுடன் பேசவில்லை. அது ஏன் உங்களுக்குப் புரியவில்லை? பரிசேயர்களுடையதும் சதுசேயர்களுடையதுமான தீய போதனைகளை விட்டு விலகிப் பாதுகாப்பாயிருக்க நான் உங்களுக்குக் கூறுகிறேன்,” என்றார்.

[12]பின்னரே, இயேசு கூறியதன் பொருளைச் சீஷர்கள் புரிந்து கொண்டார்கள். அப்பம் செய்யப் பயன்படுத்தப்படும் புளித்தமாவைக் குறித்து இயேசு பேசவில்லை. மாறாக, இயேசு அவர்களைப் பரிசேயர்களுடையதும் சதுசேயர்களுடையதுமான போதனைகளைக் குறித்தே எச்சரித்தார்.

### இயேசுவே கிறிஸ்து என பேதுருவின் அறிக்கை

(மாற்கு 8:27-30; லூக்கா 9:18-21)

[13]செசரியா பிலிப்பு என்ற இடத்திற்கு இயேசு சென்றார். இயேசு தம் சீஷர்களிடம், “மனித குமாரனாகிய என்னை யாரென்று மக்கள் சொல்கிறார்கள்?” என்று கேட்டார்.

[14]அதற்கு சீஷர்கள், “சிலர் உம்மை யோவான் ஸ்நானகன் என்கிறார்கள். சிலர் உம்மை எலியா என்கிறார்கள். மேலும் சிலர் உம்மை எரேமியா அல்லது தீர்க்கதரிசிகளில் ஒருவர் என்கிறார்கள்” எனப் பதில் அளித்தார்கள்.

[15]பின் இயேசு தம் சீஷர்களிடம், “நான் யாரென்று நீங்கள் கூறுகிறீர்கள்?” என்று கேட்டார்.

---

**யோனாவின் அடையாளம்** யோனா மீன் வயிற்றில் மூன்று நாள் இருந்தது இயேசு கல்லறையில் மூன்று நாள் இருந்தது போன்றது. யோனாவின் புத்தகத்தை வாசிக்க.

16அதற்கு சீமோன் பேதுரு, “நீரே கிறிஸ்து,
(ஜீவனுள்ள தேவனுடைய குமாரன்)” என்று
பதிலளித்தான். 17இயேசு அவனிடம், “யோனா
வின் குமாரனாகிய சீமோனே! நீ ஆசீர்
வதிக்கப்பட்டவன். உனக்கு யாரும் அதைக்
கற்பிக்கவில்லை. நான் யார் என்பதைப்
பரலோகத்தில் இருக்கும் என் பிதா உனக்குக்
காட்டினார். 18எனவே, நான் சொல்கிறேன்.
நீயே பேதுரு* (பாறை போன்றவன்.) என்
சபையை இப்பாறையின் மீது கட்டுவேன்.
மரணத்தின் வலிமை என் சபையை வீழ்த்த
முடியாது. 19பரலோக இராஜ்யத்தின் திறவு
கோல்களை உனக்குத் தருவேன். நீ இப்
பூலோகத்தில் வழங்கும் நியாயத்தீர்ப்பு,
(மெய்யாகவே) தேவனின் நியாயத்தீர்ப்பாகும்.
இப்பூலோகத்தில் நீ வாக்களிக்கும் மன்னிப்பு,
தேவனின் மன்னிப் பாகும்” என்று சொன்
னார். 20தான் கிறிஸ்து என்பதை ஒருவருக்கும்
சொல்லக் கூடாது எனத் தமது சீஷர்களை
இயேசு எச்சரித்தார்.

### இயேசு தம் மரணத்தைக் குறித்துக் கூறுதல்

*(மாற்கு 8:31-9:1; லூக்கா 9:22-27)*

21அப்பொழுதிலிருந்து இயேசு தம் சீஷர்களி
டம் தாம் எருசலேம் செல்ல வேண்டுமெனச்
சொல்லத் தொடங்கினார். மூத்த யூதத் தலை
வர்களாலும் தலைமை ஆசாரியர்களாலும்
நியாயப்பிரமாண போதகர்களாலும் தமக்குப்
பல இன்னல்கள் வரப்போவதை இயேசு
விளக்கினார். மேலும், தம் சீஷர்களிடம் தாம்
கொல்லப்படவிருப்பதையும் இயேசு கூறினார்.
பின்னர், மூன்றாம்நாள் தாம் உயிர்த்தெழ
விருப்பதையும் கூறினார். 22இயேசுவுடன் தனி
மையில் பேசிய பேதுரு அவரை விமர்சிக்கத்
தொடங்கினான். பேதுரு, “தேவன் உம்மை
அவற்றிலிருந்து காப்பாற்றட்டும். ஆண்டவரே!
அவை உமக்கு ஒருபோதும் நிகழக்கூடாது!”
என்று கூறினான்.
23இயேசு அதற்குப் பேதுருவிடம், “என்னை
விட்டு விலகிச் செல், சாத்தானே! நீ எனக்கு
உதவி செய்யவில்லை! தேவனின்
செயல்களைக் குறித்து உனக்குக் கவலை
யில்லை. மக்கள் முக்கியமெனக் கருதுகின்
றவைகளையே நீ பொருட்படுத்துகிறாய்”
என்று கூறினார்.
24பின்பு இயேசு தமது சீஷர்களிடம்,
“என்னைப் பின்தொடர விரும்பும் யாரும்
தன் சுயவிருப்பங்களைத் துறக்கவேண்டும்.
தனக்கு ஏற்படும் துன்பங்களை ஏற்றுக்
கொண்டு என்னைப் பின்தொடரவேண்டும்.
25தன் உயிரைக் காத்துக்கொள்ள விரும்புகி
றவன் எவனும் அதை இழப்பான். எனக்காகத்
தன் உயிரைக் கொடுக்கிறவன், தன் உயிரைக்
காப்பாற்றிக் கொள்வான். 26தன் ஆத்துமாவை
இழந்தவனுக்கு, இவ்வுலகம் முழுவதும்
கிடைத்தாலும் ஒரு பயனும் இல்லை. என்ன
விலை கொடுத்தாலும் இழந்த ஆத்துமாவை
மீட்க இயலாது. 27தமது தந்தையின் மகிமை
யுடனும் தேவதூதர்களுடனும் மீண்டும் தேவ
குமாரன் வருவார். அப்பொழுது, ஒவ்வொரு
வருக்கும் அவர்கள் செய்த செயல்களுக்குத்
தக்கபடி தேவகுமாரன் வெகுமதியளிப்பார்.
28நான் உண்மையைச் சொல்கிறேன். இங்
குள்ள சிலர் தாங்கள் இறப்பதற்கு முன்பு
மனித குமாரன் தன் இராஜ்யத்தின் ஆட்சி
யுடன் வருவதைக் காண்பார்கள்.” என்றார்.

### இயேசு மோசேயோடும் எலியாவோடும் காணப்படுதல்

*(மாற்கு 9:2-13; லூக்கா 9:28-36)*

17 ஆறு நாட்கள் கழித்து, பேதுரு,
யாக்கோபு, மற்றும் யாக்கோபின் சகோ
தரன் யோவான் ஆகியோரை அழைத்துக்
கொண்டு இயேசு ஓர் உயரமான மலைக்குச்
சென்றார். அங்கு அவர்கள் மட்டும் தனியே
இருந்தார்கள். 2சீஷர்கள் பார்த்துக்கொண்
டிருந்தபொழுதே இயேசுவின் ரூபம் மாறியது.
அவரது முகம் சூரியனைப்போலப் பிரகாச
மானது. அவரது உடைகள் ஒளியைப்
போன்று வெண்மையாயின. 3பின்பு, இருவர்
வந்து பேசினார்கள். அவர்கள் மோசேயும்
எலியாவும் ஆவார்கள். 4பேதுரு இயேசுவிடம்,
“ஆண்டவரே நாம் இங்கு வந்தது நல்லதா
யிற்று. நீர் விரும்பினால், நான் இங்கு மூன்று
கூடாரங்களை அமைக்கிறேன். உமக்கு ஒன்று,
மோசேக்கு ஒன்று, எலியாவிற்கு ஒன்று”
என்று கூறினான்.
5பேதுரு பேசிக்கொண்டிருந்தபொழுது,
அவர்களுக்கு மேலாக ஒரு பிரகாசமான மேகம்
வந்தது. மேகத்தினின்று ஒரு குரல் எழும்பி,
“இவர் (இயேசு) எனது குமாரன். இவரிடம்
நான் அன்பு செலுத்துகிறேன். நான் இவரிடம்
பிரியமாக இருக்கிறேன். இவருக்குக்
கீழ்ப்படியுங்கள்” என்று சொன்னது.
6இயேசுவுடன் இருந்த சீஷர்கள் இதைக்
கேட்டனர். மிகவும் பயந்து போன அவர்கள்,
தரையில் வீழ்ந்தார்கள். 7இயேசு அவர்களுக்
கருகில் வந்து, அவர்களைத் தொட்டு, “எழுந்
திருங்கள். பயப்படாதீர்கள்” எனக் கூறினார்.
8தலையை உயர்த்திப்பார்த்த சீஷர்கள், இயேசு
மட்டும் தனியே இருப்பதைக் கண்டார்கள்.
9இயேசுவும் சீஷர்களும் மலையை விட்டு
இறங்கிக் கொண்டிருந்தார்கள். “மலை மீது
கண்டவற்றை யாரிடமும் கூறாதீர்கள். மரணத்
திலிருந்து மனித குமாரன் உயிர்த்தெழும்
வரைப் பொறுத்திருங்கள். பின்னர் நீங்கள்
கண்டவற்றை மக்களிடம் கூறலாம்” என்று
இயேசு சீஷர்களுக்குக் கட்டளையிட்டார்.
10சீஷர்கள் இயேசுவிடம், “கிறிஸ்துவின்
வருகைக்கு முன்பே, எலியா வருகைபுரிய
வேண்டுமென ஏன் வேதபாரகர் கூறுகிறார்
கள்!” என்று கேட்டார்கள்.

---

**பேதுரு** இது கிரேக்க பெயரான பேதுரு, அரமேய பெயரான ‘கேபாஸ்’ போன்றது. அதன் பொருள் ‘பாறை’

11அதற்கு இயேசு, "எலியாவின் வருகை
குறித்து அவர்கள் கூறுவது சரியே. மேலும்,
எவை எவை எப்படியிருக்க வேண்டுமோ
அப்படியே எலியா அவற்றை ஆயத்தம்
செய்து வைப்பான். 12ஆனால், எலியா ஏற்
கெனவே வந்துள்ளான். ஆனால், அவன்
யாரென்பதை மக்கள் அறியவில்லை. மக்கள்
பலவகையான துன்பங்களை அவனுக்குத்
தந்தனர். மனித குமாரனுக்கும் அவ்வாறே
அவர்களால் துன்பங்கள் ஏற்படும்" என்று
பதிலளித்தார். 13யோவான் ஸ்நானகனே உண்
மையில் எலியா என்பதை பிற்பாடு சீஷர்கள்
உணர்ந்தார்கள்.

### இயேசு ஒரு நோயாளிச் சிறுவனைக் குணமாக்குதல்

*(மாற்கு 9:14-29; லூக்கா 9:37-43)*

14இயேசுவும் சீஷர்களும் கூடியிருந்த மக்
களிடம் திரும்பிச் சென்றார்கள். அப்போது
ஒரு மனிதன் இயேசுவின்முன் வந்து குனிந்து
வணங்கினான். 15அவன், "ஆண்டவரே! என்
மகனுக்குக் கருணை காட்டும். வலிப்பு நோயி
னால் மிகவும் துன்புறுகிறான். அடிக்கடி என்
மகன் தண்ணீரிலோ அல்லது நெருப்பிலோ
வீழ்ந்து விடுகிறான். 16உமது சீஷர்களிடம் என்
மகனை அழைத்து வந்தேன். ஆனால்,
அவர்களால் அவனைக் குணப்படுத்த இயல
வில்லை" என்றான்.

17இயேசு, "உங்களுக்கெல்லாம் விசுவாச
மில்லை. உங்கள் வாழ்க்கை முறையே தவறா
னது. இன்னும் எவ்வளவு காலம் நான் உங்
களுடன் இருக்க முடியும்? உங்களுடன் எத்
தனை நாட்கள் பொறுமையுடன் காலந்தள்ள
முடியும்? உன் மகனை இங்கு அழைத்து வா"
என்று பதில் சொன்னார். 18இயேசு
அப்பையனின் உடலுக்குள் இருந்த பிசாசுக்கு
கண்டிப்பான கட்டளையிட்டார். பின் அப்
பையனுக்குள்ளிருந்த பிசாசு வெளியேறியது.
உடனே பையன் குணமடைந்தான்.

19பிறகு இயேசுவிடம் அவரது சீஷர்கள்
தனித்து வந்தார்கள். "பையனிடமிருந்து
பிசாசை நாங்கள் விரட்ட முயன்றோம்.
ஆனால் எங்களால் இயலவில்லை. ஏன் எங்க
ளால் பிசாசை விரட்ட இயலவில்லை?"
என்று இயேசுவிடம் கேட்டார்கள்.

20அதற்கு இயேசு, "உங்களால் பிசாசை
விரட்ட முடியவில்லை, ஏனென்றால் உங்கள்
நம்பிக்கை மிகவும் சிறிய அளவிலானது.
உங்களுக்கு ஒரு கடுகளவேனும் நம்பிக்கை
இருந்து இம்மலையை நோக்கி, 'இங்கிருந்து
அங்கே நகர்ந்து செல்' எனக் கூறினால், இம்
மலையும் நகரும். 21உங்களுக்கு அனைத்தும்
சாத்தியமாகும் என்று உங்களுக்கு சொல்லு
கிறேன்"* என்று கூறினார்.

**வசனம் 21** விசுவாசத்தையும் ஜெபத்தையும் மாத்திரம் பயன்படுத்தினால் அந்தவித ஆவி வெளியே வரும் என்று சில கிரேக்க பிரதிகளில் உள்ளன.

### இயேசு தம் மரணத்தைக் குறித்துக் கூறுதல்

*(மாற்கு 9:30-32; லூக்கா 9:43-45)*

22பின்னர், இயேசுவின் சீஷர்கள் கலிலேயா
வில் சந்தித்தார்கள். இயேசு சீஷர்களிடம்
சொன்னார், "மனித குமாரன் மனிதர்களின்
வசம் ஒப்புவிக்கப்படுவார். 23அவர்கள் தேவ
குமாரனைக் கொல்லுவார்கள். ஆனால் மூன்
றாம் நாள் தேவகுமாரன் மரணத்திலிருந்து
உயிர்த்தெழுவார்" என்று சொன்னார். இயேசு
கொலையாவார் என்பதைக் கேட்ட சீஷர்கள்
மிகவும் கவலையுற்றனர்.

### வரி கொடுப்பதைப்பற்றிப் போதனை

24இயேசுவும் சீஷர்களும் கப்பர்நகூமுக்குச்
சென்றார்கள். யூதர்கள் தேவாலயத்துக்குச்
செலுத்தவேண்டிய வரியை வசூலிக்கும் ஆட்
கள் சிலர், கப்பர்நகூமில் இயேசுவிடம் வந்தார்
கள். அவர்கள் சீஷர்களிடம், "உங்கள் போதகர்
ஆலயத்திற்குக் செலுத்தவேண்டிய வரியை
செலுத்துகிறாரா?" என்று கேட்டனர்.

25அதற்குப் பேதுரு "ஆம், அவர் அந்த
வரியைச் செலுத்துகிறார்" எனப் பதிலளித்
தான். இயேசு தங்கியிருந்த வீட்டிற்குள் பேதுரு
சென்றான். அவன் வாயைத் திறக்கும் முன்
னமே, இயேசு, "மண்ணுலகில் இருக்கும் இரா
ஜாக்கள் பலவகையான வரிகளை மக்களிடமி
ருந்து வசூலிக்கிறார்கள். வரி செலுத்துகிற
வர்கள் யார்? அரசனின் பிள்ளைகள் வரி
செலுத்துகிறார்களா? அல்லது மற்றவர்கள்
வரி செலுத்துகிறார்களா? நீ என்ன நினைக்
கிறாய்?" என்று கேட்டார்.

26அதற்கு பேதுரு, "மன்னனின் பிள்ளை
கள் அல்ல, மற்றவர்களே வரி செலுத்துகி
றார்கள்" என்று பதில் உரைத்தான்.

பிறகு இயேசு, "மன்னனின் பிள்ளைகள்
வரி செலுத்த வேண்டியதில்லை. 27ஆனால்,
வரி வசூல் செய்யும் இவர்களை நாம் கோப
மூட்டவேண்டாம். எனவே, நான் கூறுகிறபடி
வரியை செலுத்திவிடு. ஏரிக்குச் சென்று மீன்
பிடி. நீ பிடிக்கும் முதலாவது மீனின் வாயைத்
திறந்து பார். அதன் வாயினுள் நான்கு நாண
யங்கள் கிடைக்கும். அந்நாணயங்களை எனக்
கும் உனக்குமான வரியாக வரி வசூலிப்ப
வர்களிடம் செலுத்திவிடு" என்று சொன்னார்.

### இயேசு யார் பெரியவர் என்பது பற்றிச் சொல்லுதல்

*(மாற்கு 9:33-37; லூக்கா 9:46-48)*

18 அச்சமயத்தில் இயேசுவின் சீஷர்கள்
அவரிடம் வந்து,"பரலோக இராஜ்யத்
தில் யார் மிகப்பெரியவர்?" என்று
கேட்டனர்.

2இயேசு ஒரு சிறு பிள்ளையைத் தம்மருகில்
அழைத்து, தம் சீஷர்கள் முன் நிறுத்தினார்.
3பின் அவர்களிடம் கூறினார், "நான் உங்
களுக்கு மெய்யாகவே சொல்லுகிறேன். நீங்கள்

மனந்திரும்பி உள்ளத்தில் சிறு பிள்ளை
களைப் போல ஆகவேண்டும். அவ்வாறு
மாறாவிட்டால், நீங்கள் ஒருபொழுதும் பர
லோக இராஜ்யத்தில் நுழைய முடியாது. 4இந்த
சிறு பிள்ளையைப்போலப் பணிவுள்ளவனா
கிறவனே பரலோக இராஜ்யத்தில் பெரியவன்.
5“இச்சிறு பிள்ளையை என் பெயரால்
ஏற்றுக்கொள்கிறவன், என்னையும் ஏற்றுக்
கொள்கிறான். 6என்னிடம், நம்பிக்கை வைத்
துள்ள ஒரு சிறு பிள்ளையைப் பாவம் செய்ய
ஒருவன் தூண்டினால், அவனுக்கு மிகத் தீமை
விளையும். அவ்வாறு செய்கிறவன், ஒரு
ஆட்டுக்கல்லைத் தன் கழுத்தில் கட்டிக்
கொண்டு கடலில் மூழ்குவதே நல்லது. 7பாவம்
செய்ய மக்கள் சோதிக்கப்படுவதால், அவர்
களுக்காக வருந்துகிறேன். அவ்வாறான
செயல்கள் நடக்கவேண்டும்தான். ஆனால்,
அவற்றுக்குக் காரணமானவர்களுக்கு மிகுந்த
தீங்கு வரும். 8உங்களது கையோ அல்லது
காலோ உங்களைப் பாவம் செய்யத் தூண்
டினால், அதை வெட்டி எறியுங்கள். சரீரத்தின்
ஒரு பகுதியை இழந்து நித்திய ஜீவனை அடை
வது உங்களுக்கு நல்லது. இரு கை கால்
களுடன் எரிகின்ற நரகத்தின் தீயில் என்றென்
றைக்குமாக எறியப்படுவதைக் காட்டிலும்
அது நல்லது. 9உங்களது கண் உங்களைப்
பாவம் செய்யத் தூண்டினால், அதைப்
பிடுங்கி எறியுங்கள். ஒரு கண்ணை இழந்து
நித்திய ஜீவனை அடைவது உங்களுக்கு
நல்லது. இரண்டு கண்களுடன் நரகத்தின் தீயில்
எறியப்படுவதைக் காட்டிலும் அது நல்லது.

### காணாமல் போன ஆட்டைப்பற்றிய உவமை
*(லூக்கா 15:3-7)*

10“எச்சரிக்கையாயிருங்கள். இச்சிறு பிள்
ளைகள் மதிப்பற்றவர்கள் என்று எண்ணா
தீர்கள். இவர்கள் பரலோகத்தில் தேவதூதர்
களைப் பெற்றுள்ளார்கள் என்று நான் சொல்
லுகிறேன். மேலும் அத்தூதர்கள் எப்பொழு
தும் பரலோகத்தில் என் பிதாவானவருடன்
இருக்கிறார்கள். 11*
12“நூறு ஆடுகளை வைத்திருப்பவன் ஒரு
ஆட்டை இழந்தால் மீதி தொண்ணூற்றொன்பது
ஆடுகளை குன்றில் விட்டுக் காணாமல் போன
ஆட்டைத் தேடிப்போவான் அல்லவா?
13காணாமல் போன ஆட்டை அவன் கண்டு
பிடித்தால், காணாமல் போகாத தொண்ணூற்
றொன்பது ஆடுகளைக் காட்டிலும் அதனால்
மிக மகிழ்ச்சியடைவான். 14அதைப்போலவே,
பரலோகத்தில் இருக்கும் என் பிதா இப்
பிள்ளைகள் யாரையும் இழக்க விரும்ப
வில்லை என்று மெய்யாகவே உங்களுக்குக்
கூறுகிறேன்.

### ஒரு மனிதன் தவறு செய்தால்
*(லூக்கா 17:3)*

15“உங்கள் சகோதரனோ அல்லது சகோ
தரியோ உங்களுக்கு ஏதாவது தீமை செய்
தால், அவர் செய்த தீமையை அவரிடம் எடுத்
துக் கூறுங்கள். அதைத் தனிமையில் அவனி
டம் சொல்லுங்கள். அதை அவர் கவனமாகக்
கேட்பாரானால், அவர் மீண்டும் உங்கள் சகோ
தரனாகவோ அல்லது சகோதரியாகவோ
இருக்க நீங்கள் உதவி செய்தவர்களாவீர்கள்.
16ஆனால் நீங்கள் கூறுவதைக் கேட்க அவர்
மறுத்தால், மீண்டும் இரண்டு மூன்று பேருடன்
சென்று நடந்தவற்றை எடுத்துச் சொல்லுங்
கள். அப்பொழுது, நடந்ததை உறுதிசெய்ய
இரண்டு மூன்று பேர் இருப்பார்கள். 17அப்
பொழுதும் அவன் கேட்க மறுத்தால், சபையா
ரிடம் சொல்லுங்கள். சபையார் சொல்வதை
யும் கேட்காமற்போனால், தேவ நம்பிக்கையற்
றவனைப்போல் அவனை நடத்துங்கள். வரி
வசூல் செய்பவனைப்போல் நடத்துங்கள்.
18“நான் உண்மையைச் சொல்லுகிறேன்.
நீங்கள் இவ்வுலகில் நியாயத்தைப் பேசும்
பொழுது, அது தேவனின் நியாயமாக இருக்
கும். இவ்வுலகில் நீங்கள் மன்னிப்பளித்தால்
அது தேவனின் மன்னிப்பாக இருக்கும்.
19“மேலும், நான் சொல்லுகிறேன். உங்
களில் இருவர் இவ்வுலகில் எதைக் குறித்
தேனும் ஒரே மனமுடையவர்களாயிருந்தால்
அதற்காக நீங்கள் பிரார்த்திக்கலாம். நீங்கள்
கேட்பது பரலோகத்தில் உள்ள எனது பிதா
வால் நிறைவேற்றப்படும். 20இது உண்மை.
ஏனென்றால், இரண்டு மூன்று பேர் என்னில்
விசுவாசம் வைத்துக் கூடினால் அவ்விடத்தில்
நான் இருப்பேன்.”

### மன்னிப்பைப்பற்றிய உவமை

21அப்பொழுது, பேதுரு இயேசுவிடம் வந்து,
“ஆண்டவரே, என் சகோதரன் எனக்குத்
தொடர்ந்து தீமை செய்தால் நான் அவனை
எத்தனை முறை மன்னிக்க வேண்டும்? ஏழு
முறை மன்னித்தால் போதுமா?” என்று கேட்
டான். 22அதற்கு இயேசு அவனுக்கு, “நீ
அவனை ஏழு முறைக்கும் அதிகமாக மன்
னிக்க வேண்டும் என்று நான் கூறுகிறேன்.
அவன் எழுபத்தேழு முறை* தீமை செய்தா
லும் நீ தொடர்ந்து மன்னிக்க வேண்டும்”
என்று பதில் அளித்தார்.
23“எனவே, பரலோகமானது தன் வேலைக்
காரர்களுடன் கணக்கை சரிசெய்ய முடிவெ
டுத்த மன்னனைப் போன்றது. 24மன்னன்
வேலைக்காரர்களின் கணக்கை சரிசெய்யத்
துவங்கினான். ஒரு வேலைக்காரன் அம்மன்ன
னுக்கு ஆயிரக்கணக்கில் பணம் கொடுக்க
வேண்டியிருந்தது. 25ஆனால், அவ்வேலைக்
காரனால், தன் எஜமானனான மன்னனுக்குப்

---

**வசனம் 11** “மனுஷகுமாரன் தப்பிப்போன ஜனங்களை மீட்பதற்காக வந்தார்” என்று சில கிரேக்க பிரதிகளில் உள்ளன.

**எழுபத்தேழு முறை** அல்லது ஏழு எழுபது முறைகள் பார்க்க ஆதியாகமம் 4:24.

பணத்தைத் திருப்பிச் செலுத்த இயலவில்லை.
எனவே, அவ்வேலைக்காரனுக்குச் சொந்
தமான அனைத்தையும் மனைவி குழந்தைகள்
உட்பட ஏலம் போட மன்னன் ஆணையிட்
டான். அதிலிருந்து தனக்குத் தரவேண்டிய
பணத்தைத் தரவேண்டும் என்றான்.

26"ஆனால், அந்த வேலைக்காரன் மன்ன
னின் கால்களில் விழுந்து, "என்னைப்
பொறுத்துக் கொள்ளுங்கள். உங்களுக்குத் தர
வேண்டிய அனைத்தையும் நான் கொடுத்து
விடுகிறேன்" என்று கெஞ்சினான். 27மன்னன்
அவ்வேலைக்காரனுக்காக வருந்தினான்.
எனவே, மன்னன் அவ்வேலைக்காரன் பணம்
ஏதும் தரத் தேவையில்லை என்று கூறி
அவ்வேலைக்காரனை விடுவித்தான்.

28"பின்னர், அதே வேலைக்காரன் தனக்குச்
சிறிதளவே பணம் தரவேண்டிய வேறொரு
வேலைக்காரனைக் கண்டான். அவன் உடனே,
தனக்குப் பாக்கிப் பணம் தரவேண்டியவனின்
கழுத்தைப் பிடித்து, 'எனக்குத் தரவேண்டிய
பணத்தைக்கொடு' என்று கேட்டான். 29மற்ற
வன் அவன் கால்களில் வீழ்ந்து, 'என்னைப்
பொறுத்துக்கொள். உனக்குத் தரவேண்டிய
அனைத்தையும் கொடுத்து விடுகிறேன்'
என்று கெஞ்சிக் கேட்டான்,.

30"ஆனால், முதலாமவன் தான் பொறுத்துக்
கொள்ள இயலாதென்றான். அவன் நீதிபதி
யிடம் மற்றவன் தனக்குப் பணம் தரவேண்டும்
என்று கூற இரண்டாமவன் சிறையில் அடைக்
கப்பட்டான். அவ்வேலைக்காரன் அவன் தர
வேண்டிய பணம் முழுவதையும் கொடுக்கும்
வரையிலும் சிறையிலிருக்க நீதிபதி பணித்
தார். 31மற்ற வேலைக்காரர்கள் அனைவரும்
நடந்ததைக் கண்டு மிகவும் வருந்தினார்கள்.
எனவே, அவர்கள் தங்கள் எஜமானனாகிய
மன்னனிடம் சென்று நடந்தவை அனைத்
தையும் கூறினார்கள்.

32"பின்பு அம்மன்னன் தன் வேலைக்
காரனை அழைத்துவரச் செய்து, அவனிடம்,
'பொல்லாத வேலைக்காரனே, எனக்கு நிறை
யப்பணம் தரவேண்டிய நீ, என்னிடம் மன்
னிப்புக் கேட்டுக் கெஞ்சினாய். எனவே, நீ
எனக்குப் பணம் ஏதும் தரவேண்டியதில்லை
என்று கூறினேன். 33ஆகவே, நீயும் உன் சக
வேலைக்காரனுக்கு அதே போலக் கருணை
காட்டியிருக்க வேண்டும்' என்று சொன்
னான். 34மிகக் கோபமடைந்த மன்னன், அவ்
வேலைக்காரனைச் சிறையிலிட்டான். தர
வேண்டிய பணம் அனைத்தையும் திருப்பித்
தரும் வரைக்கும் அவன் சிறையிலிருக்க
வேண்டியிருந்தது.

35"என் பரலோகப் பிதா உங்களுக்கு என்ன
செய்வாரோ அதையே அம்மன்னனும்
செய்தான். நீங்கள் மெய்யாகவே உங்கள் சகோ
தரனையோ சகோதரியையோ மன்னிக்க
வேண்டும். இல்லையெனில் பரலோகப் பிதா
வும் உங்களை மன்னிக்க மாட்டார்" என்று
இயேசு சொன்னார்.

### விவாகரத்தைப்பற்றி போதனை

(மாற்கு 10:1-12)

19 இவை அனைத்தையும் கூறிய பின்னர்,
இயேசு கலிலேயாவிலிருந்து புறப்பட்
டுச் சென்றார். யோர்தான் நதிக்கு மறுகரை
யில் உள்ள யூதேயாவிற்கு இயேசு சென்றார்.
2மக்கள் பலர் அவரைத் தொடர்ந்தனர். அங்கு
நோயாளிகளை இயேசு குணமாக்கினார்.

3இயேசுவிடம் வந்த பரிசேயர்கள் சிலர்
இயேசுவைத் தவறாக ஏதேனும் சொல்ல
வைக்க முயன்றனர். அவர்கள் இயேசுவை
நோக்கி, "ஏதேனும் ஒரு காரணத்திற்காகத்தன்
மனைவியை விவாகரத்து செய்வது சரியா
னதா?" என்று கேட்டனர்.

4அவர்களுக்கு இயேசு, "தேவன் உலகைப்
படைத்தபொழுது மனிதர்களை ஆணாகவும்
பெண்ணாகவும் படைத்தார்'* என்று வேத
வாக்கியங்களில் எழுதப்பட்டிருப்பதை நீங்கள்
நிச்சயமாய் படித்திருப்பீர்கள். 5தேவன் சொன்
னார், 'ஒருவன் தன் தாய் தந்தையரை விட்டு
விலகி தன் மனைவியுடன் இணைவான், கண
வனும் மனைவியும் ஒன்றாவார்கள்.'*
6எனவே, கணவனும் மனைவியும் இருவரல்ல
ஒருவரே. அவர்களை இணைத்தவர் தேவன்.
எனவே, எவரும் அவர்கள் இருவரையும்
பிரிக்கக்கூடாது" என்று பதில் கூறினார்.

7அதற்குப் பரிசேயர்கள், "அப்படியெனில்,
எதற்காக ஒருவன் விவாகரத்து பத்திரம்
எழுதிக்கொடுத்துத் தன் மனைவியை விவா
கரத்து செய்யலாம் என மோசே ஒரு கட்டளை
யைக் கொடுத்துள்ளான்?" என கேட்டார்கள்.

8அதற்கு இயேசு, "மோசே உங்கள் மனை
வியை நீங்கள் விவாகரத்து செய்ய அனுமதி
யளித்தார். எனென்றால் நீங்கள் தேவனின்
வார்த்தைகளை ஏற்க மறுத்தீர்கள். ஆனால்,
ஆதியில் விவாகரத்து அனுமதிக்கப்பட
வில்லை. 9நான் கூறுகிறேன், தன் மனை
வியை விவாகரத்து செய்து பின் வேறொரு
பெண்ணைத் திருமணம் செய்கிறவன் விபசா
ரம் என்னும் குற்றத்திற்கு ஆளாகிறான்.
ஒருவன் தன் மனைவியை விவாகரத்து
செய்ய ஒரே தகுதியான காரணம் அவள்
வேறொரு ஆணுடன் கள்ளத்தொடர்பு கொண்
டிருப்பதே ஆகும்" என்றார்.

10இயேசுவின் சீஷர்கள் அவரிடம், "ஒருவன்
தன் மனைவியை விவாகரத்து செய்ய அது
ஒன்று மட்டுமே தக்க காரணமெனில், திரு
மணம் செய்யாமலிருப்பதே நன்று" என்றார்
கள்.

11அதற்கு இயேசு, "திருமணம் குறித்த இவ்
வுண்மையை எல்லோரும் ஏற்றுக்கொள்ள
முடியாது ஆனால், தேவன் சிலரை அப்படிப்
பட்ட கருத்தை ஒப்புக்கொள்ள ஏதுவாக்கியுள்
ளார். 12சிலர் ஏன் திருமணம் செய்துகொள்ள
முடியாது என்பதற்குப் பல காரணங்கள்

---

**'தேவன் ... படைத்தார்'** ஆதி. 1:27, 5:2.

**'ஒருவன் ... ஒன்றாவார்கள்'** ஆதி 2:24.

இருக்கின்றன. சிலர் குழந்தைகளை பெறச்
செய்ய இயலாதவாறு பிறந்தார்கள். சிலர்
அவ்வாறு மற்றவர்களால் ஆக்கப்பட்டார்கள்.
மேலும் சிலர் பரலோக இராஜ்யத்திற்க்காக
திருமணத்தைக் கைவிட்டார்கள். ஆனால்
திருமணம் செய்து கொள்ளக் கூடியவர்கள்
திருமண வாழ்வைக் குறித்த இந்த போத
னையை ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று
பதிலளித்தார்.

### இயேசுவும் குழந்தைகளும்

(மாற்கு 10:13-16; லூக்கா 18:15-17)

13பிறகு, இயேசு தம் குழந்தைகளைத்
தொடுவார் என்பதற்காகவும் அவர்களுக்
காகப் பிரார்த்தனை செய்வார் என்பதற்கா
கவும் மக்கள் தம் குழந்தைகளை அவரிடம்
அழைத்து வந்தனர். இதைக் கண்ட சீஷர்கள்
இயேசுவிடம் குழந்தைகளை அழைத்து வரு
வதை நிறுத்துமாறு மக்களிடம் கூறினார்கள்.
14ஆனால் இயேசு, "குழந்தைகளை என்னிடம்
வரவிடுங்கள். அவர்களைத் தடுக்க வேண்
டாம், ஏனென்றால் பரலோக இராஜ்யம் இக்
குழந்தைகளைப் போன்ற மக்களுக்கே உரி
யது" என்று கூறினார். 15அதன்பின் குழந்தை
களைத் தொட்டு ஆசீர்வதித்தார். பின்னர்
இயேசு அவ்விடத்தை விட்டுச் சென்றார்.

### பணக்காரனும் இயேசுவும்

(மாற்கு 10:17-31 லூக்கா 18:18-30)

16ஒரு மனிதன் இயேசுவை அணுகி, "போத
கரே நித்திய ஜீவனைப் பெற நான் என்ன
நல்ல செயலைச் செய்ய வேண்டும்?" என்று
கேட்டான்.

17இயேசு அவனிடம், "எது நல்லது என்
பதை பற்றி என்னிடம் ஏன் கேட்கிறாய்?
தேவன் மட்டுமே நல்லவர். நீ நித்திய ஜீவனைப்
பெற விரும்பினால், கட்டளைகளுக்குக் கீழ்ப்
படிந்து நட" என்று பதிலுரைத்தார். 18"எந்தக்
கட்டளைகளை" என்று கேட்டான் அம்மனி
தன்.

அதற்கு இயேசு, "நீ யாரையும் கொலை
செய்யக் கூடாது. விபசாரம் செய்யக் கூடாது.
திருடக் கூடாது. பொய் சாட்சி சொல்லக்
கூடாது. 19உன் தாய் தந்தையரை மதிக்க
வேண்டும்.* 'தன்னைப் போலவே மற்றவர்
களையும் நேசிக்க வேண்டும்'"* என்று பதில்
சொன்னார்.

20அதற்கு அந்த இளைஞன், "இவை
அனைத்தையும் கீழ்ப்படிந்து நடந்திருக்கி
றேன். வேறென்ன செய்யவேண்டும்?" என்
றான்.

21இயேசு அவனிடம், "நீ நேர்மையாய்
இருக்க விரும்பினால், (போய்) உன் உடமை
கள் எல்லாவற்றையும் விற்றுவிடு. இதனால்
கிடைக்கும் பணத்தை ஏழைகளுக்குத் தானம்
செய்து விடு. நீ இதைச் செய்தால், நீ பரலோகத்
தில் மதிப்புவாய்ந்த செல்வத்தைப் பெறுவாய்.
பின் என்னிடம் வந்து, என்னைப் பின்பற்றி
நட," என்றார்.

22ஆனால், இதைக் கேட்ட அம்மனிதன்
மிகுந்த வருத்தமடைந்தான். மிகச் செல்வந்
தனான அவன், தன் செல்வத்தை இழக்க
விரும்பவில்லை. எனவே, அவன் இயேசுவை
விட்டு விலகிச்சென்றான்.

23பிறகு, இயேசு தம் சீஷர்களிடம் "நான்
உங்களுக்கு உண்மையைச் சொல்லுகிறேன்.
பரலோக இராஜ்யத்திற்குள் செல்வந்தர்கள்
நுழைவது மிகக் கடினம். 24ஆம் பரலோக
இராஜ்யத்தில் ஒரு பணக்காரன் நுழைவதைக்
காட்டிலும் ஒரு ஒட்டகம் ஊசியின் காதுக்குள்
நுழைவது எளிது" என்று கூறினார்.

25இதைக் கேட்டபோது சீஷர்கள் வியப்புற்
றனர். அவர்கள், "பின் யார் தான் இரட்சிக்கப்
படுவார்கள்?" என்று கேட்டனர்.

26இயேசு தம் சீஷர்களைப் பார்த்து, "மனிதர்
களால் ஆகக் கூடியதல்ல இது. ஆனால்,
எல்லாம் வல்ல தேவனால் ஆகும்" என்று
சொன்னார்.

27பேதுரு இயேசுவிடம், "நாங்கள் பெற்
றிருந்த அனைத்தையும் துறந்து உம்மைப்
பின்பற்றினோம். எங்களுக்கு என்ன கிடைக்
கும்?" என்று வினவினான்.

28இயேசு தன் சீஷர்களிடம், "நான் உங்
களுக்கு உண்மையைச் சொல்லுகிறேன். புதிய
உலகம் படைக்கப்படும்பொழுது, மனித
குமாரன் தம் பெருமைமிக்க அரியணையில்
அமர்வார். என்னைப் பின்பற்றிய நீங்கள்
அனைவரும் அரியணைகளில் அமர்வீர்கள்.
பன்னிரெண்டு அரியணைகளில் நீங்கள்
அமர்ந்து, இஸ்ரவேலின்* பன்னிரண்டு இனங்
களுக்கும் நீதி செய்வீர்கள். 29மேலும் என்
னைப் பின்பற்றுவதற்காக வீடு, தாய், தந்தை,
சகோதரன், சகோதரி, பிள்ளைகள் அல்லது
நிலம் ஆகியவற்றைத் துறந்தவன், தான் துறந்
ததை விடப் பல மடங்கு பலன் பெறுவான்.
அவன் நித்திய ஜீவனைப் பெறுவான்.
30உயர்ந்த வாழ்க்கை வாழும் பலர் எதிர்காலத்
தில் மிகத் தாழ்ந்த வாழ்வை அடைவார்கள்.
மிகத் தாழ்ந்த வாழ்வை வாழும் பலர் மிக
உயர்ந்த வாழ்வை அடைவார்கள்" என்றார்.

### தோட்டத் தொழிலாளர்களைப் பற்றிய உவமை

20 "பரலோக இராஜ்யமானது சிறிது நிலம்
வைத்திருந்த ஒருவனைப் போன்றது,
அவன் தனது நிலத்தில் திராட்சை விளை
வித்தான். ஒரு நாள் காலை தன் தோட்டத்தில்
வேலைசெய்ய ஆட்களைத் தேடிப் போனான்.
2ஒரு நாள் வேலைக்கு ஒரு வெள்ளிக்காசு

---

**'உன் ... வேண்டும்'** *யாத்.* 20:12-16.

**'தன்னை ... வேண்டும்'** லேவி 19:18.

**இஸ்ரவேல்** *முதலில் இஸ்ரவேல் யூதர்களின் நாடாய் இருந்தது. ஆனால் இப்பெயர் அனைத்து தேவனுடைய மக்களையும் குறிக்கப் பயன்பட்டது.*

*கூலி தர அவன் ஒத்துக்கொண்டான். பிறகு
வேலை ஆட்களைத் தன் திராட்சைத் தோட்
டத்தில் வேலை செய்ய அனுப்பினான்.*
3“*சுமார் ஒன்பது மணிக்கு அம்மனிதன்
சந்தைப் பக்கமாகப் போனான். அங்கு சிலர்
வேலை ஏதுமின்று வெறுமனே நின்று
கொண்டிருப்பதைக் கண்டான்.* 4*எனவே
அவன் அவர்களிடம், ‘‘நீங்கள் சென்று என்
தோட்டத்தில் வேலை செய்தால், நீங்கள் செய்
யும் வேலைக்குத் தகுந்தாற் போல உங்களுக்கு
ஊதியம் தருகிறேன்’ என்றான்.* 5*எனவே,
அவர்களும் அவன் தோட்டத்தில் வேலை செய்
யச் சென்றார்கள். மீண்டும் அவன் பன்னி
ரெண்டுமணி அளவிலும் மூன்றுமணி அளவி
லும் வெளியில் சென்று, ஒவ்வொரு முறையும்
மேலும் சிலரைத் தன் தோட்டத்தில் வேலை
செய்ய அழைத்து வந்தான்.* 6*மீண்டும் ஐந்து
மணி அளவில் சந்தைவெளிக்குச் சென்றான்.
மேலும் சிலர் அங்கே நின்றிருப்பதைக் கண்டு
அவர்களிடம், ‘ஏன் நாள் முழுக்க வேலை
எதுவும் செய்யாமல் இங்கே நின்றிருந்தீர்கள்’
என்று கேட்டான்.*
7“*அதற்கு அவர்கள், ‘எங்களுக்கு யாரும்
வேலை தரவில்லை’ என்றார்கள்.*
*அதற்கு அந்த திராட்சைத் தோட்டக்காரன்,
‘அப்படியானால், நீங்கள் என் தோட்டத்திற்குச்
சென்று வேலை செய்யலாம்’ என்றான்.*
8“*அன்று மாலை திராட்சைத் தோட்டக்
காரன் வேலைக்காரர்களைக் கவனித்துக்
கொள்ளும் மேற்பார்வையாளனிடம், “வேலை
க்காரர்கள் அனைவரையும் அழைத்து
அவர்களுக்குப் பணம் கொடுத்து விடு. நான்
கடைசியாக அழைத்து வந்தவர்களுக்கு
முதலில் பணம் கொடு. இப்படியே அனை
வருக்கும் நான் முதலில் அழைத்து வந்தவன்
வரைக்கும் பணம் கொடு” என்றான்.*
9“*மாலை ஐந்து மணிக்கு அமர்த்தப்பட்ட
வேலைக்காரர்கள் தங்கள் கூலியை வாங்க
வந்தார்கள். ஒவ்வொருவருக்கும் ஒரு வெள்ளி
நாணயம் கிடைத்தது.* 10*பின்னர் முதலில்
வேலைக்கு அமர்த்தப்பட்ட ஆட்கள் தங்கள்
கூலியைப் பெற வந்தபொழுது, தங்களுக்கு
அதிகக் கூலி கிடைக்கும் என்று எண்ணினார்
கள். ஆனால் அவர்களுக்கும் தலைக்கு ஒரு
வெள்ளி நாணயமே கிடைத்தது.* 11*அவர்கள்
ஒரு வெள்ளி நாணயம் மட்டுமே கூலியாகக்
கிடைத்தபொழுது, தோட்டத்துச் சொந்தக்கார
னிடம் புகார் செய்தார்கள்.* 12*அவர்கள், ‘கடை
சியாக வேலைக்கு வந்தவர்கள் ஒரு மணி
நேரமே வேலை செய்தார்கள். ஆனால், நாங்
கள் நாள் முழுவதும் வெயிலில் கடுமையாக
உழைத்துள்ளோம். ஆனால், எங்களுக்குச்
சமமாக அவர்களுக்கும் கூலி கொடுத்துள்ளீர்
கள்’ என்று புகார் கூறினார்கள்.*
13“*ஆனால் தோட்டக்காரனோ அந்த ஆட்
களில் ஒருவனிடம், ‘நண்பனே, நான் உனக்கு
சரியாகவே கூலி கொடுத்துள்ளேன். ஒரு
வெள்ளி நாணயத்திற்கு வேலை செய்ய ஒப்புக்
கொண்டாய். சரிதானே?* 14*எனவே, உன் கூலி
யைப் பெற்றுக்கொண்டு செல். நான் கடைசி
யாக வேலைக்கு அமர்த்தியவர்களுக்கும்
உனக்கும் சமமாகவே கூலி கொடுக்க விரும்
புகிறேன்.*
15“*நான் என் பணத்தில் என் விருப்பப்படி
செய்யலாம். நான் அவர்களிடம் பெருந்
தன்மையுடன் நடந்து கொள்கிறேன் என்பதால்
உனக்குப் பொறாமையா?’ என்று கூறினான்.*
16“*ஆகவே, இப்பொழுது கடைசி ஸ்தானத்
தில் இருப்பவர்கள் எதிர்காலத்தில் முதல்
ஸ்தானத்திற்குச் செல்வார்கள். மேலும் இப்
பொழுது முதல் ஸ்தானத்தில் இருப்பவர்கள்
எதிர்காலத்தில் கடைசி ஸ்தானத்திற்குச் செல்
வார்கள்” என்றார்.*

## தமது மரணத்தைப் பற்றி பேசுதல்

*(மாற்கு 10:32-34; லூக்கா 18:31-34)*

17*இயேசு எருசலேமுக்குத் தம் சீஷர்களுடன்
சென்று கொண்டிருந்தார். அவர்கள் நடந்து
சென்று கொண்டிருந்தபொழுது, இயேசு தம்
சீஷர்களை அழைத்துத் தனியாகப் பேசினார்.
இயேசு அவர்களிடம்,* 18“*நாம் எருசலேமுக்குப்
போய்கொண்டிருக்கிறோம். தலைமை ஆசாரி
யர்களிடமும் வேதபாரகர்களிடமும் மனித
குமாரன் ஒப்படைக்கப்படுவார். அவர்கள்
மனித குமாரன் இறக்கவேண்டும் என்பார்கள்.*
19*யூதர்கள் அல்லாத வேற்று மனிதர்களிடம்
மனித குமாரனை ஒப்படைப்பார்கள். அவர்
கள் அவரை கேலி செய்து சவுக்கால் அடித்து
சிலுவையில் அறைந்து கொல்வார்கள்.
ஆனால், மூன்றாவது நாள் மரணத்திலிருந்து
மனித குமாரன் உயிர்த்தெழுவார்” என்று
கூறினார்.*

## ஒரு தாய் விசேஷ உதவி கேட்டல்

*(மாற்கு 10:35-45)*

20*பின்னர், செபதேயுவின் மகன்களுடன்
அவர்களின் தாய் இயேசுவைத் தேடி வந்தாள்.
அவள் இயேசுவின் முன் மண்டியிட்டு தனக்கு
ஒரு உதவி செய்ய வேண்டினாள்.*
21*இயேசு அவளிடம், “உனக்கு என்ன
வேண்டும்?” என்று கேட்டார்.*
*அவள், “எனது ஒரு மகன் உங்கள் இராஜ்
யத்தில் உங்களது வலது பக்கம் இருக்கவும்,
மற்றொரு மகன் உங்கள் இராஜ்யத்தில் உங்
களது இடது பக்கம் இருக்கவும் வாக்களியுங்
கள்” என்று கேட்டாள்.*
22*அதைக் கேட்ட இயேசு அவளது மகன்களி
டம், “நீங்கள் என்ன வேண்டுகிறீர்கள் என்
பதை புரிந்து கொள்ளவில்லை. நான் அனு
பவிக்கப்போகும் துன்பத்தை நீங்கள் ஏற்றுக்
கொள்ள முடியுமா?” என்று கேட்டார்.*
*“ஆம், எங்களால் முடியும்” என்று அவர்
கள் பதில் சொன்னார்கள்.*
23*இயேசு அவர்களிடம், “மெய்யாகவே
எனக்கு ஏற்படும் துன்பம் உங்களுக்கும் ஏற்*

*படும். ஆனால் என் வலது இடது பக்கங்களில்*
*உட்காரப் போகிறவர்களை என்னால் முடிவு*
*செய்ய இயலாது. அந்த இடம் யாருக்கு*
*என்பதை என் பிதா முடிவு செய்துவிட்டார்.*
*அவர்களுக்காகவே அந்த இடங்களை அவர்*
*தயார் செய்துள்ளார். அந்த இடங்கள் அவர்*
*களுக்கே உரியவை” என்றார்.*

24*இந்த உரையாடலைக் கேட்ட மற்ற பத்து*
*சீஷர்களும் அவ்விரு சகோதரர்களின் மீதும்*
*கோபம் கொண்டார்கள்.* 25*இயேசு எல்லா*
*சீஷர்களையும் ஒன்றாக அழைத்து, அவர்*
*களிடம் “யூதரல்லாத மக்களின் ஆட்சியாளர்*
*கள் தங்கள் அதிகாரத்தை காட்டிக்கொள்ள*
*ஆசைப்படுகிறார்கள். அவர்களின் முக்கிய*
*மான தலைவர்கள் மக்களின்மீது முழு அதிகா*
*ரத்தை செலுத்த விரும்புகிறார்கள்.* 26*ஆனால்,*
*நீங்கள் அப்படி இருக்கக்கூடாது. உங்களில்*
*ஒருவன் பெரியவனாக ஆக விரும்பினால்,*
*அவன் உங்களுக்கு ஒரு வேலைக்காரனைப்*
*போல ஊழியம் செய்யவேண்டும்.* 27*உங்களில்*
*ஒருவன் முதலாவதாக வர விரும்பினால்,*
*அவன் உங்களுக்கு ஓர் அடிமையைப் போல்*
*ஊழியம் செய்யவேண்டும்.* 28*மனித குமா*
*ரனும் அப்படியே. தனக்கு மற்றவர்கள் ஊழி*
*யம் செய்வதற்காக அவர் வரவில்லை. மற்ற*
*வர்களுக்கு ஊழியம் செய்யவே மனித குமா*
*ரன் வந்தார். பலரது வாழ்வை இரட்சிப்பதற்கு*
*தன் உயிரைக் கொடுக்கவே மனித குமாரன்*
*வந்தார்” என்று கூறினார்.*

### இரண்டு குருடர்கள் குணமாகுதல்

*(மாற்கு 10:46-52; லூக்கா 18:35-43)*

29*இயேசுவும் அவரது சீஷர்களும் எரி*
*கோவை விட்டு சென்றபொழுது, ஏராளமான*
*மக்கள் இயேசுவைப் பின்தொடர்ந்தார்கள்.*
30*சாலையோரம் அமர்ந்திருந்த இரு குருடர்*
*கள், இயேசு வந்துக்கொண்டிருக்கிறார் என்*
*பதைக் கேள்விப்பட்டு, “ஆண்டவரே, தாவீ*
*தின் மகனே, எங்களுக்கு உதவுங்கள்” என்று*
*உரக்கக் கூவினார்கள்.*

31*அனைவரும் அக்குருடர்களைக் கடிந்து*
*கொண்டார்கள், அவர்களை அமைதியாயிருக்*
*கக் கூறினார்கள். ஆனால், அக்குருடர்களோ*
*மேலும் மேலும் சத்தமாக, “ஆண்டவரே,*
*தாவீதின் மகனே, எங்களுக்கு உதவுங்கள்”*
*என்று கூவினார்கள்.* 32*இயேசு நின்று, அக்*
*குருடர்களைப் பார்த்து, “உங்களுக்கு நான்*
*என்ன செய்யவேண்டும் என விரும்புகி*
*றீர்கள்?” என்று கேட்டார்.*

33*அதற்குக் குருடர்கள், “ஆண்டவரே, நாங்*
*கள் பார்வை பெற வேண்டும்” என்றார்கள்.*

34*அவர்கள் மேல் இயேசு மிகவும் இரக்கம்*
*கொண்டார். இயேசு அவர்களது கண்களைத்*
*தொட்டார். அவர்கள் இருவரும் பார்வை பெற்*
*றார்கள். பின்னர் அவர்கள் இருவரும் இயேசு*
*வைப் பின்தொடர்ந்தார்கள்.*

### அரசனைப் போல எருசலேமுக்குள் நுழைதல்

*(மாற்கு 11:1-11; லூக்கா 19:28-38;*
*யோவான் 12:12-19)*

21 *இயேசுவும் அவரது சீஷர்களும் எருச*
*லேமை நெருங்கி வந்துகொண்டிருந்*
*தார்கள். ஒலிவ மலைக்கு அருகில் பெத்பகேயு*
*வில் அவர்கள் முதலில் தங்கினார்கள். அங்கு*
*இயேசு தமது சீஷர்களில் இருவரை அழைத்து*
*நகருக்குள் செல்லப் பணித்தார்.* 2*அவர்களிடம்*
*இயேசு, “அங்கே தெரியும் நகருக்குள் செல்*
*லுங்கள். நீங்கள் நகருக்குள் நுழையும்பொழுது*
*கழுதை ஒன்றை கட்டிப் போடப்பட்டிருப்*
*பதைக் காண்பீர்கள். அதனுடன் அதன் குட்டி*
*யையும் காண்பீர்கள். அவை இரண்டையும்*
*அவிழ்த்து என்னிடம் கொண்டு வாருங்கள்.*
3*யாரேனும் உங்களை ஏன் கழுதைகளை*
*கொண்டு செல்கிறீர்கள் என்று கேட்டால்,*
*அவர்களிடம், ‘இக்கழுதைகள் ஆண்டவருக்*
*குத் தேவையாயிருக்கின்றன. விரைவில்*
*இவைகளைத் திருப்பி அனுப்புவார்’ எனச்*
*சொல்லுங்கள்” என்றார்.*

4*தீர்க்கதரிசி கீழ்க்கண்டவாறு சொன்னதின்*
*முழுப்பொருளும் விளங்கும்படி இது நடந்தே*
*றியது.*

5 *“சொல்லுங்கள், சீயோன் நகர மக்களிடம்,*
*இப்பொழுது ‘உங்கள் மன்னவன் உங்*
*களிடம் வருகிறார். பணிவானவர் அவர்*
*கழுதையின் மேல் வருகிறார். ஆம் அவர்*
*கழுதை குட்டியின் மேல் வருகிறார்”*
*சகரியா 9:9*

6*இயேசு சொன்னபடியே அவரது சீஷர்கள்*
*செய்தார்கள்.* 7*அவர்கள் கழுதையையும் அதன்*
*குட்டியையும் இயேசுவிடம் கொண்டு வந்து,*
*அவற்றின் மேல் தங்கள் மேலாடைகளைப்*
*போட்டார்கள்.* 8*இயேசு அவற்றின் மேல்*
*அமர்ந்து எருசலேம் நகர் செல்லும் பாதையில்*
*பயணமானார். ஏராளமான மக்கள் வழி*
*யெங்கும் தங்கள் மேலாடைகளை வழியில்*
*பரப்பினார்கள். மற்றவர்கள் மரக் கிளைகளை*
*வெட்டி வழியில் பரப்பினார்கள்.* 9*சிலர்*
*இயேசுவுக்கு முன்னால் நடந்தார்கள். மற்ற*
*வர்கள் அவருக்குப் பின்னே நடந்தார்கள்.*

*“தாவீதின் குமாரனே வாழ்க!* * *கர்த்தரின்*
*பெயரினால் வருகிறவரே வாழ்க! கர்த்*
*தரால் ஆசீர்வதிக்கபட்டவரே, வாழ்க!*
*பரலோகத்திலுள்ள தேவனே வாழ்க!”*
*சங்கீதம் 118:26*

---

***வாழ்க*** *இலக்கியவழக்குபடி ‘ஓசன்னா’ இது ஒரு எபிரேய சொல். தேவனுடைய உதவியை வேண்டி பிரார்த்திக்கும்போது இது பயன்படும். இந்நேரத்தில், மகிழ்ச்சியின் சப்தமாக வெளிப்படும். இது தேவனை அல்லது அவரது மெசயாவைப் பாராட்டும்.*

10பின்னர், இயேசு எருசலேம் நகருக்குள்
சென்றார். நகரிலிருந்த அனைவரும் குழப்
பமடைந்து, "யார் இந்த மனிதன்?" என்று
வினவினார்கள்.
11இயேசுவைத் தொடர்ந்து வந்த ஏராள
மான மக்கள், "இவர்தான் இயேசு. கலிலேயா
விலுள்ள நாசரேத்திலிருந்து வந்துள்ள தீர்க்
கதரிசி" என பதிலளித்தனர்.

### இயேசு ஆலயத்திற்குள் செல்லுதல்

*(மாற்கு 11:15-19; லூக்கா 19:45-48;
யோவான் 2:13-22)*

12இயேசு ஆலயத்திற்குள் நுழைந்தார். அங்கு
பொருட்களை விற்றுக்கொண்டும்
வாங்கிக்கொண்டுமிருந்த அனைவரையும்
வெளியேற்றினார். பலவகையான நாணயங்
களை மாற்றிக் கொண்டிருந்தவர்களின்
மேஜைகளைக் கவிழ்த்தார். புறாக்களை வியா
பாரம் செய்து கொண்டிருந்தவர்களின் மேஜை
களையும் கவிழ்த்தார். 13அங்கிருந்த மக்கள்
அனைவரிடமும் இயேசு, "ஏற்கெனவே வேத
வாக்கியங்களில் 'பிரார்த்தனை செய்வதற்
கான இடம் என்னுடைய வீடு!'* என்று
எழுதப்பட்டுள்ளது. ஆனால் நீங்களோ தேவ
னுடைய வீட்டைக் கொள்ளைக்காரர்கள் பதுங்
கும் இடமாக மாற்றிக் கொண்டிருக்கிறீர்கள்"*
என்று கூறினார்.
14சில குருடர்களும் முடவர்களும் தேவா
லயத்திலிருந்த இயேசுவிடம் வந்தார்கள்.
அவர்கள் அனைவரையும் இயேசு குணப்
படுத்தினார். 15தலைமை ஆசாரியர்களும்
வேதபாரகர்களும் இயேசுவின் செயலைக்
கண்டார்கள். இயேசு பெரும் செயல்களைச்
செய்வதையும் பிள்ளைகள் அவரைப் புகழ்
வதையும் கண்டார்கள். சிறு பிள்ளைகள் எல்
லாரும் "தாவீதின் குமாரனுக்குப் ஓசன்னா"
என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். இவை
அனைத்தும் ஆசாரியர்களையும் வேதபாரகர்
களையும் கோபம் கொள்ளச்செய்தன.
16தலைமை ஆசாரியர்களும் வேதபாரகர்
களும் இயேசுவிடம், "இப்பிள்ளைகள் சொல்
வதைக் கேட்டீரா?" என்று வினவினார்கள்.
இயேசு அவர்களிடம், "ஆம் வேதவாக்கியம்
கூறுகிறது, 'நீரே(தேவன்) குழந்தைகளுக்கும்,
சிறு குழந்தைகளுக்கும் புகழ்பாடக் கற்பித்தீர்.'
நீங்கள் அந்த வேதவாக்கியங்களை படிக்க
வில்லையா?" என்று பதிலுரைத்தார்.
17பின்னர் இயேசு அவ்விடத்தை விட்டு
விலகி பெத்தானியா நகருக்குச் சென்றார்.
அன்றைய இரவு இயேசு அங்கேயே தங்கி
னார்.

### விசுவாசத்தின் வல்லமை

*(மாற்கு 11:12-14, 20-24)*

18மறுநாள் அதிகாலை இயேசு மீண்டும்
நகருக்குத் திரும்பிச்சென்று கொண்டிருந்தார்.
இயேசு மிகவும் பசியுடனிருந்தார். 19இயேசு
சாலையோரம் அத்திமரம் ஒன்றைக் கண்டார்.
அத்திப்பழங்களை உண்பதற்காக அம்மரத்
தின் அருகில் சென்றார். ஆனால், மரத்தில்
பழம் எதுவும் இல்லை. வெறும் இலைகள்
மட்டுமே இருந்தன. எனவே இயேசு மரத்தை
நோக்கி, "இனி ஒருபொழுதும் உன்னிடம் பழம்
உண்டாகாது" என்று கூறினார். உடனே அம்
மரம் உலர்ந்து பட்டுப்போனது.
20இதைக் கண்ட சீஷர்கள் மிகவும் வியப்புற்
றனர். அவர்கள் இயேசுவிடம், "எப்படி அத்தி
மரம் இவ்வளவு விரைவில் உலர்ந்து பட்டுப்
போனது?" என்று கேட்டார்கள்.
21இயேசு அவர்களிடம், "நான் உங்களுக்கு
உண்மையைக் கூறுகிறேன், நீங்களும் விசுவா
சத்துடனும் சந்தேகிக்காமலும் இருந்தால், நான்
இம்மரத்திற்குச் செய்ததைப் போலவே
உங்களாலும் செய்ய இயலும். மேலும் உங்
களால் இன்னும் அதிகமாகச் சாதிக்க இயலும்.
இம்மலையைப் பார்த்து 'மலையே போய்
கடலில் விழு' என்று நீங்கள் விசுவாசத்துடன்
சொன்னால் அது நடக்கும். 22நீங்கள் நம்பிக்
கையோடு பிரார்த்தனையில் வேண்டுகிற
எதுவும் கிடைக்கும்" என்று பதிலுரைத்தார்.

### இயேசுவின் அதிகாரத்தை யூதத்தலைவர்கள் சந்தேகித்தல்

*(மாற்கு 11:27-33; லூக்கா 20:1-8)*

23இயேசு தேவாலயத்திற்குச் சென்றார்.
அவர் அங்கே போதனை செய்து கொண்டி
ருந்தபொழுது, தலைமை ஆசாரியர்களும்,
மூத்த தலைவர்களும் அவரிடம் வந்தனர்.
அவர்கள் இயேசுவிடம், "எங்களுக்குச் சொல்.
இவைகளைச் செய்ய உனக்கு என்ன அதி
காரம் உள்ளது? உனக்கு யார் இந்த அதிகாரத்
தைக் கொடுத்தது?" என்று வினவினார்கள்.
24இயேசு அவர்களுக்கு, "நானும் உங்களை
ஒரு கேள்வி கேட்கிறேன். நீங்கள் எனக்கு
பதில் சொன்னால், நானும் இவைகளைச்
செய்ய என்ன அதிகாரம் பெற்றிருக்கிறேன்
என்பதைக் கூறுகிறேன். 25யோவான் மக்க
ளுக்கு கொடுத்த ஞானஸ்நானம் தேவனால்
வந்ததா அல்லது மனிதரால் வந்ததா? சொல்
லுங்கள்" என்று மறுமொழி உரைத்தார்.
தலைமை ஆசாரியர்களும் தலைவர்களும்
இயேசுவின் கேள்வியைக் குறித்து விவாதித்
தனர். அவர்கள் தங்களுக்குள், "யோவானின்
ஞானஸ்நானம் தேவனால் ஆனது என்று நாம்
கூறுவோமானால், இயேசு நம்மைப் பார்த்து,
பின் ஏன் நீங்கள் யோவானை நம்பவில்லை?
என்று கேட்பார். 26மாறாக 'அது மனிதனால்
ஆனது என்றால் மக்கள் நம்மீது கோபம்
கொள்வார்கள். ஏனென்றால் மக்கள்
அனைவரும் யோவானை ஒரு தீர்க்க தரிசி
என்று நம்புகிறார்கள்" என்று கூறிக்
கொண்டார்கள்.
27எனவே அவர்கள் இயேசுவிடம்,
"யோவானின் அதிகாரம் எங்கிருந்து வந்தது

---

***'பிராத்தனை … வீடு'*** *ஏசாயா* 56:7.

***'நீங்கள் … கொண்டிருக்கிறீர்கள்'*** *எரே.* 7:11

*என்பது எங்களுக்குத் தெரியாது” என்று
கூறினார்கள்.*

*பின்பு இயேசு, “அப்படியெனில் இவை
களைச் செய்வதற்கு எனக்கு என்ன அதி
காரம் இருக்கிறது என்பதையும் உங்களுக்குச்
சொல்லமாட்டேன்” என்று கூறினார்.*

### இரண்டு மகன்கள் பற்றிய உவமை

28“*ஒரு மனிதனுக்கு இரண்டு மகன்கள்
இருந்தார்கள். அவன் தனது முதல் மகனிடம்
சென்று, ‘மகனே இன்று என் திராட்சைத்
தோட்டத்திற்குச் சென்று வேலை செய்’ என்
றான்.*

29*அதற்கு அவன், ‘போக முடியாது’ என்று
பதிலளித்தான். ஆனால் பின்னர் அவனே
தான் போய் வேலை செய்ய வேண்டும் என
நினைத்தான் .அவ்வாறே செய்தான்.* 30*பின்
னர், அத்தந்தை தனது மற்றொரு மகனிடம்
சென்றான். அவனிடம் ‘மகனே, இன்றைக்கு
எனது திராட்சைத் தோட்டத்திற்குச் சென்று
வேலை செய்’ என்றான். அதற்கு அவனது
மகன், ‘சரி தந்தையே. நான் போய் வேலை
செய்கிறேன்’ என்றான். ஆனால், அவன்
வேலைக்குச் செல்லவில்லை.*31*இரண்டு மகன்
களில் யார் தனது தந்தைக்குக் கீழ்ப்படிந்து
நடந்தான்?” என்று இயேசு கேட்டார். யூதத்
தலைவர்கள், “மூத்த மகன்” என்று பதில்
சொன்னார்கள்.*

*அப்போது இயேசு, “நான் உங்களுக்கு
உண்மையைச் சொல்லுகிறேன். வரி வசூலிப்
பவர்களும், வேசிகளும், தீயவர்கள் என்று
நீங்கள் எண்ணுகிறீர்கள். ஆனால் அவர்கள்
உங்களுக்கு முன்னரே பரலோக இராஜ்யத்
திற்குள் நுழைவார்கள்.* 32*வாழ்க்கையின் சரி
யான பாதையை உங்களுக்குக் காட்டுவதற்
காக யோவான் வந்தான். ஆனால், நீங்கள்
யோவானை நம்பவில்லை. வரி வசூலிப்பவர்
களும் வேசிகளும் யோவானை நம்பினார்கள்.
அவர்கள் யோவான் மீது நம்பிக்கை வைத்
ததை நீங்கள் கண்டீர்கள். ஆனாலும் நீங்கள்
மனந்திருந்தி யோவானை நம்பவில்லை”
என்றார்.*

### திராட்சைத் தோட்ட உவமை

*(மாற்கு 12:1-12; லூக்கா 20:9-19)*

33“*இந்த உவமையைக் கேளுங்கள். ஒரு
மனிதனுக்கு ஒரு தோட்டமிருந்தது. அவன்
அதில் திராட்சை பயிரிட்டான். தன் தோட்டத்
தைச் சுற்றிலும் மதில் சுவரெழுப்பி திராட்சை
இரசம் சேகரிக்கும் குழியையும் வெட்டினான்.
பின் ஒரு கோபுரத்தையும் கட்டினான். பிறகு
தோட்டத்தை சில விவசாயிகளுக்குக் குத்த
கைக்கு கொடுத்துவிட்டு ஒரு பயணம் மேற்
கொண்டான்.* 34*பின்னர், திராட்சைப் பழங்
களைப் பறிக்கவேண்டிய காலம் வந்தபொ
ழுது, தனது வேலைக்காரர்களை குத்தகைக்
காரர்களிடம் விளைச்சலில் தனது பங்கை
வாங்கி வர அனுப்பினான்.*

35“*ஆனால் அவ்விவசாயிகளோ வேலைக்
காரர்களைப் பிடித்து அவர்களில் ஒருவனை
அடித்து விட்டார்கள். மற்றொரு வேலைக்
காரனைக் கொன்றார்கள். மற்றொரு வேலைக்
காரனைக் கல்லால் அடித்துக் கொன்றார்கள்.*
36*எனவே தோட்டத்துச் சொந்தக்காரன் மேலும்
சில வேலைக்காரர்களை அனுப்பினான். முத
லில் அனுப்பிய ஆட்களைவிட அதிக எண்
ணிக்கையில் இப்பொழுது ஆட்களை அனுப்
பினான். ஆனால் குத்தகை எடுத்த விவசா
யிகள் முதலில் செய்தது போலவே இம்முறை
யும் செய்தார்கள்.* 37*ஆகவே, தோட்டக்காரன்
தன் மகனை அனுப்ப முடிவுசெய்தான்! ‘விவ
சாயிகள் என் மகனுக்கு மதிப்பு கொடுப்
பார்கள்’ என்று அவன் நினைத்தான்.*

38“*ஆனால் மகனைக் கண்ட விவசாயிகள்
தங்களுக்குள், ‘இவன் நிலச் சொந்தக்காரனின்
மகன். நிலம் இவனுக்கே சொந்தமாகும். நாம்
இவனைக் கொன்றால் நிலம் நமக்குச்
சொந்தமாகிவிடும்’ என்று பேசிக் கொண்
டனர்.* 39*எனவே, அந்த விவசாயிகள் திராட்
சைத் தோட்டத்துச் சொந்தக்காரனின் மகனை
தோட்டத்திற்கு வெளியில் எறிந்து கொன்றார்
கள்.*

40“*திராட்சைத் தோட்டத்துச் சொந்தக்கா
ரனே வரும்பொழுது அவன் அந்த விவசாயி
களை என்ன செய்வான்?” என்று இயேசு
கேட்டார்.*

41*அதற்கு யூத ஆசாரியர்களும் தலைவர்
களும், “அவன் நிச்சயம் அந்தத் தீயவர்களைக்
கொல்வான். பின் தனது நிலத்தை மற்றவர்
களுக்குக் குத்தகைக்கு விடுவான். அதாவது
அறுவடை காலத்தில் தனக்கு சேரவேண்டிய
பங்கைத் தனக்கு அளிக்கும் விவசாயிகளுக்கு
குத்தகைக்கு விடுவான்”என்றனர்*

42*இயேசு அவர்களுக்குக் கூறினார், “நீங்கள்
வேதவாக்கியங்களில் கட்டாயம் படித்திருப்
பீர்கள்:*

> *‘கட்டிடம் கட்டியவர்கள் விரும்பாத
> கல்லே மூலைக் கல்லாயிற்று.* * *இது கர்த்
> தரின் செயல், நமக்கு வியப்பானது.’”*
>
> *சங்கீதம் 118:22-23*

43“*எனவே தேவனுடைய இராஜ்யம் உங்
களிடமிருந்து பறிக்கப்படும் என்பதை நான்
உங்களுக்குக் கூறுகிறேன். தம் இராஜ்யத்தில்
தேவன் விரும்பும் செயல்களைச் செய்பவர்
களுக்கே தேவனுடைய இராஜ்யம் கிட்டும்.*
44*இக்கல்லின் மீது விழுகிறவன் துண்டுகளாக
நொறுங்கி விடுவான். மேலும் இக்கல் ஒருவன்
மீது வீழ்ந்தால் அவன் நசுங்கிப் போவான்”
என்று கூறினார்.*

45*இயேசு கூறிய இந்த உவமைகளைத்
தலைமை ஆசாரியர்களும் பரிசேயரும் கேட்ட*

---

**மூலைக்கல்** *ஒரு கட்டிடத்தில் முதலாவதாகவும் மிக முக்கியமானதாகவும் வைக்கப்படும் கல்.*

னர். தம்மைப்பற்றியே இயேசு பேசினார் என்
பதை அவர்கள் அறிந்தார்கள். 46எனவே இயே
சுவைக் கைது செய்ய ஒரு வழி தேடினார்கள்.
ஆனால், அவர்கள் மக்களைக் குறித்து
பயந்தார்கள். ஏனெனில் மக்கள் இயேசுவைத்
தீர்க்கதரிசி என நம்பினர்.

### விருந்துக்கு அழைக்கப்பட்டோர்

*(லூக்கா 14:15-24)*

22 இயேசு மேலும் சிலவற்றை உவமை
களின் மூலம் மக்களுக்கு எடுத்துக்
கூறினார். 2"பரலோக இராஜ்யமானது தன்
மகனது திருமண விருந்துக்கு ஏற்பாடு செய்த
மன்னன் ஒருவனுக்கு ஒப்பாகும். 3அம்மன்னன்
விருந்துண்ண சிலரை அழைத்தான். விருந்து
தயாரானபொழுது தன் வேலைக்காரர்களை
அனுப்பி அவர்களை அழைத்துவரச் சொன்
னான். ஆனால் அவர்களோ மன்னனது விருந்
துக்கு வர மறுத்துவிட்டார்கள்.

4"பின் மன்னன் மேலும் சில வேலைக்
காரர்களை அனுப்பினான். தன் வேலைக்
காரர்களிடம் மன்னன் இவ்வாறு சொல்லிய
னுப்பினான், 'நான் ஏற்கெனவே அவர்களை
விருந்துண்ண அழைத்துவிட்டேன். எனவே,
அவர்களிடம், 'என்னிடமிருந்த சிறந்த காளை
களையும் கன்றுகளையும் உண்பதற்காக
அடித்துள்ளேன். எல்லாம் தயாராக உள்ளன.
திருமண விருந்துண்ண வாருங்கள்!' என்று
கூறுங்கள்' என்றான்.

5"வேலைக்காரர்கள் சென்று அவர்களை
அழைத்தார்கள். ஆனால் அவர்களோ வேலை
க்காரர்களின் அழைப்பை பொருட்படுத்த
வில்லை. வேறு வேலைகளைக் கவனிக்க
அவர்கள் சென்றுவிட்டார்கள். ஒருவன் தன்
வயலில் வேலை செய்யவும் மற்றொருவன்
தன் வியாபாரத்தைக் கவனிக்கவும், சென்
றனர். 6வேறு சிலரோ வேலைக்காரர்களைப்
பிடித்து அடித்துக் கொன்றுவிட்டனர். 7கோபம
டைந்த மன்னன் தன் வேலைக்காரர்களைக்
கொன்றவர்களைக் கொல்வதற்காகத் தனது
படையை அனுப்பினான். மன்னனது படை
அவர்களது நகரத்தையே எரித்தது.

8"அதன் பிறகு, மன்னன் தன் வேலைக்
காரர்களைப் பார்த்து,'திருமண விருந்து தயா
ராக உள்ளது. நான் அவர்களை விருந்துக்கு
அழைத்தேன். ஆனால் அவர்களோ எனது
விருந்துக்கு வருமளவிற்கு நல்லவரல்லர்.
9ஆகவே, தெரு முனைகளுக்குச் செல்லுங்கள்.
உங்கள் கண்ணில் படுகிறவர்கள் அனை
வரையும் விருந்துக்கு அழையுங்கள். எனது
விருந்துக்கு வரச் சொல்லுங்கள்' என்று
சொன்னான். 10எனவே, மன்னனது வேலைக்
காரர்கள் தெருக்களுக்குச் சென்று கண்ணில்
பட்டவர்களை அழைத்து வந்தனர். வேலைக்
காரர்கள் நல்லவர்களையும் தீயவர்களையும்
திருமண விருந்து தயாராகவிருந்த இடத்துக்கு
அழைத்து வந்தார்கள். அந்த இடம் விருந்தினர்
களால் நிரம்பியது. 11"மன்னன் விருந்தினர்
அனைவரையும் காண்பதற்காக வந்தான். திரு
மணத்திற்கு வர ஏற்றதாக உடையணிந்திராத
ஒருவனை மன்னன் கண்டான். 12மன்னன்
அவனிடம், 'நண்பனே, நீ எப்படி உள்ளே
வந்தாய்? திருமணத்திற்கு வர ஏற்றதாக நீ
உடை அணிந்திருக்கவில்லையே?' என்று
கேட்டான். ஆனால் அம்மனிதனோ எதுவும்
பேசவில்லை. 13எனவே, மன்னன் தன்
வேலைக்காரர்களிடம், 'இவனது கையையும்
காலையும் கட்டுங்கள். இவனை இருளில் எறி
யுங்கள். அங்கு, மக்கள் வேதனையால் பற்
களைக் கடித்துக் கொள்வார்கள்" என்று
சொன்னான்.

14"ஆம், பலர் அழைக்கப்படுகிறார்கள்.
ஆனால் சிலர் மட்டுமே தேர்ந்தெடுக்கப்படு
கிறார்கள்" என்று இயேசு சொன்னார்.

### பரிசேயரின் தந்திரம்

*(மாற்கு 12:13-17; லூக்கா 20:20-26)*

15பின்னர் பரிசேயர்கள், இயேசு போதனை
செய்து கொண்டிருந்த இடத்தை விட்டு வில
கிச் சென்றார்கள். இயேசு ஏதேனும் தவறாகப்
பேசினால் அவரைப் பிடித்துவிட வேண்டும்
என அவர்கள் திட்டமிட்டார்கள். 16பரிசேயர்
கள் இயேசுவை ஏமாற்ற சிலரை அவரிடம்
அனுப்பினார்கள். தங்களுள் சிலரையும் ஏரோ
தியர்களில் சிலரையும் அவர்கள் இயேசுவிடம்
அனுப்பினார்கள். அவர்கள் இயேசுவிடம்,
"போதகரே, நீர் நேர்மையானவர் என்பதை
நாங்கள் அறிவோம். தேவனுடைய வழிக
ளைக்குறித்த உண்மைகளை நீர் போதிப்பதை
யும் அறிவோம். உம்மைப் பற்றி மற்றவர்கள்
என்ன நினைக்கிறார்கள் என்பதைக் குறித்து
நீர் கவலைப்படுவதில்லை. உமக்கு எல்லோ
ரும் சமம். 17ரோமானியப் பேரரசர் சீசருக்கு
வரி செலுத்துவது சரியா தவறா? உமது
கருத்தைச் சொல்லும்" என்றார்கள்.

18ஆனால் அவர்கள் தன்னை ஏமாற்ற முயற்
சிப்பதை இயேசு அறிந்தார். ஆகவே இயேசு,
"மாயமானவர்களே! எதற்காக என்னை ஏதும்
தவறாகச் சொல்லவைக்க முயற்சிக்கிறீர்கள்?
19வரி செலுத்துவதற்கான நாணயம் ஒன்றைக்
காட்டுங்கள்" என்று கூறினார். அவர்கள் ஒரு
வெள்ளி நாணயத்தை இயேசுவிடம்
காட்டினார்கள். 20பின் இயேசு, "நாணயத்தில்
யாருடைய உருவம் உள்ளது? யாருடைய
பெயர் பொறிக்கப்பட்டுள்ளது?" என்று
கேட்டார்.

21அதற்கு அவர்கள் "சீசரின் உருவமும்
சீசரின் பெயரும்." என்று பதிலளித்தனர்.

எனவே இயேசு அவர்களுக்குச் சொன்
னார், "சீசருடையதை சீசருக்கும், தேவனுக்
குரியதை தேவனுக்கும் கொடுங்கள்."

22இயேசு கூறியதைக் கேட்ட அவர்கள்
வியப்படைந்தார்கள். இயேசுவை விட்டு வில
கிச் சென்றார்கள்.

### சதுசேயரின் தந்திரம்

*(மாற்கு 12:18-27; லூக்கா 20:27-40)*

23அதே நாளில் சில சதுசேயர்கள் இயேசு
விடம் வந்தார்கள். (யாரும் மரணத்திலிருந்து
உயிர்த்தெழ முடியாது என்று நம்புகிறவர்கள்
சதுசேயர்கள்) சதுசேயர்கள் இயேசுவிடம் ஒரு
கேள்வி கேட்டனர். 24அவர்கள், "போதகரே,
திருமணமான ஒருவன் குழந்தைகள் இல்லா
மல் இறந்துவிட்டால் அவனது சகோதரன்
அவனது மனைவியை மணக்க வேண்டுமென
மோசே நமக்குக் கூறியுள்ளார். அப்படியெ
னில், அவர்கள் இறந்த சகோதரனுக்குக்
குழந்தை பெறுவார்கள். 25எங்களில் ஏழு
சகோதரர்கள் இருந்தார்கள். முதலாமவன்
மணம் செய்து கொண்டான். ஆனால் அவன்
குழந்தைகள் இல்லாமலேயே இறந்து விட்டான்.
26அவனது சகோதரன் அப்பெண்ணை
மணந்து கொண்டான். பின், இரண்டாவது
சகோதரனும் இறந்துவிட்டான். அதே போல
மூன்றாவது சகோதரனுக்கும் மற்ற சகோதரர்
கள் அனைவருக்கும் நடந்தது. 27இறுதியாக
அப்பெண்ணும் இறந்தாள். 28ஏழு பேர்
அவளை மணந்தார்கள். எனவே, மரணத்
திலிருந்து அவர்கள் உயிர்த்தெழும்பொழுது
அவள் யாருடைய மனைவியாக இருப்பாள்?"
என்று கேட்டார்கள்.

29அதற்கு இயேசு, "வேத வாக்கியங்கள்
என்ன கூறுகிறது என்பது உங்களுக்குத் தெரி
யாததால் உங்களுக்குப் புரியவில்லை. மேலும்
தேவனின் வல்லமையைக்குறித்து
உங்களுக்குத் தெரிவில்லை. 30மனிதர்கள் மர
ணத்திலிருந்து உயிர்த்தெழும்பொழுது, அவர்
களுக்குத் திருமணங்கள் நடக்கமாட்டா. உயிர்த்
தெழும் அனைவரும் பரலோகத்திலிருக்கும்
தேவதூதர்களுக்கு ஒப்பாவார்கள். 31மரணத்தி
லிருந்து உயிர்த்தெழுவதைக் குறித்து தேவன்
என்ன சொல்லியுள்ளார் என்பதைப் படித்தி
ருக்கிறீர்களல்லவா? 32தேவன், 'ஆபிரகாமின்
தேவன் நானே, ஈசாக்கின் தேவன் நானே.
யாக்கோபின் தேவன் நானே'* அவர்களின்
தேவன் என்று தேவன் தம்மைப்பற்றி கூறி
னார். அவர் இறந்தவர்களின் தேவன் அல்ல.
அவர் வாழ்கிறவர்களின் தேவன்" என்றார்.
33அதைக் கேட்ட அனைவரும் இயேசுவின்
போதனையைக் கண்டு வியந்தனர்.

### எந்த கட்டளை மிக முக்கியமானது

*(மாற்கு 12:28-34; லூக்கா 10:25-28)*

34சதுசேயர்களால் வாதிட இயலாதபடி
இயேசு பதில் அளித்தார் என்று பரிசேயர்கள்
அறிந்தனர். எனவே, பரிசேயர்கள் ஒன்று
கூடினார்கள். 35ஒரு பரிசேயன் மோசேயின்
சட்டத்தை நன்கு கற்றவன். அவன் இயேசுவை
சோதிக்க ஒரு கேள்வி கேட்டான், 36"மோசே
யின் சட்டங்களில் எது மிக முக்கியமானது?"
என்று அந்த பரிசேயன் கேட்டான்.

37இயேசு அதற்கு, " 'உன் தேவனாகிய
கர்த்தரை நேசிக்க வேண்டும். முழு இதயத்
தோடும் ஆத்துமாவோடும் முழு மனதோடும்
அவரை நேசிக்கவேண்டும்.'* 38இது தான்
முதலாவது மிக முக்கியமானதுமான கட்
டளை. 39இரண்டாவது கட்டளையும் முதலா
வது கட்டளைப் போன்றதே'நீ உன்னை நேசிப்
பதைப்போலவே மற்றவர்களையும் நேசிக்க
வேண்டும்.'* 40எல்லா கட்டளைகளும், தீர்க்
கதரிசிகளின் எழுத்துக்களும் இந்த இரண்டு
கட்டளைகளை அடிப்படையாகக் கொண்ட
வைதான்" என்றார்.

### பரிசேயர்களிடம் கேள்வி

*(மாற்கு 12:35-37; லூக்கா 20:41-44)*

41பரிசேயர்கள் ஒன்றாய் கூடியிருந்தபொ
ழுது, இயேசு அவர்களை ஒரு கேள்வி கேட்
டார். 42"கிறிஸ்துவைக்குறித்து நீங்கள் என்ன
நினைக்கிறீர்கள்? அவர் யாருடைய குமா
ரன்?" என்றார்.

அதற்கு பரிசேயர்கள், "கிறிஸ்து தாவீதின்
குமாரன்." என்றனர்.

43பின் இயேசு பரிசேயர்களிடம் கூறினார்,
"பின் எதற்காக தாவீது அவரைப் 'ஆண்ட
வரே' என்றழைத்தார்? தாவீது பரிசுத்த ஆவி
யின் வல்லமையாலே பேசினார். தாவீது
சொன்னது இதுவே:

44'கர்த்தர் (தேவன்) எனது ஆண்டவரிடம்
(கிறிஸ்து) கூறினார்:எனது வலது பக்கத்
தின் அருகில் உட்காரும் உம் எதிரிகளை
உம் கட்டுக்குள் வைப்பேன்!'

*சங்கீதம் 110:1*

45தாவீது 'ஆண்டவர்' என கிறிஸ்துவை
அழைக்கிறார். எனவே கிறிஸ்து எப்படி
தாவீதின் குமாரனாக முடியும்?" என்று கேட்
டார் இயேசு. 46பரிசேயர்கள் ஒருவராலும்
இயேசுவின் கேள்விகளுக்குப் பதில் கூற முடி
யவில்லை. அந்த நாளிலிருந்து இயேசுவைக்
ஏமாற்றிக் கேள்வி கேட்க முயற்சி செய்யவும்
துணிவு யாருக்கும் வரவில்லை.

### இயேசு யூத ஆசாரியர்களை விமர்சித்தல்

*(மாற்கு 12:38-40 லூக்கா 11:37-52; 20:45-47)*

23 பின் இயேசு மக்களையும் தம் சீஷர்க
ளையும் பார்த்துப் பேசலானார். 2"வேத
பாரகரும், பரிசேயர்களும் மோசேயின் சட்டங்
கள் என்ன சொல்லுகின்றன என்பதை உங்
களுக்குக் கூறும் அதிகாரத்தைப் பெற்றிருக்
கிறார்கள். 3ஆகவே அவர்கள் சொற்களுக்குக்
கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். அவர்கள் செய்
யச் சொல்கிறவற்றை நீங்கள் செய்யவேண்டும்.
ஆனால், அவர்களின் வாழ்க்கை நீங்கள் பின்
பற்றத் தக்கதல்ல. அவர்கள் உங்களுக்கு உப

---

**'ஆபிரகாமின் ... நானே'** யாத். 3:6.

**'உன் ... வேண்டும்'** உபா. 6:5.

**'நீ ... வேண்டும்'** லேவி. 19:18.

தேசிக்கிறார்கள். ஆனால், அவர்கள் அதன்படி
நடப்பதில்லை. 4மக்கள் பின்பற்றி நடப்பதற்குக்
கடினமான சட்டங்களை ஏற்படுத்துகிறார்கள்.
மற்றவர்கள் அவற்றைப் பின்பற்றுமாறு மிக
வும் வற்புறுத்துகின்றனர். ஆனால் அச்சட்டங்
களில் யாதொன்றையும் தாங்கள் பின்பற்ற
முயலுவதில்லை.

5“அவர்கள் நற்செயல்களைச் செய்வதற்
கான ஒரே காரணம் மற்றவர்கள் அவற்றைக்
காண வேண்டும் என்பதே. அவர்கள் வேத
வாக்கியங்களில் வாசகங்களைக் கொண்ட
தோல் பைகளை அணிந்து செல்கிறார்கள்.
அவற்றை மேலும் மேலும் பெரிதாக்கிக்
கொண்டேயிருக்கிறார்கள். மேலும் மக்கள்
காணும்படியாக பிரார்த்தனைக்கான சிறப்பு
உடையை மிக நீண்டதாக அணிகிறார்கள்.
6அத்தகைய பரிசேயர்களும் வேதபாரகர்களும்
விருந்துகளின்போது முக்கியமான இருக்கை
களில் அமர விரும்புகிறார்கள். மேலும் ஜெப
ஆலயங்களில் முக்கியமான இருக்கைகளில்
அமர விரும்புகிறார்கள். 7கடை வீதிகளில்
மக்கள் தங்களுக்கு மரியாதை செய்யவும்
மக்கள் தங்களை ‘போதகரே’ என அழைக்
கவும் விரும்புகிறார்கள்.

8“ஆனால் நீங்கள் ‘போதகர்’ என அழைக்
கப்படக் கூடாது. ஏனென்றால் நீங்கள் அனை
வரும் சகோதர சகோதரிகள். 9உங்களுக்கு
ஒரு போதகரே உண்டு. மேலும், பூமியில்
உள்ள எவரையும் ‘தந்தையே’ என அழைக்
காதீர்கள். உங்களுக்கு ஒருவரே தந்தை. அவர்
பரலோகத்தில் உள்ளார். 10நீங்கள் ‘எஜமானே’
என்றும் அழைக்கப்படக் கூடாது. ஏனென்
றால், உங்கள் எஜமான் ஒருவர் மட்டுமே.
அவர் தான் கிறிஸ்து. 11உங்களுக்கு வேலைக்
காரனைப்போல ஊழியம் செய்கிறவனே
உங்களில் பெரியவன். 12தன்னை மற்றவரி
லும் உயர்த்துகிறவன் தாழ்த்தப்படுவான். தன்
னைத் தான் தாழ்த்துகிறவன் உயர்த்தப்படு
வான். 13வேதபாரகர்களே! பரிசேயர்களே!
உங்களுக்குக் கேடுகாலம். நீங்கள் மாயமான
வர்கள். பரலோக இராஜ்யத்தின் நுழைவா
யிலை நீங்கள் அடைக்கிறீர்கள். நீங்களும்
நுழைவதில்லை, நுழைய முயற்சிக்கும் மற்ற
வர்களையும் தடுக்கிறீர்கள்.

14* 15“வேதபாரகர்களே! பரிசேயர்களே!
உங்களுக்குக் கேடு வரும். நீங்கள் மாயமான
வர்கள். கடல் கடந்தும் பல நாடுகளில் பயணம்
செய்தும் உங்களுக்கு ஒரு சீஷனைத் தேடு
கிறீர்கள். நீங்கள் அவனைக் கண்டடைந்து
அவனை உங்களைவிட மோசமானவனாக
மாற்றுகிறீர்கள். மேலும் நரகத்திற்கு உரிய
நீங்கள் மிகவும் பொல்லாதவர்களே.

16“வேதபாரகர்களே! பரிசேயர்களே! உங்
களுக்குக் கேடு வரும். மற்றவர்களை வழி
நடத்தும் நீங்கள் குருடர்கள். நீங்கள் கூறு
கிறீர்கள், ‘ஒருவன் தேவாலயத்தின் பெயரால்
சத்தியம் செய்தால் அதனால் ஒன்றுமில்லை
ஆனால், தேவாலயத்தில் உள்ள தங்கத்தின்
பெயராலே சத்தியம் செய்தால், அவன் அதைக்
காப்பாற்ற வேண்டும்!’ 17நீங்கள் அறிவற்ற
குருடர்கள். தங்கம் பெரிதா தேவாலயம்
பெரிதா? தங்கத்தைப் பரிசுத்தமாக்குவது
தேவாலயமே! எனவே, தேவாலயமே பெரி
யது. 18மேலும், நீங்கள் கூறுகிறீர்கள், ‘ஒருவன்
தேவாலயத்திலுள்ள பலிபீடத்தின் பெயரால்
சத்தியம் செய்தால் அதனால் ஒன்றுமில்லை.
ஆனால், ஒருவன் பலிபீடத்திலுள்ள பலிப்
பொருளின் பெயரால் சத்தியம் செய்தால்,
அவன் அதைக் காப்பாற்ற வேண்டும்!’
19நீங்கள் குருடர்கள் உங்களுக்கு எதுவும் புரி
வதில்லை. படைத்த பொருள் பெரிதா? பலி
பீடம் பெரிதா? படைத்த பொருளை பரிசுத்தப்
படுத்துவது பலிபீடமே. ஆகவே பலிபீடமே
பெரியது. 20பலிபீடத்தின் பெயராலே சத்தியம்
செய்கிறவன் உண்மையில் பலிபீடத்தையும்
அதில் உள்ள அனைத்துப் பொருள்களையும்
பயன்படுத்துகிறான். 21மேலும் தேவாலயத்
தின் பெயரால் சத்தியம் செய்கிறவன், உண்
மையில் தேவாலயத்தையும் அதில் வாசம்
செய்பவரையும் பயன்படுத்துகிறான். 22பர
லோகத்தின் பெயரால் சத்தியம் செய்கிறவன்
தேவனின் அரியாசனத்தின் பெயராலும்
அதில் அமர்கிறவரின் பெயராலும் சத்தியம்
செய்கிறான்.

23“வேதபாரகர்களே! பரிசேயர்களே! உங்க
ளுக்குக் கேடு வரும். நீங்கள் மாயமானவர்கள்.
உங்கள் உடைமைகள் அனைத்திலும் பத்தில்
ஒருபாகம் கர்த்தருக்குக் காணிக்கையாக்
குகிறீர்கள். புதினா, வெந்தயம் மற்றும் சீரகத்
திலும் கூட. ஆனால் கட்டளைகளில் மிக
முக்கியமானவற்றை நீங்கள் பின்பற்றுவ
தில்லை. அதாவது, நியாயமாகவும் கருணை
யுடனும் நேர்மையாகவும் விளங்க வேண்டும்
என்பதை விட்டுவிடுகிறீர்கள். இவைகளே
நீங்கள் செய்யவேண்டிய முக்கிய செயல்கள்.
மேலும் மற்றநற்செயல்களையும் தொடர்ந்து
செய்து வர வேண்டும். 24நீங்கள் மற்றவர்களை
வழிநடத்துகிறீர்கள். ஆனால், நீங்களோ குரு
டர்கள். பானத்திலிருந்து ஒரு சிறு ஈயை
எடுத்து எறிந்துவிட்டு, ஒட்டகத்தை விழுங்
குகிறவனைப் போன்றவர்கள் நீங்கள்.

25“வேதபாரகர்களே! பரிசேயர்களே! நீங்
கள் மாயமானவர்கள். உங்கள் கோப்பை
களையும் பாத்திரங்களையும் வெளிப்புறம்
நன்கு கழுவுகிறீர்கள். (சுத்தம் செய்கிறீர்கள்)
ஆனால் அவற்றின் உள்ளே நீங்கள் மற்ற
வர்களை ஏமாற்றி உங்கள் விருப்பத்தின்படி

---

**வாக்கியம் 14** சில கிரேக்க பிரதிகளில் 14-வது வாக்கியம் சேர்க்கப்பட்டுள்ளது. “சட்ட குருமார்களே பரிசேயர்களே இது உங்களுக்குத் தீயதாக இருக்கும். நீங்கள் கபடவேடதாரிகள். நீங்கள் விதவைகளின் வீடுகளை எடுத்துக் கொள்வீர்கள். மக்கள் உங்களைப் பார்க்க முடிகிறபடி நீண்ட பிரார்த்தனைகளைச் செய்கிறீர்கள். எனவே உங்களுக்கு மோசமான தண்டனை கிடைக்கும்.” (மாற்கு 12:40, லூக்கா 20:47)

சேர்த்த பொருட்களால் நிரம்பியுள்ளது. 26பரி
சேயர்களே, நீங்கள் குருடர்கள். முதலில்
கோப்பையின் உள்ளே சுத்தம் செய்யுங்கள்.
பின், கோப்பையின் வெளிப்புறம் உண்மை
யிலேயே சுத்தமாகும்.
27“வேதபாரகர்களே! பரிசேயர்களே! உங்
களுக்குக் கேடு வரும். நீங்கள் மாயமான
வர்கள். நீங்கள் வெள்ளையடிக்கப்பட்ட கல்
லறைகளைப் போன்றவர்கள். அக்கல்லறை
களின் வெளிப்புறம் நன்றாக இருக்கிறது.
ஆனால், உள்ளே முழுவதும், இறந்தவர்களின்
எலும்புகளும், அசுத்தங்கள் பலவும் இருக்
கின்றன. 28அதே போலத்தான் நீங்களும், உங்
களைக் காண்கிறவர்கள் உங்களை நல்லவர்
கள் என்று நினைக்கிறார்கள். ஆனால்,
உள்ளுக்குள் நீங்கள் (முழுக்கவும்) மாயமும்
தீமையும் நிறைந்தவர்கள்.
29“வேதபாரகர்களே! பரிசேயர்களே! உங்க
ளுக்குக் கேடு வரும். நீங்கள் மிகவும் மாயமான
வர்கள். நீங்கள் தீர்க்கதரிசிகளுக்குக் கல்லறை
கட்டுகிறீர்கள். நல்லவர்களின் கல்லறைக
ளுக்கு பெருமை சேர்க்கிறீர்கள். 30மேலும் நீங்
கள், ‘நாங்கள் எங்கள் முன்னோர்களின் காலத்
தில் வாழ்ந்திருந்தால், இத்தீர்க்கதரிசிகளைக்
கொல்ல அவர்களுக்குத் துணை போயிருக்க
மாட்டோம்’ என்று கூறுகிறீர்கள். 31அத்தீர்க்கத
ரிசிகளைக் கொன்றவர்களின் வழிவந்தவர்
கள் நீங்கள் என்பதை நிரூபணம் செய்கிறீர்
கள். 32உங்கள் முன்னோர்கள் தொடங்கி
வைத்த பாவத்தை நீங்கள் முடித்து வைப்
பீர்கள். 33நீங்கள் பாம்புகள். கொடிய விஷம்
கொண்ட பாம்புக் கூட்டத்தில் தோன்றியவர்கள்
நீங்கள்! தேவனிடமிருந்து நீங்கள் தப்ப முடி
யாது. நீங்கள் அனைவரும் குற்றவாளிகள்
என நிரூபிக்கப்பட்டு நரகத்திற்குச் செல்வீர்
கள். 34ஆகவே, நான் உங்களுக்கு இதைச்
சொல்லிக் கொள்கிறேன். தீர்க்கதரிசிகளையும்
ஞானிகளையும் போதகர்களையும் உங்களி
டம் அனுப்புகிறேன். நீங்கள் அவர்களில்
சிலரை சாகடிப்பீர்கள். சிலரை சிலுவையில்
அறைவீர்கள். சிலரை ஜெப ஆலயங்களில்
கட்டிவைத்து அடிப்பீர்கள். அவர்களை
நகருக்கு நகர் துரத்திச்செல்வீர்கள். 35ஆகவே,
நேர்மையான வாழ்வை நடத்திய சிலரைக்
கொன்ற குற்றத்திற்கு நீங்கள் ஆளாவீர்கள்.
நல்லவனான ஆபேல் முதல் சகரியா ஆகியோ
ரைக் கொன்ற பழிக்கும் உட்படுவீர்கள்.
ஆபேல் முதல் பரகியாவின் மகனும் ஆலயத்
திற்கும் பலிபீடத்திற்கும் இடையில் கொல்லப்
பட்டவனான சகரியா வரையில் வாழ்ந்த நல்ல
வர்களைக் கொன்ற பழிக்கும் ஆளாவீர்கள்.
36நான் உண்மையைச் சொல்கிறேன். இவை
அனைத்தும் தற்பொழுது வாழும் உங்களுக்கு
உண்டாகும்.

### எருசலேம் மக்களுக்கு எச்சரிப்பு
*(லூக்கா 13:34-35)*

37“எருசலேமே! எருசலேமே! நீ தீர்க்கதரிசி
களைக் கொல்கின்றாய். தேவன் உன்னிடம்
அனுப்பியவர்களைக் கற்களால் அடித்துக்
கொல்கிறாய். பற்பலமுறை உன் மக்களுக்கு
உதவ நான் விரும்பினேன். ஒரு (தாய்க்) கோழி
தன் குஞ்சுகளைத் தன் இறக்கைகளுக்குக் கீழே
சேர்த்துக்கொள்வதைப் போல நானும் உன்
மக்களை ஒன்று சேர்க்க நினைத்தேன்.
ஆனால், நீயோ அதைச்செய்ய என்னை
விடவில்லை. 38இப்பொழுதோ, உன் வீடு முற்
றிலும் வெறுமையடையும். 39நான் உனக்கு
உண்மையைச் சொல்கிறேன், ‘கர்த்தரின் பெய
ராலே வருகிறவருக்கு தேவனின் ஆசீர்வாதம்
கிடைக்கட்டும்! அவர் வரவு நல்வரவு!’*
என்று நீ கூறுகிறவரைக்கும் நீ என்னைக்
காணமாட்டாய்” என்று இயேசு கூறினார்.

### ஆலயத்தின் எதிர்கால அழிவு
*(மாற்கு 13;1-31; லூக்கா 21:5-33)*

24 இயேசு தேவாலயத்தை விட்டு சென்று
கொண்டிருந்தார். அவரது சீஷர்கள்
அவர் அருகில் வந்து, தேவாலயத்தின் கட்டி
டங்களைக் காட்டினார்கள். 2இயேசு சீஷர்களை
நோக்கி, “இந்தக் கட்டிடங்களைப் பார்த்தீர்
களா? உங்களுக்கு உண்மையைச் சொல்லு
கிறேன். இக்கட்டிடங்கள் அனைத்தும் நாசமாக்
கப்படும். ஒவ்வொரு கல்லும் கீழே தள்ளப்
படும். ஒரு கல் இன்னொரு கல்மீது இராதபடி
ஆகும்” என்று கூறினார்.
3பின்னர், இயேசு ஒலிவ மலையின்மீது
ஓரிடத்தில் அமர்ந்திருந்தார். இயேசுவுடன் தனி
மையில் இருக்க வந்த சீஷர்கள், அவரிடம்,
“இவை எப்பொழுது நடக்கும் என்று எங்
களுக்குக் கூறுங்கள். நீர் மீண்டும் தோன்றப்
போகிறதையும் உலகம் அழியும் என்பதையும்
எங்களுக்கு உணர்த்த எம்மாதிரியான செயல்
நடக்கும்?” என்று கேட்டார்கள்.
4அவர்களுக்கு இயேசு, “எச்சரிக்கையுடன்
இருங்கள்! யாரும் உங்களை ஏமாற்ற விடா
தீர்கள். 5பலர் என் பெயரைக் கூறிக்கொண்டு
உங்களிடம் வருவார்கள். ‘நான்தான் கிறிஸ்து’
என அவர்கள் சொல்வார்கள். பலரையும்
அவர்கள் ஏமாற்றுவார்கள். 6போர்களைப்பற்
றியும் போர்களைப்பற்றிய செய்திகளையும்
நீங்கள் கேட்பீர்கள். ஆனால் பயப்படாதீர்கள்.
முடிவு வருவதற்கு முன்பு இச்செயல்கள் நடக்க
வேண்டும். 7நாடுகள் ஒன்றுக்கொன்று
மோதிக்கொள்ளும். இராஜ்யங்கள் ஒன்றுக்
கொன்று போரிட்டுக்கொள்ளும். மக்களுக்கு
உண்ண உணவு கிடைக்காத காலம் வரும்.
வெவ்வேறு இடங்களில் பூகம்பங்கள் தோன்
றும். 8இவை அனைத்தும் பிரசவ வேதனை
யின் தொடக்கம் போன்றவை” என்று பதில்
கூறினார்.
9“பின்னர் மக்கள் உங்களை மோசமாக
நடத்துவார்கள். துன்புறுத்தப்படவும் கொல்லப்
படவும் ஆட்சியாளர்களிடம் உங்களை ஒப்ப
டைப்பார்கள். அனைவரும் உங்களை வெறுப்
பர். நீங்கள் என்மீது நம்பிக்கைகொண்டுள்

---

***‘கர்த்தரின் … நல்லரவு’*** *சங்கீதம்* 118:26

ளதால் இவை அனைத்தும் உங்களுக்கு நிக
ழும்.
10“அக்கால கட்டத்தில், பலர் தாம்கொண்ட
விசுவாசத்தை இழப்பார்கள். அவர்கள் ஒரு
வருக்கு எதிராக ஒருவர் திரும்பி ஒருவரை
ஒருவர் வெறுப்பார்கள். 11பல போலித் தீர்க்க
தரிசிகள் வருவார்கள். மக்களை தவறானவற்
றின்மீது நம்பிக்கை கொள்ளச் செய்வார்கள்.
12உலகில் மேலும் மேலும் தீமைகள் ஏற்படும்.
ஆகவே பலர் அன்பு செலுத்துவதையே
நிறுத்தி விடுவார்கள். 13ஆனால் தொடர்ந்து
இறுதிவரை உறுதியாய் இருப்பவர்களே இரட்
சிக்கப்படுவார்கள். 14தேவனுடைய இராஜ்யத்
தைப்பற்றிய நற்செய்திகள் உலகம் முழுவதும்
பிரசங்கிக்கப்படும். அது ஒவ்வொரு தேசத்துக்
கும் சொல்லப்படும். அதன் பின்பே முடிவு
வரும்.
15“அழிவை ஏற்படுத்துகிற கொடிய காரி
யத்தைப்பற்றி தீர்க்கதரிசி தானியேல் கூறியுள்
ளார். ‘இக்கொடியதை தேவாலயத்தில் நின்றி
ருக்க நீங்கள் காண்பீர்கள்.’ (இதைப் படிக்கிற
நீங்கள் அது என்னவென்பதை அறிந்து
கொள்ள வேண்டும்.) 16அந்நேரத்தில், யூதேயா
வில் வசிப்பவர்கள் மலைகளுக்கு ஓடி விட
வேண்டும். 17கொஞ்சம்கூட நேரத்தை வீணாக்
காமல் ஓடி விடவேண்டும். வீட்டின் கூரையின்
மீதிருப்பவன், வீட்டிலுள்ள பொருட்களை
வெளியே எடுப்பதற்காக கீழே இறங்கக்
கூடாது. 18வயலில் வேலை செய்துகொண்டி
ருக்கிறவன், தன் மேலாடையை எடுக்க
திரும்பி வீட்டிற்குச்செல்லக் கூடாது. 19கர்ப்
பிணிகளுக்கும் கைக்குழந்தையுடைய பெண்
களுக்கும் மோசமான காலம் அது. 20இச்செயல்
கள் நடந்து நீங்கள் தப்பிச்செல்லும் நாள்
ஓய்வு நாளாகவோ குளிர் காலமாகவோ
இருக்காதிருக்க பிரார்த்தியுங்கள். 21ஏனென்
றால், அக்காலத்தில் துன்பங்கள் அதிகரிக்கும்.
உலகம் தோன்றிய நாள் முதலாக இல்லாத
அளவிற்கு அப்பொழுது துன்பங்கள் ஏற்
படும். அதைவிட மோசமானது பிற்காலத்தில்
ஏற்படாது. 22அக்கொடிய காலத்தை குறுகிய
தாக்க தேவன் முடிவு செய்துள்ளார். அவ்வாறு
குறுகியதாகாவிடில், பின் ஒருவரும் உயிர்
பிழைத்திருக்க முடியாது. ஆனால், தான் தேர்ந்
தெடுத்தவர்களுக்கு உதவ தேவன் அக்கொடிய
காலத்தை குறுகியதாக்குவார். 23அப்போது
ஒருசிலர் உங்களிடம், ‘அங்கே பார், கிறிஸ்து!’
என்று சொல்லக்கூடும். அல்லது வேறு சிலர்,
‘இயேசு இங்கே இருக்கிறார்’ என்று சொல்லக்
கூடும். ஆனால் அவர்களை நம்பாதீர்கள்.
24கள்ளக் கிறிஸ்துகளும் கள்ளத் தீர்க்கதரிசி
களும் தோன்றி மகத்தான செயல்களையும்
அதிசயங்களையும் செய்வார்கள். அவற்றை
அவர்கள் தேவன் தேர்ந்தெடுத்தவர்களிடம்
செய்து காட்டுவார்கள். முடிந்தால் தேவனு
டைய மக்களை ஏமாற்ற அவர்கள் முயற்சிப்
பார்கள். 25ஆனால், அவை நடப்பதற்கு முன்பே
நான் உங்களை எச்சரிக்கிறேன்.

26“கிறிஸ்து வனாந்தரத்தில் இருக்கிறார்
என்று யாரேனும் ஒருவன் உங்களிடம் சொல்
லக்கூடும். அதை நம்பி, நீங்கள் வனாந்தரத்
திற்கு கிறிஸ்துவைத் தேடிச்செல்லாதீர்கள்.
வேறொருவன், ‘கிறிஸ்து அந்த அறையில்
இருக்கிறார்’ என்று சொல்லக்கூடும். ஆனால்
அதை நம்பாதீர்கள். 27மனித குமாரன் தோன்
றும்பொழுது யாவரும் அவரைக் காண
இயலும். வானில் தோன்றும் மின்னலைப்
போல எல்லோரும் அதைப்பார்க்க இயலும்.
28கழுகுகள் வட்டமிடும் இடத்தில் பிணம்
இருப்பதை நீங்கள் அறிவது போல எனது
வருகை நன்கு புலப்படும். 29அந்த நாட்களின்
துன்பம் தீர்ந்தவுடன் கீழ்க்கண்டது நடக்கும்:

> ‘சூரியன் இருளாக மாறும், சந்திரன்
> ஒளியைக் கொடுக்காது. வானிலிருந்து
> நட்சத்திரங்கள் உதிரும், வானில்
> அனைத்தும் மாறும்.
>
> *ஏசாயா 13:10, 34:4*

30“அப்பொழுது மனித குமாரனின் வரு
கையை அறிவிக்கும் அடையாளம் வானில்
தெரியும். உலகில் உள்ள மனிதர்கள் அனை
வரும் கதறுவார்கள், வானத்து மேகங்களின்
மீது மனித குமாரன் வருவதைக் காண்
பார்கள். மகத்தான வல்லமையுடனும் மிகுந்த
மகிமையுடனும் மனித குமாரன் வருவார்.
31அவர், ஒரு எக்காளத்தை சத்தமாய் ஊதி
அதன் மூலம் தம் தூதர்களை எல்லாத் திசை
களுக்கும் அனுப்புவார். உலகின் எல்லா பகு
தியிலிருந்தும் தேவதூதர்கள் அவரால் தேர்ந்
தெடுக்கப்பட்டவர்களை ஒன்று சேர்ப்பார்கள்.
32“அத்தி மரம் நமக்கு ஒரு பாடத்தைப்
போதிக்கிறது. அத்தி மரத்தின் கிளைகள்
பசுமையடைந்து இலைகள் துளிர்விட்டு வள
ரும்பொழுது கோடைகாலம் அருகில் உள்ளது
என அறிகிறீர்கள். 33அதே போலத்தான் நான்
நடக்கப்போவதாகக் கூறிய செயல்களைப்
பொறுத்தவரையிலும், அவை நடக்கும்பொ
ழுது காலம் நெருங்கிவிட்டதை அறியலாம்.
34நான் உண்மையைச் சொல்கிறேன். இன்
றைய மனிதர்கள் வாழும் காலத்திலேயே
அவை அனைத்தும் நடக்கும். 35உலகம் முழு
வதும் வானமும் பூமியும் உள்ளாக அழியும்.
ஆனால் எனது வார்த்தைகள் அழியாது.

## இயேசு வரும் வேளை

(மாற்கு 13:32-37; லூக்கா 17:26-30; 34-36)

36“அந்த நேரம் அல்லது நாள் எப்பொழுது
வரும் என்பது யாருக்கும் தெரியாது. பரலோ
கத்திலிருக்கும் தேவ குமாரனும் தேவதூதர்
களும்கூட அதை அறியமாட்டார்கள். பிதாவா
னவர் மட்டுமே அறிவார். 37நோவாவின் காலத்
தில் நடந்ததைப் போலவே, மனித குமாரன்
வரும்போதும் நடக்கும். 38நோவாவின் காலத்
தில் வெள்ளம் வருமுன்னர், மக்கள் குடித்துக்
கொண்டும் சாப்பிட்டுக்கொண்டுமிருந்தார்கள்.
மக்கள் தம் பிள்ளைகளின் திருமணங்களை

நடத்திக்கொண்டிருந்தார்கள். நோவா கப்பலில்
ஏறுகிறவரைக்கும் மக்கள் அவற்றைச் செய்து
கொண்டிருந்தார்கள். 39நடந்து கொண்டிருந்
ததை அம்மக்களில் யாரும் அறிந்திருக்க
வில்லை. பினனர், வெள்ளம் வந்து அவர்கள்
அனைவரையும் அழித்துப்போட்டது. அதைப்
போலவே மனித குமாரன் வரும்பொழுதும்
நடக்கும். 40இரண்டு ஆண்கள் வயலில் வேலை
செய்து கொண்டிருக்க ஒருவன் விடப்பட்டு
மற்றவன் எடுத்துச் செல்லப்படுவான். 41எந்தி
ரத்தில் மாவு அரைத்துக்கொண்டிருக்கும்
பெண்கள் இருவரில், ஒருத்தி விடப்பட்டு
மற்றவள் கொண்டு செல்லப்படுவாள்.

42"ஆகவே, எப்பொழுதும் ஆயத்தமாக
இருங்கள். உங்கள் கர்த்தர் வருகிற நேரம்
உங்களுக்குத் தெரியாது. 43இதை, ஞாபகம்
வைத்துக்கொள்ளுங்கள், திருடன் வரும்
நேரத்தை வீட்டுக்காரன் அறிந்திருந்தால், திருட
னுக்காக வீட்டுக்காரன் காத்திருந்திருப்பான்.
மேலும் திருடன் வீட்டில் நுழையாதபடி எச்
சரிக்கையுடன் இருப்பான். இதை நினைவில்
கொள்ளுங்கள். 44எனவே, நீங்களும் ஆயத்
தமாக இருக்க வேண்டும். நீங்கள் எதிர்பார்க்
காதபொழுது மனித குமாரன் வருவார்.

45"புத்தியுள்ள நம்பிக்கைக்குரிய வேலை
யாள் யார்? தன் மற்ற வேலைக்காரர்களுக்குத்
தக்க நேரத்தில் உணவளிக்கும் வேலைக்கா
ரனை எஜமானன் நம்புகிறான். எஜமானனின்
நம்பிக்கைக்குரிய அவ்வேலைக்காரன் யார்?
46அவ்வேலைக்காரன் எஜமானன் வரும்
நேரத்தில் தன் வேலையை சரியாக செய்கி
றதை கண்டால் அவ்வேலைக்காரன் மகிழ்ச்சி
யடைகிறான். 47நான் உண்மையைச் சொல்கி
றேன். தனக்குரிய எல்லாவற்றையும் மேற்
பார்வை செய்யும் பொறுப்பையும் அந்த
வேலைக்காரன் வசம் ஒப்படைப்பான்.
48ஆனால், அவ்வேலைக்காரன் தீய எண்ணம்
கொண்டு, தன் எஜமானன் விரைவில் வர
மாட்டான் என எண்ணினால் என்ன
ஆகும்? 49உடன் வேலைக்காரர்களையெல்லாம்
அடித்து உதைத்து எல்லா உணவையும்
உண்டுவிட்டு தன்னைப் போன்றவர்களுடன்
உண்டு குடிக்க முனைவான். 50அவன் எதிர்
பாராத நேரத்தில் எஜமானன் வருவான்.
51பின்னர் அவ்வேலைக்காரனைத் தண்டிப்
பான். மாயமானவர்களின் இடத்திற்கு
அவனை அனுப்பிவைப்பான். அங்கே உள்ள
வர்கள் கூக்குரலிட்டுக் கொண்டு வேதனையி
னால் பற்களைக் கடித்துக் கொண்டிருப்பார்
கள்.

### பத்து பெண்கள் பற்றிய உவமை

25 "மணமகனுக்காக காத்திருந்த பத்துப்
பெண்களுக்கு ஒப்பாக பரலோக இராஜ்
யம் இருக்கும். அப்பெண்கள் தங்களுடன்
விளக்குகளைக் கொண்டுவந்தனர். 2அவர்
களில் ஐந்து பெண்கள் முட்டாள்கள்; ஐந்து
பெண்கள் புத்திசாலிகள். 3ஐந்து முட்டாள்
பெண்களும் தம்முடன் விளக்குகளைக்
கொண்டுவந்திருந்தனர். ஆனால் அவற்றுக்குத்
தேவையான அதிக எண்ணெயைக் கொண்டு
வரவில்லை. 4புத்திசாலிப் பெண்களோ விளக்
குகளையும் தேவையான அதிக எண்ணெயை
ஜாடிகளிலும் கொண்டுவந்திருந்தனர். 5மண
மகன் வர நேரமானதால், அப்பெண்கள்
களைப்பு மிகுதியால் தூங்க ஆரம்பித்தனர்.

6"நள்ளிரவில் யாரோ, 'மணமகன் வந்தா
யிற்று! வந்து மணமகனை சந்தியுங்கள்!'
என்று அறிவித்தார்கள்.

7"பின் பெண்கள் அனைவரும் விழித்தெ
ழுந்தார்கள். தம் விளக்குகளைத் தயார் செய்
தார்கள். 8முட்டாள் பெண்கள் புத்திசாலிப
பெண்களிடம் 'எங்களிடம் விளக்குகளிலிருந்த
எண்ணெய் தீர்ந்துவிட்டது. உங்களிடமுள்ள
எண்ணெயிலிருந்து சிறிது கொடுங்கள்'
என்று கேட்டார்கள்.

9"அதற்கு புத்திசாலிப் பெண்கள், 'இல்லை.
எங்களிடமுள்ள எண்ணெய் எங்களுக்கே போ
தாது. எண்ணெய் விற்பவர்களிடம் சென்று
உங்களுக்கு எண்ணெய் வாங்கி வாருங்கள்'
என்று பதிலளித்தார்கள்.

10"ஆகவே, முட்டாள் பெண்கள் எண்ணெய்
வாங்கச் சென்றார்கள். அவர்கள் வெளியில்
சென்றிருந்தபொழுது மணமகன் வந்தான்.
தயாராக இருந்த பெண்கள் மணமகனுடன்
விருந்துண்ண சென்றார்கள். உடனே, கதவு
மூடப்பட்டு பூட்டப்பட்டது.

11"பின்னர், வெளியில் சென்ற பெண்கள்
திரும்பினார்கள். அவர்கள், 'ஐயா! ஐயா!
கதவைத் திறந்து எங்களை உள்ளே விடுங்கள்
என்றார்கள்.

12"ஆனால் மணமகனோ, 'உண்மையா
கவே நீங்கள் யாரென்று எனக்குத் தெரியாது'
என்று சொல்லிவிட்டான்.

13"எனவே நீங்கள் எப்பொழுதும் தயாராக
இருங்கள். மனித குமாரன் வரப்போகும்
நாளோ நேரமோ உங்களுக்குத் தெரியாது.

### மூன்று வேலைக்காரர்களைப் பற்றிய உவமை

(லூக்கா 19:11-27)

14"பரலோக இராஜ்யம், தன் வீட்டை விட்டு
வேறொரு இடத்திற்குப் பயணமான ஒருவ
னுக்கு ஒப்பாகும். புறப்பட்டுச் செல்வதற்கு
முன் அவன் தனது மூன்று வேலைக்காரர்
களுடன் பேசினான். தான் புறப்பட்டுச்சென்ற
பின் தனது உடைமைகளைப் பார்த்துக்கொள்
ளுமாறு அவர்களுக்குச் சொன்னான். 15ஒவ்
வொரு வேலைக்காரனும் எதைப் பார்த்துக்
கொள்ளமுடியுமென அவன் தீர்மானித்தான்.
அதற்கேற்ப ஒருவனிடம் ஐந்து பை நிறையப்
பணமும்* மற்றொருவனிடம் இரண்டு பை

**பணம்** ஒரு தாலந்து என்பது சுமார் 34 கிலோகிராம் எடையாக பொன்காசு, வெள்ளிகாசு, ஈயகாசைக் குறிக்கும்.

நிறையப் பணமும் மூன்றாவது வேலைக்
காரனிடம் ஒரு பை நிறையப் பணமும் கொடுத்
தான். பின் அவன் புறப்பட்டுப் போனான்.
16ஐந்து பை பணம் பெற்றவன் விரைந்து
அப்பணத்தை முதலீடு செய்தான். அது
மேலும் ஐந்து பை பணத்தை ஈட்டித் தந்தது.
17அதே போல இரண்டு பை பணம் பெற்ற
வனுக்கும் நடந்தது. அவன் தான் பெற்ற
இரண்டு பை பணம் முதலிட்டு மேலும்
இரண்டு பை பணம் ஈட்டினான். 18ஆனால்,
ஒரு பை பணம் பெற்றவனோ நிலத்தில் ஒரு
குழி தோண்டி தன் எஜமானின் பணத்தைப்
புதைத்து வைத்தான்.

19“நீண்ட காலம் கழித்து எஜமானன்
வீட்டிற்குத் திரும்பி வந்தான். தன் பணத்தை
என்ன செய்தார்கள் எனத் தன் மூன்று
வேலைக்காரர்களிடமும் கேட்டான். 20ஐந்து
பை பணம் பெற்ற வேலைக்காரன் மேலும்
ஐந்து பை பணத்தைக் கொண்டு வந்து தன்
எஜமானிடம் சொன்னான், ‘எஜமானே! நீர்
என்னை நம்பி ஐந்து பை பணம் தந்தீர்கள்.
ஆகவே, நான் அதை முதலிட்டு மேலும் ஐந்து
பை பணம் ஈட்டியுள்ளேன்!’ என்றான்.

21“அதற்கு எஜமானன், ‘நீ செய்தது சரி.
நம்பிக்கையுள்ள நல்ல வேலைக்காரன். நான்
கொடுத்த சிறிது பணத்தைக்கொண்டு நன்கு
செயல்பட்டாய், மேலும் பெரிய பொறுப்புக்
களை உன்னிடம் ஒப்படைப்பேன். நீயும் என்
மகிழ்ச்சியில் பங்குகொள்!’ என்றான்.

22“பின்னர் இரண்டு பை பணம் பெற்ற
வேலைக்காரன் தன் எஜமானிடம் வந்து,
‘எஜமானே, நீங்கள் என்னிடம் இரண்டு பை
பணம் தந்தீர்கள். நான் அதைக்கொண்டு
மேலும் இரண்டு பை பணம் ஈட்டியுள்ளேன்’
என்றான்.

23“அவனுக்கு எஜமான், ‘நீ செய்தது சரி.
நீ நம்பிக்கைக்கு உரிய நல்ல வேலைக்காரன்.
நான் கொடுத்த சிறிய பணத்தைக் கொண்டு
நன்கு செயல்பட்டாய். ஆகவே, மேலும் பெரிய
பொறுப்புக்களை உன்னிடம் ஒப்படைப்பேன்.
நீயும் என் மகிழ்ச்சியில் பங்கு கொள்!’ என்
றான். 24பின் ஒரு பை பணம் பெற்ற வேலைக்
காரன் தன் எஜமானிடம் வந்து, ‘எஜமானே,
நீர் மிகவும் கடினமானவர் என்பது எனக்குத்
தெரியும். விதைக்காமலேயே அறுவடை செய்
கிறவர் நீர். செடி நடாமலேயே தானியங்களை
சேர்க்கிறவர் நீர். 25எனவே, நான் பயம்கொண்
டேன். நீர் தந்த பணத்தை நிலத்தில் குழி
தோண்டிப் புதைத்தேன். இதோ நீங்கள் தந்த
ஒரு பை பணம்’ என்றான்.

26“எஜமான் அவனை நோக்கி, ‘நீ ஒரு
மோசமான சோம்பேறி வேலைக்காரன். நான்
விதைக்காமலேயே அறுவடை செய்வதாக
வும்; நடாமலேயே தானியங்களை சேகரிப்பதா
கவும் கூறுகிறாய். 27எனவே நீ என் பணத்தை
வங்கியில் செலுத்தியிருக்க வேண்டும். அப்
படிச் செய்திருந்தால், நான் திரும்பி வரும்
பொழுது, என் பணமும் எனக்குக் கிடைத்
திருக்கும். அதற்கான வட்டியும் கிடைத்திருக்
கும்’ என்றான்.

28ஆகவே, எஜமானன், தன் மற்ற வேலைக்
காரர்களைப் பார்த்து, ‘அந்த வேலைக்காரனி
டமிருந்து அந்த ஒரு பை பணத்தை வாங்கி
அதை பத்து பை பணம் வைத்திருப்பவனிடம்
கொடுங்கள். 29தான் பெற்றிருப்பதைப் பயன்
படுத்துகிற ஒவ்வொருவனும் மேலும் அதிகம்
பெறுவான். அவனுக்குத் தேவையானதை
விட மிக அதிகமாகக் கிடைக்கும். ஆனால்
தான் பெற்றிருப்பதைப் பயன்படுத்தாதவனிட
மிருந்து அனைத்தும் பறிக்கப்படும்.’ என்
றான். 30பிறகு அந்த எஜமானன், ‘பயனற்ற
அந்த வேலைக்காரனைத் தூக்கி வெளியே
இருளில் எறியுங்கள். அவவிடத்தில் மக்கள்
கூக்குரலிட்டு பற்களைப் கடித்துக்கொண்டு
வேதனையால் அழுது கொண்டிருப்பார்கள்’
என்றான்.

### மனிதகுமாரனின் நியாயத்தீர்ப்பு

31“மனித குமாரன் மீண்டும் வருவார். அவர்
மாட்சிமையுடன் தேவதூதர்கள்சூழ வருவார்.
அரசராகிய அவர் தன் மாட்சிமைமிக்க அரிய
ணையில் வீற்றிருப்பார். 32உலகின் எல்லா
மக்களும் மனித குமாரன் முன்னிலையில்
ஒன்று திரள்வார்கள். மனித குமாரன் அவர்
களை இரண்டு குழுக்களாகப் பிரிப்பார். ஓர்
ஆட்டிடையன் தன் ஆடுகளை வெள்ளாடுகள்,
செம்மறி ஆடுகள் என பிரிப்பதைப் போல
அவர் பிரிப்பார். 33மனித குமாரன் செம்மறி
யாடுகளை (நல்லவர்களை) வலது பக்கமும்,
வெள்ளாடுகளை (தீயவர்களை) இடது பக்க
மும் நிறுத்துவார். 34“பின் அரசனானவர் தன்
வலது பக்கமுள்ள நல்லவர்களிடம், ‘வாருங்
கள். என் பிதா உங்களுக்குப் பெரும் ஆசீர்
வாதத்தை வழங்கியுள்ளார். உங்களுக்கு வாக்
களிக்கப்பட்ட தேவனுடைய இராஜ்யத்தை
அடையுங்கள். உலகம் தோன்றியது முதலே
அந்த இராஜ்யம் உங்களுக்காகத் தயாராக
உள்ளது. 35நீங்கள் அந்த இராஜ்யத்தை அடை
யலாம். ஏனென்றால் நான் பசித்திருந்த
பொழுது நீங்கள் எனக்கு உணவளித்தீர்கள்.
எனக்குத் தாகமேற்பட்டபோது தண்ணீர்
கொடுத்தீர்கள். நான் வீட்டிலிருந்து தூரமாய்த்
தனித்திருந்பொழுது, என்னை உங்கள் வீட்
டிற்கு அழைத்தீர்கள். 36நான் ஆடையின்றி
இருந்தபோது, நீங்கள் உடுக்க ஆடை அளித்
தீர்கள். நான் நோயுற்றபோது, என்னைக்
கவனித்துக்கொண்டீர்கள். நான் சிறைப்பட்ட
போது நீங்கள் என்னைக் காண வந்தீர்கள்’
என்று சொன்னார்.

37“அதற்கு நல்லவர்கள் பதில் சொல்வார்
கள், ‘ஆண்டவரே, எப்பொழுது நீர் பசித்திருந்
ததைக் கண்டு நாங்கள் உமக்கு உணவளித்
தோம்? எப்பொழுது உங்களுக்குத் தாகமேற்
பட்டு நாங்கள் தண்ணீர் தந்தோம்? 38எப்பொ
ழுது நீர் வீட்டைவிட்டு வெளியேறி தனித்திருந்
ததைக் கண்டு நாங்கள் உம்மை எங்கள் வீட்

டிற் களைத்தோம்? எப்போது நீர் ஆடையின்றி
இருக்கக் கண்டு நாங்கள் உம்மை உடுத்துக்
கொள்ள ஏதேனும் கொடுத்தோம்? 39எப்
பொழுது நாங்கள் உம்மை நோயுற்றோ
சிறையிலோ இருக்க கண்டோம்?' என்பார்கள்.
40"பின்னர் மன்னவர், 'உங்களுக்கு உண்
மையைக் கூறுகிறேன். இங்குள்ள என் மக்
களில் மிகவும் சாதாரணமான யாருக்கேனும்
நீங்கள் ஒன்றைச் செய்திருந்தால் நீங்கள் அதை
எனக்கே செய்ததாகும்' என்று கூறினார்.
41"பின் அரசர் தன் இடது பக்கமுள்ள தீய
வர்களைப் பார்த்து, 'என்னைவிட்டு விலகுங்
கள். நீங்கள் தண்டிக்கப்படவேண்டுமென
தேவன் ஏற்கெனவே தீர்மானித்து விட்டார்.
என்றென்றும் எரிகிற அக்கினியில் விழுங்
கள். பிசாசுக்காகவும் அவனது தூதர்களுக்கா
கவும் ஆயத்தமாக்கப்பட்டது, அந்த அக்கினி.
42நீங்கள் அதிலே சேரவேண்டும். ஏனென்றால்,
நான் பசித்திருந்தபொழுது நீங்கள் புசிக்க எது
வும் தரவில்லை. நான் தாகமாயிருந்தபொ
ழுது, நீங்கள் குடிக்க எதுவும் கொடுக்க
வில்லை. 43நான் வீட்டிலிருந்து தூரமாய் தனித்
திருந்தபொழுது, நீங்கள் என்னை உங்கள்
வீட்டிற்களைக்கவில்லை. நான் ஆடையின்றி
இருந்தபொழுது, நீங்கள் உடுக்கத் துணி
யேதும் தரவில்லை. நான் நோயுற்றபொழுதும்
சிறையிலிருந்தபொழுதும் நீங்கள் என்னைக்
கவனித்து கொள்ள வில்லை' என்று கூறு
வார். 44'அதற்கு அத்தீயவர்கள், 'ஆண்டவரே
எப்பொழுது நீர் பசித்தும் தாகத்துடனுமிருந்
ததை நாங்கள் கண்டோம்? எப்பொழுது நீர்
வீட்டிலிருந்து தூரமாய்த் தனித்திருந்ததைக்
கண்டோம்? அல்லது எப்பொழுது உம்மை
ஆடையின்றியோ நோயுற்றோ அல்லது
சிறைப்பட்டோ கண்டோம்? எப்பொழுது
இவைகளையெல்லாம் கண்டு உமக்கு உதவா
மல் போனோம்?' என்பார்கள்.
45"அப்போது அரசர், 'நான் உண்மையைச்
சொல்லுகிறேன், இங்குள்ளவர்களில் சாதார
ணமான யாருக்கேனும் எதையேனும் செய்ய
நீங்கள் மறுத்தால், நீங்கள் எனக்கு மறுத்த
தற்கு சமமாகும்!' என்பார்.
46பிறகு அத்தீயவர்கள் விலகிச்செல்வார்
கள். அவர்களுக்கு நித்தியமான தண்டனை
கிடைக்கும். ஆனால் நல்லவர்களுக்கு நித்திய
ஜீவன் கிடைக்கும்."

### இயேசுவைக் கொல்ல திட்டமிடுதல்
(மாற்கு 14:1-2; லூக்கா 22:1-2;
யோவான் 11:45-53)

26 இவை அனைத்தையும் சொல்லி முடித்த
இயேசு, தம் சீஷர்களை நோக்கி,
2"நாளைக்கு மறுநாள் பஸ்கா பண்டிகை*
என்பதை அறிவீர்கள். அன்றையதினம் மனித
குமாரன் சிலுவையில் அறைந்து கொல்லப்
படுவதற்காக எதிரிகளிடம் ஒப்படைக்கப்
படுவார்" என்று கூறினார்.
3தலைமை ஆசாரியரும் வேதபாரகரும்
தலைமை ஆசாரியன் வீட்டில் கூடி ஆலோ
சனை நடத்தினார்கள். தலைமை ஆசாரி
யனின் பெயர் காய்பா. 4அக்கூட்டத்தில் இயே
சுவை கைது செய்யத்தக்க வழியைத் தேடி
னார்கள். பொய் கூறி இயேசுவைக் கைது
செய்து கொலைசெய்ய திட்டமிட்டார்கள். 5அக்
கூட்டத்தில் இருந்தவர்கள், "பஸ்காநாளில் நாம்
இயேசுவை கைதுசெய்ய முடியாது. மக்களுக்
குக் கோபமூட்டி அதனால் கலவரம் ஏற்பட
நமக்கு விருப்பமில்லை" என்று கூறினார்கள்.

### ஒரு பெண்ணின் சிறப்பு செயல்
(மாற்கு 14:3-9; யோவான் 12:1-8)

6இயேசு பெத்தானியாவில் இருந்தார்.
தொழு நோயாளியான சீமோன் வீட்டிற்குச்
சென்றிருந்தார். 7அப்பொழுது ஒரு பெண்
அவரிடம் வந்தாள். அவளிடம் ஒரு வெள்ளைக்
கல் ஜாடியில் நிறைய மிக விலையுயர்ந்த
வாசனைத் தைலம் இருந்தது. அப்பெண்
இயேசுவின் தலைமீது அவ்வாசனைத்
தைலத்தை அவர் உணவு அருந்திக்கொண்டி
ருந்த பொழுது ஊற்றினாள்.
8அப்பெண் இவ்வாறு செய்ததைக் கண்ட
இயேசுவின் சீஷர்கள் அவள்மீது எரிச்சல்
அடைந்தார்கள். "வாசனைத் தைலத்தை ஏன்
வீணாக்குகிறாய்? 9அதை நல்ல விலைக்கு
விற்றால் கிடைக்கும் பணத்தை ஏழைகளுக்
குக் கொடுக்கலாமே?" என்று கடிந்து கொண்
டார்கள்.
10ஆனால் நடந்ததை அறிந்த இயேசு, "இப்
பெண்ணை ஏன் தொந்தரவுபடுத்துகிறீர்கள்?
இவள் எனக்கு ஒரு நற்செயலைச் செய்திருக்
கிறாள். 11ஏழைகள் எப்பொழுதும் உங்களு
டன் இருப்பார்கள். ஆனால் நான் எப்பொழு
தும் உங்களுடன் இருக்க மாட்டேன். 12வாச
னைத் தைலத்தை என் தலைமீது ஊற்றி
இப்பெண் நான் மரித்தப்பின் அடக்கம் செய்
வதற்கான ஆயத்தத்தைச் செய்திருக்கிறாள்.
13நான் உண்மையைச் சொல்லுகிறேன்.
உலகில் உள்ள மக்கள் அனைவருக்கும் நற்
செய்தி சொல்லப்படும். நற்செய்தி சொல்லப்
படும் எல்லா இடங்களிலும் இப்பெண் செய்த
செயலும் சொல்லப்படும். அப்பொழுது மக்கள்
அவளை நினைவுகூர்வார்கள்" என்றார்.

### துரோகியான யூதாஸ்
(மாற்கு 14:10-11; லூக்கா 22:3-6)

14யூதா ஸ்காரியோத்து என்று பெயர்
கொண்ட இயேசுவின் சீஷர்களில் ஒருவன்
தலைமை ஆசாரியனிடம் பேசுவதற்குச் சென்
றான். 15யூதாஸ், "நான் இயேசுவை உங்களிடம்
ஒப்படைக்கிறேன். அதற்கு நீங்கள் எனக்கு

---

**பஸ்கா பண்டிகை** யூதர்களில் மிகமுக்கியமான புனித நாள். ஒவ்வொரு ஆண்டும் இந்நாளில் சிறப்பான உணவை உண்பர். இது, மோசே காலத்தில் இவர்கள் எகிப்திலிருந்து விடுதலை பெற்றதை நினைவுபடுத்தும்.

எவ்வளவு பணம் தருவீர்கள்?" என்று கேட்
டான். தலைமை ஆசாரியர்கள் யூதாஸ்க்கு
முப்பது வெள்ளி நாணயங்களைக் கொடுத்
தார்கள். 16அப்பொழுதிலிருந்து, யூதாஸ் ஆசா
ரியர்களிடம் இயேசுவை ஒப்படைக்கத்தக்க
நேரத்திற்குக் காத்திருந்தான்.

### பஸ்கா விருந்து

*(மாற்கு 14:21-22; லூக்கா 22:7-14, 21-23; யோவான் 13:21-30)*

17புளிப்பில்லாத அப்பம் உண்ணும் பண்
டிகையின்* முதல் நாளன்று, சீஷர்கள் இயேசு
விடம் வந்து, "பஸ்கா விருந்துண்ண உமக்
காக ஏற்பாடுகளைச் செய்யக் காத்திருக்கி
றோம். எங்கே உணவுக்கு ஏற்பாடு செய்ய
விரும்புகிறீர்?" என்று கேட்டார்கள்.
18அவர்களுக்கு மறுமொழியாக இயேசு,
"நகருக்குள் செல்லுங்கள். அங்கே எனக்கு
அறிமுகமான ஒருவரிடம் சென்று, போதகர்
கூறுவதாகக் கூறுங்கள், 'குறிக்கப்பட்ட
வேளை நெருங்கிவிட்டது. நான் என் சீஷர்களு
டன் உன் வீட்டில் பஸ்கா விருந்துண்பேன்'
என்று கூறுங்கள் என்று கூறினார். 19இயே
சுவின் சீஷர்கள் அவரது சொற்படியே அவர்
சொன்னவற்றைச் செய்தார்கள். அவர்கள்
பஸ்கா விருந்தை தயார் செய்தார்கள்.
20-21அன்று மாலை இயேசுவும் அவரது
பன்னிரண்டு சீஷர்களும் மேஜையில் அமர்ந்து
உணவருந்திக் கொண்டிருந்தார்கள். 21அப்
பொழுது இயேசு கூறினார், "உங்களுக்கு உண்
மையைச் சொல்லுகிறேன். உங்களில் ஒருவன்
விரைவில் என்னை எதிரிகளிடம் பிடித்துக்
கொடுப்பான்" என்றார்.
22அதைக் கேட்ட சீஷர்கள் மிகவும் கவலை
யடைந்தார்கள். ஒவ்வொரு சீஷரும் இயேசு
விடம், "ஆண்டவரே, நிச்சயமாய் அது
நானல்ல!" என்றனர்.
23அதற்கு இயேசு, "நான் கை கழுவும்
பாத்திரத்திலேயே கை கழுவுகின்றவனே
எனக்கு எதிராவான். 24மனித குமாரன் இறப்
பார். இது நடக்குமென வேதவாக்கியம் சொல்
கிறது. மனித குமாரனைக் கொல்வதற்குக்
காட்டிக் கொடுக்கிறவனுக்கு மிகுந்த தீமை
விளையும். அதைவிட அவன் பிறக்காம
லேயே இருந்திருக்கலாம்" என்றார்.
25பின் யூதாஸ் இயேசுவிடம், "போதகரே!
நான் நிச்சயம் உங்களுக்கு எதிராகத் திரும்ப
மாட்டேன்!" என்றான். (இயேசுவை எதிரிகளி
டம் காட்டிக்கொடுக்கப் போகிறவன் யூதாஸ்
தான்) அதற்கு இயேசு, "இல்லை. நீ தான்
என்னைக் காட்டிக் கொடுப்பாய்" என்றார்.

### கர்த்தரின் இரவு உணவு

*(மாற்கு 14:22-26; லூக்கா 22:15-20; 1 கொரிந்தியர் 11:23-25)*

26அவர்கள் உணவு அருந்திக்கொண்டிருந்த
பொழுது, இயேசு சிறிது அப்பத்தைக் கையி
லெடுத்தார். அந்த அப்பத்துக்காக தேவனுக்கு
நன்றி கூறி அதைப் பங்கிட்டார். அதைத் தம்
சீஷர்களுக்கு கொடுத்து, "இந்த அப்பத்தை
எடுத்து சாப்பிடுங்கள். இந்த அப்பமே என்
சரீரம்" என்று சொன்னார்.
27பின் இயேசு ஒரு கோப்பை திராட்சை
இரசத்தை எடுத்து, அதற்காகத் தேவனுக்கு
நன்றி கூறினார். அதைத் தமது சீஷர்களுக்குக்
கொடுத்த இயேசு, "நீங்கள் ஒவ்வொருவரும்
இதைக் குடியுங்கள். 28இந்த திராட்சை இரசம்
என் இரத்தம், என் இரத்தத்தின் மூலம்
(மரணம்) தேவனுக்கும் மக்களுக்குமான புதிய
உடன்படிக்கை துவங்குகிறது. இந்த இரத்தம்
பலருக்கும் தங்கள் பாவங்களைக் கழுவிக்
கொள்வதற்காக அளிக்கப்படுகிறது. 29நான்
உங்களுக்குச் சொல்லிக் கொள்கிறேன். அதா
வது, நாம் மீண்டும் என் பிதாவின் இராஜ்
யத்தில் ஒன்று சேர்ந்து திராட்சை இரசத்தைப்
புதியதாய் பானம் பண்ணும்வரைக்கும் நான்
இதை அருந்தமாட்டேன்" என்று கூறினார்.
30சீஷர்கள் அனைவரும் ஒரு பாடலைப்
பாடினார்கள். பின்பு அவர்கள் ஒலிவ மலைக்
குச் சென்றார்கள்.

### சீஷர்கள் பற்றிய முன்னறிவிப்பு

*(மாற்கு 14:27-31; லூக்கா 22:31-34; யோவான் 13:36-38)*

31இயேசு தம் சீஷர்களிடம், "இன்றிரவு
நீங்கள் உங்கள் விசுவாசத்தை என்னிமித்தம்
இழப்பீர்கள். வேதவாக்கியங்களில் இவ்வாறு
எழுதப்பட்டிருக்கிறது என்று கூறினார்.

'நான் மேய்ப்பனைக் கொல்லுவேன்
மந்தையின் ஆடுகள் கலைந்து ஓடும்'
சகரியா 13:7

32"ஆனால் நான் இறந்தபின், மீண்டும்
மரணத்திலிருந்து உயிர்த்தெழுவேன். பிறகு
கலிலேயாவிற்கு செல்வேன். நான் உங்களுக்கு
முன்னே அங்கிருப்பேன்" என்றார்.
33அதற்கு பேதுரு, "மற்ற எல்லாச் சீஷர்
களும் தங்கள் விசுவாசத்தை இழக்கலாம்.
ஆனால், ஒரு போதும் என் விசுவாசத்தை
இழக்கமாட்டேன்" என்று கூறினான்.
34அதற்கு இயேசு, "நான் உண்மையைச்
சொல்லுகிறேன். இன்றிரவு உனக்கு என்
னைத் தெரியாது எனக் கூறுவாய். அதுவும்
சேவல் கூவுவதற்குமுன் மூன்று முறை சொல்
வாய்" என்று கூறினார். 35ஆனால், பேதுரு,
"உம்மை எனக்குத் தெரியாது எனக்
கூறவேமாட்டேன். உம்முடன் சேர்ந்து நானும்
இறப்பேன்!" என்றான். மேலும் மற்ற சீஷர்கள்
அனைவரும் அவ்வாறே கூறினார்கள்.

**புளிப்பில்லாத அப்பம் உண்ணும் பண்டிகை** இது யூதர்களின் மிக முக்கிய வார விடுமுறைநாள். பஸ்காவிற்கு அடுத்தநாள் இது என்று பழைய ஏற்பாடு கூறும். ஆனால் இப்போது இரண்டு விடுமுறைகள் ஒன்றாகிவிட்டது.

### *இயேசுவின் பிரார்த்தனை*

*(மாற்கு 14:32-42; லூக்கா 22:39-46)*

36பின்பு இயேசு தம் சீஷர்களுடன் கெத்செ
மனே என்ற இடத்திற்குச் சென்றார். அவர்
தம் சீஷர்களிடம், "நான் அங்கே சென்று
பிரார்த்தனை செய்யும் வரைக்கும் இங்கேயே
அமர்ந்திருங்கள்" என்றார். 37பேதுருவையும்,
செபதேயுவின் இரு மகன்களையும் தம்முடன்
வரக் கூறினார். பின் இயேசு மிகுந்த கவலை
யும் வியாகுலமும் அடைந்தவராகக் காணப்
பட்டார். 38இயேசு பேதுருவிடமும், செபதேயு
வின் இரு மகன்களிடமும் "என் ஆத்துமா
துன்பத்தால் நிறைந்துள்ளது. என் இதயம்
துக்கத்தினால் உடைந்துள்ளது. என்னுடன்
இங்கேயே விழித்திருந்து காத்திருங்கள்" என்
றார்.

39பின் இயேசு அவர்களை விட்டு சிறிது
தூரம் சென்றார். பின்பு இயேசு நிலத்தில்
முகம்படிய விழுந்து பிரார்த்தித்தார், "என்
பிதாவே, முடியுமானால் இந்த வேதனைகள்
எனக்கு ஏற்படாமல் செய்யும். ஆனால், உமக்கு
விருப்பமானதையே செய்யும். நான் விரும்
புவதையல்ல" என்றார். 40பிறகு தம்
சீஷர்களிடம் இயேசு திரும்பி வந்தார். தம்
சீஷர்கள் தூக்கத்திலிருப்பதைக்கண்ட இயேசு,
பேதுருவிடம் கூறினார்,"ஒரு மணிநேரம் என்
னுடன் விழித்திருக்க உங்களால் முடிய
வில்லையா? 41சோதனைக்கு உட்படாதிருக்க
விழித்திருந்து பிரார்த்தனை செய்யுங்கள். உங்
கள் ஆவி சரியானதைச் செய்ய விரும்புகிறது.
ஆனால் உங்கள் சரீரமோ பலவீனமாக உள்
ளது" என்றார்.

42இயேசு இரண்டாவது முறையாக சென்று
பிரார்த்தனை செய்தார், "என் பிதாவே, வேத
னைமிகுந்த இக்காரியங்கள் எனக்கு ஏற்படா
திருக்குமாறு செய்யமுடியாதெனில், நீர் விரும்
பியபடியே நடக்க நான் வேண்டுகிறேன்"
என்றார். 43பின்பு இயேசு தம் சீஷர்களிடம்
திரும்பிச் சென்றார். மீண்டும் அவர்கள்
தூக்கத்திலிருப்பதைக் கண்டார். அவர்களது
கண்கள் மிகவும் களைப்புடன் காணப்பட்டன.
44ஆகவே மீண்டும் ஒருமுறை இயேசு அவர்
களை விட்டுச் சென்று பிரார்த்தனை செய்
தார். மூன்றாவது முறையும் அதையேக் கூறி
னார். 45பின் இயேசு தம் சீஷர்களிடம் திரும்பிச்
சென்று அவர்களிடம், "இன்னுமா நீங்கள்
தூங்கிக்கொண்டும் இளைப்பாறிக் கொண்டுமி
ருக்கிறீர்கள்? மனித குமாரனை பாவிகளிடம்
ஒப்படைக்கவேண்டிய நேரம் வந்துவிட்டது.
46எழுந்திருங்கள்! நாம் போக வேண்டும்.
இதோ வந்துவிட்டான் என்னை எதிரிகளிடம்
காட்டிக்கொடுக்கப்போகிறவன்" என்றார்.

### இயேசு கைது செய்யப்படுதல்

*(மாற்கு 14:43-50; லூக்கா 22:47-53;*
*யோவான் 18:3-12)*

47இப்படி பேசிக் கொண்டிருந்தபொழுதே
யூதாஸ் அங்கு வந்தான், யூதாஸ் பன்னிரண்டு
சீஷர்களில் ஒருவன். அவனுடன் பலரும் இருந்
தனர். அவர்கள் தலைமை ஆசாரியனாலும்
மூத்த தலைவர்களாலும் அனுப்பப்பட்டவர்
கள். யூதாஸுடன் இருந்தவர்கள் அரிவாள்
களையும் தடிகளையும் வைத்திருந்தனர்.
48யார் இயேசு என்பதை அவர்களுக்குக் காட்ட
யூதாஸ் ஒரு திட்டமிட்டிருந்தான். அவன் அவர்
களிடம், "நான் முத்தமிடுகிறவரே இயேசு.
அவரைக் கைது செய்யுங்கள்" என்றான்.
49அதன்படி யூதாஸ் இயேசுவிடம் சென்று,
"வணக்கம். போதகரே!" என்று கூறி இயே
சுவை முத்தமிட்டான்.

50இயேசு, "நண்பனே, நீ செய்ய வந்த காரி
யத்தை செய்" என்று கூறினார்.

பின் யூதாஸுடன் வந்த மனிதர்கள் இயேசு
வைப் பிடித்துக் கொண்டார்கள். அவரைக்
கைது செய்தார்கள். 51இது நடந்தபொழுது,
இயேசுவுடன் இருந்த சீஷர்களில் ஒருவன் தன்
அரிவாளை எடுத்தான். அச்சீஷன் தலைமை
ஆசாரியனின் வேலைக்காரனை அரிவாளால்
தாக்கி அவனது காதை வெட்டினான்.

52இயேசு அச்சீஷனைப் பார்த்து, "அரி
வாளை அதன் உறையில் போடு. அரிவாளை
எடுப்பவன் அரிவாளாலே சாவான். 53நான்
என் பிதாவைக் கேட்டால் அவர் எனக்கு
பன்னிரண்டு தேவதூதர்ப் படைகளும் அதற்கு
அதிகமாகவும் அனுப்புவார் என்பதை நிச்சய
மாக நீ அறிவாய். 54ஆனால் இது இப்படியே
வேதவாக்கியங்கள் கூறுகிறபடியே நடக்க
வேண்டும்" என்றார்.

55பின்னர் இயேசு தம்மைப் பிடிக்க வந்தவர்
கள் அனைவரையும் நோக்கி, "ஒரு குற்றவாளி
யைப் போல என்னைப் பிடிக்க அரிவாள்
தடிகளுடன் வந்திருக்கிறீர்கள். நான் ஒவ்
வொரு நாளும் ஆலயத்தில் போதனை செய்
தேன். ஆனால், என்னை அங்கே கைது செய்ய
வில்லை. 56தீர்க்கதரிசிகள் எழுதி வைத்துள்ள
படியே இவை அனைத்தும் நடந்துள்ளன"
என்று கூறினார். பின்பு இயேசுவின் எல்லா
சீஷர்களும் அவரைத் தனியேவிட்டு ஓடிப்
போனார்கள்.

### யூதத்தலைவர்கள் முன் இயேசு

*(மாற்கு 14:53-65; லூக்கா 22:54-55, 63-71;*
*யோவான் 18:13-14, 19-24)*

57இயேசுவைக் கைது செய்தவர்கள் அவ
ரை தலைமை ஆசாரியனான காய்பா வீட்
டிற்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு வேத
பாரகர்களும் மற்ற யூதத் தலைவர்களும் கூடி
யிருந்தார்கள். 58இயேசுவைத் தொடர்ந்து வந்த
பேதுரு அவர் அருகில் செல்லவில்லை.
பேதுரு இயேசுவைத் தொடர்ந்து தலைமை
ஆசாரியனின் வீட்டு முற்றத்தை அடைந்தான்.
இயேசுவுக்கு என்ன நடக்கும் என்பதைக்
காண பேதுரு உள்ளே நுழைந்து காவல்காரர்
களுடன் அமர்ந்தான்.

59தலைமை ஆசாரியனும் யூத ஆலோச
னைச் சங்கமும் இயேசுவைக் கொல்ல

அவரிடம் ஏதேனும் குற்றம் காண முயற்சித்
தார்கள். இயேசு தவறு செய்தார் என சொல்
லக்கூடிய மக்களைத் தேட முயற்சித்தார்கள்.
60பலரும் வந்து இயேசுவைப் பற்றிய பொய்
யான செய்திகளைக் கூறினர். ஆனாலும்
இயேசுவைக் கொல்லத் தக்க காரணம் எதை
யும் யூத ஆலோசனைச் சங்கம் காணவில்லை.
பிறகு இருவர் வந்து, 61“நான் தேவனின்
ஆலயத்தை இடித்து விட்டு மூன்றே நாட்களில்
மீண்டும் அதைக் கட்டுவேன் என்று இவன்
(இயேசு) கூறினான்” என்றார்கள்.

62பின் தலைமை ஆசாரியன் எழுந்திருந்து
இயேசுவைப் பார்த்து, “இவர்கள் உமக்கு
எதிராக ஆதாரங்களைக் கொடுக்கிறார்கள்,
இவர்கள், உம்மேல் சுமத்திய குற்றச்சாட்டு
களுக்கு உம்மிடம் ஏதும் பதில் உள்ளதா?
இவர்கள் கூறுவது உண்மையா?” என்று
கேட்டார். 63ஆனால், இயேசு ஏதும் பதில்
கூறவில்லை.

மீண்டும் தலைமை ஆசாரியன் இயேசு
விடம், ‘நான் உன்னை உறுதி மொழிக்கு
உட்படுத்துகிறேன். ஜீவனுள்ள தேவனின்
வல்லமையின் பெயரால் ஆணையிடுகிறேன்.
உண்மையைச் சொல். நீயா தேவகுமாரனா
கிய கிறிஸ்து?” என்று கேட்டான்.

64அதற்கு இயேசு, “ஆம், நான் தான்,
ஆனால், நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.
எதிர்காலத்தில் தேவனுடைய வலது பக்கத்
தில் மனித குமாரன் அமர்ந்திருப்பதைக் காண்
பீர்கள். மேலும் வானத்து மேகங்களின்மீது
மனித குமாரன் வருவதைக் காண்பீர்கள்”
என்று விடையளித்தார்.

65இதைக்கேட்ட தலைமை ஆசாரியன் மிகக்
கோபமடைந்தான். தன் ஆடைகளைக் கிழித்
துக்கொண்டு, “இவன் தேவனுக்கு எதிரான
வைகளைப் பேசுகிறான். வேறு சாட்சியம்
எதுவும் தேவையில்லை. தேவனுக்கு எதிராக
இவன் கூறியவற்றை நீங்கள் எல்லோரும்
கேட்டீர்கள். 66நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?”
என்று சொன்னான்.

யூதர்கள் அனைவரும், “இவன் குற்றவாளி.
இவன் (இறக்க) மரிக்க வேண்டும்” என்றார்
கள்.

67பின் அங்கிருந்தவர்கள் இயேசுவின் முகத்
தில் காறி உமிழ்ந்தார்கள். அவரை தங்கள்
கையால் அடித்தார்கள். மற்றவர்கள் அவரது
கன்னத்தில் அறைந்தார்கள். 68அவர்கள்
இயேசுவைப் பார்த்து, “நீ தீர்க்கதரிசி என்
பதைக் காட்டு. கிறிஸ்துவே, உன்னை அடித்
தது யார் என்பதைக் கூறு” என்று கேட்டார்
கள்.

### பேதுருவின் மறுதலிப்பு

(மாற்கு 14:66-72; லூக்கா 22:56-62;
யோவான் 18:15-18, 25-27)

69அப்பொழுது, முற்றத்தில் அமர்ந்திருந்த
பேதுருவிடம் ஒரு வேலைக்காரப் பெண்
வந்து, “கலிலேயாக்காரனான அம்மனிதன்
இயேசுவுடன் நீயும் இருந்தாயல்லவா?” எனக்
கேட்டாள்.

70ஆனால் பேதுரு, தான் ஒருபோதும்
இயேசுவுடன் இருந்ததில்லை என அங்கிருந்த
வர்களிடம் கூறினான். பேதுரு “நீ என்ன
பேசுகிறாய் என்றே எனக்குத் தெரிய
வில்லை” என்று கூறினான்.

71பின்பு, முற்றத்தை விட்டு சென்ற பேது
ருவை, வாயிற்கதவருகில் வேறொரு பெண்
பார்த்தாள். அங்கிருந்தவர்களிடம் அப்பெண்,
“நசரேயனாகிய இயேசுவுடன் இருந்தது இவன்
தான்” என்று சொன்னாள்.

72மீண்டும் பேதுரு தான் ஒருபோதும்
இயேசுவுடன் இருந்ததில்லை எனக் கூறினான்.
“தேவனின் மீது ஆணையாக இம்மனிதன்
இயேசுவை எனக்குத் தெரியாது” என பேதுரு
கூறினான்.

73சிறிது நேரம் கழித்து அங்கு நின்றிருந்த
சிலர் பேதுருவிடம் சென்று, “இயேசுவின்
சீஷர்களில் நீயும் ஒருவன் என்பது எங்களுக்
குத் தெரியும். நீ பேசுவதிலிருந்து எங்களுக்கு
அது தெரிகிறது” என்று கூறினார்கள்.

74பின் சாபமிடத் துவங்கிய பேதுரு,
“தேவன் மேல் ஆணையாக எனக்கு இயேசு
வைத் தெரியாது” என்றான். பேதுரு இதைக்
கூறிய பின் சேவல் கூவியது. 75அப்போது
“சேவல் கூவுவதற்குமுன் என்னை உனக்குத்
தெரியாது என நீ மூன்று முறைக் கூறுவாய்”
என இயேசு கூறியதைப் பேதுரு ஞாபகப்
படுத்திக் கொண்டான். பின்பு வெளியில்
சென்ற பேதுரு மிகுந்த மனக் கசப்புடன்
அழுதான்.

### பிலாத்துவின் முன் இயேசு

(மாற்கு 15:1; லூக்கா 23:1-2;
யோவான் 18:28-32)

27 தலைமை ஆசாரியரும் மூத்த யூதத்
தலைவர்களும் மறுநாள் அதிகாலை
யில் இயேசுவைக் கொல்லத் தீர்மானித்தார்
கள். 2அவர்கள் இயேசுவைச் சங்கிலியில்
பிணைத்து, ஆளுநர் பிலாத்துவிடம் அழைத்
துச் சென்றார்கள். அவர்கள் பிலாத்துவிடம்
இயேசுவை ஒப்படைத்தார்கள்.

### யூதாஸின் தற்கொலை

(அப்போஸ்தலர் 1:18-19)

3இயேசுவை எதிரிகளிடம் காட்டிக்கொடுத்த
யூதாஸ் அவர்கள் இயேசுவைக் கொல்லத்
தீர்மானித்ததைக் கண்டபோது தன் செயலுக்
காக மிகவும் வருந்தினான். ஆகவே தனக்குக்
கிடைத்த முப்பது வெள்ளிக் காசுகளையும்
தலைமை ஆசாரியர்களிடமும் மூத்தத்தலை
வர்களிடமும் எடுத்துச் சென்றான். 4யூதாஸ்,
“நான் பாவம் செய்துவிட்டேன். குற்றமற்
றவரான இயேசுவை உங்களிடம் கொலை
செய்யக் கொடுத்துவிட்டேன்” என்றான்.

அதற்கு யூதத் தலைவர்கள், “அதைப்பற்றி
எங்களுக்குக் கவலையில்லை. அது உன்னு

டைய பிரச்சனை. எங்களுடையதல்ல” என்
றார்கள்.
5ஆகவே யூதாஸ் பணத்தை தேவாலயத்தில்
வீசியெறிந்தான். பின்னர் யூதாஸ் அவ்விடத்
தைவிட்டுச் சென்று தூக்கு போட்டுக் கொண்
டான்.
6வெள்ளி நாணயங்களைப் பொறுக்கி
எடுத்த தலைமை ஆசாரியர்கள், “இப்பணத்
தைத் தேவாலயக் கருவூலத்தில் வைத்திருக்க
நம் சட்டம் அனுமதிக்காது. ஏனென்றால், இப்
பணம் ஒருவனது மரணத்திற்காகக் கொடுக்கப்
பட்டது” என்று சொல்லி, 7அப்பணத்தைக்
கொண்டு குயவனின் வயல் என்றழைக்கப்
பட்ட நிலத்தை அவர்கள் வாங்கத் தீர்மானித்
தார்கள். அந்த நிலம் எருசலேமைக் காண
வரும் பயணிகள் இறந்தால் அவர்களை அடக்
கம் செய்யப் பயன்ப்படுத்தபட்டது. 8எனவே
தான் அந்த நிலம் இன்னமும் “இரத்த நிலம்”
என அழைக்கப்படுகிறது. 9தீர்க்கதரிசி எரே
மியா சொன்னபடி இது நடந்தது.

“அவர்கள் முப்பது வெள்ளி நாணயங்
களை எடுத்துக் கொண்டார்கள். அதுவே
இஸ்ரவேலர்கள் அவருக்கு (இயேசுவுக்கு) நிர்
ணயித்த விலை. 10கர்த்தர் எனக்கு ஆணை
யிட்டது போல, அந்த முப்பது வெள்ளி
நாணயங்களை குயவனின் வயலை வாங்கப்
பயன்படுத்தினார்கள்.”*

### பிலாத்துவின் விசாரணை

(மாற்கு 15:2-5; லூக்கா 23:3-5;
யோவான் 18:33-38)

11இயேசு ஆளுநரான பிலாத்துவின் முன்
னால் நின்றார். பிலாத்து இயேசுவிடம் பல
கேள்விகள் கேட்டான். “யூதர்களின் இராஜன்
நீர்தானா?” என்று கேட்டான்.
அதற்கு இயேசு, “ஆம், நானேதான்” என்
றார்.
12தலைமை ஆசாரியர்களும், மூத்த யூதத்
தலைவர்களும் இயேசுவைக் குற்றம் சுமத்திய
பொழுது, அவர் எதுவும் கூறவில்லை.
13ஆகவே பிலாத்து இயேசுவிடம், “இவர்கள்
உன்மீது சுமத்திய இத்தனை குற்றச்சாட்டு
களையும் கேட்டாயல்லவா? நீ ஏன் பதில்
சொல்லக் கூடாது?”என்றான்.
14ஆனால், இயேசு பிலாத்துவிற்கு பதில்
ஏதும் கூறவில்லை. அதைக்கண்டு பிலாத்து
மிகவும் வியப்படைந்தான்.

### இயேசுவை விடுவிக்க பிலாத்துவின் முயற்சி

(மாற்கு 15:6-15; லூக்கா 23:13-25;
யோவான் 18:39-19:16)

15ஒவ்வொரு வருடமும் பஸ்கா பண்டிகை
யின்போது சிறையிலிருந்து ஒருவரை ஆளுநர்
விடுவிப்பது வழக்கம். மக்கள் விரும்பும் ஒரு
வரை விடுவிப்பது வழக்கம். 16அப்பொழுது
துன்மார்க்கனான ஒருவன் சிறையிலிருந்
தான். அவன் பெயர் பரபாஸ். 17பிலாத்துவின்
வீட்டிற்கு முன் மக்கள் கூடினார்கள். பிலாத்து
மக்களைப் பார்த்து, “உங்களுக்காக ஒரு
வனை விடுதலை செய்கிறேன். நீங்கள் யாரை
விடுவிக்க விரும்புகிறீர்கள். பரபாஸையா
அல்லது கிறிஸ்து எனப்படும் இயேசு
வையா?” என்றான். 18பொறாமை கொண்டே
மக்கள் தன்னிடம் இயேசுவை ஒப்படைத்துள்
ளார்கள் என்பதை பிலாத்து அறிந்தான்.
19நீதி வழங்கும் இடத்தில் அமர்ந்து பிலாத்து
இவற்றைக் கூறினான். அப்பொழுது அவனது
மனைவி ஒரு செய்தி அனுப்பினாள். அதில்,
“இயேசுவை எதுவும் செய்யாதீர்கள். அவர்
குற்றமற்றவர். இன்று நான் அவரைப்பற்றி
ஒரு கனவு கண்டேன். அது என்னை மிகவும்
கலங்க வைத்தது” என்றிருந்தது.
20ஆனால், தலைமை ஆசாரியர்களும் மூத்த
யூதத் தலைவர்களும் பரபாஸை விடுதலை
செய்யவும் இயேசுவைக் கொல்லவேண்டுமெ
னவும் கோரிக்கை வைக்க மக்களைத் தூண்டி
னார்கள்.
21பிலாத்து, “என்னிடம் பரபாசும் இயேசு
வும் உள்ளார்கள். யாரை விடுவிக்க நீங்கள்
விரும்புகிறீர்கள்?” என்று கேட்டான்.
அதற்கு மக்கள் “பரபாஸ்” என்று சொன்
னார்கள்.
22“அப்படியானால் கிறிஸ்து எனப்படும்
இயேசுவை என்ன செய்வது?” என்று
பிலாத்து கேட்டான்.
“அவரை சிலுவையில் அறைந்து கொல்
லுங்கள்” என்று மக்கள் சொன்னார்கள்.
23“அவரை ஏன் கொல்ல விரும்புகிறீர்கள்?
அவர் என்ன தவறு செய்தார்?” என்று
பிலாத்து மக்களைக் கேட்டான்.
ஆனால் மக்கள் அனைவரும் “அவரை
சிலுவையில் அறைந்து கொல்லுங்கள்”
என்று சத்தமாய் கூக்குரலிட்டுச் சொன்னார்
கள். 24மக்களை மாற்றத் தன்னால் ஏதும் செய்ய
முடியாது என்பதை பிலாத்து கண்டான்.
மேலும் மக்கள் பொறுமையிழப்பதையும்
பிலாத்து கவனித்தான். ஆகவே தண்ணீரை
எடுத்து மக்கள் எல்லோரும் காணுமாறு தன்
கைகளைக் கழுவினான். பின்பு, “இவரது
மரணத்திற்கு நான் பொறுப்பல்ல. நீங்களே
அதைச் செய்கிறீர்கள்” எனறு பிலாத்து கூறி
னான்.
25“அவரது மரணத்திற்கு நாங்களே
பொறுப்பு. அவரது மரணத்திற்கான தண்ட
னையை எங்களுக்கும் எங்கள் குழந்தைகளுக்
குமாக நாங்கள் ஒப்புக்கொள்ளுகிறோம்”
என்று மக்கள் அனைவரும் கூறினார்கள்.
26பின் பிலாத்து பரபாஸை விடுதலை செய்
தான். இயேசுவைச் சாட்டையால் அடிக்கு
மாறு பிலாத்து சில வீரர்களிடம் கூறினான்.
பிறகு சிலுவையில் அறைந்து கொல்வதற்கு
வீரர்களிடம் இயேசுவை ஒப்படைத்தான்.

---

**‘கர்த்தர் ... பயன்படுத்தினார்கள்’**
சகரியா 11:12-13.

### இயேசுவை கேலி செய்தல்

*(மாற்கு 15:16-20; யோவான் 19:2-3)*

27பின்னர் பிலாத்துவின் வீரர்கள் இயே
சுவை பிலாத்துவின் அரண்மனைக்குள்
கொண்டு வந்தார்கள். 28எல்லா வீரர்களும்
இயேசுவைச் சுற்றிக்கொண்டு அவரது ஆடை
களைக் கழற்றி ஒரு சிவப்பு மேலங்கியை
அணிவித்தார்கள். 29வீரர்கள் முட்களால் ஒரு
கிரீடம் செய்து அதை இயேசுவின் தலையில்
சூட்டினார்கள். அவரது வலது கையில் ஒரு
தடியைக் கொடுத்தார்கள். பின்னர் அவ்வீரர்
கள் இயேசுவின் முன்னால் குனிந்து கேலி
செய்தார்கள். "வணக்கம் யூதர்களின் அரசரே"
என்றார்கள். 30அவர் முகத்தில் காறி உமிழ்ந்
தார்கள். பின்னர் அவரது கையிலிருந்த
தடியை வாங்கி அவரது தலையில் பலமுறை
அடித்தார்கள். 31இயேசுவை அவர்கள் கேலி
செய்து முடித்ததும், சிவப்பு மேலங்கியை நீக்
கியபின் அவரது ஆடைகளை அணிவித்தார்
கள். பின்னர் சிலுவையில் அறைந்து கொல்
வதற்காக இயேசுவை வீரர்கள் அழைத்துச்
சென்றார்கள்.

### இயேசு சிலுவையில் கொல்லப்படுதல்

*(மாற்கு 15:21-32; லூக்கா 23:26-43;*
*யோவான் 19:17-27)*

32போர்வீரர்கள் இயேசுவுடன் நகரை விட்டு
வெளியில் சென்று கொண்டிருந்தார்கள்.
சிரேனே என்னுமிடத்திலிருந்து வந்த சீமோன்
என்பவனை இயேசுவுக்காக சிலுவையைச்
சுமந்துவர போர்வீரர்கள் கட்டாயப்படுத்
தினார்கள். 33மண்டை ஓட்டின் இடம் என்னும்
பொருள்படும் கொல்கொதா என்று அழைக்
கப்படுமிடத்திற்கு அவர்கள் வந்து சேர்ந்தார்
கள். 34அங்கு வலியை மறக்கச்செய்யும் மருந்து
கலந்த பானத்தை இயேசுவுக்குக் கொடுத்தார்
கள். அதைச் சுவைத்த இயேசு அதைக் குடிக்க
மறுத்தார். 35போர்வீரர்கள் இயேசுவை சிலு
வையில் ஆணிகளை வைத்து அறைந்தார்கள்.
யார் இயேசுவின் ஆடைகளைப் பெறுவது
என்பதை சீட்டுப்போட்டு முடிவு செய்தார்கள்.
36போர்வீரர்கள் அங்கு உட்கார்ந்து இயே
சுவை கவனித்துக் கொண்டிருந்தார்கள்.
37இயேசுவின் தலைக்கு மேல் ஒரு அறிவிப்பு
பலகையை அவர்கள் அறைந்தார்கள். அதில்
"இவர் இயேசு, யூதர்களின் அரசன்" என்று
எழுதியிருந்தது. 38இயேசுவின் வலப்பக்கமும்
இடப்பக்கமும் இரு கொள்ளைக்காரர்கள் சிலு
வையில் அறையப்பட்டார்கள். 39மக்கள்
இயேசுவின் அருகில் நடந்துச்சென்று அவ
ரைத் திட்டினார்கள். தலையைக் குலுக்கியபடி
மக்கள் கூறினார்கள், 40"தேவாலயத்தை
இடித்து மூன்று நாட்களில் மீண்டும் கட்ட
முடியும் எனக் கூறினாயே! உன்னை நீயே
காப்பாற்றிக்கொள்! நீ தேவனின் குமாரன்
என்பது உண்மையானால், சிலுவையி
லிருந்து இறங்கி வா!" என்றனர்.

41தலைமை ஆசாரியர், வேதபாரகர் மற்றும்
மூத்த யூதத் தலைவர்கள் ஆகிய அனைவரும்
அங்கிருந்தனர். மக்கள் செய்தது போலவே
அவர்களும் இயேசுவைக் கேலி செய்தார்கள்.
42அவர்கள், "இவன் மற்றவர்களைக் காப்பாற்
றினான்! ஆனால் தன்னையே காப்பாற்றிக்
கொள்ள முடியவில்லை! இவனை (இஸ்ரவே
லின்) யூதர்களின் அரசன் என்று மக்கள்
கூறுகிறார்கள். இவன் அரசனானால் இப்பொ
ழுது சிலுவையிலிருந்து கீழே இறங்கி வர
வேண்டும். அப்பொழுது நாங்கள் இவனை
நம்புவோம். 43இவன் தேவனை நம்பினான்.
எனவே தேவன் விரும்பினால் இவனைக்
காப்பாற்றட்டும். 'நான் தேவ குமாரன் என
இவன் கூறினான்" என்றார்கள். 44அவ்வாறா
கவே, இயேசுவின் இரு பக்கமும் சிலுவை
யில் அறையப்பட்ட கொள்ளைக்காரர்களும்
அவரை நிந்தனை செய்தனர்.

### இயேசுவின் மரணம்

*(மாற்கு 15:33-41; லூக்கா 23:44-49;*
*யோவான் 19:28-30)*

45நடுப்பகலில் நாடு முழுவதும் இருண்டது.
இருள் மூன்று மணிநேரம் தொடர்ந்தது.
46சுமார் மூன்று மணியளவில் இயேசு உரத்த
குரலில்" ஏலி ஏலி லாமா சபக்தானி" என்று
கதறினார். இதன் பொருள், "என் தேவனே,
என் தேவனே, ஏன் என்னைக் கைவிட்டீர்?"*
என்பதாகும்.

47அங்கு நின்றிருந்த சிலர் இதைக் கேட்டார்
கள். அவர்கள், "அவன் எலியாவை அழைக்
கிறான்" என்றார்கள்.

48உடனே அவர்களில் ஒருவன் ஓடிப்போய்
கடல் பஞ்சைக் கொண்டுவந்தான். அதைப்
புளிப்பான பானத்தில் தோய்த்து குச்சியில்
கட்டி இயேசுவுக்குக் குடிக்கக் கொடுத்தான்.
49ஆனால் மற்றவர்கள், "அவனைத் தொந்தரவு
செய்யாதே. எலியா அவனைக் காப்பாற்ற
வருவானா என்பதைக் காண வேண்டும்"
என்றார்கள்.

50மீண்டும் இயேசு ஒரு முறை சத்தமிட்டுக்
கதறினார். பின்னர், இயேசுவின் ஆவி பிரிந்
தது.

51இயேசு இறந்தபொழுது, தேவாலயத்
திலிருந்த திரைச்சீலை இரண்டாகக் கிழிந்
தது. கிழிசல் திரைச்சீலையின் மேலிருந்துத்
துவங்கி கீழே வரைக்கும் வந்தது. மேலும்,
நிலம் நடுங்கியது. பாறைகள் நொறுங்கின.
52கல்லறைகள் அனைத்தும் திறந்தன. தேவ
னுடைய மனிதர்கள் பலர் மீண்டும் மரணத்
திலிருந்து உயிர்த்தெழுந்தார்கள். 53கல்லறையி
லிருந்து எழுந்த அவர்கள் இயேசு மரணத்திலி
ருந்து உயிர்த்தெழுந்தபின்பு பரிசுத்த நகருக்
குச் (எருசலேமுக்கு) சென்றதை மக்கள் பல
ரும் கண்டார்கள்.

---

**'என் … விட்டீர்'** சங்கீதம் 22:1

[54]இயேசுவுக்குக் காவலிருந்த படைத் தலை
வனும் போர்வீரர்களும் நில நடுக்கம் ஏற்பட்ட
தையும் நடந்த நிகழ்ச்சிகளையும் கண்டார்கள்.
மிகவும் பயந்துபோன அவர்கள், "இவர் உண்
மையிலேயே தேவகுமாரன்தான்" என்றார்
கள்.

[55]பெண்கள் பலரும் சிலுவைக்குத் தொலை
வில் நின்று கவனித்துக் கொண்டிருந்தார்கள்.
அவர்கள் கலிலேயாவிலிருந்து இயேசுவைத்
தொடர்ந்து வந்த பெண்கள். [56]மகதலேனா
மரியாள், யாக்கோபு மற்றும் யோசேப்பு ஆகி
யோரின் தாய் மரியாள் மற்றும் யாக்கோபு,
யோவான் ஆகியோரின் தாயும் இருந்தார்கள்.

### இயேசு அடக்கம் செய்யப்படுதல்

(மாற்கு 15:42-47; லூக்கா 23:50-56;
யோவான் 19:38-42)

[57]அன்று மாலை அரிமத்தியாவிலிருந்து
இயேசுவின் சீஷனும், செல்வந்தனும், அரிமத்
தியா ஊரானுமாகிய யோசேப்பு எருசலே
முக்கு வந்தான். [58]யோசேப்பு பிலாத்துவிடம்
சென்று இயேசுவின் சரீரத்தைக் கேட்டான்.
பிலாத்து இயேசுவின் சரீரத்தை யோசேப்
பிடம் கொடுக்குமாறு வீரர்களுக்குக் கட்டளை
யிட்டான். [59]பின்பு யோசேப்பு இயேசுவின்
சரீரத்தை பெற்றுக்கொண்டு அதைப் புதிய
மென்மையானத் துணியில் சுற்றினான்.
[60]இயேசுவின் சரீரத்தை ஒரு பாறையில்
தோண்டிய புதிய கல்லறையில் யோசேப்பு
அடக்கம் செய்தான். ஒரு பெரிய பாறாங்கல்
லைக்கொண்டு கல்லறை வாயிலை மூடி
னான். இவற்றைச் செய்தபின் யோசேப்பு
அங்கிருந்து புறப்பட்டுச் சென்றான். [61]மகதலே
னா மரியாளும், மரியாள் என்னும் பெயர்
கொண்ட மற்றொரு பெண்ணும் கல்லறைக்கு
அருகில் அமர்ந்திருந்தனர்.

### இயேசுவின் கல்லறை காவல் காக்கப்படுதல்

[62]ஆயத்தநாளுக்கு* மறுநாள், தலைமை
ஆசாரியர்களும் பரிசேயர்களும் பிலாத்து
விடம் சென்று, [63]"ஐயா, தான் உயிருடன்
இருந்தபொழுது அப்பொய்யன், "நான் மூன்று
நாட்களுக்குப்பின் மரணத்திலிருந்து உயிர்த்
தெழுவேன்" என்று கூறினான். [64]ஆகவே
மூன்று நாட்களாகிற வரையிலும் கல்ல
றையை நன்கு காவல் காக்க உத்தரவிடுங்கள்.
அவனது சீஷர்கள் வந்து சரீரத்தை திருட
முயற்சிக்கலாம். பின், மக்களிடம் சென்று
அவன் மரணத்திலிருந்து உயிர்த்தெழுந்து
விட்டதாகக் கூறக்கூடும். அவனைப்பற்றி
அவர்கள் முன்னர் கூறிய பொய்களைக் காட்டி
லும் இது அதிக மோசமானதாக இருக்கும்"
என்றார்கள்.

[65]அதற்கு பிலாத்து, "சில போர் வீரர்களை
அழைத்துச் சென்று உங்களால் முடிந்த அளவு
கல்லறையைக் காவல் செய்யுங்கள்" என்று
கூறினான். [66]ஆகவே அவர்கள் அனைவரும்
சென்று சரீரத்தை யாரும் திருடாதவாறு பாது
காத்தார்கள். கல்லறையை மூடிய கல்லுக்கு
முத்திரை வைத்தும், போர் வீரர்களைக் காவ
லுக்கு வைத்தும் இதைச் செய்தார்கள்.

### இயேசுவின் உயிர்த்தெழுதல்

(மாற்கு 16:1-8; லூக்கா 24:1-12;
யோவான் 20:1-10)

28 ஓய்வு நாளுக்குப் பிறகு மறுநாள்
வாரத்தின் முதல் நாள் அன்று அதி
காலை மகதலேனா மரியாளும், மரியாள்
எனப் பெயர்கொண்ட மற்ற பெண்ணும்
இயேசுவின் கல்லறையைக் காணச் சென்
றார்கள்.

[2]அப்பொழுது மிகத் தீவிரமான பூமி
அதிர்ச்சி உண்டானது. வானத்திலிருந்து
இறங்கி வந்த ஒரு தூதன் கல்லறையை மூடி
யிருந்த பாறாங்கல்லை உருட்டிக் கீழே தள்ளி
னான். பின் அத்தூதன் அப்பாறாங்கல்லின்
மீது அமர்ந்தான். [3]மின்னலைப்போல் பிரகா
சித்த அந்த தூதனின் ஆடைகள் பனிபோல
வெண்மையாயிருந்தன. [4]கல்லறைக்குக் காவ
லிருந்த போர்வீரர்கள் தூதனைக் கண்டு மிக
வும் பயந்துபோனார்கள். பயத்தினால் நடுங்
கிய போர்வீரர்கள் பிணத்தைப்போல பேச்சு
மூச்சற்றவர்களானார்கள்.

[5]தூதன் பெண்களைப் பார்த்து, "பயபடாதீர்
கள். சிலுவையில் அறைந்து கொல்லப்பட்ட
இயேசுவை நீங்கள் தேடுகின்றீர்கள் என்பதை
நானறிவேன். [6]ஆனால் இயேசு இங்கே இல்லை.
அவர் சொன்னது போலவே மரணத்
திலிருந்து உயிர்த்தெழுந்துவிட்டார். அவரது
சரீரம் வைக்கப்பட்டிருந்த இடத்தைப் பாருங்
கள். [7]உடனே அவரது சீஷர்களிடம் விரைந்துச்
சென்று சொல்லுங்கள். 'இயேசு மரணத்திலி
ருந்து உயிர்த்தெழுந்துவிட்டார். அவர் கலிலே
யாவிற்குச் சென்று கொண்டிருக்கிறார்.*
அவர் உங்களுக்கு முன்னரே அங்கிருப்பார்.
அங்கே நீங்கள் இயேசுவைக் காணலாம்.
இதோ நான் உங்களுக்குச் சொல்லிவிட்டேன்"
என்று கூறினான்.

[8]ஆகவே, அப்பெண்கள் விரைந்து கல்ல
றையை விட்டுப் புறப்பட்டார்கள். அவர்கள்
பயந்துபோனார்கள். அதே சமயம் மகிழ்ச்சிய
டைந்தார்கள். நடந்ததை சீஷர்களிடம் சொல்ல
அவர்கள் ஓடினார்கள். [9]அப்பொழுது இயேசு
அவர்களின் முன்பு வந்து நின்றார். இயேசு
அவர்களைப் பார்த்து "வாழ்க" என்றார்.
இயேசுவின் அருகில் சென்ற பெண்கள் அவ
ரது கால்களைத் தொட்டு வணங்கினார்கள்.
[10]பின்னர் இயேசு அப்பெண்களிடம், "பயப்

---

**ஆயத்தநாள்** வெள்ளிக்கிழமை வார ஓய்வுத்திரு நாளுக்கு முந்தின நாள்.

**'அவர் ... கொண்டிருக்கிறார்'** மத். 26:32

படாதீர்கள். என் சகோதரர்களிடம் (சீஷர்
களிடம்) சென்று கலிலேயாவிற்கு வரச்சொல்
லுங்கள். அவர்கள் என்னை அங்கே காண்
பார்கள்" என்றார்.

### யூதத் தலைவர்களிடம் புகார்

11பெண்கள் சீஷர்களைத் தேடிப் போனார்
கள். அதே சமயம், கல்லறைக்குக் காவலிருந்த
போர் வீரர்களில் சிலர் நகருக்குள் சென்
றார்கள். நடந்தவை அனைத்தையும் தலைமை
ஆசாரியர்களிடம் சொல்வதற்காக அவர்கள்
சென்றார்கள். 12தலைமை ஆசாரியர்கள் மூத்த
யூதத் தலைவர்களுடன் சேர்ந்து திட்டமிட்டு,
அதன்படி ஒரு பொய் கூறுவதற்காக போர்
வீரர்களுக்கு பெரும்பணம் தந்தார்கள். 13அவர்
கள் போர்வீரர்களிடம், "நீங்கள் இரவு தூங்கிக்
கொண்டிருந்தபொழுது இயேசுவின் சீஷர்கள்
அவரது சரீரத்தைத் திருடிச்சென்று விட்டார்
கள் என மக்களிடம் சொல்லுங்கள்.
14ஆளுநர் இதை அறிந்தால் அவரைச்
சமாளித்து உங்களுக்குத் தீங்கு வராதபடி
நாங்கள் காப்பாற்றுகிறோம்" என்றார்கள்.
15ஆகவே, போர் வீரர்களும் பணத்தைப் பெற்
றுக்கொண்டு அவர்களுக்கு சொல்லியபடி
செய்தார்கள். இன்றைக்கும் யூதர்களுக்கிடை
யில் இந்தப் பொய்யான கதை சொல்லப்பட்டு
வருகிறது.

### தமது சீஷர்களுடன் இயேசு பேசுதல்

(மாற்கு 16:14-18; லூக்கா 24:36-49;
யோவான் 20:19-23; அப்போஸ்தலர் 1:6-8)

16பதினொரு சீஷர்களும் கலிலேயாவில்
இயேசு கூறிய மலைக்குச் சென்றார்கள்.
17மலைமீது இயேசுவை சீஷர்கள் கண்டு,
வணங்கினார்கள். ஆனால் சில சீஷர்கள் அவர்
உண்மையாகவே இயேசு என்று நம்ப
வில்லை. 18ஆகவே இயேசு அவர்களிடம்,
"வானத்திலும் பூமியிலும் முழு அதிகாரமும்
எனக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. 19ஆகவே
உலகில் உள்ள மக்கள் அனைவரையும் சீஷர்
களாக்குங்கள். பிதாவின் பெயராலும் குமார
னின் பெயராலும் பரிசுத்த ஆவியானவரின்
பெயராலும் அவர்களுக்கு ஞானஸ்நானம்
வழங்குங்கள். 20நான் உங்களுக்குக் கூறிய
அனைத்தையும் அவர்களும் பின்பற்றும்படி
போதனை செய்யுங்கள். நான் எப்பொழுதும்
உங்களுடனேயே இருப்பேன் என்பதில் உறுதி
யாயிருங்கள். உலகின் முடிவுவரையிலும்
நான் உங்களுடன் தொடர்ந்து இருப்பேன்"
என்றார்.

# மாற்கு எழுதிய சுவிசேஷம்

### இயேசுவின் வருகை
(மத்தேயு 3:1-12; லூக்கா 3:1-9, 15-17;
யோவான் 1:19-28)

1 தேவனுடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்
துவைப்பற்றிய நற்செய்தியின் துவக்கம்.
2 ஏசாயா தீர்க்கதரிசி சொன்னபடி அது நடை
பெற்றது. ஏசாயா எழுதினான்:

> “கேளுங்கள்! நான் என் தூதனை உமக்கு
> முன்பாக அனுப்புகிறேன். அவன் உமக்கு
> வழியை ஆயத்தம் செய்வான்.”
>
> மல்கியா 3:1

3 “வனாந்தரத்தில் ஒரு மனிதன் கூவு கிறான்.
‘கர்த்தருக்கான வழியை ஆயத் தம்
செய்யுங்கள். அவரது பாதையை
நேரானதாக்குங்கள்.’ ”

ஏசாயா 40:3

4 ஆகையால் யோவான் வந்தான். அவன்
வனாந்தரப் பகுதியில் மக்களுக்கு ஞானஸ்
நானம் வழங்கினான். அவன் மக்களிடம் மனம்
மாறியதைக் காட்டும்படியான ஞானஸ்நானம்
பெற்றுக்கொள்ளும்படி சொன்னான். அப்பொ
ழுது அவர்களது பாவங்கள் மன்னிக்கப்படும்
என்றான். 5 யூதேயா நாட்டினரும் எருசலேமில்
வாழ்கின்ற அனைத்து மக்களும் அவனிடம்
வந்தனர். அவர்கள் செய்த பாவங்களை அறிக்
கையிட்டனர். யோர்தான் ஆற்றின் கரையில்
யோவான் அவர்களுக்கு ஞானஸ்நானம்
கொடுத்தான். 6 ஒட்டக மயிரால் ஆன ஆடையை
யோவான் அணிந்திருந்தான். தனது இடுப்பில்
தோல் வாரால் ஆன கச்சையைக் கட்டியிருந்
தான். அவன் வெட்டுக்கிளியையும், காட்டுத்
தேனையும் உண்டு வந்தான். 7 “என்னைவிட
வல்லவர் ஒருவர் எனக்குப் பின்னால் வரு
கிறார். அவருக்கு முன்னால், நான் குனிந்து
அவரது கால் செருப்புகளின் வாரை அவிழ்க்
கவும் தகுதி இல்லாதவன். 8 நான் தண்ணீரால்
ஞானஸ்நானம் வழங்குகிறேன். அவரோ உங்
களுக்குப் பரிசுத்த ஆவியால் ஞானஸ்நானம்
வழங்குவார்” என்று யோவான் அவர்களுக்கு
உபதேசம் செய்தான்.

### இயேசு ஞானஸ்நானம் பெறுதல்
(மத்தேயு 3:13-17; லூக்கா 3:21-22)

9 கலிலேயாவில் உள்ள நாசரேத் நகரத்திலி
ருந்து இயேசு அப்பொழுது அங்கே வந்தார்.
அவர் யோர்தான் ஆற்றில் யோவானால்
ஞானஸ்நானம் பெற்றார். 10 அவர் தண்ணீரிலி
ருந்து வெளியேறியபோது வானம் திறக்கப்
பட்டதைக் கண்டார். பரிசுத்த ஆவியானவர்
ஒரு புறாவைப்போல அவரிடம் கீழே இறங்
கினார். 11 “நீர் என்னுடைய மகன். நான் உம்
மிடம் அன்பாய் இருக்கிறேன். நான் உம்மிடம்
மிகவும் பிரியமாய் இருக்கிறேன்” என்று ஓர்
அசரீரி வானத்தில் இருந்து கேட்டது.

### இயேசு சோதிக்கப்படுதல்
(மத்தேயு 4:1-11; லூக்கா 4:1-13)

12 பிறகு ஆவியானவர் இயேசுவை
வனாந்தரத்தில் தனியே அனுப்பினார்.
13 அந்த வனாந்தரத்தில் இயேசு நாற்பது
நாட்கள் இருந்தார். காட்டு மிருகங்களோடு
அவர் அங்கே இருந்தார். அவர் அங்கு இருந்த
போது, சாத்தானால் சோதிக்கப்பட்டார். பிறகு
தேவதூதர்கள் வந்து அவருக்கு உதவி செய்
தார்கள்.

### சீஷர்களைத் தேர்ந்தெடுத்தல்
(மத்தேயு 4:12-22; லூக்கா 4:14-15; 5:1-11)

14 இதற்குப் பிறகு யோவான் சிறையில்
அடைக்கப்பட்டான். இயேசு கலிலேயாவுக்குச்
சென்று, தேவனிடமிருந்து பெற்ற நற்செய்தி
யைப் போதித்தார். 15 “சரியான நேரம் இங்கே
இப்பொழுது இருக்கிறது. தேவனுடைய இராஜ்
யம் நெருங்கி விட்டது. உங்கள் மனதையும்
வாழ்க்கையையும் மாற்றிக்கொள்ளுங்கள். நற்
செய்தி மீது நம்பிக்கை வையுங்கள்” என்று
இயேசு சொன்னார்.
16 இயேசு கலிலேயாவின் கடற்கரையின் ஓர
மாய் நடந்து சென்றார். சீமோனையும் சீமோ
னின் சகோதரனான அந்திரேயாவையும்
இயேசு கண்டார். அவர்கள் இருவரும் மீன்
பிடிப்பவர்கள். அவர்கள் கடலுக்குள் வலை
யை வீசி மீன் பிடித்துக் கொண்டிருந்தனர்.
17 இயேசு அவர்களிடம், “வாருங்கள். என்
னைப்பின் தொடருங்கள். நான் உங்களை
வேறுவிதமான மீன் பிடிப்பவர்களாக மாற்று
வேன். நீங்கள் மீனை அல்ல, மனிதர்களைப்
பிடிப்பவர்களாவீர்கள்” என்று கூறினார்.
18 ஆகையால் சீமோனும், அந்திரேயாவும்
வலைகளை விட்டுவிட்டு இயேசுவைப் பின்
தொடர்ந்து சென்றனர்.
19 இயேசு கலிலேயாவின் கடற்கரையோர
மாய் தொடர்ந்து நடந்து சென்றார். அவர்

செபெதேயுவின் மகன்களான யாக்கோபு,
யோவான் என்னும் சகோதரர்களைக் கண்
டார். அவர்களும் படகில் இருந்துகொண்டு
மீன்பிடிக்கும் தம் வலைகளைப் பழுது
பார்த்துக்கொண்டிருந்தார்கள். 20அவர்களோடு
அவர்களின் தந்தை செபெதேயுவும் அவ
னோடு வேலைபார்க்கும் சில மீனவர்களும்
படகில் இருந்தனர். இயேசு அவர்களைக்
கண்டதும் தம்மோடு வரும்படி அழைத்தார்.
அவர்கள் தம் தந்தையை விட்டுவிட்டு இயேசு
வைப் பின்தொடர்ந்தனர்.

### அசுத்த ஆவியால் பிடிக்கப்பட்டவனைக் குணப்படுத்துதல்

(லூக்கா 4:31-37)

21இயேசுவும் அவரது சீஷர்களும் கப்பர்
நகூமுக்கு சென்றார்கள். ஓய்வுநாளில் ஜெப
ஆலயத்திற்குள்* சென்று இயேசு போதனை
செய்தார். 22அங்கே இருந்த மக்கள் இயேசுவின்
போதகத்தைக் கேட்டு வியப்படைந்தார்கள்.
அவர்களின் ஏனைய வேதபாரகரைப் போல
இயேசு உபதேசிக்கவில்லை. அவர் எல்லா
அதிகாரங்களையும் உடையவராக உபதேசித்
தார். 23ஜெப ஆலயத்திற்குள் இயேசு இருந்த
போது அசுத்த ஆவியால் பிடிக்கப்பட்ட ஒரு
மனிதனும் அங்கே இருந்தான். 24அவன்,
"நசரேயனாகிய இயேசுவே! எங்களிடம் நீர்
என்ன விரும்புகிறீர்? எங்களை அழிக்கவா
வந்தீர்? நீர் தேவனின் பரிசுத்தர் என்பது
எனக்குத் தெரியும்" என்று சத்தமிட்டான்.
25இயேசு பலமான குரலில், "அமைதியாக
இரு. இவனை விட்டு வெளியே வா" என்று
கட்டளையிட்டார். 26அந்த அசுத்த ஆவி அம்
மனிதனை ஒரு உலுக்கு உலுக்கி விட்டு
அவனை விட்டுப் பெரும் சத்தத்தோடு வெளி
யேறியது.
27மக்கள் ஆச்சரியப்பட்டார்கள். அவர்கள்,
"இங்கு என்ன நடக்கிறது? இந்த மனிதர் புதி
தாக ஏதோ உபதேசிக்கிறார். இவர் அதிகாரத்
துடன் உபதேசம் செய்கிறார். இவர் அசுத்த
ஆவிகளுக்கும் கட்டளை இடுகிறார். ஆவி
களும் அவருக்கு அடிபணிகின்றன" என்று
ஒருவரோடொருவர் பேசிக்கொண்டனர்.
28எனவே, கலிலேயாவின் அனைத்துப் பகுதி
களிலும் இயேசுவைப் பற்றிய செய்தி வேக
மாகப் பரவியது.

### அநேகரைக் குணமாக்குதல்

(மத்தேயு 8:14-17; லூக்கா 4:38-41)

29இயேசுவும் அவரது சீஷர்களும் ஜெப
ஆலயத்தை விட்டு வெளியேறினர். அவர்
கள் யாக்கோபு, யோவான் ஆகியோருடன்
சீமோன், அந்திரேயா சகோதரர்களின் வீட்டுக்
குச் சென்றார்கள். 30சீமோனின் மாமியார் மிக
வும் உடல்நலம் இல்லாமல் இருந்தாள். அவள்
படுக்கையில் காய்ச்சலோடு கிடந்தாள். மக்கள்
அவரிடம் அவளைப்பற்றிக் கூறினர். 31எனவே
இயேசு அவளது படுக்கையருகே சென்றார்.
அவளது கையைப் பற்றிக்கொண்டு அவள்
எழுந்திருக்க உதவி செய்தார். காய்ச்சல்
அவளை விட்டு நீங்கி அவள் சுகமடைந்தாள்.
பிறகு அவள் அவர்களை உபசரிக்கத் தொடங்
கினாள்.
32அந்த இரவில், சூரியன் மறைந்த பிறகு,
மக்கள் அனைத்து நோயாளிகளையும் இயேசு
விடம் கொண்டு வந்தனர். அவர்கள் பிசாசு
பிடித்தவர்களையும் அவரிடம் கொண்டு வந்
தனர். 33அந்நகரில் உள்ள அனைத்து மக்களும்
அந்த வீட்டின் வாசலுக்கு வந்து கூடினர்.
34அநேகருடைய பலவிதமான நோய்களையும்
இயேசு குணப்படுத்தினார். பல பிசாசுகளை
யும் இயேசு துரத்தினார். ஆனால் இயேசு
பிசாசுகளைப் பேச அனுமதிக்கவில்லை.
ஏனென்றால் அவர் யாரென்று அவைகள்
அறிந்திருந்தன.

### நற்செய்தியைப் போதிப்பதற்கு இயேசுவின் ஆயத்தம்

(லூக்கா 4:42-44)

35மறுநாள் காலையில் இயேசு மிக முன்ன
தாகவே எழுந்தார். இன்னும் இருட்டாக இருந்த
போதே அவர் வீட்டை விட்டு வெளியேறினார்.
அவர் தனியாக ஓரிடத்துக்குச் சென்று பிரார்த்
தனை செய்தார். 36பிறகு சீமோனும் அவனது
நண்பர்களும் இயேசுவைத் தேடிச்சென்றனர்.
37அவரைக் கண்டுபிடித்து, "மக்கள் யாவரும்
உமக்காகவே எதிர்பார்த்திருக்கிறார்கள்"
என்றனர்.
38இயேசு, "நாம் வேறு இடத்துக்குப் போக
வேண்டும். நாம் சுற்றிலும் உள்ள நகரங்
களுக்கும் செல்ல வேண்டும். அந்த இடங்களில்
எல்லாம் நான் போதனை செய்ய வேண்டும்.
அதற்காகத்தான் நான் வந்தேன்" என்று
பதிலளித்தார். 39ஆகையால் இயேசு கலிலேயா
எங்கும் பிரயாணம் பண்ணினார். அவர் ஜெப
ஆலயங்களில் போதனை செய்தார். அவர்
பலவந்தமாகப் பிசாசுகளை, மனிதர்களிடமி
ருந்து விரட்டினார்.

### நோயாளியை குணமாக்குதல்

(மத்தேயு 8:1-4; லூக்கா 5:12-16)

40தொழுநோயால் பாதிக்கப்பட்ட ஒரு மனி
தன் இயேசுவிடம் வந்தான். அவன் இயேசு
வின் முன்னால் மண்டியிட்டு, "நீர் விரும்
பினால் என்னைக் குணப்படுத்தலாம். அதற்
குரிய வல்லமை உமக்குண்டு" என்று கெஞ்சி
னான். 41அவனுக்காக இயேசு மனமுருகினார்.
ஆகையால் அவனைத் தொட்டு, "நான் உன்
னைக் குணப்படுத்த விரும்புகிறேன். குண
மடைவாயாக!" என்றார். 42உடனே நோய்

---

**ஜெப ஆலயம்** ஜெப ஆலயம் என்பது யூதர்கள் ஜெபத்திற்காகக் கூடி வேதவாக்கியங்களை வாசிக்கும் இடம். அங்கு வேறு பொதுக்கூட்டங்களையும் நடத்துவர்.

அவனை விட்டுவிலகி அவன் குணமானான்.
43அவனைப் புறப்பட்டுச் செல்லுமாறு இயேசு
கூறினார். ஆனால், அவனை அவர் பலமாக
எச்சரிக்கையும் செய்தார்: 44“நான் உனக்காகச்
செய்ததை யாரிடமும் சொல்லாதே. ஆனால்
நீயாகப் போய் ஆலய ஆசாரியனிடம் காட்டு.
தேவனுக்குக் காணிக்கை செலுத்து. ஏனென்
றால் நீ குணமடைந்திருக்கிறாய். மோசே
ஆணையிட்டபடி காணிக்கை செலுத்து. இத
னால் நீ குணமானதை மக்கள் அறிந்து கொள்
வார்கள்,” என்று இயேசு கூறினார். 45அந்த
மனிதன் அங்கிருந்து சென்று தான் கண்ட
எல்லா மக்களிடமும் இயேசு தன்னைக் குணப்
படுத்தியதைப் பற்றிச் சொன்னான். எனவே
இயேசுவைப் பற்றிய செய்தி எங்கும் பரவி
யது. அதனால் இயேசுவால் ஒரு நகரத்துக்குள்
வெளிப்படையாக நுழைய முடியவில்லை.
மக்கள் இல்லாத இடங்களில் இயேசு தங்கி
இருந்தார். இயேசு எங்கிருந்தாலும் அனைத்து
நகரங்களில் இருந்தும் மக்கள் அவரைத் தேடி
வந்தனர்.

### பக்கவாத வியாதிக்காரனைக் குணப்படுத்துதல்

(மத்தேயு 9:1-8; லூக்கா 5:17-26)

2 சில நாட்களுக்குப் பின்னர், இயேசு கப்பர்
நகூமுக்கு வந்தார். அவர் வீட்டுக்குத் திரும்
பியுள்ளார் என்ற செய்தி பரவியது. 2ஏராள
மான ஜனங்கள் இயேசுவின் போதனையைக்
கேட்கக் கூடினார்கள். அந்த வீடு நிறைந்து
விட்டது. அங்கு நிற்பதற்கும் இடமில்லை.
வாசலுக்கு வெளியேயும் இடமில்லை. இயேசு
அவர்களுக்குப் போதித்துக்கொண்டிருந்தார்.
3ஒரு பக்கவாதக்காரனைச் சிலர் இயேசுவிடம்
கொண்டு வந்தார்கள். நான்கு பேர் அவனைத்
தூக்கிக்கொண்டு வந்தனர். 4ஆனால் அவர்
களால் அவனை இயேசுவின் அருகில்
கொண்டுவர முடியவில்லை. ஏனென்றால்
மக்கள் கூட்டம் அவ்வீட்டைச் சூழ்ந்திருந்தது.
எனவே அவர்கள் கூரைமீது ஏறி இயேசு
இருந்த இடத்துக்கு மேல் கூரையில் ஒரு திறப்
பை உண்டாக்கினாாகள். பிறகு பக்கவாதக்
காரனின் படுக்கையை வீட்டுக்குள் இறக்கி
னார்கள். 5அவர்களது அளவுகடந்த விசுவா
சத்தை இயேசு பார்த்தார். எனவே பக்கவாதக்
காரனைப் பார்த்து இயேசு, “இளைஞனே!
உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன” என்றார்.
6சில வேதபாரகர்கள் அங்கே உட்கார்ந்
திருந்தனர். அவர்கள் இயேசு செய்வனவற்
றைப் பார்த்துவிட்டு தங்களுக்குள், 7“ஏன் இந்த
மனிதர் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கிறார்?
இவர் சொல்வதெல்லாம் தேவனுக்கு எதிரான
தாகவே உள்ளதே. தேவன் மட்டுமே பாவங்
களை மன்னிக்கத்தக்கவர்” என்று சொல்லிக்
கொண்டனர்.
8வேதபாரகர்கள் என்ன நினைத்துக்
கொண்டிருக்கிறார்கள் என்பதை உடனே
இயேசு அறிந்துக்கொண்டார். எனவே, இயேசு
அவர்களிடம், “ஏன் இப்படி யோசித்துக்
கொண்டிருக்கிறீர்கள்? 9பக்கவாதக்காரனைப்
பார்த்து, ‘உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்
பட்டன’ என்று சொல்வது எளிதா? ‘எழுந்து
உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நட’
என்று சொல்வது எளிதா? இரண்டில் எது
எளிதாகும்? 10ஆனால் மனிதகுமாரனுக்குப்
பூமியிலே பாவங்களை மன்னிக்கிற அதிகாரம்
உண்டு என்பதை உங்களுக்கு நிரூபிக்கிறேன்”
என்று கூறி பிறகு பக்கவாதக்காரனைப்
பார்த்து, 11“நான் உனக்குச் சொல்கிறேன்.
எழுந்திரு, உனது படுக்கையை எடுத்துக்
கொண்டு உன் வீட்டுக்குப்போ” என்றார்.
12பக்கவாதக்காரன் எழுந்து, அவனது படுக்
கையை எடுத்துக்கொண்டு அந்த அறையை
விட்டு வெளி யேறினான். அனைத்து மக்களும்
அவனைப் பார்த்தார்கள். அவர்கள் சந்
தோஷப்பட்டு தேவனைப் புகழ்ந்தார்கள். அவர்
கள், “இதுபோல ஆச்சரியம் மிக்க ஒன்றை
நாங்கள் இதுவரை பார்த்ததில்லை!” என்ற
னர்.
13இயேசு மறுபடியும் கடலருகே சென்றார்.
ஏராளமான மக்கள் அவரைப் பின்தொடர்ந்து
சென்றார்கள். இயேசு அவர்களுக்கு உபதேசித்
தார். 14கடற்கரையையொட்டி நடந்து செல்லும்
போது அல்பேயுவின் மகனான லேவி என்
னும் வரி வசூலிப்பவனைக் கண்டார். லேவி
வரிவசூலிப்பு அலுவலகத்தில் உட்கார்ந்திருந்
தான். அவனிடம் இயேசு “என்னைப் பின்
தொடர்ந்து வா” என்றார். உடனே லேவி
எழுந்து அவரைப் பின் தொடர்ந்தான்.
15அன்று, அதற்குப் பின் இயேசு லேவி
யினுடைய வீட்டில் உணவு உண்டார். அங்கே
வரிவசூல் செய்பவர்களும், பாவிகளும் இயே
சுவோடும் அவரது சீஷர்களோடும் உணவு
உண்டனர். இவர்களோடு பலர் இயேசுவைப்
பின்தொடர்ந்து வந்திருந்தனர். 16அவர்களோடு
வேதபாரகரும் பரிசேயரும் இருந்தனர். அவர்
கள் பாவிகளோடும், வரிவசூல் செய்பவர்க
ளோடும் சேர்ந்து இயேசு உணவு உட்கொள்
வதைக் கண்டனர். அவர்கள் இயேசுவின்
சீஷரை நோக்கி, “ஏன் இவர் வரிவசூல் செய்
பவர்களோடும், பாவிகளுடனும் சேர்ந்து
உணவு உண்கின்றார்?” என்று கேட்டனர்.
17இயேசு இதனைக் கேட்டார். அவர் அவர்
களை நோக்கி, “சுகமுள்ளவனுக்கு மருத்துவர்
தேவையில்லை. நோயாளிக்கே மருத்துவர்
தேவை. நான் நல்லவர்களை அழைக்க வர
வில்லை, பாவிகளை அழைக்கவே வந்தேன்”
என்றார்.

### இயேசு பிற மதத்தலைவர்களை விட வித்தியாசமானவர்

(மத்தேயு 9:14-17; லூக்கா 5:33-39)

18யோவானின் சீஷர்களும், பரிசேயரின்
சீஷர்களும் உபவாசம் இருந்தனர். சிலர்

இயேசுவிடம் வந்து “யோவானுடைய சீஷர்
களும் உபவாசம் இருக்கின்றனர். பரிசேயரு
டைய சீஷர்களும் உபவாசம் இருக்கின்றனர்.
உங்களுடைய சீஷர்கள் ஏன் உபவாசம் இருப்
பதில்லை?” என்று கேட்டனர்.
19அதற்கு இயேசு, “ஒரு திருமணத்தில் மண
மகன் தம்முடன் இருக்கும்போது மணமகனின்
நண்பர்கள் துயரப்படமாட்டார்கள். மணமகன்
இன்னும் கூடவே இருக்கிற சந்தர்ப்பத்தில்,
அவர்களால் உபவாசம் (துயரமாக) இருக்க
முடியாது. 20ஆனால் மணமகன் பிரிந்து
செல்லக்கூடிய ஒரு தருணம் வரும். அப்போது
மணமகனைப் பிரிந்த வருத்தத்தில், அவன்
நண்பர்கள் துயரமுடன் இருப்பார்கள். அதற்
குப் பிறகு அவர்கள் உபவாசம் (துயரமாக)
இருப்பார்கள்.
21“எவனொருவனும் புதிய துணியோடு
பழைய துணியைச் சேர்த்து ஒட்டுப்போட்டு
தைக்கமாட்டான். அவன் அவ்வாறு செய்தால்
ஒட்டுப்போட்டவை சுருங்கிவிடும். புதியது
பழையதை அதிகமாய்க் கிழிக்கும். முன்னதை
விட மோசமாகும். 22எவனொருவனும் புதிய
திராட்சை இரசத்தை பழைய தோல் பையில்
ஊற்றி வைக்கமாட்டான். ஊற்றி வைத்தால்
புதிய இரசம் பழைய பையைக் கெடுத்து
விடும். அதோடு இரசமும் சிந்திவிடும். புதிய
இரசத்தைப் புதிய பைகளிலேதான் மக்கள்
ஊற்றி வைப்பார்கள்” என்று சொன்னார்.

## யூதர்களின் விமர்சனம்

(மத்தேயு 12:1-18; லூக்கா 6:1-5)

23ஒரு ஓய்வுநாளில் இயேசு தானிய
வயல்கள் வழியே நடந்து கொண்டிருந்தார்.
அவரது சீஷர்களும் அவரோடு சென்றார்கள்.
சீஷர்கள் தானியக் கதிர்களைக் கொய்து
தின்னத் தொடங்கினர். 24பரிசேயர்கள் இத
னைப் பார்த்து இயேசுவிடம், “உங்கள் சீஷர்
கள் ஏன் இவ்வாறு செய்கிறார்கள்? ஓய்வு
நாளில் இவ்வாறு செய்யக்கூடாது என்பது
யூதர்களின் சட்டமல்லவா?” என்றனர்.
25அதற்கு இயேசு, “தனக்கும் தன் சீஷர்களுக்
கும் உணவு வேண்டிப் பசித்திருந்த நேரத்தில்
26தாவீது என்ன செய்தான் என்பதை நீங்கள்
படித்திருக்கிறீர்கள். அபியத்தார் என்னும்
தலைமை ஆசாரியன் காலத்தில் நடந்த விஷ
யம் அது. தாவீது தேவனுடைய வீட்டில்
நுழைந்து தேவனுக்குப் படைக்கப்பட்ட அப்
பத்தை உண்டான். மோசேயின் விதிகளோ
ஆசாரியர்கள் மட்டுமே அந்த அப்பத்தைப்
புசிக்கலாம் என்று கூறுகின்றன. தாவீது தன்
னுடன் இருந்த மற்றவர்களுக்கும் அப்பத்தைக்
கொடுத்தான்” என்றார்.
27மேலும் பரிசேயர்களைப் பார்த்து இயேசு
“ஓய்வுநாள் என்பது மக்களுக்கு உதவவே
உண்டாக்கப்பட்டது. ஓய்வுநாளுக்காக மக்கள்
உண்டாக்கப்படவில்லை. 28எனவே மனித
குமாரன் தான் மற்ற நாட்களுக்கும் மட்டுமல்ல,
ஓய்வுநாளுக்கும் எஜமானராக இருக்கிறார்”
என்று சொன்னார்.

## சூம்பின கை குணமாக்கப்படுதல்

(மத்தேயு 12:9-14; லூக்கா 6:6-11)

3 மறுமுறையும் ஜெப ஆலயத்திற்குள்
இயேசு நுழைந்தார். அங்கே சூம்பின
கையை உடைய ஒரு மனிதன் இருந்தான்.
2இயேசு தவறாக ஏதேனும் செய்யும் பட்சத்தில்
அவரைக் குற்றம் சாட்டலாம் என்று சில
யூதர்கள் கவனித்துக் கொண்டிருந்தனர். ஓய்வு
நாளில் அவனைக் குணமாக்குவாரா என்று
பார்க்கக் காத்திருந்தனர். 3இயேசு சூம்பிய
கையை உடையவனிடம், “எழுந்து இங்கே
நில். அப்போதுதான் உன்னை எல்லாரும்
பார்க்க முடியும்” என்றார்.
4பிறகு இயேசு மக்களிடம், “ஓய்வு நாளில்
எது செய்வது சரியாக இருக்கும்? நன்மை
செய்வதா, தீமை செய்வதா? ஒரு உயிரைக்
காப்பாற்றுவது சரியா? அழிப்பது சரியா?”
என்று கேட்டார். மக்கள் பதிலொன்றும்
சொல்ல வில்லை.
5இயேசு மக்களைப் பார்த்தார். அவருக்கோ
கோபம் வந்தது. அவர்கள் கடினமனம் உடைய
வர்களாய் இருந்ததால் இயேசுவுக்கு வருத்தம்
ஏற்பட்டது. இயேசு அந்த மனிதனிடம், “உன்
கையை நீட்டு” என்றார். அவனும் இயேசு
விடம் தன் கையை நீட்டினான். அது குண
மாகியது.
6பிறகு பரிசேயர்கள் அந்த இடத்தை
விட்டுப் போய் ஏரோதியரோடு கூடக் கலந்து
இயேசுவைக் கொல்வதற்குத் திட்டமிட்டனர்.

## இயேசுவின் பின் திரளான கூட்டம்

7தனது சீஷர்களோடு இயேசு ஏரிப்பக்கம்
சென்றார். கலிலேயா மக்களில் பலர் அவ
ரைப் பின்தொடர்ந்தனர். 8பிறகு யூதேயாவில்
இருந்தும், எருசலேமிலிருந்தும், இதுமேயா
வில் இருந்தும், யோர்தானுக்கு அக்கரையில்
இருந்தும் ஏராளமான மக்கள் வந்தனர். அத்
துடன் தீரு, சீதோன் பகுதிகளில் இருந்தும்
மக்கள் வந்தனர். அவர்கள் அனைவரும்
இயேசு செய்த அற்புதங்களை அறிந்திருந்த
னர். ஆகவேதான் அவர்கள் வந்தார்கள்.
9இயேசு பலரையும் பார்த்தார். அவர் தன்
சீஷர்களிடம் ஒரு சிறிய படகு கொண்டுவந்து
அதனை அவருக்குத் தயார் செய்யும்படிக்
கேட்டுக்கொண்டார். மக்கள் தம்மை நெருக்கித்
தள்ளாதபடிக்கு அப்படகில் ஏறிக் கொண்டார்.
10இயேசு ஏற்கெனவே பலரைக் குணமாக்கி
இருந்தார். ஆகவே ஏராளமான நோயுற்ற மக்
கள் நெருக்கிக்கொண்டு வந்து அவரைத் தொட
முயன்றார்கள். 11சிலர் அசுத்த ஆவிகளால்
பிடிக்கப்பட்டிருந்தனர். ஆவிகள் இயேசுவைக்
கண்டதும் அவருக்கு முன்குனிந்து, “நீர் தான்
தேவனுடைய குமாரன்” என்று உரக்கச்
சத்தமிட்டன. 12ஆனால் இயேசு, தாம் யார்

என்பதை மக்களுக்குக் கூறாதிருக்கும்படி
அவற்றிற்கு உறுதியாகக் கட்டளையிட்டார்.

## அப்போஸ்தலரைத் தேர்ந்தெடுத்தல்
(மத்தேயு 10:1-4; லூக்கா 6:12-16)

13பிறகு, இயேசு குன்றின் மீது ஏறினார்.
அவர் சிலரை தன்னுடன் வருமாறு சொன்
னார். இந்த மனிதரே அவருக்குத் தேவையான
வர்களாய் இருந்தனர். அவர்கள் இயேசுவிடம்
சென்றனர். 14அவர்களில் பன்னிரண்டு பேரை
இயேசு தேர்ந்தெடுத்துக் கொண்டார். அவர்
களை அப்போஸ்தலர் என்று அழைத்தார்.
அவர்கள் தன்னுடன் இருக்கவேண்டும் என்று
இயேசு விரும்பினார். அவர்களைப் பல இடங்
களுக்கு அனுப்பி பிரசங்கம் செய்யும்படி
விரும்பினார். 15அத்துடன் பிசாசுகளை விரட்
டுவதற்கான அதிகாரத்தை அவர்கள் பெற்
றிருக்கவும் இயேசு விரும்பினார். 16அவர்
தேர்ந்தெடுத்த பன்னிரண்டு பேரின் பெயர்
களும் பின்வருமாறு: சீமோன், இயேசு இவ
னுக்கு பேதுரு என்று பெயரிட்டார். 17யாக்
கோபு, யோவான் இவர்கள் செபெதேயுவின்
மகன்கள். (இயேசு இவர்களுக்கு பொவனெர்
கேஸ் என்று பெயர் வைத்தார். இதற்கு "இடி
முழக்கத்தின் மக்கள்" என்று பொருள்) 18அந்தி
ரேயா, பிலிப்பு, பர்த்தலோமேயு, மத்தேயு,
தோமா, அல்பேயுவின் மகனான யாக்கோபு,
ததேயு, கானானியனான சீமோன், 19யூதாஸ்
காரியோத். இந்த யூதாஸ்தான் இயேசுவை
அவரது பகைவர்களிடம் காட்டிக்கொடுத்
தவன்.

## இயேசுவைப் பிசாசு பிடித்தவர் என பழித்துரைத்தல்
(மத்தேயு 12:22-32; லூக்கா 11:14-23, 12:10)

20பிறகு, இயேசு வீட்டிற்குச் சென்றார்.
ஆனால் மறுபடியும் அங்கு மக்கள் கூடினர்.
இயேசுவும் அவரது சீஷர்களும் உணவு உட்
கொள்ள முடியாதபடி மக்கள் கூடினர்.
21இயேசுவின் குடும்பத்தார் இவற்றைப்பற்றி
எல்லாம் கேள்விப்பட்டனர். அவர் மதிமயங்கி
யுள்ளார் என்று மக்கள் சொன்னதால் அவரது
குடும்பத்தார் அவரைப் பிடித்து வைத்துக்
கொள்ள விரும்பினர். 22எருசலேமில் இருந்து
வந்த வேதபாரகர், "இயேசுவிடம் பெயல்செ
பூல் (பிசாசு) உள்ளது. பிசாசுகளின் தலைவ
னது அதிகாரத்தை அவர் பயன்படுத்தி பேய்
களை விரட்டுகிறார்" என்றனர்.

23ஆகையால் இயேசு மக்களை அழைத்தார்.
அவர்களிடம் அவர் உவமைகள் மூலம் விளக்
கிச் சொன்னார். "சாத்தானை சாத்தான் துரத்
துவது எப்படி? என்று கேட்டார். 24ஒரு இராஜ்
யம் தனக்குத்தானே பகைத்துக் கொண்டால்
அது எவ்வாறு தொடர்ந்திருக்க முடியும்? 25ஒரு
குடும்பம் தனக்குத்தானே பகைத்துக் கொண்
டால் அது எவ்வாறு அழியாமல் இருக்கும்?
26இது போல் சாத்தானும் தனக்கு எதிராகத்
தானே இருந்தால் பிளவுபட்டு அவன் நிலைத்
திருக்க முடியாது. அதுவே அவன் முடிவு.
27ஒருவன் பலவானுடைய வீட்டிற்குள் புகுந்து
பொருட்களைத் திருடவிரும்பினால் முதலில்
அவன் அப்பலவானைக் கட்டிப்போடவேண்
டும். பிறகு, அவனால் பலவானுடைய வீட்டிலி
ருந்து அவனது பொருட்களைத் திருடமுடியும்.
28உண்மையாகவே நான் உங்களுக்குக் கூறுகி
றேன். மக்களால் செய்யப்படுகிற அத்தனைப்
பாவங்களும் மன்னிக்கப்படும். அத்துடன்
மக்களால் தேவனுக்கு எதிராகச் சொல்லப்
படும் பழிகளும் மன்னிக்கப்படும். 29ஆனால்,
பரிசுத்தாவியை எவனாவது பழித்து உரைப்
பானேயானால் அவனுக்கு என்றென்றைக்
கும் மன்னிப்பே இல்லை. அவன் குற்றவாளி
யாகி என்றென்றைக்கும் குற்ற உணர்வுடைய
வனாக இருப்பான்" என்றார்.

30வேதபாரகர் இயேசுவை அசுத்த ஆவி
பிடித்தவர் என்று சொன்னதால், அவர் இவ்
வாறு விளக்கமாகக் கூறினார்.

## இயேசுவின் உண்மை உறவினர்கள்
(மத்தேயு 12:46-50; லூக்கா 8:19-21)

31பிறகு இயேசுவின் தாயாரும், சகோதரர்
களும் வந்தனர். அவர்கள் வெளியே நின்று
கொண்டு ஓர் ஆளை அனுப்பி இயேசுவை
அழைத்தனர். 32இயேசுவைச்சுற்றி பலர் அமர்ந்
திருந்தனர். அப்போது அவன், "உங்கள்
தாயும், சகோதரர்களும் வெளியே உங்களுக்
காக் காத்திருக்கின்றனர்" என்றான்.

33இயேசு அவர்களிடம், "யார் என் தாய்?
யார் என் சகோதரர்கள்?" என்று கேட்டார்.
34பிறகு தன்னைச்சுற்றி அமர்ந்திருந்தவர்களை
நோக்கி, "இந்த மக்களே என் தாயாரும்,
சகோதரருமாய் இருக்கிறார்கள். 35தேவனின்
விருப்பத்துக்கேற்ப நடந்துகொள்கிறவர்கள்
எவர்களோ அவர்களே எனக்குச் சகோதர
னும், சகோதரியும், தாயுமாய் இருக்கிறார்கள்"
என்று கூறினார்.

## உழவன் - விதை பற்றிய உவமை
(மத்தேயு 13:1-9; லூக்கா 8:4-8)

4 இயேசு மறுபடியும் கடற் கரையோரத்தில்
போதிக்கத் தொடங்கினார். ஏராளமான
மக்கள் இயேசுவைச் சூழ்ந்து கொண்டார்கள்.
ஆகையால் இயேசு படகில் ஏறி ஏரிக்குள்
சென்றார். எல்லா மக்களும் ஏரிக்கரையில்
நின்றுகொண்டனர். 2இயேசு படகில் இருந்த
வண்ணம் மக்களுக்குப் போதிக்கத் தொடங்கி
னார். அவர் மக்களுக்குப் போதிக்கும்
பொருட்டு பல உவமைகளைப் பயன்படுத்தி
னார். 3அவர் சொன்னார், "கேளுங்கள். ஓர்
உழவன் தன் விதையை விதைக்கச் சென்
றான். 4உழவன் விதைத்துக்கொண்டு இருக்
கும்போது சில விதைகள் பாதையில் விழுந்
தன. பறவைகள் வந்து அவற்றைத் தின்று
விட்டுச் சென்றன. 5சில விதைகள் பாறை

போன்ற நிலத்தில் விழுந்தன. அதில் போதிய
ஆழமான மண்ணில்லை. அதனால் அந்த
விதைகள் வேகமாக முளைத்தன. 6ஆனால்
சூரியன் ஏறவெப்பத்தால் அவை கருகி
விட்டன. அவற்றுக்கு ஆழமான வேர் இல்லாத
தால் பிழைக்கவில்லை. 7சில விதைகள் முட்
புதர்களில் விழுந்தன. முட்புதர்கள் வளர்ந்து,
விதைகள் முளைத்து வளராதபடி முடக்கி
விட்டன. எனவே, விதைகள் தானியங்களைத்
தரவில்லை. 8சில விதைகள் நல்ல நிலத்தில்
விழுந்தன. விதைகள் அவற்றில் நன்றாக
வளர ஆரம்பித்தன. அவை வளர்ந்து பலன்
தர ஆரம்பித்தது. சில செடிகள் முப்பது தானி
யங்களையும், சில அறுபது தானியங்களை
யும், சில நூறு தானியங்களையும் தந்தன."
9பிறகு இயேசு, "நான் சொல்வதைக் கேட்கத்
தக்கவர்கள் கவனிக்கட்டும்" என்றார்.

### உவமைகள் ஏன்? - விளக்கம்
(மத்தேயு 13:10-17; லூக்கா 8:9-10)

10பிறகு இயேசு மக்களை விட்டு தொலை
வாகச் சென்றார். பன்னிரண்டு சீஷர்களும்
மற்றும் அவரைச்சுற்றி இருந்தவர்களும் அவர்
பயன்படுத்தும் உவமைகளைப் பற்றிக் கேட்
டார்கள்.
11இயேசு, "உங்களால் மட்டுமே தேவனின்
இராஜ்யத்தைப் பற்றிய இரகசிய உண்மை
களை அறிந்து கொள்ளமுடியும். ஆனால் மற்ற
மக்களால் அறிந்துகொள்ள இயலாது. எனவே
நான் அவர்களுக்கு உவமைகளின் மூலம்
கூறுகிறேன். 12நான் இதனைச் செய்கிறேன்.
ஏனென்றால்:

> ''அவர்கள் பார்ப்பார்கள், பார்ப்பார்கள்.
> ஆனால் உண்மையில் ஒருபோதும்
> பார்க்கமுடியாது. அவர்கள் கேட்பார்கள்,
> கேட்பார்கள். ஆனால் ஒருபோதும் புரிந்து
> கொள்ளமாட்டார்கள். அவர்கள் பார்த்துப்
> புரிந்து கொண்டிருப்பார்களேயானால்
> அவர்கள் மாறி இருக்கக் கூடும், மன்
> னிக்கப்பட்டிருக்கவும் கூடும்" என்றார்.
> ஏசாயா 6:9-10

### விதைபற்றிய உவமை - விளக்கம்
(மத்தேயு 13:18-23; லூக்கா 8:11-15)

13இயேசு தன் சீஷர்களிடம், "உங்களால்
இந்த உவமையைப் புரிந்துகொள்ள முடிகி
றதா? முடியாவிடில் மற்ற உவமைகளை நீங்
கள் எப்படி புரிந்துக்கொள்ளப் போகிறீர்கள்?
14இதில் உழவன் என்பவன் தேவனுடைய
போதனைகளை மக்களிடம் நடுபவனே. 15சில
நேரங்களில் அப்போதனை வழிப்பாதையில்
விழும். சிலர் தேவனின் போதனைகளைக்
கேட்பார்கள். ஆனால் சாத்தான் வந்து அப்
போதனை வளராதபடி எடுத்துச் சென்று
விடுவான். 16பாறைகளில் விழுந்த விதை
களைப்போலச் சிலர் காதில் போதனை விழு
கின்றன. அவர்கள் அவற்றை மகிழ்ச்சியோடு
ஏற்றுக்கொள்வர். 17ஆனால் அவர்கள் அப்
போதனைகள் அவர்களது வாழ்வில் ஆழ
மாகச் செல்ல அனுமதிக்கமாட்டார்கள். அவர்
கள் அவற்றைக் கொஞ்சகாலமே வைத்திருப்
பர். ஆனால் அந்தப் போதனையை ஏற்றதால்
கஷ்டமோ, பிறர் மூலம் துன்பமோ வரும்
போது அவர்கள் அவற்றை உடனே கைவிட்டு
விடுவர். 18இன்னும் சிலரோ, முட்செடிகளில்
விழுந்த விதைகளைப் போன்று போதனை
யைக் கேட்டுக் கொள்கின்றனர். 19வாழ்க்கைத்
துன்பங்களும், பண ஆசைகளும் பிற எல்லா
விதமான காரியங்களின் மீதுள்ள விருப்பங்
களும் இவர்களிடம் போதனைகள் வளராமல்
செய்துவிடுகின்றன. எனவே, இவர்கள் வாழ்க்
கையில் போதனை எந்தவிதமான பலனை
யும் உண்டாக்குவதில்லை. 20மற்றவர்கள்
நல்ல நிலத்தில் விழுந்த விதைகளைப்
போன்று இருக்கின்றனர். அவர்கள் போத
னையைக் கேட்டு, ஏற்றுக்கொள்கின்றனர்.
அவர்கள் முப்பது மடங்காகவும், சிலர் அறு
பது மடங்காகவும், சிலர் நூறு மடங்காகவும்
பலன் தருகின்றனர்" என்றார்.

### இருப்பதை பயன்படுத்துதல்
(லூக்கா 8:16-18)

21மேலும் இயேசு, "நீங்கள் விளக்கை
எடுத்து மரக்காலுக்கு (பாத்திரத்துக்கு) அடி
யிலோ, படுக்கையின் அடியிலோ மறைத்து
வைப்பீர்களா? இல்லை. நீங்கள் விளக்கை
மேஜையின் மீதே வைப்பீர்கள். 22மறைக்கப்
படுகிற எந்தக் காரியமும் வெளியே வரும்.
எல்லா இரகசியங்களும் தெரிவிக்கப்படும்.
23கேட்க முடிந்தவர்கள், நான் சொல்வதைக்
கவனித்துக் கேளுங்கள்.
24"நீங்கள் கேட்கிறவற்றைப் பற்றி கவன
மாய் சிந்தியுங்கள். நீங்கள் எப்படி கொடுக்
கிறீர்களோ அந்தப்படியே தேவன் உங்களுக்
குக் கொடுப்பார். ஆனால் நீங்கள் கொடுப்
பதைக் காட்டிலும் அதிகமாக தேவன்
உங்களுக்குக் கொடுப்பார். 25ஏற்கெனவே
உள்ளவன் மேலும் பெற்றுக்கொள்வான். எவ
னிடம் மிகுதியாக இல்லையோ அவனிடமி
ருந்து இருக்கும் சிறு அளவும் எடுத்துக்
கொள்ளப்படும்.''

### விதை பற்றிய உவமை

26பிறகு இயேசு, "தேவனுடைய இராஜ்ய
மானது ஒரு மனிதன் நிலத்தில் விதைக்கும்
ஒரு விதையைப் போன்றது. 27விதையானது
வளரத் தொடங்கும். அது இரவும் பகலும்
வளரும். அந்த மனிதன் விழித்திருக்கிறானா
அலலது தூங்குகிறானா என்பது முக்கிய
மல்ல. விதை வளர்ந்துகொண்டே இருக்கும்.
விதை எவ்வாறு வளர்கிறது என்பதும், அந்த
மனிதனுக்குத் தெரியாது. 28எவ்வித உதவியும்
இல்லாமல் அந்த நிலம் விதையை வளர்க்

கிறது. முதலில் விதையில் இருந்து செடி
முளைக்கிறது. பிறகு கதிர், அதன் பிறகு
கதிர் முழுதும் தானியங்கள். [29]தானியம்
விளைந்ததும் மனிதன் அவற்றை அறுவடை
செய்கிறான். இது அறுவடைக் காலம்" என்
றார்.

### கடுகு விதையின் உவமை

(மத்தேயு 13:31-32; 34-35; லூக்கா 13:18-19)

[30]மேலும் இயேசு, "தேவனுடைய இராஜ்யம்
எத்தகையது என்று உங்களுக்குப் புரிய
வைக்க நான் எந்த உவமையைப் பயன்
படுத்துவேன்? [31]தேவனுடைய இராஜ்யம் ஒரு
கடுகு விதையைப் போன்றது. கடுகு மிகச்
சிறிய விதைதான். அதை நிலத்தில் விதைக்
கிறீர்கள். [32]ஆனால் இதை நீங்கள் விதைத்த
பிறகு அது வளர்ந்து, உங்கள் தோட்டத்தில்
உள்ள அனைத்துச் செடிகளையும்விட பெரிய
தாகும். அதன் கிளைகள் மிகப் பெரிதாக
விரியும். காட்டுப் பறவைகள் அதன் கிளை
களில் கூடு கட்டித் தங்கமுடியும். அத்தோடு
அவைகளை வெயிலில் இருந்தும் பாதுகாக்
கும்" என்றார்.

[33]மக்களுக்குப் போதிக்கும் பொருட்டு இது
போன்ற பல உவமைகளையும் இயேசு
பயன்படுத்தினார். அவர்களுக்குப் புரிகிற
வகையில் அவர் கற்றுத்தந்தார். [34]இயேசு எப்
பொழுதும் உவமைகளை உபயோகித்து
மக்களுக்குப் போதித்தார். தன் சீஷர்களோடு
தனியாக இருக்கும்போது எல்லாவற்றையும்
அவர்களுக்கு விவரித்துச் சொன்னார்.

### புயலை அமர்த்துதல்

(மத்தேயு 8:23-27; லூக்கா 8:22-25)

[35]அன்று மாலையில் இயேசு தன் சீஷர்
களிடம், "என்னோடு வாருங்கள். இக்கடலைக்
கடந்து அக்கரைக்குச் செல்வோம்" என்றார்.
[36]இயேசுவும் அவரது சீஷர்களும் அங்கே
மக்களை விட்டுவிட்டுச் சென்றனர். இயேசு
ஏற்கெனவே இருந்த படகிலேயே அவர்கள்
ஏறிச் சென்றனர். அவர்களோடு வேறு பல
படகுகளும் இருந்தன. [37]மோசமான காற்று
வீச ஆரம்பித்தது. அதனால் பெரும் அலைகள்
எழும்பி, படகின் வெளியேயும், உள்ளேயும்,
தாக்க ஆரம்பித்தன. படகில் நீர் நிறையத்
தொடங்கியது. [38]இயேசு கப்பலின் பின்பகுதி
யில் தலையணையில் தலைவைத்துப் படுத்
துத் தூங்கிக்கொண்டிருந்தார். சீஷர்கள் அவரி
டம்போய் அவரை எழுப்பினார்கள். அவர்
கள், "போதகரே, உங்களுக்கு எங்களைப்
பற்றிய அக்கறை இல்லையா? நாங்கள் மூழ்
கும் நிலையில் உள்ளோம்" என்றனர்.

[39]இயேசு எழுந்து புயலுக்கும், அலைகளுக்
கும் ஆணையிட்டார். "இரையாதே, அமைதி
யாய் இரு" என்று இயேசு ஆணையிட்டார்.
உடனே புயல் நின்றது. கடலும் அமைதி
யானது.

[40]இயேசு தம் சீஷர்களிடம், "நீங்கள் ஏன்
பயப்படுகிறீர்கள்? உங்களுக்கு இன்னும் விசு
வாசம் இல்லையா?" என்று கேட்டார்.

[41]சீஷர்கள் பெரிதும் அஞ்சினர். அவர்கள்
ஒருவரை ஒருவர் பார்த்து, "இவர் எத்தகைய
மனிதர்? காற்றும் கடலும் கூட இவருக்குக்
கீழ்ப்படிகிறதே" என்றனர்.

### அசுத்த ஆவி துரத்தப்படுதல்

(மத்தேயு 8:28-34; லூக்கா 8:26-39)

5 இயேசுவும் அவரது சீஷர்களும் அக்
கடலைக் கடந்து அக்கரைக்குச் சென்றார்
கள். அங்கு கதரேனர் என்ற மக்கள் வாழ்ந்து
வந்தனர். [2]படகிலிருந்து இயேசு இறங்கியதும்
இறந்த மக்கள் அடக்கம் செய்யப்பட்டிருந்த
குகைகளிலிருந்து ஒரு மனிதன் வெளியே
வந்தான். அந்த மனிதனை அசுத்த ஆவிகள்
பிடித்திருந்தன. [3]அவன் எப்போதும் கல்லறை
யிலேயே குடியிருந்தான். அவனை எவரா
லும் கட்டிப்போட முடியவில்லை. [4]பல முறை
மக்கள் அவனது கைகளையும் கால்களையும்
விலங்குகளாலும், சங்கிலிகளாலும் கட்டிப்
போட்டிருந்தனர். ஆனால் அந்த மனிதன் அச்
சங்கிலிகளையும் விலங்குகளையும் அறுத்து
எறிந்து விடுவான். அவனைக் கட்டுப்
படுத்தும் பலமுள்ள மனிதன் எவனும் அங்
கில்லை. [5]இரவும், பகலும் அவன் கல்லறை
குகைகளைச் சுற்றியும் மலைப் பகுதிகளிலும்
திரிந்து கொண்டிருந்தான். அவன் கூக்குரலிட்
டுக்கொண்டும், கற்களால் தன்னைக் காயப்
படுத்திக்கொண்டும் இருந்தான்.

[6]தொலைவில் இயேசு வந்து கொண்டிருக்
கும்போதே அவரைப் பார்த்துவிட்டான்
அவன். ஓடி வந்து அவர் முன்னால் பணிந்து
நின்றான். [7-8]இயேசு அவனிடம், "அசுத்த
ஆவியே, இந்த மனிதனை விட்டு வெளியே
போ!" என்று சொன்னார். உடனே அவன்
உரத்த குரலில் "இயேசுவே! மகா உன்னத
தேவ குமாரனே! என்னிடம் என்ன விரும்
புகிறீர்? என்னைத் துன்புறுத்தவேண்டாம்
என்று தேவனிடம் ஆணையாய் உம்மைக்
கெஞ்சிக்கேட்டுக் கொள்கிறேன்" என்றான்
[9]பிறகு இயேசு அவனிடம், "உனது பெயர்
என்ன?" என்று கேட்டார். "என் பெயர் லேகி
யோன்,* ஏனென்றால் எனக்குள்ளே பல
ஆவிகள் உள்ளன" என்று அவன் சொன்
னான். [10]அத்தோடு அவனுக்குள்ளே இருந்த
ஆவிகள் தங்களை அந்தப் பகுதியை விட்டு
துரத்தக் கூடாது என்று மீண்டும் மீண்டும்
கெஞ்சிக் கேட்டன. [11]அப்பொழுது அந்த
மலையருகே பன்றிகள் கூட்டமாக மேய்ந்து
கொண்டிருந்தன. [12]அசுத்த ஆவிகள் இயேசு
விடம், "எங்களை அந்தப் பன்றிகளுக்குள்ளே
அனுப்பிவிடுங்கள்" எனக் கேட்டுக்கொண்

---

**லேகியோன்** இதற்கு ஏராளம் என்று பொருள். இதற்கு 5000 ஆட்கள் கொண்ட ரோமானிய படை எனப் பொருள்.

டன. 13அவ்வாறே போகும்படி இயேசு அனுமதி அளித்தார். அசுத்த ஆவிகள் அந்த மனிதனை விட்டு விட்டு பன்றிகளுக்குள் புகுந்துகொண்டன. அப்பன்றிக் கூட்டம் மேட்டிலிருந்து ஓடி கடலுக்குள் பாய்ந்து கடலில் மூழ்கி இறந்தன. அவை ஏறக்குறைய 2000 எண்ணிக்கை உடையதாக இருக்கும்.

14பன்றிகளை மேய்த்துக்கொண்டிருந்தவர்கள் அவ்விடத்தை விட்டு ஓடிவிட்டார்கள். அவர்கள் பட்டணத்துக்கும், வயல்வெளிக்கும் சென்றார்கள். அங்கு சந்தித்த மக்களிடமெல்லாம் இதனைச் சொன்னார்கள். மக்களும் என்ன நடந்தது என்பதை அறிய வந்தனர். 15அவர்கள் இயேசுவிடம், வந்தார்கள். பல அசுத்த ஆவிகளால் பிடிக்கப்பட்டிருந்தவனையும், அவர்கள் பார்த்தார்கள். அவன் ஆடைகள் அணிந்து அமைதியாய் இயேசுவின் காலடியில் உட்கார்ந்து கொண்டிருந்தான். அவனது மனநிலை சரியாக இருந்தது. மக்கள் இவற்றைக்கண்டு அச்சப்பட்டனர். 16இயேசு செய்தவற்றைப் பார்த்திருந்த சிலரும் அங்கே இருந்தனர். இவர்கள் மற்றவர்களிடம் அசுத்த ஆவிகளால் பிடிக்கப்பட்டவனின் செயல்களையும் இயேசு அவனைக் குணப்படுத்தியதையும் கூறினர். அவர்கள் பன்றிகளுக்கு ஏற்பட்டதையும் சொன்னார்கள். 17பிறகு அந்த மக்கள், இயேசுவிடம் அவ்விடத்தை விட்டு புறப்பட்டுச் செல்லும்படி வேண்டினர்.

18படகின் மூலம் அவ்விடத்தை விட்டுச் செல்ல இயேசு தயாரானார். பிசாசுகளிடமிருந்து விடுவிக்கப்பட்ட அந்த மனிதன் தன்னையும் இயேசுவோடு வர அனுமதிக்கும்படி வேண்டிக் கொண்டான்.

19ஆனால் இயேசு அவனுக்கு அனுமதி கொடுக்கவில்லை. அவனிடம் இயேசு, "நீ வீட்டுக்குப் போ. உன் குடும்பத்தாரையும், நண்பர்களையும் சென்று பார்த்து உனக்காகக் கர்த்தர் செய்தவற்றை எல்லாம் அவர்களிடம் கூறு. அவர் உனக்குக் கருணை செய்தார் என்றும் கூறு" என்றார். 20எனவே அவன் அவ்விடத்தை விட்டுப்போய் தெக்கப்போலி பகுதி மக்களிடம் தனக்கு இயேசு செய்ததைக் கூற ஆரம்பித்தான். மக்கள் அவற்றைக் கேட்டு வியப்பு அடைந்தனர்.

### இறந்த பெண் உயிரடைதலும், நோயாளி குணமாகுதலும்

(மத்தேயு 9:18-26; லூக்கா 8:40-56)

21படகிலேறி இயேசு கடலின் அக்கரைக்குத் திரும்பிச் சென்றார். அக்கரையில் ஏராளமான மக்கள் கடற்கரையிலிருக்கும்போது இயேசுவைச் சுற்றிக் கூடினர். 22அப்பொழுது, ஜெப ஆலயத் தலைவர்களுள் ஒருவன் அங்கு வந்தான். அவன் பெயர் யவீரு. அவன் இயேசுவைப் பார்த்ததும் அவரைப் பணிவுடன் குனிந்து வணங்கினான். 23அவன் இயேசுவை மேலும் மேலும் பணிந்தான். அவன் "என்னுடைய சின்ன மகள் செத்துக்கொண்டிருக்கிறாள். தயவு செய்து அங்கு வந்து அவள் மீது உங்கள் கைகளை வைக்க வேண்டும். அதனால் அவள் குணம் பெற்று வாழ்வாள்" என்றான். 24ஆகையால் இயேசு அவனுடன் சென்றார். ஏராளமான மக்கள் இயேசுவைப் பின்தொடர்ந்தனர். அவர்கள் அவரை நெருக்கிக்கொண்டு சென்றனர்.

25அம்மக்களின் நடுவில் ஒரு பெண்ணும் இருந்தாள். அவள் பன்னிரண்டு ஆண்டுகளாக இரத்தப் போக்கால் அவதிப்பட்டு வந்தாள். 26அவள் மிகவும் துன்பப்பட்டு விட்டாள். ஏராளமான மருத்துவர்கள் அவளுக்கு உதவ முயற்சி செய்தனர். அவளிடமிருந்த செல்வமெல்லாம் செலவழிந்தது. ஆனால் குணமாகவில்லை. அவள் மேலும் நோயால் துன்பபட்டாள். 27அவள் இயேசுவைப்பற்றி கேள்விப்பட்டிருந்தாள். ஆகையால் அவள் இயேசுவிடம் கூட்டத்திற்குள் வந்தாள். அவள் இயேசுவின் மேலாடையைத் தொட்டாள். 28அவளோ, "நான் அவரது ஆடையைத் தொட்டாலே போதும். நான் குணமாகிவிடுவேன்" என்று நம்பினாள். 29அவள் இயேசுவின் மேலாடையைத் தொட்டதும் அவளது இரத்தப்போக்கு நின்றது. தான் நோயிலிருந்து குணமாகிவிட்டதை அவள் சரீரத்தில் உணர்ந்தாள். 30இயேசுவும் தன்னிடமிருந்து வல்லமை வெளிப்பட்டதை அறிந்தார். எனவே, அவர் நின்று சுற்றிலும் பார்த்தார். பிறகு அவர், "என் ஆடையைத் தொட்டது யார்?" என்று கேட்டார்.

31இதனைக் கேட்டதும் சீஷர்கள் "போதகரே, ஏராளமான மக்கள் உங்களை நெருக்கிக் கொண்டு வருகிறார்கள். 'யார் என்னைத் தொட்டது' என்று கேட்கிறீரே" என்றனர்.

32ஆனால் இயேசுவோ தன்னைத் தொட்டவருக்காகத் தொடர்ந்து பார்த்துக் கொண்டிருந்தார். 33அந்தப் பெண்ணும் தான் முழுமையாகக் குணம் பெற்றதை உணர்ந்தாள். எனவே அவள் இயேசுவின் முன்வந்து அவரைப் பணிந்தாள். அவள் பயத்தால் நடுங்கினாள். அவள் தன் கதை முழுவதையும் இயேசுவிடம் கூறினாள். 34இயேசு அவளிடம், "அன்பான பெண்ணே! உன் விசுவாசத்தினால் நீ சுகமானாய். சமாதானமாகச் செல். இனிமேல் உனக்கு ஒரு துன்பமும் இல்லை" என்றார்.

35இவ்வாறு இயேசு அங்கே பேசிக்கொண்டிருந்தபோது யவீருவின் வீட்டிலிருந்து சிலர் வந்தனர். அவர்கள் யவீருவிடம், "ஐயா, உங்கள் மகள் இறந்து போனாள். எனவே, இனிமேல் இந்தப்போதகருக்கு (இயேசுவுக்கு) எந்தத் தொந்தரவும் கொடுக்கவேண்டாம்" என்றனர்.

36அந்த மக்கள் சொன்னதைப் பற்றி இயேசு கவலைப்படவில்லை. அந்த ஜெப ஆலயத் தலைவரிடம் இயேசு, "பயப்பட வேண்டாம். விசுவாசத்துடன் இரு" என்று கூறினார்.

37மற்ற அனைவரையும் விட்டு பேதுரு,
யாக்கோபு, யாக்கோபுவின் சகோதரனான
யோவான் ஆகியோரை மட்டும் தன்னுடன்
வர இயேசு அனுமதித்தார். 38இயேசு இம்
மூன்று சீஷர்களோடு மட்டும் யவீருவின்
வீட்டுக்குச் சென்றார். அங்கு நிறையப்பேர்
கதறி அழுது கொண்டிருப்பதைக் கண்டார்.
அந்த இடம் ஒரே குழப்பமாய் இருந்தது.
39இயேசு அவ்வீட்டுக்குள் நுழைந்து அவர்
களிடம், “ஏன் நீங்கள் இவ்வளவு அழுது
சத்தமிடுகிறீர்கள்? இக்குழந்தை சாகவில்லை.
இது தூங்கிக் கொண்டுள்ளது” என்றார்.
40இதைக் கேட்ட மக்கள் இயேசுவைப் பார்த்து
சிரித்தார்கள். இயேசு அம்மக்களை வீட்டை
விட்டு வெளியேறுமாறு கேட்டுக் கொண்டார்.
பின்னர் அவர் அக்குழந்தை கிடத்தப்பட்
டிருந்த அறைக்குள் சென்றார். அவர் தன்
னோடு அக்குழந்தையின் தாய், தந்தை,
மூன்று சீஷர்கள் ஆகியோரை மட்டும் அனு
மதித்தார். 41அவர் அந்தக் குழந்தையின்
கையைப்பிடித்துக் கொண்டு, “தலீத் தாகூமி!”
என்று சொன்னார். (அதற்கு சிறுமியே நான்
சொல்கிறேன் நீ எழுந்திரு என்று பொருள்.)
42அச்சிறு பெண்ணும் உடனே எழுந்து நடக்க
ஆரம்பித்தாள். அவளுக்கு அப்போது பன்னி
ரண்டு வயது. அப்பெண்ணின் தாயும், தந்தை
யும், சீஷர்களும் வியப்படைந்தனர். 43இயேசு
அப்பெண்ணின் பெற்றோரிடம் இதைப்பற்றி
யாரிடமும் எதுவும் கூறவேண்டாம் என்று
கண்டிப்பாகக் கூறினார். பிறகு அப்பெண்
ணுக்கு உண்ண உணவு அளிக்குமாறு சொன்
னார்.

### தன் சொந்த ஊரில் இயேசு

(மத்தேயு 13:53-58; லூக்கா 4:16-30)

6 அவ்விடத்தைவிட்டு இயேசு தன் சொந்த
ஊருக்குக் கிளம்பினார். அவரது சீஷர்
கள் அவரைப் பின்தொடர்ந்து சென்றனர்.
2ஓய்வு நாளான போது ஜெப ஆலயத்தில்
இயேசு உபதேசம் செய்ய ஆரம்பித்தார்.
நிறைய மக்கள் அதனைக் கேட்டு வியப்புற்
றனர். அவர்கள் “இந்த மனிதர் இந்த உப
தேசங்களை எங்கே இருந்து பெற்றார்? இந்த
அறிவை எப்படிப் பெற்றார்? இவருக்கு
இதனை யார் கொடுத்தது? அற்புதங்களைச்
செய்யும் அதிகாரத்தை எங்கிருந்து பெற்றார்?
3இவர் ஒரு தச்சன் மட்டும்தானே. இவருடைய
தாய் மரியாள் அல்லவா! இவர் யாக்கோபு,
யோசே, சீமோன் ஆகியோரின் சகோதரர்
அல்லவா. இவரது சகோதரிகள் நம்முடன்
தானே இருக்கிறார்கள்” என்று பேசிக்கொண்
டார்கள். அவர்கள் இயேசுவை ஏற்றுக்கொள்
ளாமல் இருந்தனர்.

இயேசு மக்களைப் பார்த்து, “ஒரு தீர்க்க
தரிசியை மற்ற மக்களே மரியாதை செய்வர்.
ஆனால் அவர் சொந்த ஊரில் சொந்த மக்களி
டம் சொந்த வீட்டில் மரியாதை பெறுவ
தில்லை” என்றார். 5இயேசு அந்த ஊரில்
அதிக அளவில் அற்புதங்களைச் செய்ய இயல
வில்லை. அவர் நோயுற்ற சிலரின் மேல்
தன் கையை வைத்து குணமாக்கும் சில
செயல்களை மட்டுமே செய்தார். 6அங்குள்ள
மக்களுக்கு விசுவாசம் இல்லாதது பற்றி
இயேசு மிகவும் ஆச்சரியப்பட்டார்.

பிறகு இயேசு அந்தப் பகுதியில் உள்ள
மற்ற கிராமங்களுக்கும் போய் உபதேசம் செய்
தார். 7அவர் தனது பன்னிரண்டு சீஷர்களை
யும் ஒன்றாக அழைத்தார். அவர்களை இரண்
டிரண்டு பேராக வெளியே அனுப்பினார்.
அசுத்த ஆவிகளின்மேல் அவர்களுக்கு அதி
காரத்தைக் கொடுத்தார். 8அவர் தன் சீஷர்
களிடம், “உங்கள் பயணத்துக்கு எதுவும் எடுத்
துச்செல்ல வேண்டாம். நடந்து செல்ல வசதி
யாக ஒரு கைத்தடியை மட்டும் எடுத்துச்
செல்லுங்கள். உணவையோ, பையையோ,
கச்சைகளில் பணத்தையோ எடுத்துச்செல்ல
வேண்டாம். 9செருப்பை அணிந்து கொள்ளுங்
கள். ஆடைமட்டும் அணிந்து கொள்ளுங்கள்.
10நீங்கள் ஒரு வீட்டுக்குள் நுழைந்ததும், அந்த
ஊரை விட்டு நீங்கும் வரை அங்கேயே தங்கி
இருங்கள். 11“எந்த ஊராவது உங்களை
ஏற்றுக்கொள்ள மறுத்தாலோ அல்லது உங்
கள் உபதேசங்களைக்கேட்க மறுத்தாலோ
அந்த ஊரைவிட்டு விலகுங்கள். உங்கள்
கால்களில் படிந்துள்ள தூசியையும் அங்
கேயே உதறிவிட்டுச் செல்லுங்கள். அவர்
களுக்கு இது ஒரு எச்சரிக்கையாக இருக்கும்”
என்றார்.

12சீஷர்கள் அந்த இடத்தை விட்டு விலகிப்
பல இடங்களுக்கும் சென்றனர். அவர்கள் மக்க
ளிடம் உபதேசம் செய்தனர். தங்கள் மனதை
யும், வாழ்க்கையையும் மாற்றிக்கொள்ளுமாறு
போதித்தனர். 13அவர்கள் பல பிசாசுகளை
மக்களிடமிருந்து விரட்டினர். அவர்கள்
நோயுற்ற மனிதர்களுக்கு ஒலிவ எண்ணை
யைத் தடவிக் குணப்படுத்தினர்.

### இயேசுவைப் பற்றிய ஏரோதுவின் தவறான கணிப்பு

(மத்தேயு 14:1-12; லூக்கா 9:7-9)

14இயேசு பிரபலமானபடியால் ஏரோது
மன்னன் இயேசுவைப் பற்றிக் கேள்விப்பட்
டான். சில மக்கள், “இயேசுதான் யோவான்
ஸ்நானகன். அவன் மரணத்தில் இருந்து எழுந்
திருக்கிறான். அதனால்தான் அவரால் இது
போன்ற அற்புதங்களைச் செய்ய முடிகிறது”
என்றனர்.

15இன்னும் சிலர், “இவர்தான் எலியா”
என்றனர். மேலும் சிலரோ, “இயேசு ஒரு
தீர்க்கதரிசி. இதற்கு முன்னால் வாழ்ந்த பல
தீர்க்கதரிசிகளைப் போன்று இவரும் ஒருவர்”
என்று சொல்லிக் கொண்டனர்.

16இயேசுவைப் பற்றிய இது போன்ற பல
செய்திகளை ஏரோது அறிந்து கொண்டான்.

அவன், “நான் யோவானின் தலையை வெட்
டிக் கொன்றுவிட்டேன். இப்போது யோவான்
மரணத்தில் இருந்து எழுந்து விட்டான்”
என்று சொன்னான்.

### யோவான் ஸ்நானகனின் மரணம்

17ஏரோது தன் வீரர்களுக்கு யோவானைக்
கைது செய்யுமாறு ஆணையிட்டான். அவ
னைச் சிறையில் அடைத்தான். தன் மனைவி
யைச் சந்தோஷப்படுத்துவதற்காகவே அவன்
இவ்வாறு செய்தான். அவள் பெயரே ஏரோதி
யாள். இவள் முதலில் ஏரோதுவின் சகோ
தரனான பிலிப்புவின் மனைவியாக இருந்
தாள். ஆனால் அவளைப் பின்னர் ஏரோது
மணந்து கொண்டான். 18ஏரோதிடம் இவ்வாறு
சகோதரனின் மனைவியை மணந்து கொள்
வது சரியன்று என யோவான் எடுத்துக்
கூறினான். 19எனவே ஏரோதியாள் யோவா
னைக் வெறுத்தாள். அவள் அவனைக்
கொல்ல விரும்பினாள். ஆனால் அவளால்
யோவானைக்கொன்று விடுமாறு ஏரோது
வைத் தூண்டிவிட முடியவில்லை 20யோவா
னை கொல்ல ஏரோது பயந்தான். யோவான்
ஒரு நல்ல பரிசுத்தமான மனிதன் என்று
மக்கள் நம்புவதை அவன் அறிந்திருந்தான்.
ஆகையால் ஏரோது யோவானைக் காப்
பாற்றி வந்தான். யோவானின் போதகத்தைக்
கேட்பதில் ஏரோது பெருமகிழ்ச்சி அடைந்
தான். ஆனால் அவனது போதகம் ஏரோதை
உறுத்தியது.

21பிறகு யோவானைக் கொல்வதற்குப்
பொருத்தமான வாய்ப்பு ஒன்று ஏரோதியா
ளுக்குக் கிடைத்தது. இது ஏரோதின் பிறந்த
நாளன்று நிகழ்ந்தது. தன் பிறந்த நாளன்று
ஏரோது மிகமுக்கியமான அரசு அதிகாரிக
ளுக்கும், மிகமுக்கியமான இராணுவ அதிகாரி
களுக்கும், கலிலேயாவின் பெரிய மனிதருக்
கும் விருந்து கொடுத்தான். 22ஏரோதியாளின்
மகள் அந்த விருந்திற்கு வந்து நடனமாடி
னாள். அவள் ஆடும்போது, ஏரோதும் அவ
னைச் சார்ந்தவர்களும் மகிழ்ச்சியோடு உண்ட
னர்.

ஆகையால் ஏரோது மன்னன் அவளிடம்,
“நீ விரும்பும் எதையும் உனக்குத் தருவேன்”
என்று உறுதி கூறினான். 23“நீ எதைக் கேட்
டாலும் தருவேன், எனது இராஜ்யத்தில் பாதி
யைக் கேட்டாலும் தருவேன்” என்று சத்தியம்
செய்தான்.

24அந்தப் பெண் தன் தாயிடம்சென்று, “நான்
ஏரோது மன்னனிடம் எனக்கு என்ன வேண்
டும் என்று கேட்பது?” எனக் கேட்டாள்.

அவளது தாயோ, “யோவான் ஸ்நானக
னின் தலையைக் கேள்” என பதிலளித்தாள்.

25உடனே விரைவாக அவள் மன்னனிடம்
திரும்பி வந்தாள். அவள் மன்னனிடம்,
“யோவான் ஸ்நானகனின் தலையை எனக்
குத் தாருங்கள். உடனே எனக்கு அதனைத்
தட்டில் வைத்துத் தரவேண்டும்” என்று கேட்
டாள். 26ஏரோது மன்னன் இதைக்கேட்டு வருத்
தப்பட்டான். ஆனால் அவள் விரும்பும் எதை
யும் தந்து விடுவதாக ஏற்கெனவே அவளிடம்
ஆணையிட்டு சத்தியம் செய்து விட்டான்.
மன்னனோடு உணவருந்திக்கொண்டிருந்த
பெரிய மனிதர்களும் அவனது ஆணையை
அறிந்திருந்தனர். ஆகையால் அவனால் அப்
பெண்ணின் வேண்டுகோளை மறுக்கமுடிய
வில்லை. 27உடனே யோவானின் தலையை
வெட்டிக் கொண்டுவருமாறு ஒரு வீரனிடம்
மன்னன் கட்டளையிட்டான். ஆகையால் அந்த
வீரன் போய் சிறைக்குள் இருந்த யோவானின்
தலையை வெட்டினான். 28பிறகு யோவானின்
தலையை ஒரு தட்டில் வைத்து எடுத்துக்
கொண்டுவந்தான். அவன் அந்தத் தலையை
அப்பெண்ணிடம் கொடுத்தான். அப்பெண்
அதனைத் தன்தாயிடம் கொடுத்தாள். 29அங்கு
நடந்ததைப்பற்றி யோவானின் சீஷர்கள் அறிந்
துக்கொண்டு, வந்து யோவானின் சரீரத்தைப்
பெற்றுச் சென்றனர். அவர்கள் அதனை ஒரு
கல்லறையில் அடக்கம் செய்தனர்.

### ஐயாயிரத்துக்கு மேற்பட்ட மக்களுக்கு உணவு அளித்தல்

(மத்தேயு 14:13-21; லூக்கா 9:10-17;
யோவான் 6:1-14)

30இயேசுவால் உபதேசம்செய்ய அனுப்பப்
பட்ட அவரது சீஷர்கள் அவரிடம் வந்தனர்.
அவர்கள் இயேசுவைச் சுற்றிக் கூடித் தாம்
அனைவரும் செய்தவற்றையும் கற்பித்தவற்
றையும் அவரிடம் சொன்னார்கள். 31இயேசு
வும், அவரது சீஷர்களும் மக்கள் நெருக்கடி
மிக்க இடத்தில் இருந்தனர். அம்மக்கள் அள
வில் மிக அதிகமாக இருந்தனர். இயேசுவுக்
கும், அவரது சீஷர்களுக்கும் உணவு உட்
கொள்ளக் கூட நேரம் இல்லாமல் இருந்தது.
இயேசு தன் சீஷர்களிடம் “என்னோடு வாருங்
கள். நாம் அமைதியான தனி இடத்துக்குப்
போவோம். அங்கு நாம் ஓய்வு எடுக்கலாம்”
என்றார்.

32எனவே, இயேசுவும் அவரது சீஷர்களும்
தனியாகச் சென்றனர். மக்களே இல்லாத இடத்
துக்கு அவர்கள் படகில் சென்றனர். 33ஆனால்
அவர்கள் செல்வதை நிறைய மக்கள் கண்ட
னர். அந்த மக்களுக்கு அவர் இயேசு என்று
தெரிந்தது. எனவே இயேசு செல்லுகிற இடத்
துக்கு எல்லா நகர்களிலிருந்தும் ஏராளமான
மக்கள் அங்கே ஓடினர். இயேசு போய்ச் சேர்
வதற்கு முன்னரே அவர்கள் போய்ச் சேர்ந்து
விட்டனர். 34இயேசு அங்கே போய்ச் சேர்ந்ததும்
தனக்காக ஏராளமான மக்கள் காத்திருப்பதை
அறிந்தார். அவர் அவர்களுக்காக மனம் உரு
கினார். ஏனென்றால், அவர்கள் மேய்ப்பன்
இல்லாத மந்தையைப் போன்று கவனிக்க
ஆளில்லாமல் இருந்தனர். எனவே அவர்
களுக்கு இயேசு நிறைய உபதேசம் செய்தார்.

35அன்று அதிக நேரமாயிற்று. எனவே,
இயேசுவின் சீஷர்கள் அவரிடம் வந்தனர்.
அவர்கள், "இங்கு எந்த மக்களும் வாழ
வில்லை, மற்றும் வெகு நேரமாகிவிட்டது.
36எனவே மக்களை அனுப்பிவிடும். அவர்
களும் சுற்றி இருக்கிற பண்ணைகளுக்கும்,
நகர்களுக்கும் சென்று தேவையான உணவுப்
பொருள்களை அவர்களாகவே வாங்கிக்
கொள்வார்கள்" என்றனர்.

37ஆனால் இயேசுவோ, "அவர்களுக்கு
உண்ண நீங்கள் ஏதாவது கொடுங்கள்" என்
றார்.

சீஷர்களோ இயேசுவிடம், "இவர்கள்
அனைவரும் உண்ணுகிற அளவுக்கு நம்மால்
அப்பத்தை வாங்கத் தேவையான பணத்துக்கு
நாம் அனைவரும் ஒரு மாதக் காலத்துக்கு
உழைத்துப் பணம் சம்பாதிக்க வேண்டும்"
என்றனர்.

38இயேசு, தன் சீஷர்களிடம், "உங்களிடம்
எத்தனை அப்பங்கள் உள்ளன. போய்ப்
பாருங்கள்" என்றார்.

சீஷர்கள் தங்களிடம் உள்ள அப்பங்களை
எண்ணிப் பார்த்து விட்டு இயேசுவிடம் வந்து,
"நம்மிடம் ஐந்து அப்பங்களும் இரண்டு மீன்
களும் உள்ளன", என்றார்கள்.

39பிறகு இயேசு சீஷர்களிடம், "புல்லின்
மேல் மக்கள் சிறு சிறு குழுக்களாக உட்காரும்
படி சொல்லுங்கள்" என்றார். 40ஆகவே எல்லா
மக்களும் குழுக்களாக அமர்ந்தனர். ஒவ்வொரு
குழுவிலும் 50 அல்லது 100 பேர் இருந்தனர்.
41இயேசு ஐந்து அப்பங்களையும் இரண்டு
மீன்களையும் எடுத்துக்கொண்டார். அவர்
வானத்தை ஏறிட்டுப்பார்த்தார். அந்த அப்பங்
களுக்காக தேவனுக்கு நன்றி சொன்னார்.
பின்னர் இயேசு அப்பங்களை பங்கு வைத்துத்
தன் சீஷர்களிடம் கொடுத்தார். அவற்றை மக்
களுக்குக் கொடுக்குமாறு சொன்னார். மீனை
யும் அவ்வாறே பங்கிட்டு எடுத்துக் கொடுத்
தார். 42எல்லா மக்களும் திருப்தியாக உண்
டனர். 43மக்கள் உண்டு முடித்ததும் எஞ்சி
யுள்ளவற்றைச் சீஷர்கள் பன்னிரண்டு கூடை
கள் நிறைய சேகரித்தனர். 44ஏறக்குறைய ஐயா
யிரம் ஆண்கள் அன்று உணவு உண்டனர்.

### இயேசு கடலின் மேல் நடத்தல்
(மத்தேயு 14:22-33; யோவான் 6:15-21)

45பிறகு இயேசு சீஷர்களிடம் படகில் ஏறு
மாறு சொன்னார். கடலின் அக்கரையில்
உள்ள பெத்சாயிதாவுக்குப் போகும்படி கூறி
னார். தான் பிறகு வருவதாக இயேசு கூறி
யனுப்பினார். இயேசு அங்கே இருந்து அந்த
மக்களைத் தம் வீடுகளுக்குச் செல்லுமாறு
சொன்னார். 46அந்த மக்களை இயேசு வழி
யனுப்பியபின்பு பிரார்த்தனை செய்வதற்காக
மலைக்குச் சென்றார்.

47அன்று இரவு, அந்தப் படகு கடலின் நடு
விலேயே இருந்தது. இயேசுவோ தனியே கரை
யிலேயே இருந்தார். 48கடலில் வெகுதூரம் படகு
போய்விட்டதைக் கவனித்தார். அவரது சீஷர்
கள் மிகவும் கஷ்டப்பட்டு துடுப்பு போடுவதை
யும் அறிந்தார். காற்றானது அவர்களுக்கு எதி
ராக அடித்துக்கொண்டிருந்தது. அதிகாலை
யில், மூன்று மணிக்கும் ஆறு மணிக்கும்
இடைப்பட்ட நேரத்தில் அவர் தண்ணீரின்
மேல் நடந்து நெருங்கினார். அவர்களைக்
கடந்து போகிறவர் போல் காணப்பட்டார்.
49இயேசுவின் சீஷர்கள் அவர் தண்ணீரின்
மேல் நடந்து போய்க்கொணடிருப்பதைக் கண்
டனர். அவர்கள் அவரை ஒரு ஆவி என்று
நினைத்தனர். அவர்கள் அச்சத்தோடு கூச்
சலிட்டனர். 50எல்லாரும் இயேசுவைப் பார்த்து
பயந்தனர். ஆனால் இயேசுவோ அவர்களிடம்,
"கவலைப்படாதீர்கள், நான் தான் பயப்படாதி
ருங்கள்" என்று தேற்றினார். 51பிறகு அவர்
சீஷர்கள் இருந்த படகினுள் ஏறிக்கொண்டார்.
காற்று அமைதியாயிற்று சீஷர்கள் பெரிதும்
பிரமித்தார்கள். 52அவர்கள் இயேசு ஐந்து அப்
பங்களில் இருந்து மிகுதியான அப்பங்களை
உருவாக்கியதைப் பார்த்தார்கள். ஆனால் அத
னுடைய பொருளை அவர்களால் அறிந்து
கொள்ள முடியவில்லை. அதை அறிந்துகொள்
ளும் சக்தியும் அவர்களுக்கு இல்லை.

53இயேசுவின் சீஷர்கள் அக்கடலைக் கடந்த
னர். அவர்கள் கெனெசரேத்தின் கரைக்கு வந்த
னர். அங்கே படகைக் கட்டி வைத்தனர். 54அவர்
கள் படகை விட்டு இறங்கியபோது மக்கள்
இயேசுவைப் பார்த்தனர். அவர் யாரென்று
அவர்கள் அறிந்து கொண்டனர். 55அம்மக்கள்
ஓடிப்போய் அப்பகுதிகளில் உள்ள மக்களிடம்
இயேசு அங்கே இருக்கிறார் என்பதை அறி
வித்தார்கள். இயேசு போகிற எல்லா இடங்
களிலும் மக்கள் நோயாளிகளைப் படுக்கை
யோடு எடுத்து வந்தனர். 56அந்தப் பகுதிகளில்
உள்ள ஊர்களுக்கும் நகரங்களுக்கும் பண்
ணைகளுக்கும் இயேசு சென்றார். இயேசு
எங்கே சென்றாலும் அங்குள்ள மக்கள் நோயா
ளிகளை அவரிடம் எடுத்து வந்தனர். அவர்
கள் இயேசுவிடம் அவரது ஆடை நுனியையா
வது தொடுவதற்கு அனுமதி கேட்டனர்.
அவரைத் தொட்டவர்கள் எல்லோரும் குணம
டைந்தனர்.

### தேவனுடைய பிரமாணங்களும் மனிதர் உருவாக்கிய விதிமுறைகளும்
(மத்தேயு 15:1-20)

7 எருசலேமிலிருந்து சில பரிசேயர்களும்,
சில வேதபாரகர்களும் வந்தனர். அவர்
கள் இயேசுவைச் சுற்றிக் கூடினர். 2இயேசு
வின் சீஷர்களில் சிலர் சுத்தமற்ற கைகளால்
உணவு உண்பதை அவர்கள் கவனித்தார்கள்.
(சுத்த மற்ற கை என்றால் பரிசேயர்கள்
சொன்ன முறைப்படி அவர்கள் தம்
கைகளைக் கழுவாமல் இருந்தனர்) 3பரிசேயர்
களும், யூதர்களனைவரும் இத்தகு சிறப்பான

முறையில் தம் கைகளைக் கழுவுவதற்கு முன் னால் உணவு உண்பதில்லை. அவர்கள் இதனை அவர்களின் முன்னோர் சொன்னபடி தொடர்ந்து செய்து வருகின்றனர்.
[4]யூதர்கள் சந்தையில் ஏதாவது வாங்கும் போது, அதனைத் தனியான முறையில் கழுவிச் சுத்தப் படுத்தும் முன் அவர்கள் அதை உண்பதில்லை. இதைப் போன்று அவர்கள் பல விதிகளைத் தங்கள் முன்னோரிடமிருந்து பெற்றுக் கடைப்பிடித்தனர். கிண்ணங்கள், குடங்கள், வெண்கலப் பாத்திரங்கள் போன்றவற்றைக் கழுவுவது ஆகியவற்றைக் கடைப் பிடித்தனர்.

[5]பரிசேயர்களும், வேதபாரகர்களும் இயேசுவிடம், "உம்முடைய சீஷர்கள் நமக்குமுன்பு வாழ்ந்த முன்னோர்களின் விதிமுறைகளைக் கைக்கொள்ளவில்லையே? உம்முடைய சீஷர்கள் சுத்தமற்ற கைகளால் தம் உணவை உண்டு வருகிறார்கள். ஏன் இவ்வாறு செய்கிறார்கள்?" என்று கேட்டனர்.

[6]இயேசு அவர்களிடம் "நீங்கள் எல்லாரும் போலித்தனமானவர்கள். உங்களைப் பற்றி ஏசாயா சரியாகவே எழுதியிருக்கிறான். அவன் எழுதியிருப்பது:

'இந்த மக்கள் என்னை மதிப்பதாய்ச் சொல்கிறார்கள். ஆனால் உண்மையில் அவர்கள் தம் வாழ்வில் எனக்கு முக்கியத்துவம் கொடுக்கவில்லை.
[7] அவர்களின் வழிபாடு ஒரு பயனுமற்றது. அவர்கள் உபதேசிக்கும் விதிமுறைகள் எல்லாம் மனிதர்களால் உருவாக்கப் பட்டவை.'

ஏசாயா 29:13

[8]நீங்கள் தேவனின் கட்டளைகளைப் பின் பற்றுவதை நிறுத்தி இருக்கிறீர்கள். இப்பொழுது நீங்கள் மனிதனின் போதனைகளைக் கடைப்பிடித்து வருகிறீர்கள்" என்றார்.

[9]மேலும் இயேசு அவர்களிடம், "நீங்கள் சமர்த்தராக இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் உங்கள் சொந்த போதனையை பின்பற்றுவதற்காக தேவனின் கட்டளைகளைப் புறக்கணித்து விட்டீர்கள்.
[10]'உங்கள் தாய்க்கும் தந்தைக்கும் மதிப்புகொடுங்கள்'* என்று மோசே சொல்லி இருக்கிறான். மேலும் அவன் 'எவன் ஒருவன் தன் தந்தையிடமோ அல்லது தாயிடமோ கெட்டவற்றைப் பேசுகிறானோ அவன் கொலை செய்யப்படத் தக்கவன்'* என்று கூறி இருக்கிறான்.
[11]ஒருவன் தன் தந்தையையோ தாயையோ நோக்கி 'நான் உங்களுக்கு உதவக்கூடியவற்றைச் செய்ய முடியும். ஆனால் நான் உங்களுக்குச் செய்யமாட்டேன். நான் அதனைத் தேவனுக்குத் தருவேன் என்று சொல்ல நீங்கள் கற்றுத் தருகிறீர்கள்.
[12]அவன் தன் தந்தைக்கோ தாய்க்கோ எதுவும் செய்யத் தேவையில்லை என்று கற்பிக்கிறீர்கள்.
[13]ஆகையால் தேவன் சொன்னவற்றைச் செய்வது அவ்வளவு முக்கியமில்லை என்று சொல்லித்தருகிறீர்கள். நீங்கள் சொல்பவற்றை மக்கள் செய்தால் போதும் என்று நினைக்கிறீர்கள். நீங்கள் இது போன்று பல செயல்களைச் செய்து வருகின்றீர்கள்" என்றார்.

[14]மக்களை மீண்டும் இயேசு தன்னிடம் அழைத்தார். அவர் "ஒவ்வொரு மனிதனும் எனக்குச் செவி கொடுக்க வேண்டும். நான் சொல்பவற்றைப் புரிந்து கொள்ளவேண்டும்.
[15]வெளியே இருந்து மனிதனுக்குள்ளே போகும் எதுவும் அவனைத் தீட்டுப்படுத்தாது. அவனது உள்ளத்தில் இருந்து வெளியே வருவது தான் அவனைத் தீட்டுப்படுத்தும்.
[16]நான் சொல்வதைக் கேட்பவர்களே, கவனியுங்கள்" என்றார்.

[17]பின்னர் இயேசு அந்த மக்களிடமிருந்து விலகி வீட்டிற்குள் சென்றார். இந்த உவமையைப்பற்றி அவரது சீஷர்கள் இயேசுவிடம் கேட்டனர்.
[18]"உங்களுக்கு புரிந்துகொள்வதில் இன்னும் சிரமங்கள் உள்ளனவா? வெளியே இருந்து மனிதனுக்குள் செல்லும் எதுவும் அவனைத் தீட்டுப்படுத்தாது என்பது புரியவில்லையா?
[19]உணவானது மனிதனின் மூளைக்குள் செல்வதில்லை. உணவு வயிற்றுக்குள்தான் செல்லும். பிறகு அந்த உணவு உடம்பைவிட்டு வெளியேறிவிடும்" என்றார் இயேசு. (இயேசு இதனைக் கூறும்போது, அவர் மக்கள் உண்ணும் எந்த உணவும் அவர்களைத் தீட்டுப் படுத்தாது என்று உணர்த்தினார்.)

[20]மேலும் இயேசு, "மனிதனுக்குள்ளே இருந்து வெளிவரும் எதுவும் அவனைத் தீட்டுப்படுத்தி விடுகிறது.
[21]கெட்டவை எல்லாம் மனிதனுக்குள்ளே இருந்துதான் பிறக்கின்றன. அவன் மனத்தில் கெட்ட எண்ணங்கள், பாலியல் குற்றங்கள், களவு, கொலை
[22]விபசாரம், சுயநலம், தீயச்செயல்கள், பொய், பொறாமை, புறங்கூறுதல், பெருமை பேசுதல், மூடவாழ்க்கை போன்றவை தோன்றும்.
[23]இத்தகைய கெட்டவை எல்லாம் மனிதனுக்குள்ளே இருந்துதான் வருகின்றன. இத்தீயவையே மனிதனை மாசுபடுத்துபவை" என்றார்.

### யூதரல்லாத பெண்ணுக்கு உதவி
(மத்தேயு 15:21-28)

[24]இயேசு அந்த இடத்தைவிட்டு தீரு பகுதிக்குச் சென்றார். அங்கிருந்த ஒரு வீட்டுக்குச் சென்றார். அங்குதான் அவர் இருக்கிறார் என்பதை அங்குள்ள மக்கள் அறிந்து கொள்ளக்கூடாது என்று இயேசு விரும்பினார். ஆனால் அவர் மக்களின் கவனத்திலிருந்து தப்பிக்க முடியவில்லை.
[25]அவர் அங்கு இருப்

---

**உங்கள் .. கொடுங்கள்** யாத். 20:12, உபா.5:16.

**எவன் ... தக்கவன்** யாத். 21:17.

*பதை ஒரு பெண் கேள்வியுற்றாள். அவளது*
*சிறு மகள், அசுத்த ஆவியை உடையவள்.*
*எனவே, அவள் இயேசுவிடம் வந்து அவரது*
*பாதத்தில் விழுந்து வணங்கினாள்.* **26***அவள்*
*யூதர்குலத்துப் பெண் அல்ல. அவள் கிரேக்கப்*
*பெண். சீரோபேனிக்கேயாவில் பிறந்தவள்.*
*அவள் தன் மகளைப் பிடித்த பிசாசை விரட்டு*
*மாறு கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள்.*

**27***அந்தப் பெண்ணிடம் இயேசு, "பிள்ளை*
*களின் அப்பத்தை எடுத்து நாய்களிடம்*
*கொடுப்பது சரியன்று. முதலில் பிள்ளைகள்*
*தேவையான அளவு உண்ணட்டும்" என்றார்.*

**28***"அது உண்மைதான் ஆண்டவரே.*
*பிள்ளைகள் உண்ணாத உணவுத் துணுக்*
*குகளை மேசைக்கடியில் உள்ள நாய்கள்*
*உண்ணலாமே" என்று அவள் பதில் சொன்*
*னாள்.*

**29***பிறகு அந்தப் பெண்ணிடம் இயேசு, "இது*
*நல்ல பதில். நீ போகலாம். பிசாசு உன்*
*மகளை விட்டுப் போய்விட்டது" என்றார்.*

**30***அந்தப் பெண் வீட்டுக்குப் போனாள். தன்*
*குழந்தை படுக்கையில் படுத்திருப்பதைக் கண்*
*டாள். பிசாசு அவளை விட்டு நீங்கி இருந்தது.*

### *செவிட்டு மனிதனைக் குணமாக்குதல்*

**31***பிறகு இயேசு தீரு பகுதியை விட்டு விலகி*
*சீதோன் பகுதிக்குச் சென்றார். அங்கிருந்து*
*அவர் கலிலேயா கடற்கரைக்குச் சென்றார்.*
*.அங்கு இயேசு தெக்கப்போலி* வழியாக வந்*
*தார்.* **32***அங்கே அவர் இருக்கும்போது மக்கள்*
*ஒரு மனிதனை அவரிடம் அழைத்து வந்தனர்.*
*அவன் ஒரு செவிடன். அவனால் பேசவும்*
*முடியாது. அவனைக் குணப்படுத்தும் பொ*
*ருட்டு அவன்மீது இயேசு தன் கையை வைக்கு*
*மாறு அவரிடம் அவர்கள் கெஞ்சிக் கேட்டனர்.*

**33***இயேசு அவனை அந்த மக்களிடமிருந்து*
*விலக்கி தனியாய் அழைத்துச் சென்றார்.*
*அவர் தனது விரல்களை அவன் காது மீது*
*வைத்தார். பிறகு இயேசு உமிழ்ந்து அவனது*
*நாவையும் தொட்டார்.* **34***இயேசு ஆகாயத்தைப்*
*பார்த்து பெருமூச்சு விட்டார். பிறகு அந்த*
*மனிதனிடம் இயேசு, "எப்பத்தா" என்றார்.*
*(அதற்குத் "திறக்கப்படுவாயாக" என்று பொ*
*ருள்)* **35***இயேசு இதனைச் செய்ததும் அந்த*
*மனிதனால் கேட்க முடிந்தது. பிறகு அவனால்*
*நாவைப் பயன்படுத்தி தெளிவாகப் பேசவும்*
*முடிந்தது.*

**36***நடந்ததைப்பற்றி எவரிடமும் சொல்ல*
*வேண்டாம் என்று இயேசு மக்களைக் கேட்டுக்*
*கொண்டார். இயேசு எப்போதும் தன்னைப்*
*பற்றி எவரிடமும் கூறவேண்டாம் என்றே கட்*
*டளையிடுவார். ஆனால் இது மக்களை இயேசு*
*வைப்பற்றி மற்றவர்களிடம் மேலும் மேலும்*
*சொல்ல வைத்தது.* **37***மக்கள் அவரைப்பற்றி*
*மிகவும் பிரமித்துப் போனார்கள். அவர்கள்,*
*"இயேசு எல்லாவற்றையும் நல்ல முறையில்*
*செய்கிறார். அவர் செவிடர்களைக் கேட்க*
*வைக்கிறார். ஊமைகளைப் பேச வைக்கி*
*றார்" என்று பேசிக் கொண்டனர்.*

### *நாலாயிரம் பேருக்கு மேல் உணவளித்தல்*
(*மத்தேயு 15:32-39*)

**8** *இயேசுவுடன் மற்றொருமுறை ஏராளமான*
*மக்கள் இருந்தனர். மக்களுக்கு உண்ண*
*உணவில்லாமல் இருந்தது. ஆகையால் இயேசு*
*தன்னிடம் சீஷர்களை அழைத்தார்.* **2***"நான்*
*இம்மக்களுக்காகப் பெரிதும் வருந்துகிறேன்.*
*அவர்கள் என்னோடு மூன்று நாட்களாக*
*இருக்கிறார்கள். அவர்களுக்கு இப்போது*
*உணவில்லை.* **3***அவர்களைப் பசியோடு வீட்*
*டுக்கு அனுப்ப நான் விரும்பவில்லை. அவர்*
*கள் உண்ணாமல் போனால், வழியில் சோர்*
*வடைந்து விடலாம். சிலர் இங்கிருந்து வெகு*
*தூரத்துக்குச்செல்ல வேண்டும்" என்றார்.*

**4***இயேசுவின் சீஷர்களோ, "நாம் எந்த*
*ஊருக்கும் அருகில் இல்லை. இங்குள்ள*
*அனைவருக்கும் உணவளிக்க நாம் எங்கி*
*ருந்து உணவுகளைப் பெறுவது?" என்று*
*கேட்டனர்.*

**5***"உங்களிடம் எத்தனை அப்பங்கள் இருக்*
*கின்றன?" என்று இயேசு கேட்டார்.*

*"எங்களிடம் ஏழு அப்பங்கள் மட்டுமே*
*உள்ளன" என்று சீஷர்கள் கூறினர்.*

**6***இயேசு அந்த மக்களைத் தரையில் உட்*
*காரச் சொன்னார். பிறகு அவர் ஏழு அப்பங்*
*களையும் எடுத்து தேவனுக்கு நன்றி சொன்*
*னார். இயேசு அப்பங்களைப் பங்குவைத்து*
*சீஷர்களிடம் கொடுத்தார். அவற்றை மக்களுக்*
*குக் கொடுக்குமாறு இயேசு கேட்டுக் கொண்*
*டார். சீஷர்கள் அவர் சொன்னபடி செய்தனர்.*
**7***அச்சீஷர்கள் சில மீன்களையும் வைத்திருந்*
*தனர். அவற்றையும் இயேசு வாங்கிப் பிரார்த்*
*தனை செய்து மக்களுக்குக் கொடுக்கும்படி*
*சீஷர்களிடம் கூறினார்.* **8***அனைத்து மக்களும்*
*திருப்தியாக உண்டனர். பிறகு மீதியான*
*உணவுப்பொருட்களை ஏழு கூடைகள் நிறை*
*யச் சேர்த்தனர்.* **9***அங்கே ஏறக்குறய 4000 ஆண்*
*கள் இருந்தனர். அவர்கள் உண்ட பின்னர்,*
*வீட்டிற்கு அனுப்பிவைத்தார்.* **10** *பிறகு இயேசு*
*ஒரு படகில் ஏறி தன் சீஷர்களோடு தல்ம*
*னூத்தா பகுதிக்குச் சென்றார்.*

### *பரிசேயர்களின் சோதனை*
(*மத்தேயு 16:1-4*)

**11***பரிசேயர்கள் இயேசுவிடம் வந்து சில*
*கேள்விகள் கேட்டனர். அவர்கள் அவரைச்*
*சோதிக்க விரும்பினர். அவர் தேவனிடம்*
*இருந்து வந்தவர் என்பதை நிரூபிக்க ஒரு*
*அற்புதத்தைச் செய்யுமாறு அவர்கள் கேட்*
*டனர்.* **12** *இயேசு வருத்தத்தோடு பெரு மூச்சு*

---

***தெக்கப்போலி*** *பத்து நகரங்கள் என்பது கிரேக்க சொல். இது கலிலேயா ஏரியின் கீழ்ப்பக்கத்தில் உள்ளது. ஒரு காலத்தில் இங்கு பத்து முக்கியமான நகரங்கள் இருந்தன.*

விட்டார். அவர், “எதற்காக மக்கள் அற்புதங்
களை ஒரு ஆதாரமாகப் பார்க்க விரும்பு
கிறார்கள்? நான் உண்மையைக் கூறுகிறேன்.
அத்தகைய எந்த ஆதாரமும் உங்களுக்குக்
கொடுக்கப்படமாட்டாது” என்று கூறினார்.
13பிறகு இயேசு பரிசேயர்களை விட்டு விலகி,
படகில் ஏறி அக்கரைக்குப் போனார்.

## யூதத் தலைவர்களைப் பற்றிய இயேசுவின் எச்சரிக்கை

(மத்தேயு 16:5-12)

14அவர்கள் படகில் போகும் போது, சீஷர்
களிடம் ஒரே ஒரு அப்பம் மட்டுமே இருந்தது,
அவர்கள் போதுமான அப்பங்களைக் கொண்
டுவர மறந்துவிட்டார்கள். 15அவர்களை இயேசு
எச்சரித்தார். “கவனமாக இருங்கள். நீங்கள்
பரிசேயருடைய புளித்த மாவைக் குறித்தும்,
ஏரோதின் புளித்த மாவைக் குறித்தும் எச்
சரிக்கையாய் இருங்கள்” என்றார்.

16இயேசுவின் சீஷர்கள் இதன் பொருளைப்
பற்றித் தங்களுக்குள் விவாதம் செய்தார்கள்.
அவர்கள், “நம்மிடம் அப்பம் இல்லாததால்
தான் இயேசு இவ்வாறு கூறுகிறார்” என்று
முடிவு செய்தனர்.

17இதுபற்றி இயேசுவும் அறிந்து கொண்டார்.
எனவே, “அப்பம் இல்லாததைப்பற்றி ஏன்
விவாதித்துக் கொள்கிறீர்கள்? உங்களால்
இன்னும் உண்மையைப் பார்க்கவோ, புரிந்து
கொள்ளவோ முடியவில்லையே! 18உங்களுக்
குக் கண்கள் இருந்தும் காணமுடியாமல் இருக்
கிறீர்களா? காதுகள் இருந்தும் கேட்கமுடியா
மல் இருக்கிறீர்களா? நான் இதற்கு முன்னால்
செய்தவற்றை நினைத்துப்பாருங்கள். நம்மிடம்
போதுமான அப்பங்கள் இல்லாத போது
என்ன செய்தேன்? 19ஐந்து அப்பங்களை ஐயா
யிரம் மக்களுக்கு நான் பங்கிட்டுக் கொடுக்க
வில்லையா? உண்டு மீதியான அப்பங்களை
எத்தனைக் கூடைகளில் நிறைத்தீர்கள் என்று
நினைத்துப் பாருங்கள்” என்றார்.

அதற்குச் சீஷர்கள், “நாங்கள் மீதியான
உணவுப் பொருள்களை பன்னிரண்டு கூடை
களில் நிரப்பினோம்” என்றார்கள்.

20மேலும் இயேசு, “நான் ஏழு அப்பங்களை
நாலாயிரம் மக்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்
ததை நினைத்துப் பாருங்கள். அப்போது எஞ்
சிய உணவுப் பொருளை எத்தனைக் கூடைக
ளில் நிறைத்து வைத்தீர்கள்?” என்று கேட்டார்.

அதற்குச் சீஷர்கள், “அவற்றை ஏழு கூடை
களில் நிறைத்து வைத்தோம்” என்றனர்.

21இயேசு அவர்களிடம், ‘நான் செய்தவற்றை
யெல்லாம் நினைவில் வைத்துள்ளீர்கள்.
ஆனால் இன்னமும் உங்களால் புரிந்து
கொள்ள முடியவில்லையா?” என்றார்.

## குருடன் குணமாக்கப்படுதல்

22இயேசுவும் அவரது சீஷர்களும் பெத்
சாயிதாவுக்கு வந்தனர். சிலர் இயேசுவிடம்
ஒரு குருடனை அழைத்துக்கொண்டு வந்தனர்.
அவர்கள் குருடனைத் தொட்டுக் குணப்படுத்து
மாறு கெஞ்சிக் கேட்டனர். 23ஆகையால் இயேசு
குருடனின் கையைப் பிடித்துக் கொண்டு
ஊருக்கு வெளியே அழைத்து வந்தார். பிறகு
இயேசு அவனது கண்ணில் எச்சிலைத் துப்
பினார். அவன்மீது தன் கையை வைத்து,
“இப்போது உன்னால் கொஞ்சமாவது பார்க்க
முடிகிறதா?” என்று கேட்டார்.

24அக்குருடனால் பார்க்க முடிந்தது. எனவே
அவன், “ஆமாம், நான் மக்களைப் பார்க்கி
றேன். அவர்கள் மரங்களைப்போல் நடமாடு
வதைப் பார்க்க முடிகிறது” என்றான்.

25மேலும் இயேசு அவன் கண்மீது கையை
வைத்தார். அவன் தன் கண்களை அகலமாகத்
திறந்தான். அவனது கண்கள் குணம் பெற்றன.
அவனால் எல்லாவற்றையும் தெளிவாகப்
பார்க்க முடிந்தது. 26இயேசு அவனை வீட்டுக்
குப்போகச் சொன்னார். “நகரத்திற்குள்
போகாதே” என்று இயேசு சொன்னார்.

## இயேசுதான் கிறிஸ்து என்று பேதுரு அறிக்கையிடுதல்

(மத்தேயு 16:13-20; லூக்கா 9:18-21)

27இயேசுவும், அவரது சீஷர்களும் பிலிப்பு
செசரியா நகரத்தைச் சார்ந்த ஊர்களுக்குச்
சென்றனர். அவர்களின் பயணத்தின்போது
“மக்கள் என்னை யார் என்று சொல்கிறார்
கள்?” என்று இயேசு கேட்டார்.

28அதற்குச் சீஷர்கள், “சிலர் உம்மை
யோவான் ஸ்நானகன் என்கின்றனர். சிலர்
உம்மைத் தீர்க்கதரிசிகளில் ஒருவர் என்கின்
றனர்” என்று சொன்னார்கள்.

29பிறகு இயேசு அவர்களிடம், “நீங்கள்
என்னை யார் என்று சொல்கிறீர்கள்?” என்று
கேட்டார். அதற்கு பேதுரு, “நீர்தான் கிறிஸ்து
என்று பதில் கூறினான்.

30இயேசு சீஷர்களிடம், “நான் யார் என்று
எவரிடமும் சொல்லவேண்டாம்” என்றார்.

31பிறகு இயேசு தன் சீஷர்களுக்கு உப
தேசிக்கத் தொடங்கினார். மனிதகுமாரன் பல
வகையில் கஷ்டப்பட வேண்டும். அவர் யூதத்
தலைவர்களால் ஒப்புக்கொள்ளப்படமாட்டார்.
தலைமை ஆசாரியர்களும், வேதபாரகர்களும்
அவரை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். மனித
குமாரன் அவர்களால் கொல்லப்படவேண்டும்.
இறந்த மூன்றாம் நாளில் உயிர்த்தெழுவார்.
32இவ்வாறு இயேசு நடக்கப்போவதையெல்
லாம் எடுத்துக் கூறினார். எதையும் அவர்
இரகசியமாய் வைக்கவில்லை. பேதுரு இயேசு
விடம் தனியே பேசினான். அவர் இவ்வாறு
கூறுவது குறித்து பேதுரு கண்டித்து கூறி
னான். 33ஆனால் இயேசு மறுபக்கம் திரும்பி
தன் சீஷர்களைப் பார்த்தார். பிறகு அவர்
பேதுருவைக் கண்டித்தார். “சாத்தானே!
என்னை விட்டு விலகிப்போ! நீ தேவனுடைய
காரியங்களைப் பற்றிக் கவலைப்படாமல்

*இருக்கிறாய். நீ மனிதர் முக்கியமாகக் கருதும் காரியங்களைப் பற்றி மட்டுமே அக்கறை கொண்டிருக்கிறாய்" என்றார்.*

**34***இயேசு மக்களைத் தம்மிடம் அழைத்தார். அவரது சீஷர்களும் அவரோடு இருந்தனர். பிறகு இயேசு "யாராவது என்னைப் பின்பற்ற விரும்பினால், அவனது விருப்பங்களையெல் லாம் வெறுத்து ஒதுக்க வேண்டும். அவனது சிலுவையைச் சுமந்து என்னைப் பின்தொடர வேண்டும்.* **35***எவனொருவன் தன் வாழ்க்கை யைக் காப்பாற்றிக்கொள்ள விரும்புகிறானோ அவன் அதனை இழப்பவனாகிறான். எவன் ஒருவன் எனக்காகவும் நற்செய்திக்காகவும் தன்னை இழக்கிறானோ அவனது வாழ்க்கை பாதுகாக்கப்படுகிறது.* **36***ஒருவனுக்கு உலகம் முழுவதும் கிடைத்தாலும் நரகத்தில் ஒருவன் தன் ஆத்துமாவை இழந்து போவானேயா னால் அதனால் அவனுக்கு என்ன லாபம்?* **37***ஒருவன் தன் ஆன்மாவைத் திரும்பப் பெற் றுக்கொள்ள எந்த விலையையும் கொடுக்க முடியாது.* **38***இப்போது வாழ்ந்து கொண்டிருக் கும் மக்கள் கேடுகளிலும், பாவங்களிலும் வாழ்கிறார்கள். எவனாவது என்னைக் குறித் தும், என் போதனையைக் குறித்தும் வெட்கப் படுவானேயானால், நானும் அவனைக் குறித்து வெட்கப்படுவேன். நான் என் பிதா வின் மகிமையோடும், தேவ தூதர்களோடும் வரும்போது அவனைக் குறித்து வெட்கப் படுவேன்" என்றார்.*

**9** *பிறகு இயேசு "நான் உங்களுக்கு ஒரு உண்மையைச் சொல்கிறேன். இங்கே நிற்கின்ற மக்களில் சிலர், அவர்கள் மரணத் துக்கு முன் தேவனுடைய இராஜ்யம் வரு வதைப் பார்ப்பார்கள். தேவனுடைய இராஜ் யம் வல்லமையோடு வரும்" என்றார்.*

### மோசே, எலியாவுடன் இயேசு

(*மத்தேயு 17:1-13; லூக்கா 9:28-36*)

**2***ஆறு நாட்களுக்குப் பின், பேதுரு, யாக் கோபு, யோவான் ஆகியோரை இயேசு அழைத்துக்கொண்டு உயரமான மலை உச் சிக்குச் சென்றார். அவர்கள் அங்கே தனியே இருந்தனர். சீஷர்கள் இயேசுவைப் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அவர் புதிய ரூபம் அடைந்தார்.* **3***இயேசுவின் ஆடைகள் வெண் ணிறமாய் மின்னியது. அவை எவராலும் சுத்தம் செய்ய முடியாத அளவுக்கு வெண்மை யாய் இருந்தது.* **4***அப்போது இரண்டு மனிதர் கள் அங்கே தோன்றி இயேசுவோடு பேசிக் கொண்டிருந்தனர். அவர்கள் மோசே, எலியா என்னும் இருவரே.*

**5***பேதுரு இயேசுவிடம், "போதகரே நாம் இங்கே இருப்பது நல்லதாயிற்று. நாங்கள் கூடாரங்கள் அமைக்கப் போகிறோம். ஒன்று உமக்கு, மற்றொன்று மோசேக்கு, இன் னொன்று எலியாவுக்கு" என்றான்.* **6***பேதுரு வுக்குத் தான் என்ன சொல்கிறோம் என்றே புரியாமல் சொன்னான். ஏனென்றால் அவ னும் மற்ற இரு சீஷர்களும் மிகவும் பயந்திருந் தனர்.*

**7***பிறகு ஒரு மேகம் வந்து அவர்களை மறைத்தது. அந்த மேகத்திலிருந்து ஓர் ஒலி வந்தது. அது, "இவர் என் மகன். நான் இவரிடம் அன்பாய் இருக்கிறேன். இவருக்குக் கீழ்ப்படியுங்கள்" என்று சொன்னது.*

**8** *பிறகு பேதுரு, யாக்கோபு, யோவான் ஆகி யோர் சுற்றிலும் பார்த்தனர். ஆனால் இயேசு வைத் தவிர வேறு ஒருவரையும் காண வில்லை.*

**9***இயேசுவும், அவரது சீஷர்களும் மலையிலி ருந்து இறங்கி வந்தனர். இயேசு தன் சீஷர் களிடம், "மலை மேலே பார்த்ததை நீங்கள் யாரிடமும் சொல்லாதீர்கள். மனித குமாரன் மரணத்திலிருந்து உயிர்த்தெழும் வரை காத் திருங்கள். பிறகு நீங்கள் பார்த்ததை மக்க ளுக்கு சொல்லலாம்" என்று கட்டளையிட்டார்.* **10***ஆகையால் சீஷர்களும் இயேசுவுக்குக் கீழ்ப்படிந்து தாங்கள் பார்த்ததைப் பற்றி எது வும் சொல்லவில்லை. ஆனால் மரணத்திலி ருந்து எழுவதன் பொருளைப்பற்றித் தமக்குள் விவாதித்துக் கொண்டனர்.* **11***சீஷர்கள் இயேசு விடம் "எலியா முதலில் வரவேண்டும் என்று வேதபாரகர் ஏன் கூறுகின்றனர்?" என்று கேட்டனர்.*

**12***"எலியாதான் முதலில் வர வேண்டும் என்று வேதபாரகர்கள் கூறுவது சரிதான். அவன் எல்லாவற்றையும் இருக்க வேண்டிய முறைப்படி சீர்ப்படுத்துவான். மனித குமாரன் மிகவும் கஷ்டப்படுவார் என்றும், உபயோக மற்றவர் என மக்களால் எண்ணப்படுவார் என்றும் வேத வாக்கியங்களில்* எழுதி இருப்பது எதற்காக?* **13***எலியா ஏற்கெனவே வந்து விட்டான் என நான் சொல்கிறேன். அவனைப் பற்றி எழுதி இருக்கிறபடி, மக்கள் தங்களுக்கு விருப்பமானபடி அவனுக்குத் தீமை செய்தனர்" என்றார்.*

### சிறுவன் குணமாக்கப்படுதல்

(*மத்தேயு 17:14-20; லூக்கா 9:37-43*)

**14***பிறகு பேதுரு, யாக்கோபு, யோவான் ஆகியவர்களோடு இயேசு சென்று மற்ற சீஷர் களோடு சேர்ந்து கொண்டனர். அங்கு அவர் கள் ஏராளமான மக்களால் சூழப்பட்டனர். வேதபாரகர்கள் அங்கு சீஷர்களோடு வாதம் செய்து கொண்டிருந்தனர்.* **15***இயேசு வருவ தைப் பார்த்து அவர்கள் ஆச்சரியத்தால் நிறைந்தனர். அவர்கள் ஓடிவந்து அவரை வரவேற்றனர்.*

**16***இயேசு சீஷர்களிடம் "வேதபாரகர்களிடம் நீங்கள் எதைப்பற்றி விவாதம் செய்துகொண் டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார்.*

---

***வேதவாக்கியங்கள்*** *பரிசுத்த எழுத்துக்கள் பழைய ஏற்பாடு.*

17"ஆண்டவரே! நான் என் மகனை
அழைத்து வந்தேன். அவன் பிசாசினால்
பிடிக்கப்பட்டிருக்கிறான். அது அவனைப்
பேசவிடாமல் செய்துவிட்டது. 18பிசாசு என்
மகனைத் தாக்கித் தரையில் தள்ளுகிறது.
அவன் வாயில் நுரைதள்ளி பல்லைக் கடித்து
சோர்ந்து போகிறான். நான் உம்முடைய சீஷர்
களிடம் அப்பிசாசைத் துரத்தும்படி வேண்டி
னேன். அவர்களால் அது முடியவில்லை,"
என்றான் கூட்டத்திலுள்ள ஒருவன்.
19அவர் அவர்களிடம், "ஓ! விசுவாசமில்
லாத மக்களே! நான் உங்களோடு இன்னும்
எவ்வளவு காலம் இருப்பது? உங்களோடு
இன்னும் எவ்வளவு காலம் பொறுமையாய்
இருப்பது? அந்தப் பையனை என்னிடம்
கொண்டு வாருங்கள்!" என்றார்.
20ஆகையால் இயேசுவிடம் சீஷர்கள் பைய
னைக் கொண்டு வந்தனர். பிசாசு இயேசு
வைப் பார்த்ததும் பையனைத் தாக்கியது.
அவன் தரையில் விழுந்து உருண்டான்.
அவன் வாயில் நுரை தள்ளிற்று.
21இயேசு அப்பையனின் தந்தையிடம், "எவ்
வளவு காலமாக இது இவனுக்கு ஏற்பட்டு
வருகிறது?" என்று கேட்டார். அதற்கு அவன்
தந்தை, "அவன் சிறுவனாக இருந்த சமயத்தில்
இருந்தே இது உள்ளது. 22பிசாசு பலமுறை
இவனைக் கொல்வதற்காக நீரிலும், நெருப்
பிலும் தள்ளியிருக்கிறது. உங்களால் ஏதாவது
செய்ய முடியுமானால் எங்கள்மீது இரக்கம்
கொண்டு எங்களுக்கு உதவி செய்யுங்கள்"
என்று கேட்டான்.
23இயேசு அப்பையனின் தந்தையிடம்,
"உங்களால் முடியுமானால் செய்யுங்கள்" என்
கிறாய். விசுவாசம் கொண்டவர்களுக்கு
எல்லாக் காரியங்களும் செய்து முடிக்கத்
தக்கவையே" என்றார்.
24அப்பையனின் தந்தை பரவசமானான்.
"நானும் விசுவாசிக்கிறேன். எனக்கு உதவி
செய்து என் விசுவாசத்தைப் பெருகச் செய்
யுங்கள்" என்றான்.
25எல்லா மக்களும் நடப்பதை அறிந்து
கொள்ள ஓடி வருவதைப் பார்த்தார் இயேசு.
ஆகையால் இயேசு அசுத்த ஆவியிடம் பேசி
னார். இயேசு, "அசுத்த ஆவியே! நீ இந்தச்
சிறுவனைச் செவிடாகவும், பேசமுடியா
மலும் ஆக்கிவிட்டாய். இவனை விட்டு
வெளியே வா என்றும் மீண்டும் இவனுள்
செல்லாதே என்றும் உனக்கு கட்டளையிடுகி
றேன்" என்றார்.
26அந்த அசுத்த ஆவி கதறிற்று. மீண்டும்
அப்பையனைத் தரையிலே விழும்படி
செய்து, அவனை விட்டு வெளியேறிற்று. அச்
சிறுவன் இறந்தவனைப் போன்று கிடந்தான்.
பலர் அவன் இறந்து போனான்' என்றே
சொன்னார்கள். 27ஆனால் இயேசு அவனது
கையைப் பிடித்து அவன் எழுந்திருக்க உதவி
னார்.
28இயேசு வீட்டுக்குள் சென்றார். அவரது
சீஷர்களும் அவரோடு தனியே இருந்தார்கள்.
அவர்கள், "எங்களால் ஏன் இந்த அசுத்த
ஆவியை வெளியேற்ற முடியவில்லை?"
என்று கேட்டனர்.
29இயேசுவோ, "இந்த வகையான ஆவி
யைப் பிரார்த்தனையை பயன்படுத்தித்தான்
வெளியேற்ற முடியும்" என்றுரைத்தார்.

### தன் மரணத்தைப் பற்றிப் பேசுதல்

(*மத்தேயு 17:22-23; லூக்கா 9:43-45*)

30பிறகு இயேசுவும், அவரது சீஷர்களும்
அந்த இடத்தைவிட்டுச் சென்றார்கள். அவர்கள்
கலிலேயா வழியே சென்றனர். தாம் இருக்கும்
இடத்தை மக்கள் தெரிந்துகொள்ளக் கூடாது
என்று இயேசு விரும்பினார். 31இயேசு தன்
சீஷர்களுக்குத் தனியே உபதேசிக்க விரும்
பினார். அவர்களிடம் இயேசு, "மனித குமாரன்
மக்களிடம் ஒப்படைக்கப்படுவார். அவரை
அவர்கள் கொலைசெய்வார்கள். மூன்று நாட்
களுக்குப்பின் அவர் மரணத்தில் இருந்து
உயிர்த்தெழுவார்" என்றார். 32இயேசு என்ன
பொருளில் கூறுகிறார் என்பதை சீஷர்கள்
புரிந்து கொள்ளவில்லை. அவர் என்ன
பொருள் கொள்கிறார் என்பதை விசாரிக்க
வும் அவர்கள் அஞ்சினர்.

### யார் உயர்ந்தவர் என்பதைப் பற்றி போதனை

(*மத்தேயு 18:1-5; லூக்கா 9:46-48*)

33இயேசுவும், அவரது சீஷர்களும் கப்பர்
நகூமுக்குச் சென்றனர். அங்கே அவர்கள் ஒரு
வீட்டுக்குள் நுழைந்தனர். பிறகு இயேசு தன்
சீஷர்களிடம், "இன்று சாலையில் நீங்கள்
எதை விவாதித்தீர்கள்?" என்று கேட்டார்.
34ஆனால் சீஷர்கள் பதில் சொல்லவில்லை.
ஏனென்றால் அவர்கள் அன்று அவர்களில்
யார் மிகவும் உயர்ந்தவர் என்பது பற்றியே
விவாதம் செய்தனர்.
35ஓரிடத்தில் இயேசு உட்கார்ந்து கொண்டு
பன்னிரண்டு சீஷர்களையும் அருகில் அழைத்
தார். அவர்களிடம் இயேசு, "எவனாவது மிக
முக்கியமானவனாக விரும்பினால் அவன்
தன்னைவிட மற்ற அனைவரையும் மிக
முக்கியமானவர்களாகக் கருதி அவன் அனை
வருக்கும் வேலைக்காரனாக இருக்க வேண்
டும்" என்றார்.
36பிறகு இயேசு ஒரு குழந்தையைத் தூக்கி
னார். சீஷர்கள் முன்பு அக்குழந்தையை நிறுத்
தினார். தன் கைகளால் குழந்தையைத் தாங்
கியபடி, 37"இத்தகைய குழந்தைகளை என்
பெயரில் ஏற்றுக்கொள்கிற எந்த மனிதனும்,
என்னையும் ஏற்றுக்கொண்டவனாகிறான்.
என்னை ஏற்றுக்கொள்கிற எவனும் என்னை
அனுப்பினவரையும் ஏற்றுக்கொள்கிறான்"
என்றார்.

### இயேசுவைச் சேர்ந்தவன் யார்?
(*லூக்கா 9:49-50*)

38*பிறகு யோவான் இயேசுவைப் பார்த்து,*
*“போதகரே, உங்கள் பெயரைப் பயன்படுத்தி*
*ஒருவன் பிசாசைத் துரத்திக்கொண்டிருப்பதை*
*நாங்கள் பார்த்தோம். அவன் நம்மைச் சார்ந்த*
*வன் அல்ல. நம்மவர்களில் ஒருவனும் அல்ல.*
*எனவே அவ்வாறு செய்வதை நிறுத்தச்*
*சொன்னோம்” என்றான்.*

39*இயேசுவோ, “அவனை நிறுத்தாதீர்கள்,*
*எவனொருவன் என் பெயரைப் பயன்படுத்தி*
*வல்லமையான செயல்களைச் செய்கிறானோ*
*அவன் எனக்கு எதிராகத் தீயவற்றைச் செய்ய*
*மாட்டான்.* 40*எனக்கு எதிராகத் தீமை செய்யாத*
*வன் எனக்கு வேண்டியவன்.* 41*நான் உங்*
*களுக்கு உண்மையைக் கூறுகிறேன். நீங்கள்*
*கிறிஸ்துவைச் சேர்ந்தவர்கள் என்பதால் எவ*
*னாவது ஒருவன் என் பேரின் நிமித்தம்*
*உங்களுக்குக் குடிக்க தண்ணீர் தருவானேயா*
*னால் அவன் அதற்குரிய பலனை அடையா*
*மல் போகமாட்டான்.*

42*“இச்சிறுவர்களில் யாராவது ஒருவன்*
*என்மீது நம்பிக்கை வைத்ததினால், இவர்*
*களைப் பாவத்திற்கு வழிநடத்தும் எவனுக்கும்*
*பெருங்கேடு வரும். அத்தகையவனின் கழுத்*
*தில் எந்திரக்கல்லைக் கட்டி நடுக்கடலில்*
*மூழ்கடிப்பது நல்லதாக இருக்கும்.* 43*உங்கள்*
*கைகளில் ஒன்று நீங்கள் பாவம்செய்யக்*
*காரணமாக இருக்குமானால் அதனை வெட்டி*
*எறியுங்கள். உன் உயிரை எப்போதைக்கும்*
*இழப்பதைவிட உன் சரீரத்தின் ஒரு பகுதியை*
*இழப்பது பரவாயில்லை. இரண்டு கையோடு*
*நரகத்துக்குப் போவதைவிட இது நல்லது.*
*அங்கு நெருப்பு அடங்காமல் எரியும்.* 44*
45*உன் கால் நீ பாவம் செய்யக் காரணமானால்*
*அதனை வெட்டிப் போடு. நீ உன் வாழ்க்*
*கையை இழந்து போவதைவிட காலை மட்டும்*
*இழப்பது பரவாயில்லை. இரண்டு கால்*
*களோடு நரகத்துக்குப் போவதைவிட இது*
*பரவாயில்லை.* 46* 47*உனது கண் நீ பாவம்*
*செய்யக் காரணமானால் அதனைப் பிடுங்கிப்*
*போடு. உனது வாழ்வு முழுவதையும் இழப்*
*பதைவிட ஒரு கண்ணை உடையவனாய்*
*இருப்பது பரவாயில்லை. இரண்டு கண்*
*ணுடையவனாய் நரகத்தில் தள்ளப்படுவதை*
*விட ஒரு கண்ணை உடையவனாய் தேவனு*
*டைய இராஜ்யத்திற்குள் நுழைவது பரவா*
*யில்லை.*

48*நரகத்தில் மனிதரை சாப்பிடும் புழுக்கள்*
*ஒரு போதும் சாவதில்லை. அங்கே*
*நெருப்பானது எப்போதும் அணையாமல்*
*எரிந்து கொண்டிருக்கும்.* 49*ஒவ்வொருவரும்*
*நெருப்பால் தண்டிக்கப்படுவார்கள்.*

50*“உப்பு நல்லது தான். ஆனால் உப்பு*
*தனது சுவையை இழந்து போனால் நீ மீண்டும்*
*அச்சுவையை அதில் ஊட்டமுடியாது. அத*
*னால் நல்ல குணமுடையவர்களாய் இருங்கள்.*
*ஒருவருக்கொருவர் சமாதானமாய் இருங்கள்”*
*என்றார்.*

### விவாகரத்து பற்றிய போதனை
(*மத்தேயு 19:1-12*)

10 *பிறகு அந்த இடத்தை விட்டு இயேசு*
*வெளியேறினார். அவர் யோர்தான் ஆற்*
*றைக் கடந்து யூதேயா பகுதிக்குள் சென்றார்.*
*அங்கு, ஏராளமான மக்கள் அவரிடம் வந்தார்*
*கள். வழக்கம்போல இயேசு அவர்களுக்குப்*
*போதனை செய்தார்.*

2*சில பரிசேயர்கள் இயேசுவிடம் வந்தார்*
*கள். அவர்கள், இயேசுவைத் தவறாக ஏதாவது*
*பேசவைக்க முயன்றார்கள். அவர்கள் அவரி*
*டம், “ஒருவன் தன் மனைவியை விவாகரத்து*
*செய்வது சரியா?” என்று கேட்டனர்.*

3*அதற்கு இயேசு அவர்களிடம்,“மோசே உங்*
*களிடம் என்ன செய்யுமாறு கட்டளை இட்*
*டார்?” என்று கேட்டார்.*

4*பரிசேயர்களோ, “ஒருவன் விவாகரத்துக்*
*கான சான்றிதழை எழுதி அதன் மூலம் தன்*
*மனைவியை விவாகரத்து செய்யலாம் என்று*
*மோசே அனுமதித்து இருக்கிறார்” என்றனர்.*

5*அவர்களிடம் இயேசு, “மோசே உங்களுக்*
*காக அவ்வாறு எழுதி இருக்கிறார். ஏனென்*
*றால் நீங்கள் தேவனின் போதனைகளை*
*ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டீர்கள்.* 6*ஆனால்*
*தேவன் உலகைப் படைக்கும்போது ‘அவர்*
*மக்களை ஆண் என்றும் பெண் என்றும்*
*படைத்தார்.’* 7*‘அதனால்தான் ஒருவன் தன்*
*தாயையும் தந்தையையும் விட்டு விட்டு*
*மனைவியோடு சேர்ந்து கொள்கிறான்.* 8*இரு*
*வரும் ஒருவர் ஆகிவிடுகிறார்கள். எனவே*
*அவர்கள் இருவராயில்லாமல் ஒருவராகிவிடு*
*கின்றனர்.’** 9*தேவன் அந்த இருவரையும்*
*ஒன்று சேர்த்துவிடுகிறார். எனவே, எவரும்*
*அவர்களைப் பிரிக்கக்கூடாது” என்றார்.*

10*பிறகு இயேசுவும், சீஷர்களும் அந்த*
*வீட்டில் தனியே இருந்தனர். அப்போது சீஷர்*
*கள் இயேசுவிடம் மீண்டும் விவாகரத்து*
*பற்றிய கேள்வியைக் கேட்டனர்.* 11*அதற்கு*
*இயேசு, “எவனொருவன் தன் மனைவியை*
*விவாகரத்து செய்துவிட்டு இன்னொரு பெண்*
*ணை மணந்து கொள்கிறானோ அவன் தன்*
*மனைவிக்கு எதிரான பாவியாகிறான். அத்து*
*டன் விபசாரமாகிய பாவத்துக்கும் ஆளாகி*
*றான்.* 12*இது போலவே தன் கணவனை விவா*
*கரத்து செய்துவிட்டு இன்னொருவனை*

---

**வாக்கியம் 44** *சில கிரேக்க மாற்கு பிரதிகளில் 44வது வாக்கியமுள்ளது. அது 48வது வாக்கியம் போன்றுள்ளது.*

**வாக்கியம் 46** *சில கிரேக்க மாற்கு பிரதிகளில் 46வது வாக்கியம் உள்ளது. அது 48வது வாக்கியம் போன்றுள்ளது.*

**அதனால் ... விடுகின்றனர்** *ஆதி 2:24.*

மணந்து கொள்கிற பெண்ணும் விபசாரம்
செய்யும் பாவியாகிறாள்" என்றார்.

### குழந்தைகளும் இயேசுவும்

(மத்தேயு 19:13-15; லூக்கா 18:15-17)

13மக்கள் தம் சிறு குழந்தைகளை இயேசு
தொடுவதற்காகக் கொண்டு வந்தனர். ஆனால்
இயேசுவின் சீஷர்கள் குழந்தைகளைக் கொண்
டுவர வேண்டாம் என்று தடுத்தனர். 14இதனை
இயேசு கவனித்தார். சிறுவர் தம்மிடம் வரு
கிறதை சீஷர்கள் தடைசெய்தது அவருக்கு
பிரியமில்லை. எனவே அவர்களிடம், "குழந்
தைகள் என்னிடம் வருவதை அனுமதியுங்கள்.
அவர்களைத் தடுத்து நிறுத்தாதீர்கள். ஏனென்
றால் தேவனுடைய இராஜ்யம் குழந்தை
களைப் போன்றவர்களுக்குரியது. 15நான் உங்
களுக்கு உண்மையைக் கூறுகிறேன். குழந்தை
கள் எதையும் ஏற்றுக்கொள்வதைப் போன்று
நீங்கள் தேவனுடைய இராஜ்யத்தை ஏற்றுக்
கொள்ளுங்கள். இல்லாவிட்டால் நீங்கள் அதற்
குள் நுழைய முடியாது" என்றார். 16பிறகு
இயேசு, குழந்தைகளைக் கைகளால் அணைத்
துக் கொண்டார். இயேசு அவர்கள்மீது கை
களை வைத்து ஆசீர்வாதமும் செய்தார்.

### பணக்காரனும் இயேசுவும்

(மத்தேயு 19:16-30; லூக்கா 18:18-30)

17இயேசு அவ்விடத்திலிருந்து புறப்பட
ஆரம்பித்தார். அப்போது ஒரு மனிதன் ஓடி
வந்து அவருக்கு முன்னால் முழங்காலிட்டு
வணங்கினான். அவன், "நல்ல போதகரே!
நான் நித்திய வாழ்வைப் பெற என்ன செய்ய
வேண்டும்?" என்று கேட்டான்.

18அதற்கு இயேசு, "என்னை நீ நல்லவர்
என்று ஏன் அழைக்கிறாய்? தேவன் மட்டுமே
நல்லவர். 19ஆனால் உனது வினாவுக்கு விடை
யளிக்கிறேன். நீ எவரையும் கொலைசெய்யா
மல் இருப்பாயாக; விபசாரம் செய்யாமல்
இருப்பாயாக, களவு செய்யாமல் இருப்பா
யாக; பொய்சாட்சி சொல்லாமல் இருப்பாயாக:
நீ உன் தந்தையையும் தாயையும் மரியாதை
செய்வாயாக* என்று கட்டளைகள் சொல்வது
உனக்குத் தெரியுமா?" என்று கேட்டார்.

20அதற்கு அந்த மனிதன், "போதகரே! நான்
குழந்தைப் பருவத்தில் இருந்தே இக்கட்டளை
களுக்குக் கீழ்ப்படிந்து வருகிறேன்" என்றான்.

21இயேசு அவனைக் கவனித்தார். இயேசு
வுக்கு அவன்மீது அன்பு பிறந்தது. இயேசு
அவனிடம், "நீ செய்வதற்கு உரிய காரியம்
இன்னும் ஒன்று உள்ளது. நீ போய் உனக்கு
உரியவற்றையெல்லாம் விற்றுவிடு. அப்ப
ணத்தை ஏழை மக்களுக்குக் கொடு. உனக்
குப் பரலோகத்தில் நிச்சயம் பொக்கிஷமிருக்
கும். பிறகு என்னைப் பின்பற்றி வா" என்
றார்.

22இயேசு இவற்றைச் சொன்னதும் அந்த
மனிதன் மிகவும் வருத்தப்பட்டு அப்புறம்
போனான். அவனது வருத்தத்துக்குக் கார
ணம் அவன் பெருஞ் செல்வந்தனாய் இருந்தது
தான்: அதோடு அச்செல்வத்தைப் பாதுகாக்க
வும் நினைத்ததுதான்.

23பிறகு இயேசு சுற்றிலும் பார்த்து தன்
சீஷர்களிடம் "ஒரு பணக்காரன் தேவனுடைய
இராஜ்யத்துக்குள் நுழைவது மிகவும் கடின
மான ஒன்று" என்றார்.

24இயேசு சொன்னதைக் குறித்து சீஷர்கள்
அதிசயப்பட்டார்கள். இயேசு மீண்டும், "என்
பிள்ளைகளே! தேவனுடைய இராஜ்யத்துக்
குள் நுழைவது கடினமானது: 25அதிலும் தேவ
னுடைய இராஜ்யத்துக்குள் ஒரு பணக்காரன்
நுழைவது மிகவும் கடினமானது. இதைவிட,
ஊசியின் காதிற்குள் ஒரு ஒட்டகம் எளிதாக
நுழைந்து விடும்" என்று சொன்னார்.

26சீஷர்கள் பெரிதும் அதிசயப்பட்டார்கள்.
அவர்கள் தங்களுக்குள், "பிறகு யார் இரட்சிக்
கப்படுவார்?" என்று கேட்டனர்.

27இயேசு தன் சீஷர்களைப் பார்த்து, "மக்கள்
தங்களால் எதுவும் செய்துகொள்ள இயலாது.
அது தேவனிடமிருந்துதான் வரவேண்டும்.
தேவனே எல்லாவற்றையும் செய்ய வல்லவர்"
என்றார்.

28பேதுரு இயேசுவைப்பார்த்து, "நாங்கள்
எல்லாவற்றையும் விட்டு விட்டு உங்களைப்
பின்தொடர்ந்து வந்திருக்கிறோம்" என்றான்.

29இயேசு "நான் உங்களுக்கு உண்மையைக்
கூறுகிறேன். எவன் ஒருவன் தனது வீட்டை
யும், சகோதரர்களையும், சகோதரிகளையும்,
தந்தையையும், தாயையும், குழந்தைகளையும்,
பண்ணைகளையும் எனக்காகவும், நற்செய்
திக்காகவும், தியாகம் செய்கிறானோ 30அவ
னுக்கு அவன் விட்டதைவிட நூறுமடங்கு
கிடைக்கும்.

இங்கே இந்த உலகத்தில் அவன் மிகுதியான
வீடுகளையும், சகோதரர்களையும், சகோதரி
களையும், தாயார்களையும், குழந்தைகளை
யும், பண்ணைகளையும் பெறுவான். அதோடு
பல துன்பங்களையும் அடைவான். ஆனால்
அவன் நித்தியவாழ்வு என்னும் பரிசினை
வரப்போகும் உலகில் பெறுவான். 31இப்போது
மிக உயர்ந்த இடத்தில் உள்ள பலர் எதிர்காலத்
தில் மிகத் தாழ்ந்த இடத்துக்குச் செல்வர்,
மிகத் தாழ்ந்த இடத்திலுள்ள பலர் மிக உயர்ந்த
இடத்துக்குச் செல்வர்" என்றார்.

### மீண்டும் தன் மரணத்தைப் பற்றி இயேசு பேசுதல்

(மத்தேயு 20:17-19; லூக்கா 18:31-34)

32இயேசுவும் அவரோடு இருந்த மக்களும்
அங்கிருந்து எருசலேமுக்குப் போகும் பாதை
யில் இருந்தனர், அவர்களுக்குத் தலைமை
யேற்று இயேசு அழைத்துச் சென்றார். இயேசு
வின் சீஷர்கள் இதைக்குறித்து ஆச்சரியப்

---

**என்னை ... செய்வாயாக** யாத். 20:12-16,
உபா 5:16-20.

பட்டார்கள். ஆனால் அவர் பின்னால் போன
மக்களோ அச்சப்பட்டனர். மீண்டும் இயேசு
தன் பன்னிரண்டு சீஷர்களைக் கூட்டி அவர்
களோடு தனியாகப் பேசினார். எருசலேமில்
அவருக்கு என்ன நடக்கும் என்பதைப்பற்றிக்
கூறினார். 33"நாம் எருசலேமுக்கு போய்க்
கொண்டு இருக்கிறோம். மனிதகுமாரன்
அங்கே தலைமை ஆசாரியர்களிடமும், வேத
பாரகர்களிடமும் ஒப்படைக்கப்படுவார். அவர்
கள் மனிதகுமாரன் சாகவேண்டும் என்று
தீர்ப்பளிப்பர். அவர்கள் மனிதகுமாரனை
யூதரல்லாதவர்களிடம் ஒப்படைப்பார்கள்.
34அவர்கள் அவரைக் குறித்து நகைப்பர்.
அவர் மீது காறி உமிழ்வார்கள். வாரினால்
அடிப்பார்கள். கொலை செய்வார்கள்.
அவரோ மரணமடைந்து மூன்றாம் நாள் உயி
ரோடு எழுவார்" என்று சொன்னார்.

### சிறப்புச் சலுகை கேட்டவர்கள்
(மத்தேயு 20:20-28)

35பிறகு செபெதேயுவின் மகன்களாகிய
யாக்கோபும், யோவானும் இயேசுவிடம் வந்
தார்கள். அவர்கள், "போதகரே நீங்கள் எங்க
ளுக்காக ஏதேனும் செய்யவேண்டும் என்று
நாங்கள் விரும்புகிறோம்" என்றனர்.
36அவர்களிடம் இயேசு, "நான் உங்களுக்
காக என்ன செய்யவேண்டும் என்று நீங்கள்
விரும்புகிறீர்கள்?" எனக் கேட்டார்.
37"உங்கள் இராஜ்யத்தில் உங்களுக்கென்று
மகிமை உள்ளது. எங்களில் ஒருவர் உங்கள்
வலது பக்கத்திலும் இன்னும் ஒருவர் இடது
பக்கத்திலும் இருக்க வாய்ப்புத்தரவேண்டும்"
என்றனர்.
38அதற்கு இயேசு, "நீங்கள் என்ன கேட்கிறீர்
கள் என்பது உங்களுக்குப் புரியவில்லை.
நான் ஏற்கப்போகும் பாடுகளை உங்களால்
ஏற்றுக்கொள்ள முடியுமா? நான் ஞானஸ்
நானம் பெறும் விதத்திலேயே நீங்களும்
பெற்றுக்கொள்ள முடியுமா?" என்று கேட்டார்.
39அவர்கள், "ஆமாம், எங்களால் முடியும்"
என்றனர். இயேசு அவர்களிடம், "நான் படப்
போகும் துன்பங்களை எல்லாம் நீங்களும்
படவேண்டியதிருக்கும். நான் பெறப்போகும்
ஞானஸ்நானத்தை நீங்களும் பெறவேண்டிய
திருக்கும்.
40எனக்கு வலது பக்கத்திலும், இடது
பக்கத்திலும் இருக்கப்போகின்றவர்களை என்
னால் தீர்மானிக்க முடியாது. அந்த இடத்
திற்காகச் சிலர் இருக்கின்றார்கள். அவர்களுக்
காகவே அந்த இடங்கள் தயார் செய்யப்
பட்டிருக்கின்றன" என்றார்.
41ஏனைய பத்து சீஷர்களும் இயேசு சொல்
வதைக் கேட்டனர். அவர்களுக்கு யாக்கோபு
மீதும், யோவான் மீதும் கோபம் ஏற்பட்டது.
42இயேசு தன் சீஷர்களை எல்லாம் தம்மிடம்
அழைத்தார். அவர்களிடம், "யூதர் அல்லாத
மக்கள் ஆள்வோர்கள் எனக் கருதப்படுகின்
றனர். இந்த ஆள்வோர்கள் தம் அதிகாரத்தை
மக்கள்மீது செலுத்துவதையே பெரிதும் விரும்
புகிறார்கள், அவர்களின் முக்கியத் தலைவர்
கள் தம் அதிகாரத்தை மக்கள் மீது செலுத்துவ
தையே பெரிதும் விரும்புகிறார்கள், என்று
நீங்கள் அறிவீர்கள். 43ஆனால், நீங்கள் மேற்
கொள்ளும் வழி இதுவாக இருக்கக் கூடாது.
உங்களில் ஒருவன் பெரியவனாக விரும்பி
னால் அவன் ஒரு வேலைக்காரனைப் போல
மற்றவர்களுக்குச் சேவைசெய்ய வேண்டும்.
44உங்களில் ஒருவன் மிகவும் முக்கியஸ்தனாக
விரும்பினால் அவன் அடிமையைப்போல
உங்கள் எல்லாருக்கும் சேவை செய்யவேண்
டும்.
45இதுபோலவே, மனித குமாரன் பிறரு
டைய பணிவிடைகளைப் பெறுவதற்காக
வரவில்லை. அவர் மற்றவர்களுக்குப் பணி
விடை செய்யவே வந்துள்ளார். அவர் பலமக்க
ளைக் காப்பாற்றுவதற்காகத் தன் உயிரைத்
தர வந்துள்ளார்" என்றார்.

### குருடன் குணமாக்கப்படுதல்
(மத்தேயு 20:29-34; லூக்கா 18:35-43)

46பிறகு அவர்கள் எரிகோ நகரத்துக்கு
வந்தனர். இயேசு அந்த நகரத்தையும் விட்டுத்
தன் சீஷர்களோடும், மற்ற சில மக்களோடும்
வெளியேறினார். பர்திமேயு எனப்படும் (திமே
யுவின் மகன்) ஒரு குருடன் சாலையோரத்தில்
அமர்ந்திருந்தான். அவன் பிச்சைக் கேட்டுக்
கொண்டிருந்தான். 47நாசரேத் ஊரைச் சேர்ந்த
இயேசு வந்துகொண்டிருப்பதை அறிந்து சத்த
மிட ஆரம்பித்தான். அவன், "தாவீதின் குமார
னாகிய இயேசுவே! எனக்கு உதவி செய்யும்"
என்றான்.
48பல மக்கள் அவனைப் பேசாமலிருக்கும்
படி அதட்டினார்கள். ஆனால் அந்தக் குருடன்
இன்னும் சத்தமாக, "தாவீதின் குமாரனே,
எனக்கு உதவி செய்யும்" என்றான்.
49அவ்விடத்தில் இயேசு நின்று, "அந்த மனி
தனை இங்கே வரச் சொல்லுங்கள்" என்றார்.
எனவே அவர்கள் அக்குருடனை அழைத்
தனர். அவர்கள், "மகிழ்ச்சியாய் இரு, எழுந்து
வா, இயேசு உன்னை அழைக்கிறார்" என்
றனர்.
50அக்குருடன் விரைவாக எழுந்தான்.
அவன் தன் மேலாடையை அவ்விடத்தில்
எறிந்துவிட்டு இயேசுவின் அருகில் சென்
றான்.
51இயேசு அவனிடம், "நான் உனக்காக
என்ன செய்யவேண்டும் என்று நீ விரும்பு
கிறாய்?" எனக் கேட்டார். அதற்கு அக்குருடன்,
"போதகரே! நான் மீண்டும் பார்வை பெற
வேண்டும்" என்றான். 52"போ! நீ குணமா
னாய், ஏனெனில் நீ விசுவாசத்தோடு இருந்
தாய்" என்று இயேசு சொன்னார். அதனால்
அவன் பார்வை பெற்றான். அவன் இயேசு
வைப் பின்தொடர்ந்து போனான்.

### அரசரைப் போல எருசலேமுக்குள் இயேசு நுழைதல்

(மத்தேயு 21:1-11; லூக்கா 19:28-40; யோவான் 12:12-19)

11 இயேசுவும் அவரது சீஷர்களும் எருச
லேமை அடைந்தனர். அவர்கள் ஒலிவ
மலையில் உள்ள பெத்பகே, பெத்தானியா
என்னும் நகரங்களுக்கு அருகில் வந்தனர்.
அங்கே இயேசு இரண்டு சீஷர்களை அனுப்பிச்
சிலவற்றைச் செய்யச் சொன்னார். 2இயேசு,
"நீங்கள் பார்க்கிற எதிரேயுள்ள ஊருக்குள்
செல்லுங்கள். உள்ளே நுழைந்ததும் ஓர் இளம்
கழுதை கட்டப்பட்டிருப்பதைக் காண்பீர்கள்.
இதுவரை எவராலும் சவாரி செய்யப்படாத
கழுதை அது. அதை அவிழ்த்து இங்கே
கொண்டு வாருங்கள். 3யாராவது உங்களிடம்
எதற்காக இதனைக் கொண்டு போகிறீர்கள்
என்று கேட்டால் அவர்களிடம், ஆண்டவருக்கு
இது தேவைப்படுகிறது. அவர் இதனை விரை
வில் திருப்பி அனுப்புவார் என்று சொல்லுங்
கள்" என்றார்.
4சீஷர்கள் நகரத்துக்குள் நுழைந்தனர். ஒரு
வீட்டுக்கு வெளியே சாலை ஓரத்தில் ஓர் இளம்
கழுதை கட்டி வைக்கப்பட்டிருந்தது. சீஷர்கள்
அதனை அவிழ்த்தார்கள். 5அங்கு நின்று
கொண்டிருந்த சிலர் இதனைப் பார்த்தனர்.
"என்ன செய்கிறீர்கள்? ஏன் கழுதையை
அவிழ்க்கிறீர்கள்?" என்று கேட்டனர். 6இயேசு
சொன்னபடி அவர்கள் பதில் சொன்னார்கள்.
அவர்கள் கழுதையை அழைத்துச் செல்ல
அனுமதித்தனர். 7சீஷர்கள் கழுதையை இயேசு
விடம் கொண்டு வந்தனர். அவரது சீஷர்கள்
தம் மேலாடைகளை கழுதையின் மேல் விரித்
தனர். இயேசு அதன் மேல் உட்கார்ந்தார்.
8ஏராளமான மக்கள் தம் மேலாடைகளைச்
சாலையில் விரித்து இயேசுவை வரவேற்
றனர். இன்னும் சிலர் மரக்கிளைகளை வெட்டி
அவற்றைச் சாலையில் பரப்பினர். 9சிலர்
இயேசுவிற்கு முன்னால் நடந்து சென்றனர்.
சிலர் இயேசுவிற்குப் பின்னால் சென்றனர்.

"அவரைப் புகழுங்கள் 'கர்த்தரின் பெய
ரால் வருகிறவர் ஆசீர்வதிக்கப்பட்டவர்'
சங்கீதம் 118:25,26

10 நமது தந்தையான தாவீதின் இராஜ்யம்
தேவனால் ஆசீர்வதிக்கப் படுவதாக.
அந்த இராஜ்யம் வந்துகொண்டிருக்
கிறது. பரலோகத்தில் உள்ள தேவனைப்
போற்றுவோம்."

என்று அவர்கள் சத்தமிட்டனர்.
11எருசலேமுக்குள் சென்று அங்குள்ள
தேவாலயத்திற்குள் இயேசு நுழைந்தார். தேவா
லயத்தில் எல்லாவற்றையும் இயேசு பார்த்தார்.
ஆனால் ஏற்கெனவே நேரமாகி விட்டிருந்தது.
ஆகையால் இயேசு அங்கிருந்து பெத்தானியா
வுக்கு தன் பன்னிரண்டு சீஷர்களோடும் சென்
றார்.
12மறுநாள், அவர்கள் பெத்தானியாவை
விட்டுப் புறப்பட்டனர். அவருக்குப் பசித்தது.
13இயேசு இலைகள் நிறைந்த அத்திமரம் ஒன்
றைப் பார்த்தார். அவர் அதனருகில் சென்று
ஏதேனும் பழங்கள் உள்ளனவா என்று
கவனித்தார். அதில் பழங்கள் ஏதுமில்லை.
வெறும் இலைகளே இருந்தன. அது கனி
கொடுப்பதற்கு உரிய சரியான காலம்
இல்லை. 14ஆகையால் இயேசு அத்திமரத்திடம்,
"இனி மக்கள் யாரும் உன்னிடமிருந்து ஒரு
போதும் பழத்தைத் தின்னமாட்டார்கள்" என்
றார். இயேசு சொன்னதைச் சீஷர்களும்
கேட்டுக்கொண்டிருந்தனர்.

### தேவாலயத்தில் இயேசு

(மத்தேயு 21:12-17; லூக்கா 19:45-48; யோவான் 2:13-22)

15அவர்கள் எருசலேமை அடைந்தனர்.
அவர் தேவாலயத்திற்குள் நுழைந்தார். அங்கே
பொருள்களை விற்றுக்கொண்டும், வாங்கிக்
கொண்டும் இருந்த மக்களை இயேசு விரட்டி
னார். பலவித பணங்களை மாற்றி கொடுத்துக்
கொண்டிருந்தவர்களின் பலகைகளைத் தலை
கீழாகக் கவிழ்த்துப் போட்டார். புறாக்கள்
வைத்திருந்த பலகைகளையும் அப்புறப்படுத்
தினார். 16ஒருவரையும் தேவாலயத்தின்
வழியே பொருள்களை எடுத்துச் செல்ல
இயேசு அனுமதிக்க மறுத்தார். 17பிறகு இயேசு
மக்களுக்குப் போதனை செய்ய ஆரம்பித்தார்.
"எனது வீடு எல்லா மக்களின் பிரார்த்தனைக்
கான வீடு என அழைக்கப்படும் என்று
எழுதப்பட்டிருக்கிறது.* ஆனால் நீங்கள் தேவ
னின் வீட்டைத் திருடர்கள் ஒளியும் இடமாக
மாற்றுகிறீர்கள்* என்றார்.
18தலைமை ஆசாரியர்களும், வேத பாரகர்
களும் இவற்றைக் கேட்டனர். அவர்கள் இயேசு
வைக் கொல்வதற்கு வழிதேடினர். மக்கள்
அனைவரும் இயேசுவின் போதனைகளைக்
கேட்டு வியப்பதை அறிந்து அவர்கள் அச்சப்
பட்டனர். 19அன்று இரவு இயேசுவும், அவரது
சீஷர்களும் அந்நகரத்தை விட்டு வெளியேறி
னர்.

### விசுவாசத்தின் வல்லமை

(மத்தேயு 21:20-22)

20மறுநாள் காலையில் இயேசு தனது சீஷர்
களோடு நடந்து கொண்டிருந்தார். முந்தின
நாள் இயேசு சபித்த அத்தி மரத்தை அவர்கள்
பார்த்தனர். அம்மரம் செத்து, காய்ந்து, வேரும்
உலர்ந்து போய் இருந்தது. 21பேதுரு அம்மரத்
தைப்பற்றி நினைவுகூர்ந்து இயேசுவிடம்,
"போதகரே! பாருங்கள். நேற்று இம்மரம் பட்

**எனது ... பட்டிருக்கிறது** ஏசாயா 56:7.

**ஆனால் ... மாற்றுகிறீர்கள்** எரேமியா 7:11.

டுப்போகுமாறு சொன்னீர்கள். இன்று இது
உலர்ந்து இறந்துவிட்டது" என்றான்.
22அதற்கு இயேசு, "தேவனிடம் விசுவாசம்
வைத்திருங்கள். 23நான் உங்களுக்கு உண்மை
யைக் கூறுகிறேன். 'மலையே போ, போய்க்
கடலில் விழு!' என்று உங்களால் மலைக்கு
ஆணையிடமுடியும். உங்கள் மனதில் சந்தேகம்
இல்லாதிருந்தால், நீங்கள் சொல்வது நடக்கும்
என்கிற விசுவாசம் உங்களுக்கு இருக்கு
மானால், தேவன் உங்களுக்காக அவற்றைச்
செய்வார். 24ஆகையால் உங்கள் பிரார்த்
தனையின்போது தேவனிடம் காரியங்களைக்
கேளுங்கள். அவற்றை கிடைக்கப்பெற்றோம்
என்று நீங்கள் நம்பினால் அவை உங்களுக்கு
உரியதாகும். 25நீங்கள் பிரார்த்தனை செய்யும்
போது, ஏதாவது ஒன்றைக்குறித்து நீங்கள்
யாரிடமாவது கோபம்கொண்டிருப்பது நினை
வில் வந்தால் அவர்களை மன்னித்து விடுங்
கள். நீங்கள் இதைச் செய்தால் பரலோகத்தில்
இருக்கிற உங்கள் பிதாவும் உங்களது தவறு
களை மன்னித்து விடுவார்" என்றார்.26*

### இயேசுவின் அதிகாரத்தை யூதர்கள் சந்தேகித்தல்

(மத்தேயு 21:23-27; லூக்கா 20:1-8)

27இயேசுவும் சீஷர்களும் மீண்டும் எருசலே
முக்கு சென்றார்கள். அவர் தேவாலயத்திற்குள்
நடந்து கொண்டிருந்தார். தலைமை ஆசாரியர்
களும், வேதபாரகர்களும், மூத்த யூதத் தலை
வர்களும் இயேசுவிடம் வந்தனர். 28அவரிடம்,
"எங்களுக்குச் சொல். இவற்றையெல்லாம்
செய்ய நீ எங்கிருந்து அதிகாரம் பெற்றாய்?
யார் உனக்கு இந்த அதிகாரத்தைக் கொடுத்
தது?" என்று கேட்டனர்.
29அதற்கு இயேசு, "நான் உங்களிடம் ஒரு
கேள்வியைக் கேட்கிறேன். எனக்குப் பதில்
சொல்லுங்கள். பிறகு நான் யாருடைய அதி
காரத்தால் இவற்றையெல்லாம் செய்கிறேன்
என்பதைக் கூறுகிறேன். 30யோவான் ஸ்நான
கன் ஞானஸ்நானம் கொடுத்தபோது அந்த
அதிகாரம் அவனுக்குத் தேவனிடமிருந்து
வந்ததா அல்லது மனிதனிடமிருந்து வந்ததா?
எனக்குப் பதில் சொல்லுங்கள்" என்றார்.
31யூதத் தலைவர்கள் இயேசுவின் கேள்வி
யைப்பற்றி தங்களுக்குள் பேசிக் கொண்டனர்.
அவர்கள், "நாம் இவனிடம், ''யோவான் தேவ
னிடமிருந்து அதிகாரத்தைப் பெற்றுக்கொண்ட
தாகச்' சொன்னால், நம்மிடம் இவன், 'பிறகு
ஏன் யோவான் மீது நம்பிக்கை வைக்க
வில்லை' என்று கேட்பான். 32'மனிதனிட
மிருந்து வந்தது' என்று சொல்வோமானால்,
பின்னர் மக்கள் நம்மீது கோபம் கொள்வர்"
(யூதத் தலைவர்கள் மக்களுக்கு எப்போதும்
பயந்தனர். ஏனென்றால் அனைத்து மக்களும்
யோவானை உண்மையில் ஒரு தீர்க்கதரிசி
என்று நம்பினர்) என்று தங்களுக்குள் பேசிக்
கொண்டனர்.
33ஆகையால் அவர்கள் இயேசுவிடம்,
"எங்களுக்குப் பதில் தெரியாது" என்றனர்.
இயேசுவும், "அப்படியானால், நானும் யார்
அதிகாரத்தால் இதனைச் செய்கிறேன் என்
பதைச் சொல்லமாட்டேன்" என்றார்.

### திராட்சைத் தோட்ட உவமை

(மத்தேயு 21:33-46; லூக்கா 20:9-19)

12 மக்களுக்குப் போதிக்க இயேசு உவமை
களைப் பயன்படுத்தினார். "ஒருவன்
தன் தோட்டத்தில் திராட்சை பயிரிட்டான்.
அவன் வயலைச் சுற்றி மதில்சுவர் எழுப்
பினான். திராட்சை இரசம் உருவாக்க ஒரு
குழியைத் தோண்டினான். பிறகு அவன் ஒரு
கோபுரத்தையும் கட்டினான். அவன் அத்தோட்
டத்தைச் சில விவசாயிகளுக்குக் குத்தகைக்கு
விட்டான். பிறகு அவன் வேறு தேசத்திற்குப்
போய் விட்டான். 2பின்னர், திராட்சைப்பழம்
பறிப்பதற்கான காலம் வந்தது. திராட்சைத்
தோட்டத்திலுள்ள பழத்தின் குத்தகைப் பங்கை
வாங்கி வருமாறு தோட்டக்காரன் ஒரு வேலை
யாளை அனுப்பி வைத்தான். 3ஆனால் விவ
சாயிகள் அவனைப் பிடித்துக் கட்டிவைத்து
அடித்து வெறுங்கையோடு அனுப்பினர்.
4பின்பு வேறொரு வேலையாளைத் தோட்டக்
காரன் அனுப்பினான். அந்த விவசாயிகள்
அவனைத் தலையில் அடித்தனர். அவர்கள்
அவனுக்கு அவமரியாதை செய்தனர். 5அத
னால் தோட்டக்காரன் மேலும் ஒரு வேலைக்
காரனை அனுப்பி வைத்தான். அந்த விவ
சாயிகள் அவனைக் கொன்று போட்டார்கள்.
அந்தத் தோட்டக்காரன் மேலும் பல வேலைக்
காரர்களை விவசாயிகளிடம் அனுப்பி வைத்
தான். விவசாயிகளோ அவர்களில் சிலரை
அடித்தும் சிலரைக் கொன்றும் போட்டார்கள்.
6"அந்தத் தோட்டக்காரனிடம் மேலும் ஒரே
ஒரு ஆளே இருந்தான். அவன் தான் அவனது
மகன். அவன் தன் மகனைப் பெரிதும் நேசித்
தான். எனினும் அவன் மகனை விவசாயி
களிடம் அனுப்ப முடிவு செய்தான். கடைசி
ஆளாகத் தன் மகனை மட்டுமே அனுப்ப
முடியும் என்று எண்ணினான். 'என் மகனை
யாவது விவசாயிகள் மதிப்பார்கள்' என்று
நம்பினான்.
7ஆனால் விவசாயிகள் தங்களுக்குள்,
'இவன்தான் தோட்டத்துச் சொந்தக்காரனின்
மகன். இந்தத் தோட்டம் இவனுக்கு உரிய
தாகும். இவனை நாம் கொன்றுவிட்டால் இத்
தோட்டம் நம்முடையதாகிவிடும்' என்று
பேசிக் கொண்டனர். 8ஆகையால் அந்த விவ
சாயிகள் அவனது மகனைப் பிடித்து,

---

**வாக்கியம் 26** சில பழைய கிரேக்க பிரதி களில் 26-வது வாக்கியம் சேர்க்கப்பட்டுள்ளது. "ஆனால் நீங்கள் மற்றவர்களின் பாவங்களை மன்னிக்காவிட்டால் பரலோகத்தில் உள்ள உங்கள் பிதா உங்கள் பாவங்களை மன்னிக்க மாட்டார்."

கொன்று, தோட்டத்துக்கு வெளியே தூக்கி
எறிந்துவிட்டனர்.
9“ஆகையால் தோட்டத்துச் சொந்தக்காரன்
வேறு என்ன செய்வான்? அவன் தோட்டத்துக்
குப்போய் அந்த விவசாயிகளை எல்லாம்
கொல்வான். பிறகு அத்தோட்டத்தை வேறு
விவசாயிகளுக்குக் கொடுப்பான். 10உறுதி
யாகவே நீங்கள் இந்த வாக்கியத்தை வாசித்
துள்ளீர்கள்.

*‘வீடு கட்டுகிறவர்கள் வேண்டாமென*
*ஒதுக்கிய கல்லே வீட்டின் மூலைக் கல்லா*
*யிற்று.*
11 *கர்த்தர் ஒருவரே இதனைச் செய்தவர்.*
*இது நமக்கு ஆச்சரியமாயிருக்கிறது’ ”*
*சங்கீதம். 118:22-23*

12இயேசு சொன்ன இந்த உவமையை யூதத்
தலைவர்களும் கேட்டனர். இந்த உவமை தங்
களைப்பற்றியது என்பதை அவர்கள் அறிந்து
கொண்டனர். எனவே, அவர்கள் இயேசுவைக்
கைது செய்ய ஒரு காரணத்தைத் தேடினர்.
எனினும் அவர்களுக்கு மக்களைப்பற்றிய
பயம் இருந்தது. எனவே, அவர்கள் இயே
சுவை விட்டு விட்டுப் போய்விட்டார்கள்.

### யூதத் தலைவர்களின் தந்திரம்
(மத்தேயு 22:15-22; லூக்கா 20:20-26)

13பிறகு யூதத்தலைவர்கள், சில பரிசேயர்
களையும், ஏரோதியர்கள் என்னும் குழுவில்
இருந்து சிலரையும் இயேசுவிடம் அனுப்பி
வைத்தார்கள். ஏதாவது இயேசு தவறாகப்
பேசினால் அவரைப் பிடிக்க வேண்டும்
என்று விரும்பினர். 14பரிசேயர்களும், ஏரோ
தியர்களும் இயேசுவிடம் சென்றனர். “போத
கரே! நீங்கள் ஒரு நேர்மையான மனிதர் என்று
எங்களுக்குத் தெரியும். மற்றவர்கள் என்ன
நினைக்கிறார்கள் என்பது பற்றி உங்களுக்கு
எவ்வித அச்சமும் கிடையாது. அவர்கள்
அனைவரும் உங்களுக்கு ஒரேமாதிரிதான்.
தேவனின் வழியைப் பற்றிய உண்மையையே
நீங்கள் சொல்லிக்கொண்டு வருகிறீர்கள். இரா
யனுக்கு வரி கொடுப்பது சரியா இல்லையா
என்பது பற்றிக் கூறுங்கள். நாங்கள் வரி
கொடுக்கலாமா, வேண்டாமா?” என்று கேட்ட
னர். 15அவர்களின் தந்திரத்தை இயேசு அறிந்து
கொண்டார். அவர், “எதை எதையோ
சொல்லி என்னை ஏன் பிடிக்க முயற்சி செய்
கிறீர்கள்? ஒரு வெள்ளிக்காசைக் கொண்டு
வாருங்கள். நான் பார்க்கவேண்டும்” என்
றார். அவர்கள் ஒரு காசைக் கொடுத்தார்கள்.
அவர்களிடம் இயேசு, 16“யாருடைய உருவப்
படம் இந்தக் காசில் உள்ளது? யாருடைய
பெயர் இதில் எழுதப்பட்டுள்ளது?” என்று
கேட்டார். அவர்களோ அதற்கு, “இது இராய
னுடைய படம், இதில் இராயனின் பெயர்
உள்ளது” என்றார்கள்.

17இயேசு அவர்களைப் பார்த்து, “இராய
னுக்குரியதை இராயனுக்குக் கொடுங்கள்,
தேவனுக்குரியதை தேவனிடம் கொடுங்கள்”
என்றார். அந்த மக்கள் அதைக் கேட்டு ஆச்
சரியப்பட்டார்கள்.

### சதுசேயர்களின் தந்திரம்
(மத்தேயு 22:23-33; லூக்கா 20:27-40)

18பிறகு சில சதுசேயர்கள் இயேசுவிடம்
வந்தனர். (சதுசேயர்கள் என்பவர்கள் எவரும்
இறப்பில் இருந்து உயிர்த்தெழ இயலாது
என்று நம்புகிறார்கள்.) அவர்கள் இயேசு
விடம் ஒரு வினாவைக் கேட்டார்கள். 19“போத
கரே! ஒருவன் திருமணம் ஆகிக் குழந்தை
இல்லாமல் இறந்து போனால் அவனது சகோ
தரன் அவனது மனைவியை மணந்து கொள்
ளலாம் என்று மோசே எழுதி இருக்கிறார்.
அவர்களுக்குக் குழந்தை பிறந்தால் அது
இறந்த சகோதரனுக்கு உரியதாகும் என்கிறார்.
20ஏழு சகோதரர்கள் இருந்தார்கள். முதல் சகோ
தரன் மணந்து கொண்டபின் இறந்து போ
னான். அவனுக்குப் பிள்ளைகள் இல்லை.
21ஆகவே, இரண்டாவது சகோதரன் அவளை
மணந்து கொண்டான். அவனுக்கும் குழந்தை
கள் இல்லை. அவனும் இறந்து விட்டான்.
இதுபோலவே மூன்றாவது சகோதரனுக்கும்
ஏற்பட்டது. 22இவ்வாறே ஏழு சகோதரர்களும்
அப்பெண்ணை மணந்து இறந்து விட்டனர்.
யாருக்குமே அந்தப் பெண்ணோடு குழந்தை
பிறக்கவில்லை. இறுதியில் அந்தப் பெண்
ணும் இறந்துவிட்டாள். 23ஆனால் ஏழு சகோ
தரர்களும் அவளை மணந்திருக்கின்றனர்.
ஆகவே, மரணத்திலிருந்து மக்கள் எழும்
காலத்திலே அந்தப்பெண் யாருடைய மனைவி
யாகக் கருதப்படுவாள்?” என்று கேட்டனர்.
24இதற்கு இயேசு, “ஏன் இந்தத் தவறைச்
செய்கிறீர்கள்? இதற்குக் காரணம் வேதவாக்கி
யங்களில் எழுதப்பட்டுள்ளதை நீங்கள் அறி
கிறதில்லை. அல்லது நீங்கள் தேவனின் வல்ல
மையைத் தெரிந்துகொள்ளவில்லை. 25மரணத்
தில் இருந்து எழும் மக்கள் மத்தியில் திருமண
உறவுகள் ஏதும் இராது. மக்கள் ஒருவரை
யொருவர் மணந்து கொள்ளமாட்டார்கள்.
அனைத்து மக்களும் பரலோகத்தில் உள்ள
தேவதூதர்களைப் போல இருப்பார்கள். 26மக்
கள் மரணத்தில் இருந்து எழுவது பற்றி
தேவன் சொன்னதை நீங்கள் நிச்சயம் வாசித்
திருக்கிறீர்கள். மோசே தனது நூலில் முட்செடி
எரிந்ததைப்பற்றிச் சொல்லும்போது தேவன்
மோசேயிடம் இவ்வாறு சொல்கிறார். ‘நான்
ஆபிரகாமின் தேவன், ஈசாக்கின் தேவன்,
யாக்கோபின் தேவனுமாகிய உங்கள் தேவனு
மாயிருக்கிறேன்’* இவர்கள் உண்மையி
லேயே மரித்தவர்கள் அல்லர். 27அவர் உயி
ரோடு இருப்பவர்களுக்கே தேவனாய் இருக்கி

**நான் ... இருக்கிறேன்** யாத் 3:6.

றார். சதுசேயர்களாகிய நீங்கள் தவறானவர்
கள்” என்றார்.

### மிக முக்கியமான கட்டளை எது?
(மத்தேயு 22:34-40; லூக்கா 10:25-28)

[28]வேதபாரகர்களில் ஒருவன் இயேசுவிடம்
வந்தான். அவன் இயேசுவும் சதுசேயர்களும்,
விவாதிப்பதைக் கேட்டான். இயேசு அவர்
களுக்கு நல்ல பதில் கொடுப்பதைப் பார்த்
தான். எனவே அவன் இயேசுவிடம், “கட்டளை
களுள் எது மிக முக்கியமானது?” என்று
கேட்டான்.
[29]அதற்கு இயேசு, “‘இஸ்ரவேலின் மக்களே!
கவனியுங்கள். நமது தேவனாகிய கர்த்தரே
உண்மையான ஒரே கர்த்தர். [30]நீங்கள் அவரி
டம் அன்பாய் இருக்க வேண்டும். அவரிடம்
நீங்கள் முழு மனதோடும், முழு ஆத்துமா
வோடும், முழு இதயத்தோடும், முழு பலத்
தோடும், அன்பாய் இருக்கவேண்டும்.’* இது
முதல் கட்டளை. [31]‘உங்களை நீங்கள் எந்த
அளவு நேசிக்கிறீர்களோ, அந்த அளவுக்கு
அடுத்தவர்களையும் நேசிக்கவேண்டும்’ என்
பது இரண்டாம் கட்டளை. இவற்றைவிட மிக
முக்கியமான வேறு கட்டளைகள்* எதுவும்
இல்லை” என்றார்.
[32]அதற்கு அந்த மனிதன், “போதகரே! இது
ஒரு நல்ல பதில். நீங்கள் சரியான பதிலையே
சொல்லி இருக்கிறீர்கள். கர்த்தர் ஒருவரே நம்
தேவன். அவரைத் தவிர வேறு தேவன்
இல்லை. [33]ஒருவன் தேவனைத் தன் முழு
மனதோடும், முழு ஆத்துமாவோடும், முழுப்
பலத்தோடும் நேசிக்க வேண்டும். ஒருவன்
தன்னை நேசிப்பது போலவே மற்றவர்களை
யும் நேசிக்க வேண்டும். இந்தக் கட்டளைகளே,
ஏனைய கட்டளைகளைக் காட்டிலும் முக்கிய
மானவை. இவை தகனபலிகள் போன்ற
வற்றைவிட மிக முக்கியமானவை” என்றான்.
[34]அந்த மனிதன் புத்திசாலித்தனமாகப்
பதில் கூறுவதை இயேசு அறிந்து கொண்டார்.
எனவே அவனிடம், “நீ தேவனின் இராஜ்ய
த்தை நெருங்கிவிட்டாய்” என்றார். அதற்குப்
பிறகு ஒருவருக்கும் இயேசுவிடம் எந்த கேள்
வியும் கேட்கும் தைரியம் வரவில்லை.
[35]பின்னர், இயேசு தேவாலயத்தில் போதித்
துக் கொண்டிருந்தார். “கிறிஸ்து தாவீதின்
குமாரன் என்று வேதபாரகர்கள் ஏன் சொல்கி
றார்கள்? [36]பரிசுத்த ஆவியின் உதவியுடன்
தானாக தாவீது கூறுகிறார்.

*‘கர்த்தர் என் ஆண்டவரிடம் சொன்னார்,*
*நீங்கள் எனது வலது பக்கத்தில் உட்*
*காருங்கள். நான் உங்களுடைய பகை*
*வர்களை உங்கள் ஆளுகைக்கு உட்*
*படுத்துவேன்’* சங்கீதம். 110:1

[37]தாவீது தானாக அவரை ஆண்டவர்
என்று அழைக்கிறார். அப்படி இருக்க
கிறிஸ்து எவ்வாறு தாவீதின் மகனாக இருக்க
முடியும்?” என்று இயேசு கேட்டார். ஏராள
மான மக்கள் இயேசு சொல்வதைக் கேட்டு
மனம் மகிழ்ந்தனர்.
[38]தொடர்ந்து இயேசு உபதேசித்துக் கொண்
டிருந்தார். “வேதபாரகர்களிடம் கவனமாக
இருங்கள். அவர்கள் மதிப்பைத் தரும் நீண்ட
ஆடைகளை அணிந்துகொண்டு அங்குமிங்கும்
அலைய விரும்புகிறார்கள். சந்தைப் பகுதி
களில் மக்களிடமிருந்து மரியாதை பெற்றுக்
கொள்ள விரும்புகின்றனர். [39]ஜெப ஆலயங்க
ளில் முக்கியமான இருக்கைகளைப் பெற
விரும்புகின்றனர். விருந்துகளில் மிகமுக்கிய
மான இடங்களில் இருக்க விரும்புகின்றனர்.
[40]விதவைகளை இழிவாக நடத்தி அவர்களது
வீடுகளைத் திருடுகிறார்கள். நீண்ட பிரார்த்
தனை செய்து நல்லவர்கள் போல் தோற்றம்
தருகிறார்கள். இவர்களைத் தேவன் மிகுதி
யாகத் தண்டிப்பார்” என்றார்.

### கொடுப்பதின் மேன்மை
(லூக்கா 21:1-4)

[41]மக்கள் தம் காணிக்கையைச் செலுத்துகிற
ஆலய காணிக்கைப் பெட்டியின் அருகில்
இயேசு உட்கார்ந்திருந்தார். மக்கள் அதில் காசு
கள் போடுவதைக் கவனித்தார். நிறைய பணக்
காரர்கள் ஏராளமாகப் பணத்தைப் போட்டார்
கள். [42]பிறகு ஓர் ஏழை விதவை வந்து இரண்டு
சிறியகாசுகளைப் போட்டாள். [43]இயேசு தனது
சீஷர்களை அழைத்தார். அவர்களிடம், “நான்
உங்களுக்கு உண்மையைச் சொல்கிறேன்.
அந்த ஏழை விதவை இரண்டு சிறிய காசு
களைத்தான் போட்டாள். உண்மையில் அவள்
செல்வந்தர் எவரையும்விட அதிகம் போட்
டிருக்கிறாள். [44]அவர்களிடம் நிறைய பணம்
இருக்கிறது. ஆனால் அவர்களுக்குத் தேவை
யில்லாததையே அவர்கள் கொடுத்தார்கள்.
இவளோ மிகவும் ஏழை. அவள் தன்னிடம்
உள்ள அனைத்தையும் கொடுத்து விட்டாள்.
அவள் கொடுத்தது அவளது வாழ்க்கைக்கு
மிகவும் தேவையான ஒன்றாகும்” என்றார்.

### ஆலயத்தின் எதிர்கால அழிவு
(மத்தேயு 24:1-44; லூக்கா 21:5-33)

13 இயேசு ஆலயத்தை விட்டுப் புறப்படும்
போது அவரது சீஷர்களில் ஒருவன்.
“பாருங்கள் போதகரே! பெரிய பெரிய
கற்களோடு இந்த ஆலயம் பார்க்க எவ்வளவு
அழகாக இருக்கிறது” என்று சொன்னான்.
[2]இயேசுவோ, “நீ இந்தப் பெரிய கட்டிடத்
தைப் பார்க்கிறாய். இவையெல்லாம் ஒரு
காலத்தில் அழிந்துபோகும். ஒவ்வொரு கல்
லும் தரையில் சிதறிப்போகும். ஒரு கல்லோடு
இன்னொன்று சேராது போகும்,” என்றார்.
[3]பிறகு ஒலிவ மலையின் மேலே ஓரிடத்தில்

---

**நீங்கள் ... வேண்டும்** உபா. 6:4-5.

**உங்களை ... வேண்டும்** லேவி 19:18.

உட்கார்ந்தார். அவரோடு பேதுரு, யாக்கோபு,
யோவான் அந்திரேயா ஆகியோர் இருந்தனர்.
அனைவரும் ஆலயத்தைப் பார்த்தனர். சீஷர்
கள் இயேசுவிடம், 4“இவை எப்போது நடை
பெறும் என்று எங்களுக்குச் சொல்லுங்கள்.
இவை நிகழும் காலத்தை நாம் எந்த அடை
யாளங்களால் அறிந்து கொள்ளமுடியும்?”
என்று கேட்டனர்.

5இயேசு சீஷர்களிடம், “எச்சரிக்கையாய்
இருங்கள். யாரும் உங்களை ஏமாற்றாதபடிக்
குப் பார்த்துக் கொள்ளுங்கள் .6பலர் வந்து
என் பெயரைப் பயன்படுத்துவார்கள். அவர்
கள், ‘நானே அவர்’ என்பார்கள். அவர்கள்
மக்களை ஏமாற்றுவார்கள். 7போரைப் பற்றி
யும், போர்களைப் பற்றிய செய்திகளையும்
நீங்கள் கேள்விப் படுவீர்கள். பயப்படாதீர்கள்.
உலக முடிவு ஏற்படும்முன் இவை நிகழ
வேண்டும். 8நாடுகள் ஒன்றோடு ஒன்று போரிட்
டுக்கொள்ளும். இராஜ்யங்கள் ஒன்றோடு
ஒன்று மோதிக்கொள்ளும். மக்களுக்கு உண்ண
உணவில்லை என்று சொல்லும் காலம்
வரும். பல் வேறு இடங்களில் பூமி அதிர்ச்
சிகள் ஏற்படும். இவை ஒரு குழந்தை பிறப்
பதற்கு முன் ஏற்படும் வேதனைபோல உருவா
கும். 9நீங்கள் கவனமாயிருங்கள். மக்கள் உங்
களைக் கைது செய்து நியாயம் வழங்கு
வார்கள். தங்கள் ஜெப ஆலயங்களில் உங்
களை அடிப்பார்கள். நீங்கள் ஆளுநர்கள் முன்
பும், மன்னர்களின் முன்பும், கட்டாயமாக
நிறுத்தப்படுவீர்கள். என்னைப்பற்றி அவர்
களிடம் நீங்கள் சொல்வீர்கள். நீங்கள் என்
னைப் பின்பற்றுவதால் இவை உங்களுக்கு
ஏற்படும். 10இவை நடைபெறுவதற்கு முன்
னால் நற்செய்தியானது எல்லா மக்களுக்கும்
பரப்பப்படும். 11நீங்கள் சொல்லப் போவதைப்
பற்றிக் கவலைப்பட வேண்டாம். அந்த நேரத்
தில் தேவன் பேசக் கொடுத்தவற்றை நீங்கள்
பேசுங்கள். உண்மையில் அவற்றை நீங்கள்
பேசுவதில்லை. உங்கள் மூலம் பரிசுத்த ஆவி
யானவரே பேசுவார்.

12“சகோதரர்கள் ஒருவருக்கொருவர் எதி
ராகிச் சாவுக்கு ஒப்புக்கொடுக்கப் படுவார்கள்.
பெற்றோர் தம் பிள்ளைகளுக்கு எதிராகி
அவர்களை மரணத்துக்கு ஒப்புக்கொடுப்
பார்கள். பிள்ளைகள் தம் பெற்றோருக்கு எதி
ராகச் சண்டையிட்டு அவர்களைக் கொலை
செய்ய வழி தேடுவார்கள். 13நீங்கள் என்னைப்
பின்பற்றுவதால் மக்கள் அனைவரும் உங்
களை வெறுப்பார்கள். இறுதிவரை உறுதி
யாக யார் இருக்கிறார்களோ அவர்களே
இரட்சிக்கப்படுவார்கள்.

14“பேரழிவிற்கு காரணமான மோசமான
காரியத்தை நிற்கத்தகாத இடத்தில் நிற்க நீங்கள்
காண்பீர்கள்.* (இதை வாசிக்கிறவன் இதன்
அர்த்தத்தைப் புரிந்துகொள்ள வேண்டும்.) அப்
போது யூதேயாவில் உள்ள மக்கள் அதை
விட்டு மலைகளுக்கு ஓடிப் போவார்கள். 15மக்
கள் தம் நேரத்தை வீணாக்காமல் எதற்காகவும்
நிற்காமல் ஓடிப்போக வேண்டும். எவனாவது
வீட்டின் கூரைமேல் இருந்தால் அவன் பொ
ருள்களை எடுக்கக் கீழே இறங்காமலும்
வீட்டிற்குள் நுழையாமலும் இருப்பானாக.
16எவனாவது வயலில் இருந்தால் அவன் தன்
மேல்சட்டையை எடுக்கத் திரும்பிப் போகா
மல் இருப்பானாக. 17அந்தக்காலம் கருவுற்ற
பெண்களுக்கும், கைக்குழந்தையுள்ள பெண்
களுக்கும் மிகக் கொடுமையானதாக இருக்கும்.
18மழைக் காலத்தில் இவை நிகழாதிருக்கும்படி
பிரார்த்தனை செய்யுங்கள். 19ஏன்? அந்த நாட்
களில் அதிக அளவு வேதனை இருக்கும்.
தொடக்கக் காலம் முதல் இன்று வரை இது
போன்ற வேதனைகள் ஏற்பட்டிருக்காது. இது
போன்ற கேடுகள் இனிமேல் நடக்காது. 20அக்
கேடு காலம் குறுகியதாக இருக்கட்டும் என்று
தேவன் தீர்மானித்திருக்கிறார். அக்கேடு
காலம் குறுகியதாக இல்லாமல் இருந்தால்
பின்னர் உலகில் ஒருவரும் உயிரோடு இருக்க
முடியாது. அவர் தேர்ந்தெடுத்த சிறப்புக்குரிய
மக்களுக்கு உதவும் பொருட்டு தேவன் அக்
கேடு காலத்தினைக் குறுகியதாக ஆக்குவார்.
21அக்காலத்தில் சிலர் ‘அதோ பாருங்கள்
கிறிஸ்து, இதோ இவர்தான் கிறிஸ்து’ என்று
கூறுவார்கள். அவர்களை நம்பாதீர்கள்.
22கள்ளக் கிறிஸ்துக்களும், கள்ளத் தீர்க்கதரிசி
களும் வந்து அநேக அற்புதங்களையும், அரிய
செயல்களையும் செய்வார்கள். அவர்கள்
இவற்றைத் தேவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட
மக்களிடமே செய்வார்கள். அப்படிச் செய்து
அவர்களை ஏமாற்ற முயற்சிப்பார்கள்.
23எனவே கவனமாய் இருங்கள். இவை நடை
பெறும் முன்னரே நான் உங்களை எச்சரிக்
கை செய்துவிட்டேன்.

24“அந்நாட்களில் அத்துன்பங்கள் நடந்த
பிறகு சூரியன் இருளாகும். சந்திரன் ஒளி
தராது.
25 நட்சத்திரங்கள் வானத்திலிருந்து விழும்.
வானிலுள்ள அத்தனையும் மாறிப்
போகும்’

ஏசாயா 13:10; 34:4

26“பிறகு மேகங்களுக்கு மேல் மனித குமா
ரன் மிகுந்த வல்லமையோடும், மகிமையோ
டும் வருவதைக் காண்பார்கள். 27பூமி முழு
வதும் தேவதூதர்களை மனித குமாரன் அனுப்
பிவைப்பார். அத்தேவதூதர்கள் உலகம் முழு
வதிலும் உள்ள கர்த்தரால் தேர்ந்தெடுக்கப்
பட்ட மக்களைக் கூட்டுவார்கள்.

28“அத்திமரம் நமக்கு ஒரு பாடத்தைக் கற்பிக்
கின்றது. அத்திமரக் கிளைகள் பசுமையாக
வும், மென்மையாகவும் மாறி புதிய இலைகள்

---

**பேரழிவு … காண்பீர்கள்** தானி. 9:27; 12:11 (தானி. 11:31 ஒப்பிடுக)

தளிர்க்க ஆரம்பிக்கும்போது கோடைக்காலம்
நெருங்கும் என்பதை நீங்கள் அறிந்து கொள்ள
லாம். 29இது போலத்தான் நான் சொன்னவை
நிகழ்வதற்கான அறிகுறிகள் தோன்றும். அறி
குறிகள் தோன்றியதும் காலம் நெருங்கி விட்
டதை அறிந்து கொள்ளுங்கள். 30நான் உங்
களுக்கு உண்மையைக் கூறுகிறேன். இப்
பொழுது உள்ள மக்கள் வாழ்ந்துகொண்டிருக்
கும் போதே நான் சொன்னவை எல்லாம்
நிகழும். 31இந்த முழு உலகமும் பூமியும் வான
மும் அழிந்து விடும். ஆனால் நான் சொன்ன
வார்த்தைகள் மாத்திரம் அழியாது.
32“எப்பொழுது, எந்த நேரத்தில் அவை
நடைபெறும் என்று எவராலும் அறிந்து
கொள்ளமுடியாது. இதைப்பற்றி தேவ குமார
னுக்கும், பரலோகத்தில் உள்ள தேவதூதர்
களுக்கும் கூடத் தெரியாது. பிதா மட்டுமே
இதனை அறிவார். 33கவனமாய் இருங்கள்.
எப்பொழுதும் தயாராக இருங்கள். அக்காலம்
எப்போது வரும் என உங்களுக்கும் தெரி
யாது. 34இது, பயணம் செய்பவன் தன் வீட்டை
விட்டுப் போவதைப் போன்றது. அவன் தன்
வேலைக்காரர்களிடம் வீட்டை ஒப்படைத்து
விட்டுப் போகிறான். அவன் ஒவ்வொரு
வேலைக்காரனுக்கும் குறிப்பிட்ட ஒவ்வொரு
வேலையைக் கொடுத்துவிட்டுப் போகிறான்.
ஒரு வேலைக்காரன் வாசலைக் காவல் காப்
பான். எப்பொழுதும் வேலைக்காரர்கள் தயா
ராய் இருக்கவேண்டும் என்று சொல்வான்.
அதைப் போலவே நானும் உங்களுக்குக் கூறு
கிறேன். 35எனவே, நீங்கள் எப்பொழுதும்
தயாராக இருக்க வேண்டும். வீட்டுச் சொந்தக்
காரன் எப்பொழுது திரும்பி வருவான் என்று
எவருக்கும் தெரியாது. ஒரு வேளை அவன்
பிற்பகலில் வரலாம், அல்லது நடு இரவில்
வரலாம் அல்லது அதிகாலையில் வரலாம்,
அல்லது சூரியன் உதயமாகும்போது வரலாம்.
36வீட்டின் சொந்தக்காரன் எதிர்பாராமல் வரு
வான். நீங்கள் எப்போதும் தயாராக இருந்தால்
உங்களைத் தூங்குகிறவர்களாக அவன்
கண்டுபிடிக்க மாட்டான். 37நான் இதனைச்
சொல்கிறேன். நான் எல்லாருக்கும் சொல்
கிறேன்’ தயாராக இருங்கள்” என்றார்.

### யூதத்தலைவர்கள் இயேசுவைக் கொல்லத் திட்டமிடுதல்

(மத்தேயு 26:1-5; லூக்கா 22:1-2; யோவான் 11:45-53)

14 புளிப்பில்லாத அப்பம் சாப்பிடுகிற
பஸ்கா பண்டிகை இரண்டு நாள்
கழித்து வந்தது. அப்பொழுது வேதபாரகரும்,
தலைமை ஆசாரியர்களும் இயேசுவைப் பிடித்
துக் கொல்லத் திட்டம் தீட்டினர். ஏதேனும்
பொய்க்குற்றம் சாட்டி அவரைக் கைது செய்ய
முயன்றனர். 2“பண்டிகையின்போது இயேசு
வைக் கைது செய்ய முடியாது. மக்களுக்குக்
கோபத்தை உருவாக்கி கலகம் ஏற்படுத்த நாங்
கள் விரும்பவில்லை” என்றனர்.

### ஒரு பெண்ணின் சிறப்புச்செயல்

(மத்தேயு 26:6-13; யோவான் 12:1-8)

3இயேசு பெத்தானியாவில் இருந்தார். அவர்
தொழுநோயாளியான சீமோனின் வீட்டில்
உணவு உண்டுகொண்டிருந்தார். அப்பொழுது
அங்கு ஒரு பெண் வந்தாள். அப்பெண்ணிடம்
அதிக விலை மதிப்புள்ள நளதம்* என்னும்
நறுமணத் தைலமுள்ள வெள்ளைக்கல் ஜாடி
இருந்தது. அவள் அந்த ஜாடியைத் திறந்து
அந்நறுமணத் தைலத்தை இயேசுவின் தலை
யில் ஊற்றினாள்.
4சில சீஷர்கள் இதனைக் கவனித்தனர்.
இதனால் அவர்கள் பாதிக்கப்பட்டு தங்களுக்
குள் குற்றம் சாட்டினர். “நறுமணத் தைலத்தை
ஏன் வீணாக்க வேண்டும்? 5ஓராண்டு செலவுக்
குரிய பணத்துக்குச் சமமான மதிப்புள்ளதா
யிற்றே இத்தைலம். அதனை விற்று அப்ப
ணத்தை ஏழைகளுக்குச் செலவு செய்யலாமே”
என்று கூறிக்கொண்டனர். அப்பெண்ணையும்
அவர்கள் பலமாக விமர்சித்தனர்.
6இயேசுவோ, “அந்தப் பெண்ணை ஒன்றும்
சொல்லாதீர்கள். ஏன் அவளைத் தொந்தரவு
செய்கிறீர்கள்? அவள் எனக்காக ஒரு நல்ல
செயலைச் செய்தாள். 7ஏழை மக்கள் எப்
பொழுதும் உங்களோடு இருப்பார்கள். நீங்கள்
விரும்பும்போது எப்பொழுது வேண்டுமானா
லும் அவர்களுக்கு உதவி செய்யலாம்.
ஆனால் நான் எப்பொழுதும் உங்களோடு
இருக்க மாட்டேன். 8இந்தப் பெண்ணால் செய்ய
முடிந்ததைத் தான் அவள் எனக்காகச் செய்தி
ருக்கிறாள். நான் அடக்கம் பண்ணப்படு
வதற்கு உதவியாக என் உடலில் தைலம்
பூச முந்திக்கொண்டாள். 9நான் உங்களுக்கு
உண்மையைக் கூறுகிறேன். உலகில் உள்ள
அனைத்து மக்களுக்கும் நற்செய்தி சொல்லப்
படும் எல்லா இடங்களிலும் இந்தப் பெண்
செய்ததும் சொல்லப்படும். அப்போது மக்கள்
இவளை நினைவில் இருத்திக்கொள்வார்கள்”
என்றார்.
10பன்னிரண்டு சீஷர்களுள் ஒருவன்
தலைமை ஆசாரியர்களிடம் பேசச் சென்றான்.
அந்த சீஷனின் பெயர் யூதாஸ் காரியோத்.
அவன் அவர்களிடம் இயேசுவை ஒப்படைக்க
விரும்பினான். 11தலைமை ஆசாரியர்கள் இது
குறித்து பெரிதும் மகிழ்ச்சி அடைந்தனர்.
அவர்கள் அதற்குரிய பணத்தை அவனுக்குத்
தருவதாக வாக்குறுதி அளித்தனர். ஆகை
யால் அவன் தக்க தருணத்தை எதிர்பார்த்துக்
காத்திருந்தான்.
12அன்று புளிப்பில்லாத அப்பம் உண்ணும்
பஸ்கா பண்டிகையின் முதல் நாள். அன்று
தான் அவர்கள் பஸ்கா ஆட்டுக் குட்டியைப்

**நளதம்** நளதச் செடியிலிருந்து தயாரிக்கப்படும் விலை உயர்ந்த வாசனை எண்ணெய்.

பலியிடுவார்கள். இயேசுவின் சீஷர்கள் அவரி
டம் வந்தனர். “நாங்கள் உமக்காகப் பஸ்கா
விருந்து உண்ண எங்கு ஏற்பாடு செய்ய
வேண்டும் என்று விரும்புகிறீர்?” என்று கேட்
டனர்.
[13]இயேசு நகரத்துக்குள் இரண்டு சீஷர்களை
அனுப்பினார். “நகரத்துக்குள் போங்கள். தண்
ணீர் குடத்தைச் சுமந்துகொண்டுவரும் ஒரு
வனைக் காண்பீர்கள். அவன் உங்களிடம்
வருவான். அவனைப் பின்தொடர்ந்து செல்
லுங்கள். [14]அவன் ஒரு வீட்டுக்குச் செல்வான்.
அந்த வீட்டு எஜமானனைப் பாருங்கள்.
‘ஆண்டவரும், அவரது சீஷர்களும் பஸ்கா
விருந்துண்ணும் அறை எது?’ என்று கேளுங்
கள். [15]அவன் மாடியில் உள்ள ஒரு பெரிய
அறையைக் காட்டுவான். அந்த அறை உங்
களுக்கு தயாராக இருக்கும். அங்கு விருந்து
தயார் செய்யுங்கள்” என்றார்.
[16]ஆகையால் சீஷர்கள் அவ்விடத்தை விட்டு
நகரத்துக்குச் சென்றனர். இயேசு சொன்னபடி
எல்லாக் காரியங்களும் நிறைவேறின.
எனவே, சீஷர்கள் பஸ்கா விருந்தைத் தயாரித்
தனர்.
[17]மாலையில் அந்த வீட்டுக்குப் பன்னி
ரண்டு சீஷர்களோடு இயேசு சென்றார். [18]அவர்
கள் உணவு உண்ணும்போது, இயேசு “நான்
உங்களுக்கு உண்மையைக் கூறுகிறேன். இப்
பொழுது என்னோடு உணவு உண்டுகொண்
டிருக்கிற உங்களில் ஒருவன் என்னைக் காட்
டிக் கொடுப்பான்” என்றார்.
[19]இதைக் கேட்டதும் சீஷர்கள் பெரிதும்
வருத்தப்பட்டனர். ஒவ்வொருவரும் அவரிடம்,
“உறுதியாக அது நானில்லை” என்று கூறி
னர்.
[20]இயேசுவோ, “எனக்கு எதிரியாகிறவன்
உங்கள் பன்னிரண்டு பேர்களில் ஒருவன்
தான். அவன் என்னோடுதான் இப்போது
தனது அப்பத்தை இப்பாத்திரத்தில் நனைத்துக்
கொண்டிருக்கிறான். [21]மனித குமாரன் இறந்து
போவார். வேதவாக்கியங்களில் எழுதியபடி
எல்லாம் நடக்கும். எனினும் எந்த மனிதனால்
மனிதகுமாரன் காட்டிக் கொடுக்கப்படுவாரோ
அந்த மனிதனுக்குக் கேடு வரும். அவன்
பிறக்காமல் இருந்தால் அது அவனுக்கு நன்
மையாக இருந்திருக்கும்” என்றார்.

### கர்த்தரின் விருந்து

(மத்தேயு 26:26-30; லூக்கா 22:15-20
1 கொரிந்தியர் 11:23-25)

[22]அவர்கள் உணவு உண்ணும்போது,
இயேசு அப்பத்தை எடுத்தார். தேவனுக்கு
நன்றி சொல்லி அவற்றைப் பங்கிட்டார். அவற்
றைத் தம் சீஷர்களுக்கு கொடுத்தார். அவர்,
“இதனைப் புசியுங்கள். இது எனது சரீரம்”
என்றார்.
[23]பிறகு அவர் ஒரு கோப்பை திராட்சை
இரசத்தை எடுத்தார். தேவனுக்கு நன்றி சொல்
லிவிட்டு சீஷர்களுக்குக் கொடுத்தார். அவர்கள்
அனைவரும் அதனைக் குடித்தனர்.
[24]பிறகு இயேசு, “இது தான் எனது இரத்தம்.
தேவனிடமிருந்து மக்களுக்கு இது ஒரு புதிய
உடன்படிக்கையை உருவாக்குகிறது. இந்த
இரத்தம் பலருக்காகச் சிந்தப்படுகிறது. [25]உங்
களுக்கு நான் உண்மையைக் கூறுகிறேன்.
தேவனுடைய இராஜ்யத்தில் நான் புதிய
திராட்சை இரசத்தைக் குடிக்கும் நாள்வரை
இனி இங்கு மறுபடியும் திராட்சை இரசத்தைக்
குடிக்கமாட்டேன்” என்றார்.
[26]அவர்கள் பாடலைப் பாடினர். பிறகு
அவர்கள் ஒலிவ மலைக்குச் சென்றனர்.

### சீஷர்கள் இயேசுவைவிட்டு விலகுதல்

(மத்தேயு 26:31-35; லூக்கா 22:31-34;
யோவான் 13:36-38)

[27]பின்னர் இயேசு தன் சீஷர்களிடம், “நீங்கள்
உங்கள் விசுவாசத்தை இழந்துவிடுவீர்கள்
என்று வேதவாக்கியங்களில் எழுதப்பட்டிருக்
கிறது:

‘நான் மேய்ப்பனைக் கொல்லுவேன்.
ஆடுகள் சிதறி ஓடும்.’

சகரியா 13:7

[28]ஆனால் நான் இறந்த பிறகு மரணத்
திலிருந்து எழுவேன். பிறகு நான் கலிலேயா
வுக்குப் போவேன். நீங்கள் போவதற்கு முன்
நான் அங்கிருப்பேன்” என்றார்.
[29]பேதுரு, “மற்ற சீஷர்கள் வேண்டுமானால்
தங்கள் விசுவாசத்தை இழந்து போகலாம்.
ஆனால் நான் எப்பொழுதும் விசுவாசம் இழக்
கமாட்டேன்” என்றான்.
[30]இயேசுவோ, “நான் உண்மையைக் கூறு
கிறேன். இன்று இரவே என்னைப்பற்றித் தெரி
யாது என்று கூறுவாய். அதுவும் சேவல்
இரண்டு முறை கூவுவதற்குமுன் மூன்று முறை
நீ என்னை மறுதலிப்பாய்” என்றார்.
[31]ஆனால் பேதுருவோ “உங்களைத் தெரி
யாது என்று நான் நிச்சயமாக சொல்ல
மாட்டேன். நான் என் உயிரைக் கூட உம்மோடு
விடுவேன்” என்றான் உறுதியாக. எல்லாரும்
அவ்வாறே சொன்னார்கள்.

### இயேசுவின் பிரார்த்தனை

(மத்தேயு 26:36-46; லூக்கா 22:39-46)

[32]இயேசுவும், அவரது சீஷர்களும் கெத்செ
மனே என்று அழைக்கப்படும் இடத்துக்குச்
சென்றனர். இயேசு “நான் பிரார்த்தனை செய்
யும்போது எல்லாரும் இங்கே இருங்கள்” என்
றார்.
[33]இயேசு தன்னோடு பேதுரு, யாக்கோபு,
யோவான் ஆகியோரை அழைத்துச் சென்
றார். அவர் மிகவும் வேதனைப்பட்டு, மிகவும்
துன்பப்பட்டார். [34]“என் ஆத்துமா துக்கத்தால்
நிறைந்திருக்கிறது. என் இதயம் துயரத்தால்

உடைந்து போயிருக்கிறது. இங்கேயே காத்தி
ருங்கள், விழித்திருங்கள்" என்றார்.
35இயேசு அவர்களிடமிருந்து விலகிச்
சிறிது தூரம் சென்றார். அவர் அங்கு தரை
யில் விழுந்து அந்த வேளை தம்மை விட்டு
நீங்கிப் போகக்கூடுமானால் நீங்கட்டும் என
பிரார்த்தனை செய்தார். 36"பிதாவே! உங்
களால் எல்லாவற்றையும் செய்ய முடியும்.
துயரத்தின் பாத்திரத்தில் நான் அருந்தாதபடி
செய்யுங்கள். ஆனாலும் நான் விரும்புகிறபடி
இல்லாமல் உங்கள் விருப்பம் போல் எல்லாம்
நடக்கட்டும்" என்றார்.
37பிறகு இயேசு சீஷர்களிடம் வந்து, அவர்
கள் தூங்குவதைக் கண்டார். அவர் பேதுரு
விடம், "சீமோனே, ஏன் தூங்குகிறாய். எனக்
காக ஒரு மணி நேரம் உன்னால் விழித்திருக்க
முடியாதா? 38நீ சோதனைக்கு இடம் தராதபடி
விழித்திருந்து பிரார்த்தனை செய். உனது
ஆத்துமா நல்லவற்றையே செய்ய விரும்பு
கிறது. ஆனால் உனது சரீரம் பலவீனமாக
உள்ளது" என்றார்.
39மீண்டும் இயேசு தனியே சென்று அதே
வார்த்தைகளைச் சொல்லிப் பிரார்த்தனை
செய்தார். 40பிறகு சீஷர்களிடம் திரும்பி வந்
தார். மீண்டும் அவர்கள் தூங்குவதைப் பார்த்
தார். அவர்களது கண்கள் மிகவும் சோர்ந்
திருந்தன. இயேசுவிடம் என்ன சொல்லவேண்
டும் என்பதை அவர்கள் அறியாதிருந்தனர்.
41மூன்றாவது முறையாக இயேசு தனிப்
பிரார்த்தனை செய்தபின் சீஷர்களிடம்
திரும்பி வந்தார். அவர்களிடம், "நீங்கள்
இன்னும் தூங்கிக்கொண்டும் இளைப்பாறிக்
கொண்டுமிருக்கிறீர்கள், இதுபோதும். மனித
குமாரன் பாவிகளின் கைகளில் ஒப்படைக்கப்
படும் காலம் வந்துவிட்டது. 42எழும்புங்கள்,
நாம் போகவேண்டும். இதோ அவர்களிடம்
என்னைக் காட்டிக்கொடுக்கிற மனிதன் வந்து
விட்டான்" என்றார்.

### இயேசு கைதாகுதல்
(மத்தேயு 26:47-56; லூக்கா 22:47-53;
யோவான் 18:3-12)

43இயேசு இவ்வாறு பேசிக்கொண்டிருக்கும்
போதே யூதாஸ் அங்கே வந்தான். அவன்
பன்னிரண்டு சீஷர்களுள் ஒருவன். அவனோடு
பலர் வந்தனர். அவர்கள் தலைமை ஆசாரியர்
களாலும், வேதபாரகராலும் மூத்த யூதத்தலை
வர்களாலும் அனுப்பப்பட்டிருந்தனர். அவர்
களிடம் வாள்களும், தடிகளும் இருந்தன.
44யூதாஸ் அவர்களுக்கு ஒரு அடையாளம்
கொடுத்து வைத்திருந்தான். அதன்படி, "நான்
யாரை முத்தமிடுகிறேனோ அவர்தான் இயேசு.
அவரைக் கைது செய்து பத்திரமாய்க்
கொண்டு செல்லுங்கள்" என்று சொல்லி
இருந்தான். 45அவன் இயேசுவிடம் வந்து
அவரை முத்தமிட்டு "போதகரே' என்றான்.
46உடனே அவர்கள் இயேசுவின் மேல் கை
போட்டுக் கைது செய்தனர். 47இயேசுவின் அரு
கில் நின்ற ஒரு சீஷன் தன் வாளை உருவி
இயேசுவைப் பிடித்தவனின் காதினை அறுத்
தான். காது அறுபட்டவன் தலைமை ஆசாரி
யனின் வேலைக்காரன்.
48இயேசுவோ, "ஒரு குற்றவாளியைப்
பிடிக்க வருவதுபோல நீங்கள் வாளோடும்
தடிகளோடும் வந்துள்ளீர்கள். 49நான் எப்
போதும் உங்கள் மத்தியில் ஆலயத்தில் தானே
உபதேசம் செய்துகொண்டிருந்தேன். அங்கே
நீங்கள் என்னைக் கைது செய்யவில்லையே.
எல்லாம் எழுதப்பட்டிருக்கிறபடி நடைபெற்
றது" என்றார். 50அவரது சீஷர்கள் அவரை
விட்டு விலகி ஓடிச் சென்றார்கள்.
51ஓர் வாலிபன் இயேசுவைப் பின்
தொடர்ந்து வந்தான். அவன் ஒரு மேலாடை
மட்டும் அணிந்திருந்தான். அவர்கள் அவனை
யும் பிடித்து இழுத்தார்கள். 52ஆனால் அவனோ
மேலாடையைப் போட்டுவிட்டு நிர்வாணமாக
ஓடினான்.

### யூதத் தலைவர்களின் முன் இயேசு
(மத்தேயு 26:57-68; லூக்கா 22:54-55, 63-71;
யோவான் 18:13-14, 19-24)

53இயேசுவைக் கைது செய்தவர்கள் அவ
ரைப் பிரதான ஆசாரியனின் வீட்டுக்குக்
கொண்டு சென்றார்கள். அங்கே அனைத்து
தலைமை ஆசாரியர்களும் முதிய யூதத்தலை
வர்களும் வேதபாரகர்களும் கூடினர். 54பேதுரு
வும் இயேசுவைப் பின்தொடர்ந்து சென்றான்.
ஆனால் இயேசுவை நெருங்கவில்லை. தலை
மை ஆசாரியனின் அரண்மனைக்குள் நுழைந்
தான். அப்போது சில காவலர்கள் குளிர்
காய்ந்து கொண்டிருந்தனர். பேதுருவும் நெருப்
பருகில் சென்றான்.
55தலைமை ஆசாரியரும், மற்றவர்களும்
இயேசுவைக் கொல்ல குற்றங்களை ஆராய்ந்து
கொண்டிருந்தனர். யூத ஆலோசனைச் சங்கத்
தினரால் இயேசுவைக் கொல்வதற்குரிய எவ்
விதக் குற்றமும் கண்டுபிடிக்க முடியவில்லை.
56பலர் வந்து அவர்மீது தவறான குற்றச்சாட்டு
களைக் கூறிக்கொண்டிருந்தனர். ஆனால்
அவை ஒன்றுக்கொன்று ஒத்துப்போக
வில்லை.
57பின்பு சில மக்கள் எழுந்து அவர்மேல்
தவறாகக் குற்றம் சாட்டினர். 58"'நான் இந்த
ஆலயத்தை இடித்துப் போடுவேன். இது
மனிதர்களால் கட்டப்பட்டது. நான் வேறு
ஆலயத்தை மூன்று நாட்களுக்குள் கட்டுவேன்.
அது மனிதர்களால் கட்டப்படாதது' என்று
இவன் கூற நாங்கள் கேட்டோம்" என்றார்கள்.
59ஆனால் அப்படி சொல்லியும் அவர்கள்
சாட்சி ஏற்றுக்கொள்ளப்படாமல் போயிற்று.
60தலைமை ஆசாரியன் அவர்களுக்குமுன்
எழுந்து நின்றான். அவன் இயேசுவிடம், "இந்த
மக்கள் உமக்கு எதிராகக் கூறுகின்றனர். இவற்
றுக்கு உம் பதில் என்ன? இவர்கள் சொல்வது

உண்மையா?” என்று கேட்டான். 61ஆனால்
இயேசு எதுவும் கூறவில்லை. தலைமை ஆசா
ரியன் இயேசுவிடம், “நீர் கிறிஸ்துவா? ஆசீர்வ
திக்கப்பட்ட தேவனின் குமாரனா?” என்று
இன்னொரு கேள்வியைக் கேட்டான்.
62இயேசுவோ, “ஆம். நான் தேவ குமாரன்
தான். எதிர்காலத்தில் மனித குமாரன் சர்வ
வல்லவரின் வலது பக்கத்தில் இருப்பதைக்
காண்பீர்கள். பரலோக இராஜ்யத்தில் மேகங்
களின் நடுவே மனித குமாரன் வருவதைப்
பார்ப்பீர்கள்” என்றார்.
63இதைக் கேட்டதும் தலைமை ஆசாரியனுக்
குக் கோபம் வந்தது. அவன் தனது ஆடை
களைக் கிழித்துக்கொண்டு, “நமக்கு மேலும்
சாட்சிகள் தேவையில்லை. 64தேவனுக்கு எதி
ராக இவன் சொல்வதை நீங்கள் கேட்டீர்கள்.
என்ன நினைக்கிறீர்கள்?” என்று கேட்டான்.
அனைத்து மக்களும் இயேசுவைக் குற்றவாளி
என்றனர். அவரைக் கொல்லப்படவேண்டிய
குற்றவாளி என்றனர். 65சிலர் இயேசுவின்மீது
காறித் துப்பினார்கள். அவரது கண்களை
மூடினர்,: அவரைக் குட்டினர். “நீ தீர்க்கதரிசி
என்பதை எங்களுக்கு நிரூபித்துக் காட்டு”
என்று சொன்னார்கள். பிறகு காவற்காரர்கள்
இயேசுவை வெளியே கொண்டுபோய் அடித்
தார்கள்.

## பேதுருவின் மறுதலிப்பு

(மத்தேயு 26:69-75; லூக்கா 22:56-62;
யோவான் 18:15-18, 25-27)

66அப்போது பேதுரு வீட்டின் முற்றத்தில்
இருந்தான். அம்மாளிகையில் உள்ள வேலைக்
காரப் பெண் பேதுருவிடம் வந்தாள். 67பேதுரு
நெருப்பு காய்ந்து கொண்டிருந்தான். அவள்
பேதுருவை மிகவும் நெருக்கத்தில் பார்த்தாள்.
“நாசரேத் ஊரானாகிய இயேசுவோடு நீயும்
இருந்தாய் அல்லவா?” என்று கேட்டாள்
அவள்.
68ஆனால் பேதுருவோ “நான் இயேசுவோடு
இருந்ததே இல்லை” என்று மறுத்தான்.
மேலும், “நீங்கள் என்ன பேசுகிறீர்கள் என்றே
எனக்குத் தெரியவுமில்லை, புரியவுமில்லை”
என்று கூறினான். பிறகு பேதுரு விலகி
வெளியே வாசல் மண்டபத்துக்குச் சென்றான்.
69மீண்டும் அந்த வேலைக்காரப் பெண்
பேதுருவை கவனித்தாள். அங்கு நின்று
கொண்டிருந்தவர்களிடம் அவள், “இயேசு
வின் சீஷர்களுள் இவனும் ஒருவன்”, என்
றாள். 70பேதுரு, மீண்டும் அவள் சொல்வது
உண்மையில்லை என்று கூறினான். கொஞ்ச
நேரம் சென்றதும், பேதுரு அருகில் சிலர்
நின்று கொண்டிருந்தனர். அவர்கள் பேதுரு
விடம், “இயேசுவின் சீஷர்களுள் நீயும் ஒரு
வன். நீயும் கூட கலிலேயாவில் இருந்து வரு
கிறவன்” என்றனர்.
71பேதுரு சபிக்கவும், சத்தியம் பண்ணவும்
தொடங்கி, “நான் தேவன் மீது ஆணையிட்டுக்
கூறுகிறேன். நீங்கள் பேசுகிற அந்த மனித
னைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது” என்
றான். 72பேதுரு இவ்வாறு சொன்னதும் சேவ
லானது இரண்டாம் முறையாகக் கூவியது.
இயேசு சொல்லி இருந்ததைப் பேதுரு நினைத்
துப் பார்த்தான். இன்று இரவு சேவல் இரண்டு
முறை கூவுவதற்கு முன்னால் நீ மூன்று முறை
என்னை மறுதலிப்பாய்” என்று சொல்லி
இருந்தார். இதனால் துயருற்று பேதுரு கதறி
யழுதான்.

## பிலாத்துவின் விசாரணை

(மத்தேயு 27:1-2, 11-14; லூக்கா 23:1-5;
யோவான் 18:28-38)

15 அதிகாலையில் தலைமை ஆசாரியர்
கள், யூதத் தலைவர்கள், வேதபாரகர்கள்
அனைவரும் கூடி இயேசுவை என்ன செய்
வது என்று கலந்து ஆலோசித்தனர். அவரைக்
கட்டி ஆளுநர் பிலாத்துவிடம் அழைத்துச்
சென்றனர். அவர்கள் இயேசுவைப் பிலாத்து
விடம் ஒப்படைத்தனர்.
2“நீ யூதர்களின் மன்னனா?” என்று
பிலாத்து கேட்டான்.
அதற்கு இயேசு, “ஆமாம். நீர் சொல்வது
சரிதான்” என்றார்.
3தலைமை ஆசாரியர் இயேசுவின்மீது பல
குற்றங்களைச் சுமத்தினர். 4பிலாத்து இயேசு
விடம், “இம்மக்கள் உனக்கு எதிராகக் குற்றங்
களை சுமத்துவதை நீ அறிவாய். எனினும்
நீ ஏன் எந்த பதிலும் சொல்லவில்லை?”
என்று மீண்டும் கேட்டான்.
5ஆனால் இயேசு இதுவரை எந்தப் பதிலை
யும் கூறவில்லை. இதைப்பற்றி பிலாத்து மிக
வும் ஆச்சரியப்பட்டான்.

## இயேசுவை விடுதலை செய்ய பிலாத்து முயன்று தோற்பது

(மத்தேயு 27:15-31; லூக்கா 23:13-25;
யோவான் 18:39-19:16)

6ஒவ்வொரு ஆண்டும் பஸ்கா பண்டிகை
யின்போது சிறையில் இருந்து ஒருவனை
ஆளுநர் விடுதலை செய்யும் அதிகாரம் பெற்
றிருந்தார். மக்கள் விரும்புகின்றவனையே
அவர் விடுதலை செய்யமுடியும். 7அப்போது
பரபாஸ் என்ற மனிதன் சிறையில் கலகக்
காரர்களோடு ஒரு கலவரத்தில் கொலை
குற்றத்திற்காகச் சிறையில் அடைக்கப்பட்
டிருந்தான். 8வழக்கத்தின்படி ஒருவனை விடு
தலை செய்யும்படி மக்கள் ஆளுநரிடம் கேட்டுக்
கொண்டனர்.
9மக்களிடம் பிலாத்து, “யூதர்களின் மன்
னனை விடுதலைசெய்ய விரும்புகிறீர்களா?”
என்று கேட்டான்.10பொறாமை காரணமாகத்
தான் தலைமை ஆசாரியர்கள் இயேசுவைத்
தன்னிடம் ஒப்படைத்திருக்கின்றனர் என்
பதைப் பிலாத்து அறிந்திருந்தான். 11தலைமை
ஆசாரியர்கள் இயேசுவை விடுதலை செய்ய

வேண்டாம் என்றும் பரபாசை விடுதலை
செய்யவேண்டும் என்றும் கேட்க மக்களைத்
தூண்டிவிட்டனர்.
12"அப்படியானால் யூதர்களின் மன்னனா
கிய இந்த மனிதனை நான் என்ன செய்ய
வேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்கள்?"
என்று பிலாத்து மக்களிடம் கேட்டான். 13"அவ
னைச் சிலுவையில் அறைந்து கொல்லுங்
கள்" என்று அவர்கள் மீண்டும் சத்தமிட்டனர்.
14"ஏன்? இவன் என்ன பாவம் செய்தான்"
என்று பிலாத்து கேட்டான். ஆனால் மக்கள்
மேலும் மேலும் சப்தமிட்டனர். "அவனைச்
சிலுவையில் கொல்லுங்கள்" என்றனர்.
15மக்களைப் பிரியப்படுத்த, பிலாத்து
விரும்பினான். எனவே பரபாசை விடுதலை
செய்தான். இயேசுவைச் சவுக்கால் அடிக்கும்
படி வீரர்களிடம் சொன்னான். பின்னர் அவ
ரைச் சிலுவையில் அறையும்படி வீரர்களிடம்
ஒப்படைத்தான்.
16பிலாத்துவின் வீரர்கள் ஆளுநரின் அரண்
மனையாகிய மாளிகைக்கு இயேசுவைக்
கொண்டு வந்தார்கள். அவர்கள் மற்ற வீரர்
களையும் தம்முடன் அழைத்தனர். 17அவர்கள்
ஒரு சிவப்பு அங்கியை அவர்மேல் அணிவித்
தார்கள். அவருக்கு முள்ளால் கிரீடம் செய்து
சூட்டினர். 18பின்னர் அவர்கள், "யூதர்களின்
மன்னன்" என்று வாழ்த்தி கேலி செய்தார்கள்.
19கோலால் அவர் தலையில் பல முறை அடித்
தார்கள். அவர்மீது துப்பினார்கள். முழங்
காலிட்டு அவரை வணங்குவதைப்போல
நடித்துக் கிண்டல் செய்தார்கள். 20எல்லாம்
முடிந்தபிறகு சிவப்பு மேலங்கியைக் கழற்றி
விட்டு அவரது சொந்த ஆடையை அணிவித்
தனர். அவரைச் சிலுவையில் அறைவதற்காக
அரண்மனையை விட்டு வெளியே அழைத்து
வந்தனர்.

### இயேசு சிலுவையில் அறையப்படுதல்
(மத்தேயு 27:32-44; லூக்கா 23:26-43;
யோவான் 19:17-27)

21சிரேனே என்ற ஊரிலிருந்து ஒரு மனிதன்
நகரத்திற்கு வந்துகொண்டிருந்தான். அவன்
பெயர் சீமோன். இவன் அலெக்சாண்டர்,
மற்றும் ரூபஸ் ஆகியோரின் தந்தை. அவன்
வயலில் இருந்து நகரத்திற்குள் வந்தான். வீரர்
கள் அவனைப் பிடித்து இயேசுவுக்காகச் சிலு
வையைச் சுமக்கும்படிக் கட்டாயப்படுத்தினர்.
22கொல்கொதா என்ற இடத்துக்கு இயேசுவைக்
கொண்டு சென்றார்கள். (கொல்கொதா என்
றால் மண்டை ஓடுகளின் இடம் என்று
பொருள்) 23அங்கே இயேசுவுக்குத் திராட்சை
இரசத்தைக் கொடுக்க வீரர்கள் முயன்றனர்.
அந்த இரசத்தில் வெள்ளைப்போளம் என்னும்
போதைப் பொருள் கலக்கப்பட்டிருந்தது.
ஆனால் இயேசு அதைக் குடிக்க மறுத்து
விட்டார். 24வீரர்கள் இயேசுவைச் சிலுவை
மேல் ஆணியால் அடித்தனர். இயேசுவின்
ஆடையை அவர்கள் பங்கு போட்டுக் கொண்
டார்கள். எந்த ஆடையை யார் எடுத்துக்கொள்
வது என்பது பற்றி அவர்கள் தங்களுக்குள்
சீட்டு போட்டுக் கொண்டார்கள்.
25அவர்கள் இயேசுவைச் சிலுவையில்
அறையும்போது காலை ஒன்பது மணி.
26அவர் அடைந்த தண்டனையின் காரணத்
தைக் காட்ட 'யூதருடைய மன்னன்' என எழுதி
சிலுவையின் மேலே தொங்க விட்டனர்.
27அவர்கள் இயேசுவின் இருபுறத்திலும்
இரண்டு கள்ளர்களைச் சிலுவையில் அறைந்
தனர். 28*
29அவ்வழியாய்ப் போகும் மக்கள் இயேசு
வை அவமரியாதை செய்து பேசினார்கள்.
அவர்கள் தங்கள் தலையை உலுக்கி "ஆலயத்
தை இடித்துப் போட்டுவிட்டு மூன்று நாட்களுக்
குள் கட்டிவிடுவேன் என்றாயே. 30ஆகவே
நீயே உன்னைக் காப்பாற்றிக்கொள். சிலுவை
யில் இருந்து இறங்கி வா" என்றனர்.
31வேதபாரகர்களும் தலைமை ஆசாரியர்
களும் அங்கே அவர்களோடு இருந்தனர். அவர்
களும் இயேசுவை மற்ற மக்கள் செய்த விதத்
திலேயே கேலி செய்தனர். "இவன் மற்றவர்
களைக் காப்பாற்றினான். ஆனால் தன்னைத்
தான் காப்பாற்ற முடியவில்லை. 32இவன் உண்
மையிலேயே கிறிஸ்து என்றால், யூதர்களின்
மன்னன் என்றால் சிலுவையில் இருந்து
இறங்கி வந்து தன்னைத்தானே காப்பாற்றிக்
கொள்ளலாமே. நாங்கள் அதைப் பார்த்தால்
இவனை நம்புவோமே" என்றனர். இயேசு
வின் இருபுறமும் அறையப்பட்ட கள்ளர்களும்
இயேசுவைப்பற்றி அவதூறாகப் பேசினர்.

### இயேசு இறத்தல்
(மத்தேயு 27:45-56; லூக்கா 23:44-49;
யோவான் 19:28-30)

33மதிய வேளையில் நாடு முழுவதும்
இருண்டது. இந்த இருட்டு மூன்று மணிவரை
இருந்தது. 34மூன்று மணிக்கு இயேசு மிக
உரத்த குரலில், "ஏலி! ஏலி! லாமா சபக்தானி"
என்று கதறினார். இதற்கு 'என் தேவனே,
என் தேவனே ஏன் என்னைக் கைவிட்டீர்?'*
என்று பொருள்.
35அங்கே நின்றுகொண்டிருந்த சிலர் இத
னைக் கேட்டனர். அவர்கள், "கவனியுங்கள்.
அவன் எலியாவை கூப்பிடுகிறான்" என்
றனர். 36ஒரு மனிதன் ஓடிப் போய் கடற்காளா
னைக் கொண்டு வந்தான். அவன் அதனைக்
காடியில் தோய்த்து கோலின் நுனியில் கட்டி
னான். பிறகு அதனை இயேசு சுவைக்குமாறு
வாயருகில் காட்டினான். அவன், "காத்திருந்து
பார்ப்போம். எலியா வருவானா? இவனைச்

---

**வாக்கியம் 28** சில கிரேக்க பிரதிகளில் 28வது வாக்கியம் உள்ளது. ''வேத வாக்கியங்கள் சொன்னபடி நடந்தது. 'அவர்கள் அவரை குற்றவாளிகளோடு சேர்த்தனர்.' '' (ஏசாயா 53:12)

**என் தேவனே … கைவிட்டீர்** சங்கீதம் 22:1.

சிலுவையில் இருந்து இறக்கிக் காப்பாற்று
வானா?" என்று கேலியாய்ச் சொன்னான்.
37இயேசு உரத்த குரலில் கதறி உயிர்
விட்டார்.
38இயேசு இறந்ததும் ஆலயத்தின் திரைச்
சீலை இரண்டாய்க் கிழிந்தது. அக்கிழிசல் மேற்
புறம் தொடங்கிக் கீழே வரை வந்தது. 39இயேசு
இறக்கும்போது, அங்கே நின்றுகொண்டிருந்த
இராணுவ அதிகாரி, "இவர் தேவனுடைய
குமாரன் தான்" என்றார்.
40சில பெண்கள் சிலுவைக்குச் சற்றுத்
தள்ளி நின்று இதனைக் கவனித்துக்கொண்டு
நின்றனர். அவர்கள், மகதலேனா மரியாள்,
சலோமி, யாக்கோபு, யோசே ஆகியோரின்
தாயாரான மரியாள் ஆகியோராவர். (யாக்
கோபு மரியாளின் இளைய மகன்.) 41இயேசு
வுடனேகூட எருசலேமிற்கு வந்திருந்த ஏனைய
பல பெண்களும் அவர்களோடு இருந்தார்கள்.

### இயேசுவின் அடக்கம்

(மத்தேயு 27:57-61; லூக்கா 23:50-56;
யோவான் 19:38-42)

42இந்த நாள் ஆயத்த நாள் என்று அழைக்
கப்பட்டது. (அதாவது ஓய்வு நாளுக்கு முந்தின
நாள்) அன்று இருட்டத் தொடங்கியதும்
43மரியாதைக்குரிய ஆலோசனைக்காரனும்
அரிமத்தியா ஊரைச் சேர்ந்தவனும் தேவ
னுடைய இராஜ்யம் வருவதற்காகக் காத்திருந்
தவனுமாகிய யோசேப்பு என்பவன் பிலாத்து
விடம் துணிந்துபோய் இயேசுவின் சரீரத்தைக்
கேட்டான். 44ஏற்கெனவே இயேசு இறந்துபோ
னதைக் கேள்விப்பட்டு பிலாத்து ஆச்சரியப்
பட்டான். இயேசுவைக் காவல் செய்த இரா
ணுவ அதிகாரியை அழைத்தான். இயேசு
இதற்குள்ளே இறந்தது நிச்சயமா என்று அவ
னிடம் விசாரித்தான். 45அந்த அதிகாரி இயேசு
இறந்துபோனதை ஒப்புக்கொண்டான். எனவே
இயேசுவின் சரீரத்தை எடுத்துச் செல்ல
யோசேப்புக்கு பிலாத்து அனுமதி அளித்தான்.
46யோசேப்பு மெல்லிய துணியை வாங்கி வந்
தான். சிலுவையில் இருந்து இயேசுவின்
சரீரத்தை இறக்கி அதனைத் துணியால்
சுற்றினான். பிறகு அச்சரீரத்தைக் கொண்டு
போய் பாறையில் வெட்டப்பட்டிருந்த ஒரு
கல்லறையில் வைத்தான். கல்லறை வாசலை
ஒரு பாறாங்கல்லால் மூடிவிட்டான். 47இயேசு
வைக்கப்பட்ட கல்லறையை மகதலேனா
மரியாளும் யோசேயின் தாயான மரியாளும்
பார்த்துக் கொண்டிருந்தனர்.

### இயேசுவின் உயிர்த்தெழுதல்

(மத்தேயு 28:1-8; லூக்கா 24:1-12;
யோவான் 20:1-10)

16 ஓய்வு நாள் முடிந்த பிறகு மகதலேனா
மரியாள் சலோமி, யாக்கோபின்
தாயான மரியாள் ஆகியோர் சில வாசனைப்
பொருள்களை வாங்கினர். அவற்றை இயேசு
வின் சரீரத்தின்மீது பூச விரும்பினர். 2வாரத்
தின் முதல்நாளில் அப்பெண்கள் கல்லறைக்
குச் சென்றனர். சூரியன் தோன்றிய காலை
நேரம் அது. 3அப்பெண்கள் ஒருவருக்கொரு
வர், "கல்லறையை மூடுவதற்கு பெரிய
கல்லை வைத்திருந்தார்களே. நமக்காக அக்
கல்லை யார் அகற்றுவார்?" என்று பேசிக்
கொண்டனர். 4அவர்கள் கல்லறையின் அரு
கில் வந்தபோது வாசலில் வைத்திருந்த கல்
விலக்கப்பட்டிருந்தது. அது மிகப்பெரிய கல்.
5அப்பெண்கள் கல்லறைக்குள் நுழைந்தனர்.
அங்கே வெள்ளை ஆடை அணிந்த ஒரு
வனைப் பார்த்தனர். அவன் கல்லறையின்
வலதுபக்கத்தில் உட்கார்ந்து இருந்தான். அப்
பெண்கள் அஞ்சினர்.
6ஆனால் அந்த மனிதன், "அஞ்ச வேண்
டாம். நீங்கள் நசரேயனாகிய இயேசுவைத்
தேடுகறீர்கள். அவர் மரணத்திலிருந்து உயிர்த்
தெழுந்துவிட்டார். சிலுவையில் அறையப்
பட்ட அவர் இங்கில்லை. அதுதான் அவரைக்
கிடத்திய இடம். 7இப்போது சென்று அவரது
சீஷர்களிடம் கூறுங்கள். பேதுருவிடம் கட்டா
யம் கூறுங்கள். இயேசு கலிலேயாவுக்குப்
போய்க்கொண்டிருக்கிறார். உங்களுக்கு முன்
னால் அவர் அங்கிருப்பார். உங்களுக்கு ஏற்
கெனவே சொன்னபடி நீங்கள் அவரைப் பார்ப்
பீர்கள்" என்றான்.
8அப்பெண்கள் மிகவும் பயந்து குழப்பம்
அடைந்தனர். அவர்கள் கல்லறையைவிட்டு
ஓடிப்போனார்கள். அவர்கள் அச்சத்தால்
யாரிடமும் எதுவும் சொல்ல வில்லை.*

### சீஷர்கள் இயேசுவைப் பார்த்தல்

(மத்தேயு 28:9-10; யோவான் 20:11-18
லூக்கா 24:13-35)

9இயேசு மரணத்தில் இருந்து வாரத்தின்
முதல் நாளே உயிர்த்தெழுந்து விட்டார். முதன்
முதலாக இயேசு மகதலேனா மரியாளுக்கு
தரிசனமானார். ஒரு முறை, ஏழு பேய்களை
மரியாளை விட்டு இயேசு விரட்டினார்.
10இயேசுவைப் பார்த்தபின் மரியாள் சீஷர்
களிடம் போய்ச் சொன்னாள். அச்சீஷர்கள்
வெகு துக்கப்பட்டு அழுது கொண்டிருந்தனர்.
11ஆனால் மரியாளோ, "இயேசு உயிரோடு
இருக்கிறார். நான் அவரைப் பார்த்தேன்"
என்றாள். அவர்களோ அவள் சொன்னதை
நம்பவில்லை.
12பின்னர் இயேசு, சீஷர்களில் இரண்டுபேர்
நகரத்திற்கு நடந்து போய்கொண்டிருக்கும்
போது காட்சி தந்தார். இயேசு இறப்பதற்கு
முன்னர் இருந்த விதமாக அவர் பார்ப்பதற்கு
இல்லை. 13அந்த இருவரும் போய் ஏனைய
சீஷர்களிடம் கூறினர். எனினும் அவர்களை
யும் அவர்கள் நம்பவில்லை.

---

**வாக்கியம் 8** சில பழைய கிரேக்க பிரதிகளில்
புத்தகம் இத்துடன் முடிந்துவிடுகிறது.

### இயேசு சீஷர்களிடம் பேசுதல்

(மத்தேயு 28:16-20; லூக்கா 24:36-49
யோவான் 20:19-23; அப்போஸ்தலர் 1:6-8)

14பின்னர் இயேசு பதினொரு சீஷர்களுக்
கும், அவர்கள் உணவு உண்ணும் தருணத்தில்
காட்சியளித்தார். உயிர்த்தெழுந்திருந்த தம்
மைக் கண்டவர்களை அவர்கள் நம்பாமல்
போனதினிமித்தம் அவர்களுடைய அவநம்பிக்
கையைக் குறித்தும், இதயக் கடினத்தைக்
குறித்தும் அவர்களைக் கடிந்துகொண்டார்.
15பின்பு அவர்களிடம், "உலகின் எல்லா
பாகங்களுக்கும் செல்லுங்கள். எல்லாரிடமும்
நற்செய்தியைக் கூறுங்கள். 16எவனொருவன்
இதனை விசுவாசித்து ஞானஸ்நானம் பெறு
கிறானோ அவன் இரட்சிக்கப்படுவான். எவ
னொருவன் விசுவாசிக்கவில்லையோ அவன்
கண்டிக்கப்படுவான். 17விசுவாசிப்பவர்கள்
பல அரிய செயல்களைச் செய்யமுடியும்.
அவர்கள் என் பெயரால் பிசாசுகளை விரட்டு
வர், அவர்கள் இதுவரை இல்லாத மொழி
களைப் பேசுவர், 18அவர்கள் எவ்வித துன்
பமும் இல்லாமல் பாம்புகளைப் பிடிப்பர்,
சாவுக்குரிய நஞ்சைக் குடித்தாலும் அவர்
களுக்கு ஆபத்து இல்லை, அவர்கள் தொட்டால்
நோயாளிகள் குணம் பெறுவர்" என்று
தம்மை பின்பற்றினோருக்குக் கூறினார்.

19சீஷர்களிடம் இவற்றைச் சொன்னபிறகு,
இயேசு பரலோகத்திற்கு எடுத்துகொள்ளப்பட்
டார். அங்கு அவர் தேவனுடைய வலது பக்கத்
தில் அமர்ந்தார். 20அவரது சீஷர்கள் எல்லா
இடங்களுக்கும் சென்று நற்செய்தியைச் சொன்
னார்கள். தேவன் அவர்களுக்கு உதவினார்.
அவர்கள் சொல்வது உண்மை என தேவன்
நிரூபித்தார். சீஷர்களுக்கு அற்புதங்கள் செய்ய
அதிகாரம் கொடுத்து இதை தேவன் நிரூபித்
தார்.

# லூக்கா எழுதிய சுவிசேஷம்

## லூக்காவின் நோக்கம்

1 அன்பான தெயோப்பிலுவே, நம்மிடையே நடந்த பல நிகழ்ச்சிகளின் வரலாற்றைத் தொகுத்தளிக்க பலர் முயற்சி செய்தனர்.
[2]வேறுசில மக்களிடமிருந்து நாம் கேட்டறிந்த செய்திகளையே அவர்கள் எழுதியிருந்தார்கள். இம்மக்கள் தொடக்கத்திலிருந்து எல்லாவற்றையும் கண்டவர்களும், தேவனுடைய நற்செய்தியை மற்றவர்களுக்குப் போதிப்பதின் மூலம் தேவனுக்குச் சேவை செய்து கொண்டிருந்தவர்களும் ஆவார்கள்.
[3]மதிப்புக்குரிய தெயோப்பிலுவே, துவக்கத்திலிருந்தே எல்லாவற்றையும் நானும் கவனமாக கற்று அறிந்தேன். அவற்றை உங்களுக்காக எழுதவேண்டும் என்று எண்ணினேன். எனவே அவற்றை ஒரு நூலில் முறைப்படுத்தி எழுதினேன்.
[4]உங்களுக்குப் போதிக்கப்பட்டிருக்கிற அனைத்தும் உண்மையே என்பதை நீங்கள் அறியும்பொருட்டு இவற்றை எழுதுகிறேன்.

## சகரியாவும் எலிசபெத்தும்

[5]ஏரோது யூதேயாவை ஆண்ட காலத்தில் சகரியா என்னும் ஆசாரியன் வாழ்ந்து வந்தான். சகரியா அபியாவின் பிரிவினரை* சார்ந்தவன். ஆரோனின் குடும்பத்தாரைச் சார்ந்தவள் சகரியாவின் மனைவி. அவள் பெயர் எலிசபெத்.
[6]தேவனுக்கு முன்பாக சகரியாவும், எலிசபெத்தும் உண்மையாகவே நல்லவர்களாக வாழ்ந்தார்கள். தேவன் கட்டளையிட்டவற்றையும், மக்கள் செய்யும்படியாக கூறியவற்றையும் அவர்கள் செய்துவந்தனர். அவர்கள் குற்றமற்றவர்களாகக் காணப்பட்டனர்.
[7]ஆனால், சகரியாவுக்கும், எலிசபெத்துக்கும் குழந்தைகள் இல்லை. எலிசபெத் ஒரு குழந்தையைப் பெற்றெடுக்கும் நிலையில் இல்லை. அதோடு இருவரும் முதியோராக இருந்தனர்.

[8]தன் மக்களுக்காக தேவனுக்கு முன்னர் ஒரு ஆசாரியனாக சகரியா பணியாற்றி வந்தான். தேவனின் பணியை அவனது பிரிவினர் செய்யவேண்டிய காலம் அது.
[9]நறுமணப் புகையைக் காட்டுவதற்காக ஆசாரியர் தங்களுக்குள் ஒருவரை எப்போதும் தேர்ந்தெடுத்துக் கொள்வார்கள். சகரியா அதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டான். எனவே சகரியா தேவாலயத்திற்குள் நறுமணப் புகை காட்டுவதற்காக சென்றான்.
[10]ஏராளமான மக்கள் வெளியே இருந்தனர். நறுமணப்புகை காட்டும் போது அவர்கள் பிரார்த்தித்துக் கொண்டிருந்தனர்.
[11]அப்போது புகை காட்டும் மேசையின் வலது புறத்தில் தேவதூதன் சகரியாவுக்கு முன்பாக வந்து நின்றான்.
[12]தூதனைப் பார்த்தபோது சகரியா குழப்பமும் பயமும் அடைந்தான்.
[13]ஆனால் தூதன் அவனைப் பார்த்து, “சகரியாவே, பயப்படாதே. உனது பிரார்த்தனையை தேவன் கேட்டார். உனது மனைவியாகிய எலிசபெத் ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுப்பாள். அவனுக்கு யோவான் என்று பெயரிடுவாயாக.
[14]நீ மிகவும் சந்தோஷமாய் இருப்பாய். அவனது பிறப்பால் பல மக்கள் மகிழ்ச்சி அடைவர்.
[15]கர்த்தருக்காக பெரிய மனிதனாக யோவான் விளங்குவான். அவன் திராட்சை இரசமோ, மதுபானமோ பருகுவதில்லை. பிறக்கிற போதே பரிசுத்த ஆவியால் நிரம்பியவனாக யோவான் காணப்படுவான்.
[16]நம் தேவனாகிய கர்த்தரிடம் பல யூதர்கள் திரும்புவதற்கு யோவான் உதவுபவன்.
[17]கர்த்தருக்கு முன்பாக யோவான் முன்னோடியாகச் செல்வான். எலியாவைப் போல யோவானும் வல்லமை வாய்ந்தவனாக இருப்பான். எலியாவின் ஆவியை உடையவனாக அவன் இருப்பான். தந்தையருக்கும் அவர்கள் குழந்தைகளுக்கும் இடையே அமைதி நிலவும்படியாய்ச் செய்வான். பல மக்கள் தேவனுக்குக் கீழ்ப்படிவதில்லை. அவர்களை எல்லாம் மீண்டும் சரியானதென்று மக்கள் எண்ணவேண்டிய பாதைக்கு யோவான் அழைத்து வருவான். கர்த்தரின் வருகைக்கு மக்களை யோவான் தயார் செய்வான்” என்றான்.

[18]சகரியா தூதனை நோக்கி, “நீங்கள் சொல்வது உண்மையென்று நான் எவ்வாறு அறியமுடியும்? நான் வயது முதிர்ந்தவன். என் மனைவியும் வயதானவள்” என்றான்.

[19]தூதன் அவனுக்குப் பதிலாக, “நான் காபிரியேல். தேவனுக்கு முன்பாக நிற்பவன். உன்னிடம் பேசவும், இந்த நல்ல செய்தியை உன்னிடம் எடுத்துரைக்கவும் தேவன் என்னை அனுப்பினார்.
[20]இப்போது கேட்பாயாக! இந்தகாரியங்கள் நடக்கும் நாள் வரைக்கும் நீ பேச முடியாதிருப்பாய். உனது பேசும் சக்தியை நீ இழப்பாய், ஏன்? நான் கூறியதை நீ நம்பாததாலேயே இப்படி ஆகும். ஆனால்

---

***அபியாவின் பிரிவினர்*** *யூதகுமாரர்கள் 24 வகையாகப் பிரிக்கப்பட்டிருந்தனர். 1 நாளா 24.*

இவை அனைத்தும் அதனதன் சரியான சமயத்தில் உண்மையாகவே நடக்கும்" என்றான்.

[21]வெளியே சகரியாவுக்காக மக்கள் காத்திருந்தனர். அவன் ஆலயத்தின் உள்ளே வெகு நேரம் இருந்ததைக் கண்டு ஆச்சரியப்பட்டனர்.
[22]அப்போது சகரியா வெளியே வந்தான். ஆனால் அவர்களோடு பேச முடியவில்லை. அவன் ஆலயத்திற்குள் ஒரு காட்சியைக் காண நேர்ந்தது என்பதை அவர்கள் புரிந்து கொண்டனர். சகரியாவால் பேச முடியவில்லை. மக்களுக்குச் சைகைகளையே காட்ட முடிந்தது. [23]சகரியா, ஆலயப் பணி முடிந்ததும் தன் வீட்டுக்குச் சென்றான்.

[24]பின்னர் சகரியாவின் மனைவி எலிசபெத் கருவுற்றாள். ஆகவே, அவள் ஐந்து மாதங்கள் வீட்டை விட்டு வெளியே போகவில்லை. பின் எலிசபெத், [25]"தேவன் எனக்குச் செய்திருப்பதைப் பாருங்கள். எனது மக்கள் என் நிலையை எண்ணி வெட்கி இருந்தனர். ஆனால் கர்த்தர் அந்த அவமானத்தைப் போக்கி விட்டார்" என்று கூறினாள்.

### கன்னி மரியாள்

[26-27]எலிசபெத் கருவுற்ற ஆறாம் மாதத்தில் தேவன் காபிரியேல் என்னும் தூதனை கலிலேயாவிலுள்ள நாசரேத் என்னும் பட்டணத்தில் வாழ்ந்த ஒரு கன்னிப் பெண்ணிடம் அனுப்பினார். தாவீதின் குடும்பத்தைச் சேர்ந்த யோசேப்பு என்ற மனிதனை மணம்புரிவதற்கு அவள் நிச்சயிக்கப்பட்டிருந்தாள். அவள் பெயர் மரியாள். [28]தூதன் அவளிடம் வந்து, "கர்த்தர் உன்னோடிருக்கிறார். அவர் உன்னை ஆசீர்வதிக்க விரும்புகிறார்" என்றான்.

[29]தூதன் கூறியவற்றைக் கேட்டு மரியாள் மிகவும் குழப்பம் அடைந்தாள். "இதன் பொருள் என்ன?" என்று மரியாள் அதிசயித்தாள்.

[30]தூதன் அவளிடம், "பயப்படாதே மரியாளே. தேவன், உன்னிடம் பிரியமாயிருக்கிறார்.
[31]கவனி! நீ கருவுறுவாய். ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுப்பாய். அக்குழந்தைக்கு இயேசு என்று பெயரிடுவாயாக. [32]அவர் பெரியவராய் இருப்பார். மகா உன்னதமான தேவனுடைய குமாரன் என்று மக்கள் அவரை அழைப்பர். அவரது முன்னோராகிய தாவீதின் அதிகாரத்தை கர்த்தராகிய தேவன் அவருக்குக் கொடுப்பார். [33]சதாகாலமும் யாக்கோபின் மக்கள்மீது இயேசு அரசாளுவார். இயேசுவின் ஆட்சி ஒருபோதும் முடிவுறுவதில்லை" என்றான்.

[34]மரியாள் தூதனை நோக்கி, "இது எப்படி நடக்கும்? எனக்குத் திருமணம் ஆகவில்லையே!" என்றாள்.

[35]தூதன் மரியாளிடம், "பரிசுத்த ஆவியானவர் உன்னிடம் வருவார். உன்னதமான தேவனின் ஆற்றல் உன்னை மூடிக்கொள்ளும். குழந்தை பரிசுத்தமுள்ளதாக இருக்கும். அவர் தேவனுடைய குமாரன் என்று அழைக்கப்படுவார். [36]உனது உறவினளாகிய எலிசபெத்தும் கருவுற்றிருக்கிறாள். அவள் மிகவும் வயதானவள். குழந்தை பெறமுடியாதவள் என அவள் நினைக்கப்பட்டாள். ஆனால் ஒருமகனைப் பெறப்போகிறாள். இது அவளுக்கு ஆறாவது மாதம். [37]தேவனால் எந்தக் காரியத்தையும் செய்யமுடியும்" என்றான்.

[38]மரியாள், "நான் கர்த்தருக்குப் பணிவிடை செய்யும் பெண். நீங்கள் சொன்னபடியே எனக்கு நடக்கட்டும்" என்றாள். பின் தூதன் சென்றுவிட்டான்.

### சகரியாவையும் எலிசபெத்தையும் மரியாள் சந்தித்தல்

[39]மலைநாடான யூதேயாவில் உள்ள பட்டணத்துக்கு மரியாள் எழுந்து விரைந்து சென்றாள். [40]அவள் சகரியாவின் வீட்டுக்குள் நுழைந்து எலிசபெத்தை வாழ்த்தினாள்.
[41]மரியாளின் வாழ்த்துதலை எலிசபெத் கேட்டதும் இன்னும் பிறக்காமல் எலிசபெத்துக்குள் இருக்கும் குழந்தை துள்ளிக் குதித்தது.
[42]எலிசபெத் உரத்த குரலில் "வேறெந்தப் பெண்ணைக் காட்டிலும் அதிகமாக தேவன் உன்னை ஆசீர்வதித்துள்ளார். உனக்குப் பிறக்கவிருக்கும் குழந்தையையும், தேவன் ஆசீர்வதித்திருக்கிறார். [43]கர்த்தரின் தாயாகிய நீ என்னிடம் வந்துள்ளாய். அத்தனை நல்ல காரியம் எனக்கு நடந்ததேன்? [44]உன் சத்தத்தை நான் கேட்டதும் எனக்குள் இருக்கும் குழந்தை மகிழ்ச்சியால் துள்ளிற்று. [45]உன்னிடம் கர்த்தர் கூறியதை நீ நம்பியதால் ஆசீர்வதிக்கப்பட்டிருக்கிறாய். இது நடக்கக் கூடியதென நீ நம்பினாய்" என்று சொன்னாள்.

### மரியாள் தேவனைப் போற்றுதல்

[46] அப்போது மரியாள்,
[47] "எனது ஆத்துமா கர்த்தரைப் போற்றுகிறது. தேவன் எனது இரட்சகர். எனவே என் உள்ளம் அவரில் மகிழ்கிறது.
[48] நான் முக்கியமற்றவள், ஆனால் தேவன் தனது கருணையைப் பணிப்பெண்ணாகிய எனக்குக் காட்டினார். இப்போது தொடங்கி எல்லா மக்களும் என்னை ஆசீர்வதிக்கப்பட்டவள் என்பர்.
[49] ஏனெனில் ஆற்றல் மிகுந்தவர் எனக்காக மேன்மையான செயல்களைச் செய்தார். அவர் பெயர் மிகத்தூய்மையானது.
[50] தேவனை வணங்கும் மக்களுக்கு அவர் எப்போதும் இரக்கம் செய்வார்.
[51] தேவனின் கைகள் பலமானவை. செருக்குற்ற மனிதர்களையும் சுயதம்பட்டக்காரர்களையும் அவர் சிதறடிக்கிறார்.
[52] சிம்மாசனத்தினின்று மன்னர்களை கீழே இறக்குகிறார். தாழ்ந்தவர்களை உயர்த்துகிறார்.
[53] நல்ல பொருட்களால் பசித்த மக்களை நிரப்புகிறார். செல்வந்தரையும், தன்னலம்

*மிகுந்தோரையும் எதுவுமின்றி அனுப்பி*
*விடுகிறார்.*
54 *தனக்குப் பணிசெய்வோர்க்கு அவர் உத*
*வினார். அவர்களுக்குத் தன் இரக்கத்தை*
*அருளினார்.*
55 *நம் முன்னோர்க்கும் ஆபிரகாமுக்கும் தம்*
*குழந்தைகளுக்கும் அவர் கொடுத்த வாக்*
*குறுதியை என்றைக்கும் நிறைவேற்று*
*கிறார்"*

*என்று சொன்னாள்.*

56*மரியாள் எலிசபெத்துடன் ஏறக்குறைய*
*மூன்று மாதகாலம்வரைக்கும் தங்கி இருந்*
*தாள். பின்பு மரியாள் தனது வீட்டுக்குச் சென்*
*றாள்.*

### யோவானின் பிறப்பு

57*குழந்தைப் பேற்றின் காலம் நெருங்கிய*
*போது எலிசபெத் ஓர் ஆண் குழந்தையைப்*
*பெற்றெடுத்தாள்.* 58*அவளது அக்கம்பக்கத்*
*தாரும் உறவினரும் கர்த்தர் அவளுக்கு கரு*
*ணை காட்டியதை கேள்விப்பட்டனர். அதைக்*
*குறித்து மகிழ்ச்சியடைந்தனர்.*

59*குழந்தைக்கு எட்டு நாட்கள் ஆனபோது*
*அக்குழந்தையை விருத்தசேதனம் செய்யும்*
*பொருட்டு கொண்டு வந்தனர். அவனது தந்தை*
*பெயரால் அவனைச் சகரியா என்று பெய*
*ரிட்டு அழைக்க விரும்பினர்.* 60*ஆனால் அக்*
*குழந்தையின் தாய், "இல்லை, அவனுக்கு*
*யோவான் என்று பெயரிடவேண்டும்" என்*
*றாள்.*

61*மக்கள் எலிசபெத்தை நோக்கி, "உன்*
*குடும்பத்தில் யாருக்கும் இப்பெயர் இல்*
*லையே!" என்றனர்.* 62*பின்னர் அவர்கள் அக்*
*குழந்தையின் தந்தையிடம் சென்று சைகை*
*யால், "குழந்தைக்கு என்ன பெயரிட விரும்புகி*
*றாய்?" என்று கேட்டனர்.*

63*சகரியா எழுதுவதற்கு ஏதாவது ஒன்று*
*கொண்டு வருமாறு கேட்டான். சகரியா,*
*"அவன் பெயர் யோவான்" என்று எழுதி*
*னான். எல்லா மக்களும் ஆச்சரியம் அடைந்*
*தனர்.* 64*அப்போது சகரியாவால் மீண்டும்*
*பேசமுடிந்தது. அவன் தேவனை வாழ்த்த ஆரம்*
*பித்தான்.* 65*அவனது அக்கம் பக்கத்தார்*
*அனைவருக்கும் பயமுண்டாயிற்று. யூதேயா*
*வின் மலைநாட்டு மக்கள் இக்காரியங்களைக்*
*குறித்து தொடர்ந்து பேசிக்கொண்டனர்.*
66*இச்செய்திகளைக் கேட்ட எல்லா மக்களும்*
*அவற்றைக் குறித்து அதிசயப்பட்டார்கள்.*
*அவர்கள், "இக்குழந்தை எப்படிப்பட்டதாயி*
*ருக்குமோ?" என்று எண்ணினர். கர்த்தர் இந்த*
*குழந்தையோடு இருந்தபடியால் அவர்கள்*
*இதைக் கூறினர்.*

### சகரியா தேவனைப் போற்றுதல்

67*அப்போது யோவானின் தந்தையாகிய*
*சகரியா பரிசுத்த ஆவியானவரால் நிரப்பப்பட்*
*டான். பின்னர் நடக்க இருப்பவற்றைக் குறித்து*
*அவன் மக்களுக்குக் கூறினான்.*

68*"இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தரைப்*
*போற்றுவோம். தேவன் அவரது மக்க*
*ளுக்கு உதவ வந்தார். அவர்களுக்கு விடு*
*தலை தந்தார்.*
69 *தேவன் நமக்கு வல்லமை பொருந்திய*
*இரட்சகரைத் தந்தார். அவர் தாவீது என்*
*னும் தேவனுடைய பணிவிடைக்கார*
*னின் குடும்பத்தைச் சார்ந்தவர்.*
70 *தேவன் இதைச் செய்வதாகக் கூறினார்.*
*பல ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த*
*அவரது பரிசுத்த தீர்க்கதரிசிகள் மூல*
*மாக இதை அவர் கூறினார்.*

71 *நம் எதிரிகளிடம் இருந்து தேவன்*
*நம்மைக் காப்பாற்றுவார். நம்மை*
*வெறுக்கும் அனைவரின் கைகளிலிருந்*
*தும் நம்மைக் காப்பாற்றுவார்.*
72 *நமது தந்தையருக்கு அருள்புரிவதாக*
*தேவன் சொன்னார். தனது பரிசுத்த வாக்*
*குறுதியை அவர் நினைவு கூர்ந்தார்.*
73 *நமது தந்தையாகிய ஆபிரகாமுக்கு எதிரி*
*களின் சக்தியிலிருந்து*
74 *நம்மை விடுவிப்பதாக தேவன் வாக்கு*
*றுதி தந்தார். அதனால் பயமின்றி நாம்*
*அவருக்குச் சேவை செய்வோம்.*
75 *நாம் நம் வாழ்நாள் முழுவதும் அவரு*
*டைய முன்னிலையில் நீதியும் பரிசுத்த*
*மும் வாய்ந்தோராக வாழ்வோம்.*

76 *இப்போதும் சிறுவனே, நீ உன்னதமான*
*தேவனின் ஒரு தீர்க்கதரிசி என்று*
*அழைக்கப்படுவாய். கர்த்தருக்கு முன்*
*பாக முன்னோடியாக நீ நடப்பாய். கர்த்த*
*ரின் வருகைக்காக மக்களைத் தயார்*
*செய்வாய்.*
77 *அவரது மக்கள் இரட்சிக்கப்படுவர் என்*
*பதை அவர்களுக்கு உணர்த்துவாய்.*
*அவர்கள் பாவங்கள் மன்னிக்கப்பட்டு*
*அவர்கள் இரட்சிக்கப்படுவர்.*
78 *நம் தேவனின் அன்பான இரக்கத்தால்*
*பரலோகத்திலிருந்து புதுநாள் ஒன்று*
*நம்மீது பிரகாசிக்கும்.*
79 *இருளில் மரணப்பயத்திடையே வாழும்*
*மக்களுக்கு தேவன் உதவி செய்வார்.*
*சமாதானத்தை நோக்கி அவர் நம்மை*
*வழிநடத்துவார்."*

*என்று சகரியா உரைத்தான்.*

80*அச்சிறுவன் வளர்ந்து வருகையில் ஆவி*
*யில் வல்லமை பொருந்தியவனாக மாறினான்.*
*இஸ்ரவேல் மக்களுக்கு போதிக்கும் பொருட்டு*
*வளரும் மட்டும் அவன் மக்களிடமிருந்து*
*தொலைவான இடத்தில் வாழ்ந்தான்.*

## இயேசுவின் பிறப்பு

(மத்தேயு 1:18-25)

2 அக்காலத்தில் ரோம ஆளுகைக்குட்பட்ட எல்லா நாட்டினருக்கும் அகஸ்து இராயன் ஒரு கட்டளை அனுப்பினான். எல்லா மக்களும் தங்கள் பெயர்களைப் பதிவு செய்யுமாறு அக் கட்டளை கூறியது. 2அதுவே முதல் பதிவாக இருந்தது. சீரியாவின் ஆளுநராக சிரேனியு இருந்தபோது அது நடந்தது. 3எல்லா மக்களும் பதிவு செய்வதற்கென தங்கள் சொந்த நகரங் களுக்குப் பயணம் மேற்கொண்டார்கள்.

4கலிலேயாவில் உள்ள நகரமாகிய நாசரேத் தை விட்டு யோசேப்பு புறப்பட்டான். யூதேயா வில் உள்ள பெத்லகேம் என்னும் நகரத்துக்குச் சென்றான். பெத்லகேம் தாவீதின் நகரம் ஆகும். தாவீதின் குடும்பத்தைச் சேர்ந்தவனாகையால் யோசேப்பு அங்கு சென்றான். 5மரியாள் அவனைத் திருமணம் செய்யும் பொருட்டு நிச்சயிக்கப்பட்டிருந்ததால் யோசேப்பும் மரியாளும் சேர்ந்து பதிவு செய்து கொண் டனர். (அந்த சமயத்தில் மரியாள் கருவுற்றி ருந்தாள்.) 6யோசேப்பும் மரியாளும் பெத்லகே மில் இருந்தபோது மரியாளின் குழந்தைப் பேற்றுக்காலம் நெருங்கியது. 7அவள் தன் முதல் மகனை ஈன்றெடுத்தாள். விடுதிகளில் அறைகள் எதுவும் கிடைக்கவில்லை. எனவே மரியாள் குழந்தையைத் துணிகளால் சுற்றி ஆடுமாடுகள் உணவு உண்ணும் ஒரு இடத்தில் வைத்தாள்.

## மேய்ப்பர்களின் வருகை

8அந்த இரவில் சில மேய்ப்பர்கள் வயல் வெளியில் தங்கள் ஆடுகளைக் காவல் காத்துக் கொண்டிருந்தனர். 9தேவதூதன் அம்மேய்ப்பர் கள் முன்னே தோன்றினான். கர்த்தரின் மகிமை அவர்களைச் சுற்றிலும் ஒளிவீசியது. மேய்ப்பர்கள் மிகவும் பயந்தனர். 10தூதன் அவர்களை நோக்கி, "பயப்படாதீர்கள். நான் உங்களுக்கு ஒரு நற்செய்தியைக் கூறப் போகி றேன். அது எல்லாரையும் மிகுந்த மகிழ்ச் சிக்குள்ளாக்கும். 11தாவீதின் நகரில் இன்று உங்கள் இரட்சகர் பிறந்துள்ளார். அவரே கிறிஸ்துவாகிய* கர்த்தர். 12ஒரு குழந்தை துணிகளில் சுற்றப்பட்டு ஆடு மாடுகள் உணவுண்ணும் இடத்தில் வைக்கப்பட்டிருப் பதைக் காண்பீர்கள். இதுவே நீங்கள் அவரை அறிந்துகொள்ளுவதற்குரிய அடையாளம்" என்றான்.

13அதே சமயத்தில் ஒரு பெரிய கூட்டமான தூதர்கள் பரலோகத்திலிருந்து வந்து முதல் தூதனோடு சேர்ந்து கொண்டார்கள். எல்லா தூதர்களும்,

14"பரலோகத்தில் தேவனை மகிமைப்படுத் துங்கள். பூமியில் தேவனைப் பிரியப் படுத்தும் மக்களுக்குச் சமாதானம் உண் டாகட்டும்"

என்று சொல்லி தேவனைப் போற்றினார்கள். 15தூதர்கள் மேய்ப்பர்களிடமிருந்து கிளம்பி மீண்டும் பரலோகத்திற்குச் சென்றார்கள். மேய்ப்பர்கள் ஒருவருக்கொருவர், "நாம் பெத்ல கேமுக்குப் போய் கர்த்தரால் நமக்குத் தெரிவிக் கப்பட்ட இக்காரியத்தைக் காண்போம்" என்று கூறிக்கொண்டனர்.

16எனவே மேய்ப்பர்கள் வேகமாய்ச் சென்று மரியாளையும் யோசேப்பையும் கண் டனர். குழந்தை ஆடுமாடுகள் உணவு உண் ணும் இடத்தில் படுத்திருந்தது. 17மேய்ப்பர்கள் குழந்தையைப் பார்த்தனர். பின்பு தூதர்கள் குழந்தையைக் குறித்துக் கூறியவற்றை அவர் களுக்குச் சொன்னார்கள். 18மேய்ப்பர்கள் கூறி யவற்றைக் கேட்ட அனைவரும் ஆச்சரியம் அடைந்தனர். 19மரியாள் அவற்றைத் தன் இத யத்தில் வைத்துக்கொண்டாள். அவள் அவற் றைக் குறித்துச் சிந்தித்துக் கொண்டிருந்தாள். 20தாங்கள் கண்டவற்றிற்காகவும் கேட்டவற்றிற் காகவும் தேவனை வாழ்த்திக்கொண்டும், அவ ருக்கு நன்றி தெரிவித்துக்கொண்டும், மேய்ப் பர்கள் தங்கள் ஆடுகள் இருந்த இடத்திற்குச் சென்றனர். தூதர்கள் அவர்களிடம் கூறியப டியே அனைத்தும் நடந்திருக்கக் கண்டனர்.

21குழந்தைக்கு எட்டு நாட்கள் ஆனதும், விருத்தசேதனம் செய்யப்பட்டது. அதற்கு இயேசு என்று பெயரிட்டனர். மரியாளின் கரு உருவாகுமுன்னே தூதன் குழந்தைக்கு வைத்த பெயர் இதுவேயாகும்.

## தேவாலயத்தில் இயேசு

22குழந்தை பெற்ற பெண் சுத்தமாகும்* பொருட்டு மோசேயின் விதிகள் கூறியவற் றைச் செய்யும்படியான காலம் வந்தது. யோசேப்பும், மரியாளும், இயேசுவைத் தேவ னிடம் அர்ப்பணிக்குமாறு எருசலேமுக்கு கொண்டு வந்தனர். 23தேவனுடைய பிரமாணத் தில் இவ்வாறு எழுதப்பட்டுள்ளது. "வீட்டின் முதற்பேறான மகன் பிறந்ததும் அவன், 'தேவனுக்கு விசேஷமானவனாகக் கருதப்படு வான்.'"* 24"இரண்டு காட்டு புறாக்களையா வது, அல்லது இரண்டு புறாக் குஞ்சுகளையா வது பலியாகக் கொடுக்கவேண்டும்"* என் றும் கூறுகிறது. எனவே இதைச் செய்வதற் காக யோசேப்பும், மரியாளும் எருசலேமுக்குச் சென்றனர்.

---

**கிறிஸ்து** அபிஷேகம் பண்ணப்பட்டவர்.

**சுத்தம்** ஒரு யூதப்பெண் குழந்தை பெற்று 40 நாட்களுக்குப்பின் அவள் தன்னை ஒரு சடங்கு மூல மாகச் சுத்தப்படுத்திக் கொள்ளவேண்டும் என்று மோசேயின் சட்டம் கூறுகிறது. லேவி. 12:2-8.

**வீட்டின் ... கருதப்படுவான்** யாத். 13:2.

**இரண்டு ... வேண்டும்** லேவி 12:8.

### சிமியோன் இயேசுவைக் காணல்

25எருசலேமில் சிமியோன் என்னும் பெயர்
கொண்ட ஒரு மனிதன் வாழ்ந்தான். அவன்
நல்லவனும், பக்திமானுமாக இருந்தான்.
தேவன் இஸ்ரவேல் மக்களுக்கு உதவும் காலத்
தைச் சிமியோன் எதிர்ப்பார்த்திருந்தான்.
பரிசுத்த ஆவியானவர் அவனோடு இருந்தார்.
26கர்த்தரிடமிருந்து வரும் கிறிஸ்துவை காணு
மட்டும் அவன் மரிப்பதில்லை என்று பரிசுத்த
ஆவியானவர் சிமியோனுக்கு கூறியிருந்தார்.
27ஆவியானவர் சிமியோனை தேவாலயததிற்
குள் அழைத்து வந்தார். செய்ய வேண்டிய
வற்றை நிறைவேற்றுவதற்காக மரியாளும்,
யோசேப்பும் தேவாலயத்திற்குள் சென்றனர்.
அவர்கள் குழந்தையாகிய இயேசுவைத் தேவா
லயத்திற்குள் கொண்டு வந்தனர். 28சிமியோன்
குழந்தையைத் தன் கரங்களில் தூக்கிக்
கொண்டு,

29 "ஆண்டவரே! இப்போது, உம் ஊழியனா
கிய என்னை நீர் கூறியபடியே அமைதி
யாக மரிக்க அனுமதியும்.
30 நீர் நல்கும் இரட்சிப்பை என் கண்களால்
கண்டேன்.
31 நீர் அவரை எல்லா மக்களுக்கும் முன்
பாக ஆயத்தப்படுத்தினீர்.
32 யூதரல்லாத மக்களுக்கு உம் வழியைக்
காட்டும் ஒளி அவர். உம் மக்களாகிய
இஸ்ரவேலுக்கு பெருமையை அவர்
தருவார்"

என்று தேவனுக்கு நன்றி செலுத்தினான்.
33இயேசுவின் தந்தையும், தாயும் சிமியோன்
இயேசுவைக் குறித்துக் கூறியதைக் கேட்டு
வியந்தனர். 34சிமியோன் அவர்களை ஆசீர்வ
தித்து இயேசுவின் தாயாகிய மரியாளிடம்,
"இந்தப் பாலகனின் நிமித்தமாக யூதர்கள் விழு
வர்; பலர் எழுவர். சிலரால் ஏற்றுக்கொள்ளப்
படாத தேவனின் அடையாளமாக இவர் இருப்
பார். 35இரகசியமாய் மக்கள் நினைப்பவை
வெளியரங்கமாகும். நடக்கவிருக்கும் காரியங்
கள் உங்கள் மனதை மிகவும் துக்கப் படுத்தும்"
என்றான்.

### அன்னாள் இயேசுவைக் காணல்

36தேவாலயத்தில் அன்னாள் என்னும்
பெண் தீர்க்கதரிசி இருந்தாள். அவள் ஆசேர்
என்னும் கோத்திரத்தைச் சார்ந்த பானுவேல்
என்னும் குடும்பத்தைச் சேர்ந்தவள். அன்
னாள் வயது முதிர்ந்தவள். அவள் திருமணமா
கித் தன் கணவனுடன் ஏழு ஆண்டுகள் வாழ்ந்
தவள். 37பின் அவள் கணவன் இறந்து போ
னான். அவள் தனித்து வாழ்ந்து வந்தாள்.
அவள் எண்பத்து நான்கு வயது முதியவளாக
இருந்தாள். அன்னாள் எப்போதும் தேவாலயத்
திலேயே இருந்தாள். அவள் உபவாசமிருந்து
இரவும் பகலும் தேவனை வழிபட்டுக் கொண்
டிருந்தாள். 38தேவனுக்கு நன்றி செலுத்திய
வண்ணம் அன்னாளும் அப்போது அங்கே
இருந்தாள். தேவன் எருசலேமுக்கு விடுதலை
அருளவேண்டும் என்று எதிர்ப்பார்த்திருந்த
எல்லா மக்களுக்கும் அவள் இயேசுவைக்
குறித்துக் கூறினாள்.

### யோசேப்பும் மரியாளும் வீடு திரும்பல்

39தேவனின் பிரமாணம் கட்டளையிட்ட
படியே அனைத்துக் காரியங்களையும்
யோசேப்பும், மரியாளும் செய்து வந்தனர்.
பின்னர் கலிலேயாவில் உள்ள தங்கள் சொந்த
நகரமாகிய நாசரேத்திற்கு திரும்பினர். 40சிறு
பாலகன் வளர்ந்து வந்தார். அவர் வல்லமை
யும், ஞானமும் உடையவரானார். தேவனின்
ஆசீர்வாதம் அவரோடிருந்தது.

### சிறுவனாக இயேசு

41ஒவ்வொரு ஆண்டும் பஸ்கா பண்டிகைக்
காக இயேசுவின் பெற்றோர் எருசலேமுக்குச்
சென்று வந்தனர். 42வழக்கம் போலவே இயேசு
பன்னிரண்டு வயது சிறுவனாக இருந்தபோ
தும் அவர்கள் அப்பண்டிகைக்குச் சென்றனர்.
43பண்டிகை நாட்கள் முடிந்த பின்னர் அவர்கள்
வீடு திரும்பினர். அவர்களுக்குத் தெரியாம
லேயே இயேசு எருசலேமில் தங்கிவிட்டார்.
44யோசேப்பும், மரியாளும் ஒரு நாள் முழுதும்
பயணம் செய்தனர். இயேசு கூட்டத்தினரோடு
கூட இருப்பதாக அவர்கள் எண்ணினர். சுற்றத்
தார்களிடையேயும், நெருங்கிய நண்பர்களிட
மும் இயேசுவைத் தேட ஆரம்பித்தனர்.
45ஆனால் யோசேப்பும் மரியாளும் கூட்டத்தில்
இயேசுவைக் காணாததால் அவரைத் தேடும்
பொருட்டு எருசலேமுக்குத் திரும்பினர்.
46மூன்று நாட்களுக்குப் பின்னர் அவரைக்
கண்டனர். மத போதகர்கள் கூறுவதைக் கேட்ப
தும், அவர்களிடம் வினா எழுப்புவதுமாக
இயேசு தேவாலயத்திற்குள் அமர்ந்திருந்தார்.
47எல்லாரும் அவர் பேசுவதை கேட்டனர். அவ
ரது புரிந்து கொள்ளும் திறனையும் ஞானம்
நிரம்பிய பதில்களையும் உணர்ந்து அவர்கள்
வியந்தனர். 48இயேசுவின் பெற்றோர்களும்
அவரைக் கண்டதும் வியப்புற்றனர். அவரது
தாய் அவரை நோக்கி, "மகனே, நீ ஏன்
இதை எங்களுக்குச் செய்தாய்? உனது தந்தை
யும் நானும் உன்னை நினைத்துக் கவலைப்
பட்டோமே. நாங்கள் உன்னைத் தேடி
அலைந்து கொண்டிருந்தோம்" என்றாள்.

49இயேசு அவர்களை நோக்கி, "ஏன் என்
னைத் தேடினீர்கள்? எனது பிதாவின் வேலை
இருக்கிற இடத்தில் நான் இருக்க வேண்டும்
என்பதை நீங்கள் அறிந்திருக்க வேண்டும்!"
என்றார். 50அவர் கூறியதன் ஆழமான உள்
பொருளை அவர்கள் புரிந்து கொள்ள
வில்லை.

51இயேசு அவர்களோடு நாசரேத்துக்குச்
சென்றார். அவரது பெற்றோர் கூறியவற்றிற்

குக் கீழ்ப்படிந்தார். அவரது தாய் நடந்த எல்லா வற்றைக் குறித்தும் சிந்தித்துக் கொண்டிருந் தாள்.

52இயேசு மேலும் மேலும் தொடர்ந்து கற்றறிந்தார். அவர் சரீரத்திலும் வளர்ச்சியுற் றார். மக்கள் இயேசுவை விரும்பினர். இயேசு தேவனைப் பிரியப்படுத்தி வாழும் வாழ்க் கைக்கு மாதிரியாயிருந்தார்.

### யோவானின் போதனை

*(மத்தேயு 3:1-12; மாற்கு 1:1-8; யோவான் 1:19-28)*

3 அது திபேரியு இராயன் அரசாண்ட பதி னைந்தாவது வருஷமாயிருந்தது. சீசருக் குக் கீழான மனிதர்களின் விவரமாவது; பொந்தியு பிலாத்து யூதேயாவை ஆண்டான். ஏரோது கலிலேயாவை ஆண்டான். ஏரோது வின் சகோதரனாகிய பிலிப்பு இத்துரேயா வையும் திராகொனித்தி நாட்டையும் ஆண் டான்.

2அன்னாவும், காய்பாவும் தலைமை ஆசாரி யராக இருந்தனர். அப்போது சகரியாவின் மகனாகிய யோவானுக்கு தேவனிடமிருந்து ஒரு கட்டளை வந்தது. யோவான் வனாந்தரத்
தில் வாழ்ந்து வந்தான். 3யோர்தான் நதியைச்
சுற்றிலுமுள்ள எல்லாப் பிரதேசங்களுக்கும் யோவான் சென்றான். அவன் மக்களுக்குப் போதித்தான். அவர்கள் பாவங்கள் மன்னிக்கப் படும்படியாக, இதயத்தையும் வாழ்க்கையை யும் மாற்றி ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளு
மாறு யோவான் மக்களுக்குக் கூறினான். 4இது
ஏசாயா என்னும் தீர்க்கதரிசியின் புத்தகத்தில் எழுதிய வார்த்தைகளின் நிறைவேறுதலாக அமைந்தது:

“வனாந்தரத்தில் யாரோ ஒரு மனிதன்
கூவிக்கொண்டிருக்கிறான்: ‘கர்த்தருக்கு
வழியைத் தயார் செய்யுங்கள். அவருக்
குப் பாதையை நேராக்குங்கள்.
5 பள்ளத்தாக்குகள் எல்லாம் நிரப்பப்படும்.
ஒவ்வொரு மலையும் குன்றும் மட்டமாக்
கப்படும். திருப்பம் மிக்க பாதைகள்
நேராக்கப்படும். கரடுமுரடான பாதைகள்
மென்மையாகும்.
6 ஒவ்வொரு மனிதனும் தேவனுடைய
இரட்சிப்பை அறிவான்.’”

*ஏசாயா 40:3-5*

7யோவான் மூலமாக ஞானஸ்நானம் பெறும் பொருட்டு மக்கள் வந்தனர். யோவான் அவர்களை நோக்கி, “நீங்கள் விஷம் பொருந் திய பாம்புகளைப் போன்றவர்கள். வரவிருக் கும் தேவனுடைய கோபத்தினின்று ஓடிப் போக யார் உங்களுக்கு எச்சரிக்கை செய்
தனர்? 8உங்கள் இதயங்களில் மாற்றம் ஏற்பட்
டுள்ளதைக் காட்டவல்ல செயல்களை நீங்கள் செய்தல் வேண்டும். ‘ஆபிரகாம் எங்கள் தந்தை’ என்று பெருமை பாராட்டி கூறாதீர் கள். தேவன் இந்தப் பாறைகளில் இருந்தும் ஆபிரகாமுக்குப் பிள்ளைகளை உருவாக்கக் கூடும் என்பதை நான் உங்களுக்குச் சொல்
கிறேன். 9மரங்களை வெட்டும்படிக்கு கோடரி
வைக்கப்பட்டுள்ளது. நல்ல பழங்களைத் தராத மரங்கள் வெட்டப்பட்டு நெருப்பில் வீசப்படும்” என்றான்.

10மக்கள் யோவானை நோக்கி, “நாங்கள் செய்ய வேண்டியது என்ன?” என்று கேட் டனர்.

11அவர்களுக்கு யோவான், “உங்களிடம் இரண்டு மேலாடைகள் இருந்தால், ஒரு மேலா டை கூட இல்லாத மனிதனுக்கு ஒன்றைக் கொடுங்கள். உங்களிடம் உணவிருந்தால் அதையும் பகிர்ந்து கொள்ளுங்கள்” என்று
பதிலுரைத்தான். 12வரி வசூலிப்போரும் கூட
யோவானிடம் வந்தனர். அவர்கள் ஞானஸ்நா னம் பெற விரும்பினர். அவர்கள் யோவானி டம், “போதகரே, நாங்கள் என்ன செய்ய வேண்டும்?” என்று கேட்டார்கள்.

13அவர்களிடம் யோவான், “எந்த அளவுக்கு வரி வசூலிக்கவேண்டும் என்று சொல்லப்பட் டிருக்கிறதோ அந்த அளவுக்கு வரி வாங்குவ தன்றி அதிகமாக வசூலிக் காதீர்கள்” என்று கூறினான்.

14வீரர்கள் யோவானை நோக்கி, “எங் களைப் பற்றி என்ன? நாங்கள் என்ன செய்ய வேண்டும்?” என்று கேட்டனர். அவர்களுக்கு யோவான், “உங்களுக்குப் பணம் தரும்பொ ருட்டு மக்களை எப்போதும் நிர்ப்பந்தப்படுத் தாதீர்கள். யாரைக்குறித்தும் பொய் சொல்லா தீர்கள். உங்களுக்குக் கிடைக்கும் சம்பளத்தில் மகிழ்ச்சியாய் இருங்கள்” என்று கூறினான்.

15எல்லா மக்களும் கிறிஸ்துவின் வரு கையை எதிர்நோக்கி இருந்தனர். எனவே யோவானைக் கண்டு அவர்கள் ஆச்சரியம் கொண்டனர். அவர்கள், “இவன் கிறிஸ்துவாக இருக்கக்கூடும்” என்று எண்ணினர்.

16அவர்கள் அனைவரிடமும் பேசிய யோவான், “நான் உங்களுக்கு தண்ணீரால் ஞானஸ்நானம் கொடுக்கிறேன். எனக்குப் பின் னால் வருகிறவரோ நான் செய்வதைக் காட் டிலும் அதிகமாய்ச் செய்ய வல்லவர். அவரது மிதியடிகளை அவிழ்க்கவும் நான் தகுதியற் றவன். அவர் ஆவியானவராலும், அக்கினி யாலும், உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுப் பார்.

17தானியங்களைச் சுத்தமாக்குவதற்குத் தயாராக அவர் வருவார். பதரிலிருந்து தானி யத்தைப் பிரித்து களஞ்சியத்தில் சேர்ப்பார். பதரையோ அவர் எரிப்பார். அணைக்க முடி யாத நெருப்பில் அவற்றைச் சுட்டெரிப்பார்,”
என்று பதில் கூறினான். 18யோவான் நற்செய்
தியைத் தொடர்ந்து போதித்து, மக்களுக்கு உதவும்படியான மற்ற பல காரியங்களையும் சொல்லி வந்தான்.

### யோவானுக்கு ஏற்பட்ட உபத்திரவம்

[19]ஆளுநராகிய ஏரோதுவை யோவான்
கண்டித்தான். ஏரோதுவின் சகோதரனின்
மனைவியாகிய ஏரோதியாளை அவன் தகாத
முறையில் சேர்த்துக் கொண்டதை யோவான்
கண்டனம் செய்தான். ஏரோது செய்த பல
தீய செயல்களையும் யோவான் கண்டித்தான்.
[20]எனவே ஏரோது இன்னொரு தீய காரியத்தை
யும் செய்தான். அவன் யோவானை சிறையி
லிட்டான். ஏரோது செய்த பல தீய காரியங்
களோடு கூட இதுவும் ஒரு தீய செயலாக
அமைந்தது.

### இயேசு ஞானஸ்நானம் பெறுதல்

*(மத்தேயு 3:13-17 மாற்கு 1:9-11)*

[21]யோவான் சிறையில் அடைக்கப்படும்
முன்பு அவனால் எல்லா மக்களும் ஞானஸ்
நானம் பெற்றனர். இயேசுவும் அப்போது
அங்கு வந்து அவனிடம் ஞானஸ்நானம் பெற்
றார். இயேசு பிரார்த்தனை செய்து கொண்
டிருந்தபோது வானம் திறந்தது. [22]பரிசுத்த
ஆவியானவர் அவர் மீது வந்தார். ஆவியான
வர் ஒரு புறாவைப்போலத் தோற்றமளித்தார்.
அப்போது வானத்திலிருந்து ஒரு சத்தம்
கேட்டது. அது "நீர் என் அன்புள்ள குமாரன்.
நான் உம்மில் பிரியமாய் இருக்கிறேன்"
என்று உரைத்தது.

### யோசேப்பின் குடும்ப வரலாறு

*(மத்தேயு 1:1-17)*

[23]இயேசு போதிக்க ஆரம்பித்தபோது ஏறக்
குறைய முப்பது வயது நிரம்பியவராக
இருந்தார். மக்கள் இயேசுவை யோசேப்பின்
மகன் என்றே எண்ணினர்.

யோசேப்பு ஏலியின் மகன்.
[24] ஏலி மாத்தாத்தின் மகன்.
மாத்தாத் லேவியின் மகன்.
லேவி மெல்கியின் மகன்.
மெல்கி யன்னாவின் மகன்.
யன்னா யோசேப்பின் மகன்.
[25] யோசேப்பு மத்தத்தியாவின் மகன்.
மத்தத்தியா ஆமோஸின் மகன்.
ஆமோஸ் நாகூமின் மகன்.
நாகூம் எஸ்லியின் மகன்.
எஸ்லி நங்காயின் மகன்.
[26] நங்காய் மாகாத்தின் மகன்.
மாகாத் மத்தத்தியாவின் மகன்.
மத்தத்தியா சேமேயின் மகன்.
சேமேய் யோசேப்பின் மகன்.
யோசேப்பு யூதாவின் மகன்.
[27] யூதா யோவன்னாவின் மகன்.
யோவன்னா ரேசாவின் மகன்.
ரேசா செருபாபேலின் மகன்.
செருபாபேல் சலாத்தியேலின் மகன்.
சலாத்தியேல் நேரியின் மகன்.
[28] நேரி மெல்கியின் மகன்.
மெல்கி அத்தியின் மகன்.
அத்தி கோசாமின் மகன்.
கோசாம் எல்மோதாமின் மகன்.
எல்மோதாம் ஏரின் மகன்.
[29] ஏர் யோசேயின் மகன்.
யோசே எலியேசரின் மகன்.
எலியேசர் யோரீமின் மகன்.
யோரீம் மாத்தாத்தின் மகன்.
மாத்தாத் லேவியின் மகன்.
[30] லேவி சிமியோனின் மகன்.
சிமியோன் யூதாவின் மகன்.
யூதா யோசேப்பின் மகன்.
யோசேப்பு யோனானின் மகன்.
யோனான் எலியாக்கீமின் மகன்.

[31] எலியாக்கீம் மெலெயாவின் மகன்.
மெலெயா மயினானின் மகன்.
மயினான் மத்தாத்தாவின் மகன்.
மத்தாத்தா நாத்தானின் மகன்.
நாத்தான் தாவீதின் மகன்.
[32] தாவீது ஈசாயின் மகன்.
ஈசாய் ஓபேதின் மகன்.
ஓபேத் போவாசின் மகன்.
போவாஸ் சல்மோனின் மகன்.
சல்மோன் நகசோனின் மகன்.
[33] நகசோன் அம்மினதாபின் மகன்.
அம்மினதாப் ஆராமின் மகன்.
ஆராம் எஸ்ரோமின் மகன்.
எஸ்ரோம் பாரேசின் மகன்.
பாரேஸ் யூதாவின் மகன்.

[34] யூதா யாக்கோபின் மகன்.
யாக்கோபு ஈசாக்கின் மகன்.
ஈசாக்கு ஆபிரகாமின் மகன்.
ஆபிரகாம் தேராவின் மகன்.
தேரா நாகோரின் மகன்.
[35] நாகோர் சேரூக்கின் மகன்.
சேரூக் ரெகூவின் மகன்.
ரெகூ பேலேக்கின் மகன்.
பேலேக் ஏபேரின் மகன்.
ஏபேர் சாலாவின் மகன்.
[36] சாலா காயினானின் மகன்.
காயினான் அர்பக்சாத்தின் மகன்.
அர்பக்சாத் சேமின் மகன்.
சேம் நோவாவின் மகன்.
நோவா லாமேக்கின் மகன்.

[37] லாமேக் மெத்தூசலாவின் மகன்.
மெத்தூசலா ஏனோக்கின் மகன்.
ஏனோக் யாரேதின் மகன்.
யாரேத் மகலாலெயேலின் மகன்.
மகலாலெயேல் கேனானின் மகன்.
கேனான் ஏனோசின் மகன்.
[38] ஏனோஸ் சேத்தின் மகன்.
சேத் ஆதாமின் மகன்.
ஆதாம் தேவனின் மகன்.

### இயேசு சோதிக்கப்படுதல்

(மத்தேயு 4:1-11; மாற்கு 1:12-13)

4 யோர்தான் நதியில் இருந்து இயேசு திரும்
பினார். அவர் பரிசுத்த ஆவியால் நிரப்
பப்பட்டிருந்தார். ஆவியானவர் இயேசுவை
வனாந்தரத்திற்குச் செல்ல ஏவினார். 2அங்கு
பிசாசு இயேசுவை நாற்பது நாட்கள் சோத
னைக்கு உட்படுத்தினான். அந்நாட்களில்
இயேசு எதையும் உண்ணவில்லை. சோத
னைக் காலமான அந்த நாட்கள் கழிந்த பின்
னர், இயேசுவுக்கு மிகுந்த பசி உண்டாயிற்று.
3பிசாசு இயேசுவை நோக்கி, "நீர் தேவனு
டைய குமாரனானால், இந்தக் கல்லுகளை
அப்பங்களாகும்படி சொல்லும்" என்றான்.
4அதற்கு இயேசு, "வேதாவாக்கியங்களில்
இவ்வாறு எழுதப்பட்டுள்ளது:

'மக்களை உயிரோடு பாதுகாப்பது
அப்பம் மட்டுமல்ல.'"

உபாகமம் 8:3

என்றார்.
5அப்போது பிசாசு அவரை உயரமான
ஓர் இடத்துக்கு அழைத்துக்கொண்டு போய்
ஒரு நொடிக்குள் உலகின் எல்லா இராஜ்யங்
களையும் காண்பித்தான். 6பிசாசு இயேசுவை
நோக்கி, "உனக்கு இந்த எல்லா இராஜ்யங்க
ளையும், அதிகாரங்களையும், அவற்றின் மகி
மையையும் கொடுப்பேன். அவை எல்லாம்
எனக்குக் கொடுக்கப்பட்டுள்ளன. நான் கொ
டுக்க விரும்புகிறவனுக்கு அவற்றைக் கொடுக்
கமுடியும். 7நீர் என்னை வணங்கினால் இவை
அனைத்தையும் உமக்கு கொடுப்பேன்" என்று
கூறினான்.
8பதிலாக இயேசு,

"வேதவாக்கியங்களில் இவ்வாறு எழு
தப்பட்டுள்ளது, 'உங்கள் தேவனாகிய
கர்த்தரைமட்டும் வழிபடுங்கள்; அவ
ருக்கு மட்டுமே சேவை செய்யுங்கள்'"

உபாகமம் 6:13

என்றார். 9பின் பிசாசு இயேசுவை எருசலே
முக்கு அழைத்துச் சென்றான். தேவாலயத்தின்
உயர்ந்த இடத்தில் இயேசுவை நிற்க வைத்
தான். அவன் இயேசுவிடம், "நீர் தேவனுடைய
குமாரனானால் கீழே குதியும்,

10'தேவன் தம் தூதர்களுக்கு உம்மை
காக்கும்படியாகக் கட்டளையிடுவார்.'

சங்கீதம் 91-11

11'உமது பாதங்கள் பாறையில் இடித்து
விடாதபடிக்கு அவர்கள் தம் கைகளில்
உமமை தாங்கிக் கொள்வார்கள்'

சங்கீதம் 91-12

என்று வேதவாக்கியங்களில் இவ்வாறு
எழுதப்பட்டுள்ளது" என்றான். 12அவனுக்கு
இயேசு,

"'உன் தேவனாகிய கர்த்தரைச் சோதிக்
காதே'

உபாகமம் 6:16

என்றும் கூட வேதவாக்கியங்கள் சொல்கி
றதே" என்று பதில் சொன்னார். 13பிசாசு
இயேசுவை எல்லா வகையிலும் சோதித்து
முடித்தான். இன்னும் தகுந்த காலம் வரும்
வரைக்கும் காத்திருக்க முடிவு செய்து அவரிட
மிருந்து விலகிச் சென்றுவிட்டான்.

### இயேசுவின் போதனை

(மத்தேயு 4:12-17; மாற்கு 1:14-15)

14பரிசுத்த ஆவியானவரின் வல்லமை
யோடு இயேசு கலிலேயாவுக்குத் திரும்பினார்.
இயேசுவைப் பற்றிய செய்திகள் கலிலேயா
தேசத்தைச் சுற்றியுள்ள எல்லா பகுதிகளிலும்
பரவின. 15இயேசு யூதர்களின் ஜெப ஆலயங்க
ளில் போதிக்க ஆரம்பித்தார். எல்லா மக்களும்
அவரைப் புகழ்ந்தனர்.
16தான் வளர்ந்த இடமாகிய நாசரேத்திற்கு
இயேசு பயணம் செய்தார். யூதர்களின் ஓய்வு
நாளில் அவர் வழக்கம் போல் ஜெப ஆலயத்
திற்குச் சென்று வாசிப்பதற்காக எழுந்து
நின்றார். 17ஏசாயா தீர்க்கதரிசியின் புத்தகம்
அவருக்கு கொடுக்கப்பட்டது. இயேசு புத்தகத்
தைத் திறந்து கீழ்வரும் பகுதி எழுதப்பட்டிருப்
பதைக் கண்டார்:

18"தேவனுடைய ஆவி என்னிலுள்ளது.
ஏதுமற்ற மக்களுக்கு நற்செய்தியைப்
போதிப்பதற்கு தேவன் என்னைத் தேர்ந்
தார். கைதிகள் விடுதலை பெறவும்
குருடர்கள் மீண்டும் பார்வை பெறவும்
அம்மக்களுக்குப் போதிக்கும்படியாக
தேவன் என்னை அனுப்பினார். தங்கள்
துன்பத்தினின்று பலவீனர்கள் விடுதலை
பெறும் பொருட்டு தேவன் என்னை
அனுப்பினார்.
19 மக்களுக்கு தேவன் இரக்கம் காட்டும்
காலத்தை அறிவிக்கும்படியாக தேவன்
என்னை அனுப்பினார்"

ஏசாயா 61:1-2

என்பதை இயேசு வாசித்துவிட்டு புத்தகத்தை
மூடினார்.
20அவர் புத்தகத்தை திருப்பித் தந்துவிட்டு
உட்கார்ந்தார். ஜெப ஆலயத்திலிருந்த ஒவ்வொ
ருவரும் இயேசுவைக் கூர்ந்து நோக்கினர்.
21அவர்களிடம் இயேசு பேச ஆரம்பித்தார்.
அவர், "நான் வாசித்த இச்சொற்களை இப்
போது நீங்கள் கேட்கையில், அச்சொற்கள்
உண்மையாயின!" என்றார்.

22எல்லா மக்களும் இயேசுவைக் குறித்து
நல்லபடியாகக் கூறினர். இயேசு பேசிய
அழகான வார்த்தைகளைக் கேட்டு அவர்கள்
வியந்தனர். மக்கள், "அவர் எவ்வாறு இப்படி
பேச முடியும்? அவர் யோசேப்பின் மகன்
அல்லவா?" என்றனர்.
23அவர்களை நோக்கி, இயேசு, "'மருத்து
வரே, முதலில் உன்னை நீயே குணப்படுத்திக்
கொள்' என்னும் பழமொழியை நீங்கள் எனக்
குக் கூறப்போகிறீர்கள் என்பது எனக்குத்
தெரியும். 'நீங்கள் கப்பர்நகூமில் நிகழ்த்திய
காரியங்களைக் குறித்துக் கேள்விப்பட்டு
இருக்கிறோம். உங்கள் சொந்த நகரமாகிய
இவ்விடத்திலும் அதையே செய்யுங்கள்'
என்று சொல்ல விரும்புகிறீர்கள்" என்றார்.
24மேலும் இயேசு, "நான் உங்களுக்கு உண்மை
யைக் கூறுகிறேன். ஒரு தீர்க்கதரிசியை அவ
னது சொந்த நகரத்தார் ஏற்றுக்கொள்வ
தில்லை. 25நான் சொல்வது உண்மை. எலியா
வின் காலத்தில் மூன்றரை ஆண்டுகளாக
இஸ்ரவேலில் மழை பொழியவில்லை. நாடு
முழுவதிலும் உணவு எங்கும் கிடைக்க
வில்லை. அக்காலத்தில் இஸ்ரவேலில் வித
வைகள் பலர் வாழ்ந்தனர். 26ஆனால் இஸ்ரவே
லில் உள்ள எந்த விதவையிடத்திலும் எலியா
அனுப்பப்படவில்லை. சீதோனில் உள்ள நகர
மாகிய சாரிபாத்தில் உள்ள விதவையிடத்
துக்கே அவன் அனுப்பப்பட்டான். 27எலிசா
என்னும் தீர்க்கதரிசியின் காலத்தில் குஷ்டரோ
கிகள் பலர் இருந்தனர். அவர்களில் ஒருவரும்
குணமாக்கப்படவில்லை. நாகமான் மட்டுமே
குணமடைந்தான். அவன் சீரியா தேசத்தைச்
சேர்ந்தவன். இஸ்ரவேல் தேசத்தைச் சேர்ந்த
வன் அல்லன்" என்றார்.
28ஜெப ஆலயத்தில் உள்ள அனைவரும்
இவ்வார்த்தைகளைக் கேட்டனர். அவர்கள்
மிகமிக கோபம் அடைந்தனர். 29அம்மக்கள்
எழுந்து இயேசுவை நகரத்தில் இருந்து வெளி
யேறும்படியாக கட்டாயப்படுத்தினர். அவர்
கள் நகரம் ஒரு மலையின்மேல் நிர்மாணிக்கப்
பட்டு இருந்தது. அவர்கள் இயேசுவை
மலையின் விளிம்புக்குக் கொண்டுவந்தனர்.
விளிம்பிலிருந்து அவரை தள்ளிவிட அவர்
கள் முனைந்தார்கள். 30ஆனால் இயேசு அவர்க
ளுக்கு நடுவே நடந்து, அங்கிருந்து சென்று
விட்டார்.

## அசுத்த ஆவியிலிருந்து விடுதலை

(மாற்கு 1:21-28)

31கலிலேயாவில் உள்ள பட்டணமாகிய
கப்பர்நகூமுக்கு இயேசு சென்றார். ஓய்வு
நாளில் இயேசு மக்களுக்குப் போதித்தார்.
32அவரது போதனைகளைக் கேட்டு மக்கள்
வியந்தார்கள். ஏனெனில் அவர் மிகுந்த அதி
காரத்துடன் பேசினார். 33பிசாசினால் அசுத்த
ஆவி பிடித்த ஒரு மனிதன் ஜெப ஆலயத்தில்
இருந்தான். அந்த மனிதன் உரத்த குரலில்,
34"நசரேயனாகிய இயேசுவே! எங்களிடம்
என்ன விரும்புகிறீர்? நீர் யார் என்பதை
நான் அறிவேன். நீர் தேவனுடைய பரிசுத்த
மானவர்" என்றான். 35அசுத்த ஆவியைப்
பேசாமல் இருக்கும்படி எச்சரித்தார் இயேசு.
"அமைதியாக இருப்பாயாக! இம்மனிதனி
லிருந்து வெளியே வா!" என்றார் இயேசு.
எல்லாருக்கும் முன்பாக அசுத்த ஆவி அம்
மனிதனை தரையில் தூக்கி எறிந்தது. பின்பு
அசுத்த ஆவி காயப்படுத்தாமல் அம்மனிதனை
விட்டு விலகியது.
36மக்கள் அதைக் கண்டு அதிசயப்பட்டனர்.
அவர்கள் ஒருவருக்கொருவர், "இதன்பொருள்
என்ன? அதிகாரத்தோடும் வல்லமையோடும்
அவர் அசுத்த ஆவிகளுக்குக் கட்டளை இடு
கிறார். அவை வெளியேறுகின்றன" என்று
சொல்லிக் கொண்டனர். 37அந்தப் பகுதியில்
உள்ள எல்லா இடங்களிலும் இயேசுவைப்
பற்றிய செய்தி பரவியது.

## சீமோனின் மாமி குணமடைதல்

(மத்தேயு 8:14-17; மாற்கு 1:29-34)

38இயேசு ஜெப ஆலயத்தில் இருந்து சென்
றார். அவர் சீமோனின்* வீட்டுக்குச் சென்றார்.
சீமோனின் மாமியார் மிகவும் உடல் நலமின்றி
இருந்தாள். அவளுக்கு கடும் காய்ச்சலாய்
இருந்தது. அவளுக்கு உதவி செய்யும்
பொருட்டு எதையேனும் செய்யும்படியாக மக்
கள் இயேசுவை வேண்டினர். 39இயேசு அவள
ருகே சென்று நின்று, அவள் நோயைக்
குணமாகும்படியாய் கட்டளையிட்டார். நோய்
அவளை விட்டு நீங்கியது. அவள் எழுந்து
அவர்களுக்குப் பணிவிடை புரிய ஆரம்பித்
தாள்.

## பலரையும் குணமாக்குதல்

40கதிரவன் மறையும் சமயத்தில் மக்கள்
தம் நோயுற்ற நண்பர்களை இயேசுவிடம்
அழைத்து வந்தனர். அவர்கள் வெவ்வேறு
வகை நோய்களால் துன்புற்றனர். ஒவ்வொரு
நோயுற்ற மனிதனையும் அவரது கைகளால்
தொட்டு இயேசு குணமாக்கினார். 41பிசாசின்
அசுத்த ஆவிகள் பலரிடமிருந்து வெளியேறின.
அவை "நீர் தேவனுடைய குமாரன்" என
கூக்குரலிட்டன. ஆனால் அவை பேசாமல்
இருக்கும்படியாக அந்த ஆவிகளை இயேசு
வன்மையாகக் கண்டித்தார். இயேசுவே
கிறிஸ்து என்று அவை அறிந்திருந்தன.

## பிற நகரங்களுக்கு இயேசு போகுதல்

(மாற்கு 1:35-39)

42தான் தனித்திருக்கும் பொருட்டு மறு நாள்
இயேசு ஒரு இடத்திற்குச் சென்றார். மக்கள்
இயேசுவின் வருகைக்காக பார்த்திருந்தார்கள்.
கடைசியில் அவர் இருந்த இடத்தைக் கண்

---

**சீமோன்** சீமோனின் இன்னொரு பெயர் பேதுரு.

டார்கள். மக்கள் இயேசுவைக் கண்டபோது அவர் போகாமல் இருக்கும்படியாக தடுக்க முற்பட்டனர். 43ஆனால் இயேசு அவர்களை நோக்கி, "தேவனுடைய இராஜ்யத்தைப் பற்றிய நற்செய்தியை நான் வேறு நகரங்களிலும் சொல்ல வேண்டும். அதற்காகவே நான் அனுப்பப்பட்டுள்ளேன்" என்றார்.

44பின்னர் யூதேயாவில் உள்ள ஜெப ஆலயங்களில் இயேசு போதித்தார்.

## பேதுரு, யாக்கோபு, யோவான்

(மத்தேயு 4:18-22; மாற்கு 1:16-20)

5 கெனேசரேத்து கடலின் அருகே இயேசு நின்றார். மக்கள் அவரைச் சுற்றி சூழ்ந்து கொண்டார்கள். தேவனுடைய போதனைகளைக் கேட்க அவர்கள் விரும்பினர். 2கடற்கரையில் இயேசு இரண்டு படகுகளைக் கண்டார். மீன் பிடிக்கிறவர்கள் தம் வலைகளைக் கழுவிக் கொண்டிருந்தார்கள். 3சீமோனுக்கு உரிய படகில் இயேசு ஏறிக் கொண்டார். படகைக் கரையிலிருந்து கடலுக்குள் சற்றுத் தள்ளி நிறுத்துமாறு இயேசு சீமோனுக்குக் கூறினார். பிறகு மக்களுக்கு போதிக்கத் தொடங்கினார்.

4இயேசு போதித்து முடித்தார். அவர் சீமோனிடம், "படகை கடலின் ஆழமான பகுதிக்குச் செலுத்து. நீங்கள் எல்லாரும் வலைவீசினால் சில மீன்கள் அகப்படும்" என்றார்.

5சீமோன் பதிலாக, "ஐயா, மீன் பிடிப்பதற்காக இரவு முழுவதும் முயன்று பணி செய்தோம். ஆனால் மீன் எதுவும் அகப்படவில்லை. நான் நீருக்குள் வலை வீசவேண்டும் என்று நீர் கூறுகிறீர். நான் அவ்வாறே செய்வேன்" என்றான். 6மீன் பிடிக்கிறவர்கள் நீருக்குள் வலை வீசினர். வலைகள் கிழியும் படியாக அவை முழுக்க மீன்களால் நிரம்பின. 7அவர்கள் பிற படகுகளில் இருந்த தம் நண்பர்களை வந்து உதவுமாறு அழைத்தனர். நண்பர்கள் வந்தனர். இரண்டு படகுகளும் அமிழ்ந்துபோகும் நிலையில் மிகுதியான மீன்களால் நிரம்பின.

8-9தாங்கள் பிடித்த மிகுதியான மீன்களைக் கண்டு மீன் பிடிக்கிறவர்கள் ஆச்சரியப்பட்டனர். சீமோன் பேதுரு இதைக் கண்டபோது இயேசுவின் முன் தலை குனிந்து வணங்கி, "ஆண்டவரே, என்னிடமிருந்து போகவேண்டும். நான் பாவியான மனிதன்" என்றான். 10செபெதேயுவின் மகன்களாகிய யாக்கோபும் யோவானும் கூட ஆச்சரியம் அடைந்தார்கள். (யாக்கோபும் யோவானும் பேதுருவுடன் சேர்ந்து உழைத்தனர்) இயேசு சீமோனை நோக்கி, "பயப்படாதே! இப்போதிலிருந்து மனிதரை ஒன்று சேர்க்கும்படியாக நீ வேலை செய்வாய், மீனைப்பிடிக்க அல்ல!" என்றார்.

11அம்மனிதர்கள் படகைக் கரைக்கு இழுத்து வந்தனர். அவர்கள் எல்லாவற்றையும் விட்டுவிட்டு இயேசுவைப்பின் தொடர்ந்தனர்.

## குணமடைந்த நோயாளி

(மத்தேயு 8:1-4; மாற்கு 1:40-45)

12ஒருமுறை இயேசு மிகவும் நோய்வாய்ப்பட்டிருந்த மனிதன் ஒருவன் வாழ்ந்த ஒரு நகரத்தில் இருந்தார். அந்த மனிதனை தொழுநோய் பீடித்திருந்தது. அந்த மனிதன் இயேசுவைப் பார்த்ததும் இயேசுவுக்கு முன்பாக விழுந்து வணங்கி, "ஆண்டவரே, என்னைக் குணப்படுத்துங்கள். உங்களுக்கு விருப்பமிருந்தால் நீங்கள் என்னைக் குணமாக்கமுடியும் என்பது எனக்குத் தெரியும்" என்று வேண்டினான்.

13இயேசு, "நான் உன்னைக் குணப்படுத்த விரும்புகிறேன். குணமடைவாயாக!" என்றார். இயேசு அவனைத் தொட்டார். உடனே தொழுநோய் அவனை விட்டு மறைந்தது. 14இயேசு அவனிடம், "இப்போது நடந்ததை யாருக்கும் சொல்லாதே. ஆனால் ஆசாரியனிடம் சென்று காட்டு. மோசே கட்டளையிட்டபடி நீ குணமாகியதற்கேற்ப தேவனுக்கு ஒரு காணிக்கை கொடு. இது நீ குணமாகியதை மக்களுக்குக் காட்டும்" என்றார்.

15ஆனால் இயேசுவைப்பற்றிய செய்தி மிகவும் விரிந்த அளவில் பரவியது. பல மக்கள் இயேசுவின் போதனையைக் கேட்பதற்கும், தங்கள் நோய்களினின்று குணமாவதற்கும் வந்தனர்.

16பிரார்த்தனை செய்யும் பொருட்டுத் தனிமையான இடத்தைத் தேடி இயேசு அடிக்கடி வேறு வேறு இடங்களுக்குச் சென்றார்.

## பக்கவாதக்காரன் குணமடைதல்

(மத்தேயு 9:1-8; மாற்கு 2:1-12)

17ஒருநாள் இயேசு மக்களுக்குப் போதித்துக் கொண்டிருந்தார். பரிசேயர்களும் வேதபாரகரும் கூட அங்கே உட்கார்ந்து கொண்டிருந்தனர். கலிலேயா, யூதேயா, எருசலேம் ஆகிய நகரங்களில் இருந்து அவர்கள் வந்திருந்தனர். தேவன் குணமாக்கும் வல்லமையை இயேசுவுக்குக் கொடுத்துக் கொண்டிருந்தார். 18பக்கவாதக்காரன் ஒருவன் அங்கிருந்தான். சில மனிதர்கள் அவனை ஒரு சிறுபடுக்கையில் சுமந்து வந்தனர். அவர்கள் அவனைக் கொண்டுவந்து இயேசுவின் முன் வைக்க முயன்றனர். 19ஆனால் மக்கள் திரளாக கூடியிருந்ததால் அவர்களால் இயேசுவினருகே வர வழி கண்டுபிடிக்க முடியவில்லை. எனவே அந்த மனிதர்கள் கூரையின் மேலேறி, கூரையில் உள்ள ஒரு துவாரத்தின் வழியாக படுக்கையோடு பக்கவாதக்காரனைக் கீழே இறக்கினர். அவர்கள் இயேசுவின் முன்னே பக்கவாதக்காரன் படுத்திருக்கும்படியாக அந்த அறைக்குள்ளேயே அவனை இறக்கினர். 20அவர்கள் விசுவாசமுள்ளவர்கள் என்பதை இயேசு கண்டார். நோயாளியிடம் இயேசு, "நண்பனே, உனது பாவங்கள் மன்னிக்கப்பட்டன" என்றார்.

21வேதபாரகரும், பரிசேயரும் தமக்குள்
ளேயே, “இந்த மனிதன் யார்? தேவனுக்கு
எதிரான காரியங்களை இவன் பேசுகிறான்.
தேவன் மட்டுமே பாவங்களை மன்னிக்க முடி
யும்” என்று எண்ணிக்கொண்டனர்.
22அவர்களின் எண்ணத்தை இயேசு அறிந்
திருந்தார். அவர், “நீங்கள் மனதில் இவ்வாறு
எண்ணுவது ஏன்? 23பக்கவாதக்காரனிடம்,
‘உனது பாவங்கள் மன்னிக்கப்பட்டன’ என்று
சொல்வதோ, அல்லது ‘எழுந்து நட’ என்று
சொல்வதா, எது எளிது? 24ஆனால் பூமியில்
பாவங்களை மன்னிக்க தேவனுடைய குமார
னுக்கு அதிகாரம் உண்டு என்பதை நான்
நிரூபிப்பேன்” என்றார். ஆகவே இயேசு பக்க
வாதக்காரனை நோக்கி, “எழுந்து நில், உனது
படுக்கையை எடுத்துக் கொண்டு வீட்டுக்குப்
போ” என்றார்.
25அப்போது அம்மனிதன் அங்கு கூடி
யிருந்த மக்களுக்கு முன்பாக எழுந்திருந்தான்.
அவன் தனது படுக்கையை எடுத்துக்
கொண்டு தேவனை வாழ்த்திக் கொண்டே வீட்
டிற்கு நடந்து போனான். 26எல்லா மக்களும்
மிகுந்த ஆச்சரியமுற்றனர். அவர்கள் தேவனை
வாழ்த்த ஆரம்பித்தனர். தேவனுடைய வல்ல
மையைக் குறித்து மிகுந்த பயபக்தியுள்ள
வர்களாகி, “இன்று ஆச்சரியமான காரியங்
களைக் கண்டோம்” என்றார்கள்.

## லேவி இயேசுவைத் தொடருதல்

*(மத்தேயு 9:9-13; மாற்கு 2:13-17)*

27இது நடந்த பின்னர், இயேசு வெளியே
சென்று கொண்டிருக்கையில் வரி அலுவலகத்
தின் முன்பாக வரி வசூலிப்பவன் ஒருவன்
உட்கார்ந்திருக்கக் கண்டார். அவன் பெயர்
லேவி. இயேசு அவனை நோக்கி, “என்னைத்
தொடர்ந்து வா” என்றார். 28லேவி எழுந்து
எல்லாவற்றையும் விட்டு இயேசுவைப் பின்
தொடர்ந்தான்.
29பின்பு, லேவி, இயேசுவுக்குப் பெரிய
விருந்தளித்தான். லேவியின் வீட்டில் அந்த
விருந்து நடந்தது. வரி வசூலிப்பவர்கள் பல
ரும் வேறு சில மக்களும் அவர்களோடு மேசை
யின் முன் அமர்ந்திருந்தனர். 30பரிசேயர்களும்,
வேதபாரகரும் இயேசுவின் சீஷர்களிடம் புகார்
கூறத் தொடங்கி, “நீங்கள் வரி வசூலிப்பவர்
களோடும் மற்ற தீய மக்களோடும் அமர்ந்து
அவர்களோடு உண்பதும் குடிப்பதும் ஏன்?”
என்று வினவினர்.
31அவர்களுக்கு இயேசு, “ஆரோக்கியமான
மக்களுக்கு மருத்துவர் தேவையில்லை. நோ
யுற்றோர்க்குத்தான் மருத்துவர் தேவை. 32நல்ல
மனிதர்களிடம் மனம் மாறும்படியாகக் கேட்
பதற்கு நான் வரவில்லை. தீயவர்கள் மனதை
யும் வாழ்க்கையையும் மாற்றிக் கொள்ளும்
படியாகக் கேட்பதற்கே நான் வந்திருக்கிறேன்”
என்று பதிலுரைத்தார்.

## உபவாசம் பற்றிய கேள்வி

*(மத்தேயு 9:14-17; மாற்கு 2:18-22)*

33அவர்கள் இயேசுவிடம், “யோவானின்
சீஷர்கள் அடிக்கடி உபவாசிக்கவும், பிரார்த்
திக்கவும் செய்கிறார்கள். பரிசேயர்களின் சீஷர்
களும் அதே மாதிரி செய்கிறார்கள். ஆனால்
உங்கள் சீஷர்கள் எப்போதும் உண்பதும்,
குடிப்பதுமாக இருக்கிறார்களே” என்றார்கள்.
34இயேசு அவர்களிடம், “திருமணத்தின்
போது மணமகன் உடனிருக்கையில் மணமக
னின் நண்பர்களை உண்ணாதிருக்கும்படி
யாகக் கூற முடியாது. 35ஆனால் அவர்களை
விட்டு மணமகன் பிரிந்து செல்லும் காலம்
வரும். அப்போது அவனது நண்பர்கள் உப
வாசம் இருப்பர்” என்றார்.
36அவர்களுக்கு இயேசு கீழ்வரும் உவமை
யைக் கூறினார். “ஒரு பழைய அங்கியின்
கிழிசலைத் தைக்க ஒருவரும் புதிய அங்கியின்
ஒரு பகுதியைக் கிழிப்பதில்லை. ஏன்? அது
புதிய அங்கியைப் பாழாக்குவது மட்டுமன்றி,
புதிய அங்கியின் துணி பழைய துணியைப்
போல இருப்பதுமில்லை. 37மக்கள் புதிய
திராட்சை இரசத்தைப் பழைய திராட்சை
இரசப்பைகளில் ஊற்றி வைப்பதில்லை. ஏன்?
புதிய திராட்சை இரசம் பைகளைப் பொத்
தலாக்கிவிடும். திராட்சை இரசம் சிந்திப்
போகும். திராட்சை இரசப்பைகளும் வீணாகிப்
போகும். 38மக்கள் புதிய இரசத்தைப் புதிய
பைகளில் வைப்பார்கள். 39பழைய ரசத்தைப்
பருகுகிற மனிதன் புதிய திராட்சை இரசத்தை
விரும்புவதில்லை. ஏன்? ‘பழைய திராட்சை
ரசமே நல்லது’ என்று அவன் கூறுகின்றான்”
என்றார்.

## ஓய்வுநாளும் இயேசுவும்

*(மத்தேயு 12:1-8; மாற்கு 2:23-28)*

6 ஓய்வு நாளாகிய ஒரு தினத்தில் இயேசு
தானியங்கள் விளைந்திருந்த நிலத்தின்
வழியாக நடந்து கொண்டிருந்தார். அவரது
சீஷர்கள் தானியத்தை கொய்து, தங்கள் கை
களினால் நசுக்கி, அதைச் சாப்பிட்டனர். 2சில
பரிசேயர்கள், “ஏன் இவ்வாறு செய்கிறீர்கள்?
ஓய்வு நாளன்று இவ்வாறு செய்வது மோசே
யின் சட்டத்தை மீறுவதாகும்” என்று கூறினர்.
3இயேசு, “தாவீதும் அவனது மக்களும்
பசியுடன் இருந்தபோது செய்ததைக்குறித்து
நீங்கள் படித்திருக்கிறீர்கள். 4தாவீது தேவா
லயத்திற்குச் சென்றான். தாவீது, தேவனுக்குப்
படைக்கப்பட்ட தேவனின் அப்பத்தை எடுத்து,
அதைச் சாப்பிட்டான். தன்னோடு இருந்தவர்
களுக்கும் சில அப்பத்தைக் கொடுத்தான். இது
மோசேயின் சட்டத்திற்கு மாறானது. ஆசாரியர்
கள் மட்டுமே அந்த அப்பத்தைப் புசிக்க முடி
யும் என்று அச்சட்டம் கூறுகின்றது” என்று
பதில் சொன்னார். 5பின்பு இயேசு பரிசேயரை
நோக்கி, “ஓய்வு நாளுக்கும் மனித குமாரன்
ஆண்டவராக இருக்கிறார்” என்றார்.

### ஓய்வு நாளில் குணப்படுத்துதல்

*(மத்தேயு 12:9-14; மாற்கு 3:1-6)*

[6]மற்றொரு ஓய்வு நாள் வந்தபோது இயேசு
ஜெப ஆலயத்திற்குச் சென்றார். இயேசு ஜனங்
களுக்குப் போதித்தார். வலதுகை முடமான
ஒருவன் அங்கிருந்தான். [7]ஓய்வு நாளில் இயேசு
அம்மனிதனைக் குணமாக்குவாரா என்பதைப்
பார்ப்பதற்கு வேதபாரகர்களும், பரிசேயர்
களும் காத்துக் கொண்டிருந்தனர். குற்றம் சுமத்
தும்படியாக இயேசு ஏதேனும் தவறைச் செய்
வாரா என அவர்கள் எதிர்பார்த்திருந்தனர்.
[8]அவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதை
இயேசு அறிந்திருந்தார். அவர் முடமான கை
கொண்ட அம்மனிதனை நோக்கி, "எழுந்து
இம்மக்களுக்கு முன்பாக நில்" என்றார். அம்
மனிதன் எழுந்து அங்கே நின்றான். [9]பின்
இயேசு அவர்களை நோக்கி, "ஓய்வு நாளில்
நல்லதைச் செய்வதா, கெட்டதைச் செய்வதா,
எது நல்லதென்று உங்களைக் கேட்கிறேன்.
ஓர் உயிரைப் பாதுகாப்பதா அல்லது அழிப்
பதா எது சரியானது?" என்று கேட்டார்.
[10]இயேசு சுற்றிலும் எல்லாரையும் நோக்
கினார். இயேசு அந்த மனிதனை நோக்கி,
"உன் கையை நான் பார்க்கட்டும்" என்றார்.
அம்மனிதன் கையை நீட்டினான். அந்த கை
குணமானது. [11]பரிசேயர்களும், வேதபாரகர்
களும் மிகவும் கோபமடைந்தனர். அவர்கள்
ஒருவருக்கொருவர் "நாம் இயேசுவுக்கு என்ன
செய்யக்கூடும்?" என்று கூறிக்கொண்டனர்.

### அப்போஸ்தலர்களைத் தேர்ந்தெடுத்தல்

*(மத்தேயு 10:1-4; மாற்கு 3:13-19)*

[12]அக்காலத்தில் இயேசு பிரார்த்தனை செய்
யும் பொருட்டு ஒரு மலைக்குச் சென்றார்.
இரவு முழுவதும் தேவனிடம் பிரார்த்தனை
செய்தவாறே அம்மலையில் இருந்தார். [13]மறு
நாள் காலையில் இயேசு தனது சீஷர்களை
அழைத்தார். அவர்களுள் பன்னிரண்டு
பேரைத் தேர்ந்தெடுத்தார். அவர்களுக்கு "அப்
போஸ்தலர்கள்" என்று பெயரிட்டார். அவர்
கள் [14]சீமோன் (இயேசு அவனுக்கு பேதுரு
என்று பெயரிட்டார்) அந்திரேயா, என்னும்
பேதுருவின் சகோதரன், யாக்கோபு,
யோவான், பிலிப்பு பர்தொலொமேயு, [15]மத்
தேயு, தோமா, யாக்கோபு (அல்பேயுவின்
மகன்), சீமோன் (செலோத்தே* என்று அழைக்
கப்பட்டவன்) [16]யூதா, (யாக்கோபின் மகன்)
யூதாஸ்காரியோத் என்பவர்கள் ஆவார்கள்.
இந்த யூதாஸ் இயேசுவைப் பகைவர்களிடம்
ஒப்படைத்தவனாவான்.

### போதனையும் - குணமாக்குதலும்

*(மத்தேயு 4:23-25; 5:1-12)*

[17]இயேசுவும் அவருடைய சீஷர்களும் மலை
யிலிருந்து இறங்கினர். இயேசு சமவெளியான
இடத்தில் நின்றார். அவருடைய சீஷர்கள் கூட்ட
மாக அங்கே குழுமியிருந்தனர். மேலும்
யூதேயா, எருசலேம் ஆகிய பகுதிகளிலிருந்
தும், தீரு, சீதோன் ஆகிய கடலோரத்துப்
பட்டணங்களிலிருந்தும் ஏராளமான மக்கள்
அங்கு வந்திருந்தனர். [18]அவர்கள் இயேசுவின்
போதனைகளைக் கேட்கவும் தங்கள் நோய்
களில் இருந்து குணம்பெறவும் அங்கு வந்தனர்.
பிசாசின் அசுத்த ஆவிகளால் துன்புற்ற
மக்களை இயேசு குணமாக்கினார். [19]எல்லா
மக்களும் இயேசுவைத் தொடும்படியாக முயன்
றனர். ஏனெனில் அவரிடமிருந்து வல்லமை
வெளிப்பட்டது. இயேசு அவர்கள் எல்லோரை
யும் குணப்படுத்தினார்.

[20]இயேசு தம்மைப் பின்பற்றுகிறவர்களைப்
பார்த்து,

"ஏழைகளே, நீங்கள் ஆசீர்வதிக்கப்பட்ட
வர்கள். ஏனெனில் தேவனுடைய இராஜ்
யம் உங்களுக்குரியது.
[21] இப்போது பசியால் வாடுகிற நீங்கள்
ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். ஏனெனில்
நீங்கள் திருப்தியடைவீர்கள். இப்பொழுது
அழுகிற நீங்கள் ஆசீர்வதிக்கப்பட்ட
வர்கள். ஏனெனில் நீங்கள் சந்தோஷமாய்
நகைப்பீர்கள்.

[22]மக்கள் உங்களை வெறுக்கும் போதும்
நிராகரிக்கும் போதும் நீங்கள் ஆசீர்வதிக்கப்
பட்டவர்கள். நீங்கள் மனித குமாரனுக்கு உரி
யோர். ஆதலால் உங்களைத் தீயோர் என்றும்
சொல்லுவார்கள். அவர்கள் அதைச் சொல்
லும்போது நீங்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்.
[23]உங்களுக்கு பரலோகத்தில் பெரிய வெகுமதி
காத்திருப்பதால் இத்தருணங்களில் நீங்கள்
மகிழுங்கள். உங்களை அவர்கள் மிக இழி
வான முறையில் நடத்துவதைப் போலவே
அவர்கள் முன்னோர் தீர்க்கதரிசிகளையும்
இழிவுபடுத்தினர்.

[24] ஆனால் செல்வந்தர்களே நீங்கள் உங்கள்
வாழ்வில் சுகமாக வாழ்ந்ததால் இனி
மேல் அது உங்களுக்கு கேடாக இருக்கும்.
[25] இப்போது திருப்தி பெற்ற மக்களே, அது
உங்களுக்கு கேடாக இருக்கும். ஏனெனில்
நீங்கள் பசியடைவீர்கள். தற்போது சிரிக்
கும் மக்களே, அது உங்களுக்கு கேடாக
இருக்கும். ஏனெனில் நீங்கள் வேதனை
யும் அழுகையும் அடைவீர்கள்.

[26]"எல்லாரும் உங்களைக் குறித்து நல்ல
தாகச் சொல்கையில் மோசமானதே நேரும்.
பொய் தீர்க்கதரிசிகளைக் குறித்து அவர்கள்
முன்னோர் நல்லதாகவே சொன்னார்கள்"
என்றார்.

---

**செலோத்தே** *யூதர்களின் ஒரு தீவிர அரசியல் பிரிவைச் சேர்ந்தவன். (நூல் அறிமுகம் பார்க்க)*

### உங்கள் பகைவரை நேசியுங்கள்

*(மத்தேயு 5:38-48; 7:12)*

27“என் போதனைகளைக் கேட்கிற மக்களே
உங்களுக்குச் சொல்கிறேன். உங்கள் பகைவர்
களை நேசியுங்கள். உங்களை வெறுக்கிற
மக்களுக்கு நன்மை செய்யுங்கள். 28உங்களிடம்
தீயவற்றைக் கூறுகிற மக்களை ஆசீர்வதிக்
குமாறு தேவனை வேண்டுங்கள். உங்களை
இழிவாய் நடத்துகிறவர்களுக்காக பிரார்த்
தனை பண்ணுங்கள். 29ஒருவன் உங்களை
ஒரு கன்னத்தில் அடித்தால் அவனை மறு
கன்னத்திலும் அடிக்க அனுமதியுங்கள்.
உங்கள் அங்கியை யாரேனும் ஒருவன் எடுத்
தால் உங்கள் சட்டையையும் அவன் எடுத்
துக்கொள்ள அனுமதியுங்கள். 30உங்களிடம்
கேட்கிறவனுக்குக் கொடுங்கள். உங்களுக்குரிய
பொருளை ஒருவன் எடுத்துக்கொண்டால்
அதைத் திரும்பக் கேட்காதீர்கள். 31உங்களுக்
குப் பிறர் எதைச் செய்ய விரும்புகிறீர்களோ
அதையே பிறர்க்கும் செய்யுங்கள். 32உங்களை
நேசிக்கிறவர்களையே நீங்களும் நேசித்தால்
அதற்காக உங்களைப் புகழ வேண்டியது
தேவையா? இல்லை. பாவிகளும் தங்களை
நேசிக்கிறவர்களிடம் அன்பு காட்டுகிறார்களே!
33உங்களுக்கு நல்லதைச் செய்பவர்களுக்கு
நீங்களும் நன்மை செய்தால், அவ்வாறு
செய்வதற்காக உங்களைப் புகழ வேண்டுமா?
இல்லை. பாவிகளும் அதைச் செய்கிறார்களே!
34திருப்பி அடைத்துவிட முடிந்தவர்களுக்கு
நீங்கள் கடன்கொடுத்தால், உங்களை அதற்
காகப் புகழக்கூடுமா? இல்லை. பாவிகளும்கூட
பிற பாவிகளுக்கு அதே தொகையைத்
திரும்பப் பெறும்படியாக கடன் உதவி செய்கி
றார்களே! 35எனவே, பகைவர்களிடம் அன்பு
காட்டுங்கள். அவர்களுக்கு நன்மை செய்
யுங்கள். திரும்பக் கிடைக்கும் என்கிற நம்பிக்
கை சிறிதும் இல்லாவிடினும்கூட கடன்
கொடுங்கள். நீங்கள் இந்த காரியங்களைச்
செய்தால் அதற்கு மிகுந்த பலனைப் பெறு
வீர்கள். மகா உன்னதமான தேவனின்
பிள்ளைகள் ஆவீர்கள். ஆம், ஏனெனில் பாவி
களுக்கும், நன்றியற்ற மனிதர்களுக்கும் தேவன்
நல்லவர். 36உங்கள் தந்தை அன்பும் இரக்கமும்
உடையவராக இருப்பது போலவே, நீங்களும்
அன்பும் இரக்கமும் உடையவர்களாக இருங்
கள்.

### உங்களையே உற்றுப் பாருங்கள்

*(மத்தேயு 7:1-5)*

37“மற்றவர்களை நியாயம் தீர்க்காதிருங்கள்.
இதனால் நீங்கள் நியாயம் தீர்க்கப்பட மாட்டீர்
கள். மற்றவர்களைப் பழிக்காதீர்கள். இதனால்
நீங்களும் பழிக்கு ஆளாக மாட்டீர்கள். பிறரை
மன்னியுங்கள். இதனால் நீங்களும் மன்னிக்கப்
படுவீர்கள். 38பிறருக்குக் கொடுங்கள். நீங்களும்
பெறுவீர்கள். உங்களுக்கு மிகுதியாக அளிக்
கப்படும். உங்கள் கைகளில் கொள்ள முடியா
தபடிக்கு உங்களுக்கு அள்ளி வழங்கப்படும்.
உங்கள் மடிகளில் கொட்டும்படிக்கு மிகுதியாக
உங்களுக்குத் தரப்படும். நீங்கள் பிறருக்குக்
கொடுக்கிறபடியே தேவனும் உங்களுக்குக்
கொடுப்பார்” என்றார்.

39இயேசு அவர்களுக்கு ஒரு உவமையைக்
கூறினார், “ஒரு குருடன் இன்னொரு குருட
னுக்கு வழிகாட்ட முடியுமா? இல்லை. இரு
வரும் குழிக்குள் விழுவார்கள். 40ஆசிரியரைக்
காட்டிலும் மாணவன் சிறந்தவன் அல்லன்.
ஆனால் மாணவன் நன்கு கற்றுத் தேர்ந்த
போது, தனது ஆசிரியரைப்போல விளங்கு
வான்.

41“உன் கண்ணில் இருக்கிற பெரிய மரத்
துண்டைக் கவனிக்க முடியாதபோது, உன்
சகோதரன் கண்ணில் இருக்கிற சிறு தூசியை
நீ கவனிப்பது ஏன்? 42நீ உன் சகோதரனை
நோக்கி, “சகோதரனே! உன் கண்ணில் இருக்
கிற சிறு தூசியை எடுத்துப் போடட்டுமா?”
என்கிறாய். ஏன் இதைச் சொல்கிறாய்? நீ
உன் கண்ணில் இருக்கிற பெரிய மரத்துண்
டைப் பார்ப்பதில்லை. நீ வேஷமிடுகின்றாய்.*
முதலில் உன் கண்ணில் இருக்கும் மரத்
துண்டை எடுத்துவிடு. அப்போது உன்
சகோதரன் கண்ணிலிருக்கும் தூசியை எடுத்
துப்போடுவதற்கு நீ தெளிவாகப் பார்க்க
முடியும்”.

### இருவகைப் பழங்கள்

*(மத்தேயு 7:17-20; 12:34-35)*

43“ஒரு நல்ல மரம் கெட்ட பழத்தைக் கொடுக்
காது. அவ்வாறே ஒரு கெட்ட மரமும் நல்ல
பழத்தைக் கொடுக்காது. 44ஒவ்வொரு மரமும்
அது கொடுக்கிற பழத்தினால் அறியப்படும்.
முட்செடிகளில் இருந்து மக்கள் அத்திப் பழங்
களைச் சேர்ப்பதில்லை. புதர்களிலிருந்து
திராட்சைப் பழங்களை அவர்கள் பெறுவ
தில்லை. 45நல்ல மனிதனின் இதயத்தில் நல்ல
காரியங்கள் சேமித்து வைக்கப்பட்டிருக்கும்.
எனவே அவன் இதயத்தில் இருந்து நல்ல
காரியங்களையே வெளிப்படுத்துவான்.
ஆனால், தீய மனிதனின் இதயத்தில் தீய காரி
யங்கள் சேமித்து வைக்கப்பட்டிருக்கும்.
எனவே அவன் தீயகாரியங்களை வெளிப்
படுத்துவான். ஏனெனில் ஒருவனின் வாய்
வழியே வெளிப்படும் வார்த்தைகள் அவனு
டைய இதயத்தில் இருப்பவற்றின் வெளிப்
பாடே ஆகும்.

### இருவகை மனிதர்கள்

*(மத்தேயு 7:24-27)*

46“நான் கூறுவதை நீங்கள் செய்யாமல்
என்னை ‘ஆண்டவரே, ஆண்டவரே’ என்று
ஏன் அழைக்கிறீர்கள்? 47என்னிடம் வந்து,

---

**வேஷமிடுகின்றாய்** ஒரு கெட்டவன் நல்லவனைப் போன்று நடிப்பது.

என் போதனைகளைக் கேட்டு, அதன்படி
கீழ்ப்படிகிற ஒவ்வொரு மனிதனும், 48வீட்டைக்
கட்டுகிற ஒரு மனிதனைப் போல இருக்கிறான்.
அவன் ஆழமாகத் தோண்டி, உறுதியான
பாறையின் மீது அவனுடைய வீட்டைக் கட்டு
கிறான். வெள்ளப் பெருக்கின்போது, அவ்
வீட்டை வெள்ளம் அடித்துச் செல்ல முற்படும்.
ஆனால் வெள்ளப் பெருக்கு அவ்வீட்டை
அசைக்க முடியாது. ஏனெனில் அவ்வீடு உறு
தியாய்க் கட்டப்பட்டுள்ளது. 49ஆனால் என்
வார்த்தையைக் கேட்டு, அவற்றின்படி செய்
யாத ஒவ்வொரு மனிதனும் பாறையின் மேல்
தன் வீட்டைக் கட்டாத மனிதனுக்கு ஒப்பாய்
இருக்கிறான். வெள்ளப் பெருக்கின் போது
அவ்வீடு எளிதில் இடிந்துபோகும். அவ்வீடு
முழுக்க நாசமாகிவிடும்" என்றார்.

### இயேசு ஒரு வேலைக்காரனைக் குணமாக்குதல்

(மத்தேயு 8:5-13; யோவான் 4:43-54)

7 இயேசு இந்த எல்லா காரியங்களையும்
மக்களுக்குச் சொல்லி முடித்தார். பின்பு
இயேசு கப்பர்நகூமுக்கு சென்றார். 2கப்பர்
நகூமில் இராணுவ அதிகாரி ஒருவன் இருந்
தான். அவனுடைய வேலைக்காரன் ஒருவன்
நோயுற்றிருந்தான். அவன் இறக்கும் தருவா
யில் இருந்தான். அந்த அதிகாரி அவ்வேலைக்
காரனை மிகவும் நேசித்தான். 3அந்த அதிகாரி
இயேசுவை பற்றிக் கேள்விப்பட்டபோது, சில
வயதான யூதத்தலைவர்களை இயேசுவிடம்
அனுப்பினான். இயேசு வந்து வேலைக்
காரனைக் குணப்படுத்த கேட்டுக்கொள்ளும்
பொருட்டு அவர்களை அதிகாரி அனுப்
பினான். 4அவர்கள் இயேசுவிடம் சென்றனர்.
அதிகாரிக்கு உதவுமாறு இயேசுவை அவசர
மாக வேண்டினர். அவர்கள், "உம்முடைய
உதவியைப் பெறும் அளவுக்கு இந்த அதிகாரி
உண்மையிலேயே தகுதி வாய்ந்தவன் தான்.
5அவன் நம் மக்களை நேசிக்கிறான். நமக்காக
ஜெப ஆலயத்தைக் கட்டியிருக்கிறான்" என்
றனர்.

6எனவே இயேசு அந்த மனிதர்களோடு புறப்
பட்டார். இயேசு அந்த அதிகாரியின் வீட்டை
நெருங்குகையில் அதிகாரி தனது நண்பர்
களை அனுப்பினான். அவர்களை இயேசு
விடம் "கர்த்தாவே, நீர் என் வீட்டுக்கு வர
வேண்டியதில்லை. எங்கள் வீட்டிற்கு உம்மை
அழைத்துச் செல்லும் அளவுக்கு நான் தகுதி
உடையவன் அல்லன். 7அதனால் தான் நான்
நேரிடையாக உம்மிடம் வரவில்லை. நீர் கட்
டளையிடும். என் வேலைக்காரன் குணம்
பெறுவான். 8உம்முடைய அதிகாரத்தை நான்
அறிவேன். பிற மனிதர்களின் அதிகாரத்துக்
குட்பட்ட மனிதன் நான். எனக்குக் கீழ் பல
வீரர்கள் உண்டு. அவர்களில் ஒருவனை நான்'
போ' என்றால் போகிறான். மற்றொரு
வனை 'வா' என்றால் வருகிறான். என்
வேலையாளிடம் 'இதைச் செய்' என்றால்
உடனே அவன் கீழ்ப்படிகிறான்" என்று கூறு
மாறு அனுப்பினான்.

9இதைக் கேட்டபோது இயேசு மிகுந்த ஆச்
சரியம் அடைந்தார். தன்னைத் தொடர்ந்து
வருகிற மக்களை நோக்கித் திரும்பினார்.
"இஸ்ரவேல்* மக்களிடம் கூட இல்லாத வே
றெங்கும் காணப்படாத, உயர்ந்த விசுவாசத்
தை இவனிடம் கண்டேன்" என்றார். 10இயேசு
வைக் காண அனுப்பப்பட்ட மனிதர்கள்
அதிகாரியின் வீட்டுக்குத் திரும்பிச் சென்றனர்.
அங்கு அந்த வேலைக்காரன் குணமடைந்திருப்
பதைக் கண்டனர்.

### மரித்தவன் எழுப்பப்படுதல்

11மறுநாள் இயேசு நாயீன் என்னும் நகரத்
திற்குச் சென்றார். இயேசுவின் சீஷர்களும்,
மிகப் பெரிய கூட்டமான மக்கள் பலரும் அவ
ரோடு பிரயாணம் செய்தனர். 12நகரவாசலை
இயேசு நெருங்கியபோது ஒரு மரண ஊர்வலத்
தைக் கண்டார். விதவையான ஒருதாய் தனது
ஒரே மகனை இழந்திருந்தாள். அவனது
உடலைச் சுமந்து சென்றபோது தாயுடன் அந்
நகர மக்கள் பலரும் கூட இருந்தனர். 13கர்த்தர்
(இயேசு) அவளைப் பார்த்தபோது, அவளுக்
காக மனதுருகினார். இயேசு அவளிடம்
சென்று, "அழாதே" என்றார். 14பாடையின்
அருகே வந்து இயேசு அதைத் தொட்டார்.
அந்தப் பாடையைச் சுமந்து வந்த மனிதர்கள்
நின்றனர். இயேசு இறந்த மனிதனை நோக்கி,
"இளைஞனே, எழுந்திரு என்று உனக்கு
சொல்கிறேன்" என்றார். 15இறந்துபோன மகன்
எழுந்து உட்கார்ந்து பேச ஆரம்பித்தான்.
அவனை அவன் தாயிடம், இயேசு ஒப்படைத்
தார்.

16எல்லா மக்களும் ஆச்சரியமுற்றனர்.
அவர்கள், "ஒரு மகா தீர்க்கதரிசி நம்மிடையே
வந்துள்ளார்," என்றனர். மேலும் அவர்கள்,
"தேவன் தம் மக்களைக் கவனித்துக்கொள்
கிறார்" என்றார்கள்.

17இயேசுவைப் பற்றிய இச்செய்தி யூதேயா
முழுவதும் அதைச் சூழ்ந்த எல்லா இடங்
களிலும் பரவிற்று.

### யோவானின் கேள்வி

(மத்தேயு 11:2-19)

18இவை அனைத்தையும் குறித்து யோவா
னின் சீஷர்கள் யோவானுக்குக் கூறினர். தன்
சீஷர்களில் இருவரை யோவான் அழைத்தான்.
19"நீர்தானா வருகிறவர், அல்லது இன்னொ
ருவர் வருகைக்குக் காத்திருக்க வேண்டுமா"
என்று கேட்டுத் தெரிந்துகொள்ள கர்த்தரிடம்
அவர்களை யோவான் அனுப்பினார்.

20அவ்விதமாகவே அந்த மனிதர் இயேசு
விடம் வந்தனர். அவர்கள், "யோவான் ஸ்நான

---

**இஸ்ரவேல்** யூதர்கள்.

கன் எங்களை உம்மிடம், ‘நீர்தானா வருகிற
வர் அல்லது இன்னொருவரின் வருகைக்கு
காத்திருக்க வேண்டுமா?’ என்று கேட்டுவர
அனுப்பினார்” என்றார்கள்.

[21]அப்போது இயேசு பலரையும் காய்ச்சலில்
இருந்தும் நோய்களில் இருந்தும் குணமாக்
கவும், பிசாசினால் வரும் அசுத்த ஆவிகளி
னின்று விடுதலை பெறவும் செய்தார். குரு
டர்கள் பலர் மீண்டும் பார்வை பெறுமாறு
அவர்களைக் குணப்படுத்தினார். [22]யோவா
னின் சீஷர்களை நோக்கி இயேசு, “இங்கு
நீங்கள் பார்த்தவற்றையும் கேட்டவற்றையும்
யோவானிடம் போய் கூறுங்கள். குருடர்கள்
குணமடைந்து பார்க்கிறார்கள். முடவர்கள்
குணமடைந்து நடக்கிறார்கள். தொழுநோயா
ளிகள் நலம் பெறுகின்றனர். செவிடர்கள் நலம்
பெற்றுக் கேட்கிறார்கள். மரித்தோர் உயிர்ப்
பிக்கப்படுகிறார்கள். தேவனுடைய இராஜ்யத்
தைப் பற்றிய நற்செய்தி ஏழைகளுக்குச் சொல்
லப்படுகிறது. [23]என்னை ஏற்றுக்கொள்கிற
மனிதன் ஆசீர்வதிக்கப்பட்டவன்!” என்றார்.

[24]யோவானின் தொண்டர்கள் அங்கிருந்து
சென்ற பின்னர் இயேசு யோவானைக் குறித்து
அவர்களிடம் பேச ஆரம்பித்தார்: “நீங்கள்
வனாந்தரத்துக்கு எதைப் பார்க்கச் சென்றீர்
கள்? காற்றில் அசையும் நாணலையா? [25]நீங்
கள் எதைப் பார்க்கும்படியாக வெளியே சென்
றீர்கள்? நல்ல ஆடைகள் அணிந்த மனித
னையா? அழகிய மெல்லிய ஆடைகள்
அணிந்த மக்கள் அரசர்களின் உயர்ந்த அரண்
மனைகளில் வாழ்வார்கள். [26]உண்மையாகவே
யாரைப் பார்க்கச் சென்றீர்கள்? ஒரு தீர்க்கதரி
சியையா? ஆம், நான் உங்களுக்குச் சொல்
கிறேன், யோவான் ஒரு தீர்க்கதரிசியைக்
காட்டிலும் மிகவும் சிறந்தவன். [27]இவ்வாறு
யோவானை குறித்து எழுதப்பட்டிருக்கிறது.

‘கேளுங்கள்! உங்களுக்கு முன்பாக என்
செய்தியாளனை நான் அனுப்புவேன்.
அவன் உங்களுக்கு வழியை ஆயத்தம்
செய்வான்.’

மல்கியா 3:1

[28]நான் உங்களுக்குச் சொல்கிறேன். உலகில்
பிறந்த எந்த மனிதனைக் காட்டிலும்
யோவான் பெரியவன். ஆனால் தேவனுடைய
இராஜ்யத்தில் முக்கியத்துவம் குறைந்தவன்
கூட யோவானைக் காட்டிலும் பெரியவன்.

[29](யோவானின் போதனைகளை மக்கள்
கேட்டபோது தேவனின் போதனைகள் நல்
லவை என்று ஒத்துக் கொண்டனர். வரி வசூ
லிப்பவர்களும் அதனை ஆமோதித்தனர். இம்
மக்கள் யோவானால் ஞானஸ்நானம் பெற்
றனர். [30]ஆனால் பரிசேயர்களும், வேதபார
கரும் தேவனுடையத் திட்டத்தைத் தங்களுக்
கென்று ஏற்றுக் கொள்ள மறுத்தனர்.
யோவான் அவர்களுக்கு ஞானஸ்நானம்
கொடுப்பதை அவர்கள் அனுமதிக்கவில்லை.)
[31]“இக்காலத்து மக்களைப் பற்றி நான் என்ன
கூறட்டும்? அவர்களை எதனோடு ஒப்பிடட்டும்?
அவர்கள் எதைப்போன்றவர்கள்? [32]இக்கா
லத்து மக்கள் சந்தையில் அமர்ந்திருக்கும் சிறு
வர்களைப் போன்றவர்கள். ஒரு கூட்டத்தை
சேர்ந்த சிறுவர்கள் பிற சிறுவர்களை
அழைத்து,

‘நாங்கள் உங்களுக்காக இசை இசைத்
தும் நீங்கள் ஆடவில்லை. நாங்கள்
சோகப் பாடல் பாடியும் நீங்கள் துக்கம்
அடையவில்லை’

என்று கூறுவதுபோல் உள்ளனர்.
[33]யோவான் ஸ்நானகன் பிறரைப் போன்று
உண்ணவோ, திராட்சை இரசம் பருகவோ
செய்யவில்லை. நீங்கள், “அவனுக்குள்ளே
பிசாசின் அசுத்த ஆவி இருக்கிறது” என்கிறீர்
கள். [34]மனித குமாரன் பிறரைப் போன்று
உண்பவராகவும், திராட்சை இரசம் பருகுப
வராகவும் வந்தார். நீங்கள், “அவரைப் பாருங்
கள். அவர் தேவைக்கும் மிகுதியாக உண்டு,
மிகுதியாக திராட்சை இரசம் பருகுகிறார்.
அவர் வரி வசூலிப்பவர்களுக்கும் தீயோருக்
கும் நண்பராக இருக்கிறார்” என்கிறீர்கள்.
[35]ஆனால் ஞானமானது அதன் செய்கைகளால்
சரியானதென விளங்கும்” என்றார்.

### பரிசேயனான சீமோன்

[36]பரிசேயர்களில் ஒருவன் தன்னோடு உண்
ணுமாறு இயேசுவை அழைத்தான். இயேசு
பரிசேயனின் வீட்டுக்குள் சென்று மேசையில்
அமர்ந்தார். [37]அப்போது நகரத்தில் பாவியான
பெண் ஒருத்தி இருந்தாள். பரிசேயனின்
வீட்டில் இயேசு உணவு உண்பதை அவள்
அறிந்திருந்தாள். எனவே அலங்கரிக்கப்பட்ட
ஜாடி ஒன்றில் நறுமணத் தைலத்தை அவள்
கொண்டு வந்தாள். [38]அவள் இயேசுவின்
பாதத்தருகே, அழுது கொண்டே நின்றாள்.
அவளது கண்ணீரால் இயேசுவின் பாதங்
களை கழுவ ஆரம்பித்தாள். அவளது தலை
மயிரால் இயேசுவின் பாதங்களைத் துடைத்து
உலரவைத்தாள். அவரது பாதங்களைப் பல
முறை முத்தமிட்டு நறுமண தைலத்தைப்
பாதங்களில் பூசினாள். [39]தனது வீட்டுக்கு
இயேசுவை அழைத்த பரிசேயன் இதைக் கண்
டான். அவன் தனக்குள், “உண்மையாகவே
இயேசு ஒரு தீர்க்கதரிசியாக இருந்தால் தன்
னைத் தொடுகிற பெண் ஒரு பாவி என்பதை
அறிந்திருப்பார்?’’ என்று நினைத்தான்.

[40]இயேசு பரிசேயனை நோக்கி, “சீமோனே!
நான் உனக்குச் சிலவற்றைக் கூறவேண்டும்”
என்றார். சீமோன், “போதகரே, சொல்லுங்கள்,
கேட்டுக்கொண்டிருக்கிறேன்” என்றான்.
[41]இரண்டு மனிதர்கள் வாழ்ந்து வந்தார்கள்.

இருவரும் ஒரே மனிதனிடம் கடன் வாங்கினர். ஒருவன் ஐந்நூறு வெள்ளிப் பணம்* கடன் வாங்கியிருந்தான். மற்றொருவன் ஐம்பது வெள்ளிப்பணம் கடனாக வாங்கியிருந்தான்.
42பணம் இல்லாததால் இருவராலும் கடனை அடைக்க முடியாமல் போயிற்று. கடன் கொடுத்த மனிதன் இருவரிடமும் அவர்களுடைய கடனை தள்ளுபடி செய்துவிட்டதாக கூறினான். இப்போது கடன் பெற்றிருந்த இருவரில் யார் அதிக அளவில் கடன் கொடுத்த மனிதனை நேசிப்பார்கள்? " என்று கேட்டார் இயேசு.

43சீமோன், "அந்த மனிதனிடம் அதிக அளவு பணம் பெற்றிருந்த மனிதனே அதிக நேசம் கொண்டவனாக இருப்பான் என எண்ணுகிறேன்" என்று பதில் கூறினான்.

இயேசு சீமோனை நோக்கி,"நீ கூறியது சரியே" என்றார். 44பின்பு அப்பெண்ணைச் சுட்டிக்காட்டி சீமோனிடம், "இந்த பெண்ணைப் பார்த்தாயா? நான் உன்னுடைய வீட்டுக்கு வந்தபோது என் பாதங்களைக் கழுவுவதற்கு நீ தண்ணீர் தரவில்லை. ஆனால் இவளோ தன் கண்ணீரால் என் பாதங்களைக் கழுவி தன் தலை மயிரால் என் பாதங்களைத் துடைத்து உலர்த்தினாள். 45நீ என்னை முத்தமிடவில்லை. நான் உள்ளே வந்ததிலிருந்து அவள் என் பாதங்களை முத்தமிட்டுக்கொண்டே இருக்கிறாள்.

46நீ என் தலையை எண்ணெயால் தடவவில்லை. ஆனால் அவள் என் பாதங்களை நறுமண தைலத்தால் தடவினாள். 47அவளுடைய கணக்கற்ற பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப்பட்டன என்பதை நான் உனக்குச் சொல்கிறேன். அவள் காட்டிய மிகுந்த அன்பே இதைத் தெளிவாக்குகிறது. மன்னிக்கப்பட வேண்டியதன் தேவையைச் சற்றே உணர்ந்தவன் மன்னிப்படையும்போது சிறிதளவு அன்பையே உணர்வான்" என்றார்.

48பின் இயேசு அவளை நோக்கி, "உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன" என்றார்.

49மேசையைச் சுற்றிலும் உட்கார்ந்திருந்த மனிதர்கள் தமக்குள்ளேயே, "இந்த மனிதன் தன்னை யாரென்று நினைத்துக்கொள்கிறான்? அவன் எப்படிப் பாவங்களை மன்னிக்க முடியும்?" என்று நினைத்துக் கொண்டார்கள்.
50இயேசு அப்பெண்ணை நோக்கி, "நீ விசுவாசித்ததால் பாவங்களினின்று விடுதலையடைந்தாய். நிம்மதியோடு போ" என்றார்.

## இயேசுவின் குழுவினர்

8 மறுநாள் இயேசு சில பெரிய பட்டணங்களுக்கும், சில சிறு நகரங்களுக்கும் பிரயாணம் செய்தார். தேவனின் இராஜ்யத்தைப் பற்றிய நற்செய்தியை இயேசு கூறி மக்களுக்குப் போதித்தார். பன்னிரண்டு சீஷர்களும் அவரோடுகூட இருந்தனர். 2சில பெண்களும் அவரோடுகூட இருந்தனர். இயேசு இந்த பெண்களை நோய்களில் இருந்தும் பிசாசின் அசுத்த ஆவிகளில் இருந்தும் குணமாக்கி இருந்தார். இப்பெண்களுள் ஒருத்தி மரியாள். அவள் மக்தலா என்னும் நகரத்திலிருந்து வந்திருந்தாள். ஏழு அசுத்த ஆவிகள் அவளிடமிருந்து விரட்டப்பட்டிருந்தன. 3இப்பெண்களோடுகூட கூசாவின் (ஏரோதுவின் பொருளாளர்களுள் ஒருவனாக இருந்தவன்) மனைவியாகிய யோவன்னாளும், சூசன்னாளும் வேறுபல பெண்களும் இருந்தனர். இயேசுவுக்கும் அவருடைய சீஷர்களுக்கும் இவர்கள் தங்கள் பணத்தின் மூலம் சேவை செய்தனர்.

## விதைத்தலின் உவமை

*(மத்தேயு 13:1-17; மாற்கு 4:1-12)*

4கூட்டமாகப் பலர் சேர்ந்து வந்தனர். ஒவ்வொரு நகரத்திலிருந்தும் மக்கள் இயேசுவிடம் வந்தனர். இயேசு பின்வரும் உவமையை மக்களுக்குக் கூறினார்:

5"ஒரு உழவன் விதை விதைப்பதற்குச் சென்றான். உழவன் விதைத்துக்கொண்டிருந்த போது, பாதையின் ஓரமாகச் சில விதைகள் விழுந்தன. மக்கள் அவற்றின்மீது நடந்து சென்றனர். பறவைகள் அவற்றைத் தின்றன. 6சில விதைகள் பாறையின்மீது விழுந்தன. அவை முளைக்க ஆரம்பித்தன. நீர் இல்லாததால் மடிந்தன.

7முட்புதர்கள் நடுவே சில விதைகள் விழுந்தன. அவை முளைத்தன. ஆனால் பின்னர், அவை முளைக்காதபடி புதர்கள் தடுத்தன.
8சில விதைகள் நல்ல நிலத்தில் விழுந்தன. அவை முளைத்து நூறுமடங்கு தானியத்தைத் தந்தன."

இயேசு இந்த உவமையைக் கூறி முடித்தார். பின்பு இயேசு, "நான் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருக்கிற மக்களே, கவனியுங்கள்" என்றார்.

9இயேசுவின் சீஷர்கள் அவரை நோக்கி, "இந்த உவமையின் பொருள் என்ன?" என்று கேட்டனர்.

10இயேசு, "தேவனுடைய இராஜ்யத்தைப் பற்றிய இரகசியங்களை அறிந்து கொள்ள நீங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளீர்கள். ஆனால், நான் பிற மக்களோடும் பேசுவதற்கு உவமைகளைப் பயன்படுத்துகிறேன். நான் இவ்வாறு செய்வது ஏனென்றால்:

> 'அவர்கள் பார்ப்பார்கள், ஆனால் எதையும் காணமாட்டார்கள். அவர்கள் கவனிப்பார்கள்: ஆனால் எதையும் புரிந்து கொள்ளமாட்டார்கள்'" என்றார்
>
> *ஏசாயா 6:9*

---

**வெள்ளிப் பணம்** ஒரு வெள்ளிப் பணம் என்பது ரோம காசான தினேரியம் என்று ஒரு நாள் கூலியாக கொடுக்கப்பட்டது.

### உவமையின் விளக்கம்

*(மத்தேயு 13:18-23; மாற்கு 4:13-20)*

11“இந்த உவமை இவ்வாறு பொருள்படு
கிறது: விதை தேவனுடைய வசனமாகும்.
12பாதையோரத்தில் விழுந்த விதை எதைக்
குறிக்கிறது? அது தேவனுடைய போதனை
யைக் கேட்கிற மனிதர்களுக்கு ஒப்பானது.
ஆனால் பிசாசு வந்து அவர்கள் இதயத்தில்
இருந்து அந்த போதனையை எடுத்துப் போ
கிறான். எனவே அந்த மனிதர்கள் போத
னையை நம்பி, இரட்சிப்படைய முடியாது.
13பாறையில் விழுந்த விதை எதைக் குறிக்
கிறது? தேவனுடைய போதனையைக் கேட்டு,
மகிழ்வோடு ஏற்றுக்கொள்கிற மனிதர்களுக்கு
ஒப்பானது. ஆனால், இந்த மனிதர்கள் ஆழமாக
வேர் விடுவதில்லை. கொஞ்சநேரம் நம்பிக்கை
வைப்பர். ஆனால் பின்பு தொல்லைகள் வரும்.
நம்புவதை விடுத்து, தேவனை விட்டு விலகிச்
செல்வர். 14முட்புதர்களின் நடுவில் விழுந்த
விதை எதைக் குறிக்கிறது? அது தேவனு
டைய போதனையைக் கேட்டும், கவலை, செல்
வம், இவ்வாழ்வின் களிப்பு ஆகியவற்றால்
அப்போதனைகளை வளர விடாது தடுக்கப்
பட்டவர்களைக் குறிக்கிறது. எனவே, அவர்
கள் ஒருபோதும் நல்ல பலன் கொடுப்பதில்
லை. 15நல்ல நிலத்தில் விழுந்த விதை எதைக்
குறிக்கிறது? அது தேவனின் போதனைகளை
உண்மையான நல்ல இதயத்தோடு கேட்கின்ற
மக்களை போன்றது. அவர்கள் தேவனுடைய
போதனைகளுக்குக் கீழ்ப்படிந்து பொறுமை
யாக நற்பலனைக் கொடுப்பவர்களாவார்கள்.

### கவனிக்கும் முறை

*(மாற்கு 4:21-25;)*

16“எந்த மனிதனும் விளக்கைக் கொளுத்தி,
ஒரு பாத்திரத்தினால் மூடி, படுக்கையின் கீழே
மறைத்து வைப்பது இல்லை. ஆனால் அம்
மனிதன் விளக்கை அதற்குரிய விளக்குத் தண்
டின்மேல் உள்ளே நுழையும் மக்கள் அனைவ
ருக்கும் ஒளி தரும்படியாக ஏற்றி வைப்பான்.
17மறைக்கப்பட்டவை அனைத்தும் வெளிப்
படும். ஒவ்வொரு இரகசியமும் வெளிப்படை
யாகத் தெரிவிக்கப்படும். 18எவ்வாறு கவனிக்
கிறீர்கள் என்பதில் கவனமாக இருங்கள். புரி
யும் திறன்பெற்ற மனிதன் மிகுதியாக அறிந்து
கொள்வான். புரியும் திறனற்ற மனிதனோ
தனக்கு இருப்பதாக அவன் நினைக்கும், புரி
யும் திறனையும் இழந்து விடுவான்” என்றார்.

### இயேசுவின் குடும்பத்தினர்

*(மத்தேயு 12:46-50; மாற்கு 3:31-35)*

19இயேசுவின் தாயும், சகோதரர்களும்
அவரைக் காண வந்தனர். இயேசுவின் தாயும்
சகோதரரும் இயேசுவை நெருங்கமுடியாதபடி
பல மக்கள் அவரைச் சூழ்ந்திருந்தனர்.

20ஒருவன் இயேசுவிடம், “உங்கள் தாயும்,
சகோதரர்களும் வெளியே நின்று கொண்டிருக்
கின்றனர். அவர்கள் உங்களைக் காண விரும்
புகின்றனர்” என்றான். 21இயேசு அவர்களுக்கு,
“தேவனுடைய போதனையைக் கேட்டு, அதன்
படி கீழ்ப்படிந்து நடக்கிற மக்களே என் தாயும்,
சகோதரர்களும் ஆவார்கள்” என்று பதிலளித்
தார்.

### இயேசுவைப் பின்பற்றினோர் அவரது ஆற்றலைக் காணுதல்

*(மத்தேயு 8:23-27; மாற்கு 4:35-41)*

22ஒரு நாள் இயேசுவும், அவரது சீஷர்களும்
ஒரு படகில் அமர்ந்தனர். இயேசு அவர்களிடம்,
“ஏரியைக் கடந்து அக்கரை செல்ல என்னோடு
வாருங்கள்” என்றார். அவர்கள் அவ்வாறே
செல்ல ஆரம்பித்தனர். 23படகு செல்கையில்
இயேசு தூக்கத்தில் ஆழ்ந்தார். ஏரியின் மீது
ஒரு பெரிய புயல் வீசிற்று. படகுக்குள் நீர்
நிரம்ப ஆரம்பித்தது. அவர்கள் ஆபத்தில்
சிக்கிக் கொண்டனர்.

24இயேசுவின் சீஷர்கள் அவரிடம் சென்று
அவரை எழுப்பினர். அவர்கள், “ஐயா, ஐயா,
நாம் மூழ்கிவிடப் போகிறோம்” என்றனர்.

இயேசு எழுந்தார். அவர் காற்றுக்கும்,
அலைகளுக்கும் கட்டளையிட்டார். உடனே
காற்று ஓய்ந்தது. ஏரி அமைதியுற்றது. 25இயேசு
தன்னோடு இருந்தவர்களை நோக்கி, “உங்கள்
விசுவாசம் எங்கே?” என்றார்.

இயேசுவைப் பின்பற்றி வந்தவர்களோ
அச்சமும் ஆச்சரியமும் கொண்டனர். அவர்கள்
ஒருவருக்கொருவர் “இம்மனிதர் எப்படிப்
பட்டவர்? காற்றுக்கும், நீருக்கும் கட்டளையிட
அவை அவருக்கு கீழ்ப்படிகின்றனவே!”
என்று கூறிக்கொண்டனர்.

### பிசாசு பிடித்த மனிதன்

*(மத்தேயு 8:28-34; மாற்கு 5:1-20)*

26இயேசுவும், அவரைப் பின்பற்றியவர்
களும் கலிலேயாவில் இருந்து ஓர் ஏரியைக்
கடந்து சென்றனர். கதரேனர் மக்கள் வாழ்
கின்ற பகுதியை வந்தடைந்தனர். 27இயேசு
படகில் இருந்து இறங்கியபோது, அந்த நகரத்
தைச் சேர்ந்த ஒரு மனிதன் இயேசுவிடம் வந்
தான். அம்மனிதன் பிசாசுகள் பிடித்தவனாக
இருந்தான். பல காலமாக அவன் ஆடைகள்
எதுவும் அணியவில்லை. வீட்டில் வசிக்காமல்
இறந்தவர்களைப் புதைத்த குகைகளில் வசித்
தான். 28-29பிசாசு அவனை அடிக்கடி ஆக்கிர
மித்தது. அம்மனிதனைச் சிறையில் அடைத்
தனர். அவனது கைகளும், கால்களும் சங்கிலி
களால் கட்டப்பட்டன. ஆனால் அம்மனிதன்
சங்கிலிகளை அறுத்து விலக்கி விடுவான்.
மக்களே இல்லாத இடங்களுக்கு அம்மனிதனை
அவனுக்குள் இருந்த பிசாசு இழுத்துச் சென்
றது. இயேசு அந்த அசுத்த ஆவிக்கு அம்
மனிதனை விட்டு வெளியே வருமாறு கட்ட
ளையிட்டார். அம்மனிதன் இயேசுவுக்கு முன்
பாக விழுந்து வணங்கி, உரத்த குரலில்,

"இயேசுவே, உன்னத தேவனின் குமாரனே! நீர் என்னிடம் எதிர்பார்ப்பதென்ன? தயவு செய்து என்னைக் கொடுமைப்படுத்தாதிரும்" என்றான்.
30இயேசு அவனை நோக்கி, "உன் பெயர் என்ன?" என்று கேட்டார். அம்மனிதன், "லேகியோன்" என்று பதிலளித்தான். (அவன் பல பிசாசுகள் தன்னைப் பிடித்திருந்தமையால் தனது பெயர் "லேகியோன்" என்று குறிப்பிட்டான்)
31நித்தியமான இருளுக்குத் தங்களை அனுப்பாதவாறு பிசாசுகள் இயேசுவை வேண்டிக் கொண்டன.
32அம்மலையின் மீது ஒரு கூட்டமான பன்றிகள் மேய்ந்து கொண்டிருந்தன. பிசாசுகள் அப்பன்றிக் கூட்டத்தில் செல்வதற்குத் தங்களை அனுமதிக்குமாறு இயேசுவை வேண்டின. இயேசு அவ்வாறே செய்ய அனுமதித்தார்.
33பிசாசுகள் அம்மனிதனைவிட்டு வெளியேறி பன்றிகளின் உள்ளே புகுந்தன. பன்றிகள் பாறைகளில் உருண்டு ஏரிக்குள் விழுந்தன. எல்லாப் பன்றிகளும் மூழ்கி மடிந்தன.
34பன்றிகளை மேய்த்துக் கொண்டிருந்த மனிதர்கள் நடந்ததைப் பார்த்து அங்கிருந்து ஓடிப்போனார்கள். அவர்கள் நடந்ததை வயற்புறங்களுக்கும், நகரங்களுக்கும் சென்று மக்களுக்குக் கூறினர்.
35நடந்ததைக் காண விரும்பிய மக்கள் இயேசுவிடம் சென்றனர். அவர்கள் இயேசுவை நெருங்கியபோது இயேசுவின் பாதத்தருகே அம்மனிதன் உட்கார்ந்து இருக்கக் கண்டனர். அம்மனிதன் ஆடைகள் அணிந்தவனாய், மனநலம் பெற்றவனாய் காணப்பட்டான். பிசாசுகள் அவனை விட்டு நீங்கி இருந்தன. அதைக் கண்டு அச்சம் கொண்டனர் மக்கள்.
36நடந்தவற்றைக் கண்ட மக்கள் பிறரிடம் இயேசு அந்த மனிதனைக் குணமாக்கிய வகையைக் கூறினர்.
37இயேசுவை அங்கிருந்து போய்விடுமாறு கெதரேன பகுதி மக்கள் அனைவரும் கூறினர். அவர்கள் மிகவும் பயந்தவர்களாய்க் காணப்பட்டனர். எனவே இயேசு படகில் ஏறி, கலிலேயாவுக்குத் திரும்பிச் சென்றார்.
38இயேசுவால் குணம் பெற்ற மனிதன் தானும் கூடவே வர விரும்புவதாக அவரை வேண்டினான்.
ஆனால் இயேசு அந்த மனிதனிடம்,
39"வீட்டுக்குப் போய் தேவன் உனக்குச் செய்ததைப் பிறருக்குக் கூறு" என்று சொல்லி அவனை அனுப்பிவிட்டார். ஆகவே அவன் இயேசு தனக்குச் செய்ததை நகரமெங்கும் சென்று மக்களுக்குக் கூறினான்.

### இறந்த பெண் உயிரடைதலும் நோயாளி குணப்படுதலும்

(மத்தேயு 9:18-26; மாற்கு 5:21-43)

40இயேசு கலிலேயாவுக்குத் திரும்பிச் சென்றபோது மக்கள் அவரை வரவேற்றனர். ஒவ்வொருவரும் அவருக்காகக் காத்திருந்தனர்.
41யவீரு என்னும் பெயருள்ள மனிதன் இயேசுவிடம் வந்தான். ஜெப ஆலயத்தின் தலைவனாக யவீரு இருந்தான். இயேவின் பாதங்களில் விழுந்து வணங்கி யவீரு தன் வீட்டுக்கு வருகை தருமாறு அவரை வேண்டினான்.
42யவீருக்கு ஒரே ஒரு மகள் இருந்தாள். அவளுக்கு பன்னிரண்டு வயதாகி இருந்தது. அவள் இறக்கும் தருவாயில் இருந்தாள். யவீருவின் வீட்டுக்குப் போய்க்கொண்டிருக்கும் போது எல்லா பக்கங்களிலிருந்தும் இயேசுவை மக்கள் சூழ்ந்து கொண்டனர்.
43இரத்தப் போக்கினால் பன்னிரண்டு ஆண்டுகள் துன்புற்றுக்கொண்டிருந்த ஒரு பெண்ணும் அவர்களுள் ஒருத்தி ஆவாள். மருத்துவர்களிடம் சென்று அவள் தனது பணத்தை எல்லாம் செலவழித்திருந்தாள். ஆனால் எந்த மருத்துவராலும் அவளைக் குணமாக்க இயலவில்லை.
44அப்பெண் இயேசுவுக்குப் பின்னாக வந்து அவரது அங்கியின் கீழ்ப்பகுதியைத் தொட்டாள். அந்நேரமே அவளின் இரத்தப் போக்கு நின்று விட்டது.
45அப்போது இயேசு, "என்னைத் தொட்டது யார்?" என்று கேட்டார். எல்லாருமே தாம் இயேசுவைத் தொடவில்லை என்று கூறினர். பேதுரு, "குருவே! உங்களைச் சுற்றிலும் மக்கள் கூட்டம் நெருக்கித் தள்ளிக் கொண்டிருக்கிறது" என்றான்.
46அதற்கு இயேசு, "யாரோ ஒருவர் என்னைத் தொட்டது உண்மை. என்னிடமிருந்து வல்லமை வெளிப்பட்டதை நான் உணர்ந்தேன்" என்றார்.
47தன்னால் ஒளிக்க முடியாததை உணர்ந்த பெண், நடுங்கியவளாய் இயேசுவின் முன்னே விழுந்து வணங்கினாள். மக்கள் அனைவரும் கேட்கும்படி தான் இயேசுவைத் தொட்டதன் காரணத்தைக் கூறினாள். பின்னர் தான் இயேசுவைத் தொட்டவுடன் குணமடைந்ததையும் சொன்னாள்.
48இயேசு அவளை நோக்கி, "என் மகளே, நீ விசுவாசித்ததால் குணமாக்கப்பட்டாய். சமாதானத்தோடு போ" என்றார்.
49இயேசு இவ்வாறு பேசிக்கொண்டிருக்கையில் ஜெப ஆலயத்தின் தலைவனின் வீட்டிலிருந்து ஒருவன் வந்து, "உங்கள் மகள் இறந்துவிட்டாள். போதகரை மேலும் தொல்லைப்படுத்த வேண்டாம்" என்றான்.
50இயேசு அதைக் கேட்டார். அவர் யவீருவை நோக்கி, "பயப்படாதே, விசுவாசத்துடனிரு, உன் மகள் குணம் பெறுவாள்" என்றார்.
51இயேசு வீட்டை அடைந்தார். பேதுரு யோவான், யாக்கோபு, பெண்ணின் தந்தை, தாய் ஆகியோரை மட்டுமே உள்ளே வர அனுமதித்தார். பிறரை உள்ளே விடவில்லை.
52எல்லா மக்களும் அச்சிறுமி இறந்ததற்காக அழுது கொண்டும், புலம்பிக் கொண்டும் இருந்தனர். ஆனால் இயேசு, "அழாதீர்கள். அவள் இறக்கவில்லை. அவள் உறங்கிக் கொண்டிருக்கிறாள்" என்றார்.

*53அச்சிறுமி இறந்தாள் என அறிந்திருந்த தால் மக்கள் இயேசுவைப் பார்த்துச் சிரித் தனர். 54ஆனால் இயேசு அவளது கையைப் பிடித்து, "சிறுமியே, எழுந்து நில்" என்றார். 55அவள் ஆவி அவளுக்குள் திரும்ப வந்தது. அவள் உடனே எழுந்து நின்றாள். இயேசு, "அவளுக்கு ஏதாவது சாப்பிடக் கொடுங்கள்" என்றார். 56சிறுமியின் பெற்றோர் ஆச்சரியம் அடைந்தனர். நடந்ததைப் பிறருக்குக் கூறாமல் இருக்கும்படியாக இயேசு அவர்களுக்குக் கூறி னார்.*

### சீஷர்கள் அனுப்பப்படுதல்

*(மத்தேயு 10:5-15; மாற்கு 6:7-13)*

*9 பன்னிரண்டு சீஷர்களையும் இயேசு ஒருங்கே வருமாறு அழைத்தார். நோய் களைக் குணமாக்கும் வல்லமையையும், பிசாசுகளை விரட்டும் அதிகாரத்தையும் அவர் களுக்கு அளித்தார். 2தேவனுடைய இராஜ்யத் தைப்பற்றி மக்களுக்கு எடுத்துச் சொல்லவும், நோயுற்றோரைக் குணமாக்கவும் இயேசு சீஷர்களை அனுப்பினார். 3அவர் சீஷர்களை நோக்கி, "நீங்கள் பயணம் செய்யும்போது கைத்தடியை எடுக்காதீர்கள். பையையோ, உணவையோ, பணத்தையோ எடுத்துச் செல் லாதீர்கள். நீங்கள் அணிந்திருக்கும் ஆடை களை மட்டும் எடுத்துக் கொள்ளுங்கள். 4ஒரு வீட்டினுள் நுழைந்தால், புறப்படும் நாள் வரைக்கும் அங்கேயே தங்கி இருங்கள். 5ஏதா வது நகரத்து மக்கள் உங்களை வரவேற் காவிடில், அந்த நகரத்திற்கு வெளியே போய் உங்கள் பாதத்தில்பட்ட தூசிகளை உதறிவிடுங் கள். இது அவர்களுக்கு எச்சரிக்கையாய் இருக்கும்" என்றார்.*

*6பின்பு சீஷர்கள் அங்கிருந்துச் சென்றனர். பல நகரங்கள் வழியாக பயணம் செய்தனர். எல்லா இடங்களிலும் நற்செய்தியைக் கூறி மக்களைக் குணப்படுத்தினர்.*

### ஏரோதுவின் குழப்பம்

*(மத்தேயு 14:1-12; மாற்கு 6:14-29)*

*7இவ்வாறு நடந்து கொண்டிருந்த எல்லாச் செய்திகளையும் அரசனாகிய ஏரோது கேள் விப்பட்டான். சிலர் "யோவான் ஸ்நானகன் இறந்த பின்பு மீண்டும் உயிர்த்தெழுந்துள் ளான்" எனவும், 8வேறு சிலர், "எலியா மீண்டும் வந்துள்ளான்" எனவும் வேறு சிலர், "பல்லாண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த தீர்க்க தரிசிகளுள் ஒருவர் உயிரோடு எழுந்துள்ளார்" எனவும் கூறியதால் அவன் குழப்பமடைந் திருந்தான். 9ஏரோது, "யோவானின் தலையை வெட்டினேன். நான் கேள்விப்படும் இக்காரி யங்களைச் செய்கின்ற மனிதன் யார்?" என்று சொன்னான். ஏரோதும் இயேசுவைப் பார்க்க தொடர்ந்து முயன்று வந்தான்.*

### 5000 க்கு மேற்பட்ட மக்களுக்கு இயேசு உணவளித்தல்

*(மத்தேயு 14:13-21; மாற்கு 6:30-44; யோவான் 6:1-14)*

*10சீஷர்கள் திரும்பி வந்ததும் தம் பயணத் தின்போது அவர்கள் செய்த செயல்கள் அனைத்தையும் இயேசுவிடம் சொன்னார்கள். பின்னர், இயேசு அவர்களை பெத்சாயிதா என்னும் நகரத்திற்கு அழைத்துச் சென்றார். அங்கு இயேசுவும் சீஷர்களும் தனிமையில் ஒருமித்திருக்க முடிந்தது. 11ஆனால் இயேசு சென்ற இடத்தை மக்கள் அறியநேர்ந்தது. அவர் கள் அவரைப் பின்பற்றி வந்தனர். இயேசு அவர்களை வரவேற்று தேவனுடைய இராஜ் யத்தைக் குறித்து அவர்களுக்குக் கூறினார். நோயுற்றிருந்த மக்களைக் குணப்படுத்தினார்.*

*12மதியத்திற்குப் பின்பு பன்னிரண்டு சீஷர் களும் இயேசுவிடம் வந்து, "இது மக்கள் வசிக் கிற இடம் அல்ல. மக்களை அனுப்பிவிடுங்கள். அவர்கள் உணவைத் தேடவும், இரவைக் கழிப் பதற்காக அக்கம் பக்கத்து நகரங்களிலும், பண்ணைகளிலும் இடம் தேடவும் வேண்டும்" என்றார்கள்.*

*13ஆனால் இயேசு சீஷர்களை நோக்கி, "அவர்கள் உண்ணும்படியாக எதையாவது நீங்கள் கொடுங்கள்" என்றார். சீஷர்கள் "எங் களிடம் ஐந்து அப்பங்களும் இரண்டு மீன் களும் மட்டுமே உள்ளன. இங்கிருக்கும் எல்லா மக்களுக்கும் நாங்கள் உணவு வாங்கி வர முடியுமா?" என்று கேட்டனர். 14(அங்கு ஏறக் குறைய ஐயாயிரம் ஆண்கள் இருந்தனர்.)*

*இயேசு தன் சீஷர்களிடம், "மக்களிடம் ஐம்பது பேர்கள்கொண்ட குழுக்களாக அமரும் படி கூறுங்கள்" என்றார்.*

*15சீஷர்களும் அவ்வாறே கூற எல்லா மக் களும் அதன்படியே அமர்ந்தனர். 16அப்போது இயேசு ஐந்து அப்பங்களையும் இரண்டு மீன் களையும் எடுத்தார். இயேசு வானத்தை அண்ணாந்து பார்த்து அந்த உணவுக்காக தேவனுக்கு நன்றி கூறினார். பின்னர் இயேசு உணவைப் பகிர்ந்து தன் சீஷர்களிடம் கொ டுத்து, அவ்வுணவை மக்களுக்குக் கொடுக் குமாறு கூறினார். 17எல்லா மக்களும் திருப் தியாக உண்டனர். நிரம்ப உணவும் எஞ்சியது. சாப்பிடாது எஞ்சியதை பன்னிரண்டு கூடை களில் நிரப்பினர்.*

### இயேசுவே கிறிஸ்து

*(மத்தேயு 16:13-19; மாற்கு 8:27-29)*

*18ஒருமுறை இயேசு தனிமையாக பிரார்த் தனை செய்து கொண்டிருந்தார். அவரது சீஷர் கள் அனைவரும் அங்கே வந்தனர். இயேசு அவர்களிடம், "மக்கள் என்னை யார் என்று பேசிக் கொள்கிறார்கள்" எனக் கேட்டார்.*

*19சீஷர்கள், "சிலர் யோவான் ஸ்நானகன் எனக் கூறுகின்றனர். பிறர் எலியா என்கி றார்கள். மற்றும் சிலர் நீங்கள் பல்லாண்டுக*

ளுக்கு முன்பு வாழ்ந்து மறைந்து உயிரோடு
எழுந்துள்ள ஒரு தீர்க்கதரிசி என்று சொல்கின்
றனர்" என பதில் கூறினர்.
20அப்போது இயேசு அவரது சீஷர்களை
நோக்கி "நீங்கள் என்னை யார் என நினைக்
கிறீர்கள்?" என்று கேட்டார். பேதுரு, "நீர்
தேவனிடமிருந்து வந்த கிறிஸ்து" என்று
பதிலளித்தான்
21பிறருக்கு இதனைச் சொல்லாதபடிக்கு
இயேசு அவர்களை எச்சரித்தார். பின்பு
இயேசு, 22"மனித குமாரன் பல விஷயங்களில்
துன்புறவேண்டும். மூத்த யூதத் தலைவர்களும்,
முக்கியமான போதகர்களும், வேதபாரகரும்
அவரை நிராகரிப்பர். மனித குமாரன் கொல்
லப்படுவார். ஆனால் மூன்று நாட்களுக்குப்
பின்னர் மரணத்தினின்று உயிர்த்தெழுவார்"
என்றார்.
23தொடர்ந்து அவர்களிடம் இயேசு, "என்
னைப் பின்பற்றிவர யாரேனும் விரும்பினால்,
அவன் தனக்கு விருப்பமான செயல்களுக்கு
மறுப்புச் சொல்ல வேண்டும். ஒவ்வொரு
நாளும் துயரங்களை ஏற்றுக்கொண்டு என்
னைப் பின்பற்ற வேண்டும். 24தனது உயிரைக்
காப்பாற்ற விரும்பும் மனிதன் அதை இழந்து
போவான். தனது உயிரை எனக்காக கொடுக்
கிற ஒவ்வொரு மனிதனும் அதைக் காப்பாற்
றிக்கொள்வான். 25ஒருவன் அழிந்துபோன
நிலையில் இருந்தால் உலகம் முழுவதும்
அவனுடையதாக இருந்தாலும் அதனால்
எந்தப் பயனுமில்லை. 26ஒருவன் என்னைக்
குறித்தோ, அல்லது என் போதனையைக்
குறித்தோ வெட்கப்பட்டால், நான் எனது மகி
மையோடும், பிதாவின் மகிமையோடும், தேவ
தூதர்களின் மகிமையோடும் வருகை தரும்
போது அவனைக் குறித்து வெட்கப்படுவேன்.
27உங்களுக்கு நான் உண்மையைச் சொல்கின்
றேன். இங்கு நிற்பவர்களில் சிலர் தாம் மரண
மடைவதற்கு முன் தேவனுடைய இராஜ்யத்
தைக் காண்பார்கள்" என்றார்.

### மோசே, எலியாவுடன், இயேசு

(மத்தேயு 17:1-8; மாற்கு 9:2-8)

28இச்செய்திகளை இயேசு கூறினதற்கு எட்டு
நாட்களுக்குப் பின்னர், அவர் பேதுரு, யாக்
கோபு, யோவான் ஆகியோரை அழைத்துக்
கொண்டு பிரார்த்தனை செய்வதற்காக ஒரு
மலையின்மீது ஏறினார்.
29இயேசு பிரார்த்தனை செய்துக்கொண்டி
ருந்தபோது அவரது முகம் மாற்றமடைந்தது.
அவரது ஆடைகள் ஒளி விடும் வெண்மையாக
மாறின. 30பின்னர் இரண்டு மனிதர்கள் இயேசு
வோடு பேசிக் கொண்டிருந்தனர். அவர்கள்
மோசேயும், எலியாவும் ஆவர். 31மோசேயும்
எலியாவும் கூட ஒளி பொருந்தியோராய்
காணப்பட்டனர். எருசலேமில் நிகழவிருக்கும்
இயேசுவின் மரணத்தைக் குறித்து அவர்கள்
பேசிக் கொண்டிருந்தனர். 32பேதுருவும் மற்ற
வர்களும் உறங்கிக்கொண்டிருந்தனர். ஆனால்,
அவர்கள் விழித்து இயேசுவின் மகிமையைக்
கண்டனர். இயேசுவோடு கூட நின்று கொண்
டிருந்த அந்த இரண்டு மனிதர்களையும் அவர்
கள் பார்த்தனர். 33மோசேயும், எலியாவும்
பிரிந்து செல்லும்போது பேதுரு, 'குருவே,
நாம் இங்கிருப்பது நல்லது. நாங்கள் இங்கு
மூன்று கூடாரங்களை, ஒன்று உமக்காகவும்
ஒன்று மோசேக்காகவும், ஒன்று எலியாவுக்
காகவும், அமைப்போம்" என்று கூறினான்.
(பேதுரு தான் சொல்லிக்கொண்டிருப்பதைப்
புரிந்து கொண்டிருக்கவில்லை) 34இவ்வாறு
பேதுரு சொல்லிக்கொண்டிருக்கும்போது ஒரு
மேகம் அவர்களைச் சூழ்ந்தது. மேகம் சூழ்ந்த
தும் பேதுரு, யாக்கோபு, யோவான், ஆகி
யோர் பயந்தனர். 35மேகத்தினின்று ஒரு
அசரீரி "இவர் எனது மகன். நான் தேர்ந்து
கொண்டவர் இவரே, இவருக்குக் கீழ்ப்படியுங்
கள்" என்றது. 36அசரீரி முடிந்ததும் இயேசு
மட்டுமே அங்கிருந்தார். பேதுரு, யாக்கோபு,
யோவான் ஆகியோர் எதுவும் பேசவில்லை.
அவர்கள் பார்த்தவற்றைக் குறித்து ஒருவருக்
கும் தெரிவிக்கவில்லை.

### சிறுவன் குணமாக்கப்படுதல்

(மத்தேயு 17:14-18; மாற்கு 9:14-27)

37மறுநாள் மலையிலிருந்து இயேசு,
பேதுரு, யாக்கோபு, யோவான் ஆகியோர்
இறங்கி வந்தனர். 38ஒரு பெரிய கூட்டம்
இயேசுவை சந்தித்தது. அக்கூட்டத்தில் ஒருவன்
இயேசுவை நோக்கி, "போதகரே! தயவுசெய்து
வந்து என் மகனைப் பாருங்கள். அவன்
எனக்கு ஒரே மகன். 39பிசாசிடம் இருந்து
ஒரு அசுத்த ஆவி என் மகனைப் பற்றிக்
கொள்ளும்போது அவன் கத்துகிறான். அவன்
தனது நிலையை இழக்கும் போது வாயிலி
ருந்து நுரை தள்ளுகிறது. அசுத்த ஆவி அவ
னைக் காயப்படுத்தி, அவனை எப்போதும்
விடாமல் துன்புறுத்துகிறது. 40உங்கள் சீஷர்
களிடம் என் மகனை விட்டு அந்த அசுத்த
ஆவி நீங்குமாறு செய்யக் கெஞ்சினேன்.
அவர்களால் அதைச் செய்ய முடியவில்லை"
என்று உரக்கக் கூறினான்.
41இயேசு, "இப்போது வாழும் மக்களாகிய
உங்களுக்கு விசுவாசமில்லை. உங்கள் வாழ்க்
கை தவறானதாகக் காணப்படுகிறது. எத்
தனை காலம் நான் உங்களோடு தங்கியும்,
உங்களைப் பொறுத்துக்கொண்டும் இருக்கட்
டும்?" என்று பதிலளித்தார். பின்பு அம்
மனிதனை நோக்கி, "உனது மகனை இங்கே
கொண்டு வா" என்றார். 42அந்தப் பையன்
வந்து கொண்டிருக்கும் போது அசுத்த ஆவி
அவனைக் கீழே தள்ளிற்று. அந்தப் பையன்
தனது நிலையையிழந்து நடுங்கிக் கொண்டி
ருந்தான். ஆனால் இயேசு அந்த அசுத்த ஆவி
அவனைவிட்டு வெளியேற கண்டிப்புடன்
கட்டளையிட்டார். அப்பையன் நலம் பெற்றான்.

இயேசு பையனைத் தந்தையிடம் ஒப்படைத்
தார். 43தேவனின் மகத்துவத்தையும் பெருமை
யையும் கண்டு எல்லா மக்களும் ஆச்சரியம்
அடைந்தார்கள்.

### தன் மரணத்தைப் பற்றிப் பேசுதல்

*(மத்தேயு 17:22-23; மாற்கு 9:30-32)*

இயேசு செய்த எல்லா செயல்களையும்
கண்டு இன்னும் மக்கள் மிகுந்த ஆச்சரியமுற்
றனர். இயேசு தம்மைப் பின்பற்றுபவர்களை
நோக்கி, 44"நான் உங்களுக்கு இப்போது கூறப்
போகிற செய்திகளை மறவாதீர்கள். மனித
குமாரன் சில மனிதர்களின் கட்டுப்பாட்டுக்குள்
கொடுக்கப்படுவார்" என்றார். 45ஆனால் அவர்
களோ அவர் கூறியதன் பொருளை உணர்ந்து
கொள்ளவில்லை. அவர்கள் புரிந்து கொள்
ளாதபடி அதன் பொருள் அவர்களுக்கு மறை
முகமானதாய் இருந்தது. அவர்களோ இயேசு
கூறியதன் பொருளைக் கேட்டுத் தெரிந்து
கொள்ளப் பயந்தார்கள்.

### முக்கியமானவர் யார்?

*(மத்தேயு 18:1-5; மாற்கு 9:33-37)*

46இயேசுவின் சீஷர்கள் தமக்குள் மிகவும்
முக்கியமானவர் யார் என்பதைக் குறித்து
விவாதிக்கத் தொடங்கினார்கள். 47அவர்கள்
என்ன எண்ணிக்கொண்டிருந்தார்கள் என்
பதை இயேசு அறிந்திருந்தார். எனவே இயேசு
ஒரு சிறிய குழந்தையை எடுத்துத் தன்னருகே,
அதனை நிறுத்தினார். 48பின்பு தனது சீஷர்
களை நோக்கி, "என் பெயரினால் ஒருவன்
ஒரு சிறிய குழந்தையை இதுபோல ஏற்றுக்
கொண்டால் அவன் என்னையும் ஏற்றுக்
கொள்கிறான். என்னை ஏற்றுக்கொள்ளும்
போது அம்மனிதன் எனனை அனுப்பியவரை
(தேவனையும்) ஏற்றுக் கொள்கிறான். உங்
களில் மிகவும் தாழ்மையுள்ள மனிதன் எவ
னோ, அவனே மிகவும் முக்கியமான மனிதன்
ஆவான்" என்றார்.

### இயேசுவைச் சேர்ந்தவன் யார்?

*(மாற்கு 9:38-40)*

49"குருவே, மனிதர்களை விட்டு வெளியே
றும்படியாக உம்முடைய பெயரினால் ஒரு
மனிதன் பிசாசுகளை வற்புறுத்திக் கொண்
டிருந்தான். அவன் நம் கூட்டத்தைச் சாராதவ
னாகையால் அவன் அதைச் செய்யாதபடி
நிறுத்த நாங்கள் கூறினோம்" என்றான்
யோவான்.

50இயேசு யோவானை நோக்கி, "அவனைத்
தடுக்காதீர்கள். ஒரு மனிதன் உங்களுக்கு எதி
ராக இல்லையென்றால் அவன் உங்களைச்
சார்ந்தவன்" என்றார்.

### ஒரு சமாரிய நகரம்

51இயேசு உலகை விட்டு பரலோகத்திற்குச்
செல்லும் காலம் நெருங்கிக்கொண்டிருந்தது.
அவர் எருசலேமுக்கு போக முடிவெடுத்தார்.
52இயேசு சில மனிதர்களை அவருக்கு முன்
பாக அனுப்பினார். இயேசுவுக்கு எல்லாவற்
றையும் ஆயத்தம் செய்வதற்காக அம்மனிதர்
கள் சமாரியாவிலுள்ள ஒரு நகரை அடைந்
தனர்.

53இயேசு எருசலேமுக்குச் செல்ல விரும்
பியதால் அந்நகரத்து மக்கள் இயேசுவை
வரவேற்க விரும்பவில்லை. 54இயேசுவின்
சீஷராகிய யாக்கோபும், யோவானும் இதைக்
கண்டார்கள். அவர்கள், "ஆண்டவரே,* வானி
லிருந்து நெருப்பு வரவழைத்து, அம்மக்களை
நாங்கள் அழிப்பதை விரும்புகிறீர்களா?"
என்று கேட்டனர்.

55ஆனால் இயேசு திரும்பி அவர்களைக்
கண்டித்தார்.* 56பின்பு இயேசுவும், அவரது
சீஷர்களும் மற்றொரு நகரத்துக்குச் சென்றனர்.

### இயேசுவைப் பின்பற்றுதல்

*(மத்தேயு 8:19-22)*

57அவர்கள் எல்லாரும் பாதை வழியாகப்
பயணம் செய்து கொண்டிருந்தனர். ஒருவன்
இயேசுவை நோக்கி, "எந்த இடத்துக்கு நீங்கள்
சென்றாலும் நான் உங்களைப் பின்பற்றி வரு
வேன்" என்றான்.

58இயேசு பதிலாக, "நரிகள் வசிப்பதற்குக்
குழிகள் உண்டு. பறவைகள் வசிப்பதற்குக்
கூடுகள் உண்டு. ஆனால் மனித குமாரன்
தனது தலையைச் சாய்ப்பதற்குக்கூட எந்த
இடமும் இல்லை" என்று கூறினார். 59இயேசு
இன்னொரு மனிதனை நோக்கி, "என்னைப்
பின்பற்றி வா" என்றார்.

ஆனால் அம்மனிதன், "ஆண்டவரே, நான்
போய் முதலில் எனது தந்தையை அடக்கம்
செய்த பின்னர் வருவேன்" என்றான்.

60ஆனால் இயேசு அவனை நோக்கி, "மரித்த
மக்கள் அவர்களுக்குச் சொந்தமான மரித்தோ
ரைப் புதைக்கட்டும். நீ போய் தேவனின்
இராஜ்யத்தைப் பற்றிக் கூற வேண்டும்" என்
றார்.

61மற்றொரு மனிதன், "ஆண்டவரே, நான்
உம்மை பின்பற்றுவேன். ஆனால் நான் போய்
முதலில் என் குடும்பத்தாரிடம் விடைபெற்று
வருவேன்" என்றான்.

62இயேசு, "ஒருவன் வயலை உழ ஆரம்பித்
துப் பின்னோக்கி பார்த்தால் அவன் தேவ
னின் இராஜ்யத்துக்குத் தன்னை ஆயத்தப்படுத்
தாதவன் ஆவான்" என்றார்.

---

**வாக்கியம் 54** சில கிரேக்க பிரதிகளில் சேர்க்கப்பட்டுள்ளது: "எலியா செய்தது போல்."

**வாக்கியம் 55** சில கிரேக்க பிரதிகளில் சேர்க்கப்பட்டுள்ளது: "அதற்கு இயேசு, நீங்கள் எப்படிப்பட்ட ஆவியை பெற்றீர்கள் என்று உங்களுக்கு தெரியவில்லை. மனிதகுமாரன் மனிதர்களின் ஆத்துமாவை அழிப்பதற்கல்ல, அவற்றைக் காப்பாற்றுவதற்கே வந்துள்ளார்."

### எழுபத்திரண்டு பேரை அனுப்புதல்

10 இதன் பின்பு இயேசு கூடுதலாக
எழுபத்திரண்டு* மனிதர்களைத் தேர்ந்
தெடுத்தார். இரண்டு இரண்டு பேராக இயேசு
அவர்களை அனுப்பினார். தான் போக
விரும்பிய ஒவ்வொரு நகருக்கும், இடத்துக்கும்
தனக்கு முன்பாக அவர்களை அனுப்பினார்.
2இயேசு அவர்களுக்கு, "அறுவடைக்கு மிக
அதிகமான மனிதர்கள் இருக்கிறார்கள். அறு
வடை செய்வதற்கு உதவியாக மிகக் குறை
வான வேலையாட்களே உள்ளனர். தேவன்
அறுவடைக்கு (மக்களுக்கு) எஜமானர். அறு
வடை செய்வதற்கு ஏற்ற அதிகமான வேலைக்
காரர்களை அனுப்பும்படியாக தேவனிடம்
பிரார்த்தனை செய்யுங்கள். 3நீங்கள் இப்போது
போகலாம். ஆனால் கேளுங்கள். நான் உங்
களை அனுப்புகிறேன். நீங்கள் ஓநாய்களுக்கு
நடுவில் சிக்கிய ஆடுகளைப்போல் காணப்
படுவீர்கள். 4பணப்பையையோ, பையையோ,
காலணிகளையோ எடுத்துச் செல்லாதீர்கள்.
வழியிலே மக்களோடு பேசுவதற்காக நிற்காதீர்
கள். 5ஒரு வீட்டினுள் நுழையும் முன்பே, "இவ்
வீட்டில் அமைதி நிலவட்டும்" என்று வாழ்த்
துங்கள். 6அமைதிக்கு தகுதியுள்ள மனிதன்
அங்கு வாழ்ந்தால், உங்கள் சமாதானத்தின்
ஆசி அவனோடு தங்கட்டும். அமைதிக்கு தகு
தியற்ற மனிதன் அங்கிருந்தால், உங்கள்
சமாதானத்தின் ஆசி உங்களுக்கே திரும்
பட்டும். 7அமைதியான வீட்டில் தங்குங்கள்.
அவ்வீட்டிலுள்ள மக்கள் தரும் உணவை
உண்டு, பானத்தைப் பருகுங்கள். ஒரு வே
லைக்காரனுக்குச் சம்பளம் தரப்பட வேண்டும்.
இன்னொரு வீட்டில் தங்கும் பொருட்டு அந்த
வீட்டை விட்டுச் செல்லாதீர்கள். 8ஒரு நகரத்தில்
நுழையும்போது அங்குள்ள மக்கள் உங்களை
வரவேற்றால் அவர்கள் உங்கள் முன்வைக்கும்
உணவை சாப்பிடுங்கள். 9அங்கு வாழும் நோ
யுற்ற மக்களைக் குணப்படுத்துங்கள். பின்னர்,
'தேவனின் இராஜ்யம் உங்களிடம் வந்து
கொண்டிருக்கிறது' எனக் கூறுங்கள். 10ஒரு
நகரத்துக்குப் போகும்போது அங்குள்ள மக்கள்
உங்களை வரவேற்காவிட்டால், அந்நகரத்தில்
உள்ள தெருக்களுக்குச் சென்று, 11"எங்கள்
கால்களில் பட்டிருக்கும் உங்கள் நகரத்தின்
தூசியைக் கூட உங்களுக்கு எதிராகத் தட்டி
விடுகிறோம். ஆனால் தேவனின் இராஜ்யம்
சீக்கிரமாக வந்து கொண்டிருக்கிறது என்
பதை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள்"
என்று கூறுங்கள். 12நியாயம் தீர்க்கிற நாளில்
அந்நகரத்து மக்களுக்குக் கிடைக்கும் தீர்ப்பு,
சோதோம் நாட்டு மக்களுக்குக் கிடைத்ததை
விடக் கொடுமையானதாக இருக்கும் என்பதை
நான் உங்களுக்குச் சொல்கிறேன்" என்றார்.

### விசுவாசமற்றோருக்கு எச்சரிப்பு

*(மத்தேயு 11:20-24)*

13"கோராசீனே!* உனக்குக் கேடு வரும்.
பெத்சாயிதாவே! உனக்குக் கேடு உண்டாகும்.
உங்களுக்கு அநேக அற்புதங்களைச் செய்
தேன். தீருவிலும், சீதோனிலும்* அதே அற்பு
தங்களைச் செய்திருந்தால் பல ஆண்டுகளுக்கு
முன்னரே அப்பட்டணங்களின் மக்கள் தங்கள்
வாழ்வை மாற்றி, பாவம் செய்வதை விட்டு
விட்டிருப்பார்கள். துயரத்தின் ஆடையை
உடுத்திக்கொண்டு, சாம்பலைத் தங்கள் மேல்
தூவிக்கொண்டு, தங்கள் பாவங்களுக்காக
வருந்துவதைக் காண்பித்து இருப்பார்கள்.
14நியாயம் தீர்க்கிற நாளில் தீரு, சீதோன்
ஆகிய இடங்களைக் காட்டிலும் உங்கள் நிலை
மோசமாய் இருக்கும். 15கப்பர்நகூம் நகரமே,
நீ பரலோகத்திற்கு நேராக எழுப்பப்படுவாயா?
இல்லை, மரணத்துக்குரிய இடத்திற்கு நேராக
நீ வீசி எறியப்படுவாய்.

16"ஒருவன் நீங்கள் கூறுவதைக் கேட்கும்
போது அவன் உண்மையாகவே எனக்குச்
செவிசாய்க்கிறான். ஆனால் ஒருவன் என்னை
ஏற்றுக்கொள்ள மறுத்தால் அவன் என்னை
அனுப்பியவராகிய தேவனை ஏற்க மறுக்
கிறான்" என்றார்.

### சாத்தான் விழுதல்

17எழுபத்திரண்டு மனிதர்களும் தங்கள்
பயணத்தை முடித்துத் திரும்பியபோது மிக்க
மகிழ்வோடு காணப்பட்டார்கள். அவர்கள்,
"ஆண்டவரே, உங்கள் பெயரைக் கூறியபோது
பிசாசுகள் கூட எங்களுக்குக் கீழ்ப்படிந்தன"
என்றார்கள். 18அம்மனிதர்களை நோக்கி
இயேசு, "வானிலிருந்து மின்னலைப் போன்று
சாத்தான் வீழ்வதை நான் கண்டேன். 19கேளுங்
கள். பாம்புகளையும், தேள்களையும் மிதிக்கிற
வல்லமையை நான் உங்களுக்குக் கொடுத்
தேன். பகைவனின் (பிசாசின்) வல்லமையைக்
காட்டிலும் மிகுந்த வல்லமை உங்களுக்குக்
கொடுத்தேன். உங்களை எதுவும் காயப்படுத்
துவதில்லை. 20ஆம், ஆவிகள் உங்களுக்குக்
கீழ்ப்படிகின்றன. மகிழ்ச்சியாக இருங்கள்.
ஏன், உங்களுக்கு இந்த வல்லமை இருப்பதால்
அல்ல, உங்கள் பெயர்கள் பரலோகத்தில்
எழுதப்பட்டிருப்பதால் சந்தோஷப்படுங்கள்"
என்று கூறினார்.

### இயேசுவின் பிரார்த்தனை

*(மத்தேயு 11:25-27; 13:16-17)*

21அப்போது பரிசுத்த ஆவியானவர் இயே
சுவை மிகுந்த மகிழ்ச்சிக்கு உள்ளாக்கினார்.

---

**எழுபத்திரண்டு** லூக்கா சுவிசேஷத்தின் சில கிரேக்க பிரதிகளில் எழுபது என்று எழுதப் பட்டிருக்கிறது.

**கோராசீன் பெத்சாயிதா** கலிலேயா ஏரியின் அருகில் உள்ள நகரங்கள். இங்கே இயேசு மக்களுக்குப் பிரசங்கம் செய்தார்.

**தீருவிலும் சீதோனிலும்** மிகவும் தீய மனிதர்கள் வாழ்ந்த நகரங்கள்.

இயேசு: "பிதாவே, வானத்துக்கும் பூமிக்கும் ஆண்டவரே! உங்களுக்கு நன்றி. ஞானிகளிட மிருந்தும், அறிவுமிக்கவர்களிடமிருந்தும் இக் காரியங்களை நீங்கள் மறைத்ததால் உங்களை வாழ்த்துகிறேன். ஆனால் சிறு குழந்தை களைப் போன்ற மக்களுக்கு இச்செயல்களை நீர் காட்டியுள்ளீர். ஆம், பிதாவே, நீர் உண் மையாகவே இதைச் செய்ய விரும்பியதால் இதனைச் செய்துள்ளீர்கள்.

22"எனக்கு எல்லாவற்றையும் என் பிதா தந்துள்ளார். மகன் யார் என்பது பிதாவைத் தவிர வேறு எவருக்கும் தெரியாது. பிதா யார் என்பதை மகன் மட்டுமே அறிவார். மகன் அதனைத் தெரிவிக்கும்பொருட்டு தேர்ந் தெடுக்கும் மக்கள் மட்டுமே தந்தையைப் பற்றி அறிந்து கொள்வார்கள்" என்றார்.

23பின் இயேசு சீஷர்களை நோக்கித் திரும் பினார். அவர்கள் அவரோடு தனித்திருந் தார்கள். இயேசு, "நீங்கள் இப்போது பார்க்கிற செயல்களைக் காணும்படியாக ஆசீர்வதிக்கப் பட்டுள்ளீர்கள். 24நீங்கள் இப்போது பார்க்கிற காரியங்களைக் காணவேண்டுமென்று பல தீர்க்கதரிசிகளும், மன்னர்களும் விரும்பினார் கள் என்பதை நான் உங்களுக்குச் சொல் கிறேன். ஆனால் அவர்கள் இக்காரியங்களைப் பார்க்கவில்லை. நீங்கள் இப்போது கேட்கிற செய்திகளைக் கேட்கவேண்டுமென்று பல தீர்க்கதரிசிகளும், அரசர்களும் விரும்பினார் கள். ஆனால் அவர்கள் இச்செய்திகளைக் கேட் கவில்லை" என்றார்.

### நல்ல சமாரியன்

25நியாயசாஸ்திரி ஒருவன் எழுந்து நின் றான். அவன் இயேசுவைச் சோதிக்க முயன்று கொண்டிருந்தான். அவன், "போதகரே, நித்திய மான வாழ்வு பெற நான் என்ன செய்யவேண் டும்?" என்று கேட்டான்.

26அவனை நோக்கி இயேசு, "சட்டத்தில் என்ன எழுதப்பட்டுள்ளது? அங்கு எதை நீ வாசிக்கிறாய்?" என்றார்.

27அம்மனிதன், "உனது தேவனாகிய கர்த் தரை நேசிப்பாயாக. உன் முழு நெஞ்சத்தோ டும், உன் முழு ஆத்துமாவோடும், உன் முழு வல்லமையோடும் உன் முழு மனதோடும் அவ ரை நேசிக்கவேண்டும்"* என்றும், மேலும், "நீ உன்னை நேசிப்பதுபோலவே பிறரிடமும், அன்பு காட்டவேண்டும்"* என்றும் எழுதப்பட் டுள்ளது என பதிலுரைத்தான்.

28இயேசு அவனை நோக்கி, "உன் பதில் சரியானது. இதைச் செய்தால் நித்திய வாழ்வை பெறுவாய்" என்றார்.

29அம்மனிதன் தான் வாழ்ந்து வரும் முறையே சரியானது என நிரூபிக்க விரும் பினான். எனவே அவன் இயேசுவிடம், "நான் நேசிக்க வேண்டிய பிறமக்கள் யார்?" என்று கேட்டான்.

30அக்கேள்விக்குப் பதிலாக இயேசு: "ஒரு மனிதன் எருசலேமில் இருந்து எரிகோ விற்குப் பாதை வழியாய்ப் பயணம் செய்து கொண்டிருந்தான். சில திருடர்கள் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர்கள் அவனது ஆடையைக் கிழித்து அவனை அடித்தார்கள். அம்மனிதனைத் தரையில் வீழ்த்திவிட்டு அத் திருடர்கள் அங்கிருந்து சென்றார்கள். அவன் இறக்கும் தருவாயில் கிடந்தான். 31ஒரு யூத ஆசாரியன் அவ்வழியாகச் சென்று கொண் டிருந்தான். அவன் அம்மனிதனைக் கண்ட போதும் அவனுக்கு உதவும் பொருட்டு நிற்க வில்லை. அங்கிருந்து போய்விட்டான். 32அடுத் ததாக, ஒரு லேவியன்* அவ்வழியாக வந்தான். லேவியன் காயமுற்ற மனிதனைக் கண்டான். அவன் பக்கமாய் கடந்து சென்றான். ஆனால் அவனும் அவனுக்கு உதவும் பொருட்டு நிற்க வில்லை. அங்கிருந்து போய்விட்டான். 33பின் னர் ஒரு சமாரியன் அவ்வழியாகப் பயணம் செய்தான். காயப்பட்ட மனிதன் கிடந்த இடத் துக்கு வந்தான். சமாரியன் அம்மனிதனைப் பார்த்தான். காயமுற்ற மனிதனுக்காகக் கரு ணை கொண்டான். 34சமாரியன் அவனிடம் சென்று ஒலிவ எண்ணெயையும் திராட்சை இரசத்தையும் காயங்களில் ஊற்றினான். அம் மனிதனின் காயங்களைத் துணியால் சுற்றி னான். சமாரியனிடம் ஒரு கழுதை இருந்தது. அவன் காயமுற்ற மனிதனை அக்கழுதையின் மேல் ஏற்றி, ஒரு விடுதிக்கு அழைத்து வந்தான். அங்கு சமாரியன் அம்மனிதனைக் கவனித்தான். 35மறுநாள் இரண்டு வெள்ளிப் பணத்தை எடுத்து விடுதியில் வேலைசெய்த மனிதனிடம் கொடுத்தான். சமாரியன் அவ னிடம், "காயமுற்ற இம்மனிதனைக் கவனித் துக்கொள். அதிகப்பணம் செலவானால் நான் திரும்ப வரும்போது அதனை உனக்குக் கொ டுப்பேன்" என்றான்.

36பின்பு இயேசு, "இந்த மூன்று பேரிலும் கள்வரால் காயமுற்ற மனிதனுக்கு அன்பு காட் டியவன் யார் என்று நீ எண்ணுகின்றாய்?" என்றார்.

37நியாயசாஸ்திரி, "அவனுக்கு உதவிய வன்தான்" என்று பதில் சொன்னான்.

இயேசு அவனிடம், "நீயும் சென்று பிறருக்கு அவ்வாறே செய்" என்றார்.

### மரியாளும் மார்த்தாளும்

38இயேசுவும், அவரது சீஷர்களும் பயணம் செய்கையில் இயேசு ஓர் ஊருக்குள் நுழைந் தார். மார்த்தாள் என்ற பெயருள்ள பெண் இயேசுவைத் தனது வீட்டில் தங்குவதற்கு

---

**உனது ... நேசிக்கவேண்டும்** யாத். 6:5.

**உனது ... காட்டவேண்டும்** லேவி. 19:18.

**லேவியன்** லேவி வம்சத்தில் தோன்றியவன். லேவியர்கள் யூத ஆசாரியர்களுக்குக் ஆலயத்தில் உதவி செய்பவர்கள்.

அனுமதித்தாள். 39மார்த்தாளின் சகோதரியின்
பெயர் மரியாள். மரியாள் இயேசுவின் பாதத்
தருகே அமர்ந்து அவரது போதனைகளை
கேட்டுக் கொண்டிருந்தாள். அவளது சகோதரி
மார்த்தாள் வீட்டு வேலைகளைச் செய்து
கொண்டிருந்தாள். 40மிகுதியான வேலை
களைத் தானே செய்து கொண்டிருந்ததால்
மார்த்தாள் எரிச்சலடைந்தாள். அவள் உள்ளே
சென்று, “ஆண்டவரே வீட்டு வேலைகள்
எல்லாவற்றையும் நானே தனிமையாகச் செய்
வதற்கு என் சகோதரி என்னை விட்டு
வைத்திருப்பதை நீர் கவனிக்கவில்லையா?
எனக்கு உதவும்படியாக அவளுக்குக் கூறுங்
கள்” என்றாள்.

41ஆனால் கர்த்தர் அவளுக்குப் பதில் சொல்
லும் விதத்தில், “மார்த்தாளே மார்த்தாளே நீ
பலவகையான காரியங்களைக் குறித்து கவ
லைப்பட்டு, மனதைக் குழப்பிக் கொள்கிறாய்.
42ஒரே ஒரு காரியம் முக்கியமானது. மரியாள்
மிகச் சிறந்த ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொண்
டாள். அது அவளிடமிருந்து ஒருபோதும் எடுக்
கப்படமாட்டாது” என்றார்.

## பிராத்தனை பற்றிய போதனை

(மத்தேயு 6:9-15; 7:7-11)

11 ஒருமுறை இயேசு ஓரிடத்தில் பிரார்த்
தனை செய்து கொண்டிருந்தார். இயேசு
பிரார்த்தனையை முடித்தபோது இயேசுவின்
சீஷர்களில் ஒருவன் அவரை நோக்கி,
“யோவான் தன் சீஷர்களுக்கு பிரார்த்தனை
செய்வது எவ்வாறு என்று கற்பித்தான். ஆண்
டவரே எங்களுக்கும் பிரார்த்தனை செய்ய
நீர் கற்றுக்கொடும்” என்றான்.
2இயேசு சீஷரை நோக்கி, “பிரார்த்தனை
செய்யும்போது, இவ்விதமாய் பிரார்த்தனை
செய்யுங்கள்.

‘பிதாவே, உமது பெயர் என்றென்றும்
பரிசுத்தமாயிருக்க பிரார்த்திக்கிறோம்.
உமது இராஜ்யம் ஏற்படவும், பரலோகத்
தைப் போலவே பூமியிலும் நீர் விரும்
பியவை நடைபெறவும் பிரார்த்திக்
கிறோம்.
3 ஒவ்வொரு நாளும் எங்களுக்குத் தேவை
யான உணவை எங்களுக்கு அளிப்
பீராக.
4 மற்றவர் செய்கிற குற்றங்களை நாங்கள்
மன்னிக்கிறது போலவே, எங்கள் குற்றங்
களை மன்னியும். எங்களை சோத
னைக்கு உள்ளாக்காமல், பிசாசிடமிருந்து
காப்பாற்றும்’”
என்றார்.

## தொடர்ந்து கேட்டல்

5-6பின்பு இயேசு அவர்களை நோக்கி, “உங்
களில் ஒருவன் உங்கள் நண்பனின் வீட்டுக்கு
இரவில் வெகு நேரம் கழித்துச் செல்கிறீர்கள்
என்று வைத்துக் கொள்வோம். நீங்கள் அவ
னை நோக்கி, ‘இந்த ஊருக்குள் என் நண்பன்
ஒருவன் என்னைச் சந்திக்க வந்திருக்கிறான்.
ஆனால் அவனுக்கு உண்பதற்காகக் கொடுக்க
என்னிடம் ஒன்றும் இல்லை. தயவுசெய்து
மூன்று அப்பங்களைக் கொடுங்கள்’ என்கிறீர்
கள். 7வீட்டின் உள்ளிருக்கும் உங்கள் நண்பன்
பதிலாக, ‘போய்விடுங்கள்! என்னைத் தொல்
லைப்படுத்தாதீர்கள். கதவு ஏற்கெனவே மூடப்
பட்டிருக்கிறது. என் குழந்தைகளும், நானும்
படுக்கையில் படுத்திருக்கிறோம். நான்
எழுந்து உங்களுக்கு இப்போது அப்பத்தைக்
கொடுக்கமுடியாது’ என்கிறான். 8உங்கள் நட்பு
ஒருவேளை அவன் எழுந்து அப்பத்தை எடுத்
துக் கொடுப்பதற்குப் போதுமானதாக இல்லா
மல் இருக்கலாம். ஆனால் நீங்கள் தொடர்ந்து
கேட்டுக்கொண்டே இருந்தால் அவன் கண்டிப்
பாக எடுத்து உங்களுக்கு வேண்டியதைக்
கொடுப்பான், என்று நான் உங்களுக்குச்
சொல்கிறேன். 9எனவே, நான் உங்களுக்குச்
சொல்வதாவது, தொடர்ந்து கேட்டுக் கொண்
டிருங்கள். தேவன் உங்களுக்குக் கொடுப்பார்.
தேடிக்கொண்டே இருங்கள். நீங்கள் தேடிய
தைக் கண்டடைவீர்கள். தொடர்ந்து தட்டிக்
கொண்டே இருங்கள். கதவு உங்களுக்காகத்
திறக்கப்படும். 10ஆம், ஒரு மனிதன் தொடர்ந்து
கேட்டால் அவன் பெற்றுக் கொள்வான். ஒரு
மனிதன் தொடர்ந்து தேடினால் அவன் தேடி
யதை அடைவான். ஒரு மனிதன் தொடர்ந்து
தட்டினால் கதவு அவனுக்காகத் திறக்கப்படும்.
11உங்களில் யாருக்காவது மகன் இருக்
கிறானா? உங்கள் மகன் உங்களிடம் மீனைக்
கேட்டால் நீங்கள் என்ன செய்வீர்கள்? எந்தத்
தந்தையாவது தன் மகனுக்கு பாம்பைக் கொ
டுப்பானா? இல்லை. அவனுக்கு மீனைக் கொ
டுப்பீர்கள். 12உங்கள் மகன் முட்டையைக்
கேட்டால் அவனுக்குத் தேளைக் கொடுப்பீர்
களா? இல்லை. 13நீங்கள் பொல்லாதவர்கள்.
ஆனால் உங்கள் பிள்ளைகளுக்கு நல்லவற்
றைக் கொடுக்க வேண்டுமென்பதை அறிவீர்
கள். எனவே தன்னிடம் கேட்கின்ற மக்களுக்
குப் பரிசுத்த ஆவியைக் கொடுக்கவேண்டு
மென்பதை பரலோகப் பிதா நிச்சயமாய்
அறிவார்” என்றார்.

## இயேசுவின் வல்லமை

(மத்தேயு 12:22-30 மாற்கு 3:20-27)

14ஊமையான ஒரு மனிதனிடமிருந்து ஒரு
பிசாசை ஒருமுறை இயேசு துரத்திக் கொண்டி
ருந்தார். பிசாசு வெளிவந்தபோது, அந்த மனி
தனால் பேசமுடிந்தது. மக்கள் வியப்படைந்
தனர். 15ஆனால் சிலர் “பெயல்செபூலின் (பிசா
சின்) ஆற்றலை இயேசு பயன்படுத்தி, பிசாசு
களைத் துரத்திவிடுகிறார். அசுத்த ஆவிகளுக்
குத் தலைவன் பெயல்செபூல்” என்றனர்.
16பிறரும் இயேசுவைச் சோதிக்க விரும்
பினர். வானத்திலிருந்து ஒரு அடையாளத்

தைக் காட்டும்படியாக இயேசுவைக் கேட்டனர்.
17 அவர்கள் எண்ணிக்கொண்டிருந்த நினைவு
களை இயேசு அறிந்திருந்தார். எனவே இயேசு
மக்களை நோக்கி, “தனக்குள் ஒன்றுக்கொன்று
எதிர்த்துக்கொண்டிருக்கிற எந்த இராஜ்யமும்
உடைந்து சிதறும். தனக்குள் சண்டை இடுகிற
எந்தக்குடும்பமும் பிரிந்து போகும். 18 எனவே
சாத்தான் தனக்குள் சண்டையிட்டால்,
அவனது இராஜ்யம் எப்படி நிலைபெறும்?
இதை எதற்காகச் சொல்கிறேன் என்றால்
அசுத்த ஆவிகளைத் துரத்துவதற்கு நான்
பெயல்செபூலின் ஆற்றலைப் பயன்படுத்துவ
தாக நீங்கள் கூறுகிறீர்கள். 19 நான் அசுத்த
ஆவிகளைத் துரத்துவதற்குப் பெயல்செபூலின்
ஆற்றலைப் பயன்படுத்தினால், உங்களைச்
சார்ந்தவர்கள் அசுத்த ஆவிகளை வெளியேற்ற
எந்த ஆற்றலைப் பயன்படுத்துகிறார்கள்?
எனவே, உங்களைச் சார்ந்தவர்களே நீங்கள்
கூறுவது தவறு என்பதை நிரூபிக்கிறார்கள்.
20 அசுத்த ஆவிகளைத் துரத்த நான் தேவ
னுடைய வல்லமையைப் பயன்படுத்துகிறேன்.
தேவனுடைய இராஜ்யம் உங்களிடம் வந்திருக்
கிறது என்பதை இது காட்டுகிறது.

21 “பல ஆயுதங்கள் ஏந்திய ஒரு வலிய
மனிதன் தன் சொந்த வீட்டைக் காவல் காக்கும்
போது அவன் வீட்டில் உள்ள பொருள்கள்
பாதுகாப்பாக இருக்கும். 22 அவனைக் காட்
டிலும் வலிய மனிதன் ஒருவன் வந்து அவ
னைத் தோற்கடிக்கிறான் என்று வைத்துக்
கொள்வோம். தனது வீட்டைக்காக்கும் பொ
ருட்டு முதல் மனிதன் வைத்திருந்த ஆயுதங்
களை வலிய மனிதன் எடுத்துக்கொள்வான்.
முதல் மனிதனின் பொருள்களைக்கொண்டே
வலிய மனிதன் தான் செய்ய நினைப்பதைச்
செய்வான்.

23 “ஒருவன் என்னோடு இருக்கவில்லை
என்றால், அவன் எனக்கு எதிரானவன்.
என்னோடு வேலை செய்யாதவன் எனக்கு
எதிராய்ச் செயல் புரிகின்றான்.

### வெறுமையான மனிதன்

*(மத்தேயு 12:43-45)*

24 “பிசாசுக்குரிய அசுத்த ஆவியானது ஒரு
மனிதனைவிட்டு வெளியேறும்போது, அந்த
ஆவியானது வனாந்தரத்திற்குச் சென்று ஓய்
வெடுக்க ஓர் இடம் தேடும். ஆனால் அதற்கு
எந்த இடமும் அகப்படுவதில்லை. எனவே
ஆவியானது, ‘நான் விட்டுவந்த மனிதனிடம்
திரும்பிச் செல்வேன்’ என்று கூறும். 25 ஆவி
யானது மீண்டும் அவனிடம் வரும்போது,
தனது வீடு சுத்தமானதாகவும் அழகானதாக
வும் இருப்பதைக் காணும். 26 அப்போது அந்த
அசுத்த ஆவியானது வெளியேபோய் தன்
னைக் காட்டிலும் அசுத்த குணம்கொண்ட
மேலும் ஏழு ஆவிகளைக் கூடவே அழைத்து
வரும். பின்பு எல்லா அசுத்த ஆவிகளும்
அவனுள்ளே சென்று வசிக்கும். முன்னே
இருந்ததைக் காட்டிலும் அம்மனிதனுக்கு
மிகுந்த தொல்லை உண்டாகும்” என்றார்.

### மகிழ்ச்சியுள்ள மனிதர்கள்

27 இயேசு இக்காரியங்களைக் கூறியபோது,
மக்களிடையே இருந்த ஒரு பெண் பேச ஆரம்
பித்தாள். அவள் இயேசுவை நோக்கி, “உங்
களைப் பெற்றெடுத்து தன் மார்பில் பால்
ஊட்டிய உங்கள் தாய் ஆசீர்வதிக்கப்பட்டவள்”
என்றாள்.

28 ஆனால் இயேசு, “தேவனுடைய போத
னைகளைக் கேட்டு அதற்குக் கீழ்ப்படிகிற
மக்களே உண்மையில் ஆசீர்வதிக்கப்பட்ட
மனிதர்கள்” என்றார்.

### நிரூபித்துக் காட்டுங்கள்

*(மத்தேயு 12:38-42; மாற்கு 8:12)*

29 மக்களின் கூட்டம் பெருகிக்கொண்டே வந்
தது, இயேசு சொல்லத் தொடங்கினார். “இன்று
வாழும் மக்கள் தீயவர்கள். அவர்கள் தேவனிட
மிருந்து அடையாளமாக அற்புதங்களைச் செய்
யும்படி கேட்கிறார்கள். யோனாவுக்கு* நடந்த
அதிசயமே அவர்களுக்குக் கொடுக்கப்படும்
ஒரே அடையாளமாகும். 30 நினிவேயில் வாழ்ந்த
மக்களுக்கு யோனா ஓர் அடையாளமாக இருந்
தான். மனித குமாரனுக்கும் அதுவே பொருந்
தும். இக்காலத்தில் வாழும் மக்களுக்கு மனித
குமாரனே ஓர் அடையாளமானவர். 31 நியாயம்
தீர்க்கின்ற நாளில் இன்று வாழும் மக்களோடு
தெற்கு தேசங்களின் அரசி எழுந்து நின்று,
அவர்கள் செய்வது தவறு எனச் சுட்டிக்காட்
டுவாள். ஏனெனில் அந்த அரசி சாலமோனின்
ஞானமான போதனைகளைக் கேட்பதற்காக
தொலை தூரத்தில் இருந்து வந்தவள். ஆனால்,
நான் சாலமோனைக் காட்டிலும் மேலானவர்
என்பதை உங்களுக்குச் சொல்கிறேன். 32 நியா
யம் தீர்க்கிற நாளில் இன்று வாழும் மக்க
ளோடு நினிவேயின் மக்கள் எழுந்து நின்று,
நீங்கள் தவறுடையவர்கள் என்பதைச் சுட்டிக்
காட்டுவார்கள். ஏனெனில் அம்மக்களுக்கு
யோனா போதித்தபோது, அவர்கள் தம் இதயத்
தையும் வாழ்க்கையையும் மாற்றிக்கொண்டார்
கள் ஆனால் நான் யோனாவைக் காட்டிலும்
மேலானவர் என்பதை உங்களுக்குச் சொல்
கிறேன்.

### உலகின் ஒளி நீங்கள்

*(மத்தேயு 5:15; 6:22-23)*

33 “யாரும் பாத்திரத்தை விளக்கின் மேல்
கவிழ்த்து வைப்பதோ, விளக்கை மறைத்து
வைப்பதோ இல்லை. அதற்குப் பதிலாக விளக்
கை விளக்குத்தண்டின்மீது வைத்து உள்ளே

---

**யோனா** பழைய ஏற்பாட்டுக்கால தீர்க்கதரிசி. மீனின் வயிற்றுக்குள் 3 நாள் இருந்து மீண்டும் உயிரோடு வெளியே வந்தவன். இயேசுவும் கல்லறைக்குள் மூன்று நாட்கள் இருந்து உயிரோடு வந்தது போன்றது அது.

வருபவர் பார்க்கும்படியாக ஏற்றிவைப்பார்
கள்.
34உங்கள் சரீரத்திற்கு உங்கள் கண்ணே
விளக்காக இருக்கிறது. உங்கள் கண்கள் நன்
றாக இருந்தால், உங்கள் சரீரமும் ஒளி உடை
யதாக இருக்கும், உங்கள் கண்கள் கெட்டவை
யாக இருந்தால், உங்கள் சரீரமும் இருள் நிரம்
பிக் காணப்படும். 35எனவே கவனமாக இருங்
கள். உங்களில் இருக்கும் ஒளி இருளாகாதபடி
பார்த்துக் கொள்ளுங்கள். 36உங்கள் முழு சரீர
மும் ஒளி வீசி எந்தப் பகுதியும் இருளாகாதபடி
இருந்தால் நீங்கள் மின்னலைப்போல ஒளி
வீசுவீர்கள்” என்றார்.

## பரிசேயரை இயேசு விமர்சித்தல்

(மத்தேயு 23:1-36; மாற்கு 12:38-40;
லூக்கா 20:45-47)

37இயேசு இவற்றையெல்லாம் கூறி முடித்த
பின்பு, பரிசேயர்களில் ஒருவன் அவனோடு
சாப்பிடுமாறு இயேசுவை அழைத்தான். என
வே இயேசு வந்து மேசையருகே அமர்ந்தார்.
38இயேசு உணவு உண்பதற்கு முன்னே கை
களைக் கழுவாது வந்து அமர்ந்ததைக் கண்ட
பரிசேயன் வியப்படைந்தான். 39இயேசு
அவனை நோக்கி, “பரிசேயர்களாகிய நீங்கள்
பாத்திரத்தையும், குவளையையும் வெளிப்
புறத்தில் சுத்தமாகக் கழுவுகின்றீர்கள். ஆனால்
உட்புறத்தில் பிறரை ஏமாற்றித் தீமை செய்யும்
காரியங்களால் நிரம்பி இருக்கின்றீர்கள்.
40நீங்கள் மூடர்கள். வெளிப்புறத்தை உண்டாக்
கியவரே (தேவனே) உள்புறத்தையும் உண்
டாக்கி உள்ளார். 41உங்கள் பாத்திரங்களிலும்
குவளைகளிலும் இருப்பவற்றை தேவைப்படு
கின்ற மக்களுக்குக் கொடுங்கள். அப்போது
நீங்கள் முற்றிலும் சுத்தமானவர்களாக இருப்
பீர்கள்.
42பரிசேயரே, உங்கள் நிலை மோச
மானதாக இருக்கும். உங்களுக்குச் சொந்தமா
னவற்றில், உங்கள் தோட்டத்தின் சகல விளை
பொருள்களில் புதினா, மரிக்கொழுந்து முதலா
னவற்றில் கூட பத்தில் ஒரு பாகத்தைத் தேவ
னுக்குக் கொடுக்கின்றீர்கள். ஆனால் பிறரிடம்
நியாயமாக நடந்து கொள்வதையும் தேவனை
நேசிப்பதையும் மறந்து விடுகின்றீர்கள். இவற்
றை நீங்கள் கண்டிப்பாகச் செய்தல்வேண்டும்.
கூடவே, பத்தில் ஒரு பாகம் கொடுப்பது
போன்ற காரியங்களையும் தொடர்ந்து செய்து
வருதல்வேண்டும். 43பரிசேயரே, உங்கள்
நிலை மோசமானதாக இருக்கும். ஜெப
ஆலயங்களில் மிக முக்கியமான இடத்தில் வீற்
றிருப்பதை நீங்கள் விரும்புகிறீர்கள். சந்தை
இடங்களில் மக்கள் உங்களுக்கு மரியாதை
செலுத்த வேண்டுமென விரும்புகிறீர்கள். 44நீங்
கள் மறைக்கப்பட்ட கல்லறைகளைப் போல
இருப்பதால் அது உங்களுக்கு மோசமானதாக
இருக்கும். அதை அறியாமல் மக்கள் அவற்றின்
மீது நடந்து செல்வார்கள்” என்றார்.

## யூத போதகர்களுக்குப் போதனை

45வேதபாரகர்களில் ஒருவன் இயேசுவை
நோக்கி, “போதகரே, பரிசேயரைக் குறித்து
இக்காரியங்களை நீங்கள் சொல்லும்போது,
எங்களையும் விமர்சிக்கிறீரே” என்றான்.
46அவனுக்குப் பதிலாக இயேசு, “வேதபார
கரே, உங்கள் நிலைமை மோசமானதாக இருக்
கும். மக்கள் கீழ்ப்படிய இயலாத வகையில்
கடுமையான விதிகளை விதிக்கிறீர்கள். மற்ற
மக்கள் அவ்விதிகளுக்குக் கட்டுப்படுமாறு
அவர்களைக் கட்டாயப் படுத்துகின்றீர்கள்.
ஆனால் நீங்களோ அவ்விதிகளைப் பின்பற்று
வதற்கு முயன்று கூடப் பார்ப்பதில்லை.
47தீர்க்கதரிசிகளுக்கு நினைவுச்சின்னங்களைக்
கட்டுவதால் உங்கள் நிலை மோசமானதாக
இருக்கும். அதே தீர்க்கதரிசிகளை உங்கள்
முன்னோர்கள் கொன்றார்களே. 48உங்கள் முன்
னோர் செய்ததை நீங்கள் ஏற்றுக்கொள்வதாக
எல்லா மக்களிடமும் காட்டிக் கொள்கிறீர்கள்.
அவர்கள் தீர்க்கதரிசிகளைக் கொன்றார்கள்,
அவர்களுக்கு நீங்கள் நினைவுச்சின்னங்களை
எழுப்புகின்றீர்கள்! 49எனவே தேவனின் ஞான
மானது, ‘நான் தீர்க்கதரிசிகளையும், சீஷர்
களையும், அவர்களிடம் அனுப்புவேன். தீய
மனிதரால் தீர்க்கதரிசிகளிலும் சீஷர்களிலும்
சிலர் கொல்லப்படுவார்கள். வேறு சிலர்
துன்புறுத்தப்படுவார்கள்’ என்று உரைத்தார்.
50உலகம் தோன்றிய காலம் தொடங்கி கொல்
லப்பட்ட எல்லா தீர்க்கதரிசிகளின் மரணத்திற்
காகவும், இன்று வாழும் மக்களாகிய நீங்கள்
தண்டிக்கப்படுவீர்கள். 51ஆபேலின் மரணத்திற்
காக நீங்கள் தண்டிக்கப்படுவீர்கள். சகரியா
வின் கொலைக்காக நீங்கள் தண்டனை பெறு
வீர்கள். பலிபீடத்திற்கும் ஆலயத்திற்கும் நடு
வில் சகரியா கொல்லப்பட்டான். அவர்கள்
எல்லாருக்காகவும் இன்று வாழும் மக்களா
கிய நீங்கள் தண்டனை பெறுவீர்கள் என்பதை
நான் உங்களுக்குச் சொல்கிறேன்.
52“வேதபாரகரே, உங்களுக்குத் தீமை வரும்.
தேவனைப்பற்றி அறிவதற்குரிய திறவுகோ
லை ஒளித்து வைத்திருக்கிறீர்கள். நீங்களும்
அறிந்து கொள்வதில்லை. பிறர் அறிந்து
கொள்வதையும் தடைசெய்கிறீர்கள்” என்றார்.
53இயேசு அங்கிருந்து கிளம்பும்போது, வேத
பாரகர்களும் பரிசேயர்களும் அவரைத் தொல்
லைப்படுத்த ஆரம்பித்தார்கள். பலவற்றைக்
குறித்த கேள்விகளுக்கு பதில் அளிக்குமாறு
இயேசுவை வற்புறுத்தினார்கள். 54இயேசு தவ
றாக ஏதேனும் சொல்ல நேர்ந்தால் அவரைப்
பிடிக்கலாம் என வழி காண முயன்று கொண்
டிருந்தார்கள்.

## பரிசேயரைப் போல இராதீர்

12 பல்லாயிரக் கணக்கான மக்கள் ஒன்
றாகக் கூடி வந்தார்கள். ஒருவரை ஒருவர்
மிதிக்கும் அளவுக்குத் திரளான மக்கள் குழு
மினர். மக்களிடம் பேசும் முன்பு இயேசு தம்

சீஷர்களை நோக்கி, “பரிசேயரின் புளிப்பைக் (தீயதொடர்பை) குறித்து எச்சரிக்கையாக இருங்கள். அவர்கள் வேஷதாரிகள். 2மறைக்கப்பட்ட அனைத்தும் வெளிப்படும். இரகசியங்கள் வெளிப்படையாக அறிவிக்கப்படும். 3இருளில் கூறுகின்ற செயல்கள் ஒளியில் தெரிவிக்கப்படும். இரகசியமாக அறையில் முணுமுணுக்கிற செய்திகள் வீட்டின் மேலிருந்து உரக்கத் தெரிவிக்கப்படும்” என்றார்.

### தேவனுக்கு மட்டுமே அஞ்சுங்கள்

*(மத்தேயு 10:28-31)*

4பின்பு இயேசு மக்களை நோக்கி, “எனது நண்பர்களே! மக்களுக்கு அஞ்சாதீர்கள், என்று நான் உங்களுக்குச் சொல்கின்றேன். மக்கள் உங்கள் சரீரத்தை அழிக்கக்கூடும். ஆனால் அதற்கு மேல் உங்களுக்கு அவர்கள் வேறெதையும் செய்யமுடியாது. 5நீங்கள் யாருக்குப் பயப்படவேண்டுமோ அவரை நான் உங்களுக்குக் காட்டுகிறேன். உங்களைக் கொல்வதற்கும் நரகத்தில் தள்ளுவதற்கும் ஆற்றல் வாய்ந்தவர்க்கு (தேவனுக்கு) நீங்கள் பயப்படவேண்டும். ஆம், நீங்கள் பயப்படவேண்டியவர், அவர் மட்டுமே.

6“பறவைகளை விற்கும்போது ஐந்து சிறியவைகள் இரண்டு காசுக்கு மாத்திரமே விலை பெறும். ஆனால், தேவன் அவற்றில் எதையும் மறப்பதில்லை. 7இதற்கும் மேலாக உங்கள் தலையில் இருக்கும் முடியின் எண்ணிக்கையைக்கூட தேவன் அறிவார். பயப்படாதீர்கள். பல பறவைகளைக் காட்டிலும் உங்கள் தகுதி மிகுதியானது.

### இயேசுவைக் குறித்து வெட்கப்படாதீர்

*(மத்தேயு 10:32-33; 12:32; 10:19-20)*

8“நான் உங்களுக்குச் சொல்வதாவது, பிறர் முன்னிலையில் ஒருவன் எழுந்து நின்று என் மீது அவனுக்கு நம்பிக்கை இருப்பதாகக் கூறினால், நானும் அவன் எனக்குரியவன் என்பதைக் கூறுவேன். தேவதூதர்கள் முன்பாக இதைச் சொல்வேன். 9ஆனால் ஒருவன் மக்களுக்கு முன்பாக எழுந்து நின்று என்னை நம்பவில்லை என்று கூறுவானேயானால், அம்மனிதன் எனக்குரியவன் அல்லன். தேவதூதர்களுக்கு முன்னிலையில் நான் இதைக் கூறுவேன்.

10“மனித குமாரனுக்கு எதிராக ஒருவன் எதையேனும் கூறினால், அவன் மன்னிக்கப்படுவான். ஆனால், பரிசுத்த ஆவியானவருக்கு எதிரானவற்றை ஒருவன் பேசினால் அவன் மன்னிக்கப்படமாட்டான்.

11“ஜெப ஆலயத்தில் தலைவர்களுக்கும், முக்கியமான மனிதர்களுக்கும் முன்பாக, உங்களை கொண்டு வரும்போது நீங்கள் எப்படி தற்காத்துக்கொள்வது அல்லது எதைக் கூற வேண்டும் என்று கலக்கம் அடைய வேண்டாம். 12அந்த வேளையில் பரிசுத்த ஆவியானவர் நீங்கள் கூற வேண்டியதை உங்களுக்குப் போதிப்பார்” என்றார்.

### தன்னலம் கூடாது

13கூட்டத்திலிருந்த ஒரு மனிதன் இயேசுவை நோக்கி, “போதகரே, எங்கள் தந்தை இறந்து போனார். தந்தையின் உடைமையை என்னோடு பங்கிட என் தம்பிக்குச் சொல்லுங்கள்” என்றான்.

14ஆனால் இயேசு அவனை நோக்கி, “உங்கள் நடுவில் நியாயாதிபதியாக நான் இருக்க வேண்டும் என்றோ அல்லது உங்கள் தந்தையின் பொருட்களை உங்களுக்கு நான் பிரித்துத் தரவேண்டும் என்றோ யார் கூறியது?” என்று கேட்டார். 15பின்னர் இயேசு அவர்களை நோக்கி, “கவனமாக இருங்கள். எல்லாவகையான சுயநலமிக்க செயல்களுக்கும் எதிராக உங்களைக் காத்துக்கொள்ளுங்கள். ஒருவனுக்குச் சொந்தமான பல பொருட்களிலிருந்து ஒருவன் வாழ்வு பெறுவதில்லை” என்றார்.

16பின்பு இயேசு இந்த உவமையைச் சொன்னார்: “நிலத்தின் சொந்தக்காரனான ஒரு செல்வந்தன் இருந்தான். அவன் நிலத்தில் நல்ல விளைச்சல் கிடைத்தது. 17அச்செல்வந்தன் தனக்குள், ‘நான் என்ன செய்வேன்? விளைச்சலை எல்லாம் வைப்பதற்கு இடம் இல்லையே’ என்று எண்ணினான். 18பின்பு அச்செல்வந்தன், ‘நான் செய்ய வேண்டியதை அறிவேன். எனது களஞ்சியங்களை இடித்து விட்டு பெரிய களஞ்சியங்களைக் கட்டுவேன். அவற்றில் கோதுமையையும், நல்ல பொருட்களையும் நிரப்பி வைப்பேன். 19அப்போது நான் எனக்குள் என்னிடம் மிகுதியான அளவில் சேமித்து வைக்கப்பட்ட பொருட்கள் உள்ளன. பல ஆண்டுகளுக்கான பொருட்களைச் சேமித்துள்ளேன். ஓய்வுகொள், உண், குடி, வாழ்க்கையை அனுபவி’ என்று கூறுவேன்’ என்றான். 20ஆனால் தேவன் அவனை நோக்கி, ‘மூடனே! இன்று இரவில் நீ மரிப்பாய். உனக்காக வைத்துள்ள பொருட்கள் என்ன ஆகும்? அப்போது அப்பொருட்களைப் பெறுவது யார்?’ என்றார்.

21“தனக்காகவே மட்டும் பொருளைச் சேர்க்கின்ற மனிதனின் நிலை இத்தகையது.

தேவனுடைய பார்வையில் அம்மனிதன் செல்வந்தன் அல்லன்” என்றார் இயேசு.

### கவலை வேண்டாம்

*(மத்தேயு 6:25-34; 19-21)*

22இயேசு சீஷர்களை நோக்கி, “ஆகவே நான் உங்களுக்குச் சொல்கிறேன், உங்கள் வாழ்வுக்குத் தேவையான உணவைக் குறித்துக் கவலைப்படாதீர்கள். உங்கள் சரீரத்திற்குத் தேவையான உடைகளைக் குறித்து கவலைப்படாதீர்கள். 23உணவைக் காட்டிலும் வாழ்க்கை முக்கியமானது. உடைகளைக் காட்டிலும் சரீரம் மிகவும் முக்கியமானது. 24பறவைகளைப்

பாருங்கள். அவை விதைப்பதோ, அறுப்
பதோ இல்லை. பறவைகள் வீடுகளிலோ,
களஞ்சியங்களிலோ உணவைச் சேமிப்பது
மில்லை. ஆனால் தேவன் அவற்றைப் பாது
காக்கிறார். நீங்களோ பறவைகளைக் காட்
டிலும் மிகவும் உயர்ந்தவர்கள். 25கவலைப்
படுவதால் உங்களில் ஒருவனும் உங்கள்
வாழ்வின் அளவை நீடிக்க வைக்க முடியாது.
26சிறிய காரியங்களை உங்களால் செய்ய
முடியாவிட்டால் பெரிய காரியங்களைக்
குறித்துக் கவலைப்படுவானேன்.? 27காட்டுப்
பூக்களைப் பாருங்கள். அவை வளர்வதைக்
கவனியுங்கள். அவை தமக்காக உழைப்பதோ,
துணிகளை நெய்வதோ கிடையாது. ஆனால்
பெரிய செல்வம் மிக்க அரசனான சாலமோன்
கூட அப்பூக்களில் ஒன்றைப்போல அழகாக
உடுத்தியதில்லை என்பதை உங்களுக்குச்
சொல்கிறேன். 28வயலிலுள்ள புல்லுக்கும்
தேவன் அத்தகைய ஆடையை அணிவிக்
கிறார். இன்று அந்தப் புல் உயிர்வாழும்.
நாளையோ எரிப்பதற்காக தீயில் வீசப்படும்.
எனவே தேவன் இன்னும் அதிகமாக
உங்களுக்கு உடுத்துவிப்பார் என்பது உங்
களுக்குத் தெரியும். நம்பிக்கையில் குறைவு
படாதீர்கள். 29எதை உண்போம் எதைக்
குடிப்போம், என்பதைக் குறித்து எப்போதும்
எண்ணாதீர்கள். அதைக் குறித்துக் கவலை
படாதீர்கள். 30இவ்வுலக மக்கள் அனைவரும்
அவற்றைப் பெற முயற்சிக்கிறார்கள். அவை
உங்களுக்குத் தேவை என உங்கள் தந்தைக்குத்
தெரியும். 31நீங்கள் விரும்பும் காரியம் தேவ
னுடைய இராஜ்யமாக இருக்கவேண்டும்.
அப்போது (உங்களுக்குத் தேவையான) மற்ற
எல்லாப் பொருட்களும் உங்களுக்குக் கொடுக்
கப்படும்."

## பணத்தை நம்பாதீர்கள்

32"சிறு குழுவினரே, பயம் கொள்ளாதீர்கள்.
உங்கள் தந்தை (தேவன்) உங்களுக்கு இராஜ்
யத்தைக் கொடுக்க விரும்புகிறார். 33உங்களிட
மிருக்கும் பொருட்களை விற்று, அப்பணத்
தைத் தேவைப்படுகிறவர்களுக்குக் கொடுங்
கள். இந்த உலகத்தின் செல்வங்கள் நிலைத்
திருப்பதில்லை. பரலோகத்தின் பொக்கிஷத்
தைப் பெறுங்கள். அந்தப் பொக்கிஷம் என்
றும் நிலைத்து நிற்கும். திருடர்கள் பரலோ
கத்தில் உள்ள பொக்கிஷத்தைத் திருட முடி
யாது, பூச்சிகள் அதை அழிக்கமுடியாது. 34உங்
கள் பொக்கிஷம் எங்கே இருக்கிறதோ, அங்கே
உங்கள் இதயமும் இருக்கும்."

## எப்போதும் ஆயத்தமாய் இருங்கள்

(மத்தேயு 24:45-51)

35"ஆயத்தமாய் இருங்கள். எல்லா ஆடை
களையும் அணிந்து தீபங்களை ஏற்றி வையுங்
கள். 36திருமண விருந்திலிருந்து எஜமானர்
வீட்டுக்குத் திரும்பி வருவதை எதிர்பார்த்
திருக்கும் ஊழியர்களைப்போல இருங்கள்.
எஜமானர் வந்து தட்டுகிறார். அதே தருணத்
தில் வேலைக்காரர்கள் எஜமானருக்காக கத
வைத் திறக்கிறார்கள். 37எஜமானர் வீட்டுக்கு
வந்தவுடன் ஊழியர்கள் தயாராக அவருக்குக்
காத்திருந்தபடியால் ஆசீர்வதிக்கப்படுவார்கள்.
நான் உங்களுக்கு உண்மையைச் சொல்
கிறேன். எஜமானர் வேலைக்குரிய ஆடை
களைத் தானே அணிந்து கொண்டு ஊழியர்
களை மேசையின் அருகே அமரும்படியாய்ச்
சொல்வார். பின்னர், எஜமானரே அவர்
களுக்கு உணவைப் பரிமாறுவார். 38அந்த
ஊழியர்கள் நள்ளிரவு வரையிலோ இன்னும்
அதிகமாகவோ எஜமானருக்காக காத்திருக்க
வேண்டியதிருக்கும். ஆனால் எஜமானர் வந்து
அந்த ஊழியர்கள் அவருக்காக காத்திருப்
பதைப் பார்க்கும்போது அவர் அதிக மகிழ்ச்
சியடைவார். 39இதனை நினைவில் வைத்
திருங்கள்: திருடன் வரும் நேரத்தை வீட்டுச்
சொந்தக்காரன் அறிந்திருந்தால், வீட்டினுள்
திருடன் நுழைய அவன் அனுமதிக்கமாட்டான்.
40எனவே நீங்களும் ஆயத்தமாக இருத்தல்
வேண்டும். மனித குமாரன் நீங்கள் எதிர்
பாராத நேரத்தில் வருவார்" என்றார்.

## நம்பிக்கையான ஊழியன் யார்

41"ஆண்டவரே நீங்கள் இந்த உவமையை
எங்களுக்காக மட்டுமா அல்லது எல்லா மக்க
ளுக்காகவுமா கூறினீர்கள்?" என்று பேதுரு
கேட்டான்.

42அவனுக்குப் பதிலாக கர்த்தர், "யார்
ஞானமுள்ள, நம்பிக்கைக்குரிய ஊழியன்?
எஜமானர் பிற ஊழியர்களைக் கவனிக்கவும்
அவர்களுக்குத் தக்க நேரத்தில் உணவளிக்கும்
பொருட்டும் ஒரு ஊழியனை நியமிப்பார்.
அந்த வேலையைச் செய்யும்படி எஜமானர்
நம்புகின்ற ஊழியன் யார்? 43எஜமானர் வந்து
அந்த ஊழியன் கொடுக்கப்பட்ட வேலையைச்
சரிவர செய்து வருவதைப் பார்க்கும்போது,
அந்த ஊழியன் மிகவும் மகிழ்ச்சியடைவான்.
44நான் உங்களுக்கு உண்மையைச் சொல்
கிறேன். எஜமானருக்குச் சொந்தமான எல்லா
வற்றையும் கவனிக்கும் பொறுப்பை ஏற்க
அந்த ஊழியனை எஜமானர் ஏற்படுத்துவார்.
45ஆனால் எஜமானர் விரைவில் திரும்பி
வரமாட்டார் என்று எண்ணினால் நடப்ப
தென்ன? அந்த ஊழியன் மற்ற ஊழியர்களை
அவர்கள் ஆண்களானாலும், பெண்களானா
லும் அடித்துத் துன்புறுத்த ஆரம்பிப்பான்.
அவன் உண்டு, பருகி, மிதமிஞ்சிப் போவான்.
46அந்த ஊழியனுக்குத் தகவலே தெரியாத
போது எஜமானர் வருவார். அந்த ஊழியன்
சற்றும் எதிர்பார்த்திராத நேரத்தில் அவர்
வருவார். அப்போது அந்த எஜமானர் அந்த
ஊழியனைத் தண்டிப்பார். கீழ்ப்படியாத பிற
மனிதரோடு இருக்கும்படியாக எஜமானர்
அவனையும் அனுப்பிவிடுவார்.

47“எஜமானர் தன்னிடம் எதிர்பார்த்த
வேலை என்ன என்பது அந்த ஊழியனுக்குத்
தெரியும். ஆனால் அந்த ஊழியன் அவனது
எஜமானர் விரும்பியதைச் செய்ய முயல்
வதோ, அதற்குத் தன்னை ஆயத்தப்படுத்திக்
கொள்வதோ இல்லை. எனவே அந்த ஊழியன்
அதிகமாகத் தண்டிக்கப்படுவான். 48ஆனால்
எஜமானர் தன்னிடம் எதிர்பார்ப்பதை அறிந்
துக்கொள்ளாத ஊழியனின் நிலை என்ன?
தண்டனைக்குரிய செயல்களை அவன் செய்
கிறான். ஆனால் தான் செய்ய வேண்டியதை
அறிந்தும் செய்யாத ஊழியனைக் காட்டிலும்
அவன் குறைந்த தண்டனையைப் பெறுவான்.
ஒருவனுக்கு அதிகமாக அளிக்கப்பட்டால் அவ
னுடைய பொறுப்பும் அதிகரிக்கும். அதிகமாக
ஒருவனுக்குக் கொடுக்கபபட்டால் அவனிடமி
ருந்து அதிகம் எதிர்பார்க்கப்படும்” என்றார்.

### வித்தியாசமான போதனை

*(மத்தேயு 10:34-36)*

49இயேசு தொடர்ந்து சொன்னார், “உலகத்
தில் அக்கினியைக் கொண்டு வருவதற்காக
நான் வந்தேன். அது ஏற்கெனவே எரியத்
தொடங்கி இருக்கவேண்டும் என்று விரும்
புகிறேன். 50நான் இன்னொரு ஞானஸ்நானத்
தைப் பெற வேண்டும். அது முடியும்வரைக்
கும் நான் தொல்லைக்குள்ளானதாக உணர்
கிறேன். 51நான் உலகத்தில் அமைதியை நிலை
நாட்டுவதற்காக வந்தேன் என்று எண்ணுகிறீர்
களா? இல்லை. நான் உலகில் பிரிவை ஏற்
படுத்த வந்தேன். 52இப்போதிலிருந்து, ஐந்து
பேருள்ள ஒரு குடும்பத்தில் மூன்று பேர்
இருவருக்கு எதிராகவும், இருவர் மூவர்க்கு
எதிராகவும் பிரிந்திருப்பார்கள்:

53 தந்தையும் மகனும் பிரிந்திருப்பார்கள்.
மகன் தந்தையை எதிர்த்து நிற்பான்.
தந்தை மகனை எதிர்த்து நிற்பான். தாயும்
மகளும் பிரிந்திருப்பார்கள். மகள் தாயை
எதிர்த்து நிற்பாள். தாய் மகனை
எதிர்த்து நிற்பாள். மாமியாரும் மருமக
ளும் பிரிந்திருப்பார்கள். மருமகள் மாமி
யாரை எதிர்த்து நிற்பாள். மாமியார்
மருமகளை எதிர்த்து நிற்பாள்.”

### காலத்தை அறியுங்கள்

*(மத்தேயு 16:2-3)*

54பின்பு இயேசு மக்களை நோக்கி, “மேற்
கில் மேகங்கள் பெருகுகையில் நீங்கள் ‘மழைக்
குரிய புயல் வந்து கொண்டிருக்கிறது’ என்று
உடனே சொல்கிறீர்கள். உடனே மழை பொழிய
ஆரம்பிக்கிறது. 55தெற்கிலிருந்து காற்று வீசு
வதை உணர்ந்ததும் நீங்கள், ‘இன்று வெப்ப
மான நாள்’ என்று சொல்கிறீர்கள். நீங்கள்
சொல்வது சரியானதே. 56வேஷதாரிகளே!
காலத்தைப் புரிந்து பூமி மற்றும் வானத்தின்
மாற்றங்களுக்குப் பொருள் உரைக்கிறீர்கள்.
இப்போது நடந்து கொண்டிருப்பவற்றை ஏன்
உங்களால் புரிந்து கொள்ள முடியவில்லை?”
என்றார்.

### பிரச்சனையைத் தீருங்கள்

*(மத்தேயு 5:25-26)*

57“சரியான ஒன்றைக் குறித்து ஏன் உங்
களால் முடிவெடுக்க முடியவில்லை? 58ஒருவன்
உங்கள் மீது வழக்குத் தொடுக்கும்போது
அதைத் தீர்க்கும் பொருட்டு அவனோடு நீதி
மன்றத்துக்குப் போகும்போது, வழியிலேயே
அதை தீர்த்துக்கொள்ள கடினமாக முயற்சி
செய்யுங்கள். அந்த வழக்கைத் தீர்த்து கொள்
ளாவிட்டால் அவன் நியாயாதிபதியிடம் உங்
களை அழைத்துச் செல்லக்கூடும். நியாயாதி
பதி உங்களை ஒரு அதிகாரியிடம் ஒப்படைக்க,
அவன் உங்களைச் சிறையில் தள்ளக் கூடும்.
59அவர்கள் உங்களிடமிருக்கும் கடைசிக்காசு
வரை அனைத்தையும் எடுக்கிறவரைக்கும்
நீங்கள் அங்கிருந்து வெளியே வரப்போவ
தில்லை” என்றார்.

### மனம் மாறுங்கள்

13 அப்போது இயேசுவோடு கூட மக்கள்
சிலர் இருந்தனர். கலிலேயாவிலுள்ள
மக்கள் சிலருக்கு நடந்ததை அவர்கள் இயேசு
வுக்குக் கூறினர். அம்மக்கள் தேவனை வழி
பட்டுக் கொண்டிருக்கையில் அவர்களைப்
பிலாத்து கொன்றான். அவர்கள் தேவனுக்குப்
பலியிட்டுக் கொண்டிருந்த மிருகங்களின்
இரத்தத்தோடு அவர்களின் இரத்தத்தையும்
கலந்தான். 2இயேசு, “அந்த மக்களுக்கு
இவ்வாறு நேரிட்டதால் கலிலேயாவில் உள்ள
மற்ற அனைவரைக் காட்டிலும் அவர்கள்
பாவம் செய்தவர்கள் என நினைக்கிறீர்களா?
3இல்லை, அவர்கள் அப்படிப்பட்டவர்கள்
இல்லை. ஆனால் நீங்கள் அனைவரும் உங்கள்
இதயங்களையும் வாழ்வையும் மாற்றிக் கொள்
ளாவிட்டால் அந்த மக்களைப்போல நீங்களும்
அழிக்கப்படுவீர்கள். 4சீலோவாமிலே கோபுரம்
விழுந்தபோது கொல்லப்பட்ட பதினெட்டுப்
பேரின் நிலை என்ன? எருசலேமில் வசிக்
கின்ற எல்லாரைக் காட்டிலும் அவர்கள்
மிகுந்த பாவம் செய்தவர்கள் என நினைக்
கிறீர்களா? 5அவர்கள் அப்படியல்ல. ஆனால்
நீங்கள் உங்கள் இதயங்களையும், வாழ்க்
கையையும் மாற்றிக்கொள்ளவில்லையெனில்,
நீங்களும் கூட அழிக்கப்படுவீர்கள் என்பதை
நான் உங்களுக்குச் சொல்கிறேன்” என்று
பதில் கூறினார்.

### பயனற்ற மரம்

6இயேசு இந்த உவமையைச் சொன்னார்:
“ஒரு மனிதனுக்கு ஓர் அத்தி மரம் இருந்தது.
தனது தோட்டத்தில் அம்மரத்தை நட்டுவைத்
திருந்தான். மரத்தில் சில பழங்கள் இருக்கிறதா
என அம்மனிதன் பார்த்து வந்தான். அவன்

கண்ணில் பழம் எதுவும் படவில்லை. 7தோட்
டத்தைக் கண்காணித்து வந்த வேலைக்காரன்
ஒருவன் அம்மனிதனுக்கு இருந்தான். அம்
மனிதன் வேலைக்காரனை நோக்கி, ‘மூன்று
ஆண்டுகளாக இந்த மரத்தில் பழங்களுக்காகப்
பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் ஒன்
றும் என் கண்ணில் படவில்லை. அதை
வெட்டி வீழ்த்திவிடு. எதற்கு அது நிலத்தைப்
பாழ்படுத்த வேண்டும்?’ என்றான். 8அதற்கு
வேலைக்காரன், ‘எஜமானரே, இன்னும்
ஓராண்டுக்குள் அந்த மரம் கனி கொடுக்கிறதா
என்று பார்ப்போம். அதைச் சுற்றிலும்
மண்ணைத் தோண்டி கொஞ்சம் உரத்தைப்
போடுவேன். 9அடுத்த ஆண்டு அந்த மரம்
கனி கொடுக்கக்கூடும். அம்மரம் அப்படியும்
கனி தராவிட்டால் நீங்கள் அதை வெட்டிப்
போடலாம்’ என்று பதில் கூறினான்.”

## ஓய்வு நாளில் குணமாக்குதல்

10ஓய்வு நாளில் ஒரு ஆலயத்தில் இயேசு
போதித்துக் கொண்டிருந்தார். 11பிசாசினாலா
கிய அசுத்த ஆவியைத் தன்னுள்ளே கொண்
டிருந்த ஒரு பெண் அந்த ஜெப ஆலயத்தில்
இருந்தாள். பதினெட்டு ஆண்டுகளாக அப்
பெண்ணைப் பிசாசு ஊனப்படுத்திற்று.
அவள் முதுகு கூனலாக இருந்தது. அவள்
நிமிர்ந்து நிற்க முடியவில்லை. 12இயேசு
அவளைப் பார்த்து அழைத்தார். மேலும்
அவளை நோக்கி, “பெண்ணே, உன் நோய்
உன்னை விட்டு நீங்கிற்று” என்றார். 13இயேசு
தன் கைகளை அவள் மேல் வைத்தார். அதே
தருணத்தில் அவளால் நிமிர்ந்து நிற்க முடிந்
தது. அவள் தேவனை வாழ்த்தினாள்.

14ஓய்வு நாளில் இயேசு அவளைக் குணமாக்
கியதைக் குறித்து ஜெப ஆலயத்தின் தலைவர்
கோபம் அடைந்தார். அத்தலைவர் மக்களை
நோக்கி, “வேலை செய்வதற்கு ஆறு நாட்கள்
உள்ளன. அந்த நாட்களில் குணம்பெற வாருங்
கள். ஓய்வு நாளில் குணமடைய வராதீர்கள்”
என்றார்.

15இயேசு பதிலாக, “நீங்கள் வேஷதாரிக
ளான மனிதர். ஓய்வு நாளில் கூட நீங்கள்
எல்லாரும் உங்கள் வீட்டில் கொட்டிலில் இருக்
கும் எருதுவையோ அல்லது கழுதையையோ
அவிழ்த்து நீர் பருகுவதற்கு அழைத்துச் செல்
கிறீர்கள். 16நான் குணமாக்கிய இப்பெண் நமது
யூத சகோதரி.* ஆனால் சாத்தான் அவளைப்
பதினெட்டு ஆண்டுகளாய் பீடித்திருந்தான்.
ஓய்வு நாளில் அவளது நோயினின்று
அவளை விடுவிப்பது நிச்சயமாக தவறல்ல”
என்றார். 17இயேசு இதைக் கூறியபோது அவ
ரை விமர்சித்துக் கொண்டிருந்த அனைவரும்
தங்களைக் குறித்து வெட்கமடைந்தார்கள்.
இயேசு செய்த அற்புதமான காரியங்களைக்
குறித்து எல்லா மக்களும் மகிழ்ச்சியடைந்
தார்கள்.

## கடுகு விதையின் உவமை

(மத்தேயு 13:31-33; மாற்கு 4:30-32)

18பின்பு இயேசு, “தேவனுடைய இராஜ்யம்
எதைப் போன்றது? அதை எதனோடு ஒப்பிடு
வேன்? 19தேவனுடைய இராஜ்யம் கடுகு செடி
யின்* விதையைப் போன்றது. ஒருவன் இந்த
விதையை அவனது தோட்டத்தில் ஊன்றுகி
றான். விதை முளைத்து மரமாகிறது. பறவை
கள் அதன் கிளைகளில் கூடுகளைக் கட்டு
கின்றன” என்றார்.

20மீண்டும் இயேசு, “தேவனின் இராஜ்
யத்தை எதனோடு ஒப்பிடுவேன்? 21ஒரு பெரிய
பாத்திரத்தில் அப்பத்திற்காக வைக்கப்பட்
டிருக்கும் மூன்று மடங்கு அளவுள்ள மாவோடு
ஒரு பெண் கலக்கும் புளிப்பான பொருளுக்கு
ஒப்பானதாக இருக்கிறது. அது மாவு முழு
வதையும் புளிக்கச் செய்யும்” என்றார்.

## குறுகிய வாசல்

(மத்தேயு 7:13-14. 21-23)

22ஒவ்வொரு நகரத்திலும் கிராமத்திலும்
இயேசு போதித்துக் கொண்டிருந்தார். அவர்
எருசலேம் வழியாகப் பயணம் செய்து கொண்
டிருந்தார். 23ஒருவன் இயேசுவிடம், “ஆண்ட
வரே, சிலர் மட்டுமே மீட்கப்படுவார்களா?”
என்று கேட்டான்.

24இயேசு, “பரலோகத்திற்கு நேராகத் திறக்
கிற குறுகிய வாசலின் வழியாக நுழைய
முயலுங்கள். பலர் அதனுள் நுழைய முயல்
வார்கள். ஆனால் அவர்களால் நுழைய
இயலாது. 25ஒரு மனிதன் தன் வீட்டின் கதவை
மூடிக்கொண்டால் நீங்கள் வெளியே நின்று
தட்டமுடியும். ஆனால் அவன் திறக்கமாட்டான்.
நீங்கள், ‘ஐயா, எங்களுக்காக கதவைத் திறக்
கவும்’ என்று கேட்க முடியும். அம்மனிதன்,
நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள் என்று எனக்
குத் தெரியாது’ என்பான். 26பிறகு ‘நீங்கள்
அவனிடம் ‘நாங்கள் உங்களோடு உண்டு,
குடித்தோமே. நீங்கள் எங்களது நகரங்களில்
போதித்தீர்களே’ என்று சொல்லுவீர்கள்.
27அப்போது அவன், ‘உங்களை நான் அறி
யேன். எங்கிருந்து வருகிறீர்கள். என்னிட
மிருந்து போய்விடுங்கள். நீங்கள் பிழைகளைச்
செய்கிற மனிதர்கள்’ என்பான். 28நீங்கள்,
ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு, மற்றும் எல்
லா தீர்க்கதரிசிகளையும் தேவனின் இராஜ்
யத்தில் காண்பீர்கள். ஆனால் நீங்களோ
வெளியே விடப்படுவீர்கள். பயத்தாலும் கோ
பத்தாலும் உரக்கச் சத்தமிடுவீர்கள். 29கிழக்கு,
மேற்கு, வடக்கு, தெற்கு ஆகிய திசைகளில்

**யூத சகோத**ரி இலக்கிய வழக்குப்படி ‘ஆபிரகாமின் மகள்.’

**கடுகுச் செடி** இது மனிதனை விட உயர மாக வளரும் செடி. ஆனால் இதன் விதை மிகமிகச் சிறியதாகும்.

*இருந்து மக்கள் வருவார்கள். தேவனுடைய*
*இராஜ்யத்தில் மேசையருகே அவர்கள் அமர்*
*வார்கள்.* **30***வாழ்க்கையில் மிகவும் தாழ்ந்த*
*இடத்தில் இருந்த மக்களுக்குத் தேவனுடைய*
*இராஜ்யத்தில் மிகவும் உயர்ந்த இடம்*
*கொடுக்கப்படும். இப்போது உயர்ந்த இடத்தில்*
*இருக்கும் மக்கள் தேவனுடைய இராஜ்யத்தில்*
*தாழ்ந்த இடத்தில் இருப்பார்கள்" என்று*
*கூறினார்.*

### எருசலேமில் இயேசு மரிப்பார்
*(மத்தேயு 23:37-39)*

**31***அப்போது, சில பரிசேயர்கள், "இங்*
*கிருந்து சென்று ஒளிந்துகொள்ளும். ஏரோது*
*மன்னன் உம்மைக் கொல்ல விரும்புகிறான்"*
*என்று இயேசுவிடம் வந்து சொன்னார்கள்.*
**32***அவர்களை நோக்கி, இயேசு, "அந்த நரி*
*யிடம் (ஏரோது) போய் 'இன்றும், நாளையும்*
*நான் மக்களிடமிருந்து அசுத்த ஆவிகளைத்*
*துரத்தி, குணப்படுத்துதலாகிய என் வே*
*லையை முடிக்க வேண்டும். மறுநாள், என்*
*வேலை முடிந்து விடும்'* **33***அதற்குப் பிறகு,*
*எல்லாத் தீர்க்கதரிசிகளும் எருசலேமில் மரிக்க*
*வேண்டும் என்பதால் நான் என் வழியில்*
*செல்ல வேண்டும் என்று சொல்லுங்கள்"*
*என்றார்.*
**34***"எருசலேமே! எருசலேமே! நீ தீர்க்கதரிசி*
*களைக் கொலை செய்கின்றாய். தேவன்*
*உன்னிடம் அனுப்பிய அந்த மனிதர்களைக்*
*கல்லெறிந்து கொல்கிறாய். பற்பல வேளை*
*களில் உன் மக்களுக்கு உதவ விரும்பினேன்.*
*ஒரு கோழி தன் குஞ்சுகளை சிறகுகளின்*
*கீழே சேர்ப்பதுபோல நான் உன் மக்களை*
*ஒருமித்து சேர்க்க விரும்பினேன். ஆனால் நீ*
*என்னை அனுமதிக்கவில்லை.* **35***இப்போது*
*உன் வீடு வெறுமையானதாக விடப்பட்டிருக்*
*கும். நீங்கள், "தேவனின் பெயரால் வருகிறவர்*
*தேவனால் ஆசீர்வதிக்கப்பட்டவர்* என்று*
*மீண்டும் சொல்கிறவரைக்கும், நீங்கள் என்*
*னை பார்க்கமாட்டீர்கள் என்பதை நான் உங்க*
*ளுக்குச் சொல்கிறேன்" என்றார் இயேசு.*

### ஓய்வு நாளில் குணப்படுத்துவது சரியா?

**14** *ஓய்வு நாளில் இயேசு பரிசேயர்களின்*
*தலைவனாகிய ஒருவனின் வீட்டுக்கு*
*அவனோடு உணவு உண்ணச் சென்றார். அங்*
*கிருந்த ஜனங்கள் இயேசுவைக் கவனித்துக்*
*கொண்டிருந்தார்கள்.* **2***கொடிய நோய்* உள்ள*
*ஒரு மனிதனை இயேசுவின் முன்னே கொண்டு*
*வந்தார்கள்.* **3***இயேசு பரிசேயரிடமும், வேதபார*
*கரிடமும், "ஓய்வு நாளில் குணப்படுத்துவது*
*சரியா அல்லது தவறா?" என்று கேட்டார்.*
**4***ஆனால் அவர்கள் அந்தக் கேள்விக்கு பதில்*
*சொல்லவில்லை. எனவே இயேசு அந்த மனி*
*தனை அழைத்து அவனைக் குணமாக்கினார்.*
*பின்னர் இயேசு அந்த மனிதனை அனுப்பி*
*விட்டார்.* **5***பரிசேயரிடமும், வேதபாரகரிடமும்*
*இயேசு, "உங்கள் மகனோ அல்லது வேலை*
*செய்யும் மிருகமோ ஓய்வு நாளில் ஒரு கிணற்*
*றில் விழுந்து விட்டால் விரைந்து வெளியே*
*எடுப்பீர்கள் என்பது உங்களுக்குத் தெரியும்"*
*என்றார்.* **6***இயேசு கூறியதற்கு எதிராக பரிசே*
*யர்களும் வேதபாரகர்களும் எதையும் கூற*
*முடியவில்லை.*

### சுயமுக்கியத்துவம் வேண்டாம்

**7***விருந்தினர்களில் சிலர் மதிப்புக்குரிய*
*உயர்ந்த இடத்தில் அமருவதற்காக தேர்ந்தெடுத்*
*துக்கொண்டிருப்பதை இயேசு கவனித்தார்.*
*எனவே இயேசு இவ்வுவமையைச் சொன்*
*னார்.* **8***"ஒருவன் உங்களை ஒரு திருமணத்*
*திற்காக அழைக்கும்போது, மிக முக்கியமான*
*இருக்கையில் அமராதீர்கள். அந்த மனிதன்*
*உங்களைக் காட்டிலும் முக்கியமான மனிதர்*
*ஒருவரை அழைத்திருக்கக் கூடும்.* **9***நீங்கள் முக்*
*கியமான இருக்கையில் அமர்ந்து கொண்*
*டிருக்கையில் உங்கள் இருவரையும் அழைத்த*
*மனிதன் வந்து, 'உங்கள் இருக்கையை இவருக்*
*குக் கொடுங்கள்' என்று கூறக்கூடும். எனவே*
*கடைசி இடத்தை நோக்கி, நீங்கள் செல்லக்*
*கூடும். உங்களுக்கு அது அவமானமாக இருக்*
*கும்.* **10***எனவே ஒருவன் உங்களை அழைக்கும்*
*போது முக்கியமற்ற இடத்தில் உட்காருங்கள்.*
*அப்போது உங்களை அழைத்த மனிதன் உங்*
*களிடம் வந்து, 'நண்பனே, இன்னும் முக்கிய*
*மான இருக்கையில் வந்து அமருங்கள்'*
*என்பான். அப்போது மற்ற எல்லா விருந்*
*தினர்களும் உங்களை மதிப்பார்கள்.* **11***தன்னை*
*முக்கியமாகக் கருதும் எந்த மனிதனும்*
*தாழ்த்தப்படுவான். தன்னைத் தாழ்த்திக்கொள்*
*கிற மனிதன் உயர்வாக வைக்கப்படுவான்"*
*என்றார்.*

### நீ பலன் பெறுவாய்

**12***பின்பு இயேசு தன்னை அழைத்த பரிசே*
*யனை நோக்கி, "நீ பகலுணவோ, இரவுண*
*வோ அளிக்கையில், உன் நண்பர்கள், சகோ*
*தரர்கள், உறவினர்கள், செல்வந்தர்களாகிய*
*அக்கம்பக்கத்தார் ஆகியோரை மட்டும் அழைக்*
*காதே. மற்றொரு முறை அவர்கள் உன்னைத்*
*தம்மோடு உண்ணுவதற்காக அழைப்பார்கள்.*
*அப்பொழுது உனக்கு உன் பலன் கிடைத்து*
*விடும்.* **13***அதற்கு மாறாக, நீ விருந்தளிக்கும்*
*போது, ஏழைகளையும், முடமானவர்களை*
*யும், நொண்டிகளையும் குருடர்களையும்*
*அழைத்துக்கொள்.* **14***அந்த ஏழைகள் உனக்கு*
*மீண்டும் எதுவும் அளிக்க முடியாததால் நீ*
*ஆசீர்வதிக்கப்படுவாய். அவர்களுக்கு ஒன்று*
*மில்லை. ஆனால் நல்லோர் மரணத்திலிருந்து*

---

**தேவனின் ... பட்டவர்** *சங்கீதம் 118:26.*

**கொடிய நோய்** *நீர்க்கோவை என்னும் நோய். இதனால் உடம்பு மேலும் மேலும் வீங்கிக் கொண்டே போகும்.*

எழுகையில் உனக்கு அதற்குரிய பலன் கிடைக்கும்" என்றார்.

### பெரிய விருந்தின் உவமை

*(மத்தேயு 22:1-10)*

15இயேசுவுடன் மேசையருகே உட்கார்ந்
திருந்த ஒரு மனிதன் இவற்றைக் கேட்டான்.
அவன் இயேசுவிடம், "தேவனின் இராஜ்யத்
தில் உணவை அருந்தும் மக்கள் மிகுந்த
சந்தோஷமாக இருப்பார்கள்" என்றான்.
16இயேசு அவனை நோக்கி, "ஒரு மனிதன்
ஒரு பெரிய விருந்துக்கு ஏற்பாடு செய்தான்.
பலரையும் அவ்விருந்துக்கு அழைத்தான்.
17சாப்பிடும் வேளை நெருங்கியதும்
அவன் வேலைக்காரனை விருந்தினர்களிடம்
அனுப்பி, "வாருங்கள்! உணவு தயாராக
இருக்கிறது" என்று சொல்லுமாறு அனுப்பி
னான். 18ஆனால் அந்த விருந்தினர்கள் எல்
லாம் தம்மால் வர இயலாது எனச் சொல்லி
அனுப்பினார்கள். ஒவ்வொருவரும் ஏதேனும்
ஒரு சாக்குப்போக்கு கூறினார்கள். முதலா
மவன், 'நான் ஒரு வயலை வாங்கியுள்ளேன்.
அதைப் பார்க்கப் போகவேண்டும். தயவு
செய்து மன்னிக்கவும்' என்றான். 19இன்னொரு
வன், 'ஐந்து ஜோடி ஏர்மாடுகள் வாங்கி இருக்
கிறேன். அவைகளை சோதித்து பார்க்கப்
போகவேண்டும். தயவுசெய்து மன்னித்து
கொள்' என்றான்.
20மூன்றாமவன், 'எனக்கு இப்பொழுதுதான்
திருமணமாயிற்று. நான் வர முடியாது' என்
றான். 21எனவே வேலைக்காரன் திரும்பி
வந்தான். நடந்தவற்றை எஜமானருக்குக் கூறி
னான். எஜமானர் சினந்து, தன் வேலைக்
காரனிடம், 'விரைந்து செல். தெருக்களிலும்,
ஊரின் ஒதுக்குப் புறங்களிலும் இருக்கிற
ஏழைகளையும், அங்கவீனர்களையும், குரு
டரையும், முடவர்களையும் அழைத்து வா'
என்றான். 22பின்னர் வேலைக்காரன் அவ
னிடம் வந்து, 'எஜமானரே, நீங்கள் கூறிய
படியே நான் செய்தேன். ஆனால் இன்னும்
அதிக மக்களுக்கு இடமிருக்கிறது' என்றான்.
23எஜமானன் வேலைக்காரனை நோக்கி,
'பெரும் பாதைகள் அருகேயும் கிராமப்புறத்
திற்கும் செல். அங்குள்ள மக்களை வருமாறு
சொல். எனது வீடு முழுவதும் ஆட்களால்
நிரம்பி இருக்க வேண்டும்' என்று வற்புறுத்
தினான். 24மேலும் 'நான் முதலில் அழைத்த
வர்களில் ஒருவர் கூட என்னோடு விருந்
துண்ணப் போவதில்லை?' என்றான்" எனக்
கூறினார்

### முதலில் திட்டமிடுங்கள்

*(மத்தேயு 10:37-38)*

25இயேசுவோடு பலர் பயணம் செய்து
கொண்டு இருந்தனர். இயேசு மக்களை
நோக்கி, 26"என்னிடம் வருகிற ஒருவன்
அவனது தந்தையையோ, தாயையோ, சகோத
ரரையோ, சகோதரிகளையோ, என்னைக்
காட்டிலும் அதிகமாக நேசித்தால் அம்மனிதன்
எனக்குச் சீஷனாக ஆக முடியாது. ஒருவன்
தன்னை நேசிப்பதைக் காட்டிலும் அதிகமாக
என்னை நேசிக்க வேண்டும்! 27ஒருவன் என்
னைப் பின்பற்றும்போது அவனுக்குக் கொ
டுக்கப்பட்டிருக்கும் சிலுவையைச் (துன்பத்
தை) சுமக்காவிட்டால் அவன் எனக்குச் சீஷ
னாக முடியாது. 28ஒரு கோட்டையைக் கட்டும்
முன்பு, முதலில் அமர்ந்து அதைக் கட்டுவதற்கு
எவ்வளவு செலவாகும் என்பதைத் தீர்மானிப்
பீர்கள். வேலையை முடிப்பதற்குத் தேவை
யான பணம் உங்களிடம் இருக்கிறதா என்
பதைப் பார்க்க வேண்டும். 29அதைச் செய்யா
விட்டால் நீங்கள் வேலையைத் தொடங்கி
னாலும், அதை முடிக்க உங்களால் முடியாது.
நீங்கள் அதை முடிக்க முடியாவிட்டால் அதைக்
கவனிக்கிற எல்லா மக்களும் உங்களைப்
பார்த்து நகைப்பார்கள். 30அவர்கள், 'இந்த
மனிதன் கட்ட ஆரம்பித்தான். ஆனால் முடிக்க
முடியவில்லை' என்று சொல்வார்கள்.
31"ஓர் அரசன் மற்றோர் அரசனுக்கு எதி
ராகப் போரிடச் சென்றால், முதலில் அமர்ந்து
திட்டமிடுவான். அரசனிடம் பத்தாயிரம் வீரர்
கள் மட்டுமே இருந்தால் இருபதாயிரம் வீரர்கள்
கொண்ட மற்ற அரசனை தோற்கடிக்க முடி
யுமா எனப் பார்ப்பான். 32அவனால் மற்ற
அரசனை தோற்கடிக்க முடியாதென்றால்,
எதிரி இன்னும் தொலைவான இடத்தில் இருக்
கும்பொழுதே சில ஆட்களை அனுப்பி அந்த
அரசனிடம் சமாதானத்திற்கான பேச்சுவார்த்
தையில் ஈடுபடுவான். 33அதைப் போலவே
முதலில் நீங்கள் திட்டமிடவேண்டும். என்னைப்
பின்பற்ற வேண்டுமானால் உங்களிடம் இருக்
கும் அனைத்தையும் கொடுத்துவிட வேண்டும்,
அவ்வாறு செய்யவில்லை என்றால், நீங்கள்
எனது சீஷராக இருக்க முடியாது!"

### உப்பின் உதாரணம்

*(மத்தேயு 5:13; மாற்கு 9:50)*

34"உப்பு ஒரு நல்ல பொருள். ஆனால் உப்பு
அதன் சுவையை இழந்து போனால் அதனால்
பயன் எதுவும் இல்லை. அதைத் திரும்பவும்
சுவை உடையதாக மாற்ற முடியாது. 35மண்
ணிற்காகவோ, உரமாகவோ, கூட அதனைப்
பயன்படுத்த முடியாது. மக்கள் அதை வீசி
யெறிந்து விடுவார்கள்.
"என்னைக் கேட்கிற மக்களே! கவனியுங்
கள்" என்றார்.

### ஆடு, வெள்ளிக்காசு உவமை

*(மத்தேயு 18:12-14)*

15 வரி வசூலிப்போர் பலரும், தீயோரும்
இயேசு கூறுவதைக் கேட்க வந்தார்கள்.
2உடனே பரிசேயரும் வேதபாரகரும் குறை
கூற ஆரம்பித்தவர்களாய், "பாருங்கள்! இந்த
மனிதன் (இயேசு) தீயோரை வரவேற்று அவர்

களோடு அமர்ந்து உணவு உண்கிறார்” என்
றனர்.
[3]அப்போது அவர்களுக்கு இயேசு பின்
வரும் உவமையைக் கூறினார்: [4]“உங்களில்
ஒருவனுக்கு நூறு ஆடுகள் இருக்கின்றன
என்று வைத்துக் கொள்வோம். அவற்றுள்
ஒன்று காணாமல் போகிறது. அப்போது
அவன் மற்ற தொண்ணூற்று ஒன்பது ஆடு
களையும் தனியே விட்டுவிட்டு காணாமல்
போன ஆட்டைத் தேடிச் செல்லமாட்டானா?
அந்தக் காணாமல் போன ஆட்டைக் கண்டு
பிடிக்கும் வரைக்கும் அவன் அதைத் தேடிக்
கொண்டே இருப்பான். [5]அந்த ஆட்டை அவன்
கண்டுபிடிக்கிறபோது மிகவும் சந்தோஷம்
அடைவான். அந்த மனிதன் அந்த ஆட்டை
தன் தோள்களில் சுமந்துக் கொண்டு தன்
வீட்டை அடைவான். [6]தன் நண்பர்களையும்
அக்கம் பக்கத்தவர்களையும் அழைத்து அவர்
களிடம் ‘எனது காணாமல் போன ஆட்டைக்
கண்டு பிடித்தேன். என்னோடுகூட சந்தோஷப்
படுங்கள்’ என்று கூறுவான். [7]அவ்வாறே,
ஒரு பாவி மனந்திருந்தி தனது வாழ்வை
மாற்றிக் கொள்ளும்போது பரலோகத்தில்
மிகுந்த சந்தோஷம் உண்டாகும் என்று நான்
உங்களுக்குச் சொல்கிறேன். தங்கள் இதயத்தை
மாற்றத் தேவையில்லாத தொண்ணூற்று
ஒன்பது நல்ல மனிதருக்காக ஏற்படும் சந்தோ
ஷத்தைக் காட்டிலும் அந்த ஒரு பாவிக்காக
ஏற்படும் சந்தோஷம் அதிகமாக இருக்கும்.
[8]“ஒரு பெண்ணிடம் பத்து வெள்ளிக் காசு
கள் இருக்கின்றன என்று வைத்துக் கொள்
வோம். அவற்றில் ஒன்றை அவள் தொலைத்து
விடுகிறாள். அவள் ஒரு விளக்கை எடுத்துக்
கொண்டு வீட்டைச் சுத்தம் செய்வாள் அல்
லவா? அந்தக் காசு கிடைக்கும் மட்டும் கவன
மாய் தேடுவாள். [9]தொலைந்துபோன அந்தக்
காசைக் கண்டெடுக்கும்போது அவள் தனது
நண்பர்களையும் அக்கம் பக்கத்தாரையும்
ஒன்றாக அழைத்து அவர்களை நோக்கி, ‘நான்
தொலைத்த காசைக் கண்டெடுத்ததால் நீங்கள்
என்னோடுகூட சந்தோஷப்படுங்கள்’ என்
பாள். [10]அதைப் போலவே ஒரு பாவி மனந்
திருந்தி தன் வாழ்வை மாற்றினால் தேவ
தூதருக்கு முன்பாக மிகுந்த மகிழ்ச்சி உண்
டாகும்” என்றார்.

### காணாமற்போன மகன்

[11]அப்போது இயேசு, “ஒரு மனிதனுக்கு
இரண்டு பிள்ளைகள் இருந்தனர். [12]இளைய
மகன் தந்தையை நோக்கி, ‘நமக்குச் சொந்த
மான எல்லாப்பொருட்களிலும் எனது பங்கை
எனக்குத் தாருங்கள்’ என்று கூறினான்.
எனவே தந்தை செல்வத்தை இரண்டு பிள்ளை
களுக்கும் பங்கிட்டுக் கொடுத்தான். [13]சில நாள்
களுக்குப் பிறகு இளைய மகன் தனக்குரிய
எல்லாப் பொருட்களையும் எடுத்துக்கொண்டு
வீட்டை விட்டுப் போனான். வேறொரு தூர
தேசத்துக்கு அவன் பிரயாணம் செய்தான்.
அங்கு அவன் பணத்தை மூடனைப்போல
வீணாகச் செலவழித்தான். [14]அவன் தன்னிட
மிருந்த பணம் அனைத்தையும் செலவு செய்
தான். அதற்குப் பின்னர், அந்நாட்டில் வறட்சி
நிலவியது. மழை பெய்யவில்லை. அந்நாட்
டில் எல்லாருக்கும் தேவையான அளவுக்கு
உணவு கிடைக்கவில்லை. அந்த மகன் பசியா
லும், பணமின்மையாலும் துன்பப்பட்டான்.
[15]எனவே அந்த நாட்டில் வாழ்ந்த ஒருவனிடம்
அவன் வேலைக்கு அமர்ந்தான். பன்றிகளுக்கு
தீவனமிடுமாறு அந்த மகனை அம்மனிதன்
அனுப்பினான். [16]அந்த மகன் பசி மிகுதியால்
பன்றிகள் சாப்பிட்டுக்கொண்டிருந்த உணவை
யாகிலும் உண்ண வேண்டுமென விரும்பி
னான். ஆனால் அவனுக்கு ஒருவரும் எந்த
உணவையும் கொடுக்கவில்லை. [17]இளைஞன்
தன் மூடத்தனத்தை உணர்ந்தான். அவன்,
‘என் தந்தையின் எல்லா வேலைக்காரர்களுக்
கும் மிகுதியான உணவு கிடைக்கும். நானோ
உணவின்றி இங்கு இறக்கும் நிலையில் இருக்
கிறேன்.
[18]நான் இங்கிருந்து என் தந்தையிடம்
போய்: தந்தையே, நான் தேவனுக்கு எதிராகப்
பாவம் செய்தேன். உங்களிடமும் தவறு செய்
தேன்.
[19]உங்கள் மகன் என்று அழைக்கப்படும்
அளவுக்கு நான் தகுதியுள்ளவன் அல்லன்.
நான் உங்கள் வேலைக்காரர்களில் ஒருவனாய்
வாழ அனுமதியுங்கள் என்று சொல்லுவேன்’
என்று எண்ணினான். [20]எனவே அந்த மகன்
அங்கிருந்து தன் தந்தையிடம் சென்றான்.

### மகன் திரும்பிவருதல்

“அந்த மகன் தொலைவில் வரும்போதே
அவனது தந்தை பார்த்துவிட்டார். அந்த மக
னின் நிலையைக் கண்டு தந்தை வருந்தினார்.
எனவே தந்தை மகனிடம் ஓடினார். மகனை
அரவணைத்து முத்தமிட்டார். [21]மகன், ‘தந்
தையே, நான் தேவனுக்கு எதிராகப் பாவம்
செய்தேன். உங்களுக்கும் தவறு இழைத்தேன்.
உங்கள் மகன் என்று அழைக்கப்படுவதற்
கேற்ற தகுதி எனக்குக் கிடையாது’ என்றான்.
[22]ஆனால் தந்தை வேலைக்காரரை நோக்கி,
‘விரைந்து செல்லுங்கள். விலையுயர்ந்த
ஆடைகளைக் கொண்டுவந்து அவனுக்கு
உடுத்துங்கள். அவன் விரலுக்கு மோதிரம்
அணிவித்துக் காலுக்கு நல்ல பாதரட்சை
களை அணியச் செய்யுங்கள். [23]நம் கொழுத்த
கன்றை கொண்டு வாருங்கள். அதைச்
சமைத்து திருப்தியாய் சாப்பிடுவோம்.
ஒரு விருந்து வைப்போம். [24]என்னுடைய இந்த
மகன் இறந்து போயிருந்தான். மீண்டும்
உயிரோடு வந்துள்ளான். அவன் காணாமல்
போயிருந்தான், இப்போது மீண்டும் கண்டு
பிடிக்கப்பட்டான்’ என்று கூறினார். எனவே
விருந்து ஏற்பாடுசெய்ய ஆரம்பித்தார்கள்.

### மூத்தமகன் வருதல்

25"மூத்த மகன் வயலில் இருந்தான். அவன்
வீட்டுக்கு அருகாமையில் திரும்பி வந்து
கொண்டிருந்தான். இசை, ஆடல் ஆகியவற்றின்
சத்தத்தைக் கேட்டான். 26எனவே மூத்த மகன்
வேலைக்காரச் சிறுவர்களில் ஒருவனை
அழைத்து, 'இவையெல்லாம் எதற்காக நடை
பெறுகின்றன?' என்று கேட்டான். 27வேலைக்
காரன், 'உங்கள் சகோதரன் திரும்பி வந்துள்
ளார். உங்கள் தந்தை கொழுத்த கன்றை உண்ப
தற்காகக் கொன்றுள்ளார். உங்கள் சகோதரன்
பாதுகாப்பாகவும் நல்ல முறையிலும் மீண்டும்
வீட்டுக்குத் திரும்பி இருப்பதால் உங்கள்
தந்தை மகிழ்ச்சியாக இருக்கிறார்' என்றான்.
28மூத்த மகன் கோபமுற்று விருந்துக்குச் செல்
லவில்லை. எனவே தந்தை வெளியே வந்து
அவனிடம் வற்புறுத்தினார். உள்ளே வருமாறு
அழைத்தார். 29மகன் தந்தையை நோக்கி, 'நான்
உங்களுக்கு ஒரு அடிமையைப் போல பல
ஆண்டுகள் உழைத்தேன்! உங்கள் கட்டளைக்கு
எப்போதும் கீழ்ப்படிந்து நடந்தேன். ஆனால்
ஒரு வெள்ளாட்டையாகிலும் நீங்கள் எனக்
காகக் கொன்றதில்லை. எனக்கும் என் நண்பர்
களுக்கும் நீங்கள் விருந்தளித்ததில்லை.
30ஆனால் உங்கள் இன்னொரு மகன் பணத்தை
எல்லாம் வேசிகளிடம் செலவழித்தான்.
பின்னர் வீடு திரும்பியதும் அவனுக்காகக்
கொழுத்த கன்றுக்குட்டியை கொன்றீர்கள்'
என்றான். 31ஆனால் தந்தை அவனை நோக்கி,
'மகனே! நீ எப்போதும் என்னோடு இருக்
கிறாய். எனக்குரியவை அனைத்தும் உனக்கு
உரியவை. 32நாம் சந்தோஷமாக விருந்துண்ண
வேண்டும். ஏனெனில் உன் சகோதரன் இறந்து
போயிருந்தான், இப்போது உயிரோடு வந்துள்
ளான். காணாமல் போயிருந்தான், ஆனால்
இப்போது கண்டுபிடிக்கப்பட்டான்' என்றார்"
என்று கூறினார்.

### உண்மையான செல்வம்

16 இயேசு அவரது சீஷரை நோக்கி, "ஒரு
காலத்தில் ஒரு செல்வந்தன் வாழ்ந்து
வந்தான். வியாபாரத்தை கவனிக்கும் பொ
ருட்டு அவனிடம் ஒரு அதிகாரி இருந்தான்.
அந்த அதிகாரி ஏமாற்றுவதாக அச்செல்வந்
தனுக்குப் புகார்கள் வந்தன. 2எனவே அந்த
அதிகாரியை அழைத்து அவனை நோக்கி,
'உன்னைக் குறித்து தவறான செய்திகளைக்
கேள்விப்பட்டேன். எனது பணத்தை எவ்
வாறு பயன்படுத்தினாய் என்பதற்கான அறிக்
கையைக் கொடு. இப்போது நீ எனக்கு
அதிகாரியாக இருக்கமுடியாது' என்றான்.
3பின்னர் அந்த அதிகாரி தனக்குள்ளேயே,
'நான் என்ன செய்வேன். என் எஜமானர்
என்னை வேலையில் இருந்து அகற்றிவிட்டார்.
குழிகளைத் தோண்டுமளவு வலிமை என்
னிடம் இல்லை. பிச்சை எடுக்க வெட்கப்
படுகிறேன். 4நான் என்ன செய்யவேண்டுமென
எனக்குத் தெரியும். நான் வேலையை இழக்கும்
போது பிற மக்கள் தம் வீட்டுக்குள் என்னை
வரவேற்கும்படியான ஒரு செயலை நான்
செய்ய வேண்டும்' என்று நினைத்தான்.
5எனவே, அந்த அதிகாரி எஜமானனுக்குக்
கடன் தர வேண்டியவர்களை அழைத்தான்.
முதலாமவனை நோக்கி, 'எனது எஜமான
னுக்கு நீ கொடுக்கவேண்டிய கடன் எவ்
வளவு?' என்றான். 6அவன், 'நான் நூறு குடம்
ஒலிவ எண்ணெய் கடன்பட்டிருக்கிறேன்'
என்றான். அதிகாரி அவனிடம், 'இதோ உன்
பற்றுச் சீட்டு. சீக்கிரம் நீ உட்கார்ந்து உன்
பற்றை குறைத்து எழுது. ஐம்பது குடம் என்று
எழுது' என்றான். 7பின் அதிகாரி மற்றொரு
வனை நோக்கி, 'எனது எஜமானனுக்கு நீ
திருப்பவேண்டிய கடன் எவ்வளவு?' என்
றான். அவன், 'நான் நூறு மரக்கால் கோதுமை
கடன்பட்டிருக்கிறேன்' என்று பதில் சொன்
னான். உடனே அதிகாரி அவனிடம், 'இதோ
உனது பற்று சீட்டு. இதைக் குறைத்து எழுது.
எண்பது மரக்கால் என்று எழுது' என்றான்.
8பின்னர் எஜமானன் நம்பிக்கைக்குத் தகுதி
யற்ற அந்த அதிகாரியை அவன் திறமையாகச்
செய்ததாகப் பாராட்டினான். ஆம், உலகத்திற்
குரிய மனிதர் தங்கள் காலத்து மக்களோடு
வியாபாரத்தில் ஆவிக்குரிய மனிதர்களைக்
காட்டிலும் திறமையானவர்களாகக் காணப்
படுகிறார்கள்.

9"நான் உங்களுக்குச் சொல்கிறேன்.
தேவனிடம் நட்பைக் காப்பாற்றும் பொருட்டு
இந்த உலகத்தில் உனக்குரிய பொருட்களை
எல்லாம் பயன்படுத்து. அந்தப் பொருட்கள்
எல்லாம் அழிந்த பின்னர் என்றும் நிலைத்
திருக்கிற வீட்டில் நீ வரவேற்கப்படுவாய்.
10சிறிய காரியங்களில் நம்பிக்கைக்கு உகந்த
மனிதன் பெரிய காரியங்களிலும் நம்பிக்
கைக்கு ஏற்றவனாயிருப்பான். சிறிய காரியங்
களில் நம்பிக்கைக்குத் தகாதவனாக இருப்
பவன் பெரிய காரியங்களிலும் அவ்வாறே
இருப்பான். 11உலக செல்வங்களிலும் நீங்கள்
நேர்மையற்றவர்களாக இருக்கும்போது உண்
மையான (பரலோக) செல்வத்திலும் நீங்கள்
நேர்மையற்றவர்களாகவே இருப்பீர்கள்.
12யாராவது ஒருவருக்குரிய பொருட்களில்
உங்களை நம்பமுடியாவிட்டால் உங்களுக்குச்
சொந்தமாக எந்தப் பொருளும் கொடுக்கப்
படமாட்டாது.

13"ஒரே நேரத்தில் இரு எஜமானர்களுக்குப்
பணிபுரிய எந்த வேலைக்காரனாலும்
முடியாது. அந்த வேலைக்காரன் ஒரு எஜமா
னனை வெறுத்து, மற்ற எஜமானனை நேசிப்
பான். அல்லது அவன் ஒருவனுக்கு நம்பிக்
கைக்குரியவனாக நடந்துகொண்டு மற்றவனி
டம் வேறு முறையில் நடந்து கொள்வான்.
தேவனுக்கும், பணத்துக்கும் ஒருங்கே சேவை
செய்ய உங்களால் இயலாது" என்றார்.

### தேவ வாக்கியங்கள் மாறாதவை

(மத்தேயு 11:12-13)

14பரிசேயர்கள் இச்செய்திகளை எல்லாம்
கேட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்கள் எல்
லாரும் பணத்தை நேசித்ததால் இயேசுவை
விமர்சித்தார்கள். 15இயேசு பரிசேயர்களை
நோக்கி, “மக்களின் முன்பாக நீங்கள் நல்ல
வர்களாக நடந்து கொள்கிறீர்கள். ஆனால்
உங்கள் இதயத்தில் உண்மையாகவே என்ன
இருக்கிறதென தேவன் அறிவார். மனிதர் முக்
கியமாகக் கருதும் காரியங்கள் தேவனின்
வெறுப்புக்கு உரியவை ஆகின்றன.

16“மோசேயின் சட்டத்திற்கிணங்கவும், தீர்க்
கதரிசிகளின் வாக்கியங்களுக்கேற்பவும் மக்
கள் வாழ்வதைத் தேவன் விரும்பினார்.
ஆனால் ஞானஸ்நானம் கொடுத்த யோவான்
ஸ்நானகன் காலம் தொடங்கி, தேவனின்
இராஜ்யத்தைப் பற்றிய நற்செய்தி சொல்லப்
பட்டு வருகிறது. தேவனுடைய இராஜ்யத்தில்
செல்வதற்குப் பலர் மிகவும் முயன்று வரு
கிறார்கள். 17வேதவாக்கியங்களில் காணப்
படுகிற ஒரு எழுத்தின் ஒரு சிறிய பகுதியைக்
கூட மாற்ற முடியாது. அதைக் காட்டிலும்
வானமும், பூமியும் அழிந்து போவதே எளிதாக
இருக்கும்.”

### விவாகரத்தும் மறுமணமும்

18“ஒருவன் தனது மனைவியை விவா
கரத்து செய்து, இன்னொரு பெண்ணை
மணந்துகொண்டால் அவன் விபசாரம் என்
னும் பாவத்தைச் செய்தவன் ஆவான். விவா
கரத்துக்கு உட்பட்ட ஒரு பெண்ணை மணந்து
கொள்பவனும் தீய விபசாரம் என்னும் குற்றத்
திற்கு உட்பட்டவன் ஆவான்” என்றார்.

### செல்வந்தனும் லாசருவும்

19விலையுயர்ந்த ஆடைகளை எப்போதும்
அணிந்து கொண்டிருந்த ஒரு செல்வந்தன்
இருந்தான். ஒவ்வொரு நாளும் விருந்துண்டு
களிக்கும் அளவுக்கு மிகுந்த செல்வந்தனாக
இருந்தான். 20லாசரு என்று அழைக்கப்பட்ட
மிகவும் ஏழையான மனிதனும் இருந்தான்.
லாசருவின் சரீரம் முழுவதும் புண்ணாக இருந்
தது. செல்வந்தனின் வீட்டு வாசலருகே லாசரு
அடிக்கடி படுத்துக்கிடப்பான். 21செல்வந்தனின்
மேசையில் மீதியாக விடப்பட்ட உணவுத்
துணுக்குகளை உண்பதற்கு அவன் விரும்
பினான். நாய்கள் வந்து அவனது புண்களை
நக்கின.

22பின்னர் லாசரு இறந்தான். தேவதூ
தர்கள் லாசருவை எடுத்துச் சென்று ஆபிரகா
மின் மடியில் வைத்தனர். செல்வந்தனும்
இறந்து அடக்கம் செய்யப்பட்டான். 23அவன்
பாதாளத்திற்கு அனுப்பப்பட்டு மிகுந்த வேத
னையை அனுபவித்தான். தொலைவிலேயே
ஆபிரகாம் தன் மடியில் லாசருவை ஏந்திக்
கொண்டிருப்பதைச் செல்வந்தன் பார்த்தான்.
24அவன், ‘தந்தை ஆபிரகாமே! என்னிடம்
இரக்கம் காட்டுங்கள். அவனது விரலைத் தண்
ணீரில் நனைத்து எனது நாவைக் குளிர்விக்
குமாறு லாசருவை என்னிடம் அனுப்புங்கள்.
இந்த நெருப்பில் நான் துன்பப் பட்டுக்கொண்
டிருக்கிறேன்’ என்று சத்தமிட்டுக் கூறினான்.
25ஆனால் ஆபிரகாம், ‘எனது மகனே! நீ
உலகில் வாழ்ந்ததை நினைவுகூர்ந்து கொள்.
வாழ்வின் நல்ல பொருட்கள் அனைத்தும்
உனக்கிருந்தன. லாசருவிற்கு எல்லா தீமை
களும் நேர்ந்தன. இப்போது அவனுக்கு இங்கு
ஆறுதல் கிடைக்கிறது. நீயோ துன்பப்பட்டுக்
கொண்டிருக்கிறாய். 26மேலும் உனக்கும்,
எங்களுக்கும் மத்தியில் ஒரு பெரிய பிளவு
உள்ளது. உனக்கு உதவுவதற்காக யாரும்
இங்கிருந்து அங்கு கடந்து வரமுடியாது’
என்றான். 27செல்வந்தன், ‘அப்படியானால்
தயவுசெய்து பூமியில் இருக்கும் என் தந்தை
யின் வீட்டுக்கு லாசருவை அனுப்புங்கள்.
28எனக்கு ஐந்து சகோதரர்கள் இருக்கிறார்கள்.
கொடுமை மிகுந்த இந்த இடத்துக்கு அவர்கள்
வராதபடிக்கு லாசரு எனது சகோதரர்களை
எச்சரிக்கட்டும்’ என்றான். 29ஆனால் ஆபிர
காம், ‘அவர்கள் படிப்பதற்கு மோசேயின்
சட்டங்களும் தீர்க்கதரிசிகளின் நூல்களும்
உள்ளன. அவர்கள் அவற்றிலிருந்து கற்றுக்
கொள்ளட்டும்’ என்றான். 30ஆனால் செல்வந்
தன், ‘இல்லை, தந்தை ஆபிரகாமே! இறந்தோரி
லிருந்து ஒருவன் சென்று கூறினால், அவர்கள்
நம்பிக்கை கொண்டு தம் மனதையும் வாழ்
வையும் மாற்றிக்கொள்வார்கள்’ என்றான்.
31ஆனால் ஆபிரகாம் அவனை நோக்கி,
‘இல்லை! உனது சகோதரர்கள் மோசேக்கும்
தீர்க்கதரிசிகளுக்கும் செவிசாய்க்கவில்லை
என்றால், இறந்தோரில் இருந்து வருகின்ற
ஒருவன் கூறுவதையும் கேட்கமாட்டார்கள்’
என்றான்” என இயேசு கூறினார்.

17 இயேசு தன் சீஷர்களை நோக்கி, “மக்கள்
பாவம் செய்யும்படியான காரியங்கள்
நிச்சயமாய் நடக்கும். ஆனால் இது நடக்கும்
படியாய்ச் செய்கிறவனுக்குத் தீமை விளை
யும். 2பலவீனமான மனிதர்கள் பாவம் செய்யும்
படியாகச் செய்கிற ஒருவனுக்குத் தீமை
விளையும். அவன் கழுத்தில் அரைக்கிற கல்
லைக் கட்டி அவனை கடலில் அமிழ்த்துவது
அவனுக்கு நல்லதாக இருக்கும். 3எனவே
எச்சரிக்கையாக இருங்கள்!

“உங்கள் சகோதரன் பாவம் செய்தால்
அவனைக் கண்டியுங்கள். ஆனால் அவன்
வருந்திப் பாவம் செய்வதை விட்டு விட்டால்,
அவனை மன்னியுங்கள். 4ஒரே நாளில் உங்கள்
சகோதரன் ஏழு முறை உங்களிடம் தவறு
செய்தும் ஒவ்வொரு முறையும் உங்களிடம்
மன்னிப்பு வேண்டினான் என்றால், நீங்கள்
அவனை மன்னிக்க வேண்டும்” என்றார்.

### விசுவாசத்தின் மேன்மை
5சீஷர்கள் இயேசுவை நோக்கி, “இன்னும்
மிகுந்த விசுவாசத்தை எங்களுக்கு வழங்குங்
கள்” என்றார்கள். 6கர்த்தர், “உங்கள் விசு
வாசம் ஒரு கடுகளவு பெரியதாக இருந்தால்
இந்த முசுக்கட்டை மரத்தைப் பார்த்து, ‘நீ
தானாகவே பெயர்ந்து கடலில் விழு’ என்று
கூறினால் அந்த மரமானது உங்களுக்குக் கீழ்ப்
படியும்.

### நல்ல ஊழியர்கள்
7“வயலில் வேலை செய்கிற ஊழியன்
ஒருவன் உங்களில் ஒருவனுக்கு இருக்கிறான்
என்று வைத்துக் கொள்வோம். அவன் நிலத்
தை உழுது கொண்டோ, ஆடுகளை மேய்த்துக்
கொண்டோ இருக்கிறான். அவன் வயலிலி
ருந்து வீட்டுக்கு வந்ததும் அவனிடம் நீங்கள்
என்ன சொல்வீர்கள்? வந்து சாப்பிட உட்கார்
என்பீர்களா? 8இல்லை. நீங்கள் அந்த ஊழிய
னிடம், ‘நான் உண்பதற்கு ஏதேனும் தயார்
செய். நான் சாப்பிட்டு முடிக்கும்வரை பரிமா
றுவதற்கான ஆடைகளை அணிந்து கொள்.
பிறகு நீ சாப்பிடவும், பருகவும் செய்யலாம்’
என்பீர்கள். 9தன் வேலையைச் செய்வதற்காக
அவனுக்கு விசேஷமாக நன்றி செலுத்த வேண்
டியது இல்லை. அவனது எஜமானன் சொல்
வதை மட்டும் அவன் செய்து கொண்டிருக்
கிறான். 10அதுவே உங்களுக்கும் பொருந்தும்.
நீங்கள் செய்யும்படியாக கூறப்பட்ட காரியங்
களை நீங்கள் செய்யும்போது நீங்கள், ‘எந்த
விசேஷ நன்றியறிதலுக்கும் நாங்கள் தகுதி
யுடையவர்கள் அல்ல. நாங்கள் செய்யவேண்
டிய வேலையையே செய்து முடித்தோம்’
என்று சொல்ல வேண்டும்” என்றார்.

### நன்றியுடனிருங்கள்
11இயேசு எருசலேமுக்குப் பிரயாணம் செய்
துக்கொண்டிருந்தார். கலிலேயாவைக் கடந்து
அவர் சமாரியாவுக்குப் போனார். 12அவர்
ஒரு சிற்றூருக்கு வந்தார். பத்து மனிதர்கள்
அவரை அங்கு சந்தித்தார்கள். அவர்கள்
தொழு நோயால் பாதிக்கப்பட்டவர்களாதலால்
அவர் அருகே வரவில்லை. 13ஆனால் அம்
மனிதர்கள் இயேசுவை நோக்கி, உரக்கக் கூவி,
“இயேசுவே! குருவே! தயவுசெய்து எங்களுக்கு
உதவி செய்யுங்கள்” என்றார்கள்.
14அம்மனிதர்களைப் பார்த்தபோது இயேசு,
“போய் ஆசாரியர் முன்பு உங்களை நீங்களே
காட்டுங்கள்” என்றார்.
அந்தப் பத்து மனிதர்களும் ஆசாரியரிடம்
போய்கொண்டிருக்கையில் அவர்கள் குணம்
அடைந்தார்கள். 15அவர்களில் ஒருவன் தான்
சுகம்பெற்றதைக் கண்டபோது இயேசுவிடம்
திரும்பிச் சென்றான். அவன் உரத்த குரலில்
தேவனுக்கு நன்றியைத் தெரிவித்தான்.
16அவன் இயேசுவின் பாதங்களில் விழுந்தான்.
அந்த மனிதன் இயேசுவுக்கு நன்றி கூறினான்.
(இந்த மனிதன் ஒரு சமாரியன். யூதன் அல்லன்)
17இயேசு, “பத்து மனிதர்கள் நலமடைந்தனர்.
மற்ற ஒன்பதுபேர் எங்கே? 18தேவனுக்கு நன்றி
சொல்லுவதற்குத் திரும்பி வந்தவன் இந்த
சமாரியன் மட்டும் தானா?” என்று கேட்டார்.
19பின்பு இயேசு அவனை நோக்கி, “எழுந்திரு,
நீ போகலாம். நீ விசுவாசித்ததால் குணம்
பெற்றாய்” என்றார்.

### உங்களுக்குள் தேவராஜ்யம்
(மத்தேயு 24:23-28, 37-41)

20பரிசேயர்களில் சிலர் இயேசுவை நோக்கி,
“தேவனின் இராஜ்யம் எப்போது வரும்?”
என்று கேட்டார்கள். இயேசு பதிலாக, “தேவ
னுடைய இராஜ்யம் வந்து கொண்டிருக்கிறது,
ஆனால் நீங்கள் கண்களால் பார்க்கும்படியான
வகையில் அல்ல. 21‘பாருங்கள், தேவனுடைய
இராஜ்யம் இங்கே இருக்கிறது’ அல்லது
‘அங்கே இருக்கிறது’ என்று மக்கள் சொல்ல
மாட்டார்கள். இல்லை, தேவனுடைய இராஜ்
யம் உங்களுக்குள்ளேயே இருக்கிறது” என்
றார்.
22பின்பு இயேசு அவரது சீஷர்களை
நோக்கி, “மனித குமாரனின் நாட்களில்
ஒன்றை நீங்கள் காண விரும்பும் காலம் வரும்.
ஆனால் உங்களால் அதைப்பார்க்க இயலாது.
23மக்கள் உங்களிடம், ‘பாருங்கள். அது அங்கே
இருக்கிறது’ அல்லது ‘பாருங்கள். இங்கே அது
இருக்கிறது’ என்பார்கள். நீங்கள் இருக்கும்
இடத்தில் நிலைத்திருங்கள். எங்கேயும் தேடா
தீர்கள்” என்றார்.

### இயேசு மீண்டும் வரும்முன் நடப்பவை
24“மனித குமாரன் திரும்ப வருவார், என்
பதை நீங்கள் அறிவீர்கள். அவர் வரும் நாளில்
வானில் ஒரு முனையில் இருந்து மறு
முனைக்கு ஒளிவிடும் மின்னலைப்போல
அவர் ஒளிவீசுவார். 25ஆனால் முதலில் மனித
குமாரன் பல துன்பங்களைத் தாங்கி இந்தக்
காலத்து மக்களால் கொல்லப்பட வேண்டும்.
26நோவா வாழ்ந்த காலத்தைப்போலவே மீண்
டும் மனித குமாரன் வரும்பொழுதும் நடக்கும்.
27நோவாவின் காலத்தில் நோவா படகில்
நுழைந்த தினத்தில் கூட மக்கள் உண்டு, பருகி,
மணம் செய்து வாழ்ந்தார்கள். அப்பொழுது
வெள்ளப் பெருக்கு ஏற்பட்டு எல்லா
மக்களையும் கொன்றது. 28தேவன், லோத்தின்
காலத்தில் சோதோமை அழித்ததைப்
போலவே அதுவும் இருக்கும். அந்த மக்கள்
உண்டு பருகி, வாங்கி, விற்று, நட்டு, தங்களுக்
காக வீடுகளைக் கட்டிக்கொண்டு இருந்தார்
கள். 29லோத்து தனது ஊரை விட்டுப்போன
நாளில் கூட மக்கள் இவற்றையெல்லாம் செய்து
கொண்டு இருந்தார்கள். வானத்தில் இருந்து
அக்கினி வந்து அவர்கள் எல்லாரையும்
கொன்றது. 30மனித குமாரன் மீண்டும் வரும்
போதும் இதே விதமாக நடக்கும்.

31“அந்த நாளில் ஒரு மனிதன் கூரையின்மீது
இருந்தால், அவன் உள்ளேபோய் தனது பொ
ருட்களை எடுத்துக்கொள்வதற்கு அவனுக்கு
நேரம் இருக்காது. ஒரு மனிதன் வயலில் இருந்
தால், அவன் வீட்டுக்குத் திரும்பிச் செல்ல
முடியாது.
32“லோத்தின் மனைவிக்கு* என்ன நேரிட்
டது என்பதை நினைவுகூருங்கள். 33தன் உயி
ரைக் காப்பாற்றிக்கொள்ள முயலும் ஒருவன்
அதை இழந்து போவான். ஆனால் உயிரைக்
கொடுக்கிறவனோ அதை மீட்டுக்கொள்வான்.
34இரவில் ஒரே அறையில் இரண்டுபேர் உறங்
கிக்கொண்டிருக்கக் கூடும். ஒருவன் எடுத்துக்
கொள்ளப்படுவான். மற்றவன் விட்டு விடப்படு
வான். 35இரு பெண்கள் ஒருமித்து தானியங்
களை அரைத்துக் கொண்டிருக்கக் கூடும்.
ஒருத்தி எடுத்துக் கொள்ளப்படுவாள். மற்றொ
ருத்தி விட்டு விடப்படுவாள்” என்றார்.
36* 37சீஷர்கள் இயேசுவிடம், “ஆண்டவரே,
இது எங்கே நடக்கும்?” என்று கேட்டார்கள்.
பதிலாக இயேசு, “வட்டமிடுகிற கழுகுகளை
பார்ப்பதின் மூலம் இறந்த சடலத்தை மக்கள்
எப்போதும் கண்டு பிடிக்க முடியும்” என்றார்.

### பலன் தரும் தேவன்

18 சீஷர்கள் எப்போதும் பிரார்த்தனை
செய்யவும், நம்பிக்கை இழக்காதிருக்
கவும் இயேசு அவர்களுக்கு கற்பித்தார். அவர்
களுக்கு கற்றுத்தரும் பொருட்டு இயேசு பின்
வரும் உவமையைப் பயன்படுத்தினார்: 2“ஒரு
ஊரில் ஒரு நியாயாதிபதி இருந்தான். அவன்
தேவனைக்குறித்துக் கவலைப்படவில்லை.
மக்கள் தன்னைப்பற்றி என்ன நினைக்கிறார்
கள் என்பதைக் குறித்தும் அவன் அக்கறையற்
றவனாக இருந்தான். 3அதே ஊரில் ஒரு பெண்
இருந்தாள். அவள் கணவன் இறந்து போனான்.
அந்தப் பெண் பல முறை நியாயாதிபதியிடம்
வந்து, ‘எனக்குத் தீமை செய்கிற ஒரு மனிதன்
உள்ளான். எனக்கு நீதி வழங்குங்கள்’ என்
றாள். 4அப்பெண்ணுக்கு உதவுவதற்கு நியா
யாதிபதி விரும்பவில்லை. பல நாள்களுக்குப்
பிறகு நியாயாதிபதி தனக்குள், ‘நான் தேவ
னைப்பற்றி அக்கறை கொள்வதில்லை. மக்கள்
எண்ணுவதைக் குறித்தும் நான் அக்கறையில்
லாதவனாக இருக்கிறேன். 5ஆனால் இப்பெண்
எனக்குத் தொந்தரவு தருகிறாள். அவள்
கேட்பதை நான் செய்துவிட்டால் எனக்குத்
தொல்லை கொடுப்பதை நிறுத்தி விடுவாள்.
அவள் விரும்புவதை நான் செய்யாவிட்டால்
நான் சலிப்புறும் வரைக்கும் என்னைத் தொந்
தரவு செய்வாள்” என்று எண்ணினான்.
6“தீய நியாயாதிபதி கூறுவதைக் கவனமு
டன் கேளுங்கள். 7தேவனுடைய மனிதர்கள்
இரவும் பகலும் அவரை வேண்டுகிறார்கள்.
தம் மக்களுக்குத் தேவன் நியாயமானவற்றை
வழங்குவார். தம் மக்களுக்குப் பதில் கூறு
வதில் அவர் தயங்கமாட்டார். 8நான் உங்களுக்
குச் சொல்கிறேன். தேவன் அவரது மக்களுக்கு
வேகமாக உதவிச்செய்வார். ஆனால் மனித
குமாரன் மீண்டும் வரும்போது பூமியில்
அவரை நம்புகின்ற மக்களைக் காண்பாரா?”
என்று கர்த்தர் கேட்டார்.

### தேவனுக்கு ஏற்றவன் யார்?

9தங்களை மிக நல்லவர்களாக எண்ணிக்
கொண்ட சில மனிதர்கள் இருந்தார்கள். பிற
ரைக் காட்டிலும் அவர்கள் மிக நல்லவர்கள்
என்பதைப் போன்று அவர்கள் நடித்துக்
கொண்டிருந்தார்கள். அவர்களுக்குப் போதிப்
பதற்கு இயேசு இந்த உவமையைப் பயன்படுத்
தினார்: 10“ஒரு பரிசேயனும் ஒரு வரி வசூலிப்
பவனும் வாழ்ந்து வந்தனர். ஒருநாள் இருவரும்
தேவாலயத்திற்குப் பிரார்த்தனை செய்யச்
சென்றார்கள். 11வரி வசூலிப்பவனுக்குச் சற்று
தொலைவில் பரிசேயன் தனிமையாக நின்று
கொண்டான். அவன், ‘தேவனே, நான் மற்ற
மக்களைப் போன்று தீயவனாக இல்லாதிருப்
பதால் உங்களுக்கு நன்றி சொல்கிறேன்.
திருடுகிற, ஏமாற்றுகிற, தீய ஒழுக்கத்தில்
ஈடுபடுகிற மக்களைப் போன்றவன் அல்லன்
நான். இந்த வரி வசூலிப்பவனைக் காட்டிலும்
நான் நல்லவனாக இருப்பதால் உங்களுக்கு
நன்றி சொல்கிறேன். 12நான் நல்லவன். வாரத்
தில் இரண்டு நாள் உபவாசம் இருக்கிறேன்.
நான் சம்பாதிப்பதில் பத்தில் ஒரு பங்கு தேவா
லயத்திற்குக் கொடுத்துவிடுகிறேன்’ என்றான்.
13“வரி வசூலிப்பவனும் தனிமையாய்
போய் நின்றான். அவன் பிரார்த்திக்கும்போது
வானத்தைக் கூட ஏறெடுத்துப் பார்க்கவில்லை.
அவன், ‘தேவனே, என்மேல் இரக்கமாய்
இருங்கள். நான் ஒரு பாவி’ என்று மார்பில்
அடித்துக்கொண்டு கதறினான். 14நான் உங்
களுக்குச் சொல்கிறேன், இந்த மனிதன் பிரார்த்
தனை முடிந்து வீட்டுக்குச் செல்கையில், தேவ
னுக்கு உகந்தவனாகச் சென்றான். ஆனால்
பிறரைக் காட்டிலும் நல்லவனாக நினைத்துக்
கொண்ட பரிசேயனோ தேவனுக்கு உகந்த
வனாக இருக்கவில்லை. தன்னை உயர்ந்த
வனாகக் கருதிக்கொள்கிற எவனும் தாழ்த்தப்
படுவான். ஆனால் தன்னைத் தாழ்த்திக்கொள்
கிற எவனும் உயர்த்தப்படுவான்.”

### குழந்தைகளும் - இயேசுவும்

(மத்தேயு 19:13-15; மாற்கு 10:13-16)
15இயேசு தொடுமாறு சிலர் தங்கள் சிறு
குழந்தைகளை இயேசுவின் அருகில் கொண்டு

---

**லோத்தின் மனைவி** *லோத்தின் மனைவிக்கு என்ன ஏற்ப்பட்டது என்ற விபரம் காணப்படுவது: ஆதியாகமம் 19:15-17,26.*

**வாக்கியம் 36 லூக்காவின்** *சில கிரேக்க பிரதிகளில் 36வது வாக்கியம் சொல்லப்பட்டுள்ளது. ‘‘இரண்டுபேர் வயலில் வேலை செய்து கொண்டிருப்பார்கள். ஒருவன் ஏற்றுக் கொள்ளப்படுவான். மற்றொருவன் கைவிடப்படுவான்.”*

வந்தார்கள். ஆனால் சீஷர்கள் இதைப் பார்த்
ததும் மக்களை அதட்டித் தடுத்தார்கள்.
16ஆனால் இயேசு அந்தச் சிறு குழந்தைகளைத்
தம்மிடம் அழைத்து, அதன்பின் சீஷர்களை
நோக்கி, "சிறு குழந்தைகள் என்னிடம் வரட்
டும். அவர்களைத் தடுக்காதீர்கள். ஏனெனில்
இச்சிறு குழந்தைகளைப் போன்ற மக்களுக்கே
தேவனின் இராஜ்யம் சொந்தமாக இருக்கிறது.
17நான் உங்களுக்கு உண்மையைச் சொல்
கிறேன். சிறு குழந்தை எல்லாவற்றையும்
ஏற்றுக்கொள்வதைப் போல நீங்களும் தேவ
னின் இராஜ்யத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும்.
அல்லது நீங்கள் ஒருபோதும் அதற்குள் செல்ல
முடியாது" என்றார்.

### செல்வந்தனும் இயேசுவும்

(மத்தேயு 19:16-30; மாற்கு 10:17-31)

18ஒரு யூத அதிகாரி இயேசுவிடம், "நல்ல
போதகரே! நித்திய வாழ்வைப் பெற நான்
என்ன செய்யவேண்டும்?" என்று கேட்டான்.
19இயேசு அவனை நோக்கி, "நீ ஏன்
என்னை நல்லவனென்று அழைக்கிறாய்?
தேவன் மட்டுமே நல்லவர். 20ஆனால் நான்
உன் கேள்விக்குப் பதில் சொல்வேன். உனக்கு
தேவனுடைய பிரமாணங்கள் தெரியும். 'நீ
தீய ஒழுக்கமாகிய பாவத்தைச் செய்யக்கூடாது.
நீ ஒருவரையும் கொலை செய்யக்கூடாது. நீ
எந்தப் பொருளையும் திருடக்கூடாது. பிறரைக்
குறித்துப் பொய் சொல்லக்கூடாது. உனது
தாயையும், தந்தையையும் மதிக்கவேண்
டும்' *" என்றார்.
21ஆனால் அந்த அதிகாரி, "சிறுவனாக
இருந்தபோதே இக்கட்டளைகள் எல்லாவற்
றிற்கும் கீழ்ப்படிந்து நடந்து வருகிறேன்"
என்றான். 22இதைக் கேட்டதும் இயேசு அதிகா
ரியை நோக்கி, 'நீ செய்ய வேண்டிய இன்
னொரு காரியமும் இருக்கிறது. உன் பொ
ருட்கள் எல்லாவற்றையும் விற்று அந்தப்
பணத்தை ஏழைகளுக்குக் கொடு. பரலோகத்
தில் உனக்குப் பலன் கிடைக்கும். பின்பு
என்னைப் பின்பற்றி வா" என்றார். 23ஆனால்
அம்மனிதன் இதைக் கேட்டபோது மிகவும்
வருத்தமடைந்தான். அவன் பெரிய பணக்
காரன், எல்லாப் பணத்தையும் தானே வைத்
துக்கொள்ள விரும்பினான்.
24அவன் வருத்தமடைந்ததை இயேசு கண்ட
போது அவர், "செல்வந்தர் தேவனின் இராஜ்
யத்தில் நுழைவது மிகவும் கடினமானது!
25ஒட்டகம் ஊசியின் காதில் நுழைவது செல்
வந்தன் தேவனின் இராஜ்யத்தினுள் நுழை
வதைக் காட்டிலும் எளிதாக இருக்கும்! "
என்றார்.

### மீட்கப்படக்கூடியவர் யார்?

26மக்கள் இதைக் கேட்டபோது, "அப்படியா
னால் யார் இரட்சிக்கப்பட முடியும்?" என்
றார்கள். 27பதிலாக இயேசு, "மக்களால் செய்ய
முடியாத காரியங்களைத் தேவனால் செய்ய
முடியும்" என்றார். 28பேதுரு "ஆண்டவரே,
எங்களுக்குரிய அனைத்தையும் விட்டு உங்க
ளைப் பின்பற்றினோமே" என்றான். 29இயேசு,
"நான் உங்களுக்கு ஒரு உண்மையைச்
சொல்கிறேன். வீடு, மனைவி, சகோதரர்கள்,
பெற்றோர் அல்லது குழந்தைகளை தேவனின்
இராஜ்யத்துக்காகத் துறந்த ஒவ்வொருவனும்
தான் விட்டவற்றைக் காட்டிலும் மிகுதியாய்
பெற்றுக்கொள்வான். 30இந்த வாழ்வில் பல
மடங்கு அதிகமாய்ப் பெறுவான். அவன்
இறந்த பின்னரும் தேவனோடு நித்தியமாய்
வாழ்வான்" என்றார்.

### இயேசு மரணத்தினின்று எழுவார்

(மத்தேயு 20:17-19; மாற்கு 10:32-34)

31பின்னர், இயேசு பன்னிரண்டு சீஷர்
களிடம் மட்டும் தனித்துப் பேசினார். இயேசு
அவர்களை நோக்கி, "கவனியுங்கள். நாம்
எருசலேமுக்கு போய்க் கொண்டிருக்கிறோம்.
மனித குமாரனைக் குறித்து எழுதும்படியாக
தேவன் தீர்க்கதரிசிகளுக்குக் கூறிய அனைத்
தும் நிறைவேறும். 32அவரது மக்களே
அவருக்கு எதிராகத் திரும்பி அவரை யூதரல்
லாத மக்களிடம் ஒப்படைப்பார்கள். அவர்கள்
அவரைப் பார்த்து நகைத்து, அவர் மீது
உமிழ்வார்கள். அவரை இகழ்ந்து அவமானப்
படுத்துவார்கள். 33அவரைச் சாட்டையினால்
அடித்து பின்னர் கொல்வார்கள். ஆனால்
அவர் இறந்த பிறகு மூன்றாம் நாள் உயிரோடு
மீண்டும் எழுவார்" என்றார். 34சீஷர்கள்
இதைப் புரிந்து கொள்ள முயற்சி செய்தார்கள்.
ஆனால் அவர்களால் முடியவில்லை. அதன்
பொருள் அவர்களுக்கு மறைக்கப்பட்டிருந்தது.

### குருடனைக் குணமாக்குதல்

(மத்தேயு 20:29-34 மாற்கு 10:46-52)

35எரிகோ பட்டணத்திற்கு அருகே, இயேசு
வந்தார். பாதையருகே ஒரு குருடன் உட்
கார்ந்து கொண்டிருந்தான். அவன் மக்களிடம்
பணத்துக்காகப் பிச்சைக் கேட்டுக் கொண்டி
ருந்தான். 36மக்கள் பாதையைக் கடந்து
வருவதைக் கேட்டதும் அம்மனிதன், "என்ன
நிகழ்ந்து கொண்டிருக்கிறது?" என்று கேட்
டான்.
37மக்கள் அவனுக்கு, "நாசரேத்தைச் சேர்ந்த
இயேசு இவ்வழியைக் கடந்து வந்து கொண்டி
ருக்கிறார்" என்று கூறினார்கள்.
38குருடன் பரவசமுற்று, "இயேசுவே தாவீ
தின் குமாரனே! தயவுசெய்து எனக்கு உதவுங்
கள்" என்றான். 39அக்கூட்டத்திற்கு முன்னால்
நடந்து கொண்டிருந்த மக்கள் அக்குருடனை
அதட்டினார்கள். அவனைப் பேசாதிருக்கும்
படியாகக் கூறினார்கள். ஆனால் அக்குருடன்
இன்னும் அதிகமாகச் சத்தமிட்டவாறே,
"தாவீதின் குமாரனே! தயவுசெய்து எனக்கு

---

**நீ ... வேண்டும்** யாத். 20:12-16; உப. 5:16-20.

உதவுங்கள்” என்றான். 40இயேசு, “அந்தக் குரு
டனை என்னிடம் அழைத்து வாருங்கள்”
என்று சொன்னபடி அங்கேயே நின்றுவிட்
டார். அக்குருடன் அருகே வந்தபோது இயேசு
அவனை நோக்கி, 41“நான் உனக்கு என்ன
செய்யவேண்டுமென விரும்புகிறாய்?” என்று
கேட்டார்.

குருடன், “ஐயா, நான் பார்வையடைய
விரும்புகிறேன்” என்றான்.

42இயேசு அவனை நோக்கி, “உன் பார்
வையை மீண்டும் பெறுவாய்! நீ விசுவாசித்த
தால் குணம் பெற்றாய்” என்றார்.

43அப்போது அம்மனிதனால் பார்க்க முடிந்
தது. அவன் தேவனுக்கு நன்றி கூறியவாறே
இயேசுவைத் தொடர்ந்தான். இதைக் கண்ட
எல்லா மக்களும் நடந்ததற்காகத் தேவனை
வாழ்த்தினர்.

### சகேயு

19 எரிகோ பட்டணத்தின் வழியாக இயேசு
சென்று கொண்டிருந்தார். 2எரிகோவில்
சகேயு என்னும் பெயருடைய மனிதன் இருந்
தான். அவன் செல்வந்தனும், முக்கியமானவ
னுமான ஒரு வரி வசூலிப்பவனாவான்.
3அவன் இயேசுவைக் காண விரும்பினான்.
இயேசுவைக் காண விரும்பிய இன்னும்
பலரும் அங்கு இருந்தார்கள். மக்களுக்குப்
பின்னே நின்றபடி இயேசுவைப் பார்க்க முடி
யாதபடி சகேயு குள்ளனாக இருந்தான்.
4எனவே, அவன் இயேசு கடந்து செல்லும்
இடத்தையடைய வேகமாக ஓடிச் சென்றான்.
இயேசுவைப் பார்க்கும் பொருட்டு ஒரு அத்தி
மரத்தின்மீது சகேயு ஏறினான். 5இயேசு
அவ்விடத்துக்கு வந்தபோது, மேலே ஏறிட்டுப்
பார்த்து சகேயு மரத்தின்மீது இருப்பதைக்
கண்டார். இயேசு அவனை நோக்கி, “சகே
யுவே, விரைந்து வா. கீழே இறங்கு. இன்
றைக்கு நான் உன் வீட்டில் தங்கவேண்டும்”
என்றார்.6சகேயு விரைந்து கீழே இறங்கினான்.
தன் வீட்டில் இயேசுவை வரவேற்பதில் அவன்
மிகவும் மகிழ்ந்தான். 7எல்லா மக்களும் இதைக்
கண்டனர். அவர்கள், “எத்தகைய மனித
னோடு இயேசு தங்குகிறார் என்பதைப் பாருங்
கள். சகேயு ஒரு பாவி” என்று புகார் கூறினார்
கள்.

8சகேயு கர்த்தரை நோக்கி, “நான் நல்லதைச்
செய்ய விரும்புகிறேன். என் பணத்தில்
பாதியை ஏழைகளுக்குக் கொடுப்பேன். நான்
யாரையாவது ஏமாற்றி இருந்தால் அவனுக்கு
நான்கு மடங்கு பணத்தைத் திரும்பக் கொடுப்
பேன்” என்றான்.

9இயேசு, “இந்த மனிதன் நல்லவன். உண்
மையில் ஆபிரகாமின் குடும்பத்தைச் சேர்ந்
தவன். இன்றைக்கு சகேயு அவனது பாவங்
களில் இருந்து மீட்கப்பட்டான்.. 10மனித
குமாரன் இழந்து போன மனிதர்களைக் கண்டு
அவர்களை மீட்கவே வந்தார்” என்றார்.

### இருப்பதைப் பயன்படுத்துங்கள்

(மத்தேயு 25:14-30)

11எருசலேமை நெருங்கி இயேசு பயணம்
செய்து கொண்டிருந்தார். தேவனின் இராஜ்யம்
சீக்கிரம் வருமென்று சில மக்கள் எண்ணி
னார்கள். 12மக்களின் எண்ணத்தை இயேசு
அறிந்தார். எனவே அவர்களுக்கு பின்வரும்
உவமையைச் சொன்னார்: “ஒரு உயர்ந்த
கௌரவம்மிக்க மனிதன் மன்னனாக நியமனம்
பெறும்படியாக தூரதேசப் பயணத்திற்காக
ஆயத்தங்கள் செய்து கொண்டிருந்தான்.
பின்னர் திரும்பி வந்து அவனது மக்களை
அரசாளவேண்டுமென்று அவன் திட்டமிட்
டான். 13எனவே அவன் தனது வேலைக்காரர்
களில் பத்து பேரை அழைத்தான். அவன்
ஒவ்வொரு வேலைக்காரனுக்கும் ஒரு பை
நிறைய பணத்தைக் கொடுத்தான். ‘இந்தப்
பணத்தைக்கொண்டு நான் வரும் வரைக்கும்
வியாபாரம் செய்யுங்கள்’ என்றான். 14அந்த
இராஜ்யத்தின் மக்கள் அம்மனிதனை வெறுத்
தார்கள். எனவே அம்மக்கள் அவன் போகும்
தேசத்துக்கெல்லாம் அவனைப் பின்தொடர்ந்து
செல்லுமாறு ஒரு கூட்டத்தினரை அனுப்பினர்.
மற்ற தேசத்துக்கு அக்கூட்டத்தினர் சென்று
‘இந்த மனிதன் எங்களுக்கு அரசன் ஆவதை
நாங்கள் விரும்பவில்லை’ என்றார்கள்.

15“ஆனால் அம்மனிதன் அரசனானான்.
அவன் தன் நாட்டுக்குத் திரும்பியபின்பு,
‘நான் பணம் கொடுத்துள்ள அந்த வேலைக்
காரரை அழையுங்கள். அதைக்கொண்டு அவர்
கள் இன்னும் அதிகமாக எவ்வளவு பணம்
சம்பாதித்திருக்கிறார்கள் என்று அறிய நான்
விரும்புகிறேன்’ என்றான். 16முதல் வேலைக்
காரன் வந்து, ‘ஐயா, நீங்கள் கொடுத்த ஒரு
பை பணத்தைக்கொண்டு நான் பத்து பை
நிரம்பும் அளவுக்குப் பணம் சம்பாதித்திருக்
கிறேன்’ என்றான். 17அரசன் அந்த வேலைக்
காரனை நோக்கி, ‘நல்லது நீ ஒரு நல்ல வே
லைக்காரன். சிறிய காரியங்களில் உன்னை
நம்பக் கூடும் என்று காண்கிறேன். ஆகவே
இப்போது எனது பட்டணங்களில் பத்து பட்
டணங்களை ஆளும்படியாக உன்னை நியமிப்
பேன்’ என்றான். 18இரண்டாவது வேலைக்
காரன் வந்து, ‘ஐயா, நீங்கள் கொடுத்த ஒரு
பை பணத்தைக்கொண்டு நான் ஐந்து பைகள்
சம்பாதித்திருக்கிறேன்’ என்றான். 19மன்னன்
வேலைக்காரனை நோக்கி, ‘நீ ஐந்து பட்டணங்
கள் மேல் ஆட்சி செய்யலாம்’ என்றான்.
20பின்பு மூன்றாவது வேலைக்காரன் வந்தான்.
அந்த வேலைக்காரன் அரசனை நோக்கி,
‘ஐயா, இதோ உங்களுடைய பணப்பை இருக்
கிறது. நான் அதை ஒரு துணியில் பொதிந்து
மறைத்து வைத்தேன். 21உங்கள் வலிமையைக்
கண்டு நான் பயந்து போய் இருந்தேன். நீங்கள்
கடினமான மனிதர் என்பதை அறிவேன்.
உங்களால் சம்பாதிக்கப்படாத பணத்தைக் கூட
நீங்கள் எடுத்துக் கொள்கிறீர்கள். உங்களால்

பயிரிடப்படாத தானியத்தைக் கூட நீங்களே
சேர்த்துக் கொள்கிறீர்கள்' என்றான். 22அரசன்
அந்த வேலைக்காரனை நோக்கி, 'தீயவேலைக்
காரனே, உனது சொந்த வார்த்தையாலேயே
உன்னை நிராகரிப்பேன். நான் ஒரு கடினமான
மனிதன் என்றாய். நான் சம்பாதிக்காத பணத்
தை எடுத்துக்கொள்பவன் என்றும், நான்
பயிரிடாத தானியத்தைச் சேர்த்துக்கொள்
பவன் என்றும் கூறினாய். 23அது உண்மை
யென்றால் நீ என் பணத்தை வங்கியில்
கொடுத்து வைத்திருக்க வேண்டும். அப்போது
நான் திரும்பி வந்தபோது என் பணத்துக்கு
வட்டியாவது கிடைத்திருக்கும்' என்றான்.
24பின் அங்கு நின்று கொண்டிருந்த மனிதரை
நோக்கி, 'அந்த வேலைக்காரனிடமிருந்து
பையை எடுத்து பத்து பைகள் நிரம்ப பணம்
சம்பாதித்தவனுக்குக் கொடுங்கள்" என்றான்.
25அந்த மனிதர்கள் அரசனிடம், 'ஐயா, அந்த
வேலைக்காரனிடம் ஏற்கெனவே பத்துப்
பைகள் பணம் இருக்கின்றனவே,' என்றார்
கள். 26அரசன், 'தன்னிடம் இருப்பவற்றைப்
பயன்படுத்துகிறவனுக்கு இன்னும் அதிக
மாகக் கிடைக்கும். தன்னிடம் இருப்பவற்றைப்
பயன்படுத்தாத மனிதனிடம் இருப்பவையும்
எடுத்துக்கொள்ளப்படும். 27இப்போது எனது
பகைவர்கள் எங்கே? தமக்கு அரசனாக நான்
ஆவதை விரும்பாத மக்கள் எங்கே? என்
பகைவர்களை அழைத்து வந்து அவர்களைக்
கொல்லுங்கள். அவர்கள் மடிவதை நான்
பார்ப்பேன்' என்றான்."

### எருசலேமுக்குள் இயேசு

*(மத்தேயு 21:1-11; மாற்கு 11:1-11;
யோவான் 12:12-19)*

28இவற்றையெல்லாம் கூறியபின்பு இயேசு,
எருசலேமை நோக்கிப் பயணத்தைத் தொடர்ந்
தார். 29ஒலிவ மலையருகே காணப்பட்ட
பெத்பகே, பெத்தானியா ஆகிய ஊர்களருகே
இயேசு வந்தபோது, அவர் இரண்டு சீஷர்களை
அனுப்பினார். 30அவர், "நீங்கள் பார்க்கிற
அந்த ஊருக்குள் செல்லுங்கள். ஊருக்குள்
நுழையும்போதே அங்கு ஒரு கழுதைக்குட்டி
கட்டப்பட்டிருப்பதைக் காண்பீர்கள். எந்த மனி
தனும் அதன்மீது ஏறியதில்லை. அக்கழுதை
யை அவிழ்த்து என்னிடம் கொண்டு வாருங்
கள். 31எந்த மனிதனாவது அக்கழுதையை
ஏன் ஓட்டிக்கொண்டு போகிறீர்கள் என்று
கேட்டால் நீங்கள், 'எங்கள் எஜமானருக்கு
இக்கழுதை வேண்டும்' என்று சொல்லுங்கள்"
என்றார்.

32இரண்டு சீஷர்களும் ஊருக்குள் சென்றார்
கள். இயேசு கூறியபடியே கழுதைக்குட்டியைக்
கண்டார்கள். 33சீஷர்கள் கட்டப்பட்டிருந்த அக்
கழுதையை அவிழ்த்தார்கள். கழுதையின்
சொந்தக்காரர்கள் வந்தார்கள். அவர்கள்
சீஷரை நோக்கி, "எதற்காகக் கழுதையை
அவிழ்த்துக் கொண்டிருக்கிறீர்கள்?" என்றார்
கள். 34சீஷர்கள், "ஆண்டவருக்குத் தேவையாய்
இருக்கிறது" என்று பதில் அளித்தார்கள்.
35சீஷர்கள் கழுதைக் குட்டியை இயேசுவிடம்
கொண்டு வந்து தம் மேலங்கியை அதன்மேல்
போட்டார்கள். பின்பு இயேசுவைக் கழுதை
யின் மேல் அமர்த்தினார்கள். 36இயேசு எருச
லேமுக்குச் செல்லும் பாதை வழியாகக் கழு
தையின் மேல் ஏறிச்சென்றார். இயேசுவுக்கு
முன்பாக சீஷர்கள் தம் அங்கிகளைப் பாதை
யில் விரித்தார்கள்.

37எருசலேமுக்கு அருகில் இயேசு வந்து
கொண்டிருந்தார். அவர் ஒலிவமலை அடி
நகரத்திற்கருகே வந்திருந்தார். அவரது சீஷர்
கள் அனைவரும் மகிழ்வோடு இருந்தார்கள்.
அவர்கள் உரத்த குரலில் களிப்புடன் தேவனை
வாழ்த்தினார்கள். அவர்கள் தாம் பார்த்த
எல்லா வல்லமையான செயல்களுக்கும் தேவ
னுக்கு நன்றி தெரிவித்தார்கள். 38அவர்கள்,

> *"கர்த்தரின் பெயரில் வருகின்ற அரசரை
> தேவன் ஆசீர்வதிப்பாராக!"* 'பரலோகத்
> தில் அமைதியும் தேவனுக்கு மகிமையும்
> உண்டாவதாக!"

என்றனர். 39கூட்டத்தில் இருந்த பரிசேயரில்
சிலர் இயேசுவிடம், "போதகரே, இவற்றைக்
கூறாதபடிக்கு சீஷருக்குச் சொல்லுங்கள்" என்
றார்கள்.

40ஆனால் இயேசு, "நான் உங்களுக்குச்
சொல்கிறேன். இக்காரியங்கள் சொல்லப்பட
வேண்டியவை: என் சீஷர்கள் இவற்றைக்
கூறாவிட்டால், இக்கற்கள் அவற்றைக் கூறும்"
என்று பதிலுரைத்தார்.

### எருசலேமுக்காக அழுதல்

41இயேசு எருசலேமுக்கு அருகே வந்தார்.
அவர் அப்பட்டணத்தைப் பார்த்து, அதற்காக
அழ ஆரம்பித்தார். 42இயேசு எருசலேமைப்
பார்த்துப் பேசினார். அவர், "உனக்கு சமாதா
னத்தை எது வரவழைக்கும் என்று இன்
றைக்கு நீ தெரிந்து கொண்டிருந்தால் நன்றாக
இருக்கும். ஆனால் உனக்கு அது மறைக்கப்
பட்டிருப்பதால் உன்னால் அதை அறிந்து
கொள்ளமுடியாது. 43உன் பகைவர்கள் உன்
னைச் சுற்றிலும் ஒரு மதிலை எழுப்பும் காலம்
வந்து கொண்டிருக்கிறது. உன் பகைவர்கள்
உன்னை எல்லாப் பக்கங்களிலிருந்தும்
வளைத்துக் கொள்வார்கள். 44அவர்கள் உன்
னையும் உன்னிலுள்ள எல்லா மக்களையும்
அழித்து விடுவார்கள். உன் கட்டிடங்களில்
உள்ள கற்களில் ஒன்றும் ஒன்றின் மேல் ஒன்று
நிலைத்திருப்பதில்லை. தேவன் உன்னை மீட்
பதற்காக வந்த காலத்தை நீ அறியாததால்
இவையெல்லாம் நடக்கும்" என்றார்.

---

**கர்த்தரின் ... ஆசீர்வதிப்பாராக** சங்கீதம் 118:26

### தேவாலயத்திற்குச் செல்லுதல்

*(மத்தேயு 21:12-17; மாற்கு 11:15-19; யோவான் 2:13-22)*

45இயேசு தேவாலயத்திற்குள் சென்றார். பல
பொருட்களை விற்றுக்கொண்டிருந்த மக்களை
தேவாலயத்திற்குள் இருந்து துரத்த ஆரம்
பித்தார் 46அவர்களிடம் இயேசு, "'என் வீடு
பிரார்த்தனைக்குரிய வீடாக இருக்கும்'*
என்று வேதவாக்கியங்களில் எழுதப்பட்டிருக்
கிறது. ஆனால் அதைத் திருடர்கள் ஒளிந்திருக்
கிற இடமாக* நீங்கள் மாற்றி இருக்கிறீர்கள்"
என்றார்.

47ஒவ்வொரு நாளும் இயேசு தேவாலயத்தில்
மக்களுக்குப் போதித்தார். ஆசாரியரும், வேத
பாரகரும் மக்களின் அதிகாரிகளும் இயேசு
வைக் கொல்ல விரும்பினார்கள். 48ஆனால்
எல்லா மக்களும் இயேசுவைக் கவனமாகக்
கேட்டுக் கொண்டு இருந்தார்கள். இயேசு கூறிய
விஷயங்களை மிகவும் உற்சாகமாய்க் கவனித்
தார்கள். எனவே தலைமை ஆசாரியருக்கும்,
வேதபாரகருக்கும், அதிகாரிகளுக்கும் இயே
சுவை எவ்வாறு கொல்ல முடியும் என்பது
தெரியவில்லை.

### யூத அதிகாரிகளின் கேள்வி

*(மத்தேயு 21:23-27; மாற்கு 11:27-33)*

20 ஒருநாள் இயேசு தேவாலயத்தில் இருந்
தார். அவர் மக்களுக்குப் போதித்துக்
கொண்டிருந்தார். தேவனுடைய இராஜ்யத்
தைப் பற்றிய நற்செய்தியை இயேசு மக்களுக்
குக் கூறினார். தலைமை ஆசாரியரும், வேத
பாரகரும், முதிய யூத அதிகாரிகளும் இயேசு
விடம் பேசுவதற்கு வந்தனர். 2அவர்கள்,
"இக்காரியங்களைச் செய்வதற்கு உங்களுக்கு
என்ன அதிகாரம் இருக்கிறது? எங்களுக்குச்
சொல்லுங்கள். இந்த அதிகாரத்தை உங்களுக்
குக் கொடுத்தவர் யார்?" என்றார்கள்.

3இயேசு பதிலாக, "நானும் உங்களை ஒரு
கேள்வி கேட்பேன். 4மக்களுக்கு யோவான்
ஞானஸ்நானம் கொடுத்தபோது அது தேவனிட
மிருந்து வந்ததா அல்லது மனிதனிடமிருந்து
வந்ததா? எனக்குச் சொல்லுங்கள்" என்றார்.

5ஆசாரியரும், வேதபாரகரும், யூத அதி
காரிகளும் இதைக் குறித்துப் பேசினார்கள்.
அவர்கள் ஒருவருக்கொருவர், ''யோவானின்
ஞானஸ்நானம் தேவனிடமிருந்து வந்தது'
என்று நாம் பதில் சொன்னால் அவர், 'அப்
படியானால் நீங்கள் யோவானை ஏன் நம்ப
வில்லை?' என்பார் 6ஆனால் நாம், 'யோவா
னின் ஞானஸ்நானம் மனிதரிடம் இருந்து வந்
தது' என்று கூறினால் எல்லா மக்களும் நம்
மைக் கல்லெறிந்து கொல்வார்கள். 'யோவான்
ஒரு தீர்க்கதரிசி என்று அவர்கள் ஒத்துக்
கொண்டிருப்பதால் நம்மைக் கொல்வார்கள்"
என்று பேசிக்கொண்டனர். 7எனவே அவர்
கள், "எங்களுக்கு விடை தெரியவில்லை"
என்று பதில் சொன்னார்கள்.

8எனவே இயேசு அவர்களை நோக்கி,
"இக்காரியங்களை எந்த அதிகாரத்தால் செய்
கிறேன் என்பதையும் நான் உங்களுக்குச்
சொல்லமாட்டேன்" என்றார்.

### திராட்சைத்தோட்ட உவமை

*(மத்தேயு 21:33-46; மாற்கு 12:1-12)*

9பின்னர் இயேசு மக்களுக்கு இவ்வுவமை
யைச் சொன்னார்: "ஒரு மனிதன் தன் வயலில்
திராட்சைச் செடிகளை பயிரிட்டான். சில உழ
வர்களுக்கு அந்த நிலத்தைக் குத்தகையாய்
கொடுத்தான். பின்னர் நீண்டகாலம் அங்கி
ருந்து சென்று விட்டான். 10திராட்சைப் பழங்
களைப் பறிக்கும் காலம் நெருங்கியது. அம்
மனிதன் உழவர்களிடம் அவனது வேலைக்
காரனைத் தனக்குரிய பாகமான திராட்சை
பழங்களைப் பெற்றுவருமாறு அனுப்பினான்.
ஆனால் உழவர்கள் அந்த வேலைக்காரனை
அடித்து ஒன்றுமே தராமல் அனுப்பிவிட்டார்
கள். 11எனவே அம்மனிதன் இன்னொரு
வேலைக்காரனை அனுப்பினான். அந்த உழ
வர்கள் இந்த வேலைக்காரனையும் கூட அடித்
தார்கள். அவனைக் கொஞ்சமும் மதிக்க
வில்லை. அவனுக்கு எதுவும் கொடுக்காமல்
அவனை அனுப்பிவிட்டார்கள். 12எனவே அம்
மனிதன் உழவர்களிடம் மூன்றாவது வேலைக்
காரனை அனுப்பினான். உழவர்கள் அவனை
அடித்துக் காயப்படுத்தித் துரத்திவிட்டார்கள்.
13வயலின் சொந்தக்காரன், 'நான் இப்போது
என்ன செய்வேன்? நான் எனது மகனை
அனுப்புவேன். நான் என் மகனை மிகவும்
நேசிக்கிறேன். உழவர்கள் என் மகனை மதிக்
கக்கூடும்' என்று எண்ணினான். 14உழவர்கள்
மகனைப் பார்த்ததும் தமக்குள், 'இவன் நிலச்
சொந்தக்காரனின் மகன். இவ்வயல் இவ
னுக்கே சேரும். இவனைக் கொன்றுவிட்டால்
இவ்வயல் நமக்குச் சொந்தமாகும்' என்று
பேசிக்கொண்டனர். 15எனவே, மகனை வய
லுக்கு வெளியே தூக்கி எறிந்து அவனைக்
கொன்றுவிட்டனர். வயலின் சொந்தக்காரன்
என்ன செய்வான்? 16அவன் வந்து அந்த
உழவர்களைக் கொன்று போடுவான். பிற்
பாடு அந்த வயலை வேறு உழவர்கள் கையில்
ஒப்படைப்பான்" என்றார். மக்கள் இவ்வுவமை
யைக் கேட்டனர். அவர்கள், "இல்லை, இவ்
வாறு நடக்க அனுமதிக்கலாகாது" என்றனர்.
17ஆனால் இயேசு அவர்கள் கண்களைக்
கூர்ந்து நோக்கியவாறு "அப்படியானால் இந்த
வசனம் எதைக் கூறுகிறது:

> 'வீடு கட்டுகிறவர்கள் வேண்டாம் எனக்
> கருதிய கல்லே மூலைக்குத் தலைக் கல்
> லாயிற்று'
>
> *சங்கீதம் 118:22*

---

**என் வீடு ... இருக்கும்** *ஏசாயா 56:7.*

**திருடர்கள் ஒளிந்திருக்கிற இடம்** *எரே. 7:11.*

18அந்தக் கல்லின்மீது விழுகிற ஒவ்வொரு
மனிதனும் நொறுங்கிப் போவான். அந்தக்கல்
உங்கள்மீது விழுந்தால் அது உங்களை நசுக்
கிப் போடும்! ” என்றார்.
19யூத அதிகாரிகள் இயேசு கூறிய இவ்
வுவமையைக் கேட்டனர். இது அவர்களைப்
பற்றியே கூறப்பட்டது என்பது அவர்களுக்குத்
தெரிந்தது. அதே சமயத்தில் அவர்கள் இயேசு
வைச் சிறைப்பிடிக்க விரும்பினார்கள்.
ஆனால் மக்கள் என்ன செய்வார்களோ என்று
நினைத்து அவர்கள் அஞ்சினர்.

### யூத அதிகாரிகளின் தந்திரம்

(மத்தேயு 22:15-22; மாற்கு 12:13-17)

20எனவே வேதபாரகரும், தலைமை ஆசாரி
யரும் இயேசுவைப் பிடிப்பதற்கு ஏற்ற தருணத்
தை எதிர்பார்த்திருந்தார்கள். அவர்கள் சில
மனிதர்களை இயேசுவிடம் அனுப்பினார்கள்.
அவர்களை நல்ல மனிதர்களாக நடிக்கும்படி
யாகக் கூறியிருந்தார்கள். இயேசு கூறியவற்றில்
குற்றம் காணும்படியாக அவர்கள் விரும்
பினார்கள். (ஏதேனும் தவறு கண்டுபிடித்தால்
அவர்கள் அதிகாரமும் ஆற்றலும் வாய்ந்த
ஆளுநரிடம் இயேசுவை ஒப்படைக்க முடியும்.)
21எனவே, அந்த மனிதர்கள் இயேவை நோக்கி,
“போதகரே, நீர் சொல்வதும் போதிப்பதும்
உண்மை என்று எங்களுக்குத் தெரியும்.
எல்லா மக்களுக்கும் அவற்றைப் போதிக்கிறீர்.
தேவனின் வழியைக் குறித்த உண்மையையே
எப்போதும் கற்பிக்கிறீர். 22இராயனுக்கு நாங்
கள் வரி கட்டுவது சரியா இல்லையா என்
பதை எங்களுக்குக் கூறுங்கள்?” என்றார்கள்.
23இயேசுவை வஞ்சிக்க அம்மனிதர்கள்
முயற்சி செய்கிறார்கள் என்பது அவருக்குத்
தெரியும். இயேசு அவர்களை நோக்கி, 24“ஒரு
காசை எனக்குக் காட்டுங்கள். யாருடைய
பெயர் அதில் இருக்கிறது? யாருடைய படம்
அதில் உள்ளது?” என்று கேட்டார். அவர்கள்,
“இராயனுடையது” என்றார்கள்.
25இயேசு அவர்களை நோக்கி “இராயனு
டையதை இராயனுக்குக் கொடுங்கள். தேவனு
டையவற்றை தேவனுக்குக் கொடுங்கள்”
என்றார்.
26அவரது ஞானம் மிக்க பதிலைக் கேட்டு
அம்மனிதர்கள் ஆச்சரியமுற்றனர். அவர்க
ளால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. தம்
தந்திரங்களில் அவர்கள் தோல்வியடைந்
தார்கள். மக்களின் முன்பாக அவர்களால்
இயேசுவை ஏமாற்ற முடியவில்லை. அவர்கள்
இயேசுவுக்கு எதிராகப் பயன்படுத்தக்கூடிய
எதையும் இயேசு சொல்லவில்லை.

### சதுசேயர்களின் தந்திரம்

(மத்தேயு 22:23-33; மாற்கு 12:18-27)

27சில சதுசேயர்கள் இயேசுவிடம் வந்தனர்.
(மக்கள் மரணத்தினின்று உயிர் பெறுவ
தில்லை என்று சதுசேயர்கள் நம்புகிறார்கள்)
அவர்கள் இயேசுவை நோக்கி, 28“போதகரே,
திருமணமான மனிதன் குழந்தைகளின்றி
இறந்து போனால், அவனது சகோதரன் அவன்
மனைவியைத் திருமணம் செய்து கொள்ள
வேண்டும் என்று மோசே எழுதி இருந்தார்.
அப்படியானால் இறந்த சகோதரனுக்காக
குழந்தைகள் அவர்களுக்குப் பிறக்கும். 29ஓரிடத்
தில் ஏழு சகோதரர்கள் வாழ்ந்தனர். முதல்
சகோதரன் ஒருத்தியை மணந்து குழந்தைகள்
இல்லாமல் இறந்தான். 30பிறகு இரண்டாம்
சகோதரன் அந்தப் பெண்ணை மணந்து
இறந்து போனான். 31மூன்றாமவனும் அவளை
மணந்து பின்னர் இறந்தான். ஏழு சகோதரர்
களுக்கும் இதுவே நடந்தது. அவர்கள் எல்
லாரும் குழந்தைகளின்றி இறந்தார்கள். 32அவர்
கள் அனைவரும் இறந்த பிறகு அவளும்
இறந்தாள். 33எல்லா ஏழு சகோதரர்களும்
அவளை மணந்தனர். மரணத்தினின்று மக்கள்
எழும்போது, அந்தப் பெண் யாருக்கு மனை
வியாவாள்.?” என்று கேட்டார்கள்.
34இயேசு சதுசேயரை நோக்கி, “பூமியில்
மக்கள் ஒருவரையொருவர் மணந்து கொள்
கின்றனர். 35சிலர் மரணத்தினின்று எழும்பி
அடுத்த உலகத்தில் பங்குபெறும் தகுதியைப்
பெறுவர். அந்த வாழ்வில் அவர்கள் மணம்
செய்து கொள்ளமாட்டார்கள். 36அந்த வாழ்வில்
அவர்கள் தேவதூதர்களைப் போல இருப்
பார்கள். அவர்களால் சாகமுடியாது. அவர்கள்
மரணத்தினின்று எழுந்ததால் தேவனின்
மக்களாவர். 37மக்கள் மரணத்தில் இருந்து
எழுப்பப்படுவர் என்பதை மோசே தெளி
வாகக் காட்டினான். எரியும் புதரைப்பற்றி
மோசே எழுதியபோது, அவன் கர்த்தராகிய
தேவனை ஆபிரகாமின் தேவன் என்றும்,
ஈசாக்கின் தேவன் என்றும், யாக்கோபின்
தேவன்* என்றும் கூறினான். 38அவர்களின்
தேவன் தானே என தேவன் கூறியதால் அந்த
மனிதர்கள் உண்மையாக இறக்கவில்லை.
வாழும் மக்களின் தேவன் அவரே. தேவனுக்கு
உரியவர்கள் வாழ்பவர்களே ஆவர்” என்றார்.
39வேதபாரகரில் சிலர், “போதகரே, உங்கள்
பதில் நன்றாக இருந்தது” என்றனர். 40அடுத்த
கேள்வியைக் கேட்க யாருக்கும் துணிச்சல்
வரவில்லை.

### கிறிஸ்து தாவீதின் குமாரனா?

(மத்தேயு 22:41-46; மாற்கு 12:35-37)

41பின்பு இயேசு, “தாவீதின் குமாரன் என்று
கிறிஸ்துவை மக்கள் எதற்காகச் சொல்கிறார்
கள்? 42சங்கீதம் என்னும் புத்தகத்தில் தாவீதே
சொல்கிறார்.

‘கர்த்தர் (தேவன்) என் ஆண்டவரிடம்
(கிறிஸ்து) சொன்னார்,

---

**ஆபிரகாமின் ... தேவன்** யாத். 3:6.

43 உங்கள் பகைவர்கள் உங்கள் ஆற்ற
லுக்கு அடங்கும் வரை என் வலப்பக்
கத்தில் அமருங்கள்”

சங்கீதம் 110:1

44தாவீது கிறிஸ்துவை ‘ஆண்டவர்’ என்
கிறான். ஆனால் கிறிஸ்து தாவீதின் குமாரனு
மாவார். எப்படி இவை இரண்டும் உண்மை
யாகும்?” என்றார்.

### வேதபாரகருக்கு எச்சரிக்கை

(மத்தேயு 23:1-36; மாற்கு 12:38-40
லூக்கா 11:37-54)

45தம்மைப் பின்பற்றுபவர்களிடம் இயேசு
பேசினார். எல்லா மக்களும் இயேசு கூறு
வதைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். 46“வேத
பாரகரைக் குறித்து எச்சரிக்கையாய் இருங்
கள். தங்களை முக்கியமானவர்களாகக் காட்டு
கிற அவர்கள் அங்கிகளை அணிந்து கொண்டு
அவர்கள் அங்குமிங்கும் அலைகிறார்கள்.
மக்கள் அவர்களைச் சந்தையிடங்களில் மதிப்
பதையும் விரும்புகிறார்கள். ஜெப ஆலயங்
களில் முக்கியமான இருக்கையில் அமர
ஆசைப்படுகிறார்கள். 47ஆனால் விதவைகள்
தம் வீட்டில் வைத்திருக்கிற பொருட்களை
யெல்லாம் கொள்ளையிடுகிறவர்கள் அவர்
களே ஆவார்கள். நீண்ட பிரார்த்தனைகளைச்
சொல்லி தங்களை நல்லவர்களாகக் காட்டிக்
கொள்ள முயல்கிறார்கள். தேவன் இவர்களை
மிகுதியாகத் தண்டிப்பார்” என்றார்.

### உண்மையான ஈகை

(மாற்கு 12:41-44)

21 தேவாலயத்தில் காணிக்கைப் பெட்
டியில் சில செல்வந்தர்கள் தேவனுக்
காக தங்கள் காணிக்கைகளைப் போடுவதை
இயேசு கண்டார். 2அப்போது இயேசு ஓர்
ஏழை விதவையைக் கண்டார். பெட்டியினுள்
அவள் இரண்டு சிறிய செம்பு நாணயங்களை
இட்டாள். 3இயேசு, “நான் உங்களுக்கு உண்
மையைச் சொல்கிறேன். இந்த ஏழை விதவை
இரண்டு சிறிய நாணயங்களையே கொடுத்
தாள். ஆனால், அச்செல்வந்தர்கள் கொடுத்
தவற்றைக் காட்டிலும் அவள் உண்மையில்
அதிகமாகக் கொடுத்தாள். 4செல்வந்தர்களிடம்
மிகுதியான செல்வம் இருக்கிறது. அவர்களுக்
குத் தேவையற்ற செல்வத்தையே அவர்கள்
கொடுத்தார்கள். இந்தப் பெண்ணோ மிகவும்
ஏழை. ஆனால் அவளுக்கிருந்த எல்லாவற்
றையும் அவள் கொடுத்தாள். அவள் வாழ்க்
கைக்கு அந்தப் பணம் தேவையாய் இருந்தது”
என்றார்.

### தேவாலயத்தின் அழிவு

(மத்தேயு 24:1-14; மாற்கு 13:1-13)

5சில சீஷர்கள் தேவாலயத்தைப்பற்றிப்
பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள், “இது
மிக நல்ல கற்களாலான ஓர் அழகான தேவா
லயம். தேவனுக்கு அளிக்கப்பட்ட நல்ல
காணிக்கைகளைப் பாருங்கள்” என்றனர்.

6ஆனால் இயேசு, “இங்கு நீங்கள் பார்க்கிற
அனைத்தும் அழிக்கப்படும் காலம் வரும்.
இந்தக் கட்டிடங்களின் ஒவ்வொரு கல்லும்
தரையில் தள்ளப்படும். ஒரு கல்லின் மேல்
மற்றொரு கல் இருக்காது” என்றார்.

7சில சீஷர்கள் இயேசுவிடம், “போதகரே,
இவை எப்போது நடக்கும்? இவை நடை
பெறும் காலம் இதுவென எங்களுக்குக்
காட்டுவது எது?” என்று கேட்டார்கள்.

8இயேசு, “எச்சரிக்கையாய் இருங்கள்.
முட்டாள் ஆக்கப்படாதீர்கள். எனது பெயரைப்
பயன்படுத்திக்கொண்டு பலர் வருவார்கள்.
அவர்கள், ‘நானே கிறிஸ்து’ என்றும்,
‘வேளை வந்தது’ என்றும் கூறுவார்கள்.
ஆனால் அவர்களைப் பின்பற்றாதீர்கள்.
9யுத்தங்களையும் கலவரங்களையும் பற்றிக்
கேள்விப்படும்போது பயப்படாதீர்கள். இவை
முதலில் நிகழ வேண்டும். ஆனால் உடனடியாக
ஒரு முடிவு வராது” என்றார்.

10பிற்பாடு இயேசு அவர்களிடம், “தேசங்கள்
வேறு தேசங்களோடு போரிடும். இராஜ்யங்கள்
பிற இராஜ்யங்களோடு போர் செய்யும். 11பூகம்
பங்களும், நோய்களும், தீயகாரியங்களும் பல
இடங்களில் நிகழும். சில இடங்களில் மக்கள்
உண்பதற்கு உணவு கிடைக்காது. பயங்கர
மானதும், ஆச்சரியமானதுமான காரியங்கள்
வானில் தோன்றி மக்களை எச்சரிக்கும்.

12“ஆனால் இவையெல்லாம் நிகழும் முன்
னர் மக்கள் உங்களைக் கைது செய்வார்கள்.
ஜெப ஆலயங்களில் மக்கள் உங்களை நியாயந்
தீர்த்து சிறையில் தள்ளுவார்கள். அரசர்களின்
முன்பும், ஆளுநர்களின் முன்பும் நிற்கும்படி
யாகக் கட்டாயப்படுத்தப்படுவீர்கள். 13நீங்கள்
என்னைப் பின்பற்றுவதால் நீங்கள் என்
னைப்பற்றிப் பிறருக்கு கூறுவதற்கு இவை
உங்களுக்கு வாய்ப்பை ஏற்படுத்தும். 14நீங்கள்
என்ன சொல்வீர்கள் என்பதைக் குறித்து
நடப்பதற்கு முன்னாலேயே கவலைப்படாதீர்
கள்.

15உங்கள் பகைவர்கள் பதில் கூற முடியா
தபடி அல்லது மறுக்க முடியாதபடி செய்திக
ளைச் சொல்லும் ஞானத்தை உங்களுக்குத்
தருவேன். 16உங்கள் பெற்றோரும், சகோ
தரரும், உறவினரும், நண்பரும் கூட உங்களை
ஏமாற்றுவார்கள். அவர்கள் உங்களில்
சிலரைக் கொல்வார்கள். 17எல்லா மக்களும்
நீங்கள் என்னைப் பின்பற்றுவதால் உங்களை
வெறுப்பார்கள். 18ஆனால் இவற்றில் ஒன்றும்
உண்மையில் உங்களைத் தீங்குசெய்ய முடி
யாது.

19இக்காரியங்கள் மூலமாக உங்கள்
நம்பிக்கையைப் பலப்படுத்துவதால் நீங்கள்
உங்களை மீட்டுக்கொள்ளமுடியும்..

### எருசலேமின் அழிவு

(மத்தேயு 24:15-21; மாற்கு 13:14-19)

[20]"எருசலேமைச் சுற்றிலும் படைகள் சூழ்ந்திருக்கக் காண்பீர்கள். எருசலேமின் அழிவுக் காலம் நெருங்கிவிட்டது என்பதை அப்போது அறிந்து கொள்வீர்கள். [21]அப்போது யூதேயாவின் மக்கள் மலைகளுக்கு ஓடிச்செல்ல வேண்டும். எருசலேம் மக்கள் விரைந்து செல்ல வேண்டியதிருக்கும். நீங்கள் எருசலேம் நகருக்கு வெளியே இருக்கிறவர்கள், உள்ளே போகாதீர்கள். [22]தேவன் தம் மக்களைத் தண்டிக்கும் காலத்தைக் குறித்து தீர்க்கதரிசிகள் நிரம்ப செய்திகளை எழுதி இருக்கிறார்கள். நான் உங்களுக்குச் சொல்லிக்கொண்டிருப்பதெல்லாம் இவை எல்லாம் நிகழவேண்டிய காலத்தைக் குறித்து ஆகும். [23]அந்த நேரம் கருவுற்ற பெண்களுக்கும் பாலூட்டவேண்டிய சின்னஞ்சிறு குழந்தைகளை உடைய பெண்களுக்கும் மிகவும் கொடுமையானதாக இருக்கும். ஏன்? இந்தப் பூமியில் மிக கொடுமையான காலம் வரும். இந்த மக்களிடம் (யூதர்களிடம்) தேவன் சினம் கொள்வார். [24]வீரர்களால் சிலர் கொல்லப்படுவார்கள். பிறர் கைதிகளாக்கப்பட்டு ஒவ்வொரு தேசத்திற்கும் கொண்டு செல்லப்படுவார்கள். தூய பட்டணமாகிய எருசலேமில் யூதரல்லாத மக்கள் அவர்கள் காலம் முடியும் மட்டும் நடந்து செல்வார்கள்.

### அஞ்சாதீர்கள்

(மத்தேயு 24:29-31; மாற்கு 13:24-27)

[25]"சூரியன், சந்திரன், விண்மீன்களில் ஆச்சரியப்படத்தக்க விஷயங்கள் நடக்கும். பூமியின் மக்கள் அகப்பட்டுக்கொண்டதாக உணர்வார்கள். சமுத்திரங்கள் கலக்கமடையும். ஏனென்று மக்கள் அறியமாட்டார்கள். [26]மக்கள் அஞ்ச ஆரம்பிப்பார்கள். உலகத்திற்கு என்ன நேரிடுமோ என்று அவர்கள் கவலைப்படுவார்கள். வானிலுள்ள ஒவ்வொரு பொருளும் வித்தியாசப்படும். [27]அப்போது மேகத்தில் மனித குமாரன் அவரது வல்லமையோடும் மிகுந்த மகிமையோடும் வந்து கொண்டிருப்பதை மக்கள் காண்பார்கள். [28]இந்தக் காரியங்கள் நிகழ ஆரம்பித்ததும் பயப்படாதீர்கள். மேலே பார்த்து மகிழுங்கள். கவலை கொள்ளாதீர்கள். தேவன் உங்களை விடுவிக்கும் நேரம் நெருங்கிக் கொண்டிருப்பதை நீங்கள் அறிந்திருப்பதால் சந்தோஷமாக இருங்கள்" என்றார்.

### அழியாத தேவ வார்த்தை

(மத்தேயு 24:32-35; மாற்கு 13:28-31)

[29]பின்பு இயேசு இவ்வுவமையைச் சொன்னார்: "எல்லா மரங்களையும் பாருங்கள், அத்தி மரம் ஒரு நல்ல உதாரணம். [30]அது பசுமை நிறமாக இருக்கும்போது கோடை நெருங்கி விட்டது என்று உணர்வீர்கள். [31]நடக்கும் என்று நான் கூறிய காரியங்களும் அதைப் போன்றதே, இக்காரியங்கள் நடப்பதைப் பார்க்கும்போது, தேவனின் இராஜ்யம் விரைவில் வர இருப்பதை அறிவீர்கள்.

[32]"நான் உங்களுக்கு உண்மையைச் சொல்கிறேன். இக்காலத்து மக்கள் வாழ்ந்து கொண்டு இருக்கும்போதே இக்காரியங்கள் எல்லாம் நடக்கும். [33]உலகம் முழுவதும், விண்ணும், பூமியும் அழிக்கப்படும். ஆனால், நான் கூறிய சொற்களோ, ஒரு நாளும் அழிவதில்லை.

### ஆயத்தமாயிருங்கள்

[34]"எச்சரிக்கையாய் இருங்கள். குடித்துக் கொண்டும், குடியில் மூழ்கிக் கொண்டும் காலத்தைக் கழிக்காதீர்கள். அல்லது உலகத்துக் காரியங்களில் அதிகப்படியாக ஈடுபடாதீர்கள். நீங்கள் அவ்வாறு செய்தால் உங்களால் சரியானதைச் சிந்திக்க முடியாது. பிறகு முடிவு திடுமென நீங்கள் தயாராய் இல்லாத போது வரக்கூடும். [35]பூமியின் மக்களுக்கு அது ஓர் பொறியைப்போல இருக்கும். ஏனெனில் பூமியில் உள்ள அனைவருக்கும் இந்த நாள் வரும். [36]எனவே எப்போதும் தயாராக இருங்கள். நடக்கப் போகிற இக்காரியங்களில் பாதுகாப்பாகத் தொடருவதற்கு உரிய வன்மை வேண்டுமென பிரார்த்தியுங்கள். மனித குமாரனுக்கு முன்பாக நிற்கும் தகுதி பெறுவதற்காக பிரார்த்தனை செய்யுங்கள்" என்றார்.

[37]பகல் வேளையில் இயேசு தேவாலயத்தில் மக்களுக்குப் போதித்தார். இரவில் பட்டணத்திற்கு வெளியே சென்று இரவு முழுவதும் ஒலிவ மலையில் தங்கி இருந்தார். [38]ஒவ்வொரு காலையிலும் மக்கள் அதிகாலையில் எழுந்து தேவாலயத்தில் இயேசு கூறுவதைக் கேட்பதற்காகச் சென்றார்கள்.

### இயேசுவைக் கொல்ல திட்டம்

(மத்தேயு 26:1-5, 14-16; மாற்கு 14:1-2, 10-11; யோவான் 11:45-53)

22 பஸ்கா எனப்படும், யூதர்களின் புளிப்பில்லாத அப்பப் பண்டிகைக்குரிய காலம் நெருங்கி வந்தது. [2]தலைமை ஆசாரியரும், வேதபாரகரும் இயேசுவைக் கொல்வதற்கு வழி தேடிக் கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்கள் மக்களுக்கு பயந்தனர்.

### யூதாஸின் சதித்திட்டம்

[3]இயேசுவின் பன்னிரண்டு சீஷர்களில் ஒருவன் யூதாஸ் காரியோத்து என்பவன் ஆவான். சாத்தான் யூதாஸிற்குள் புகுந்து ஒரு தீய செயலைச் செய்யுமாறு அவனைத் தூண்டினான். [4]யூதாஸ் தலைமை ஆசாரியரிடமும், தேவாலயத்தைப் பாதுகாத்த வீரர்களிடமும் சென்று பேசினான். இயேசுவை அவர்களிடம் ஒப்படைப்பதைக் குறித்து அவன் அவர்களிடம் பேசினான். [5]அவர்கள் இதனால் மிகுந்த சந்தோஷம் அடைந்தார்கள். இயேசுவை அவர்களிடம் ஒப்படைத்தால் அவனுக்குப் பணம்

கொடுப்பதாக அவர்கள் கூறினார்கள். 6யூதாஸ்
அதற்கு ஒப்புக்கொண்டான். இயேசுவை அவர்
களிடம் ஒப்படைப்பதற்கு ஏற்ற நேரத்தை
எதிர்பார்த்திருந்தான் யூதாஸ். தன்னைச் சுற்
றிலும் மக்கள் எவரும் பார்க்காத நேரத்தில்
அதைச் செய்யவேண்டுமென யூதாஸ் விரும்
பினான்.

### பஸ்கா உணவு ஆயத்தம்

(மத்தேயு 26:17-25; மாற்கு 14:12-21;
யோவான் 13:21-30)

7புளிப்பில்லாத அப்பப் பண்டிகையின்
நாள் வந்தது. பஸ்கா ஆட்டுக் குட்டிகளை
யூதர்கள் பலியிடுகிற நாள் அது ஆகும்.
8பேதுருவையும், யோவானையும் நோக்கி
இயேசு, "நாம் உண்பதற்கு நீங்கள் சென்று
பஸ்கா விருந்தைத் தயாரியுங்கள்" என்றார்.
9பேதுருவும், யோவானும், இயேசுவிடம்,
"பஸ்கா விருந்தை நாங்கள் எங்கே தயாரிக்க
வேண்டும் என நீங்கள் விரும்புகிறீர்கள்?"
என்று கேட்டார்கள்.
இயேசு அவர்களை நோக்கி, 10"கவனியுங்
கள், நீங்கள் எருசலேமுக்குள் சென்ற பின்பு
ஒரு குடத்தில் தண்ணீரைச் சுமந்து செல்லும்
ஒரு மனிதனைக் காண்பீர்கள். அவனைத்
தொடர்ந்து செல்லுங்கள். அவன் ஒரு வீட்டுக்
குள் செல்வான். அவனோடு நீங்கள் செல்லுங்
கள்.
11அந்த வீட்டின் சொந்தக்காரனிடம், 'போத
கரும் அவரது சீஷர்களும் பஸ்கா விருந்து
உண்ணக் கூடிய அறையைத் தயவுசெய்து
எங்களுக்குக் காட்டும்படியாக போதகர் கேட்
கிறார்' என்று சொல்லுங்கள். 12உடனே அந்த
வீட்டின் சொந்தக்காரனான அம்மனிதன் மாடி
யில் ஒரு பெரிய அறையைக் காட்டுவான்.
இந்த அறை உங்களுக்குத் தயாராக இருக்கும்.
பஸ்கா விருந்தை அங்கே தயாரியுங்கள்"
என்றார். 13எனவே பேதுருவும், யோவானும்
சென் றார்கள். இயேசு கூறியபடியே எல்லாம்
நிகழ்ந்தன. எனவே அவர்கள் பஸ்கா விருந்
தைத் தயாரித்தார்கள்.

### இயேசுவின் இரவு உணவு

(மத்தேயு 26:26-30; மாற்கு 14:22-26;
1 கொரிந்தியர் 11:23-25)

14பஸ்கா விருந்தை அவர்கள் சாப்பிடும்
நேரம் வந்தது. இயேசுவும், சீஷர்களும் மேசை
யைச் சூழ்ந்து அமர்ந்தனர். 15அவர்களிடம்
இயேசு, "நான் இறக்கும் முன்பு இந்தப் பஸ்கா
விருந்தை உங்களோடு சேர்ந்து உண்ண
வேண்டும் என்று மிகவும் விரும்பினேன்.
16தேவனின் இராஜ்யத்தில் அதற்குரிய உண்
மையான பொருள் கொடுக்கப்படும் வரைக்
கும் நான் இன்னொரு பஸ்கா விருந்தைப்
புசிக்க மாட்டேன்" என்றார்.
17பின்பு இயேசு ஒரு கோப்பை திராட்சை
இரசத்தை எடுத்தார். அதற்காக தேவனுக்கு
நன்றி கூறினார். பின்பு அவர், "இக்கோப்
பையை எடுத்து இங்கு இருக்கும் ஒவ்வொரு
வருக்கும் கொடுங்கள். 18ஏனெனில் தேவனின்
இராஜ்யம் வரும் வரைக்கும் நான் மீண்டும்
திராட்சை இரசம் குடிக்கப் போவதில்லை"
என்றார்.
19பின்பு இயேசு, அப்பத்தை எடுத்தார்.
அப்பத்திற்காக தேவனுக்கு நன்றி கூறிவிட்டு
அதைப் பிட்டார். சீஷர்களுக்கு அதைக் கொடுத்
தார். பின்பு இயேசு, "இதனை நான் உங்களுக்
காகக் கொடுக்கிறேன். எனது சரீரமே இந்த
அப்பமாகும். எனவே என்னை நினைவுகூரு
வதற்கு இப்படிச் செய்யுங்கள்" என்றார்.
20அப்பத்தை உண்ட பின்னர், அதே வகையில்
இயேசு திராட்சை இரசக்கோப்பையை எடுத்து
"இந்தத் திராட்சை இரசம் தேவனுக்கும்
அவரது மக்களுக்கும் உள்ள புதிய உடன்
படிக்கையைக் காட்டுகிறது. நான் உங்களுக்
காக கொடுக்கிற என் இரத்தத்தில் (மரணத்தில்)
இப்புது உடன்படிக்கை ஆரம்பமாகிறது" என்
றார்.

### இயேசுவின் எதிரி யார்?

21இயேசு, "உங்களில் ஒருவன் என்னை
வஞ்சிக்கப் போகிறான். மேசை மீது அவனது
கை என் கைக்குப் பக்கத்தில் இருக்கிறது.
22தேவன் திட்டமிட்டபடியே மனித குமாரன்
செய்வார். ஆனால் மனித குமாரனைக் கொல்
லப்படுவதற்காக ஒப்படைக்கிற மனிதனுக்கு
மிகவும் தீமை நடக்கும்" என்றார்.
23அப்போது சீஷர்கள் ஒருவருக்கொருவர்,
"இயேசுவுக்கு அவ்வாறு செய்பவன் நமக்குள்
யார்?" என்று கேட்டார்கள்.

### தாழ்மையாக இருங்கள்

24பின்னர் தங்களில் மிக முக்கியமானவன்
யார் என்று அப்போஸ்தலர்கள் தமக்குள்
விவாதிக்க ஆரம்பித்தார்கள். 25ஆனால் இயேசு
அவர்களை நோக்கி, "உலகத்தில் (வேறு
வேறு) தேசங்களின் அரசர்கள் மக்களை
அரசாளுகிறார்கள். பிற மக்களின் மீது அதி
காரம் செலுத்துபவர்கள் 'மக்களின் உதவி
யாளன்' என தம்மை எல்லாரும் அழைக்கும்
படிச் செய்கிறார்கள். 26ஆனால் நீங்கள் அவ்
வாறு இருக்கலாகாது. உங்களுக்குள் மிகச்
சிறந்தவன் சிறியவனைப் போன்று நடந்து
கொள்ள வேண்டும். தலைவர்கள் வேலைக்
காரனைப்போல இருக்க வேண்டும். 27யார்
மிகவும் முக்கியமானவன்? மேசையின்
அருகே உட்கார்ந்திருப்பவனா அல்லது அவ
னுக்குப் பரிமாறுகிறவனா? மேசையருகே
உட்கார்ந்திருப்பவன் முக்கியமானவன் என்று
நீங்கள் நினைக்கிறீர்கள். ஆனால் உங்களில்
நான் ஒரு வேலைக்காரனைப்போல இருக்
கிறேன்.
28"பெரும் சிக்கல்களின் போது நீங்கள்
நம்பிக்கையோடு என்னருகில் தங்கி இருக்கி

நீர்கள். 29எனது பிதா எனக்கு ஓர் இராஜ்யத்
தைக் கொடுத்திருக்கிறார். என்னோடு அரசா
ளுகிற அதிகாரத்தை உங்களுக்கு நானும்
கொடுக்கிறேன்.
30என் அரசில் நீங்கள் மேசை அருகே
என்னோடு உண்டு, பருகுவீர்கள். நீங்கள்
சிம்மாசனங்களில் உட்கார்ந்து இஸ்ரவேலின்
பன்னிரண்டு குலங்களையும் நியாயம்தீர்ப்பீர்
கள்.

### நம்பிக்கையை இழக்காதீர்கள்

(மத்தேயு 26:31-35; மாற்கு 14:27-31;
யோவான் 13:36-38)

31"ஓர் உழவன் கோதுமையைப் புடைப்பது
போல சாத்தான் உங்களைச் சோதிக்கவேண்
டும் எனக் கேட்டுள்ளான். சீமோனே, சீமோனே
(பேதுரு), 32நீ உன் நம்பிக்கையை இழக்காதி
ருக்கும்படியாக நான் பிரார்த்தனை செய்திருக்
கிறேன். நீ என்னிடம் திரும்பி வரும்போது
உன் சகோதரர்கள் வலிமையுறும் பொருட்டு
உதவி செய்" என்றார்.
33ஆனால் பேதுரு இயேசுவை நோக்கி,
"ஆண்டவரே, நான் உங்களுடன் சிறைக்கு
வரத் தயாராக இருக்கிறேன். நான் உங்களோடு
இறக்கவும் செய்வேன்" என்றான்.
34ஆனால் இயேசு, "பேதுரு, நாளை காலை
யில் சேவல் கூவும் முன்பு என்னைப்பற்றி
உனக்குத் தெரியாதென கூறுவாய். இதனை
நீ மூன்று முறை சொல்வாய்" என்றார்.

### நிறைவேறும் வேதவாக்கியம்

35பின்பு இயேசு சீஷர்களை நோக்கி, "மக்
களுக்குப் போதிப்பதற்காக நான் உங்களை
அனுப்பினேன். நான் உங்களை பணம், பை,
காலணிகள் எதுவுமின்றி அனுப்பினேன்.
ஆனால் ஏதேனும் உங்களுக்குக் குறை இருந்
ததா?" என்று கேட்டார். சீஷர்கள், "இல்லை"
என்றார்கள்.
36இயேசு அவர்களை நோக்கி,"ஆனால், இப்
போது பணமோ, பையோ உங்களிடம் இருந்
தால் அதை உங்களோடு கொண்டு செல்லுங்
கள். உங்களிடம் வாள் இல்லையென்றால்
உங்கள் சட்டையை விற்று ஒரு வாள் வாங்குங்
கள். 37வேதவாக்கியம் சொல்கிறது,

"மக்கள் அவரை குற்றவாளி என்றார்
கள்."

ஏசாயா 53:12

இந்த வேதாகமக் கருத்து நிறைவேற வேண்
டும். இது என்னைக் குறித்து எழுதப்பட்டது,
இப்போது நிகழ்ந்து கொண்டிருக்கிறது"
என்றார்.
38சீஷர்கள், "ஆண்டவரே, பாருங்கள், இங்கு
இரண்டு வாள்கள் உள்ளன" என்றார்கள்.
இயேசு அவர்களிடம், "இரண்டு போது
மானவை" என்றார்.

### இயேசுவின் பிரார்த்தனை

(மத்தேயு 26:36-46 மாற்கு 14:32-42)

39-40இயேசு பட்டணத்தை (எருசலேம்) விட்டு
ஒலிவமலைக்குச் சென்றார். அவரது சீஷர்கள்
அவரோடு சென்றார்கள். அங்கே சென்றபிறகு
சீஷர்களிடம் இயேசு, "நீங்கள் சோதனைக்கு
ஆளாகாதவண்ணம் பிரார்த்தனை செய்யுங்
கள்" என்றார்.
41பின்பு இயேசு ஐம்பது அடி தூரம் அளவு
அவர்களை விட்டுச் சென்றார். அவர் முழங்
காலிட்டு பிரார்த்தனை செய்தார்: 42"பிதாவே,
நீங்கள் விரும்பினால் நான் துன்பத்தின் கோப்
பையைக் குடிக்காமல் இருக்கும்படிச் செய்யுங்
கள். ஆனால், நான் விரும்பும் வழியில் அல்
லாமல் நீங்கள் விரும்பும் வழியிலேயே அது
நடக்கட்டும்" என்றார். 43அப்போது பரலோகத்
திலிருந்து ஒரு தேவதூதன் அவருக்கு உதவி
செய்ய அனுப்பப்பட்டான். 44வேதனையால்
இயேசு வருந்தினார். எனவே மிகவும் வேத
னையோடு ஊக்கமாய்ப் பிரார்த்தனை செய்
தார். குருதி கொட்டுவது போல அவரது
முகத்தில் இருந்து வியர்வை வடிந்தது.
45இயேசு பிரார்த்தனை செய்து முடிந்த பின்
னர், அவரது சீஷர்களிடம் சென்றார். அவர்கள்
உறங்கிக் கொண்டிருந்தார்கள். (அவர்கள்
துயரம் அவர்களைச் சோர்வுறச் செய்தது.)
46இயேசு அவர்களை நோக்கி, "ஏன் உறங்கிக்
கொண்டிருக்கிறீர்கள்? எழுந்து சோதனைக்கு
எதிரான வலிமைக்காகப் பிரார்த்தனை செய்
யுங்கள்" என்றார்.

### இயேசு கைது செய்யப்படுதல்

(மத்தேயு 26:47-56; மாற்கு 14:43-50;
யோவான் 18:3-11)

47இயேசு பேசிக்கொண்டிருந்த போது ஒரு
மக்கள் கூட்டம் வந்தது. பன்னிரண்டு சீஷர்
களில் ஒருவன் அக்கூட்டத்தை வழிநடத்தி வந்
தான். அவன் யூதாஸ். இயேசுவை முத்தமிடும்
அளவுக்கு நெருக்கமாக யூதாஸ் வந்தான்.
48ஆனால் இயேசு அவனை நோக்கி,
"யூதாஸ், மனித குமாரனை வஞ்சிக்கும்
பொருட்டு நட்பின் முத்தத்தைப் பயன்படுத்துகி
றாயா?" என்று கேட்டார். 49இயேசுவின் சீஷர்
களும் அங்கேயே நின்று கொண்டிருந்தார்கள்.
அவர்கள் என்ன நடக்கப்போகிறதென உணர்ந்
தார்கள். சீஷர்கள் இயேசுவிடம், "ஐயா, எங்
கள் வாள்களை பயன்படுத்தட்டுமா?" என்றார்
கள். 50சீஷர்களில் ஒருவன் வாளைப் பயன்
படுத்தவும் செய்தான். தலைமை ஆசாரியனின்
வேலைக்காரனின் வலது காதை அவன் வெட்
டினான். 51இயேசு "நிறுத்து" என்றார். பின்பு
இயேசு வேலைக்காரனின் காதைத் தொட்டு
அவனைக் குணப்படுத்தினார்.
52இயேசுவைச் சிறைப்பிடிக்க வந்த கூட்டத்
தில் தலைமை ஆசாரியரும், முதிய யூத அதிகா
ரிகளும், தேவாலயக் காவலர்களும் இருந்தனர்.
இயேசு அவர்களை நோக்கி, "வாளோடும்

கம்புகளோடும் நீங்கள் ஏன் வந்தீர்கள்? நான்
குற்றவாளி என்று நீங்கள் நினைக்கிறீர்களா?
53ஒவ்வொரு நாளும் நான் தேவாலயத்தில்
உங்களோடு இருந்தேன். ஏன் என்னை அங்கே
சிறைபிடிக்க முயலவில்லை.? ஆனால் இது
உங்கள் காலம். இருள் (பாவம்) ஆட்சி புரியும்
நேரம்" என்றார்.

### பேதுருவின் மறுதலிப்பு

*(மத்தேயு 26:57-58; மாற்கு 14:53-54, 66-72;
யோவான் 18:12-18, 25-27)*

54அவர்கள் இயேசுவைச் சிறை பிடித்துக்
கொண்டு போனார்கள். தலைமை ஆசாரி
யனின் வீட்டுக்கு இயேசுவை அவர்கள்
கொண்டுவந்தார்கள். பேதுரு அவர்களைத்
தொடர்ந்து வந்தான். ஆனால் அவன் இயேசு
வின் அருகே வரவில்லை. 55வீரர்கள் வீட்டுக்கு
வெளிப்புறத்தில் நடுவில் நெருப்பை வளர்த்து
அதைச் சுற்றி உட்கார்ந்தார்கள். பேதுருவும்
அவர்களோடு அமர்ந்தான். 56ஒரு வேலைக்
காரச் சிறுமி பேதுரு உட்கார்ந்திருப்பதைக்
கண்டாள். நெருப்பின் ஒளியில் அவனை
அவள் பார்க்க முடிந்தது. அவனுடைய முகத்
தைக் கூர்ந்து நோக்கினாள். பின்பு அவள்,
"இந்த மனிதனும் அவரோடு (இயேசு) கூட
இருந்தான்" என்றாள்.
57ஆனால் பேதுரு, அது உண்மையில்லை
என்றான். அவன், "பெண்ணே, எனக்கு
அவரைத் தெரியாது" என்றான். 58சற்று நேரத்
துக்குப்பின் இன்னொருவன் பேதுருவைப்
பார்த்து, "இயேசுவைப் பின்பற்றும் சீஷர்
களில் நீயும் ஒருவன்" என்றான். ஆனால்
பேதுரு "மனிதனே, நான் அவரது சீஷர்களில்
ஒருவன் அல்ல" என்றான்.
59ஏறத்தாழ ஒரு மணி நேரத்துக்குப்
பின்னர், இன்னொரு மனிதன், "இது உண்மை,
இந்த மனிதன் அவரோடு இருந்தான். இவன்
கலிலேயாவைச் சேர்ந்தவன்" என்றான்.
"எனக்கு நிச்சயமாய்த் தெரியும்" என்று அம்
மனிதன் மீண்டும் வலியுறுத்தினான்.
60ஆனால் பேதுரு, "மனிதனே. நீ கூறுகிற
விஷயத்தைக் குறித்து எனக்குத் தெரியாது"
என்றான். பேதுரு இவ்வாறு சொல்லிக்
கொண்டிருக்கும் தருணத்திலேயே சேவல்
கூவியது. 61அப்போது கர்த்தர் (இயேசு)
திரும்பி பேதுருவின் கண்களைக் கூர்ந்து
நோக்கினார். "சேவல் காலையில் கூவும் முன்
னரே நீ மூன்று முறை என்னை உனக்குத்
தெரியாது என்று கூறுவாய்" என்று கர்த்தர்
ஏற்கெனவே தன்னிடம் கூறியதைப் பேதுரு
நினைவு கூர்ந்தான். 62பின்னர் பேதுரு
வெளியே சென்று மனமுருகி அழுதான்.

### இயேசுவைப் பரிகசித்தல்

*(மத்தேயு 26:67-68; மாற்கு 14:65)*

63-64சில மனிதர்கள் இயேசுவை காவல்
புரிந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் இயேசு
வைப் பலவாறு கேலிசெய்தார்கள். அவர்
பார்க்க முடியாதபடி அவரது கண்களை
மறைத்தார்கள். பின்பு அவரை அடித்துவிட்டு
"நீ தீர்க்கதரிசியானால் யார் உன்னை அடித்
தார்கள் என்று கூறு" என்றார்கள். 65அம்மனி
தர்கள் அவரை அவமானப்படுத்தினார்கள்.

### யூத அதிகாரிகள் முன் இயேசு

*(மத்தேயு 26:59-66; மாற்கு 14:55-64;
யோவான் 18:19-24)*

66மறுநாள் காலையில், மக்களின் முதிய
அதிகாரிகள், தலைமை ஆசாரியர், வேத
பாரகர் ஆகியோர் ஒன்றாகக் கூடினார்கள்.
அவர்கள் தம் உயர்ந்த நீதிமன்றத்துக்கு இயே
சுவை அழைத்துச்சென்றார்கள். 67அவர்கள்,
"நீ கிறிஸ்துவானால் அப்படியே எங்களுக்குச்
சொல்" என்றார்கள்.
இயேசு அவர்களுக்கு, "நான் கிறிஸ்து
என்று உங்களுக்குக் கூறினால் நீங்கள் என்
னை நம்பமாட்டீர்கள். 68நான் உங்களைக் கேட்
டால் நீங்கள் பதில் தரமாட்டீர்கள். 69ஆனால்
இப்பொழுதிலிருந்து தேவனுடைய சிம்மாச
னத்தின் வலது பக்கத்தில் மனித குமாரன்
உட்கார்ந்திருப்பார்" என்றார்.
70அவர்கள் எல்லாரும், "அப்படியானால்
நீ தேவனுடைய குமாரனா?" என்றார்கள்.
இயேசு அவர்களுக்கு "ஆம், நான் தேவ
னுடைய குமாரன் என்று நீங்கள் சொல்வது
சரியே" என்றார்.
71அவர்கள், "ஏன் நமக்கு இப்போது சாட்
சிகள் தேவை? அவன் இவ்வாறு சொல்வதை
நாமே கேட்டோமே!" என்றனர்.

### பிலாத்துவின் கேள்வி

*(மத்தேயு 27:1-2, 11-14; மாற்கு 15:1-5;
யோவான் 18:28-38)*

23 அந்தக் கூட்டம் முழுவதும் எழுந்து
நின்று இயேசுவைப் பிலாத்துவிடம்
அழைத்துச் சென்றது. 2அவர்கள் இயேசுவைப்
பழிக்க ஆரம்பித்தார்கள். பிலாத்துவிடம் அவர்
கள், "நமது மக்களைக் குழப்புகிற செய்தி
களைக் கூறுகிறபடியால் இந்த மனிதனை
நாங்கள் பிடித்து வந்தோம். இராயனுக்கு வரி
கொடுக்கக் கூடாதென்று அவன் கூறுகிறான்.
அவன் தன்னைக் கிறிஸ்துவாகிய அரசர்
என்று அழைக்கிறான்" என்றனர்.
3பிலாத்து இயேசுவிடம், "நீ யூதரின்
அரசனா?" என்று கேட்டான். இயேசு, "ஆம்,
அது சரியே" என்றார். 4அதைக் கேட்ட
பிலாத்து தலைமை ஆசாரியரிடமும், மக்களி
டமும் "இந்த மனிதனிடம் தவறு எதையும்
நான் காணவில்லையே" என்றான்.
5அவர்கள் மீண்டும் மீண்டும், "இயேசு
மக்களின் மத்தியில் அமைதியின்மையை
உருவாக்கிக் கொண்டுள்ளான். யூதேயாவைச்
சுற்றிலும் அவன் போதிக்கிறான். அவன்
கலிலேயாவில் ஆரம்பித்து இங்கு வந்திருக்
கிறான்" என்றார்கள்.

### ஏரோதுவின் முன் இயேசு

6அதைக் கேட்ட பிலாத்து, "இயேசு கலிலே
யாவிலிருந்து வந்தவரா?" என்று வின
வினான். 7பின்பு ஏரோதின் அதிகாரத்திற்
குட்பட்ட பகுதியில் இருந்து இயேசு வருவதை
அறிந்தான். அப்போது ஏரோது எருசலேமில்
இருந்தான். எனவே பிலாத்து, இயேசுவை
அவனிடம் அனுப்பினான். 8இயேசுவைப்
பார்த்ததும் ஏரோது மிகவும் மகிழ்ச்சியடைந்
தான். அவரைப்பற்றி அவன் அதிகமாக கேள்
விப்பட்டிருந்தபடியினாலும், இயேசு ஏதேனும்
ஒரு அதிசயம் செய்வாரா எனப்பார்க்க விருப்
பப்பட்டிருந்தபடியினாலும் அவரைக் காண
வெகு நாளாய் விருப்பம் கொண்டிருந்தான்.
9இயேசுவிடம் பல கேள்விகளைக் கேட்டான்
ஏரோது. ஆனால் இயேசு ஒன்றுமே கூற
வில்லை. 10தலைமை ஆசாரியரும், வேதபார
கரும் அங்கே நின்று கொண்டிருந்தார்கள்.
அவர்கள் இயேசுவுக்கு எதிரானவைகளை
உரக்கக் கூறிக்கொண்டிருந்தார்கள்.

11ஏரோதுவும், அவனது வீரர்களும் இயேசு
வைப் பார்த்து நகைத்தார்கள். அரசனுக்குரிய
ஆடைகளை அணிவித்து அவரை எள்ளி
நகையாடினார்கள். பின்பு ஏரோது இயேசு
வைப் பிலாத்துவிடமே திரும்ப அனுப்
பினான். 12முன்னர் பிலாத்துவும், ஏரோதுவும்
பகைவர்களாக இருந்து வந்தனர். ஆனால்
அன்று ஏரோதுவும், பிலாத்துவும் நண்பர்களா
யினர்.

### பிலாத்துவும் மக்களும்

*(மத்தேயு 27:15-26; மாற்கு 15:6-15;*
*யோவான் 18:29-19:16)*

13தலைமை ஆசாரியரையும் யூத அதிகாரி
களையும் மக்களோடு கூட பிலாத்து அழைத்
தான். 14பிலாத்து அவர்களை நோக்கி, "நீங்கள்
இந்த மனிதனை (இயேசு) என்னிடம் அழைத்து
வந்தீர்கள். மக்களின் நடுவில் அமைதியின்
மையை விளைவிக்கிறான் என்று சொன்னீர்
கள். ஆனால் உங்களுக்கு முன்பாக நான்
நியாயம் தீர்த்தேன். அவன் செய்ததாக நான்
எந்த குற்றத்தையும் கண்டுபிடிக்க முடிய
வில்லை. நீங்கள் புகார் சொல்கிற காரியங்
களில் இயேசு குற்றவாளியாக்கப்படவில்லை.
15மேலும் ஏரோதுவும் அவரிடம் தவறேதும்
காணவில்லை. மீண்டும் இயேசுவை நம்மிடமே
திருப்பி அனுப்பினான் ஏரோது. அவருக்கு
மரணதண்டனை தரத் தேவையில்லை.
16எனவே நான் அவரைச் சிறிய தண்டனை
ஏதேனும் கொடுத்து விடுவித்து விடுவேன்"
என்றான். 17* 18ஆனால் மக்கள் அனைவரும்,
"அவனைக் கொல்லுங்கள். பரபாசை விடு
தலை செய்யுங்கள்" என்று சத்தமிட்டனர்.
19(நகருக்குள் கலகம் விளைவித்ததற்காக ஏற்
கெனவே சிறையில் அடைக்கப்பட்டிருந்த மனி
தன் பரபாஸ். அவன் சிலரைக் கொன்றுமிருந்
தான்.)

20பிலாத்து இயேசுவை விடுதலை செய்ய
விரும்பினான். எனவே பிலாத்து மீண்டும்
அவர்களை நோக்கி, இயேசுவை விடுவிப்
பதாகக் கூறினான். 21ஆனால் அவர்கள் மீண்
டும் உரத்த குரலில், "அவனைக் கொல்
லுங்கள். அவனைச் சிலுவையில் அறைந்துக்
கொல்லுங்கள்" என்றார்கள்.

22மூன்றாம் முறை பிலாத்து மக்களை
நோக்கி, "ஏன்? அவன் என்ன தவறு செய்
தான்? அவன் குற்றவாளி அல்ல. அவனைக்
கொல்வதற்கேற்ற காரணம் எதையும் நான்
காணவில்லை. எனவே அவனுக்குச் சிறிய
தண்டனை கொடுத்து அவனை விடுதலை
செய்வேன்" என்றான்.

23ஆனால் தொடர்ந்து மக்கள் சத்தமிட்டார்
கள். இயேசுவைச் சிலுவையில் அறைய
வேண்டுமென வேண்டினார்கள். அவர்கள் மிக
வும் உரத்த குரலில் சத்தமிட்டதைக் கேட்டதும்
24அவர்களின் விருப்பத்தின்படியே செய்ய
முடிவெடுத்தான் பிலாத்து. 25மக்கள் அனை
வரும் பரபாஸ் விடுதலை செய்யப்படவேண்
டும் என்று விரும்பினர். கலகம் விளைவித்த
தற்காகவும் மக்களைக் கொன்றதற்காகவும்
பரபாஸ் சிறையில் இருந்தான். பிலாத்து
பரபாஸை விடுவித்தான். கொல்லப்படும் பொ
ருட்டு, இயேசுவை மக்களிடம் பிலாத்து ஒப்
படைத்தான். மக்களும் அதையே விரும்பினர்.

### சிலுவையில் இயேசு

*(மத்தேயு 27:32-44; மாற்கு 15:21-32;*
*யோவான் 19:17-27)*

26இயேசுவைக் கொல்லும் பொருட்டு
வீரர்கள் வெளியே அழைத்துச்சென்றனர். அப்
போது வயல்களிலிருந்து நகருக்குள் ஒரு மனி
தன் வந்து கொண்டிருந்தான். அவன் பெயர்
சீமோன். அவன், சிரேனே நகரைச் சேர்ந்
தவன். இயேசுவின் சிலுவையைச் சுமந்து
அவரைத் தொடர்ந்து வருமாறு சீமோனை
வீரர்கள் வற்புறுத்தினார்கள்.

27பலரும் இயேசுவைத் தொடர்ந்தனர். சில
பெண்கள் வருந்தி அழுதனர். அவர்கள் இயேசு
வுக்காக கவலைப்பட்டனர். 28ஆனால் இயேசு
திரும்பி பெண்களை நோக்கி, "எருசலேமின்
பெண்களே, எனக்காக அழாதீர்கள். உங்களுக்
காகவும் உங்கள் பிள்ளைகளுக்காகவும் அழுங்
கள். 29ஏனெனில் பிள்ளைகளைப் பெற
முடியாத பெண்கள் ஆசீர்வதிக்கப்படுகிறார்
கள் என்றும் பிள்ளைகள் இல்லாத பெண்கள்
ஆசீர்வதிக்கப்படுகிறார்கள் என்றும் மக்கள்
பேசப்போகும் காலம் வரும். 30அப்போது
மக்கள் மலையை நோக்கி, 'எங்கள் மேல்
விழு' என்பார்கள். சிறுக் குன்றுகளை

---

**வாக்கியம் 17** சில கிரேக்கப் பிரதிகளில் லுக்காவில் 17வது வாக்கியம் சேர்க்கப்பட் டுள்ளது. "'ஒவ்வொரு ஆண்டும் பஸ்கா பண்டிகையின் போது யாரேனும் ஒரு சிறைக் கைதியை விடுவிப்பது பிலாத்துவின் வழக்கம்."

நோக்கி, 'எங்களை மறைத்துக் கொள்' என்று
சொல்லத் தொடங்குவார்கள்.* 31வாழ்க்கை
நன்றாக இருக்கும்போது மக்கள் இவ்வாறு
நடந்து கொண்டால், தீமையான காலம் வரும்
போது என்ன நிகழும்?"* என்றார்.

32கொல்லப்படுவதற்காக இரண்டு குற்றவா
ளிகளும் இயேசுவோடு வழி நடத்திச் செல்லப்
பட்டார்கள். 33இயேசுவும் ,அக்குற்றவாளிகளும்
"கபாலம்" என்று அழைக்கப்பட்ட இடத்துக்கு
அழைத்துச் செல்லப்பட்டார்கள். அங்கு வீரர்
கள் இயேசுவைச் சிலுவையில் அறைந்தார்
கள். அவர்கள் குற்றவாளிகளையும் சிலுவை
யில் அறைந்தார்கள். ஒரு குற்றவாளியை
இயேசுவின் வலதுபக்கத்திலும், இன்னொரு
குற்றவாளியை இயேசுவின் இடது பக்கத்
திலும் சிலுவையில் அறைந்தார்கள். 34இயேசு,
"தந்தையே, என்னைக் கொல்கிற இந்த மக்
களை மன்னித்தருளுங்கள். அவர்கள் செய்து
கொண்டிருப்பதை அவர்கள் அறியாமல்
இருக்கிறார்கள்" என்றார்.

இயேசுவின் ஆடைகளை எடுப்பது யார்
என்று சீட்டுப்போட்டுப் பார்த்தார்கள். 35இயே
சுவைப் பார்த்தபடி மக்கள் நின்றனர். யூத
அதிகாரிகள் இயேசுவைப் பார்த்து நகைத்
தனர். அவர்கள், "தேவனால் தேர்ந்தெடுக்கப்
பட்ட கிறிஸ்து என்றால் அவனே தன்னைக்
காப்பாற்றிக் கொள்ளட்டும். அவன் பிற மக்க
ளைக் காப்பாற்றவில்லையா?" என்றார்கள்.

36வீரர்களும் கூட இயேசுவைப் பார்த்துச்
சிரித்து எள்ளி நகையாடினார்கள். அவர்கள்
இயேசுவை நெருங்கி புளித்த திராட்சை இரசத்
தைக் கொடுத்தனர். 37வீரர்கள், "நீ யூதர்களின்
அரசனானால் உன்னைக் காப்பாற்றிக்கொள்"
என்றனர். 38(சிலுவையின் மேல்பகுதியில்
"இவன் யூதர்களின் அரசன்" என்ற சொற்கள்
எழுதப்பட்டிருந்தன.) 39சிலுவையில் அறை
யப்பட்ட குற்றவாளிகளில் ஒருவன் இயேசு
வுக்கு எதிராக தீய சொற்களைச் சொல்லிக்
கொண்டிருந்தான். "நீ கிறிஸ்து அல்லவா?
உன்னைக் காப்பாற்றிக்கொள். எங்களையும்
காப்பாற்று" என்றான்.

40ஆனால் இன்னொரு குற்றவாளி
அவனைத் தடுத்தான். அவன், "நீ தேவனுக்குப்
பயப்படவேண்டும். நாம் எல்லாரும் விரை
வில் இறந்து போவோம். 41நீயும், நானும்
குற்றவாளிகள். நாம் செய்த குற்றங்களுக்கான
விலையைக் கொடுக்கவேண்டியிருப்பதால்
நீயும் நானும் கொல்லப்படவேண்டியவர்கள்.
ஆனால் இம்மனிதரோ (இயேசு) எந்தத் தவறும்
செய்ததில்லை" என்றான். 42பின்பு இக்குற்ற
வாளி இயேசுவை நோக்கி, "இயேசுவே,
உங்கள் இராஜ்யத்தை ஆரம்பிக்கும்போது
என்னை நினைவு கூர்ந்து கொள்ளுங்கள்"
என்றான். 43இயேசு அவனை நோக்கி, "கவனி,
நான் சொல்வது உண்மை. இன்று நீ என்
னோடு சேர்ந்து பரலோகத்திலிருப்பாய்" என்
றார்.

### இயேசு மரித்தல்

(மத்தேயு 27:45-56; மாற்கு 15:33-41;
யோவான் 19:28-30)

44அப்போது மதிய வேளை. ஆனால் மதிய
நேரம் பின்பு மூன்று மணிவரையிலும்
அப்பகுதி முழுதும் இருள் சூழ்ந்திருந்தது.
45சூரியன் தென்படவில்லை. தேவாலயத்தின்
திரை இரண்டாகக் கிழிந்தது. 46இயேசு,
"பிதாவே, என் ஆவியை உம்மிடம் தருகி
றேன்" என்னும் வார்த்தையுடன் இறந்தார்.
47அங்கு நின்ற இராணுவ அதிகாரி நடந்த
வற்றை எல்லாம் பார்த்தான். அவன், "இந்த
மனிதன் உண்மையிலேயே தேவகுமாரன்தான்
என்பதை அறிவேன்" என்று கூறியவாறே
தேவனை வாழ்த்தினான். 48இதைப் பார்க்க
வென்று நகரிலிருந்து பலரும் வந்திருந்தார்
கள். பார்த்ததும் துயர மிகுதியால் மார்பில்
அறைந்தபடி வீட்டுக்குத் திரும்பினார்கள்.
49இயேசுவுக்கு மிகவும் நெருக்கமான நண்பர்
கள் அங்கு இருந்தார்கள். கலிலேயாவில்
இருந்து இயேசுவைத் தொடர்ந்து வந்த சில
பெண்களும் அங்கே இருந்தார்கள். அவர்கள்
சிலுவைக்கு சற்றே தொலைவில் இவற்றைப்
பார்த்தபடி நின்று கொண்டிருந்தார்கள்.

### அரிமத்தியா ஊரின் யோசேப்பு

(மத்தேயு 27:57-61; மாற்கு 15:42-47
யோவான் 19:38-42)

50-51அரிமத்தியா என்னும் நகரில் இருந்து
ஒரு மனிதன் அங்கே வந்திருந்தான். அவன்
பெயர் யோசேப்பு. அவன் நல்ல பக்தியுள்ள
மனிதன். தேவனின் இராஜ்யத்தின் வரு
கையை எதிர் நோக்கி இருந்தான். யூதர்
அவையில் அவன் ஒரு உறுப்பினன். பிற
யூத அதிகாரிகள் இயேசுவைக் கொல்ல முடி
வெடுத்தபோது அவன் அதை ஒப்புக்கொள்ள
வில்லை. 52இயேசுவின் உடலைக் கேட்கும்
பொருட்டு யோசேப்பு பிலாத்துவிடம் சென்
றான். உடலை எடுத்துக்கொள்ள பிலாத்து,
யோசேப்புக்கு அனுமதி கொடுத்தான்.
53எனவே யோசேப்பு சிலுவையில் இருந்து
இயேசுவின் உடலைக் கீழே இறக்கி ஒரு துணி
யால் உடலைச் சுற்றினான். பிறகு பாறைக்குள்
தோண்டப்பட்டிருந்த ஒரு கல்லறைக்குள்
இயேசுவின் உடலை வைத்தான். அக்கல்லறை
அதற்கு முன் பயன்படுத்தப்பட்டிருக்கவில்லை.
54அப்பொழுது ஆயத்த நாளின்* இறுதிப்பகுதி

---

**மக்கள் ... தொடங்குவார்கள்** ஓசியா 10:8 பார்க்க.

**வாழ்க்கை ... நிகழும்** இலக்கியவழக்கில் "அவர்கள் மரத்தையே இவ்வாறு செய்தால் காய்ந்த மரத்தை என்ன செய்வர்?

**ஆயத்த நாள்** வெள்ளிக்கிழமை. ஓய்வு நாளுக்கு முந்திய நாள்.

நெருங்கியது. சூரியன் மறைந்தபிறகு ஓய்வு
நாள் ஆரம்பிக்கும்.
55கலிலேயாவில் இருந்து இயேசுவோடு
வந்திருந்த பெண்கள் யோசேப்பை தொடர்ந்
தனர். அவர்கள் கல்லறையைப் பார்த்தார்கள்.
இயேசுவின் உடல் உள்ளே கிடத்தப்பட்டிருந்த
இடத்தையும் பார்த்தார்கள். 56இயேசுவின் உட
லில் பூசுவதற்காக மணம்மிக்க பொருள்களைத்
தயாரிப்பதற்காக அப்பெண்கள் சென்றார்கள்.
ஓய்வு நாளில் அவர்கள் ஓய்வெடுத்தார்கள்.
மோசேயின் சட்டம் இவ்வாறு செய்யுமாறு
எல்லா மக்களுக்கும் கட்டளை இட்டிருந்தது.

### இயேசு உயிர்த்தார்

*(மத்தேயு 28:1-10; மாற்கு 16:1-8;
யோவான் 20:1-10)*

24 வாரத்தின் முதல் நாளில் அதி
காலைப் பொழுதில் இயேசுவின் உடல்
வைக்கப்பட்டிருந்த கல்லறைக்கு பெண்கள்
வந்தார்கள். தாம் தயாரித்த மணமிக்க பொருள்
களை அவர்கள் எடுத்து வந்திருந்தார்கள்.
2ஒரு பெருங்கல் கல்லறையின் நுழை வாசலில்
வைக்கப்பட்டிருந்தது. அந்தக் கல் உருண்டு
போயிருந்ததை அப்பெண்கள் கண்டார்கள்.
3அவர்கள் உள்ளே சென்றார்கள். ஆனால்
இயேசுவின் உடல் அங்கு இருக்கவில்லை.
4அப்பெண்கள் இதைப் புரிந்து கொள்ள
வில்லை. அவர்கள் அதைக்குறித்து ஆச்சரியப்
பட்டுக்கொண்டிருக்கையில் திடீரென்று ஒளி
மிக்க ஆடை அணிந்தவர்களாய் இரண்டு
தேவதூதர்கள் அவர்களருகே நின்றார்கள்.
5அப்பெண்கள் மிகவும் பயந்தார்கள். அந்த
இரு மனிதரும் அப்பெண்களை நோக்கி,
"உயிரோடு இருக்கிற ஒருவரை ஏன் இங்கு
தேடுகிறீர்கள்? இது இறந்தோர்க்குரிய இடம்.
6இயேசு இங்கே இல்லை. அவர் மரணத்
தினின்று எழுந்தார். 7தீயோரிடம் ஒப்படைக்
கப்பட்டு சிலுவையில் அறையப்பட்டு கொல்
லப்படுவார் எனவும், மூன்றாம் நாளில்
மரணத்தினின்று எழுவார் எனவும் இயேசு
கலிலேயாவில் சொன்னது ஞாபகம் இருக்
கிறதா?" என்றார்கள். 8அப்போது இயேசு
கூறியவற்றை அப்பெண்கள் நினைவு கூர்ந்
தார்கள். 9அப்பெண்கள் கல்லறையை விட்டுப்
போய், பதினொரு சீஷர்களும், மற்றவர்களும்
இருக்கும் இடத்துக்குச் சென்றார்கள். கல்லறை
யின் அருகே நடந்த நிகழ்ச்சிகள் அனைத்
தையும் அப்பெண்கள் அவர்களுக்குக் கூறி
னார்கள். 10அவர்கள் மகதலேனா மரியாள்,
யோவான்னா, யாக்கோபின் தாயாகிய
மரியாள், வேறு சில பெண்கள் ஆகியோர்.
அப்பெண்கள் நடந்த அனைத்தையும் சீஷர்
களுக்குச் சொன்னார்கள். 11அப்பெண்கள்
கூறியவற்றை சீஷர்கள் நம்பவில்லை. அது
விசித்திரமான பேச்சாக இருந்தது. 12ஆனால்
பேதுரு எழுந்து அது உண்மையா எனப்
பார்க்க கல்லறைக்கு ஓடினான். அவன்
உள்ளே பார்த்து இயேசுவின் உடலைச் சுற்றி
வைக்கப்பட்டிருந்த துணிகள் மட்டுமே கிடப்
பதைக் கண்டான். இயேசுவைக் காண
வில்லை. இயேசு சென்று விட்டிருந்தார். நடந்த
வற்றைக் குறித்து ஆச்சரியப்பட்டவனாய்
பேதுரு தனித்திருக்க விரும்பிச் சென்றான்.

### எம்மாவூர் சென்ற சீஷர்கள்

*(மாற்கு 16:12-13)*

13எம்மா என்னும் ஊருக்கு அதே நாள்
இயேசுவின் இரண்டு சீஷர்கள் சென்று கொண்
டிருந்தார்கள். எருசலேமில் இருந்து ஏழுமைல்
தூரத்தில் அந்த ஊர் இருந்தது. 14நடந்தவை
அனைத்தையும் குறித்து அவர்கள் பேசிக்
கொண்டிருந்தார்கள். 15அவர்கள் இவற்றை
விவாதித்துக்கொண்டிருக்கும்போது இயேசு
அருகே வந்து அவர்களோடு நடந்தார்.
16(இயேசுவை அடையாளம் கண்டு கொள்வதி
லிருந்து ஏதோ ஒன்றால் அவர்கள் தடுக்கப்
பட்டார்கள்) 17"நீங்கள். நடக்கும்போது பேசிக்
கொண்டிருந்த விஷயங்கள் என்ன?" என்று
இயேசு கேட்டார்.
இருவரும் நின்றார்கள். அவர்கள் முகங்கள்
சோகத்தால் நிரம்பி இருந்தன. 18கிலேயோ
பாஸ் என்பவன், "கடந்த சில நாள்களாக
அங்கே நிகழ்ந்தவற்றை அறியாத மனிதர்
எருசலேமில் நீங்கள் ஒருவராகத்தான் இருக்க
வேண்டும்" என்றான்.
19அவர்களை நோக்கி, இயேசு, "நீங்கள்
எதைக் குறித்துப் பேசிக்கொண்டிருக்கிறீர்
கள்?" என்றார்.
அம்மனிதர்கள் அவரை நோக்கி, "நாசரேத்
தில் உள்ள இயேசுவைக் குறித்துப் பேசுகி
றோம். தேவனுக்கும் மக்களுக்கும் அவர் ஒரு
பெரிய தீர்க்கதரிசி. அவர் பல ஆற்றல்மிக்க
காரியங்களைச் சொல்லியும் செய்தும் வந்தி
ருக்கிறார். 20ஆனால் தலைமை ஆசாரியரும்
நம் தலைவர்களும் அவர் நியாயந்தீர்க்கப்பட்
டுக் கொல்லப்படுமாறு கொடுத்துவிட்டார்கள்.
அவர்கள் இயேசுவைச் சிலுவையில் அறைந்
தார்கள். 21இஸ்ரவேல் மக்களை விடுவிப்பவர்
இயேசு ஒருவரே என நாங்கள் நம்பிக்கொண்
டிருந்தோம். ஆனால் இப்படி நடந்துள்ளது.
இயேசு கொல்லப்பட்டு மூன்று நாட்களாகி
விட்டன. 22இன்று எங்கள் பெண்களில் சிலர்
எங்களுக்குச் சில ஆச்சரியமான தகவல்
களைச் சொன்னார்கள். இன்று அப்பெண்கள்
அதிகாலையில் இயேசுவின் உடல் வைக்கப்
பட்டிருந்த கல்லறைக்குச் சென்றார்கள்.
23ஆனால் அவரது உடலை அங்கே காண
வில்லை. அவர்களுக்கு ஒரு காட்சியில் தரிச
னமான இரண்டு தேவதூதர்களைப் பார்த்
தார்கள். 'இயேசு உயிரோடு இருக்கிறார்' என
அவர்கள் சொன்னார்கள் என்று அப்பெண்
கள் வந்து எங்களிடம் சொன்னார்கள். 24அதன்
பின்பு எங்களில் சிலரும் கல்லறைக்குச் சென்
றார்கள். பெண்கள் சொன்னபடியே இருந்தது.

கல்லறை வெறுமையாய் இருந்ததை அவர்கள்
பார்த்தார்கள். ஆனால் அவர்கள் இயேசுவைப்
பார்க்கவில்லை" என்றார்கள்.

25பின்பு இயேசு இருவரிடமும், "நீங்கள் அறி
வற்றவர்கள். உண்மையை மிகவும் தாமதமாய்
உணர்ந்து கொள்கிறீர்கள். தீர்க்கதரிசிகளின்
ஒவ்வொரு வார்த்தையையும் நீங்கள் நம்ப
வேண்டும். 26கிறிஸ்து தன் மகிமையில்
நுழையும் முன்பு இவ்வாறு துன்புறவேண்டும்
என்று தீர்க்கதரிசிகள் கூறி இருந்தார்கள்"
என்றார். 27பிற்பாடு சுவடிகளில் தன்னைப்
பற்றி எழுதிய ஒவ்வொன்றைப்பற்றியும்
இயேசு விளக்க ஆரம்பித்தார். மோசேயின்
புத்தகங்கள் தொடங்கி தீர்க்கதரிசிகள் வரைக்
கும் இயேசுவைக் குறித்துக் கூறியவற்றை
அவர் சொன்னார்.

28அவர்கள் எம்மாவூர் என்னும் ஊரை
அடைந்தார்கள். தன் பயணத்தைத் தொடர
விரும்பியதுபோல இயேசு நடித்தார். 29ஆனால்
அவர்கள் அவர் அங்கே தங்கவேண்டுமென
விரும்பினார்கள். அவர்கள் இயேசுவை "எங்
களுடன் தங்குங்கள். மிகவும் தாமதமாகிவிட்
டது. எங்கும் இருள் சூழ்ந்துவிட்டது" என்று
கெஞ்சிக் கேட்டார்கள். எனவே அவர் அவர்
களோடு தங்கச் சென்றார்.

30அவர்களோடு சேர்ந்து இயேசு உண
வுண்ண உட்கார்ந்திருந்தார். உணவுக்காக
நன்றி சொல்லிவிட்டு, உணவைப் பகிர்ந்தார்.
31அப்போது அம்மனிதர் இயேசுவை அடை
யாளம் கண்டுகொள்ள முடிந்தது. அவர் யார்
என அவர்கள் உணர்ந்து கொண்டதும், அவர்
மறைந்து விட்டார். 32இருவரும் தமக்குள்ளாக,
"பாதையில் நம்முடன் இயேசு பேசிக்கொண்டு
வந்தபோது ஏதோ எரிகிறார்ப்போல ஓர்
உணர்வு இதயத்தில் எழுந்தது. வேதாகமத்தின்
பொருளை அவர் விளக்கியபோது மிகவும்
பரவசமாக இருந்தது" என்று பேசிக் கொண்
டார்கள்.

33பின்பு அவர்கள் எழுந்து திரும்பி எருச
லேமை நோக்கிச் சென்றார்கள். எருசலேமில்
இயேசுவின் சீஷர்கள் ஒன்றாகக் கூடியிருக்கக்
கண்டார்கள். பதினொரு சீஷர்களும் அவர்
களோடிருந்த மக்களும் 34"மரணத்திலிருந்து
உண்மையாகவே அவர் மீண்டும் எழுந்தார்.
சீமோனுக்கு (பேதுருவுக்கு) அவர் காட்சியளித்
தார்" என்றார்கள்.

35அப்போது பாதையில் நடந்த விஷயங்
களை இரு மனிதர்களும் கூறினார்கள். உண
வைப் பங்கிட்டபோது எவ்வாறு இயேசுவை
அடையாளம் கண்டு கொண்டார்கள் எனச்
சொன்னார்கள்.

### சீஷர்களுக்கு இயேசுவின் காட்சி

*(மத்தேயு 28:16-20; மாற்கு 16:14-18; யோவான்
20:19-23; அப்போஸ்தலர் 1:6-8)*

36அவர்கள் இருவரும் இவற்றைக் கூறிக்
கொண்டிருந்தபோது சீஷர்களின் கூட்டத்தின்
நடுவில் இயேசு நின்றிருந்தார். இயேசு அவர்
களை நோக்கி, "உங்களுக்குச் சமாதானம்
உண்டாவதாக" என்றார்.

37சீஷர்களுக்கு இது ஆச்சரியத்தைக் கொ
டுத்தது. அவர்கள் பயந்தார்கள். அவர்கள்
ஏதோ ஒரு ஆவியைப் பார்த்துக்கொண்டிருப்
பதாக எண்ணினார்கள். 38ஆனால் இயேசு,
"நீங்கள் எதற்காக குழப்பம் அடைந்திருக்கிறீர்
கள்? நீங்கள் காண்பதில் ஏன் ஐயம் கொள்கின்
றீர்கள்? 39என் கைகளையும் என் பாதங்களை
யும் பாருங்கள். உண்மையாகவே நான்தான்.
என்னைத் தொடுங்கள். எனக்கு உயிருள்ள
உடல் இருப்பதைப் பார்க்க முடியும். ஓர் ஆவி
இப்படிப்பட்ட உடல் கொண்டிருக்காது" என்
றார்.

40இயேசு அவர்களுக்கு இதைக் கூறிய
பின்பு, அவர்களுக்குத் தன் கைகளிலும்,
பாதங்களிலும் உள்ள ஆணி துளைகளைக்
காட்டினார். 41சீஷர்கள் ஆச்சரியமுற்றவர்
களாய் இயேசுவை உயிரோடு பார்த்ததால்
மிகவும் மகிழ்ந்தார்கள். எனினும் கூட தாம்
பார்த்ததை அவர்களால் நம்ப முடியவில்லை.
அவர்களை நோக்கி இயேசு, "உங்களிடம்
இங்கே ஏதாவது உணவு இருக்கிறதா?" என்று
கேட்டார் 42அவர்கள் சமைத்த மீனில் ஒரு
துண்டைக் கொடுத்தார்கள். 43சீஷர்களின்
முன்னிலையில் இயேசு அந்த மீனை எடுத்து
சாப்பிட்டார்.

44அவர்களை நோக்கி இயேசு, "நான் உங்
களோடு இருந்த காலத்தை ஞாபகப்படுத்திக்
கொள்ளுங்கள். மோசேயின் சட்டத்திலும்,
தீர்க்கதரிசிகளின் நூற்களிலும், சங்கீதத்திலும்
என்னைப்பற்றி எழுதப்பட்டிருக்கிற அனைத்
தும் நடந்தேயாக வேண்டும் என்று நான்
சொன்னேன்" என்றார்.

45பின்பு இயேசு சீஷர்களுக்கு வேதாக
மத்தை விளக்கினார். தன்னைப்பற்றி எழுதப்
பட்டிருக்கிற காரியங்களை அவர்கள் புரிந்து
கொள்வதற்கு உதவினார். 46பிறகு அவர்களை
நோக்கி, "கிறிஸ்து கொல்லப்பட்டு மூன்றாம்
நாள் மரணத்தில் இருந்து எழுவார் என்று
எழுதப்பட்டிருக்கிறது. 47-48நீங்கள் நடந்தவை
அனைத்தையும் பார்த்தீர்கள். நீங்களே சாட்
சிகள். மக்களுடைய பாவங்கள் மன்னிக்கப்பட
முடியும் என்று நீங்கள் போய் அவர்களுக்குச்
சொல்ல வேண்டும். அவர்கள் தம் மனம் மாறி,
தாம் செய்த பாவங்களுக்காக வருந்தவேண்
டும் என்பதை அவர்களுக்குச் சொல்லுங்கள்.
அதைச் செய்தால் அவர்கள் தேவனால்
மன்னிக்கப்படுவர். எருசலேமிலிருந்து நீங்கள்
புறப்பட்டு என் பெயரில் இவற்றைப் போதிக்க
வேண்டும். உலகத்தில் உள்ள எல்லா மக்க
ளுக்கும் இந்த நற்செய்தி கூறப்பட வேண்டும்.
49கவனியுங்கள். என் பிதா உங்களுக்கு வாக்
குறுதி கொடுத்துள்ளார். அதை உங்களுக்கு
அனுப்புவேன். விண்ணில இருந்து அந்த
வல்லமையை நீங்கள் பெறும் வரைக்கும்

எருசலேமில் தங்கி இருக்க வேண்டும்" என்
றார்.

### இயேசு பரலோகத்திற்குத் திரும்புதல்

*(மாற்கு 16:19-20; அப்போஸ்தலர் 1:9-11)*

50எருசலேமில் இருந்து பெத்தானியா
வரைக்கும் இயேசு சீஷர்களை அழைத்துச்
சென்றார். பின்பு கைகளை உயர்த்தி அவர்
களை ஆசீர்வதித்தார். 51இயேசு அவர்களை
வாழ்த்தும்போது அவர்களிடமிருந்து பிரிக்கப்
பட்டு பரலோகத்திற்கு எடுத்து செல்லப்பட்டார்.
52சீஷர்கள் அவரை அங்கே வணங்கினர்.
பிறகு எருசலேமுக்கு திரும்பிச் சென்றார்கள்.
அவர்கள் மிகவும் மகிழ்வோடு இருந்தார்கள்.
53தேவனை வாழ்த்தியவாறே எப்போதும்
அவர்கள் தேவாலயத்தில் தங்கி இருந்தார்கள்.

# யோவான் எழுதிய சுவிசேஷம்

### கிறிஸ்து உலகத்துக்கு வருதல்

1 உலகம் ஆரம்பிக்கும் முன்பே வார்த்தை*
இருந்தது. அந்த வார்த்தை தேவனோடு
இருந்தது. அந்த வார்த்தை தேவனாகவே இருந்
தது. 2அவர் (வார்த்தை) தொடக்கக் காலத்
திலேயே தேவனோடு இருந்தார். 3அனைத்தும்
அவர் (வார்த்தை) மூலமாகவே உண்டாக்கப்
பட்டன. அவரில்லாமல் எதுவும் உருவாக
வில்லை 4அவருக்குள் ஜீவன் இருந்தது. அந்த
ஜீவன் உலகத்து மக்களுக்கு ஒளியாய் இருந்
தது. 5அந்த ஒளி இருளிலே வெளிச்சத்தைத்
தந்தது. இருளானது அந்த ஒளியை மேற்கொள்
ளவில்லை.

6யோவான்* என்ற பெயருள்ள ஒரு மனி
தன் இருந்தான். அவன் தேவனால் அனுப்பப்
பட்டவன். 7அவன் அந்த ஒளியைப் (கிறிஸ்து)
பற்றி மக்களிடம் சொல்வதற்காக வந்தான்.
எனவே மக்கள் அனைவரும் யோவான் மூல
மாக அந்த ஒளியைப்பற்றிக் கேள்விப்படவும்
நம்பிக்கை வைக்கவும் முடிந்தது. 8யோவான்
ஒளியல்ல. ஆனால் அவன் அந்த ஒளியைப்
பற்றி மக்களிடம் சொல்லவே வந்தவன்.
9அனைத்து மக்களுக்கும் வெளிச்சத்தைத்
தருகிற அந்த உண்மையான ஒளி உலகத்திற்கு
வந்து கொண்டிருந்தது.

10அவர் (வார்த்தை) உலகத்தில் ஏற்கெ
னவே இருந்தார். உலகம் அவர் மூலமாகவே
உண்டாக்கப்பட்டது. ஆனால் உலகம் அவரை
அறிந்து கொள்ளாமல் இருந்தது. 11அவருக்குச்
சொந்தமான உலகத்துக்கு அவர் வந்தார்.
ஆனால் அவருக்குச் சொந்தமான மக்கள்
அவரை ஏற்றுக் கொள்ளவில்லை. 12சிலர்
அவரை ஏற்றுக் கொண்டனர். அவர்கள் நம்
பினர். தன்னை நம்பியவர்களுக்கு தேவனின்
பிள்ளைகளாவதற்கு உரிமையைக் கொடுத்
தார். 13இந்தப் பிள்ளைகள் ஏனைய சிறிய
குழந்தைகள் பிறப்பதைப்போல பிறக்கவில்
லை. இவர்கள் ஒரு தாய் தந்தையின் விருப்பத்
தின்படியோ, திட்டத்தின்படியோ பிறக்க
வில்லை. இந்தக் குழந்தைகள் தேவனாலேயே
பிறந்தனர்.

14வார்த்தை ஒரு மனிதனாகி நம்மிடையே
வாழ்ந்தார். அவரது மகிமையை நாம்
பார்த்தோம். அந்த மகிமை தந்தையின் ஒரே
மகனுக்கு உரியது. அவ்வார்த்தை கிருபை
யும், உண்மையும் நிறைந்ததாயிற்று. 15அவ
ரைப்பற்றி யோவான் மக்களிடம், "நான் சொல்
லிக்கொண்டிருந்தவர் இவர்தான். 'எனக்குப்
பின்னால் வருகிறவர் என்னிலும் மேலா
னவர். இவர் எனக்கு முன்னரே இருப்பவர்'"
என்று சாட்சி சொன்னான்.

16அவர் (கிறிஸ்து) கிருபையும், உண்மை
யும் நிறைந்தவராய் இருந்தார். அவரிடமிருந்து
நாமனைவரும் கிருபையின் மேல் கிருபை
பெற்றோம். 17மோசே மூலம் சட்டங்கள் கொடுக்
கப்பட்டன! ஆனால் இயேசு கிறிஸ்துவின் மூல
மாகவே கிருபையும், உண்மையும் வந்தன.
18எந்த மனிதனும் ஒருபோதும் தேவனைப்
பார்த்ததில்லை. ஆனால் இயேசுவாகிய ஒரே
குமாரனே தேவன். அவர் பிதாவுக்கு (தேவ
னுக்கு) மிகவும் நெருக்கமானவர். அத்துடன்
குமாரனே தேவனின் தன்மையை நமக்கு
வெளிக்காட்டினார்.

### இயேசுவைப் பற்றி யோவான்

*(மத்தேயு 3:1-12; மாற்கு 1:2-8;
லூக்கா 3:15-17)*

19எருசலேமிலுள்ள யூதர்கள் ஆசாரியரை
யும் லேவியரையும் யோவானிடம் அனுப்பி
வைத்தார்கள். "நீங்கள் யார்?" என்று கேட்
பதற்காக அவர்களை யூதர்கள் அனுப்பினர்.
20யோவான் அவர்களிடம் தாராளமாகப் பேசி
னான். அவன் பதில் சொல்ல மறுக்கவில்லை.
"நான் கிறிஸ்து அல்ல" என்று யோவான்
தெளிவாகக் கூறினான். இதுதான் அவன் மக்க
ளிடம் சொன்னது.

21"பிறகு நீங்கள் யார்? நீங்கள் எலியாவா?"
என்று மேலும் யூதர்கள் யோவானிடம் கேட்
டார்கள்.

"இல்லை. நான் எலியா இல்லை" என்று
யோவான் பதிலுரைத்தான்.

"நீங்கள் தீர்க்கதரிசியா?" என யூதர்கள்
கேட்டனர்.

"இல்லை. நான் தீர்க்கதரிசி இல்லை" என்
றான் யோவான்.

22"நீங்கள் யார்? உங்களைப்பற்றி எங்களுக்
குச் சொல்லுங்கள். எங்களை அனுப்பியவர்
களுக்கு நாங்கள் சொல்வதற்கென்று ஒரு பதில்
சொல்லுங்கள். உங்களைப்பற்றி நீங்கள்

---

**வார்த்தை** தேவ செய்தியாக இயேசு மனுக்குலத்துக்கு வந்தார். எனவே இங்கே வார்த்தை என்பதற்கு கிறிஸ்து என்று பொருள்.

**யோவான்** யோவான் ஸ்நானகன் இயேசுவின் வருகையைப் பற்றி மக்களுக்கு பிரசங்கம் செய்தான். வாசிக்க: மத்தேயு 3; லூக்கா 3.

என்ன சொல்கிறீகள்?” என்று யூதர்கள் கேட்
டனர்.
23யோவான் அவர்களிடம் தீர்க்கதரிசி ஏசா
யாவின் வார்த்தைகளைச் சொன்னான்.

“வனாந்தரத்தில் சத்தமிடுகிறவனின் ஓசை
யாக நான் இருக்கிறேன். ‘கர்த்தருக்கு
வழியை ஆயத்தம் பண்ணுங்கள்.’”
ஏசாயா 40:3

24யூதர்களான இவர்கள் பரிசேயர்கள்*
என்பவர்களால் அனுப்பப்பட்டிருந்தனர். 25“நீ
கிறிஸ்து அல்ல என்று கூறுகிறாய். நீ எலியா
வோ தீர்க்கதரிசியோ அல்ல என்றும் கூறு
கிறாய். பின்னர் நீ ஏன் ஞானஸ்நானம் கொடுக்
கிறாய்?” என அவர்கள் யோவானிடம் கேட்
டார்கள்.
26“நான் தண்ணீரால் ஞானஸ்நானம் தருகி
றேன். ஆனால் உங்களோடு இங்கே இருக்கிற
ஒருவர் உங்களால் அறியப்படாதவராக இருக்
கிறார். 27அந்த ஒருவர்தான் எனக்குப் பின்
னால் வருகிறவர். அவரது செருப்பின் வாரை
அவிழ்க்கக் கூட தகுதியற்றவன் நான்” என்று
யோவான் பதிலுரைத்தான்.
28இந்நிகழ்ச்சிகள் யாவும் யோர்தான் ஆற்
றின் அக்கரையில் உள்ள பெத்தானியாவில்
நடைபெற்றன. இங்கேதான் யோவான் மக்க
ளுக்கு ஞானஸ்நானம் கொடுத்துக் கொண்டி
ருந்தான்.
29மறுநாள் தன்னை நோக்கி இயேசு வரு
வதை யோவான் பார்த்தான். “பாருங்கள்,
இவர்தான் தேவனுடைய ஆட்டுக்குட்டி. உலகத்
தின் பாவங்களை சுமந்துதீர்க்கப் போகிறவர்.
30நான் ஏற்கனவே சொல்லிக்கொண்டிருந்தவர்
இவர்தான். ‘எனக்குப் பிறகு ஒருமனிதர் வரு
வார். அவர் என்னிலும் மேலானவர். ஏனென்
றால் அவர் எனக்கு முன்னமே வாழ்ந்து
கொண்டிருக்கிறவர். அவர் எப்போதும் வாழ்
கிறவர்.’ 31இவரை நானும் அறியாதிருந்தேன்.
ஆனாலும் நான் தண்ணீரால் ஞானஸ்நானம்
கொடுக்க வந்திருக்கிறேன். ஆகையால்
இஸ்ரவேல் மக்கள் இயேசுதான் கிறிஸ்து என
அறிந்து கொள்ளமுடியும்.
32-33“கிறிஸ்து யாரென்று நானும் அறியா
மல்தான் இருந்தேன். ஆனால் தேவன் என்னை
தண்ணீரால் ஞானஸ்நானம் கொடுக்குமாறு
அனுப்பிவைத்தார். ‘நீ யார் மீது பரிசுத்த
ஆவியானவர் இறங்கி அமர்வதைக் காண்
பாயோ, அவர்தான் பரிசுத்த ஆவியால்
ஞானஸ்நானம் கொடுக்கிறவர்’ என்று தேவன்
என்னிடம் கூறினார்” என்றான். “நான் அவ்
வாறு நிகழ்வதைப் பார்த்தேன். ஆவியானவர்
பரலோகத்திலிருந்து இறங்கி வருவதைப்
பார்த்தேன். அந்த ஆவியானவர் ஒரு புறா
வைப்போல இறங்கி இயேசுவின் மீது அமர்ந்
தார். 34நான் இதைத்தான் மக்களிடம் சொல்லி
வருகிறேன். ‘இயேசு தான் தேவனின்குமாரன்”
என்று யோவான் சொன்னான்.

### இயேசுவின் முதல் சீஷர்கள்

35மறுநாள் மறுபடியும் யோவான் அங்கே
இருந்தான். அவனோடு அவனைப் பின்பற்று
கிற சீஷர்களில் இரண்டு பேர் இருந்தனர்.
36இயேசு நடந்து செல்வதை யோவான் பார்த்
தான். “பாருங்கள், இவர்தான் தேவனின் ஆட்
டுக்குட்டி” என்றான்.
37அந்த இரு சீஷர்களும் யோவான் கூறு
வதைக் கேட்டார்கள். ஆகையால் அவர்கள்
இயேசுவைப் பின்தொடர்ந்து சென்றனர்.
38“உங்களுக்கு என்ன வேண்டும்?” என்று
இயேசு திரும்பி அவர்களைப் பார்த்து கேட்
டார். அந்த இருவரும், “போதகரே, நீங்கள்
எங்கே தங்கியிருக்கிறீர்கள்?” என்று கேட்
டனர்.
39“என்னோடு வாருங்கள். நீங்கள் கண்டு
கொள்வீர்கள்” என்று இயேசு பதிலுரைத்தார்.
எனவே அவர்கள் இருவரும் அவர் பின்னால்
சென்றனர். இயேசு தங்கியிருக்கும் இடத்தை
யும் கண்டனர். அன்று அவர்கள் அவரோடு
அங்கே தங்கியிருந்தனர். அப்பொழுது நேரம்
சுமார் நான்கு மணி.
40இயேசுவைப் பற்றி யோவான் சொன்
னதன் மூலமாகத் தெரிந்து கொண்டதால் அவர்
கள் இயேசுவைப் பின்தொடர்ந்து சென்றனர்.
அந்த இருவரில் ஒருவன் பெயர் அந்திரேயா.
அவன் சீமோன் பேதுருவின் சகோதரன்.
41முதல் காரியமாக அவன் தன் சகோதரன்
சீமோன் பேதுருவைப் போய்ப் பார்த்தான்.
“நாங்கள் மேசியாவைக் (அதன் பொருள்
கிறிஸ்து) கண்டுகொண்டோம்” என்று கூறி
னான்.
42பிறகு அந்திரேயா சீமோனை இயேசு
விடம் அழைத்துக்கொண்டு வந்தான். இயேசு
சீமோனைப் பார்த்து, “நீ யோவானுடைய
மகனான சீமோன், நீ கேபா என்று அழைக்கப்
படுவாய்” என்றார். (“கேபா” என்பதற்கு
“பேதுரு” என்று அர்த்தம்.)
43மறுநாள் இயேசு கலிலேயாவுக்குச்செல்
லத் தீர்மானித்தார். இயேசு பிலிப்புவைக்
கண்டு “என்னைத் தொடர்ந்து வா” என்றார்.
44பிலிப்பு, அந்திரேயா, பேதுரு ஆகியோரின்
ஊரான பெத்சாயிதாவைச் சேர்ந்தவன்.
45பிலிப்பு நாத்தான்வேலைப் பார்த்து,
“மோசே எழுதியிருக்கிற சட்டங்களை எண்
ணிப்பார். மோசே வரப்போகிற ஒரு மனி
தனைப் பற்றி எழுதினார். தீர்க்கதரிசிகளும்
அவரைப்பற்றி எழுதி இருக்கிறார்கள்.
நாங்கள் அவரைத் தெரிந்து கொண்டோம்.
அவர் பெயர் இயேசு. யோசேப்பின் மகன்.
நாசரேத்திலிருந்து வருகிறார்.”

---

**பரிசேயர்கள்** யூதச் சட்டதிட்டங்களையும், பழக்க
வழக்கங்களையும் தவறாமல் பின்பற்றுகிற பெரு
மைக்குரிய ஒரு யூதமதக் குழு.

46ஆனால் நாத்தான்வேல் பிலிப்புவிடம்,
“நாசரேத்தா? நாசரேத்திலிருந்து ஏதாவது நன்
மை வர இயலுமா?” எனக் கேட்டான். “வந்து
பார்” என்று பதிலுரைத்தான் பிலிப்பு.
47நாத்தான்வேல் தன்னிடம் வந்து கொண்டி
ருப்பதை இயேசு பார்த்தார். “இதோ வந்து
கொண்டிருக்கிற இவன் உண்மையாகவே
தேவனின் மக்களில் ஒருவன். இவனிடம் எந்த
தவறும் இல்லை” என்று இயேசு கூறினார்.
48“என்னை உங்களுக்கு எப்படித் தெரி
யும்?” என நாத்தான்வேல் கேட்டான். பிலிப்பு
என்னைப்பற்றி உனக்கு கூறும் முன்பே “நீ
அத்தி மரத்தின் கீழே நிற்கும்போதே உன்
னைப் பார்த்தேன்” என்று இயேசு சொன்னார்.
49பிறகு இயேசுவிடம், “ஆண்டவரே! நீங்கள்
தான் தேவ குமாரன்; இஸ்ரவேலின் அரசன்”
என்று நாத்தான்வேல் கூறினான்.
50“நான் உன்னை அத்தி மரத்தின் அடியில்
பார்த்ததாக ஏற்கெனவே கூறியிருக்கிறேன்.
அதனால் என்மீது நீ நம்பிக்கை வைத்தாய்.
ஆனால் அதைவிட மேலும் சிறந்தவைகளைக்
காண்பாய்” என்று இயேசு கூறினார். 51அவர்
மேலும், “நான் மெய்யாகவே உங்களுக்குக்
கூறுகிறேன். பரலோக வாசல் திறந்திருப்பதை
யும், மனித குமாரனிடத்திலிருந்து தேவதூதர்
கள் மேலே செல்வதையும் கீழே இறங்குவ
தையும் நீங்கள் காண்பீர்கள்”* என்றார்.

### கானாவூர் கல்யாணம்

2 கலிலேயாவிலுள்ள கானா என்ற ஊரில்
இரண்டு நாட்களுக்குப் பிறகு ஒரு திரும
ணம் நடந்தது. இயேசுவின் தாய் அங்கே
இருந்தார். 2இயேசுவும் அவரது சீஷர்களும்
அந்தத் திருமணத்துக்கு அழைக்கப்பட்டிருந்
தார்கள். 3திருமண வீட்டில் திராட்சை இரசம்
போதுமான அளவு இல்லை. அது முழுவதும்
தீர்ந்துபோன பின்பு இயேசுவிடம் அவரது
தாயார் “அவர்களிடம் வேறு திராட்சை இரசம்
இல்லை” என்றார்.
4“அன்பான பெண்ணே! நான் என்ன
செய்யவேண்டும் என்று எனக்கு நீ சொல்ல
வேண்டாம். என் நேரம் இன்னும் வரவில்லை”
என்றார் இயேசு.
5“இயேசு என்ன சொல்கிறாரோ அதன்
படி நீங்கள் செய்யுங்கள்” என்று இயேசு
வின் தாயார் வேலையாட்களிடம் சொன்னார்.
6அந்த இடத்தில் தண்ணீர் நிரப்பிவைப்பத
ற்கென்று கல்லால் ஆன ஆறு பெரிய (பாத்தி
ரங்கள்) தொட்டிகள் இருந்தன. இவ்வித தண்
ணீர்த் தொட்டிகளை யூதர்கள் தங்கள் சுத்திக
ரிப்பின் சடங்குகளில் உபயோகித்தனர். ஒவ்
வொரு தொட்டியும் இரண்டு முதல் மூன்று
குடம் தண்ணீரைக் கொள்வன.
7இயேசு வேலைக்காரர்களைப் பார்த்து,
“அந்த தொட்டிகளில் தண்ணீரை நிரப்புங்கள்”
என்று கூறினார். அவர்களும் அவ்வாறே அத்
தொட்டிகளை நிரப்பினர்.
8பிறகு இயேசு வேலைக்காரர்களிடம், “இப்
பொழுது இதிலிருந்து கொஞ்சம் தண்ணீரை
எடுத்து அதனை விருந்தின் பொறுப்பாளியி
டத்தில் கொண்டு போங்கள்” என்றார். வேலை
யாட்கள் அவ்வாறே கொண்டு போனார்கள்.
9அந்த விருந்தின் பொறுப்பாளன் அதைச்
சுவைத்துப்பார்த்தான். அப்பொழுது தண்ணீர்
திராட்சை இரசமாகியிருந்தது. அவனுக்கு
அது எங்கிருந்து வந்ததென்று தெரியவில்லை.
ஆனால் நீரைக் கொண்டுபோன வேலையாட்க
ளுக்குத் தெரிந்திருந்தது. 10விருந்தின் பொறுப்
பாளன் மணமகனை அழைத்து, “என்ன இது,
இவ்வாறு செய்கிறீர்கள்? எல்லோரும் நல்ல
திராட்சை இரசத்தை முதலில் பரிமாறுவார்
கள். விருந்தினர்கள் குடித்துத் திருப்தியடைந்த
பின்னர் ருசி குறைந்த திராட்சை இரசத்தைப்
பரிமாறுவார்கள். நீங்களோ நல்ல திராட்சை
இரசத்தை இதுவரைக்கும் பத்திரப்படுத்தி
வைத்திருந்தீர்கள்” என்றான்.
11இதுவே இயேசு செய்த முதல் அற்புதமா
கும். இயேசு இதனை கலிலேயா நாட்டிலுள்ள
கானா என்ற ஊரில் நிகழ்த்தினார். இயேசு
தனது மகிமையை வெளிப்படுத்தினார். அவ
ரது சீஷர்கள் அவரை நம்பினர்.

### தேவாலயத்தில் இயேசு

(மத்தேயு 21:12-13; மாற்கு 11:15-17
லூக்கா 19:45-46)

12பிறகு இயேசு கப்பர்நகூம் நகருக்குச் சென்
றார். அவரோடு அவரது தாயும், சகோதரர்க
ளும் சீஷர்களும் சென்றனர். அவர்கள் அங்கே
கொஞ்ச நாட்கள் தங்கினர். 13அப்போது யூதர்க
ளின் பஸ்கா பண்டிகை நெருங்கிக் கொண்டி
ருந்தது. ஆகையால் இயேசு எருசலேமுக்குச்
சென்றார். அங்கே அவர் தேவாலயத்தில்
நுழைந்தார். 14தேவாலயத்தில் வியாபாரிகள்
ஆடுகள், மாடுகள், புறாக்கள் போன்றவற்றை
விற்றுக் கொண்டிருந்தனர். மேசைக்கு அரு
கில் அமர்ந்திருக்கும் வேறு சிலரையும்
இயேசு கவனித்தார். அவர்கள் பொதுமக்கள்
பணத்தை பண்டமாற்று செய்தபடி இருந்தார்
கள். 15இயேசு கயிறுகளால் ஒரு சவுக்கை
உருவாக்கினார். அந்த வியாபாரிகளையும்
ஆடுமாடுகளையும் தேவாலயத்திற்கு வெளியே
அடித்து துரத்தினார். அவர் மேஜைகள் பக்கம்
திரும்பி காசுக்காரர்களுடைய காசுகளைக்
கொட்டினார்; அப்பலகைகளைக் கவிழ்த்துப்
போட்டார். 16புறா விற்கிறவர்களைப் பார்த்து,
“இவற்றை எடுத்துக் கொண்டு இங்கே இருந்து
வெளியே செல்லுங்கள். என் பிதாவின் வீட்
டைச் சந்தைக்கடை ஆக்காதீர்கள்” என்று
இயேசு கட்டளையிட்டார்.
17இது இவ்வாறு நிகழும்போது, இயேசு
வின் சீஷர்கள் ஏற்கெனவே எழுதப்பட்டிருக்
கும் வேதவாக்கியங்களை நினைவு கூர்ந்தனர்.

---

**நான் .. காண்பீர்கள்** ஆதி 28:12.

*“உமது வீட்டைக் குறித்த என் பக்தி
உணர்வு என்னை வைராக்கியமுள்ள
வனாக்கும்.”*

*சங்கீதம் 69:9*

18யூதர்கள் இயேசுவைப் பார்த்து, “ஒரு
அடையாளமாக அதிசயம் ஒன்றை எங்களுக்
குக் காட்டும். இவற்றையெல்லாம் செய்வ
தற்கு உமக்கு உரிமை இருக்கிறது என்பதை
நிரூபித்துக்காட்டும்” என்றார்கள். 19“இந்த ஆல
யத்தை இடித்துப் போடுங்கள். இதனை மூன்று
நாட்களுக்குள் நான் மீண்டும் கட்டி முடிப்
பேன்” என்றார் இயேசு.
20அதற்குப் பதிலாக யூதர்கள், “மக்கள் நாற்
பத்தாறு ஆண்டுகள் பாடுபட்டு இந்த ஆலயத்
தைக் கட்டி முடித்தார்கள். இதனை உம்மால்
மூன்று நாட்களில் கட்டி முடிக்க முடியும்
என்று நீர் உண்மையாகவே சொல்கிறீரா?”
என்று கேட்டார்கள்.
21(ஆனால் இயேசு ஆலயம் என்று கூறியது
அவரது சரீரத்தை. 22இதனை அவரது சீஷர்
கள், இயேசு மரித்தபின் மூன்று நாட்களில்
உயிர்த்தெழுந்தபோது அவர் சொன்னதை
நினைவுபடுத்திப் புரிந்து கொண்டனர்.
ஆகையால் அவரது சீஷர்கள் ஏற்கனவே
எழுதப்பட்ட வேதவாக்கியங்களையும்,* இயே
சுவின் வார்த்தைகளையும் நம்பினர்.)
23இயேசு பஸ்கா பண்டிகையின்போது எரு
சலேமில் இருந்தார். ஏராளமான மக்கள் அவர்
செய்த அற்புதங்களைக் கண்டு அவர் மீது
நம்பிக்கை வைத்தனர். 24ஆனால் இயேசு அவர்
களை நம்பவில்லை. ஏனென்றால் அவர்களது
எண்ணங்களை அவர் அறிந்திருந்தார். 25இயே
சுவுக்கு அம்மக்களைப் பற்றி எவரும் சொல்ல
வேண்டிய அவசியம் இல்லாமல் இருந்தது.
ஒரு மனிதனின் மனதில் என்ன இருக்கிறது
என்பதை அவர் அறிந்தவராயிருந்தார்.

## இயேசுவும் நிக்கொதேமுவும்

3 நிக்கொதேமு என்று ஒரு மனிதன் இருந்
தான். அவன் பரிசேயர்களுள் ஒருவன்.
அவன் ஒரு முக்கியமான யூதத் தலைவன்.
2ஒரு இரவு அவன் இயேசுவிடம் வந்தான்.
“போதகரே! நீங்கள் தேவனிடமிருந்து அனுப்
பப்பட்டவர் என்பதை நாங்கள் அறிவோம்.
தேவனின் உதவியின்றி எவரொருவராலும்
நீர் செய்வது போன்ற அற்புதங்களைச் செய்ய
இயலாது” என்று சொன்னான்.
3அதற்கு இயேசு “நான் உனக்கு உண்
மையைக் கூறுகிறேன். ஒருவன் மீண்டும்
பிறக்கவேண்டும். இல்லாவிட்டால் அவன்
தேவனுடைய இராஜ்யத்தில் இடம்பெற முடி
யாது” என்று கூறினார்.
4அதற்கு நிக்கொதேமு “ஆனால் ஒரு மனி
தன் ஏற்கெனவே முதியவனாக இருந்தால்
அவன் எப்படி மீண்டும் பிறக்க முடியும்?
ஒருவன் மீண்டும் தாயின் சரீரத்திற்குள்
நுழைய முடியாது. ஆகையால் ஒருவன் இரண்
டாம் முறையாக பிறக்க முடியாதே” என்றான்.
5இதற்குப் பதிலாக இயேசு, “நான் உனக்கு
ஒரு உண்மையைச் சொல்கிறேன். ஒருவன்
நீரில் இருந்தும் ஆவியில் இருந்தும் பிறக்க
வேண்டும். ஒருவன் இவற்றிலிருந்து பிறக்கா
விடில் அவனால் தேவனின் இராஜ்யத்துக்குள்
நுழைய முடியாது. 6ஒரு மனிதனின் சரீரமா
னது அவனது பெற்றோர்களிடமிருந்து கிடைக்
கின்றது. ஆனால் அம்மனிதனது ஆவிக்குரிய
வாழ்வோ ஆவியானவரிடமிருந்து பிறக்கிறது.
7நான் சொன்னதைப்பற்றி நீ வியப்பு அடைய
வேண்டாம். ‘நீ மறுபடியும் பிறக்க வேண்டும்.’
8காற்று எங்கே செல்ல விரும்புகிறதோ
அங்கே வீசும். நீ காற்றின் ஓசையைக் கேட்
பாய். ஆனால் அந்தக் காற்று எங்கிருந்து
வருகிறது, எங்கே போகிறது என்பதை நீ
அறியமாட்டாய். இது போலத்தான் ஒவ்வொரு
மனிதனும் ஆவியானவரிலிருந்து பிறக்கி
றான்” என்றார்.
9“இவை எவ்வாறு இயலும்?” என்று
நிக்கொதேமு கேட்டான்.
10“நீ யூதர்களின் முக்கியமான ஒரு போத
கன். ஆனால் உன்னால் இவற்றைப் பற்றி
இன்னும் புரிந்துகொள்ள முடியவில்லையே!
11நான் உனக்கு உண்மையைக் கூறுகிறேன்.
நாங்கள் எங்களுக்குத் தெரிந்தவற்றைப் பற்
றியே பேசுகிறோம். நாங்கள் பார்த்தவற்றை
மட்டுமே சொல்லுகிறோம். ஆனால் உன்னைப்
போன்றவர்கள் நாங்கள் சொல்வதை ஏற்றுக்
கொள்வதில்லை. 12நான் பூமியில் உள்ளவற்
றைப்பற்றி உனக்குச் சொன்னேன். ஆனால்
நீ என்னை நம்புகிறதில்லை. ஆகையால், நான்
பரலோகத்தில் உள்ளவற்றைப் பற்றி சொன்
னாலும் நீ அவற்றையும் நம்பப் போவ
தில்லை. 13பரலோகத்திற்கு ஏறிச் சென்ற ஒரே
ஒருவரே பரலோகத்தில் இருந்து இறங்கி வந்த
வர். அவர்தான் மனித குமாரன்.
14“வனாந்தரத்தில் மோசே பாம்பினை
உயர்த்திப் பிடித்தான். அவ்வாறே மனித குமா
ரனும் உயர்த்தப்படவேண்டும்.* 15பிறகு அந்த
மனித குமாரன் மேல் நம்பிக்கை வைக்கிற
ஒவ்வொருவரும் நித்தியஜீவனைப் பெறமுடி
யும்.”
16“ஆம்! தேவன் இவ்வுலகினைப் பெரிதும்
நேசிக்கிறார். எனவே தனது ஒரே குமாரனை
இதற்குத் தந்தார். தேவன் தன் மகனைத் தந்த
தால் அவரில் நம்பிக்கை வைக்கிற எவரும்
கெட்டுப்போகாமல் நித்திய ஜீவனைப் பெறு
வர். 17தேவன் தன் மகனை உலகிற்கு அனுப்பி

---

**வேத வாக்கியங்கள்** பரிசுத்த எழுத்துக்கள் அல்லது பழைய ஏற்பாடு.

**வனாந்தரத்தில் ... வேண்டும்** தேவனின் மக்கள் பாம்புக்கடியால் செத்துக்கொண்டிருந்த போது தேவன் மோசேயிடம் வெண்கலத்தால் ஒரு பாம்பு செய்து கம்பத்தின்மேல் வைத்து அதனைப் பார்த்து குணமடையச் சொன்னார்.

னார். உலகின் குற்றங்களை நியாயம் விசா
ரிக்க தனது மகனை அனுப்பவில்லை. இவ்வு
லகம் தேவனுடைய குமாரனால் இரட்சிக்கப்
படுவதற்கென்று தேவன் தன் மகனை அனுப்
பினார். 18தேவ குமாரன் மீது நம்பிக்கை
வைக்கிறவர்கள் தண்டிக்கப்படுவதில்லை.
ஆனால், அவர் மீது நம்பிக்கை கொள்ளாதவர்
கள் ஏற்கெனவே தண்டிக்கப்பட்டு விட்டார்கள்.
ஏன்? ஏனென்றால் அவர்களுக்கு தேவனு
டைய ஒரே மகன் மீது நம்பிக்கை இல்லை.
19இந்த உலகத்துக்கு ஒளி (நன்மை) வந்திருக்கி
றது. ஆனால் அந்த ஒளியை மக்கள் விரும்ப
வில்லை. அவர்கள் இருளை (பாவத்தை)
விரும்பினார்கள். ஏனென்றால் அவர்கள் தீய
செயல்களைச் செய்து கொண்டிருந்தார்கள்.
இந்த உண்மையை வைத்தே அவர்கள் நியா
யம் விசாரிக்கப்படுகிறார்கள். 20தீமைகளைச்
செய்கிற ஒவ்வொரு மனிதனும் ஒளியை
வெறுக்கிறான். அவன் வெளிச்சத்துக்குள்
வரமாட்டான். ஏனென்றால் ஒளி அவன் செய்த
தீமைகளை வெளிப்படுத்திக்காட்டும். 21ஆனால்
உண்மை வழியைப் பின் தொடர்ந்து செல்
கிறவர்கள் ஒளியிடம் வந்தடைகிறார்கள்.
பிறகு, அந்த ஒளி அவர்கள் செய்த செயல்கள்
தேவன் மூலமாகச் செய்த நற்செயல்கள் எனக்
காட்டும்"* என்று இயேசு கூறினார்.

### இயேசுவும், யோவான் ஸ்நானகனும்

22அதற்குப் பிறகு, இயேசுவும் அவரது
சீஷர்களும் யூதேயா பகுதிக்குப் போனார்கள்.
அங்கு இயேசு தன் சீஷர்களோடு தங்கி
ஞானஸ்நானம் கொடுத்தார். 23யோவானும்
அயினோனில் ஞானஸ்நானம் கொடுத்து வந்
தான். அயினோன் சாலிம் அருகில் உள்ளது.
அங்கே தண்ணீர் மிகுதியாக இருந்ததால்
யோவான் ஞானஸ்நானம் கொடுத்துக் கொண்
டிருந்தான். மக்கள் அவனிடம் போய் ஞானஸ்
நானம் பெற்றார்கள். 24(இது யோவான் சிறை
யில் அடைக்கப்படும் முன்பு நிகழ்ந்தது).

25யோவானின் சீஷர்களுள் சிலர், யூதரோடு
விவாதித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள்
மத சம்பந்தமான முறையைப் பற்றியே
விவாதித்தனர். 26ஆகையால் யோவானிடம்
அவர்கள் வந்தனர். "போதகரே! யோர்தான்
நதிக்கு அக்கரையில் ஒருவர் உம்மோடு இருந்
தாரே, நினைவிருக்கிறதா? நீங்கள் அந்த
மனிதரைப் பற்றியும் மக்களிடம் சொல்லியி
ருக்கிறீர்கள். அவர் மக்களுக்கு ஞானஸ்நானம்
கொடுத்துக் கொண்டிருக்கிறார். அவரிடம்
ஏராளமான மக்கள் சென்று கொண்டிருக்கின்
றனர்" என்று கூறினர்.

27"தேவன் எதை ஒருவனுக்குக் கொடுக்கி
றாரோ, அதையே ஒரு மனிதன் பெற்றுக்
கொள்ள முடியும். 28'நான் கிறிஸ்து அல்ல'
என்று நானே கூறியதையும் நீங்கள் சோதித்து
அறிந்திருக்கிறீர்கள். 'அவருக்கான பாதை
யைச் செம்மை செய்வதற்காகவே தேவன்
என்னை அனுப்பியிருக்கிறார்.' 29மணமக
னுக்கே மணமகள் உரியவளாகிறாள். மணமக
னுக்கு உதவி செய்கிற மாப்பிள்ளையின்
தோழன், மணமகனின் வரவைக் கவனித்து
எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான். மணமக
னின் சத்தத்தைக் கேட்டு அவன் மிகவும்
மகிழ்கிறான். நானும் அதே மகிழ்ச்சியை
அடைகிறேன். இதுவே எனது மகிழ்ச்சிகர
மான நேரம். 30இயேசு மேலும் பெருமை பெற
வேண்டும். எனது முக்கியத்துவம் குறைந்து
விடவேண்டும்.

### பரலோகத்திலிருந்து வந்தவர்

31"பரலோகத்திலிருந்து வந்திருக்கிற
இயேசு மற்ற எல்லாரையும் விடப் பெரியவர்.
பூமியில் இருந்து வந்தவன் பூமியைச் சார்ந்த
வன். அவன் பூமியில் உள்ளவற்றைப் பற்றி
மட்டுமே பேசுவான். ஆனால் பரலோகத்திலி
ருந்து வந்திருக்கிற இயேசுவோ மற்ற எல்லா
ரையும் விட உயர்ந்தவர். 32அவர் எதைக்
கண்டாரோ, கேட்டாரோ அதையே கூறுகிறார்.
ஆனால் எவரும் அவர் சொல்வதை ஏற்றுக்
கொள்வதில்லை. 33அவர் சொல்வதை எவ
னொருவன் ஒப்புக்கொள்கிறானோ அவன்,
தேவன் உண்மையாய் இருக்கிறார் என்று
நிரூபிக்கிறான். 34தேவன் இயேசுவை அனுப்பி
னார். அவர் தேவன் சொன்னதைச் சொல்கி
றார். தேவன் அவருக்கு ஆவியை நிரம்பக்
கொடுத்திருக்கிறார். 35பிதாவானவர் தன் குமா
ரனை நேசிக்கிறார். அவர் தன் குமாரனுக்கு
அனைத்தின் மேலும் அதிகாரம் கொடுத்திருக்
கிறார். 36இந்தக் குமாரனை நம்புகிற எவரும்
நித்திய ஜீவனைப் பெறுவர். ஆனால் அவ
ருக்குக் கீழ்ப்படிய மறுக்கிற எவரும் அந்த
வாழ்வை ஒருபோதும் பெற முடியாது. தேவ
னுடைய கோபம் அவர்கள் மேல் இருக்கும்"
என்று யோவான் அவர்களுக்குக் கூறினான்.

### சமாரியாப் பெண்ணும் இயேசுவும்

4 யோவானைவிட இயேசு மிகுதியான
மக்களுக்கு ஞானஸ்நானம் கொடுப்பதாகப்
பரிசேயர்கள் கேள்விப்பட்டனர். 2(ஆனால்
உண்மையில் இயேசு எவருக்கும் ஞானஸ்நா
னம் கொடுக்கவில்லை. அவரது சீஷர்களே
கொடுத்தனர்.) பரிசேயர்கள் கேள்விப்பட்ட
தைப் பற்றி இயேசுவும் அறிந்து கொண்டார்.
3ஆகையால் அவர் யூதேயாவை விட்டுத்
திரும்பி கலிலேயாவுக்குச் சென்றார். 4கலிலே
யாவுக்குச் செல்கிற வழியில் இயேசு சமா
ரியா நாட்டைக் கடந்து செல்ல இருந்தார்.

5சமாரியாவில் இயேசு சீகார் என்னும் பட்
டணத்துக்கு வந்தார். அந்தப் பட்டணம், யாக்
கோபு தன் மகன் யோசேப்புக்குக் கொடுத்த

---

**வாக்கியம் 16-21** சில அறிஞர்கள் 16முதல் 21வரையிலான வாக்கியங்கள் இயேசுவின் வார்த்தைகள் என்று எண்ணினர். மற்றவர்கள் யோவானால் எழுதப்பட்டது எனக் கருதினர்.

நிலத்தின் அருகில் இருந்தது. [6]யாக்கோபின்
கிணறும் அங்கே இருந்தது. இயேசு தன் நீண்ட
பயணத்தால் களைத்துப் போயிருந்தார்.
ஆகையால் இயேசு கிணற்றின் அருகில்
இளைப்பாறிட அமர்ந்தார். அது மதிய
வேளை. [7]ஒரு சமாரியப்பெண்* தண்ணீரெடுப்
பதற்காக அக்கிணற்றுக்கு வந்தாள். இயேசு
அவளிடம், “தயவுசெய்து நான் குடிப்பதற்குத்
தண்ணீர் கொடு” என்று கேட்டார். [8](இயேசு
வின் சீஷர்கள் பட்டணத்தில் உணவுப்பொருட்
களை வாங்கிக் கொண்டிருக்கும்போது இது
நடந்தது.)

[9]“குடிப்பதற்கு நீங்கள் என்னிடம் கேட்பதை
எண்ணி எனக்கு ஆச்சரியமாக உள்ளது. நீங்
கள் ஒரு யூதர். நானோ சமாரியப் பெண்”
என்று அவள் பதிலுரைத்தாள். (ஏனென்றால்
யூதர்கள் சமாரியர்களோடு எப்பொழுதும் நட்
புடன் இருப்பதில்லை.)

[10]“தேவன் கொடுப்பவற்றைப் பற்றி நீ
அறியவில்லை. குடிக்கத் தண்ணீர் கேட்கிற
நான் யாரென்று உனக்குத் தெரியாது. இவற்
றைப் பற்றி நீ அறிந்தால் நீ என்னிடம் தண்
ணீர் கேட்டிருப்பாய். ஜீவத் தண்ணீரை நான்
உனக்குக் கொடுத்திருப்பேன்” என்றார்
இயேசு.

[11]“ஐயா, ஜீவத் தண்ணீரை நீங்கள் எங்கி
ருந்து பெறுவீர்கள்? இந்த கிணறோ ஆழமாக
இருக்கிறது. இதிலிருந்து தண்ணீர் எடுப்பதற்
கும் உங்களிடம் எதுவும் இல்லையே! [12]நீங்கள்
எமது மூதாதையரான யாக்கோபை விடப்
பெரியவரா? அவர் தான் எங்களுக்கு இந்தக்
கிணற்றைக் கொடுத்தார். அவரும் இந்தக்
கிணற்றிலுள்ள தண்ணீரைத்தான் குடித்தார்.
அத்துடன் அவரது பிள்ளைகளும் மிருகங்க
ளும் இதிலுள்ள தண்ணீரைத்தான் குடித்தார்
கள்” என்று அந்தப் பெண் சொன்னாள்.

[13]“இந்த தண்ணீரைக் குடிக்கிறவர்களுக்கு
மீண்டும் தாகம் எடுக்கும். [14]ஆனால் நான்
கொடுக்கிற தண்ணீரைக் குடிப்பவர்களுக்கோ
மறுபடியும் தாகம் எடுப்பதில்லை. என்னால்
கொடுக்கப்படுகிற தண்ணீர், அதைக் குடிப்பவ
னுக்குள் நீரூற்றாகப் பெருக்கெடுக்கும். அது
அவனுக்கு எக்காலத்துக்கும் உரிய வாழ்க்கை
யைத் தரும்” என்று இயேசு பதிலுரைத்தார்.

[15]“ஐயா! எனக்கு அந்தத் தண்ணீரை வழங்
குங்கள். அப்போது ஒருபோதும் மறுபடியும்
எனக்குத் தாகம் எடுக்காது. மிகுதியாக தண்
ணீரெடுக்க இங்கே நான் மீண்டும் வரவேண்டி
யதும் இராது” எனக்கூறினாள் அந்தப் பெண்.

[16]“போ, உன் கணவனோடு இங்கே திரும்ப
வா” என்றார் இயேசு.

[17]“ஆனால், எனக்குக் கணவன் இல்
லையே” என்றாள் அப்பெண். “உனக்குக் கண
வன் இல்லையென்று நீ சொல்வது சரிதான்.
[18]உண்மையில் உனக்கு ஐந்து கணவர்கள்
இருந்திருக்கின்றனர். ஆனால் நீ இப்பொழுது
யாரோடு வாழ்ந்து கொண்டிருக்கிறாயோ
அவன் உன் கணவனல்ல. நீ என்னிடம் உண்
மையைச் சொன்னாய்” என்றார் இயேசு.

[19]“உம்மை நான் தீர்க்கதரிசியாகக் காண்கி
றேன். [20]எங்கள் முன்னோர்கள் இந்த மலையில்
வழிபட்டு வந்தனர். ஆனால் யூதராகிய நீங்
களோ, எருசலேம் தான் வழிபாட்டுக்குரிய
இடம் என்று கூறுகிறீர்கள்” என்றாள்’ அந்தப்
பெண்.

[21]“பெண்ணே! என்னை நம்பு. இந்த மலை
யிலும் எருசலேமிலும் மட்டுமல்ல எல்லா
இடங்களிலும் பிதாவை (தேவனை) வழிபடு
கிற காலம் வந்து கொண்டிருக்கிறது. [22]சமாரி
யர்களாகிய நீங்கள் உங்களால் புரிந்துகொள்ள
முடியாததை வணங்கி வருகிறீர்கள். யூதர்களா
கிய நாங்கள், எங்களால் வணங்கப்படுபவ
ரைப் புரிந்து கொண்டிருக்கிறோம். யூதர்களிட
மிருந்தே இரட்சிப்பு வருகின்றது. [23]உண்மை
யாய் வழிபடுகிறவர்கள் (தேவனை) ஆவியோ
டும் உண்மையோடும் வழிபடுகிற காலம்
வந்து கொண்டிருக்கிறது. அது இப்பொழுதே
வந்திருக்கிறது. பிதாவும் இத்தகைய மக்களாக
தம்மை வழிபடுகிறவர்கள் இருக்க விரும்புகி
றார். [24]தேவன் ஆவியாயிருக்கிறார். ஆகை
யால் தேவனை வழிபடுகிற மக்கள் ஆவியோ
டும் உண்மையோடும் தேவனை வழிபடுதல்
வேண்டும்” என்றார் இயேசு.

[25]“கிறிஸ்து என்று அழைக்கப்படுகிற
மேசியா வந்துகொண்டிருக்கிறார் என்பது
எனக்குத் தெரியும். அவர் வந்ததும் எங்க
ளுக்கு அனைத்தையும் விளக்குவார்” என்
றாள் அப்பெண்.

[26]பிறகு இயேசு, “இப்பொழுது அவர் தான்
உன்னோடு பேசிக்கொண்டிருக்கிறார். நான்
தான் மேசியா” என்றார்.

[27]அப்பொழுது இயேசுவின் சீஷர்கள் பட்ட
ணத்தில் இருந்து திரும்பி வந்தனர். இயேசு
ஒரு பெண்ணோடு பேசிக்கொண்டிருப்பதைக்
கண்டு அவர்கள் வியப்புற்றனர். ஆனால் எவ
ரும், “உங்களுக்கு என்ன வேண்டும்?” என்
றோ “ஏன் நீங்கள் அவளோடு பேசிக்கொண்டி
ருக்கிறீர்கள்?” என்றோ கேட்கவில்லை.

[28]பிறகு அந்தப் பெண் தன் தண்ணீர்க்
குடத்தை விட்டுவிட்டு நகருக்குத் திரும்பப்
போனாள். [29]அங்கே அவள் மக்களிடம், “நான்
செய்தவற்றையெல்லாம் ஒருவர் எனக்குச்
சொன்னார். அவரை வந்து பாருங்கள். ஒரு
வேளை அவர் கிறிஸ்துவாய் இருக்கலாம்”
என்றாள். [30]ஆகையால் மக்கள் நகரத்தை
விட்டு வெளியேறி இயேசுவைக் காண வந்த
னர். [31]அந்தப் பெண் நகரத்திற்குள்
இருந்தபோது இயேசுவின் சீஷர்கள், அவரை
உண்ணும்படி வேண்டிக் கொண்டனர்.
[32]ஆனால் இயேசுவோ, “என்னிடம் உண்ப

---

**சமாரியர்கள்** சமாரிய தேசத்தவர்கள். சமுதாய நிலையில் இவர்களும் யூதர்களே. ஆனால் தூய யூதர்களாக இவர்களை மற்ற யூதர்கள் ஏற்றுக் கொள்வதில்லை.

தற்கு உணவுண்டு. அதனைப் பற்றி உங்க
ளுக்கு ஒன்றும் தெரியாது” என்றார்.
33“ஏற்கனவே வேறு யாராவது அவருக்கு
உணவு கொண்டு வந்திருப்பார்கள்” என்று
சீஷர்கள் தமக்குள் பேசிக் கொண்டனர்.
34“எனது உணவு என்னை அனுப்பிய
தேவன் செய்யச் சொன்னதைச் செய்வதுதான்;
எனக்குக் கட்டளையிட்டபடி செய்து முடிப்பது
தான் எனது உணவாக இருக்கிறது. 35நீங்கள்
பயிரை நடும்போது “அறுவடைக்காக இன்
னும் நான்கு மாதங்கள் காத்திருக்க வேண்டும்”
என்று சொல்வீர்களல்லவா? ஆனால் நான்
உங்களுக்குச் சொல்கிறேன். கண்களைத் திற
வுங்கள், மக்களைப் பாருங்கள். அவர்கள்
அறுவடைக்காகத் தயாராக இருக்கிற வய
லைப் போன்று இருக்கிறார்கள். 36இப்பொ
ழுது கூட அறுவடை செய்கிறவன் சம்பளம்
பெறுகிறான். அவன் தனது நித்திய வாழ்வுக்கு
அனுகூலமாக அறுவடை செய்துகொள்கிற
வன். ஆகையால் இப்பொழுது விதைக்கிறவ
னோடு அறுவடை செய்கிறவனும் மகிழ்ச்சிய
டைய இயலும். 37விதைக்கிறவன் ஒருவன்
அறுக்கிறவன் இன்னொருவன் என்கிற பழ
மொழி இதனால் உண்மையாகிறது. 38நீங்கள்
பாடுபட்டு விதைக்காத நிலத்தை அறுவடை
செய்யுமாறு உங்களை அனுப்பினேன். மற்ற
வர்கள் பாடுபட்டார்கள். நீங்கள் அவர்கள்
உழைப்பின் பயனை அனுபவிக்கிறீர்கள்”
என்று இயேசு கூறினார்.
39அந்நகரத்தில் உள்ள ஏராளமான மக்கள்
இயேசுவின் மீது நம்பிக்கை வைத்தனர்.
அந்தப் பெண் இயேசுவைப் பற்றி கூறியவற்
றால் தான் அவர்கள் அவரை நம்பினர்.
அவள், “நான் செய்த எல்லாவற்றையும் அவர்
எனக்குச் சொல்லி விட்டார்” என்று கூறி
இருந்தாள். 40சமாரியர்கள் இயேசுவிடம் சென்
றார்கள். இயேசுவை அவர்களோடு தங்கும்படி
வேண்டினார்கள். ஆகையால் இயேசு அவர்க
ளோடு இரண்டு நாட்கள் தங்கினார். 41மேலும்
மிகுதியான மக்கள், இயேசு சொன்னவற்றின்
மூலம் அவரை நம்பினர். 42அவர்கள், “முதலில்
நீ சொன்னவற்றையெல்லாம் கேட்டு
இயேசுவை நம்பினோம். ஆனால் இப்பொழுது
நாங்களாகவே அவர் சொன்னவற்றைக் கேட்ட
தால் விசுவாசிக்கிறோம். அவர் உண்மையா
கவே இந்த உலகத்தை இரட்சிக்கப்போகிறவர்
என்று நம்புகிறோம்” என்று அந்தப் பெண்ணி
டம் சொன்னார்கள்.

### அதிகாரியின் மகனை இயேசு குணப்படுத்துதல்

*(மத்தேயு 8:5-13; லூக்கா 7:1-10)*

43இரு நாட்கள் கழிந்ததும் இயேசு அந்நக
ரத்தை விட்டு கலிலேயாவுக்குச் சென்றார்.
44(இயேசு ஏற்கெனவே “ஒரு தீர்க்கதரிசி தன்
சொந்த ஊரில் மதிக்கப்படமாட்டான்” என்று
சொல்லியிருந்தார்) 45அவர் கலிலேயாவுக்கு
வந்தபோது அங்குள்ள மக்கள் அவரை நல்ல
முறையில் வரவேற்றனர். அந்த மக்கள் இயேசு
எருசலேமில் பஸ்கா பண்டிகையில் செய்தவற்
றையெல்லாம் நேரில் கண்டவர்கள். அந்த மக்
கள் அப்பண்டிகையில் கலந்து கொண்டவர்
கள். 46கலிலேயாவிலுள்ள கானா என்ற
ஊருக்கு இயேசு மீண்டும் சென்றார். ஏற்கெ
னவே அவர் அங்குதான் தண்ணீரைத்
திராட்சை இரசமாக மாற்றியிருந்தார். அரச
னின் முக்கியமான அதிகாரி ஒருவன் கப்பர்
நகூமில் வசித்து வந்தான். அவனது மகன்
நோயுற்றிருந்தான். 47அந்த மனிதன், இயேசு
இப்பொழுது யூதேயா நாட்டிலிருந்து கலிலே
யாவுக்கு வந்திருக்கிறார் என்று கேள்விப்பட்
டான். ஆகையால் அவன் கானா ஊருக்குப்
போய் இயேசுவைச் சந்தித்தான். கப்பர்நகூ
முக்கு வந்து தன் மகனது நோயைக் குணமாக்
கும்படி இயேசுவை வேண்டினான். அவனது
மகன் ஏறகெனவே சாகும் நிலையில் இருந்
தான். 48“நீங்கள் அற்புதங்களையும் அதிசயங்
களையும் காணாவிட்டால் என்னை நம்ப
மாட்டீர்கள்” என்று இயேசு சொன்னார்.
49அந்த அதிகாரியோ, “ஐயா, என் சிறிய
மகன் சாவதற்கு முன் என் வீட்டிற்கு
வாருங்கள்” என்று அழைத்தான்.
50அதற்கு இயேசு, போ, உன் மகன் பிழைப்
பான்” என்றார். அந்த மனிதன் இயேசு சொன்
னதில் நம்பிக்கை வைத்து தன் வீட்டிற்குத்
திரும்பினான். 51வழியில் அவனது வேலைக்
காரர்கள் எதிரில் வந்தார்கள். “உங்கள் மகன்
குணமாகி விட்டான்” என்று அவர்கள்
சொன்னார்கள்.
52“என் மகன் எப்போது குணமாகத்
தொடங்கினான்?” என்று கேட்டான் அவன்.
“நேற்று ஒரு மணி இருக்கும்போது உங்கள்
மகனின் காய்ச்சல் விலகி குணமானது”
என்றார்கள் வேலைக்காரர்கள்.
53இயேசு, “உன் மகன் பிழைப்பான்” என்று
சொன்ன நேரமும் ஒரு மணிதான் என்பதை
அந்த அதிகாரி உணர்ந்து கொண்டான். ஆகை
யால் அவனும் அவனது வீட்டில் உள்ள
அனைவரும் இயேசுவின்மீது விசுவாசம்
வைத்தனர். 54யூதேயாவிலிருந்து கலிலேயா
வுக்கு வந்த பிறகு, இயேசு செய்த இரண்டாவது
அற்புதம் இது.

### 38 வருட நோயாளி குணமடைதல்

5 பிறகு, இயேசு எருசலேமுக்கு யூதர்களின்
ஒரு பண்டிகையின்போது சென்றார்.
2அங்கே ஐந்து மண்டபங்கள் உள்ள ஒரு
குளம் இருந்தது. யூதமொழியில்* இதற்கு
பெதஸ்தா* என்று பெயர். இந்தக் குளம்

---

**யூதமொழி** அராமிக், எபிரேயு போன்ற மொழி. தங்கள் முதல் நாட்டில் யூதர்களால் பேசப்பட்ட மொழி.

**பெதஸ்தா** பெத்சாயிதா அல்லது பெதஸ்தா என்றும் அழைக்கப்படும். எருசலேமில் வடக்கில் தேவாலயத் திற்கு அருகில் இருக்கிற குளம்.

ஆட்டுவாசல் அருகே இருந்தது. [3]குளத்தின்
அருகில் உள்ள மண்டபத்தில் நோயாளிகள்
பலர் படுத்துக்கிடந்தனர்.* [4]அவர்களில் சிலர்
குருடர்கள்; சிலர் சப்பாணிகள்; சிலர் சூம்பிப்
போன உறுப்புகளை உடையவர்கள். [5]அவர்
களில் ஒருவன் முப்பத்தெட்டு ஆண்டுகளாக
நோய் வாய்ப்பட்டிருந்தான். [6]இயேசு அந்த
நோயாளி அங்கு படுத்துக்கிடப்பதைக் கண்
டார். அவன் நீண்ட காலமாக நோயாளியாய்
இருப்பதை அவர் அறிந்தார். ஆகையால்
அவர் அவனிடம், "நீ குணமடைய விரும்புகி
றாயா?" என்று கேட்டார்.

[7]"ஐயா, தண்ணீர் கலங்கும்போது நான்
போய் நீரில் இறங்குவதற்கு எனக்கு உதவி
செய்ய யாருமில்லை. முதல் மனிதனாகப்
போய் மூழ்குவதற்கு முயல்வேன். ஆனால்
எனக்கு முன்னால் எவனாவது ஒருவன் முதல்
மனிதனாகப் போய் மூழ்கிவிடுகிறான்"
என்று அந்த நோயாளி பதில் சொன்னான்.

[8]பிறகு இயேசு "எழுந்து நில். உனது படுக்
கையை எடுத்துக் கொண்டு நட" என்றார்.
[9]உடனே அந்த நோயாளி குணமடைந்தான்.
அவன் தனது படுக்கையை எடுத்துக்கொண்டு
நடக்க ஆரம்பித்தான்.

இது நிகழ்ந்த அந்த நாளோ ஓய்வு நாள்.
[10]ஆகையால் யூதர்கள், "இன்று ஓய்வுநாள். நீ
படுக்கையை எடுத்துக் கொண்டு போவது
சரியல்ல" என்று அவனிடம் கூறினர்.

[11]ஆனால் அந்த மனிதன், "ஒரு மனிதர்
என்னைக் குணமாக்கினார். எனது படுக்
கையை எடுத்துக் கொண்டு போகும்படி கூறி
னார்" என்றான்.

[12]"உன்னை குணமாக்கிப் படுக்கையை
எடுத்துக் கொண்டு போகும்படி சொன்ன
அவன் யார்?" என்று யூதர்கள் கேட்டனர்.

[13]ஆனால் அந்த மனிதனுக்கு தன்னைக்
குணமாக்கியவர் யார் என்று தெரியவில்லை.
அங்கே ஏராளமாக மக்கள் இருந்தனர். இயேசு
வும் அவ்விடம் விட்டு மறைந்து போயிருந்தார்.
[14]பிறகு இயேசு அவனை ஆலயத்தில்
கண்டுபிடித்தார். இயேசு அவனிடம், "பார்,
இப்பொழுது நீ குணமாகிவிட்டாய். உனக்குக்
கேடுவராதபடி மேலும் பாவம் செய்யாமல்
இருப்பாயாக" என்று கூறினார்.

[15]பிறகு அந்த மனிதன் யூதர்களிடம் திரும்
பிப் போனான். அவன் யூதர்களிடம், "இயேசு
தான் என்னைக் குணமாக்கியவர்" என்று
சொன்னான். [16]இயேசு இவ்வாறு ஓய்வு நாளில்
நோயைக் குணப்படுத்தியதால் யூதர்கள்
இயேசுவைக் குற்றம் சாட்டத் தொடங்கினர்.

[17]ஆனால் இயேசுவோ யூதர்களிடம், "எனது
பிதா (தேவன்) வேலை செய்வதை நிறுத்து
வதே இல்லை. நானும் வேலை செய்து கொண்
டிருக்கிறேன்" என்றார்.

[18]இதைக் கேட்ட யூதர்கள் இயேசுவைக்
கொன்றுவிடக் கடுமையாக முயற்சி செய்தார்
கள். அவர்கள், "முதலில் இயேசு ஓய்வுநாளின்
சட்டத்தை உடைத்துவிட்டார். பிறகு அவர்
தேவனை அவரது பிதா என்று கூறுகிறார்.
அவர் தன்னை தேவனுக்குச் சமமாகக் கூறி
வருகிறார்" என்று விளக்கம் கூறினர்.

### தேவ அதிகாரம் பெற்ற இயேசு

[19]ஆனால் இயேசுவோ, "உங்களுக்கு உண்
மையாகவே கூறுகிறேன். இந்தக் குமாரன்
தனியாக எதுவும் செய்வதில்லை. இவர் தன்
பிதாவிடம் எதைப் பார்க்கிறாரோ அவற்
றையே செய்து வருகிறார். [20]பிதா குமாரனை
நேசிக்கிறார். அவர் தான் செய்பவற்றையெல்
லாம் தனது குமாரனுக்குக் காட்டி வருகிறார்.
இந்த மனிதன் குணமானான். இதைவிட
மேலான காரியங்களைப் பிதாவானவர் தனது
குமாரன் மூலம் செய்வார். பின்பு நீங்கள்
எல்லோரும் ஆச்சரியப்படுவீர்கள். [21]பிதாவா
னவர் இறந்தவர்களை உயிரோடு எழுப்புகி
றார். இதைப்போலவே அவரது குமாரனும்
தமது விருப்பத்தின்படி இறந்து போனவர்
களை உயிரோடு எழச் செய்வார். [22]அத்துடன்
பிதாவானவர் யாருக்கும் தீர்ப்பளிப்பதில்லை.
ஆனால் அவர் இத்தகைய தீர்ப்பளிக்கும் அதி
காரத்தை தன் மகனிடம் ஒப்படைத்திருக்கிறார்.
[23]தேவன் இதைச் செய்தார். எனவே அனைத்து
மக்களும் பிதாவுக்குச் செய்கிற மரியாதை
யைக் குமாரனுக்கும் செய்யவேண்டும். ஒரு
வன் குமாரனுக்கு மரியாதை செய்யாவிட்டால்
அவன் பிதாவையும் அவமரியாதை செய்தவ
னாகிறான். பிதாவே தன் குமாரனை நம்மிடம்
அனுப்பியிருக்கிறார்.

[24]"நான் உங்களுக்கு உண்மையாகவே
கூறுகிறேன். நான் சொல்கிறதை எவன் கேட்டு
என்னை அனுப்பினவரை நம்புகிறானோ
அவனுக்கு நித்தியமான வாழ்வு உண்டு.
அவன் தீர்ப்புக்கு உட்படமாட்டான். அவன்
ஏற்கெனவே மரணத்தை விட்டு நீங்கி
ஜீவனைப் பெற்றவனாகிறான். [25]உங்களுக்கு
ஒரு உண்மையைக் கூறுகிறேன். முக்கியமான
வேளை வரும். அவ்வேளை ஏற்கெனவே
இங்கே இருக்கிறது. பாவத்தில் இறந்தவர்கள்
தேவகுமாரனுடைய சத்தத்தைக் கேட்கும்
காலம் வரும். குமாரனிடமிருந்து கேட்பவற்றை
நம்புகிறவர்கள் நித்திய ஜீவனைப் பெறுகின்
றார்கள். [26]பிதாவிடமிருந்தே (தேவனிடமிரு
ந்தே) ஜீவன் வருகின்றது. ஆகையால் அவர்
தன் குமாரனுக்கும் ஜீவனையளிக்கும் அதி
காரத்தைக் கொடுத்திருக்கிறார். [27]அத்துடன்
அவர் குமாரனுக்கு, அனைத்து மக்களுக்கும்
தீர்ப்பளிக்கிற அதிகாரத்தையும் கொடுத்திருக்

---

**வாக்கியம்** *3 சில கிரேக்க பிரதிகளில் "அவர்கள் தண்ணீர் நகருவதற்காகக் காத்திருந்தனர்" சில சமீபத்திய பிரதிகளில் 4வது வாக்கியத்தில், "சில நேரங்களில் ஒரு தேவதூதன் கர்த்தரிடமிருந்து ஏரிக்கு இறங்கி வருவான். நீரைக் கலக்குவான். தேவதூதன் இவ்வாறு செய்த பிறகு முதன் முதல் எவனொருவன் ஏரியில் இறங்குகிறானோ அவன் குணமடைவான்."*

கிறார். ஏனென்றால் அந்தக் குமாரனே மனித
குமாரனாய் இருக்கிறார். 28இதுபற்றி நீங்கள்
ஆச்சரியப்படவேண்டாம். செத்துப்போய் கல்ல
றையில் இருக்கிறவர்கள் அவரது சத்தத்தை
கேட்கும் காலம் வரும். 29அப்போது அவர்கள்
கல்லறையை விட்டு வெளியே வருவார்கள்.
தங்கள் வாழ்வில் நன்மையைச் செய்தவர்கள்
எழுந்து நித்திய ஜீவனைப் பெறுவார்கள்.
தீமை செய்தவர்கள் எழுந்து தண்டனையைப்
பெறுவார்கள்.

### யூதர்களிடம் இயேசு பேசுதல்

30“நான் தனியாக எதுவும் செய்வதில்லை.
நான் எனக்குச் சொல்லியிருக்கிறபடியே தீர்ப்
பளிக்கிறேன். எனவே எனது தீர்ப்பு நீதியா
னதே. ஏனென்றால் நான் எனக்குப் பிடித்தமா
னதைச் செய்வதில்லை; என்னை அனுப்பின
வருக்குப் பிடித்தமானதையே செய்கிறேன்.
31“நானே என்னைப் பற்றி சொல்லி வந்
தால், மக்கள் அதை ஏற்றுக்கொள்ளமாட்டார்
கள்.
32“ஆனால் என்னைக்குறித்து மக்களிடம்
சொல்லுகிற வேறொருவர் இருக்கிறார். அவர்
என்னைக் குறித்து சொல்வது உண்மை
யென்று எனக்கும் தெரியும்.
33“நீங்கள் யோவானிடம் சிலரை அனுப்பி
யிருந்தீர்கள். அவன் உங்களுக்கு உண்மை
யைப் பற்றிச் சொன்னான். 34மக்களுக்கு
என்னைப் பற்றி ஒருவன் சாட்சி சொல்லி
விளக்க வேண்டும் என்ற தேவை எனக்
கில்லை. ஆனால் நீங்கள் இரட்சிக்கப்படும்படி
யாக இவற்றை நான் உங்களுக்குக் கூறுகி
றேன். 35யோவான் எரிந்து ஒளியைக் கொடுக்
கிற ஒரு விளக்கைப் போன்றிருந்தான். நீங்கள்
அவனது ஒளியைப் பெற்று சிலகாலம்
மகிழ்ச்சி அடைந்தீர்கள்.
36“ஆனால் நான் யோவானைவிடப் பெரி
யவர் என்பதற்கு என்னிடம் சாட்சி உள்ளது.
நான் செய்கிற செயல்களே எனக்கு உரிய
சாட்சிகளாகும். இவைகளே என் பிதா, நான்
செய்யும்படியாகக் கொடுத்தவை என்பதைக்
காட்டுகின்றன. 37என்னை அனுப்பிய என்
பிதா, என்னைப் பற்றி அவரே சாட்சி தருகி
றார். ஆனால் நீங்கள் அவர் சத்தத்தை ஒரு
பொழுதும் கேட்டதில்லை. அவர் எப்படி இருப்
பார் என்று நீங்கள் பார்த்ததும் இல்லை.
38பிதாவின் அறிவுரை உங்களில் வாழ்வது
மில்லை. ஏனென்றால் பிதா அனுப்பிய ஒரு
வரை நீங்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. 39நீங்
கள் வேத வாக்கியங்களைக் கவனமாகப்
படித்துப் பாருங்கள். அவை நித்திய ஜீவனை
உங்களுக்குக் கொடுக்குமென்று நீங்கள்
நினைக்கிறீர்கள். அந்த வாக்கியங்களே என்
னைப் பற்றி கூறுகின்றன.
40ஆனால் அந்த நித்திய ஜீவனைப் பெற
விரும்பும் நீங்கள், என்னிடம் வர மறுக்கி
ன்றீர்கள்.
41“நான் மனிதர்களிடமிருந்து பாராட்டைப்
பெற விரும்பவில்லை. 42ஆனால் நான் உங்
களை அறிவேன். தேவனுடைய அன்பு உங்க
ளில் இல்லை என்பதையும் அறிவேன். 43நான்
என் பிதாவிடமிருந்து வந்திருக்கிறேன். நான்
அவருக்காகப் பேசுகிறேன். ஆனால் என்னை
நீங்கள் ஒப்புக்கொள்ள மறுக்கிறீர்கள். வேறொ
ருவன் வந்து அவன் தனக்காகவே பேசினால்
அவனை ஏற்றுக் கொள்கிறீர்கள். 44நீங்கள்
உங்களில் ஒருவரை ஒருவர் பாராட்டுவதில்
விருப்பம் கொள்கிறீர்கள். நீங்கள் தேவனு
டைய பாராட்டை பெற முயற்சி செய்வ
தில்லை. ஆகையால் நீங்கள் எவ்வாறு நம்
பிக்கை வைக்க முடியும்? 45நான் பிதாவின்
முன்னால் நின்று உங்களைக் குற்றம் சொல்
வேன் என்று நினைக்க வேண்டாம். மோசே
தான் உங்கள் குறைகளைச் சொல்கிறவன்.
மோசே மட்டுமே உங்களைக் காப்பாற்ற முடி
யும் என்று நீங்கள் நம்புகிறீர்கள். 46நீங்கள்
உண்மையிலேயே மோசேயை நம்பினீர்களா
னால் என்னிலும் நம்பிக்கை வைத்திருப்பீர்
கள். ஏனென்றால் மோசே என்னைப் பற்றித்
தான் எழுதியிருக்கிறான். 47ஆனால் நீங்கள்
மோசே எழுதினவைகளை நம்பமாட்டீர்கள்.
ஆகையால் நான் சொல்வதையும் உங்களால்
நம்ப முடியாது” என்று கூறினார்.

### ஐந்து ஆயிரத்துக்கு மேற்பட்ட மக்களுக்கு உணவளித்தல்

(மத்தேயு 14:13-21; மாற்கு 6:30-44;
லூக்கா 9:10-17)

6 பிறகு இயேசு திபேரியாக் கடல் என
அழைக்கப்படும் கலிலேயாக் கடலின்
அக்கரைக்குப் போனார். 2ஏராளமான மக்கள்
அவரைப் பின் தொடர்ந்தனர். ஏனென்றால்
இயேசு வழியில் நோயாளிகளைக் குணப்
படுத்தி தன் வல்லமையை வெளிப்படுத்தி
யதை அவர்கள் கண்டிருந்தனர். 3இயேசு
மலையின்மேல் ஏறினார். அங்கே தம்மைப்
பின் தொடர்ந்தவர்களோடு உட்கார்ந்தார். 4அப்
பொழுது யூதருடைய பஸ்கா பண்டிகை நெருங்
கிக் கொண்டிருந்தது.
5ஏராளமான மக்கள் அவரை நோக்கி வரு
வதை இயேசு கண்களை ஏறெடுத்து நோக்
கினார். பிலிப்புவிடம் இயேசு, “இவர்களெல்
லாம் உண்பதற்கு நாம் அப்பத்தை எங்கே
வாங்குவது?” என்று கேட்டார். 6(பிலிப்புவை
சோதனை செய்வதற்காகவே இயேசு அவனி
டம் இவ்வாறு கேட்டார். தனது திட்டத்தை
இயேசு ஏற்கெனவே தெரிந்து வைத்திருந்தார்).
7பிலிப்பு, “இவர்களில் ஒவ்வொருவரும்
கொஞ்சம் கொஞ்சம் அப்பம் உண்பதற்குக்
கூட, நாம் அனைவரும் ஒரு மாதத்திற்கு மேல்
வேலை செய்ய வேண்டியதிருக்குமே” என்
றான்.
8அந்திரேயா அவரது இன்னொரு சீஷன்.
அவன் சீமோன் பேதுருவின் சகோதரன். 9அந்

*திரேயா இயேசுவிடம், "இங்கே ஒரு சிறுவன் வாற்கோதுமையால் ஆன ஐந்து அப்பத்துண்டுகளையும், இரண்டு சிறு மீன்களையும் வைத்திருக்கிறான். ஆனால் அவை இவ்வளவு மிகுதியான மக்களுக்குப் போதுமானதல்ல" என்றான்.*

*[10]மக்களை உட்காரும்படிக் கூறுங்கள்" என்றார் இயேசு. அந்த இடத்தில் நிறைய புல் இருந்தது. அங்கே ஐயாயிரம் எண்ணிக்கை வரையுள்ள ஆண்கள் உட்கார்ந்தனர். [11]பிறகு இயேசு அப்பத்துண்டுகளை எடுத்தார். அவர் தேவனுக்கு நன்றி சொன்னார். அதை அங்கு அமர்ந்திருந்தவர்களுக்குப் பகிர்ந்தளிக்கச் செய்தார். அவர் மீனையும் அதைப்போலவே பகிர்ந்தளிக்கச் செய்தார். இயேசு அவர்களின் தேவைக்கு ஏற்றவாறு வேண்டியமட்டும் கொடுத்தார்.*

*[12]அனைத்து மக்களும் வேண்டிய மட்டும் உண்டனர். அவர்கள் உண்டு முடித்ததும் இயேசு தன் சீஷர்களிடம் "உண்ணப்படாத அப்பத்துண்டுகளையும் மீன் துண்டுகளையும் சேகரியுங்கள். எதையும் வீணாக்க வேண்டாம்" என்றார். [13]எனவே சீஷர்கள் அவற்றைச் சேகரித்தனர். மக்கள் ஐந்து அப்பத்துண்டுகளிலி ருந்தே உண்ண ஆரம்பித்தனர். ஆனால் உண்டு பிறகு மீதியிருந்த துணுக்குகளோ பன்னிரெண்டு கூடைகளில் நிரப்பப்பட்டன.*

*[14]இயேசு செய்த இந்த அற்புதத்தை மக்கள் கண்டனர். "இவர் உண்மையிலேயே உலகத்தில் வருகிறவரான தீர்க்கதரிசியாக இருக்க வேண்டும்" என்றனர் மக்கள்.*

*[15]அவரை மக்கள் அரசராக்க வேண்டும் என விரும்பினர். இதனை இயேசு அறிந்தார். மக்கள் தங்கள் எண்ணத்தைத் திட்டமாக்கிச் செயல்படுத்த விரும்பினர். எனவே இயேசு அவர்களைவிட்டுத் தனியாக மலையில் ஏறினார்.*

### இயேசு தண்ணீர் மீது நடத்தல்

*(மத்தேயு 14:22-27; மாற்கு 6:45-52)*

*[16]அன்று மாலை இயேசுவின் சீஷர்கள் கலிலேயாக் கடற்கரைக்கு இறங்கிச் சென்றனர். [17]அப்பொழுது இருட்ட ஆரம்பித்தது. எனினும் இயேசு அவர்களிடம் திரும்பிவரவில்லை. இயேசுவின் சீஷர்கள் படகில் ஏறிக் கடலைக் கடந்து கப்பர்நகூமிற்குச் செல்லத் தொடங்கினர். [18]காற்று வேகமாக அடித்துக் கொண்டிருந்தது. கடலில் பெரிய அலைகள் வர ஆரம்பித்தன. [19]அவர்கள் மூன்று நான்கு மைல் தூரத்திற்குப் படகைச் செலுத்தினர். அதன் பின்பு அவர்கள் இயேசுவைக் கண்டனர். அவர் தண்ணீர்மேல் நடந்து வந்து கொண்டிருந்தார். அவர் படகை நெருங்கி வந்தார். அவரது சீஷர்கள் அஞ்சினர். [20]"நான்தான். பயப்படவேண்டாம்" என்று இயேசு அவர்களிடம் கூறினார். [21]இயேசு இவ்வாறு சொன்னதும் அவர்கள் மகிழ்ச்சி அடைந்து படகில் அவரை ஏற்றிக்கொண்டனர். உடனே அவர்கள் போக விரும்பிய இடத்திற்குப் படகு வந்து சேர்ந்தது.*

### மக்கள் இயேசுவைத் தேடுதல்

*[22]மறுநாள் வந்தது. கடலின் அக்கரையில் சில மக்கள் தங்கியிருந்தனர். இயேசு தன் சீஷர்களோடு படகில் செல்லவில்லை என்பதை அவர்கள் அறிந்திருந்தனர். இயேசுவின் சீஷர்கள் இயேசு இல்லாமல் தனியாகச் சென்றதை அவர்கள் தெரிந்திருந்தனர். அங்கிருந்து செல்ல அந்த ஒரு படகு மட்டும்தான் உண்டு என்பதையும் அவர்கள் தெரிந்து கொண்டனர். [23]அப்போது திபேரியாவிலிருந்து சில படகுகள் வந்தன. அப்படகுகள், கர்த்தர் நன்றி சொன்னதற்குப் பின் மக்கள் உணவு உண்ட இடத்தின் அருகில் நின்றன. [24]இயேசுவும் அவரது சீஷர்களும் அங்கே இல்லை என்பதை மக்கள் அறிந்துகொண்டனர். ஆகையால் அவர்கள் படகுகளில் ஏறி கப்பர்நகூமுக்குச் சென்றனர். அவர்கள் இயேசுவைக் காண விரும்பினர்.*

### ஜீவ அப்பமான இயேசு

*[25]கடலின் அக்கரையில் இயேசுவை மக்கள் கண்டுபிடித்தனர். அவர்கள், "போதகரே, நீங்கள் இங்கு எப்பொழுது வந்தீர்கள்?" என்று கேட்டனர்.*

*[26]"ஏன் என்னைத் தேடுகிறீர்கள்? எனது வல்லமையை வெளிப்படுத்தும் எனது அற்புதங்களைப் பார்த்தீர்கள். அதற்காகவா என்னைத் தேடுகிறீர்கள்? இல்லை. நான் உண்மையைக் கூறுகிறேன். நீங்கள் அப்பத்தைத் உண்டீர்கள், திருப்தியாய் உண்டீர்கள், அதனால் என்னைத் தேடுகிறீர்கள். [27]பூமியிலுள்ள உணவுகள் கெட்டு அழிந்துபோகும். ஆகையால் அத்தகைய உணவுக்காக நீங்கள் வேலை செய்யவேண்டாம். ஆனால் எப்பொழுதும் நன்மையையும் நித்திய வாழ்வையும் தருகிற உணவுக்காக வேலை செய்யுங்கள். மனித குமாரனே உங்களுக்கு அத்தகைய உணவினைத் தருவார். தேவனாகிய பிதா, தான் மனித குமாரனோடு இருப்பதைக் காட்டிவிட்டார்" என்று இயேசு கூறினார்.*

*[28]"நாங்கள் எத்தகைய செயல்களைச் செய்ய வேண்டும் என்று தேவன் விரும்புகிறார்?" என்று மக்கள் இயேசுவிடம் கேட்டனர்.*

*[29]"தேவனால் அனுப்பப்பட்ட ஒருவரை நீங்கள் நம்பவேண்டும். இதுவே நீங்கள் செய்யத்தக்கது என்று தேவன் விரும்புகிறார்" என இயேசு பதிலுரைத்தார்.*

*[30]"தேவனால் அனுப்பப்பட்டவர் நீர் தான் என்பதை நிரூபிக்க என்ன அற்புதத்தை நீர் செய்யப் போகிறீர். நீர் செய்யும் அற்புதத்தைப் பார்க்க முடியுமெனில், அதற்குப் பின்னர் நாங்கள் உம்மை நம்புவோம். என்ன செய்யப் போகிறீர்? [31]நமது மூதாதையர்கள் வனாந்தரத்*

*தில் தேவன் கொடுத்த மன்னாவை (உணவு)*
*உண்டார்கள். இது ‘தேவன் பரலோகத்தில்*
*இருந்து அவர்களுக்கு உண்பதற்கு அப்பத்*
*தைக் கொடுத்தார்,’* என்று எழுதப்பட்டி*
*ருக்கிறது” என்று மக்கள் கேட்டனர்.*
32*“நான் உண்மையைச் சொல்லுகிறேன்.*
*பரலோகத்திலிருந்து அப்பத்தை உங்களுக்கு*
*கொடுத்தது மோசே அல்ல. ஆனால் என்னு*
*டைய பிதா பரலோகத்திலிருந்து உண்மை*
*யான அப்பத்தை உங்களுக்குக் கொடுக்கிறார்.*
33*தேவனின் அப்பம் என்பது என்ன? பரலோ*
*கத்திலிருந்து பூமிக்கு வந்து உலகத்துக்காக*
*ஜீவனைத் தருகிற ஒருவர்தான் தேவனின்*
*அப்பம்” என்றார் இயேசு.*
34*“ஆண்டவரே, எப்பொழுதும் அந்த*
*அப்பத்தை எங்களுக்குத் தாரும்” என்றனர்*
*மக்கள்.*
35*“நான்தான் உங்களுக்கு ஜீவனளிக்கும்*
*அப்பம். என்னிடம் வருகிற மனிதன் என்றென்*
*றைக்கும் பசியோடு இருப்பதில்லை. என்மீது*
*நம்பிக்கை வைக்கிற எவனும் எப்பொழுதும்*
*தாகமாய் இருப்பதில்லை.* 36*நீங்கள் என்னைப்*
*பார்த்திருந்தும் என்மீது நம்பிக்கையில்லாமல்*
*இருக்கிறீர்கள் என்று நான் உங்களுக்குச்*
*சொன்னேன்.* 37*எனது பிதா என் மக்களை*
*எனக்குத் தந்திருக்கிறார். அம்மக்களில் ஒவ்*
*வொருவரும் என்னிடம் வருவார்கள். என்னி*
*டம் வருகிற ஒவ்வொருவரையும் நான் ஏற்றுக்*
*கொள்வேன்.* 38*நான் என்ன செய்ய வேண்டும்*
*என்று தேவன் விரும்புகிறாரோ அதைச் செய்*
*வதற்காக நான் பரலோகத்தில் இருந்து வந்தி*
*ருக்கிறேன். நான் விரும்புவதைச் செய்வதற்கு*
*வரவில்லை.* 39*தேவன் கொடுத்த மக்களில்*
*எவரையும் நான் இழக்கக் கூடாது. நான் இறுதி*
*நாளில் அவர்களையெல்லாம் எழுப்புவேன்.*
*என்னை அனுப்பினவர் நான் செய்ய வேண்*
*டும் என்று விரும்புவதும் இதைத்தான்.* 40*குமா*
*ரனைப் பார்க்கிற ஒவ்வொருவரும் அவரில்*
*நம்பிக்கை வைத்து நித்திய ஜீவனைப் பெறு*
*கின்றனர். நான் அந்த மனிதர்களை இறுதி*
*நாளில் எழுப்புவேன். இதுதான் எனது பிதா*
*வின் விருப்பமும் ஆகும்” என்றார் இயேசு.*
41*பிறகு யூதர்கள் இயேசுவைப் பற்றி முறு*
*முறுக்கத் தொடங்கினர். ஏனென்றால் “நான்*
*பரலோகத்திலிருந்து வந்த அப்பம்” என்று*
*இயேசு சொன்னார்.* 42*அதற்கு யூதர்கள், “இவர்*
*இயேசு. நாங்கள் இவரது தந்தையையும்*
*தாயையும் அறிவோம். இயேசு யோசேப்பின்*
*மகன். அவர் எப்படி நான் பரலோகத்திலி*
*ருந்து வந்தேன் என்று சொல்லலாம்?” என்று*
*கேட்டனர்.*
43*“ஒருவருக்கொருவர் குற்றம் சாட்டுவதை*
*நிறுத்துங்கள்.* 44*என்னை அனுப்பியவர்*
*அந்தப் பிதாதான். அவரே மக்களை என்னிடம்*
*அழைத்து வருகிறவர். நான் இறுதி நாளில்*
*அவர்களை எழுப்புவேன். என் பிதா என்னி*
*டம் மக்களை அழைத்து வராவிட்டால், எவ*
*ரும் என்னிடம் வர முடிவதில்லை.* 45*இது*
*தீர்க்கத் தரிசிகளின் மூலம் எழுதப்பட்டிருக்*
*கிறது. ‘தேவன் எல்லா மக்களுக்கும் கற்றுத்*
*தருவார்.’* மக்கள் அப்பிதாவைக் கவனிக்கி*
*றார்கள். கற்றுக்கொள்கிறார்கள். பிறகு அவர்*
*கள் என்னிடம் வருகிறார்கள்.* 46*எவரும் பிதா*
*வைப் பார்த்திருப்பதாக நான் கருதவில்லை.*
*தேவனிடம் இருந்து வந்தவர் மட்டுமே அவ*
*ரைப் பார்த்திருக்கிறார்.* 47*நான் உண்மையா*
*கவே உங்களுக்குச் சொல்லுகிறேன். ஒருவன்*
*நம்பிக்கை வைத்தால் அவன் நித்திய ஜீவ*
*னைப் பெறுவான்.* 48*நானே ஜீவனளிக்கும்*
*அப்பம்.* 49*உங்கள் மூதாதையர்கள் தேவன்*
*கொடுத்த மன்னாவை வனாந்தரத்தில் உண்*
*டார்கள். ஆனால் அவர்கள் மற்றவர்களைப்*
*போன்றே மாண்டு போனார்கள்.* 50*நான்*
*பரலோகத்தில் இருந்து வந்த அப்பம். ஒரு*
*மனிதன் இதனை உண்பானேயானால் அவன்*
*என்றென்றைக்கும் உயிர்வாழ்வான்.* 51*என்னு*
*டைய சரீரம்தான் அந்த அப்பம். நான் என்*
*சரீரத்தை தருவேன். உலகில் உள்ளவர்கள்*
*வாழ்வைப் பெறுவார்கள்” என்று இயேசு*
*கூறினார்.*
52*பிறகு யூதர்கள் தங்களுக்குள் விவாதம்*
*செய்து கொண்டனர். “எவ்வாறு இந்த மனி*
*தன் தனது சரீரத்தை நாம் உண்ணும்படி*
*தருவான்?” என்றனர் அவர்கள்.*
53*“நான் உண்மையைக் கூறுகிறேன். நீங்கள்*
*மனித குமாரனின் சரீரத்தை உண்ணவேண்*
*டும். அவரது இரத்தத்தை அருந்தவேண்டும்.*
*இதனை நீங்கள் செய்யாவிட்டால், உங்க*
*ளுக்கு உண்மையான வாழ்க்கை கிடைக்காது.*
54*எனது சரீரத்தைப் புசித்து இரத்தத்தை அருந்*
*துகிற எவனும் நித்திய ஜீவனைப் பெறுவான்.*
*நான் அவனை இறுதிநாளில் எழுப்புவேன்.*
55*எனது சரீரமே உண்மையான உணவு.*
*எனது இரத்தமே உண்மையான பானம்.* 56*ஒரு*
*வன் எனது சரீரத்தைப் புசித்து என் இரத்*
*தத்தை அருந்துவானேயானால் அவன் என்னி*
*லும் நான் அவனிலும் வாழ்வதாகும்.* 57*பிதா*
*என்னை அனுப்பினார். பிதா வாழ்கிறார்.*
*அவரால் நானும் வாழ்கிறேன். ஆகையால்*
*என்னை உண்ணுகிறவன் என்னால் உயிர்*
*வாழ்கிறான்.* 58*நமது மூதாதையர்கள் வனாந்த*
*ரத்தில் புசித்த அப்பத்தைப்போல அல்ல*
*நான். அவர்கள் அந்த அப்பத்தை உண்டார்*
*கள். ஆனால், மற்றவர்களைப் போன்று அவர்*
*கள் இறந்து போயினர். நானோ பரலோ*
*கத்திலிருந்து இறங்கி வந்த அப்பம். இதனை*
*உண்ணுகிற எவனும் நித்திய ஜீவனைப் பெறு*
*வான்” என்றார் இயேசு.* 59*இவை எல்லாவற்*
*றையும் இயேசு, கப்பர்நகூமிலுள்ள யூதர்களின்*
*ஜெப ஆலயத்தில் போதனை செய்யும்போது*
*கூறினார்.*

---

**தேவன் ... கொடுத்தார்** *சங்கீதம் 78:24.*

**தேவன் ... தருவார்** *ஏசாயா 54:13.*

### நித்திய ஜீவனுக்குரிய வார்த்தைகள்

60இயேசுவின் சீஷர்கள் இவற்றைக் கேட்டார்கள். "இந்த உபதேசங்கள் ஏற்றுக் கொள்வதற்குக் கடினமானவை, இவற்றை யாரால் ஏற்றுக் கொள்ள முடியும்?" என சீஷர்கள் கூறினர்.

61அவருடைய சீஷர்கள் முறுமுறுப்பதை இயேசு அறிந்து கொண்டார். எனவே இயேசு அவர்களிடம், "நான் சொன்னவற்றை ஏற்றுக் கொள்வதில் சிரமம் இருக்கிறதா?" என்று கேட்டார்.

62"அப்படியானால் மனித குமாரன் தாம் வந்த இடத்திற்ககே திரும்பி ஏறிப்போவதைக் காண்பது எப்படியிருக்கும்? 63ஒரு மனிதனுக்கு அவனது சரீரம் மட்டுமே வாழ்வு அளிப்பது இல்லை. அவனது ஆவியே ஜீவனைத் தருகிறது. நான் உங்களுக்குச் சொன்ன வசனங்கள் யாவும் ஆவியே. இவையே ஜீவனைத் தருவன. 64ஆனால் உங்களில் சிலர் விசுவாசம் இல்லாமல் இருக்கிறீர்கள்" என்றார். (தன்னை விசுவாசிக்காதவர்களை இயேசு புரிந்து கொண்டார். இதனை அவர் துவக்கம் முதலே புரிந்து கொண்டார். தனக்கு எதிராகத் திரும்புகிறவனையும் இயேசு அறிந்திருந்தார்.)

65அதனால்தான் நான், "பிதா அனுமதித்தால் ஒழிய ஒருவனும் என்னிடம் வரமாட்டான் என்று சொன்னேன்" என்றார் இயேசு. 66இயேசு இவ்வாறு சொன்னபிறகு அவரது சீஷர்களில் அநேகர் அவரை விட்டுப் போயினர். அவர்கள் இயேசுவைப் பின்தொடர்ந்து செல்வதை நிறுத்தினர்.

67பிறகு இயேசு தனது பன்னிரண்டு அப்போஸ்தலர்களையும் பார்த்து, "நீங்களும் விட்டுவிட்டு விலகிச் செல்ல விரும்புகிறீர்களா?" என்று கேட்டார்.

68சீமோன் பேதுரு இயேசுவைப் பார்த்து, "ஆண்டவரே, நாங்கள் எங்கே போவோம்? நித்திய ஜீவனுக்குரிய வார்த்தைகளை நீரே வைத்திருக்கிறீர். 69நாங்கள் உம்மை நம்புகிறோம். நீரே தேவனிடமிருந்து வந்த பரிசுத்தமானவர் என்பதை நாங்கள் அறிவோம்" என்றார்.

70பிறகு இயேசு அவர்களிடம், "என்னால் தேர்ந்தெடுக்கப்பட்ட பன்னிருவர் நீங்கள். ஆனால் உங்களில் ஒருவன் பிசாசு" என்றார். 71இயேசு யூதாஸைப் பற்றியே இவ்வாறு கூறினார். அவன் சீமோன் ஸ்காரியோத்தின் மகன். பன்னிருவரில் ஒருவன். ஆனால் பிற்காலத்தில் யூதாஸ் இயேசுவிற்கு எதிராகத் திரும்பிவிட்டான்.

### இயேசுவும் அவரது சகோதரர்களும்

7 இதற்குப் பிறகு இயேசு கலிலேயாவை சுற்றிப் பிரயாணம் செய்தார். அவர் யூதேயா நாட்டில் பிரயாணம் செய்ய விரும்பவில்லை. ஏனென்றால் அங்குள்ள யூதர்கள் அவரைக் கொலைசெய்ய விரும்பினர். 2அப்பொழுது யூதர்களின் கூடாரப்பண்டிகை* நெருங்கி கொண்டிருந்தது. 3ஆகையால் இயேசுவின் சகோதரர்கள் அவரிடம், "நீங்கள் இந்த இடத்தை விட்டு பண்டிகைக்காக யூதேயாவிற்கு போங்கள். அங்கே உமது சீஷர்கள் உம்முடைய அற்புதங்களைக் காண்பார்கள். 4மக்கள் தன்னை அறிந்து கொள்ள வேணடும் என்று ஒருவன் விரும்பினால் அவன், தான் செய்கிற காரியங்களை மறைக்கக் கூடாது. உங்களை உலகத்துக்கு வெளிப்படுத்துங்கள். அவர்களும் நீங்கள் செய்யும் அற்பதங்களைக் கண்டு கொள்ளட்டும்" என்றார்கள். 5(இயேசுவின் சகோதரர் கூட அவரிடம் நம்பிக்கை இல்லாமலேயே இருந்தார்கள்.) 6இயேசு தனது சகோதரர்களிடம், "எனக்கான சரியான நேரம் இன்னும் வரவில்லை. ஆனால் நீங்கள் போவதற்கு எந்த நேரமும் சரியான நேரம்தான். 7இந்த உலகம் உங்களை வெறுப்பதில்லை. ஆனால் உலகம் என்னை வெறுக்கிறது. ஏனென்றால் நான் அவர்களிடம் அவர்கள் தீமை செய்கிறார்கள் என்று சொல்கிறேன். 8ஆகையால் நீங்கள் பண்டிகைக்குப் போங்கள். நான் இப்பொழுது பண்டிகைக்குப் போவதாக இல்லை. எனக்கான சரியான நேரம் இன்னும் வரவில்லை" என்றார். 9இயேசு இவற்றைச் சொன்ன பிறகு கலிலேயாவிலேயே தங்கி விட்டார்.

10எனவே, இயேசுவின் சகோதரர்கள் பண்டிகைக்காகப் புறப்பட்டுச் சென்றார்கள். அவர்கள் போனபிறகு இயேசுவும் போனார். ஆனால் அவர் மக்களுக்குக் காட்சி தரவில்லை. 11அப்பண்டிகையின்போது யூதர்கள் இயேசுவைத் தேடினார்கள். "எங்கே அந்த மனிதன்?" என்றார்கள்.

12அங்கே ஒரு பெருங்கூட்டம் இருந்தது. அவர்களில் பெரும்பாலோர் இயேசுவைப் பற்றி தங்களுக்குள் பேசிக்கொண்டனர். சிலர் "அவர் மிக நல்ல மனிதர்" என்றனர். ஆனால் வேறு சிலர், "இல்லை, அவன் மக்களை ஏமாற்றுகிறவன்" என்றனர்.

13ஆனால் எவருக்கும் இயேசுவைப் பற்றி வெளிப்படையாகக் கூறுவதற்குரிய தைரியம் இல்லை. மக்கள் யூதத் தலைவர்களுக்கு அஞ்சினர்.

### இயேசு எருசலேமில் உபதேசித்தல்

14பண்டிகை பாதி முடிந்து விட்டது. பிறகு இயேசு தேவாலயத்துக்குப் போய் அங்கே உபதேசம் செய்தார். 15யூதர்கள் ஆச்சரியப்பட்டனர். "இந்த மனிதர் பள்ளியில் படித்ததில்லை. இவற்றை இவர் எவ்வாறு கற்றுக் கொண்டார்?" என்று கூறிக்கொண்டனர்.

---

**கூடாரப்பண்டிகை** மோசேயின் காலத்தில் நாற்பது ஆண்டுகள் வனாந்தரத்தில் திரிந்த தம் மக்களின் நினைவாக, ஒவ்வொரு ஆண்டும் கூடாரங்களில் தங்கி யூதர்கள் கொண்டாடும் ஒரு முக்கிய வாரம்.

16"நான் உங்களுக்கு செய்கிற உபதேசம்
எனக்குச் சொந்தமானவை அல்ல. அவை
என்னை அனுப்பினவரிடமிருந்து எனக்கு
வந்தது. 17தேவனின் விருப்பப்படி செயல்புரிய
ஒருவன் விரும்பினால், அவன் என் உபதேசம்
தேவனிடமிருந்து வந்தது என்பதை அறிந்து
கொள்வான். அதோடு அவன், இந்த உபதேசம்
எனக்குச் சொந்தமானவை அல்ல என்பதை
யும் அறிந்து கொள்வான். 18தன் சொந்தமான
சிந்தனைகளை உபதேசிக்கிற எவனும் தனக்
குரிய பெருமையை அடையவே முயற்சிக்கி
றான். தன்னை அனுப்பினவரைப் பெருமைப்
படுத்த முயற்சிக்கும் ஒருவன் எப்பொழுதும்
உண்மையையே பேசுகிறான். அவனிடம் எந்
தத் தவறும் இல்லை. 19மோசே உங்களுக்குச்
சில சட்டங்களைக்* கொடுத்திருக்கிறார் இல்
லையா? ஆனால் உங்களில் எவரும் அதற்குக்
கீழ்ப்படிவதில்லை. என்னை ஏன் கொலை
செய்ய முயற்சி செய்கிறீர்கள்?" என்று இயேசு
கேட்டார்.

20"நீ பிசாசு பிடித்தவன். அதனால் தான்
இப்படி உளறுகிறாய். நாங்கள் உன்னைக்
கொலை செய்ய முயற்சி செய்யவில்லை"
என்று மக்கள் பதில் சொன்னார்கள்.

21"நான் ஒரு அற்புதம் செய்தேன். நீங்கள்
ஆச்சரியப்படுகிறீர்கள். 22மோசே விருத்தசேத
னம்* பற்றிய சட்டங்களைக் கொடுத்திருக்கி
றார். (ஆனால் உண்மையில் மோசே உங்க
ளுக்கு விருத்தசேதனத்தைத் தரவில்லை. அது
மோசேக்கு முற்காலத்திலேயே நமது மக்களிட
மிருந்து வந்து விட்டது) ஆகையால் சில
வேளைகளில் ஓய்வு நாட்களிலும் நீங்கள் குழந்
தைகளுக்கு விருத்தசேதனம் பண்ணுகிறீர்கள்.
23மோசேயின் கட்டளைக்குக் கீழ்ப்படிய ஓய்வு
நாளிலும் ஒரு குழந்தைக்கு விருத்தசேதனம்
செய்யலாம் என்பதை இது காட்டுகிறது.
எனவே, நான் ஓய்வு நாளில் ஒரு மனிதனின்
முழு சரீரத்தையும் குணமாக்கினேன் என்பதற்
காக என்மேல் ஏன் கோபமாய் இருக்கிறீர்கள்?
24வெளித்தோற்றத்தை வைத்து முடிவுக்கு வரு
வதை நிறுத்துங்கள். சரி எது என்பதைக்
கொண்டு அதன் மூலம் நியாயமாய் முடிவு
செய்யுங்கள்" என்றார் இயேசு.

## இயேசுதான் கிறிஸ்துவா?

25எருசலேமில் உள்ள மக்களில் சிலர்
"அவர்கள் கொலை செய்ய முயல்கிற மனிதர்
இவர்தான். 26ஆனால் இவரோ எல்லோரும்
காணும்படியும் கேட்கும்படியும் உபதேசம்
செய்துகொண்டிருக்கிறார். ஒருவரும் அவர்
உபதேசிப்பதை நிறுத்திவிட முயற்சி செய்ய
வில்லை. ஒரு வேளை, யூதத் தலைவர்கள்
இவர்தான் உண்மையான கிறிஸ்து என்று
முடிவு செய்து விட்டார்கள்போலும். 27ஆனால்
இந்த மனிதர் எங்கிருந்து வருகிறாரென்று
நாம் அறிவோம். ஆனால் உண்மையான
கிறிஸ்து வரும்போது அவர் எங்கிருந்து வந்
தார் என்பது எவருக்கும் தெரியாமல் இருக்
கும்" என்றனர்.

28இயேசு தேவாலயத்தில் தொடர்ந்து உப
தேசம் செய்துகொண்டிருந்தார். "ஆமாம், நான்
யார் என்பதையும் எங்கிருந்து வந்தேன்
என்பதையும் நீங்கள் அறிவீர்கள். ஆனால்
நான் என் சொந்த அதிகாரத்தின் பேரில்
வரவில்லை; உண்மையான ஒருவரால் நான்
அனுப்பப்பட்டேன். நீங்கள் அவரை அறியமாட்
டீர்கள். 29ஆனால் அவரை நான் அறிவேன்.
நான் அவரிடமிருந்தே வந்தேன். அவர்
என்னை அனுப்பினார்" என்றார் இயேசு.

30இயேசு இவ்வாறு சொன்னபிறகு மக்கள்
அவரைப் பிடிக்க முயன்றார்கள். ஆனால்
ஒருவராலும் இயேசுவைத் தொடமுடிய
வில்லை. இயேசு கொல்லப்படுவதற்கான சரி
யான நேரம் இன்னும் வரவில்லை. 31ஆனால்
ஏராளமான மக்கள் இயேசுவிடம் நம்பிக்கை
வைத்தார்கள். "நாங்கள் கிறிஸ்துவின் வரு
கைக்காகக் காத்திருக்கிறோம். கிறிஸ்து வந்
தால், அவர் இந்த மனிதரைவிட அதிகமான
அற்புதங்களைச் செய்வாரோ? இல்லை.
எனவே, இந்த மனிதரே கிறிஸ்துவாக இருக்க
வேண்டும்" என்றனர்.

## இயேசுவைக் கைது செய்ய முயற்சி

32இயேசுவைப் பற்றி மக்கள் பேசிக்கொள்
வதைப் பரிசேயர்கள் அறிந்தனர். தலைமை
ஆசாரியரும், பரிசேயரும் தேவாலயச் சேவ
கர்களை இயேசுவைக் கைது செய்ய அனுப்
பினர். 33இயேசு மக்களிடம், "இன்னும்
கொஞ்சக்காலம் நான் உங்களோடு இருப்பேன்.
பிறகு நான் என்னை அனுப்பியவரிடம் திரும்
பிப் போவேன். 34அப்போது என்னை நீங்கள்
தேடுவீர்கள். ஆனால் உங்களால் கண்டு
பிடிக்க முடியாது. நான் இருக்கும் இடத்துக்கும்
உங்களால் வர முடியாது" என்றார்.

35"நாம் கண்டுபிடிக்க முடியாதபடி இவன்
எந்த இடத்திற்குப் போகப் போகிறான்? இவன்
நமது மக்கள் வாழ்கிற கிரேக்க நகரங்களுக்குப்
போகப் போகிறானா? அல்லது அங்கேயுள்ள
கிரேக்க மக்களுக்கு உபதேசிக்கப் போகி
றானா? 36'நீங்கள் என்னைத் தேடுவீர்கள்,
ஆனால் உங்களால் என்னைக் கண்டுபிடிக்க
முடியாது' என்று கூறுகிறானே. 'நான் இருக்
கும் இடத்திற்கு உங்களால் வரமுடியாது' என்
றும் கூறுகிறானே, அதற்கு என்ன பொருள்?"
என்று யூதர்கள் தங்களுக்குள் பேசிக்கொண்ட
னர்.

---

**சட்டங்கள்** *சீனாய் மலையில் தேவன் தனக்குக் கொடுத்த சட்டங்களை மோசே தேவனின் மக்களுக்குக் கொடுத்தார். (யாத். 34:29-32)*

**விருத்தசேதனம்** *மேல்தோலைத் துண்டிப்பது. ஒவ்வொரு யூத ஆண் குழந்தைக்கும் இது செய்யப்படும். தேவன் ஆபிரகாமுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தின் அடையாளமாய் இது செய்யப்படுகிறது.*

### பரிசுத்த ஆவியானவர்

37பண்டிகையின் இறுதிநாளும் வந்தது. இது மிக முக்கியமான நாள். அன்று இயேசு எழுந்து நின்று உரத்த குரலில் பேசினார். "ஒருவன் தாகமாய் இருந்தால் அவன் என்னிடம் வந்து பருகட்டும். 38என்னில் நம்பிக்கை வைக்கிறவனுடைய இதயத்தில் இருந்து ஜீவத் தண்ணீருள்ள ஆறுகள் பெருக்கெடுக்கும், இதைத்தான் வேதவாக்கியங்கள் கூறுகின்றன" என்றார். 39இயேசு பரிசுத்த ஆவியானவரைப் பற்றி இவ்வாறு பேசினார். இன்னும் மக்களுக்குப் பரிசுத்த ஆவியானவர் பகிர்ந்தளிக்கப்படவில்லை. ஏனென்றால் இயேசு இன்னும் மரணமடையவும் இல்லை; மகிமையாய் உயிர்த்தெழவும் இல்லை. ஆனால் பிறகு அவரிடம் விசுவாசம் வைக்கப்போகிற மக்கள் அனைவரும் பரிசுத்த ஆவியானவரைப் பெறுவர்.

### இயேசுவைப் பற்றி மக்களின் விவாதம்

40இயேசு சொன்ன இக்காரியங்களை மக்கள் கேட்டனர். சிலர், "இந்த மனிதர் உண்மையான தீர்க்கதரிசிதான்" என்றனர்.

41வேறு சிலரோ, "இவர் தான் கிறிஸ்து" என்றனர்.

மற்றும் சிலரோ, "கிறிஸ்து கலிலேயாவிலிருந்து வரமாட்டார். 42வேதவாக்கியங்கள் "தாவீதின் குடும்பத்திலிருந்து தான் கிறிஸ்து வரப்போகிறார் என்று கூறுகின்றன. அத்துடன் தாவீது வாழ்ந்த பெத்லகேமிலிருந்துதான் கிறிஸ்து வருவார் என்றும் கூறுகின்றன" என்றனர். 43எனவே, இயேசுவைப் பற்றிய கருத்துக்களில் ஒருவருக்கொருவர் ஒத்துக்கொள்ளவில்லை. 44சிலர் அவரைக் கைது செய்ய விரும்பினர். ஆனால் ஒருவரும் உண்மையில் அவர் மேல் கை வைக்கவில்லை.

### யூதத்தலைவர்களின் அவிசுவாசம்

45தேவாலயச் சேவகர்கள் தலைமை ஆசாரியர்களிடமும் பரிசேயர்களிடமும் திரும்பிப் போனார்கள். "ஏன் இயேசுவைக் கொண்டு வரவில்லை?" என்று அவர்கள் கேட்டனர்.

46தேவாலயச் சேவகர்களோ, "எந்த ஒரு மனிதனும் அவரைப் போல் கருத்துக்களைக் கூறியதில்லை" என்றனர்.

47இதற்குப் பரிசேயர்கள், "அப்படியானால் இயேசு உங்களையும் முட்டாளாக்கிவிட்டார். 48எந்தத் தலைவராவது இயேசுவின் மீது நம்பிக்கை வைத்திருக்கிறார்களா? இல்லை. எந்தப் பரிசேயராவது அவனை நம்புகிறார்களா? இல்லை. 49ஆனால் அவரை நம்புகிற மக்கள் மோசேயின் சட்டத்தைப்பற்றி* ஒன்றும் தெரியாதவர்களாய் இருக்கிறார்கள். அவர்கள் தேவனின் சாபத்திற்கு ஆளாவார்கள்" என்றார்கள்.

50ஆனால் அந்தக் கூட்டத்தில் நிக்கொதேமுவும் இருந்தான். 'நிக்கொதேமுவும் இயேசுவைக் காண்பதற்காகப் போனவர்களில் ஒருவன்.* 51அவன், "ஒரு மனிதனைப் பற்றி முழுவதும் கேட்டறிவதற்கு முன்னால் தண்டிப்பதற்கு நம் சட்டம் இடம் கொடுப்பதில்லை. அவன் என்னென்ன செய்திருக்கிறான் என்பதைத் தெரிந்துகொள்ளும்வரை நாம் தீர்ப்பளிக்க முடியாது" என்றான்.

52யூதத் தலைவர்கள் அவனிடம், "நீயும் கலிலேயாவிலிருந்துதான் வந்திருக்கிறாயா? வேதவாக்கியங்களைப் படித்துப்பார். கலிலேயாவிலிருந்து எந்தவொரு தீர்க்கதரிசியும் வர முடியாது என்று நீ அறிந்துகொள்வாய்" என்றனர்.

*(சில கிரேக்க பிரதிகளில் 7:53-8:11 வரை உள்ள வசனங்களை எழுதவில்லை.)*

### விபசாரத்தில் பிடிக்கப்பட்டபெண்

53யூதத் தலைவர்கள் அனைவரும் அந்த இடத்தை விட்டு வீட்டிற்குப் போயினர்.

8 இயேசுவோ ஒலிவ மலைக்குப்* போனார். 2மறுநாள் அதிகாலையில் அவர் திரும்பவும் தேவாலயத்துக்குப் போனார். அனைவரும் இயேசுவிடம் வந்தனர். இயேசு உட்கார்ந்து மக்களுக்கு உபதேசித்தார். 3வேதபாரகரும், பரிசேயரும் ஒரு பெண்ணை அவரிடம் கொண்டு வந்தனர். அவள் விபசாரம் செய்ததற்காகப் பிடிக்கப்பட்டவள். அவளை மக்களுக்கு முன்னால் நிற்கும்படி யூதர்கள் வற்புறுத்தினர். 4அவர்கள் இயேசுவிடம், "போதகரே, இந்தப்பெண் ஒருவனிடம் கள்ளத்தனமாய் உறவு கொண்டிருந்தபோது கண்டுபிடிக்கப்பட்டாள். 5மோசேயின் சட்டப்படி இவ்வாறு பாவம் செய்கிற ஒவ்வொரு பெண்ணையும் கல் எறிந்து கொல்ல வேண்டும். நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்று நீர் சொல்கிறீர்?" என்று கேட்டனர். 6யூதர்கள் இந்தக் கேள்வியை இயேசுவைச் சோதிப்பதற்காகக் கேட்டனர். இயேசுவின் மீது ஏதாவது குற்றம் சுமத்தவே அவர்கள் விரும்பினர். ஆனால் இயேசுவோ குனிந்து தரையில் தன் விரலால் ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். 7யூதத் தலைவர்கள் அதே கேள்வியை இயேசுவிடம் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருந்தனர். ஆகையால் இயேசு எழுந்து நின்று, "பாவமே செய்யாதவன் எவனாவது இங்கே இருக்கிறானா? இருந்தால் பாவம் செய்யாத அந்த மனிதன் இவள் மீது முதல் கல்லை எறியட்டும்" என்றார். 8பிறகு இயேசு மறுபடியும் கீழே குனிந்து தரையில் ஏதோ எழுத ஆரம்பித்தார்.

---

**சட்டம்** மோசேயின் விதிமுறை.

**நிக்கொதேமு … ஒருவன்** நிக்கொதேமு இயேசுவிடம் வந்தது பற்றிய விவரம் யோவன் 3:1-21ல் உள்ளது.

**ஒலிவ மலை** எருசலேம் நகரின் அருகில் இருக்கிற ஒரு குன்று.

9இயேசுவின் வார்த்தைகளைக் கேட்ட மக்
கள் ஒவ்வொருவராக விலகிப் போயினர்.
முதலில் முதியவர்கள் விலகினர்; பிறகு மற்ற
வர்கள் விலகினர். அந்தப் பெண்ணோடு
இயேசு மட்டும் தனியாக விடப்பட்டார். அவள்
அவருக்கு முன்னால் நின்றுகொண்டிருந்
தாள். 10இயேசு அவளை ஏறிட்டுப் பார்த்து,
“பெண்ணே, எல்லோரும் போய்விட்டார்கள்.
ஒருவனும் உன்னைக் குற்றவாளி எனத்
தீர்ப்பளிக்கவில்லையா?” என்று கேட்டார்.
11அதற்கு அவள், “ஆண்டவரே, எவரும்
என்னைத் தண்டனைக்குட்படுத்தித் தீர்ப்பளிக்
கவில்லை” என்றாள்.
பிறகு இயேசு, “நானும் உனக்குத் தீர்ப்
பளிக்கவில்லை. இப்பொழுது நீ போகலாம்,
ஆனால் மறுபடியும் பாவம் செய்யாதே”
என்றார்.

### இயேசுவே உலகத்தின் ஒளி

12மீண்டும் இயேசு மக்களோடு பேசினார்.
அவர், “நானே உலகத்துக்கு ஒளி. என்னைப்
பின்பற்றி வருகிற எவனும் ஒருபோதும் இரு
ளில் வாழமாட்டான். அவன் வாழ்வைத் தரு
கிற ஒளியைப் பெறுவான்” என்றார்.
13ஆனால் பரிசேயர்கள் இயேசுவிடம், “உன்
னைக் குறித்து நீ பேசும்போது நீ சொல்வதை
உண்மையென்று நீ மாத்திரமே கூறுகிறாய்.
ஆகையால் நீ சொல்லுகின்றவற்றை நாங்கள்
ஒத்துக்கொள்ள முடியாது” என்றனர்.
14அதற்கு இயேசு, “ஆமாம். என்னைப்பற்றி
நானே பேசிக் கொண்டிருக்கிறேன். ஆனால்
நான் சொல்லுகின்றவற்றை மக்கள் நம்ப முடி
யும். ஏனெனில் நான் எங்கேயிருந்து வந்தேன்
என்பது எனக்குத் தெரியும். அதோடு எங்கே
போகிறேன் என்றும் எனக்குத் தெரியும். நான்
உங்களைப் போன்றவன் இல்லை. நான் எங்
கிருந்து வந்தேன் என்றும் எங்கே போகிறேன்
என்றும் உங்களுக்குத் தெரியாது. 15சாதாரண
மாக ஒருவனைப் பார்த்து கணிக்கிற விதத்
திலேயே நீங்கள் என்னைப்பற்றி கணிக்கிறீர்
கள். நான் எவரைப்பற்றியும் கணிப்பதில்லை.
16ஆனால் நான் கணிக்கும்போது என் கணிப்பு
உண்மையுள்ளதாய் இருக்கும். ஏனென்றால்
தீர்ப்பளிக்கும் காலத்தில் நான் தனியாளாய்
இல்லை. என்னை அனுப்பிய என் பிதா
என்னோடு இருக்கிறார். 17இரண்டு சாட்சிகள்
ஒரே உண்மையைச் சொன்னால் உங்கள் சட்
டம் உண்மைதான் என்று ஏற்றுக் கொள்
கிறது. 18நானும் என்னைப் பற்றி சொல்லுகிற
ஒரு சாட்சி, அத்துடன் என்னை அனுப்பிய
என் பிதாவும் எனது இன்னுமொரு சாட்சி”
என்றார்.
19மக்கள் அவரிடம் “உன் பிதா எங்கே
இருக்கிறார்?” என்று கேட்டார்கள். “நீங்கள்
என்னைப் பற்றியும் என் பிதாவைப் பற்றியும்
அறியமாட்டீர்கள். ஆனால் நீங்கள் என்னை
அறிந்துகொண்டால் என் பிதாவையும் அறிந்
துகொள்வீர்கள்” என்று பதிலுரைத்தார்.
20இயேசு தேவாலயத்தில் உபதேசம் செய்யும்
பொழுது இவற்றைச் சொன்னார். எல்லோரும்
பணம் செலுத்துகிற இடத்தில் இயேசு இருந்
தார். ஆனால் எவரும் அவரைக் கைது செய்ய
வில்லை. இயேசுவிற்கு அந்த வேளை இன்
னும் வரவில்லை.

### யூதர்களின் அறியாமை

21மீண்டும் இயேசு மக்களிடம், “நான் உங்க
ளைவிட்டுப் போகிறேன். நீங்கள் என்னைத்
தேடுவீர்கள். நீங்கள் உங்கள் பாவங்களோடு
சாவீர்கள். நான் போகிற இடத்துக்கு உங்க
ளால் வரமுடியாது” என்றார்.
22எனவே யூதர்கள் தங்களுக்குள், “இயேசு
தன்னைத் தானே கொன்று கொள்வாரா?
அதனால்தான் நான் போகிற இடத்துக்கு உங்க
ளால் வர முடியாது என்று கூறினாரா?”
என்று கேட்டுக் கொண்டனர்.
23அந்த யூதர்களைப் பார்த்து இயேசு,
“நீங்கள் கீழே இருந்து வந்தவர்கள். ஆனால்
நான் மேலே இருந்து வந்தவன். நீங்கள் இந்த
உலகத்துக்கு உரியவர்கள். ஆனால் நான் இந்த
உலகத்தைச் சார்ந்தவன் அல்லன். 24நீங்கள்
உங்கள் பாவங்களிலேயே மரிப்பீர்கள் என்று
நான் சொல்லியிருக்கிறேன். ஆம். நானே*
அவர் என்பதை நம்பாவிட்டால் உங்கள்
பாவங்களோடேயே நீங்கள் மரணமடைவீர்
கள்.”
25அதற்கு யூதர்கள், “நீங்கள் யார்?” என்று
கேட்டார்கள்.
இயேசுவோ அவர்களிடம், “நான் ஆரம்பத்
திலேயே உங்களுக்குச் சொல்லியவர்தான்.
26உங்களைப்பற்றிச் சொல்ல என்னிடம்
நிறைய செய்திகள் உள்ளன. நான் உங்களை
நியாயம் தீர்க்கவும் முடியும். என்னை அனுப்
பினவரிடமிருந்து கேட்டவற்றையே நான்
மக்களுக்குச் சொல்லுகிறேன். அவர் உண்
மையைப் பேசுகிறவர்'' என்றார்.
27இயேசு யாரைப்பற்றி பேசிக்கொண்டிருக்
கிறார் என்று யூதர்கள் அறிந்துகொள்ள
முடியாமல் இருந்தனர். இயேசு அவர்களிடம்
பிதாவைப் பற்றி கூறிக் கொண்டிருந்தார்.
28எனவே இயேசு மக்களிடம், “நீங்கள் மனித
குமாரனைக் கொல்லும்போது நான்தான்
என்று அறிந்து கொள்வீர்கள். அத்துடன் நான்
இதுவரை செய்த செயல்களை என் சொந்த
அதிகாரத்தில் செய்யவில்லை என்பதையும்
அறிவீர்கள். பிதா எனக்குச் சொன்னவற்
றையே நான் உங்களுக்குச் சொன்னேன் என்ப
தையும் அறிந்து கொள்வீர்கள். 29என்னை
அனுப்பிய ஒருவர் எப்போதும் என்னோ
டேயே இருக்கிறார். அவருக்கு விருப்பமான
வற்றையே நான் எப்போதும் செய்து கொண்

---

**நானே** யாத்திராகமம் 3:14ல் தேவன் பயன்படுத்தும் பெயர். ஆனால் இதில் ''நான்தான் அவர் (கிறிஸ்து)'' என்ற பொருளும் உள்ளது.

டிருக்கிறேன். எனவே, அவர் என்னைத் தனி
யாக விட்டுவிடவில்லை” என்றார். 30இவ்
வாறு இயேசு சொல்லிக் கொண்டிருந்தபோது
ஏராளமான மக்கள் அவரிடம் விசுவாசம்
வைத்தனர்.

### பாவத்திலிருந்து விடுதலை

31இயேசு தன்மீது நம்பிக்கை வைத்த யூதர்க
ளைப் பார்த்து, “நீங்கள் என் உபதேசத்தைத்
கைக்கொண்டு வந்தால், நீங்கள் உண்மையில்
எனது சீஷர்களாக இருப்பீர்கள். 32பின்னர்
நீங்கள் உண்மையை அறிந்து கொள்வீர்கள்.
அந்த உண்மை உங்களுக்கு விடுதலையைத்
தரும்” என்றார்.

33“நாங்கள் ஆபிரகாமின் மக்கள். நாங்கள்
ஒருபோதும் அடிமைகளாய் இருந்ததில்லை.
ஆகவே நாங்கள் விடுதலை பெறுவோம்
என்று ஏன் சொல்கிறீர்?” என்று யூதர்கள்
கேட்டனர்.

34அதற்குப் பதிலாக, “நான் உங்களுக்கு
உண்மையைக் கூறுகிறேன். பாவம் செய்கிற
ஒவ்வொருவனும் அடிமைதான். பாவமே அவ
னது எஜமானன். 35ஒரு அடிமை எப்பொழு
தும் ஒரு குடும்பத்தில் நிலையாக இருக்கமாட்
டான். குமாரன் என்றென்றும் குடும்பத்தில்
நிலைத்திருக்கிறார். 36எனவே குமாரன் உங்
களை விடுதலை செய்தால் நீங்கள் உண்மை
யான விடுதலையைப் பெறுவீர்கள். 37நீங்கள்
ஆபிரகாமின் பிள்ளைகள் என்று எனக்குத்
தெரிகிறது. ஆனால் நீங்கள் என்னைக் கொல்ல
விரும்புகிறீர்கள். ஏனென்றால் நீங்கள் என்
உபதேசத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. 38என்
பிதா எனக்குக் காட்டியவற்றையே நான்
உங்களுக்குச் சொல்லிக் கொண்டிருக்கிறேன்.
ஆனால் உங்கள் பிதா உங்களுக்குச் சொன்னப
டியே செய்து கொண்டிருக்கிறீர்கள்” என்றார்.

39“எங்கள் பிதா ஆபிரகாம்தான்” என்றனர்
யூதர்கள். இயேசு அவர்களுக்கு விடையாக
“நீங்கள் உண்மையிலேயே ஆபிரகாமின் பிள்
ளைகள் என்றால் அவர் செய்தவற்றையே
நீங்களும் செய்யவேண்டும். 40நான் தேவனிட
மிருந்து கேட்ட உண்மையை உங்களுக்குச்
சொல்லுகிற மனிதன். ஆனால் நீங்கள் என்
னைக் கொல்ல முயலுகிறீர்கள். ஆபிரகாம்
இது போல் எதுவும் செய்யவில்லை. 41ஆகை
யால் நீங்கள் உங்கள் சொந்தப்பிதா செய்த
தையே செய்கிறீர்கள்” என்றார்.

ஆனால் யூதர்கள், “எங்கள் பிதா யாரென்று
தெரிந்துகொள்ள இயலாத குழந்தைகள் அல்ல
நாங்கள். தேவனே எங்கள் பிதா. எங்களுக்கு
ரிய ஒரே பிதாவும் அவரே” என்றனர்.

42இயேசு அவர்களிடம், “தேவன் தான் உங்
களது உண்மையான பிதா என்றால் நீங்கள்
என்மீது அன்பு செலுத்தியிருப்பீர்கள். நான்
தேவனிடமிருந்து வந்தேன். இப்பொழுது
இங்கே இருக்கிறேன். நான் என் சொந்த அதி
காரத்தின் பேரில் வரவில்லை. தேவன்
என்னை அனுப்பினார். 43நான் சொல்லுகிற
வற்றையெல்லாம் உங்களால் புரிந்து கொள்ள
முடியாது. ஏனென்றால் என் உபதேசத்தை
நீங்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. 44பிசாசே
உங்கள் பிதாவாயிருக்கிறான். நீங்கள் அவ
னுக்கு உரியவர்கள். அவனுக்கு விருப்பமான
வற்றையே நீங்கள் செய்ய விரும்புகிறீர்கள்.
தொடக்கம் முதலே பிசாசானவன் கொலைகார
னாக இருக்கிறான். அவன் உண்மைக்கு
எதிரானவன். அவனிடம் உண்மை இல்லை.
அவன் அவனால் சொல்லப்படுகிற பொய்
யைப் போன்றவன். அவன் ஒரு பொய்யன்.
அவன் பொய்களின் பிதா. 45நான் உண்மை
யைப் பேசுகிறேன். அதனால்தான் நீங்கள்
என்னை நம்புவதில்லை. 46உங்களில் எவரா
வது ஒருவர் நான் பாவம் செய்தவன் என்று
நிரூபிக்க இயலுமா? நான் சொல்வது உண்மை
யாக இருக்கும்போது என்னை ஏன் நம்பாமல்
இருக்கிறீர்கள்? 47தேவனைச் சேர்ந்த எவனும்
தேவனின் வார்த்தைகளை ஏற்றுக் கொள்
கிறான். ஆனால் நீங்கள் தேவனின் வார்த்தை
களை ஏற்றுக்கொள்வதில்லை. ஏனென்றால்
நீங்கள் தேவனைச் சார்ந்தவர்கள் இல்லை”
என்றார்.

### இயேசுவும் – ஆபிரகாமும்

48யூதர்கள் இயேசுவிடம், “நாங்கள் உன்னை
சமாரியன் என்று சொல்கிறோம். பிசாசு உன்
னிடம் புகுந்ததால் நீ உளறுகிறாய் என்றும்
சொல்கிறோம். நாங்கள் சொல்வது சரி
தானே?” என்று கேட்டனர். 49“என்னிடம்
எந்தப் பிசாசும் இல்லை. நான் என் பிதாவுக்கு
மகிமை உண்டாக்குகிறேன். ஆனால் நீங்கள்
எனக்கு மகிமையை அளிப்பதில்லை. 50நான்
எனக்கு மகிமையைச் சேர்த்துக் கொள்ள
முயன்று கொண்டிருக்கவில்லை. இந்த மகி
மைக்குரியவர் ஒருவர் இருக்கிறார். அவரே
நீதிபதி. 51நான் உங்களுக்கு உண்மையைக்
கூறுகிறேன். எவனொருவன் என் உபதேசத்
துக்கு கீழ்ப்படிகிறானோ அவன் ஒருபோதும்
இறந்து போவதில்லை” என்றார் இயேசு.

52யூதர்களோ இயேசுவிடம், “உனக்குப்
பிசாசு பிடித்திருக்கிறது என்பது இப்பொழுது
உறுதியாயிற்று. ஆபிரகாமும் தீர்க்கதரிசிக
ளும் கூட இறந்துபோய்விட்டார்கள். ஆனால்
நீயோ, ‘என் உபதேசத்துக்குக் கீழ்ப்படிகிற
வன் ஒருபோதும் இறந்து போவதில்லை’
என்று கூறுகிறாய். 53எங்கள் பிதா ஆபிரகா
மைவிடப் பெரியவன் என்று நீ உன்னை
நினைத்துக் கொள்கிறாயா? ஆபிரகாம் இறந்து
போனார். தீர்க்கதரிசிகளும் இறந்துபோயினர்.
உன்னை நீ யாரென்று நினைத்துக் கொண்டி
ருக்கிறாய்?” எனக் கேட்டனர்.

54இயேசு அவர்களிடம், “எனக்கு நானே
மகிமை அளித்துக்கொண்டால் அது வீணாகி
விடும். என் பிதா எனக்கு மகிமை அளித்துக்
கொண்டிருக்கிறார். அவர் உங்கள் தேவன்

என்று நீங்கள் சொல்லிக் கொள்கிறீர்கள்.
55ஆனால் அவரை நீங்கள் உண்மையில்
அறிந்து கொள்ளவில்லை. நான் அவரை அறி
கிறேன். நான் அவரை அறியேன் என்று
சொன்னால், நான் உங்களைப் போன்றே ஒரு
பொய்யனாக இருப்பேன். ஆனால் அவரை
நான் அறிவேன். அவர் சொன்னவற்றுக்குக்
கீழ்ப்படிகிறேன். 56உங்கள் தந்தையாகிய ஆபி
ரகாம் நான் வந்த நாளைக் காண்பேன் என்று
மகிழ்ச்சியடைந்தார். அவர் அந்த நாளைக்
கண்டு மகிழ்ச்சியும் அடைந்தார்" என்றார்.
57யூதர்கள் இயேசுவிடம், "என்ன சொன்னாய்?
நீ ஒருபோதும் ஆபிரகாமைப் பார்த்திருக்க
முடியாது. உனக்கு இன்னும் ஐம்பது வயது
கூட ஆகவில்லையே!" என்று கேட்டனர்.

58"நான் உங்களுக்கு உண்மையைக் கூறுகி
றேன். ஆபிரகாம் பிறப்பதற்கு முன்பே நான்
இருக்கிறேன்" என்றார் இயேசு. 59இயேசு
இதைச் சொன்னதும் மக்கள் அவர் மீதுக்
கல் எறிவதற்கு கற்களைப் பொறுக்கினார்கள்.
ஆனால் இயேசு மறைந்து அந்த தேவால
யத்தை விட்டு விலகிப்போனார்.

### பிறவி குருடனை குணமாக்குதல்

9 இயேசு நடந்துகொண்டிருக்கும்போது, ஒரு
குருடனைப் பார்த்தார். அவன் பிறந்தது
முதல் குருடனாக இருந்தான். 2இயேசுவின்
சீஷர்கள் அவரிடம், "போதகரே! இந்த மனிதன்
குருடனாகப் பிறந்தான். யார் செய்த பாவம்
இவனைக் குருடனாக்கியது? அது இவனது
பாவமா? அல்லது இவனது பெற்றோர் செய்த
பாவமா?" என்று கேட்டனர்.

3இயேசு அவர்களிடம், "இவனது பாவமோ,
இவனது பெற்றோரின் பாவமோ இவனைக்
குருடன் ஆக்கவில்லை. நான் இவனைக்
குணப்படுத்தும்போது தேவனின் வல்லமை
இவன் மூலமாக வெளிப்படும்படியாக இவன்
குருடனாகப் பிறந்தான். 4பகலாக இருக்கும்
போது மட்டும்தான் என்னை அனுப்பினவரு
டைய செயல்களை நாம் செய்யவேண்டும்.
இரவு வந்து கொண்டிருக்கிறது. எவராலும்
இரவில் வேலை செய்யமுடியாது. 5நான் உல
கத்தில் இருக்கும் வரை உலகத்துக்கு நானே
ஒளியாய் இருக்கிறேன்" என்றார்.

6இயேசு இவற்றைச் சொன்ன பிறகு, அவர்
புழுதியில் துப்பினார். அதில் சேறு உண்டாக்
கினார். அதனை அவனது கண்களின்மேல்
பூசினார். 7இயேசு அவனிடம், "போ, சீலோ
வாம் குளத்தில் (சீலோவாம் என்றால் 'அனுப்
பப்பட்டவன்' என்று பொருள்) கழுவு" என்
றார். அதன்படியே அந்த மனிதன் குளத்திற்குச்
சென்றான். அவன் கழுவிவிட்டுத் திரும்பி
வந்தான். இப்பொழுது பார்வை பெற்றிருந்
தான்.

8இவன் இதற்கு முன்னால் பிச்சை எடுத்துக்
கொண்டிருந்ததைப் பலர் பார்த்திருந்தனர்.
அவர்களும் அவனது சுற்றத்தார்களும்,
"பாருங்கள்! இவன் அங்கே உட்கார்ந்து எப்
பொழுதும் பிச்சை எடுத்துக்கொண்டிருந்த
அதே மனிதனல்லவா?" என்றனர்.

9இன்னும் சிலர், "ஆம். இவன் தான்
அவன்", என்றனர். ஆனால் இன்னும் சிலர்,
"இல்லை. இவன் அவன் இல்லை. இவன்
அவனைப் போன்றே இருக்கிறான்" என்றனர்.

அப்போது அவன் தானாகவே, "முன்பு
குருட்டுப் பிச்சைக்காரனாக இருந்தவன் நான்
தான்" என்றான்.

10"என்ன நடந்தது? நீ எப்படிப் பார்வை
பெற்றாய்?" என்று கேட்டனர்.

11அதற்கு அவன், "இயேசு என்று மக்களால்
அழைக்கப்படுகிற அந்த மனிதர் ஏதோ சேறு
உண்டாக்கினார். அதனை என் கண்களின்
மீது தடவினார். பிறகு அவர் என்னிடம் சீலோ
வாம் குளத்தில் போய் கழுவச் சொன்னார்.
ஆகையால் நான் போய் கழுவினேன். பின்னர்
என்னால் பார்க்க முடிந்தது" என்றான்.

12அந்த மனிதனிடம் மக்கள், "எங்கே அந்த
மனிதர்?" என்று கேட்டனர். அதற்கு அந்த
மனிதன் "எனக்குத் தெரியாது" என்று கூறி
னான்.

### இயேசு குணமாக்கிய மனிதனிடம் யூதர்களின் விசாரணை

13பிறகு மக்கள் பரிசேயரிடம் அந்த மனி
தனை அழைத்துச் சென்றனர். குருடாயிருந்த
அந்த மனிதன் இவன்தான். 14இயேசு சேறு
உண்டாக்கி இவனது கண்களைக் குணப்
படுத்தினார். அவர் இதனை ஓய்வு நாளில்
செய்திருக்கிறார். 15ஆகையால் இப்பொழுது
பரிசேயர்கள் அந்த மனிதனிடம், "எப்படி நீ
பார்வை பெற்றாய்?" என மீண்டும் கேட்டனர்.
அதற்கு அந்த மனிதன், "அவர் என் கண்
களின் மேல் சேற்றைப் பூசினார். நான்
கழுவினேன். இப்பொழுது என்னால் பார்க்க
முடிகிறது" என்றான்.

16சில பரிசேயர்கள், "அந்த மனிதன் ஓய்வு
நாள் பற்றிய சட்டங்களுக்குக் கீழ்ப்படிய
வில்லை. எனவே அவன் தேவனிடமிருந்து
வரவில்லை" என்றனர்.

ஆனால் சிலரோ, "பாவம் செய்கிற எந்த
மனிதராலும் இதுபோன்ற அற்புதங்களைச்
செய்ய முடியாதே" என்றனர். யூதர்கள் தங்க
ளுக்குள் ஒத்துப்போக வில்லை.

17யூதர்கள் குருடனாயிருந்த அந்த மனிதனி
டம் மீண்டும் கேட்டார்கள். "இயேசு உன்னைக்
குணமாக்கினான். உன்னால் பார்க்க முடிகி
றது. அவனைப் பற்றி நீ என்ன சொல்கிறாய்?"

அந்த மனிதன் "அவர் ஒரு தீர்க்கதரிசி"
என்றான்.

18அந்த மனிதன் குருடனாயிருந்து பார்வை
பெற்றது குறித்து யூதர்களுக்கு இன்னும் முழு
மையான நம்பிக்கை ஏற்படவில்லை. எனவே
அந்த மனிதனின் பெற்றோர்களுக்கு ஆளனுப்

பினர். 19யூதர்கள் அவனது பெற்றோர்களிடம், "இவன் உங்கள் மகன்தானே. அவன் குருடனாகவே பிறந்தான் என்று சொன்னீர்கள். இப்பொழுது அவனால் எவ்வாறு பார்க்கமுடிகிறது?" என்று கேட்டனர்.

20அதற்கு அவனது பெற்றோர்கள், "இவன் எங்கள் மகன் என்பது எங்களுக்குத் தெரியும். அவன் குருடனாகப் பிறந்தான் என்பதும் தெரியும். 21அவன் இப்போது எப்படிப் பார்க்கிறான் என்றும் கண்களைக் குணமாக்கியது யார் என்றும் எங்களுக்குத் தெரியாது. அவனைக் கேளுங்கள். அவனே பதில் சொல்லுகிற வகையில் வளர்ந்திருக்கிறான்" என்றனர். 22ஏனென்றால் அவர்களுக்கு யூதத் தலைவர்களைப் பற்றிய அச்சம் இருந்தது. இயேசுதான் கிறிஸ்து என்று சொல்கிற எவரொருவரையும் தண்டித்துவிட வேண்டும் என்று யூதத்தலைவர்கள் முடிவு செய்திருந்தனர். அவர்கள் அம்மக்களை வழிபாட்டு இடத்திலிருந்து விலக்கியும் வைப்பர். 23எனவே அவனது பெற்றோர்கள், "இவன் வளர்ந்து நிற்கிறவன். அவனையே கேளுங்கள்" என்றனர்.

24முன்பு குருடனாயிருந்த அந்த மனிதனை மீண்டும் அழைத்தார்கள். யூதத் தலைவர்கள் அவனிடம், "நீ உண்மையைச் சொல்லி தேவனை மகிமைப்படுத்து. இந்த மனிதன் ஒரு பாவி என்று நாங்கள் அறிந்திருக்கிறோம்" என்றனர்.

25"அவர் பாவியென்று எனக்குத் தெரியாது. ஆனால் எனக்கு ஒன்று தெரியும். நான் முன்பு குருடனாய் இருந்தேன். இப்போது என்னால் பார்க்க முடிகிறது" என்று அந்த மனிதன் சொன்னான்.

26அதற்கு யூதத்தலைவர்கள், "உனக்கு அவன் என்ன செய்தான். எப்படி அவன் உன் கண்களைக் குணப்படுத்தினான்?" எனக் கேட்டனர்.

27"நான் ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன். ஆனால் நான் சொல்வதை நீங்கள் கேட்பதில்லை. ஏன் மீண்டும் அதைக் கேட்க விரும்புகிறீர்கள்? அவரது சீஷராக விரும்புகிறீர்களா?" என்று கேட்டான்.

28யூதத்தலைவர்கள் கோபம் கொண்டனர். அவனைக் கெட்ட வார்த்தைகளால் திட்டினர். "நீ தான் இயேசுவின் சீஷன். நாங்கள் மோசேயின் சீஷர்கள். 29தேவன் மோசேயிடம் பேசினார் என்று எங்களுக்குத் தெரியும். ஆனால் இந்த மனிதன் எங்கிருந்து வந்தான் என்பது எங்களுக்குத் தெரியாது" என்றனர்.

30அதற்கு அம்மனிதன் "இது மிகவும் ஆச்சரியமான ஒன்று. இயேசு எங்கிருந்து வந்தார் என்பது உங்களுக்குத் தெரியாது. ஆனால் அவர் என் கண்களைக் குணப்படுத்தினார். 31பாவிகளுக்குத் தேவன் செவிகொடுப்பது இல்லையென்று அறிந்திருக்கிறோம். பக்தியும் கீழ்ப்படிதலும் உள்ள ஒருவனுக்கு தேவன் செவிகொடுப்பார். 32பிறவி குருட்டு மனிதனைக் குணப்படுத்திய அற்புதம் முதன் முறையாக இப்போதுதான் நிகழ்ந்துள்ளது. 33இயேசு தேவனிடமிருந்தே வந்திருக்க வேண்டும். அவர் தேவனிடமிருந்து வந்திராவிட்டால் அவரால் இதுபோன்ற செயல்களைச் செய்ய இயலாது" என்றான்.

34அதற்கு யூதத்தலைவர்கள், "நீ முழுவதும் பாவத்தில் பிறந்திருக்கிறாய். நீ எங்களுக்கு உபதேசிக்க முயற்சிக்கிறாயா?" என்று கேட்டனர். பின்னர் அவனை வெளியே தள்ளினர்.

## ஆன்மீகக் குருடு

35அவர்கள் அவனை வெளியேற்றியதை இயேசு அறிந்தார். அவர் அவனிடம் வந்து, "நீ மனித குமாரனிடத்தில் நம்பிக்கை உடையவனாக இருக்கிறாயா?" என்று கேட்டார்.

36அதற்கு அவன், "அவரை நான் நம்பும்படியாக அந்த மனிதகுமாரன் யார் என்று எனக்குச் சொல்லுங்கள்" என்றான்.

37"நீ ஏறகெனவே அவரைப் பார்த்திருக்கிறாய். இப்போது உன்னோடு பேசிக் கொண்டிருப்பவர் தான் அந்த மனித குமாரன்" என்றார்.

38உடனே அவன், "ஆண்டவரே! நான் நம்புகிறேன்" என்றான். இயேசுவை அவன் குனிந்து வணங்கினான்.

39"இந்த உலகம் நியாயம் தீர்க்கப்படும்படியாக நான் இந்த உலகத்துக்கு வந்தேன். குருடர்கள் பார்வை பெறும்படியாக நான் வந்தேன். காண்கிறவர்கள் எனத் தம்மை நினைத்துக் கொள்கிறவர்கள் குருடராகும்படியாக நான் வந்தேன்" என்றார் இயேசு.

40இயேசுவுடன் சில பரிசேயர்களும் இருந்தனர். அவர்கள் இயேசு சொல்வதைக் கேட்டனர். "என்ன? நாங்களும் கூட குருடர்கள் என்றா கூறுகின்றாய்?" எனக் கேட்டனர்.

41இயேசு அவர்களுக்கு, "நீங்கள் உண்மையிலேயே குருடராய் (புரிந்து கொள்ளாமல்) இருந்தால் நீங்கள் பாவம் செய்த குற்றவாளிகள் அல்ல. ஆனால் உங்களுக்குப் பார்வை (என்ன செய்கிறோம் என்ற ஞானம்) உண்டு என நீங்கள் சொல்வதால், நீங்கள் குற்றவாளிகளே" என்றார்.

## நல்ல மேய்ப்பனும் ஆடுகளும்

10 உண்மையாகவே நான் உங்களுக்குக் கூறுகிறேன். ஒருவன் ஆட்டுத்தொழுவத்திற்குள் வாசல் வழியாகவே நுழைய வேண்டும். வேறு வழியாக நுழைந்தால், அவன் ஒரு திருடன். அவன் ஆடுகளைத் திருடவே முயற்சி செய்வான். 2ஆனால் மேய்ப்பன் வாசல் வழியாக நுழைகிறவன். அவனே மேய்ப்பன். 3வாசலைக் காக்கிற காவல்காரன் மேய்ப்பனுக்காகக் கதவைத்திறந்து விடுவான். ஆடுகள் மேய்ப்பனின் குரலுக்கு செவி கொடுக்கும். மேய்ப்பன் தன் சொந்த ஆடுகளை அவற்றின் பெயரைச் சொல்லி அழைப்பான்.

அவன் அவற்றை வெளியே நடத்திக்கொண்டு
போவான். 4மேய்ப்பன் தனது ஆடுகளையெல்
லாம் வெளியே கொண்டுவந்த பின் அவற்
றுக்கு முன்னால் நடந்து அவற்றை நடத்திக்
கொண்டு போகிறான். ஆடுகள் அவனது குரல்
குறிப்புகளை அடையாளம் கண்டபடியால்,
அவை அவன் பின்னே செல்கின்றன. 5ஆனால்
ஆடுகள் தாம் அறியாதவன் பின்னால் செல்வ
தில்லை. அவனை விட்டு அவை விலகி
ஓடும். ஏனென்றால் அவற்றிற்கு அவனது குரல்
புரியாது” என்று 6இயேசு மக்களிடம் இந்த
உவமையைச் சொன்னார். இந்த உவமையின்
உட்பொருளை அந்த மக்களால் அறிந்து
கொள்ள முடியவில்லை.

## இயேசுவே நல்ல மேய்ப்பர்

7எனவே இயேசு மேலும் சொன்னார்.
“நான் உங்களுக்கு உண்மையைக் கூறுகி
றேன். ஆடுகளுக்கு நானே வாசலாக இருக்கி
றேன். 8எனக்கு முன்னால் வந்தவர்கள் அனை
வரும் கள்ளரும், கொள்ளைக்காரர்களுமாய்
இருந்தார்கள். ஆடுகள் அவர்களைக் கவனிக்க
வில்லை. 9நானே வாசல். என் மூலமாக நுழை
கிறவனே மீட்கப்படுவான். அவன் உள்ளேயும்
வெளியேயும் போய் மேய்ச்சலைக் கண்டடை
வான். 10திருடன் திருடுவதற்காகவே வருகி
றான். அவன் ஆடுகளைக் கொல்லவும் அழிக்க
வுமே செய்வான். ஆனால் நானோ ஜீவனைக்
கொடுக்க வந்துள்ளேன். அந்த ஜீவன் பூரண
மும், நன்மையுமானது.

11“நானே நல்ல மேய்ப்பன். நல்ல மேய்ப்பன்
தனது ஆடுகளுக்காக ஜீவனைக் கொடுப்பான்.
12கூலிக்காக ஆடுகளைக் கவனிக்கிறவன்
மேய்ப்பனை விட வித்தியாசமானவன். கூலிக்
காரனுக்கு ஆடுகள் சொந்தமானவை அல்ல.
ஆகையால் ஓநாய் வருவதைக் கண்டால்
கூலிக்காரன் ஆடுகளை விட்டு விட்டு ஓடிப்
போவான். பிறகு ஓநாய்கள் ஆடுகளை கிழித்து
கொன்று சிதறடிக்கும். 13அந்த மனிதன் ஓடி
விடுகிறான். ஏனென்றால் அவன் கூலிக்காரன்.
அவனுக்கு ஆடுகளைப் பற்றிய அக்கறை
இல்லை.

14-15“ஆடுகளைப் பற்றி (மக்களைப் பற்றி)
அக்கறை கொண்ட நல்ல மேய்ப்பன் நான்.
என் பிதா என்னை அறிந்திருப்பது போலவே
நானும் என் ஆடுகளை அறிந்திருக்கிறேன்.
நான் என் பிதாவை அறிந்திருப்பதுபோலவே
என் ஆடுகளும் என்னை அறிந்திருக்கின்றன.
நான் என் ஆடுகளுக்காக என் ஜீவனைக்
கொடுக்கிறேன்.

16எனக்கு வேறு ஆடுகளும் உள்ளன.
அவை இந்த மந்தையில் இல்லை. நான் அவற்
றையும் அழைத்து வரவேண்டும். அவை என்
குரலைக் கவனிக்கும். வருங்காலத்தில் எல்
லாம் ஒரே மந்தையாகவும் ஒரே மேய்ப்பனாக
வும் இருக்கும். 17என் பிதா என்னை நேசிக்
கிறார். ஏனென்றால் நான் என் ஜீவனைக்
கொடுக்கிறேன். நான் என் ஜீவனைக் கொடுப்
பதால் அதனை மீண்டும் பெறுவேன். 18என்னி
டமிருந்து என் ஜீவனை எவரும் பறிக்க
முடியாது. நானே என் ஜீவனைத் தாராளமாய்
கொடுக்கிறேன். அதற்கான உரிமை எனக்
குண்டு. அதுபோல் அதனைத் திரும்பப் பெறு
கிற உரிமையும் எனக்குண்டு. இதைத்தான்
பிதா எனக்குக் கட்டளையிட்டார்” என்றார்.

19இயேசு சொன்ன இக்காரியங்களினால்
மீண்டும் யூதர்கள் பிரிந்துபோயினர். 20பல
யூதர்கள் “பிசாசு அவனுக்குள் புகுந்து கொண்
டது. அவன் பைத்தியமாக உளறுகிறான்.
அவன் கூறுவதை ஏன் கேட்கிறீர்கள்?” என்ற
னர்.

21அதற்குப் பதிலாக வேறு சில யூதர்கள்,
“பிசாசு பிடித்து உளறுகிறவனால் இது
போன்ற உண்மைகளைப் பேசமுடியுமா? குரு
டனின் கண்களைப் பிசாசு குணமடையச் செய்
யுமா? செய்யாது” என்றனர்.

## யூதர்கள் இயேசுவுக்கு எதிராகுதல்

22அது மழைக் காலமாயிருந்தது. எருசலே
மில் தேவாலயப் பிரதிஷ்டை பண்டிகை* வந்
தது. 23இயேசு தேவாலயத்தில் சாலமோனின்
மண்டபத்திலே* இருந்தார். 24யூதர்கள் அவ
ரைச் சூழ்ந்து கொண்டனர். “இன்னும் எவ்வ
ளவு காலம் உங்களைப் பற்றிப் புதிராக
வைத்திருப்பீர்கள். நீங்கள் கிறிஸ்துவானால்
எங்களுக்குத் தெளிவாகச் சொல்லும்” என்று
கேட்டனர்.

25“நான் ஏற்கெனவே கூறியிருக்கிறேன்.
ஆனால் நீங்கள் நம்பவில்லை. நான் என்
பிதாவின் பேரில் அற்புதங்களைச் செய்கி
றேன். அந்த அற்புதங்கள் நான் யாரென்று
உங்களுக்கு காட்டுகின்றன. 26ஆனால் நீங்கள்
நம்புகிறதில்லை. ஏனென்றால் நீங்கள் எனது
ஆடுகள் அல்ல. 27எனது ஆடுகள் எனது
குரலைக் கேட்கும். நான் அவற்றை அறிவேன்.
அவை என்னைப் பின்தொடரும். 28நான் என்
ஆடுகளுக்கு நித்திய ஜீவனைக் கொடுக்கிறேன்.
அவைகள் இறந்து போவதில்லை. அவை
களை என் கையிலிருந்து எவரும் பறித்துக்
கொள்ளமுடியாது. 29என் பிதா எனக்கு ஆடு
களைத் தந்தார். அவர் எல்லோரையும் விட
பெரியவர். எவரும் ஆடுகளை என் பிதாவின்
கைகளில் இருந்து திருடிக்கொள்ள முடியாது.
30நானும் பிதாவும் ஒருவர் தான்” என்றார்,
இயேசு.

31மீண்டும் யூதர்கள் அவரைக் கொல்வதற்
காகக் கற்களை எடுத்துக் கொண்டனர்.
32ஆனால் இயேசு அவர்களிடம், “நான் என்
பிதா மூலமாகப் பல நற்செயல்களைச் செய்

---

**பிரதிஷ்டை பண்டிகை** டிசம்பர் மாதத்தில் யூதர்கள் கொண்டாடும் விசேஷமான ஒரு வாரம்.

**சாலமோனின் மண்டபத்திலே** இது ஆலயத்தின் கிழக்குப் பகுதியில் உள்ள ஒரு இடம். இது கூரையால் மூடப்பட்டிருக்கும்.

தேன். அந்தச் செயல்களை நீங்களும் பார்த்தீர்
கள். அவற்றில் எந்த நல்ல செயலுக்காக
என்னைக் கல்லெறிய விரும்புகிறீர்கள்? ”
எனக் கேட்டார்.
33அதற்கு அவர்கள் “நீ செய்த எந்த நல்ல
செயல்களுக்காகவும் நாங்கள் உன்னைக்
கொல்லவில்லை. ஆனால் நீ சொல்லுகிறவை
எல்லாம் தேவனுக்கு எதிராக இருக்கின்றன.
நீ ஒரு மனிதன். ஆனால் நீ தேவன் என்று
கூறுகிறாய். அதற்காகத் தான் உன்னைக் கல்
லால் எறிந்து கொல்லப் பார்க்கிறோம்” என்ற
னர்.
34“தேவர்களாயிருக்கிறீர்கள், என்று நான்
சொன்னேன்”* என்பதாய் உங்கள் சட்டத்தில்
எழுதியிருக்கிறது. 35தேவனின் செய்தியைப்
பெற்றுக்கொண்ட மக்களை தேவர்கள் என்று
சொல்லலாம் என பரிசுத்த வேதவாக்கி
யங்கள் கூறுகின்றன வேதவாக்கியங்கள் எப்
போதும் உண்மையானவை. 36ஆகவே, ‘நான்
தேவனின் குமாரன்’ என்று கூறியதை, தேவ
னுக்கு எதிராகப் பேசுவது என்று நீங்கள்
ஏன் கூறுகிறீர்கள்? தேவனால் தேர்ந்தெடுக்கப்
பட்டு இந்த உலகத்துக்கு அனுப்பப்பட்டவன்
நான்தான். 37என்னுடைய பிதா செய்தவற்றை
நான் செய்யாவிட்டால் நீங்கள் என்னை நம்ப
வேண்டியதில்லை. 38ஆனால் எனது பிதா
செய்தவற்றை நானும் செய்வேனானால் நீங்
கள் என்னை நம்பித்தான் ஆகவேண்டும். நீங்
கள் என்னை நம்புவதில்லையானாலும் நான்
செய்கின்றவற்றை நம்பித்தான் ஆகவேண்டும்.
நான் பிதாவிடமும் பிதா என்னிடமும் இருக்கி
றார் என்பதை நீங்கள் அறிந்துகொள்ள
வேண்டும்” என்றார், இயேசு.
39யூதர்கள் இயேசுவைப் பிடிக்க மீண்டும்
முயன்றார்கள். ஆனால் இயேசு அவர்களிட
மிருந்து தப்பித்துக் கொண்டார்.
40பிறகு இயேசு யோர்தான் நதியைக் கடந்து
திரும்பிப் போனார். யோவான் முன்பு ஞான
ஸ்நானம் கொடுத்த இடத்துக்குப் போனார்.
அங்கே அவர் தங்கினார். 41அவரிடம் பலர்
வந்தனர். “யோவான் எவ்வித அற்புதமும்
செய்யவில்லை. ஆனால் இயேசுவைப்பற்றி
அவன் சொன்னவை எல்லாம் உண்மையாய்
இருக்கிறது” என்றனர். 42அங்கே அநேக மக்
கள் இயேசுவிடம் நம்பிக்கை வைத்தனர்.

## லாசருவின் இறப்பு

11 லாசரு என்ற பெயருள்ள ஒரு மனிதன்
நோயுற்றிருந்தான். அவன் பெத்தானியா
என்ற நகரத்தில் வாழ்ந்து வந்தான். இந்நகரத்
தில்தான் மரியாளும் அவளது சகோதரி
மார்த்தாளும் வாழ்ந்தனர். 2(இந்த மரியாள்தான்
பின்பு இயேசுவிற்கு வாசனைத் தைலம் பூசி
தன் கூந்தலால் அவரது கால்களைத் துடைத்
தவள்) மரியாளின் சகோதரன்தான் லாசரு.
அவன் இப்போது நோயுற்றிருந்தான். 3ஆகை
யால் மரியாளும் மார்த்தாளும் இயேசுவிடம்
செய்தி அனுப்பி “ஆண்டவரே, உங்கள் அன்
பான நண்பன் லாசரு நோயுற்றிருக்கிறான்”
என்று சொன்னார்கள்.
4இயேசு இதனைக் கேட்டு “நோயின் முடிவு
மரணம் அன்று. இந்த நோய் தேவனை
மகிமைப்படுத்துவதற்காக ஏற்பட்டது. இது,
தேவனின் குமாரனுக்குப் புகழைக் கொண்டு
வருவதற்காகவே உண்டானது” என்றார்.
5(மார்த்தாள், மரியாள், லாசரு ஆகிய மூவரை
யும் இயேசு நேசித்து வந்தார்) 6இயேசு லாசரு
வின் நோயைப்பற்றி அறிந்தபோது மேலும்
இரண்டு நாட்கள் ஏற்கெனவே இருந்த இடத்
திலேயே தங்கினார். 7பிறகு இயேசு தன் சீஷர்க
ளிடம் “நாம் மறுபடியும் யூதேயாவுக்குத்
திரும்பிப் போவோம்” என்றார்.
8அவரது சீஷர்கள், “ஆண்டவரே, யூதேயா
வில் உள்ள யூதர்கள் உம்மைக் கல்லெறிந்து
கொல்ல முயற்சித்தார்கள். அது நடந்தது சமீப
காலத்தில்தான். எனவே, இப்பொழுது அங்கே
திரும்பிப் போக வேண்டுமா?” என்று கேட்
டனர். 9இயேசுவோ, “பகலில் பனிரெண்டு
மணி நேரம் வெளிச்சம் இருக்கும். சரிதானே.
ஒருவன் பகலில் நடந்தால், அவன் தடுமாறி
விழ மாட்டான். ஏனென்றால், அவனால்
உலகின் வெளிச்சத்தைப் பார்க்க முடியும்.
10ஆனால் ஒருவன் இரவிலே நடந்தால் அவன்
தடுமாறுவான். ஏனென்றால் அவனுக்கு
உதவி செய்ய வெளிச்சம் இல்லை” என்றார்.
11அவர் மேலும், “நமது நண்பன் லாசரு
இப்பொழுது தூங்கிக் கொண்டிருக்கிறான்.
ஆனால் நான் அவனை எழுப்ப போகிறேன்”
என்றார்.
12அவரது சீஷர்களோ, “ஆண்டவரே,
அவன் தூங்கிக்கொண்டிருந்தால் நிச்சயம்
குணமாவான்” என்றார்கள்.
13லாசரு இறந்து போனான் என்பதைக்
குறித்தே இயேசு அவ்வாறு சொன்னார்.
ஆனால் அவரது சீஷர்களோ லாசரு உண்
மையில் தூங்குவதாக நினைத்துக் கொண்
டனர். 14பிறகு இயேசு தெளிவாக, “லாசரு
இறந்து போனான். 15அங்கே அப்பொழுது
நான் இல்லை என்பதால் நான் மகிழ்ச்சியடை
கிறேன். இப்பொழுது என்னை நீங்கள் நம்பு
வீர்கள். அதனால் தான் மகிழ்கிறேன். நாம்
அவனிடம் போவோம்” என்றார்.
16பிறகு தோமா என்று அழைக்கப்படும்
சீஷன், ஏனைய சீஷர்களைப் பார்த்து, “நாமும்
அவரோடு போவோம். யூதேயாவில் இயேசு
வோடு நாமும் சாவோம்” என்றான்.

## பெத்தானியாவில் இயேசு

17இயேசு பெத்தானியாவுக்கு வந்தார்.
அங்கு வந்ததும் லாசரு இறந்துபோனதாகவும்
அவன் கல்லறையில் வைக்கப்பட்டு நான்கு
நாட்கள் ஆனதாகவும் அறிந்தார்.

---

**தேவர் ... சொன்னேன்** *சங்கீதம் 82:6*

[18]எருசலேமிலிருந்து இரண்டு மைல் தூரத்
தில் பெத்தானியா உள்ளது. [19]யூதர்கள் பலர்
மார்த்தாளிடமும் மரியாளிடமும் வந்திருந்
தனர். அவர்களின் சகோதரன் லாசருவின்
மரணம் குறித்து துக்கம் விசாரிக்க வந்தனர்.
[20]இயேசு வந்துகொண்டிருப்பதாக மார்த்
தாள் கேள்விப்பட்டாள். அவரை வரவேற்க
அவள் போனாள். ஆனால் மரியாள் வீட்
டிலேயே தங்கிக் கொண்டாள். [21]மார்த்தாள்
இயேசுவிடம், "ஆண்டவரே, நீர் இங்கே இருந்
திருந்தால் என் சகோதரன் இறந்திருக்க மாட்
டான். [22]ஆனால் இப்பொழுதுகூட நீங்கள் கேட்
பவற்றை தேவன் உங்களுக்குத் தருவார்"
என்றாள்.
[23]இயேசுவோ, "உன் சகோதரன் எழுவான்,
மீண்டும் உயிர்வாழ்வான்" என்றார்.
[24]மார்த்தாளோ, "உயிர்த்தெழுதல் நடைபெ
றும் கடைசிநாளில் அவன் மீண்டும் எழுந்து
உயிர்வாழ்வான் என்று எனக்குத் தெரியும்"
என்றாள்.
[25]இயேசு அவளிடம், "நானே உயிர்த்தெழு
தலும் ஜீவனுமாய் இருக்கிறேன். என்னில்
நம்பிக்கை வைக்கிற எவனும் தான் இறந்த
பிறகும் எழுந்து வாழ்வு பெறுவான். [26]என்
னில் வாழ்ந்து நம்பிக்கை வைக்கிற எவனும்
உண்மையிலேயே இறப்பதில்லை. மார்த்
தாளே, இதை நீ நம்புகிறாயா?" எனக் கேட்டார்.
[27]"ஆமாம், ஆண்டவரே. நீர் தான் கிறிஸ்து
என்று நம்புகிறேன். நீர் தான் தேவனின்
குமாரன். நீரே உலகத்திற்கு வரவிருந்தவர்"
என்றாள் மார்த்தாள்.

### இயேசு அழுதல்

[28]மார்த்தாள் இவ்வாறு சொன்ன பிறகு
அவள் தன் சகோதரி மரியாளிடம் திரும்பிச்
சென்றாள். அவள் தனியாக அவளிடம்
பேசினாள். "இயேசு இங்கே இருக்கிறார். அவர்
உன்னை அழைத்தார்" என்றாள் மார்த்தாள்.
[29]இதைக் கேட்டதும் மரியாள் எழுந்து இயேசு
விடம் விரைவாகப் போனாள். [30]இயேசு இன்
னும் அக்கிராமத்துக்கு வந்து சேரவில்லை.
மார்த்தாள் சந்தித்த இடத்திலேயே அவர் இருந்
தார். [31]யூதர்கள் பலர் மரியாளோடு அவளது
வீட்டில் இருந்தனர். அவளுக்கு ஆறுதல் சொல்
லிக் கொண்டிருந்தனர். மரியாள் எழுந்து
வேகமாகச் செல்வதைப் பார்த்து அவள்
லாசருவின் கல்லறைக்குப் போகக்கூடும் என
எண்ணினர். அவள் அங்கு அழப்போகலாம்
என்று கருதி அவளோடு அவர்களும் சென்
றனர். [32]இயேசு இருந்த இடத்துக்கு மரியாள்
சென்றாள். அவள் இயேசுவைப் பார்த்ததும்
குனிந்து அவரை வணங்கினாள். "ஆண்ட
வரே, நீர் இங்கே இருந்திருந்தால் என்னுடைய
சகோதரன் இறந்து போயிருக்கமாட்டான்"
என்று சொன்னாள்.
[33]மரியாள் அழுவதை இயேசு பார்த்தார்.
அவளோடு வந்த யூதர்களையும் அவர் கவனித்
தார். அவர்களும் அழுதனர். இயேசு மனப்பூர்
வமாக வருந்தி, ஆழமாக வேதனைப்பட்டார்.
[34]"அவனை எங்கே வைத்திருக்கிறீர்கள்?"
என்று அவளிடம் கேட்டார். அவர்கள் அவ
ரிடம், "கர்த்தரே, வந்து பாரும்" என்றனர்.
[35]இயேசு அழுதார்.
[36]இதைக் கண்ட யூதர்கள், "பாருங்கள்,
இயேசு லாசருவை மிகவும் நேசித்திருக்கிறார்"
என்றனர்.
[37]ஆனால் சில யூதர்களோ, "இயேசு குருட
னின் கண்களைக் குணப்படுத்தினார். லாசரு
வுக்கு உதவிசெய்ய, அவனை ஏன் சாகாமலி
ருக்கச் செய்திருக்க கூடாது?" என்று கேட்ட
னர்.

### லாசருவை உயிர்ப்பித்தல்

[38]மீண்டும் இயேசு மனதில் மிகவும் வருத்தம்
அடைந்தார். பிறகு லாசரு வைக்கப்பட்ட
கல்லறைக்கு வந்தார். அக்கல்லறை பெரிய
பாறையால் அடைக்கப்பட்டிருந்த குகைக்குள்
இருந்தது. [39]இயேசு, "அந்தப்பாறையை அகற்
றுங்கள்" என்றார். மார்த்தாளோ, "ஆண்ட
வரே, லாசரு இறந்து நான்கு நாட்கள் ஆகிவிட்
டன. அதில் கெட்ட நாற்றம் வீசுமே" என்றாள்.
அவள் இறந்துபோன லாசருவின் சகோதரி.
[40]இயேசு மார்த்தாளிடம், "நான் சொன்ன
வற்றை நினைத்துப்பார். நீ என்னை நம்புகி
றதானால் தேவனின் மகிமையை அறியலாம்
எனச் சொல்லியிருக்கிறேன்" என்றார்.
[41]ஆகையால் அவர்கள் அந்தப் பாறையை
குகையின் வாசலில் இருந்து அகற்றினார்கள்.
இயேசு மேலே ஏறிட்டுப் பார்த்து "பிதாவே!
நான் சொல்வதை நீர் கேட்டதற்காக நன்றி
கூறுகிறேன். [42]எப்பொழுதும் நான் சொல்
வதை நீர் கேட்கிறீர் என்பது எனக்குத்
தெரியும். ஆனாலும் நான், இங்கே கூடியிருக்
கிற இம்மக்களுக்காகவே இவற்றைக் கூறு
கிறேன். நீர் தான் என்னை அனுப்பினீர்
என்று இவர்கள் நம்பவேண்டும் என்று நான்
விரும்புகிறேன்" என்றார்.
[43]இவ்விதம் சொன்னபிறகு இயேசு உரத்தக்
குரலில், "லாசருவே, வெளியே வா" என்று
அழைத்தார்.
[44]இறந்தவன் வெளியே வந்தான். அவனது
கைகளிலும் கால்களிலும் துணிகள் சுற்றப்பட்
டிருந்தன. அவன் முகத்தை ஒரு துண்டுத்துணி
மூடியிருந்தது.
இயேசு மக்களிடம், "துணிகளை அப்புறப்
படுத்தி அவனை விடுவியுங்கள்" என்றார்.

### யூதத்தலைவர்களின் சதித்திட்டம்

(மத்தேயு 26:1-5; மாற்கு 14:1-2;
லூக்கா 22:1-2)

[45]மரியாளைப் பார்ப்பதற்காக ஏராளமான
யூதர்கள் வந்திருந்தனர். இயேசு செய்ததை
அவர்கள் பார்த்தார்கள். அவர்களில் பலர்

இயேசுவின் மீது நம்பிக்கை வைத்தனர்.
46ஆனால், சிலர் பரிசேயர்களிடம் சென்றனர்.
இயேசு செய்ததை அவர்கள் பரிசேயர்களிடம்
சொன்னார்கள்.
47பிறகு ஆசாரியர்களும் பரிசேயர்களும்
யூதர்களின் ஆலோசனைச் சபையைக் கூட்டி
னார். "இனி என்ன செய்யலாம்? இயேசு
பல அற்புதங்களைச் செய்து வருகிறான்.
48அவனை இவ்வாறு தொடர்ந்து செய்ய
அனுமதித்தால் பிறகு மக்கள் அனைவரும்
அவனை நம்ப ஆரம்பித்து விடுவார்கள். பின்
ரோமானியர்கள் வந்து நமது ஆலயத்தையும்,
நாட்டையும் அபகரித்துக் கொள்வார்கள்"
என்று பேசிக்கொண்டனர்.
49அங்கே அவர்களில் ஒருவன் காய்பா.
அவன் அந்த ஆண்டின் தலைமை ஆசாரியன்.
அவன் "உங்களுக்கு ஒன்றும் தெரியவில்லை.
50நாடு முழுவதும் அழிவதைவிட, மக்களுக்
காக ஒருவன் இறந்துபோவது நல்லது அல்
லவா? இதை ஏன் நீங்கள் எண்ணிப்பார்க்க
வில்லை?" என்று சொன்னான்.
51காய்பா இவற்றைச் சொந்தமாகச் சிந்தித்
துச் சொல்லவில்லை. அவன் அந்த ஆண்டின்
தலைமை ஆசாரியன். இயேசு யூத நாட்டுக்காக
மரிக்கப்போகிறார் என்பதை அவன் உண்
மையில் தீர்க்கதரிசனமாகவே கூறினான்.
52ஆமாம். இயேசு யூதர்களுக்காகவே மரிக்கப்
போகிறார். உலகில் சிதறிக்கிடக்கிற மக்களை
யெல்லாம் ஒன்று திரட்டி, அவர்களை ஒரே
மக்களாக்க அவர் மரிக்கப் போகிறார்.
53அன்றிலிருந்து யூதத்தலைவர்கள் இயேசு
வைக் கொலைசெய்யத் திட்டம் தீட்டினர்.
54ஆகையால் இயேசு யூதர்களின் மத்தியில்
வெளிப்படையாய் நடமாடுவதை நிறுத்தினார்.
இயேசு எருசலேமை விட்டு, வனாந்தரத்திற்கு
அருகிலுள்ள இடத்துக்கு சென்றார். இயேசு
எப்பிராயீம் என்று அழைக்கப்படுகிற நகரத்
துக்குச் சென்றார். அங்கே அவர் தம் சீஷர்
களோடு தங்கினார்.
55யூதருடைய பஸ்கா பண்டிகை நெருங்கிக்
கொண்டிருந்தது. பஸ்கா பண்டிகைக்கு
முன்பே நாட்டிலுள்ள மக்களில் பலர் எருசலே
மிற்குச் சென்றனர். அங்கு அவர்கள் தம்மை
சுத்தப்படுத்திக்கொள்வதற்கான சடங்குகளைச்
செய்வர்.
56மக்கள் இயேசுவை எதிர்பார்த்தனர்.
அவர்கள் ஆலயத்தில் நின்றுகொண்டு "இயேசு
பண்டிகைக்கு வரமாட்டாரா? நீ என்ன
நினைக்கிறாய்?" என ஒருவரை ஒருவர்
விசாரித்துக் கொண்டனர். 57ஆனால் தலைமை
ஆசாரியரும் பரிசேயரும் இயேசுவைப்பற்றிய
ஒரு புதிய கட்டளையைக் கொடுத்திருந்தனர்.
எவராவது இயேசு எங்கே இருக்கிறார் என்று
தெரிந்துகொண்டால் உடனே வந்து தெரிவிக்க
வேண்டும். பிறகு, தலைமை ஆசாரியர்களும்
பரிசேயரும் இயேசுவைக் கைது செய்ய
முடியும்.

### பெத்தானியாவில் இயேசு

(மத்தேயு 26:6-13; மாற்கு 14:3-9)

12 பஸ்கா பண்டிகைக்கு இன்னும் ஆறு
நாட்கள் இருந்தன. இயேசு பெத்தானியா
வுக்கு வந்தார். அங்கே லாசரு வாழ்ந்து
வந்தான். (இவன் இறந்த பின்னரும் இயேசு
வால் உயிர்பெற்று எழுந்தவன்) 2பெத்தானி
யாவில் இயேசுவுக்கு இரவு விருந்து ஏற்பாடு
செய்தனர். மார்த்தாள் உணவு பரிமாறினாள்.
இயேசுவோடு லாசருவும் இன்னும் பலரும்
விருந்தில் கலந்துகொண்டனர். 3மரியாள்
சுத்தமான நளதம் என்னும் விலை உயர்ந்த
வாசனைத் தைலத்தை ஒரு இராத்தல் கொண்டு
வந்தாள். அவள் அதனை இயேசுவின் பாதங்
களில் ஊற்றினாள். பிறகு அதனைத் தன்
தலை மயிரால் துடைத்தாள். வீடு முழு வதும்
தைலத்தின் வாசனை நிறைந்துவிட்டது.
4யூதாஸ்காரியோத்தும் அங்கிருந்தான்.
(யூதாஸ் இயேசுவின் சீஷரில் ஒருவன். இவன்
தான் பிறகு இயேசுவிற்கு எதிரானவன்.)
மரியாள் செய்தவற்றை இவன் விரும்ப
வில்லை. 5அவன் "இத்தைலம் முந்நூறு வெள்
ளிகாசுகள் மதிப்பு உடையது. இதனை விற்று,
அந்தப் பணத்தை ஏழைகளுக்குக் கொடுத்தி
ருக்கலாம்" என்றான். 6ஆனால் உண்மையில்
அவனுக்கு ஏழைகளின்மீது அக்கறையில்லை.
அவன் ஒரு திருடனானபடியால் இவ்வாறு
சொன்னான். இவன் தான் இயேசுவின் சீஷர்
களுள் பணப்பையை வைத்திருந்தவன். இவன்
அவ்வப்போது பணப் பெட்டியிலிருந்து பணம்
திருடி வந்தான்.
7இயேசு அவனிடம், "அவளைத் தடை செய்
யாதே. என்னை அடக்கம்பண்ணும் நாளுக்
காக இதைச் சேமித்து வைத்திருந்தாள். 8ஏழை
மக்கள் எப்பொழுதும் உங்களோடு இருப்பார்
கள். நானோ எப்பொழுதும் உங்களோடு இருப்
பதில்லை" என்றார்.

### லாசருவுக்கு எதிரான சதி

9யூதர்களில் பலர், இயேசு பெத்தானியாவில்
இருப்பதாக அறிந்தனர். ஆகையால் அவர்கள்
அங்கே சென்றனர். அவர்கள் இயேசுவை
மட்டுமல்லாமல் லாசருவையும் பார்க்க எண்
ணினர். லாசரு இயேசுவால் மரணத்துக்குப்
பின்னும் உயிரோடு எழுப்பப்பட்டவன்.
10ஆகவே, தலைமை ஆசாரியர்களும் இயேசு
வோடு லாசருவையும் கொல்லத் திட்டமிட்
டார்கள். 11ஏனென்றால் லாசருவின்நிமித்தம்
ஏராளமான யூதர்கள் தங்கள் தலைவர்களை
விட்டுவிட்டு இயேசுவை நம்பத்தொடங்கினர்.
அதனால்தான் யூதத்தலைவர்கள் லாசருவை
யும் கொலை செய்ய விரும்பினர்.

### எருசலேமில் இயேசு

(மத்தேயு 21:1-11; மாற்கு 11:1-11;
லூக்கா 19:28-40)

12மறுநாள் இயேசு வருவதாக எருசலேமி
லுள்ள பெருங்கூட்ட மக்கள் கேள்விப்பட்டனர்.

*இம்மக்கள் பஸ்கா பண்டிகைக்காக வந்த*
*வர்கள். 13அந்த மக்கள் குருத்தோலைகளைப்*
*பிடித்துக்கொண்டு இயேசுவைச் சந்திக்கச்*
*சென்றனர். அவர்கள்:*

> *"அவரைப் புகழ்வோம்! வருக! தேவனால்*
> *ஆசீர்வதிக்கப்பட்டவரே கர்த்தரின்*
> *பேரால் வருகிறவரே! தேவன் இஸ்ரவே*
> *லின் இராஜாவை ஆசீர்வதிப்பாராக!"*
> *சங்கீதம் 118:25-26*

*என்று முழங்கினர்.*
*14இயேசு ஒரு கழுதையைக் கண்டு அதன்*
*மேல் ஏறிக்கொண்டார்.*

> *15 "சீயோன்* நகரமே! அஞ்சவேண்டாம்.*
> *பார். உன் அரசர் வந்து கொண்டிருக்*
> *கிறார். அவர் இளங்கழுதைமேல் சவாரி*
> *செய்து வருகிறார்"*
> *சகரியா 9:9*

*என்றும் மக்கள் ஆரவாரம் செய்தனர்.*
*16இயேசுவின் சீஷர்கள் இவற்றை முதலில்*
*புரிந்து கொள்ளவில்லை. ஆனால் இயேசு*
*மகிமையில் எடுத்துக்கொள்ளப்பட்ட பிறகு,*
*அவர்கள் இவை ஏற்கெனவே எழுதப்பட்டிருக்*
*கிறதே என்று உணர்ந்து கொண்டனர். அத்*
*துடன் அவருக்காக தாங்கள் செய்த செய்கை*
*களையும் நினைவு கூர்ந்தனர்.*

### இயேசுவைப் பற்றி மக்கள் பேசுதல்

*17மரணத்திலிருந்து லாசருவை இயேசு*
*எழுப்பி "கல்லறையை விட்டு வெளியே*
*வா" என்று சொன்னபோது இயேசுவுடன்*
*பலர் இருந்தனர். இப்பொழுது அவர்கள் மற்ற*
*வர்களிடம் இயேசு செய்தவற்றைப்பற்றி கூறி*
*னர். 18இயேசு இந்த அற்புதத்தைச் செய்ததைக்*
*கேள்விப்பட்ட ஏராளமான மக்கள் இயேசுவை*
*வரவேற்பதற்காகத் திரண்டனர். 19அதனால்*
*பரிசேயர்கள் தங்களுக்குள், "பாருங்கள், நமது*
*திட்டம் நன்மையைத் தரவில்லை. எல்லா*
*மக்களும் அவரைப் பின்தொடர்கிறார்கள்"*
*என்று பேசிக்கொண்டனர்.*

### ஜீவன் - மரணம்

*20அங்கே கிரேக்க நாட்டு மக்களில் சிலரும்*
*இருந்தனர். இவர்கள் பஸ்கா பண்டிகையில்*
*வழிபாடு செய்ய எருசலேமுக்கு வந்திருந்*
*தனர். 21இவர்கள் பிலிப்புவிடம் சென்று*
*(கலிலேயாவிலுள்ள பெத்சாய்தாவில் இருந்து*
*வந்தவன் பிலிப்பு) "ஐயா, நாங்கள் இயேசு*
*வைச் சந்திக்க விரும்புகிறோம்" என்றனர்.*
*22பிலிப்பு அந்திரேயாவிடம் சொன்னான்.*
*பிறகு இருவரும் இயேசுவிடம் சொன்னார்கள்.*

*23இயேசு அவர்களிடம், "மனிதகுமாரன்*
*மகிமைபெறுகிற நேரம் வந்துவிட்டது. 24நான்*
*உங்களுக்கு உண்மையைக் கூறுகிறேன். ஒரு*
*கோதுமை விதை தரையில் விழுந்து (இறக்க)*
*அழிய வேண்டும். பிறகுதான் அது வளர்ந்து*
*ஏராளமாகக் கோதுமையைத் தரும். ஆனால்*
*அது அழியாவிட்டால், அது தனி விதையா*
*கவே இருக்கும். 25தனக்குச் சொந்தமான*
*வாழ்வை நேசிக்கிறவன் அதனை இழப்பான்.*
*இவ்வுலகில் தன் வாழ்வின்மீது வெறுப்பு*
*கொண்டவன் என்றென்றைக்கும் அதைக் காத்*
*துக்கொள்வான். அவன் நிரந்தர வாழ்வைப்*
*பெறுவான். 26எனக்குப் பணிவிடை செய்*
*கிறவன் என்னைப் பின்பற்றவேண்டும். நான்*
*எங்கெங்கே இருக்கிறேனோ அங்கெல்லாம்*
*என் பணியாளனும் இருப்பான். எனக்குப்*
*பணி செய்கிறவர்களை என் பிதாவும் பெரு*
*மைப் படுத்துவார்."*

### இயேசு தன் மரணத்தைப் பற்றிப் பேசியது

*27"நான் இப்போது கலக்கத்தில் இருக்*
*கிறேன். நான் என்ன சொல்வது? 'பிதாவே,*
*என்னை இந்தத் துன்ப காலத்தில் இருந்து*
*காப்பாற்றுங்கள்' என்று சொல்லலாமா?*
*இல்லை, துன்பப்படுவதற்காகவே இத்தருணத்*
*தில் வந்தேன். 28பிதாவே, உங்கள் பெயருக்கு*
*மகிமையை தேடித்தருக!" என்றார்.*
*அப்போது வானில் இருந்து ஒரு குரல்*
*வந்து, "நான் என் பெயருக்கு மகிமை*
*கொண்டு வந்திருக்கிறேன். நான் அதை மீண்*
*டும் செய்வேன்" என்றது.*
*29அங்கே நின்றிருந்த மக்கள் அக்குரலைக்*
*கேட்டார்கள். அவர்களில் சிலர் அதனை இடி*
*முழக்கம் என்றனர்.*
*வேறு சிலரோ "ஒரு தேவதூதன் இயேசு*
*விடம் பேசினான்" என்றனர்.*
*30மக்களிடம் இயேசு, "இந்தக் குரல் எனக்*
*காக அல்ல. உங்களுக்காக. 31உலகம் நியாயம்*
*தீர்க்கப்படுவதற்கான தருணம் இதுதான். இப்*
*பொழுது உலகை ஆண்டு கொண்டிருக்கும்*
*சாத்தான் தூக்கி எறியப்படுவான்.*
*32நான் பூமியில் இருந்து உயர்த்தப்படு*
*வேன். இது நடைபெறும்போது எல்லா மக்*
*களையும் என்னோடு சேர்த்துக் கொள்வேன்"*
*என்றார்.*
*33தான் எவ்வாறு இறந்துபோவோம்*
*என்பதைக் காட்டவே இவ்வாறு கூறினார்.*
*34ஆனால் மக்களோ, "கிறிஸ்து என்றென்*
*றும் வாழ்வார் என்று நமது சட்டங்கள் கூறு*
*கின்றனவே. அப்படியிருக்க மனித குமாரன்*
*உயர்த்தப்படுவார். என்று ஏன் கூறுகின்றீர்?*
*யார் இந்த மனித குமாரன்?" எனக் கேட்டனர்.*
*35பிறகு இயேசு, "இன்னும் சிறிது காலம்*
*உங்களோடு ஒளி இருக்கும். எனவே, ஒளி*
*இருக்கும்போதே நடந்துவிடுங்கள். அப்போது*
*தான் இருட்டாகிய பாவம் உங்களைப்*
*பிடித்துக்கொள்ளாது. இருட்டிலே நடந்து*

---

***சீயோன்*** *இலக்கிய வழக்கில் சீயோன் மகளே. எருசலேம் என்று பொருள்.*

போகிறவனுக்குத் தான் எங்கே போகிறோம்
என்பது தெரியாமல் இருக்கும். 36ஆகவே, ஒளி
இருக்கும்போதே அதன் மீது நம்பிக்கை
வையுங்கள். அப்பொழுது நீங்கள் ஒளியின்
பிள்ளைகள் ஆவீர்கள்" என்றார். இயேசு
இவற்றையெல்லாம் சொல்லி முடித்த பின்
அவ்விடத்தை விட்டுப்போனார். அவர் போய்
அவர்களிடமிருந்து தன்னை மறைத்துக்
கொண்டார்.

### இயேசுவை நம்பாத யூதர்கள்

37இயேசு இவ்வாறு ஏராளமான அற்புதங்
களைச் செய்தார். மக்கள் அவற்றைப் பார்த்
தனர். எனினும் அவர்மீது அவர்கள் நம்பிக்
கை வைக்கவில்லை. 38தீர்க்கதரிசி ஏசாயா
சொன்னது நிறைவேறும்படிக்கு இவ்வாறு
நிகழ்ந்தது.

"கர்த்தாவே, நாங்கள் சொன்னதைக் கேட்டு
நம்பிக்கை வைத்தவர்கள் யார்? தேவ
னின் வல்லமையைக் கண்டுகொண்ட
வர்கள் யார்?"

ஏசாயா 53:1

39இதனால்தான் மக்கள் நம்பவில்லை.
ஏனென்றால் ஏசாயா மேலும்,

40 "தேவன் மக்களைக் குருடாக்கினார்.
தேவன் அவர்களின் மனதை மூடினார்.
அவர்கள் கண்களினால் பாராமலும்
மனதின் மூலம் அறியாமலும் இருக்க
வேண்டும் என்றே தேவன் இதைச் செய்
தார். அதன்பின் அவர்களை நான்
குணப்படுத்துவேன்."

ஏசாயா 6:10

41இயேசுவின் மகிமையை ஏசாயா அறிந்
திருந்தபடியால் அவர் இவ்வாறு சொன்னார்.
எனவே ஏசாயா இயேசுவைப்பற்றி பேசினார்.
42ஆனால் ஏராளமான மக்கள் இயேசுவை
நம்பினார்கள். ஏராளமான யூதத்தலைவர்கள்
கூட இயேசுவை நம்பினார்கள். ஆனால் அவர்
கள் பரிசேயர்களுக்குப் பயந்தனர். எனவே,
அவர்கள் இயேசுவை நம்புவதாக வெளிப்
படையாகக் கூறவில்லை. தாம் ஜெப ஆலயத்
திற்குப் புறம்பாக்கப்படுவோமோ என்று
அவர்கள் பயந்தனர். 43அவர்கள் தேவனால்
வரும் பாராட்டைவிட மனிதரால் வரும்
பாராட்டை விரும்பினர்.

### தீர்ப்பளிக்கும் வசனங்கள்

44பிறகு இயேசு உரத்த குரலில், "என்னில்
விசுவாசம் வைக்கிறவன் எவனோ அவனே,
என்னை அனுப்பிய தேவனிடமும் விசுவாசம்
வைப்பான். 45என்னைப் பார்க்கிறவன் எவ
னோ, அவனே, என்னை அனுப்பிய தேவ
னையும் பார்க்கிறவனாகிறான். 46நானே ஒளி,
நான் இந்த உலகத்துக்கு வந்திருக்கிறேன்.
ஆகவே, என்னில் நம்பிக்கை வைக்கிற ஒவ்
வொருவனும் இருளில் தங்கமாட்டான்.
47"நான் மக்களுக்குத் தீர்ப்பளிப்பதற்காக
இந்த உலகத்துக்கு வரவில்லை. உலகத்தில்
உள்ள மக்களைப் பாதுகாக்கவே வந்திருக்
கிறேன். எனவே, என் வார்த்தைகளைக் கேட்
டும் என்னை நம்பாமல் போகிறவனை நான்
நியாயந்தீர்ப்பதில்லை. 48என்னை நம்ப மறுக்
கிறவர்களையும் நான் சொல்பவற்றை ஏற்றுக்
கொள்ளாதவர்களையும் நியாயந்தீர்க்க ஒரு
நீதிபதி உண்டு. அதுதான் நான் சொன்ன
உபதேசங்கள். அவை இறுதி நாளில் அவர்
களை நியாயம் தீர்க்கும். 49ஏனென்றால் நான்
சொன்ன உபதேசங்கள் என்னிடமிருந்து
வந்தவையல்ல. நான் சொன்னவையும் உபதே
சித்தவையும் என்னை அனுப்பிய என்
பிதாவாகிய தேவன் எனக்குச் சொன்னவை
யாகும். 50என் பிதாவின் கட்டளைகள் நித்திய
ஜீவனுக்குரியவை என்பதை அறிவேன்.
ஆகையால் நான் சொல்கிறவைகளை என்
பிதா எனக்குச் சொன்னபடியே சொல்கிறேன்"
என்றார்.

### சீஷர்களின் பாதங்களைக் கழுவுதல்

13 இது ஏறக்குறைய பஸ்கா பண்டிகைக்
கான நேரம். இதுதான் இந்த உலகத்தை
விட்டுச் செல்வதற்கான நேரம் என்பதை
இயேசு அறிந்திருந்தார். இயேசு, தன் பிதா
விடம் திரும்பிப் போவதற்கான காலம் இது.
இயேசு அவருடைய மக்களின்மீது பெரிதான
அன்பை எப்போதும் வைத்திருந்தார். இப்
பொழுது, அவருக்கு அவர்களிடம் கொண்ட
அன்பை வெளிப்படுத்தும் நேரமாயிற்று.
2இயேசுவும் அவர் சீஷர்களும் மாலை உண
வுக்காக அமர்ந்தனர். ஏற்கெனவே சாத்தான்
யூதாஸ்காரியோத்தின் மனதில் புகுந்து
அவனை இயேசுவுக்கு எதிராக ஆக்கியிருந்
தான். (யூதாஸ் சீமோனின் மகன்) 3இயேசுவுக்கு
அவரது பிதா எல்லாவிதமான அதிகாரத்
தையும் கொடுத்திருந்தார். இயேசு இதனை
அறிந்திருந்தார். தேவனிடமிருந்து தான் வந்த
தாக இயேசு தெரிந்து வைத்திருந்தார். அதோடு
அவர் தன் பிதாவிடமே திரும்பிப் போக
வேண்டும் என்பதனை அறிந்திருந்தார். 4அவர்
கள் உணவு உண்டுகொண்டிருக்கும்போது,
இயேசு எழுந்து ஆடைகளைக் கழற்றி வைத்
தார். ஒரு துண்டை எடுத்து தன் இடுப்பில்
கட்டிக்கொண்டார். 5பிறகு இயேசு ஒரு
பாத்திரத்தில் நீரை ஊற்றினார். அவர் தம்
சீஷர்களின் கால்களைக் கழுவிச் சுத்தப்படுத்த
ஆரம்பித்தார். பின் தன் இடுப்புத் துண்டால்
அவர்கள் கால்களைத் துடைத்தார்.
6இயேசு, சீமோன் பேதுருவிடம் வந்தார்.
ஆனால் பேதுருவோ இயேசுவிடம், "ஆண்
டவரே, நீர் என் கால்களைக் கழுவக்கூடாது"
என்றான்.

7அதற்கு இயேசு அவனிடம், “நான் என்ன
செய்கிறேன் என்று இப்போது உனக்குத் தெரி
யாது. ஆனால் பிறகு நீ புரிந்து கொள்வாய்”
என்றார்.

8பேதுருவோ, “இல்லை நீர் என் கால்
களைக் கழுவவேகூடாது” என்றான்.

இயேசுவோ, “நான் உன் கால்களைக் கழு
வாவிட்டால், நீ என்னோடு பங்குள்ளவனாக
இருக்கமுடியாது” என்றார்.

9உடனே பேதுரு, “ஆண்டவரே, அப்படியா
னால் என் கால்களோடு, என் கைகளையும்
தலையையும்கூட கழுவுங்கள்” என்றான்.

10“ஒரு மனிதன் குளித்தபிறகு அவனது
சரீரம் எல்லாம் சுத்தமாகிவிடுகிறது. அதன்
பிறகு அவன் கால்களை மட்டும் கழுவினால்
போதும். நீங்கள் சுத்தமாக இருக்கிறீர்கள்.
ஆனால் அனைவரும் அல்ல” என்றார் இயேசு.
11யார் தனக்கு எதிராக மாறியுள்ளவன் என்று
இயேசுவுக்குத் தெரியும். அதனால்தான் இயேசு
“நீங்கள் அனைவரும் சுத்தமாக இல்லை”
என்று கூறினார்.

12 இயேசு அவர்களின் கால்களைச் சுத்தப்
படுத்தி முடித்தார். பிறகு அவர் தன் ஆடை
களை அணிந்துகொண்டு சாப்பாடு மேசைக்
குத் திரும்பினார். இயேசு அவர்களிடம், “நான்
உங்களுக்காகச் செய்தவற்றை நீங்கள் புரிந்து
கொண்டீர்களா? “13நீங்கள் என்னை ‘ஆண்
டவரே’ என்று அழைக்கிறீர்கள், இதுதான்
சரியானது. ஏனென்றால் உண்மையில் நான்
ஆண்டவராகவே இருக்கிறேன். 14நான் உங்கள்
போதகராகவும் ஆண்டவராகவும் இருக்கி
றேன். ஆனால் நான் ஒரு வேலைக்காரனைப்
போன்று உங்கள் கால்களைக் கழுவினேன்.
ஆகையால் நீங்கள் ஒருவருக்கொருவர் உங்கள்
கால்களைக் கழுவிக்கொள்ளுங்கள். 15இதை
நான் ஒரு முன்மாதிரியாகவே செய்தேன். நான்
உங்களுக்குச் செய்தது போலவே நீங்களும்
ஒருவருக்கொருவர் செய்துகொள்ளுங்கள்.
16நான் உங்களுக்கு உண்மையாகவே கூறு
கிறேன். ஒரு வேலைக்காரன் தன் எஜமா
னனைவிடப் பெரியவன் அல்ல. ஒருவன்
என்னதான் பெரிய காரியங்களைச் செய்
தாலும் அனுப்பப்பட்டவன் அனுப்பியவரை
விடப் பெரியவனல்ல. 17நீங்கள் இவற்றை
அறிந்து கொண்டால், அவற்றைச் செய்யும்
போது மகிழ்ச்சியடைவீர்கள்.

18“ நான் உங்கள் எல்லாரையும்பற்றிப் பேச
வில்லை. நான் தேர்ந்தெடுத்த மக்களைப்பற்றி
நான் அறிவேன். ஆனால் வேதவாக்கியங்கள்
நிறைவேறவேண்டும். ‘என்னோடு பகிர்ந்து
கொண்டு உண்பவனே எனக்கு எதிராகத்
திரும்பிவிட்டான்.’* 19இது நிறைவேறும் முன்
னால் நான் உங்களுக்கு இதை இப்பொழுது
சொல்லுகிறேன். இது நடக்கும்போது நானே
அவர் என நம்புவீர்கள். 20நான் உங்களுக்கு
உண்மையாகவே கூறுகிறேன். என்னை ஏற்
றுக்கொள்பவன் என்னை அனுப்பியவரை
யும் ஏற்றுக்கொள்கிறான்” என்றார்.

### காட்டிக் கொடுப்பவன்

*(மத்தேயு 26:20-25; மாற்கு 14:17-21;
லூக்கா 22:21-23)*

21இவற்றைச் சொன்னபிறகு இயேசு மிகவும்
கலக்கம் அடைந்தார். வெளிப்படையாக அவர்
களிடம், “நான் உங்களுக்கு உண்மையைச்
சொல்லுகிறேன். உங்களில் ஒருவனே என்
னைக் காட்டிக்கொடுப்பான்” என்றார்.

22இயேசுவின் சீஷர்கள் அனைவரும் ஒரு
வரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். இயேசு
வால் குறிப்பிடப்பட்டவன் எவனென்று அவர்
களால் அறிந்து கொள்ள முடியவில்லை.
23சீஷர்களில் ஒருவன் இயேசுவுக்கு அடுத்து
அமர்ந்திருந்தான். அவனைத்தான் இயேசு
பெரிதும் நேசித்தார். 24சீமோன் பேதுரு
அவனிடம் இயேசுவிடம் கேட்கும்படி சாடை
யாகத் தெரிவித்தான். 25அவன் இயேசுவின்
அருகில் சாய்ந்து, “ஆண்டவரே, உங்களுக்கு
எதிரானவன் யார்?” என்று கேட்டான்.

26இயேசு அதற்கு, “நான் இந்த தோய்த்
தெடுத்த அப்பத்துண்டை எவனுக்குக் கொடுக்
கிறேனோ அவனே எனக்கு எதிரானவன்”
என்றார். பின்னர் அவர் அப்பத்துண்டை
தோய்த்து எடுத்தார். சீமோனின் மகனான
யூதாஸ்காரியோத்திடம் அதனைக் கொடுத்தார்.
27யூதாஸ் அந்த அப்பத் துண்டை வாங்கிக்
கொண்டதும் சாத்தான் அவனுக்குள் புகுந்து
கொண்டான். இயேசு யூதாஸிடம், “நீ செய்யப்
போவதைச் சீக்கிரமாய் செய்” என்றார்.
28அந்த மேஜையைச் சுற்றியிருந்த எவருக்கும்
இயேசு யூதாஸிடம் ஏன் அவ்வாறு சொன்னார்
என்பது புரியவில்லை. 29அவர்களில் யூதாஸ்
மட்டும்தான் பணப் பெட்டியைப் பாதுகாப்
பவன். எனவே அவர்கள், இயேசு யூதாஸிடம்
விருந்துக்கான பொருட்களை வாங்கிவரும்
படியாக ஏதோ கூறுவதாக எண்ணிக் கொண்
டார்கள். அல்லது யூதாஸ் ஏழைகளுக்குக்
கொஞ்சம் பணம் கொடுக்குமாறு இயேசு
கூறுவதாக நினைத்துக் கொண்டனர்.

30இயேசு கொடுத்த அப்பத்துண்டை யூதாஸ்
பெற்றுக்கொண்டான். பிறகு அவன் வெளி
யேறினான். அப்போது இரவு நேரமாயிருந்தது.

### இயேசு, தம் மரணத்தைப் பற்றி முன்னறிவிக்கிறார்

31யூதாஸ் போனபிறகு இயேசு, “இப்பொ
ழுது மனித குமாரன் தன் மகிமையை அடை
கிறார். தேவன் தன் குமாரன் மூலமாகப் மகி
மையைப் பெறுகிறார். 32அவர் மூலம் தேவன்
மகிமையை அடைந்தால், பிறகு தேவன் தன்
மகனுக்கு அவர் மூலமாகவே மகிமை அளிப்
பார். தேவன் விரைவில் அவருக்கு மகிமை
தருவார்.

---

**என்னோடு ... விட்டான்** சங்கீதம் 41:9

33“எனது பிள்ளைகளே. நான் இன்னும்
கொஞ்சக்காலம் மட்டும்தான் உங்களோடு
இருப்பேன். என்னை நீங்கள் தேடுவீர்கள்.
நான் யூதர்களுக்கு சொன்னவற்றையே இப்
பொழுது உங்களுக்கும் சொல்கிறேன். நான்
போகிற இடத்துக்கு நீங்கள் வரமுடியாது.
34“நான் உங்களுக்கு ஒரு புதிய கட்டளை
யைத் தருகிறேன். நீங்கள் ஒருவரை ஒருவர்
நேசியுங்கள். நான் உங்களை நேசித்தது
போன்று நீங்களும் ஒருவரை ஒருவர் நேசி
யுங்கள். 35நீங்கள் ஒருவரை ஒருவர் நேசித்தால்
அனைத்து மக்களும் உங்களை என் சீஷர்
களென அறிந்து கொள்வர்” என்றார்.

### பேதுரு மறுதலிப்பது பற்றி

*(மத்தேயு 26:31-35 மாற்கு 14:27-31;
லூக்கா 22:31-34)*

36சீமோன் பேதுரு இயேசுவிடம், “ஆண்
டவரே, நீங்கள் எங்கே போகிறீர்கள்?” என்று
கேட்டான். அதற்கு இயேசு, “நான் எங்கே
போனாலும் உன்னால் அங்கே பின்தொடர்ந்து
இப்போது வர முடியாது. ஆனால் நீ பிறகு
என் பின்னே வருவாய்” என்றார்.
37பேதுரு அவரிடம், “ஆண்டவரே, நான்
இப்பொழுது ஏன் உங்களைப் பின்தொடர
முடியாது? நான் உங்களுக்காக உயிர் தரவும்
தயார்” என்றான்.
38இயேசு அதற்கு, “நீ உண்மையிலேயே
எனக்காக உன் உயிரையும் தருவாயா? நான்
உனக்கு உண்மையைக் கூறுகிறேன். நீ
என்னை அறியாதவன் என்று சேவல் கூவு
வதற்கு முன்னால் மூன்று முறை மறுதலிப்
பாய்” என்றார்.

### சீஷர்களுக்கு ஆறுதல்

14 இயேசு அவர்களிடம், “நீங்கள் மனம்
கலங்காதீர்கள். தேவனை விசுவாசியுங்
கள். என்னிலும் விசுவாசம் வையுங்கள்.
2எனது பிதாவின் வீட்டில் அறைகள் ஏராள
மாக உள்ளன. இது உண்மை இல்லை என்
றால் நான் இதனை உங்களிடம் சொல்ல மாட்
டேன். உங்களுக்கு ஒரு இடத்தைத் தயார் செய்
வதற்காக நான் அங்கே செல்லுகிறேன். 3நான்
அங்கே போனதும் உங்களுக்கான இடத்தை
தயார் செய்வேன். நான் திரும்பி வருவேன்.
என்னோடு உங்களை அழைத்துச் செல்வேன்.
எனவே, நான் எங்கே இருப்பேனோ அங்கே
நீங்களும் இருப்பீர்கள். 4நான் போகிற இடத்
திற்கு வழி உங்களுக்குத் தெரியும்” என்றார்.
5உடனே, “ஆண்டவரே, நீர் எங்கே போகிறீர்
என்றே எங்களுக்குத் தெரியவில்லை. அவ்
வாறு இருக்கும்போது வழி எங்களுக்கு எப்
படித் தெரியும்?” என்று தோமா கேட்டான்.
6அதற்கு இயேசு, “நானே வழி. நானே
உண்மை; நானே வாழ்வு. என் மூலமாகத்தான்
என் பிதாவிடம் போக முடியும். 7நீங்கள்
உண்மையிலேயே என்னைப் புரிந்து கொண்
டால் என் பிதாவையும் புரிந்து கொள்ளலாம்.
ஆனால் இப்பொழுது என் பிதாவை நீங்கள்
அறிவீர்கள். நீங்கள் அவரைப் பார்த்திருக்கிறீர்
கள்” என்றார்.
8இயேசுவிடம் பிலிப்பு, “ஆண்டவரே, எங்
களுக்கு பிதாவைக் காட்டுங்கள். அதுதான்
எங்களுக்குத் தேவையானது” என்றான்.
9அதற்கு இயேசு “பிலிப்பு, நான் உன்னோடு
நீண்டநாட்களாக இருக்கிறேன். ஆகையால் நீ
என்னை அறிந்திருக்கவேண்டும். என்னைப்
பார்க்கிறவன் எவனும் என் பிதாவைப் பார்க்
கிறான். அப்படியிருக்க நீ என்னிடம், ‘எங்க
ளுக்குப் பிதாவைக் காட்டுங்கள்’ என்று
கூறுகிறாயே. 10நான் பிதாவிலும் பிதா என்
னிலும் இருக்கிறதை நீ உண்மையாகவே
நம்புகிறாயா? நான் உங்களுக்குச் சொன்
னவை எல்லாம் என்னிடமிருந்து வந்தவை
அல்ல. பிதா என்னில் வாழ்கிறார். அவர்
அவருடைய பணியைச் செய்கிறார். 11நான்
பிதாவில் இருக்கிறேன். பிதா என்னில் இருக்
கிறார் என்று நான் சொல்லும்போது என்னை
நம்புங்கள். இல்லாவிட்டால் நான் செய்த அற்பு
தங்களுக்காவது என்னை நம்புங்கள். 12நான்
உங்களுக்கு உண்மையைக் கூறுகிறேன்.
என்னில் நம்பிக்கை வைக்கிற எவனும் நான்
செய்த அத்தகைய அற்புதங்களைச் செய்வான்.
என்னைவிட மேலான காரியங்களைக் கூட
செய்வான். ஏனென்றால் நான் என் பிதாவிடம்
செல்கிறேன். 13எனது பெயரில் நீங்கள் எதை
வேண்டினாலும் அதை உங்களுக்காக நான்
செய்வேன். பிறகு பிதாவின் மகிமை குமா
ரனின் மூலமாக விளங்கும். 14நீங்கள் எனது
பெயரில் என்னை என்ன கேட்டாலும் அதை
நான் செய்வேன்.

### பரிசுத்த ஆவியானவர் பற்றிய வாக்குறுதி

15நீங்கள் என்னை நேசித்தால், நான் கட்
டளையிட்டபடி நீங்கள் காரியங்களைச் செய்
வீர்கள். நான் பிதாவை வேண்டுவேன். அவர்
உங்களுக்கு இன்னொரு உதவியாளரைத் தரு
வார். 16அந்த உதவியாளர் எப்பொழுதும் உங்
களோடு இருப்பார். 17உண்மையின் ஆவியே
அந்த உதவியாளர். இந்த உலகம் அவரை
ஏற்றுக்கொள்ளாது. ஏனென்றால் உலகம் அவ
ரைக் காணாமலும் தெரிந்துகொள்ளாமலும்
இருக்கிறது. ஆனால் நீங்கள் அவரை அறிவீர்
கள். அவர் உங்களோடு வாழ்கிறார். அவர்
உங்களிலும் வாழ்வார்.
18“பெற்றோர் இல்லாத பிள்ளைகளைப்
போன்று நான் உங்களைவிட்டுப் போகமாட்
டேன். நான் மீண்டும் உங்களிடம் வருவேன்.
19இன்னும் கொஞ்சக் காலத்தில் உலகில் உள்ள
மக்கள் என்னை இனிமேல் காணமாட்டார்கள்.
ஆனால் நீங்கள் என்னைப் பார்ப்பீர்கள். நான்
உயிர்வாழ்வதால் நீங்களும் வாழ்வீர்கள்.
20அந்த நாளிலே நான் பிதாவில் இருப்பதை
நீங்கள் அறிவீர்கள். நான் உங்களிலும் நீங்கள்

என்னிலும் இருப்பதையும் அறிவீர்கள்.
21ஒருவன் எனது கட்டளைகளைத் தெரிந்து
கொண்டு, அவற்றுக்குக் கீழ்ப்படிந்தால் அவன்
உண்மையாகவே என்னை நேசிக்கிறான்.
என்னை நேசிக்கிறவனை என் பிதாவும்
நேசிப்பார். அதோடு நானும் அவனை நேசிப்
பேன். நான் என்னை அவனிடம் வெளிப்
படுத்துவேன்" என்றார்.
22பிறகு யூதா என்பவன் (யூதாஸ்காரி
யோத் அல்ல) இயேசுவிடம், "ஆண்டவரே,
நீர் உம்மை உலகத்துக்கு இல்லாமல் எங்க
ளுக்கு வெளிப்படுத்தவேண்டும் என்று ஏன்
திட்டமிடுகிறீர்?" என்றான்.
23அதற்கு இயேசு, "எவனொருவன்
என்னை நேசிக்கிறானோ அவன் என் உபதே
சங்களுக்குக் கீழ்ப்படிகிறான். எனது பிதா
அவன்மீது அன்பு வைப்பார். நானும் எனது
பிதாவும் அவனிடம் வந்து அவனோடு வாழ்
வோம். 24ஆனால் என்னை நேசிக்காதவன்,
என் உபதேசங்களுக்குக் கீழ்ப்படியமாட்டான்.
நீங்கள் கேட்டுக்கொண்டிருக்கிற எனது உபதே
சங்கள் எல்லாம் என்னுடையவையல்ல.
அவை என்னை அனுப்பின எனது பிதாவி
னுடையவை.
25"நான் உங்களோடு இருக்கையில் இவற்
றை எல்லாம் உங்களுக்குச் சொல்லிவிட்டேன்.
26ஆனால் உதவியாளர் எல்லாவற்றையும்
உங்களுக்குப் போதிப்பார். நான் உங்களுக்குச்
சொன்னவற்றையெல்லாம் உங்களுக்கு அவர்
நினைவுபடுத்துவார். அவரே பரிசுத்த ஆவியா
னவர். பிதா எனது நாமத்தில் அவரை அனுப்
புவார்.
27"நான் சமாதானத்தை உங்களுக்கு வைத்
துவிட்டுப் போகிறேன். எனது சொந்த சமா
தானத்தையே உங்களுக்குக் கொடுக்கிறேன்.
உலகம் கொடுப்பதுபோல் இல்லாமல் நான்
வித்தியாசமான சமாதானத்தைக் கொடுக்
கிறேன். ஆகையால் உங்கள் மனம் கலங்
காமல் இருக்கட்டும். அஞ்சவும் வேண்டாம்.
28'நான் போவேன், மீண்டும் உங்களிடம் வரு
வேன்' என்று சொன்னதை நீங்கள் கேட்டீர்
கள். நீங்கள் என்னை நேசிப்பதானால், நான்
என் பிதாவிடம் திரும்பிப் போவதைப்பற்றி
மகிழ்ச்சியடைவீர்கள். ஏனென்றால் என்னை
விட என் பிதா பெரியவர். 29நான் இவை
நடப்பதற்கு முன்னரே இவற்றை உங்களிடம்
சொல்கிறேன். இவை நடைபெறும்போது
என்னை நீங்கள் நம்புவீர்கள். 30நான் உங்
களோடு அதிகம் பேசமாட்டேன். இந்த
உலகத்தை ஆளுகிறவன் (சாத்தான்) வந்து
கொண்டிருக்கிறான். அவனுக்கு என்மீது அதி
காரமில்லை. 31ஆனால் நான் என் பிதாவை
நேசிக்கிறேன் என்று உலகத்துக்குத் தெரிய
வேண்டும். ஆகையால் என் பிதா எனக்குச்
சொன்னவற்றைமட்டும் நான் செய்கிறேன்.
"இப்பொழுது வாருங்கள். இந்த இடத்தை
விட்டுப் போவோம்" என்றார்.

### திராட்சைச் செடியின் உவமை

15 "நானே உண்மையான திராட்சைச்
செடி, எனது பிதாவே தோட்டக்காரர்.
2அவர், கனிகொடுக்காத எனது கிளைகள்
எவையோ அவற்றை வெட்டிப் போடுகிறார்.
கனிகொடுக்கிற கிளைகளை மேலும் கனிகொ
டுக்கும்படி அவர் சுத்தம் பண்ணுகிறார். 3நான்
உங்களுக்குச் செய்த உபதேசங்களால் நீங்கள்
ஏற்கெனவே சுத்தமாகியிருக்கிறீர்கள். 4நீங்கள்
என்னில் நிலைத்திருங்கள். நானும் உங்களில்
நிலைத்திருப்பேன். எந்தக் கிளையும் தனி
யாகக் கனிகொடுக்க இயலாது. அது செடியி
லேயே தொடர்ந்து இருக்கவேண்டும். இது
போலத்தான் நீங்களும். நீங்கள் தனியாக
இருந்து கனிதர முடியாது. என்னோடுசேர்ந்தே
இருக்கவேண்டும்.
5"நான்தான் திராட்சைச் செடி. நீங்கள்
கிளைகள். எவனொருவன் என்னிடம் நிரந்
தரமாக இருக்கிறானோ, எவனொருவனிடம்
நான் நிரந்தரமாக இருக்கிறேனோ, அவன்
கனி தரும் கிளையாக இருப்பான். ஆனால்
அவன் நான் இல்லாமல் எதுவும் செய்ய
இயலாது. 6என்னோடு இல்லாத எவனும்
செடியிலிருந்து அப்புறப்படுத்தப்பட்ட கிளை
போல ஆகிவிடுகிறான். அது காய்ந்துபோகும்.
மக்கள் அவற்றைப் பொறுக்கி நெருப்பிலே
போட்டு எரித்துவிடுகிறார்கள்.
7"என்னில் நிரந்தரமாய் இருங்கள், என்
உபதேசங்களைக் கடைப்பிடியுங்கள். நீங்கள்
இவற்றைச் செய்தால் நீங்கள் விரும்புகிற
எவற்றையும் என்னிடம் கேட்கலாம். அவை
உங்களுக்குக் கொடுக்கப்படும். 8நீங்கள் அதிகக்
கனிகளைத் தந்து, நீங்களே என் சீஷர்கள்
என்பதைக் காட்ட வேண்டும். இது என் பிதா
வுக்கும் மகிமையைக் கொண்டுவரும். 9பிதா
என்னை நேசிப்பது போன்று நான் உங்களை
நேசிக்கிறேன். இப்பொழுது எனது அன்பில்
நிலைத்திருங்கள். 10நான் என் பிதாவின் கட்ட
ளைகளுக்குக் கீழ்ப்படிகிறேன். நான் அவரது
அன்பில் நிலைத்திருக்கிறேன். இதைப்போ
லவே, நீங்களும் எனது கட்டளைகளுக்குக்
கீழ்ப்படிந்தால் எனது அன்பில் நிலைத்திருப்
பீர்கள். 11நான் இவற்றையெல்லாம் உங்களுக்
குக் கூறுகிறேன். எனவே நான் பெற்ற மகிழ்ச்
சியை நீங்களும் பெறலாம். உங்கள் மகிழ்ச்சி
முழுமையாக இருக்கவேண்டும் என்று நான்
விரும்புகிறேன். 12இதைத்தான் நான் உங்
களுக்கு கட்டளை இடுகிறேன், "நான் உங்களை
நேசிப்பது போல் நீங்களும் ஒருவரை ஒருவர்
நேசியுங்கள்." 13ஒருவன் தன் நண்பனுக்காக
இறப்பதைவிடச் சிறந்த அன்பு வேறு எதுவு
மில்லை. 14நான் சொன்னபடி செய்தால்
நீங்களும் எனது சிறந்த நண்பர்களாவீர்கள்.
15இனி நான் உங்களை வேலைக்காரன் என்று
அழைப்பதில்லை. ஏனெனில் வேலைக்காரன்
தன் எஜமானன் செய்வதை அறியமாட்டான்.
நான் இப்பொழுது உங்களை நண்பர்கள்

என்றே அழைக்கிறேன். ஏனென்றால் என்
பிதா எனக்குச் சொன்னவற்றையெல்லாம்
நான் உங்களுக்குச் சொல்லியிருக்கிறேன்.
16நீங்கள் என்னைத் தேர்ந்தெடுக்கவில்லை.
நானே உங்களைத் தேர்ந்தெடுத்தேன். நானே
உங்களை கனிகொடுக்குமாறு ஏற்படுத்தி
னேன். உங்கள் வாழ்வில் இந்தக் கனி நிரந்
தரமாக இருக்கவேண்டும். பிறகு என் பிதா
என்பேரில் நீங்கள் கேட்கிற எதையும் உங்க
ளுக்குத் தருவார். 17இதுவே எனது கட்டளை.
ஒருவரோடு ஒருவர் அன்பாயிருங்கள்.

### சீஷர்களை எச்சரித்தல்

18"இந்த உலகம் உங்களைப் பகைத்தால்,
அது என்னைத்தான் முதலில் பகைக்கிறது
என்பதை நினைவுகொள்ளுங்கள். 19நீங்கள்
இந்த உலகத்தைச் சார்ந்தவர்களாக இருந்தால்
அது தன் மனிதர்களை நேசிப்பது போன்று
உங்களையும் நேசிக்கும். ஆனால் நான் உங்
களை உலகத்திலிருந்து தேர்ந்து எடுத்துவிட்
டேன். அதனால்தான் உலகம் உங்களைப்
பகைக்கிறது. 20ஒரு வேலைக்காரன் தன் எஜ
மானனைவிடப் பெரியவன் அல்லன் என்று
நான் சொன்ன கருத்தை நினைத்துப் பாருங்
கள். மக்கள் என்னைத் துன்புறுத்தினால்
அவர்கள் உங்களையும் துன்புறுத்துவார்கள்.
மக்கள் என் உபதேசங்களுக்கு கீழ்ப்படிந்தால்
உங்கள் உபதேசத்திற்கும் கீழ்ப்படிவார்கள்.
21மக்கள் இவற்றையெல்லாம் என்பொருட்டே
உங்களுக்குச் செய்வார்கள். அவர்கள் என்
னை அனுப்பியவரைப்பற்றி அறியமாட்டார்
கள். 22நான் உலகத்துக்கு வந்து மக்களிடம்
பேசாமல் இருந்திருந்தால் அவர்களுக்குப்
பாவம்பற்றிய எண்ணம் இல்லாமல் இருந்
திருக்கும். ஆனால் இப்பொழுது நான் அவர்
களிடம் பேசிவிட்டேன். எனவே அவர்கள்
தம் பாவங்களுக்குச் சாக்குபோக்கு சொல்ல
முடியாது. 23என்னை வெறுக்கிற எவனும்
என் பிதாவையும் வெறுக்கிறான். 24நான்,
இதுவரை எவரும் செய்யாதவற்றை மக்கள்
மத்தியில் செய்திருக்கிறேன். நான் அவற்றைச்
செய்யாமல் இருந்திருந்தால் மக்களுக்குத் தம்
பாவத்தைப்பற்றிய குற்ற உணர்வு இல்லாமல்
போயிருக்கும். ஆனால் நான் செய்தவற்றை
யெல்லாம் அவர்கள் பார்த்திருக்கிறார்கள்.
எனினும் அவர்கள் என்னையும் என் பிதா
வையும் வெறுக்கிறார்கள். 25'அவர்கள் கார
ணம் இல்லாமல் என்னை வெறுக்கிறார்கள்'*
என்னும் வாக்கியம் உண்மையாகும்படி இது
நடந்தது.

26"நான் என் பிதாவிடமிருந்து அந்த
உதவியாளரை உங்களிடம் அனுப்புவேன்.
என் பிதாவிடமிருந்து வருகிற அவர் உண்
மையின் ஆவியாக இருப்பார். அவர் வரும்
போது என்னைப்பற்றி கூறுவார். 27நீங்கள்
தொடக்கக்கால முதலே என்னோடு இருப்
பதால் நீங்களும் என்னைப்பற்றி மக்களிடம்
சாட்சி கூறுவீர்கள்.

16 "நீங்கள் உங்கள் நம்பிக்கையை இழந்து
விடக்கூடாது என்பதற்காக இவைகளை
நான் உங்களுக்குச் சொல்லி இருக்கிறேன்.
2மக்கள் தங்கள் ஆலயங்களில் இருந்து உங்
களை வெளியேற்றுவர். மேலும் உங்களைக்
கொல்பவன் தேவனுக்குச் சேவை செய்கிற
வன் என்று மக்கள் எண்ணும்படியான காலம்
வரும். 3அவர்கள் பிதாவைப்பற்றியும் என்
னைப்பற்றியும் அறிந்து கொள்ளாததால்
இப்படிச் செய்வார்கள். 4நான் இப்பொழுது
இவற்றைப்பற்றியெல்லாம் சொல்லிவிட்டேன்.
எனவே இவை நிகழும் காலம் வரும்போது,
நான் ஏற்கெனவே உங்களுக்கு எச்சரித்திருக்
கிறேன் என்பதை நினைவுபடுத்திக் கொள்
வீர்கள்.

### பரிசுத்த ஆவியானவரின் பணிகள்

"நான் உங்களோடு இருந்தேன். எனவே
தொடக்கத்தில் இவற்றையெல்லாம் நான்
உங்களுக்குச் சொல்லவில்லை. 5இப்பொழுது
நான் என்னை அனுப்பியவரிடம் செல்
லப்போகிறேன். 'நீங்கள் எங்கே போகிறீர்கள்'
என்று யாரும் என்னை இதுவரை கேட்க
வில்லை. 6எனினும் நான் இவற்றைச் சொன்
னதால் உங்கள் இருதயம் துக்கத்தால் நிரம்பி
விட்டது. 7ஆனால் நான் உங்களுக்கு உண்
மையைச் சொல்லிக் கொண்டிருக்கிறேன்.
நான் போவது உங்களுக்கு நன்மையைத்
தரும். ஏனென்றால் நான் போனால், உதவி
யாளரை அனுப்புவேன். நான் போகாவிட்
டால் அந்த உதவியாளர் வரமாட்டார். 8அவர்
வரும்போது இவற்றைப்பற்றிய உண்மை
களையெல்லாம் உலகிலுள்ள மக்களுக்கு
நிரூபிப்பார். அதோடு பாவத்தின் குற்றம்
பற்றியும், தேவனோடு உள்ள சரியான உறவு
பற்றியும், நியாயத்தீர்ப்பு பற்றியும் விளக்
குவார். 9அந்த உதவியாளர், மக்கள் என்னை
நம்பாததால் அவர்கள் பாவம் செய்தவர்கள்
என்பதை நிரூபிப்பார். 10அவர் தேவனிடம்
எனக்கிருக்கிற நல்ல உறவுபற்றியும் நிரூபிப்
பார். ஏனென்றால் நான் பிதாவிடம் செல்கி
றேன். அப்பொழுது நீங்கள் என்னைக் காண
மாட்டீர்கள்.

11நியாயத்தீர்ப்பு பற்றிய உண்மையை
அவர் உலகத்துக்கு நிரூபிப்பார். ஏனென்றால்
இந்த உலகை ஆள்கிற சாத்தான் ஏற்கெனவே
நியாயந்தீர்க்கப்பட்டிருக்கிறான்.

12உங்களிடம் சொல்வதற்கு என்னிடம்
ஏராளமான செய்திகள் இருக்கின்றன. ஆனால்
இப்பொழுது நீங்கள் தாங்கிக்கொள்ள முடியாத
படி அந்த செய்திகள் அதிகப்படியானவை.
13ஆனால் உண்மையின் ஆவியானவர் வரும்

---

**அவர்கள் ... வெறுக்கிறார்கள்** இவ்வார்த்தைகள் எடுக்கப்பட்ட இடங்கள். சங்கீதம் 35:19 அல்லது சங்கீதம் 69:4.

போது அனைத்து உண்மைகளிலும் உங்
களை வழிநடத்திச்செல்வார். ஆவியானவர்
அவரது சொந்த வார்த்தைகளைக் கூறுவ
தில்லை. அவர் என்ன கேட்டிருக்கிறாரோ
அவற்றையே பேசுவார். 14நடக்கப்போகிற
வற்றை பற்றி மட்டுமே அவர் பேசுவார். உண்
மையின் ஆவியானவர் எனக்கு மகிமையைக்
கொண்டுவருவார். எப்படி என்றால் அவர்
என்னிடம் கருத்துக்களைப் பெற்று உங்களுக்
குச் சொல்லுவார். 15பிதாவினுடையவைகள்
எல்லாம் என்னுடையவைகள். அதனால்தான்
ஆவியானவர் என்னிடமிருந்து கருத்துக்
களைப் பெற்று உங்களுக்குச் சொல்லுவார்
என்றேன்.”

## துயரம் மகிழ்ச்சியாக மாறும்

16பின்னும் இயேசு “இன்னும் கொஞ்ச
காலத்திற்குப்பின் என்னை நீங்கள் பார்க்க
முடியாது. அதற்குக் கொஞ்ச காலத்திற்குப்
பின் நீங்கள் என்னை மீண்டும் பார்க்கலாம்”
என்றார்.

17இயேசுவின் சீஷர்களில் சிலர் ஒருவருக்
கொருவர், ‘கொஞ்ச காலத்திற்குப்பின் பார்க்க
முடியாது. கொஞ்ச காலத்திற்குப் பிறகு நீங்கள்
என்னை மீண்டும் பார்க்கலாம்’ என்றாரே.
இயேசு எதைக் கருதி இவ்வாறு கூறுகிறார்.
‘நான் பிதாவிடம் போகிறேன்’ என்று ஏன்
கூறுகிறார். 18‘கொஞ்சகாலம்’ என்று கூறி
னாரே. அதன் பொருள் என்ன? அவர் என்ன
சொல்கிறார் என்று எங்களால் புரிந்து
கொள்ள முடியவில்லையே” என்று பேசிக்
கொண்டனர்.

19சீஷர்கள் தன்னிடம் அதைப்பற்றி கேட்க
விரும்புவதை இயேசு கவனித்தார். ஆகையால்
இயேசு அவர்களிடம், “நீங்கள் உங்களுக்குள்
என்ன பேசிக்கொள்கிறீர்கள்? நான், ‘இன்னும்
கொஞ்ச காலத்திற்குப் பிறகு என்னைப்
பார்க்க முடியாது. அப்புறம் கொஞ்ச காலத்திற்
குப்பின்பு மீண்டும் என்னைப் பார்ப்பீர்கள்’
என்று சொன்னேனே, அதைப் பற்றியா?
20நான் உங்களுக்கு உண்மையைக் கூறுகி
றேன். நீங்கள் அழுது துக்கப்படுவீர்கள்.
ஆனால் உலகம் மகிழ்ச்சியாக இருக்கும். நீங்
கள் துக்கப்படுவீர்கள். ஆனால் உங்கள் துயரம்
மகிழ்ச்சியாக மாறும். 21ஒரு பெண், குழந்தை
யைப் பெற்றெடுக்கும்போது அவளுக்கு வலி
ஏற்படும். ஏனென்றால் அவளுக்கு குறிப்பிட்ட
வேளை நெருங்கி இருக்கும். ஆனால் குழந்தை
பிறந்ததும் அவள் தன் வலியை மறந்து விடு
வாள். குழந்தை இந்த உலகுக்கு வந்துவிட்டது
என்பதில் மிகுந்த மகிழ்ச்சி அடைவாள்.
22உங்களுக்கும் இதைப்போலத்தான். இப்பொ
ழுது நீங்கள் துயரமாய் இருக்கிறீர்கள். ஆனால்
நான் மீண்டும் உங்களைப் பார்ப்பேன். அப்
பொழுது நீங்கள் மகிழ்ச்சியாய் இருப்பீர்கள்.
எவராலும் உங்கள் மகிழ்ச்சியைப் பறிக்க
முடியாது.

23அந்த நாளில் நீங்கள் என்னிடம்
எதைப்பற்றியும் கேட்கமாட்டீர்கள். நான் உங்
களுக்கு உண்மையைக் கூறுகிறேன். என்
பேரில் நீங்கள் எதைக் கேட்டாலும் என் பிதா
உங்களுக்குத் தருவார். 24இதுவரை நீங்கள்
என்பேரால் எதையும் கேட்கவில்லை. கேளுங்
கள், அப்பொழுது நீங்கள் பெற்றுக்கொள்வீர்
கள். உங்கள் மகிழ்ச்சி முழுமையான மகிழ்ச்சி
யாய் இருக்கும்.

## உலகத்தின் மீது வெற்றி

25“நான் இவற்றையெல்லாம் உங்களுக்கு
மறைபொருளில் கூறியிருக்கிறேன். ஆனால்
காலம் வரும். அப்போது நான் இவ்வாறு
மறைபொருளில் பேசாமல் வெளிப்படையாய்
செய்திகளை அந்தப் பிதாவைப்பற்றிக் கூறு
வேன். 26அந்த நாளில் நீங்கள் பிதாவிடம்
என்பேரில் உங்களுக்கானதைக் கேட்பீர்கள்.
நான் உங்களுக்காக என் பிதாவிடம் கேட்டுக்
கொள்ளும் தேவை இருக்காது என்று சொல்
கிறேன். 27என் பிதா அவராகவே உங்களை
நேசிக்கிறார். ஏனென்றால் நீங்கள் என்னிடம்
அன்பாய் இருந்தீர்கள். நான் தேவனிடம்
இருந்து வந்ததாக நீங்கள் நம்பியிருந்தீர்கள்.
28நான் இந்த உலகத்துக்கு என் பிதாவிடம்
இருந்து வந்தேன். இப்பொழுது நான் இந்த
உலகத்தைவிட்டுப் போகிறேன். என் பிதா
விடம் திரும்பிப் போகிறேன்” என்றார்.

29பிறகு இயேசுவின் சீஷர்கள் அவரிடம்,
“நீர் இப்பொழுது எங்களிடம் தெளிவாகப்
பேசிக் கொண்டிருக்கிறீர். புரிந்து கொள்வதற்
குக் கடினமான வார்த்தைகளை நீர் பயன்படுத்
தவில்லை. 30உமக்கு எல்லாம் தெரியும் என்
பதை நாங்கள் இப்போது தெரிந்து கொண்
டோம். உம்மிடம் ஒருவன் ஒரு கேள்வியைக்
கேட்பதற்கு முன்னரே அக்கேள்விக்கு உம்மால்
பதில்கூற முடியும். இவை நீர் தேவனிடம்
இருந்து வந்தவர் என்பதை எங்களை நம்ப
வைக்கிறது” என்றனர்.

31இயேசு அவர்களிடம், “எனவே நீங்கள்
இப்போது நம்புகிறீர்கள். 32என்னைக் கவனி
யுங்கள். நீங்கள் சிதறிப்போகிற வேளை இதோ
நெருங்கிக்கொண்டிருக்கிறது. ஒவ்வொருவரும்
தங்கள் சொந்த வீட்டிற்குப்போய் என்னை
விட்டு விலகிப்போவீர்கள். அந்த நேரம் இதோ
வந்துவிட்டது. நீங்கள் என்னை விட்டுப்போ
வீர்கள். நான் தனியே இருப்பேன். எனினும்
நான் உண்மையில் தனித்திருக்க மாட்டேன்.
ஏனென்றால் என்னோடு என் பிதா இருக்
கிறார்.

33“என்னில் உங்களுக்குச் சமாதானம்
இருக்கும் பொருட்டு இவற்றை நான் உங்களுக்
குச் சொன்னேன். இந்த உலகத்தில் உங்களுக்
குத் தொந்தரவுகள் ஏற்படும். ஆனால் தைரி
யமாக இருங்கள். நான் இந்த உலகத்தை
வென்றுவிட்டேன்” என்றார்.

### சீஷர்களுக்காகப் பிரார்த்தனை

17 இவற்றையெல்லாம் இயேசு சொன்ன
பிறகு, அவர் தனது கண்களால் வானத்
தை (பரலோகத்தை) அண்ணாந்து பார்த்தார்.
“பிதாவே, நேரம் வந்துவிட்டது. உமது குமார
னுக்கு மகிமையைத் தாரும். அதனால் உமது
குமாரனும் உமக்கு மகிமையைத் தருவார்.
2உமது குமாரன் அவரிடம் ஒப்படைக்கப்பட்ட
அனைத்து மக்களுக்கும் நிரந்தர வாழ்வை
கொடுக்கும்படியாக அனைத்து மக்கள்மீதும்
அவருக்கு அதிகாரம் கொடுத்தீர். 3அந்த மனி
தர்கள், நீர்தான் உண்மையான தேவன் என்
பதையும் உம்மால் அனுப்பப்பட்டவர் இயேசு
கிறிஸ்து என்பதையும் தெரிந்து கொள்வார்
கள். இவ்வாறு தெரிந்து கொள்வதுதான்
நிரந்தரமான வாழ்க்கை. 4நான் செய்யுமாறு
நீர் கொடுத்த வேலைகளை நான் முடித்துவிட்
டேன். நான் பூமியில் உம்மை மகிமைப்படுத்
தினேன். 5இப்பொழுது, உம்மோடு இருக்கும்
மகிமையைத் தாரும். உலகம் உண்டாவதற்கு
முன்பிருந்தே உம்மோடு நான் கொண்டிருந்த
மகிமையைத் தாரும்.

6“உலகத்திலிருந்து சில ஆட்களை நீர் எனக்
குக் கொடுத்தீர். நான் அவர்களுக்கு உம்மை
வெளிப்படுத்தினேன். அவர்கள் உம்முடைய
வர்களாக இருந்தார்கள். அவர்களை எனக்குத்
தந்தீர். அவர்கள் உமது போதனைக்குக் கீழ்ப்
படிந்தார்கள். 7நீர் எனக்குத் தந்தவையெல்லாம்
உம்மிடமிருந்து வந்தவை என்று அவர்கள்
இப்போது தெரிந்து கொண்டனர். 8நீர் எனக்
குக் கொடுத்த போதனைகளை நான் அவர்க
ளுக்குக் கொடுத்தேன். அவற்றை அவர்கள்
ஏற்றுக்கொண்டனர். உண்மையாகவே நான்
உம்மிடமிருந்து வந்திருக்கிறேன் என்பதை
அவர்கள் தெரிந்து கொண்டார்கள். நீர்
என்னை அனுப்பிவைத்ததையும் அவர்கள்
நம்புகிறார்கள். 9நான் அவர்களுக்காக இப்பொ
ழுது வேண்டுகிறேன். நான் உலகில் உள்ள
மக்களுக்காக வேண்டிக்கொள்ளவில்லை.
ஆனால் நீர் எனக்குக் கொடுத்த மக்களுக்காக
வேண்டுதல் செய்கிறேன். ஏனென்றால் அவர்
கள் உம்முடையவர்கள். 10என்னுடையவை
எல்லாம் உம்முடையவை. உம்முடையவை
எல்லாம் என்னுடையவை. அவர்களில் நான்
மகிமை அடைந்திருக்கிறேன். 11இப்பொழுது
நான் உம்மிடத்தில் வந்துகொண்டிருக்கிறேன்.
நான் இனிமேல் உலகத்தில் இருக்கமாட்டேன்.
ஆனால் இவர்கள் இப்பொழுதும் உலகத்தில்
தான் இருக்கிறார்கள். பரிசுத்த பிதாவே, உமது
பெயரின் வல்லமையினால் அவர்கள் பாது
காப்பாக இருக்கச் செய்யும். இதன் மூலம்
நீரும் நானும் ஒன்றாய் இருப்பது போலவே
அவர்களும் ஒன்றாயிருப்பார்கள். 12நான்
அவர்களோடு இருந்தபோது அவர்களைப்
பாதுகாத்து வந்தேன். நீர் எனக்குத் தந்த உமது
பெயரின் வல்லமையினால் அவர்களைப்
பாதுகாத்தேன். அவர்களில் ஒருவன் மட்டும்
இழக்கப்பட்டான். (யூதாஸ்) அவன் இழக்கப்படு
வதற்காகவே தேர்ந்தெடுக்கப்பட்டவன். ஏற்கெ
னவே வேதவாக்கியங்களில் எழுதப்பட்டவை
நிறைவேறும்படியே அவன் இழக்கப்பட்டான்.

13“நான் இப்பொழுது உம்மிடம் வருகிறேன்.
ஆனால் இவற்றையெல்லாம் நான் உலகில்
இருக்கும்போதே வேண்டிக் கொள்கிறேன்.
நான் இவற்றையெல்லாம் கூறுகிறேன். ஆத
லால் அவர்கள் எனது மகிழ்ச்சியைப் பெற
முடியும். அவர்கள் எனது முழுமையான
மகிழ்ச்சியையும் பெறவேண்டும் என நான்
விரும்புகிறேன். 14உமது போதனைகளை நான்
அவர்களுக்குக் கொடுத்திருக்கிறேன். உலகம்
அவர்களை வெறுக்கிறது. ஏனென்றால் அவர்
கள் இந்த உலகத்தைச் சார்ந்தவர்கள் அல்லர்.
நானும் இந்த உலகத்தைச் சார்ந்தவன் அல்
லன்.

15அவர்களை உலகத்திலிருந்து வெளியே
எடுக்கும்படி நான் உம்மை வேண்டிக்கொள்ள
வில்லை. அவர்களை நீர் தீமையிலிருந்து
பாதுகாத்துக்கொள்ளும்படி வேண்டிக் கொள்
கிறேன். 16நான் இந்த உலகத்தை சாராதது
போலவே அவர்களும் இந்த உலகத்தைச் சாரா
தவர்களாய் இருக்கிறார்கள். 17உம்முடைய
உண்மையின் மூலம் உமது சேவைக்கு அவர்
களைத் தயார்படுத்தும். உமது போதனையே
உண்மை. 18நீர் என்னை உலகத்துக்கு அனுப்
பிவைத்தீர். அதுபோலவே நானும் அவர்களை
உலகத்துக்குள் அனுப்புகிறேன். 19நான்
சேவைக்காக என்னைத் தயார் செய்து கொண்
டேன். நான் இதனை அவர்களுக்காகவே செய்
கிறேன். எனவே, அவர்களும் உமது சேவைக்
காக உண்மையில் தம்மைத் தயார் செய்து
கொள்வார்கள்.

20“நான் இவர்களுக்காக வேண்டிக் கொள்
கிறேன். இவர்களுக்காக மட்டுமல்ல இவர்களு
டைய உபதேசங்களால் என்மீது நம்பிக்கை
வைக்கிறவர்களுக்காகவும் நான் வேண்டிக்
கொள்கிறேன். 21பிதாவே, என்னில் நம்பிக்கை
வைக்கிற அனைவரும் ஒன்றாயிருப்பதற்கா
கவும் நான் வேண்டிக் கொள்கிறேன். நீர்
என்னில் இருக்கிறீர். நான் உம்மில் இருக்
கிறேன். அவர்கள் எல்லோரும் நம்மில் ஒன்
றாக இருக்கும்படிக்கும் நான் உம்மை வேண்
டிக்கொள்கிறேன். ஆகையால் இவ்வுலகம் நீர்
என்னை அனுப்பினதில் நம்பிக்கை கொள்
ளும்.

22“நீர் எனக்குத் தந்த மகிமையை நான்
தருவதால் அவர்கள் ஒன்றாக இருப்பார்கள்.
நானும் நீரும் ஒன்றாக இருப்பது போல, 23நான்
அவர்களில் இருப்பேன்; நீர் என்னில் இருப்பீர்.
ஆக அனைவரும் ஒன்றாய் இருப்பார்கள்.
பிறகு இந்த உலகம் நீர் என்னை அனுப்
பினதைத் தெரிந்து கொள்ளும். நீர் என்னிடம்
அன்பாய் இருப்பது போலவே நீர் அவர்களி
டமும் அன்பாய் இருக்கிறீர் என்பதையும்
உலகம் தெரிந்து கொள்ளும்.

24“பிதாவே! நீர் எனக்குத் தந்த இவர்கள்,
நான் எங்கே இருந்தாலும் என்னுடனே
இருக்குமாறு விரும்புகிறேன். அவர்கள் என்
மகிமையைக் காணவேண்டும் எனவும் விரும்
புகிறேன். உலகம் உண்டாவதற்கு முன்னரே
நீர் என்னுடன் அன்பாய் இருந்தீர். இதனால்
எனக்கு நீர் மகிமை தந்தீர். 25பிதாவே! நீர்
நல்லவராய் இருக்கிறீர். இந்த உலகம் உம்மை
அறிந்து கொள்ளவில்லை. ஆனால் உம்மை
நான் அறிந்து கொண்டுள்ளேன். இந்த மக்கள்
நீர் என்னை அனுப்பினதைத் தெரிந்து கொண்
டுள்ளனர். 26உம்மை நான் அவர்களுக்கு
வெளிப்படுத்தினேன். இன்னும் வெளிப்படுத்
துவேன். பிறகு நீர் என்னிடம் அன்பாய் இருப்
பதுபோன்று அவர்களும் அன்பாய் இருப்
பார்கள். நானும் அவர்களுக்குள் வாழ்வேன்”
என்றார்.

### இயேசு கைது செய்யப்படுதல்

*(மத்தேயு 26:47-56; மாற்கு 14:43-50;
லூக்கா 22:47-53)*

18 இயேசு தன் பிரார்த்தனையை முடித்துக்
கொண்டதும், தன் சீஷர்களுடன் போ
னார். அவர்கள் கீதரோன் என்னும் பள்ளத்
தாக்குக்கு அப்பால் தாண்டிப் போனார்கள்.
ஒலிவ மரங்கள் நிறைந்த தோட்டம் இருந்தது.
இயேசுவும் சீஷர்களும் அங்கே போனார்கள்.
2யூதாஸுக்கு இந்த இடம் எங்கே இருக்கிறது
என்று தெரியும். ஏனென்றால் இயேசு அடிக்
கடி அவ்விடத்தில் தம் சீஷர்களோடு சந்தித்
திருக்கிறார். 3யூதாஸ் இயேசுவுக்கு எதிராக
மாறிப் போனவன். எனவே அவன் ஒரு
சேவகர் குழுவைக் கூப்பிட்டுக்கொண்டு தோட்
டத்திற்கு வந்தான். அவன் தலைமை ஆசாரி
யர், பரிசேயர் என்பவர்களால் அனுப்பப்பட்ட
காவல்காரரையும் அழைத்து வந்தான். அவர்
கள் தம்மோடு பந்தங்களையும், தீவட்டிகளை
யும், ஆயுதங்களையும் கொண்டுவந்தனர்.
4இயேசு அவருக்கு நடக்கவிருக்கும் எல்லா
வற்றையும் அறிந்திருந்தார். அவர் வெளியே
வந்து, “நீங்கள் யாரைத் தேடுகிறீர்கள்?”
என்று கேட்டார்.
5அதற்கு அவர்கள் “நாசரேத்திலிருந்து வந்த
இயேசுவை” என்றனர்.
இயேசுவோ, “நானே இயேசு” என்றார்.
(அவருக்கு எதிராக மாறின யூதாஸும் அவர்
களோடு நின்றிருந்தான்.) 6இயேசு அவர்க
ளிடம், “நான்தான் இயேசு” என்று சொன்ன
பொழுது அவர்கள் பின்வாங்கித் தரையில்
விழுந்தார்கள்.
7இயேசு மீண்டும் அவர்களிடம், “யாரைத்
தேடுகிறீர்கள்?” என்று கேட்டார்.
அவர்கள் அதற்கு, “நாசரேத்திலிருந்து வந்த
இயேசுவை” என்றனர்.
8இயேசு அதற்கு, “நான்தான் இயேசு”
என்று ஏற்கெனவே சொல்லிவிட்டேன்.
ஆகையால் நீங்கள் என்னைத் தேடுவதானால்
இவர்களைப் போகவிடுங்கள்” என்றார். 9‘நீர்
எனக்குத் தந்தவர்களில் ஒருவனையும் நான்
இழக்கவில்லை’ என்று அவர் சொன்னது
நிறைவேறும்படி இவ்வாறு நிகழ்ந்தது.
10சீமோன் பேதுருவிடம் ஒரு வாள்
இருந்தது. அவன் அதை வெளியே எடுத்து
தலைமை ஆசாரியனின் வேலைக்காரனின்
வலது காதை வெட்டிப் போட்டான். (அந்த
வேலைக்காரனின் பெயர் மல்கூஸ்) 11இயேசு
பேதுருவிடம் “உனது வாளை அதனுடைய
உறையிலே போடு. என் பிதா எனக்குக்
கொடுத்திருக்கிற துன்பமாகிய கோப்பையில்
நான் குடிக்கவேண்டும்” என்றார்.

### அன்னாவின் முன் இயேசு

*(மத்தேயு 26:57-58; மாற்கு 14:53-54;
லூக்கா 22:54)*

12பிறகு போர்ச்சேவகரும் அவர்கள் தலை
வனும் யூதக் காவலர்களும் இயேசுவைக்
கைது செய்தனர். அவர்கள் இயேசுவைக் கட்டி
13அன்னாவிடம் கொண்டு வந்தனர். இவன்
காய்பாவின் மாமனார். காய்பா அந்த ஆண்
டின் தலைமை ஆசாரியன். 14இந்தக் காய்பா
தான் ஏற்கெனவே யூதர்களிடம், ‘எல்லா மக்க
ளுக்காகவும் ஒரு மனிதன் மரிப்பது நல்லது’
என்று சொன்னவன்.

### பேதுருவின் மறுதலிப்பு

*(மத்தேயு 26:69-70; மாற்கு 14:66-68;
லூக்கா 22:55-57)*

15சீமோன் பேதுருவும் இயேசுவின் இன்
னொரு சீஷனும் இயேசுவைப் பின்தொடர்ந்து
போனார்கள். அந்தச் சீஷன் தலைமை ஆசா
ரியனை அறிந்திருந்தான். அதனால் அவன்
இயேசுவைப் பின்தொடர்ந்து தலைமை ஆசாரி
யனின் முற்றம் போனான். 16ஆனால் பேதுரு
வாசலுக்கு வெளியே காத்திருந்தான்.
தலைமை ஆசாரியனைத் தெரிந்த சீஷன்
வெளியே வந்தான். அவன் கதவைத் திறந்த
பெண்ணோடு பேசினான். பிறகு அவன்
பேதுருவையும் உள்ளே அழைத்துக்கொண்டு
போனான். 17வாசலுக்குக் காவலாய் இருந்த
அந்தப்பெண் பேதுருவிடம் “நீயும் இந்த மனி
தனின் சீஷர்களுள் ஒருவன் தானே?” என்று
கேட்டாள். அதற்குப் பேதுரு “இல்லை. நான்
அல்ல” என்றான்.
18அது குளிர்காலம். எனவே வேலைக்காரர்
களும், சேவகர்களும் நெருப்பை உண்டாக்
கினர். அவர்கள் அதைச்சுற்றி நின்றுகொண்டு
குளிர்காய்ந்தனர். பேதுருவும் அவர்களோடு
குளிர்காய நின்று கொண்டான்.

### தலைமை ஆசாரியனின் கேள்வி

*(மத்தேயு 26:59-66; மாற்கு 14:55-64
லூக்கா 22:66-71)*

19தலைமை ஆசாரியன் இயேசுவிடம்
அவரது சீஷர்களைக் குறித்து விசாரித்தான்.

அதோடு அவரது போதனைகளைக் குறித்து
விசாரித்தான். 20அதற்கு இயேசு, "நான் மக்
களிடம் எப்பொழுதும் வெளிப்படையாகவே
பேசிவந்தேன். நான் எப்பொழுதும் யூதர்கள்
கூடும் அரங்கங்களிலும், ஆலயங்களிலுமே
உபதேசித்து இருக்கிறேன். யூதர்கள் எல்லோ
ரும் அங்கு வந்திருக்கிறார்கள். நான் எதையும்
இரகசியமாகப் பேசவில்லை. 21அப்படியிருக்க
நீங்கள் ஏன் என்னை விசாரிக்கிறீர்கள்? என்
போதனைகளைக் கேட்டவர்களை விசாரித்
துப் பாருங்கள். நான் என்ன சொன்னேன்
என்பது அவர்களுக்குத் தெரியும்" என்றார்.

22இயேசு இவ்வாறு சொன்னபோது, அவர்
அருகிலே நின்றிருந்த சேவகரில் ஒருவன்
அவரை ஒரு அறை அறைந்தான். அவன்,
"நீ தலைமை ஆசாரியரிடம் அந்த முறையில்
பதில் சொல்லக்கூடாது" என்று எச்சரித்தான்.
23அதற்கு இயேசு, "நான் ஏதாவது தப்பாகப்
பேசியிருந்தால் எது தப்பு என்று இங்கு
இருக்கிற எல்லாருக்கும் சொல். ஆனால் நான்
சொன்னவை சரி என்றால் பிறகு ஏன்
என்னை அடிக்கிறாய்?" என்று கேட்டார்.
24ஆகையால் அன்னா இயேசுவை
தலைமை ஆசாரியனாகிய காய்பாவிடம்
அனுப்பிவைத்தான். இயேசு அப்பொழுதும்
கட்டப்பட்ட நிலையிலேயே இருந்தார்.

### பேதுருவின் பொய்

*(மத்தேயு 26:71-75; மாற்கு 14:69-72; லூக்கா 22:58-62)*

25சீமோன் பேதுரு நெருப்பருகில் நின்று
குளிர்காய்ந்து கொண்டிருந்தான். அப்பொ
ழுது அருகில் இருந்தவர்கள் "அந்த மனிதனின்
சீஷர்களுள் நீயும் ஒருவன்தானே?" என்று கேட்
டார்கள்.

பேதுரு அதனை மறுத்தான். அவன்,
"இல்லை. நான் அல்ல" என்றான்.
26தலைமை ஆசாரியனின் வேலைக்காரர்
களுள் ஒருவன் அங்கு இருந்தான். அவன்
பேதுருவால் காது அறுபட்டவனின் உற
வினன். அவன், "அந்தத் தோட்டத்தில் நான்
உன்னையும் அந்த மனிதனோடு பார்த்தேன்
என்று நினைக்கிறேன்" என்றான்.
27ஆனால் பேதுரு மீண்டும், "இல்லை. நான்
அவரோடு இருக்கவில்லை" என்று கூறி
னான். அப்பொழுது சேவல் கூவிற்று.

### பிலாத்துவுக்கு முன் இயேசு

*(மத்தேயு 27:1-2, 11-31; மாற்கு 15:1-20; லூக்கா 23:1-25)*

28பிறகு யூதர்கள் இயேசுவைக் காய்பா
விடம் இருந்து ரோம ஆளுநரின் அரண்
மனைக்கு அழைத்துக்கொண்டு போனார்கள்.
அப்போது அதிகாலை நேரம். யூதர்கள் அரண்
மனைக்கு உள்ளே போக விரும்பவில்லை.
போனால் அவர்களின் தூய்மை கெட்டுத்
தீட்டுப்படும். ஏனென்றால் அவர்கள் பஸ்கா
பண்டிகையின் விருந்தை உண்ண விரும்
பினர். 29எனவே பிலாத்து வெளியே வந்தான்.
அவன் அவர்களிடம், "இந்த மனிதன் மீது
என்ன குற்றம் சாட்டுகிறீர்கள்?" என்று கேட்
டான்.

30அதற்கு யூதர்கள், "அவன் ஒரு கெட்ட
மனிதன். அதனால் தான் அவனை உம்மிடம்
அழைத்து வந்தோம்" என்றனர்.
31பிலாத்து யூதர்களிடம், "யூதர்களாகிய
நீங்கள் இவனை அழைத்துக்கொண்டு போய்
உங்கள் விதிமுறைகளின்படி நியாயம் தீருங்
கள்" என்றான். அதற்கு யூதர்கள், "எவரையும்
மரண தண்டனைக்குட்படுத்த எங்களுக்கு அதி
காரமில்லையே" என்றனர். 32(தான் எவ்வாறு
மரிக்கப் போகிறேன் என்று ஏற்கெனவே
இயேசு சொல்லியிருந்தது உண்மையாகும்படி
இவ்வாறு நிகழ்ந்தது)
33பிறகு பிலாத்து அரண்மனைக்குள் திரும்
பிச் சென்றான். அவன் இயேசுவைத் தன்னிடம்
அழைத்தான். "நீ யூதர்களின் அரசரா?" என்று
அவரிடம் கேட்டான்.
34இயேசு அவனிடம், "இது உமது சொந்தக்
கேள்வியா அல்லது என்னைப்பற்றி பிறர்
உம்மிடம் சொன்னதா?" என்று கேட்டார்.
35பிலாத்து அதற்கு, "நான் யூதனல்ல. உனது
சொந்த மக்களும் அவர்களின் தலைமை ஆசா
ரியனும் உன்னை என்னிடம் கொண்டுவந்தி
ருக்கிறார்கள். நீ என்ன தவறு செய்தாய்?"
என்று கேட்டான்.
36"எனது இராஜ்யம் இந்த உலகத்துக்கு
உரியதன்று. அது இந்த உலகத்தோடு தொடர்
புடையது எனில் என் சேவகர்கள் எனக்காகப்
போரிட்டிருப்பார்கள். நான் யூதர்களின் கை
யில் ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்க மாட்டேன்.
எனவே என் இராஜ்யம் இவ்விடத்திற்கு
உரியதன்று" என்று இயேசு சொன்னார்.
37பிலாத்து அவரிடம், "அப்படியானால் நீ
அரசன் தானோ?" என்று கேட்டான்.

அதற்கு இயேசு, "நான் அரசன் என்று நீ
சொல்கிறாய். அது உண்மைதான். இந்த நோக்
கத்துக்காகத்தான் நான் இந்த உலகத்தில் பிறந்
தேன். உண்மையை சொல்வதற்காக வந்தேன்.
உண்மையுடையவன் எவனும் என் பேச்சைக்
கேட்கிறான்" என்றார்.
38பிலாத்து, "உண்மை என்பது என்ன?"
என்று கேட்டான். கேட்டுக்கொண்டே மறுபடி
யும் அவன் யூதர்களிடம் போனான். "நான்
அவனுக்கெதிராகக் குற்றம்சாட்ட முடிய
வில்லை. 39பஸ்கா பண்டிகையில் உங்களுக்
காக எவனாவது ஒருவனை நான் விடுதலை
செய்யலாமே. ஆகையால் யூதருடைய இரா
ஜாவை நான் உங்களுக்காக விடுதலை செய்
யலாமா?" என்று கேட்டான்.
40அதற்கு யூதர்கள், "இவனை அல்ல,
பரபாஸை விடுதலை செய்யுங்கள்" என்று
சத்தமிட்டார்கள். (பரபாஸ் என்பவன் ஒரு
திருடன்).

19 பிறகு பிலாத்து இயேசுவை அழைத்துப்
போய் சவுக்கால் அடிக்குமாறு கட்டளை
யிட்டான். 2போர்ச் சேவகர்கள் முள்ளினால்
ஒரு முடியைப் பின்னினர். அவர்கள் அதை
இயேசுவின் தலைமீது அணிவித்தனர். பிறகு
சிவப்பான அங்கியை அவருக்கு உடுத்தி
னார்கள். 3'யூதருடைய இராஜாவே, வாழ்க'
என்று அடிக்கடி பலதடவை அவரிடம் வந்து
சொன்னார்கள். அவர்கள் இயேசுவை முகத்
தில் அறைந்தார்கள்.

4மீண்டும் பிலாத்து யூதர்களிடம் போய்
"பாருங்கள்! நான் உங்களுக்காக இயேசுவை
வெளியே கொண்டு வருகிறேன். நான் இவ
னிடம் ஒரு குற்றமும் காணவில்லை என்று
நீங்கள் அறிந்து கொள்ளவேண்டும்" என்
றான். 5பிறகு இயேசு வெளியே வந்தார். அவர்
தலையில் முள்முடியும் சரீரத்தில் சிவப்பு
அங்கியும் அணிந்திருந்தார். "இதோ அந்த
மனிதன்" என்று யூதர்களிடம் பிலாத்து சொன்
னான்.

6பிரதான ஆசாரியரும் யூதக் காவலர்களும்
இயேசுவைக் கண்டவுடன் "அவனைச் சிலு
வையில் அறையுங்கள்" என்று சத்தமிட்டனர்.

ஆனால் பிலாத்துவோ, "நீங்கள் அவனை
அழைத்துப்போய் நீங்களாகவே அவனைச்
சிலுவையில் அறையுங்கள். நான் தண்டனை
தரும்படியாக இவனுக்கு எதிராக எந்த குற்றத்
தையும் கண்டு பிடிக்கவில்லை" என்று கூறி
விட்டான்.

7யூதர்களோ, "எங்களுக்கென்று ஒரு சட்டம்
உண்டு. அதன்படி இவன் சாக வேண்டும்.
ஏனென்றால் அவன் தன்னைத் தேவனின்
குமாரன் என்று கூறியிருக்கிறான்" என்றனர்.
8பிலாத்து இவற்றைக் கேட்டதும் மேலும்
பயந்தான்.

9பிலாத்து மீண்டும் அரண்மனைக்குள்
போனான். அவன் இயேசுவிடம், "நீ எங்கே
இருந்து வருகிறாய்?" எனக் கேட்டான்.
ஆனால் இயேசு அவனுக்குப் பதில் சொல்ல
வில்லை. 10அதனால் பிலாத்து, "நீ என்னோடு
பேச மறுக்கவா செய்கிறாய்? நான் உன்னை
விடுதலை செய்யக்கூடிய அதிகாரத்தில் இருப்
பவன். இதனை நினைத்துக்கொள். உன்னைச்
சிலுவையில் அறைந்து கொல்லும் அதிகா
ரமும் எனக்கு இருக்கிறது" என்றான்.

11"தேவனிடமிருந்து அதிகாரம் வந்தால்
ஒழிய நீர் என்மீது எவ்வித அதிகாரமும்
செலுத்த முடியாது. எனவே, என்னை உம்மி
டம் ஒப்படைத்தவனுக்கு அதிகப் பாவம்
உண்டு" என்று இயேசு பதிலுரைத்தார்.

12இதற்குப் பிறகு இயேசுவை விடுதலை
செய்ய பிலாத்து முயற்சி செய்தான். ஆனால்
யூதர்களோ, "எவனொருவன் தன்னை அரசன்
என்று கூறுகிறானோ அவன் இராயனின்
பகைவன். எனவே, நீங்கள் இயேசுவை விடு
தலை செய்தால் நீங்கள் இராயனின் நண்பன்
இல்லை என்று பொருள்" எனச் சத்தமிட்
டார்கள். 13யூதர்கள் சொன்னவற்றைப் பிலாத்து
கேட்டான். எனவே, அவன் இயேசுவை அரண்
மனையைவிட்டு வெளியே இழுத்து வந்தான்.
யூதர்களின் மொழியில் கபத்தா என்று அழைக்
கப்பெறும் கல்தளவரிசை அமைக்கப்பட்ட
மேடைக்கு வந்தான். அங்கே இருந்த நீதிபதி
யின் இருக்கையில் அமர்ந்தான். 14அப்பொ
ழுது அது பஸ்காவுக்குத் தயாராகும் நாளாக
வும் மதியவேளையாகவும் இருந்தது. பிலாத்து
யூதர்களிடம் "இதோ உங்கள் இராஜா" என்
றான்.

15அதற்கு யூதர்கள், "அவனை அப்புறப்
படுத்துங்கள்! அவனை அப்புறப்படுத்துங்கள்!
அவனைச் சிலுவையில் அறைந்து கொல்லுங்
கள்" என்று சத்தமிட்டனர்.

அவர்களிடம் பிலாத்து, "உங்களது அர
சனை நான் சிலுவையில் அறைந்து கொல்ல
வேண்டும் என்று விரும்புகிறீர்களா?" என்று
கேட்டான்.

அதற்குத் தலைமை ஆசாரியன், "எங்களது
ஒரே அரசர் இராயன் மட்டுமே" என்று பதில்
சொன்னான். 16அதனால் பிலாத்து இயேசு
வைச் சிலுவையில் அறைந்து கொல்லும்படி
அவரை அவர்களிடம் ஒப்படைத்தான்.

## சிலுவையில் இயேசு

(மத்தேயு 27:32-44; மாற்கு 15:21-32;
லூக்கா 23:26-43)

சேவகர்கள் இயேசுவை இழுத்துக்கொண்டு
போனார்கள். 17இயேசு தனது சிலுவையைத்
தானே சுமந்து கொண்டு போனார். அவர்
மண்டை ஓடுகளின் இடம் என்னும் கபால
ஸ்தலம் என்று அழைக்கப்படும் இடத்துக்குப்
போனார். (இதனை யூத மொழியில் கொல்கதா
என்று அழைப்பர்) 18கொல்கதாவில் சிலுவை
யில் இயேசுவை ஆணிகளால் அறைந்தார்கள்.
அவர்கள் வேறு இருவரையும் சிலுவையில்
அறைந்தனர். இயேசுவை நடுவிலும் ஏனைய
இருவரை இருபக்கங்களிலும் நட்டுவைத்தனர்.
19பிலாத்து ஒரு அறிவிப்பு எழுதி அதனை
இயேசுவின் சிலுவையின் மேல் பொருத்தி
வைத்தான். அந்த அறிவிப்பில் "நசரேயனா
கிய இயேசு, யூதர்களின் அரசர்" என்று
எழுதப்பட்டிருந்தது. 20அந்த அறிவிப்பு யூத
மொழியிலும் இலத்தீன், கிரேக்க மொழிகளி
லும் இருந்தது. ஏராளமான யூதர்கள் இந்த
அறிவிப்பை வாசித்தனர். ஏனென்றால் இயேசு
வைச் சிலுவையில் அறைந்த அந்த இடம்
நகரத்தின் அருகில் இருந்தது. 21யூதர்களின்
தலைமை ஆசாரியன் பிலாத்துவிடம், "யூதரு
டைய அரசர் என்று எழுதக்கூடாது. அவன்
தன்னை யூதருடைய அரசன் என்று சொன்
னதாக எழுதவேண்டும்" என்றான்.

22அதற்குப் பிலாத்து, "நான் எழுதினதை
மாற்றி எழுதமாட்டேன்" என்று கூறிவிட்டான்.

23ஆணிகளால் இயேசுவைச் சிலுவையில்
அறைந்த பிறபாடு, சேவகர்கள் அவரது

ஆடையை எடுத்துக் கொண்டனர். அவர்கள்
அதனை நான்கு பாகங்களாகப் பங்கு வைத்த
னர். ஒவ்வொரு சேவகனும் ஒரு பாகத்தைப்
பெற்றான். அவர்கள் அவரது அங்கியையும்
எடுத்தனர். அது தையலில்லாமல் ஒரே துணி
யாக நெய்யப்பட்டிருந்தது. 24எனவே சேவகர்
கள் தங்களுக்குள், "இதனை நாம் கிழித்து
பங்கு போடவேண்டாம். அதைவிட இது
யாருக்கு என்று சீட்டுப்போட்டு எடுத்துக்
கொள்வோம்" என்று சொல்லிக் கொண்டனர்.

> "அவர்கள் என் ஆடைகளைத் தங்களுக்
> குள் பங்கிட்டனர். என் அங்கியின் மேல்
> சீட்டுப் போட்டார்கள்"
>
> *சங்கீதம் 22:18*

என்று வேதவாக்கியம் கூறியது நிறைவே
றும்படிக்கு இவ்வாறு நிகழ்ந்தது.
25இயேசுவின் தாயார் சிலுவையின் அரு
கில் நின்றிருந்தார். அவரது தாயின் சகோ
தரியும் கிலெயோப்பா மரியாளும், மகதலேனா
மரியாளும் நின்று கொண்டிருந்தார்கள்.
26இயேசு அவருடைய தாயைப் பார்த்தார்.
அவரால் பெரிதும் நேசிக்கப்பட்ட சீஷனையும்
அங்கே பார்த்தார். அவர் தன் தாயிடம், "அன்
பான பெண்ணே, அதோ உன் மகன்" என்றார்.
27பிறகு இயேசு தன் சீஷனிடம், "இதோ உன்
னுடைய தாய்" என்றார். அதற்குப்பின் அந்த
சீஷன் இயேசுவின் தாயைத் தன் வீட்டிற்குத்
தன்னோடு அழைத்துச் சென்றான்.

## இயேசுவின் மரணம்

(மத்தேயு 27:45-56; மாற்கு 15:33-41;
லூக்கா 23:44-49)

28பின்பு எல்லாம் முடிந்தது என்பதை
இயேசு அறிந்தார். வேதவாக்கியம் நிறை
வேறும் பொருட்டு அவர், "நான் தாகமாயிருக்
கிறேன்"* என்றார். 29காடி நிறைந்த பாத்திரம்
ஒன்று அங்கே வைக்கப்பட்டிருந்தது. அங்கே
நின்ற சேவகர்கள் கடற்பஞ்சைக் காடியிலே
தோய்த்தார்கள். அதனை ஈசோப்புத் தண்டில்
மாட்டினார்கள். பிறகு அதனை இயேசுவின்
வாயருகே நீட்டினார்கள். 30இயேசு காடியைச்
சுவைத்தார். பிறகு அவர், "எல்லாம் முடிந்
தது" என்றார். இயேசு தன் தலையைச்
சாய்த்து இறந்து போனார்.
31அது ஆயத்தநாளாக இருந்தது. மறுநாள்
சிறப்பான ஓய்வு நாள். ஓய்வு நாளில் சரீரங்கள்
உயிரோடு சிலுவையில் இருப்பதை யூதர்கள்
விரும்பவில்லை. எனவே, அவர்களைச் சாக
டிக்க கால்களை முறித்து கொல்லவேண்டும்
என இதற்கான உத்தரவை யூதர்கள் பிலாத்து
விடம் கேட்டார்கள். அதோடு அவர்களின்
பிணங்களைச் சிலுவையில் இருந்து அப்புறப்
படுத்தவும் அனுமதி பெற்றனர். 32எனவே,
சேவகர்கள் இயேசுவின் ஒரு புறத்தில் சிலு
வையில் அறையப்பட்டவனிடம் வந்து அவன்
கால்களை முறித்தனர். பிறகு அவர்கள்
இயேசுவின் மறுபுறத்தில் சிலுவையில் அறை
யப்பட்டவனிடம் வந்து அவன் கால்களையும்
முறித்தனர். 33அவர்கள் இயேசுவிடம் வந்த
போது அவர் ஏற்கெனவே இறந்திருந்தார்.
எனவே அவரது கால்களை அவர்கள் முறிக்க
வில்லை. 34ஆனால் ஒரு சேவகன் தனது ஈட்
டியால் இயேசுவின் விலாவில் குத்தினான்.
அதிலிருந்து இரத்தமும் நீரும் வெளியே
வந்தது. 35(இவ்வாறு நிகழ்வதைப் பார்த்தவன்
அதைப்பற்றி கூறுகிறான். அவனே அதைக்
கூறுவதால் அதனை நீங்களும் நம்ப முடியும்.
அவன் சொல்கின்றவை எல்லாம் உண்மை.
அவன் சொல்வது உண்மையென்று அவன்
அறிந்திருக்கிறான்) 36"அவரது எலும்புகள்
எதுவும் முறிக்கப்படுவதில்லை"* என்று
வேத வாக்கியங்களில் சொல்லப்பட்டவை
நிறைவேறும்படி இவ்வாறு நிகழ்ந்தது. 37அத்
துடன் "மக்கள் தாங்கள் ஈட்டியால் குத்தின
வரைப் பார்ப்பார்கள்"* என்றும் வேதவாக்
கியத்தில் இன்னொரு இடத்தில் சொல்லப்பட்
டிருக்கிறது.

## இயேசுவின் அடக்கம்

(மத்தேயு 27:57-61; மாற்கு 15:42-47;
லூக்கா 23:50-56)

38பிறகு அரிமத்தியா ஊரானான
யோசேப்பு எனப்படும் மனிதன் பிலாத்து
விடம் வந்து இயேசுவின் சரீரத்தைக் கேட்
டான். (இவன் இயேசுவை பின்பற்றினவர்
களில் ஒருவன். ஆனால் அவன் யூதர்களுக்குப்
பயந்து இதைப்பற்றி இதுவரை மக்களிடம்
சொல்லவில்லை). யோசேப்பு இயேசுவின்
சரீரத்தை எடுத்துச்செல்ல, பிலாத்து அனுமதி
தந்தான். ஆகையால் யோசேப்பு வந்து இயேசு
வின் சரீரத்தை எடுத்துப் போனான். 39நிக்கோ
தேமு யோசேப்போடு சென்றான். இவன்
ஏற்கனவே ஒரு நாள் இரவு இயேசுவிடம்
வந்து அவரோடு பேசியிருக்கிறான். அவன்
100 இராத்தல்* வாசனைமிக்க கரியபோளமும்
வெள்ளைபோளமும் கலந்து கொண்டு வந்
தான். 40அவர்கள் இருவரும் இயேசுவின்
சரீரத்தை எடுத்துப் போனார்கள். அவர்கள்
அந்த சரீரத்தை வாசனைத் திரவியங்களோடு
கூட துணிகளினால் சுற்றினார்கள். (இது தான்
யூதர்கள் இறந்தவர்களை அடக்கம் செய்யும்
முறை) 41இயேசு சிலுவையில் அறையப்பட்ட
இடத்தில் ஒரு தோட்டம் இருந்தது. அங்கு ஒரு

---

**நான் தாகமாயிருக்கிறேன்** *சங். 22:15; 69:21.*

**அவரது ... முறிக்கப்படுவதில்லை** *சங்கீதம் 34:20. இந்த எண்ணம் யாத். 12:46 மற்றும் எண். 9:12 ஆகியவற்றிலிருந்து எடுக்கப்பட்டது.*

**மக்கள் ... பார்ப்பார்கள்** *சகரியா 12:10.*

**100 இராத்தல்** *100 ரோமானிய இராத்தல் இன்றைய 75 இராத்தலுக்குச் சமமானது.*

கல்லறை இருந்தது. அதில் இதுவரை எந்த
சரீரமும் வைக்கப்படவில்லை. 42அந்தக் கல்ல
றையில் இயேசுவை வைத்தார்கள். அன்று
யூதருடைய ஆயத்த நாளாக இருந்தது. அத்து
டன் அந்த இடம் நகரத்தின் அருகில் இருந்தது.

### இயேசுவின் உயிர்ப்பு

(மத்தேயு 28:1-10; மாற்கு 16:1-8;
லூக்கா 24:1-12)

20 வாரத்தின் முதல்நாள் அதிகாலையில்
மகதலேனா மரியாள், இயேசுவின்
சரீரம் இருந்த கல்லறைக்குச் சென்றாள். அது
அப்பொழுதும் இருளாக இருந்தது. கல்லறை
வாசலை மூடியிருந்த பெரிய கல் விலக்கி
வைக்கப்பட்டிருப்பதை அவள் கண்டாள்.
2எனவே மரியாள் சீமோன் பேதுருவிடமும்
இன்னொரு சீஷனிடமும் (இயேசு நேசித்தவன்)
ஓடிச் சென்று "அவர்கள் கர்த்தரது சரீரத்தைக்
கல்லறையைவிட்டு அப்புறப்படுத்திவிட்டனர்.
அவரை எங்கே வைத்திருக்கிறார்கள் என்று
தெரியவில்லை" என்றாள்.
3உடனே பேதுருவும் இன்னொரு சீஷனும்
கல்லறையை நோக்கிப் போனார்கள். 4இருவ
ரும் ஓடினாலும், பேதுருவைவிட அடுத்தவன்
வேகமாக ஓடிப் போனான். எனவே அந்த
சீஷன் முதலில் கல்லறையை அடைந்தான்.
5அவன் குனிந்து கல்லறைக்குள்ளே பார்த்
தான். துண்டுத் துணிகள் அங்கே கிடப்பதைக்
கண்டான். ஆனால் உள்ளே அவன் போக
வில்லை. 6பிறகு சீமோன் பேதுரு அவனுக்குப்
பின்னால் வந்தான். பேதுரு கல்லறைக்குள்ளே
போனான். 7அங்கே துணிகள் கிடப்பதைப்
பார்த்தான். தலையில் சுற்றப்பட்ட துணி
தனியாகச் சுருட்டி வைக்கப்பட்டிருந்தது.
8பிறகு அடுத்த சீஷனும் உள்ளே போனான்.
இந்த சீஷன்தான் கல்லறையை முதலாவது
ஓடிவந்து சேர்ந்தவன். அவன் நிகழ்ந்ததை எல்
லாம் பார்த்து நம்பிக்கை கொண்டான். 9(இந்த
சீஷர்கள், வேதவாக்கியங்களின்படி இயேசு
மரணத்தில் இருந்து உயிர்த்தெழவேண்டும்
என்று இன்னும் புரிந்து கொள்ளாமல் இருந்
தனர்)

### மகதலேனா மரியாளுக்கு இயேசு காட்சி அளித்தல்

(மாற்கு 16:9-11)

10பிறகு அவரது சீஷர்கள் வீட்டிற்குத்
திரும்பிப் போனார்கள். 11ஆனால் மரியாள்
கல்லறைக்கு வெளியே நின்று அழுது கொண்
டிருந்தாள். அவ்வாறு அழும்போதே, அவள்
குனிந்து கல்லறைக்குள்ளே பார்த்தாள்.
12வெள்ளை உடைகள் அணிந்த இரு தேவ
தூதர்களைப் பார்த்தாள். இயேசுவின் சரீரம்
இருந்த இடத்தில் அவர்கள் இருந்தனர். இயேசு
வின் தலை இருந்த இடத்தில் ஒரு தேவதூதனும்
அவரது பாதங்கள் இருந்த இடத்தில் இன்
னொரு தேவதூதனும் இருப்பதைக் கண்டாள்.
13அந்த தேவதூதர்கள் மரியாளிடம்,
"பெண்ணே! ஏன் அழுது கொண்டிருக்கி
றாய்?" என்று கேட்டனர்.
"சிலர் என் ஆண்டவரின் சரீரத்தை எடுத்
துக்கொண்டு போய்விட்டார்கள். அவரை
எங்கே வைத்திருக்கிறார்கள் என்று எனக்குத்
தெரியவில்லை" என்றாள் மரியாள். 14அவள்
இவ்வாறு சொல்லிவிட்டு திரும்பியபோது
இயேசு நின்றுகொண்டிருப்பதைக் கண்டாள்.
ஆனால் அவர்தான் இயேசு என்பதை அவள்
அறிந்து கொள்ளவில்லை.
15இயேசு அவளிடம், "பெண்ணே! ஏன்
அழுகிறாய். நீ யாரைத் தேடுகிறாய்?" என்று
கேட்டார்.
மரியாள் அவரை, அந்தத் தோட்டத்தின்
காவல்காரனாக இருக்கவேண்டும் என்று
நினைத்துக் கொண்டாள். எனவே அவள் அவ
ரிடம், "ஐயா, நீங்களா இயேசுவின் சரீரத்தை
எடுத்துக்கொண்டு போனீர்கள்? அவரை
எங்கே வைத்திருக்கிறீர்கள் என்று சொல்லுங்
கள். நான் போய் எடுத்துக்கொள்ள வேண்டும்"
என்றாள்.
16இயேசு "மரியாளே" என்று அழைத்தார்.
மரியாள் திரும்பி இயேசுவைப் பார்த்து,
"ரபூனீ" என்று யூத மொழியில் கூப்பிட்டாள்.
(இதற்கு போதகரே என்று பொருள்)
17இயேசு அவளிடம், "என்னைத் தொடாதே.
நான் இன்னும் என் பிதாவிடம் திரும்பிச்
செல்லவில்லை. ஆனால் போய் என் சகோத
ரர்களிடம், 'நான் என் பிதாவிடமும் உங்களின்
பிதாவிடமும் செல்கிறேன். நான் என் தேவ
னிடமும் உங்களின் தேவனிடமும் திரும்பிப்
போகிறேன்' என்று சொல்" என்றார்.
18மகதலேனா மரியாள் சீஷர்களிடம்
சென்று, "நான் ஆண்டவரைப் பார்த்தேன்"
என்று சொன்னாள். அதோடு அவர் சொன்
னவற்றையும் சொன்னாள்.

### சீஷர்களுக்கு இயேசுவின் காட்சி

(மத்தேயு 28:16-20; மாற்கு 16:14-18;
லூக்கா 24:36-49)

19அன்று வாரத்தின் முதல்நாள். அன்று
மாலையில் சீஷர்கள் கூடினர். கதவுகள்
அடைக்கப்பட்டன. ஏனென்றால் அவர்கள்
யூதர்களுக்குப் பயந்தனர். அப்பொழுது இயேசு
வந்து அவர்களின் நடுவில் நின்றார்.
"சமாதானம் உங்களோடு இருக்கட்டும்" என்
றார். 20அவர் இதனைச் சொன்ன பிறகு, தனது
சீஷர்களிடம் தனது கைகளையும் விலாவை
யும் காட்டினார். அவர்கள் கர்த்தரைப் பார்த்
ததும் பெரிதும் மகிழ்ந்தனர்.
21பிறகு மீண்டும் அவர்களிடம் இயேசு,
"சமாதானம் உங்களோடு இருக்கட்டும். பிதா
என்னை அனுப்பினார். அதே விதமாக நான்
இப்பொழுது உங்களை அனுப்புகிறேன்" என்
றார். 22இயேசு அதைச் சொன்ன பிறகு, அவர்
சீஷர்கள்மேல் ஊதினார். "பரிசுத்த ஆவியைப்

பெற்றுக் கொள்ளுங்கள். 23நீங்கள் மக்களது
பாவங்களை மன்னித்தால் அவை மன்னிக்கப்
படும். நீங்கள் மக்களது பாவங்களை மன்னிக்
காவிட்டால் அவை மன்னிக்கப்படாது” என்று
கூறினார்.

### தோமாவுக்கு காட்சி

24இயேசு அங்குத் தோன்றியபோது தோமா
சீஷர்களுடன் இல்லை. அவரது பன்னிரெண்டு
சீஷர்களுள் தோமாவும் ஒருவன். 25ஏனைய
சீஷர்கள் “நாங்கள் ஆண்டவரைப் பார்த்தோம்”
என்று தோமாவிடம் சொன்னார்கள். அதற்கு
தோமா “நான் அவரது கைகளில் ஆணிகளின்
துவாரங்களைக் காணும்வரை நீங்கள் சொல்
வதை நம்பமாட்டேன். அப்படிப் பார்த்தாலும்
அந்த ஆணித் துவாரங்களில் எனது விரல்
களையும், விலா காயத்தில் எனது கைகளை
யும் வைத்துப் பார்ப்பேன். இல்லாவிட்டால்
நான் நம்ப மாட்டேன்” என்றான்.

26ஒரு வாரத்திற்குப் பின் சீஷர்கள் முன்பு
போல் அந்த வீட்டில் மீண்டும் கூடினர். தோமா
அவர்களோடு இருந்தான்.. கதவுகள் மூடப்பட்
டிருந்தன. ஆனால் இயேசு வந்து அவர்களின்
நடுவில் நின்றார். “சமாதானம் உங்களோடு
இருக்கட்டும்” என்றார். 27பிறகு இயேசு தோமா
விடம் “உனது விரல்களை இங்கே வை.
எனது கைகளைப் பார். எனது விலாவிலே
உன் கையை வைத்துப் பார். சந்தேகத்தை
விட்டுவிடு. விசுவாசி” என்றார்.

28அதற்குத் தோமா இயேசுவிடம், “என்
ஆண்டவரே! என் தேவனே!” என்று பதில்
சொன்னான்.

29இயேசு அவனிடம், “நீ என்னைப் பார்த்
ததால் விசுவாசிக்கிறாய். என்னைப் பாராம
லேயே எவர் விசுவாசிக்கிறார்களோ அவர்
கள் பாக்கியவான்கள்” என்றார்.

### யோவான் இப்புத்தகத்தை எழுதினதின் நோக்கம்

30இயேசு அவரது சீஷர்களுக்கு முன்பு
அநேக வேறு அற்புதங்களைச் செய்து காட்
டினார். அவை இந்நூலில் எழுதப்படவில்லை.
31ஆனால் இயேசுவே கிறிஸ்து என்றும்
தேவனின் குமாரன் என்றும் நீங்கள் நம்பும்
படிக்கும், அதோடு நம்பிக்கையின் மூலம்
அவரது பெயரால் நித்திய வாழ்வைப் பெற
வும் இவைகள் எழுதப்பட்டிருக்கின்றன.

### ஏழு சீஷர்களுக்கு இயேசு காட்சி அளித்தல்

21 இதற்குப் பின்பு இயேசு மறுபடியும்
தன்னை சீஷர்களுக்கு காண்பித்தார்.
அது திபேரியா (கலிலேயா) கடற்கரையில்
நிகழ்ந்தது. அதைப் பற்றிய விபரமாவது:
2அங்கே சில சீஷர்கள் கூடியிருந்தனர். அவர்
களில் சீமோன் பேதுரு, தோமா, செபெதேயு
வின் இரு குமாரர்கள், கலிலேயா நாட்டின்
கானா ஊரானாகிய நாத்தான்வேல், மேலும்
இரண்டு சீஷர்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.
3சீமோன் பேதுரு மற்றவர்களிடம், “நான் மீன்
பிடிக்கப் போகிறேன்” என்று சொன்னார்.
அதற்கு மற்ற சீஷர்களும், “நாங்களும் உம்
மோடு வருகிறோம்” என்றனர். எனவே
அனைவரும் படகில் ஏறிச் சென்றனர். அன்று
இரவு அவர்கள் ஒன்றும் பிடிக்கவில்லை.

4மறுநாள் அதிகாலையில் இயேசு கரையில்
நின்றிருந்தார். ஆனால் சீஷர்கள் அவரை
இயேசு என்று அறிந்து கொள்ளவில்லை.
5பிறகு இயேசு தன் சீஷர்களிடம், “நண்பர்களே!
நீங்கள் ஏதாவது மீன் பிடித்தீர்களா?” என்று
கேட்டார்.

அதற்கு “இல்லை” என்று சீஷர்கள் சொன்
னார்கள்.

6இயேசு அவர்களிடம், “நீங்கள் உங்கள்
வலைகளைப் படகுக்கு வலது புறமாகப்
போடுங்கள். அப்பொழுது நீங்கள் மீன்களைப்
பிடிப்பீர்கள்” என்றார். அதன்படி சீஷர்களும்
செய்தனர். அவர்கள் வலையைப் படகுக்குள்
இழுக்க முடியாத அளவுக்கு ஏராளமான மீன்
களைப் பிடித்தனர்.

7எனவே இயேசுவிடம் அன்பாயிருந்த
சீஷன் பேதுருவிடம் “இவர் ஆண்டவர்”
என்றார். “அவர் இயேசு” என்று சொல்லக்
கேட்டவுடன் பேதுரு, இதுவரை மூடப்படாத
தன் சரீரத்தை ஆடையால் மூடினான். பிறகு
அவன் கடலுக்குள் குதித்துவிட்டான். 8மற்ற
சீஷர்கள் படகின் மூலம் கரைக்குச் சென்றனர்.
அவர்கள் மீன் நிறைந்த வலையை இழுத்தனர்.
அவர்கள் கரையிலிருந்து வெகு தூரத்தில்
கடலுக்குள் இருக்கவில்லை. ஏறக்குறைய 200
முழம் தூரத்துக்குள்ளேயே இருந்தனர். 9அவர்
கள் படகிலிருந்து இறங்கிக் கரைக்கு வந்தனர்.
அங்கே கரி அடுப்பு பற்றவைக்கப்பட்டிருப்
பதைக் கண்டனர். அதில் மீன்களும் அப்பமும்
சுடப்பட்டிருந்தன.

10இயேசு அவர்களிடம், “நீங்கள் இப்பொ
ழுது பிடித்த மீன்களில் சிலவற்றைக் கொண்டு
வாருங்கள்” என்றார்.

11சீமோன் பேதுரு படகில் ஏறி வலையைக்
கரைக்கு இழுத்தான். அது பெரிய மீன்களால்
நிறைந்திருந்தது. அதில் 153 மீன்கள் இருந்தன.
மீன்கள் மிகவும் கனமுடையனவாய் இருந்தன.
எனினும் வலை கிழியாமல் இருந்தது.
12இயேசு அவர்களிடம் “வாருங்கள், சாப்பிடுங்
கள்” என்றார். அவர்களில் எவரும் “நீங்கள்
யார்?” என்று தைரியமாகக் கேட்கவில்லை.
அவர்தான் இயேசு கிறிஸ்து என்று அவர்கள்
தெரிந்திருந்தனர்.

13இயேசு உணவின் அருகில் சென்றார்.
அவர் அப்பத்தை எடுத்து அவர்களிடம்
கொடுத்தார். அத்துடன் மீனையும் எடுத்து
அவர்களுக்குக் கொடுத்தார்.

14அவர் மரணத்திலிருந்து உயிர்த்தெழுந்த
பிறகு, இவ்வாறு மூன்றாவது முறையாக தம்
சீஷர்களுக்குக் காட்சி தந்தார்.

### பேதுருவிடம் இயேசு பேசுதல்

15உண்டு முடித்ததும் இயேசு பேதுருவிடம்,
“யோவானின் மகனான சீமோனே! மற்றவர்
கள் நேசிப்பதைவிட என்னை நீ மிகுதியாக
நேசிக்கிறாயா?” என்று கேட்டார்.

அதற்குப் பேதுரு, “ஆமாம் ஆண்டவரே,
நான் நேசிக்கிறேன் என்பது உங்களுக்குத்
தெரியும்” என்றான்.

பிறகு இயேசு அவனிடம், “எனது ஆட்டுக்
குட்டிகளைக்* கவனித்துக்கொள்” என்றார்.
16மீண்டும் பேதுருவிடம் இயேசு “யோவா
னின் மகனான சீமோனே, என்னை நீ நேசிக்
கிறாயா?” என்று கேட்டார். “ஆமாம் ஆண்ட
வரே. நான் உம்மை நேசிப்பது உமக்குத் தெரி
யும்” என்று பேதுரு சொன்னான்

பிறகு பேதுருவிடம் இயேசு, “எனது மந்தை
யைக் கவனித்துக்கொள்” என்று சொன்னார்.
17மூன்றாவது முறையாக இயேசு “யோவா
னின் மகனான சீமோனே என்னை நீ நேசிக்
கிறாயா?” என்று கேட்டார்.

இயேசு மூன்றுமுறை இவ்வாறு கேட்டதால்
பேதுருவுக்கு வருத்தமாக இருந்தது. பேதுரு
அவரிடம், “ஆண்டவரே, உமக்கு எல்லாம்
தெரியும். நான் உம்மை நேசிப்பதும் உமக்குத்
தெரியும்” என்றான். பேதுருவிடம் இயேசு
“எனது மந்தையைக் கவனித்துக்கொள்.
18நான் உனக்கு உண்மையைச் சொல்லுகி
றேன். நீ இளைஞனாக இருந்தபோது, உனது
இடுப்புவாரை நீயே கட்டிக்கொண்டு விரும்பும்
இடங்களுக்கு சென்றாய். ஆனால் நீ முதியவன்
ஆகும்போது உன் கைகளை நீட்டுவாய். வேறு
ஒருவன் உன் இடுப்பு வாரைக் கட்டிவிடுவான்.
அதோடு உனக்கு விருப்பம் இல்லாத இடத்
துக்கும் உன்னை இழுத்துக்கொண்டு
போவான்” என்றார். 19(எவ்வாறு பேதுரு
மரணம் அடைந்து தேவனுக்குப் மகிமை
சேர்க்கப் போகிறான் என்பதைக் குறிப்பிட்டே
இயேசு இவ்வாறு கூறினார்.) பிறகு இயேசு
பேதுருவிடம் “என்னைப் பின்தொடர்ந்து வா”
என்று கூறினார்.

20பேதுரு திரும்பிப் பார்த்தபோது தன்
னோடு, இயேசுவிடம் அன்பாயிருந்த சீஷன்
வருவதைப் பார்த்தான். (இந்த சீஷன்தான்
முன்பு இரவு விருந்தின்போது இயேசுவிடம்
“உம்மை காட்டிக் கொடுக்கிறவன் யார்?”
என்று அவர்மீது சாய்ந்து இருந்து கேட்டவன்)
21பேதுரு, அவன் பின்தொடர்ந்து வருவதைப்
பார்த்து, “ஆண்டவரே, இவனைப்பற்றி என்ன
கூறுகிறீர்?” என்று கேட்டான்.

22அதற்கு இயேசு, “நான் வருமளவும் இவன்
இருக்க எனக்கு விருப்பம் உண்டு. அது
உனக்கு அவ்வளவு முக்கியமில்லை. நீ என்
னைப் பின்தொடர்ந்து வா” என்றார்.

23ஆகையால் சீஷர்களிடம் ஒரு கதை பர
விற்று. அதாவது இயேசு அன்பாயிருக்கும்
அந்த சீஷன் மரணம் அடைவது இல்லை
என்று சீஷர்கள் பேசிக்கொண்டனர். ஆனால்
அவன் மரணம் அடைவதில்லை என்று
இயேசு கூறவில்லை. அவர் “நான் வரும்
வரைக்கும் இவன் இருக்க எனக்கு விருப்பம்.
அதைப்பற்றி நீ கவலைப்படவேண்டாம்”
என்றே கூறினார்.

24அந்தச் சீஷனே இவற்றையெல்லாம் சொல்
லிக் கொண்டிருக்கிறான். அவன்தான் இவற்
றையெல்லாம் இப்பொழுது எழுதியுள்ளான்.
அவன் சொன்னது எல்லாம் உண்மை என்று
நமக்குத் தெரியும்.

25இயேசு செய்த வேறு பல செயல்களும்
உள்ளன. இவை அனைத்தும் எழுதிவைக்கப்
பட்டிருந்தால் அந்தப் புத்தகங்களையெல்லாம்
வைக்கிற அளவிற்கு இந்த உலகம் அவ்வளவு
பெரியதாக இல்லை என்று எண்ணுகிறேன்.

---

**ஆட்டுக்குட்டிகள்** மந்தை இயேசு தனது சீஷர்களைக் குறிக்க இச்சொற்களைப் பயன்படுத்தினார். யோவான் 10.

# அப்போஸ்தலருடைய நடபடிகள்

## லூக்காவின் இரண்டாவது புத்தகம்

1 அன்பான தேயோப்பிலுவே, நான் எழுதிய
முதல் புத்தகத்தில் இயேசு செய்தவைக
ளையும், கற்பித்தவைகளையும் எல்லாம்
பற்றிக் குறிப்பிட்டிருந்தேன். 2நான் இயேசுவின்
வாழ்க்கை முழுவதையும் தொடக்கத்திலிருந்து
இறுதியில் அவர் பரலோகத்திற்கு எடுத்துக்
கொள்ளப்பட்டது வரைக்கும் எழுதியிருந்
தேன். இது நடக்கும் முன் இயேசு தான் தேர்ந்
தெடுத்த அப்போஸ்தலர்களிடம் பேசினார்.
பரிசுத்த ஆவியின் வல்லமையால் அப்போஸ்
தலர்கள் செய்யவேண்டியவற்றை இயேசு
அவர்களுக்குக் கூறினார். 3இது இயேசுவின்
மரணத்திற்குப் பின்னர் நிகழ்ந்தது. ஆனால்
அவர் அப்போஸ்தலருக்குத் தான் உயிரோடி
ருப்பதைக் காட்டினார். வல்லமைமிக்க செயல்
கள் பலவற்றைச் செய்து இயேசு இதை நிரூபித்
தார். இயேசு மரணத்தினின்று எழுந்த பின்பு
40 நாட்களில் அப்போஸ்தலர்கள் பலமுறை
இயேசுவைப் பார்த்தனர். தேவனுடைய இராஜ்
யத்தைப் பற்றி இயேசு அப்போஸ்தலர்களிடம்
பேசினார். 4ஒரு முறை இயேசு அவர்களோடு
உணவு உட்கொண்டு இருக்கும்போது எருச
லேமை விட்டுப் போக வேண்டாமென அவர்
களுக்குக் கூறினார். இயேசு, “பிதா உங்களுக்
குச் சிலவற்றைக் குறித்து வாக்குறுதி அளித்
துள்ளார். இதைக் குறித்து முன்னரே நான்
உங்களுக்குக் கூறினேன். இங்கேயே எருசலே
மில் இந்த வாக்குறுதியைப் பெறுவதற்காகக்
காத்திருங்கள். 5யோவான் மக்களுக்கு, தண்ணீ
ரால் ஞானஸ்நானம் வழங்கினான். ஆனால்
ஒரு சில நாட்களில் நீங்கள் பரிசுத்த ஆவியால்
ஞானஸ்நானம் பெறுவீர்கள்” என்று சொன்
னார்.

## இயேசுவின் பரமேறுதல்

6அப்போஸ்தலர்கள் எல்லோரும் ஒருமித்
துக் கூடியிருந்தார்கள். அவர்கள் இயேசுவை
நோக்கி, “ஆண்டவரே, நீங்கள் யூதர்களுக்கு
அவர்களது இராஜ்யத்தை மீண்டும் கொடுக்
கும் காலம் இதுவா?” என்று வினவினார்கள்.
7இயேசு அவர்களை நோக்கி “நாட்களையும்
நேரத்தையும் பற்றிய முடிவெடுக்கும் அதி
காரம் உடையவர் பிதா ஒருவரே. உங்களால்
இந்தக் காரியங்களை அறிந்து கொள்ளமுடி
யாது. 8ஆனால் பரிசுத்த ஆவியானவர் உங்க
ளிடம் வருவார். வரும்போது நீங்கள் வல்ல
மையைப் பெறுவீர்கள். நீங்கள் எனது சாட்
சிகளாக இருப்பீர்கள். மக்களுக்கு என்னைப்
பற்றிக் கூறுவீர்கள். முதலில் எருசலேமின்
மக்களுக்குக் கூறுவீர்கள். பின் யூதேயா முழு
வதும், சமாரியாவிலும் உலகத்தின் எல்லாப்
பகுதியிலும் நீங்கள் மக்களுக்குக் கூறுவீர்கள்”
என்றார்.
9இயேசு அப்போஸ்தலர்களுக்கு இந்தக் காரி
யங்களைக் குறித்துக் கூறிய பிறகு வானிற்குள்
ளாக அவர் மேலே எடுத்துச் செல்லப்பட்டார்.
அப்போஸ்தலர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்
போதே, அவர் மேகத்திற்குள்ளாகச் சென்றார்.
பின்னர் அவர்களால் அவரைப் பார்க்க முடிய
வில்லை. 10இயேசு மேலே போய்க் கொண்
டிருந்தார். அப்போஸ்தலர்கள் வானையே
நோக்கிக் கொண்டிருந்தனர். திடீரென வெண்
ணிற ஆடை அணிந்த இருவர் (தேவதூதர்கள்)
அவர்களுக்கு அருகே நின்றனர். 11அவ்விரு
வரும் அப்போஸ்தலர்களை நோக்கி, “கலிலே
யாவிலிருந்து வந்துள்ள மனிதர்களே, ஏன்
நீங்கள் வானத்தைப் பார்த்தவாறே நின்று
கொண்டிருக்கிறீர்கள்? இயேசு உங்களிடமி
ருந்து பரலோகத்திற்கு எடுத்துச் செல்லப்பட்
டதை நீங்கள் கண்டீர்கள். நீங்கள் பார்த்த
போது சென்றதைப் போலவே அவர் திரும்
பவும் வருவார்” என்று கூறினர்.

## புதிய அப்போஸ்தலர்

12பின்பு ஒலிவ மலையிலிருந்து அப்போஸ்
தலர்கள் எருசலேமுக்குத் திரும்பிச் சென்றனர்.
(இம்மலை எருசலேமிலிருந்து சுமார் ஒன்றரை
மைல் தூரத்தில் உள்ளது) 13அப்போஸ்தலர்கள்
நகரத்திற்குள் சென்றனர். அவர்கள் தாங்கள்
தங்கியிருந்த இடத்திற்குச் சென்றார்கள். அந்த
அறை மாடியிலிருந்தது. பேதுரு, யாக்கோபு,
யோவான், அந்திரேயா, பிலிப்பு, தோமா,
பர்த்தலொமேயு, மத்தேயு, அல்பேயுவின் மக
னாகிய யாக்கோபு, செலோத்தே எனப்படும்
சீமோன் மற்றும் யாக்கோபின் மகனாகிய
யூதாஸ் ஆகிய அப்போஸ்தலர்கள் அங்கிருந்
தனர். 14அப்போஸ்தலர்கள் அனைவரும் சேர்ந்
திருந்தனர். ஒரே குறிக்கோள் உடையோராய்
விடாது பிரார்த்தனை செய்து கொண்டேயி
ருந்தனர். இயேசுவின் தாயாகிய மரியாளும்
அவரது சகோதரர்களும் சில பெண்களும்
அப்போஸ்தலரோடு கூட இருந்தனர்.
15சில நாட்களுக்குப் பிறகு விசுவாசிகளாக
அவர்கள் ஒன்று கூடினர். (சுமார் 120 பேர்
அக்கூட்டத்தில் இருந்தனர்.) பேதுரு எழுந்து

நின்று, [16-17]“சகோதரர்களே! வேதவாக்கியங்
களில் பரிசுத்த ஆவியானவர் சில காரியங்கள்
நடக்கும் என்று தாவீதின் மூலமாகக் கூறினார்.
நமது கூட்டத்தில் ஒருவனாகிய யூதாஸைக்
குறித்து அவன் கூறியுள்ளான். யூதாஸ் நம்
மோடு கூட சேவையில் ஈடுபட்டிருந்தான்.
இயேசுவைச் சிறைபிடிக்க யூதாஸ் மனிதர்
களுக்கு வழிகாட்டுவான் என்பதை ஆவியா
னவர் கூறியிருந்தார்,” என்றான்.
[18](இதைச் செய்வதற்கு யூதாஸிற்குப் பணம்
தரப்பட்டது. ஒரு நிலத்தை வாங்குவதற்கு
அப்பணம் பயன்படுத்தப்பட்டது. ஆனால்
யூதாஸ் தலைகுப்புற வீழ்ந்து அவன் சரீரம்
பிளவுண்டது. அவனது குடல் வெளியே
சரிந்தது. [19]எருசலேமின் மக்கள் அனைவரும்
இதை அறிந்தனர். எனவேதான் அந்நிலத்திற்கு
‘அக்கெல்தமா’ என்று பெயரிட்டனர். அவர்
கள் மொழியில் அக்கெல்தமா என்பது “இரத்த
நிலம்” எனப் பொருள்படும்.)
[20]“சங்கீதத்தின் புத்தகத்தில் யூதாஸைக்
குறித்து இவ்வாறு எழுதப்பட்டுள்ளது:

‘மக்கள் அவனது நிலத்தருகே செல்லலா
காது, யாரும் அங்கு வாழலாகாது.’
சங்கீதம் 69:25

மேலும் இவ்வாறு எழுதப்பட்டுள்ளது:

‘இன்னொருவன் அவன்பணியை பெறட்
டும்.’ சங்கீதம் 109:8

[21-22]“எனவே இன்னொருவன் நம்மோடு
சேர்ந்து கொண்டு இயேசு உயிரோடு எழுந்த
தற்குச் சாட்சியாக இருக்கட்டும். ஆண்டவ
ராகிய இயேசு நம்மோடு இருந்தபோது எப்
போதும் நம்மோடு கூட இருந்த மனிதர்களில்
ஒருவனாக அவன் இருத்தல் வேண்டும்.
யோவான் ஞானஸ்நானம் கொடுக்கத் தொடங்
கியதிலிருந்து இயேசு பரலோகத்திற்கு அழைத்
துக்கொள்ளப்பட்டது வரைக்கும் நம்மோடு
இருந்தவனாக அவன் இருக்கவேண்டும்” என்
றான்.
[23]அப்போஸ்தலர்கள் கூட்டத்திற்கு முன் இரு
வரை நிறுத்தினர். ஒருவன் யோசேப்பு பர்சபா
என்பவன். அவன் யுஸ்து என அழைக்கப்
பட்டான். மற்றவன் மத்தியா என்பவன்.
[24-25]அப்போஸ்தலர்கள் “ஆண்டவரே, நீர்
எல்லா மனிதர்களின் உள்ளங்களையும் அறிந்
தவர். இந்த இருவரில் உம் சேவைக்கு நீர்
யாரைத் தேர்ந்தெடுக்கிறீர் என்பதை எங்க
ளுக்குக் காட்டும். யூதாஸ் இதனைவிட்டு நீங்கித்
தனக்குரிய இடத்திற்குச் சென்று விட்டான்.
ஆண்டவரே, எந்த மனிதன் அப்போஸ்தல
னாகத் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்ப
தைக் காட்டும்!” என்று பிரார்த்தனை செய்
தார்கள். [26]பின்னர் அப்போஸ்தலர்கள் அந்த
இருவரில் ஒருவனைத் தேர்ந்தெடுக்க சீட்டுகள்
எழுதிப் போட்டனர். அதன்படி ஆண்டவர்
விரும்பியவராக மத்தியாவை சீட்டுகள்
காட்டின. எனவே அவன் மற்ற பதினொருவ
ரோடும் கூட ஓர் அப்போஸ்தலன் ஆனான்.

### பரிசுத்த ஆவியானவரின் வருகை

2 பெந்தெகோஸ்தே நாளில் அப்போஸ்தலர்
அனைவரும் ஓரிடத்தில் கூடியிருந்தனர்.
[2]திடீரென வானிலிருந்து ஓசை ஒன்று எழுந்
தது. பெருங்காற்று அடித்தாற்போல அது
ஒலித்தது. அவர்கள் அமர்ந்திருந்த வீடு முழு
வதையும் அவ்வொலி நிரப்பிற்று. [3]நெருப்புக்
கொழுந்து போன்றவற்றை அவர்கள் கண்
டனர். அக்கொழுந்துகள் பிரிந்து சென்று
அங்கிருந்த ஒவ்வொருவர் மேலும் நின்றன.
[4]அவர்கள் எல்லோரும் பரிசுத்த ஆவியால்
நிரப்பப்பட்டார்கள். பல்வேறு மொழிகளில்
அவர்கள் பேச ஆரம்பித்தார்கள். இப்படிப்பட்
டதான வல்லமையை பரிசுத்த ஆவியானவர்
அவர்களுக்குக் கொடுத்துக் கொண்டிருந்தார்.
[5]அக்காலத்தில் எருசலேமில் மிக பக்திமான்
களாகிய யூதர்கள் சிலர் தங்கியிருந்தனர். உல
கத்தின் எல்லா தேசத்தையும் சார்ந்தவர்களாய்
இந்த மனிதர்கள் இருந்தனர். [6]ஒலியைக் கேட்டு
இம்மனிதர்கள் பெருங்கூட்டமாய் அங்கு வந்
தனர். அப்போஸ்தலர்கள் பேசிக்கொண்டிருக்
கையில் ஒவ்வொரு மனிதனும் தனது சொந்த
மொழியில் கேட்டதால் அம்மனிதர்கள் வியப்
புற்றனர். [7]யூதர்கள் இதனால் ஆச்சரியமடைந்
தனர். அப்போஸ்தலர்கள் எவ்வாறு இதைச்
செய்ய முடிந்தது என்பதை அவர்களால்
புரிந்துகொள்ளமுடியவில்லை. அவர்கள்,
“பாருங்கள்! பேசிக்கொண்டிருக்கும் இந்த
மனிதர்கள் (அப்போஸ்தலர்கள்) எல்லோரும்
கலிலேயாவைச் சேர்ந்தவர்கள்! [8]ஆனால் நமது
மொழிகளில் அவர்கள் பேசிக்கொண்
டிருப்பதைக் கேட்கிறோம். எப்படி இது இய
லும்? நாம் [9]பார்த்தியா, மேதியா, ஏலாம்,
மெசொபொதாமியா, யூதேயா, கப்பதோகியா,
பொந்து, ஆசியா, [10]பிரிகியா, பம்பிலியா,
எகிப்து, சிரேனே நகரங்களிற்கு அருகேயுள்ள
லிபியா நாட்டுப் பகுதிகள், [11]கிரேத்தா, ரோமி
லிருந்து வந்த மக்கள் மற்றும் அரேபியா
ஆகியவற்றைச் சேர்ந்தவர்கள். நம்மில் சிலர்
யூதர்களாகப் பிறந்தவர்கள். மற்றவர்கள் யூதர்
களாக மதம் மாறியவர்கள். நாம் வெவ்வேறு
நாட்டினர். ஆனால் இவர்கள் நம் மொழிகளில்
பேசுவதைக் கேட்கிறோமே! அவர்கள் தேவ
னைக் குறித்துக் கூறும் மேன்மையான காரி
யங்களை நம்மெல்லோராலும் புரிந்து கொள்ள
முடிகிறதே” என்றார்கள். [12]மக்கள் அனை
வரும் வியப்புற்றவர்களாகவும் குழப்பமடைந்
தவர்களாகவும் காணப்பட்டனர். அவர்கள்
ஒருவரையொருவர் நோக்கி, “என்ன நடந்து
கொண்டிருக்கின்றது?” என்று வினவினர்.
[13]பிற மக்கள் அப்போஸ்தலர்களைப்
பார்த்துச் சிரித்தனர். அம்மக்கள் அப்போஸ்

தலர் மிகுதியான மதுவைப் பருகியிருந்தனர் என நினைத்தனர்.

### பேதுரு மக்களிடம் பேசுதல்

14அப்பொழுது பேதுரு மற்ற அப்போஸ்
தலர் பதினொருவரோடும் எழுந்து நின்றான்.
எல்லா மக்களும் கேட்கும்படியாக உரக்கப்
பேசினான். அவன், "எனது யூத சகோதரர்
களே, எருசலேமில் வசிக்கும் மக்களே, நான்
கூறுவதைக் கவனியுங்கள். நீங்கள் தெரிந்து
கொள்ளவேண்டிய சில கருத்துகளை உங்க
ளுக்குக் கூறுவேன். கவனமாகக் கேளுங்கள்.
15நீங்கள் நினைக்கிறது போல இம்மனிதர்கள்
மது பருகியிருக்கவில்லை. இப்போது காலை
ஒன்பது மணிதான். 16இங்கு இன்றைக்கு
நிகழ்ந்து கொண்டிருப்பதைக் குறித்து யோ
வேல் என்னும் தீர்க்கதரிசி எழுதியிருக்கிறார்.
யோவேல் கீழ்க்கண்டவாறு எழுதியுள்ளார்:

17 'தேவன் கூறுகிறார், கடைசி நாட்களில்
நான் எனது ஆவியை எல்லா மக்களுக்
கும் அள்ளி வழங்குவேன். ஆண் மக்க
ளும், பெண்மக்களும் தீர்க்கதரிசனம்
உரைப்பர். உங்கள் இளைஞர் தரிசனம்
காண்பார்கள். உங்கள் முதியோர்
விசேஷ கனவுகள் காண்பர்.
18 அந்நேரத்தில் எனது ஆவியை எனது
ஊழியர்களாகிய ஆண்களுக்கும் பெண்
களுக்கும் கொடுப்பேன். அவர்கள் தீர்க்க
தரிசனம் உரைப்பர்.
19 மேலே வானில் வியப்புறும் காட்சிக
ளைக் காண்பிப்பேன். கீழே பூமியிலும்
சான்றுகள் தருவேன். அங்கு இரத்தம்,
நெருப்பும், புகைமண்டலமும் இருக்கும்.
20 சூரியன் இருளாக மாறும். நிலா இரத்தம்
போல் சிவப்பாகும். அப்போது கர்த்தரு
டைய மகத்தான மகிமைமிக்க நாள்
வரும்.
21 கர்த்தர் மேல் நம்பிக்கை வைக்கும் ஒவ்
வொரு மனிதனும் இரட்சிக்கப்படுவான்.'
யோவேல் 2:28-32

22"எனது யூத சகோதரர்களே, இந்த
வார்த்தைகளைக் கவனியுங்கள். நாசரேத்தின்
இயேசு மிகச் சிறப்பான மனிதர். தேவன்
இதைத் தெளிவாக உங்களுக்குக் காட்டினார்.
இயேசுவின் மூலமாக அவர் செய்த வல்லமை
மிக்க வியப்பான காரியங்களால் தேவன்
இதை நிரூபித்தார். நீங்கள் எல்லோரும் இந்தக்
காரியங்களைப் பார்த்தீர்கள். எனவே இது
உண்மையென்பது உங்களுக்குத் தெரியும்.
23இயேசு உங்களுக்குக் கொடுக்கப்பட்டார்.
நீங்கள் அவரைக் கொன்றீர்கள். தீயவர்களின்
உதவியோடு இயேசுவைச் சிலுவையில்
அறைந்தீர்கள். ஆனால் இவையெல்லாம்
நடக்குமென்பதை தேவன் அறிந்திருந்தார். இது
தேவனுடைய திட்டமாக இருந்தது. வெகு
காலத்திற்கு முன்னரே தேவன் இந்தத் திட்
டத்தை வகுத்திருந்தார். 24மரணத்தின் வேத
னையை இயேசு அனுபவித்தார். ஆனால்
தேவன் அவரை விடுவித்தார். தேவன் இயே
சுவை மரணத்திலிருந்து எழுப்பினார். மர
ணம் இயேசுவைத் தொடர்ந்து தன் பிடிக்குள்
வைத்திருக்க முடியவில்லை. 25தாவீது இயேசு
வைக் குறித்து இவ்வாறு கூறினான்:

நான் ஆண்டவரை எப்போதும் என்
முன் காண்கிறேன். என்னைப் பாதுகாப்
பதற்கு எனது வலப்புறத்தே உள்ளார்.
26 எனவே என் உள்ளம் மகிழுகிறது, என்
வாய் களிப்போடு பேசுகிறது. ஆம்,
எனது சரீரமும் கூட நம்பிக்கையால்
வாழும்.
27 ஏனெனில் மரணத்தின் இடத்தில்* எனது
ஆத்துமாவை நீர் விட்டு விடுவதில்லை.
உமது பரிசுத்தமானவரின் சரீரத்தைக்
கல்லறைக்குள் அழுகிவிட நீர் அனுமதிப்
பதில்லை.
28 வாழும் வகையை எனக்குப் போதித்தீர்.
என்னருகே நீர் வந்து அளவற்ற ஆனந்
தம் தருவீர்.'
சங்கீதம் 16:8-11

29"எனது சகோதரர்களே, நமது முன்னோ
ராகிய தாவீதைக் குறித்து உண்மையாகவே
உங்களுக்கு என்னால் சொல்லமுடியும். அவன்
இறந்து புதைக்கப்பட்டான். அவன் புதைக்கப்
பட்ட இடம் இங்கேயே நம்மிடையே இன்றும்
உள்ளது. 30தாவீது ஒரு தீர்க்கதரிசி. தேவன்
கூறிய சில செய்திகளை அவன் அறிந்திருந்
தான். தாவீதின் குடும்பத்திலுள்ள ஒருவரைத்
தாவீதைப் போன்று மன்னனாக்குவேன்
என்று தேவன் தாவீதுக்கு வாக்குறுதி அளித்
திருந்தார். 31அது நடக்கும் முன்பே தாவீது
அதனை அறிந்திருந்தான். எனவே தான் அவ
ரைக் குறித்து தாவீது இவ்வாறு கூறினான்:

'அவர் மரணத்தின் இடத்தில் விடப்பட
வில்லை. அவர் சரீரம் கல்லறையில்
அழுகவில்லை.'
சங்கீதம் 16:10

தாவீது மரணத்தினின்று எழும்பும்
கிறிஸ்துவைக் குறித்துப் பேசினான். 32எனவே
தாவீதை அல்ல, இயேசுவையே தேவன் மர
ணத்தினின்று எழுப்பினார். நாங்கள் எல்லோ
ரும் இதற்கு சாட்சிகள். நாங்கள் அவரைக்
கண்டோம். 33இயேசு பரலோகத்திற்கு எடுத்துக்
கொள்ளப்பட்டார். இப்போது இயேசு தேவ
னோடு, தேவனுடைய வலது பக்கத்தில் இருக்
கிறார். பிதா (தேவன்) பரிசுத்த ஆவியை
இயேசுவுக்குக் கொடுத்துள்ளார். பிதா கொடுப்

**மரணத்தின் இடத்தில்** இலக்கியப்படி "பாதாளம்."

பதாக வாக்குறுதி அளித்தது பரிசுத்த ஆவியே
யாகும். எனவே இயேசு அந்த ஆவியை இப்
பொழுது கொடுத்துக் கொண்டிருக்கிறார்.
இதையே நீங்கள் பார்க்கவும், கேட்கவும் செய்கி
றீர்கள்.
34-35தாவீது பரலோகத்திற்கு எடுத்துக்கொள்
ளப்பட்டவரல்ல. பரலோகத்திற்கு எடுத்துக்
கொள்ளப்பட்டவர் இயேசுவே. தாவீது கூறி
னான்,

‘தேவன் என் கர்த்தரிடம் சொன்னார்,
உம் எதிரிகள் அனைவரையும் உம்
அதிகாரத்தின் கீழ் கொண்டு வரும்வரை
என் வலதுபுறத்தில் உட்கார்ந்து கொள்
ளும்.’

சங்கீதம் 110:1

36“எனவே எல்லா யூத மனிதர்களும் இதை
உண்மையாகத் தெரிந்திருக்க வேண்டும். ஆண்
டவராகவும் கிறிஸ்துவாகவும் இருக்கும்படி
யாக இயேசுவை தேவன் உண்டாக்கினார்.
அவரே நீங்கள் சிலுவையில் அறைந்த
மனிதர்” என்றான்.
37மக்கள் இதைக் கேட்டபோது அவர்கள்
தங்கள் இதயத்தில் மிகவும் வருத்தம் அடைந்
தார்கள். அவர்கள் பேதுருவையும் பிற அப்
போஸ்தலரையும் நோக்கி, “நாங்கள் என்ன
செய்ய வேண்டும்?” என்று கேட்டார்கள்.
38பேதுரு அவர்களை நோக்கி, “நீங்கள்
ஒவ்வொருவரும் உங்கள் இருதயத்தையும்
வாழ்க்கையையும் மாற்றி, இயேசு கிறிஸ்து
வின் பெயரில் ஞானஸ்நானம் பெற்றுக் கொள்
ளுங்கள். அப்போது தேவன் உங்கள் பாவங்
களை மன்னிப்பார். நீங்களும் பரிசுத்த ஆவி
யின் வரத்தைப் பெறுவீர்கள். 39இந்த வாக்
குறுதி உங்களுக்குரியது. அது உங்கள்
பிள்ளைகளுக்கும் தொலைவில் வாழ்கின்ற
எல்லா மக்களுக்கும் கூட உரியது. ஆண்ட
வராகிய நமது தேவன் தன்னிடம் அழைக்கிற
ஒவ்வொரு மனிதனுக்கும் அது உரியது”
என்று கூறினான்.
40வேறு பல வார்த்தைகளையும் கூறி
பேதுரு அவர்களை எச்சரித்தான். அவன்
அவர்களை, “இன்று வாழ்கின்ற மக்களின்
தீமைகளிலிருந்து உங்களைக் காத்துக்கொள்
ளுங்கள்” என்று வேண்டினான். 41பேதுரு
கூறியவற்றை ஏற்றுக்கொண்ட (விசுவாசித்த)
அந்த மக்கள் ஞானஸ்நானம் பெற்றுக் கொண்
டனர். அந்த நாளில் விசுவாசிகளின் கூட்டத்
தில் சுமார் 3000 மக்கள் சேர்த்துக் கொள்ளப்
பட்டனர்.
42விசுவாசிகள் தொடர்ந்து ஒன்றாக சந்தித்
தனர். அப்போஸ்தலரின் போதனையை கற்
பதற்குத் தங்கள் நேரத்தைச் செலவிட்டனர்.
விசுவாசிகள் ஒருவரோடொருவர் பகிர்ந்து
கொண்டனர். அவர்கள் ஒருமித்து உண்டு,
ஒருமித்து பிரார்த்தனை செய்தார்கள்.

## விசுவாசிகளின் ஒருமனம்

43பல வல்லமை மிக்க, வியப்பான காரியங்
களை அப்போஸ்தலர்கள் செய்து கொண்டிருந்
தனர். ஒவ்வொருவரும் தேவனை மிகவும் மரி
யாதையாக உணர்ந்தனர். 44எல்லா விசுவாசி
களும் ஒருமித்து வசித்தனர். அவர்கள் எல்லா
வற்றையும் பகிர்ந்து கொண்டனர். 45விசுவா
சிகள் அவர்களது நிலங்களையும் அவர்களுக்
குச் சொந்தமான பொருட்களையும் விற்றனர்.
பின்னர் பணத்தைப் பங்கிட்டு, தேவைப்பட்ட
ஒவ்வொருவருக்கும் அவர்களது தேவைக்கேற்
பக் கொடுத்தனர். 46ஒவ்வொரு நாளும் விசுவா
சிகள் தேவாலயத்தில் சந்தித்தனர். அவர்களது
குறிக்கோள் ஒன்றாகவே இருந்தது. அவர்
களுடைய வீடுகளில் ஒருமித்து உண்டனர்.
அவர்கள் உணவைப் பங்கிட்டுக் கொள்
வதிலும் களிப்புமிக்க உள்ளங்களோடு உண்
பதிலும் மகிழ்ச்சியடைந்தனர். 47விசுவாசிகள்
தேவனை வாழ்த்தினர். எல்லா மக்களும்
அவர்களை விரும்பினர். ஒவ்வொரு நாளும்
அதிகமதிகமான மக்கள் இரட்சிக்கப்பட்டனர்.
விசுவாசிகளின் கூட்டத்தில் கர்த்தர் அம்மக்
களைச் சேர்த்துக்கொண்டிருந்தார்.

## ஊனமுற்ற மனிதனின் சுகம்

3 ஒருநாள் பேதுருவும் யோவானும் தேவால
யத்துக்குப் போனார்கள். பிற்பகல் மூன்று
மணியாகி இருந்தது. அது தினமும் தேவால
யத்தில் பிரார்த்தனை நேரமாகும். 2அவர்கள்
தேவாலயத்தின் முற்றத்தில் போய்கொண்டி
ருக்கும்போது, ஒரு மனிதன் அங்கிருந்தான்.
அவன் பிறந்தது முதல் ஊனமுற்றவனாக
இருந்தான். அவனால் நடக்க முடியாததால்
அவனது நண்பர்கள் சிலர் அவனைச் சுமந்து
வந்தனர். அவனது நண்பர்கள் ஒவ்வொரு
நாளும் அவனைத் தேவாலயத்துக்கு
அழைத்து வந்தனர். அவர்கள் ஊனமுற்ற
மனிதனைத் தேவாலயத்துக்கு வெளியே ஒரு
பெருங்கதவின் அருகே உட்கார வைத்தனர்.
அது அலங்கார வாசல் என அழைக்கப்
பட்டது. தேவாலயத்துக்குள் போகும் அனை
வரிடமும் அம்மனிதன் பணத்திற்காகப் பிச்சை
கேட்டான். 3அன்றையத்தினம் அம்மனிதன்
பேதுருவும், யோவானும் தேவாலயத்துக்குள்
போய்க்கொண்டிருப்பதைக் கண்டான். அவன்
அவர்களிடம் பணத்திற்காக வேண்டினான்.
4பேதுருவும் யோவானும் ஊனமுற்ற அம்
மனிதனை நோக்கி, “எங்களைப் பார்” என்
றனர். 5அம்மனிதன் அவர்களைப் பார்த்தான்.
அவர்கள் ஏதேனும் கொஞ்சம் பணம் கொடுப்
பார்களென அவன் எதிர்பார்த்தான். 6ஆனால்
பேதுரு, “என்னிடம் வெள்ளியோ, பொன்னோ
கிடையாது, ஆனால் உனக்குக் கொடுக்கக்
கூடிய வேறு பொருள் என்னிடம் உள்ளது.
நாசரேத்தைச் சேர்ந்த இயேசு கிறிஸ்துவின்
வல்லமையால் (நாமத்தினால்) எழுந்து நட!”
என்று கூறினான். 7பின் பேதுரு அம்மனித

னின் வலதுகையைப் பிடித்து அவனைத் தூக்
கினான். உடனே அம்மனிதனின் பாதங்களும்
கால்களும் பலம் பெற்றன. 8அம்மனிதன் குதித்
தெழுந்து, அவனது பாதங்களில் நின்று, நடக்க
ஆரம்பித்தான். அவன் அவர்களோடு தேவால
யத்துக்குள் சென்றான். அம்மனிதன் நடந்து
கொண்டும், குதித்துக் கொண்டும் தேவனை
வாழ்த்தியவனாய் இருந்தான். 9-10எல்லா மக்க
ளும் அவனை அடையாளம் கண்டு கொண்
டனர். எப்போதும் அலங்கார வாசல் அருகே
அமர்ந்து பணத்திற்காகப் பிச்சை கேட்கும்
ஊனமுற்ற மனிதனே அவன் என்று மக்கள்
அறிந்தனர். இப்போது அதே மனிதன் நடந்து
கொண்டிருப்பதையும், தேவனை வாழ்த்திக்
கொண்டிருப்பதையும் அவர்கள் கண்டார்கள்.
மக்கள் ஆச்சரியமடைந்தார்கள். எவ்வாறு
இது நடக்கக் கூடுமென்பதை அவர்களால்
புரிந்துகொள்ள முடியவில்லை.

### பேதுருவின் பிரசங்கம்

11அம்மனிதன் பேதுருவோடும் யோவா
னோடும் சேர்ந்து கொண்டிருந்தான். அம்மனி
தன் நலம் பெற்றதையறிந்து எல்லா மக்களும்
ஆச்சரியம் கொண்டனர். சாலமோனின் மண்ட
பத்தில் பேதுருவிடமும் யோவானிடமும் அவர்
கள் ஓடிச் சென்றனர். 12இதைக் கண்டதும்
பேதுரு, மக்களை நோக்கி, “எனது யூத சகோ
தரர்களே, நீங்கள் ஏன் இதைக் கண்டு ஆச்சரி
யப்படுகிறீர்கள்? இம்மனிதனை எங்களது
வல்லமையால் நடக்கும்படியாகச் செய்தோம்
என்பது போல் நீங்கள் எங்களைப் பார்க்
கிறீர்கள். நாங்கள் நல்லவர்களாக இருப்பதால்
இதைச் செய்ய முடிந்தது என்று நீங்கள்
நினைக்கிறீர்களா?

13 “இல்லை! தேவன் இதைச் செய்தார்!
அவர் ஆபிரகாமின் தேவனும் ஈசாக்கின் தேவ
னும் யாக்கோபின் தேவனும் ஆனவர். அவரே
நமது முன்னோர்களின் தேவன். அவர் தனது
விசேஷ ஊழியரான இயேசுவுக்கு மகிமையை
அளித்தார். ஆனால் நீங்களோ இயேசுவைக்
கொல்லும்படியாகக் கொடுத்தீர்கள். பிலாத்து
இயேசுவுக்கு விடுதலையளிக்க முடிவு செய்
தான். ஆனால் உங்களுக்கு இயேசு வேண்டா
தவரென நீங்கள் பிலாத்துவுக்குக் கூறினீர்கள்.
14இயேசு தூயவராகவும் நல்லவராகவும் இருந்
தார். ஆனால் நீங்கள் அவர் தேவையில்லை
யெனக் கூறினீர்கள். இயேசுவுக்குப் பதிலாக
ஒரு கொலையாளியை* உங்களுக்குத் தரும்
படியாக நீங்கள் பிலாத்துவை வேண்டினீர்கள்.
15உயிரளிக்கிறவரை நீங்கள் கொன்றீர்கள்.
ஆனால் தேவனோ அவரை மரணத்திலிருந்து
எழுப்பினார். நாங்கள் இதற்கு சாட்சிகள்.
எங்கள் கண்களாலேயே இதைக் கண்டோம்.
16இயேசுவின் வல்லமையே ஊனமுற்ற மனி
தனை நன்றாக நடக்கும்படிச் செய்தது. இயேசு
வின் வல்லமையில் நாங்கள் நம்பிக்கை
வைத்ததால் இது நிகழ்ந்தது. நீங்கள் இம்மனி
தனைப் பார்க்க முடிகிறது. உங்களுக்கு இவ
னைத் தெரியும். இயேசுவின் மீதுள்ள நம்பிக்
கையால் அவன் முழுக்கக் குணமடைந்தான்.
அது நிகழ்ந்ததை நீங்கள் எல்லாரும் கண்
டீர்கள்.

17“எனது சகோதரர்களே, நீங்கள் செய்
வதை அறியாததால் அவற்றை இயேசுவுக்குச்
செய்தீர்கள் என்பதை நான் அறிவேன். உங்
கள் தலைவர்களும் அதைப் புரிந்து கொள்ள
வில்லை. 18இக்காரியங்கள் நடந்தேறுமென
தேவன் கூறினார். அவரது கிறிஸ்து துன்புற்று
இறப்பார் என்பதை தேவன் தம் தீர்க்க
தரிசிகள் மூலமாகக் கூறினார். தேவன் இதை
எவ்வாறு நிறைவேற்றினார் என்பதை உங்
களுக்குக் கூறியுள்ளேன். 19எனவே நீங்கள்
உங்கள் இருதயங்களையும், வாழ்க்கையையும்
மாற்றிக்கொள்ளுங்கள்! தேவனிடம் திரும்
புங்கள். அவர் உங்கள் பாவங்களை மன்னிப்
பார். 20பின் ஆண்டவர் (தேவன்) உங்களுக்கு
ஆவிக்குரிய இளைப்பாறுதலை நல்குவார்.
கிறிஸ்துவாக இருக்கத் தேர்ந்தெடுக்கப்பட்
டவராகிய இயேசுவை அவர் உங்களுக்குக்
கொடுப்பார். 21ஆனால் எல்லாக் காரியங்களும்
மீண்டும் சரியாகும்வரை இயேசு பரலோகத்
தில் இருக்கவேண்டும். பல்லாண்டுகளுக்கு
முன்னரே தேவன் தனது பரிசுத்த தீர்க்கதரி
சிகள் மூலமாகப் பேசியபோதே, இவற்றைப்
பற்றிக் கூறியுள்ளார். 22மோசே, ‘கர்த்தராகிய
உங்கள் தேவன் உங்களுக்கு ஒரு தீர்க்கதரி
சியை அளிப்பார். உங்கள் சொந்த மக்களிடை
யேயிருந்து (யூதரிடமிருந்து) அந்தத் தீர்க்கதரிசி
தோன்றுவார். அவர் என்னைப் போலவே
இருப்பார். அத்தீர்க்கதரிசி உங்களுக்குக் கூறு
கின்ற எல்லாவற்றிற்கும் நீங்கள் கீழ்ப்படிய
வேண்டும். 23எந்த மனிதனாகிலும் அந்தத்
தீர்க்கதரிசிக்குக் கீழ்ப்படிய மறுத்தால் அப்
போது அம்மனிதன் தேவனுடைய மக்களிட
மிருந்து பிரிந்து இறப்பான்’* என்றான்.
24தேவனுக்காகப் பேசிய சாமுவேலும் அவ
ருக்குப் பின் வந்த மற்ற எல்லாத் தீர்க்கதரிசிக
ளும் இக்காலத்தைக் குறித்துப் பேசினார்கள்.
25தீர்க்கதரிசிகள் பேசிய அனைத்தையும் நீங்
கள் பெற்றீர்கள். அதைப்போலவே தேவன்
உங்கள் முன்னோரோடு செய்த உடன்படிக்கை
யையும் நீங்கள் பெற்றீர்கள். தேவன் உங்கள்
தந்தையாகிய ஆபிரகாமிடம், ‘உன் தலைமு
றையினரால் உலகின் ஒவ்வொரு தேசமும்
ஆசீர்வதிக்கப்படும்’* என்று கூறினார்.
26தேவன் தனது விசேஷ ஊழியரை (இயேசு)
அனுப்பியுள்ளார். தேவன் அவரை முதலாவ
தாக உங்களிடம் அனுப்பினார். உங்களை

---

**கொலையாளி** பரபாஸ், பிலாத்துவிடம் யூதர்கள் இயேசுவுக்குப் பதிலாக இவனையே விடுதலை செய்யும்படிக் கூறினர். லூக்கா 23:19 பார்க்க.

**கர்த்தராகிய ... இறப்பான்** உபா. 18:15,19.

**உன் ... படும்** ஆதியாகமம் 22:18; 26:24.

ஆசீர்வதிப்பதற்கு தேவன் இயேசுவை அனுப்பினார். நீங்கள் ஒவ்வொருவரும் தீய செயல்களைச் செய்கிறதிலிருந்து உங்களைத் திருப்புவதின் மூலம் தேவன் இதைச் செய்கிறார்" என்றான்.

### யூத ஆலோசனைச் சங்கத்தின் முன் பேதுருவும் யோவானும்

4 பேதுருவும், யோவானும் மக்களிடம்
பேசிக்கொண்டிருக்கும்போது சில மனிதர்கள் அவர்களிடம் வந்தார்கள். யூத ஆசாரியர்களும், ஆலயத்தைப் பாதுகாக்கும் வீரர்களுக்குத் தலைவனும், சில சதுசேயரும்* அவர்களோடு வந்திருந்தனர்.
2பேதுருவும், யோவானும் மக்களிடம் போதித்தவற்றைக் குறித்து அவர்கள் அதிருப்தி அடைந்திருந்தனர். அப்போஸ்தலர்கள் இயேசுவைக் குறித்து மக்களுக்குக் கூறும்போது, மக்கள் மரணத்திலிருந்து இயேசுவின் வல்லமையால் உயிர்த்தெழுவர் என்பதையும் போதித்தார்கள்.
3யூதத் தலைவர்கள் பேதுருவையும் யோவானையும் பிடித்துச் சிறையில் அடைத்தனர். அது ஏற்கெனவே இரவு நேரமாயிருந்தது. எனவே அடுத்த நாள் வரைக்கும் பேதுருவையும் யோவானையும் சிறையில் வைத்திருந்தார்கள்.
4ஆனால் பேதுருவும் யோவானும் செய்த போதனைகளை கேட்ட மக்களில் பலரும் அவர்கள் கூறியவற்றை விசுவாசித்தனர். அவர்களின் எண்ணிக்கை சுமார் ஐயாயிரம் பேராக இருந்தது.
5மறுநாள் யூதத் தலைவர்களும், அதிகாரிகளும், வேதபாரகரும் எருசலேமில் சந்தித்தனர்.
6அன்னா (தலைமை போதகர்), காய்பா, யோவான் அலெக்சாந்தர் ஆகியோரும் அங்கிருந்தனர். தலைமை ஆசாரியனின் குடும்பத்தினர் அனைவரும் அங்கிருந்தனர்.
7எல்லா ஜனங்களுக்கும் முன்பாகப் பேதுருவையும் யோவானையும் அவர்கள் நிறுத்தினர். யூத அதிகாரிகள் பலமுறை அவர்களிடம், "ஊனமுற்ற இந்த மனிதனை எவ்வாறு குணப்படுத்தினீர்கள்? எந்த வல்லமையைப் பயன்படுத்தினீர்கள்? யாருடைய அதிகாரத்தினால் நீங்கள் இதைச் செய்தீர்கள்?" என்று கேட்டார்கள்.
8அப்போது பேதுரு பரிசுத்த ஆவியால் நிரப்பப்பட்டான். அவன் அவர்களை நோக்கி, "மக்களின் அதிகாரிகளே, முதிய தலைவர்களே,
9ஊனமுற்ற மனிதனுக்கு ஏற்பட்ட நல்ல காரியத்தைக் குறித்து எங்களை வினவுகிறீர்களா? அவனைக் குணப்படுத்தியது யார் என்று எங்களை வினவுகிறீர்களா?
10நீங்கள் யாவரும், யூத மக்கள் அனைவரும், இம்மனிதன் நாசரேத்தைச் சேர்ந்த இயேசு கிறிஸ்துவின் வல்லமையால் குணம் ஆக்கப்பட்டான் என்பதை அறிந்து கொள்ள வேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம். நீங்கள் இயேசுவைச் சிலுவையில் அறைந்தீர்கள். தேவன் அவரை மரணத்திலிருந்து எழுப்பினார். இந்த மனிதன் ஊனமுற்றவனாயிருந்தான். ஆனால் இப்போது இயேசுவின் வல்லமையால் குணம் பெற்று உங்களுக்கு முன்பாக எழுந்து நிற்கிறான்.

11 'கட்டிடம் கட்டுபவர்களாகிய நீங்கள்
இயேசுவை முக்கியமற்ற கல்லைப்
போன்று கருதினீர்கள். ஆனால் இந்தக்
கல்லோ மூலைக்கல்லாயிற்று.'
*சங்கீதம் 118:22*

12மக்களை இரட்சிக்கக் கூடியவர் இயேசு ஒருவரே. உலகத்தில் மக்களை இரட்சிக்கும் வல்லமையுடன் தரப்பட்ட நாமம் இயேசுவினுடையது மட்டுமே. இயேசுவின் மூலமாகவே நாம் இரட்சிக்கப்படவேண்டும்!" என்றான்.
13பேதுருவும் யோவானும் வேறு சிறப்பான பயிற்சியோ கல்வியோ பெறவில்லை என்பதை யூதத் தலைவர்கள் புரிந்து கொண்டனர். பேதுருவும் யோவானும் பேசுவதற்கு அஞ்சவில்லை என்பதையும் அவர்கள் கண்டனர். அதனால் அதிகாரிகள் வியப்புற்றனர். பேதுருவும் யோவானும் இயேசுவுடன் இருந்தவர்கள் என்பதை உணர்ந்தனர்.
14இரண்டு அப்போஸ்தலர்களுடன் ஊனமாயிருந்த அந்த மனிதன் நின்று கொண்டிருப்பதை அவர்கள் கண்டனர். அம்மனிதன் குணமடைந்திருப்பதை அவர்கள் கண்டனர். எனவே அப்போஸ்தலருக்கு எதிராக அவர்களால் எதையும் சொல்ல முடியவில்லை.
15அக்கூட்டத்திலிருந்து போகுமாறு யூதத் தலைவர்கள் அவர்களுக்குக் கூறினர். அதன் பின்பு தாங்கள் செய்யவேண்டியது என்னவென்று யூதத் தலைவர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டனர்.
16அவர்கள், "இம்மனிதர்களை (அப்போஸ்தலரை) நாம் என்ன செய்வோம்? அவர்கள் பேரதிசயம் ஒன்றைச் செய்துள்ளார்கள் என்பதை எருசலேமின் ஒவ்வொரு மனிதனும் அறிவான். இது தெளிவு. இது உண்மையல்லவென்று நம்மால் சொல்ல முடியாது.
17ஆனால் இம்மனிதனைக் (இயேசுவை) குறித்து இவர்கள் மக்களுக்குச் சொல்வதற்கு அஞ்சும்படி செய்ய வேண்டும். அப்போது மக்களிடம் இச்செய்தி மேலும் பரவாது" என்றனர்.
18எனவே யூதத் தலைவர்கள் பேதுருவையும் யோவானையும் மீண்டும் உள்ளே அழைத்தனர். இயேசுவின் பெயரில் எதையும் கூறாதபடியும் போதிக்காதபடியும் அவர்கள் அப்போஸ்தலர்களுக்குக் கூறினர்.
19ஆனால் பேதுருவும் யோவானும் அவர்களுக்குப் பதிலாக, "நீங்கள் எதைச் சரியென்று நினைக்கிறீர்கள்? தேவன் எதை விரும்புவார்? நாங்கள் கீழ்ப்படியவேண்டுவது உங்களுக்கா அல்லது

---

**சதுசேயர்** முன்னணியிலுள்ள ஒரு யூதமதக் குழு. இவர்கள் பழைய ஏற்பாட்டிலுள்ள முதல் 5 புத்தகங்களை மட்டுமே ஒத்துக்கொள்வர். அவர்கள், மக்கள் மரணத்திற்குப் பிறகு மீண்டும் வாழ்கிறதில்லை என்று நம்புகிறவர்கள்.

தேவனுக்கா? [20]நாங்கள் அமைதியாக இருக்க
முடியாது. நாங்கள் பார்த்தவற்றையும் கேட்
டவற்றையும் மக்களுக்குக் கண்டிப்பாகக் கூற
வேண்டும்" என்றார்கள். [21-22]நடந்ததற்காக
எல்லா மக்களும் தேவனை வாழ்த்திக் கொண்
டிருந்தபடியால் யூதத் தலைவர்கள் அப்போஸ்
தலரைத் தண்டிப்பதற்கு ஒரு வழியும் காண
முடியவில்லை. (இந்த அதிசயம் தேவனிடமி
ருந்து வந்த ஒரு சான்று. குணமாக்கப்பட்ட
மனிதன் நாற்பது வயதிற்கும் மேற்பட்டவனா
யிருந்தான்!) எனவே யூத அதிகாரிகள் மீண்
டும் அப்போஸ்தலரை எச்சரித்து விடுவித்
தனர்.

## விசுவாசிகளின் பிரார்த்தனை

[23]பேதுருவும் யோவானும் யூதத் தலைவர்
களின் கூட்டத்தை விட்டு நீங்கி, அவர்களது
குழுவிற்குச் சென்றனர். முக்கிய ஆசாரியரும்,
முதிய யூத அதிகாரிகளும் அவர்களுக்குச்
சொன்ன எல்லாவற்றையும் அவர்கள் தங்கள்
குழுவினருக்குக் கூறினர். [24]விசுவாசிகள் இத
னைக் கேட்டபோது, அவர்கள் ஒரே மனதுடன்
தேவனிடம் பிரார்த்தனை செய்தனர். அவர்கள்
எல்லோரும் ஒரே விதமாக உணர்ந்தனர்.
[25]அவர்கள், "கர்த்தாவே, வானத்தையும், பூமி
யையும், கடலையும், உலகத்திலுள்ள எல்லா
வற்றையும் உண்டாக்கியவர் நீர் ஒருவரே.
எங்களது தந்தையாகிய (முன்னோராகிய)
தாவீது உம் ஊழியனாக இருந்தான். பரிசுத்த
ஆவியின் உதவியால் அவன் கீழ்வரும் வார்த்
தைகளை எழுதினான்.

'தேசங்கள் ஏன் கூக்குரல் எழுப்பு
கின்றன? ஏன் உலக மக்கள் தேவனுக்
கெதிராகத் திட்டமிடுகின்றனர்? அவர்
கள் செய்வது வீணானது.
26 பூமியின் அரசர்கள் போருக்குத் தயாரா
கின்றனர். தலைவர்கள் அனைவரும்
தேவனுக்கும் அவருடைய கிறிஸ்துவிற்
கும் எதிராக ஒருமித்துக் கூடுகின்றனர்.'
சங்கீதம் 2:1-2

[27]ஏரோதுவும் பொந்தியு பிலாத்துவும்
தேசங்களும், எல்லா யூத ஜனங்களும் சேர்ந்து
எருசலேமில் இயேசுவுக்கு எதிராகக் கூடின
போது இவை அனைத்தும் உண்மையாகவே
நிகழ்ந்தன. இயேசு உமது தூய ஊழியர்.
அவரே கிறிஸ்துவாகும்படி நீர் உண்டாக்கிய
வர். [28]கூடி வந்த இந்த மக்கள் உம் திட்டம்
நிறைவேறும்படி இயேசுவுக்கு எதிராகச்
செயல்பட்டனர். உம் வல்லமையின்படியும்,
சித்தத்தின்படியும் அது நிகழ்ந்தது. [29]கர்த்
தாவே, இப்போதும் அவர்கள் கூறுவதைக்
கவனியும். அவர்கள் எங்களை அச்சமடையும்
படியாகச் செய்ய முயன்று கொண்டிருக்கி
றார்கள். கர்த்தாவே, நாங்கள் உமக்கு ஊழியம்
செய்பவர்கள். [30]நீர் விரும்புகிறவற்றை நாங்
கள் தைரியமாகக் கூறுவதற்கு எங்களுக்கு
உதவும். நோயுற்றோரைக் குணப்படுத்தும்.
சான்றுகள் கொடும். உம் தூய பணியாள
ராகிய இயேசுவின் வல்லமையால் அதிசயங்
கள் நடக்கும்படிச் செய்யும்" என்று பிரார்த்
தனை செய்தனர்.
[31]விசுவாசிகள் பிரார்த்தனை செய்த பிறகு
அவர்கள் கூடியிருந்த இடம் அசைந்தது. அவர்
கள் எல்லோரும் பரிசுத்த ஆவியால் நிரப்பப்
பட்டனர். அச்சமின்றி தேவனுடைய செய்
தியைத் தொடர்ந்து கூறினர்.

## விசுவாசிகளின் ஒருமித்த வாழ்வு

[32]விசுவாசிகள் அனைவரும் இருதயத்தில்
ஒரு மனமுள்ளவர்களாய் ஒரே ஊக்கமுடை
யோராய் இருந்தனர். அவர்களில் ஒருவரும்
தன்னிடமிருந்த பொருட்கள் தனக்கு மட்டுமே
சொந்தமானவை எனக் கூறவில்லை. மாறாக
அவர்கள் எல்லாவற்றையும் பகிர்ந்து கொண்
டனர். [33]மிகுந்த வல்லமையோடு, அப்போஸ்
தலர்கள் கர்த்தராகிய இயேசு மரணத்தினின்று
உண்மையாகவே எழுப்பப்பட்டார் என்பதை
மக்களுக்குக் கூறினர். [34]விசுவாசிகளை
தேவன் அதிகமாக ஆசீர்வதித்தார். அவர்கள்
அனைவரும் தேவையான பொருட்களைப்
பெற்றனர். வயல்களையோ, வீடுகளையோ
உடைய ஒவ்வொருவரும் அவற்றை விற்றனர்.
அப்பணத்தைக் கொண்டு வந்து [35]அதனை
அப்போஸ்தலர்களுக்குக் கொடுத்தனர். பின்பு
ஒவ்வொருவருக்கும் தேவைக்கேற்ப பொருட்
கள் கொடுக்கப்பட்டன.
[36]விசுவாசிகளில் ஒருவன் யோசேப்பு
என அழைக்கப்பட்டான். அப்போஸ்தலர்கள்
அவனை பர்னபாஸ் என்று அழைத்தனர்.
(இந்தப் பெயர், "பிறருக்கு உதவுகின்ற மனி
தன்" எனப் பொருள்படும்) அவன் சீப்புருவில்
பிறந்த லேவியன்.* [37]அவனுக்குச் சிறிது நிலம்
இருந்தது. அவன் அந்த நிலத்தை விற்று
பணத்தைக் கொண்டு வந்து, அதை அப்போஸ்
தலர்களிடம் கொடுத்தான்.

## அனனியாவும் சப்பீராளும்

5 அனனியா என்றொரு மனிதன் வாழ்ந்து
வந்தான். அவனது மனைவியின் பெயர்
சப்பீராள். தனக்கிருந்த கொஞ்ச நிலத்தை அன
னியா விற்றான். [2]ஆனால் தனக்குக் கிடைத்த
பணத்தில் ஒரு பகுதியை மட்டுமே அவன்
அப்போஸ்தலர்களுக்குக் கொடுத்தான். மீதியி
ருந்த பணத்தை இரகசியமாக தனக்கென
வைத்துக் கொண்டான். அவன் மனைவி
இதனை அறிந்து இத்திட்டத்துக்கு ஒப்புக்
கொண்டாள். [3]பேதுரு "அனனியாவே, சாத்
தான் (பிசாசு) உனது இருதயத்தை ஆள ஏன்
அனுமதித்தாய்? நீ பொய் கூறி, பரிசுத்த

---

**லேவியர்** இவர்கள் லேவியின் குடும்பத்தினர். இவர்கள் தேவாலயத்தில் யூத ஆசாரியர்களுக்கு உதவினர்.

ஆவியை ஏமாற்ற முயன்றாய். நீ உனது
நிலத்தை விற்றாய். ஆனால் பணத்தில் ஒரு
பகுதியை ஏன் உனக்காக வைத்துக் கொண்
டாய்? 4நீ நிலத்தை விற்கும் முன்பு அது
உனக்கு உரியதாக இருந்தது. நீ அதனை
விற்ற பிறகும் அந்தப் பணத்தை நீ விரும்பிய
வகையில் செலவழித்திருக்கலாம். ஏன் இந்தத்
தீய செயலைச் செய்வதற்கு எண்ணினாய்?
நீ தேவனிடம் பொய் கூறினாய், மனிதரிடம்
அல்ல!” என்றான்.

5-6அனனியா இதனைக் கேட்டபோது, கீழே
விழுந்து உயிர்விட்டான். சில இளைஞர்கள்
வந்து அவன் சரீரத்தைப் பொதிந்தனர்.
அதனை வெளியே எடுத்துச் சென்று புதைத்
தனர். இதைக் குறித்துக் கேள்விப்பட்ட ஒவ்
வொரு மனிதனின் மனமும் அச்சத்தால் நிரம்
பியது.

7சுமார் மூன்று மணிநேரம் கழித்து அவ
னுடைய மனைவி சப்பீராள் உள்ளே வந்தாள்.
தனது கணவனுக்கு நிகழ்ந்ததைக் குறித்து
அவள் அறிந்திருக்கவில்லை. 8பேதுரு
அவளை நோக்கி, “உங்கள் நிலத்திற்காக எவ்
வளவு பணம் கிடைத்தது என்பதைக் கூறு.
இவ்வளவுதானா?” என்று கேட்டான்.

சப்பீராள் பதிலாக, “ஆம், இவ்வளவு தான்
எங்கள் நிலத்திற்காகக் கிடைத்தது” என்றாள்.
9பேதுரு அவளை நோக்கி, “கர்த்தருடைய
ஆவியைச் சோதிப்பதற்கு நீயும் உன் கண
வனும் ஏன் ஒத்துக்கொண்டீர்கள்? கவனி,
அந்தக் காலடிகளின் சத்தத்தைக் கேட்டாயா?
உனது கணவனைப் புதைத்த மனிதர்கள் கதவ
ருகே வந்துவிட்டனர். உன்னையும் அவர்கள்
அவ்வாறே சுமந்து செல்வர்” என்றான். 10அதே
கணத்தில் சப்பீராள் அவன் காலடியில்
விழுந்து உயிர்விட்டாள். அம்மனிதர்கள்
உள்ளே வந்து அவள் இறந்துவிட்டதைக் கண்
டனர். அவர்கள் அவளைச் சுமந்து சென்று,
அவளது கணவனின் அருகே புதைத்தனர்.
11விசுவாசிகளனைவரும் இந்தக் காரியங்
களைக் குறித்துக் கேட்ட பிற மக்களும் பயத்
தால் நிரம்பினர்.

## தேவனிடமிருந்து சான்றுகள்

12அப்போஸ்தலர்கள் அதிசயங்கள் பலவற்
றையும், வல்லமைமிக்க காரியங்களையும்
செய்தனர். எல்லா மக்களும் இந்தக் காரியங்
களைப் பார்த்தனர். சாலோமோனின் மண்ட
பத்தில் அப்போஸ்தலர்கள் கூடியிருந்தனர்.
அவர்கள் ஒரே நோக்கம் உடையோராக இருந்
தனர். 13வேறு எந்த மக்களும் அவர்களோடு
அங்கு நிற்பதற்கு தகுதியானவர்களாகத் தங்
களைக் கருதவில்லை. அப்போஸ்தலர்களை
எல்லா மக்களும் மிகவும் புகழ்ந்தார்கள். 14மே
லும் மேலும் மிகுதியான மக்கள் கர்த்தரில்
நம்பிக்கை வைத்தனர். பல பெண்களும் ஆண்
களும் விசுவாசிகளின் கூட்டத்தில் சேர்க்கப்
பட்டனர்.

15எனவே மக்கள் தங்களுடைய நோயாளி
களை தெருவுக்குக் கொண்டு வந்தனர். பேதுரு
அவ்வழியே வருகிறானென்று கேள்விப்பட்
டனர். எனவே மக்கள் நோயாளிகளை சிறு
கட்டில்களிலும் படுக்கைகளிலும் படுக்கவைத்
தனர். பேதுருவின் நிழல் நோயாளிகள் மீது
விழுந்தால் கூட அவர்கள் குணமாவதற்கு
அதுவே போதும் என்று அவர்கள் நம்பி
பேதுரு நடக்கும் வழியில் அவர்களைப் படுக்க
வைத்தனர். 16எருசலேமின் சுற்றுப்புறத்
திலுள்ள எல்லா ஊர்களிலுமிருந்து மக்கள்
வந்தனர். நோயாளிகளையும் பிசாசின் அசுத்த
ஆவிகளால் பாதிக்கப்பட்டோரையும் அவர்
கள் கொண்டு வந்தனர். இந்த மக்கள் எல்
லோரும் குணம் பெற்றனர்.

## தடை செய்யும் முயற்சி

17தலைமை ஆசாரியனும், அவருடைய
எல்லா நண்பர்களும் (சதுசேயர் எனப்பட்ட
குழுவினர்) மிகவும் பொறாமை கொண்டனர்.
18அவர்கள் அப்போஸ்தலரைப் பிடித்துச்
சிறையில் அடைத்தனர். 19ஆனால் இரவில்
கர்த்தருடைய தூதன் ஒருவன் சிறையின் கதவு
களைத் திறந்தான். தேவதூதன் அப்போஸ்தலர்
களை வெளியே அழைத்துச் சென்று அவர்
களை நோக்கி, 20“செல்லுங்கள். தேவாலயத்
தில் போய் நில்லுங்கள். இப்புதிய வாழ்க்கை
யைக் குறித்த ஜீவ வார்த்தைகள் அனைத்
தையும் மக்களுக்குக் கூறுங்கள்” என்றான்.
21அப்போஸ்தலர்கள் இதைக் கேட்டபோது
அவ்வாறே கீழ்ப்படிந்து தேவாலயத்துக்குச்
சென்றார்கள். அது அதிகாலை வேளையாக
இருந்தது. அப்போஸ்தலர்கள் மக்களுக்குப்
போதிக்க ஆரம்பித்தனர்.

தலைமை ஆசாரியனும் அவனது நண்
பர்களும் தேவாலயத்துக்கு வந்தனர். யூதத்
தலைவர்களும் எல்லா முக்கியமான யூத
முதியவர்களும் கூடி ஒரு கூட்டத்திற்கு ஏற்பாடு
செய்தனர். அப்போஸ்தலர்களை அவர்களிடம்
அழைத்து வருதவதற்கெனச் சில மனிதர்களை
அனுப்பினர். 22அவர்கள் சிறைக்குப் போன
போது, அங்கு அப்போஸ்தலர்களைக் காண
வில்லை. எனவே அவர்கள் திரும்பிச்
சென்று, யூத அதிகாரிகளுக்கு அதனை
அறிவித்தனர். 23அம்மனிதர்கள், “சிறை பூட்டித்
தாளிடப்பட்டிருந்தது. சிறை வாயில்களருகே
காவலர்கள் நின்றனர். ஆனால் நாங்கள் கதவு
களைத் திறந்தபோது சிறையில் யாரு
மில்லை!” என்றனர். 24தேவாலயத்து காவல
ரின் தலைவனும் முக்கிய போதகர்களும் இத
னைக் கேட்டனர். அவர்கள் குழப்பமுற்றனர்.
அவர்கள் ஆச்சரிய முற்று, “இதனால் என்ன
நடக்கப்போகிறதோ?” என்றனர்.

25பின் மற்றொரு மனிதன் வந்து, “கேளுங்
கள்! நீங்கள் சிறையில் அடைத்த மனிதர்கள்
தேவாலயத்துக்குள் நிற்கின்றனர். அவர்கள்
மக்களுக்கு உபதேசித்துக் கொண்டிருக்கின்

*றனர்" என்று அவர்களுக்குக் கூறினான்.*
*26காவலர் தலைவனும், காவலரும் வெ*
*ளியே வந்து அப்போஸ்தலரை அழைத்துச்*
*சென்றனர். மக்களுக்குப் பயந்ததால் வீரர்கள்*
*தங்கள் வலிமையைப் பயன்படுத்தவில்லை.*
*மக்கள் சினம் கொண்டு கற்களாலெறிந்து*
*அவர்களைக் கொல்லக்கூடுமென்று வீரர்கள்*
*பயந்தனர்.*

*27வீரர்கள், கூட்டத்திற்கு அப்போஸ்தலரை*
*அழைத்து வந்து, யூதத் தலைவர்களுக்கு முன்பு*
*அவர்களை நிற்கும்படியாகச் செய்தனர்.*
*தலைமை ஆசாரியன் அப்போஸ்தலர்களை*
*விசாரித்தான். 28அவன், "இந்த மனிதனைக்*
*(இயேசுவை) குறித்து உபதேசிக்கக் கூடாது*
*என உங்களுக்கு ஏற்கெனவே நாங்கள் உறுதி*
*யாகக் கட்டளை இட்டிருக்கவில்லையா?*
*ஆனால் நீங்கள் என்ன செய்திருக்கிறீர்கள்?*
*எருசலேமை உங்கள் உபதேசங்களால் நிரப்*
*பியுள்ளீர்கள். இந்த மனிதனின் (இயேசுவின்)*
*மரணத்திற்கு எங்களைக் காரணர்களாக ஆக்*
*குவதற்கு நீங்கள் முயல்கிறீர்கள்" என்றான்.*

*29பேதுருவும் மற்ற அப்போஸ்தலர்களும்*
*பதிலாக "நாங்கள் தேவனுக்குத்தான் கீழ்ப்*
*படிய வேண்டும். உங்களுக்கு அல்ல! 30நீங்கள்*
*இயேசுவைக் கொன்றீர்கள். அவரைச் சிலு*
*வையில் தொங்கும்படியாகச் செய்தீர்கள்.*
*ஆனால் நமது முன்னோரின் கர்த்தராகிய நம்*
*தேவன் இயேசுவை மரணத்தினின்று எழுப்*
*பினார்! 31தேவன் இயேசுவை உயர்த்தித்*
*தனது வலது பக்கத்தில் உட்கார வைத்துக்*
*கொண்டார். இயேசுவை எங்கள் தலைவரா*
*கவும் இரட்சகராகவும் ஆக்கினார். எல்லா யூதர்*
*களும் தங்கள் இருதயத்தையும் வாழ்க்கை*
*யையும் மாற்றும்படியாக தேவன் இதைச்*
*செய்தார். இப்போது தேவன் அவர்கள் பாவங்*
*களை மன்னிக்க முடியும். 32இக்காரியங்கள்*
*அனைத்தும் நடந்ததைக் கண்டோம். இவை*
*அனைத்தும் உண்மையென்று நாங்கள் கூற*
*முடியும். பரிசுத்த ஆவியானவரும் இவைய*
*னைத்தும் உண்மையென்று நிலை நாட்*
*டுகிறார். தேவன் அவருக்குக் கீழ்ப்படிகிற*
*அனைவருக்கும் பரிசுத்த ஆவியை அளித்*
*திருக்கிறார்" என்று கூறினர்.*

*33யூதத் தலைவர்கள் இந்த வார்த்தைகளைக்*
*கேட்டனர். அவர்கள் மிகுந்த சினம் கொண்*
*டனர். அப்போஸ்தலரைக் கொல்வதற்கு ஒரு*
*வழிகாண அவர்கள் திட்டமிட ஆரம்பித்தனர்.*
*34கூட்டத்திலிருந்த பரிசேயரில்* * *ஒருவர் எழுந்*
*தார். அவர் பெயர் கமாலியேல். அவர் வேத*
*பாரகராக இருந்தார். எல்லா மக்களும் அவரை*
*மதித்தனர். சில நிமிடங்கள் அப்போஸ்தலரை*
*வெளியே அனுப்புமாறு அவர் கூறினார்.*
*35பின் அவர் அங்கிருந்தோரை நோக்கி, "இஸ்ர*
*வேலின் மனிதர்களே, இம்மனிதருக்கெதிராகச்*
*செயல்படுமாறு நீங்கள் வகுக்கும் திட்டங்களில்*
*எச்சரிக்கையாக இருங்கள்! 36எப்போது*
*தெயுதாஸ் தோன்றினான் என்பதை நினைவு*
*கூருகிறீர்களா? அவன் தன்னை ஒரு முக்கிய*
*மான மனிதன் என்று கூறினான். சுமார்*
*400 மனிதர்கள் அவனோடு சேர்ந்து கொண்*
*டனர். ஆனால் அவன் கொல்லப்பட்டான்.*
*அவனைப் பின்பற்றியவர்கள் சிதறுண்டு ஓடி*
*னார்கள். அவர்களால் எதையும் செய்யக்கூட*
*வில்லை. 37அவனுக்குப்பின் கலிலேயாவிலி*
*ருந்து யூதா என்னும் பெயருள்ள மனிதன்*
*வந்தான். மக்கள்தொகை பதிவு செய்த காலத்*
*தில் அவன் வந்தான். அவன் தன்னைப் பின்*
*பற்றியவர்களுக்குத் தலைமையும் தாங்கி*
*னான். அவனும் கொல்லப்பட்டான். அவனைப்*
*பின்பற்றிய அனைவரும் சிதறியோடினர்.*
*38எனவே இப்போது உங்களுக்குச் சொல்கி*
*றேன். இம்மனிதரிடமிருந்து விலகியிருங்கள்.*
*அவர்களைத் தனித்து விட்டுவிடுங்கள். அவர்*
*கள் திட்டம் மனிதர்களிடமிருந்து உருவாகியி*
*ருந்தால் அது தகர்ந்துவிழும். 39ஆனால் அது*
*தேவனிடமிருந்து வந்ததெனில், நீங்கள் அவர்*
*களைத் தடுக்கவியலாது. நீங்கள் தேவனுட*
*னேயே சண்டையிடுபவர்களாக ஆவீர்கள்"*
*என்றார்.*

*கமாலியேல் கூறியவற்றிற்கு யூதத் தலை*
*வர்கள் உடன்பட்டனர். 40அவர்கள் அப்போஸ்*
*தலர்களை மீண்டும் உள்ளே அழைத்தனர்.*
*அவர்கள் அப்போஸ்தலரை அடித்து இயேசு*
*வைக் குறித்து மேலும் மக்களிடம் பேசா*
*திருக்குமாறு கூறினர். பின்னர் அப்போஸ்*
*தலர்களைப் போகுமாறு விடுவித்தனர். 41அப்*
*போஸ்தலர்கள் கூட்டத்தை விட்டுச் சென்றனர்.*
*இயேசுவின் பெயரில் வெட்கமுறும்படியாகக்*
*கிடைக்கப்பெற்ற பெருமைக்காக அப்போஸ்*
*தலர்கள் மகிழ்ந்தனர். 42மக்களுக்குப் போதிப்*
*பதை அப்போஸ்தலர்கள் நிறுத்தவில்லை.*
*இயேசுவே கிறிஸ்து என்னும் நற்செய்தியை*
*அப்போஸ்தலர்கள் மக்களுக்குத் தொடர்ந்து*
*கூறி வந்தனர். தேவாலயத்திலும், மக்களின்*
*வீடுகளிலும் ஒவ்வொரு நாளும் அவர்கள்*
*இதைச் செய்தனர்.*

### உதவியாளர்கள் நியமனம்

6 *இயேசுவைப் பின்பற்றுவோராகப் பற்பல*
*மக்கள் மாறிகொண்டிருந்தனர். ஆனால்*
*அதே வேளையில் கிரேக்க மொழி பேசுகின்ற*
*சீஷர்களுக்கும் மற்ற யூதச் சீஷர்களுக்கும் ஒரு*
*விவாதம் நடந்தது. சீஷர்கள் ஒவ்வொரு நாளும்*
*பெற்ற பங்கைப் போன்று அவர்களுடனிருந்த*
*விதவைகளுக்கு அளிக்கப்படவில்லை என்று*
*அவர்கள் கூறினர். 2பன்னிரண்டு அப்போஸ்*
*தலர்களும் சீஷர்கள் கூட்டத்தை ஒருமிக்க*
*அழைத்தனர். அப்போஸ்தலர்கள் அவர்களை*
*நோக்கி, "தேவனுடைய வார்த்தையைப் போ*
*திக்கும் எங்கள் வேலை தடையுற்றுள்ளது.*

---

***பரிசேயர்கள்*** *யூத மதக்குழுவினர். இவர்கள் யூதச் சட்டங்களையும் பழக்கவழக்கங்களையும் கவனமாகக் கடைபிடிப்பவர்கள்.*

அது நல்லதல்ல! மக்களுக்கு உண்பதற்கு எதை
யேனும் கொடுப்பதில் உதவுவதைக் காட்டி
லும் தேவனுடைய வார்த்தையை தொடர்ந்து
போதிப்பதே எங்களுக்கு நல்லது. [3]எனவே,
சகோதரர்களே, உங்களில் ஏழு பேரைத்
தேர்ந்து எடுங்கள். மக்கள் நல்லவர்களெனக்
கருதுவோராக அவர்கள் இருக்கவேண்டும்.
அவர்கள் ஆவியாலும், ஞானத்தாலும் நிரம்
பப் பெற்றவர்களாக இருக்கவேண்டும். அவர்
கள் இந்த வேலையைச் செய்யும்படியாக
நாங்கள் அவர்களை நியமிப்போம். [4]பின்னர்
நாங்கள் எங்கள் முழு நேரத்தையும் பிரார்த்
தனை செய்வதற்கும், தேவனுடைய வார்த்
தையைப் போதிப்பதற்கும் பயன்படுத்து
வோம்" என்றனர்.

[5]கூட்டத்தினர் எல்லோரும் இந்தத் திட்டத்தை
வரவேற்றனர். எனவே அவர்கள் ஏழு பேரைத்
தேர்ந்தெடுத்தனர். அவர்கள் ஸ்தேவான் (நம்
பிக்கை மிகுந்தவனும் பரிசுத்த ஆவியால்
நிரப்பப்பட்டவனுமான மனிதன்), பிலிப்பு,*
ப்ரோகோரஸ், நிகனோர், தீமோன், பர்மேனஸ்,
நிக்கோலஸ் (அந்தியோகியாவிலிருந்து வந்த
வனும் யூதனாக மாற்றப்பட்டவனும் ஆவான்)
ஆகியோராவர். [6]அவர்கள் அந்த ஏழு
பேரையும் அப்போஸ்தலர்களுக்கு முன்பாக
அழைத்து வந்தனர். அப்போஸ்தலர்கள்
பிரார்த்தனை செய்து தங்கள் கைகளை அவர்
கள்மீது வைத்தனர்.

[7]தேவனுடைய வார்த்தை மென்மேலும்
பெரும் எண்ணிக்கையிலான மக்களை எட்
டியது. எருசலேமில் சீஷர்களின் எண்
ணிக்கை மேலும் மேலும் அதிகரித்தது. யூத
ஆசாரியர்களில் ஒரு பெரும் கூட்டத்தினரும்
கூட விசுவாசம் வைத்துக் கீழ்ப்படிந்தனர்.

### ஸ்தேவானுக்கு எதிராக யூதர்கள்

[8]ஸ்தேவான் (எழுவரில் ஒருவன்) மிகுந்த
ஆசீர்வாதத்தைப் பெற்றான். தேவனிடமிருந்து
ஸ்தேவானும் அற்புதங்கள் செய்யும் வல்லமை
யையும் தேவனிடமிருந்து மக்களுக்குச் சான்
றுகளைக் காட்டும் வல்லமையையும் பெற்
றிருந்தான். [9]ஆனால் சில யூதர்கள் வந்து
ஸ்தேவானிடம் விவாதித்தனர். அவர்கள் ஒரு
யூத ஜெப ஆலயத்திலிருந்து வந்திருந்தனர்.
அது விடுதலை பெற்ற யூதர்களுக்குரிய* ஜெப
ஆலயமாய் இருந்தது. (இந்த ஜெப ஆலயம்
சிரேனே, அலெக்ஸாண்டிரியா ஆகிய இடங்
களிலுள்ள யூதர்களுக்கு உரியது) சிலிசியா,
ஆசியா ஆகிய இடங்களின் யூதர்களும் அவர்
களோடிருந்தனர். அவர்கள் எல்லோரும் வந்து
ஸ்தேவானிடம் விவாதித்தனர். [10]ஞானத்தோடு
பேசுவதற்கு ஆவியானவர் ஸ்தேவானுக்கு உத
வினார். அவனுடைய வலிமையான சொற்கள்
யூதர்கள் அவனோடு வாதிட முடியாதபடி செய்
தன. [11]எனவே யூதர்கள் சில மனிதர்களுக்கு
கூலி கொடுத்து "மோசேக்கு எதிராகவும், தேவ
னுக்கெதிராகவும் ஸ்தேவான் தீயவற்றைக்
கூறுவதை நாங்கள் கேட்டோம்" என்று சொல்
லச் செய்தார்கள். [12]இவ்வாறு செய்ததால்
யூதர்கள் மக்களையும், முதிய யூதத் தலைவர்
களையும், வேதபாரகரையும் கலக்கமுறச்
செய்தனர். அவர்கள் மிகுந்த கோபமடைந்து
ஸ்தேவானிடம் வந்து அவனைப் பிடித்தனர்.
யூத அதிகாரிகள் கூடியிருந்த இடத்திற்கு
அவனை அழைத்துச் சென்றனர். [13]யூதர்கள்
சிலரை அக்கூட்டத்திற்கு அழைத்து வந்தனர்.
ஸ்தேவானைக் குறித்துப் பொய் சொல்லும்படி
அவர்களுக்கு யூதர்கள் கூறியிருந்தனர். அந்த
மனிதர்கள், "இவன் (ஸ்தேவான்) எப்போதும்
பரிசுத்தமான இடத்தைக் (தேவாலயத்தை)
குறித்து கெட்டதையே சொல்கிறான். மோசே
யின் சட்டத்திற்கு எதிராகவே எப்போதும்
சொல்கிறான். [14]நாசரேத்தைச் சேர்ந்த இயேசு
இந்த இடத்தை அழிப்பார் என்று அவன்
கூறியதை நாங்கள் கேட்டோம். நாம் கடைப்
பிடிக்குமாறு மோசே சொன்னவற்றை இயேசு
மாற்றுவார் என்றும் அவன் கூறினான்" என்
றனர். [15]கூட்டத்தில் அமர்ந்திருந்த மக்கள் எல்
லோரும் ஸ்தேவானைக் கூர்ந்து நோக்கினர்.
அவனது முகம் தேவதூதனின் முகத்தைப்
போன்று தோன்றியது. அவர்கள் அதைக்
கண்டனர்.

### ஸ்தேவானின் பேச்சு

7 தலைமை ஆசாரியன் ஸ்தேவானை
நோக்கி, "இந்தக் காரியங்கள் எல்லாம்
உண்மைதானா?" என்று கேட்டான். [2]ஸ்தே
வான் பதிலாக, "எனது யூத தந்தையரே,
சகோதரரே, நான் கூறுவதைக் கேளுங்கள்.
மகிமைபொருந்திய நமது தேவன் நமது தந்தை
யாகிய (முன்னோராகிய) ஆபிரகாமுக்குக்
காட்சிகொடுத்தார். ஆபிரகாம் மெசொபொதா
மியாவில் இருந்தார். அவர் ஆரானில் வாழ்
வதற்கு முன்பு நடந்த நிகழ்ச்சி இது. [3]தேவன்
ஆபிரகாமை நோக்கி, 'உன் நாட்டையும் உன்
உறவினர்களையும் விட்டுவிட்டு, நான் காண்
பிக்கும் நாட்டிற்குப் போ'* என்றார். [4]எனவே
ஆபிரகாம் கல்தேயா நாட்டை விட்டுச் சென்
றார். ஆரானில் வசிப்பதற்காகச் சென்றார்.
ஆபிரகாமின் தந்தை இறந்த பிறகு, நீங்கள்
இப்போது வசிக்கிற இந்த இடத்திற்கு தேவன்
அவரை அனுப்பினார். [5]ஆனால் தேவன்
ஆபிரகாமுக்கு இந்த நாட்டில் எதையும் கொடுக்
கவில்லை; ஒரு அடி நிலம் கூட கொடுக்க
வில்லை. ஆனால் ஆபிரகாமுக்கும் அவர்
குழந்தைகளுக்கும் எதிர்காலத்தில் இந்நாட்
டைக் கொடுப்பதாக தேவன் வாக்களித்தார்.
(ஆபிரகாமுக்குக் குழந்தை இல்லாதிருந்த

---

**பிலிப்பு** இவன் அப்போஸ்தலரான பிலிப்பு அல்ல.

**விடுதலை பெற்ற யூதர்கள்** இவர்களோ அல்லது இவர்களது தந்தைமார்களோ முன்பு அடிமைகளாக இருந்தனர். இப்போது விடுவிக்கப்பட்டுள்ளனர்.

**உன் ... போ** ஆதி. 12:1.

போது இது நடந்தது) [6]தேவன் அவருக்குக் கூறியது இதுவாகும். 'உன் சந்ததியர் மற்றொரு நாட்டில் வாழ்வர். அவர்கள் அந்நியர்களாயிருப்பர். அந்நாட்டின் மக்கள் அவர்களை அடிமைப்படுத்துவர்.* 400 வருடங்களுக்கு அவர்களை மோசமாக நடத்துவர். [7]ஆனால் அவர்களை அடிமையாக்கிய நாட்டினரை நான் தண்டிப்பேன்.' தேவன் மேலும், 'இந்தக் காரியங்கள் நடந்தபின் உன் மக்கள் அந்நாட்டிலிருந்து வெளியேறுவர். பின் உன் மக்கள் இங்கு இந்த இடத்தில் என்னை வழிபடுவர்'* என்றார். [8]தேவன் ஆபிரகாமோடு ஓர் உடன்படிக்கை பண்ணினார். இந்த உடன்படிக்கையின் அடையாளமே விருத்தசேதனமாகும். எனவே ஆபிரகாமுக்கு ஒரு மகன் பிறந்ததும், அவன் பிறந்து எட்டு நாட்களான பின் ஆபிரகாம் தன் மகனுக்கு விருத்தசேதனம் செய்வித்தார். அவரது மகனின் பெயர் ஈசாக்கு. ஈசாக்கும் தனது மகன் யாக்கோபுக்கு விருத்தசேதனம் செய்வித்தார். யாக்கோபும் தனது மக்களுக்கு அதைச் செய்தார். அந்த மகன்களே பின்னர் பன்னிரண்டு தந்தையராக மாறினர்.

[9]"இந்தத் தந்தையர் யோசேப்பைக் (அவர்களது இளைய சகோதரன்) கண்டு பொறாமை கொண்டனர். எகிப்தில் ஒரு அடிமையாக யோசேப்பை அவர்கள் விற்றனர். ஆனால் தேவன் யோசேப்போடு இருந்தார். [10]யோசேப்புக்கு அங்கு பல தொல்லைகள் நேர்ந்தாலும், தேவன் அத்தொல்லைகள் எல்லாவற்றிலிருந்தும் அவரைக் காப்பாற்றினார். பார்வோன் எகிப்தின் அரசனாக இருந்தான். அவன் யோசேப்புக்கு தேவன் கொடுத்த ஞானத்தைக் கண்டு அவரை விரும்பவும் நேசிக்கவும் செய்தான். எகிப்தின் ஆளுநர் வேலையைப் பார்வோன் யோசேப்புக்குக் கொடுத்தான். பார்வோனின் வீட்டிலுள்ள எல்லா மக்களையும் ஆளுவதற்கும் யோசேப்பை பார்வோன் அனுமதித்தான். [11]ஆனால் எகிப்திலும், கானானிலுமிருந்த எல்லா நிலங்களும் வறண்டுபோயின. அங்கு உணவு தானியங்கள் வளர முடியாதபடிக்கு நாடு வறட்சியுற்றது. இது மக்களுக்குப் பெரும் துன்பத்தை விளைவித்தது. நமது தந்தையருக்கு உண்பதற்கு எதுவும் அகப்படவில்லை. [12]ஆனால் எகிப்தில் உணவு சேமித்து வைக்கப்பட்டிருப்பதை யாக்கோபு கேள்விப்பட்டார். எனவே அவர் நமது தந்தையரை (யாக்கோபின் மகன்கள்) அங்கு அனுப்பினார். (இது எகிப்துக்கு அவர்களின் முதற் பயணமாயிருந்தது.) [13]பின்னர் அவர்கள் இரண்டாம் முறையாகவும் அங்குச் சென்றார்கள். இந்தத் தடவை யோசேப்பு தன் சகோதரர்களிடம் தான் யாரென்பதைக் கூறினான். பார்வோனுக்கும் யோசப்பின் குடும்பத்தைக் குறித்துத் தெரிய வந்தது. [14]பின் யோசேப்பு தன் தந்தையாகிய யாக்கோபை எகிப்துக்கு அழைத்து வருவதற்கென்று சில மனிதர்களை அனுப்பினார். தன் எல்லா உறவினர்களையும் கூட (அங்கு மொத்தம் 75 பேர்) அழைத்தார். [15]எனவே யாக்கோபு எகிப்திற்குப் போனார். யாக்கோபும் நமது தந்தையரும் (முதாதையர்கள்) அவர்களின் மரணம் மட்டும் அங்கு வாழ்ந்தனர். [16]பின்னர் அவர்கள் சரீரங்கள் சீகேமுக்கு அனுப்பப்பட்டன. அவர்கள் அங்கு ஒரு கல்லறையில் வைக்கப்பட்டனர். (வெள்ளியைக் கொடுத்து ஏமோரின் மகன்களிடமிருந்து சீகேமில் ஆபிரகாம் வாங்கிய கல்லறை அது.)

[17]"எகிப்தில் யூத மக்களின் தொகை பெருகியது. நமது மக்கள் அங்கு மென்மேலும் பெருகினர். (தேவன் ஆபிரகாமுக்குக் கொடுத்த வாக்குறுதியைச் செயல்படுத்த வேண்டிய காலம் நெருங்கிக் கொண்டிருந்தது) [18]பின் இன்னொரு மன்னன் எகிப்தை ஆளத் தொடங்கினான். அவனுக்கு யோசேப்பைப்பற்றி எதுவும் தெரியாது. [19]இந்த மன்னன் நமது மக்களை ஏமாற்றினான். நம் முன்னோருக்கு அவன் தீமை செய்தான். அம்மன்னன் அவர்களது குழந்தைகளை இறக்கும்படியாக வெளியே போடும்படிச் செய்தான். [20]இக்காலத்தில் தான் மோசே பிறந்தார். அவர் அழகான குழந்தையாகவும் தேவனுக்கு இனிமையானவராகவும் இருந்தார். தன் தந்தையின் வீட்டில் மூன்று மாத காலத்துக்கு மோசேயை வைத்துப் பராமரித்தார்கள். [21]மோசேயை வெளியில் விட்டபொழுது பார்வோனின் மகள் அவனை எடுத்துத் தன் சொந்தக் குழந்தையைப் போன்றே வளர்த்தாள். [22]தங்களிடமிருந்த எல்லா ஞானத்தையும் எகிப்தியர்கள் மோசேக்கு கற்பித்தனர். அவர் கூறியவற்றிலும் செய்தவற்றிலும் வல்லமைமிக்கவராக இருந்தார்.

[23]"மோசே நாற்பது வயதாக இருந்தபோது தன் சகோதரர்களான யூத மக்களைச் சந்திப்பது நல்லது என்று நினைத்தார். [24]எகிப்தியன் ஒருவன் யூதன் ஒருவனுக்கு எதிராகத் தவறு செய்வதை அவர் கண்டார். எனவே அவர் யூதனுக்கு சார்பாகச் சென்றார். யூதனைப் புண்படுத்தியதற்காக மோசே எகிப்தியனைத் தண்டித்தார். மோசே அவனைப் பலமாகத் தாக்கியதால் அவன் இறந்தான். [25]தேவன் அவர்களை மீட்பதற்காக அவரைப் பயன்படுத்துவதை யூத சகோதரர்கள் புரிந்து கொள்வார்கள் என்று மோசே எண்ணினார். ஆனால் அவர்கள் புரிந்து கொள்ளவில்லை. [26]மறுநாள் இரண்டு யூதர்கள் சண்டையிடுவதை மோசே பார்த்தார். அவர்களுக்குள் அமைதியை நிலைநாட்ட அவர் முயன்றார். அவர், 'மனிதரே, நீங்கள் இருவரும் சகோதரர்கள். நீங்கள் ஏன் ஒருவரையொருவர் மோசமாக நடத்துகிறீர்கள்?' என்றார். [27]ஒருவனுக்கு எதிராகத் தவறிழைத்த மற்றொருவன் மோசேயைத் தள்ளிவிட்டான். அவன் மோசேயை நோக்கி,

---

**உன் … அடிமைப்படுத்துவர்** *ஆதி. 15:13-14.*

**இந்த … வழிபடுவர்** *ஆதி. 15:14, யாத். 3:12.*

'நீ எங்கள் அதிகாரியாகவும் நீதிபதியாகவும் இருக்கும்படி யாராவது கூறினார்களா? இல்லை. 28நேற்று எகிப்தியனைக் கொன்றது போல என்னைக் கொல்லுவாயோ?'* என்றான். 29அவன் இவ்வாறு கூறுவதைக் கேட்ட மோசே எகிப்தை விட்டுச் சென்றார். மீதியானில் வாழும்படியாகச் சென்றார். அவர் அங்கு அந்நியனாக இருந்தார். மீதியானில் இருந்த போது, மோசேக்கு இரண்டு மகன்கள் பிறந்தனர்.

30"மோசே நாற்பது ஆண்டுகளுக்குப் பிறகு சீனாய் மலையின் அருகேயுள்ள வனாந்தரத்தில் இருந்தார். எரிகின்ற புதரின் ஜூவாலையிலிருந்து ஒரு தேவதூதன் அவருக்குத் தோன்றினான். 31அதைக் கண்டு மோசே வியந்தார். நன்கு பார்க்கும்படியாக அவர் அருகே சென்றார். மோசே ஒரு சத்தத்தைக் கேட்டார். அது தேவனுடைய குரலாக இருந்தது. 32தேவன் கூறினார், 'ஆபிரகாமின் தேவனும், ஈசாக்கின் தேவனும் யாக்கோபின் தேவனுமாகிய உங்கள் முன்னோரின் தேவன் நானே'* என்றார். மோசே பயத்தால் நடுங்க ஆரம்பித்தார். அவர் புதரைப் பார்க்கவும் அஞ்சினார். 33கர்த்தர் அவரிடம், 'உன் மிதியடிகளைக் கழற்று. நீ நின்று கொண்டிருக்கும் இந்த இடம் பரிசுத்த பூமி. 34எகிப்தில் எனது மக்கள் மிகவும் துன்புறுவதைக் கண்டிருக்கிறேன். என் மக்கள் அழுவதைக் கேட்டிருக்கிறேன். அவர்களைக் காப்பாற்றுவதற்காக இறங்கி வந்துள்ளேன். மோசே! இப்பொழுது வா, நான் எகிப்திற்கு உன்னைத் திரும்பவும் அனுப்புகிறேன்'* என்றார்

35"யூதர்கள் அவர்களுக்கு வேண்டாமெனக் கூறிய அதே மோசே அவர்தான். அவர்கள் அவரிடம், 'நீ எங்களுக்கு அதிபதியாகவும், நீதிபதியாகவும் இருக்கமுடியுமென்று யாராவது கூறினார்களா? இல்லை!' என்றனர். தேவன் அதிபதியாகவும் மீட்பராகவும் மோசேயாகிய அதே மனிதனை அனுப்பினார். தேவன் ஒரு தேவதூதனின் உதவியோடு மோசேயை அனுப்பினார். எரியும் புதரில் மோசே கண்ட தேவதூதன் இவனே. 36அதனால் மோசே மக்களை வெளியே நடத்திச் சென்றார். அவர் வல்லமை வாய்ந்த செயல்களையும் அற்புதங்களையும் செய்தார். எகிப்திலும், செங்கடலிலும், வனாந்தரத்திலும் 40 ஆண்டுகள் இவற்றை மோசே செய்தார். 37'தேவன் உங்களுக்கு ஒரு தீர்க்கதரிசியைக் கொடுப்பார். உங்கள் மக்களிடமிருந்தே அந்தத் தீர்க்கதரிசி வருவார். அவர் என்னைப் போலவே இருப்பார்'* என்று கூறிய அதே மோசேதான் அவர். 38வனாந்தரத்தில் யூதர்களின் கூட்டத்தோடு இருந்தவர் இவரேதான். சீனாய் மலையில் தன்னோடு பேசிய தேவதூதனுடன் இருந்தார். நமது முன்னோரோடும் அவர் இருந்தார். மோசே தேவனிடமிருந்து ஜீவன் தரும் கட்டளைகளைப் பெற்றார். மோசே நமக்கு அந்தக் கட்டளைகளைக் கொடுத்தார்.

39"ஆனால் நமது தந்தையர் (முன்னோர்கள்), மோசேக்குக் கீழ்ப்படிய மறுத்தனர். அவர்கள் அவரைத் தள்ளி ஒதுக்கினர். மீண்டும் எகிப்துக்குப் போகவேண்டுமென அவர்கள் விரும்பினர். 40நம் தந்தையர் ஆரோனை நோக்கி, 'மோசே நம்மை எகிப்து நாட்டிற்கு வெளியே வழிநடத்தினார். ஆனால் அவருக்கு என்ன நேர்ந்தது என்பதை நாங்கள் அறியோம். எனவே எங்களுக்கு முன்னே போகவும் எங்களுக்கு வழிகாட்டவும் சில தெய்வங்களை உண்டாக்கும்'* என்றனர். 41எனவே மக்கள் கன்றுக்குட்டியைப் போன்ற ஒரு சிலை உண்டாக்கினர். பின் அவர்கள் அதற்குப் படைப்பதற்காகப் பொருட்களைக் கொண்டு வந்தனர். தங்கள் கைகளால் உண்டாக்கிய அதனைக் கண்டு மக்கள் மகிழ்ந்தனர்! 42ஆனால் தேவன் அவர்களுக்கு எதிராகத் திரும்பினார். வானத்திலுள்ள பொய்யான தெய்வங்களின் கூட்டத்தை வழிபடுவதிலிருந்து அவர்களைத் தடுப்பதை தேவன் நிறுத்திக் கொண்டார். தீர்க்கதரிசிகளின் நூலிலும் இவைதான் எழுதப்பட்டுள்ளன. தேவன் சொல்கிறார்,

> 'யூத மக்களாகிய நீங்கள் எனக்கு இரத்த படைப்புக்களையோ பலிகளையோ 40 ஆண்டுகளாக வனாந்தரத்தில் கொண்டு வரவில்லை.
> 43 உங்களோடு மோளேகிற்காக (பொய்யான தெய்வமாகிய) ஒரு கூடாரத்தையும் ரெம்பான் என்னும் நட்சத்திர உருவத்தையும் சுமந்து சென்றீர்கள். இந்த விக்கிரகங்களை நீங்கள் வழிபடுவதற்காக உருவாக்கினீர்கள். எனவே நான் உங்களை பாபிலோனுக்கு அப்பால் அனுப்புவேன்.'
>
> ஆமோஸ் 5:25-27

44"வனாந்தரத்தில் பரிசுத்தக் கூடாரம்* நமது தந்தையரிடம் (முன்னோரிடம்) இருந்தது. இந்தக் கூடாரத்தை எப்படி உண்டாக்குவது என்று தேவன் மோசேயிடம் கூறினார். தேவன் காட்டிய திட்டத்தின்படியே மோசே அதை உண்டாக்கினார். 45பின்னால் பிற தேசங்களின் நிலங்களைக் கைப்பற்றும்படியாக யோசுவா நமது தந்தையரை வழிநடத்தினார். நமது

---

**நீ ... கொல்லுவாயோ** யாத். 2:14.

**ஆபிரகாமின் ... நானே** யாத். 3:6.

**உன் ... அனுப்புகிறேன்** யாத். 3:5-10.

**தேவன் ... இருப்பார்** உபா. 18:15.

**மோசே .... உண்டாக்கும்** யாத். 32:1.

**பரிசுத்த கூடாரம்** இது சாட்சிக்குரிய கூடாரம். நகரத்தக்கது. பத்து கட்டளைகளை இங்கு வைத்திருந்தனர். மோசே காலத்தில் தேவன் தம் மக்களைச் சந்திக்கும் இடம்.

மக்கள் அங்குச் சென்றபோது அங்கிருந்த மக்களை தேவன் வெளியேறும்படிச் செய்தார். நமது மக்கள் இப்புதிய நிலத்திற்குச் சென்றபொழுது, இதே கூடாரத்தைத் தம்முடன் எடுத்துச் சென்றனர். தாவீதின் காலம் வரைக்கும் நம் மக்கள் அதை வைத்திருந்தனர்.
46தேவன் தாவீதைக் குறித்து மகிழ்ந்தார். தாவீது தேவனிடம் யாக்கோபின் தேவனாகிய அவருக்கு ஒரு வீட்டைக் கட்ட அனுமதி வேண்டினான்.
47ஆனால் சாலமோன் தான் (தாவீதின் மகன்) அந்த ஆலயத்தைக் கட்டினான்:
48"ஆனால் உன்னதமானவர் (தேவன்) மனிதர் தங்கள் கைகளால் கட்டும் வீடுகளில் வசிப்பதில்லை. தீர்க்கதிரிசி இதனையே எழுதினார். கர்த்தர் கூறுகிறார்,

'வானம் எனது சிம்மாசனம்.
49 பூமி எனது பாதங்கள் வைக்கும் இடம்.
எனக்காக எவ்விதமான வீட்டைக் கட்டப் போகிறீர்கள்? ஓய்வெடுக்க எனக்கு ஓர் இடம் தேவையில்லை.
50 நான் இவை எல்லாவற்றையும் உண்டாக்கினேன் என்பதை நினைவுகூருங்கள்!'"
ஆமோஸ் 5:25-27

என்றான்.
51பின் ஸ்தேவான், "பிடிவாதமான யூதத் தலைவர்களே! நீங்கள் உங்கள் இருதயங்களை தேவனுக்குக் கொடுக்கவில்லை! நீங்கள் அவர் வார்த்தைகளுக்குச் செவிசாய்க்க மாட்டீர்கள்! பரிசுத்த ஆவியானவர் உங்களிடம் கூற முயல்வதை எப்போதும் எதிர்த்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்கள் தந்தையர் இதனைச் செய்தார்கள். நீங்களும் அவர்களைப் போலவே இருக்கிறீர்கள்!
52உங்கள் தந்தையர் தங்கள் காலத்தில் வாழ்ந்த ஒவ்வொரு தீர்க்கதரிசியையும் புண்படுத்தினார்கள். அந்தத் தீர்க்கதரிசிகள் வெகு காலத்திற்கு முன்பே நீதியுள்ள ஒருவர் (கிறிஸ்து) வருவார் எனக் கூறினார்கள். ஆனால் உங்கள் தந்தையர் அத் தீர்க்கதரிசிகளைக் கொன்றார்கள். இப்பொழுது நீங்கள் நீதியுள்ள அவருக்கு எதிராகத் திரும்பியுள்ளீர்கள்.
53மோசேயின் சட்டத்தைப் பெற்றவர்கள் நீங்கள். தமது தேவதூதர்களின் மூலமாகத் தேவன் இந்தச் சட்டத்தை உங்களுக்குக் கொடுத்தார். ஆனால் நீங்களோ இந்தச் சட்டத்திற்குக் கீழ்ப்படிவதில்லை" என்றான்.

### ஸ்தேவான் கொல்லப்படுதல்

54இவற்றை ஸ்தேவான் கூறுவதை யூதத் தலைவர்கள் கேட்டனர். அவர்கள் மிகுந்த சினம் அடைந்தனர். யூதத் தலைவர்கள் பித்துப் பிடித்தவர்களைப்போல, ஸ்தேவானை நோக்கிப் பற்களைக் கடித்தனர்.
55ஆனால் ஸ்தேவானோ பரிசுத்த ஆவியால் நிரம்பியவனாக இருந்தான். ஸ்தேவான் வானத்தை அண்ணாந்து பார்த்தான். அவன் தேவனுடைய மகிமையைக் கண்டான். தேவனுடைய வலது பக்கத்தில் இயேசு நிற்பதைக் கண்டான்.
56ஸ்தேவான், "பாருங்கள்! பரலோகம் திறந்திருப்பதை நான் பார்க்கிறேன். தேவனுடைய வலபக்கத்தில் மனித குமாரன் (இயேசு) நிற்பதை நான் காண்கிறேன்!" என்றான்.
57பின் யூத அதிகாரிகள் எல்லோரும் உரத்த குரலில் சத்தமிட்டார்கள். அவர்கள் கைகளால் தமது காதுகளைப் பொத்திக் கொண்டார்கள். அவர்கள் எல்லோரும் ஸ்தேவானை நோக்கி ஓடினர்.
58அவர்கள் அவனை நகரத்திற்கு வெளியில் கொண்டு சென்று அவன் சாகும் வரை அவன்மீது கற்களை எறிந்தார்கள். ஸ்தேவானுக்கு எதிராகப் பொய் கூறியவர்கள் தங்களது மேலாடைகளை சவுல் என்னும் இளைஞனிடம் கொடுத்தார்கள்.
59பின் அவர்கள் ஸ்தேவானின் மேல் கற்களை வீசினார்கள். ஆனால் ஸ்தேவான் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தான். அவன், "கர்த்தராகிய இயேசுவே, எனது ஆவியை ஏற்றுக் கொள்ளும்!" என்றான்.
60அவன் முழங்காலில் நின்று, "கர்த்தரே! இந்தப் பாவத்திற்காக அவர்களைக் குற்றம் சாட்டாதிரும்!" என்று பிரார்த்தித்தான். இதைக் கூறிய பிறகு ஸ்தேவான் இறந்து போனான்.

8 ஸ்தேவானின் கொலை ஒரு நல்ல நிகழ்ச்சியே என்று சவுல் அச்சமயம் ஒப்புக் கொண்டான்.

### விசுவாசிகளுக்கு உபத்திரவம்

2-3சில நல்ல (பக்தியுள்ள) மனிதர்கள் ஸ்தேவானைப் புதைத்தனர். அவர்கள் அவனுக்காகச் சத்தமிட்டு அழுதனர். எருசலேமிலுள்ள விசுவாசிகளின் கூட்டத்திற்கு அன்றிலிருந்து யூதர்கள் தீங்கிழைக்க ஆரம்பித்தனர். அவர்களை அதிகமாகத் துன்புறுமாறு யூதர்கள் செய்தனர். அக்கூட்டத்தை அழிப்பதற்குச் சவுலும் முயன்று கொண்டிருந்தான். சவுல் அவர்களின் வீடுகளுக்குள் நுழைந்தான். அவர்களில் ஆண்களையும் பெண்களையும் வெளியே இழுத்து வந்து சிறைக்குள் தள்ளினான். எல்லா விசுவாசிகளும் எருசலேமைவிட்டு அகன்றனர். அப்போஸ்தலர்கள் மட்டுமே அங்குத் தங்கினர். யூதேயா, மற்றும் சமாரியா ஆகிய நாடுகளின் பல பகுதிகளுக்கும் விசுவாசிகள் சென்றனர்.
4விசுவாசிகள் எல்லா இடங்களிலும் பரவியிருந்தனர். விசுவாசிகள் சென்ற இடங்களில் எல்லாம் மக்களுக்கு நற்செய்தியைக் கூறினர்.

### சமாரியாவில் பிலிப்பு

5பிலிப்பு சமாரியாவிலுள்ள ஒரு நகரத்திற்குச் சென்றான். அவன் கிறிஸ்துவைப் பற்றிப் போதித்தான்.
6அங்குள்ள மக்கள் பிலிப்பு கூறியதைக் கேட்டனர். அவன் செய்து கொண்

டிருந்த அதிசயங்களைக் கண்டனர். பிலிப்பு
கூறிய செய்திகளைக் கவனமாகக் கேட்டனர்.
7அம்மக்களில் பலரினுள்ளும் அசுத்த ஆவிகள்
இருந்தன. அசுத்த ஆவிகள் அவர்களை விட்
டுப் போகும்படியாக பிலிப்பு கட்டளையிட்
டான். அவை வெளியே வந்தபோது, ஆவிகள்
மிகுந்த சத்தமிட்டன. பாரிச வியாதிக்காரர்கள்
பலரும், ஊனமுற்றவர்கள் பலரும் அங்கிருந்த
னர். பிலிப்பு அவர்களையும் குணப்படுத்தி
னான். 8இதனால் அந்நகர மக்கள் மிகுந்த சந்
தோஷம் அடைந்தனர்.

9ஆனால் அந்நகரில் சீமோன் என்னும் பெய
ருள்ள மனிதன் இருந்தான். பிலிப்பு அங்கு
வருமுன்னர், சீமோன் மந்திர தந்திரங்களைச்
செய்தான். சமாரியா மக்களைத் தனது தந்திரங்
களால் வியப்புறச் செய்தான். 10முக்கியமான,
மற்றும் முக்கியமற்ற மக்கள் அனைவரும்
சீமோன் கூறியவற்றை நம்பினர். மக்கள்,
"'மகத்தான வல்லமை' எனப்படும் தேவனு
டைய வல்லமை இம்மனிதனுக்கு உள்ளது!"
என்றனர். 11சீமோன் தனது மந்திர தந்திரங்
களால் மக்களை நீண்ட நாட்களாக வியக்க
வைத்தான். மக்கள் அவனைப் பின்பற்றுவோ
ராயினர். 12ஆனால் பிலிப்பு தேவனுடைய
இராஜ்யத்தைப் பற்றிய நற்செய்தியையும்,
இயேசு கிறிஸ்துவின் வல்லமையையும் மக்க
ளுக்கு எடுத்துக் கூறினான். ஆண்களும் பெண்
களும் பிலிப்புவை நம்பினர். அவர்கள்
ஞானஸ்நானம் பெற்றனர். 13சீமோனும் கூட
நம்பிக்கை வைத்து ஞானஸ்நானம் பெற்றான்.
சீமோன் பிலிப்புவோடு இருந்து வந்தான்.
பிலிப்பு செய்த அற்புதங்களையும், வல்லமை
மிக்க காரியங்களையும் கண்ட சீமோன் வியப்
படைந்தான்.

14அப்போஸ்தலர்கள் இன்னும் எருசலேமில்
இருந்தனர். தேவனுடைய வார்த்தையைச் சமா
ரியாவின் மக்கள் ஏற்றுக்கொண்டனர் என்
பதை அவர்கள் கேள்விப்பட்டார்கள். 15ஆகவே
பேதுருவையும் யோவானையும் அவர்களிடம்
அனுப்பினார்கள். பேதுருவும் யோவானும்
வந்தபோது சமாரிய விசுவாசிகள் பரிசுத்த
ஆவியைப் பெறவேண்டுமென்று அவர்கள்
பிரார்த்தனை செய்தனர். 16இந்த மக்கள் கர்த்
தராகிய இயேசுவின் பெயரில் ஞானஸ்நானம்
பெற்றிருந்தார்கள். ஆனால் பரிசுத்த ஆவியான
வர் அவர்களில் ஒருவர்மீதும் இறங்கி வர
வில்லை. இந்த நோக்கத்திற்காகப் பேதுருவும்
யோவானும் பிரார்த்தனை செய்தனர்.
17இரண்டு அப்போஸ்தலர்களும் அவர்கள் கை
களை மக்கள் மீது வைத்தார்கள். அப்போது
அம்மக்கள் பரிசுத்த ஆவியைப் பெற்றனர்.

18அப்போஸ்தலர்கள் தமது கைகளை மக்
கள்மீது வைத்தபோது ஆவியானவர் அவர்
களுக்கு அளிக்கப் பெற்றதைச் சீமோன் பார்த்
தான். எனவே சீமோன் அப்போஸ்தலர்களிடம்
பணத்தைக் கொண்டுவந்து 19"நான் ஒருவன்
மீது எனது கையை வைத்ததும், அவன்
பரிசுத்த ஆவியைப் பெறும்படிக்கு இந்த வல்ல
மையை எனக்குத் தாருங்கள்" என்றான்.

20பேதுரு சீமோனை நோக்கி, "நீயும் உனது
பணமும் அழிவைக் காணட்டும்! தேவனுடைய
வரத்தைப் பணத்தால் வாங்கமுடியும் என்று
நீ எண்ணினாய். 21இந்த வேலையில் நீ பங்
கைப் பெற முடியாது. தேவனுக்கு முன்பாக
உனது இருதயம் நேர்மையாக இல்லை.
22உனது மனதை மாற்று! நீ செய்த இந்தத்
தீய காரியத்திலிருந்து விலகி விடு. கர்த்தரை
நோக்கி பிரார்த்தனை செய். நீ இவ்வாறு
நினைத்ததை அவர் மன்னிக்கக் கூடும். 23நீ
வெறுப்பினாலும், பொறாமையினாலும்
நிரம்பி, பாவத்தால் ஆளப்பட்டிருப்பதை நான்
பார்க்கிறேன்" என்றான்.

24சீமோன் பதிலாக, "கர்த்தரிடம் (தேவனி
டம்) நீங்கள் இருவரும் எனக்காகப் பிரார்த்
தனை செய்யுங்கள். நீங்கள் சொன்னவை
எனக்கு நேராதபடிக்கு பிரார்த்தனை செய்யுங்
கள்!" என்றான்.

25தாங்கள் கண்ட, இயேசு செய்த காரியங்
களை, அப்போஸ்தலர்கள் மக்களுக்குக் கூறி
னர். கர்த்தரின் செய்தியை அப்போஸ்தலர்
மக்களுக்கு கூறினர். பின்பு அவர்கள் எருசலே
முக்குத் திரும்பிச் சென்றனர். வழியில் அவர்
கள் சமாரியர்களின் ஊர்கள் பலவற்றிற்குச்
சென்று, மக்களுக்கு நற்செய்தியைப் போதித்
தனர்.

### எத்தியோப்பிய அதிகாரியும் பிலிப்புவும்

26தேவதூதன் ஒருவன் பிலிப்புவிடம் பேசி
னான். "புறப்பட்டு தெற்கு நோக்கிச் செல்.
எருசலேமிலிருந்து காசாவிற்குப் போகும்
பாதைக்குச் செல். அந்தப் பாதை பாலைவனம்
வழியாகச் செல்கிறது" என்றான். 27எனவே
பிலிப்பு தயாராகிப் புறப்பட்டுச் சென்றான்.
பாதையில் எத்தியோப்பியாவிலிருந்து வந்த
மனிதன் ஒருவனைக் கண்டான். அம்மனிதன்
ஆண்மையிழந்தவன்.* எத்தியோப்பியாவின்
அரசியாகிய கந்தாகே என்பவளின் அலுவ
லரில் அவன் ஒரு முக்கிய அதிகாரியாக
இருந்தான். அவன் அவளது கருவூலத்திற்குப்
பொறுப்பாயிருந்தான். அம்மனிதன் எருசலே
மில் வழிபாடு செய்யச் சென்றிருந்தான். 28இப்
போது அவன் வீட்டிற்குப் பயணமாகிக்கொண்
டிருந்தான். அவன் தனது இரதத்தில் அமர்ந்து
தீர்க்கதரிசியாகிய ஏசாயாவின் புத்தகத்தில்
சில பகுதிகளை வாசித்துக்கொண்டிருந்தான்.
29ஆவியானவர் பிலிப்புவை நோக்கி, "இரதத்
தின் அருகே போய் காத்திரு" என்றார்.
30எனவே பிலிப்பு இரதத்தை நோக்கி ஓடி
னான். அம்மனிதன் தீர்க்கதரிசியாகிய ஏசாயா
வின் நூலிலிருந்து வாசிப்பதைக் கேட்டான்.
பிலிப்பு அவனை நோக்கி, "நீ படித்துக்கொண்

**ஆண்மையிழந்தவன்** குடும்ப வாழ்விற்குத் தகு
தியற்றவன். ஆள்வோர்கள் இத்தகையவர்களுக்கு
முக்கிய பதவிகள் கொடுத்தனர்.

*டிருப்பதைப் புரிந்துகொள்ள முடிகிறதா?” என்று கேட்டான்.*

31*அம்மனிதன், “நான் எப்படிப் புரிந்து கொள்ளமுடியும்? அதை விளக்கிச் சொல்லக் கூடிய ஒருவர் தேவை!” என்றான். அவன் பிலிப்புவை இரதத்தினுள் ஏறி, அவனோடு உட்காருமாறு வேண்டினான்.* 32*வேதவாக்கி யத்தில் அவன் படித்துக்கொண்டிருந்த பகுதி இதோ.*

> *அவர் கொல்லப்படுவதற்காக அழைத்துச் செல்லப்படும் ஆட்டைப் போன்றிருந்தார். அவர், தனது முடி வெட்டப்படுகிறபோது சத்தமிடாதிருக்கிற ஆட்டுக் குட்டியைப் போன்றிருந்தார்.*
>
> 33 *அவர் அவமானப்படுத்தப்பட்டார். அவர் உரிமைகள் பறிக்கப்பட்டன. உலகில் அவர் வாழ்க்கை முடிந்தது. அவர் குடும் பம் (வழித்தோன்றல்கள்) பற்றி சொல் வதற்கு எதுவுமில்லை.”*
>
> *ஏசாயா 53:7-8*

34*அதிகாரி பிலிப்புவிடம், “யாரைக் குறித் துத் தீர்க்கதரிசி சொல்கின்றார் என்பதைத் தயவுசெய்து எனக்குக் கூறுங்கள். தன்னைக் குறித்தா அல்லது வேறு யாரைக் குறித்து அவர் பேசுகிறார்?” என்று கேட்டான்.*
35*பிலிப்பு பேச ஆரம்பித்தான். அவன் வேத வாக்கியத்தின் இந்தப் பகுதியிலிருந்து பேச ஆரம்பித்து, அம்மனிதனுக்கு இயேசுவைப் பற்றிய நற்செய்தியைச் சொல்லத் தொடங் கினான்.*

36*அவர்கள் மேலும் பயணம் செய்கையில் தண்ணீர் இருந்த ஓர் இடத்திற்கு அருகே வந்தனர். அதிகாரி, “பார்! இங்கு தண்ணீர் உள்ளது. நான் ஞானஸ்நானம் பெறுவதற்குத் தடை ஏது?” என்றான்.*

37* 38*அதிகாரி இரதத்தை நிறுத்தக் கட்டளையிட்டான். பிலிப்புவும் அதிகாரியும் நீருக்குள் இறங்கினர். பிலிப்பு அவருக்கு ஞானஸ்நானம் கொடுத்தான்.* 39*அவர்கள் நீரிலி ருந்து வெளிவந்தபோது கர்த்தரின் ஆவியான வர் பிலிப்புவை எடுத்துச் சென்றுவிட்டார். அதிகாரி அவனை மீண்டும் பார்க்கவில்லை. அதிகாரி தனது வீட்டை நோக்கிப் பயணமா னான். அவன் மகிழ்வுடன் இருந்தான்.*
40*ஆசோத்து என்னும் பட்டணத்தில் பிலிப்பு பின்னர் காட்சி தந்தான். அவன் செசரியா என்னும் நகரத்திற்குப் போய்க் கொண்டிருந் தான். அவன் நற்செய்தியை ஆசோத்திலிருந்து செசரியா செல்லுகிற எல்லா ஊர்களிலும் போதித்தான்.*

### சவுல் மனம் மாறுதல்

9 *சவுல் கர்த்தரின் (இயேசுவின்) சீஷரைப் பயமுறுத்தவும், கொல்லவும் எப்பொ ழுதும் முயன்று கொண்டிருந்தான். எனவே அவன் தலைமை ஆசாரியனிடம் சென்றான்.*
2*தமஸ்கு நகரத்தில் ஜெப ஆலயங்களிலுள்ள யூதர்களுக்குக் கடிதங்களை எழுதுமாறு அவ ரைக் கேட்டான். தமஸ்குவில் கிறிஸ்துவின் வழியைப் பின்பற்றுகிற சீஷர்களைக் கண்டு பிடிக்கும் அதிகாரத்தை அவனுக்குக் கொடுக் குமாறு தலைமை ஆசாரியரைக் கேட்டான். அங்கு ஆணோ, பெண்ணோ, விசுவாசிகள் எவரையேனும் கண்டால் அவன் அவர்க ளைக் கைதுசெய்து எருசலேமிற்குக் கொண்டு வர விரும்பினான்.*

3*எனவே சவுல் தமஸ்குவிற்கு புறப்பட்டுச் சென்றான். அவன் நகரத்திற்கு அருகே வந்த போது, அவனைச் சுற்றிலும் மிகுந்த பிரகா சமான ஒளி வானிலிருந்து திடீரென வெளிச் சமிட்டது.* 4*சவுல் தரையில் விழுந்தான். அவன் தன்னோடு பேசுகிற ஒரு சத்தத்தைக் கேட்டான். “சவுலே, சவுலே! நீ ஏன் புண்படுத்தும் காரி யங்களை எனக்குச் செய்து கொண்டிருக் கிறாய்?” என்றது அச்சத்தம்.*

5*சவுல், “ஆண்டவரே, நீர் யார்?” என்று கேட்டான். அந்தச் சத்தம் பதிலாக, “நான் இயேசு.* 6*நீ புண்படுத்த நினைப்பது என் னையே. நீ எழுந்து நகரத்துக்குள் போ. அங்கிருக்கும் ஒருவர் நீ செய்யவேண்டியதை உனக்குக் கூறுவார்” என்றது.*

7*சவுலோடு பயணம் செய்த மனிதர் நின் றனர். அவர்கள் எதுவும் சொல்லவில்லை. அம்மனிதர் சத்தத்தைக் கேட்டனர். ஆனால் யாரையும் பார்க்கவில்லை.* 8*சவுல் தரையிலி ருந்து எழுந்தான். அவன் கண்களைத் திறந்த போது அவனால் பார்க்க முடியவில்லை. எனவே சவுலோடு வந்த மனிதர்கள் அவன் கையைப் பிடித்து, அவனைத் தமஸ்குவுக்கு அழைத்துச் சென்றனர்.* 9*மூன்று நாட்கள் சவு லால் பார்க்க முடியவில்லை, அவன் எதையும் உண்ணவோ, எதையும் பருகவோ இல்லை.*

10*தமஸ்குவில் இயேசுவின் சீஷன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் அனனியா. கர்த்தர் ஒரு தரிசனத்தில் அவனிடம் வந்து பேசினார். கர்த்தர், “அனனியாவே!” என்று அழைத்தார். அனனியா பதிலாக, “ஆண்டவரே, இதோ இருக்கிறேன்” என்றான்.*

11*கர்த்தர் அனனியாவை நோக்கி, “எழுந்து நெடும்வீதி எனப்படும் தெருவுக்குப் போ. யூதா ஸின்* வீட்டைக் கண்டுபிடி. தர்சு நகரத்தின் சவுல் என்ற மனிதனுக்காக விசாரி. அவன் அங்குப் பிரார்த்தனை செய்து கொண்டிருக்*

---

**வாக்கியம் 37** *பின்னால் வந்த சில படிகளில் 37 வது வாக்கியம் சேர்க்கப்பட்டுள்ளது. பிலிப்பு பதிலாக, “நீ முழு மனதோடு நம்பினால் உன்னால் முடியும்” என்றார். அந்த அதிகாரி, “நான் இயேசு கிறிஸ்துதான் தேவனுடைய குமாரன் என்று நம்புகி றேன்” என்றான்.*

**யூதாஸ்** *இவன் அப்போஸ்தலானாகிய யூதாஸ் அல்ல.*

கிறான். 12சவுல் ஒரு காட்சி கண்டான். அக்
காட்சியில் அனனியா என்றொரு மனிதன்
அவனிடம் வந்து கரங்களை அவன்மீது வைத்
தான். அப்போது சவுலால் மீண்டும் பார்க்க
முடிந்தது” என்றார். 13ஆனால் அனனியா
பதிலாக, “ஆண்டவரே (இயேசுவே) பல மக்கள்
இம்மனிதனைக் (சவுலை) குறித்து எனக்குக்
கூறியிருக்கிறார்கள். எருசலேமிலுள்ள உமது
தூய மக்களுக்கு இந்த மனிதன் செய்த தீமை
களை அவர்கள் எனக்குச் சொன்னார்கள்.
14இப்போது அவன் (சவுல்) இங்கு தமஸ்கு
வுக்கு வந்துள்ளான். உம்மில் விசுவாசம்
வைக்கிற எல்லோரையும் கைது செய்யும்
அதிகாரத்தைத் தலைமைப் போதகர்கள் அவ
னுக்கு அளித்துள்ளனர்” என்றான்.

15ஆனால் கர்த்தர் அனனியாவிடம், “போ!
நான் சவுலை ஒரு முக்கிய வேலைக்காகத்
தேர்ந்துள்ளேன். அவன் மன்னருக்கும், யூத
மக்களுக்கும் பிற நாடுகளுக்கும் என்னைப்
பற்றிச் சொல்லவேண்டும். 16என் பெயருக்காக
அவன் படவேண்டிய துன்பங்களை நான் சவு
லுக்குக் காட்டுவேன்” என்றார்.

17எனவே அனனியா புறப்பட்டு, யூதாஸின்
வீட்டிற்குச் சென்றான். அவன் தனது கை
களைச் சவுலின் மீது வைத்து, “சவுலே, எனது
சகோதரனே, கர்த்தர் இயேசு என்னை அனுப்
பினார். நீ இங்கு வந்து கொண்டிருந்தபொழுது
வழியில் நீ பார்த்தவரும் அவரே. நீ மீண்டும்
பார்வை அடையவும், பரிசுத்த ஆவியால்
நிரம்பவும் இயேசு என்னை இங்கு அனுப்
பினார்” என்றான். 18உடனே மீன் செதில்கள்
போன்றவை சவுலின் கண்களிலிருந்து விழுந்
தன. சவுலால் மீண்டும் பார்க்க முடிந்தது.
சவுல் எழுந்து ஞானஸ்நானம் பெற்றான்.
19அவன் ஆகாரம் உண்டு, பலம் பெற்றவனாய்
உணர்ந்தான்.

### சவுல் தமஸ்குவில் போதித்தல்

சில நாட்கள் தமஸ்குவில் சவுல் இயேசுவின்
சீஷர்களோடு இருந்தான். 20ஜெப ஆலயங்களில்
இயேசுவைக் குறித்துப் போதிக்க ஆரம்பித்
தான். மக்களுக்கு, “இயேசு தேவனுடைய குமா
ரன்!” என்று கூறினான்.

21சவுலைக் கேட்ட எல்லா மக்களும் வியப்
புற்றனர். அவர்கள், “இவன் எருசலேமிலிருந்த
அதே மனிதன். இந்தப் பெயரை (இயேசு)
நம்பிய மக்களை அழிக்க முற்பட்டுக் கொண்
டிருந்தான்! அவன் இங்கும் அதைச் செய்வதற்
காகவே வந்தான். இயேசுவின் சீஷர்களைக்
கைது செய்து எருசலேமிலுள்ள தலைமை
ஆசாரியர்களிடம் அழைத்துச் செல்வதற்கு
வந்தான்” என்றனர். 22ஆனால் சவுலோ மென்
மேலும் வல்லமையில் பெருகினான். அவன்
இயேசுவே கிறிஸ்து என நிரூபித்தான். தமஸ்கு
வில் அவன் சான்றுகள் வலுவாக இருந்தபடி
யால் யூதர்கள் அவனோடு வாக்குவாதம்
செய்ய இயலவில்லை.

### சவுல் தப்பிச் செல்லுதல்

23பல நாட்களுக்குப் பிறகு, யூதர்கள் சவு
லைக் கொல்லத் திட்டமிட்டனர். 24சவுலுக்காக
நகரத்தின் கதவுகளை இரவும் பகலும் யூதர்கள்
காவல் செய்து கொண்டிருந்தனர். அவர்கள்
அவனைக் கொல்ல விரும்பினர். ஆனால்
சவுல் அவர்களின் சதித்திட்டத்தைக் குறித்து
சொல்லப்பட்டிருந்தான். 25ஒரு நாள் இரவில்
சில சீஷர்கள் அவன் நகரத்திலிருந்து வெளியே
றுவதற்கு உதவினர். சீஷர்கள் அவனை ஒரு
கூடையில் வைத்தனர். நகரக்கோட்டையிலி
ருந்த ஒரு துவாரத்தின் வழியாக கூடையை
இறக்கி அவனை வெளியே விட்டனர்.

### எருசலேமில் சவுல்

26பிறகு சவுல் எருசலேமுக்குச் சென்றான்.
சீஷர் குழுவில் சேர்ந்துகொள்ள அவன் முயற்
சித்தான். ஆனால் அவர்கள் எல்லோரும்
அவனைக் கண்டு பயந்தனர். சவுல் உண்மை
யாகவே இயேசுவைப் பின்பற்றுகிறவன் என்
பதை அவர்கள் நம்பவில்லை. 27ஆனால்
பர்னபா சவுலை ஏற்றுக்கொண்டு அவனை
அப்போஸ்தலரிடம் அழைத்து வந்தான்.
பர்னபா அப்போஸ்தலருக்குத் தமஸ்குவுக்குச்
செல்லும் பாதையில் சவுல் கர்த்தரை தரிசித்
ததைச் சொன்னான். கர்த்தர் சவுலிடம் பேசிய
வகையை பர்னபா அப்போஸ்தலருக்கு விளக்
கினான். பின் அவன் அப்போஸ்தலர்களுக்கு
இயேசுவுக்காக பயமின்றி தமஸ்குவில் மக்க
ளுக்கு சவுல் போதித்ததையும் சொன்னான்.

28சவுலும் சீஷரோடு தங்கினான். பயமின்றி
கர்த்தரைப் பற்றி எருசலேமின் எல்லா பகுதிக
ளுக்கும் சென்று போதித்தான். 29கிரேக்கமொழி
பேசிய யூதரிடம் சவுல் அவ்வப்போது
பேசினான். அவர்களோடு விவாதங்கள் நடத்
தினான். ஆனால் அவனைக் கொல்வதற்கு
அவர்கள் முயற்சி செய்துகொண்டிருந்தார்கள்.
30சகோதரர்கள் (விசுவாசிகள்) இதைப்பற்றி
அறிந்தபோது அவர்கள் சவுலை செசரியா
நகரத்திற்கு அழைத்துச் சென்றனர். செசரியா
விலிருந்து தர்சு நகரத்திற்கு அவர்கள் சவுலை
அனுப்பினர்.

31யூதேயா, கலிலேயா, சமாரியா, ஆகிய
இடங்களிலுள்ள சபையினர் அமைதியுடன்
வாழ்ந்தார்கள். பரிசுத்த ஆவியானவரின் உத
வியால் வலிமையூட்டப்பட்டுக் கொண்டிருந்
தார்கள். தாங்கள் வாழ்ந்த வகையால் கர்த்
தரை அவர்கள் மதித்தனர் என்பதை விசுவா
சிகள் காட்டினர். ஏனெனில் பரிசுத்த ஆவியா
னவரின் உதவியினால் விசுவாசிகள் குழு
பெருகி வளர்ந்தது.

32எருசலேமைச் சுற்றிலுமிருந்த எல்லா
ஊர்கள் வழியாகவும் பேதுரு பயணமானான்.
லித்தாவில் வாழ்ந்த விசுவாசிகளை* அவன்

---

**விசுவாசிகள்** பரிசுத்தமானவர்கள். இயேசுவில் விசுவாசமுடையோரின் பெயர்.

சந்தித்தான். 33அங்கு பக்கவாத வியாதியால்
பீடிக்கப்பட்ட ஐனேயா என்ற பெயருள்ள ஒரு
வனை அவன் கண்டான். கடந்த எட்டு ஆண்டு
களாக ஐனேயாவால் அவனது படுக்கையை
விட்டு நகர முடியவில்லை. 34பேதுரு அவனி
டம், "ஐனேயாவே, இயேசு கிறிஸ்து உன்னைக்
குணமாக்குகிறார். எழுந்து உன் படுக்கையை
மடக்கு. உன்னால் இப்போது இதனைச் செய்ய
முடியும்!" என்றான். ஐனேயா உடனே எழுந்து
நின்றான்.
35லித்தாவில் வாழ்ந்த எல்லா மக்களும்
சாரோனின் மக்களும் அவனைக் கண்டனர்.
இம்மக்கள் கர்த்தரிடம் திரும்பினார்கள்.

### யோப்பாவில் பேதுரு

36யோப்பா நகரில் தபித்தா என்னும்
பெயருள்ள இயேசுவின் சீஷப் பெண் இருந்
தாள். (அவளது கிரேக்க பெயரான, தொர்காள்,
"மான்" எனப் பொருள்பட்டது) அவள்
மக்களுக்கு எப்போதும் நன்மையையே செய்
தாள். தேவைப்பட்ட மக்களுக்குப் பண உதவி
யும் செய்து வந்தாள். 37பேதுரு லித்தாவிலிருக்
கும்போது, தபித்தா நோய்வாய்ப்பட்டு இறந்
தாள். அவர்கள் அவளது சரீரத்தைக் கழுவி
மாடியில் ஓர் அறையில் வைத்திருந்தனர்.
38யோப்பாவில் சீஷர்கள் பேதுரு லித்தாவில்
இருப்பதைக் கேள்விப்பட்டனர். (லித்தா யோப்
பாவுக்கு அருகிலுள்ளது). எனவே அவர்கள்
இரண்டு மனிதர்களைப் பேதுருவிடம் அனுப்
பினர். அவர்கள் அவனிடம் "விரைந்து எங்க
ளிடம் சீக்கிரம் வாரும்!" என்று வேண்டினர்.
39பேதுரு தயாராகி அவர்களோடு போனான்.
அவன் வந்து சேர்ந்தபொழுது அவனை
மாடிக்கு அழைத்துச் சென்றார்கள். விதவை
கள் எல்லோரும் பேதுருவைச் சூழ்ந்து நின்
றனர். அவர்கள் அழுது கொண்டிருந்தனர்.
தொர்காள் உயிரோடிருந்தபோது செய்த
அங்கிகளையும், பிற ஆடைகளையும் பேதுரு
வுக்குக் காட்டினர். 40பேதுரு எல்லா மக்க
ளையும் அறைக்கு வெளியே அனுப்பினான்.
அவன் முழங்காலில் நின்று பிரார்த்தனை
செய்தான். பின் அவன் தபித்தாவின் சரீரத்
துக்கு நேராகத் திரும்பி, "தபித்தாவே, எழுந்து
நில்!" என்றான். அவள் கண்களைத் திறந்தாள்.
அவள் பேதுருவை கண்டபோது, எழுந்து
அமர்ந்தாள். 41அவன் அவளுக்கு நேராகக்
கையை நீட்டி, அவள் எழுந்திருக்கும்படி
உதவினான். பின் அவன் விசுவாசிகளையும்,
விதவைகளையும் அறைக்குள் அழைத்தான்.
அவர்களுக்குத் தபித்தாவைக் காட்டினான்.
அவள் உயிரோடிருந்தாள்! 42யோப்பாவி
லுள்ள மக்கள் எல்லோரும் இதனை அறிந்
தனர். அவர்களில் பலர் கர்த்தரை நம்பினர்.
43பேதுரு யோப்பாவில் பல நாட்கள் தங்
கினான். தோல் தொழிலாளியான சீமோன்
என்னும் பெயருள்ள ஒரு மனிதனோடு அவன்
தங்கினான்.

### பேதுருவும் கொர்நேலியுவும்

10 செசரியா நகரில் கொர்நேலியு என்னும்
மனிதன் இருந்தான். ரோமப் படையில்
"இத்தாலிய" வகுப்பில் அவன் ஒரு படை
அதிகாரியாக இருந்தான். 2கொர்நேலியு நல்ல
(பக்தியுள்ள) மனிதன். அவனும் அவன் வீட்
டில் வாழ்ந்த எல்லா மக்களும் உண்மையான
தேவனை வணங்கினர். தனது பணத்தின்
பெரும் பகுதியையும் அவன் ஏழை மக்களுக்
குக் கொடுத்தான். கொர்நேலியு தேவனிடம்
எப்போதும் பிரார்த்தனை செய்து கொண்டி
ருந்தான். 3ஒருநாள் மதியத்திற்குப்பின் மூன்று
மணியளவில் கொர்நேலியு ஒரு காட்சியைக்
கண்டான். அவன் தெளிவாக அதைக் கண்
டான். அக்காட்சியில் தேவனிடமிருந்து ஒரு
தூதன் அவனிடம் வந்து, "கொர்நேலியுவே!"
என்றான்.
4கொர்நேலியு தேவதூதனைக் கண்டு
பயந்து, "ஆண்டவரே, என்ன வேண்டும்?"
என்றான்.
தேவதூதன் கொர்நேலியுவிடம், "தேவன்
உனது பிரார்த்தனைகளுக்குச் செவிசாய்த்
தார். நீ ஏழை மக்களுக்குக் கொடுக்கும் தருமங்
களை அவர் பார்த்தார். தேவன் உன்னை
நினைவு கூருகிறார். 5யோப்பா நகரத்திற்குச்
சில மனிதரை அனுப்பு, சீமோன் என்னும்
மனிதனை அழைத்து வருவதற்கு அம்மனிதர்
களை அனுப்பு. சீமோன், பேதுரு எனவும்
அறியப்படுகிறான். 6சீமோன் எனப்படும்
தோல் தொழிலாளியோடு சீமோன் பேதுரு
தங்கிக் கொண்டிருக்கிறான். கடற்கரையில்
உள்ள ஒரு பெரிய வீட்டில் இப்போது இருக்
கிறான்" என்றான். 7கொர்நேலியுவோடு
பேசிய தேவதூதன் அகன்றான். பின் கொர்
நேலியு இரண்டு வேலைக்காரர்களையும், ஒரு
வீரனையும் அழைத்தான். அந்த வீரன் ஒரு
நல்ல (பக்தியுள்ள) மனிதன். கொர்நேலியுவின்
நெருக்கமான உதவியாளர்களில் அவ்வீரனும்
ஒருவன். 8கொர்நேலியு அம்மூன்று மனிதருக்
கும் எல்லாவற்றையும் விளக்கினான். பின்
அவன் அவர்களை யோப்பாவிற்கு அனுப்
பினான். 9மறுநாள் இம்மனிதர்கள் யோப்பா
அருகே வந்தனர். அப்போது பேதுரு மாடிக்கு
பிரார்த்தனை செய்வதற்காகப் போய்க் கொண்
டிருந்தான். அப்போது மதியமாகிக் கொண்
டிருந்தது. 10பேதுரு பசியடைந்தான். அவன்
உண்ண வேண்டுமென நினைத்தான். ஆனால்
பேதுரு உண்ணும்படியாக அவர்கள் உண
வைத் தயாரித்துக்கொண்டிருக்கும்போது அவ
னுக்கு ஒரு காட்சி தெரிந்தது. 11திறந்த
வானத்தின் வழியாக ஏதோ ஒன்று இறங்கி
வருவதை அவன் கண்டான். அது பூமிக்கு
வரும் பெரிய விரிப்பைப் போன்றிருந்தது.
அதனுடைய நான்கு மூலைகளிலிருந்து
பூமிக்கு அது இறக்கப்பட்டது. 12ஒவ்வொரு
வகை பிராணியும் அதில் இருந்தது. நடப்பன,
பூமியில் ஊர்வன, வானில் பறக்கும் பறவை

கள் போன்ற யாவும் அதில் இருந்தன. 13பின்
ஒரு குரல் பேதுருவை நோக்கி, “எழுந்திரு
பேதுரு, இந்தப் பிராணிகளில் நீ விரும்புகிற
யாவையும் சாப்பிடு” என்றது. 14ஆனால்
பேதுரு, “நான் அதை ஒருக்காலும் செய்யமாட்
டேன். கர்த்தாவே! தூய்மையற்றதும், பரிசுத்
தமற்றதுமான உணவை நான் ஒருமுறைகூடப்
புசித்ததில்லை” என்றான்.

15ஆனால் குரல் மீண்டும் அவனுக்கு,
“தேவன் இவற்றைச் சுத்தமாக உண்டாக்கியுள்
ளார். அவற்றை தூய்மையற்றவை என்று
கூறாதே!” என்றது. 16இவ்வாறு மூன்றுதடவை
நிகழ்ந்தது. பிறகு அப்பொருள் முழுவதும்
வானத்திற்குள் எடுத்துக்கொள்ளப்பட்டது.

17இந்தக் காட்சியின் பொருள் என்ன என்று
பேதுரு ஆச்சரியப்பட்டான். இதற்கிடையில்
கொர்நேலியு அனுப்பிய மனிதர்கள் சீமோ
னின் வீட்டைக் கண்டுபிடித்தனர். அவர்கள்
வாசலருகே நின்று கொண்டிருந்தனர். 18அவர்
கள், “சீமோன் என்று அழைக்கப்படும் பேதுரு
இங்கு வசிக்கிறாரா?” என்று கூப்பிட்டுக் கேட்
டார்கள்.

19பேதுரு இப்போதும் அந்தக் காட்சியைப்
பற்றியே நினைத்துக் கொண்டிருந்தான்.
ஆனால் ஆவியானவர் அவனுக்கு, “கவனி!
மூன்று மனிதர்கள் உன்னைத் தேடிக் கொண்
டிருக்கிறார்கள். 20எழுந்து கீழே போ. அம்மனி
தர்களோடு கேள்விகள் எதுவும் கேட்காமல்
போ. நான் அவர்களை உன்னிடம் அனுப்பியி
ருக்கிறேன்” என்றார். 21எனவே பேதுரு
இறங்கி அம்மனிதரிடம் சென்றான். அவன்,
“நீங்கள் தேடி வந்த மனிதன் நானே. நீங்கள்
ஏன் இங்கு வந்தீர்கள்?” என்றான்.

22அம்மனிதர்கள், “ஒரு தேவதூதன் உம்
மைத் தனது வீட்டிற்கு அழைத்து வருமாறு
கொர்நேலியுவுக்குக் கூறியுள்ளான். கொர்
நேலியு ஒரு படை அதிகாரி. அவன் ஒரு
நல்ல நேர்மையான மனிதன். அவன் தேவனை
வணங்குகிறான். எல்லா யூத மக்களும்
அவனை மதிக்கின்றனர். நீர் கூறும் காரியங்
களைக் கொர்நேலியு கேட்கும்படியாக அவ
னது வீட்டிற்கு உம்மை அழைக்கும்படியாக
கொர்நேலியுவுக்கு தேவதூதன் கூறியுள்ளான்”
என்றனர். 23பேதுரு அம்மனிதரை உள்ளே
கூப்பிட்டு இரவில் அங்கே தங்கும்படியாகக்
கேட்டுக் கொண்டான்.

மறுநாள் பேதுரு தயாராகி அம்மூன்று
மனிதரோடும் சென்றான். யோப்பாவிலிருந்து
சில சகோதரர்கள் பேதுருவோடு சென்றனர்.
24அடுத்தநாள் செசரியா நகரத்திற்குள் அவர்
கள் வந்தனர். கொர்நேலியு அவர்களுக்காகக்
காத்துக் கொண்டிருந்தான். அவனது வீட்டில்
உறவினரையும், நெருங்கிய நண்பர்களையும்
ஏற்கெனவே வரவழைத்திருந்தான். 25பேதுரு
வீட்டிற்குள் நுழைந்தபோது கொர்நேலியு
அவர்களைச் சந்தித்தான். கொர்நேலியு பேது
ருவின் பாதங்களில் விழுந்து அவனை வணங்
கினான். 26ஆனால் பேதுரு அவனை எழுந்தி
ருக்குமாறு கூறினான். பேதுரு “எழுந்திரு,
நானும் உன்னைப் போன்ற ஒரு மனிதனே”
என்றான். 27பேதுரு கொர்நேலியுவோடு தொ
டர்ந்து பேசிக் கொண்டிருந்தான். பேதுரு
உள்ளே சென்று ஒரு பெரிய கூட்டமாகக் கூடி
யிருந்த மக்களை அங்கே கண்டான். 28பேதுரு
மக்களை நோக்கி, “யூதரல்லாத எந்த மனித
னோடும் சந்திப்பதோ தொடர்புகொள்வதோ
கூடாது என்பது எங்கள் யூதச்சட்டம் என்பதை
நீங்கள் நன்கு அறிவீர்கள். ஆனால் நான்
எந்த மனிதனையும் ‘தூய்மையற்றவன்’
எனவும், ‘சுத்தமற்றவன்’ எனவும் அழைக்கக்
கூடாது என்று தேவன் எனக்குக் காட்டியுள்
ளார். 29அதனால்தான் அம்மனிதர் இங்கு வரு
மாறு என்னை அழைத்தபோது நான் மறுக்க
வில்லை. எதற்காக என்னை இங்கு அழைத்
தீர்கள் என்பதை இப்போது தயவுசெய்து
கூறுங்கள்” என்றான்.

30கொர்நேலியு, “நான்கு நாட்களுக்கு முன்,
என் வீட்டில் நான் பிரார்த்தனை செய்து
கொண்டிருந்தேன். அது இதே வேளை பிற்
பகல் மூன்று மணியாயிருந்தது. திடீரென
ஒரு மனிதன் எனக்கு முன்பாக நின்று கொண்
டிருந்தான். அவன் ஒளிமிக்க பிரகாசமான
ஆடைகளை அணிந்து கொண்டிருந்தான்.
31அம்மனிதன், ‘கொர்நேலியுவே! தேவன் உன்
பிரார்த்தனையைக் கேட்டார். நீ ஏழை மக்
களுக்கு அளிக்கும் தருமங்களை தேவன்
பார்த்தார். தேவன் உன்னை நினைவுகூரு
கிறார். 32எனவே சில மனிதர்களை யோப்பா
நகரத்திற்கு அனுப்பு. சீமோன் எனப்படும்
பேதுருவை வரச்சொல். தோல் தொழிலாளி
யான சீமோன் என்னும் பெயர்கொண்ட
ஒருவனின் வீட்டில் பேதுரு தங்கியிருக்கிறான்.
அவன் வீடு கடற்கரையில் உள்ளது’ என்றான்.
33எனவே உடனேயே உமக்கு வரச்சொல்லி
யனுப்பினேன். நீர் இங்கு வந்தது நல்லது.
இப்போது தேவனுக்கு முன்பாக நாங்கள்
அனைவரும் கர்த்தர் எங்களுக்குச் சொல்லும்
படியாக உமக்குக் கட்டளையிட்டவற்றைக்
கேட்க இங்கு கூடியிருக்கிறோம்” என்றான்.

### கொர்நேலியுவின் வீட்டில் பேதுரு

34பேதுரு பேச ஆரம்பித்தான், “மெய்யா
கவே தேவனுக்கு எல்லா மனிதரும் சமமான
வர்கள் என்பதை நான் இப்போது புரிந்து
கொள்கிறேன். 35சரியானவற்றைச் செய்து
அவரை வழிபடுகிற எந்த மனிதனையும்
தேவன் ஏற்றுக்கொள்கிறார். 36தேவன் யூத
மக்களோடு பேசியுள்ளார். இயேசு கிறிஸ்
துவின் மூலமாக சமாதானம் வந்தது என்ற
நற்செய்தியை தேவன் அவர்களுக்கு அனுப்
பியுள்ளார். இயேசு எல்லா மக்களின் கர்த்தரா
வார். 37யூதேயா முழுவதும் நிகழ்ந்த செயல்
களை நீங்கள் அறிவீர்கள். யோவான் மக்க
ளுக்கு ஞானஸ்நானத்தைக் குறித்து உபதே

சிக்கத் துவங்கியதற்குப் பின் இவை யாவும்
கலிலேயாவில் ஆரம்பமாயின. 38நீங்கள் நாச
ரேத்தின் இயேசுவைக் குறித்து அறிவீர்கள்.
பரிசுத்த ஆவியையும், வல்லமையையும்
அவருக்குக் கொடுத்து தேவன் அவரைக்
கிறிஸ்துவாக்கினார். இயேசு எல்லா இடங்
களுக்கும் சென்று மக்களுக்கு நல்லவற்றைச்
செய்து கொண்டிருந்தார். பிசாசினால் முடக்
கப்பட்ட மக்களை இயேசு குணப்படுத்தினார்.
தேவன் இயேசுவோடிருந்தார் என்பதை இது
காட்டிற்று. 39யூதேயாவிலும் எருசலேமிலும்
இயேசு செய்த எல்லாவற்றையும் நாங்கள்
பார்த்தோம். அதற்கு நாங்கள் சாட்சிகள்.
ஆனால் இயேசு கொல்லப்பட்டார். மரத்தினால்
செய்யப்பட்ட சிலுவையில் அவரை அறைந்
தனர். 40ஆனால் மரணத்திற்குப்பின் மூன்
றாவது நாள் தேவன் இயேசுவை உயிரோடு
எழுப்பினார். இயேசுவை மக்கள் தெளிவாகப்
பார்க்கும் வாய்ப்பை தேவன் கொடுத்தார்.
41ஆனால் எல்லா மக்களும் அவரைப் பார்க்க
வில்லை. தேவனால் ஏற்கெனவே தேர்ந்தெடுக்
கப்பட்ட சாட்சிகள் மட்டும் அவரைப் பார்த்
தார்கள். நாங்களே அந்த சாட்சிகள்! இயேசு
மரித்து பின்னர் எழுந்த பிறகு அவரோடு
உண்டோம், குடித்தோம். 42மக்களுக்குப்
போதிக்கும்படியாக இயேசு எங்களுக்குக் கூறி
னார். உயிரோடிருக்கும் மக்களுக்கும் மரித்த
மக்களுக்கும் நீதிபதியாக தேவன் நியமித்தவர்
அவரே என்று மக்களுக்குச் சொல்லும்படி
எங்களுக்குக் கூறினார். 43இயேசுவில் நம்
பிக்கை வைக்கிற ஒவ்வொரு மனிதனும் தன்
பாவங்களிலிருந்து மன்னிக்கப்படுவான்.
இயேசுவின் பெயரால் தேவன் அம்மனிதனின்
பாவங்களை மன்னிப்பார். இது உண்மை
யென்று எல்லா தீர்க்கதரிசிகளும் கூறுகின்
றனர்" என்றான்.

### யூதரல்லாதவரையும் பரிசுத்த ஆவியானவர் நிரப்புதல்

44பேதுரு இந்த வார்த்தைகளைப் பேசிக்
கொண்டிருக்கையிலேயே, பரிசுத்த ஆவியா
னவர் அப்பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்த
எல்லா மக்களின் மீதும் வந்திறங்கினார்.
45பேதுருவோடு வந்த யூத விசுவாசிகள் வியந்
தனர். யூதரல்லாத மக்களுக்கும் பரிசுத்த ஆவி
யானவர் அருளப்பட்டதைக் கண்டு அவர்கள்
ஆச்சரியமடைந்தனர். 46ஏனெனில் அவர்கள்
வேற்று மொழிகளைப் பேசுவதையும், தேவ
னைத் துதிப்பதையும் யூத விசுவாசிகள்
கேட்டனர். பின்பு பேதுரு 47"தண்ணீரின் மூலம்
இம்மக்கள் ஞானஸ்நானம் பெறுவதை நாம்
மறுக்க முடியாது. நாம் பெற்றதைப் போலவே
இவர்களும் பரிசுத்த ஆவியைப் பெற்றார்கள்!"
என்றான்.
48கொர்நேலியுவும் அவன் உறவினரும்
நண்பர்களும் இயேசு கிறிஸ்துவின் பெயரில்
ஞானஸ்நானம் பெறவேண்டும் என்று பேதுரு
கட்டளையிட்டான். பின் அம்மக்கள்
பேதுருவைச் சில நாட்கள் தங்களோடு தங்கும்
படியாகக் கேட்டுக்கொண்டனர்.

### எருசலேமில் பேதுரு

11 யூதரல்லாத மக்களும் தேவனுடைய போ
தனையை ஏற்றுக்கொண்டார்கள் என்
பதை அப்போஸ்தலர்களும் யூதேயாவிலுள்ள
சகோதரரும் கேள்விப்பட்டனர். 2எனவே எருச
லேமுக்குப் பேதுரு வந்தபோது சில யூத விசு
வாசிகள் அவனோடு வாதிட்டனர். 3அவர்கள்,
"யூதரல்லாதவர்களும் விருத்தசேதனமில்லாத
வர்களும் ஆகிய மக்களின் வீடுகளுக்கு நீங்கள்
சென்றீர்கள்! அவர்களோடு சாப்பிடவும் செய்
தீர்கள்!" என்று கூறினார்கள்.
4எனவே பேதுரு நடந்தது முழுவதையும்
அவர்களுக்கு விளக்கினான். 5பேதுரு, "நான்
யோப்பா நகரில் இருந்தேன். நான் பிரார்த்
தனை செய்து கொண்டிருந்தபோது, எனக்கு
ஒரு தரிசனம் கிடைத்தது. அக்காட்சியில் நான்
ஏதோ ஒன்று வானிலிருந்து கீழே வரக்கண்
டேன். அது ஒரு பெரிய விரிப்பைப் போன்று
தோற்றமளித்தது. அதன் நான்கு மூலைக
ளாலும் பிடித்து பூமிக்கு அது இறக்கப்பட்டது.
அது கீழே இறங்கி எனக்கு வெகு அருகாமை
யில் நின்றது. 6நான் அதனுள்ளே கவனமாகப்
பார்த்தேன். ஊரும் பிராணிகளையும்,
வானில் பறக்கும் பறவைகளையும் கண்டேன்.
வீட்டு விலங்குகளையும், வன விலங்குகளை
யும் நான் பார்த்தேன். 7ஒரு குரல் என்னை
நோக்கி, 'பேதுரு எழுந்திரு. இந்தப் பிராணி
களில் எதையேனும் நீ புசிக்கலாம்' என்று
கூறிற்று. 8ஆனால் நான், 'கர்த்தாவே நான்
ஒருபோதும் அதைச் செய்யமாட்டேன். தூய்
மையற்றதும் அசுத்தமான பொருளையும் நான்
ஒருபோதும் தின்றதில்லை' என்றேன்.
9ஆனால் வானத்திலிருந்து மீண்டும் அந்தக்
குரல் பதில் கூறிற்று. 'தேவன் இவை சுத்தமா
னவை என அறிவித்துள்ளார். தூய்மையற்
றவை என அவற்றை அழைக்காதே!' 10இது
மூன்று தடவை நடந்தது. பின்னர் அவை
முழுவதும் வானத்திற்குத் திரும்ப எடுத்துக்
கொள்ளப்பட்டன. 11பின் நான் வசித்துக்
கொண்டிருந்த வீட்டிற்கு மூன்று மனிதர்கள்
வந்தார்கள். செசரியா நகரத்திலிருந்து அவர்
கள் என்னிடம் அனுப்பப்பட்டவர்கள். 12சந்தே
கப்படாது அவர்களோடு போகும்படி ஆவி
யானவர் கூறினார். இந்த ஆறு சகோதரர்களும்
கூட என்னோடு வந்தார்கள். கொர்நேலியுவின்
வீட்டிற்கு நாங்கள் சென்றோம். 13கொர்நேலியு
தனது வீட்டில் அவன் கண்ட தேவதூதனைக்
குறித்து எங்களுக்குக் கூறினான். தேவதூதன்
கொர்நேலியுவை நோக்கி, 'சில மனிதரை
யோப்பாவுக்கு அனுப்பு. சீமோன் பேதுருவை
இங்கு வரும்படி அழைப்பாய். 14அவன்
உங்களிடம் பேசுவான். உங்களையும் உங்கள்
குடும்பத்தினர் அனைவரையும் அவன் கூறும்

செய்திகள் இரட்சிக்கும்' என்றான். 15நான்
பேச ஆரம்பித்த பிறகு, துவக்கத்தில்* பரிசுத்த
ஆவியானவர் நம்மீது வந்ததைப் போலவே,
அவர்கள் மீதும் பரிசுத்த ஆவியானவர் வந்
தார். 16அப்போது கர்த்தராகிய இயேசுவின்
வார்த்தைகளை நான் நினைவுகூர்ந்தேன்.
கர்த்தர், 'யோவான் மக்களுக்குத் தண்ணீரால்
ஞானஸ்நானம் வழங்கினான். ஆனால் நீங்
களோ பரிசுத்த ஆவியானவரால் ஞானஸ்
நானம் பெறுவீர்கள்' என்றார். 17கர்த்தராகிய
இயேசு கிறிஸ்துவில் நாம் நம்பிக்கை வைத்த
தால் நமக்குக் கொடுக்கப்பட்ட அதே வரத்தை
இந்த மக்களுக்கும் தேவன் கொடுத்தார். ஆகை
யால் நான் தேவனுடைய செயலைத் தடுக்க
முடிந்ததா? முடியவில்லை!" என்றான்.

18யூத விசுவாசிகள் இதனைக் கேட்டதும்
அவர்கள் வாதிடுவதை நிறுத்தினர். அவர்கள்
தேவனை வாழ்த்திக் கூறினார்கள், "ஆகை
யால் தேவன் யூதரல்லாத மக்கள் தங்கள்
இருதயங்களை மாற்றி நம்மைப் போன்ற
வாழ்க்கை உடையவர்களாய் வாழ அனுமதிக்
கிறார்" என்று ஒப்புக்கொண்டனர்.

### அந்தியோகியாவிற்கு நற்செய்தி

19ஸ்தேவான் கொல்லப்பட்ட பிறகு
விளைந்த துன்பங்களினால் விசுவாசிகள்
சிதறுண்டனர். தூரத்து இடங்களாகிய பெ
னிக்கே, சீப்புரு, அந்தியோகியா போன்ற
இடங்களுக்குச் சில விசுவாசிகள் சென்றனர்.
விசுவாசிகள் நற்செய்தியை இந்த இடங்களி
லெல்லாம் கூறினர். ஆனால் யூதர்களுக்கு
மட்டுமே அவ்வாறு செய்தார்கள். 20இந்த
விசுவாசிகளில் சிலர் சீப்புரு, சிரேனே ஆகிய
நாடுகளிலிருந்து வந்த மனிதர்கள். இந்த
மனிதர்கள் அந்தியோகியாவுக்கு வந்தபோது
அவர்களும் கிரேக்கரிடம் (யூதரல்லாதோரிடம்)
பேசினர். அந்த கிரேக்க மக்களுக்குக் கர்த்தர்
இயேசுவைப் பற்றிய நற்செய்தியை அவர்கள்
கூறினர்.

21கர்த்தர் விசுவாசிகளுக்கு உதவிக்
கொண்டிருந்தார். பெரும் எண்ணிக்கையி
லான மக்கள் விசுவாசம் வைத்து கர்த்தரைப்
பின்பற்றினர்.

22எருசலேமின் சபை அந்தியோகியாவிலி
ருந்த இப்புதிய விசுவாசிகளைப்பற்றி அறிந்
தது. எனவே பர்னபாவை அந்தியோகியா
வுக்கு அனுப்பினர். 23-24பர்னபா நல்ல மனி
தன். அவன் பரிசுத்த ஆவியாலும் மிகுந்த
விசுவாசத்திலும் நிரம்பியிருந்தான். அந்தி
யோகியா மக்கள் பெரிதும் தேவ ஆசீர்வாதம்
பெற்றதைக் கண்டான், அது பர்னபாவுக்கு
மிகுந்த மகிழ்ச்சியைத் தந்தது. அவன் அந்தி
யோகியாவின் எல்லா விசுவாசிகளுக்கும்
உற்சாகமூட்டினான். அவன் அவர்களை
நோக்கி, "ஒருபொழுதும் விசுவாசம் இழக்கா
தீர்கள். எப்பொழுதும் உங்கள் முழு இருதயத்
தோடு கர்த்தருக்குக் கீழ்ப்படியுங்கள்" என்
றான். பற்பல மக்கள் கர்த்தரின் சீஷராயினர்.

25பின்பு பர்னபா தர்சு நகரத்திற்குச் சென்
றான். அவன் சவுலைத் தேடினான். 26அவன்
சவுலைப் பார்த்தபோது பர்னபா அவனை
அந்தியோகியாவுக்கு அழைத்து வந்தான். ஓர்
ஆண்டு முழுவதும் சவுலும் பர்னபாவும்
அங்கே தங்கி இருந்தனர். விசுவாசிகளின்
கூட்டம் ஒருங்கே கூடியபோதெல்லாம் சவுலும்
பர்னபாவும் அவர்களைச் சந்தித்து மக்கள்
பலருக்குப் போதித்தனர். அந்தியோகியாவில்
இயேசுவின் சீஷர்கள் முதன்முதலாக "கிறிஸ்த
வர்கள்" என்று அழைக்கப்பட்டனர்.

27அதே கால கட்டத்தில் சில தீர்க்கதரிசிகள்
எருசலேமிலிருந்து அந்தியோகியாவிற்குச்
சென்றனர். 28அந்தத் தீர்க்கதரிசிகளில் ஒருவன்
அகபு. அந்தியோகியாவில் அகபு எழுந்து
நின்று பேசினான். "உலகம் முழுவதற்கும்
மிகப் பெரிய பஞ்சம் வருகிறது. மக்கள்
உண்ண உணவிராது" என்று பரிசுத்த ஆவி
யானவரின் துணையால் அறிவித்தான். (கில
வுதியு என்னும் சக்கரவர்த்தியின் காலத்தில்
உண்மையாகவே இப்பஞ்சம் ஏற்பட்டது)
29யூதேயாவில் வாழ்ந்த சகோதர சகோதரி
களுக்கு உதவவேண்டுமென விசுவாசிகள்
முடிவெடுத்தனர். தங்களால் முடிந்தவரைக்கும்
அவர்களுக்கு அனுப்புவதாக ஒவ்வொரு விசு
வாசியும் திட்டமிட்டனர். 30அவர்கள் அப்
படியே பணத்தைச் சேர்த்து பர்னபாவிடமும்
சவுலிடமும் கொடுத்தனர். பின் பர்னபாவும்
சவுலும் அதனை யூதேயாவிலிருந்த பெரி
யோரிடம் கொண்டு வந்தனர்.

### ஏரோது அகிரிப்பா சபையைத் துன்புறுத்துதல்

12 அதே காலத்தில் சபையைச் சார்ந்த
சில மக்களை ஏரோது துன்புறுத்த
ஆரம்பித்தான். 2ஏரோது யாக்கோபை
வாளால் வெட்டிக் கொல்லுவதற்கு ஆணை
யிட்டான். யாக்கோபு யோவானின் சகோதரன்.
3யூதர்கள் இதை விரும்பினர் என்பதை
ஏரோது கண்டான். எனவே அவன் பேதுரு
வையும் கைது செய்ய முடிவெடுத்தான். (இது
பஸ்கா பண்டிகை எனப்படும் யூதரின் பண்
டிகையின்போது நடந்தது) 4ஏரோது பேதுரு
வைக் கைது செய்து சிறையில் வைத்தான்.
16 வீரர்களின் கூட்டம் பேதுருவைக் காவல்
காத்தது. பஸ்கா பண்டிகை கழியுமட்டும் காத்
திருப்பதற்கு ஏரோது விரும்பினான். பின்னர்
மக்களின் முன்னால் பேதுருவைக் கொண்டு
வர அவன் திட்டமிட்டான். 5எனவே பேதுரு
சிறையில் வைக்கப்பட்டான். ஆனால் சபையி
னரோ பேதுருவுக்காகத் தொடர்ந்து தேவனிடம்
பிரார்த்தித்துக் கொண்டிருந்தனர்

---

**துவக்கத்தில்** பெந்தெகோஸ்தே நாளில் திருச்சபை ஆரம்பித்த அன்று வாசிக்க: அப். 2வது அதிகாரம்.

### பேதுரு விடுவிக்கப்படுதல்

6இரண்டு வீரர்களுக்கு மத்தியில் பேதுரு
படுத்து உறங்கிக் கொண்டிருந்தான். அவன்
இரண்டு சங்கிலிகளால் கட்டப்பட்டிருந்தான்.
மேலும் அதிகமான வீரர்கள் சிறைக்கதவைக்
காத்துக் கொண்டிருந்தனர். அது இரவுப்பொ
ழுது. மறுநாள் மக்களின் முன்பாகப் பேது
ருவை அழைத்துவர ஏரோது திட்டமிட்டிருந்
தான்.

7அறையில் திடீரென ஒரு ஒளி பிரகா
சித்தது. தேவதூதன் ஒருவன் பேதுருவைப்
பக்கவாட்டில் தொட்டு எழுப்பினான். தேவ
தூதன் “விரைந்து எழு!” என்றான். பேதுரு
வின் கரங்களிலிருந்து விலங்குகள் கழன்று
விழுந்தன. 8தேவதூதன் பேதுருவை நோக்கி,
“ஆடைகளை உடுத்து, செருப்புகளை அணிந்
துகொள்” என்றான். அவ்வாறே பேதுருவும்
செய்தான். பின் தேவதூதன் “அங்கியை
அணிந்துகொண்டு என்னைத் தொடர்ந்து வா”
என்றான். 9தேவதூதன் வெளியே சென்றான்.
பேதுருவும் அவனைத் தொடர்ந்தான். நடந்
தவை உண்மையா என்பது பேதுருவுக்குத்
தெரியவில்லை. ஏதோ ஒரு காட்சியைக் காண்
பதாகவே அவன் எண்ணினான். 10பேதுருவும்
தேவதூதனும் முதல் காவலனையும் இரண்
டாம் காவலனையும் கடந்தனர். நகரத்திலிருந்து
அவர்களைப் பிரித்த பெரிய இரும்புக்
கதவருகே வந்தனர். அந்தக் கதவு தானாகவே
அவர்களுக்காகத் திறந்தது. பேதுருவும் தேவ
தூதனும் கதவின் வழியாகச் சென்று அடுத்த
தெருவரைக்கும் நடந்தார்கள். அப்போது திடீ
ரென தேவதூதன் மறைந்தான்.

11நடந்தது என்னவென்பதைப் பேதுரு அப்
போது உணர்ந்தான். அவன், “கர்த்தர் உண்
மையாகவே தனது தேவதூதனை என்னிடம்
அனுப்பினார் என்பதை நான் அறிவேன்.
ஏரோதிடமிருந்து அவன் என்னை விடுவித்
தான். தீமை எனக்கு நேருமென்று யூதர்கள்
எண்ணினர். ஆனால் கர்த்தர் இவற்றிலிருந்து
என்னைக் காத்தார்” என்று எண்ணினான்.

12பேதுரு அதை உணர்ந்தபோது அவன்
மரியாளின் வீட்டிற்குப் போனான். அவள்
யோவானின் தாய். யோவான் மாற்கு என்றும்
அழைக்கப்பட்டான். பல மக்கள் அங்குக் கூடி
யிருந்தனர். அவர்கள் எல்லோரும் பிரார்த்
தனை செய்து கொண்டிருந்தனர்.

13பேதுரு வெளிக் கதவைத் தட்டினான்.
ரோதை என்னும் பெயருள்ள வேலைக்காரச்
சிறுமி பதில் கூற வந்தாள். 14ரோதை பேதுரு
வின் குரலை அடையாளம் கண்டுகொண்
டாள். அவள் மிகுந்த சந்தோஷம் அடைந்தாள்.
அவள் கதவைத் திறக்கவும் மறந்து விட்டாள்.
அவள் உள்ளே ஓடி, கூட்டத்தினரிடம், “பேதுரு
கதவருகே நிற்கிறார்!” என்றாள். 15விசுவாசி
கள் ரோதையை நோக்கி, “நீ ஒரு பைத்தியம்!”
என்றனர். ஆனால் தான் கூறியது உண்மையே
என்று அவள் வற்புறுத்தினாள். எனவே
அவர்கள், “அது பேதுருவின் தூதனாக இருக்
கவேண்டும்” என்றனர்.

16ஆனால் பேதுரு தொடர்ந்து தட்டிக் கொண்
டேயிருந்தான். விசுவாசிகள் கதவைத் திறந்த
போது பேதுருவைக் கண்டு ஆச்சரியப்பட்டார்
கள். 17அவர்களை அமைதியாக இருக்கும்படி
யாகப் பேதுரு தனது கையால் சைகை செய்
தான். தேவன் அவனைச் சிறையினின்று எவ்
வாறு விடுவித்தார் என்பதை அவன் அவர்க
ளுக்கு விவரித்தான். அவன், “நடந்ததை
யாக்கோபுக்கும் பிற சகோதரருக்கும் சொல்
லுங்கள்” என்றான். பின் வேறிடத்திற்குப்
போவதற்காக அவர்களிடமிருந்து பிரிந்து
சென்றான்.

18மறுநாள் காவலர்கள் மிகவும் நிலை
குலைந்தார்கள். பேதுருவுக்கு என்ன நடந்தி
ருக்குமென்று அவர்கள் அதிசயப்பட்டனர்.
19ஏரோது பேதுருவுக்காக எல்லா இடங்
களிலும் தேடியும் அவன் அகப்படவில்லை.
எனவே ஏரோது காவலரை வினவினான்.
பின் காவலரைக் கொல்லும்படியாக ஆணை
யிட்டான்.

### ஏரோது அகிரிப்பாவின் மரணம்

பின்னர் ஏரோது* யூதேயாவிலிருந்து சென்
றான். அவன் செசரியா நகரத்திற்குச் சென்று
அங்கு சில காலம் தங்கினான். 20தீருவிலும்
சீதோன் நகரிலுமுள்ள மக்களோடு ஏரோது
மிகவும் சினங்கொண்டான். அம்மக்கள் எல்
லோரும் கூட்டமாக ஏரோதுவிடம் வந்தனர்.
பிலாஸ்துவை அவர்கள் தங்கள் பக்கமாக
சேருவதற்குத் தூண்டினார்கள். பிலாஸ்து
அரசனின் நேர்முகப் பணியாள். ஏரோதுவின்
நாட்டிலிருந்து அவர்கள் நாட்டிற்கு உணவுப்
பொருட்கள் வரவேண்டியிருந்ததால் மக்கள்
ஏரோதுவிடம் சமாதானத்தை வேண்டினர்.

21ஏரோது அவர்களைச் சந்திப்பதற்கென
ஒரு நாளைக் குறித்தான். அந்நாளில் ஏரோது,
அரசனுக்கான அழகிய மேலங்கியை
அணிந்து கொண்டிருந்தான். அவன் சிம்மாச
னத்தில் அமர்ந்துகொண்டு மக்களிடம் பேச
ஆரம்பித்தான். 22மக்கள் உரக்க, “இது தேவனு
டைய குரல், மனிதனுடையதல்ல!” என்றனர்.
23ஏரோது இந்த வாழ்த்தைத் தனக்குரியதாக
ஏற்றுக்கொண்டு, தேவனுக்குரிய மகிமையை
அளிக்கவில்லை. எனவே கர்த்தரின் தூதன்
ஒருவன் அவனை நோய்வாய்ப்படச் செய்
தான். அவன் உள்ளே புழுக்களால் உண்ணப்
பட்டு இறந்தான்.

24தேவனுடைய செய்தி பரவிக் கொண்
டிருந்தது. விசுவாசிகளின் எண்ணிக்கைப்
பெருகிக் கொண்டேயிருந்தது.

25எருசலேமில் பர்னபாவும் சவுலும் அவர்
கள் வேலையை முடித்தபோது, அவர்கள்

---

**ஏரோது** ஏரோது அகிரிப்பா - 1, பெரிய ஏரோ
தின் பேரன்.

அந்தியோகியாவுக்குத் திரும்பினர். யோவான் மாற்கு அவர்களோடிருந்தான்.

### பர்னபாவுக்கும் சவுலுக்கும் விசேஷ அழைப்பு

13 அந்தியோகியா சபையில் சில தீர்க்க
தரிசிகளும் போதகர்களும் இருந்தனர்.
அவர்கள் பர்னபாஸ், சிமியோன் (நீகர்
எனவும் அழைக்கப்பட்டான்), லூகி (சிரேனே
பட்டணத்தைச் சேர்ந்தவன்), மானாயீன் (ஆட்
சியாளனான ஏரோதுவோடு வளர்ந்தவன்),
சவுல் ஆகியோர். 2 இம்மனிதர்கள் எல்லோரும்
கர்த்தருக்குச் சேவை செய்யவும் உபவாசமி
ருக்கவும் செய்தனர். பரிசுத்த ஆவியானவர்
அவர்களை நோக்கி, "பர்னபாவையும் சவு
லையும் எனக்காக ஒரு சிறப்பான வேலைக்
காக தனித்துவிடுங்கள். இந்த வேலையைச்
செய்ய நான் அவர்களைத் தேர்ந்துள்ளேன்"
என்றார்.
3 எனவே சபை உபவாசமிருந்து பிரார்த்
தனை செய்தது. பர்னபாவின் மீதும் சவுலின்
மீதும் தங்கள் கரங்களை வைத்து வெளியே
அனுப்பினர்.

### சீப்புருவில் பர்னபாவும் சவுலும்

4 பரிசுத்த ஆவியானவரால் பர்னபாவும்
சவுலும் அனுப்பப்பட்டனர். செலூக்கியா
நகரத்திற்கு அவர்கள் சென்றனர். பின்
செலூக்கியாவிலிருந்து சீப்புரு தீவிற்குக் கடல்
வழியாகச் சென்றனர். 5 சாலமி என்னும்
நகரத்திற்கு பர்னபாவும் சவுலும் வந்தபோது
தேவனுடைய செய்தியை அவர்கள் யூத ஜெப
ஆலயங்களில் போதித்தனர். (யோவான் மாற்
கும் ஓர் உதவியாளனாக அவர்களோடிருந்
தான்)
6 அவர்கள் தீவைக் கடந்து பாப்போ நகர்
வரைக்கும் சென்றனர். பாப்போவில் மந்திர
தந்திரங்கள் செய்த ஒரு யூத மனிதனை அவர்
கள் சந்தித்தனர். அவன் பெயர் பர்ஏசு. அவன்
ஒரு போலித் தீர்க்கதரிசி. 7 ஆளுநர் செர்கியு
பவுல் என்பவரோடு பர்ஏசு எப்போதும் இருந்
தான். செர்கியு பவுல் ஒரு ஞானவான். அவன்
பர்னபாவையும் சவுலையும் சந்திக்க விரும்
பினான். 8 ஆனால் எலிமாஸ் என்னும் மந்திர
வாதி பர்னபாவுக்கும் சவுலுக்கும் எதிரியாக
இருந்தான். (பர்ஏசு என்பதின் கிரேக்க மொழி
யாக்கம் எலிமாஸ்) செர்கியுபவுல் இயேசுவை
நம்பாதபடி தடுக்க பர்ஏசு முயன்றான். 9 பவுல்
பரிசுத்த ஆவியானவரால் நிரப்பப்பட்டான்.
(சவுலின் மற்றொரு பெயர் பவுல்) பவுல்
எலிமாஸைப் பார்த்து, 10 "பிசாசின் மகனே!
நீதிக்கெல்லாம் நீ எதிரி. நீ தீய தந்திரங்களா
லும் பொய்களாலும் நிரப்பப்பட்டிருக்கிறாய்.
கர்த்தரின் உண்மைகளைப் பொய்களாக திரித்
துக் கூற எப்போதும் முயல்கிறாய்! 11 இப்
போது கர்த்தர் உன்னைத் தொடுவார். நீ குருட
னாவாய். சில காலம் வரைக்கும் உன்னால்
எதையும் பார்க்க முடியாது. சூரியனிலிருந்து
வரும் ஒளியைக் கூட பார்க்க முடியாது"
என்றான்.
அப்போது எலிமாஸுக்கு எல்லாம்
இருண்டு போயின. பார்க்க முடியாதபடி அங்
குமிங்கும் தடுமாறினான். கையால் பிடித்து
அவனை வழிநடத்துகிற ஒருவனைக் கண்டு
பிடிக்க முயற்சி செய்து கொண்டிருந்தான்.
12 ஆளுநர் (செர்கியு பவுல்) இதைப் பார்த்த
போது நம்பிக்கை வைத்தான். கர்த்தரைக்
குறித்துப் போதிக்கப்படுபவற்றைக் கேட்டு
அவன் வியப்புற்றான்.

### தொடர் ஊழியம்

13 பாப்போவிலிருந்து பவுலும் அவனோடி
ருந்த மனிதர்களும் கடற் பயணமாயினர். பம்பி
லியாவிலுள்ள பெர்கே என்னும் நகரத்திற்கு
அவர்கள் வந்தனர். ஆனால் யோவான் மாற்கு
அவர்களை விட்டுப் பிரிந்தான். அவன் எருச
லேமுக்குத் திரும்பினான். 14 அவர்கள் பயணத்
தைத் தொடர்ந்து பெர்கேவிலிருந்து பிசிதி
யாவுக்கு அருகேயுள்ள நகராகிய அந்தியோ
கியாவுக்குப் போனார்கள். அந்தியோகியா
வில் ஓய்வுநாளில் யூத ஜெபஆலயத்திற்குள்
போய் அமர்ந்தார்கள். 15 மோசேயின் நியாயப்
பிரமாணமும், தீர்க்கதரிசிகளின் எழுத்துக்
களும் வாசிக்கப்பட்டன. பின் ஜெப ஆலயத்
தலைவர்கள் பவுலுக்கும் பர்னபாவுக்கும் ஒரு
செய்தி அனுப்பினர். "சகோதரரே, நீங்கள்
இங்குள்ள மக்களுக்கு உதவுமாறு ஏதேனும்
கூற வேண்டியிருந்தால் தயவுசெய்து பேசுங்
கள்" என்றனர்.
16 பவுல் எழுந்து நின்றான். அவன் அமை
திக்காகத் தன் கைகளை உயர்த்தி, "எனது
யூத சகோதரர்களே, உண்மையான தேவனை
வழிபடும் மக்களே, தயவுசெய்து நான் சொல்
வதைக் கேளுங்கள். 17 இஸ்ரவேலின் தேவன்
நமது முன்னோரைத் தெரிந்து கொண்டார்.
அவர்கள் அந்நியராக எகிப்தில் வாழ்ந்த
காலத்தில் தேவன் அவரது மக்களுக்கு உதவி
னார். மிகுந்த வல்லமையால் அந்நாட்டிலி
ருந்து அவர்களை அழைத்து வந்தார். 18 வனாந்
தரத்தில் நாற்பது ஆண்டுகள் தேவன் அவர்
களோடு பொறுமையாக இருந்தார். 19 கானானி
லுள்ள ஏழு தேசங்களை தேவன் அழித்தார்.
அவரது மக்களுக்கு அவர்கள் நாட்டைக் கொ
டுத்தார். 20 இவையெல்லாம் சுமார் நானூற்று
ஐம்பது ஆண்டுகளில் நடந்தன. இதன் பிறகு,
சாமுவேல் என்னும் தீர்க்கதரிசியின் காலம்
வரைக்கும் தேவன் நமது மக்களுக்கு நியாயா
திபதிகளை நியமித்தார். 21 பின் மக்கள் ஒரு
மன்னன் வேண்டுமென்று கேட்டனர். தேவன்
அவர்களுக்கு கீஷ் என்பவனின் மகனாகிய
சவுலைக் கொடுத்தார். சவுல் பென்யமீனின்
குடும்ப மரபில் வந்தவன். அவன் நாற்பது
ஆண்டுகள் மன்னனாக இருந்தான். 22 தேவன்
சவுலை எடுத்துக்கொண்ட பிறகு தாவீதை

அவர்களுக்கு மன்னனாக்கினார். தாவீதைக்
குறித்து தேவன் கூறியதாவது: ‘ஈசாயின் மக
னான தாவீதை எனக்குப் பிடித்திருக்கி
றது. என்னென்ன செய்யவேண்டுமென நான்
நினைக்கிறவற்றை அவன் செய்வான்’
23தேவன் தாவீதின் தலைமுறையினரில் ஒரு
வரை இஸ்ரவேலுக்கு (யூதருக்கு) மீட்பராக
அனுப்பினார். அவ்வாறு வந்தவர்தான்
இயேசு. தேவன் இதைச் செய்வதாக வாக்
குறுதி அளித்தார். 24இயேசு வரும் முன்னர்
எல்லா யூத மக்களுக்கும் யோவான் போதித்
தான். அவர்கள் வாழ்க்கையை மாற்ற விரும்
புவதைக் காட்டும் பொருட்டு யோவான் மக்
களை ஞானஸ்நானம் பெறும்படியாகக் கூறி
னான். 25யோவான் தன் வேலையை முடித்துக்
கொண்டிருக்கும் போது அவன், ‘நான்
யாரென்று நினைக்கிறீர்கள். நான் கிறிஸ்து
அல்ல. அவர் எனக்குப் பின் வருவார். அவர்
மிதியடிகளை அவிழ்ப்பதற்கும் எனக்குத்
தகுதி கிடையாது’ என்றான்.

26‘எனது சகோதரர்களே! ஆபிரகாமின்
குடும்பத்து மக்களே! உண்மையான தேவனை
வணங்கும் யூதரல்லாதோரே, கவனியுங்கள்!
மீட்பைக் குறித்த செய்தி நமக்காக அனுப்பப்
பட்டுள்ளது. 27எருசலேமில் வாழும் யூதர்
களும், யூதத் தலைவர்களும் இயேசுவே மீட்பர்
என்பதை உணரவில்லை. இயேசுவைக்
குறித்து தீர்க்கதரிசிகள் எழுதிய வார்த்தைகள்
ஒவ்வொரு ஓய்வுநாளிலும் யூதர்களுக்கு
வாசிக்கப்பட்டன. ஆனால் அவர்கள் புரிந்து
கொள்ளவில்லை. யூதர்கள் இயேசுவைக் குற்
றப்படுத்தினார்கள். அவர்கள் இதைச் செய்த
போது தீர்க்கதரிசிகளின் வார்த்தைகள் நிறை
வேறும்படிச் செய்தார்கள். 28இயேசு இறப்பதற்
கான உண்மையான காரணத்தை அவர்
களால் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனால்
அவரைக் கொல்லும்படியாக பிலாத்துவைக்
கேட்டார்கள். 29கிறிஸ்துவுக்கு ஏற்படும் என
வேதவாக்கியங்கள் கூறிய எல்லா தீமை
களையும் அந்த யூதர்கள் செய்தார்கள். பின்
அவர்கள் இயேசுவைச் சிலுவையிலிருந்து
இறக்கி, அவரை ஒரு கல்லறையில் வைத்
தார்கள். 30ஆனால் தேவன் அவரை மரணத்
திலிருந்து எழுப்பினார்! 31அதன் பிறகு,
கலிலேயாவிலிருந்து எருசலேமுக்கு இயேசு
வோடு வந்திருந்தவர்கள் அவரைப் பல
நாட்கள் கண்டார்கள். இவர்களே, இப்போது
எல்லா மக்களுக்கும் அவரது சாட்சிகள்.
32தேவன் நமது முன்னோருக்குக் கொடுத்த
வாக்குறுதியைப் பற்றிய நற்செய்தியை நாங்
கள் உங்களுக்குக் கூறிக்கொண்டிருக்கிறோம்.
33நாம் அவர்களுடைய மக்கள். இந்த வாக்
குறுதி நமக்கு உண்மையாகுமாறு தேவன்
செய்தார். இயேசுவை மரணத்திலிருந்து எழுப்
பியபடியால் தேவன் இதைச் செய்தார்.
சங்கீதம் இரண்டிலும் நாம் இதைப்பற்றி
வாசிக்கிறோம்.

‘நீர் எனது மகன் இன்று நான் உமது
தந்தையாகி இருக்கிறேன்.’
சங்கீதம் 2:7

34தேவன் இயேசுவை மரணத்திலிருந்து எழுப்
பினார். இயேசு மீண்டும் கல்லறைக்கு ஒரு
போதும் போகமாட்டார். புழுதியாக மாட்டார்.
எனவே தேவன் சொன்னார்:

‘நான் தாவீதுக்குச் செய்த தூய உண்மை
யான வாக்குறுதிகளை உங்களுக்குக்
கொடுப்பேன்.’
சங்கீதம் 16:10

35ஆனால் இன்னொரு இடத்தில் தேவன் சொல்
கிறார்:

‘உங்களது பரிசுத்தமானவரின் சரீரத்
தைக் கல்லறையில் மக்கிப்போக அனு
மதிக்க மாட்டீர்கள்.’
ஏசாயா 55:3

36தேவனுடைய விருப்பத்தை தாவீது உயி
ரோடிருக்கும் காலத்தில் நிறைவேற்றினான்.
பின் அவன் இறந்தான். தாவீது அவனது
முன்னோரோடு அடக்கம் செய்யப்பட்டான்.
அவனது சரீரமும் கல்லறையில் மக்கிப்
போனது 37ஆனால் தேவன் மரணத்திலிருந்து
எழுப்பினவரோ கல்லறையில் மக்கிப்போக
வில்லை. 38-39சகோதரரே, நாங்கள் உங்களுக்கு
கூறுவது என்னவென்று நீங்கள் புரிந்து
கொள்ள வேண்டும். இவர் மூலமாக உங்கள்
பாவங்களின் மன்னிப்பை நீங்கள் பெற முடி
யும். மோசேயின் சட்டம் உங்களை உங்கள்
பாவங்களிலிருந்து விடுவிக்க முடியவில்லை.
ஆனால் இயேசுவில் விசுவாசம் வைத்திருக்
கிற ஒவ்வொரு மனிதனும் இயேசுவின் மூல
மாக தனது எல்லாப் பாவங்களிலிருந்தும்
விடுவிக்கப்படுகிறான். 40சில காரியங்கள் நடக்
குமென்று தீர்க்கதரிசிகள் கூறினார்கள். எச்
சரிக்கையாயிருங்கள்! இக்காரியங்கள் உங்
களுக்கு நேராதபடிக்குப் பார்த்துக் கொள்
ளுங்கள். தீர்க்கதரிசிகள்,

41 ‘ஐயம்கொள்ளும் மக்களே, கவனியுங்கள்
நீங்கள் வியப்புறக்கூடும். ஆனால் மரித்து
அழிவீர்கள். ஏனெனில் உங்கள் காலத்
தில் நீங்கள் நம்பாத சிலவற்றை நான்
செய்வேன். சிலர் உங்களுக்கு விளக்கிச்
சொன்னாலும் நீங்கள் நம்ப மாட்டீர்கள்’
ஆபகூக் 1:5

என்றனர்.

42பவுலும் பர்னபாவும் ஜெப ஆலயத்தை
விட்டுச் செல்லும்பொழுது, அடுத்த ஓய்வு
நாளில் மீண்டும் வந்து இவற்றைக் குறித்து
இன்னும் பல விஷயங்களை அவர்களுக்குச்

சொல்லுமாறு மக்கள் கூறினார்கள். 43இக்கூட்
டத்திற்குப்பின், அந்த இடத்திலிருந்து யூதர்கள்
பலர் பவுலையும் பர்னபாவையும் பின்பற்றி
னார்கள். யூதர்களோடு யூத மதத்திற்கு மாறிய
பலரும் இருந்தார்கள். இவர்களும் உண்மை
யான தேவனை வணங்கினார்கள். பவுலும்
பர்னபாவும் தேவனுடைய கிருபையில் தொ
டர்ந்து நம்பிக்கை வைக்குமாறு அவர்களை
உற்சாகமூட்டினார்கள்.
44அடுத்த ஓய்வு நாளில் அநேகமாக நகரத்
தின் எல்லா மக்களும் தேவனுடைய வார்த்
தையைக் கேட்கும்படியாக ஒருமித்துக் கூடி
னார்கள். 45யூதர்கள் அந்த எல்லா மக்களையும்
அங்கே கண்டார்கள். அது அவர்களுக்கு
மிகுந்த பொறாமையை ஏற்படுத்தியது.
எனவே, அவர்கள் வெகு தீமையான சில
காரியங்களைக் கூறி பவுல் கூறிய வார்த்தை
களுக்கு எதிராக விவாதித்தார்கள். 46ஆனால்
பவுலும் பர்னபாவும் மிகவும் துணிச்சலாகப்
பேசினார்கள். அவர்கள், “யூதர்களாகிய உங்
களுக்கு முதலில் தேவனுடைய செய்தியை
நாங்கள் சொல்ல வேண்டும். ஆனால் நீங்கள்
கேட்க மறுக்கிறீர்கள். நீங்கள் உங்களை
இழக்கப்பட்டவர்களாக நித்தியமான வாழ்க்
கைக்குத் தகுதியற்றவர்களாக ஆக்கிக்கொள்
கிறீர்கள்! எனவே நாங்கள் இப்போது வேறு
தேசங்களின் மக்களிடம் செல்வோம்! 47இதைத்
தான் நாங்கள் செய்யும்படியாக ஆண்டவர்
எங்களிடம் சொல்லியிருக்கிறார். கர்த்தர் கூறி
னார்:

> ‘இரட்சிப்பின் பாதையை உலகின்
> எல்லா மக்களுக்கும் நீங்கள் காட்டும்
> பொருட்டு உங்களை வேறு தேசங்
> களுக்கு ஒளியாக்கினேன்.’
>
> ஏசாயா 49:6

48பவுல் இவ்வாறு கூறியதை யூதரல்லாத
மக்கள் கேட்டபோது அவர்கள் மகிழ்ச்சி
கொண்டனர். அவர்கள் கர்த்தரின் செய்திக்கு
மதிப்பளித்தனர். பல மக்கள் செய்தியை நம்
பினர். இவர்கள் நித்தியமான வாழ்க்கைக்குத்
தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களாவர்.
49எனவே கர்த்தரின் செய்தி நாடு முழு
வதும் சொல்லப்பட்டது. 50ஆனால் யூதர்கள்
சில முக்கியமான பக்தியுள்ள பெண்களையும்,
நகரத் தலைவர்களையும் சினமடையும்படி
யாகவும் பவுலுக்கும் பர்னபாவுக்கும் எதிரா
கவும் நகரத்திலிருந்து கிளப்பிவிட்டனர். இந்த
மக்கள் பவுலுக்கும் பர்னபாவுக்கும் எதிரான
செயல்களைச் செய்து அவர்களை ஊரை
விட்டு வெளியேறும்படிச் செய்தனர்.
51எனவே பவுலும் பர்னபாவும் தங்கள்
பாதங்களிலிருந்து தூசியை உதறினர். பின்
அவர்கள் அந்த இடத்தை விட்டு இக்கோனியா
நகருக்கு வந்தார்கள். 52ஆனால் அந்தியோகி
யாவிலுள்ள இயேசுவின் சீஷர்கள் மிகவும்
மகிழ்ச்சியடைந்து பரிசுத்த ஆவியால் நிரம்
பினர்.

### இக்கோனியத்தில் ஊழியம்

14 பவுலும் பர்னாபாவும் இக்கோனியம்
நகரத்திற்குச் சென்றனர். அவர்கள் யூத
ஜெபஆலயத்திற்குச் சென்றனர். (இதைத்தான்
அவர்கள் ஒவ்வொரு நகரத்திலும் செய்தனர்)
அவர்கள் அங்குள்ள மக்களிடம் பேசினர்.
பவுலும் பர்னபாவும் பேசின விதத்தில் பல
யூதர்களும், கிரேக்கர்களும் (யூதரல்லாதோரும்)
அவர்கள் கூறியதை முழுமையாக நம்பினர்.
2ஆனால் மனந்திரும்பாத யூதர்கள், யூதரல்லாத
சகோதரரைக் குறித்து தீமையானவற்றை
எண்ணும்படியாகச் செய்தனர். 3எனவே பவு
லும் பர்னபாவும் இக்கோனியத்தில் நீண்ட
காலம் தங்கினர். கர்த்தருக்காகத் துணிவோடு
பேசினர். தேவனுடைய கிருபையைக் குறித்து
பவுலும், பர்னபாவும் பேசினர். அற்புதங்
களையும் அதிசயங்களையும் நிகழ்த்துவதற்கு
அப்போஸ்தலர்களுக்கு உதவிசெய்து அவர்
கள் கூறியதை உண்மையென்று தேவன்
நிரூபித்தார். 4ஆனால் நகரமக்களில் சிலர்
யூதர்கள் கூறியதை ஒப்புக்கொண்டனர். நகரத்
தின் மற்ற மக்களோ பவுலையும் பர்னபாவை
யும் நம்பினர். எனவே நகரம் பிரிவுபட்டது.
5சில யூதரல்லாத மக்களும், சில யூதர்களும்,
அவர்களின் யூத அதிகாரிகளும் பவுலையும்
பர்னபாவையும் துன்புறுத்த முயன்றனர். இந்த
மக்கள் அவர்களைக் கற்களால் எறிந்து
கொல்ல எண்ணினர். 6பவுலும் பர்னபாவும்
இதை அறிந்தபோது, நகரிலிருந்து சென்றனர்.
அவர்கள் லிஸ்தீராவுக்கும், தெர்பைக்கும் லிக்
கோனியாவின் நகரங்களுக்கும், அந்த நகரங்
களைச் சூழ்ந்த கிராமப்புறப் பகுதிகளுக்கும்
சென்றனர். 7அவர்கள் அங்கும் கூட நற்செய்
தியைக் கூறினர்.

### லிஸ்திரா, தெர்பை நகர ஊழியம்

8பாதங்களில் ஊனமுற்ற மனிதன் ஒருவன்
லிஸ்தீராவில் இருந்தான். அவன் பிறவி
யிலேயே ஊனமுற்றவன். 9அவன் அங்கு உட்
கார்ந்துகொண்டு பவுல் பேசுவதைக் கேட்டுக்
கொண்டேயிருந்தான். பவுல் அவனைப் பார்த்
தான். தேவன் அவனைக் குணப்படுத்தமுடியும்
என்பதை அம்மனிதன் நம்பியதைப் பவுல்
கண்டான். 10எனவே பவுல் உரக்க, “எழுந்து
உன் கால்களால் நில்” என்றான். அம்மனிதன்
குதித்தெழுந்து சுற்றிலும் நடக்க ஆரம்பித்தான்.
11பவுல் செய்ததை மக்கள் கூட்டத்தினர் கண்ட
போது, அவர்கள் லிக்கோனிய மொழியில்
சத்தமிட்டனர். அவர்கள் “தேவர்கள் மனித
ரைப் போன்று மாறியுள்ளனர்! அவர்கள் நம்
மிடம் இறங்கி வந்துள்ளனர்!” என்றனர். 12மக்
கள் பர்னபாவை “சீயெஸ்”* என அழைக்கத்

---

**சீயெஸ்** கிரேக்க கடவுளர்களுள் மிக முக்கியமான ஒன்று.

*தொடங்கினர். பவுல் முக்கிய பேச்சாளராக
இருந்ததால், அவர்கள் பவுலை “ஹெர்ம்ஸ்”*
என்றழைத்தனர்.*

13*சீயஸின் தேவாலயம் நகரத்தினருகில்
இருந்தது. தேவாலயத்தின் பூசாரி சில காளை
களையும் மாலைகளையும் நகரக் கதவுகளுக்
கருகே கொண்டு வந்தான். பவுலையும்
பர்னபாவையும் வழிபடுவதற்கு பூசாரிகளும்
மக்களும் பலி செலுத்த விரும்பினர்.*

14*அப்போஸ்தலராகிய பர்னபாவும் பவுலும்
மக்கள் செய்துகொண்டிருப்பதைப் புரிந்து
கொண்டதும் அவர்கள் தங்கள் ஆடைகளைக்
கிழித்தனர்.** *பின் அவர்கள் கூட்டத்தினர்
மத்தியில் ஒடி, அவர்களிடம் உரத்த குரலில்,*
15*“மனிதரே ஏன் இவற்றையெல்லாம் செய்கிறீர்
கள்? நாங்கள் தேவர்கள் அல்ல. உங்களைப்
போன்ற மனிதர்கள்தான். எங்களுக்கும் உணர்
வுகள் உங்களைப்போலவே உண்டு. உங்
களுக்கு நற்செய்தியைச் சொல்ல நாங்கள்
வந்தோம். பயனற்ற இந்தக் காரியங்களை
விட்டு விலகும்படியாக நாங்கள் உங்களுக்கு
சொல்லிக் கொண்டிருக்கிறோம். உண்மை
யான ஜீவனுள்ள தேவனிடத்திற்குத் திரும்புங்
கள். அவரே வானம், பூமி, கடல், அவற்றி
லுள்ள பொருட்கள் அனைத்தையும் உண்டாக்
கியவர்.* 16*முன்பு எல்லா தேசங்களும் அவை
விரும்பியவற்றைச் செய்வதற்கு தேவன்
அனுமதித்தார்.* 17*ஆனால் அதே சமயம் தேவன்
உண்மையானவர் என்பதை நிறுவும் காரி
யங்களையே தேவன் செய்தார். அவர் உங்
களுக்கு நல்லவற்றையே செய்கிறார். அவர்
வானிலிருந்து உங்களுக்கு மழையைத் தரு
கிறார். அவர் தக்க காலங்களில் உங்களுக்கு
நல்ல அறுவடையைக் கொடுக்கிறார். அவர்
மிகுதியான உணவை உங்களுக்குத் தருகிறார்.
அவர் உங்கள் இருதயங்களை மகிழ்ச்சியால்
நிரப்புகிறார்” என்றனர்.* 18*பவுலும் பர்னபா
வும் மக்களுக்கு இவற்றைக் கூறினர். ஆனா
லும் அவர்களை வழிபடுவதற்காக அவர்கள்
இட்ட பலியை அநேகமாக பவுலும் பர்னபா
வும் தடுத்து நிறுத்த முடியவில்லை.*

19*பின் அந்தியோகியாவிலிருந்தும், இக்கோ
னியத்திலிருந்தும் சில யூதர்கள் வந்தனர்.
அவர்கள் பவுலை எதிர்க்கும்படியாக மக்
களை ஏவினர். எனவே மக்கள் பவுலின்மீது
கற்களை வீசி, அவன் இறந்துவிட்டானென்று
நினைத்து அவனை ஊருக்குப் புறம்பே
இழுத்து வந்தனர்.* 20*இயேசுவின் சீஷர்கள் பவு
லைச் சுற்றிலும் கூடினர். பின் அவன் எழுந்து
ஊருக்குள் மீண்டும் சென்றான். மறுநாள்
அவனும் பர்னபாவும் புறப்பட்டு தெர்பை
நகரத்துக்குச் சென்றனர்.*

### அந்தியோகியாவுக்குத் திரும்புதல்

21*பவுலும் பர்னபாவும் தெர்பை நகரத்
திலும் நற்செய்தியைக் கூறினர். பல மக்கள்
இயேசுவின் சீஷராயினர். லிஸ்திரா, இக்கோ
னியம், அந்தியோகியா நகரங்களுக்குப் பவு
லும் பர்னபாவும் திரும்பினர்.* 22*அந்நகரங்
களில் இயேசுவின் சீஷர்களை பவுலும் பர்ன
பாவும் வலிமைமிக்க வர்களாக ஆக்கினர்.
நம்பிக்கையில் நிலைத்திருப்பதற்கு அவர்கள்
உதவினர். பவுலும் பர்னபாவும், “தேவனு
டைய இராஜ்யத்துக்குள் செல்லும் நம் பாதை
யில் நாம் பல துன்பங்களை அனுபவிக்க
வேண்டும்” என்றனர்.* 23*பவுலும் பர்னபாவும்
ஒவ்வொரு சபைக்கும் மூப்பர்களை அமர்த்தி
னார்கள். அவர்கள் உபவாசமிருந்து அம்மூப்
பர்களுக்காக பிரார்த்தனை செய்தனர். அம்
மூப்பர்கள் கர்த்தராகிய இயேசுவில் நம்பிக்கை
வைத்த மனிதராயிருந்தார்கள். எனவே பவு
லும் பர்னபாவும் கர்த்தரின் பாதுகாப்பில்
அவர்களை விட்டனர்.*

24*பவுலும் பர்னபாவும் பிசிதியா நாட்டின்
வழியாகச் சென்றனர். பின் அவர்கள் பம்
பிலியா நாட்டிற்கு வந்தனர்.* 25*அவர்கள் பெர்
காவில் தேவனுடைய செய்தியைக் கூறினார்
கள். பின் அவர்கள் அத்தாலியா நகரத்திற்குச்
சென்றனர்.*

26*அங்கிருந்து பவுலும் பர்னபாவும் சிரியா
விலுள்ள அந்தியோகியாவிற்குக் கடல் வழி
யாகப் பயணமாயினர். இந்நகரில்தான் விசு
வாசிகள் அவர்களை தேவனுடைய கண்
காணிப்பில் ஆட்படுத்தி இவ்வேலை செய்ய
அனுப்பியிருந்தனர். இப்போது அவர்கள் தங்
கள் வேலையை முடித்திருந்தனர்.*

27*பவுலும் பர்னபாவும் வந்து சேர்ந்தபோது
அவர்கள் சபையைக் கூட்டினர். தேவன் அவர்
களோடு செய்த எல்லாக் காரியங்களையும்
குறித்துப் பவுலும் பர்னபாவும் அவர்களுக்குக்
கூறினர். அவர்கள், “வேறு தேசங்களின் மக்
களும் நம்பும்படிக்குத் தேவன் ஒரு வாசலைத்
திறந்தார்” என்றார்கள்.* 28*கிறிஸ்துவின் சீஷர்க
ளோடு பவுலும் பர்னபாவும் நீண்டகாலம் அங்
கேயே தங்கினர்.*

### எருசலேமில் சந்திப்பு

15 *பின்பு யூதேயாவிலிருந்து அந்தியோ
கியாவுக்குச் சில மனிதர் வந்தனர்.
யூதரல்லாத சகோதரருக்கு அவர்கள் “நீங்கள்
விருத்தசேதனம் செய்து கொள்ளாவிட்டால்
இரட்சிக்கப்படமாட்டீர்கள். இதைச் செய்யும்படி
யாக மோசே நமக்குக் கற்பித்தார்” என்று
போதிக்க ஆரம்பித்தனர்.* 2*பவுலும் பர்னபா
வும் இந்தப் போதனையை எதிர்த்தனர்.
அதைக் குறித்து இந்த மனிதரிடம் அவர்கள்
விவாதித்தனர். எனவே அந்தச் சபையார்*

---

**ஹெர்மஸ்** *மற்றொரு கிரேக்க கடவுள். கிரேக்க மக்கள் இதை ஏனைய கடவுளர்களின் தூதுவராக நம்பினர்.*

**தங்கள் ஆடைகளைக் கிழித்தனர்** *அவர்கள் கோபத்துடன் உள்ளனர் என்பதற்கான அடையாளம்.*

பவுலையும் பர்னபாவையும், வேறு சில மனி
தர்களையும் எருசலேமுக்கு அனுப்பத் தீர்மா
னித்தனர். அங்கிருந்த அப்போஸ்தலரிடமும்
மூப்பர்களிடமும் இதைக் குறித்து அதிகமாகப்
பேசப் போகிறவர்களாக இந்த மனிதர்கள்
இருந்தார்கள்.
3அவர்கள் பயணத்திற்கு சபை உதவிற்று.
பெனிக்கே, சமாரியா ஆகிய தேசங்களின் வழி
யாக அம்மனிதர்கள் சென்றனர். யூதரல்லாத
மக்கள் உண்மையான தேவனிடம் திரும்பியது
குறித்த அனைத்தையும் அவர்கள் கூறினர்.
இது எல்லா சகோதரர்களுக்கும் மிகுந்த
மகிழ்ச்சியை உண்டாக்கிற்று. 4பவுலும் பர்ன
பாவும் பிறரும் எருசலேமை வந்தடைந்தனர்.
அப்போஸ்தலரும், மூப்பர்களும் விசுவாசிகள்
அனைவரும் சேர்ந்து அவர்களை வரவேற்
றனர். பவுலும் பர்னபாவும், பிறரும் தேவன்
தங்களிடம் செய்த அனைத்துக் காரியங்களை
யும் கூறினர். 5எருசலேமின் விசுவாசிகளில்
சிலர் பரிசேயர்கள். அவர்கள் எழுந்து "யூதரல்
லாத விசுவாசிகள் விருத்தசேதனம் செய்து
கொள்ளவேண்டும். மோசேயின் சட்டங்களுக்
குக் கீழ்ப்படியுமாறு அவர்களுக்குக் கூற
வேண்டும்" என்று கூறினர்.
6அப்போது அப்போஸ்தலர்களும் மூப்பர்
களும் இந்தச் சிக்கலை ஆய்ந்து அறியக்
கூடினர். 7நீண்ட விவாதம் நடந்தது. பேதுரு
எழுந்து அவர்களை நோக்கி, "சகோதரர்களே,
தொடக்கக் காலத்தில் நிகழ்ந்தவற்றை நீங்கள்
நினைவுகூருகிறீர்கள் என்பது எனக்குத் தெரி
யும். யூதரல்லாத மக்களுக்கு நற்செய்தியைப்
போதனை செய்வதற்கு அப்போது உங்களுக்
கிடையிலிருந்து தேவன் என்னைத் தேர்ந்
தெடுத்தார். அவர்கள் என் மூலமாக நற்செய்
தியைக் கேட்டு விசுவாசம் வைத்தனர்.
8தேவன் மனிதரின் எண்ணங்களை அறிவார்.
அவர் யூதரல்லாத மக்களையும் ஏற்றுக்
கொண்டார். எங்களுக்குச் செய்தது போலவே
அவர்களுக்கும் பரிசுத்த ஆவியை அளித்து
தேவன் இதனைக் காட்டினார். 9இந்த மனிதர்
கள் தேவனுக்கு நம்மிலிருந்தும் வேறுபட்டவர்
களல்லர். அவர்கள் விசுவாசம் வைத்தபோது,
தேவன் அவர்கள் இருதயங்களை பரிசுத்த
முறச் செய்தார். 10எனவே யூதரல்லாத விசு
வாசிகளின் கழுத்தில் ஏன் பெரும் பாரத்தைச்
சுமத்துகிறீர்கள். தேவனைக் கோபப்படுத்த நீங்
கள் முயன்று கொண்டிருக்கிறீர்களா? அந்தப்
பாரத்தைச் சுமப்பதற்கு நமக்கும் நமது முன்
னோர்களுக்கும் வலிமை இருக்கவில்லை!
11நாமும் இந்த மக்களும் கர்த்தராகிய இயேசு
வின் கிருபையினாலே இரட்சிக்கப்படுவோம்
என்று நான் நம்புகிறேன்." என்றான் 12அப்
போது அந்தக் கூட்டம் முழுமையும் அமைதியா
யிற்று. பவுலும் பர்னபாவும் பேசுவதைக் கவ
னித்தனர். யூதரல்லாத மக்களின் மத்தியில்
தேவன் அவர்கள் மூலமாகச் செய்த அதிசயங்
களையும் அற்புதங்களையும் குறித்துப் பவு
லும் பர்னபாவும் விவரித்தார்கள். 13பவுலும்
பர்னபாவும் பேசி முடித்தனர். பின் யாக்கோபு
பேசினான். அவன், "சகோதரரே, எனக்குச்
செவி கொடுங்கள். 14தேவன் யூதரல்லாத மக்
களுக்குத் தமது அன்பை எவ்வாறு காட்
டினார் என்பதை சீமோன் பேதுரு நமக்கு
விவரித்தார். முதன் முறையாக யூதரல்லாத
மக்களை தேவன் ஏற்று, அவர்களைத் தனது
மக்களாக்கினார். 15தீர்க்கதரிசிகளின் வார்த்
தைகளும் இதனோடு ஒத்துப்போகின்றன.

16 இதற்குப் பிறகு நான் மீண்டும் திரும்
புவேன். தாவீதின் வீட்டை மீண்டும் கட்
டுவேன். அது விழுந்து விட்டது. அந்த
வீட்டின் இடிந்த பகுதிகளை மீண்டும்
கட்டுவேன். அவனது வீட்டைப் புதிய
தாக்குவேன்.
17 பின் பிற மக்கள் எல்லோரும் கர்த்த
ரைத் தேடுவர். யூதரல்லாத மக்களும்
என் மக்களே. கர்த்தர் இதைக் கூறினார்.
18 இந்தக் காரியங்கள் அனைத்தையும்
செய்பவர் அவரே. தொடக்கக் காலத்திலி
ருந்தே, இவை அனைத்தும் அறியப்பட்
டிருந்தன.'

ஆமோஸ் 9:11,12

19"தேவனிடம் திரும்பிய யூதரல்லாத சகோ
தரரைத் தொந்தரவு செய்யக் கூடாது என்பது
என்னுடைய நியாயம். 20ஆனால் ஒரு கடி
தத்தை நாம் அவர்களுக்கு எழுதவேண்டும்.
அதில்:

விக்கிரகங்களுக்குக் படைக்கப்பட்ட
உணவை உண்ணாதீர்கள். (இது உண
வை அசுத்தப்படுத்துகிறது). பாலியல்
பாவங்களில் ஈடுபடாதீர்கள். இரத்தத்தை
ருசிக்காதீர்கள். நெரித்துக் கொல்லப்
பட்ட மிருகங்களை உண்ணாதீர்கள்
என்று எழுதுவோம்.

21ஒவ்வொரு நகரத்திலும் மோசேயின் சட்டத்
தைப் போதிக்கும் மனிதர்கள் (யூதர்கள்) இருப்
பதால், அவர்கள் இவற்றைச் செய்யக்கூடாது.
ஒவ்வொரு ஓய்வு நாளன்றும் மோசேயின் போ
தனைகள் ஜெப ஆலயத்தில் படிக்கப்படுகின்
றன. இவ்வாறு எழுதப்படவேண்டும்" என்று
கூறினான்.

### யூதரல்லாத சகோதரருக்குக் கடிதம்

22பவுல், பர்னபா ஆகியோருடன் அந்தியோ
கியாவுக்குச் சில மனிதர்களை அனுப்பவேண்
டுமென அப்போஸ்தலரும், மூப்பரும், சபை
யினர் எல்லோரும் முடிவு செய்தார்கள். அக்
கூட்டத்தினர் தங்களில் சிலரைத் தேர்ந்தெடுத்
தனர். அவர்கள் பர்சபா என்ற யூதாவையும்,
சீலாவையும் தேர்ந்தெடுத்தனர். எருசலேமின்
சகோதரர்கள் அவர்களை மதித்தனர். 23அக்

கூட்டத்தினர் அவர்கள் மூலமாக அக்கடிதத்தை
அனுப்பினார்கள். அக்கடிதம் கூறியது:

அப்போஸ்தலர்கள், மூப்பர்கள், சகோ
தரர்களிடமிருந்து அந்தியோகியாவிலும்,
சிரியாவிலும், சிலிசியாவிலுமுள்ள
அன்பான யூதரல்லாத சகோதரருக்கு:

24எங்கள் கூட்டத்திலிருந்து சில மனிதர்கள்
உங்களிடம் வந்தார்கள் எனக் கேள்விப்பட்
டோம். அவர்கள் கூறிய காரியங்கள் உங்
களைத் தொந்தரவு செய்து உங்கள் மனங்களை
நிலைகுலையச் செய்துள்ளன. ஆனால் அவற்
றைச் செய்யும்படியாக நாங்கள் அவர்களுக்
குக் கூறவில்லை. 25சில மனிதர்களைத் தேர்ந்
தெடுத்து உங்களிடம் அனுப்புவதென நாங்கள்
எல்லோரும் முழுமனதாக முடிவு செய்துள்
ளோம். நமது அன்பான நண்பர்களாகிய
பர்னபா, பவுல் ஆகியோரோடு அவர்களும்
இருப்பார்கள்.
26நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின்
சேவைக்காக பர்னபாவும் பவுலும் தங்கள்
பிராணனையே கொடுத்துள்ளார்கள். 27என
வே அவர்களோடு யூதாவையும் சீலாவையும்
அனுப்புகிறோம். அவர்கள் வாய் வார்த்தை
களினால் அவற்றை உங்களுக்கு உறுதிசெய்
வார்கள். 28உங்கள் மீது இன்னும் அதிகமான
பாரங்கள் விதிக்கப்படலாகாதென பரிசுத்த
ஆவியானவர் முடிவு செய்தார். நாங்களும்
அதை ஆமோதிக்கிறோம். நீங்கள் செய்யத்
தேவையான இந்தக் காரியங்களை மட்டுமே
செய்ய வேண்டும்.

29 விக்கிரகங்களுக்கு படைக்கப்பட்ட உண
வைச் சாப்பிடாதீர்கள். இரத்தத்தை ருசிக்
காதீர்கள். நெரித்துக்கொல்லப்பட்ட மிரு
கங்களைச் சாப்பிடாதீர்கள். பாலியல்
பாவங்களில் ஈடுபடாதீர்கள்.

இத்தகைய காரியங்களில் நீங்கள் உங்களை
ஈடுபடுத்தாதிருந்தால் நல்லது.
30எனவே பவுல், பர்னபா, யூதா, சீலா
ஆகியோர் எருசலேமை விட்டுச் சென்றனர்.
அவர்கள் அந்தியோகியாவுக்குச் சென்றனர்.
அந்தியோகியாவில் விசுவாசிகளைக் கூட்டி
அக்கடிதத்தைக் கொடுத்தனர்.
31விசுவாசிகள் அதை வாசித்தபோது
மகிழ்ச்சியடைந்தனர். அக்கடிதம் அவர்களுக்கு
ஆறுதல் அளித்தது. 32யூதாவும் சீலாவும்கூடத்
தீர்க்கதரிசிகளாக இருந்தனர். சகோதரர்கள்
வலிமைபெற உதவுவதற்காக அவர்கள் பல
காரியங்களைக் கூறினர். 33அவர்கள் சகோ
தரரிடமிருந்து அமைதியின் வாழ்த்தைப் பெற்
றனர். யூதாவும் சீலாவும் எருசலேமில் தங்
களை அனுப்பிய சகோதரரிடம் சென்றனர்.
34*

35ஆனால் பவுலும் பர்னபாவும் அந்தியோ
கியாவில் தங்கினர். அவர்களும் இன்னும்
பலரும் தேவனுடைய செய்தியைக் கற்பிக்
கவும் உபதேசிக்கவும் செய்தார்கள்.

### பவுலும் பர்னபாவும் பிரிதல்

36சில நாட்களுக்குப் பிறகு பவுல் பர்ன
பாவை நோக்கி, "பல ஊர்களில் கர்த்தரின்
செய்தியை நாம் கூறியுள்ளோம். அந்த ஊர்களி
லுள்ள சகோதரர்களையும் சகோதரிகளையும்
சந்திக்கவும், அவர்கள் எவ்வாறு இருக்கிறார்
கள் என்பதைக் காணவும் நாம் அந்த ஊர்
களுக்குத் திரும்பவும் போகவேண்டும்" என்
றான். 37பர்னபா அவர்களோடு யோவான்
மாற்குவையும் அழைத்துச் செல்ல விரும்
பினான். 38ஆனால் அவர்களின் முதல் பயணத்
தில் பம்பிலியாவில் யோவான் மாற்கு அவர்
களை விட்டுப் பிரிந்தான். அவர்களது வேலை
யில் அவர்களோடு அவன் சேர்ந்து கொள்ள
வில்லை. எனவே பவுல் அவனைத் தம்முடன்
அழைத்துச்செல்ல வேண்டாமென வலியுறுத்
தினான். 39பவுலும் பர்னபாவும் இதைக் குறித்
துப் பெரிய வாக்குவாதம் நிகழ்த்தினார்கள்.
எனவே அவர்கள் பிரிந்து வெவ்வேறு வழி
களில் சென்றார்கள். பர்னபா சீப்புருவுக்கு
கடல் வழியாகச் சென்றான். அவனோடு மாற்
குவையும் சேர்த்துக் கொண்டான். 40பவுல்
தன்னோடு செல்வதற்கு சீலாவைத் தேர்ந்து
கொண்டான். அந்தியோகியாவில் சகோதரர்
கள் பவுலைக் கர்த்தரின் கவனிப்பில் ஒப்
புவித்து அவனை அனுப்பினர். 41பவுலும்
சீலாவும் சிரியா, சிலிசியா நாடுகளின்
வழியாக சபைகள் பலமடைவதற்கு உதவி
யபடியே பயணம் செய்தனர்.

### பவுல் - சீலா - தீமோத்தேயு

16 தெர்பை, லிஸ்திரா ஆகிய நகரங்களுக்
குப் பவுல் சென்றான். தீமோத்தேயு
எனப்படும் கிறிஸ்துவின் சீடன் அங்கிருந்
தான். தீமோத்தேயுவின் தாய் ஒரு விசுவா
சியான யூதப் பெண்மணி, அவன் தந்தை
ஒரு கிரேக்கன் (யூதன் அல்லன்). 2லிஸ்திரா,
இக்கோனியம் நகரங்களிலுள்ள விசுவாசிகள்
தீமோத்தேயுவை மதித்தனர். அவனைப்பற்றிய
நல்ல கருத்துக்களையே கூறினர். 3தீமோத்தேயு
தன்னுடன் பயணம் செய்ய பவுல் விரும்
பினான். அப்பகுதியில் வசித்த எல்லா யூதர்
களும் தீமோத்தேயுவின் தந்தை கிரேக்கன்
(யூதரல்லாதவர்) என்பதை அறிந்திருந்தார்
கள். ஆகவே பவுல் தீமோத்தேயுவிற்கு விருத்
தசேதனம் செய்வித்தான். 4பின் பவுலும் அவ
னோடிருந்த மனிதர்களும் பிற பட்டணங்கள்
வழியாகப் பிரயாணம் செய்தனர். எருசலே
மில் அப்போஸ்தலரும் மூப்பர்களும் எடுத்த
முடிவுகளையும் விதிகளையும் அவர்கள்
விசுவாசிகளுக்கு அளித்தார்கள். இந்த விதி
களைப் பின்பற்றும்படிக்கு அவர்கள் விசுவா

---

**வாக்கியம்** 34 சில கிரேக்கப் பிரதிகளில் 34வது
வாக்கியம் சேர்க்கப்பட்டிள்ளது. "ஆனால் சீலா
அங்கேயே இருக்கத் தீர்மானித்தான்."

சிகளுக்குக் கூறினர். 5எனவே சபைகள் விசு
வாசத்தில் வலிமையுற்று நாள்தோறும்
வளர்ச்சி அடைந்து கொண்டிருந்தன.

### ஆசியாவிற்கு வெளியே அழைப்பு

6பிகியா, கலாத்தியா நாடுகளின் வழியாகப்
பவுலும் அவனோடிருந்த மனிதர்களும் சென்
றனர். ஆசியா நாட்டில் அவர்கள் நற்செய்
தியைப் போதிப்பதை பரிசுத்த ஆவியானவர்
அனுமதிக்கவில்லை. 7மீசியா நாட்டிற்கருகே
பவுலும் தீமோத்தேயுவும் சென்றனர். பித்தி
னியா நாட்டிற்குள் போக அவர்கள் விரும்
பினர். ஆனால் பரிசுத்த ஆவியானவர் அவர்
களை உள்ளே செல்ல விடவில்லை. 8எனவே
அவர்கள் மீசியா வழியாகச் சென்று துரோவா
நகருக்குச் சென்றனர். 9அன்றிரவு பவுல் ஒரு
காட்சியைக் கண்டான். அந்தக் காட்சியில்
மக்கதோனியா நாட்டைச் சேர்ந்த ஒரு மனிதன்
பவுலிடம் வந்தான். அம்மனிதன் அங்கு நின்று,
“மக்கதோனியாவுக்கு வந்து எங்களுக்கு
உதவுங்கள்” என்றான். 10பவுல் அக்காட்சி
யைக் கண்ட பின்பு கர்த்தருடைய நற்செய்
தியை அம்மக்களுக்குக் கூறுவதற்கு தேவன்
எங்களை அழைத்துள்ளார் என்பதை நாங்கள்
புரிந்துகொண்டோம்.

### லீதியாளின் மாற்றம்

11நாங்கள் ஒரு கப்பலில் துரோவாவை
விட்டுப் புறப்பட்டு சாமோத்திராக்கே தீவிற்குப்
பயணமானோம். மறுநாள் நாங்கள் நியாப்
போலி நகருக்கு கடல் வழியாகப் பயணமா
னோம். 12அங்கிருந்து நாங்கள் பிலிப்பிக்குச்
சென்றோம். மக்கதோனியாவில் பிலிப்பி ஒரு
முக்கியமான நகரம். அது ரோமர்களுக்கான
நகரம். சில நாட்கள் நாங்கள் அந்நகரில் தங்கி
னோம்.

13ஓய்வுநாளில் நகர கதவுகள் வழியாக
ஆற்றை நோக்கிச் சென்றோம். நதியருகே ஒரு
சிறப்பான பிரார்த்தனை செய்வதற்கு இடம்
கிடைக்கக்கூடும் என்று எண்ணினோம். சில
பெண்கள் அங்குக் கூடியிருந்தனர். நாங்கள்
அங்கு அமர்ந்து அவர்களோடு பேசினோம்.
14தியத்தீரா என்னும் நகரிலுள்ள லீதியாள்
என்னும் பெண்மணி அங்கிருந்தாள். ஊதாநிற
பட்டு ஆடைகளை விற்பதே அவளது தொழில்.
அவள் உண்மையான தேவனை வழிபட்டாள்.
அவள் பவுலைக் கவனித்துக் கொண்டிருந்
தாள். கர்த்தர் அவளது இதயத்தைத் திறந்து
பவுல் சொன்னவற்றை ஒப்புக்கொள்ளச் செய்
தார். அவள் பவுல் கூறியவற்றை நம்பினாள்.
15அவளும் அவளது வீட்டினரும் ஞானஸ்
நானம் பெற்றனர். பின் லீதியாள் எங்களை
அவளது வீட்டிற்கு அழைத்தாள். அவள், “கர்த்
தராகிய இயேசுவில் நான் உண்மையாகவே
விசுவாசம் உள்ளவள் என்று நீங்கள் எண்
ணினால் என் வீட்டிற்கு வந்து தங்குங்கள்”
என்றாள். அவள் எங்களை அவளோடு தங்கு
மாறு வற்புறுத்தினாள்.

### சிறையில் பவுலும் சீலாவும்

16ஒரு நாள் பிரார்த்தனை செய்யுமிடத்துக்கு
நாங்கள் போய்க்கொண்டிருக்கும்போது ஒரு
நிகழ்ச்சி நடந்தது. ஒரு வேலைக்காரச் சிறுமி
எங்களைச் சந்தித்தாள். அவளுக்குள் ஒரு
விசேஷ ஆவி இருந்தது. எதிர்காலத்தில் நடக்
கவிருப்பதைப்பற்றிக் கூறும் வல்லமையை
இந்த ஆவி அவளுக்குக் கொடுத்தது. அவளது
உரிமையாளர்களுக்கு இதைச் செய்து மிகுந்த
பணத்தை அவள் சம்பாதித்துக் கொடுத்தாள்.
17இந்தப் பெண் பவுலையும் எங்களையும் தொ
டர்ந்து வந்தாள். அவள் உரத்த குரலில் “இம்
மனிதர்கள் மிக உன்னதமான தேவனின் ஊழி
யர்கள்! உங்களுக்கு இரட்சிப்பின் வழியை
அவர்கள் கூறிக் கொண்டிருக்கிறார்கள்!”
என்றாள். 18அவள் இதையே பல நாட்கள்
தொடர்ந்து செய்து வந்தாள். மேலும் அதைப்
பொறுக்கமுடியாத பவுல் அந்த ஆவியைப்
பார்த்து, “இயேசு கிறிஸ்துவின் வல்லமை
யால் அவளிடமிருந்து வெளியே வருமாறு
உனக்குக் கட்டளையிடுகிறேன்!” என்றான்.
உடனே ஆவி வெளியேறிற்று.

19அந்த வேலைக்காரப் பெண்ணின் உரி
மையாளர்கள் இதைக் கண்டனர். அப்பெண்
ணைப் பணம் சம்பாதிப்பதற்கு இனிமேல்
பயன்படுத்த முடியாது என்பதை அம்மனிதர்
கள் அறிந்தனர். எனவே அவர்கள் பவுலையும்
சீலாவையும் பிடித்து வந்து நகரத்தின் சந்
தியில் நிறுத்தினர். நகர அதிகாரிகள் அங்
கிருந்தனர். 20தலைவர்களின் முன்பு அம்மனி
தர்கள் பவுலையும் சீலாவையும் கொண்டு
வந்தனர். அவர்கள், “இம்மனிதர்கள் யூதர்கள்.
நகரத்தில் துன்பத்தை விளைவிக்கிறார்கள்
21நமக்குத் தகாத காரியங்களைச் செய்யும்படி
யாக அவர்கள் மக்களுக்குக் கூறிக் கொண்
டிருக்கிறார்கள். நாம் ரோம மக்கள். இக்காரி
யங்களைச் செய்ய முடியாது” என்றார்கள்.
22பவுலையும், சீலாவையும் கூட்டத்தினர்
எதிர்த்தார்கள். பவுல், சீலா ஆகியோரின்
ஆடைகளைத் தலைவர்கள் கிழித்தார்கள். பவு
லையும், சீலாவையும் கழிகளால் அடிக்கும்படி
அவர்கள் சில மனிதர்களுக்குச் சொன்னார்
கள். 23அம்மனிதர்கள் பவுலையும் சீலாவையும்
பல முறை அடித்தார்கள். பின் அவர்கள்
பவுலையும் சீலாவையும் சிறையில் தள்ளி
னார்கள். தலைவர்கள் சிறை அதிகாரியை
நோக்கி, “கவனமாக அவர்களைக் காவலில்
வையுங்கள்!” என்றார்கள். 24சிறையதிகாரி
இந்த சிறப்புக் கட்டளையைக் கேட்டான்.
எனவே அவன் பவுலையும் சீலாவையும்
சிறையின் மிக உட்பகுதிக்கு அழைத்துச்
சென்று அடைத்து காவலில் வைத்தான்.
பெரிய மரத்தூண்களுக்கிடையில் அவர்கள்
கால்களைக் கட்டினான்.

**25**நள்ளிரவில் பவுலும், சீலாவும் பிரார்த்
தனை செய்துகொண்டும் தேவனை நோக்கித்
துதிப் பாடல்களைப் பாடிக் கொண்டுமிருந்
தனர். மற்ற சிறைக்கைதிகள் அவர்களைக்
கவனித்தவண்ணமிருந்தனர். **26**திடீரென்று ஒரு
பெரிய பூமியதிர்ச்சி உண்டாயிற்று. சிறை
யின் அஸ்திபாரத்தை அசைக்கும்படியாக
அது பலமாக இருந்தது. பின் சிறைச்சாலை
யின் கதவுகள் எல்லாம் திறந்தன. எல்லா
கைதிகளும் அவர்களது விலங்குகளிலிருந்து
விடுபட்டனர். **27**சிறையதிகாரி விழித்தெழுந்
தான். சிறைக் கதவுகள் திறந்திருப்பதை
அவன் கண்டான். சிறைக் கைதிகள் ஏற்
கெனவே தப்பித்துப் போயிருக்கவேண்டுமென
அவன் நினைத்தான். எனவே சிறையதிகாரி
தன் வாளை உருவி தற்கொலை செய்து
கொள்ள இருந்தான். **28**ஆனால் பவுல் உரக்க,
“உன்னைத் துன்புறுத்திக்கொள்ளாதே. நாங்
கள் எல்லோரும் இங்கு இருக்கிறோம்!” என்
றான்.

**29**சிறையதிகாரி விளக்குகளைக்கொண்டு
வருமாறு ஒருவனுக்குப் பணித்தான். பின்
அவன் உள்ளே ஓடினான். அவன் பயத்தால்
நடுங்கிக் கொண்டிருந்தான். அவன் பவுல்,
சீலா ஆகியோர் முன்பாகக் கீழே விழுந்தான்.
**30**பின் அவன் அவர்களை வெளியே அழைத்து
வந்து அவர்களிடம், “நான் இரட்சிப்படைய
என்ன செய்ய வேண்டும்?” என்று கேட்டான்.
**31**அவர்கள் அவனை நோக்கி, “கர்த்தராகிய
இயேசுவில் விசுவாசமாயிரு. நீயும் உன் வீட்
டாரும் இரட்சிப்பு அடைவீர்கள்” என்றார்கள்.
**32**எனவே பவுலும் சீலாவும் கர்த்தரின் செய்
தியை சிறையதிகாரிக்கும் அவன் வீட்டிலி
ருந்த ஒவ்வொருவருக்கும் கூறினர். **33**சிறை
யதிகாரி பவுலையும் சீலாவையும் அழைத்துச்
சென்று அவர்களது காயங்களைக் கழுவி
னான். பின் சிறையதிகாரியும் அவன் வீட்டி
லிருந்த அனைவரும் ஞானஸ்நானம் பெற்ற
னர். **34**அதன் பிறகு சிறையதிகாரி பவுலையும்
சீலாவையும் வீட்டிற்கு அழைத்துச் சென்று
சாப்பாடு கொடுத்தான். அவன் வீட்டிலிருந்த
அனைவரும் தேவன்மீது கொண்ட விசுவா
சத்தால் மகிழ்ந்தார்கள். **35**மறுநாள் காலையில்,
தலைவர்கள் சில வீரர்களைச் சிறையதி
காரியிடம், “அம்மனிதர்களை விடுதலை
செய்!” என்று கூற அனுப்பினர். **36**சிறையதி
காரி பவுலிடம், “உங்களை விடுதலை செய்யும்
படியாகக் கூறி தலைவர்கள் இந்த வீரர்களை
அனுப்பியுள்ளனர். நீங்கள் போகலாம். அமை
தியாகச் செல்லுங்கள்” என்று அறிவித்தான்.
**37**ஆனால் பவுல் வீரரை நோக்கி, “உங்கள்
தலைவர்கள் எங்களை விசாரணை செய்ய
வில்லை. ஆனால் மக்கள் முன்பாக அவர்கள்
எங்களை அடித்துச் சிறையில் அடைத்தார்
கள். நாங்கள் ரோம மக்கள். எங்களுக்கு
உரிமை உள்ளது. இப்போது தலைவர்கள்
நாங்கள் இரகசியமாகப்போக வேண்டுமென
விரும்புகிறார்கள். முடியாது, தலைவர்களே
வந்து எங்களை வெளியேற்றட்டும்!” என்
றான். **38**பவுல் கூறியவற்றை வீரர்கள் தலைவர்
களுக்குக் கூறினர். பவுலும் சீலாவும் ரோம
மக்கள்* என்பதைத் தலைவர்கள் கேள்விப்
பட்டபோது, அவர்கள் பயந்தார்கள். **39**எனவே
அவர்கள் வந்து பவுலிடமும், சீலாவிடமும்
தங்கள் வருத்தத்தைத் தெரிவித்தார்கள். அவர்
கள் பவுலையும் சீலாவையும் சிறைக்கு வெ
ளியே அழைத்து வந்து அவர்களை நகரத்தை
விட்டுப் போகுமாறு கூறினர். **40**ஆனால்
பவுலும் சீலாவும் சிறையினின்று வந்தபோது
அவர்கள் லிதியாளின் வீட்டிற்குச் சென்றனர்.
அவர்கள் விசுவாசிகள் சிலரை கண்டு, அவர்
களை ஆறுதல்படுத்தினார்கள். பின் பவுலும்
சீலாவும் வெளியேறினர்.

### தெசலோனிக்கேயில் பவுலும் சீலாவும்

**17** அம்பிபோலி, அப்போலோனியா நகரங்
கள் வழியாகப் பவுலும் சீலாவும் பிரயா
ணம் செய்தனர். அவர்கள் தெசலோனிக்கே
நகரத்திற்கு வந்தனர். அந்நகரில் யூதர்களின்
ஜெப ஆலயம் ஒன்று இருந்தது. **2**யூதர்களைப்
பார்க்கும்படியாகப் பவுல் ஜெப ஆலயத்திற்
குள் சென்றான். இதையே அவன் எப்போதும்
செய்தான். மூன்று வாரங்கள் ஓய்வு நாட்களில்
வேதவாக்கியங்களைக் குறித்துப் பவுல் யூதர்
களோடு பேசினான். **3**வேதவாக்கியங்களை
யூதர்களுக்கு பவுல் விவரித்தான். கிறிஸ்து
இறக்கவேண்டும் என்பதையும், மரணத்திலி
ருந்து எழவேண்டும் என்பதையும் காட்
டினான். பவுல் “நான் உங்களுக்குச் சொல்லிக்
கொண்டிருக்கிற மனிதனாகிய இயேசுவே
கிறிஸ்து ஆவார்” என்றான். அவர்களில் சிலர்
ஒப்புக்கொண்டு பவுலுடனும் சீலாவுடனும்
இணைந்தார்கள். **4**ஜெப ஆலயத்தில் உண்மை
யான தேவனை வழிபட்ட கிரேக்க மனிதர்கள்
இருந்தனர். அங்கு முக்கியமான பெண்மணி
கள் பலரும் இருந்தனர். இவர்களில் பலரும்
பவுலோடும் சீலாவோடும் சேர்ந்துகொண்ட
னர். **5**ஆனால் விசுவாசியாத யூதர்கள் பொறா
மைகொண்டனர். நகரத்திலிருந்து சில தீயமனி
தர்களை கூலிக்காக அமர்த்திக் கொண்டனர்.
இத்தீய மனிதர்கள் பல மக்களைச் சேர்த்துக்
கொண்டு நகரத்தில் கலகம் விளைவித்தனர்.
பவுலையும் சீலாவையும் தேடிக்கொண்டு இந்த
மனிதர்கள் யாசோனின் வீட்டிற்குச் சென்ற
னர். பவுலையும் சீலாவையும் நகர சபையின்
முன்பாக அழைத்து வர வேண்டுமென்று அம்
மனிதர்கள் கேட்டனர். **6**ஆனால் அவர்கள் பவு
லையும் சீலாவையும் கண்டுபிடிக்கவில்லை.
எனவே மக்கள் யாசோனையும், வேறு சில
விசுவாசிகளையும் நகரின் தலைவர்கள் முன்
பாக இழுத்து வந்தனர். மக்கள் எல்லோரும்

---

**ரோம மக்கள்** ரோமக்குடிமக்கள் விசாரணை இல்லாமல் அடிக்கப்படக் கூடாது என்பது ரோம சட்டம்.

"இம்மனிதர்கள் உலகத்தின் எல்லா இடங்
களிலும் கலகமுண்டாக்கினார்கள். இப்போது
இவர்கள் இங்கும் வந்துவிட்டனர்! 7யாசோன்
அவர்களைத் தனது வீட்டில் வைத்திருக்கி
றான். இராயரின் சட்டங்களுக்கு எதிரான
செயல்களை அவர்களெல்லாம் செய்கின்றனர்.
இயேசு என்னும் இன்னொரு மன்னன் இருப்
பதாக அவர்கள் கூறுகின்றனர்" என்று கூக்
குரலிட்டனர். 8நகரத்தின் தலைவர்களும் பிற
மக்களும் இவற்றைக் கேட்டனர். அவர்கள் கலக்
கமடைந்தார்கள். 9யாசோனும் பிற விசுவாசி
களும் தண்டனைப் பணம் செலுத்தும்படி
யாகச் செய்தனர். பின் விசுவாசிகளை விடு
தலை செய்து போகும்படி அனுமதித்தனர்.

## பெரேயாவில் ஊழியம்

10அதே இரவில் விசுவாசிகள் பவுலையும்
சீலாவையும் பெரேயா எனப்பட்ட மற்றொரு
நகரத்திற்கு அனுப்பினர். பெரேயாவில் பவு
லும் சீலாவும் யூதர்களின் ஜெப ஆலயத்திற்குச்
சென்றனர். 11தெசலோனிக்கேயின் யூதர்
களைக் காட்டிலும் இந்த யூதர்கள் சிறந்தவர்
களாக இருந்தனர். பவுலும் சீலாவும் கூறிய
வற்றை இந்த யூதர்கள் மிகுந்த ஆர்வமுடன்
வரவேற்றார்கள். பெரேயாவின் யூதர்கள் ஒவ்
வொருநாளும் வேதவாக்கியங்களைக் கற்றார்
கள். இக்காரியங்கள் உண்மையானவையா
என்று அறிய இந்த யூதர்கள் விரும்பினார்கள்.
12இந்த யூதர்களில் பலர் நம்பிக்கை கொண்
டனர். உயர்நிலையிலிருந்த பல கிரேக்கப்
பெண்களும் ஆண்களைப் போலவே நம்
பிக்கை கொண்டனர். 13தெசலோனிக்கேயின்
யூதர்கள் பெரேயாவில் பவுல் தேவனுடைய
வார்த்தைகளை உபதேசித்தான் என்பதை
அறிந்தபோது அவர்கள் பெரேயாவுக்கும் வந்
தனர். தெசலோனிக்கேயின் யூதர்கள் பெரேயா
வின் மக்களைக் கலக்கமுறச்செய்து கலகம்
உண்டாக்கினர். 14எனவே விசுவாசிகள்
விரைந்து பவுலைக் கடற்கரை வழியாக
அனுப்பிவைத்தனர், ஆனால் சீலாவும் தீமோத்
தேயுவும் பெரேயாவில் தங்கினர். 15பவுலோடு
சென்ற விசுவாசிகள் அவனை அத்தேனே
நகரத்திற்கு அழைத்துச் சென்றனர். பவுலிடமி
ருந்து அந்தச் சகோதரர்கள் சீலாவுக்கும்
தீமோத்தேயுவுக்கும் குறிப்புகளை எடுத்துச்
சென்றனர். அக்குறிப்புகள், "எவ்வளவு விரை
வில் முடியுமோ, அவ்வளவு விரைவில் என்
னிடம் வாருங்கள்" என்றன.

## அத்தேனேயில் பவுல்

16அத்தேனேயில் பவுல் சீலாவுக்காகவும்
தீமோத்தேயுவுக்காகவும் காத்துக் கொண்டிருந்
தான். நகரம் விக்கிரகங்களால் நிறைந்திருப்
பதைக் கண்டு பவுல் மனக்கலக்கமடைந்திருந்
தான். 17ஜெப ஆலயத்தில் பவுல் யூதர்களோடும்
உண்மையான தேவனை வழிபட்ட கிரேக்
கரோடும் பேசினான். நகரத்தின் சந்தை வெளி
களில் நேரம் போக்கிக்கொண்டிருந்த சில
மக்களோடும் பவுல் பேசினான். ஒவ்வொரு
நாளும் பவுல் இதைச் செய்தான். 18எப்பிக்
கூரர், ஸ்தோயிக்கர் தத்துவவாதிகளில்* சிலர்
அவனோடு விவாதித்தார்கள்.

அவர்களில் சிலர், "தான் கூறிக்கொண்டி
ருப்பதைப்பற்றி இந்த மனிதனுக்கு உண்மை
யாகவே தெரியாது. அவன் என்ன சொல்ல
முயன்று கொண்டிருக்கிறான்?" என்றார்கள்.
இயேசு மரணத்திலிருந்து எழுப்பப்பட்ட நற்
செய்தியைப் பவுல் அவர்களுக்குக் கூறிக்
கொண்டிருந்தான். எனவே அவர்கள், "வேறு
ஏதோ சில தேவர்களைக் குறித்து அவன்
நமக்குச் சொல்லிக்கொண்டிருப்பதாகப் படு
கிறது" என்றனர். 19அவர்கள் பவுலைங் கண்டு
பிடித்து அரியோபாகஸ்* சங்கத்தின் கூட்டத்
திற்கு அவனை அழைத்துச் சென்றனர். அவர்
கள், "நீங்கள் போதிக்கிற இப்புதிய கருத்தை
எங்களுக்கு விளக்குங்கள். 20நீங்கள் சொல்
லுபவை எங்களுக்குப் புதியவை. இவற்றைக்
குறித்து நாங்கள் முன்னர் கேள்விப்பட்ட
தில்லை. இப்போதனையின் பொருள் என்ன
என்று நாங்கள் அறிய விரும்புகிறோம்"
என்றனர். 21(அத்தேனேயின் மக்கள் அனை
வரும் அங்கே வாழ்ந்து கொண்டிருந்த பிற
நாட்டு மக்களும் இந்தப் புத்தம்புதிய கருத்துக்
களைப் பற்றிப் பேசிப் பேசியே பொழுதைக்
கழித்தனர்.)

22அரியோபாகஸ் சங்கத்தின் கூட்டத்தில்
பவுல் எழுந்து நின்றான். பவுல், "அத்தேனே
யின் மனிதர்களே, நீங்கள் எல்லாவற்றிலும்
பக்தியில் மிக்கவர்களாக இருப்பதை என்
னால் பார்க்கமுடிகிறது. 23நான் உங்கள் நகரத்
தின் வழியாகப் போய்க்கொண்டிருந்தேன். நீங்
கள் வழிபடுகின்ற பொருள்களைப் பார்த்தேன்.
'அறியப்படாத தேவனுக்கு' என்று எழுதப்
பட்ட ஒரு பீடத்தையும் கண்டேன். நீங்கள்
அறியாத ஒரு தேவனை வழிபடுகின்றீர்கள்.
நான் உங்களுக்குக் கூறுகின்ற தேவன் அவரே!
24அவரே உலகம் முழுவதையும் அதிலுள்ள
எல்லாப் பொருட்களையும் உண்டாக்கின
தேவன். அவரே வானம் பூமி ஆகியவற்றின்
கர்த்தர். மனிதன் கட்டுகிற ஆலயங்களில் அவர்
வசிப்பதில்லை. 25உயிர், மூச்சு, பிற அனைத்
தையும் மக்களுக்குக் கொடுப்பவர் இந்த
தேவனே. அவருக்கு மக்களிடமிருந்து எந்த
உதவியும் தேவையில்லை. தேவனுக்குத்
தேவையான எல்லாம் அவரிடம் இருக்கின்
றன. 26ஒரு மனிதனை உருவாக்குவதிலிருந்து
தேவன் ஆரம்பித்தார். அவனிலிருந்து தேவன்
வெவ்வேறான மக்களை உருவாக்கினார்.

---

**தத்துவவாதிகள்** தங்கள் சொந்த சிந்தனை களை யும் மற்றவர் சிந்தனைகளையும் படித்துப் பேசுபவர் கள்.

**அரியோபாகஸ்** சங்கம் அத்தேனேயில் உள்ள முக்கியத் தலைவர்கள் உள்ள ஒரு குழு.

தேவன் அவர்களை உலகின் எல்லாப் பகுதி
களிலும் வசிக்கச் செய்தார். எப்போது, எங்கு
அவர்கள் வசிக்கவேண்டுமென்பதைத் தேவன்
மிகச் சரியாகத் தீர்மானித்தார். 27மக்கள் தன்
னைத் தேடவேண்டுமென்று தேவன் விரும்
பினார். அவர்கள் எல்லா இடங்களிலும் தேடி
அவரைக் கண்டுகொள்ளக் கூடும். ஆனால்
அவர் நம் ஒவ்வொருவருக்கும் தொலைவில்
இல்லை.

28 'நாம் அவரோடு வாழ்கிறோம். நாம்
அவரோடு நடக்கிறோம். நாம் அவரோடு
இருக்கிறோம்.'

உங்கள் கவிஞர்கள் சிலர் இதைச் சொல்லியி
ருக்கிறார்கள்.
'ஏனென்றால் நாம் அவரது பிள்ளைகள்.'

29நாம் தேவனின் பிள்ளைகள். மக்கள்
கற்பனை செய்கிற அல்லது உண்டாக்குகிற
பொருளைப் போன்றவர் தேவன் என்று நாம்
நினைக்கக்கூடாது. அவர் பொன், வெள்ளி
அல்லது கல்லால் செய்யப்பட்ட பொருளைப்
போன்றவர் அல்ல. 30கடந்த காலத்தில் மக்கள்
தேவனைப் புரிந்து கொள்ளவில்லை. தேவ
னும் அதைப் பொருட்படுத்தவில்லை. ஆனால்
இப்போது உலகிலுள்ள ஒவ்வொரு மனிதனை
யும் அவனது இருதயத்தையும் வாழ்க்கையை
யும் மாற்றும்படியாக எல்லா இடங்களிலும்
கூறுகிறார். 31தேவன் உலகிலுள்ள எல்லா
மக்களையும் நியாயம் தீர்ப்பதற்கு ஒரு
நாளைக் குறித்து வைத்துள்ளார். அவர் சரி
யான தீர்ப்பு வழங்குவார். அவர் ஒரு
மனிதனைப் (இயேசுவை) பயன்படுத்துவார்.
தேவன் பலகாலத்திற்கு முன்னரேயே இம்மனி
தனைத் தேர்ந்தெடுத்தார். அம்மனிதனை மர
ணத்தி னின்று எழுப்பியதன் மூலம் தேவன்
இதற்கான உறுதியை அனைவருக்கும் அளித்
தார்" என்றான்.
32இயேசு மரணத்தினின்று எழுதல் என்
பதைக் கேள்விப்பட்டபோது அவர்களில் சிலர்
கேலிசெய்தார்கள். மற்றவர்கள்," உங்களிடம்
இதைக் குறித்து மேலும் பின்னர் கேட்போம்"
என்றனர். 33எனவே பவுல் அவர்களுக்கிடை
யிலிருந்து சென்றான். 34ஆனால் மக்களில்
சிலர் பவுலை நம்பி அவனோடு சேர்ந்து
கொண்டார்கள். அவர்களில் ஒருவன் தியொனீ
சியு, அவன் அரியோபாகஸ் சங்கத்தின் உறுப்
பினன். வேறொருத்தி தாமரி என்று அழைக்
கப்பட்ட ஒரு பெண்மணி. இன்னும் சில மக்க
ளும் அவர்களுடன் விசுவாசிகளாக மாறினர்.

### கொரிந்துவில் பவுல்

18 இதன் பிறகு பவுல் அத்தேனேயை
விட்டு, கொரிந்து நகரத்திற்குச் சென்
றான். 2கொரிந்துவில் பவுல் ஆக்கில்லா என்
னும் பெயருள்ள யூத மனிதனைச் சந்தித்தான்.
ஆக்கில்லா பொந்து நாட்டில் பிறந்தவன்.
ஆனால் ஆக்கில்லாவும் அவனது மனைவி
பிரிசில்லாவும் சமீபத்தில் இத்தாலியிலிருந்து
கொரிந்துவுக்கு வந்திருந்தனர். கிலவுதியு*
எல்லா யூதர்களும் ரோமை விட்டுப்போக
வேண்டுமென்று கட்டளையிட்டதால் அவர்கள்
இத்தாலியிலிருந்து வந்தனர். பவுல், ஆக்
கில்லா, பிரிசில்லா ஆகியோரைச் சந்திக்கச்
சென்றான். 3அவர்களும் பவுலைப் போலவே
கூடாரம் கட்டுபவர்கள். இதன் காரணமாகப்
பவுல் அவர்களோடு தங்கியிருந்து வேலை
செய்து வந்தான். 4ஒவ்வொரு ஓய்வு நாளிலும்
பவுல் ஜெப ஆலயத்தில் யூதரோடும் கிரேக்
கரோடும் பேசினான். அவர்கள் இயேசுவில்
விசுவாசம் கொள்ள ஒப்புமாறு செய்வதற்குப்
பவுல் முயற்சி செய்து கொண்டிருந்தான்.
5சீலாவும் தீமோத்தேயுவும் மக்கதோனியா
விலிருந்து கொரிந்துவிலுள்ள பவுலிடம் வந்
தனர். இதன் பிறகு பவுல் தனது நேரம் முழு
வதையும் மக்களுக்கு நற்செய்தியைக் கூறுவ
திலேயே செலவிட்டான். இயேசுவே கிறிஸ்து
என்பதை அவன் யூதர்களுக்குக் காட்டினான்.
6ஆனால் யூதர்கள் பவுலின் போதனையை
ஏற்றுக்கொள்ளவில்லை. சில புண்படுத்தும்
வார்த்தைகளை யூதர்கள் கூறினர். எனவே
பவுல் உடையிலிருந்த தூசியை உதறினான்.
அவன் யூதரை நோக்கி, "நீங்கள் இரட்சிக்கப்
படாவிட்டால் அது உங்களின் தவறுதான்!
நான் என்னால் முடிந்ததைச் செய்துவிட்டேன்!
இதன் பிறகு, நான் யூதரல்லாத மக்களிடம்
மட்டுமே செல்வேன்!" என்றான். 7பவுல் ஜெப
ஆலயத்தை விட்டு யுஸ்து என்பவனின்
வீட்டிற்குப் போனான். இம்மனிதன் உண்
மையான தேவனை வணங்கினான். அவன்
வீடு ஜெப ஆலயத்திற்கு அடுத்திருந்தது. 8அந்த
ஜெப ஆலயத்திற்கு அதிகாரி கிறிஸ்பு என்
பவன். கிறிஸ்புவும் அவன் வீட்டில் வசிக்கும்
எல்லா மக்களும் கர்த்தரை விசுவாசித்தனர்.
கொரிந்துவிலுள்ள வேறு பலரும் பவுல் கூறி
யதைக் கேட்டனர். அவர்களும் விசுவாசம்
வைத்து ஞானஸ்நானம் பெற்றனர்.
9இரவு வேளையில் பவுலுக்கு ஒரு தரிசனம்
கிடைத்தது. கர்த்தர் அவனை நோக்கி,
"பயப்படாதே! மக்களுக்குப் போதிப்பதைத்
தொடர்ந்து செய். நிறுத்தாதே! 10நான் உன்
னோடு இருக்கிறேன். யாரும் உன்னை தாக்கித்
துன்புறுத்த முடியாது. என்னுடைய மக்கள்
பலர் நகரத்தில் இருக்கிறார்கள்" என்றார்.
11ஒன்றரை ஆண்டு காலம் பவுல் அங்கேயே
தங்கி மக்களுக்குத் தேவனுடைய வார்த்
தையை உபதேசித்தான்.

### கல்லியோன் முன் பவுல்

12கல்லியோன் அகாயா நாட்டின் ஆளுநரா
னான். அக்காலத்தில் யூதர்களில் சிலர் பவு

**கிலவுதியு** ரோம நாட்டின் பேரரசன். கி.பி. 41-54.

லுக்கு எதிராகக் குழுவாக வந்தனர். அவர்கள்
பவுலை நீதிமன்றத்திற்குக் கொண்டு போனார்
கள். 13யூதர்கள் கல்லியோனிடம், “யூதவிதிக்கு
மாறான வகையில் தேவனை வழிபடும்படி
இம்மனிதன் மக்களுக்குக் கற்பித்துக் கொண்
டிருக்கிறான்!” என்றார்கள்.

14பவுல் ஏதோ சொல்ல இருந்தான். ஆனால்
கல்லியோன் யூதர்களிடம், “நீங்கள் பெரிய
குற்றத்தைக் குறித்தோ அல்லது தவறைக்
குறித்தோ புகார் செய்திருந்தால் நான் உங்
களுக்குச் செவிசாய்த்திருப்பேன். 15ஆனால்
யூதர்களாகிய நீங்கள் கூறுபவையோ வார்த்
தைகள், பெயர்கள் ஆகியவற்றைப் பற்றிய
வினாக்களும், உங்களுடைய சட்டத்தைப் பற்
றிய வாக்குவாதமும் மட்டுமேயாகும். எனவே
நீங்களே இந்தப் பிரச்சினையைத் தீர்த்துக்
கொள்ளவேண்டும். இந்த விஷயங்களில் நான்
நீதிபதியாக இருக்க விரும்பவில்லை!” என்
றான். 16பின் கலலியோன் அவர்களை நீதி
மன்றத்தை விட்டுப்போகச் செய்தான்.

17அவர்கள் எல்லோரும் சொஸ்தேனேயைப்
பிடித்துக் கொண்டார்கள். (சொஸ்தேனே அப்
போது ஜெப ஆலயத்தின் தலைவனாக இருந்
தான்) அவர்கள் சொஸ்தேனேயை நீதிமன்றத்
திற்கு முன்பாக அடித்தார்கள். ஆனால் கல்
லியோன் இதைக்குறித்து எந்தக் கவலையும்
படவில்லை.

### அந்தியோகியாவுக்குத் திரும்புதல்

18பவுல் சகோதரர்களுடன் பலநாட்கள் தங்கி
யிருந்தான். பின் அவன் அவர்களை விட்டுப்
புறப்பட்டு, சிரியாவிற்குக் கடற்பயணமா
னான். பிரிசில்லாவும் ஆக்கில்லாவும் அவ
னோடிருந்தனர். கெங்கிரேயாவில் பவுல்
தனது தலைமயிரைக் களைந்தான்.* அவன்
தேவனுக்கு ஒரு வாக்குறுதி கொடுத்திருந்தான்
என்பதை இது உணர்த்தியது. 19பின் அவர்கள்
எபேசு பட்டணத்தை அடைந்தார்கள். இங்கு
அவன் ஆக்கில்லாவையும், பிரிசில்லாவையும்
பிரிந்தான். பவுல் எபேசுவில் இருந்தபோது
ஜெப ஆலயத்திற்குள் சென்று யூதரோடு பேசி
னான்.

20யூதர்கள் பவுலை இன்னும் சில காலம்
தங்குமாறு வேண்டினார்கள். ஆனால் பவுல்
மறுத்துவிட்டான். 21“ஆனால் தேவன் விரும்
பினால் நான் உங்களிடம் மீண்டும் வருவேன்”
என்று புறப்படும்பொழுது கூறினான். எனவே
பவுல் எபேசுவிலிருந்து மீண்டும் கடற்பயணம்
செய்தான்.

22பவுல் செசரியா நகரத்திற்குச் சென்றான்.
பின்னர் அவன் எருசலேமிலிருந்த சபையின
ரைச் சந்தித்து அவர்களை வாழ்த்தினான்.
அதன் பிறகு பவுல் அந்தியோகியா நகரத்
திற்குச் சென்றான். 23பவுல் அந்தியோகியா
வில் சிலகாலம் தங்கியிருந்தான். பின் அவன்
கலாத்தியா, பிரிகியா நாடுகள் வழியாகச்
சென்றான். இந்நாடுகளில் பவுல் ஊர் ஊராகப்
பயணம் செய்தான். அவன் இயேசுவின் சீஷர்
கள் அனைவரையும் பலப்படுத்தினான்.

### அப்பொல்லோவின் ஊழியம்

24அப்பொல்லோ என்னும் பெயருள்ள
யூதன் எபேசுவிற்கு வந்தான். அப்பொல்லோ
அலெக்ஸாண்டிரியா நகரத்தில் பிறந்தவன்.
அவன் கல்வியில் தேர்ந்தவன். அவன் வேத
வாக்கியங்களை வல்லமையுடன் பயன் படுத்
தினான். 25கர்த்தரைப் பற்றி அவன் கற்றிருந்
தான். அப்பொல்லோ ஆன்மீக உற்சாகம்
நிரம்பியிருந்தான். இயேசுவைக் குறித்து மக்க
ளிடம் பேசிக்கொண்டிருந்தான். இயேசுவைக்
குறித்து சரியான கருத்துக்களையே அப்பொல்
லோ கற்பித்தான். அவனுக்குத் தெரிந்தது
யோவானின் ஞானஸ்நானம் மட்டுமே. 26அப்
பொல்லோ ஜெப ஆலயங்களில் துணிவாகப்
பேசத் தொடங்கினான். ஒவ்வொரு முறையும்
அவன் துணிவுடன் அதைச் செய்தான். அவன்
பேசுவதைப் பிரிசில்லாவும் ஆக்கில்லாவும்
கேட்டனர். அவர்கள் அவனைத் தங்கள் வீட்
டிற்கு அழைத்துச் சென்று தேவனுடைய
வழியை இன்னும் துல்லியமாக அறிய உதவி
னார்கள். 27அகாயா நாட்டிற்குப் போவதற்கு
அப்பொல்லோ விரும்பினான். அதற்கு எபே
சுவின் சகோதரர்கள் அவனுக்கு உதவினர்.
அகாயாவிலுள்ள இயேசுவின் சீஷர்களுக்கு
அவர்கள் ஒரு கடிதம் எழுதினர். அக்கடிதத்தில்
அப்பொல்லோவை இச்சீஷர்கள் வரவேற்கு
மாறு அவர்கள் கேட்டனர். அகாயாவில் உள்ள
இந்தச் சீஷர்கள் தேவனுடைய கிருபையின்
மூலமாக இயேசுவில் விசுவாசம் வைத்திருந்
தார்கள். அப்பொல்லோ அங்கு வந்துச் சேர்ந்த
பொழுது அவன் அவர்களுக்கு மிகவும் உத
வினான். 28அவன் எல்லா மக்களுக்கும்
முன்பாக யூதர்களுக்கு எதிராக மிக வன்மை
யாக வாதிட்டான். யூதர்கள் தவறான போ
தனைகளைப் பெற்றிருந்தார்கள் என்பதை
நிரூபித்தான். அவன் வேதவாக்கியங்களை
பயன்படுத்தி இயேசுவே கிறிஸ்து என்று
காட்டினான்.

### எபேசுவில் பவுல்

19 அப்பொல்லோ கொரிந்து நகரில் இருந்
தபோது எபேசு நகருக்குச் செல்லும்
வழியில் பவுல் சில உள்பகுதிகளின் வழியா
கப் போய்க்கொண்டிருந்தான். பவுல் எபேசு
வில் சீஷர்கள் சிலரைக் கண்டுபிடித்தான்.
2பவுல் அவர்களை நோக்கி, “நீங்கள் விசுவா
சித்தபோது பரிசுத்த ஆவியானவரைப் பெற்
றீர்களா?” என்று கேட்டான்.

இந்தச் சீஷர்கள் அவனுக்கு, “நாங்கள்
பரிசுத்த ஆவியானவரைப்பற்றிக் கேள்விப்
படவே இல்லை” என்றனர்.

---

**தலைமயிரைக் களைந்தான்** கடவுளுக்கு வேண்டியிருந்த ஒரு காரியம் முடிந்துவிட்டது என்பதை இதன் மூலம் யூதர்கள் காட்டினார்கள்.

3எனவே பவுல் அவர்களை நோக்கி, “பின்
நீங்கள் எத்தகைய ஞானஸ்நானம் பெற்றீர்
கள்?” என்று கேட்டான்.
அவர்கள், “யோவான் கற்பித்த ஞானஸ்
நானம் அது” என்றார்கள். 4பவுல், “மக்கள்
தங்கள் வாழ்க்கையை மாற்றியமைக்க விரும்
புவதைக் காட்டுவதற்கு யோவான் அவர்களை
ஞானஸ்நானம் பெறும்படியாகக் கூறினான்.
அவனுக்குப்பின் வருகிற ஒருவரை நம்பும்
படியாக யோவான் மக்களுக்குக் கூறினான்.
அவர் இயேசுவே” என்றான்.
5அவர்கள் இதனைக் கேட்டபோது அவர்கள்
கர்த்தராகிய இயேசுவின் பெயரில் ஞானஸ்
நானம் பெற்றார்கள். 6அப்போது பவுல்
அவனது கைகளை அவர்கள்மீது வைத்த
போது பரிசுத்த ஆவியானவர் அவர்கள்மீது
வந்தார். அவர்கள் வெவ்வேறு மொழிகளைப்
பேசவும் தீர்க்கதரிசனம் சொல்லவும் ஆரம்பித்
தனர். 7இக்குழுவில் சுமார் பன்னிரண்டு மனி
தர்கள் இருந்தனர்.
8பவுல் ஜெப ஆலயத்திற்குள் சென்று, மிக
வும் துணிவாகப் பேசினான். பவுல் மூன்று
மாதங்கள் இதைச் செய்தான். அவன் யூதர்
களிடம் தேவனுடைய இராஜ்யத்தைப் பற்றிப்
பேசி, அவற்றை யூதர்கள் ஏற்றுக்கொள்ளும்
படித் தூண்ட முயற்சித்தான். 9ஆனால் சில
யூதர்கள் பிடிவாதமாக இருந்தனர். அவர்கள்
நம்ப மறுத்தனர். இந்த யூதர்கள் தேவனுடைய
வழியைக் குறித்துத் தீயவற்றைப் பேசினர்.
எல்லா மக்களும் இவற்றைக் கேட்டனர்.
எனவே பவுல் இந்த யூதரை விட்டு நீங்கி,
இயேசுவின் சீஷர்களைத் தன்னோடு அழைத்
துச் சென்றான். திறன்னு என்ற ஒருவனின்
பள்ளிக்கூடம் இருந்த இடத்திற்குப் பவுல் போ
னான். பவுல் அங்கிருந்த மக்களுடன் தினமும்
கலந்துரையாடினான். 10பவுல் இதை இரண்டு
வருடங்கள் செய்தான். இச்செயலால் ஆசியா
வில் வசித்துக்கொண்டிருந்த ஒவ்வொரு யூத
னும் கிரேக்கனும் (யூதரல்லாத) தேவனுடைய
வார்த்தையைக் கேட்டனர்.

### ஸ்கேவாவின் பிள்ளைகள்

11சில அசாதாரணமான அற்புதங்களைச்
செய்வதற்குத் தேவன் பவுலைப் பயன்படுத்
தினார். 12பவுல் பயன்படுத்திய துணிகளையும்
கைக்குட்டைகளையும் சிலர் எடுத்துச் சென்
றனர். இவற்றை மக்கள் நோயாளிகள்மீது
வைத்தனர். அவர்கள் இதைச் செய்தபோது,
நோயாளிகள் குணமடைந்தார்கள். அசுத்த
ஆவிகள் அவர்களைவிட்டு நீங்கிச் சென்றன.
13-14சில யூதர்களும் சுற்றுப் பிரயாணம்
செய்து மக்களை விட்டு அசுத்த ஆவிகள்
நீங்கும்படியாகச் செய்தனர். ஸ்கேவாவின்
ஏழு மகன்களும் இதைச் செய்தனர். (ஸ்கேவா
ஒரு தலைமை ஆசாரியன்) கர்த்தர் இயேசுவின்
பெயரைப் பயன்படுத்தி, மக்களிடமிருந்து
அசுத்த ஆவிகளை வெளியேற்ற இந்த யூதர்கள்
முயன்றனர். அவர்கள் எல்லோரும், “பவுல்
பேசுகின்ற அதே இயேசுவினால், வெளியேறு
மாறு நான் கட்டளையிடுகிறேன்!” என்று
கூறினர்.
15ஆனால் ஒரு முறை ஒரு அசுத்த ஆவி
இந்த யூதர்களை நோக்கி, “எனக்கு இயேசு
வைத் தெரியும், எனக்குப் பவுலைப் பற்றியும்
தெரியும், ஆனால் நீங்கள் யார்?” என்று
கேட்டது.
16மேலும் அசுத்த ஆவி பிடித்த மனிதன்,
இந்த யூதர்கள் மீது தாவினான். அவர்கள்
எல்லோரைக் காட்டிலும் அவன் மிகுந்த பலம்
பொருந்தியவனாக இருந்தான். அவன் அவர்
களை அடித்து, அவர்களின் ஆடைகளைக்
கிழித்துப் போட்டான். அந்த வீட்டிலிருந்து
இந்த யூதர்கள் நிர்வாணமாக ஓடிப்போனார்
கள். 17எபேசுவின் எல்லா ஜனங்களும்,
யூதரும் கிரேக்கரும் இதனை அறிந்தனர். தேவ
னிடம் மிகுந்த மரியாதை கொள்ளத் துவங்
கினர். கர்த்தராகிய இயேசுவின் பெயரை
மக்கள் அதிகமாக மகிமைப்படுத்த ஆரம்பித்
தனர்.
18விசுவாசிகளில் பலர் தாங்கள் செய்த
பாவச் செயல்களை வெளிப்படையாக ஒப்புக்
கொள்ளத் துவங்கினார்கள். 19சில விசுவாசி
கள் மந்திரத்தைப் பயன்படுத்தினவர்களாயி
ருந்தனர். அவர்கள் தங்கள் மந்திர நூல்களைக்
கொண்டு வந்து, அவற்றை எல்லோருக்கும்
முன்பாக எரித்தனர். அப்புத்தகங்கள் சுமார்
ஐம்பதாயிரம் வெள்ளிக்காசுகள்* மதிப்புடை
யனவாக இருந்தன. 20இவ்வாறே கர்த்தரின்
வார்த்தை மிக்க வல்லமை வாய்ந்த வகையில்
அதிகமான மக்களைப் பாதிக்க ஆரம்பித்தது.
மிக அதிக எண்ணிக்கையில் மக்கள் விசு
வாசம் வைத்தனர்.

### பவுல் பயணத்திட்டம்

21இக்காரியங்களுக்குப் பிறகு, பவுல் எருச
லேமுக்குச் செல்லத் திட்டமிட்டான். மக்கதோ
னியா, அகாயா நாடுகள் வழியாகச் சென்று,
பின் எருசலேமுக்குச் செல்லப் பவுல் திட்டமிட்
டான். பவுல், “நான் எருசலேமை அடைந்த
பிறகு, ரோமையும் பார்க்க வேண்டும்” என்று
எண்ணினான். 22தீமோத்தேயுவும், எரஸ்துவும்
பவுலுக்கு உதவியவர்களில் இருவர். மக்கதோ
னியாவுக்கு அவர்களைத் தனக்கு முன்பா
கவே பவுல் அனுப்பினான். ஆசியாவில்
இன்னும் சிலகாலம் பவுல் தங்கியிருந்தான்.

### எபேசுவில் குழப்பம்

23ஆனால் அக்காலத்தில் எபேசுவில் மிகத்
தீவிரமான ஒரு குழப்பம் ஏற்பட்டது. தேவ
னுடைய வழியைக் குறித்த குழப்பம் அது.
அவையெல்லாம் இவ்வாறு நிகழ்ந்தன. 24தெ
மெத்திரியு என்னும் பெயர்கொண்ட மனிதன்

---

***50,000 வெள்ளிக் காசுகள்*** ஒரு காசு என்பது ஒரு மனிதனுக்கான ஒருநாள் கூலி.

ஒருவன் இருந்தான். அவன் வெள்ளி வேலை
செய்பவனாக இருந்தான். ஆர்தமிஸ்* தேவதை
யின் தேவாலயத்தைப் போன்று தோற்றம
ளித்த வெள்ளியாலான சிறிய மாதிரி தேவா
லயங்களை அவன் செய்து வந்தான். இவ்வே
லையைச் செய்தவர்கள் மிகுந்த பணம் சம்பா
தித்தார்கள். 25இதே வேலையைச் செய்து வந்த
வர்கள் அனைவரையும் அதன் தொடர்பான
வேலையைச் செய்தவர்களையும் தெமெத்
திரியு ஒன்று கூட்டினான். தெமெத்திரியு அவர்
களை நோக்கி, "நமது வளம் இத்தொழிலைச்
சார்ந்துள்ளதை அறிவீர்கள். 26ஆனால் இந்த
மனிதன் பவுல் செய்து கொண்டிருப்பதைப்
பாருங்கள்! அவன் சொல்வதைக் கேளுங்கள்!
பவுல் மனிதர்களைத் தூண்டி, மனம் மாற்றி
விட்டான். எபேசுவிலும் அநேகமாக ஆசியா
வின் எல்லாப் பகுதிகளிலும் இதைச் செய்
திருக்கிறான். மனிதன் செய்கின்ற கடவுள்
சிலைகள் உண்மையானவை அல்ல என்று
பவுல் சொல்கிறான். 27பவுல் சொல்கின்ற
இந்தக் காரியங்கள் மக்களை நமது வேலைக்
கெதிராகத் திருப்பக்கூடும். ஆனால் இன்
னொரு சிக்கலும் இருக்கிறது. பெரிய தேவி
யான ஆர்தமிஸின் தேவாலயம் முக்கியமான
தல்ல என்று மக்கள் நினைக்கக் கூடும்.
அவளது பெருமை அழிக்கப்படக்கூடும். ஆசி
யாவிலும், உலகம் முழுவதிலும் உள்ள
ஒவ்வொருவரும் வழிப்படுகின்ற தேவதை
ஆர்தமிஸ் ஆவாள்" என்றான்.

28அம்மனிதர்கள் இதனைக் கேட்டபோது
மிகவும் கோபமுற்றனர். அவர்கள், "எபேசு
பட்டணத்தார்களின் தேவியான ஆர்தமிஸே
பெரியவள்" என்று உரக்கக் கூவினர். 29நகரத்
தின் எல்லா மக்களும் குழப்பமான நிலையில்
காயுவையும், அரிஸ்தர்க்குவையும் பிடித்தார்
கள். (இவ்விருவரும் மக்கதோனியாவைச்
சேர்ந்தவர்கள். அவர்கள் பவுலோடு பயணம்
செய்து கொண்டிருந்தனர்.) பின் எல்லா
மக்களும் அரங்கிற்குள் ஓடினார்கள். 30பவுல்
உள்ளே சென்று கூட்டத்தில் பேச விரும்
பினான். ஆனால் இயேசுவின் சீஷர்கள் அவ
னைப் போக அனுமதிக்கவில்லை. 31மேலும்
நாட்டின் சில தலைவர்கள் பவுலின் நண்பர்
களாக இருந்தனர். இத்தலைவர்கள் அவனுக்கு
ஒரு செய்தி அனுப்பினர். அவர்கள் பவுல்
அரங்கிற்குள் செல்ல வேண்டாமென்று கூறி
னர். 32ஒருவர் சத்தம்போட்டு ஒன்றையும் இன்
னொருவர் சத்தம்போட்டு இன்னொன்றையும்
சொன்னார்கள். மேலும் அவர்கள் எதற்காகக்
கூடியிருக்கிறார்கள் என்பதைப் பெரும்
பாலோர் அறியாதவாறு கூட்டத்தில் குழப்பம்
மிகுந்திருந்தது. 33யூதர்கள் அலெக்ஸாண்டர்
என்னும் பெயருள்ள ஒருவனை மக்கள் முன்
பாக நிறுத்தினர். அவன் செய்ய வேண்டியதை
மக்கள் அவனுக்கு விளக்கினார்கள். மக்களுக்
குக் காரியங்களை விளக்கவேண்டியிருந்த
தால் அலெக்ஸாண்டர் தனது கையை அமை
திக்காக அசைத்தான். 34அலெக்ஸாண்டர் ஒரு
யூதன் என்பதை மக்கள் அடையாளம் கண்ட
போது அவர்கள் எல்லோரும் உரத்தகுரலில்
கூச்சலிட ஆரம்பித்தனர். சுமார் இரண்டு மணி
நேரம் அவர்கள் தொடர்ந்து கூச்சலிட்டனர்.
மக்கள் "எபேசுவின் ஆர்தமிஸ் பெருமை பொ
ருந்தியவள்! எபேசுவின் ஆர்தமிஸ் பெருமை
மிக்கவள்! ஆர்தமிஸ் பெரியவள்!" என்றனர்.

35நகர அலுவலன் மக்களை அமைதியாக
இருக்குமாறு வேண்டினான். அவன், "எபேசு
வின் மக்களே! ஆர்தமிஸ் தேவியின் தேவா
லயத்தையும் பரலோகத்திலிருந்து விழுந்த
அவளது பரிசுத்த பாறையையும்* பெற்ற
நகரம் எபேசு என்பதை எல்லா மக்களும்
அறிவர். 36இவற்றை யாரும் மறுக்க முடியாது.
எனவே நீங்கள் அமைதியாக இருங்கள். முரட்
டுத்தனமாக எதையும் செய்யாதீர்கள் 37நீங்கள்
இந்த மனிதர்களை அழைத்து வந்திருக்கிறீர்
கள். ஆனால் நமது தேவிக்கு விரோதமாக
அவர்கள் எதுவும் கூறவில்லை. அவள் தேவா
லயத்திலிருந்து அவர்கள் எதையும் திருட
வில்லை. 38நம்மிடம் நீதி வழங்கும் மன்றங்
களும் நீதிபதிகளும் இருக்கிறார்கள். தெமெத்
திரியுக்கும், தொழில் வல்லுநர்களுக்கும் எவ
ருக்கேனும் அவர்களுக்கு எதிராக வழக்குகள்
இருக்கின்றனவா? அவர்கள் நீதிமன்றத்திற்குப்
போகவேண்டும்! அங்கே குற்றச்சாட்டுகளை
யும் எதிர் குற்றச்சாட்டுகளையும் வைக்கலாம்.
39நீங்கள் பேசவேண்டியது வேறு ஏதேனும்
உள்ளதா? அப்படியானால் மக்களின் நகர
மன்றம் நமக்கிருக்கிறது. அங்கு முடிவெடுக்
கலாம். 40நான் இதை ஏன் சொல்கிறேன் என்
றால் இன்று ஒருவன் இந்தத் தொல்லையைப்
பார்த்துவிட்டு, நாம் கலகத்தை உண்டாக்குகி
றோம் என்று கூறலாம். இந்தத் தொல்லையை
நம்மால் விளக்க முடியாது, ஏனெனில் இக்
கூட்டத்திற்கு உண்மையான காரணம் எதுவும்
இல்லை" என்றான். 41நகர அலுவலன் இவற்
றைக் கூறிய பிறகு, அவன் மக்களை வீடுகளுக்
குச் செல்லுமாறு கூறினான். எல்லா மக்களும்
கலைந்தார்கள்.

### மக்கதோனியா, கிரீஸில் பவுல்

20 தொல்லை நீங்கியபோது பவுல் சீஷர்
களைத் தன்னை வந்து பார்க்குமாறு
அழைத்தான். அவன் அவர்களுக்கு ஆறுதல்
மொழிகளைக் கூறி, பின் விடை பெற்றான்.
பவுல் மக்கதோனியா நாட்டிற்குத் தன் பயணத்
தைத் துவக்கினான். 2மக்கதோனியாவிற்குச்
சென்ற வழியில் பல இடங்களில் தங்கி சீஷர்
களைப் பலப்படுத்துவதற்குப் பல காரியங்

---

**ஆர்தமிஸ்** சின்ன ஆசியாவிலுள்ள மக்களால் வழிபடப்படும் கிரேக்க தேவதை.

**பரிசுத்த பாறை** சாதாரணமான இது ஒரு பாறை. ஆனால் மக்கள் இப்பாறை ஆர்தமிஸ் போல் இருப்பதாக எண்ணி வணங்கினர்.

களை அவர்களுக்குக் கூறினான். பின் பவுல்
கிரீசை அடைந்தான். 3அவன் அங்கு மூன்று
மாதங்கள் தங்கினான். அவன் சிரியாவுக்குக்
கடற்பயணம் செய்வதற்குத் தயாராகிக் கொண்
டிருந்தான். ஆனால் சில யூதர்கள் அவனுக்
கெதிராக திட்டம் வகுத்துக் கொண்டிருந்தனர்.
எனவே பவுல் மக்கதோனியா வழியாக சிரி
யாவுக்குத் திரும்பிப்போக முடிவு செய்தான்.
4சில மனிதர்கள் அவனோடிருந்தனர். அவர்
கள் பெரேயா நகரத்தைச் சேர்ந்த சோபத்தர்,
தெசலோனிக்கா நகரத்தின் அரிஸ்தர்க்கு
மற்றும் செக்குந்து, தெர்பெ நகரின் காயு,
தீமோத்தேயு, ஆசியாவின் இரண்டு மனிதர்
களான தீகிக்குவும், துரோப்பீமும் ஆவர்.
5பவுலுக்கு முன்னரே இம்மனிதர்கள் சென்
றனர். துரோவா நகரில் அவர்கள் எங்களுக்
காக காத்திருந்தனர். 6புளிப்பில்லாத அப்பத்
தின் பண்டிகைக்குப் பிறகு நாங்கள் பிலிப்பி
நகரத்திலிருந்து கடற்பயணமாகச் சென்றோம்.
ஐந்து நாட்களுக்குப் பிறகு துரோவாவில்
இம்மனிதர்களை நாங்கள் சந்தித்தோம். அங்கு
ஏழு நாட்கள் தங்கினோம்.

## துரோவாவில் பவுல்

7கர்த்தரின் திருவிருந்தை* உண்பதற்காக
நாங்கள் அனைவரும் வாரத்தின் முதல்
நாளாகிய ஞாயிறு அன்று கூடினோம். பவுல்
கூட்டத்தில் பேசினான். மறுநாள் அங்கிருந்து
செல்லத் திட்டமிட்டான். நள்ளிரவு வரைக்கும்
பவுல் தொடர்ந்து பேசிக்கொண்டேயிருந்தான்.
8நாங்கள் எல்லோரும் மாடியிலுள்ள அறை
யில் கூடியிருந்தோம். அறையில் பல விளக்
குகள் ஒளிவீசிக் கொண்டிருந்தன. 9ஐத்தீகு
என்னப்பட்ட இளைஞன் ஜன்னலில் அமர்ந்
திருந்தான். பவுல் தொடர்ந்து பேசிக்கொண்டே
யிருந்தான். ஐத்தீகு மிக, மிக தூக்க கலக்கமுற்
றான். கடைசியில் அவன் தூங்கி, ஜன்னலிலி
ருந்து விழுந்தான். மூன்றாம் மாடியிலிருந்து
அவன் கீழே விழுந்தான். மக்கள் சென்று
அவனைத் தூக்கியபோது அவன் இறந்து விட்
டிருந்தான். 10பவுல் ஐத்தீகுவிடம் இறங்கிச்
சென்றான். அவன் முழங்காலிட்டு ஐத்தீகுவை
கட்டித் தழுவினான். பவுல் பிற விசுவாசி
களை நோக்கி, "கவலைப்படாதீர்கள். அவன்
இப்போது உயிரோடிருக்கிறான்" என்றான்.
11பவுல் மீண்டும் மாடிக்குச் சென்றான். அவன்
அவர்களோடு அப்பத்தைப் பிட்டு உண்டான்.
பவுல் அவர்களோடு நீண்ட நேரம் பேசிக்
கொண்டிருந்தான். அவன் பேசி முடித்தபோது
அதிகாலைப் பொழுதாகியிருந்தது. பின் பவுல்
புறப்பட்டுப்போனான். 12மக்கள் இளைஞனை
(ஐத்தீகுவை) வீட்டிற்குள் எடுத்துச் சென்றனர்.
அவன் உயிரோடிருந்தான். மக்கள் மிகவும்
ஆறுதல் அடைந்தனர்.

## மிலேத்துவுக்குப் பயணம்

13ஆசோ நகருக்கு நாங்கள் கடல்வழியாக
பயணமானோம். நாங்கள் பவுலுக்கு முன்பா
கவே முதலாவதாக அங்கு சென்றோம். ஆசோ
வில் பவுல் எங்களைச் சந்தித்து அங்குள்ள
கப்பலில் எங்களோடு சேர்ந்துகொள்ளத் திட்ட
மிட்டான். பவுல் ஆசோவிற்கு நிலத்தின் வழி
யாகப் பயணம்செய்ய விரும்பியதால் இவ்
வாறு செய்யும்படி எங்களுக்குக் கூறினான்.
14பின்னர் பவுலை நாங்கள் ஆசோவில் சந்தித்
தோம். அங்கு அவன் எங்களோடு கப்பலின்
மேல் வந்தான். நாங்கள் எல்லோரும் மித்தி
லேனே நகருக்குச் சென்றோம். 15மறுநாள்
நாங்கள் மித்திலேனேயிலிருந்து கடற்பயணமா
னோம். கீயுதீவின் அருகேயுள்ள ஓரிடத்திற்கு
வந்தோம். மறுநாள் சாமோஸ் தீவிற்கு நாங்கள்
கடல்வழியாகப் பயணமானோம். ஒரு நாள்
கழித்து, மிலேத்து நகரத்திற்கு வந்தோம்.
16எபேசுவில் தங்கவேண்டாமென்று பவுல் ஏற்
கெனவே முடிவெடுத்திருந்தான். ஆசியாவில்
நீண்டகாலம் தங்க அவன் விரும்பவில்லை.
முடிந்தால் பெந்தெகோஸ்து* நாளில் எருசலே
மில் இருக்க விரும்பியதால் அவன் அவசரப்
பட்டுக் கொண்டிருந்தான்.

## எபேசு மூப்பர்களுடன் பவுல்

17மிலேத்துவிலிருந்து பவுல் ஒரு செய்தியை
எபேசுவுக்கு அனுப்பினான். எபேசு சபை
யின் மூப்பரைத் தன்னிடம் வருமாறு அவன்
அழைத்தான். 18மூப்பர்கள் அவனிடம் வந்த
பொழுது பவுல் அவர்களை நோக்கி, "நான்
ஆசியாவுக்கு வந்த முதல் நாளிலிருந்து என்
வாழ்க்கையைக் குறித்து நீங்கள் அறிவீர்கள்.
நான் உங்களோடிருந்த காலம் முழுவதும் நான்
வாழ்ந்த வகையையும் நீங்கள் அறிவீர்கள்.
19யூதர்கள் அடிக்கடி எனக்கு எதிராகக்
காரியங்களைத் திட்டமிட்டனர். இது எனக்குத்
துன்பங்களைத் தந்தது. நான் அடிக்கடி அழு
தேன். ஆனால் மிகப் பணிவாய் எப்போதும்
தேவனுக்குச் சேவை செய்தேன் என்பது உங்
களுக்குத் தெரியும். 20உங்களுக்கு மிகவும்
சிறந்ததையே நான் எப்போதும் செய்தேன்.
இயேசுவைக் குறித்த நற்செய்தியை உங்களுக்
குக் வெளிப்படையாகக் கூறினேன். வீடுகளி
லும் உங்களுக்குக் கற்பித்தேன். 21தங்கள் இருத
யங்களை மாற்றி, தேவனுக்கு நேராகத் திரும்
பும்படி, யூதரும் கிரேக்கருமாகிய எல்லா
மக்களுக்கும் நான் கூறினேன். நமது கர்த்தரா
கிய இயேசுவில் நம்பிக்கை வைக்குமாறு
அவர்கள் எல்லோருக்கும் சொன்னேன்.
22ஆனால் இப்போது பரிசுத்த ஆவியானவருக்
குக் கீழ்ப்படிந்து எருசேலேமுக்கு நான் போக
வேண்டும். எனக்கு அங்கு என்ன நேரு
மென்று எனக்குத் தெரியாது. 23துன்பமும்

**கர்த்தரின் திருவிருந்து**. இயேசு தன் சீஷர்களுக்குத் தன்னை நினைவுகொள்வதற்காகக் கொடுத்த உணவு. லூக்கா 22:14-20.

**பெந்தெகோஸ்து** கோதுமை அறுவடை நாளை யூதர்கள் விழாவாகக் கொண்டாடுவர்.

சிறையும் எருசலேமில் எனக்காக காத்திருப்
பதை பரிசுத்த ஆவியானவர் ஒவ்வொரு நகரி
லும் கூறுவதை மட்டும் அறிவேன். [24]நான்
எனது உயிரைப் பொருட்படுத்தவில்லை.
நான் பந்தயத்தை முடிக்கிறேன் என்பதும்
தேவனுடைய கிருபையைப் பற்றிய நற்செய்
தியை மக்களுக்குச் சொல்லுமாறு கர்த்தரா
கிய இயேசு எனக்குக் கொடுத்த வேலையை
முடிக்கிறேன் என்பதும் முக்கியமானவை.
[25]“இப்போது நான் சொல்வதைக் கேளுங்
கள். என்னை உங்களில் ஒருவரும் திரும்பவும்
பார்க்கமாட்டீர்கள் என்பது எனக்குத் தெரி
யும். தேவனுடைய இராஜ்யத்தைப் பற்றிய
நற்செய்தியை நான் உங்களோடிருந்தபோதெல்
லாம் உங்களுக்குக் கூறினேன். [26]எனவே நான்
உறுதியாயிருக்கிற ஒன்றைக் குறித்து இன்று
உங்களுக்குக் கூற முடியும். உங்களில் சிலர்
இரட்சிக்கப்படாவிட்டால் தேவன் என்னைக்
குற்றம் சாட்டமாட்டார். [27]நீங்கள் அறிந்து
கொள்ளவேண்டுமென தேவன் விரும்பிய
அனைத்தையும் உங்களுக்குக் கூறினேன்.
எதையும் விட்டு வைக்கவில்லை என்பதால்
இதை நான் சொல்ல முடிகிறது. [28]உங்களுக்
காகவும் தேவன் உங்களுக்குத் தந்த எல்லா
மக்களுக்காகவும் எச்சரிக்கையாக இருங்கள்.
அவரது மந்தையைக் கவனிக்கும் வேலையை
பரிசுத்த ஆவியானவர் உங்களுக்குக் கொடுத்
திருக்கிறார். தேவனின் சபைக்கு நீங்கள்
மேய்ப்பர்களைப்போல் இருக்க வேண்டும்.
தேவன் தமது சொந்த இரத்தத்தால் வாங்கிய
சபை இது. [29]நான் பிரிந்த பின் உங்கள்
குழுவில் சில மனிதர்கள் வருவார்கள் என்
பதை அறிவேன். அவர்கள் கொடிய ஓநாய்
களைப் போல் இருப்பார்கள். அவர்கள் மந்தை
யை (கூட்டத்தை) அழிக்க முயல்வர். [30]மேலும்
உங்கள் சொந்தக் குழுவின் மனிதர்களும்
மோசமான தலைவராக மாறுவர். அவர்கள்
தவறான போதனைகளைப் போதிக்கத் தொ
டங்குவர். உண்மையை விட்டு விலகி இயேசு
வின் சீஷர்கள் சிலரைத் தம்மைப் பின்பற்று
மாறு செய்வார்கள். [31]எனவே எச்சரிக்கை
யாக இருங்கள்! எப்போதும் இதை நினைவு
கூருங்கள். நான் உங்களோடு மூன்று ஆண்டு
கள் இருந்தேன். இக்காலத்தில் நான் உங்களை
எச்சரிப்பதை நிறுத்தவில்லை. நான் இரவும்
பகலும் உங்களுக்கு உபதேசித்தேன். நான்
அடிக்கடி உங்களுக்காக அழுதேன்.
[32]“நான் இப்போது உங்களை தேவனுக்கு
நியமம் செய்கிறேன். உங்களைப் பலப்படுத்தக்
கூடிய தேவனுடைய கிருபையைப் பற்றிய
தேவனுடைய செய்தியைச் சார்ந்திருக்கிறேன்.
தேவன் தனது பரிசுத்த மக்கள் எல்லோருக்கும்
கொடுக்கும் ஆசீர்வாதத்தை இந்தச் செய்தி
உங்களுக்குக் கொடுக்கும். [33]நான் உங்களோ
டிருந்தபோது, பிறருடைய பணத்தையோ
விலை உயர்ந்த ஆடைகளையோ விரும்
பவில்லை. [34]எனது தேவைகளைப் பூர்த்தி
செய்து கொள்வதற்கும், என்னோடிருந்த மக்க
ளின் தேவைகளுக்காகவும் எனது கைகளைக்
கொண்டே நான் எப்போதும் உழைத்தேன்
என்பது உங்களுக்குத் தெரியும். [35]நான் செய்
ததைப் போலவே நீங்களும் உழைத்து எளிய
மக்களுக்கு உதவவேண்டுமென எப்போதும்
உங்களுக்குச் சுட்டிக் காட்டினேன். கர்த்தராகிய
இயேசுவின் வார்த்தைகளை நினைவு கூரு
வதற்கு உங்களுக்குக் கற்பித்தேன். ‘நீங்கள்
ஒன்றைப் பெறும் வேளையைக் காட்டிலும்
பிறருக்குக் கொடுக்கும்போதே மகிழ்ச்சியாக
இருங்கள்’ என்று இயேசு கூறினார்” என்
றான்.
[36]இவ்விஷயங்களைக் கூறி முடித்த பின்னர்,
பவுல் எல்லோருடனும் முழங்காலிட்டு பிரார்த்
தனை செய்தான். [37-38]அங்கு அழுகின்ற பெரும்
சத்தம் இருந்தது. பவுல் மீண்டும், அவர்கள்
தன்னைப் பார்க்கமாட்டார்கள் என்று கூறிய
தால் அம்மனிதர்கள், மிகவும் வருத்தமுடனிருந்
தார்கள். அவர்கள் பவுலைக் கட்டிக்கொண்டு,
முத்தம் கொடுத்தனர். அவனை வழியனுப்புவ
தற்காக அவனோடு கப்பல்வரைக்கும் சென்
றனர்.

### பவுல் எருசலேமுக்குப் போகிறான்

21 நாங்கள் அனைவரும் மூப்பர்களிடமி
ருந்து விடைபெற்றோம். பின் கடற்பய
ணம் துவங்கினோம். நேராகக் கோஸ் தீவிற்
குச் சென்றோம். மறுநாள் ரோது தீவிற்குச்
சென்றோம். ரோதுவிலிருந்து நாங்கள் பத்தா
ராவுக்குப் போனோம். [2]சீப்புரு பகுதிக்குப்
போய்க்கொண்டிருந்த கப்பல் ஒன்றை பத்தாரா
வில் கண்டோம். நாங்கள் அக்கப்பலில் ஏறி,
கடலில் பயணப்பட்டோம். [3]சீப்புரு தீவினருகே
நாங்கள் கடற்பயணம் செய்தோம். வடதிசை
யில் நாங்கள் அதைப்பார்க்க முடிந்தது.
ஆனால் நாங்கள் அங்கு நிற்கவில்லை. நாங்
கள் சிரியா நாட்டிற்கு பயணமானோம். தீரு
நகரத்தில் சில சரக்குகளை இறக்கும் பொருட்டு
கப்பல் நிறுத்தப்பட்டது. [4]தீருவில் சீஷர்கள்
சிலரைக் கண்டோம். அவர்களோடு ஏழு நாட்
கள் தங்கியிருந்தோம். பரிசுத்த ஆவியானவர்
அவர்களுக்குக் கூறியதின்படி, அவர்கள்
பவுலை எருசலேமுக்குப் போகாதபடி எச்ச
ரித்தனர். [5]ஆனால் எங்கள் சந்திப்பிற்குப் பின்
நாங்கள் புறப்பட்டோம். எங்கள் பயணத்தைத்
தொடர்ந்தோம். இயேசுவின் சீஷர்கள் எல்லோ
ரும், பெண்களும், குழந்தைகளும் கூட எங்க
ளோடு நகருக்கு வெளியே வந்து எங்களுக்கு
விடை கொடுக்க வந்தனர். கடற்கரையில் நாங்
கள் முழங்காலிட்டு பிரார்த்தனை செய்தோம்.
[6]பின் நாங்கள் விடைபெற்று கப்பலில் ஏறி
னோம். சீஷர்கள் வீட்டிற்குச் சென்றனர்.
[7]தீருவிலிருந்து நாங்கள் எங்கள் பயணத்
தைத் தொடர்ந்து பித்தொலோமாய் நகருக்குச்
சென்றோம். அங்கு நாங்கள் சகோதரர்களை
வாழ்த்தினோம், அவர்களோடு ஒருநாள் தங்கி

யிருந்தோம். [8]மறுநாள் நாங்கள் பித்தொலோ
மாயை விட்டுப் புறப்பட்டு செசரியா நகரத்
திற்குப் போனோம். நாங்கள் பிலிப்புவின்
வீட்டிற்குச் சென்று, அவனோடு தங்கினோம்.
நற்செய்தியைக் கூறும் வேலையைப் பிலிப்பு
செய்து வந்தான். ஏழு உதவியாளரில் அவ
னும் ஒருவன். [9]அவனுக்குத் திருமணமாகாத
நான்கு பெண்கள் இருந்தனர். தீர்க்கதரிசனம்
சொல்லும் வரம் அப்பெண்களுக்கு இருந்தது.
[10]பல நாட்கள் நாங்கள் அங்கிருந்த பிறகு
அகபு என்னும் தீர்க்கதரிசி யூதேயாவிலிருந்து
வந்தான். [11]அவன் எங்களிடம் வந்து பவுலின்
கச்சையை* வாங்கினான். பின்பு அகபு அக்கச்
சையால் தனது கைகளையும் கால்களையும்
கட்டினான். அகபு, "இக்கச்சையைக் கட்டுகிற
மனிதனை இவ்வாறே எருசலேமில் யூதர்கள்
கட்டுவார்கள். பின் அவனை யூதரல்லாத மனி
தரிடம் ஒப்படைப்பார்கள் என்று பரிசுத்த
ஆவியானவர் எனக்குக் கூறுகிறார்" என்
றான்.

[12]நாங்கள் எல்லோரும் இந்த வார்த்தை
களைக் கேட்டோம். எனவே நாங்களும் இயேசு
வின் உள்ளூர் சீஷர்களும் எருசலேமுக்குப்
போக வேண்டாமென்று பவுலைக் கெஞ்சி
னோம்.

[13]ஆனால் பவுல், "ஏன் நீங்கள் அழுது
கொண்டிருக்கிறீர்கள்? ஏன் என்னை இத்
தனை கவலை கொள்ளச் செய்கிறீர்கள்? நான்
எருசலேமில் கட்டப்படுவதற்குத் தயாராக
இருக்கிறேன். கர்த்தராகிய இயேசுவின் நாமத்
திற்காக இறப்பதற்கும் நான் தயாராக உள்
ளேன்" என்றான்.

[14]பவுலை வற்புறுத்தி அவனை எருசலே
முக்கு போகாதிருக்கச் செய்ய எங்களால்
இயலவில்லை. எனவே அவனை வேண்டு
வதை நாங்கள் நிறுத்திவிட்டு, "கர்த்தர் விரும்
புவது நடக்கட்டும் என்று நாங்கள் பிரார்த்
தனை செய்கிறோம்" என்றோம். [15]இதன் பிறகு
நாங்கள் தயாராகி எருசலேமுக்குப் புறப்பட்
டோம். [16]செசரியாவிலுள்ள சீஷர்களில் சிலர்
எங்களோடு சென்றனர். இந்தச் சீஷர்கள் செச
ரியாவிலிருந்த எங்களை சீப்புருவிலிருந்து
வந்த மினாசோனின் வீட்டிற்கு அழைத்துச்
சென்றனர். முதன்முதலாக இயேசுவின் சீஷர்
களாக மாறியவர்களில் இந்த மினாசோனும்
ஒருவன். நாங்கள் அவனோடு தங்கும்படியாக
அவர்கள் எங்களை அவனது வீட்டிற்கு
அழைத்துச் சென்றனர்.

### பவுல் யாக்கோபைச் சந்தித்தல்

[17]எருசலேமிலே விசுவாசிகள் எங்களைக்
கண்டு, சந்தோஷம் அடைந்தனர். [18]மறுநாள்
பவுல் யாக்கோபைக் காண எங்களோடு வந்
தான். எல்லா மூப்பர்களும் அங்கிருந்தனர்.
[19]பவுல் அவர்கள் எல்லோரையும் வாழ்த்
தினான். யூதரல்லாத மக்கள் மத்தியில் பல
காரியங்களைச் செய்வதற்குத் தேவன்
அவனை எவ்வாறு பயன்படுத்தினார் என்
பதை அவன் அவர்களுக்குக் கூறினான்.
தேவன் அவன் மூலமாகச் செய்தவற்றையெல்
லாம் அவன் அவர்களுக்குச் சொன்னான்.
[20]மூப்பர்கள் இவற்றைக் கேட்டபோது, அவர்
கள் தேவனை வாழ்த்தினர். பின் அவர்கள்
பவுலை நோக்கி, "சகோதரரே, ஆயிரக்கணக்
கான யூதர்கள் விசுவாசிகளாக மாறியதை
நீங்கள் பார்க்க முடிகிறது. ஆனால் அவர்கள்
மோசேயின் சட்டங்களுக்குக் கீழ்ப்படிவதை
முக்கியமானதாக நினைக்கிறார்கள். [21]உங்கள்
போதனையைக் குறித்து இந்த யூதர்கள் கேள்
விப்பட்டிருக்கிறார்கள். யூதர்கள் அவர்கள்
பிள்ளைகளுக்கு விருத்தசேதனம் செய்ய
வேண்டாமென்றும், யூத வழக்கங்களுக்குக்
கீழ்ப்படியவேண்டாம் எனவும் நீர் கூறுவதைக்
கேட்டிருக்கிறார்கள். [22]நாங்கள் என்ன செய்
வோம்? நீர் வந்திருப்பதை இங்குள்ள யூத
விசுவாசிகள் அறிந்து கொள்வர். [23]எனவே
நீங்கள் செய்யவேண்டியதை நாங்கள் உங்க
ளுக்குக் கூறுகிறோம். எங்களுடனிருப்போரில்
நான்கு பேர் தேவனுக்கு ஒரு வாக்குறுதி
அளித்துள்ளனர். [24]இம்மனிதர்களை உங்க
ளோடு அழைத்துச்சென்று அவர்களின் தூய்
மைப்படுத்தும் சடங்கில் பங்கு பெறுங்கள்.
அவர்கள் செலவை ஏற்றுக்கொள்ளுங்கள்.
எனவே அவர்கள் தங்கள் தலைமுடியை
சிரைத்துக்கொள்ள* முடியும். இதைச் செய்யுங்
கள். உங்களைப்பற்றி அவர்கள் கேள்விப்பட்ட
விஷயங்கள் பொய்யானவை என்று அது
எல்லோருக்கும் நிரூபித்துக் காட்டும். உங்கள்
சொந்த வாழ்க்கையில் மோசேயின் சட்டத்திற்
குக் கீழ்ப்படிகிறீர்கள் என்பதை அவர்கள்
காண்பார்கள். [25]யூதரல்லாத விசுவாசிகளுக்கு
நாங்கள் ஏற்கெனவே ஒரு கடிதம் அனுப்பி
யுள்ளோம். அக்கடிதம்,

> 'விக்கிரகங்களுக்கு கொடுக்கப்பட்ட உணவை உண்ணாதீர்கள். இரத்தத்தை ருசிக்காதீர்கள், நெரித்துக் கொல்லப்பட்ட மிருகங்களை உண்ணாதீர்கள், பாலியல் தொடர்பான பாவங்களைச் செய்யாதீர்கள்'

என்று கூறிற்று" என்றார்கள்.

[26]பின்பு பவுல் அந்த நான்கு மனிதர்களை
யும் அவனோடு அழைத்துச் சென்றான்.
மறுநாள் பவுல் தூய்மைப்படுத்தும் சடங்கில்
பங்கேற்றான். பின் அவன் தேவாலயத்துக்குச்
சென்றான். தூய்மைப்படுத்தும் சடங்கு முடிய
வேண்டிய காலத்தைப் பவுல் பிறருக்கு அறி
வித்தான். கடைசி நாளில் ஒவ்வொரு மனித

---

***கச்சை*** பவுலின் கச்சை. அகபு எருசலேமில் உள்ள யூதர்கள் பவுலைக் கைது செய்வார்கள் என்று தீர்க்கதரிசனம் கூறினான்.

***தலைமுடியைச் சிரைத்துக் கொள்ள*** தங்கள் பொருத்தனை முடிந்துவிட்டதைக் காட்டும் அடையாளம்.

னுக்காகவும் ஒரு காணிக்கை கொடுக்கப்படும்.
27ஏழு நாட்களும் முடிவடையும் காலம்
நெருங்கிக் கொண்டிருந்தது. ஆசியாவிலுள்ள
யூதர்களில் சிலர் பவுலைத் தேவாலயத்தில்
கண்டனர். அவர்கள் எல்லா மக்களிடமும்
குழப்பம் விளைவித்தனர். அவர்கள் பவு
லைப் பிடித்தனர். 28அவர்கள் உரக்க, "யூத
மனிதரே, எங்களுக்கு உதவுங்கள்! மோசேயின்
சட்டத்தை எதிர்க்கவும் நம் மக்களுக்கும் தேவா
லயத்துக்கும் எதிராகவும் பலவற்றையும் கற்
பிக்கின்ற மனிதன் இவன்தான். இம்மனிதன்
எல்லா இடங்களிலுமுள்ள எல்லா மனிதருக்
கும் இவ்விஷயங்களை உபதேசிக்கின்றான்.
இப்போது தேவாலயத்துக்கு உள்ளே சில
கிரேக்க மக்களை அழைத்துக்கொண்டு வந்தி
ருக்கிறான். இத்தூய ஸ்தலத்தைத் தூய்மையி
ழக்கச் செய்திருக்கிறான்!" என்றார்கள். 29பவு
லோடு துரோப்பீமுவை எருசலேமில் பார்த்
ததால் யூதர்கள் இதைச் சொன்னார்கள். எபே
சுவிலுள்ள துரோப்பீமு ஒரு கிரேக்கன். பவுல்
அவனைத் தேவாலயத்துக்குள் அழைத்துச்
சென்றான் என்று யூதர்கள் எண்ணினர்.

30எருசலேமின் எல்லா மக்களும் நிலை
குலைந்தார்கள். அவர்கள் எல்லோரும் ஓடிப்
பவுலைப் பிடித்தனர். தேவாலயத்துக்கு வெ
ளியே அவனை இழுத்து வந்தனர். உடனே
கதவுகள் மூடப்பட்டன. 31மக்கள் பவுலைக்
கொல்ல முயற்சித்தனர். எருசலேமிலுள்ள
ரோமப் படை அதிகாரி நகரம் முழுவதும்
தொல்லை அடைந்துள்ளது என்ற செய்
தியைப் பெற்றான். 32உடனே அவன் மக்கள்
கூடியிருந்த இடத்திற்கு ஓடினான். அவன் வீரர்
களையும் படை அதிகாரிகளையும் தன்னுடன்
அழைத்து வந்தான். மக்கள் அதிகாரிகளையும்
வீரர்களையும் கண்டனர். எனவே பவுலை
அடிப்பதை நிறுத்தினர். 33அதிகாரி பவுலிடம்
சென்று அவனைக் கைது செய்தான். இரண்டு
விலங்குகளால் பவுலைக் கட்டுமாறு அதிகாரி
வீரர்களுக்குக் கட்டளையிட்டான். பின் அதி
காரி, "இம்மனிதன் யார்? இவன் செய்த தவறு
என்ன?" என்று கேட்டான். 34அங்கிருந்தோரில்
சிலர் ஒன்றைக் கூக்குரலிடவும் பிறர் வேறொன்
றைக் கூக்குரலிடவும் செய்தனர். குழப்பமாக
வும், கூச்சலாகவும் இருந்தமையால் அதிகாரி
நடந்த உண்மையை அறிந்து கொள்ள முடிய
வில்லை. எனவே அதிகாரி வீரர்களிடம் பவு
லைப் படைக்கூடத்துக்கு அழைத்துக் கொண்டு
செல்லுமாறு கூறினான். 35-36எல்லா மக்களும்
அவர்களைப் பின்தொடர்ந்தனர். வீரர்கள் படி
களினருகே வந்தபோது, அவர்கள் பவுலைச்
சுமக்க வேண்டியதாயிற்று. மக்கள் அவனைக்
காயப்படுத்த முனைந்ததால் அவனது பாது
காப்பிற்காக அவர்கள் இவ்வாறு செய்தனர்.
மக்கள் உரக்க, "அவனைக் கொல்லுங்கள்"
என்று கத்தினர்.

37வீரர்கள் பவுலைப் படைக்கூடத்திற்குள்
கொண்டுசெல்லத் தயாராயினர். ஆனால் பவுல்
அதிகாரியிடம் பேசினான். பவுல், "நான் உங்
களோடு சிலவற்றைப் பேசலாமா?" என்று
கேட்டான். அதிகாரி, "நீ கிரேக்க மொழி பேசுகி
றாயா?

38அப்படியானால் நான் நினைத்தது
போன்ற மனிதன் அல்ல நீ. சமீபத்தில் அரசுக்கு
எதிராகத் தொல்லை ஏற்படுத்திய எகிப்திய
மனிதன் என்று நான் எண்ணினேன். எகிப்
திய மனிதன் நாலாயிரம் கொலையாளிகளை
பாலைவனத்திற்குக் கூட்டிச் சென்றான்" என்
றான்.

39பவுல், "இல்லை நான் தர்சுவைச் சேர்ந்த
யூத மனிதன். தர்சு சிலிசியா நாட்டில் உள்ளது.
அம்முக்கியமான நகரின் குடிமகன் நான்.
தயவுசெய்து நான் மக்களிடம் பேச அனு
மதியுங்கள்" என்றான். 40பவுல் மக்களிடம்
பேச அதிகாரி அனுமதித்தான். எனவே பவுல்
படிகளில் ஏறி நின்றான். மக்கள் அமைதியாக
இருக்கும்படியாக கைகளால் சைகை செய்
தான். மக்கள் அமைதியடைந்ததும் பவுல்
அவர்களோடு பேசினான். அவன் யூத மொழி
யைப்* பயன்படுத்தினான்.

### பவுல் மக்களோடு பேசுகிறான்

22 பவுல், "எனது சகோதரர்களே! தந்தை
யரே! நான் கூறுவதைக் கேளுங்கள்.
நான் என் சார்பான நியாயங்களை உங்கள்
முன்வைக்கிறேன்." என்றான். 2பவுல் யூத மொ
ழியில் பேசுவதை யூதர்கள் கேட்டார்கள்.
எனவே அவர்கள் மேலும் அமைதியாயினர்.
பவுல், 3"நான் ஒரு யூதன். நான் சிலிசியா
நாட்டிலுள்ள தர்சுவில் பிறந்தவன். இந்நகரில்
(எருசலேமில்) வளர்ந்தவன். நான் கமாலியே
லின்* மாணவன். நமது முன்னோரின் சட்டங்
களை அவர் எனக்கு மிக நம்பிக்கையுடன்
போதித்தார். நான் தேவனுடைய சேவையில்,
நீங்கள் எல்லோரும் இப்போது இருப்பதைப்
போல், முனைந்து நின்றேன். 4இயேசுவின்
வழியைப் பின்பற்றிய மக்களைத் தண்டித்
தேன். அவர்களில் சிலர் என் நிமித்தமாகக்
கொல்லப்பட்டனர். நான் ஆண்களையும் பெண்
களையும் கைது செய்தேன். அவர்களை சிறை
யில் வைத்தேன். 5தலைமை ஆசாரியரும்
முதிய யூதர்களின் சங்கமும் இது உண்மை
என்பதை உங்களுக்குக் கூற முடியும்! ஒரு
முறை இந்த அதிகாரிகள் என்னிடம் சில
கடிதங்களைக் கொடுத்தனர். அக்கடிதங்கள்
தமஸ்குவிலுள்ள யூத சகோதரர்களுக்கு முக
வரி இடப்பட்டிருந்தன. நான் அங்கு இயேசு
வின் சீஷர்களைக் கைது செய்வதற்கும் தண்ட
னைக்காக அவர்களை எருசலேமுக்குக்
கொண்டுவரவும் போய்க் கொண்டிருந்தேன்.

---

**யூதமொழி** பொதுவாக இது அரமேய மொழி. எபிரேயு மொழி போன்றது.

**கமாலியேல்** பரிசேயர்களின் மிக முக்கியமான ஆசிரியர். யூதமத குரு அப். 5:34.

### பவுலின் சாட்சி

6“ஆனால் தமஸ்குவிற்கு நான் செல்லும்
வழியில் ஏதோ ஒன்று எனக்கு நிகழ்ந்தது.
நான் தமஸ்குவை நெருங்கிக் கொண்டிருந்த
போது அது நண்பகல் நேரம். தீடீரென்று
என்னைச் சுற்றிலும் வானிலிருந்து மிகுந்த
ஒளி பிரகாசித்தது. 7நான் தரையில் வீழ்ந்தேன்.
ஒரு குரல் என்னிடம், ‘சவுலே, சவுலே, நீ
ஏன் எனக்கு இத்தீய காரியங்களைச் செய்கின்
றாய்?’ என்றது. 8நான், ‘ஆண்டவரே நீர் யார்?’
என்று கேட்டேன், அக்குரல், ‘நான் நாசரேத்
தின் இயேசு. நீ கொடுமைப்படுத்துகிறவன்
நானே’ என்றது. 9என்னோடிருந்த மனிதர்கள்
அக்குரலைக் கேட்கவில்லை. ஆனால் அம்மனி
தர்கள் ஒளியைக் கண்டார்கள்.

10நான், ‘ஆண்டவரே, நான் என்ன செய்
யட்டும்?’ என்றேன். கர்த்தராகிய இயேசு பதி
லாக, ‘எழுந்து தமஸ்குவுக்குள் போ, நீ செய்ய
வேண்டுமென நான் திட்டமிட்டுள்ள அனைத்
தையும் குறித்து அங்கே உனக்கு அறிவிக்
கப்படும்’ என்றார். 11என்னால் பார்க்கமுடியா
தபடிக்கு, அப்பிரகாசமான ஒளி என்னைக்
குருடாக்கிற்று. எனவே என் மனிதர்கள் என்
னைத் தமஸ்குவுக்கு வழி நடத்தினார்கள்.
12தமஸ்குவில் அனனியா* என்னும் பெய
ருள்ள மனிதன் என்னிடம் வந்தான்.
அனனியா பக்திமான். அவன் மோசேயின்
சட்டங்களுக்கு கீழ்ப்படிந்தவன். அங்கு வாழ்ந்த
யூதர்கள் அனைவரும் அவனை மதித்தனர்.
13அனனியா என் அருகில் வந்து, ‘சகோதரனா
கிய சவுலே, மீண்டும் பார்ப்பாயாக’ என்றான்.
உடனே என்னால் பார்க்க முடிந்தது. 14அன
னியா என்னிடம், ‘நமது முன்னோர்களின்
தேவன் அவரது திட்டத்தைத் தெரிந்து கொள்
வதற்கு உன்னைத் தேர்ந்தெடுத்தார். நேர்மை
யானவரைக் (இயேசுவை) கண்டு அவரது
வார்த்தைகளை அவரிடமிருந்து கேட்பதற்காக
அவர் உன்னைத் தெரிந்து கொண்டார்.
15எல்லா மக்களுக்கும் நீ அவரது சாட்சியாக
இருப்பாய். நீ பார்த்ததையும் கேட்டதையும் நீ
மனிதருக்குக் கூறுவாய். 16இப்போது இன்னும்
காத்திராமல் எழுந்திரு. ஞானஸ்நானம் பெற்
றுக்கொள். உன் பாவங்கள் நீங்கக் கழுவப்படு.
உன்னை இரட்சிப்பதற்காக இயேசுவின் மீது
விசுவாசம் கொண்டு இதனைச் செய்’ என்
றான். 17பிற்பாடு நான் எருசலேமுக்குத்
திரும்பி வந்தேன். நான் தேவாலய முற்றத்தில்
பிரார்த்தனை செய்துகொண்டிருந்தபோது ஒரு
காட்சியைக் கண்டேன். 18நான் இயேசுவைக்
கண்டேன். இயேசு என்னிடம், ‘விரைவாகச்
செயல்படு. இப்போதே எருசலேமை விட்டு
செல். இங்குள்ள மக்கள் என்னைப்பற்றிய
உனது சாட்சியை ஏற்றுக்கொள்ளமாட்டார்
கள்’ என்றார். 19நான், ‘ஆனால் கர்த்தாவே,
நான் விசுவாசிகளைச் சிறையில் அடைத்தும்
அவர்களை அடித்துத் துன்புறுத்தியவனுமா
யிருந்தேன். என்பதை மக்கள் அறிவர். உங்
களிடம் நம்பிக்கை வைத்த மக்களைத் தேடி
யூத ஜெப ஆலயங்களுக்கெல்லாம் சென்றேன்.
20உங்கள் சாட்சியாக ஸ்தேவான் கொல்லப்
பட்டபோது நான் அங்கிருந்ததையும் மக்கள்
அறிவர். நான் அங்கு நின்று ஸ்தேவான்
கொல்லப்பட வேண்டுமென ஆமோதித்தேன்.
அவனைக் கொன்று கொண்டிருந்த மனிதர்
களின் அங்கிகளையும் வைத்திருந்தேன்!’ என்
றேன். 21ஆனால் பின்னர் இயேசு என்னை
நோக்கி, ‘இப்போது புறப்பட்டுச் செல். நான்
உன்னைத் தூர இடங்களுக்கு யூதரல்லாத மக்
களிடம் அனுப்புவேன்’ என்றார்” என்றான்.
22யூதரல்லாத மக்களிடம் செல்வதைப் பற்றிய
இக்கடைசி வார்த்தைகளைப் பவுல் கூறிய
போது, மக்கள் கவனிப்பதை நிறுத்தினர்.
அவர்கள் எல்லோரும் உரக்க, “அவனைக்
கொல்லுங்கள். உலகத்திலிருந்து அவனை
ஒழித்துக்கட்டுங்கள். இப்படிப்பட்ட ஒரு மனி
தனை உயிர்வாழ விடக்கூடாது” என்றனர்.
23அவர்கள் கூக்குரலிட்டு தங்கள் அங்கிகளைக்
கழற்றி வீசினர். அவர்கள் புழுதியை அள்ளி
வானத்தில் வீசினர்.* 24அப்போது அதிகாரி
பவுலைப் படைக்கூடத்திற்கு அழைத்துச் செல்
லுமாறு கட்டளையிட்டான். பவுலை அடிக்கு
மாறு வீரர்களுக்கு கூறினான். அவனுக்கு எதி
ராக மக்கள் கூக்குரலிடுவதன் காரணத்தைப்
பவுல் கூறவேண்டுமென்று விரும்பினான்.
25எனவே வீரர்கள் பவுலை அடிப்பதற்கு
முயலத் துவங்கினர். ஆனால் பவுல் அங்
கிருந்த படை அதிகாரியை நோக்கி, “தவறு
செய்ததாக நிரூபிக்கப்படாத ஒரு ரோமக்
குடிமகனை அடிக்கும் உரிமை உங்களுக்கு
உண்டா?” என்று கேட்டான்.

26அதிகாரி இதைக் கேட்டபோது, கட்டளை
யிடுபவனிடம் சென்று இதைக் குறித்துப் பேசி
னான். அவன், “நீ செய்வது என்னவென்று
உனக்குத் தெரியுமா? இம்மனிதன் ஒரு ரோமக்
குடிமகன்!” என்றான்.

27அதிகாரி பவுலிடம் வந்து, “சொல், நீ
உண்மையாகவே ரோமக் குடிமகனா?” என்று
கேட்டான்.

பவுல் “ஆம்” என்றான்.

28அதிகாரி, “நான் ரோமக் குடிமகன் ஆவ
தற்கு மிகுந்த பணம் செலுத்தவேண்டியதா
யிற்று” என்றான்.

ஆனால் பவுல், “நான் பிறப்பால் குடிமகன்”
என்றான். 29பவுலைக் கேள்விக் கேட்பதற்கு
அவனைத் தயார் செய்து கொண்டிருந்த மனி
தர்கள் உடனே அவனை விட்டு விலகினர்.
ரோமக் குடிமகனான பவுலைக் கட்டியதால்
அதிகாரி பயந்தான்.

---

***அனனியா*** *அப்போஸ்தலர் நடபடிகளில் மூன்று பேர் இதே பெயரில் உள்ளனர். அப். 5:1; 23:2.*

***புழுதியை அள்ளி வானத்தில் வீசினர்.*** *இம்முறையில் அவர்கள் தமது கோபத்தைக் காட்டினர்.*

### பவுலும் – யூதத்தலைவர்களும்

30மறுநாள் யூதர்கள் பவுலுக்கு எதிராகப்
பேசும் உறுதியான காரணத்தைக் கண்டறிய
அந்த அதிகாரி முடிவு செய்தான். எனவே
தலைமை ஆசாரியரையும் யூதர்களையும்
அழைத்து பவுலின் விலங்குகளைக் கழற்றக்
கட்டளையிட்டான். பின் பவுலை வெளியே
அழைத்து வந்து, அக்கூட்டத்தின் முன்பாக
நிறுத்தினான்.

23 யூத சங்கக் கூட்டத்தினரைப் பார்த்துப்
பவுல், "சகோதரர்களே! தேவனுக்கு
முன்பாக நல்ல வகையில் என் வாழ்க்கையை
வாழ்ந்திருக்கிறேன். சரியென்று நான் நினைத்
ததையே எப்போதும் செய்து கொண்டிருக்
கிறேன்" என்றான். 2தலைமை ஆசாரியனான
அனனியா அங்கிருந்தான். பவுல் கூறுவதைக்
கேட்ட அனனியா, பவுலின் அருகே நின்ற
மனிதரை நோக்கிப் பவுலின் வாயில் அடிக்
குமாறு கூறினான். 3பவுல் அனனியாவைப்
பார்த்து, "தேவன் உன்னையும் அடிப்பார்!
அழுக்கான சுவர் வெள்ளையடிக்கப்பட்டது
போன்று நீ காணப்படுகிறாய்! நீ அங்கு
அமர்ந்து மோசேயின் சட்டப்படி என்னை
நியாயந்தீர்க்கிறாய். ஆனால் என்னை அடிக்கு
மாறு அவர்களிடம் கூறிக்கொண்டிருக்கிறாய்.
அது மோசேயின் சட்டத்திற்கு எதிரானது"
என்றான்.

4பவுலின் அருகில் நின்றிருந்த மனிதர்கள்
அவனை நோக்கி, "தேவனுடைய தலைமை
ஆசாரியனிடம் நீ இவ்வாறு பேசக்கூடாது. நீ
அவரை அவமானப்படுத்திக் கொண்டிருக்கி
றாய்!" என்றனர்.

5பவுல், "சகோதரர்களே, இம்மனிதன்
தலைமை ஆசாரியன் என்பது எனக்குத் தெரி
யாது. வேதவாக்கியங்களில் இவ்வாறு கூறப்
பட்டுள்ளது, 'உன் மக்களின் தலைவர்களைக்
குறித்து தீயவற்றைக் கூறலாகாது'* என்று
எழுதப்பட்டுள்ளது" என்றான்.

6அக்கூட்டத்தில் சிலர் சதுசேயராகவும்,
சிலர் பரிசேயராகவும் இருந்தார்கள். எனவே
பவுலுக்கு ஒரு யோசனை ஏற்பட்டது. அவன்
அவர்களிடம் உரக்க, "எனது சகோதரரே,
நான் ஒரு பரிசேயன். எனது தந்தையும் ஒரு
பரிசேயர். மரணத்திலிருந்து மக்கள் எழுவர்
என்று நான் நம்புவதால் என்னை இங்கு
நியாயந்தீர்க்கின்றனர்!" என்றான். 7பவுல்
இதைக் கூறியதும், சதுசேயருக்கும் பரிசேய
ருக்கும் பெரும் வாக்குவாதம் ஏற்பட்டது.
குழுவில் ஒரு பிரிவினை ஏற்பட்டது. 8(மக்கள்
இறந்தபிறகு, மீண்டும் வாழ இயலாது என்று
சதுசேயர் நம்புகிறார்கள். தேவதூதர்களோ,
ஆவிகளோ இருப்பதில்லை என்று சதுசேயர்
கள் போதிக்கிறார்கள். ஆனால் பரிசேயர்கள்
இவற்றையெல்லாம் நம்புகிறார்கள்.) 9எல்லா
யூதர்களும் உரக்கச் சத்தமிட ஆரம்பித்தனர்.
பரிசேயரான சில வேதபாரகர்கள் எழுந்து
நின்று, இவ்வாறு விவாதித்தனர், "நாங்கள்
இந்த மனிதனிடம் எந்தக் குற்றத்தையும் காண
வில்லை. தமஸ்குவுக்கு வரும் வழியில் தேவ
தூதனோ ஆவியோ அவனோடு பேசியிருக்க
வேண்டும்!" என்றனர்.

10விவாதம் சண்டையாக மாறிற்று. யூதர்கள்
பவுலை நார் நாராகக் கிழித்து விடுவார்கள்
என்று அதிகாரி அஞ்சினான். எனவே அவன்
கீழே சென்று யூதர்களிடமிருந்து பவுலை
விலக்கி அழைத்துவந்து படைக்கூடத்தில்
வைத்திருக்குமாறு வீரர்களுக்குக் கட்டளை
யிட்டான்.

11மறுநாள் இரவு கர்த்தர் பவுலின் அருகே
வந்து நின்றார். அவர், "தைரியமாக இரு.
என்னைக் குறித்து எருசலேமின் மக்களுக்கு
நீ கூறியிருக்கிறாய். நீ ரோமுக்கும் சென்று
அங்குள்ள மக்களுக்கு என்னைக் குறித்துச்
சொல்லவேண்டும்" என்றார்.

12மறுநாள் காலையில் சில யூதர்கள் ஒரு
திட்டம் வகுத்தனர். அவர்கள் பவுலைக்
கொல்ல விரும்பினர். அவர்கள் தங்களுக்குள்
பவுலைக் கொல்லும் மட்டும் உண்பதோ,
பருகுவதோ இல்லை என்று ஒரு சபதம்
செய்து கொண்டனர். 13நாற்பது யூதர்களுக்கு
மேலாக இச்சதித்திட்டத்தை வகுத்தனர். 14இந்த
யூதர்கள் தலைமை ஆசாரியரிடமும் முதிய
யூதத் தலைவர்களிடமும் சென்று பேசினர்.
யூதர்கள், "நாங்கள் எங்களுக்குள் ஒரு சபதம்
செய்துள்ளோம். பவுலைக் கொல்லும் மட்டும்
உண்பதோ, உறங்குவதோ இல்லை என்று
தீர்மானமாக சபதம் பூண்டுள்ளோம்! 15எனவே
நாங்கள் செய்ய விரும்புவது இதுவே. நீங்க
ளும் யூதக் குழுவைச் சேர்ந்த எல்லாத் தலை
வர்களும் போர் அதிகாரிக்கு ஒரு செய்தியை
அனுப்புங்கள். பவுலை உங்களிடம் அனுப்பு
மாறு அவ்வதிகாரிக்குக் கூறுங்கள். பவுலிடம்
இன்னும் அதிகமான கேள்விகள் கேட்க விரும்
புவதாக அவ்வதிகாரிக்குச் சொல்லுங்கள்.
அவன் இங்கு வரும் வழியில் பவுலைக் கொல்
வதற்காக நாங்கள் காத்துக்கொண்டிருப்
போம்" என்றனர்.

16பவுலின் சகோதரியின் மகன் இத்திட்டத்
தைப் பற்றிக் கேள்விப்பட்டான். அவன் படைக்
கூடத்திற்குச் சென்று, இதைக் குறித்துப் பவு
லுக்குக் கூறினான். 17அப்போது பவுல் படை
அதிகாரிகளில் ஒருவரை அழைத்து அவரை
நோக்கி, "இவ்விளைஞனை அதிகாரியிடம்
அழைத்துச் செல்லுங்கள். இவன் அவருக்கு
ஒரு செய்தி சொல்ல வேண்டும்" என்றான்.
18எனவே படை அதிகாரி பவுலின் சகோதரி
யின் மகனை அதிகாரியிடம் அழைத்து வந்
தான். அதிகாரி "பவுல் என்ற கைதி இவ்
விளைஞனை உங்களிடம் அழைத்து செல்
லுமாறு கூறினான். அவன் உங்களிடம் ஏதோ
கூறவேண்டுமாம்" என்றான்.

---

**உன் ... கூறலாகாது** யாத். 22:28.

[19]அதிகாரி இளைஞனைக் கையைப்
பிடித்து தனித்த ஓரிடத்திற்கு அழைத்துச் சென்
றான். அவன் இளைஞனை நோக்கி, "நீ என்
னிடம் என்ன கூற விரும்புகிறாய்?" என்று
கேட்டான்.
[20]இளைஞன், "பவுலை நாளையச் சங்கக்
கூட்டத்திற்கு அழைத்து வரும்படியாக உங்
களைக் கேட்பதற்கு யூதர்கள் முடிவெடுத்
துள்ளனர். அவர்கள் பவுலிடம் சில விளக்கங்
களைக் கேட்கவிருப்பதாக நீங்கள் நினைக்க
வேண்டுமென விரும்புகின்றனர். [21]ஆனால்
அவர்களை நம்பாதீர்கள். 40 பேருக்கும்
மேலான யூதர்கள் ஒளிந்திருந்து பவுலைக்
கொல்லக் காத்திருப்பர். அவனைக் கொல்லும்
வரைக்கும் உண்பதோ, பருகுவதோ இல்லை
என்று அவர்கள் சபதமிட்டுள்ளனர். உங்கள்
சம்மதத்திற்காக இப்போது அவர்கள் தயா
ராகக் காத்துக்கொண்டிருக்கின்றனர்" என்
றான்.
[22]அதிகாரி இளைஞனை அனுப்பிவிட்
டான். அதிகாரி அவனை நோக்கி, "அவர்கள்
திட்டத்தை எனக்குக் கூறியதாக யாரிடமும்
சொல்லாதே" என்றான்.

### செசரியாவிற்குப் பவுல் அனுப்பப்படுதல்

[23]பின்பு அதிகாரி இரண்டு படை அதிகா
ரிகளை அழைத்தான். அவன் அவர்களை
நோக்கி, "செசரியாவுக்குப் போவதற்குச் சில
மனிதர்கள் வேண்டும். இருநூறு படை வீரர்
களை ஆயத்தப்படுத்துங்கள். எழுபது குதிரை
வீரர்களையும் இருநூறு ஈட்டியேந்திய வீரர்
களையும் தயார்படுத்துங்கள். இன்றிரவு ஒன்
பது மணிக்குப் புறப்படத் தயாராக இருங்கள்.
[24]பவுல் சவாரி செய்வதற்கும் சில குதிரை
களைப் பெறுங்கள். ஆளுநர் பெலிக்ஸிடம்
அவன் பாதுகாப்பாக அனுப்பப்பட வேண்
டும்" என்றான். [25]அதிகாரி ஒரு கடிதம் எழுதி
னான். அக்கடிதத்தின் விபரம் வருமாறு.

[26] கிளாடியஸ் லைசியஸிடமிருந்து மிக
மாட்சிமை மிக்க ஆளுநர் பெலிக்ஸ் அவர்
களுக்கு,

வாழ்த்துக்கள்.
[27]யூதர்கள் இம்மனிதனைக் கைப்பற்றி அவ
னைக் கொல்வதற்கு இருந்தார்கள். அவன்
ஒரு ரோமக் குடிமகன் என்பதை நான்
அறிந்தேன். எனவே நான் எனது வீரரோடு
சென்று அவனைக் காப்பாற்றினேன்.
[28]அவர்கள் ஏன் அவனைப் பழிக்கிறார்கள்
என்பதை அறிந்து கொள்ள விரும்பினேன்.
[29]எனவே யூதச் சங்கத்திற்கு முன்னால்
அவனைக் கொண்டு வந்தேன். இதுவே நான்
கண்டது. தவறான சில காரியங்களைப்
பவுல் செய்ததாக யூதர்கள் கூறுகிறார்கள்.
ஆனால் அந்தக் குற்றச்சாட்டுகள் அவர்களது
சொந்த யூத விதிகளைப் பற்றியது. இந்த
விஷயங்கள் எதுவும் சிறைத் தண்டனைக்
கோ மரண தண்டனைக்கோ ஏற்றவை
அல்ல. [30]சில யூதர்கள் பவுலைக் கொல்ல
திட்டமிடுகிறார்கள் என்று எனக்குச் சொல்
லப்பட்டது. எனவே, தாமதிக்காமல் நான்
அவனை உங்களிடம் அனுப்புகிறேன். அவ
னுக்கெதிரான காரியங்களை உங்களுக்கு
சொல்லுமாறு நான் அந்த யூதர்களுக்குச்
சொல்லி இருக்கிறேன் என்பதே.

[31]அவர்களுக்குச் சொல்லப்பட்ட காரியங்
களை வீரர்கள் செய்தனர். அன்றிரவு அந்தி
பத்ரி நகரத்திற்கு வீரர்கள் பவுலைக் கூட்டிச்
சென்றனர். [32]மறுநாள் குதிரை மேலிருந்த வீரர்
கள் பவுலோடு செசரியாவுக்குச் சென்றனர்.
ஆனால் மற்ற வீரர்களும் ஈட்டியேந்திய வீரர்
களும் எருசலேமிலுள்ள படைக்கூடத்துக்குத்
திரும்பினர். [33]குதிரை மேலிருந்த வீரர்கள்
செசரியாவுக்குள் நுழைந்து ஆளுநரிடம் கடிதத்
தைக் கொடுத்தனர். பின் பவுலை அவரிடம்
ஒப்படைத்தனர். [34]ஆளுநர் கடிதத்தைப் படித்
தார். பின் அவர் பவுலை நோக்கி, "நீ எந்தப்
பகுதியைச் சேர்ந்தவன்?" என்று கேட்டார்.
பவுல் சிலிசியாவைச் சேர்ந்தவன் என்பதை
ஆளுநர் அறிந்தார். [35]ஆளுநர், "உன்மீது குற்றம்
சுமத்தியவர்கள் இங்கு வரும்போது வழக்கை
விசாரிக்கிறேன்" என்றார். அரண்மனையில்
பவுலை வைத்திருக்கும் பொருட்டு ஆளுநர்
ஆணைகள் பிறப்பித்தார். (இக்கட்டிடம் ஏரோ
தால் கட்டப்பட்டது)

### யூதர்களின் குற்றச்சாட்டு

24 ஐந்து நாட்களுக்குப் பிறகு அனனியா
செசரியா நகரத்திற்கு வந்தான். அன
னியா தலைமை ஆசாரியனாய் இருந்தான்.
சில முதிய யூதத் தலைவர்களையும் தெர்த்
துல்லு என்னும் பெயருள்ள வழக்கறிஞரை
யும் அனனியா அழைத்து வந்திருந்தான். ஆளு
நர் முன்னால் பவுல் மீது வழக்கு தொடுக்கும்
பொருட்டு அவர்கள் செசரியாவுக்குச் சென்
றார்கள். [2]கூட்டத்திற்கு முன் பவுல் அழைக்கப்
பட்டான். தெர்த்துல்லு குற்றச்சாட்டுகளை
எடுத்துரைக்கத் துவங்கினான்.
தெர்த்துல்லு, "மிகக் கனம் பொருந்திய
பெலிக்ஸ் அவர்களே! உங்களால் எங்கள் மக்
கள் மிகுந்த அமைதியோடு வாழ்கிறார்கள்.
உங்கள் ஞானமான உதவியால் எங்கள் நாட்
டில் பல தவறான காரியங்கள் திருத்தப்பட்டு
வருகின்றன. [3]உங்களிடமிருந்து இவற்றைப்
பெறுவதால் மிக நன்றியுடையவர்களாக இருக்
கிறோம். எல்லா இடங்களிலும் நாங்கள் அவற்
றை ஒப்புக்கொள்கிறோம். [4]ஆனால் உங்கள்
நேரத்தை மேலும் வீணாக்க நான் விரும்ப
வில்லை. எனவே நான் சுருக்கமாகச் சொல்
கிறேன். தயவுசெய்து பொறுமையாக இருங்
கள். [5]இம்மனிதன் தொல்லைகளை ஏற்படுத்
துகிறவன். உலகமெங்குள்ள யூதர்களிடம்
அமைதியைக் குலைக்கிறான். நசரேயக் குழு

வின் தலைவன் இவன். 6மேலும் அவன்
தேவாலயத்தை நாசமாக்க முயற்சி செய்து
கொண்டிருக்கிறான். ஆனால் நாங்கள் அவ
னைத் தடுத்துவிட்டோம். 8இக்குற்றச்சாட்டுகள்
அனைத்தும் உண்மையா என்பதை நீர் முடிவு
கட்டலாம். நீரே அவனிடம் சில கேள்விகளைக்
கேளும்"* என்றான். 9பிற யூதர்களும் ஒப்புக்
கொண்டனர். அவர்கள், "இவையனைத்தும்
உண்மையே!" என்றனர்.

10பவுல் பேசுமாறு ஆளுநர் குறிப்பிட்டார்.
எனவே பவுல் பதிலாக, "ஆளுநர் பெலிக்ஸ்
அவர்களே, இந்தத் தேசத்தின் (இஸ்ரவேலின்)
நியாயாதிபதியாக, நீண்ட காலமாக நீங்கள்
இருந்து வருகிறீர்கள் என்பது எனக்குத் தெரி
யும். எனவே நான் உங்கள் முன்பு எனக்காக
வழக்காடுவதில் மகிழ்ச்சியடைகிறேன். 11பன்
னிரண்டு நாட்களுக்கு முன்புதான் நான் எருச
லேமுக்கு வழிபடச் சென்றேன். இது உண்
மையா என்று நீங்கள் தெரிந்துகொள்ளலாம்.
12என்னைப் பழிக்கிற இந்த யூதர்கள் நான்
ஆலயத்தில் யாரோடும் விவாதிப்பதைப்
பார்க்கவில்லை. நான் மக்களிடம் தொல்லை
யையும் விளைவிக்கவில்லை. ஜெப ஆலயங்
களிலோ, நகரத்தின் வேறிடங்களிலோ நான்
விவாதிக்கவோ, தொல்லை விளைவிக்கவோ
செய்யவில்லை. 13இப்போது எனக்கெதிராக
அவர்கள் கூறும் குற்றச்சாட்டுகளை அவர்கள்
நிரூபிக்க முடியாது. 14ஆனால் நான் உங்க
ளுக்கு இதைச் சொல்வேன். இயேசுவின் வழி
யைப் பின்பற்றும் சீடனாக நான் நமது முன்
னோரின் தேவனை வணங்குகிறேன். 15இந்த
யூதர்கள் தேவனிடம் கொண்டுள்ள நம்பிக்கை
அதாவது நல்லோராயினும் தீயோராயினும்
சரி எல்லா மக்களும் மரணத்தினின்று எழுப்
பப்படுவர் என்ற அதே நம்பிக்கை எனக்கும்
உள்ளது. 16எனவே தான் தேவனுக்கும் மனித
ருக்கும் முன்பாக நான் சரியென்று நம்புவதை
எப்பொழுதும் செய்ய முயல்கிறேன்.

17"பலகாலம் எருசலேமிலிருந்து தொலை
வில் வாழ்ந்து வந்தேன். என் மக்களுக்குப்
பணம் கொண்டுவரவும் காணிக்கை செலுத்
தவும் நான் அங்குத் திரும்பிச் சென்றேன்.
18தேவாலயத்தில் நான் இதைச் செய்து கொண்
டிருந்தபோது சில யூதர்கள் என்னைக் கண்
டனர். சுத்தப்படுத்தும் பண்டிகையை* (சடங்
கை) முடித்தேன். நான் எந்தக் தொல்லையை
யும் ஏற்படுத்தவில்லை. என்னைச் சுற்றி
எந்தக் கூட்டமும் சேரவில்லை. 19ஆசியாவி
லுள்ள சில யூதர்கள் அங்கிருந்தார்கள். இங்கும்
உங்கள் முன் அவர்கள் நின்றுகொண்டிருக்க
வேண்டும். நான் ஏதேனும் தவறாகச் செய்
திருந்தால் என்னைக் குற்றம் சாட்டவேண்
டியவர்கள் அவர்களே. 20எருசலேமிலுள்ள
யூத சங்கத்தின் முன் நான் நின்றபோது என்
னில் ஏதேனும் பிழையை அவர்கள் கண்டார்
களா என்பதை இந்த யூதர்களிடம் விசாரியுங்
கள். 21நான் அவர்கள் முன்னிலையில் நின்ற
போது ஒன்றை மட்டும் கூறினேன். 'மரணத்தி
னின்று மக்கள் எழும்புவர் என்பதை நான்
நம்புவதால் இன்றைக்கு நீங்கள் என்னை நியா
யந்தீர்க்கிறீர்கள்' என்றேன்" என்று கூறி
னான்.

22இயேசுவின் வழிகளைக் குறித்து ஏற்
கனவே பெலிக்ஸ் நிரம்ப தெரிந்துவைத்திருந்
தான். அவன் வழக்கை இந்த இடத்தில் நிறுத்
தியவனாய், "அதிகாரி லீசியா இங்கு வருகிற
போது, இவற்றைக் குறித்து முடிவெடுப்பேன்"
என்றான். 23பெலிக்ஸ் படை அதிகாரியிடம்
பவுலைக் காவலில் வைக்குமாறு கூறினான்.
அவன் படை அதிகாரியிடம் பவுலுக்குச் சற்
றுச் சுதந்திரம் அளிக்குமாறும், பவுலின் நண்
பர்கள் அவனுக்குத் தேவையான பொருட்
களைக் கொண்டுவந்து உதவுவதற்கு அனுமதி
அளிக்குமாறும் கூறினான்.

### பெலிக்ஸ் முன் பவுல்

24சில நாட்களுக்குப் பிறகு பெலிக்ஸ்,
அவனது மனைவி துருசில்லாவுடன் வந்தான்.
அவள் யூதப் பெண்மணி. பெலிக்ஸ் பவுலைத்
தன்னிடம் அழைத்து வருமாறு கூறினான்.
கிறிஸ்து இயேசுவில் வைக்கும் விசுவாசத்
தைக் குறித்துப் பவுல் பேசுவதை பெலிக்ஸ்
கேட்டான். 25நேர்மையான வாழ்வு, தன்னடக்
கம், எதிர்காலத்தின் நியாயத்தீர்ப்பு ஆகியவற்
றைக் குறித்துப் பவுல் கூறியதைக் கேட்டு
அவன் அஞ்சினான். பெலிக்ஸ் "இப்போது
போய் விடு! இன்னும் கால அவகாசம் கிடைக்
கும்போது உன்னை அழைக்கிறேன்" என்
றான். 26பவுலோடு பெலிக்ஸ் பேசுவதற்கு
மற்றொரு காரணமும் இருந்தது. பவுல் தனக்கு
லஞ்சம் கொடுப்பான் எனவும் பெலிக்ஸ் நம்
பினான். எனவே பெலிக்ஸ் பவுலை அடிக்கடி
அழைப்பித்து அவனோடு பேசினான்.

27ஆனால் இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு,
போர்சியு பெஸ்து ஆளுநரானார். பெலிக்ஸ்
ஆளுநராக இருக்கவில்லை. பெலிக்ஸ் யூதர்
களை மகிழ்விக்கும்படியாக ஏதேனும் செய்ய
வேண்டுமென்று விரும்பியதால் பவுலைச்
சிறையிலேயே விட்டுச் சென்றான்.

### பவுலின் வாதம்

25 பெஸ்து ஆளுநரானான். மூன்று நாட்
களுக்குப் பிறகு அவன் செசரியாவிலி
ருந்து எருசலேமுக்குச் சென்றான். 2தலைமை

---

***6-8 வாக்கியங்கள்*** *சில கிரேக்கப் பிரதிகளில் 6b-8a சேர்க்கப்பட்டுள்ளன. "நாங்கள் அவனை எங்கள் சொந்தச் சட்டங்கள் மூலம் தண்டிக்க விரும்பினோம். ஆனால் லைசியாஸ் வந்து அதிகமாக வற்புறுத்தி எங்களிடமிருந்து அவனை அழைத்துக் கொண்டு போனான். லைசியாஸ் தன் மக்களுக்கு எங்களைக் குற்றம்சாட்ட கட்டளையிட்டுள்ளான்."*

***சுத்தப்படுத்தும் பண்டிகை.*** *யூதர்கள் நசரேய விரதத்தை முடிக்கச் செய்யும் சிறப்பான செயல்கள்.*

*ஆசாரியரும் முக்கியமான யூதத் தலைவர்
களும் பெஸ்துவுக்குமுன் பவுலுக்கு எதிராக
வழக்குகளைத் தொடுத்தனர். 3தங்களுக்கு ஓர்
உதவி செய்யும்படியாக பெஸ்துவை வேண்
டினர். பவுலை எருசலேமுக்கு மீண்டும் அனுப்
பும்படியாக பெஸ்துவைக் கேட்டார்கள். வழி
யில் பவுலைக் கொல்வற்குத் திட்டம் வகுத்
தனர்.*

4*ஆனால் பெஸ்து, "இல்லை! பவுல்
செசரியாவில் வைக்கப்படுவான். நானே
செசரியாவுக்குச் சீக்கிரம் போவேன். 5உங்கள்
தலைவர்கள் சிலரும் என்னோடு வரலாம்.
அவன் உண்மையாகவே குற்றம் செய்திருந்
தால் சிசேரியாவில் அவர்கள் அம்மனிதன்
மீது வழக்கு தொடரலாம்" என்றான்.*

6*எட்டு அல்லது பத்து நாட்கள் பெஸ்து
எருசலேமில் தங்கினான். பின் அவன் செசரி
யாவுக்குத் திரும்பினான். மறுநாள் பெஸ்து
பவுலைத் தனக்கு முன்னால் அழைத்து வரு
மாறு வீரர்களுக்குக் கூறினான். பெஸ்து நீதி
பதியின் இருக்கையில் அமர்ந்திருந்தான்.
7பவுல் அறைக்குள் வந்தான். எருசலேமிலி
ருந்து வந்த யூதர்கள் அவனைச் சுற்றிலும்
நின்று கொண்டனர். பவுல் பல குற்றங்களைச்
செய்தான் என்று யூதர்கள் கூறினார்கள்.
ஆனால் இக்காரியங்கள் எதையும் நிரூபிக்க
முடியவில்லை. 8பவுல் (தனது சார்பாக) தன்
னைக் காத்துக்கொள்வதற்குக் கூறியதாவது,
"யூத சட்டத்துக்கு மாறாகவோ, தேவாலயத்
துக்கு எதிராகவோ, இராயருக்கு விரோதமா
கவோ, நான் எந்தக் குற்றத்தையும் செய்ய
வில்லை" என்றான்.*

9*ஆனால் பெஸ்து யூதர்களைத் திருப்திப்
படுத்த நினைத்தான். எனவே அவன் பவுலை
நோக்கி, "நீ எருசலேமுக்குப் போக விரும்
புகிறாயா? இக்குற்றங்களுக்காக நான் அங்கு
நீதி வழங்கவேண்டுமென்று விரும்புகிறாயா?"
என்று கேட்டான்.*

10*பவுல், "இராயனின் நியாயஸ்தலத்திற்கு
முன்பாக நான் நின்று கொண்டிருக்கிறேன்.
இங்கு நான் நியாயந்தீர்க்கப்படவேண்டும்!
நான் யூதர்களுக்கு எந்தக் குற்றத்தையும் செய்
யவில்லை. இது உண்மையென்பது உங்களுக்
குத் தெரியும். 11நான் ஏதேனும் தவறு செய்து,
சட்டமும் நான் அதற்காக இறக்க வேண்டு
மெனக் கூறினால், நான் இறப்பதற்குச் சம்மதிக்
கிறேன். நான் மரணத்தினின்று தப்பவேண்டு
மென்று கேட்கவில்லை. ஆனால் இப்பழிகள்
பொய்யெனில் யாரும் என்னை யூதரிடம் ஒப்
படைக்கக் கூடாது. நான் இராயரால் நியாயந்
தீர்க்கப்பட விரும்புகிறேன்!" என்றான்.*

12*பெஸ்து தனது ஆலோசகர்களிடம் இதைக்
குறித்துக் கலந்தாலோசித்தான். பின்பு அவன்,
"நீ இராயரைப் பார்க்கவேண்டுமெனக் கேட்
டாய், எனவே நீ இராயரிடம் போவாய்" என்
றான்.*

### *ஏரோது அகிரிப்பாவின் முன் பவுல்*

13*சில நாட்களுக்குப் பிறகு அகிரிப்பா
மன்னரும் பெர்னிசும்* பெஸ்துவைச் சந்திக்
குமாறு செசரியாவுக்கு வந்தனர். 14அங்குப்
பல நாட்கள் தங்கியிருந்தனர். பவுலின் வழக்
கைக் குறித்து பெஸ்து மன்னருக்குக் கூறி
னான். பெஸ்து, பெலிக்ஸ் சிறையில் விட்டுச்
சென்ற ஒரு மனிதன் இருக்கிறான். 15நான்
எருசலேமுக்குப் போனபோது தலைமை ஆசா
ரியரும், முதிய யூத அதிகாரிகளும் அவன்
மீது வழக்குத் தொடுத்தனர். அவனுக்கு நான்
மரண தண்டனை அளிக்கவேண்டுமென யூதர்
கள் விரும்பினர். 16ஆனால் நான் 'ஒரு மனிதன்
குற்றம் செய்ததாக குற்றம் சாட்டப்பட்டால்,
ரோமர் அவனைப் பிறரிடம் நியாயம் வழங்கு
வதன் பொருட்டு ஒப்படைப்பதில்லை. முதலில்
அம்மனிதன் அவனைப் பழியிடும் மக்களை
எதிர்கொள்ள வேண்டும். அவர்கள் இட்ட வழக்
குகளுக்கு எதிரான தனது கருத்துக்களைச்
சொல்லவேண்டும்' என்று பதில் அளித்தேன்.
17எனவே இந்த யூதர்கள் வழக்காடுவதற்காக
செசரியாவுக்கு வந்தனர். நான் காலத்தை
வீணாக்கவில்லை. மறுநாளே நீதிபதியின்
இருக்கையில் அமர்ந்து, அம்மனிதனை
(பவுலை) அழைத்து வருமாறு கட்டளையிட்
டேன். 18யூதர்கள் எழுந்து நின்று அவனைப்
பழித்தனர். ஆனால் எந்தப் பயங்கரக் குற்
றத்தையும் அவன் செய்ததாக யூதர்கள் கூற
வில்லை. அவர்கள் சொல்வார்கள் என்று
நான் எண்ணியிருந்தேன். 19அவர்கள் தங்கள்
மதத்தைக் குறித்தும் இயேசு என்கிற மனித
னைப் பற்றியும் மட்டுமே கூறினார்கள். இயேசு
இறந்தார், ஆனால் பவுல் அவர் இன்னும்
உயிரோடிருக்கிறார் என்று கூறுகிறான்.
20எனக்கு இவற்றைக் குறித்து விவரமாகத்
தெரியவில்லை. எனவே நான் கேள்விகள்
கேட்கவில்லை. நான் பவுலை நோக்கி, 'நீ
எருசலேமுக்குப் போய் அங்கு இவை குறித்து
நியாயந்தீர்க்கப்பட விரும்புகிறாயா?' என்று
கேட்டேன். 21ஆனால் பவுல் செசரியாவிலேயே
வைக்கப்பட வேண்டுமென்று கேட்டான்.
அவன் இராயர் முடிவெடுக்க வேண்டுமென
விரும்புகிறான். ரோமில் இராயரிடம் அவனை
அனுப்பும் மட்டும் அவன் இங்கேயே வைக்
கப்பட நான் கட்டளையிட்டுள்ளேன்" என்று
கூறினான்.*

22*அகிரிப்பா பெஸ்துவை நோக்கி, "நானும்
நாளை இந்த மனிதன் கூறுவதைக் கேட்க
விரும்புகிறேன்" என்றான். பெஸ்து, "நீங்கள்
கேட்பீர்கள்" என்றான்.*

23*மறுநாள் அகிரிப்பாவும் பெர்னிசும்
அங்கு வந்தார்கள். மிக முக்கியமான மனிதர்
களுக்குரிய ஆடைகளை உடுத்தி, அதற்கேற்
றவாறு நடந்து கொண்டனர். அகிரிப்பாவும்*

---

**பெர்னிசு** *அகிரிப்பாவின் சகோதரி. ஏரோது
அகிரிப்பா 1ன் மூத்த மகன்.*

பெர்னிசும் படை அதிகாரிகளும், செசரியா
வின் முக்கிய மனிதர்களும் நியாயத்தீர்ப்பு
அறைக்குள் சென்றனர். பெஸ்து பவுலை
உள்ளே அழைத்து வருமாறு வீரர்களுக்குக்
கட்டளையிட்டான். 24பெஸ்து, “அகிரிப்பா மன்
னரும் இங்குள்ள எல்லோரும் இப்போது இம்
மனிதனைப் பார்க்கிறீர்கள். இங்கும், எருசலே
மிலுமுள்ள எல்லா யூத மக்களும் இவனுக்
கெதிராக என்னிடம் குற்றம் சாட்டியுள்ளனர்.
அவர்கள் குற்றங்களைக் கூறியபோது,
அவனை இனிமேலும் உயிரோடு விட்டு
வைக்கக் கூடாதென்று கூக்குரலிட்டனர். 25நான்
நியாயங்கேட்டபோது அவனிடம் எந்தத் தவ
றையும் காணவில்லை. அவனுக்கு மரணதண்
டனை விதிக்குமளவிற்கு எந்தக் காரணமும்
இருக்கவில்லை. அவன் இராயரிடம் நியாயம்
பெற விரும்புகிறான். எனவே அவனை ரோ
முக்கு அனுப்பத் தீர்மானித்துள்ளேன். 26இம்
மனிதன் செய்த தவறாக இராயருக்கு எழுது
வதற்கு தீர்மானமாக எதுவும் இல்லை.
எனவே உங்களுக்கு முன்பாக, விசேஷமாக
அகிரிப்பா மன்னரே, உங்களுக்கு முன்பாக
அவனைக் கொண்டு வந்துள்ளேன். நீங்கள்
அவனை வினவலாம். இராயருக்கு ஏதாவது
எழுதுமாறு கூறலாம். 27ஒரு கைதிக்கு எதிராக
எந்தக் குற்றத்தையும் குறிப்பிடாமல் அவனை
இராயரிடம் அனுப்புவது மூடத்தனமானது
என்று நினைக்கிறேன்” என்றான்.

## அகிரிப்பா மன்னன் முன் பவுல்

26 அகிரிப்பா பவுலை நோக்கி, “இப்
போது உன்னைப்பற்றி நீயே பேச
லாம்” என்றான். பின் பவுல் தனது கையை
உயர்த்தித் தனக்கு சார்பாகப் பேசத் துவங்
கினான். 2அவன், “அகிரிப்பா மன்னரே, யூதர்
கள் எனக்கு எதிராகச் சொன்ன எல்லா
வழக்குகளுக்கும் நான் பதில் கூறுவேன். நான்
இன்று உங்கள் முன்பாக நின்று இதைச்
செய்வதை ஓர் ஆசீர்வாதமாகக் கருதுகிறேன்.
3நீங்கள் எல்லா யூத வழக்கங்களையும் யூதர்
கள் வாதிடுகிற காரியங்களையும் மிகுதியாக
அறிந்திருப்பதால் நான் உங்களோடு பேசுவ
தில் மகிழ்ச்சி கொள்ளுகிறேன். தயவுசெய்து
நான் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள்.

4“எனது முழு வாழ்க்கையைக் குறித்து
எல்லா யூதர்களும் அறிந்திருக்கிறார்கள்.
முதலில் எனது சொந்த நாட்டில் நான் வாழ்ந்த
வகையையும், பின்னர் எருசலேமில் வாழ்ந்த
வகையையும் பற்றி அவர்கள் அறிந்திருக்
கிறார்கள். 5இந்த யூதர்களுக்கு என்னைப் பல
காலமாகத் தெரியும். அவர்கள் விரும்பினால்
நான் ஒரு நல்ல பரிசேயன் என்று உங்களுக்
குக் கூற முடியும். யூத மக்களில் பிற எல்லா
பிரிவினரைக் காட்டிலும் பரிசேயர்கள் யூத
மத விதிகளைக் கவனமாகப் பின்பற்றுகி
றார்கள். 6தேவன் நமது முன்னோருக்குக் கொ
டுத்த வாக்குறுதியை நான் நம்புவதால் இப்
போது நான் விசாரணையிலிருக்கிறேன்.
7நமது மக்களில் பன்னிரண்டு குலத்தினரும்
பெறவேண்டுமென நம்பும் வாக்குறுதி இதுவே.
இந்நம்பிக்கைக்காக யூதர்கள் தேவனுக்கு
இரவும் பகலும் சேவை புரிகின்றனர். எனது
மன்னரே, நான் இந்த வாக்குறுதியிலேயே
நம்பிக்கை வைத்திருப்பதால் யூதர்கள் என்
மீது பழி சுமத்துகின்றனர்! 8தேவன் மரணத்
தினின்று மக்களை எழுப்பமுடியுமென்பது
நம்ப இயலாதது என ஏன் மக்கள் எண்ணு
கின்றனர்?

9நான் பரிசேயனாக இருந்தபோது, நாச
ரேத்தைச் சேர்ந்த இயேசுவின் பெயருக்கு எதி
ராகப் பல காரியங்களைச் செய்ய எண்ணி
னேன். 10எருசலேமில் விசுவாசிகளுக்கு*
எதிராகப் பல காரியங்களைச் செய்தேன்.
விசுவாசிகளில் பலரைச் சிறையிலிடும் அதி
காரத்தைத் தலைமை ஆசாரியர் எனக்குக்
கொடுத்திருந்தனர். இயேசுவின் சீஷர்கள்
கொல்லப்பட்டபோது, அது ஒரு நல்ல செய்கை
என்று நான் ஒப்புக்கொண்டேன். 11ஒவ்வொரு
யூத ஜெப ஆலயத்திலும் நான் அவர்களைத்
தண்டித்தேன். இயேசுவுக்கு எதிராக அவர்கள்
தகாதவற்றைப் பேசச் செய்வதற்கு முயற்சித்
தேன். அம்மக்களிடம் நான் கொண்ட அதிக
சினத்தால் அவர்களைக் கண்டுபிடித்துத் துன்
புறுத்துவதற்காக வேறு நகரங்களுக்கு சென்
றேன்.

## இயேசுவைப் பற்றி பவுலின் சாட்சி

12“ஒரு முறை தலைமை ஆசாரியர் தமஸ்கு
நகரத்திற்குப் போகும் அதிகாரத்தையும் அனு
மதியையும் கொடுத்தார்கள். 13நான் தமஸ்குவுக்
குப் போய்க்கொண்டிருந்தேன். அது நண்பகல்
பொழுது. நான் வானத்திலிருந்து ஓர் ஒளி
யைப் பார்த்தேன். சூரியனைக் காட்டிலும்
அதிகமாக அவ்வொளி பிரகாசித்தது. அந்த
ஒளி என்னையும் என்னோடு பயணம் செய்த
மனிதர்களைச் சுற்றியும் பிரகாசித்தது. 14நாங்
கள் எல்லோரும் நிலத்தில் வீழ்ந்தோம். அப்
போது யூத மொழியில் ஒரு குரல் என்னோடு
பேசுவதைக் கேட்டேன். அக்குரல் ‘சவுலே,
சவுலே, ஏன் இக்கொடுமைகளை எனக்கு
எதிராகச் செய்கிறாய்? நீ என்னை எதிர்ப்
பதன் மூலம் உன்னை நீயே துன்புறுத்திக்
கொண்டிருக்கிறாய்’ என்றது. 15நான், ‘ஆண்
டவரே, நீங்கள் யார்’ என்றேன். ஆண்டவர்,
‘நான் இயேசு. நீ துன்பப்படுத்துகிறவர் நானே.
16எழுந்திரு. நான் உன்னை எனது ஊழிய
னாகத் தேர்ந்தெடுத்திருக்கிறேன். நீ எனக்குச்
சாட்சியாக இருப்பாய். இன்று பார்த்த என்
னைப் பற்றிய செய்திகளையும், உனக்கு நான்
காட்டப்போகிற விஷயங்களையும் நீ மக்களுக்
குக் கூறுவாய். 17நான் உனது சொந்த மக்கள்

---

**விசுவாசிகள்** இலக்கியபடி “தூயவர்கள்” இயேசுவை விசுவாசிக்கும் மக்களுக்கு வழங்கப் படும் பெயராகும்.

உன்னைத் துன்புறுத்துவதற்கு அனுமதிக்க
மாட்டேன். யூதரல்லாத மக்களிடமிருந்தும் நான்
உன்னைப் பாதுகாப்பேன். நான் உன்னை
இம்மக்களிடம் அனுப்புகிறேன். 18உண்மையை
இம்மக்களுக்கு நீ காட்டுவாய், அதனால் மக்கள்
இருளிலிருந்து ஒளிக்குத் திரும்புவார்கள்.
சாத்தானின் அதிகாரத்திலிருந்து தேவனிடம்
திரும்புவார்கள். மேலும் அவர்களது பாவங்
கள் மன்னிக்கப்படும். என்னை நம்புவதால்
பரிசுத்தமாக்கப்பட்ட மனிதரோடு அவர்களும்
பங்கு பெறமுடியும்' என்றார்" என்று
கூறினான்.

### தன் ஊழியம் பற்றி பவுல்

19பவுல் தொடர்ந்து பேசினான். "அகிரிப்பா
மன்னரே, பரலோகத்திலிருந்து இக்காட்சி வந்த
போது, நான் அதற்குக் கீழ்ப்படிந்தேன். 20மக்
கள் அவர்களது இருதயங்களையும் வாழ்க்கை
களையும் மாற்றிக்கொண்டு, தேவனிடம் திரும்
பவேண்டுமென்று அவர்களுக்குக் கூற ஆரம்
பித்தேன். அவர்கள் மனம் மாறினார்கள் என்
பதை வெளிக்காட்டும்படியான செயல்களைச்
செய்யுமாறு மக்களுக்குக் கூறினேன். தமஸ்கு
விலுள்ள மக்களுக்கு முதலில் இதைக் கூற
ஆரம்பித்தேன். பின் எருசலேமுக்கும், யூதேயா
வின் ஒவ்வொரு பாகத்திற்கும் சென்று,
அங்குள்ள மக்களுக்கு இவற்றைக் கூறினேன்.
மேலும் யூதரல்லாத மக்களிடமும் நான் சென்
றேன். 21எனவேதான் யூதர்கள் என்னைப்
பிடித்து, தேவாலயத்தில் என்னைக் கொல்ல
முயன்றார்கள். 22ஆனால் தேவன் எனக்கு உத
வினார். இன்னமும் எனக்கு உதவிக்கொண்
டிருக்கிறார். தேவனுடைய உதவியால் நான்
இன்று இங்கு நின்று கொண்டிருக்கிறேன்.
நான் கண்ட மகத்தானதும் எளியதுமானவற்
றையும் கூறிக்கொண்டுள்ளேன். ஆனால் நான்
எதையும் புதிதாகக் கூறிக்கொண்டிருக்க
வில்லை. பின்னர் நிகழுமென்று மோசேயும்
தீர்க்கதரிசிகளும் கூறியவற்றை நான் கூறிக்
கொண்டிருக்கிறேன். 23தொல்லைகளை அனுப
வித்தபின் மரணத்தினின்று முதன் முதலில்
எழுபவர் கிறிஸ்துவே என்று அவர்கள்
கூறினர். மோசேயும் தீர்க்தரிசிகளும் கிறிஸ்து
யூத மக்களுக்கும் யூதரல்லாத மக்களுக்கும்
ஒளியைத் தருபவர் என்று கூறினார்கள்"
என்றான்,

### அகிரிப்பாவை தன் சார்பாக்க பவுல் முனைகிறான்.

24பவுல் இவற்றைத் தனக்குச் சாதகமாகக்
கூறிக்கொண்டிருந்தபொழுது பெஸ்து உரக்க,
"பவுலே, நீ பைத்தியக்காரன்! அதிகப்படிப்பு
உன்னைப் பித்தனாக்கிவிட்டது!" என்றான்.
25பவுல், "மிக மாட்சிமைமிக்க பெஸ்துவே,
நான் பித்தன் அல்லன். நான் கூறுபவை உண்
மையானவை. எனது வார்த்தைகள் ஒரு மூட
னின் வார்த்தைகள் அல்ல. அவை உண்மை
யானவையும், ஞானமிக்கவையும் ஆகும்.
26அகிரிப்பா மன்னர் இவற்றை நன்கு அறிந்
திருக்கிறார். நான் சுதந்திரமாக அவரோடு
பேசமுடியும். இவை அனைத்தையும் குறித்து
அவர் கேள்விப்பட்டிருக்கிறார் என்பதை
நான் அறிவேன். ஏன்? இவையனைத்தும்
மக்கள் காணும்படியாக நடந்தவையே. 27அகி
ரிப்பா மன்னரே, தீர்க்கதரிசிகள் எழுதிய
வற்றை நம்புகிறீர்களா? நீங்கள் நம்புகிறீர்கள்
என்பது எனக்குத் தெரியும்!" என்றான்.

28அகிரிப்பா பவுலிடம் "நீ அவ்வளவு எளி
தாக என்னைக் கிறிஸ்தவனாக மாறுவதற்குத்
தூண்டமுடியும் என்று நினைக்கிறாயா?"
என்று கேட்டான்.

29பவுல், "அது எளிதானதா கடினமானதா,
என்பது முக்கியமல்ல. நீங்கள் மட்டுமல்ல,
என்னைக் கேட்கிற இங்குள்ள ஒவ்வொரு
வரும் இன்று இரட்சிக்கப்பட்டு எனக்குப் பூட்
டப்பட்டுள்ள இந்த விலங்குகளைத் தவிர்த்து
எல்லாவற்றிலும் என்னைப் போலாக வேண்
டுமென்று தேவனிடம் பிரார்த்தனை செய்
கிறேன்" என்றான்.

30அகிரிப்பா மன்னரும் கவர்னர் பெஸ்து
வும் பெர்னிசும் அவர்களோடு அமர்ந்திருந்த
எல்லா மக்களும் எழுந்து 31ஒருவரோடொ
ருவர் பேசிக்கொண்டு அந்த அறையை
விட்டுச் சென்றார்கள். அவர்கள், "இம்மனிதன்
கொல்லப்படவோ, சிறையில் அடைக்கப்ப
டவோ கூடாது, உண்மையிலேயே தவறான
எதையும் அவன் செய்யவில்லை!" என்றார்
கள். 32அகிரிப்பா பெஸ்துவை நோக்கி,
"அவன் மட்டும் இராயரிடம் விண்ணப்பிக்காம
லிருந்திருந்தால் அவன் விடுதலை செய்யப்பட்
டிருக்கலாம்" என்றான்.

### ரோமாபுரிப் பயணம்

27 நாங்கள் இத்தாலிக்கு கடற்பயணம் செய்
யவேண்டுமென முடிவெடுக்கப்பட்டது.
ஜூலியஸ் என்னும் பெயருள்ள படை அதி
காரி பவுலையும் வேறு சில கைதிகளையும்
பொறுப்பேற்றுக் கொண்டான். இராயரின்*
படையில் ஜூலியஸ் சேவை புரிந்து கொண்
டிருந்தான். 2நாங்கள் ஒரு கப்பலில் ஏறிச்
சென்றோம். கப்பல் அதிரமித்தியம் என்னும்
நகரிலிருந்து வந்து ஆசியாவின் பல இடங்க
ளுக்குப் பயணம் செல்லத் தயாராக இருந்தது.
அரிஸ்தர்க்கும் எங்களோடு வந்தான். அம்
மனிதன் மக்கதோனியாவில் தெசலோனிக்கா
நகரத்தைச் சேர்ந்தவன். 3மறுநாள் நாங்கள்
சீதோன் நகரத்திற்கு வந்தோம். ஜூலியஸ்
பவுலோடு நல்ல முறையில் நடந்து கொண்
டான். அவன், பவுல் அவனது நண்பர்களைச்
சென்று சந்திக்கும் சுதந்திரத்தை அவனுக்குக்
கொடுத்தான். இந்த நண்பர்கள் பவுலுக்குரிய
தேவைகளைக் கவனித்து வந்தனர். 4நாங்கள்

---

**இராயன்** ரோமப் பேரரசின் தலைவர்.

சீதோன் நகரத்திலிருந்து கடலில் பயணமா
னோம். காற்று எங்களுக்கு எதிர்த்திசையில்
வீசியபடியால் சீப்புரு தீவின் கரையோரம்
எங்கள் கடற்பயணம் தொடர்ந்தது. 5சிலிசியா,
பம்பிலியா வழியாகக் கடலைக் கடந்து சென்
றோம். பின் லீசியாவிலுள்ள மீரா நகரத்திற்கு
நாங்கள் வந்தோம். 6மீராவில் படை அதிகாரி
அலெக்ஸாண்டிரியா நகரத்திலிருந்து வந்த
ஒரு கப்பலைக் கண்டான். இந்தக் கப்பல் இத்
தாலிக்குப் போய்க் கொண்டிருந்தது. எனவே
அவன் எங்களை அதில் ஏற்றினான்.

7நாங்கள் நிதானமாகப் பல நாட்கள் கடலில்
பயணம் செய்தோம். காற்று எங்களுக்கு எதி
ராக வீசிக்கொண்டிருந்தபடியால் கினீது
நகரை அடைவதே கடினமாக இருந்தது. அவ்
வழியாக மேலும் போக முடியவில்லை. சால்
மோனின் அருகேயுள்ள கிரேத்தா தீவின் தென்
பகுதியின் வழியாகக் கடல் பயணமானோம்.
8கடற்கரை ஓரமாகப் போனோம். ஆனாலும்
கடற்பயணம் கடினமாக இருந்தது. பாதுகாப்
பான துறைமுகம் என்னும் இடத்திற்கு வந்
தோம். லசேயா நகரம் அந்த இடத்திற்கு அருகா
மையிலிருந்தது.

9நிறைய நேரத்தை நாங்கள் இழந்திருந்
தோம். கடற்பயணம் செய்வது ஆபத்தானதாக
இருந்தது. ஏனெனில் யூதர்களின் உபவாச
தினம் ஆரம்பித்திருந்தது. எனவே பவுல்,
10“மனிதரே இப்பயணத்தில் இன்னும் தொல்
லைகள் மிகுதியாக இருக்கும் என்று எண்ணு
கிறேன்” என்று அவர்களை எச்சரித்தான்.
“கப்பலும், கப்பலின் பொருள்களும் இழக்கப்
படலாம். நம் உயிரையும் நாம் இழக்கக்கூடும்!”
என்றான். 11ஆனால் கப்பல் தலைவனும்
கப்பலின் சொந்தக்காரனும் பவுல் கூறியதை
ஒப்புக்கொள்ளவில்லை. அதனால் படை அதி
காரி பவுலை நம்பவில்லை. பதிலாக, தலை
வனும் கப்பலின் சொந்தக்காரனும் கூறியதை
அதிகாரி நம்பினான். 12குளிர்காலத்தில் கப்பல்
தங்குவதற்கு அத்துறைமுகமும் ஏற்றதல்ல.
எனவே பெரும்பான்மையான மனிதர்களும்
கப்பல் புறப்படவேண்டுமென முடிவெடுத்
தனர். பேனிக்ஸ் நகரத்தை அடையக் கூடுமென
அவர்கள் நம்பினர். குளிர்காலத்தில் கப்பல்
அங்குத் தங்கமுடியும். (கிரேத்தா தீவில்
பேனிக்ஸ் ஒரு நகரம். தென் மேற்கு, வடமேற்கு
திசைகளை நோக்கிய துறைமுகம் அங்கி
ருந்தது.)

## புயல்

13தெற்கிலிருந்து ஒரு நல்ல காற்று வீசியது.
கப்பலிலிருந்த மனிதர்கள், “நமக்குத் தேவை
யான காற்று இது. இப்போது அது வீசுகிறது!”
என்று நினைத்தார்கள். எனவே அவர்கள்
நங்கூரத்தை மேலே இழுத்தார்கள். கிரேத்தா
தீவுக்கு வெகு அருகில் பயணம் செய்தோம்.
14“வடகிழக்கன்” என்னும் பெயருள்ள மிகப்
பலமான காற்று தீவின் குறுக்காக வந்தது.
15இக்காற்று கப்பலைச் சுமந்து சென்றது.
காற்றுக்கு எதிராக கப்பலால் செல்லமுடிய
வில்லை. எனவே, முயற்சி செய்வதை விட்டு,
காற்று எங்களைச் சுமந்துசெல்லும்படியாக
விட்டோம். 16கிலவுதா என்னும் ஒரு சிறிய
தீவின் கீழே சென்றோம். எங்களால் உயிர்
மீட்கும் படகை வெளியே எடுக்கமுடிந்தது.
ஆனால் அதை எடுப்பது மிகக் கடினமான
செயலாக இருந்தது. 17உயிர்மீட்கும் படகை
மனிதர்கள் எடுத்தபின், அவர்கள் கப்பலைச்
சுற்றிலும் கயிறுகளால் கப்பல் சரியாக இருப்
பதற்கென்று கட்டினார்கள். சிர்டிஸின்* மணற்
பாங்கான கரையில் கப்பல் மோதக்கூடு
மென்று அவர்கள் நினைத்தார்கள். எனவே
துடுப்புகளை எடுத்துவிட்டு, காற்று கப்
பலைச் செலுத்தும்படியாக விட்டார்கள்.
18மறுநாள் புயல் கடுமையாகத் தாக்கியதால்
மனிதர்கள் கப்பலிலிருந்து சில பொருட்களை
வெளியே வீசினார்கள். 19ஒரு நாள் கழிந்ததும்
கப்பலின் கருவிகளை வெளியே வீசினர்.
20பல நாட்கள் எங்களால் சூரியனையோ,
நட்சத்திரங்களையோ பார்க்க முடியவில்லை.
புயல் கொடுமையாக இருந்தது. நாங்கள் உயிர்
பிழைக்கும் நம்பிக்கையைக் கைவிட்டோம்.
நாங்கள் இறந்து விடுவோமென எண்ணி
னோம். 21நீண்ட காலமாக அம்மனிதர்கள்
சாப்பிடவில்லை. பின்பு ஒருநாள் பவுல் அவர்
களுக்கு முன்பாக எழுந்து நின்று, “மனிதரே,
கிரேத்தாவை விட்டுப் புறப்படாதீர்கள் என்று
உங்களுக்குச் சொன்னேன். நீங்கள் நான் சொல்
வதைக் கேட்டிருக்கவேண்டும். இத்தனை
தொல்லைகளும் நஷ்டமும் உங்களுக்கு ஏற்பட்
டிருக்காது. 22ஆனால் இப்போதும் மகிழ்ச்
சியாக இருக்கும்படிக்கு உங்களுக்கு கூறுகி
றேன். உங்களில் ஒருவரும் இறக்கமாட்டீர்கள்!
ஆனால் கப்பல் அழிந்து போகும். 23நேற்று
இரவு தேவனிடமிருந்து ஒரு தூதன் என்னிடம்
வந்தான். நான் வணங்குகிற தேவன் அவரே.
நான் அவருடையவன். 24தேவதூதன், ‘பவுலே,
பயப்படாதே! நீ இராயருக்குமுன் நிற்க வேண்
டும். தேவன் உனக்கு இவ்வாக்குறுதியைத்
தருகிறார். உன்னோடு பயணமாகிய எல்லா
மனிதரின் உயிர்களும் காப்பாற்றப்படும்’ என்
றான். 25எனவே மனிதரே மகிழ்ச்சியாயி
ருங்கள்! நான் தேவனிடம் நம்பிக்கை வைத்
துள்ளேன். அவரது தூதன் கூறியபடி எல்லாம்
நடக்கும். 26ஆனால் நாம் ஒரு தீவிற்குச் சென்று
மோதுவோம்” என்றான். 27பதினான்காம் நாள்
இரவில் ஆதிரியாக் கடலைச் சுற்றிலும் நாங்
கள் கப்பலில் மிதந்துகொண்டிருந்தோம்.
மாலுமிகள் கரையை நெருங்குகிறோம் என்று
எண்ணினர். 28அவர்கள் ஒரு கனமான
பொருளை நுனியில் கட்டி கயிற்றை நீருக்குள்
வீசினர். நீர் 120 அடி ஆழமானது என்று
அவர்கள் கண்டனர். இன்னும் சற்று தூரம்

---

**சிர்டிஸ்** லிபியாக் கடற்கரையில் உள்ள பகுதி.

சென்று கயிற்றை மீண்டும் வீசினர். அங்கு
நீர் 90 அடி ஆழமாயிருந்தது. 29நாங்கள் பாறை
யில் மோதுவோமென்று மாலுமிகள் பயந்தார்
கள். எனவே நான்கு நங்கூரங்களை நீருக்குள்
பாய்ச்சினர். மறுநாளின் பகலொளிக்காக
பிரார்த்தனை செய்தனர். 30சில மாலுமிகள்
கப்பலைக் கைவிட விரும்பினர். அவர்கள்
உயிர் மீட்கும் படகை நீரில் இறக்கினர். கப்
பலின் முன்பக்கத்திலிருந்து அதிகமான நங்கூ
ரங்களை வீசுவதாக பிறமனிதர்கள் கருதும்படி
யாக நடந்துக் கொண்டனர். 31ஆனால் பவுல்
படை அதிகாரியையும், பிற வீரர்களையும்
நோக்கி, “இம்மனிதர்கள் கப்பலிலே இருக்கா
விட்டால் உங்கள் உயிர்களைக் காக்க முடி
யாது” என்றான். 32எனவே வீரர்கள் கயிறு
களை அறுத்து உயிர் மீட்கும் படகை நீரில்
விழச்செய்தனர். 33அதிகாலைக்குச் சற்று முன்
பவுல் எல்லா மக்களையும் ஏதேனும் உண்
பதற்குச் சம்மதிக்க வைத்தான். அவன் “கடந்த
இரண்டு வாரங்களாக நீங்கள் காத்துக்கொண்
டும், கவனித்துக்கொண்டும் இருக்கிறீர்கள். பதி
னான்கு நாட்களாக நீங்கள் எதையும் உண்ண
வில்லை. 34நீங்கள் இப்போது எதையாவது
சாப்பிடுமாறு உங்களை வேண்டுகிறேன். உயி
ரோடிருப்பதற்கு உங்களுக்கு இது தேவை.
உங்களில் யாரும் ஒரு தலை முடியைக்கூட
இழக்கமாட்டீர்கள்” என்றான். 35இதைக்கூறிய
பிறகு பவுல் ரொட்டியை எடுத்து எல்லோர்
முன்பாகவும் அதற்காக தேவனுக்கு நன்றி
சொன்னான். அதில் ஒருபகுதியை எடுத்து,
அவன் உண்ண ஆரம்பித்தான். 36எல்லா மனி
தர்களும் உற்சாகம் பெற்றனர். அவர்களும்
சாப்பிட ஆரம்பித்தார்கள். 37(கப்பலில் 276
பேர் இருந்தனர்.) 38நாங்கள் திருப்தியாக சாப்
பிட்டோம். பின் கப்பலிலிருந்த தானியங்களை
எல்லாம் கப்பலின் பாரத்தை குறைக்கும் பொ
ருட்டு கடலுக்குள் வீசினோம்.

### கப்பல் அழிந்தது

39பகல் ஒளி வர ஆரம்பித்ததும் மாலுமிகள்
நிலத்தைக் கண்டனர். அந்நிலம் எதுவென்று
அவர்களால் அறியமுடிய வில்லை. .அவர்கள்
கடற்கரையோடு கூடிய ஒரு வளைகுடாவைக்
கண்டனர். மாலுமிகள் அவர்களால் முடிந்த
வரைக்கும் கடற்கரைக்கு நேராக கப்பலைச்
செலுத்த முயன்றனர். 40ஆனால் கப்பல் மணல்
மேட்டில் மோதியது. 41கப்பலின் முன்பகுதி
அதற்குள் நுழைந்து நின்றது. கப்பலால் அசை
யமுடியவில்லை. பெரும் அலைகள் வந்து
கப்பலின் பின்பகுதியில் மோதி, கப்பலை
உடைத்துவிட்டன. 42எந்தக் கைதியும் நீந்தித்
தப்பித்துப் போகாதவாறு வீரர்கள் அவர்
களைக் கொல்வதற்கு முடிவுசெய்தார்கள்.
43ஆனால் படைத் தலைவன் பவுலை உயி
ரோடு காக்க எண்ணினான். எனவே வீரர்கள்
கைதிகளைக் கொல்வதற்கு அவன் அனுமதிக்
கவில்லை. நீந்தத் தெரிந்தவர்கள் கடலில்
குதித்து நீந்திக் கரை சேரலாமென்று ஜூலியஸ்
மக்களுக்குக் கூறினான். 44பிற மக்கள் மரப்
பலகைகளையோ கப்பலின் உடைந்த பகுதிக
ளையோ பிடித்து நீந்தினர். இவ்வாறு எல்லா
மக்களும் நிலத்தை அடைந்தனர். மக்களில்
ஒருவரும் இறக்கவில்லை.

### மெலித்தா தீவில் பவுல்

28 நாங்கள் நலமாகக் கரையை அடைந்த
போது அத்தீவு மெலித்தா என்று
அழைக்கப்பட்டதை அறிந்தோம். 2மழை
பெய்து கொண்டிருந்தது, குளிர் மிகுதியாக
இருந்தது. ஆனால் அங்கு வாழ்ந்த மக்கள்
எங்களை அசாதாரணமான அன்புடன் நடத்
தினார்கள். அவர்கள் எங்களுக்காக தீ மூட்டி
எங்களையெல்லாம் வரவேற்றனர். 3நெருப்
பின் பொருட்டு பவுல்விறகு குச்சிகளைச்
சேகரித்தான். பவுல் அக்குச்சிகளை நெருப்பில்
இட்டுக்கொண்டிருந்தான். விஷப் பாம்பு ஒன்று
வெப்பத்தினால் வெளியேறி வந்து பவுலின்
கையில் கடித்தது. 4தீவில் வாழ்ந்த மக்கள்
பவுலின் கையில் அப்பாம்பு தொங்கிக்கொண்
டிருப்பதைக் கண்டனர். அவர்கள், “இம்மனி
தன் ஒரு கொலைக்காரனாக இருக்கவேண்டும்.
அவன் கடலில் இறக்கவில்லை. ஆனால் தெய்
வீக நீதியானது அவன் வாழ்வதை விரும்ப
வில்லை” என்றனர். 5ஆனால் பவுல் பாம்
பைத் தீயினுள் உதறினான். அவனுக்கு எந்தத்
தீங்கும் ஏற்படவில்லை. 6பவுல் சரீரம் வீங்கக்
கூடும், அல்லது அவன் இறந்துவிடக்கூடும்
என்று மக்கள் எண்ணினர். மக்கள் காத்தி
ருந்து நீண்டநேரம் பவுலைக் கண்காணித்
தனர். ஆனால் அவனுக்கு எந்தத் தீங்கும்
நேரவில்லை. எனவே பவுலைக் குறித்த
தங்கள் கருத்தை அவர்கள் மாற்றிக் கொண்
டனர். அவர்கள் “அவன் ஒரு தேவன்”
என்றனர். 7அந்தப்பகுதியைச் சுற்றிலும் சில
வயல்கள் இருந்தன. தீவின் ஒரு முக்கியமான
மனிதனுக்கு அந்த வயல்கள் சொந்தமானவை.
அவன் பெயர் புபிலியு. அவன் எங்களைத்
தனது வீட்டிற்குள் வரவேற்றான். அவன் எங்க
ளுக்கு நல்லவனாக இருந்தான். நாங்கள்
அவனது வீட்டில் மூன்று நாட்கள் தங்கியிருந்
தோம். 8புபிலியுவின் தந்தை மிகவும் நோயுற்
றுப் படுக்கையிலிருந்தார். அவருக்கு காய்ச்
சலும் வயிற்றிளைச்சலும் இருந்தது. ஆனால்
பவுல் அவனிடம் சென்று அவனுக்காகப்
பிரார்த்தனை செய்தான். பவுல் தனது கை
களை அம்மனிதன் மீது வைத்து அவனைக்
குணமாக்கினான். 9இது நடந்தபின் தீவிலுள்ள
எல்லா நோயாளிகளும் பவுலிடம் வந்தனர்.
அவர்களையும் கூடப் பவுல் குணமாக்கினான்.
10-11தீவின் மக்கள் எங்களுக்குப் பல கௌரவங்
களை அளித்தார்கள். (நாங்கள் தீவில் மூன்று
மாதம் தங்கினோம்) நாங்கள் புறப்படுவதற்குத்
தயாரானபோது எங்களுக்குத் தேவையான
பொருட்களை மக்கள் கொடுத்தார்கள்.

### பவுல் ரோமுக்குப் போகிறான்

அலெக்ஸாண்டிரியாவிலிருந்து வந்த ஒரு
கப்பலில் நாங்கள் ஏறினோம். குளிர் காலத்தில்
அக்கப்பல் மெலித்தா தீவில் தங்கியிருந்தது.
மிதுனம்* என்னும் சின்னம் கப்பலின் முன்
புறத்தில் இருந்தது. 12சிராகூஸ் நகரில் நாங்கள்
கப்பலை நிறுத்தினோம். மூன்று நாட்கள் சிரா
கூஸில் தங்கியிருந்து பின் புறப்பட்டோம்.
13ரேகியு நகருக்கு நாங்கள் வந்தோம். தென்
மேற்கிலிருந்து மறுநாள் ஒரு காற்று வீசியது.
எனவே நாங்கள் கடலில் பயணமாக முடிந்தது.
ஒரு நாள் கழித்து நாங்கள் புத்தேயோலி நக
ருக்கு வந்தோம். 14அங்குச் சில சகோதரர்களை
நாங்கள் கண்டோம். ஒருவாரம் தம்மோடு எங்க
ளைத் தங்கியிருக்குமாறு எங்களைக் கேட்டுக்
கொண்டார்கள். இறுதியில் நாங்கள் ரோமை
அடைந்தோம். 15ரோமிலுள்ள விசுவாசிகள்
நாங்கள் அங்கிருப்பதை கேள்விப்பட்டனர்.
அப்பியு சந்தையிலும், மூன்று விடுதிகளிலும்
எங்களைச் சந்திக்கும்படியாக அவர்கள் வந்
தனர். விசுவாசிகளைக் கண்டபோது பவுல்
ஊக்கம் பெற்றான். பவுல் தேவனுக்கு நன்றி
கூறினான்.

### ரோமில் பவுல்

16பின்பு நாங்கள் ரோமுக்குச் சென்றோம்.
ரோமில் பவுல் தனித்து தங்குவதற்கு அனும
திக்கப்பட்டான். ஒரு வீரன் மட்டும் பவுலைக்
காவல் காப்பதற்காக அவனோடு தங்கினான்.
17மூன்று நாளைக்குப் பின் பவுல், சில மிக
முக்கியமான யூதர்களைத் தன்னிடம் வருமாறு
சொல்லியனுப்பினான். அவர்கள் எல்லோரும்
வந்தபோது பவுல், "எனது யூத சகோதரர்
களே, நான் நமது மக்களுக்கு (யூதர்களுக்கு)
எதிராக எதையும் செய்யவில்லை, நம் முன்
னோர்களின் மரபிற்கு எதிராகவும் எதையும்
நான் செய்யவில்லை. ஆனால் என்னை எருச
லேமில் சிறைப்பிடித்து ரோமரிடம் ஒப்படைத்
தனர். 18ரோமர்கள் என்னை விசாரித்தார்கள்.
ஆனால் நான் கொல்லப்படுவதற்கு ஏதுவான
எந்தக் காரணத்தையும் என்னிடம் கண்டு
பிடிக்க முடியவில்லை. எனவே அவர்கள்
என்னை விடுதலை செய்ய விரும்பினர்.
19ஆனால் அங்கிருந்த யூதர்கள் அதை விரும்ப
வில்லை. எனவே நான் என்னை இராயரிடம்
வழக்காடும்படியாக ரோமுக்கு கொண்டு
வருமாறு கேட்க வேண்டியதாயிற்று. ஆனால்
எனது மக்கள் தவறிழைத்தார்கள் என்று நான்
குற்றம் சாட்டிக் கொண்டிருக்கவில்லை.
20எனவே தான் உங்களைச் சந்தித்து உங்க
ளோடு பேச விரும்பினேன். இஸ்ரவேலரின்
நம்பிக்கையை நான் கொண்டிருப்பதால் இவ்
விலங்குகளால் கட்டப்பட்டிருக்கிறேன்" என்
றான்.

21யூதர்கள் பவுலுக்குப் பதிலாக, "நாங்
கள் உன்னைக் குறித்து யூதேயாவிலிருந்து
கடிதங்கள் எதையும் பெறவில்லை. அங்
கிருந்து பயணம் செய்த எந்த யூத சகோதரரும்
உன்னைக் குறித்து செய்தி கொண்டுவரவோ,
உன்னைப் பற்றித் தவறாக எதையும் கூறவோ
இல்லை. 22நாங்கள் உனது கருத்துக்களை
அறிய விரும்புகிறோம். இந்தக் கூட்டத்தின
ருக்கு (கிறிஸ்தவர்களுக்கு) எதிராக எல்லா
இடங்களின் மக்களும் பேசிக்கொண்டிருப்
பதை நாங்கள் அறிவோம்" என்றனர். 23பவு
லும் யூதரும் கூட்டத்திற்கு ஒரு நாளைத் தேர்ந்து
கொண்டனர். அந்த நாளில் இன்னும் பல
யூதர்கள் பவுலை அவனது வீட்டில் சந்தித்
தனர். நாள் முழுவதும் பவுல் அவர்களிடம்
பேசினான். தேவனுடைய இராஜ்யத்தைக்
குறித்து பவுல் அவர்களுக்கு விளக்கினான்.
இயேசுவைக் குறித்த காரியங்களில் அவர்கள்
நம்பிக்கை கொள்ளச் செய்ய முயன்றான். மோ
சேயின் சட்டங்களையும் தீர்க்கதரிசிகளின்
எழுத்துக்களையும் இதற்குப் பயன்படுத்
தினான்.

24சில யூதர்கள் பவுல் கூறியவற்றை
நம்பினார்கள். ஆனால் மற்றவர்கள் அதை
நம்பவில்லை. 25அவர்களிடையே ஒரு கருத்து
வேறுபாடு ஏற்பட்டது. யூதர்கள் புறப்படுவதற்
குத் தயாராக இருந்தனர். ஆனால் பவுல் அவர்
களுக்கு வேறொரு செய்தியையும் சொல்லிய
னுப்பினான். பரிசுத்த ஆவியானவர் ஏசாயா
தீர்க்கதரிசியின் மூலமாக உங்கள் முன்னோ
ருக்கு உண்மையைக் கூறினார். அவர்,

26 'இம்மக்களிடம் போய் அவர்களுக்குக்
கூறு. நீங்கள் கவனிப்பீர்கள், நீங்கள் கேட்
பீர்கள், ஆனால் புரிந்து கொள்ளமாட்டீர்
கள். நீங்கள் காண்பீர்கள், நீங்கள் பார்ப்
பீர்கள், ஆனால் நீங்கள் பார்ப்பவற்றை
புரிந்துகொள்ளமாட்டீர்கள்.
27 ஆம், இம்மக்களின் இருதயங்கள் கடினப்
பட்டுள்ளன. இம்மக்களுக்கு காதுகள் உள்
ளன. ஆனால் அவர்கள் கேட்பதில்லை.
இம்மக்கள் உண்மையைக் காணவும்
மறுக்கிறார்கள். இம்மக்கள் தம் கண்
களால் பார்க்காமலும், தம் காதுகளால்
கேளாமலும் தம் மனங்களால் புரிந்து
கொள்ளாமலும் இருக்கப் போவதா
லேயே இது நடந்தது.அவர்கள் குணமடை
வதற்காக என்னை நோக்கி திரும்பாமல்
இருப்பதற்காகவே இது நிகழ்ந்தது'

*ஏசாயா 6:9,10*

என்றார்.

28"தேவன் தமது இரட்சிப்பை யூதரல்லாத
மக்களுக்கு அனுப்பினார் என்பதை யூதராகிய

---

***மிதுனம்*** *இரட்டைக் கடவுள். இவர்கள் கேஸ்டர் மற்றும் போலுக்ஸ் எனப்படும் கிரேக்க தெய்வங்களின் சிலைகள்.*

*நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டுமென*
*நினைக்கிறேன். அவர்கள் கவனிப்பார்கள்!”*
*என்றான்.* 29*
30*அவனது வாடகை வீட்டில் பவுல் இரண்டு*
*ஆண்டுகள் முழுவதும் தங்கியிருந்தான். அவ*
*னைச் சந்திக்கும்படியாக வந்த மக்களை*
*வரவேற்றான்.* 31*பவுல் தேவனுடைய இராஜ்*
*யத்தைக் குறித்துப் போதித்தான். கர்த்தர்*
*இயேசு கிறிஸ்துவைக் குறித்துக் கற்பித்தான்.*
*அவன் தைரியசாலியாக இருந்தான். அவன்*
*பேசுவதை நிறுத்த ஒருவரும் முயற்சிக்க*
*வில்லை.*

---

***வாக்கியம் 29*** *பிற்காலத்தில் வந்த சில அப்போஸ்தலர் நடபடிகள் பிரதிகளில் 29வது வாக்கியம் சேர்க்கப்பட்டுள்ளது “பவுல் இதனைச் சொன்ன பிறகு, யூதர்கள் சென்றனர். ஒருவரோடு ஒருவர் மிகவும் விவாதித்துக் கொண்டனர்.”*

# ரோமாபுரியாருக்கு எழுதிய கடிதம்

1 இயேசு கிறிஸ்துவின் ஒரு ஊழியனும், அப்
போஸ்தலனாகும்படி தேவனால் அழைக்க
பட்டவனுமாகிய பவுல் எழுதுவது: தேவனு
டைய நற்செய்தியை எல்லாருக்கும் சொல்வ
தற்காக நான் தேர்ந்தெடுக்கப்பட்டேன்.
2தனது மக்களுக்கு நற்செய்தியை தரப்போ
வதாகத் தேவன் ஏற்கெனவே வாக்குறுதி தந்
துள்ளார். தேவன் தனது தீர்க்கத்தரிசிகள்
மூலம் இவ்வாக்குறுதியை வழங்கினார். இந்த
வாக்குறுதி பரிசுத்த வேதவாக்கியங்களில்*
எழுதப்பட்டுள்ளது. 3-4அந்த நற்செய்தி தேவனு
டைய குமாரனும் நமது கர்த்தருமாகிய இயேசு
கிறிஸ்துவைப் பற்றியது. ஒரு மனிதனைப்
போன்று அவர் தாவீதின்* குடும்பத்தில் பிறந்
தார். ஆனால் பரிசுத்த ஆவியானவரின் மூலம்
இயேசு தேவனுடைய குமாரன் என்பதை மர
ணத்தில் இருந்து உயிர்த்தெழுந்ததன் மூலம்
பலமாய் நிரூபித்துக் காட்டினார். கிறிஸ்துவின்
மூலம் தேவனுக்குச் சேவை செய்யும் சிறப்பை
எனக்குக் கொடுத்தார். தேவன் மேல் நம்பிக்
கையும், கீழ்ப்படிதலுமுள்ளவர்களாக உலகில்
உள்ள அனைத்து நாட்டு மக்களையும் வழிநடத்
தும்படிக்கு இப்பணியை தேவன் எனக்குக்
கொடுத்தார். நான் கிறிஸ்துவுக்காக இப்பணி
யைச் செய்கிறேன். 6ரோமிலுள்ள நீங்களும்
இயேசு கிறிஸ்துவுக்கு உரியவர்களாக அழைக்
கப்பட்டீர்கள்.
7தன் பரிசுத்த மக்களாக தேவனால் அழைக்
கப்பட்ட, ரோமிலுள்ள உங்கள் அனைவருக்
கும் இக்கடிதம் எழுதப்படுகிறது. தேவனுடைய
நேசத்துக்குரியவர்கள் நீங்கள். பிதாவாகிய
தேவனாலும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவா
லும் உங்களுக்கு கிருபையும், சமாதானமும்
உண்டாவதாக.

### நன்றியின் பிரார்த்தனை

8முதலில் நான் உங்களுக்காக இயேசு கிறிஸ்
துவின் மூலம் தேவனுக்கு நன்றி சொல்ல
விரும்புகிறேன். ஏனென்றால் உலகின் பல
பகுதிகளிலுள்ள மக்களும் உங்களது பெரிய
விசுவாசத்தைப் பற்றியே பேசிக் கொண்டி
ருக்கிறார்கள். 9-10ஒவ்வொரு முறையும் பிரார்த்
தனை செய்யும்போதெல்லாம் உங்களை நான்
நினைத்துக் கொண்டிருக்கிறேன். இது உண்
மை என தேவனுக்குத் தெரியும். மக்களிடம்
தேவனுடைய குமாரனைப் பற்றிய நற்செய்
தியைக் கூறுவதன் மூலம் தேவன் ஒருவருக்கே
நான் எனது ஆவியின் வழியே சேவை செய்
கிறேன். உங்களிடம் வர அனுமதிக்குமாறு
தேவனிடம் பிரார்த்திக்கிறேன். தேவன் விரும்
பினால் இது நிகழும். 11நான் உங்களைப்
பார்க்க மிகவும் விரும்புகிறேன். உங்களைப்
பலப்படுத்தும் ஆவிக்குரிய வரங்களை உங்க
ளுக்குத் தர நான் விரும்புகிறேன். 12நம்மிடம்
உள்ள விசுவாசத்தின் மூலம் நாம் ஒருவருக்
கொருவர் உதவி செய்து கொள்ள வேண்டும்
என்று விரும்புகிறேன். எனது விசுவாசம்
உங்களுக்கும், உங்கள் விசுவாசம் எனக்கும்
உதவியாக இருக்கும். 13சகோதர, சகோதரி
களே, உங்களிடம் வருவதற்காக நான் பல
முறை திட்டமிட்டேன். ஆனால் இப்போதுவரை
நான் வரத் தடை செய்யப்பட்டேன். நீங்கள்
ஆத்தும வளர்ச்சியைப் பெறுவதற்காக நான்
அங்கே வர விரும்புகிறேன். யூதர் அல்லாத
மக்களுக்கு நான் உதவியது போலவே நான்
உங்களுக்கும் உதவ விரும்புகிறேன்.
14கிரேக்கர்களுக்கும், கிரேக்கர் அல்லாதவர்
களுக்கும், அறிவுள்ளவர்களுக்கும், அறிவற்
றோருக்கும் நான் சேவை செய்ய கடனாளியா
யிருக்கிறேன். 15அதனால் தான் நான் ரோமி
லுள்ள உங்களுக்கும் நற்செய்தியைப் போதி
க்க விரும்புகிறேன்.
16நான் நற்செய்தியைப் பற்றி பெருமிதம்
கொள்கிறேன். விசுவாசமுள்ள அனைவரை
யும் இரட்சிக்கவும், முதலில் யூதர்களையும்
பின்னர் யூதர் அல்லாதவர்களையும் இரட்சிக்க
வும் தேவன் பயன்படுத்திய வல்லமை இந்த
நற்செய்தியே ஆகும். 17தேவன் எவ்வாறு நீதி
மான்களை உருவாக்குகிறார் என்று நற்
செய்தி காட்டுகிறது. மக்களை நீதிமான்களாக
தேவன் உருவாக்கும் வழிமுறையானது விசு
வாசத்திலேயே தொடங்கி முடிகிறது. எழுதியி
ருக்கிறபடி “தேவன் மேலுள்ள விசுவாசத்தால்
நீதிமான் என்றென்றும் வாழ்ந்திருப்பான்.”*

### அனைவரும் பாவிகளே

18தேவனுடைய கோபம் பரலோகத்தில் இரு
ந்து வெளிப்பட்டுக் கொண்டிருக்கிறது. தேவ
னுக்கு எதிராக மக்களால் செய்யப்படும்

---

**வேதவாக்கியங்கள்** பரிசுத்த வேத எழுத்துக்கள், பழைய ஏற்பாடு.

**தாவீது** கிறிஸ்துவுக்கு 1000 ஆண்டுகளுக்கு முன் இஸ்ரவேலின் அரசன்.

**தேவன் ... வாழ்ந்திருப்பான்** ஆபகூக் 2:4.

அனைத்து பாவங்களும், பிழைகளும் தேவனு
டைய கோபத்துக்குக் காரணம். அவர்களிடம்
உண்மை இருக்கிறது. ஆனால் தமது பாவ
வாழ்வால் உண்மையை மறைத்து விடுகி
றார்கள். **19**தேவனைப் பற்றி அனைத்தும்
அவர்களுக்குத் தெரியும்படி செய்யப்பட்டது.
எனவே, தேவன் தனது கோபத்தைக் காட்டுகி
றார். ஆமாம், தன்னைப் பற்றிய அனைத்தை
யும் தேவனே தெளிவாக வெளிக்காட்டியுள்
ளார். **20**தேவனைப் பற்றிய பல உண்மைகள்
மனிதர்களால் காண முடியாததாக உள்ளது.
அவர் முடிவில்லாத வல்லமையும், தெய்வத்து
வமும் கொண்டவர். ஆனால் உலகம் உண்
டான நாள் முதல் மக்களால் அவரை அவரது
படைப்புகள் மூலம் எளிதில் புரிந்துகொள்ளும்
விதத்திலேயே இருக்கிறார். அதனால் மக்கள்
தாங்கள் செய்யும் தீய காரியங்களுக்கு சாக்குப்
போக்கு சொல்லி தப்பித்துக்கொள்ள இய
லாது. **21**தேவனைப் பற்றி மக்களுக்குத் தெரி
யும். ஆனால் அவர்கள் தேவனை மகிமைப்
படுத்துவதில்லை; அவருக்கு நன்றி சொல்வ
தும் இல்லை. மக்கள் எண்ணங்களில் பயனற்
றுப்போயினர். அவர்களின் அறிவீனமான
நினைவுகளில் இருள் நிறைந்திருக்கிறது. **22**மக்
கள் தம்மைப் புத்திசாலிகள் என்று கூறிக்
கொண்டே அறிவற்றோராக விளங்குகிறார்
கள்.

**23**அவர்கள் எப்பொழுதும் நிலைத்திருக்
கும் தேவனின் மகிமையை விட்டொழிந்தார்
கள். மக்கள் அந்த மகிமையை சாதாரண
மண்ணுலக மக்களைப் போன்றும், பறவை
கள், மிருகங்கள், பாம்புகள் ஆகியன போன்
றும் உள்ள உருவ வழிபாட்டுக்கு மாற்றிவிட்
டார்கள்.

**24**மக்கள் பாவங்களால் நிறைந்து, கெட்ட
வற்றைச் செய்யவே விரும்பினர். எனவே
தேவன் அவர்களை விட்டு விலகி, பாவ
வழியிலேயே அவர்கள் தொடர்ந்து செல்ல
விட்டுவிட்டார். அதனால் மக்கள் ஒவ்வொருவ
ரும் தம் சரீரங்களை அவமானப்படுத்தி முறை
யற்ற வாழ்வில் தம்மைக் கெடுத்தனர். **25**தேவ
னுடைய உண்மையை அவர்கள் பொய்யாக
மாற்றி விட்டார்கள். அவர்கள் தேவனை வண
ங்கவில்லை. அவர் அவர்களை படைத்தவர்!
தேவன் என்றென்றும் புகழப்படுவதற்குரிய
வர். ஆமென்.

**26**மக்கள் அவ்விதமான காரியங்களைச்
செய்ததால், அவர்கள் அவமானத்துக்குரியவற்
றில் ஈடுபட்டனர். தேவன் அவர்களை விட்டு
விலகி விட்டார். பெண்கள் ஆண்களோடு
கொள்ளவேண்டிய இயற்கையான பாலுறவை
விட்டுவிட்டு இயல்பற்ற வகையில் பிற பெண்
களோடு பாலுறவுகொள்ளத் தொடங்கினர்.
**27**அவ்வாறே ஆண்களும் இயல்பான முறை
யில் பெண்களோடு உறவு கொள்வதை விட்டு
விட்டனர். அதனால் தவறான காமவெறியி
னால் ஆண்களோடு ஆண்கள் அவலட்சண
மாக உறவு கொண்டதால் அந்த அக்கிரமத்துக்
குரிய தண்டனையையும் தம் சரீரத்தில் பெற்
றுக்கொண்டனர்.

**28**தேவனைப் பற்றிய உண்மையான அறி
வைப் பெற்றுக்கொள்ள வேண்டியது முக்கி
யம் என்று மக்கள் நினைக்கவில்லை. எனவே
தேவன் அவர்களைக் கைவிட்டு விட்டார்.
அவர்கள் தங்கள் பயனற்ற சிந்தனைகளில்
அமிழ்ந்து கிடக்க அனுமதித்தார். எனவே
அவர்கள் செய்யக் கூடாதவற்றையெல்லாம்
செய்து வந்தனர். **29**எல்லாவிதமான பாவம்,
தீமை, சுயநலம், வெறுப்பு போன்றவை
அனைத்தும் அவர்களிடம் நிறைந்து காணப்
பட்டன. அவர்கள் பொறாமை, கொலை,
சண்டை, பொய், வம்பு ஆகியவற்றைக் கொண்
டவர்களாய் விளங்கினர். **30**ஒருவரைப் பற்றி
ஒருவர் கெட்ட செய்தியைப் பரப்பிக்கொண்ட
னர். அவர்கள் தேவனை வெறுத்தனர். அவர்
கள் முரடர்களாகவும், அகந்தையுள்ளவர்களா
கவும், தம்மைப்பற்றி வீண் தம்பட்டம் அடித்துக்
கொள்பவர்களாகவும் இருந்தனர். தீயகாரியங்
களைச் செய்ய புதுப்புது வழிகளைக் கண்டு
பிடித்தனர். தம் பெற்றோர்களுக்குக் கீழ்ப்படி
யாதவர்களாய் இருந்தனர். **31**அவர்கள் முட்
டாள்களாய் இருந்தனர். கொடுத்த வாக்குறுதி
களைக் காப்பாற்றத் தவறினர். அவர்கள்
மற்றவர்களிடம் இரக்கமும், கருணையும் காட்
டியதே இல்லை. **32**அவர்களுக்கு தேவனுடைய
சட்டம் தெரியும். இதுபோல் பாவம் செய்கிறவர்
கள் மரணத்துக்கு உரியவராவார் என்பதை
யும் அவர்கள் அறிவர். ஆனால் அவர்கள்
அத்தகைய பாவங்களையே தொடர்ந்து செய்த
னர். அதோடு இவ்வாறு பாவம் செய்கிற
மற்றவர்களையும் பாராட்டி வந்தனர்.

### யூதர்களும் பாவிகளே

2 மற்றவர்களைக் குற்றவாளி என்று தீர்ப்பு
அளிக்க உன்னால் முடியும் என நீ எண்
ணுவாயானால் நீயும் குற்ற உணர்விற்குரிய
வன்தான். பாவம் செய்பவனாகவும் இருக்கி
றாய். அவர்களுக்குத் தீர்ப்பளிக்கிற நீயும் அதே
பாவச் செயல்களைச் செய்கிறாய். உண்மை
யில் நீயே குற்றவாளியாக இருக்கும்போது
நீ எவ்வாறு மற்றவர்களைக் குற்றம் சாட்ட
முடியும். **2**இத்தகையவர்களுக்குத் தேவன் தீர்ப்
பளிப்பார். அவரது தீர்ப்பு நீதியாய் இருக்கும்.
**3**அத்தவறான செயல்களைச் செய்பவர்களுக்கு
நீயும் தீர்ப்பளிக்கிறாய். ஆனால் அதே தவறு
களை நீயும் செய்கிறாய். தேவனுடைய தீர்ப்பி
லிருந்து தப்பிக்க முடியாது என்பது உனக்குத்
தெரியுமா? **4**தேவன் உன்னிடம் மிகக் கருணை
யோடும் பொறுமையாகவும் இருக்கிறார். அவ
ரிடம் திரும்பி வருவாய் எனக் காத்திருக்கி
றார். ஆனால் அவரது கருணையைத் தெரிந்து
கொள்ளாமல் இருக்கிறாய். ஏனென்றால் உன்
இதயத்தையும் வாழ்வையும் நல்வழியில் திருப்
பும் அவரது நோக்கத்தை நீ உணர்ந்து
கொள்ளவில்லை. **5**நீ கடினமாகவும், உறுதியா
கவும் இருக்கிறாய். நீ மாற மறுக்கிறாய். உன்

தண்டனையை மிகுதிப்படுத்துகிறாய். தேவனு
டைய கோபம் வெளிப்படும் நாளில் நீ தண்ட
னையைப் பெறுவாய். அன்று மக்கள் தேவனு
டைய சரியான தீர்ப்பினை அறிந்துகொள்வர்.
6ஒவ்வொரு மனிதனும் செய்த செயல்களுக்
கேற்றபடி அவனுக்குத் தேவன் நற்பலனோ,
தண்டனையோ கொடுப்பார். 7சிலர் தேவனு
டைய மகிமைக்காகவும், கனத்துக்காகவும்,
என்றும் அழிவற்ற வாழ்வுக்காகவும் வாழ்கி
றார்கள். நல்ல காரியங்களைத் தொடர்ந்து
செய்வதன் மூலம் இத்தகு வாழ்வை அவர்கள்
வாழ்கிறார்கள். அவர்களுக்கு நித்திய வாழ்
வைத் தேவன் தருகிறார். 8மற்றவர்களோ சுய
நலவாதிகளாகி, உண்மையைக் கடைப்பிடிக்க
மறுக்கின்றனர். அவர்கள் பாவத்தின் வழி
நடப்பவர்கள். இவர்களுக்குத் தேவன் தண்ட
னையையும், கோபாக்கினையையும் வழங்கு
வார். 9முதலில் யூதர்களுக்கும் பின்பு யூதர்
அல்லாதவர்களுக்கும், தீங்கு செய்கிற எவருக்
கும் தேவன் துயரமும், துன்பமும் கொடுப்பார்.
10முதலில் யூதர்களிலும் பின்பு யூதர் அல்லா
தவர்களிலும் நன்மை செய்கிற எவருக்கும்
தேவன் மகிமையையும், கனத்தையும், சமாதா
னத்தையும் தருவார். 11தேவன் அனைத்து
மக்களுக்கும் ஒரே விதமாகவே தீர்ப்பளிப்பார்.
12தேவனுடைய சட்டத்தை* அறிந்தவர்களா
னாலும், அதைப்பற்றி கேள்விப்பட்டிராத மக்
களாயினும் பாவம் செய்யும் போது ஒத்த
நிலை உடையவர்களாக ஆகிறார்கள். சட்ட
அறிவு அற்றவர்களாகவும், பாவிகளாகவும்
இருப்பவர்கள் கைவிடப்படுவார்கள். அதே
போல், சட்டம் தெரிந்தும் பாவம் செய்தவர்கள்
அதே சட்டத்தின்படி தீர்ப்பளிக்கப்படுவார்கள்.
13ஒருவன் சட்ட அறிவைப் பெறுவதன் மூலம்
தேவனுக்கு முன்பாக நீதிமானாக முடியாது.
சட்டம் சொல்லும் வழிமுறைகளின்படி வாழும்
போது மட்டுமே தேவனுடைய முன்னிலையில்
ஒருவன் நீதிமானாக வாழமுடியும். 14யூதரல்லா
தவர்களுக்கு நியாயப்பிரமாணம் இல்லை,
எனினும் அவர்கள் இயல்பாக நியாயப் பிரமா
ணத்தின்படி செய்கிறபோது நியாயப் பிரமா
ணம் இல்லாவிட்டாலும் தங்களுக்குத் தாங்
களே நியாயப்பிரமாணமாய் இருக்கிறார்கள்.
15அவர்களின் மனதுக்கு எது சரி, எது தவறு
என்று தெரிகிறது. அவர்களின் சிந்தனையே
குற்றமுள்ளது எது என்றும், சரியானது எது
என்றும் கூறுவதினால் அவர்கள் நியாயப்பிர
மாணத்திற்கேற்ற செயல்கள் தங்கள் இதயங்க
ளில் எழுதியிருக்கிறதென்று காட்டுகிறார்கள்.
16தேவன் மறைவான எண்ணங்களுக்கும் தீர்ப்
பளிப்பார். அந்நாளில் மக்களின் மனதுக்குள்
இருக்கும் மறைபொருட்கள் வெளிவரும். நான்
மக்களுக்குச் சொல்லும் நற்செய்தியின்படி
தேவன் இயேசு கிறிஸ்துவின் மூலம் தீர்ப்பளிப்
பார்.

## யூதர்களும் நியாயப்பிரமாணமும்

17நீ என்ன செய்யப்போகிறாய்? நீ யூத
னென்று சொல்லிக்கொள்கிறாய். நீ நியாயப்பி
ரமாணத்தில் விசுவாசம் வைத்து தேவனுக்கு
நெருக்கமாய் இருப்பதாக பெருமையோடு
சொல்லிக்கொள்கிறாய். 18தேவன் உனக்கு
என்ன செய்ய விரும்புகிறார் என்று உனக்குத்
தெரியும். நீ நியாயப்பிரமாணத்தைக் கற்றவ
னாதலால் உனக்கு எது முக்கியமானது என்
றும் தெரியும். 19என்ன செய்வதென்று தெரியா
மல் இருக்கிற மக்களுக்கு நீங்களே வழிகாட்டி
என எண்ணிக் கொள்கிறீர்கள். பாவ இருட்
டில் உள்ள மக்களுக்கு நீங்களே வெளிச்சம்
என்று நினைத்துக் கொள்கிறீர்கள். 20அறி
வற்ற மக்களுக்கு சரியானதைக் காட்ட முடியும்
என்று கருதுகிறீர்கள். இன்னும் கற்கவேண்
டிய அவசியம் உள்ளவர்களுக்கு நீங்களே குரு
என்றும் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்.
உங்களிடம் நியாயப்பிரமாணம் இருப்பதால்
எல்லாம் உங்களுக்குத் தெரியும் என்றும்,
எல்லா உண்மைகளும் உங்களிடம் இருப்பதா
கவும் எண்ணுகிறீர்கள். 21நீங்கள் மற்றவர்க
ளுக்குக் கற்றுக்கொடுக்கிறீர்கள். நீங்கள் ஏன்
கற்றுக்கொள்ளக் கூடாது? நீங்கள் மற்றவர்களி
டம் களவு செய்யக்கூடாது என்று கூறுகிறீர்
கள். ஆனால் நீங்களே களவு செய்கிறீர்கள்.
22நீங்கள் மற்றவர்களிடம் விபச்சாரம் செய்யக்
கூடாது என்று கூறுகிறீர்கள். ஆனால் நீங்களே
அதே பாவத்தைச் செய்யும் பாவிகளாக இருக்
கிறீர்கள். சிலைகளை நீங்கள் வெறுக்கிறீர்கள்.
ஆனால் அதே கோவில்களைக் கொள்ளைய
டிக்கிறீர்கள். 23நீங்கள் தேவனுடைய நியாயப்பி
ரமாணம் பற்றி பெருமையாகப் பேசுகிறீர்கள்.
ஆனால் அதை மீறி நடந்து தேவனுக்கு அவமா
னத்தை உருவாக்குகிறீர்கள். 24“யூதர்களால்
தான் யூதர் அல்லாதவர்கள் தேவனைப் பற்றி
இழிவாகப் பேசுகிறார்கள்”* என்று வேதவாக்
கியங்களில் எழுதப்பட்டுள்ளது.

25நீங்கள் நியாயப்பிரமாணத்தைக் கடை
பிடித்தால்தான் விருத்தசேதனம் செய்து
கொண்டதில் பொருள் உண்டு. நீங்கள் சட்ட
விதிகளை மீறுவீர்களேயானால் நீங்கள்
விருத்தசேதனம் செய்தும் அது பயனற்றதாகி
றது.

26யூதர் அல்லாதவர்கள் விருத்தசேதனம்
செய்து கொள்ளாதவர்களே. எனினும் அவர்
கள் சட்டவிதிகளின்படி வாழ்வார்களேயா
னால் அவர்களும் விருத்தசேதனம் செய்து
கொண்டவர்களாகவே கருதப்படுவர். 27யூதர்க
ளாகிய உங்களுக்கு எழுதப்பட்ட சட்டவிதிக
ளும், விருத்தசேதனமும் உள்ளன. ஆனால்
அவற்றை நீங்கள் மீறுகிறீர்கள். எனவே தம்
சரீரங்களில் விருத்தசேதனம் செய்துகொள்ளா
தவர்களாக இருந்தும் கூட சட்டவிதிகளை
மதித்து நடப்பவர்கள் உங்கள் குற்றத்தை
நிரூபித்து விடுகிறார்கள்.

---

**சட்டம்** தேவனுடைய பிரமாணம். இது மோசேயின் சட்டங்களை பிரதிநிதித்துவப்படுத்தும்.

**யூதர்களால் ... பேசுகிறார்கள்** ஏசாயா 52:5.

[28]சரீரத்தால் யூதனாகப் பிறந்தவன் எவனும் உண்மையில் யூதன் அல்லன். உண்மையான விருத்தசேதனம் என்பது சரீரத்தளவில் செய்யப்படுவது அல்ல; [29]மனத்தளவில் யூதனாக இருப்பவனே உண்மையான யூதன். உண்மையான விருத்தசேதனம் இதயத்தில் செய்யப்படுவது. அது ஆவியால் செய்யப்படுவது. அது எழுதப்பட்ட ஆணைகளால் செய்யப்படுவதல்ல. ஆவியின் மூலம் இதயத்தில் விருத்தசேதனம் செய்யப்படும் ஒருவன் மக்களால் புகழப்படாவிட்டாலும் தேவனால் புகழப்படுவான்.

3 எனவே மற்றவர்களிடம் இல்லாத உயர்வு யூதர்களிடம் மட்டும் என்ன உள்ளது? அவர்களின் விருத்தசேதனம் என்பதில் அடங்கி இருக்கும் சிறப்பு என்ன? [2]யூதர்களிடம் நிறைய சிறப்புத் தன்மைகள் உள்ளன. தேவன் அவர்களை நம்பியே தம் போதனைகளைக் கொடுத்தார். இதுதான் மிக சிறப்பான மேன்மையாகும். [3]சில யூதர்கள் தேவனுடைய நம்பிக்கைக்கு உரியவர்களாக இல்லை என்பது உண்மையாகும். எனினும் அது தேவனுடைய வாக்குறுதியை மதிப்பற்றதாகச் செய்யாது. [4]உலகில் உள்ள அத்தனை மக்களும் பொய்யராகிப் போனாலும் தேவன் தொடர்ந்து உண்மையுள்ளவராகவே இருப்பார்.

> நீர் உமது வார்த்தைகளில் நீதியுள்ளவராய் விளங்குவீர். உம்முடைய நியாயம் விசாரிக்கப்படும்போது வெற்றியடைவீர்" சங்கீதம் 51:4

என்று வேதவாக்கியங்களில் எழுதப்பட்டுள்ளது.

[5]நாம் தவறு செய்யும்போது, தேவன் சரியானவர் என்று தெளிவாக அது காட்டிவிடும். எனவே தேவன் நம்மைத் தண்டிக்கும்போது அவர் நீதியில்லாதவர் என்று கூற முடியுமா? (சிலர் இவ்வாறு கூறுவதாக எண்ணுகிறேன்.) [6]கூடாது? நம்மைத் தேவன் தண்டிக்க முடியாமல் போனால், பின்பு உலகத்தையும் தேவனால் நியாயந்தீர்க்க முடியாமல் போகும்.

[7]"நான் பொய் சொல்லும்போது அது தேவனுக்குப் பெருமையே சேர்க்கிறது. ஏனெனில் என் பொய் தேவனுடைய உண்மையை விளங்க வைக்கிறது. அப்படி இருக்கும்போது நான் ஏன் பாவி என்று தீர்ப்பளிக்கப்பட வேண்டும்?" என்று ஒருவன் கேட்கிறான். [8]"நாம் தீமை செய்வோம். அதன் மூலம் நன்மை வரும்" என்று சொல்வதைப் போலாகும் அது. ஆனால் சிலர் அவ்வாறுதான் நாங்கள் போதிக்கிறோம் என்று விமர்சிக்கிறார்கள். அவர்கள் சொல்வது தவறு. அவர்கள் கண்டிக்கப்பட வேண்டும்.

### அனைவரும் குற்றவாளிகளே

[9]யூதர்களாகிய நாம் மற்றவர்களைக் காட்டிலும் சிறப்பு மிக்கவர்களா? இல்லை. யூதர்களும், யூதரல்லாதவர்களும் சமமானவர்கள் என்று ஏற்கெனவே கூறியிருக்கிறோம். அவர்கள் எல்லாம் குற்றம் உடையவர்களே. [10]எழுதப்பட்டப்படி,

> "சரியானவன் ஒருவன் கூட இல்லை.
> [11]புரிந்து கொள்கிறவனும் எவனுமில்லை. உண்மையில் தேவனோடு இருக்க விரும்புகிறவனும் யாரும் இல்லை.
> [12] எல்லாரும் வழிதப்பியவர்கள். எல்லோருமே பயனற்றுப்போனவர்கள். நல்லவை செய்பவன் ஒருவனாகிலும் இல்லை."
>
> சங்கீதம் 14:1-3

> [13]"அவர்களின் வாய்கள் திறந்த சவக்குழிகள் போன்றவை; தங்கள் நாக்குகளை பொய் சொல்லவே பயன்படுத்துகிறார்கள்."
>
> சங்கீதம் 5:9

> "அவர்கள் சொல்லும் காரியங்கள் பாம்புகளின் விஷத்தைப் போன்றது."
>
> சங்கீதம் 140:3

> [14]"அவர்களது வாய் சபிப்பினாலும் கசப்பினாலும் நிறைந்துள்ளது."
>
> சங்கீதம் 10:7

> [15] அவர்கள் எப்போதும் தாக்கவும் கொலைசெய்யவும் தயாராக உள்ளனர்.
> [16] அவர்கள் செல்லும் வழிகளில் நாசமும் துன்பமும் உள்ளன.
> [17] அவர்களுக்குச் சமாதானத்தின் வழி தெரியாது."
>
> ஏசாயா 59:7-8

> [18]"அவர்களிடம் தெய்வ பயமில்லை;தேவனிடம் மரியாதையும் இல்லை."
>
> சங்கீதம் 36:1

[19]நியாயப்பிரமாணம் சொல்லுவதெல்லாம் அதற்கு உட்பட்டவர்களுக்கே. இது யூதர்களின் வாய்களை அடைத்துவிட்டது. இது உலகத்தார் அனைவரையும் தேவனுடைய நியாயத்தீர்ப்புக்கு கீழ்ப்படியும்படி செய்தது. [20]ஏனென்றால் எந்த மனிதனும் நியாயப்பிரமாணத்தின் செயல்களினாலே தேவனுக்கு முன்பாக நீதிமானாக்கப்படுவதில்லை. நியாயப்பிரமாணத்தின் நோக்கம் பாவம் பற்றிய உணர்வைக் கொண்டு வருவதுதான்.

### நீதி செய்யும் தேவன்

[21]சட்டவிதிகளின் உதவி இல்லாமலேயே தேவன் மக்களை சரியான வழியில் நடத்துகிறார். தேவன் இப்போது நமக்குப் புதிய வழியைக் காட்டியுள்ளார். சட்டங்களும், தீர்க்க

தரிசிகளும் இப்புதியவழியைப் பற்றி பேசியுள்
ளனர். 22இயேசு கிறிஸ்துவின் மேல் வைத்த
விசுவாசத்தின் மூலம் தேவன் மக்களை சரி
யான வழிப்படுத்துகிறார். கிறிஸ்துவில் விசு
வாசம் வைத்திருக்கும் எல்லாருக்கும் தேவன்
இதைச் செய்தார். எந்த வேறுபாடும் இல்லை.
23மக்களனைவரும் பாவம் செய்து தேவனு
டைய மகிமையைப் பெறத் தகுதியில்லாதவ
ராகி விட்டனர். 24இலவசமாய் அவருடைய
கிருபையினாலே கிறிஸ்து இயேசுவில் உள்ள
இரட்சிப்பைக் கொண்டு நீதிமான்களாக்கப்படு
வார்கள். 25விசுவாசத்தின் மூலம் பாவிகள்
மன்னிக்கப்பட தேவன் இயேசுவை ஒரு வழி
யாக வகுத்தார். இயேசுவின் இரத்தத்தால்
தேவன் இதைச் செய்தார். எது சரியானதோ,
நியாயமானதோ அதையே தேவன் செய்வார்
என்பதை இது காட்டும். கடந்த காலத்தில்
தேவன் மிகப் பொறுமையாக இருந்தார். மக்க
ளின் பாவங்களுக்காக அவர்களைத் தண்டிக்
காமல் விட்டார். 26இவ்வாறு தேவன் சரியான
வழியில் நியாயம் தீர்ப்பார் என்பதை இன்று
இயேசு கிறிஸ்துவின் மூலம் வெளிக்காட்டியுள்
ளார். அதே நேரத்தில் இயேசுவில் விசுவாசம்
உள்ள எவரையும் தேவன் நீதிமான்களாக்குகி
றார். 27எனவே நம்மை நாமே மேன்மை பாராட்
டிக்கொள்ள ஏதேனும் காரணம் உள்ளதாக
இல்லை. எதற்காக இல்லை? சட்டவழிகளின்
படி வாழ்வதால் அல்ல, விசுவாசத்தால் மட்
டுமே. நாம் பெருமை பாராட்டுவதை நிறுத்த
வேண்டும். எதற்காக? 28ஏனென்றால் ஒருவன்
சட்டவழிகளின்படி வாழ்வதால் நீதிமானாக
முடியாது; இயேசுவை விசுவாசிப்பதன்
மூலமே நீதிமானாக முடியும். இதுவே நமது
நம்பிக்கை. 29தேவன் என்பவர் யூதர்களுக்கு
மட்டும் உரியவர் அல்லர். அவர் யூதர் அல்லாத
வர்களுக்கும் உரியவரே. 30ஒரே ஒரு தேவனே
உள்ளார். அவரே யூதர்களையும் அவர்கள்
விசுவாசத்தின் மூலம் நீதிமான்களாக்குகிறார்.
அவ்வாறே யூதரல்லாதவர்களையும் ஆக்குகி
றார். 31விசுவாசத்தின் வழியைப் பின்பற்றுவ
தன் மூலம் சட்ட விதிகளை அழித்து விடுகி
றோமா? இல்லை. இவ்வாறு நாம் உண்மை
யாக சட்டத்தைக் கைக்கொள்கிறோம்.

### ஆபிரகாமின் உதாரணம்

4 நமக்கெல்லாம் தந்தையான ஆபிரகாம்
பற்றி நாம் என்ன சொல்லமுடியும்? அவர்
விசுவாசத்தைப் பற்றி என்ன அறிந்திருந்
தார்? 2ஆபிரகாம் தனது செயல்களினால் நீதி
மானானால் அவர் தன்னைப் பற்றி பெருமை
யாகப் பேசிக்கொள்ள முடியும். ஆனாலும்
தேவனுக்கு முன்னால் பெருமை பாராட்டிக்
கொள்ள ஏதுமில்லை. 3வேதவாக்கியங்கள்
என்ன சொல்கிறது? "ஆபிரகாம் தேவனில்
விசுவாசம் வைத்தான். அது அவனுக்கு நீதி
யாக எண்ணப்பட்டது."* 4ஒரு காரியத்தைச்
செய்கிறவனுக்கு அவனுக்குரிய சம்பளத்தை
யாரும் பரிசாகக் கொடுப்பதில்லை. அதை
சம்பாதித்தே அவன் அடைகிறான். 5தேவ
னுக்கு வேண்டிய நீதிமானாக ஒருவன் மாற
காரியரீதியாக அவன் எதையும் செய்ய முடி
யாது. அவன் தேவன் மீது விசுவாசம் வைக்க
வேண்டும். பின்னரே தேவன் அவனை நீதிமா
னாக ஏற்பார். தேவன் ஒருவரால்தான்
பாவியை நீதிமானாக மாற்ற முடியும். 6தாவீ
தும் இதையே சொன்னார். ஒரு மனிதனின்
செயல்களைத் தேவன் கவனிக்காவிட்டால்
அவன் உண்மையிலேயே மகிழ்ச்சி அடைய
லாம். இந்த வழி அவனை நல்லவனாக ஏற்றுக்
கொள்ளப்படச் செய்கிறது.

7 "எப்பொழுது அவர்களின் சட்டத்துக்கு
மாறான செயல்கள் மன்னிக்கப்படுகி
றதோ, எப்பொழுது அவர்களின்
பாவங்கள் மூடப்படுகிறதோ, அப்பொ
ழுது மக்கள் உண்மையில் ஆசீர்வ
திக்கப்படுகிறார்கள்.
8 யாருடைய பாவங்களைத் தேவன் அவ
னுக்கு எதிராக எண்ணுவதில்
லையோ, அவனே உண்மையில் ஆசீர்
வதிக்கப்பட்டவன்."

*சங்கீதம் 32:1-2*

9இந்தப் பாக்கியம் விருத்தசேதனமுள்ளவ
னுக்கு மட்டும் வருவதில்லை. விருத்தசேதனம்
செய்யாதவர்களுக்கும் வரும். ஆபிரகாமின்
விசுவாசம் தேவனால் ஏற்றுக் கொள்ளப்பட்
டது. அவனும் நீதிமான் ஆனான். 10எனவே,
இது எவ்வாறு ஆயிற்று? ஆபிரகாமை விருத்
தசேதனத்திற்கு முன்னரா, பின்னரா, தேவன்
எப்பொழுது ஏற்றுக்கொண்டார்? முன்னர்
தானே. 11தேவன் தன்னை ஏற்றுக்கொண்டார்
என்று காட்டுவதற்காக ஆபிரகாம் பின்னர்
விருத்தசேதனம் செய்துகொண்டான். விருத்த
சேதனம் செய்வதற்கு முன்பாக, விசுவாசத்
தின் மூலம் தேவனுடன் சரியாக இருந்தான்
என்பதற்கு விருத்தசேதனம் ஒரு அடையாள
மாக இருந்தது. எனவே ஆபிரகாம் விருத்த
சேதனம் செய்யாத, ஆனால் விசுவாசிக்கிற
அனைவருக்கும் தந்தையாக இருக்கிறார்.
அந்த மக்கள் விசுவாசித்து தேவனுக்கு உகந்த
மக்களாக ஏற்றுக்கொள்ளபபடுகிறார்கள்.
12விருத்தசேதனம் செய்து கொண்டவர்களுக்
கும் அவர் தந்தையாகக் கருதப்படுகிறார்.
இதில் அவர்கள் விருத்தசேதனம் செய்து
கொண்டதால் மட்டும் ஆபிரகாம் தந்தையாக
வில்லை. ஆபிரகாம் விருத்தசேதனம் செய்து
கொள்ளுமுன் வைத்திருந்த விசுவாசத்தைப்
போன்று அவர்களும் விசுவாசம் வைத்திருந்த
தால் ஆபிரகாம் அவர்களது தந்தையானான்.

### விசுவாசத்தின் மூலம் நீதி

13ஆபிரகாமுக்கும் அவனது சந்ததியினருக்
கும் முழு உலகமும் கிட்டும் என்ற தேவனு

---

**ஆபிரகாம் ... பட்டது** *ஆதி. 15:6.*

டைய வாக்குறுதி கிடைத்தது. ஆபிரகாம் சட்டவிதிகளைக் கடைப்பிடித்ததால் அவனுக்கு அவ்வாக்குறுதி கிடைக்கவில்லை. அவன் தனது விசுவாசத்தால் தேவனுக்கு முன் நீதிமானாக இருந்தபடியால் இது கிடைத்
தது. [14]சட்ட விதிகளைக் கடைப்பிடிப்பதன் மூலமே தேவனுடைய வாக்குறுதியை மக்கள் பெற்றுக்கொள்ள முடியுமென்றால் பிறகு விசுவாசத்தால், பயனில்லாமல் போகும். ஆபிரகாமுக்குத் தேவனுடைய வாக்குறுதியும் பயனில்
லாமல் போகும். [15]ஏனென்றால் சட்டவிதியானது, அதைக் கடைப்பிடிக்காதவர்களிடம் தேவனுடைய கோபத்தையே உருவாக்கும். எனவே சட்டவிதி இல்லாவிட்டால் பின்னர் கீழ்ப்படியாமையும் இல்லாமல் போகும்.

[16]எனவே மக்கள் தேவனுடைய வாக்குறுதியை விசுவாசத்தின் மூலம் பெறுகின்றனர். இவ்வாறு நிகழ்வதால் இது கொடையாகிறது. இது இலவசமான கொடையானால் இதனை ஆபிரகாமின் பிள்ளைகளாய் விளங்கும் அத்தனை பேரும் பெற்றுக் கொள்கின்றனர். இவ்வாக்குறுதி மோசேயின் சட்டவிதிகளுக்கு கீழ்ப்படிகிறவர்களுக்கு மட்டுமல்ல, அனைவருக்கும் கிடைக்கிறது. ஆபிரகாமைப் போன்று விசுவாசம் கொள்ளும் அனைவரும் அதனைப் பெறலாம். அதனால்தான் ஆபிரகாம் அனைவ
ருக்கும் தந்தையாகிறான். [17]“அநேக தேசத்து மக்களுக்கு நான் உன்னைத் தகப்பனாக உருவாக்கினேன்”* என்று வேதவாக்கியங்களில் எழுதப்பட்டிருக்கின்றது. இது தேவனுக்கு முன் உண்மையாகின்றது. தேவனால் இறந்தவரை உயிர்த்தெழச் செய்ய முடியும். இதுவரை இல்லாதவற்றை இருப்பதாகக் கொண்டுவர இயலும் என்பதை ஆபிரகாம் நம்பினான்.

[18]ஆபிரகாமுக்குப் பிள்ளைகள் பிறப்பார்கள் என்ற நம்பிக்கை இல்லை. ஆனால் அவன் தேவனை நம்பினான். அதனால்தான் அவன் பல தேசத்து மக்களுக்கும் தந்தையானான். தேவன் “உனக்கு அநேக சந்ததிகள் ஏற்படும்”*
என்று சொன்னபடி ஆயிற்று. [19]அவன் ஏறக்குறைய 100 வயதுள்ளவனாய் இருந்தான். அவ்வயதில் பிள்ளைகள் உருவாக உயிர் சக்தியில்லை. அதே சமயத்தில் சாராளாலும் குழந்தை பெற்றுக் கொள்ளமுடியாது. ஆபிரகாம் இதைப்பற்றியும் நினைத்துப் பார்த்தான். ஆனால் தேவன் மேல் வைத்த விசுவாசம் மட்டும் குறையவே இல்லை. [20]வாக்குக் கொடுத்
தபடி தேவன் நடந்து கொள்வார் என்பதில் ஆபிரகாமுக்கு சந்தேகம் வந்ததே கிடையாது. அவன் தன் விசுவாசத்தை இழக்கவில்லை. அவன் தன் விசுவாசத்தில் மேலும் மேலும் பலமுள்ளவன் ஆனான். தேவனைப் புகழ்ந்
தான். [21]தேவன் வாக்குரைத்தபடி செய்ய வல்லவர் என்பதில் உறுதியான நம்பிக்கை உடையவனாக இருந்தான். [22]எனவே “தேவன் ஆபி
ராகாமின் விசுவாசத்தை ஏற்றுக் கொண்டார். அது அவனை தேவனுக்கு முன் நீதிமான் ஆக்கிற்று.”* [23]இது ஆபிரகாமுக்காக மட்டும் எழுதப்படவில்லை. நமக்காகவும் எழுதப்பட்
டது. [24]நம்முடைய விசுவாசத்தின் பொருட்டு தேவன் நம்மையும் ஏற்றுக்கொள்வார். நம் கர்த்தராகிய இயேசுவை மரணத்திலிருந்து எழுப்பிய அத்தேவனை நம்புகிற நமக்கும் அப்படியே எண்ணப்படும். [25]நமது பாவங்க
ளுக்காக இயேசு மரணத்திற்கு ஒப்படைக்கப்பட்டார். நம்மை நீதிமான்களாக்க அவர் மரணத்திலிருந்து எழுப்பப்பட்டார்.

### தேவனுக்கேற்ற நீதிமான்

5 நமது விசுவாசத்தால் நாம் தேவனுக்கேற்ற நீதிமான்களாக்கப்பட்டோம். நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் மூலமாய் தேவனிடத்தில் சமாதானம் பெற்றிருக்கிறோம்.
[2]நமது விசுவாசத்தின் மூலமாக நாம் இன்று மகிழ்கிற தேவனுடைய கிருபைக்குள் நம்மை கர்த்தர் கொண்டு வந்திருக்கிறார். தேவனுடைய மகிமையைப் பங்கிட்டுக் கொள்வதில் உள்ள நம்பிக்கையால் நாம் மிகவும் மகிழ்கி
றோம். [3]நமக்கு ஏற்படுகிற துன்பங்களுக்காகவும் நாம் மகிழ்கிறோம். துன்பங்களுக்காக நாம் ஏன் மகிழ்கிறோம்? ஏனென்றால் இத்துன்பங்கள் தான் நம்மைப் பொறுமை உடையவர்
களாக ஆக்குகிறது. [4]நாம் பலமுடையவர்கள் என்பதற்கு இப்பொறுமையே சான்று. இச்சான்று நமக்கு நம்பிக்கையைக் கொடுக்கிறது.
[5]இந்நம்பிக்கை எப்போதும் நம்மை ஏமாற்றத் துக்குள்ளாக்காது. தோற்கவும் செய்யாது. ஏனென்றால் தேவன் நமது இதயங்கள் நிறைய தன் அன்பைப் பொழிந்திருக்கிறார். பரிசுத்த ஆவியானவரின் மூலமாகத் தன் அன்பைக் கொடுத்தார். தேவனிடமிருந்து வந்த பெரிய வரமே பரிசுத்த ஆவியானவர்.

[6]நாம் பலவீனர்களாக இருக்கும்போதே கிறிஸ்து நமக்காக மரித்தார். நாம் தேவனுக்கு எதிராக வாழ்ந்து கொண்டிருந்த காலத்தில் சரியான நேரத்தில் கிறிஸ்து நமக்காக மரித்
தார். [7]ஒருவன் எவ்வளவுதான் நீதிமானாக இருந்தாலும், மிகச் சிலரே அவனது வாழ்வைப் பாதுகாப்பதற்காக தம் உயிரைக் கொடுப்பர். ஒருவன் மிக நல்லவனாக இருந்தால்தான் இன்னொருவன் அவனுக்காக உயி
ரைக் கொடுக்கிறான். [8]ஆனால் நாம் பாவிகளாக இருக்கும்போதே நமக்காக கிறிஸ்து உயிரை விட்டார். இதன் மூலம் தேவன் நம்மீது கொண்ட பேரன்பை நிரூபித்துவிட்டார்.

[9]கிறிஸ்துவின் இரத்தத்தால் நாம் தேவனுக்கேற்ற நீதிமான்களாகிவிட்டோம். எனவே, மிக உறுதியாக கிறிஸ்துவின் மூலம் நாம் தேவனுடைய கோபத்திலிருந்து இரட்சிக்கப்படுவோம்.
[10]நாம் தேவனுக்குப் பகைவர்களாக இருந்த

**அநேக ... உருவாக்கினேன்** *ஆதி. 17:5.*

**உனக்கு ... ஏற்படும்** *ஆதி. 15:5.*

**தேவன் ... ஆக்கிற்று** *ஆதி. 15:6.*

போது, தேவனோ கிறிஸ்துவின் மரணத்தின்
மூலம் நம்மை நண்பர்களாக்கிக் கொண்டார்.
எனவே, இப்போது உறுதியாக நாமனைவ
ரும் அவரது நண்பர்களே. தேவன் தனது
குமாரனின் உயிர் மூலம் நம்மை இரட்சிப்பார்.
11இப்போது நாம் இரட்சிக்கப்பட்டதோடு மட்டு
மல்லாமல் மகிழ்ச்சியாகவும் இருக்கிறோம்.
நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின்
மூலமே தேவனிடம் நாம் மகிழ்ச்சியாக இருக்
கிறோம். ஏனென்றால் இயேசுவின் மூலமே
நாம் தேவனுடைய நண்பர்களானோம்.

### ஆதாமும்-கிறிஸ்துவும்

12ஆதாம் என்கிற மனிதனின் செயலால்
தான் உலகத்துக்குப் பாவம் வந்தது. பாவத்
தோடு மரணமும் வந்தது. அதனால் தான்
அனைவரும் தம் பாவத்தால் இறந்து போகி
றார்கள். 13மோசேயின் சட்டங்களுக்கு முன்
னரே உலகில் பாவம் ஏற்பட்டுவிட்டது. சட்டம்
இல்லாததால் தேவன் மக்களை அவர்கள்
பாவங்களுக்காகக் குற்றவாளி ஆக்கவில்லை.
14ஆனால் ஆதாம் காலத்திலிருந்து மோசே
வரைக்கும் மரணமானது எல்லோரையும்
ஆட்கொண்டது. தேவனுக்குக் கீழ்ப்படியாது
பாவம் செய்ததால் ஆதாம் மரணமுற்றான்,
ஆனாலும் ஆதாமைப்போல பாவம் செய்யாம
லிருந்தும் பலர் மரணமடைந்தனர்.

பின்னால் வந்த இயேசுவைப் போன்ற
வனே ஆதாம். 15ஆனால் தேவனுடைய வர
மானது ஆதாமின் பாவத்தைப் போன்றதல்ல.
அந்த ஆதாமின் பாவத்தால் பலர் மாண்டு
போனார்கள். ஆனால் தேவனிடமிருந்து பெற்ற
கிருபையானது மிகவும் உயர்ந்தது. இயேசு
கிறிஸ்து என்கிற ஒருவரின் கிருபையின் மூல
மாகவே பலரும் தேவனுடைய வரத்தைப் பெற்
றனர்.

16ஒரு முறை ஆதாம் பாவம் செய்த பிறகு,
அவன் குற்றவாளியாகத் தீர்ப்பளிக்கப்
பட்டான். ஆனால் தேவனுடைய கிருபையோ
வேறு தன்மையானது. இந்த வரம் மக்களைத்
தேவனுக்கேற்ற நீதிமான்களாக்கிற்று. 17ஒரு
வன் செய்த பாவத்தால் மரணம் அனைவ
ருக்கும் விதிக்கப்பட்டது. ஆனால் இப்போது
சிலர் தேவனுடைய கிருபையை பெற்றார்கள்.
தேவனுடைய வரம் அவர்களைத் தேவனுக்கு
வேண்டியவர்களாக்கியது. நிச்சயமாக அவர்
கள் ஒரு மனிதரான இயேசு கிறிஸ்துவினாலே
உண்மையான வாழ்வைப் பெற்று ஆளுவார்
கள்.

18எனவே ஆதாம் செய்த ஒரு பாவமானது
மரணம் எனும் தண்டனையை அனைவருக்
கும் தந்தது. அதுபோல் ஒரு மனிதரான இயேசு
வின் நீதியானது அனைவரையும் நீதிமான்க
ளாக்கும். அதோடு உண்மையான வாழ்வை
யும் அவர்களுக்குத் தந்தது. 19ஒருவன் தேவ
னுக்குக் கீழ்ப்படியாததால் அனைவரும் பாவி
களாயினர். இதுபோல் ஒருவர் தேவனுக்குக்
கீழ்ப்படிந்ததால் பலர் நீதிமான்களாகுவர்.
20நியாயப்பிரமாணம் வந்தபிறகு பாவங்களும்
அதிகரித்தன. மக்கள் மிகுதியாகப் பாவம் செய்
யும்போது தேவனும் தமது கிருபையை அதி
கமாகக் காட்டுகிறார். 21ஒருமுறை பாவம் ஆட்சி
செய்து மரணத்துக்கு ஏதுவாயிற்று. இதே
வழியில் கிருபையானது நம் கர்த்தராகிய
இயேசு கிறிஸ்துவின் மூலம் நீதியினாலே நித்
திய ஜீவனுக்கு ஏதுவாக ஆண்டுக்கொண்டது.

### பாவத்தினால் மரணமும் கிறிஸ்துவினால் வாழ்வும்

6 எனவே, தேவனுடைய கிருபை நமக்கு
மேலும் மேலும் மிகுதியாகக் கிடைக்கும்
என்று நினைத்து பாவத்திலேயே ஜீவிக்க
லாமா? 2முடியாது. நமது பழைய பாவங்களுக்
காக நாம் ஏற்கெனவே மரணம் அடைந்து
விட்டோம். அதனால் இனி அதிலேயே எப்படி
பாவம் செய்தவண்ணம் வாழ முடியும்? 3நாம்
அனைவரும் ஞானஸ்நானம் பெற்றதும்
கிறிஸ்துவுக்குள் ஒரு பாகமாகி விட்டோம்.
நமது ஞானஸ்நானத்தின் மூலம் அவரது
மரணத்திலும் பங்குபெற்று விட்டோம். 4ஆகை
யால் நாம் ஞானஸ்நானம் பெறும்போதே
கிறிஸ்துவோடு இறந்து, அடக்கம் செய்யப்
பட்டு, மரணத்தைப் பகிர்ந்துகொண்டோம்.
இந்த வழியில் இயேசுவோடு நாமும் உயிர்த்
தெழுந்து புது வாழ்வு வாழத் தொடங்குகி
றோம். இதே வழியில் கிறிஸ்து, பிதாவின்
மகிமையால் மரணத்திலிருந்து உயிர்த்தெழுந்
தார்.

5கிறிஸ்து இறந்தார். அவர் இறப்பிலும் நாம்
கலந்து கொண்டோம். இதனால் அவரது
உயிர்த்தெழுதலிலும் நாம் பங்குபெறுகிறோம்.
6நமது பழைய வாழ்வு இயேசுவோடேயே சிலு
வையில் கொல்லப்பட்டுவிட்டது என்று நமக்
குத் தெரியும். எனவே, நமது பாவத் தன்மைக
ளுக்கு நம்மீது எவ்வித அதிகாரமும் இல்லை.
இதனால் இனிமேலும் நாம் பாவங்களுக்கு
அடிமையாக இருக்க மாட்டோம். 7எனவே,
மரணமடைந்தவன் பாவத்திலிருந்தும் விடுத
லையடைகிறான்.

8நாம் கிறிஸ்துவோடு மரித்தால், அவரோடு
வாழ்வோம் என்பதும் நமக்குத் தெரியும்.
9கிறிஸ்து மரணத்திலிருந்து உயிர்த்தெழுந்தார்.
அவர் மீண்டும் மரணமடைய மாட்டார். இப்
போது மரணம் அவர் மீது எதையும் செய்ய
இயலாது! 10அவர் பாவத்திற்கென்று ஒரே தரம்
மரித்தார். இப்போது அவருக்குத் தேவனோடு
புதிய வாழ்க்கை உள்ளது. 11அவ்வாறே நீங்க
ளும் உங்களை பாவத்திற்கு மரித்தவர்களாக
வும், நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்
குள் தேவனுக்கென்று பிழைத்திருக்கிறவர்க
ளாகவும் எண்ணிக் கொள்ளுங்கள்.

12ஆகையால் நீங்கள் சரீரங்களின் இச்சைப்
படி பாவத்திற்குக் கீழ்ப்படிய அனுமதிக்காதீர்
கள். சாவுக்கு ஏதுவான உங்கள் சரீரத்தில்
பாவம் ஆளாமல் இருப்பதாக. 13நீங்கள் உங்கள்
சரீரத்தின் பாகங்களை அநீதியின் கருவிக

ளாகப் பாவத்திற்கு ஒப்புக் கொடுக்காதீர்கள். ஆனால் நீங்கள் உங்களை இறந்தவர்களிடமி ருந்து பிழைத்திருக்கிறவர்களாகத் தேவனுக்கு ஒப்புக்கொடுக்க வேண்டும். உங்கள் சரீர உறுப்புகளை நீதிக்குரிய கருவிகளாகத் தேவ னுக்கு ஒப்புக்கொடுங்கள். [14]பாவம் உங்களது
எஜமானன் அல்ல. ஏனென்றால் நீங்கள் சட்ட விதிகளின் கீழ்ப்பட்டவர்கள் அல்லர். நீங்கள் இப்போது தேவனுடைய கிருபைக்குக் கீழ்ப் பட்டவர்களே.

### நீதிக்கு அடிமைகள்

[15]அதனால் இப்போது என்ன செய்யலாம்?
நாம் சட்டவிதிக்குக் கீழ்ப்படாமல் கிருபைக்குக் கீழ்ப்பட்டிருப்பதால் பாவம் செய்யலாமா?
[16]கூடாது. ஒருவனுக்குக் கீழ்ப்படிய உங்களை
நீங்கள் ஒப்படைப்பீர்கள். எனவே நிஜமாகவே அவனுக்கு அடிமையாவீர்கள் என்பது உங்க ளுக்குத் தெரிந்திருக்கும். நீங்கள் கீழ்ப்படியும் அவனே எஜமானன் ஆவான். உங்களால் பாவத்தை பின்பற்றலாம் அல்லது தேவனுக் குக் கீழ்ப்படியலாம். ஆத்துமாவின் இறப்புக்கே பாவம் வழிவகுக்கிறது. ஆனால் தேவனுக்குக் கீழ்ப்படிவதால் அவருக்கேற்ற நீதிமான்களாகி நீர்கள். [17]கடந்த காலத்தில் நீங்கள் பாவத்துக்கு
அடிமைகளாக இருந்தீர்கள். பாவம் உங்க ளைக் கட்டுப்படுத்தியது. இப்பொழுது நீங்கள் உங்களுக்கு ஒப்புவிக்கப்பட்ட உபதேசத்திற்கு முழு மனதோடு கீழ்ப்படிகிறீர்கள். இதற்காகத் தேவனுக்கு நன்றி சொல்லுங்கள். [18]நீங்கள்
பாவத்திலிருந்து விடுதலை ஆனீர்கள். இப் போது நீங்கள் நன்மைக்கே அடிமையானீர்கள்.
[19]இதை நான் மக்களுக்குத் தெரிந்த ஒரு உதா
ரணத்தின் மூலம் விளக்குகிறேன். ஏனென் றால் இதனைப் புரிந்து கொள்வது உங்க ளுக்குக் கஷ்டமாக இருக்கும். முன்பு நீங்கள் உங்கள் சரீரத்தின் உறுப்புகளை அசுத்தத்திற் கும், அக்கிரமத்திற்கும் அடிமைகளாக ஒப்புக் கொடுத்தீர்கள். அதைப்போலவே இப்போது நீங்கள் உங்கள் உடலுறுப்புகளை நீதிக்கு அடி மைகளாக ஒப்புக்கொடுங்கள்.

[20]முந்தைய காலத்தில் நீங்கள் பாவத்திற்கு
அடிமைகளாக இருந்தீர்கள். அப்போது நல் வாழ்வு உங்களைக் கட்டுப்படுத்த இயல வில்லை. [21]நீங்கள் பாவம் செய்தீர்கள். இப்
போது அவற்றுக்காக வெட்கப்படுகின்றீர்கள். அதனால் உங்களுக்கு என்ன பலன்? அதனால் மரணமே கிடைத்தது. [22]ஆனால் இப்போது
பாவத்தில் இருந்து விலகியிருக்கிறீர்கள். தேவனுடைய அடிமையாய் இருக்கிறீர்கள். இதனால் தேவனுக்கு அர்ப்பணிக்கப்பட்ட வாழ்வை உருவாக்குகிறீர்கள். இது இறுதியில் நித்திய வாழ்வைத் தரும். [23]பாவத்தின் சம்ப
ளம் மரணம். பாவம் செய்தவர்களுக்கு அதுவே பலன். ஆனால் தேவன் தம் மக்க ளுக்கு இலவசமான வரத்தைக் கொடுக்கிறார். அது நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக் குள்ளான நித்திய வாழ்வே ஆகும்.

### திருமணம் - ஒரு உதாரணம்

7 சகோதர சகோதரிகளே! நீங்கள் அனைவ
ரும் மோசேயின் சட்டவிதியைத் தெரிந்தி ருக்கிறீர்கள். ஒருவன் உயிரோடு இருக்கும்வ ரைதான் நியாயப்பிரமாணம் அவனை ஆளுகி ன்றது. [2]நான் உங்களுக்கு ஒரு உதாரணத்தைச்
சொல்லுகிறேன். ஒரு மணமான பெண் தன் கணவன் உயிரோடு இருக்கும் வரைதான் தன் கணவனோடு வாழ சட்டத்தால் கட்டப் பட்டுள்ளாள். ஆனால் அவன் இறந்து போனால், அவள் திருமண விதிகளிலிருந்து விடுவிக்கப்படுகிறாள். [3]தன் கணவன் உயி
ரோடு இருக்கும்போதே ஒரு பெண் இன்னொரு வனை மணந்து கொண்டால் அவள் விபசாரம் என்னும் குற்றத்துக்கு ஆளாகிறாள் என்று சட்டம் சொல்கிறது. ஆனால் அவளது கணவன் இறந்தபின் எல்லா திருமண விதிகளில் இருந் தும் அவள் சுதந்தரமாகிறாள். அப்போது அவள் இன்னொருவனை மணக்க விரும்பி னால் அது விபசாரம் எனும் குற்றத்துக்கு ஆளாக்காது.

[4]சகோதர சகோதரிகளே! இதே வழியில்,
உங்கள் பழைய வாழ்வு இறந்து கிறிஸ்துவின் சரீரம் மூலம் சட்டத்திலிருந்து விடுதலை ஆனீர் கள். இப்போது நீங்கள் மரணத்திலிருந்து உயிர்த்தெழுந்த மற்றவர்களோடு சேர்க்கப் படுகிறீர்கள். அதனால் தேவனுக்குச் சேவை செய்ய நாம் பயன்படமுடியும். [5]முன்பு, நாம்
நமது மாமிசத்தால் ஆளப்பட்டிருந்தோம். சட்டத் தால் பாவ இச்சைகள் நம்மிடம் தோன்றின. அவை நமது சரீர உறுப்புகள் மீது ஆட்சி செலுத்தியது. அது நமக்கு மரணத்தைக் கொடுத்தது. [6]கடந்த காலத்தின் சட்டவிதிகள்
நம்மை சிறைக் கைதிகளைப்போன்று வைத்தி ருந்தன. ஆனால் அந்தப் பழையவிதிகள் மறைந்து போனது. நாமும் விதிகளினின்றும் விடுவிக்கப்பட்டோம். எனவே இப்போது புதிய வழியில் தேவனுக்குச் சேவை செய்கி றோம். பழைய வழியில் சட்டவிதிக்குக் கட்டுப் பட்டு இருக்கவில்லை. இப்போது பரிசுத்த ஆவியானவரோடும் இருக்கிறோம்.

### பாவத்துக்கு எதிரான போராட்டம்

[7]சட்டவிதியையும் பாவத்தையும் நான் ஒரே
விதமாக நினைப்பதாக நீங்கள் எண்ணக் கூடும். அது உண்மையல்ல. ஆனால் சட்டவிதி யின் மூலமாகவே நான் பாவமென்றால் என்ன வென்று புரிந்துகொண்டேன். "பிறர் பொருள் மேல் ஆசைப்படாமல் இருங்கள்"* என்று சட்டவிதி சொல்லாமல் இருந்தால் அது பாவம் என்று எனக்கு தெரியாமல் போயிருக்கும்.
[8]சகலவிதமான தவறான ஆசைகளையும் நான்
விரும்புமாறு கட்டளையை உபயோகப்படுத் தும் ஒருவழியை பாவம் கண்டுபிடித்தது. அக் கட்டளையின் மூலமாகவே பாவம் வந்து சேர்ந் தது. சட்டவிதி இல்லாவிட்டால் பாவத்துக்கு

---

**பிறர் ... இருங்கள்** யாத். 20:17; உபா. 5:21.

வல்லமை இல்லாமல்போகும். 9முன்பு சட்டங்
கள் இல்லாதவனாய் இருந்தபோது நான் உயிர்
உள்ளவனாய் இருந்தேன். சட்டவிதி வந்த
பிறகு பாவம் உயிர் கொண்டது. 10பாவத்தால்
நான் உள்ளத்தைப் பொருத்த மட்டில் மரித்த
வன் ஆனேன். உயிர் கொடுப்பதற்காக வந்த
சட்டவிதி எனக்கு மரணமுண்டாகக் காரணமா
னது. 11பாவமானது அந்த கட்டளையினாலே
நேரம் பார்த்து என்னை வஞ்சித்து, அதன்
மூலம் என்னைக் கொன்றது.

12சட்டவிதி தூய்மையானதுதான். கட்டளை
யும் கூட தூய்மையாகவும் சரியாகவும் நன்மை
யாகவும் இருக்கின்றன. 13அதனால் நன்மை
யானது எனக்கு இறப்புக்குரியதாயிற்றா?
இல்லை. ஆனால் பாவமானது அந்நன்மையை
யும் தீமையாக்கி எனக்கு மரணத்தைக்
கொண்டு வந்துவிட்டது. இதனால் பாவத்தின்
இயல்பை என்னால் புரிந்துகொள்ள முடிகி
றது. பாவம் மிகமிகக் கொடுமையானதாகக்
காட்டப்பட்டது. இதற்கு பிரமாணமே பயன்பட்
டது.

### மனிதனுக்குள் முரண்பாடு

14சட்டவிதி ஆவிக்குரியது என நாம் அறிகி
றோம். ஆனால் நான் அல்ல. ஒரு அடிமையின்
மேல் ஆட்சி செலுத்துவதைப் போல பாவம்
என்னை ஆள்கிறது. 15நான் செய்வது எனக்கே
புரியவில்லை. நான் செய்ய விரும்பும் நல்ல
காரியங்களை என்னால் செய்ய முடிய
வில்லை. நான் என்னால் வெறுக்கப்படும்
தீயவற்றையே செய்கிறேன். 16நான் இப்படி
விரும்பாததைச் செய்தவனாய் இருக்க சட்டவி
தியை நல்லது என நான் ஒத்துக்கொள்வதாக
பொருள்படும். 17உண்மையில் நான் கெட்ட
வற்றை செய்பவனில்லை. ஆனால் என்னுள்
இருக்கிற பாவம் அவ்வாறு செய்யத் தூண்டு
கிறது. 18என்னிடத்தில் நன்மை வாழ்வ
தில்லை. இது எனக்குத் தெரியும். நன்மை
செய்யவேண்டும் என்னும் விருப்பம் என்னிட
முள்ளது. ஆனால் நன்மை செய்வதோ என்னி
டத்தில் இல்லை. 19எனவே நான் விரும்புகிற
நன்மையை செய்யவில்லை. நான் விரும்பாத
தீமையையே செய்துவருகிறேன். 20அவ்வாறு
எனக்கு விருப்பம் இல்லாததைச் செய்தால்
நான் அல்ல, எனக்குள் இருக்கிற பாவம்
தான் அப்படி செய்கிறது.

21அதனால் நன்மை செய்ய விரும்புகிற
என்னிடத்தில் தீமையே உண்டு என்ற
விதியை அறிந்து கொண்டேன். 22என் மனதிற்
குள், தேவனுடைய சட்டவிதியோடு மகிழ்ச்சி
யாய் இருக்கிறேன். 23ஆனால் வேறொரு விதி
யும் என் சரீரத்திற்குள் இயங்குவதை அறிகி
றேன். என் மனம் ஒத்துக்கொள்ளும் விதிக்கு
எதிராக அது ஒரு போரையே நிகழ்த்துகிறது.
அதுதான் பாவம்பற்றிய விதி ஆகும். அது
என் உடலை அடக்கி, அதன் கைதியாக்கிக்
கொள்ளுகின்றது. 24நான் நிர்ப்பந்தமான மனி
தன். என்னை இந்த சரீரத்திடம் இருந்து யார்
காப்பாற்றுவார்கள்? 25தேவனே காப்பாற்று
வார். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து
வின் மூலம் தேவனுக்கு நன்றி சொல்கிறேன்.
ஆதலால் என் மனதார நான் தேவனுடைய
சட்டவிதிக்கு சேவை செய்கிறேன். ஆனால்
நான் மாமிசத் தன்மையால் பாவத்தின் சட்டத்
திற்கு சேவை செய்கிறேன்.

### ஆவிக்குரிய வாழ்க்கை

8 எனவே, இப்போது இயேசு கிறிஸ்துவுக்
குள் இருப்பவர்கள் தண்டனைக்குரியவர்க
ளாகத் தீர்ப்பளிக்கப்பட மாட்டார்கள். 2ஏன்
நான் அவ்வாறு தீர்ப்பளிக்கப்பட மாட்டேன்?
ஏனென்றால் இயேசு கிறிஸ்துவிற்குள் உயி
ருள்ள ஆவியின் சட்ட விதி என்னைப் பாவம்,
மரணம் என்பவைகளின் சட்டவிதிகளிடமி
ருந்து விடுதலை செய்தது. 3சட்டவிதிக்கு சக்தி
இல்லை. ஏனென்றால் அது மனித பெலவீனங்
களால் வரையறுக்கப்பட்டது. சட்டவிதியால்
செய்ய முடியாததைத் தேவன் செய்து முடிக்
கிறார். தேவன் தன் சொந்தக் குமாரனையே
பூமிக்குப் பாவமனித சாயலாக அனுப்பினார்.
அவரை பாவத்தைப் போக்கும் பலியாகவும்
கருதினார். எனவே மனித வாழ்க்கை மூலம்
பாவத்தை அழித்தார். 4தேவன் அதனை
சட்டவிதியின் நீதி நம்மிடம் நிறைவேறும்
படிக்கே இவ்வாறு செய்தார். இப்பொழுது
நாம் நமது மாம்சத்தின்படி நடக்காமல் ஆவி
யைப் பின்பற்றி வாழ்கிறோம். 5மாம்சத்தின்
படி நடக்கிறவர்கள் மாம்சத்திற்கு உரியவற்
றைப் பற்றிமட்டுமே சிந்திக்கிறார்கள். ஆவி
யைப் பின்பற்றி நடக்கிறவர்கள் ஆவிக்குரி
யதை மட்டுமே சிந்திக்கிறார்கள். 6ஒருவனது
சிந்தனையானது பாவத்தால் கட்டுப்படுத்தப்
படுமானால் அவன் சாவை அடைகிறான்.
ஒருவனது சிந்தையானது ஆவியால் கட்டுப்
படுத்தப்படுமானால் அவன் நல்வாழ்வையும்,
சமாதானத்தையும் அடைகிறான். 7எப்படி
யென்றால் மாம்ச எண்ணம் தேவனுக்கு எதி
ரான பகையாகின்றது. அவன் தேவனுடைய
சட்டவிதிகளுக்கு கட்டுப்பட மறுக்கிறான்.
உண்மையில் அவனால் கீழ்ப்படியவும் முடி
யாமல் போகின்றது. 8மாம்சத்துக்குட்பட்டவர்
கள் தேவனுக்கு வேண்டியவர்களாக முடி
யாது.

9தேவனுடைய ஆவி உங்களிடம் வாழ்ந்
தால், நீங்கள் மாம்சத்துக்குட்பட்டவர்களாய்
இருக்கமாட்டீர்கள். ஆவிக்குட்பட்டவர்களாய்
இருப்பீர்கள். கிறிஸ்துவின் ஆவி இல்லாதவன்
அவருடையவன் அல்ல. 10உங்கள் பாவத்தால்
சரீரமானது இறந்து போகும். ஆனால் கிறிஸ்து
உங்களில் இருந்தால் ஆவி உங்களுக்கு நல்
வாழ்வைக் கொடுக்கும். ஏனென்றால் கிறிஸ்து
உங்களைத் தேவனோடு சரியாக்கினார்.
11தேவன் இயேசுவை மரணத்திலிருந்து எழுப்
பினார். தேவனுடைய ஆவி உங்களில் இருக்கு
மானால் பின்னர் அவர் சரீரத்திற்கும் உயிர்
தருவார். தேவன் ஒருவரே இயேசுவை மரணத்

திலிருந்து எழுப்பியவர். அவர் உங்கள் சரீரங்
களுக்கும் உங்களுக்குள் உள்ள ஆவியின்
மூலம் உயிர் தருவார்.
12சகோதர சகோதரிகளே, நாம் நமது மாம்
சங்களால் ஆளப்படக் கூடாது. நமது மாம்
சங்களின் விருப்பப்படியும் இருக்கக் கூடாது.
13பாவம் தூண்டும் தவறான செயல்களைச்
செய்ய உங்கள் வாழ்வு பயன்படுமானால் நீங்
கள் ஆவிக்குரிய நிலையில் இறந்தவர்களாவீர்
கள். ஆனால் நீங்கள் ஆவியின் உதவியோடு
தீமை செய்வதை நிறுத்தினால் உண்மையான
வாழ்வைப் பெறுவீர்கள்.
14எவரெல்லாம் தேவனுடைய ஆவியினால்
நடத்தப்படுகிறார்களோ அவர்கள் தேவனு
டைய பிள்ளைகளாக இருக்கிறார்கள். 15நம்
மை மீண்டும் அடிமைப்படுத்தி அச்சமூட்டுகிற
ஆவியைப் பெறவில்லை. தேவனுடைய பிள்
ளைகளாக நம்மை உருவாக்கும் ஆவியைப்
பெறுகிறோம். அப்படிப் பெற்றால் "என் அன்
பான பிதாவே" என்று அழைக்கும் உரிமை
யைப் பெறுவோம். 16ஆவியானவர் நம்மு
டைய ஆவியோடு சேர்ந்து கொண்டு நாம்
தேவனுடைய பிள்ளைகளாய் இருக்கிறோம்
என்று சாட்சி கொடுக்கிறார். 17நாம் தேவனு
டைய பிள்ளைகளானால், தேவன் தன் பிள்
ளைகளுக்காக வைத்திருக்கிற மகிமையை
நாம் பெறுவோம். நாம் அவற்றைத் தேவனிட
மிருந்து பெறுவோம். கிறிஸ்துவிடம் உள்ள
அதே மகிமையும் நமக்குக் கிடைக்கும். ஆனால்
கிறிஸ்து துன்பப்பட்டதுபோன்று நாமும்
படவேண்டியதிருக்கும்.

### எதிர்கால சிறப்பு

18இப்பொழுது துன்பப்படுகிறோம். ஆனால்
நமக்குக் கொடுக்கப்படப் போகும் சிறப்பை
நிகழ்கால துன்பத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால்
இத்துன்பம் ஒன்றுமில்லாமல்போகும். 19தேவ
னால் உருவாக்கப்பட்ட அனைத்தும் தேவன்
தன் பிள்ளைகள் யாரென்பதை வெளிப்படுத்
தப்போகும் நாளுக்காக ஆவலோடு காத்தி
ருக்கின்றன. அவை அதனைப் பெரிதும்
விரும்புகின்றன. 20தேவனால் படைக்கப்பட்ட
அனைத்தும் பயனற்றவையாக மாற்றப்பட்டுள்
ளன. அவை மாற்றமடைய விரும்பாவிட்டா
லும் தேவன் அவற்றை மாற்றிவிட முடிவு
செய்துள்ளார். 21ஆனாலும் "தேவனால் படைக்
கப்பட்டவையெல்லாம் அழிவிலிருந்து விடு
தலை பெறும்" என்ற நம்பிக்கையுண்டு.
தேவன் படைத்த எல்லாம், தேவனுடைய
பிள்ளைகளுக்குரிய விடுதலையையும், மகி
மையையும் பெறும் என்ற நம்பிக்கையும்
உண்டு.
22ஒரு பெண், குழந்தை பெறுவதற்கான
நேரத்தை வலியோடு எதிர்ப்பார்த்துக் கொண்
டிருப்பதுபோன்று தேவனால் படைக்கப்பட்ட
வையெல்லாம் எதிர்ப்பார்த்துக் கொண்டிருக்
கின்றன. 23உலகம் மட்டுமல்ல, நாமும் உள்ளுக்
குள் வேதனையோடு காத்துக் கொண்டிருக்கி
றோம். தேவனுடைய வாக்குறுதியினுடைய
முதல் பாகம் போல் நாம் ஆவியின் முதல்
பலனைப் பெற்றிருக்கிறோம். நம்மைத் தேவன்
தமது பிள்ளைகளாக்குவார் என்று நாமும்
எதிர்பார்க்கிறோம். அதாவது நாம் நமது
சரீரத்தின் விடுதலைக்காக எதிர்ப்பார்த்துக்
கொண்டிருக்கிறோம். 24அந்த நம்பிக்கையால்
தான் நாம் பாதுகாக்கப்பட்டுள்ளோம். கண்
ணால் காண முடிவதை நம்பவது என்பது
உண்மையில் நம்பிக்கையன்று, நம்மிடம் ஏற்
கெனவே இருப்பதை மக்கள் நம்ப வேண்டி
யதில்லை. 25இதுவரை நாம் பெறாததைப்
பெறுவதற்குப் பொறுமையோடு காத்திருப்
போம்.
26அதோடு ஆவியானவர் நமக்கு உதவு
கிறார். நாம் பலவீனமானவர்கள். ஆவியா
னவர் நமது பலவீனங்களில் உதவுகிறார். நாம்
எவ்வாறு வேண்டிக்கொள்வது என்பதைத்
தெரிந்து கொள்ளாமல் இருக்கிறோம். எனி
னும் ஆவியானவர் நமக்காகத் தேவனிடம்
வேண்டுகிறார். அவரது வேண்டுதல்களை
வார்த்தைகளால் விளக்கிச் சொல்ல இயலாது.
27மக்களின் மனதில் உள்ளதைத் தேவன் ஆரா
ய்கிறார். ஆவியானவரின் மனதில் உள்ளதும்
தேவனுக்குத் தெரியும். ஏனென்றால் தேவனு
டைய விருப்பப்படியே ஆவியானவரின்
வேண்டுதல்கள் மக்களுக்காக அமைந்திருக்
கும். 28தன்னை நேசிக்கும் மக்களுக்கு தேவன்
எல்லாவற்றின் மூலமும் நன்மை செய்கிறார்
என்பதை நாம் அறிகிறோம். தேவன் இம்மக்க
ளைத் தம் திட்டப்படியே தேர்ந்தெடுத்துள்ளார்.
29தேவன் அம்மக்களை உலகம் படைக்கப்படு
வதற்கு முன்னரே அறிந்திருக்கிறார். அம்மக்க
ளைத் தம் குமாரனைப் போலவே இருக்கும்
படி முடிவு செய்தார். அநேக சகோதரர்களுக்
குள்ளே தமது குமாரனே முதற் பேறானவராய்
இருக்கவேண்டும் என விரும்பினார். 30என
வே தமது குமாரனுடைய சாயலுக்கு ஒப்பாய்
இருப்பதற்கு முன்குறித்திருக்கிறார். அவர்க
ளைத் தேர்ந்தெடுத்தார். அவர்களை நீதிமான்க
ளாக்கினார். அவர்களை மகிமையும்படுத்தி
னார்.

### தேவனின் அன்பு

31எனவே, இதைப் பற்றி என்ன சொல்ல
லாம்? தேவன் நம்மோடு இருந்தால் எவராலும்
நாம் தோற்கடிக்கப்பட முடியாது. 32தேவன்
நமக்காக தனது சொந்த குமாரனையும் துன்பத்
துக்குட்படுத்தினார். நமக்காகவே தன் குமா
ரனை தேவன் அர்ப்பணித்தார். எனவே
இயேசு கிறிஸ்து இப்போது நம்மோடு இருப்ப
தால், தேவன் எல்லாவற்றையும் தருவார்.
33தேவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களை
யாரால் குறை சொல்லமுடியும்? எவராலும்
முடியாது, ஏனென்றால் தேவன்தான் தமது
மக்களை நீதிமான்களாக்குகிறார். 34தேவனு
டைய மக்கள் தவறுடையவர்கள் என்று
யாரால் குற்றம் சாட்ட முடியும்? எவராலும்

*முடியாது. கிறிஸ்து இயேசு நமக்காக இறந்தார்.
அதோடு முடியவில்லை. அவர் மரணத்திலி
ருந்து மீண்டும் உயிர்த்தெழுந்தார். இப்போது
அவர் தேவனுடைய வலது புறத்தில் இருந்து
கொண்டு நமக்காக வேண்டுதல் செய்து
கொண்டிருக்கிறார். 35கிறிஸ்துவின் அன்பிலி
ருந்து எவற்றாலும் நம்மைப் பிரிக்க இய
லுமா? இயலாது. தொல்லைகளால் இயேசுவிட
மிருந்து நம்மைப் பிரிக்க இயலுமா? பிரச்ச
னைகளும், தண்டனைகளும் இயேசுவிடமி
ருந்து நம்மைப் பிரிக்குமா? இயலாது. உண
வும் உடையும் இல்லாத வறுமை கூட நம்மை
அவரது அன்பிலிருந்து பிரிக்க முடியாது.
ஆபத்தும் மரணமும் கூட நம்மை அவரது
அன்பிலிருந்து பிரிக்க முடியாது.*

36 *“எப்பொழுதும் உமக்காக நாங்கள்
மரண ஆபத்தில் இருக்கிறோம்.வெட்டப்
படும் ஆடுகளை விடவும் நாம் பயனற்
றவர்கள் என மக்கள் நினைக்கின்ற
னர்”*

*சங்கீதம் 44:22*

*என எழுதப்பட்டுள்ளது.*
*37தேவன் நம்மீது அன்புகொண்டவர். அவ
ரால் நாம் அனைத்திலும் பெரும் வெற்றி
பெறுகிறோம். 38-39தேவனுடைய அன்பிலிரு
ந்து நம்மை எதனாலும் பிரிக்க முடியாது
என்று என்னால் உறுதியாய் சொல்ல முடி
யும். சாவாலோ, வாழ்வாலோ, தேவதூதர்க
ளாலோ, ஆளும் ஆவிகளாலோ, தற்காலப்
பொருளாலோ, பிற்கால உலகத்தாலோ,
நமக்கு மேலே உள்ள சக்திகளாலோ, நமக்குக்
கீழே உள்ள சக்திகளாலோ, உலகில் உள்ள
வேறு எதனாலுமோ கர்த்தராகிய இயேசு
கிறிஸ்துவில் உள்ள தேவனுடைய அன்பிலி
ருந்து நம்மை ஒருபோதும் பிரித்துவிட முடி
யாது.*

### தேவனும் யூதமக்களும்

9 *நான் கிறிஸ்துவுக்குள் இருக்கிறேன். நான்
உண்மையைக் கூறுகிறேன். நான் பொய்
சொல்வதில்லை. என் உணர்வுகள் பரிசுத்த
ஆவியானவரால் ஆளப்படுகின்றன. அந்த
உணர்வுகள் நான் பொய்யானவனில்லை
என்று கூறுகின்றன. 2எனக்குப் பெருந்துக்
கம் உண்டு. யூதமக்களுக்காக எப்பொழுதும்
நான் மிகவும் கவலைப்படுகிறேன். 3அவர்கள்
எனது சகோதர சகோதரிகளுமாகவும், மண்
ணுலக குடும்பமுமாகவும் இருக்கிறார்கள்.
அவர்களுக்கு உதவ விரும்புகிறேன். அவர்
களுக்கு உதவியாக இருக்குமானால் நான்
பழிக்கப்படவும், கிறிஸ்துவிலிருந்து துண்
டித்துக் கொள்ளவும் தயாராக இருக்கிறேன்.
4அவர்கள் இஸ்ரவேல் மக்கள். யூதர்கள் தேவ
னால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிள்ளைகள். தேவ
னுடைய மகிமை அவர்களுக்கு உண்டு. தேவ
னுக்கும் அவர்களுக்கும் இடையில் உடன்
படிக்கைகள் உண்டு. தேவன் அவர்களுக்கு
மோசேயின் நியாயப்பிரமாணத்தையும், வழி
பாட்டு முறைகளையும் கொடுத்தார். தனது
வாக்குறுதிகளை யூதர்களுக்குத் தேவன்
கொடுத்திருக்கிறார். 5அவர்கள் நமது மூதா
தையர்களின் வழி வந்தவர்கள். அவர்கள்
வழியில் கிறிஸ்துவும் மண்ணுலகில் பிறந்தார்.
கிறிஸ்துவே எல்லாவற்றுக்கும் மேலான
தேவன். அவரை எப்பொழுதும் துதியுங்கள்.
ஆமென்.*

*6நான் யூதர்களுக்காக வருத்தப்படுகிறேன்.
அவர்களிடம் தேவன் தன் வாக்குறுதியை
நிறைவேற்றுவதில் தவறிவிட்டார் என்று
எண்ணுகிறதில்லை. ஆனால் இஸ்ரவேல் மக்க
ளில் ஒரு சிலரே தேவனுடைய உண்மையான
மக்களாய் இருக்கிறார்கள். 7ஆபிரகாமின் சில
மரபுவழியினரே ஆபிரகாமின் உணமையான
மக்களாக இருக்கின்றனர். இதையே ஆபிரகா
மிடம் தேவன் “ஈசாக்கு உனது சட்டபூர் வமான
மகன்”* என்று கூறினார். 8ஆபிரகாமின்
அனைத்து சந்ததியினருமே தேவனுடைய பிள்
ளைகள் இல்லை என்பதுதான் இதன் பொருள்.
ஆபிரகாமுக்கு அவர் வாக்குறுதி செய்தார்.
ஆனால் ஆபிரகாமின் உண்மையான பிள்ளை
கள் எல்லாம் தேவனுக்கும் உண்மையான
பிள்ளைகள் ஆகின்றனர். ஏனென்றால் 9“சரி
யான நேரத்தில் நான் திரும்ப வருவேன்.
சாராள் ஒரு மகனைப் பெற்றெடுப்பாள்”*
என்பதுதான் தேவனுடைய வாக்குறுதி.

10அது மட்டுமல்ல, ரெபேக்காவும் பிள்ளைக
ளைப் பெற்றாள். ஒரே தந்தையை இப்பிள்ளை
கள் கொண்டிருந்தார்கள். அவரே நமது தந்தை
யான ஈசாக்கு. 11-12இரு மகன்களும் பிறப்ப
தற்கு முன்பே தேவன் ரெபேக்காவிடம், “மூத்த
மகன் இளையவனுக்குச் சேவை செய்வான்”*
என்றார். அவர்கள் நல்லதோ தீயதோ எது
வாக இருந்தாலும் செய்வதற்கு முன்னரே
தேவன் இவ்வாறு சொன்னார். இத்திட்டம்
ஏற்கெனவே தேவனால் உருவாக்கப்பட்டது
என்பது தான் காரணம். தேவன் அவனைத்
தேர்ந்தெடுக்க விரும்பினார். அதனால் தேர்ந்
தெடுத்தார். அதுதான் காரணமே தவிர பிள்
ளைகள் ஏதோ செய்ததற்காக அல்ல. 13“நான்
யாக்கோபை நேசித்தேன். ஏசாவை வெறுத்
தேன்”* என்று எழுதப்பட்டிருக்கிறது.

14எனவே இதைப்பற்றி நாம் என்ன சொல்ல
முடியும்? தேவன் அநீதியாய் இருக்கிறார்
என்று சொல்ல முடியுமா? முடியாதே. 15“நான்
யாரிடம் இரக்கம் காட்டவேண்டும் என்று
விரும்புகிறேனோ அவனிடம் இரக்கம் காட்டு
வேன்.”* என்று தேவன் மோசேயிடம்

---

**ஈசாக்கு … மகன்** *ஆதி. 21:12.*

**சரியான … பெற்றெடுப்பாள்** *ஆதி. 18:10,14.*

**மூத்த … செய்வான்** *ஆதி. 25:23.*

**நான் … வெறுத்தேன்** *மல்கியா 1:2-3.*

**நான் … காட்டுவேன்** *யாத். 33:19.*

சொல்லி இருக்கிறார். [16]எனவே கருணை காட்
டப்பட தகுதியான ஒருவனை தேவன் தேர்ந்
தெடுக்கிறார். அவரது தேர்ந்தெடுப்பு மனித
விருப்புகளுக்கும் முயற்சிகளுக்கும் அப்பாற்
பட்டது. [17]“நான் உன்னை அரசனாக்கினேன்.
நீ எனக்காக இதைச் செய். எனது பலத்தை
நான் உனக்குக் காட்டும்படியாக எனது பெயர்
உலகமெங்கும் அறிவிக்கப்பட வேண்டும்
என்று விரும்பினேன்”* எனத் தேவன் பார்
வோனிடம் கூறியதாக எழுதப்பட்டிருக்கிறது.
[18]எனவே, தேவன் இரக்கத்துக்குரியவர்க
ளாகத் தேர்ந்தெடுத்தவர்களிடம் இரக்கமாய்
இருக்கிறார். கடினமாக இருக்க தேர்ந்தெடுத்த
வர்களிடத்தில் கடினமாக இருக்கிறார்.
[19]“நமது செயல்களையெல்லாம் தேவனால்
கட்டுப்படுத்த முடியுமானால் பிறகு ஏன் அவர்
நமது பாவங்களுக்காக நம்மைக் குற்றம் சாட்டு
கிறார்” என்று உங்களில் ஒருவர் கேட்க
லாம். [20]அதைக் கேட்காதீர்கள். நீங்கள் மானி
டர். மானிடர்களுக்கு தேவனைக் கேள்வி
கேட்கும் அதிகாரம் இல்லை. ஒரு மண்ஜாடி
தன்னைச் செய்தவனிடம் கேள்வி எதுவும்
கேட்கக்கூடாது. “என்னை ஏன் இவ்வாறு செய்
தாய்?” என்று மண்ஜாடி கேட்கலாமா? [21]ஜாடி
யைச் செய்கிறவன் தன் விருப்பம் போல்
எதை வேண்டுமானாலும் செய்யலாம். அதே
களிமண்ணால் அவன் வேறு எந்தப் பொரு
ளை வேண்டுமானாலும் செய்திருக்கலாம். ஒரு
பொருளை அவன் சிறப்பான பயனுக்காக
வும், மற்றொன்றை அவன் அன்றாட பயனுக்
காகவும் செய்யலாம்.
[22]இதைப் போன்றுதான் தேவனும் செய்கி
ன்றார். அவர் தமது கோபத்தை வெளிக்காட்ட
வும் தனது வல்லமையை வெளிப்படுத்தவும்
விரும்பினார். தன் கோபத்தைத் தூண்டிய
மக்களை அழிக்கத் தயாராய் இருந்த நிலையி
லும் தேவன் அவர்களை மிகப் பொறுமையு
டன் சகித்துக் கொண்டார். [23]தன் உயர்வும்
சிறப்பும் வெளிப்படும் காலம் வரைக்கும்
தேவன் பொறுமையோடு காத்திருந்தார். அவ
ரது இரக்கத்தைப் பெறுவோரிடம் அவர் தனது
மகிமையைக் கொடுத்தார். அவர் அதற்குரிய
வர்களாக அவர்களைத் தயார்ப்படுத்தினார்.
[24]நாங்களே தேவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட
மக்கள். நாங்களே தேவனால் அழைக்கப்பட்ட
வர்கள். அவர் எங்களை யூதர்களிடமிருந்தும்
யூதர் அல்லாதவர்களிடமிருந்தும் தேர்ந்தெடுத்
தார்.

[25]“எனக்கு உரியவர்கள் அல்ல என்னும்
மக்களையும் ‘என் மக்களே’ என்று
நான் சொல்லுவேன். நேசிக்கப்படாது
இருந்தவர்களையும், ‘என்னால் நேசிக்
கப்படும் மக்கள்’ என்று நான் அழைப்
பேன்.

ஓசியா 2:23

[26]“நீங்கள் என்னுடைய மக்கள் அல்ல
வென்று அவர்களுக்குச்சொல்லப் பட்ட
அதே இடத்திலே அவர்கள் ஜீவனுள்ள
தேவனுடைய பிள்ளைகள் எனப்படு
வார்கள்”

ஓசியா 1:10

என்று ஓசியாவின் நூலில் எழுதப்பட்டுள்ளது.
[27]ஏசாயா இஸ்ரவேலைப் பற்றி கதறினார்.
“இஸ்ரவேல் மக்களின் எண்ணிக்கை கடற்க
ரையில் உள்ள மணலைப் போன்றிருக்கிறது.
எனினும் சிலரே இரட்சிக்கப்படுவார்கள்.
[28]ஆமாம். மண்ணில் வாழும் மக்களைத்
தேவன் விரைவாக நியாயம் தீர்த்து முடிப்
பார்.”*
[29]“கர்த்தருக்கு அனைத்து வல்லமையும்
உண்டு. எங்களுக்காக அவர் சிலரைக்
காப்பாற்றினார். அவர் அதனைச் செய்திருக்
காவிட்டால் இப்போது நாங்கள் சோதாமைப்
போலாகி கொமோராவுக்கு ஒத்தவராய் இருப்
போம்”*

என்று ஏசாயா சொன்னார்.
[30]இவற்றுக்கெல்லாம் என்ன பொருள்? யூத
ரல்லாதவர்கள் தேவன் முன் நீதிமான்களாக
விளங்க முயற்சி செய்யவில்லை. எனினும்
நீதிமான்களாக ஆனார்கள். காரணம் அவர்க
ளது விசுவாசமே. [31]ஆனால் இஸ்ரவேல் மக்
கள் சட்டவிதிகளின்படி வாழ்ந்து தேவனுக்
கேற்ற நீதிமான்களாக விரும்பினார்கள்.
ஆனால் அவர்கள் வெல்லவில்லை. [32]காரணம்
அவர்கள் அதனை தேவனில் நம்பிக்கை
வைக்காமல், தங்கள் செயல்கள் மூலம் தேடி
னர். தடுக்கி விழத்தக்க கல்லிலேயே தடுக்கி
விழுந்தார்கள். [33]அந்தக் கல்லைப் பற்றியும்
எழுதப்பட்டிருக்கிறது

“பாருங்கள்! நான் கல்லை சீயோனில்*
வைத்திருக்கிறேன். அது மக்களைத்
தடுக்கி விழச் செய்யும். அந்தப் பாறை
மக்களை தடுமாறி விழ அனுமதிக்கும்.
ஆனால் அக்கல்லிடம் நம்பிக்கைக்
கொண்ட எவனும் அவமானம்
அடைவதில்லை.”

10 சகோதர சகோதரிகளே, அனைத்து யூதர்
களும் காப்பாற்றப்பட வேண்டும் என்ப
தையே நான் மிகவும் விரும்புகிறேன்.
அதைத்தான் தேவனிடம் வேண்டி பிரார்த்
தனை செய்கிறேன். [2]யூதர்களைப் பற்றி
என்னால் இவ்வாறு கூற முடியும். அவர்கள்
உண்மையில் தேவனைப் பின்பற்ற விரும்புகி

---

**நான் ... விரும்பினேன்** யாத். 9:16.

**இஸ்ரவேல் ... முடிப்பார்** ஏசாயா 10:22-23.

**கர்த்தருக்கு ... இருப்போம்** ஏசாயா 1:9.

**சீயோனில்** தேவனுடைய மக்களின் நகரம் எருச
லேம். இதனது இன்னொரு பெயரே சீயோன்.

றார்கள். ஆனால் அவர்களுக்குச் சரியான
வழி தெரியவில்லை.
3தேவனுக்கேற்ற நீதிமான்களாகும் தேவனு
டைய வழி அவர்களுக்குத் தெரியாது. அவர்
கள் தம் சொந்த வழியிலேயே நீதிமான்களாக
முயன்றனர். எனவே அவர்கள் தேவனுடைய
வழியை ஏற்றுக்கொள்ளவில்லை. 4கிறிஸ்து
சட்டவிதியின் முடிவாய் இருக்கிறார். அத
னால் அவரிடம் நம்பிக்கையாக இருக்கிற எவ
ரும் தேவனுக்கேற்ற நீதிமானாக இயலும்.
5மோசே சட்டவிதிகளைப் பின்பற்றி நீதிமா
னாகும் வழியைப் பற்றி எழுதியிருக்கிறார்:
"சட்டவிதியைப் பின்பற்றி வாழ நினைக்கிற
வன், சட்டவிதியின்படி காரியங்களையும்
செய்யவேண்டும்,"* 6ஆனால் விசுவாசத்தி
னாலே நீதிமானாவதை பற்றி வேதவாக்கியம்,
"யார் மோட்சத்துக்குப் போகக் கூடியவன்
என்று நீ உனக்குள்ளே சொல்லாதே."(இதற்கு
"எவனொருவன் மோட்சத்துக்குப் போய்
கிறிஸ்துவைப் பூமிக்கு அழைத்து வரக்கூடிய
வன்?" என்று பொருள்) 7"எவனொருவன்
உலகத்துக்கும் கீழே போகக் கூடியவன் என்
றும் சொல்லாதே" (இதற்கு "எவனொருவன்
கீழே போய் கிறிஸ்துவை மரணத்தில் இருந்து
ஏறி வரப்பண்ணுபவன்" என்று பொருள்)
என்று எழுதப்பட்டுள்ளது. 8மேலும் "தேவனு
டைய போதனைகள் உங்களுக்கு அருகில்
உள்ளது. அவை உங்கள் வாயிலும் இதயத்தி
லும் உள்ளன" என்றும் எழுதப்பட்டிருக்கின்
றது. அபபோதனைகள் மக்களிடம் நாம் சொல்
லத்தக்க நம்பிக்கையைப் பற்றிய போதனைக
ளாகும். 9உனது வாயால் நீ "இயேசுவே கர்த்
தர்" என்று சொல்வாயானால் இரட்சிக்கப்படு
வாய். உனது இதயத்தில் நீ "தேவன் இயே
சுவை மரணத்திலிருந்து உயிர்த்தெழச் செய்
தார்" என்று நம்புவாயானால் இரட்சிக்கப்படு
வாய். 10நாம் இதயத்தில் விசுவாசித்தால் தேவ
னுக்கேற்ற நீதிமானாகிறோம். நாம் விசுவாசிப்
பதை வாயால் சொன்னால் இரட்சிக்கப்படுகி
றோம். 11"கிறிஸ்துவில் விசுவாசம் வைக்கிற
எவரும் வெட்கப்படுவதில்லை"* என்று எழு
தப்பட்டிருக்கிறது. 12இதில் "எவரும்" என்று
குறிப்பிடப்பட்டிருப்பதற்குக் காரணம் உண்டு.
அவர்கள் யூதர்களாகவோ, யூதரல்லாதவர்க
ளாகவோ இருக்கலாம். அவர் ஒருவரே அனை
வருக்கும் உரிய கர்த்தராவார். தன்னிடம் நம்
பிக்கை உள்ள அனைவருக்கும் ஆசீர்வாதம்
தருகிறார். 13"கர்த்தர் மேல் விசுவாசம் வைக்
கும் ஒவ்வொருவரும் இரட்சிக்கப்படுவர்*
என்று எழுதப்பட்டிருக்கிறது. 14மக்கள் கர்த்தர்
மீது விசுவாசம் வைப்பதற்கு முன்னர் அவர்
கள் அவரிடம் நம்பிக்கை வைக்க வேண்டும்.
கர்த்தரிடம் அவர்கள் நம்பிக்கை வைப்பதற்கு
முன்னால் அவரைப் பற்றி அறிந்து கொள்ள
வேண்டும். எனவே மக்கள் கர்த்தரைப் பற்றி
தெரிந்துகொள்ள வேண்டும் என்றால் அவர்
களுக்கு மற்றவர்கள் செய்தியைப் பரப்ப
வேண்டும். 15ஒருவன் சென்று அவர்களிடம்
செய்தியைப் பரப்புவதற்கு முன்பு, அவன்
அனுப்பப்பட வேண்டும். "நற்செய்தியைச்
சொல்ல வருகின்றவர்களின் பாதங்கள் எவ்வ
ளவு அழகாக இருக்கின்றன"* என்று எழுதப்
பட்டிருக்கிறது.
16நற்செய்தியை யூதர்கள் அனைவரும் ஏற்
றுக்கொள்ளவில்லை. இதைப்பற்றி ஏசாயா,
"ஆண்டவரே, அவர்களுக்கு நாங்கள் சொன்ன
தையெல்லாம் யார் விசுவாசிக்கிறார்கள்?"*
என்று கேட்கிறார். 17எனவே நற்செய்தியைக்
கேட்பதன் மூலமே விசுவாசம் பிறக்கிறது.
ஒருவன் கிறிஸ்துவைப் பற்றிக் கூறும்போது
மக்கள் நற்செய்தியைக் கேட்கிறார்கள்.
18ஆனால் "மக்கள் நற்செய்தியைக் கேட்ட
தில்லையா?" என்று நான் கேட்கிறேன்.
ஆமாம்.

> "அவர்களின் சப்தங்கள் உலகம்முழுவ
> தும் சென்றன. அவர்களின் வார்த்தை
> கள் உலகின் கடைசிவரை பரவின"
> சங்கீதம் 19:4

என்று எழுதப்பட்டது போல் அவர்கள்
கேட்டார்கள். 19"இஸ்ரவேல் மக்கள் அதனைப்
புரிந்துகொள்ளவில்லையா?" என்று மீண்டும்
நான் கேட்கிறேன். ஆமாம். அவர்கள் புரிந்து
கொண்டனர். முதலில் மோசே இதனைச்
சொன்னார்.

> "நீங்கள் பொறாமைப்படும் வகையில்
> அந்நாட்டுக்குரிமை இல்லாத மக்க
> ளைப் பயன் படுத்துவேன். உங்க
> ளுக்கு கோபம் வரும்வகையில் புரிந்
> துங் கொள்ள இயலாத நாட்டு மக்களை
> உபயோகப்படுத்துவேன்."
> உபா. 32:21

20ஏசாயாவும் தைரியத்தோடு தேவனுக்காக
இதைச் சொன்னார்.

> "என்னைத் தேடியலையாத மக்களால்
> கண்டுபிடிக்கப்பட்டேன். என்னை
> விசாரித்து வராதவர்களுக்கு என்னை
> வெளிப்படுத்தினேன்."
> ஏசாயா 65:1

21"இவ்வளவு நாட்களும் "நான் அவர்களுக்
காக காத்திருந்தேன். அவர்களோ எனக்குக்
கீழ்ப்படிய மறுத்து விட்டார்கள். என்னைப்

---

**சட்ட விதி … செய்யவேண்டும்** லேவி 18:5.
***கிறிஸ்துவில் .. படுவதில்லை*** ஏசாயா 2:32
***கர்த்தர் … படுவர்*** யோவேல் 2:32.

***நற்செய்தியை … இருக்கின்றன*** ஏசாயா 52:17.
***ஆண்டவரே … விசுவாசிக்கிறார்கள்*** ஏசாயா 53:1.

பின்பற்றவும் மறுத்துவிட்டனர்"* என்று யூத
மக்களைப் பற்றி ஏசாயா வழியாக தேவன்
கூறுகிறார்.

### தன் மக்களை மறவாத தேவன்

11 "தேவன் தன் மக்களைத் தூரமாகத் தள்
ளிவிட்டாரா?" என்று நான் கேட்கி
றேன். இல்லை. நானும் ஒரு யூதன் தான்.
நான் ஆபிரகாமின் குடும்பத்திலிருந்து
வந்துள்ளேன். பென்யமீன் கோத்திரத்தைச்
சேர்ந்தவன். 2இஸ்ரவேல் மக்கள் பிறப்பதற்கு
முன்னரே அவர்களைத் தம் மக்களாகத்
தேவன் தேர்ந்தெடுத்து விட்டார். தேவன் அவர்
களைத் தூரத் தள்ளி விடவில்லை. எலியா
வைப் பற்றி சொல்லப்பட்டிருப்பதை நீங்கள்
உறுதியாக அறிவீர்கள். இஸ்ரவேல் மக்க
ளுக்கு எதிராக எலியா தேவனிடம் வேண்டி
னார். 3"கர்த்தரே! இந்த மக்கள் உமது தீர்க்க
தரிசிகளைக் கொன்றனர். உமது பலிபீடங்
களை அழித்தனர். நான் மட்டுமே மிஞ்சியிருக்
கிறேன். இப்பொழுது அவர்கள் என்னையும்
கொன்றுபோட முயற்சி செய்கின்றனர்"* என்
றார் எலியா. 4இதற்கு தேவன் என்ன பதில்
சொன்னார் தெரியுமா? "பாகால் என்னும்
தேவனுக்கு முன்பாக முழங்கால்படியிட்டு
வணங்காத 7000 பேரை நான் எனக்காக
மீதியாய் வைத்திருக்கிறேன்"* என்றார். 5இப்
பொழுதும் அதே போலத்தான். தேவன் சில
ரைக் கருணையால் தேர்ந்தெடுத்துள்ளார்.
6தேவன் தன் மக்களைக் கருணையால் தேர்ந்
தெடுத்துள்ளதால் அது அவர்களது செய்கைக
ளால் அல்ல என்றாகிறது. தேவன் மக்களை
அவர் தம் செய்கைகளால் தேர்ந்தெடுத்திருந்
தால் அது கருணையால் அல்ல என்றும்,
செயல்களினிமித்தம் காட்டப்படும் கருணை
உண்மையான பரிசாகாது என்றும் தெரிகி
றது.

7அப்படியானால் நடந்தது இது தான். இஸ்ர
வேல் மக்கள் தேவனுக்கேற்ற நீதிமான்களாக
முயற்சி செய்தனர். ஆனால் அவர்கள் தோல்வி
யுற்றனர். தேவனால் தோந்தெடுக்கப்பட்டவர்
கள் நீதிமான்களாக செயல் புரிகிறார்கள். மற்ற
வர்களோ முரடர்களாகவும், தேவனுடைய
வார்த்தைகளைக் கவனிக்க மறுப்பவர்களாக
வும் உள்ளனர். 8"மக்களின் உணர்ச்சியை
தேவன் மறக்கச் செய்தார்" என்றும் அதனால்

"தேவன் அவர்களின் கண்களை மூடி
னார்." ஏசாயா 29:10

"அதனால் அவர்களால் உண்மையைப்
பார்க்க முடியவில்லை. தேவன் அவர்
களின் காதுகளை மூடினார். அதனால்
அவர்களால் உண்மையாகக் கேட்க
முடியவில்லை. இது இன்றும் தொடர்
கிறது".
உபா. 29:4

என்றும் எழுதப்பட்டிருக்கிறது.

9 "அவர்களின் சொந்த விருந்துகளே
அவர்கள் வலையாகவும், கண்ணியா
கவும் ஆகட்டும். அவர்கள் விழுந்து
தண்டிக்கப்படட்டும்.
10 உண்மையைக் காண இயலாதபடி
அவர்களின் கண்கள் மூடிப் போகட்
டும். அவர்கள் என்றென்றைக்கும் துன்
பத்தில் இருக்கட்டும்"
சங்கீதம் 69:22-23

என்று தாவீது கூறியிருக்கிறார்.

11"யூதர்கள் அழிந்துபோகிற அளவுக்கா
தடுக்கி விழுந்தார்கள்?" என்று கேட்கிறேன்.
இல்லை. அவர்களின் தவறுகள் மற்ற யூதர்
அல்லாதவர்களுக்கு இரட்சிப்பாயிற்று. இத
னால் யூதர்களுக்கு பொறாமை ஏற்பட்டது.
12யூதர்களின் தவறு உலகத்துக்கு அதிக ஆசீர்
வாதங்களைக் கொண்டு வந்தது. அவர்களின்
குறைவு யூதரல்லாதவர்களுக்கு அதிக ஆசீர்வா
தமாய் ஆயிற்று. யூதர்கள் தேவனுக்கேற்றவர்
களாக ஆகும்வரை இன்னும் எவ்வளவு ஆசீர்
வாதங்கள் வரும் எனக் கற்பனை செய்யுங்கள்.

13நான் இப்போது யூதரல்லாத மக்களோடு
பேசிக்கொண்டிருக்கிறேன். நான் யூதரல்லாத
வர்களுக்கு அப்போஸ்தலனாயிருக்கிறேன்.
என்னால் முடிந்தவரை என் வேலைகளை
முடிக்கவேண்டும். 14நான் என் நாட்டு மக்களை
வைராக்கியம் உள்ளவர்களாக மாற்றவேண்
டும். இந்த வழியில் அவர்களில் சிலரையாவது
இரட்சிப்பிற்குள் கொண்டுவர உதவமுடியும்.
15தேவன் யூதர்களிடமிருந்து விலகிக்கொண்
டார். உலகிலுள்ள மற்றவர்களுக்கு அவர்
நெருக்கமானார். அவர் யூதர்களை ஏற்றுக்
கொள்ளும்போது, அவரது மக்கள் மரணத்திலி
ருந்து உயிர்த்தெழுவது உறுதியாக இருக்கும்.

16ஒரு அப்பத்தின் முதல் துண்டு தேவனுக்
குப் படைக்கப்படுமானால் மற்ற முழுதும் புனி
தமாகிவிடும். ஒரு மரத்தின் வேர்கள் புனித
மாய் இருந்தால் மற்ற கிளைகளும்கூட புனித
மாகிவிடும்.

17ஒலிவ மரத்தின் சில கிளைகளை ஒடித்தெ
றிந்து விட்டு அந்த இடத்தில் காட்டு ஒலிவ
மரத்தின் கிளைகளை ஒட்ட வைத்தால் எப்படி
இருக்குமோ அப்படி இருக்கிறீர்கள். யூதரல்
லாத நீங்கள் காட்டு ஒலிவ மரத்தைப் போன்ற
வர்கள். யூதரல்லாத நீங்கள் யூதர்களோடு
இணைத்து வைக்கப்பட்டு, நீங்களும் அதே
வேர்களைப் பங்கிட்டு, மரச்சாற்றிலிருந்து
குடிக்கிறீர்கள். யூதர்களின் பலனையும் பெறுகி
ன்றீர்கள். 18நீங்கள் அந்தக் கிளைகளைப் பற்றி
பெருமை பாராட்ட வேண்டாம். அதற்கான

---

**நான் ... மறுத்துவிட்டனர்** ஏசாயா 65:2.

**கர்த்தரே ... செய்கின்றனர்** 1இராஜா. 19:10,14.

**பாகால் ... வைத்திருக்கிறேன்** 1இராஜா. 19:18.

எந்தக் காரணமும் உங்களுக்கு இல்லை. நீங்கள் வேர்களுக்கு உயிர் கொடுக்கவில்லை. வேர்களோ உங்களுக்கு உயிரைக் கொடுக்கின்
றன. [19]“நான் ஒட்ட வைக்கப்படுவதற்காகவே அந்தக் கிளைகள் முறித்துப் போடப்பட்டதென்று சொல்லுகிறாயே.” [20]அது உண்மை.
ஆனால் விசுவாசம் இல்லாததால்தான் அக்கிளைகள் முறிக்கப்பட்டன. உனது விசுவாசத்தினால் தான் நீ அந்த மரத்தின் ஒரு பகுதியானாய். இதற்காகப் பெருமைப்படாதே, பயப்படு.

[21]உண்மையான கிளைகளை மரத்தோடு நிலைத்திருக்க தேவன் அனுமதிக்கவில்லை என்றால் நீ விசுவாசம் இழந்துவிட்டால். உன்னையும் இணைந்து இருக்க அனுமதிக்கமாட்டார்.

[22]தேவன் இரக்கமுடையவர் எனினும் பயங்கரமானவரும் கூட என்பதை அறிந்துகொள். தன்னைப் பின்பற்றுவதை நிறுத்துகின்ற மக்களை அவர் தண்டிக்கிறார். நீங்கள் அவரைப் பின்பற்றினால் அவர் உங்களிடம் அன்போடு இருப்பார். நீங்கள் அவரைப் பின்பற்றுவதை நிறுத்தினால் மரத்திலிருந்து வெட்டியெறியப்
படுவீர்கள். [23]மீண்டும் யூதர்கள் தேவன் மீது விசுவாசம் வைக்க தொடங்கினால் தேவன் மீண்டும் அவர்களை ஏற்றுக்கொள்வார். அவர்கள் துவக்கத்தில் எப்படியிருந்தார்களோ அப்படி அவர்களை தேவன் உருவாக்
குவார். [24]காட்டுமரக் கிளைகள் ஒரு ஒலிவ மரத்தின் கிளையாக ஒட்டிவளர்வது இயற்கையன்று, யூதரல்லாதவர்களாகிய நீங்கள் காட்டு ஒலிவ மரத்திலிருந்து வெட்டப்பட்ட கிளைகளைப் போன்றவர்கள். இப்பொழுது நல்ல ஒலிவ மரத்தோடு சேர்த்து வைக்கப்பட்டிருக்கிறீர்கள். யூதர்களோ நல்ல ஒலிவமரத்தில் வளர்ந்த கிளைகளைப் போன்றவர்கள். எனவே, நிச்சயமாக அவர்கள் தங்கள் சொந்த மரத்தில் மீண்டும் ஒட்டிக்கொள்வார்கள்.

[25]சகோதர சகோதரிகளே, நீங்கள் இந்த இரகசிய உண்மையைப் புரிந்துகொள்ளவேண்டும் என்று விரும்புகிறேன். இந்த உண்மையானது உங்களுக்குப் புரியாததைப் புரிந்துகொள்ள உதவும். “இஸ்ரவேலின் ஒரு பகுதியினருக்குக் கடின இதயம் உண்டாயிருக்கும். குறிப்பிட்ட யூதரல்லாதவர்கள் தேவனிடம் சேர்ந்த பின்பு இது மாறும் என்பதுதான் அந்த உண்மை.

[26]இவ்வாறு இஸ்ரவேலர்கள் அனைவரும் காப்பாற்றப்படுவர்.

”மீட்பர் சீயோனிலிருந்து வருவார்.
யாக்கோபின் குடும்பத்திலிருந்து
தீமைகளை அகற்றுவார்.
[27] நான் அவர்களது பாவங்களை விலக்
கும்போது நான் இந்த உடன்படிக்கை
யைச் செய்து கொள்வேன்”

ஏசாயா 59:20-21; 27:9

என்று எழுதப்பட்டிருக்கிறது.

[28]தேவனுடைய நற்செய்தியை யூதர்கள் ஏற்றுக்கொள்ள மறுத்தனர். அதனால் அவர்கள் தேவனுடைய எதிரிகள் ஆயினர். இது யூதரல்லாதவர்களுக்கு உதவியாய் ஆயிற்று. ஆனால் யூதர்கள் அனைவரும் இப்பொழுதும் தேவனுடைய தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களாய் இருப்பதால் அவர் அவர்களைப் பெரிதும் நேசிக்கிறார். அவர்களின் தந்தைகளுக்குக் கொடுத்த வாக்கின்படி தேவன் அவர்களை நேசிக்கிறார்.
[29]தேவன் தனது கிருபையையும் அழைப்பையும் எப்பொழுதும் மாற்றிக் கொள்ள மாட்டார்.
[30]ஒருமுறை நீங்கள் தேவனுக்குப் பணிய மறுத்தீர்கள். ஆனால் இப்பொழுது இரக்கத்தைப் பெற்றீர்கள். யூதர்கள் பணிய மறுத்ததே இதற்குக் காரணம். [31]தேவன் உங்களிடம் இரக்கம் காட்டுவதால் யூதர்கள் இப்பொழுது தேவனுக்குப் பணிய மறுக்கிறார்கள். எனினும் எதிர்காலத்தில் உங்களைப் போல் அவர்களும் இரக்கத்தைப் பெறுவார்கள். [32]அனைத்து மக்களும் தேவனுக்குப் பணிய மறுத்திருக்கின்றனர். தேவன் பணியாதவர்களை ஓரிடத்தில் சேர்த்தார். எனவே, அவர் அனைவர் மீதும் இரக்கம் கொள்ள முடியும்.

### தேவனுக்கு மகிமை

[33]ஆமாம். தேவனுடைய செல்வம் மிகவும் பெருமை மிக்கது. அவரது அறிவுக்கும் ஞானத்துக்கும் எல்லை இல்லை. தேவன் தீர்மானிப்பதை ஒருவராலும் விளக்க முடியாது. தேவனுடைய வழிகளை ஒருவராலும் புரிந்துகொள்ள முடியாது.

[34] “கர்த்தரின் மனதை அறிந்தவன் யார்?
தேவனுக்கு அறிவுரைகளைத் தரத்
தகுந்தவர் யார்?”

ஏசாயா 40:13

[35] “தேவனுக்கு யாரேனும் எதையேனும்
கொடுத்ததுண்டா? மற்றவர்க்கு எதை
யும் தேவன்திருப்பிக் கொடுக்க வேண்
டிய தேவை இல்லை”

யோபு 41:11

என்று எழுதப்பட்டிருக்கிறது.

[36]ஆமாம். தேவனே அனைத்தையும் உருவாக்கினார். தேவனாலும், தேவனுக்காகவும் தொடர்ச்சியாய் எல்லாம் இயங்குகின்றன. அவருக்கே என்றென்றைக்கும் மகிமை உண்டாவதாக. ஆமென்.

### உங்கள் வாழ்க்கையைத் தேவனுக்குக் கொடுங்கள்

12 சகோதர சகோதரிகளே! ஏதாவது கொஞ்சம் செய்யுங்கள் என வேண்டுகிறேன். தேவன் நம்மிடம் மிகுந்த இரக்கத்தைக் காட்டியிருக்கிறார். உங்கள் சரீரங்களை தேவனுக்கு உயிர்ப் பலியாகத் தாருங்கள். இதுவே அவரை வழிபடுவதற்கான பக்தி வழியாகும்.

தேவன் இதில் திருப்தியடைகிறார். 2உலகி
லுள்ள மக்களைப் போன்று ஆக வேண்டு
மென உங்களை மாற்றிக் கொள்ளாதீர்கள்.
ஆனால் மனதில் புதிய எண்ணங்களால் உங்
களை மாற்றிக் கொள்ளுங்கள். பிறகு தேவனு
டைய விருப்பத்தை உங்களால் ஏற்றுக்கொள்
வது பற்றி முடிவு செய்ய முடியும். நல்லவை
எவை, தேவனுக்கு விருப்ப மானவை எவை
என்று உங்களால் அறிந்துகொள்ள முடியும்.

3தேவன் எனக்கொரு சிறப்பான வரத் தைக்
கொடுத்திருக்கிறார். அதனால்தான் உங்களில்
ஒவ்வொருவருக்கும் சொல்ல என்னிடம் சில
காரியங்கள் இருக்கின்றன. உங்கள் நிலை
மைக்கு மீறிய நினைப்பினைக் கொள்ளாதீர்
கள். உண்மையாகவே நீங்கள் யார் என்பதை
நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். தேவன்
உங்களுக்குக் கொடுத்த விசுவாசத்தின்படியே
ஒவ்வொருவனும் தம்மைப் பற்றி அறிந்து
கொள்ள வேண்டும். 4நம் ஒவ்வொருவருக்கும்
ஒரு சரீரம் உள்ளது. அதற்குப் பல உறுப்பு
களும் உள்ளன. எல்லா உறுப்புகளும் ஒரே
வேலையை செய்வதில்லை. 5இது போலவே,
நாம் பலவகை மக்கள். ஆனால் கிறிஸ்துவுக்
குள் நாம் அனைவரும் ஒரே சரீரமாக இருக்கி
றோம். நாம் அந்த சரீரத்தின் பல உறுப்புகள்.
சரீரத்தில் ஒவ்வொரு உறுப்பும் மற்ற உறுப்பு
களைச் சார்ந்துள்ளன. 6நமக்குப் பலவிதமான
வரங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு வரமும்
நமக்குத் தேவனுடைய இரக்கத்தால் கிடைத்
தது. நம்மிடையே தீர்க்கத்தரிசனம் சொல்லுகிற
வரத்தைப் பெற்றவன் அதனை தன் நம்பிக்
கைக்கு ஏற்றவகையில் பயன்படுத்த வேண்
டும். 7சேவை செய்வதற்கான வரத்தைப் பெற்ற
ஒருவன் நன்றாக சேவை செய்வானாக.
போதிக்கும் வரத்தைப் பெற்ற ஒருவன் போதிப்
பானாக!. 8மற்றவர்களுக்கு ஆறுதல் சொல்லும்
வரத்தைப் பெற்ற ஒருவன் அவ்வாறே ஆறுதல்
சொல்வானாக. மற்றவர்களுக்குத் தாராள
மாகக் கொடுத்து உதவுகிற வரத்தைப் பெற்ற
ஒருவன் ஏராளமாக கொடுத்து உதவுவானாக!
தலைவனாக இருக்க வரத்தைப் பெற்றவன்
கடுமையாகப் பணியாற்றி சிறந்த தலைவ
னாக இருப்பானாக! மற்றவர்களிடம் இரக்கம்
காட்டும் வரத்தைப் பெற்ற ஒருவன் மகிழ்ச்சி
யோடு இரக்கம் காட்டுவானாக!

9உங்கள் அன்பு உண்மையானதாக இருக்க
வேண்டும். பாவத்துக்குரியவற்றை வெறுத்து
ஒதுக்குங்கள். நல்லவற்றை மட்டும் செய்யுங்
கள். 10சகோதர சகோதரிகளைப் போன்று
ஒருவருக்கொருவர் இதமாக அன்பு செலுத்
துங்கள். மரியாதை செய்வதில் ஒருவருக்கொ
ருவர் முந்திக் கொள்ளுங்கள். 11நீங்கள் கர்த்த
ருக்காக உழைக்க வேண்டிய காலத்தில் சோம்
பேறியாக இராதீர்கள். அவருக்குச் சேவை
செய்வதிலே ஆவிப்பூர்வமாக இருங்கள். 12உங்
களுக்கு விசுவாசம் இருப்பதால் மகிழ்ச்சியாய்
இருங்கள். எப்பொழுதும் பிரார்த்தனை செய்
யுங்கள். 13தேவனுடைய மக்களுக்குத் தேவை
ஏற்படும்போது உதவி செய்யுங்கள். அம்மக்க
ளுக்கு உங்கள் வீடுகளில் அடைக்கலம்
கொடுங்கள்.

14உங்களுக்குத் தீமை செய்கிறவர்களுக்கும்
நல்லதையே செய்யுங்கள். அவர்களுக்கு நல்ல
தைக் கூறுங்கள். அவர்களை சபிக்காதீர்கள்.
15மற்றவர்கள் மகிழ்ச்சியோடு இருக்கும்போது
நீங்களும் அவர்களோடு மகிழ்ச்சியோடு இருங்
கள். மற்றவர்கள் துக்கமாய் இருக்கும்போது
நீங்களும் அவர்களோடு துக்கமாய் இருங்கள்.
16ஒருவரோடு ஒருவர் சமாதானமாக வாழுங்
கள். எவ்வளவு ஞானம் எனக்கு உண்டு
என்று மமதை கொள்ளாதீர்கள். மற்றவர்க
ளுக்கு முக்கியமாய்த் தோன்றாதவர்களோடும்
கூட நட்புடன் இருங்கள். சுய பெருமை பாராட்
டாதீர்கள்.

17யாரேனும் உங்களுக்குத் தீமை செய்தால்
அவர்களுக்குத் தீமையையே திரும்பிச் செய்
யாதீர்கள். எல்லாராலும் நல்லவை என்று
எண்ணப்படுவதையே நீங்களும் எவ்வளவு
செய்ய முடியும் என்று பாருங்கள். 18முடிந்த
ளவு எல்லா மக்களோடும் சமாதானமாய்
இருங்கள். 19என் அன்பு நண்பர்களே, எவரே
னும் உங்களுக்குத் தீமை செய்தால் அவர்க
ளைத் தண்டிக்க முயலாதீர்கள். தேவன் தன்
கோபத்தால் அவர்களைத் தண்டிக்கும் வரை
யில் பொறுத்திருங்கள். “நானே தண்டிக்கி
றேன், நானே பதிலுக்குப் பதில் செய்வேன்”*
என்று கர்த்தர் கூறுகிறார் என்று எழுதப்பட்
டுள்ளது. 20“உங்கள் பகைவன் பசியாய் இருந்
தால் அவனுக்கு உணவைக் கொடுங்கள்.
அவன் தாகமாய் இருந்தால் அவன் குடிக்க
ஏதாவது கொடுங்கள். இதன் மூலம் அவனை
வெட்கம் கொள்ளச் செய்யலாம்.”* 21பாவத்தி
டம் தோல்வி அடைந்து விடாதீர்கள். நன்மை
செய்வதின் மூலம் தீமையை நீங்கள் தோற்
கடித்து விடுங்கள்.

13 நீங்கள் அனைவரும் ஆட்சியாளர்க
ளுக்கு அடிபணிய வேண்டும். ஆட்சி
செய்யும் ஒவ்வொருவருக்கும் ஆட்சி புரியும்
அதிகாரத்தைத் தேவன் கொடுத்திருக்கிறார்.
இப்பொழுது அதிகாரம் செய்கின்றவர்களுக்
குக் தேவனாலேயே அதிகாரம் கொடுக்கப்பட்
டிருக்கிறது. 2எனவே அரசு அதிகாரத்திற்கு
எதிராக இருப்பவன் உண்மையில் தேவனு
டைய கட்டளைக்கு எதிராக இருக்கிறான்
என்றே பொருளாகும். அரசுக்கு எதிராக
செயல்படுபவன் உண்மையில் தண்டிக்கப்ப
டத்தக்கவன். 3நன்மை செய்கிறவர்கள் ஆள்
வோர்களிடம் அச்சப் படவேண்டிய தேவை
யில்லை. ஆனால் தீமை செய்கிறவர்கள் ஆள்
வோர்களிடம் அச்சப்படவேண்டும். நீங்கள்
ஆள்வோர்களைக் கண்டு அச்சம் கொள்வதில்
இருந்து விடுதலை பெறவேண்டுமா? அப்
படியானால் நன்மையை மட்டும் செய்யுங்கள்.

---

**நானே ... செய்வேன்** உபா. 32:35.

**உங்கள் ... செய்யலாம்** நீதி. 25:21,22.

நீங்கள் நன்மையைச் செய்தால் அவர்கள்
உங்களைப் பாராட்டுவார்கள். 4ஒரு ஆள்
வோன் என்பவன் உங்களுக்கு உதவி செய்வ
தற்காகத் தேவனால் நியமிக்கப்பட்டவன்.
ஆனால் நீங்கள் தப்பு செய்தால் அஞ்ச வேண்
டும். உங்களைத் தண்டிக்கிற அதிகாரம் அவர்
களுக்குண்டு. அதை அவர்கள் பயன்படுத்து
வார்கள். தேவனுடைய பணியாளாகவே
அவர்கள் தண்டனை வழங்குவார்கள். 5என
வே நீங்கள் அரசாங்கத்திற்கு அடிபணியுங்கள்.
நீங்கள் பணியாவிட்டால் தண்டிக்கப்படுவீர்
கள். நீங்கள் செய்யத்தக்க நல்ல காரியமே
அரசுக்குப் பணிவதுதான்.

6இதற்காகத்தான் நீங்கள் வரிகளைச் செலுத்
துகிறீர்கள். அவர்கள் தேவனுக்காகவும் உங்க
ளுக்காகவும் உழைத்து வருகிறார்கள். தம்
நேரமனைத்தையும் ஆட்சி செலுத்துவதிலேயே
செலவழிக்கிறார்கள். 7அனைவருக்கும் செய்ய
வேண்டிய கடமைகளைச் செய்யுங்கள்.
கொடுக்க வேண்டிய வரிகளையும் கொடுத்து
விடுங்கள். மரியாதை செலுத்த வேண்டியவர்
களுக்கு மரியாதை செலுத்துங்கள். எவருக்குப்
பயப்பட வேண்டுமோ அவர்களுக்குப் பயப்ப
டுங்கள்.

### பிறரை நேசிப்பதே பிரமாணம்

8எதற்காகவும் மற்றவர்களிடம் கடன் படாதி
ருங்கள். அன்புக்கு மட்டும் கடன் படுங்கள்.
மற்றவர்களிடம் அன்பு செலுத்துகிற ஒருவன்
உண்மையில் சட்டமுழுவதிற்கும் அடிபணிந்த
வனாய் இருப்பான். 9இவற்றையெல்லாம் நான்
எதற்காகக் கூறுகிறேன் என்றால் "விபசாரம்
செய்யாதிருங்கள். கொலை செய்யாதிருங்கள்.
களவு செய்யாதிருங்கள். அடுத்தவர்க்கு உரிய
பொருட்களை விரும்பவேண்டாம்."* சட்ட
விதி இவற்றைச் சொல்கிறது. இவை எல்லா
கட்டளைகளும், "தன்னைத் தானே நேசித்துக்
கொள்வது போலவே ஒருவன் அடுத்தவனை
யும் நேசிக்கவேண்டும்"* என்று ஒரு விதி
யையே சொல்கின்றன. 10அன்பானது மற்றவர்
களுக்குத் தவறு செய்யாதது. எனவே, அன்பு
சட்ட விதியின் நிறைவேறுதலாய் இருக்கிறது.

11நாம் மிக முக்கியமான காலத்தில் வாழ்ந்து
கொண்டிருப்பதால் இவற்றைக் கூறுகிறேன்.
நீங்கள் தூக்கத்திலிருந்து எழ வேண்டிய நேரம்
இதுதான். நாம் முதலில் நம்பியதைக் காட்டி
லும் இரட்சிப்பின் காலம் நெருங்கிவிட்டது.
12"இரவு" ஏறக் குறைய முடிந்து போனது.
"பகல்" அநேகமாக முளைக்கத் தொடங்கி
விட்டது. எனவே இருட்டுக்குச் சொந்தமான
செயல்களை விட்டுவிடுவோம். வெளிச்சத்தின்
ஆயுதங்களை அணிந்து கொள்வோம். 13பக
லுக்குரியவர்கள் செய்யத்தக்க செயல்களைச்
சீராய் நாம் செய்வோம். களியாட்டமும், குடி
வெறியும், வேசித்தனமும், காமவிகாரமும்,
வாக்குவாதமும், பொறாமையும் உள்ளவர்க
ளாக நாம் இருக்கக் கூடாது. 14கர்த்தராகிய
இயேசு கிறிஸ்துவையே ஆடையாக அணிந்து
கொள்ளுங்கள். உங்கள் பாவ ஆசைகளைப்
பூர்த்தி செய்து கொள்வது பற்றியும் தீய
காரியங்களை செய்வதுபற்றியும் யோசிக்கா
தீர்கள்.

### பிறரை விமர்சியாதிருங்கள்

14 விசுவாசத்தில் பலவீனமான ஒருவனை
உங்கள் கூட்டத்தில் ஏற்றுக் கொள்ள
மறுக்கவேண்டாம். அவனது மாறுபட்ட சிந்
தனைகளைப் பற்றி அவனோடு விவாதிக்க
வேண்டாம். 2ஒருவன் தான் விரும்புகிற எந்த
வகையான உணவையும் உண்ணலாம்
என்று நம்புகிறான். பலவீனமான நம்பிக்கை
உள்ளவனோ காய்கறிகளை மட்டும் உண்ண
லாம் என்று நம்புகிறான். 3காய்கறிகளை
மட்டும் உண்ணுகிறவர்களைப் பார்த்து மற்ற
வர்கள் அற்பமானவர்களாக எண்ணாமல்
இருக்கவேண்டும். காய்கறிகளைமட்டும் உண்
ணுகிறவர்களும் மற்றவர்களைத் தவறாக நியா
யம் தீர்க்காமல் இருக்கவேண்டும். தேவன் அவ
னையும் ஏற்றுக்கொண்டார். 4மற்றொருவனின்
வேலைக்காரனைக் குற்றவாளியாகத் தீர்ப்பு
சொல்லுகிற உரிமை உங்களுக்கு இல்லை.
அவன் செய்கிற தவறையும், நல்லவற்றையும்
தீர்ப்பு சொல்ல அவனது எஜமானன் இருக்கி
றார். கர்த்தரின் ஊழியன் நிலை நிறுத்தப்ப
டுவான், ஏனென்றால் கர்த்தர் அவனை நிலை
நிறுத்த வல்லவராய் இருக்கிறார்.

5ஒருவன் ஒரு நாளை மற்ற நாட்களை
விடச் சிறப்பாகக் கருதுகிறான். மற்றொரு
வன் எல்லா நாட்களையும் ஒன்றுபோல எண்
ணுகிறான். ஒவ்வொருவரும் தம் மனதில் தம்
நம்பிக்கைகளை உறுதியாக எண்ணிக் கொள்
ளவேண்டும். 6மற்ற நாட்களை விட ஒரு
நாளைச் சிறப்பாகக் கருதுகிறவன் கர்த்தருக்
காக அவ்வாறு கருதுகிறான். எல்லா வகை
உணவுகளையும் உண்பவனும் கர்த்தருக்கா
கவே உண்ணுகிறான். அந்த உணவுக்காக
அவன் தேவனுக்கு நன்றி செலுத்துகிறான்.
ஒருவன் சில வகை உணவுகளை உண்ண
மறுப்பதும் அதே கர்த்தருக்காகத்தான். அவ
னும் தேவனுக்கு நன்றி செலுத்துகிறான். 7நாம்
அனைவரும் கர்த்தருக்காகவே வாழ்கிறோம்.
வாழ்வதோ, சாவதோ நமக்காக அல்ல. 8நாம்
அனைவரும் வாழும்போது கர்த்தருக்காகவே
வாழ்கிறோம். சாகும்போது கர்த்தருக்காகவே
சாகிறோம். வாழ்வதானாலும் சரி, சாவதனா
லும் சரி நாம் கர்த்தருக்குச் சொந்தம் ஆனவர்
கள்.

9எனவேதான் கிறிஸ்து இறந்தார். பிறகு
மீண்டும் வாழ்வதற்காக இறப்பிலிருந்து
உயிர்த்தெழுந்தார். இதனால் அவர் இறந்தவர்
களுக்கும் வாழ்கிறவர்களுக்கும் கர்த்தர் ஆக
முடியும். 10எனவே, நீ உன் சகோதரனை
எவ்வாறு குற்றவாளியென்று தீர்ப்பளிக்க

---

**விபசாரம் ... வேண்டாம்** யாத். 20:13-15.17.

**தன்னை ... வேண்டும்** லேவி. 19:18.

லாம்? உன் சகோதரனை விடப் பெரியவன்
என்று நீ எப்படி எண்ணலாம்? நாம் அனை
வரும் தேவன் முன்பாக நிற்போம். அவர்
ஒருவரே நமக்குத் தீர்ப்பை அளிக்கிறவர்.

11 "ஒவ்வொருவனும் எனக்கு முன்பு
தலைவணங்குவான். ஒவ்வொருவனும்
தேவனை ஏற்றுக் கொள்வான். நான்
வாழ்வது எப்படி உண்மையோ அப்ப
டியே இவை நிகழும் என்று கர்த்தர்
கூறுகின்றார்"

ஏசாயா 45:23

என்று எழுதப்பட்டுள்ளது. 12எனவே, நம்மில்
ஒவ்வொருவரும் தம் வாழ்க்கையைப் பற்றி
தேவனுக்கு கணக்கு ஒப்படைக்க வேண்டும்.

### இடறலற்றவர்களாயிருங்கள்

13நாம் ஒருவருக்கொருவர் நியாயம் தீர்த்துக்
கொள்வதை நிறுத்தவேண்டும். நமது சகோத
ரனோ சகோதரியோ பலவீனமுறவும், அல்லது
பாவத்தில் விழும் வகையிலும் நாம் எதுவும்
செய்யக்கூடாது என்று தீர்மானித்துக் கொள்ள
வேண்டும். 14நான் இயேசு கிறிஸ்துவுக்குள்
இருக்கிறேன். எந்த உணவையும் உண்ணத்
தகாதது என்று கூற முடியாது என்பது
எனக்குத் தெரியும். ஆனால் எவராவது
ஒரு உணவை உண்ணத்தகாதது என்று நம்பி
னால் அந்த உணவும் உண்ணமுடியாதபடி
தீட்டுள்ளதாகும். 15நீ சாப்பிடும் ஒன்றின்
பொருட்டு, உன் சகோதரனின் விசுவாசத்தை
புண்படுத்தினால், நீ உண்மையிலேயே அன்பு
வழியைப் பின்பற்றவில்லை என்பதே அதன்
பொருள். தவறு என்று ஒருவன் கருதும்
உணவை உண்டு ஒருவனது நம்பிக்கையை
அழித்து விடாதே. கிறிஸ்து அவனுக்காகவும்
தன் உயிரை கொடுத்தார். 16நல்லவை என
நீங்கள் நம்பும் விஷயங்கள் தீமை என மற்ற
வர்களால் பழிக்கப்படாமல் பார்த்துக் கொள்
ளுங்கள்.

17தேவனுடைய இராஜ்யத்தில் குடிப்பதும்
உண்பதும் முக்கியமல்ல. தேவனுக்கேற்ற
நீதிமானாக இருப்பதும், பரிசுத்த ஆவியானவ
ருக்குள் சமாதானமும் சந்தோஷமும் அடைவ
துமே முக்கியம். 18இவ்வழியில் கிறிஸ்துவுக்கு
சேவை செய்கிறவன் தேவனுக்கு ஏற்றவனாக
இருப்பான். அவன் மக்களாலும் ஏற்றுக்
கொள்ளப்படுபவனுமாயிருப்பான்.

19அதனால் சமாதானத்துக்கேற்றவற்றை சிர
மப்பட்டாவது செய்ய முயற்சி செய்வோம்.
ஒருவருக்கொருவர் உதவியானவற்றைச் செய்
ய முயல்வோம். 20உணவு உண்ணுவதால்
தேவனுடைய வேலையை அழிக்காமல் பார்த்
துக் கொள்ளவேண்டும். அனைத்து உணவும்
உண்பதற்கு ஏற்றதே. ஆனால் நாம் உண்ணும்
உணவு மற்றவர்கள் பாவத்தில் விழுவதற்கு
ஏதுவாக இருந்தால் அது தவறாகும். 21நீ
மாமிசம் உண்பதும், மது குடிப்பதும், உனது
சகோதரனையோ சகோதரியையோ பாவத்
தில் விழச் செய்யுமானால் அவற்றைச் செய்
யாமல் இருப்பது நல்லது. உன் சகோதர
னையோ சகோதரியையோ பாவத்தில் விழச்
செய்யும் எதனையும் செய்யாமல் இருப்பா
யாக.

22இவை பற்றிய உன் நம்பிக்கைகள் எல்
லாம் உனக்கும் தேவனுக்கும் இடையில் இர
கசியமாய் வைக்கப்பட வேண்டும். நல்ல
தென்று ஒருவன் நினைக்கும் காரியங்களில்
ஒருவன் குற்றவாளியாக இல்லாமல் இருப்பது
பெரும் பாக்கியமாகும். 23சரியானதுதான்
என்ற நிச்சயமில்லாமல் ஒருவன் ஒரு உண
வை உண்பானேயானால் அவன் தனக்குத்
தானே தப்பானவனாகிறான். ஏனென்றால்
அவனுக்கு அவனது செயலில் நம்பிக்கை
இல்லை. எனவே நம்பிக்கை இல்லாமல்
செய்யும் எச்செயலும் பாவமானதே.

15 விசுவாசத்தில் உறுதியாய் இருக்கிற
நாம் பலவீனமானவர்களுக்கு உதவி
செய்யவேண்டும். நாம் நமது திருப்திக்காக
மட்டுமே வாழ்தல் கூடாது. 2நம்மில் ஒவ்வொரு
வரும் மற்றவர்களையும் மகிழச்சியுறச் செய்
தல் வேண்டும். இதனை மற்றவர்களுக்கு உத
வியாகச் செய்யவேண்டும். அவர்கள் விசு
வாசத்தில் பலமுடையவர்களாக உதவி செய்ய
வேண்டும். 3கிறிஸ்து கூட தனது திருப்திக்காக
வாழவில்லை. "அவர்கள் உங்களை நிந்தித்
தால் என்னையும் நிந்திக்கிறவர்களாகிறார்
கள்"* என்று எழுதப்பட்டிருப்பதைப் போலா
கும் அது. 4வேதவசனத்தினால் பொறுமையும்
ஆறுதலும் உண்டாகிறது. அதனால் நாம் நம்
பிக்கை உள்ளவர்களாகும்படிக்கு, முன்பு
எழுதப்பட்டவைகளெல்லாம் நமக்குப் போத
னையாக எழுதப்பட்டன. 5பொறுமையும், பல
மும் தேவனிடமிருந்து வந்தன. இயேசு கிறிஸ்து
விரும்புகிற வழியை நீங்கள் உங்களுக்குள்
ஏற்றுக்கொள்ள தேவனிடம் பிரார்த்திப்பேன்.
6எனவே இதய ஒற்றுமையுடனும், ஒருமித்து
கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் பிதாவா
கிய தேவனை புகழ்வீர்கள். 7கிறிஸ்து உங்
களை ஏற்றுக் கொண்டார். எனவே நீங்களும்
ஒருவரையொருவர் ஏற்றுக்கொள்ளவேண்
டும். இது தேவனுக்கு மகிமையைக் கொண்டு
வரும். 8இதனால் யூதர்கள் தேவனுடைய இரக்
கத்துக்காக அவரை மகிமைப்படுத்த வேண்
டும். கிறிஸ்து யூதர்களுக்குப் பணியாளர்
ஆனார். இதன் முலம் அவர் தேவனுடைய
வாக்குறுதிகள் உண்மையானவை எனக்
காட்டினார். கிறிஸ்து யூதர்களின் தந்தை
யர்க்குக் கொடுத்த வாக்குறுதியை நிரூபித்து
விட்டார். 9இதனால் யூதரல்லாதவர்கள் தேவனு
டைய இரக்கத்துக்காக அவரை மகிமைப்ப
டுத்த வேண்டும். 'வேத வாக்கியங்களில்
எழுதப்பட்டுள்ளது:

---

**அவர்கள் … நிந்திக்கிறவர்களாகிறார்கள்** சங்கீதம் 69:9

"யூதர் அல்லாத மக்களுக்கிடையில் நான் உமக்கு நன்றி செலுத்துகிறேன். உமது பெயரைப் பாராட்டிப் பாடுவேன்"
சங்கீதம் 18:49

[10]மேலும் வேதவாக்கியம் கூறுகிறது:

"யூதரல்லாதவர்களாகிய நீங்கள் தேவனுடைய மக்களோடு சேர்ந்து மகிழ்ச்சியடையுங்கள்"
உபாகமம் 32:43

[11]மேலும் வேத வாக்கியம் கூறுகிறது:

"யூதரல்லாத நீங்கள் கர்த்தரைப் புகழுங்கள். அனைத்து மக்களும் கர்த்தரைப் புகழவேண்டும்"
சங்கீதம் 117:1

[12]ஏசாயா இப்படி கூறுகிறார்:

"ஈசாயின் குடும்பத்திலிருந்து ஒருவர் வருவார். யூதரல்லாதவர்களை அவர் ஆள்வார். அவரால் யூதரல்லாதவர்களும் நம்பிக்கை அடைவார்கள்."
ஏசாயா 11:10

[13]தேவன் வழங்கும் விசுவாசம் உங்களை சமாதானத்தாலும், சந்தோஷத்தாலும் நிரப்பட்டும் என்று பிரார்த்திக்கிறேன். பிறகு உங்களுக்கு மேலும் மேலும் விசுவாசம் பெருகும். பரிசுத்த ஆவியானவரின் வல்லமையால் அது நிரம்பி வழியும்.

### தன் பணியைப் பற்றிப் பவுல்

[14]எனது சகோதர சகோதரிகளே! நீங்கள்
நன்மையால் நிறைந்திருப்பதாக நம்புகிறேன்.
உங்களுக்குத் தேவையான அறிவு உங்களிடம்
இருப்பது எனக்குத் தெரியும். நீங்கள் ஒருவருக்
கொருவர் கற்பிக்கும் தகுதி பெற்றவர்கள். [15]நீங்
கள் நினைவுபடுத்திக்கொள்ளத்தக்க சிலவற்
றைப்பற்றி நான் வெளிப்படையாகவே எழு
தியிருக்கிறேன். தேவன் எனக்குச் சிறப்பான
வரத்தைக் கொடுத்திருப்பதால் நான் இதனைச்
செய்தேன். [16]என்னை இயேசு கிறிஸ்துவின்
ஊழியனாகத் தேவன் ஆக்கினார். நான் யூதரல்
லாதவர்களுக்கு உதவும்பொருட்டு என்னைத்
தேவன் ஊழியனாக்கினார். நற்செய்தியைக்
கற்றுக்கொடுப்பதின் மூலம் தேவனுக்குச்
சேவை செய்கிறேன். யூதரல்லாதவர்கள் தேவ
னால் ஏற்றுக்கொள்ளத்தக்க காணிக்கை
ஆகும்பொருட்டு நான் இதனைச் செய்கிறேன்.
அவர்கள் தேவனுக்காகப் பரிசுத்த ஆவியான
வரால் பரிசுத்தமாக்கப்பட்டனர்.

[17]நான் தேவனுக்காக கிறிஸ்துவுக்குள்
செய்த பணிகளுக்காகப் பெருமை கொள்கி
றேன். [18]நான் செய்து முடித்த செயல்களைப்
பற்றி நானே பேசுவதில்லை. யூதரல்லாதவர்
கள் தேவனுக்கு அடிபணிய, என் மூலம்
கிறிஸ்து செய்த செயல்களைப் பற்றி மட்டுமே
பேசுவேன். நான் செய்ததும், சொன்னதுமான
காரியங்கள் மூலமே அவர்கள் தேவனுக்குப்
பணிந்தனர். [19]அற்புதங்களையும், வல்லமைக
ளையும். பெருங்காரியங்களையும் பார்த்தும்
பரிசுத்த ஆவியானவரின் வல்லமையை உண
ர்ந்தும் அவர்கள் தேவனுக்குக் கீழ்ப்படிந்தனர்.
நான் எருசலேமிலிருந்து கிறிஸ்துவின் நற்
செய்தியைப் அறிவிக்க தொடங்கி, இல்லிரிக்
கம் நகர் வரை என் பணியை முடித்திருக்கி
றேன்.

[20]கிறிஸ்துவைப் பற்றிக் கேள்விப்படாத
மக்கள் இருக்கும் இடங்களில் நற்செய்தியைப்
போதிக்கவே எப்பொழுதும் நான் விரும்புகி
றேன். மற்றவர்கள் ஏற்கெனவே தொடங்கி
விட்ட பணிகளை நான் போய்த் தொட விரும்
பாததால் நான் இவ்வாறு செய்கிறேன்.
ஆனால்,

[21] "அவரைப் பற்றி கேட்டிராத மக்கள் அவரைப் பார்ப்பார்கள். அவரைப் பற்றி அறியாத மக்கள். அவரைப் புரிந்து கொள்வார்கள்."
ஏசாயா 52:15

என்று ஏற்கெனவே எழுதப்பட்டிருக்கிறது.

### ரோம் செல்லப் பவுலின் திட்டம்

[22]அதனால் தான் உங்களிடம் வருவதிலி
ருந்து பலமுறை நிறுத்தப்பட்டேன். [23]நான்
இந்தத் திசைகளில் இப்போது எனது
பணியை முடித்து விட்டேன். பல ஆண்டுக
ளாக உங்களைக் காண விரும்பியிருக்கிறேன்.
[24]நான் ஸ்பானிய நாட்டிற்குப் போகும்போது
உங்களிடம் வந்து உங்களைக் கண்டு கொள்
ளவும், நான் உங்களோடு தங்கியிருந்து மகிழ்
ச்சி அடைவேனென்றும் நம்புகிறேன். என்
பயணத்துக்கு நீங்களும் உதவி செய்யலாம்.
[25]தேவனுடைய மக்களுக்கு உதவுவதற்காக இப்
பொழுது நான் எருசலேமுக்குச் செல்கிறேன்.
[26]எருசலேமிலுள்ள தேவனுடைய மக்களில்
சிலர் வறுமையில் உள்ளனர். மக்கதோனியா,
அகாயா போன்ற நாடுகளில் உள்ள விசுவாசி
கள் கொடுப்பதில் மகிழ்ச்சியடைவார்கள்.
அவர்களே எருசலேமில் உள்ள விசுவாசிக
ளுக்கு உதவிசெய்து வருகின்றனர். [27]இப்படிச்
செய்வது நல்லதென்று எண்ணினார்கள். இப்
படிச் செய்கிறதற்கு அவர்கள் கடனாளியாக
வும் இருக்கிறார்கள். எப்படியென்றால் புறஜா
தியினர் அவர்களுடைய ஞான நன்மைகளில்
பங்கேற்கின்றனர். சரீர நன்மைகளில் அவர்
களுக்கு உதவுகின்றனர். அவர்கள் இவ்வி
தம் கடனாளியாயிருக்கிறார்களே. [28]எருசலே
மில் உள்ள ஏழை மக்கள் அவர்களுக்காக
வழங்கப்பட்ட பொருளை அடையவேண்டும்.
இதை முடித்த பிறகு ஸ்பானியாவுக்குப் புறப்ப

டுவேன். வழியில் உங்களைப் பார்ப்பேன்.
[29]நான் உங்களைப் பார்க்க வரும்போது, கிறி
ஸ்துவின் முழுமையான ஆசீர்வாதத்தை உங்க
ளுக்குக் கொண்டு வருவேன் என்பதை நான்
அறிவேன்.

[30]சகோதர சகோதரிகளே! நான் கர்த்தராகிய
இயேசு கிறிஸ்துவின் மூலமும் பரிசுத்த ஆவி
யானவரின் அன்பின் மூலமும் உங்களை
வேண்டுகிறேன். நீங்கள் பிரார்த்தனை செய்
யும்போது எனது போராட்டங்களில் பங்கு
கொள்ளுங்கள். தேவனிடம் பிரார்த்தனை செய்
யும்போது நினைவு கொள்ளுங்கள். [31]யூதேயா
விலுள்ள நம்பிக்கையற்றவர்களிடமிருந்து
நான் தப்பித்துக்கொள்ளும் பொருட்டு பிரார்த்
தனை செய்யுங்கள். எருசலேமிலுள்ள விசு
வாசிகளுக்கு நான் செய்யப்போகும் உதவி
அவர்களால் மகிழ்ச்சியுடன் ஏற்கப்படவும்
பிரார்த்தனை செய்யுங்கள். [32]பிறகு, தேவனு
டைய விருப்பம் இருந்தால் நான் உங்களிடம்
வருவேன். நான் மகிழ்ச்சியோடு வருவேன்.
உங்களோடு ஓய்வு கொள்ளுவேன். [33]சமாதா
னத்தின் தேவன் உங்கள் அனைவரோடும்
இருப்பாராக. ஆமென்.

### பவுலின் இறுதி வார்த்தைகள்

16 நம்முடைய சகோதரி பெபெயாளைக்
கிறிஸ்துவுக்குள் பரிசுத்தவான்களுக்கு
ஏற்றபடி ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று
நான் விரும்புகிறேன். கெங்கிரேயா ஊர்
சபையில் அவள் விசேஷ ஊழியக்காரி.
[2]கர்த்தரில் அவளை ஏற்றுக் கொள்ளும்படி
கேட்டுக்கொள்கிறேன். தேவனுடைய பிள்ளை
களின் வழியில் அவளையும் ஏற்றுக்கொள்க.
உங்களிடமிருந்து அவளுக்கு உதவிகள்
தேவையென்றால் செய்யுங்கள். அவள் எனக்
குப் பலமுறை உதவி செய்திருக்கிறாள். அவள்
மற்றவர்களுக்கும் உதவியாக இருந்திருக்கி
றாள்.

[3]பிரிஸ்கில்லாவுக்கும் ஆக்கில்லாவுக்கும்
என் வாழ்த்துக்களைச் சொல்லுங்கள். இயேசு
கிறிஸ்துவுக்குள் இவர்கள் இருவரும் என்
னோடு பணியாற்றினர். [4]எனது உயிரைக்
காப்பாற்ற தங்கள் உயிரைப் பணயம் வைத்
தனர். நான் அவர்களுக்கு நன்றிக் கடன்பட்டுள்
ளேன். யூதரல்லாதவர்களின் அனைத்து சபை
களுக்கும் நன்றிக் கடன்பட்டுள்ளேன். [5]அவர்க
ளுடைய வீட்டிலே கூடும் சபையையும் வாழ்த்
துங்கள்.

ஆசியாவிலே முதலில் கிறிஸ்துவைப்
பின்பற்றியவனாகிய எப்பனெத் என்ற அந்த
நண்பனையும் வாழ்த்துங்கள். [6]மரியாளையும்
வாழ்த்துங்கள். அவள் உங்களுக்காகப் பெரி
தும் உழைத்தாள். [7]அன்றோனீக்கையும் யூனி
யாவையும் வாழ்த்துங்கள். அவர்கள் எனது
உறவினர்கள். என்னோடு சிறையில் இருந்த
வர்கள். தேவனுடைய மிக முக்கியமான
தொண்டர்களுள் எனக்கு முன்னரே கிறிஸ்
துவை நம்பியவர்கள். [8]அம்பிலியாவை வாழ்த்
துங்கள். அவன் கர்த்தருக்குள் எனக்கு மிகவும்
அன்பானவன். [9]உர்பானை வாழ்த்துங்கள்.
அவன் என்னோடு கிறிஸ்துவுக்காகப் பணி
செய்தவன். எனது அன்பான நண்பனாகிய
ஸ்தாக்கியை வாழ்த்துங்கள். [10]அல்பெல்
லேயை வாழ்த்துங்கள். அவனது உண்மை
யான கிறிஸ்தவ பக்தி சோதிக்கப்பட்டு நிரூ
பிக்கப்பட்டுள்ளது. அரிஸ்தோபூலுவின் குடும்
பத்திலிலுள்ள அனைவரையும் வாழ்த்துங்கள்.
[11]ஏரோதியோனை வாழ்த்துங்கள். அவன்
எனது உறவினன். நர்கீசுவின் குடும்பத்தி
லுள்ள அனைவரையும் வாழ்த்துங்கள். அவர்
கள் கிறிஸ்துவுக்குட்பட்டவர்கள். [12]திரிபேனா
ளையும், திரிபோசாளையும் வாழ்த்துங்கள்.
ஏனெனில் அவர்கள் கர்த்தருக்காகக் கடினப்
பட்டு உழைத்துக் கொண்டிருக்கின்றனர்.
எனது அன்புமிக்க தோழியாகிய பெர்சி
யாளை வாழ்த்துங்கள். அவளும் கர்த்தருக்
காகக் கஷ்டப்பட்டு உழைத்தாள். [13]ரூபஸை
வாழ்த்துங்கள். அவன் கர்த்தருக்குள் சிறந்த
மனிதன். அவனது தாயையும் வாழ்த்துங்கள்.
அவள் எனக்கும் தாய்தான். [14]அசிங்கிரீத்து,
பிலெகோன், எர்மே, பத்திரொபா, எர்மா மற்
றும் அவர்களோடு இருக்கிற சகோதரர்களை
யும் வாழ்த்துங்கள். [15]பிலொலோகஸ், ஜீலியா,
நேரெஸ், அவனது சகோதரி, மற்றும் ஒலிம்
பாஸ் ஆகியோரையும் வாழ்த்துங்கள். அவர்க
ளோடிருக்கிற விசுவாசிகள் அனைவரையும்
வாழ்த்துங்கள். [16]ஒருவரையொருவர் பார்க்கும்
பொழுது பரிசுத்தமான முத்தத்தால் வாழ்த்துங்
கள். கிறிஸ்துவின் சபையார் உங்களை வாழ்த்
துகின்றனர்.

[17]சகோதர சகோதரிகளே! பிரிவினைகளை
உண்டாக்குகிற மக்களைப் பற்றி நீங்கள் மிக
வும் எச்சரிக்கையாய் இருக்கவேண்டும்
என்று கேட்டுக் கொள்கிறேன். அடுத்தவர்க
ளின் விசுவாசத்தை குலைப்பவர்களிடமும்
எச்சரிக்கையாய் தூர இருங்கள். நீங்கள் கற்ற
உண்மையான போதனைக்கு அவர்கள் எதி
ரானவர்கள். [18]அத்தகையவர்கள் இயேசுகிறிஸ்
துவுக்கு சேவை செய்ய விரும்புவதில்லை.
அவர்கள் தங்களைத் திருப்திப்படுத்திக்கொள்
ளவே விரும்புகிறார்கள். அவர்கள் தங்கள்
நாகரிகமான பேச்சுக்களாலும், இச்சகத்தாலும்
நயவஞ்சகமாக சாதாரண அப்பாவிமக்களை
தவறான வழியில் நடத்தி விடுகின்றனர். [19]உங்
களது கீழ்ப்படிதல் அனைத்து விசுவாசிகளா
லும் அறியப்பட்டுள்ளது. ஆகவே உங்களைப்
பற்றி நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்.
நீங்கள் நன்மையைப் பற்றி அறிந்து கொள்வ
தில் ஞானிகளாக இருக்க வேண்டும். தீமை
யைப் பற்றி அறிந்து கொள்வதில் அப்பாவி
களாய் இருக்கவேண்டும்.

[20]சமாதானத்தைத் தருகிற தேவன் விரை
வில் சாத்தானைத் தோற்கடித்து அவனை
உங்கள் கால்களில் கீழே நசுக்கிப் போடுவார்.
நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின்
கிருபை உங்களோடு இருப்பதாக. ஆமென்.

**21**என்னோடு ஊழியம் செய்கிற தீமோத்
தேயு உங்களுக்கு வாழ்த்துதல் கூறுகிறான்.
லூகியும், யாசோன், சொசிபத்தர் போன்ற
எனது உறவினர்களும் உங்களை வாழ்த்து
கிறார்கள். 22பவுல் சொல்லுகிற அக்காரியங்
களை எழுதுகிற தெர்தியு ஆகிய நான் கர்த்த
ருக்குள் உங்களை வாழ்த்துகிறேன்.
**23**என்னையும், எல்லா சபைகளையும் கண்
காணித்து வரும் காயுவும் உங்களை வாழ்த்து
கிறான். நகரத்து பொருளாளரான எரஸ்துவும்
சகோதரனான குவர்த்தும் உங்களை வாழ்த்து
கின்றனர். **24*** **25**தேவனுக்கு மகிமை உண்டாவ
தாக. அவரே உங்களது விசுவாசத்தைப்
பலப்படுத்துகிறார். நான் கற்றுத்தரும் நற்செய்
தியின் மூலம் தேவன் உங்களைப் பலப்
படுத்துகிறார். தேவனால் வெளிப்படுத்தப்
பட்ட இரகசியமான உண்மையே கிறிஸ்து
வைப் பற்றிய நற்செய்தி. இது தொடக்க கால
முதல் மறைக்கப்பட்டிருந்தது. **26**ஆனால் இப்
போது அந்த இரகசியம் வெளிப்படுத்தப்பட்
டுள்ளது. இது அனைவருக்கும் தெரிவிக்கப்
பட்டுள்ளது. இதனைப் பற்றி தீர்க்கதரிசிகளும்
எழுதினர். இது தேவனுடைய கட்டளை. இது
அனைவருக்கும் வெளிப்பட்டால்தான் அவர்
கள் தேவனை நம்பி அவருக்குப் பணிவார்
கள். தேவன் என்றென்றும் இருக்கிறார். **27**தாம்
ஒருவரே ஞானம் உள்ளவராய் இருக்கிற
தேவனுக்கு இயேசு கிறிஸ்துவின் மூலமாய்
என்றென்றைக்கும் மகிமை உண்டாவதாக.
ஆமென்.

---

***வசனம் 24*** *சில கிரேக்க எழுத்துக்களில் "நம்முடைய கர்த்தராயிருக்கிற இயேசு கிறிஸ்துவினுடைய கிருபை உங்கள் எல்லோரோடும் இருக்கட்டும். ஆமென்" என்று எழுதப்பட்டுள்ளது.*

# கொரிந்தியருக்கு எழுதிய முதலாம் கடிதம்

1 கிறிஸ்து இயேசுவின் ஒரு அப்போஸ்தல
னாக இருக்கும்பொருட்டு பவுலாகிய நான்
தேர்ந்தெடுக்கப்பட்டேன். நான் ஒரு அப்போஸ்த
லனாக வேண்டுமென தேவன் விரும்பினார்.
என்னிடமிருந்தும், நம் சகோதரர் சொஸ்தெனே
யிடமிருந்தும் இந்த கடிதம் அனுப்பப்படுகிறது.
2கொரிந்து பட்டணத்தின் சபைக்கும் கிறிஸ்து
இயேசுவில் பரிசுத்தமாக்கப்பட்ட அனைவருக்
கும் இந்த கடிதம் எழுதப்படுகிறது. தேவனு
டைய பரிசுத்த மக்களாக நீங்கள் அழைக்கப்
பட்டீர்கள். அவர்களுக்கும் நமக்கும் கர்த்தராய்
இருக்கிற இயேசு கிறிஸ்துவின் பெயரில்
நம்பிக்கை வைத்து எங்கெங்கும் இருக்கிற
மக்களுடன் இணைந்து நீங்களும் அழைக்கப்
பட்டிருக்கிறீர்கள்.
3நம் பிதாவாகிய தேவனிடமிருந்தும் கர்த்த
ராகிய இயேசு கிறிஸ்துவிடமிருந்தும் கிருபை
யும்,சமாதானமும் உங்களுக்கு உண்டாவதாக.

### பவுல் தேவனுக்கு நன்றி கூறுதல்

4கிறிஸ்து இயேசு மூலமாக தேவன் உங்க
ளுக்கு அளித்த கிருபைக்காக நான் எப்போ
தும் என் தேவனுக்கு உங்களுக்காக நன்றி
சொல்வேன். 5இயேசுவில் எல்லா வகையிலும்
நீங்கள் ஆசி பெற்றிருக்கிறீர்கள். உங்கள்
எல்லா பேச்சிலும், எல்லா வகை அறிவிலும்
நீங்கள் ஆசி பெற்றுள்ளீர்கள். 6கிறிஸ்துவைப்
பற்றிய உண்மை உங்களில் நிரூபிக்கப்பட்டுள்
ளது. 7கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின்
மறுவருகைக்காக நீங்கள் காத்திருக்கையில்
தேவனிடமிருந்து பெற வேண்டிய வெகுமதி
யாவும் பெற்றுள்ளீர்கள். 8இயேசு இறுதிவ
ரைக்கும் உங்களைப் பலமுடையவர்களாக
ஆக்குவார். அவர் உங்களைப் பலசாலிகளாக
மாற்றுவதால் கர்த்தராகிய இயேசுகிறிஸ்து
மீண்டும் வருகை தரும் அந்நாளில் உங்களிடம்
எந்தத் தவறும் காணப்படாது. 9தேவன் நம்பிக்
கைக்குரியவர். தேவனாகிய ஒருவரே உங்க
ளைத் தம் குமாரனாகிய கர்த்தராகிய இயேசு
கிறிஸ்துவோடு வாழ்வைப் பகிர்ந்து கொள்
ளும்படியாக அழைத்தார்.

### கொரிந்து சபையில் பிரச்சனைகள்

10சகோதர சகோதரிகளே! கர்த்தராகிய
இயேசுகிறிஸ்துவின் பெயரினால் உங்களை
ஒன்று வேண்டுகிறேன். நீங்கள் ஒருவரோடு
ஒருவர் கருத்தொற்றுமையுடன் வாழ வேண்டு
கிறேன். அப்போது உங்களுக்குள் பிரிவினை
கள் ஏற்படாது. ஒரே விதமான சிந்தனையும்,
ஒரே நோக்கமும் கொண்டு முழுக்க இணைந்த
வர்களாய் நீங்கள் வாழ வேண்டுமென வேண்
டுகிறேன். 11எனது சகோதர சகோதரிகளே!
குலோவேயாளின் குடும்பத்தினர் சிலர் உங்
களைப்பற்றி என்னிடம் கூறினர். உங்களுக்கி
டையில் வாக்குவாதங்கள் இருக்கின்றன என
நான் கேள்விப்பட்டேன். 12நான் கூற விரும்பு
வது இதுதான்: உங்களில் ஒருவர் “நான் பவு
லைப் பின்பற்றுகிறேன்” என்கிறார். மற்றொ
ருவர் “அப்பொல்லோவைப் பின்பற்றுகி
றேன்” என்கிறார். இன்னொருவர் “நான்
கேபாவைப் பின்பற்றுகிறேன்” என்கிறார்.
இன்னும் ஒருவர் “நான் கிறிஸ்துவைப் பின்
பற்றுகிறேன்” என்கிறார். 13கிறிஸ்துவைப் பல
வகைக் குழுக்களாகப் பிரித்துப் பார்க்கமுடி
யாது! சிலுவையில் பவுல் உங்களுக்காக மரித்
தானா? இல்லை. பவுலின் பெயரால் நீங்கள்
ஞானஸ்நானம் அடைந்தவர்களா? இல்லை.
14கிறிஸ்பு மற்றும் காயு தவிர வேறு எவருக்
கும் நான் ஞானஸ்நானம் கொடுக்கவில்லை
என்பதில் தேவனுக்கு நன்றியுடையவனாயி
ருக்கிறேன். 15எனது பெயரில் நீங்கள் ஞானஸ்
நானம் பெற்றீர்கள் என எவரும் இப்போது
கூற முடியாது என்பதால் நான் தேவனுக்கு
நன்றியுடையவனாக இருக்கிறேன். 16ஸ்தே
வான் குடும்பத்தினருக்கும் நான் ஞானஸ்நா
னம் கொடுத்தேன். ஆனால் வேறெவருக்கும்
நான் ஞானஸ்நானம் கொடுத்ததாக எனக்கு
நினைவில்லை. 17மக்களுக்கு ஞானஸ்நானம்
கொடுக்கும் வேலையைக் கிறிஸ்து எனக்குத்
தரவில்லை. நற்செய்தியை மக்களுக்குக் கூறும்
வேலையையே கிறிஸ்து எனக்கு அளித்தார்.
ஆனால் உலகத்து ஞானத்தைக் காட்டும் சொற்
களைப் பயன்படுத்தாமல் நற்செய்தியை மட்
டும் சொல்லவே இயேசு கிறிஸ்து என்னை
அனுப்பினார். நற்செய்தியைக் கூற உலக
ஞானத்தை நான் பயன்படுத்தினால், அப்
போது கிறிஸ்துவின் சிலுவை அர்த்தமற்றதா
கிவிடும்.

### கிறிஸ்துவில் காணப்படும் ஞானம்

18கெட்டுப்போகிற மக்களுக்குச் சிலுவை
பற்றிய போதனை முட்டாள்தனமாகத் தோன்
றுகிறது. இரட்சிக்கப்படுகிற நமக்கோ, அது
தேவனுடைய வல்லமையாகும்.

19 "நான் ஞானிகளின் ஞானத்தை அழிப்
பேன். நான் மேதைகளின் அறிவைப்
பயனற்றதாக்குவேன்."
ஏசாயா *29:14*

என்று வேதவாக்கியங்களில் எழுதப்பட்டு
இருக்கிறது.
20தற்காலத்தின் ஞானி எங்கே? கல்வியில்
தேர்ந்தவன் எங்கே? இன்றைய தத்துவ ஞானி
எங்கே? உலகத்து ஞானத்தை தேவனே மடமை
யாக மாற்றினார். 21தேவன் தனது ஞானத்தி
னால் விரும்பியது இதுவே: உலகத்தின்
ஞானத்தால், உலகம் தேவனைக் கண்டு
கொள்ள முடியவில்லை. தேவனை விசுவாசிக்
கிற மக்களைக் காக்கும்பொருட்டு மடமை
யாய்த் தோன்றும் தனது செய்தியைத் தேவன்
பயன்படுத்தினார். 22யூதர்கள் அதிசயங்களைச்
சாட்சியாகக் கேட்கின்றனர். கிரேக்கர்கள்
ஞானத்தை வேண்டுகின்றனர். 23ஆனால் நாங்
கள் போதிப்பது இதுவே. கிறிஸ்து சிலுவை
யின் மேல் கொல்லப்பட்டார். இது யூதர்களுக்கு,
நம்பிக்கைக்கு ஒரு பெரிய தடையாகும். யூதர்
களைத் தவிர பிறருக்கு இது மடமையாகத்
தோன்றும். 24ஆனால், தேவன் தேர்ந்துள்ள
யூதருக்கும், கிரேக்கருக்கும் கிறிஸ்துவே தேவ
னின் வல்லமையும், தேவ ஞானமும் ஆவார்.
25தேவனுடைய மடமை கூட மனிதரின் ஞானத்
திலும் சிறந்தது. தேவனுடைய சோர்வும் கூட
மனிதரின் பலத்தைக் காட்டிலும் வலிமை
உடையது.

26சகோதர சகோதரிகளே! தேவன் உங்க
ளைத் தெரிந்துள்ளார். அது பற்றிச் சிந்தியுங்
கள். உலகத்தார் ஞானத்தைப் பற்றி வைத்தி
ருக்கும் கணிப்பின்படி உங்களில் பலர் ஞானி
கள் அல்லர். உங்களில் பலருக்கு மிகப்பெரிய
செல்வாக்கு எதுவும் கிடையாது. உங்களில்
பலர் பிரபலமான குடும்பங்களிலிருந்தும் வந்த
வர்கள் அல்லர். 27ஞானிகளுக்கு வெட்கத்தைத்
தரும்படியாக தேவன் உலகத்தின் முட்டாள்தன
மான பொருள்களைத் தேர்ந்தெடுத்தார். பல
வான்களான மனிதர்களை அவமதிக்க உல
கத்தின் பலவீனமான பொருள்களைத் தேர்ந்
தெடுத்தார். 28உலகம் முக்கியமற்றதென்று
நினைப்பதை தேவன் தேர்ந்து கொண்டார்.
உலகம் வெறுப்பதையும், பயனற்றதெனக் கரு
துவதையும் அவர் தேர்ந்தெடுத்தார். முக்கிய
மென உலகம் பார்க்கிறவற்றை அழிப்பதற்கா
கவே அவர் அப்படிச் செய்தார். 29எந்த
மனிதனும் தேவனுக்கு முன்பு தற்பெருமை
அடையாதபடிக்கு தேவன் இப்படிச் செய்தார்.
30உங்களை கிறிஸ்து இயேசுவின் ஒரு பாக
மாகும்படி செய்தவர் தேவனே, தேவனிடம்
இருந்து கிறிஸ்து நமக்கு ஞானமாக இருக்
கிறார். பாவத்தில் இருந்து விடுதலை அடைய
வும், தேவனோடு இணக்கமாக இருக்கவும்
கிறிஸ்துவே காரணமாவார். நாம் பரிசுத்தமாய்
இருப்பதற்கும் கிறிஸ்துவே காரணமாவார்.
31எனவே எழுதப்பட்டுள்ளபடி "ஒருவர் பெரு
மைப் படுவதாக இருந்தால், தேவனில் மட்டுமே
பெருமைப்படவேண்டும்." *

## சிலுவையைப் பற்றிய செய்தி

2 அன்பான சகோதர சகோதரிகளே! நான்
உங்களிடம் வந்தபோது தேவனுடைய
உண்மையை உங்களுக்குச் சொன்னேன். ஆ
னால் அதிகமான ஞானத்தையோ, அழகிய
வார்த்தைகளையோ நான் உபயோகிக்க
வில்லை. 2உங்களோடு இருக்கையில் இயேசு
கிறிஸ்துவையும் அவரது சிலுவை மரணத்
தையும் தவிர பிற அனைத்தையும் மறப்பேன்
என முடிவெடுத்தேன். 3நான் உங்களிடம் வந்த
போது மிகவும் சோர்வாகவும், பயத்தால் நடுங்
கிக்கொண்டும் இருந்தேன். 4எனது போதனை
யும் பேச்சும் வலியுறுத்திச் சொல்லும் ஆற்ற
லுள்ள ஞானம் பொருந்திய வார்த்தைகளைக்
கொண்டனவாய் இருக்கவில்லை. பரிசுத்தாவி
கொடுக்கின்ற வல்லமையே எனது போத
னைக்கு நிரூபணம் ஆகும். 5உங்கள் விசுவா
சம் தேவனுடைய வல்லமையில் இருக்கவேண்
டும் என்பதற்காகவும், மனிதனின் ஞானத்தில்
இருக்கக் கூடாதென்பதற்காகவும் நான் இவ்
வாறு செய்தேன்.

## தேவனுடைய ஞானம்

6பக்குவமடைந்த மக்களுக்கே நாம் ஞானத்
தைப் போதிக்கிறோம். ஆனால் நாம் போதிக்
கும் இந்த ஞானம் இவ்வுலகத்திலிருந்து வரு
வதல்ல. இந்த உலகத்து ஆட்சியாளர்களின்
ஞானமும் இதுவல்ல. அந்த ஆட்சியாளர்கள்
தங்கள் அதிகாரத்தை இழந்து வருகின்றனர்.
7ஆனால் நாம் தேவனுடைய இரகசியமான
ஞானத்தைப் பேசுகிறோம். மக்களிடமிருந்து
இந்த ஞானம் மறைக்கப்பட்டுள்ளது. நமது
மகிமைக்காக தேவன் இந்த ஞானத்தைத்
திட்டமிட்டார். உலகம் தோன்றுவதற்கு முன்பே
தேவன் இதைத் திட்டமிட்டார். 8இந்த உலகத்தில்
எந்த ஆட்சியாளனும் இந்த ஞானத்தைப் புரிந்
துகொண்டிருக்கவில்லை. அவர்கள் அத
னைப் புரிந்து கொண்டிருந்தால் மகிமையின்
கர்த்தரை சிலுவையில் கொன்றிருக்கமாட்டார்
கள். 9ஆனால்,

"தேவன் தன்னை நேசிக்கும் மக்களுக்
காகச் செய்த ஏற்பாட்டை எந்த கண்ணும்
பார்க்கவில்லை, எந்தக் காதும் கேட்க
வில்லை, எந்த மனிதனும் எண்ணிப்
பார்த்ததில்லை"
ஏசாயா *64:4*

என்று எழுதப்பட்டிருக்கிறது.
10ஆனால், தேவன் இவற்றை ஆவியானவ
ரின் மூலமாக எங்களுக்குக் காட்டியுள்ளார்.

---

**ஒருவர் ... வேண்டும்** எரேமியா *9:24.*

ஆவியானவர் எல்லாவற்றையும் அறிவார்.
தேவனுடைய ஆழ்ந்த அந்தரங்கங்களையும்
பரிசுத்த ஆவியானவர் அறிவார். 11அதை
இப்படி விளக்கலாம்: ஒருவர் அடுத்தவருடைய
எண்ணங்களை அறியமுடியாது. அவனுக்
குள்ளிருக்கிற அவனுடைய ஆவியே அறியும்.
அதுவே தேவனுக்கும் பொருந்தும். தேவனு
டைய ஆவியானவர்தான் அந்த எண்ணங்
களை அறிவார். 12நாம் உலகின் ஆவியைக்
கொண்டிருக்கவில்லை. நாம் தேவனிடமிருந்து
அவரது ஆவியானவரைப் பெற்றோம். தேவன்
நமக்குக் கொடுத்துள்ள பொருள்களை அறியு
மாறு நாம் ஆவியானவரைப் பெற்றோம்.
13நாம் இவற்றைப் பேசும்போது மனிதனுக்
குள்ள ஞானத்தால் நாம் அறிவிக்கப்பட்ட
வார்த்தைகளைப் பயன் படுத்துவதில்லை. பரி
சுத்த ஆவியானவர் அறிவித்துள்ள வார்த்தை
களைப் பயன்படுத்துகிறோம். ஆன்மீகக் கருத்
துகளை விளக்க ஆன்மீகமான சொற்களையே
பயன்படுத்துகிறோம். 14ஆன்மீக வாழ்க்கை
யில் ஈடுபடாத மனிதன் தேவனுடைய ஆவியா
னவரிடமிருந்து வரும் வார்த்தைகளை ஏற்றுக்
கொள்வதில்லை. அவன் அவற்றை மடமை
யாகக் கருதுகிறான். அவன் ஆவியானவர்
கருதுவனவற்றை புரிந்துகொள்ள முடியாது.
ஏனெனில் அவை ஆன்மீகமாகவே புரிந்து
கொள்ளப்படக்கூடும். 15ஆனால், ஆன்மீக
உணர்வுள்ளவனோ எல்லாவற்றைப்பற்றியும்
நியாயம் தீர்க்கமுடியும். மற்றவர்கள் அவனை
நியாயம் தீர்க்க முடியாது.

16 "'யார் தேவனுடைய எண்ணத்தை அறி
வார்? யார் தேவனுக்கு அறிவுறுத்து
வார்கள்?"

ஏசாயா 40:13

என்று எழுதப்பட்டிருக்கிறது. ஆனால் நமக்கு
கிறிஸ்துவின் சிந்தனை இருக்கிறது.

### மனிதனைப் பின்பற்றுவது தவறு

3 சகோதர சகோதரிகளே, கடந்த காலத்தில்
ஆன்மீகமானவர்களிடம் பேசுவதைப்
போல நான் உங்களிடம் பேச முடியாமல்
போயிற்று. கிறிஸ்துவில் குழந்தைகளைப்
போன்று, உலகின் சாதாரண மக்களிடம் பேசு
வதைப் போன்று உங்களிடம் பேச வேண்டிய
தாயிற்று. 2நான் உங்களுக்குக் கற்பித்தவை
பாலைப் போன்றது, திட உணவைப்
போன்றவை அல்ல. ஏனெனில் திட உணவை
உட்கொள்ளுமளவிற்கு நீங்கள் பக்குவம் பெற
வில்லை. இப்போதும்கூட திட உணவை ஏற்
கும் தகுதியை நீங்கள் பெறவில்லை. 3நீங்கள்
இன்னும் ஆன்மீகமான மக்கள் அல்ல. உங்க
ளுக்குப் பொறாமையும், வாதாடுகிற குணமும்
உண்டு. இது நீங்கள் ஆன்மீகமானவர்கள்
அல்ல என்பதைக் காட்டுகிறது. உலகின் சாதா
ரண மக்களைப் போலவே நீங்களும் நடந்து
கொள்கின்றீர்கள். 4உங்களில் ஒருவன் "நான்
பவுலைப் பின்பற்றுகிறேன்" எனவும், இன்
னொருவன் "அப்பொல்லோவைப் பின்பற்று
கிறேன்" எனவும் கூறுகிறீர்கள். நீங்கள் அப்ப
டிப்பட்டவற்றைக் கூறும்போது நீங்களும் உல
கின் சாதாரண மக்களைப் போல நடந்து
கொள்கிறீர்கள்.

5அப்பொல்லோ முக்கியமானவனா? இல்
லை. பவுல் முக்கியமானவனா? இல்லை. நீங்
கள் விசுவாசிப்பதற்கு உதவிய தேவனுடைய
பணியாட்களே நாங்கள். தேவன் எங்களுக்கு
இட்ட பணியையே நாங்கள் ஒவ்வொருவரும்
செய்தோம். 6நான் விதையை (போதனை)
விதைத்தபோது, அப்பொல்லோ நீரூற்றினான்.
ஆனால் தேவன் ஒருவரே விதையைத் துளிர்
த்து வளரும்படியாகச் செய்தார். 7எனவே
விதையை விதைக்கின்ற மனிதன் முக்கியமா
னவன் அல்ல. அதற்கு நீரூற்றுகின்ற மனித
னும் முக்கியமானவன் அல்ல. எல்லாவற்றை
யும் வளர்ச்சியுறும்படி செய்கின்றவராகிய
தேவன் ஒருவரே முக்கியமானவர். 8விதை
யை விதைப்பவனுக்கும், நீரூற்றிப் பேணுபவ
னுக்கும் குறிக்கோள் ஒன்றே. தன் வேலைக்கு
ரிய வெகுமதியை ஒவ்வொருவனும் பெறு
வான். 9நாங்கள் தேவனுக்காக ஒருமித்து
உழைக்கிற வேலையாட்கள். நீங்களே தேவ
னுக்குரிய ஒரு நிலத்தைப் போன்றவர்கள்.
நீங்களே தேவனுக்குரிய ஒரு வீட்டைப் போன்
றவர்கள்.

10சிறந்த வீட்டைக் கட்டும் வேலையாளைப்
போன்று நான் வீட்டின் அஸ்திபாரத்தைக்
கட்டினேன். தேவன் எனக்கு அளித்த வரத்தை
நான் அதற்குப் பயன்படுத்தினேன். மற்றவர்
கள் அந்த அஸ்திபாரத்தின்மீது கட்டுகிறார்கள்.
ஆனால் ஒவ்வொருவனும் அதனை எவ்வாறு
கட்டுகிறான் என்பதில் கவனம் செலுத்த
வேண்டும். 11அஸ்திபாரம் ஏற்கெனவே கட்டப்
பட்டுள்ளது. வேறெந்த அஸ்திபாரத்தையும் ஒரு
வரும் அமைக்க முடியாது. ஏற்கெனவே கட்டப்
பட்ட அஸ்திபாரம் இயேசு கிறிஸ்துவாகும்.
12பொன், வெள்ளி, மணிகள், மரம், புல்,
வைக்கோல் போன்றவற்றை பயன்படுத்தி ஒரு
வன் அந்த அஸ்திபாரத்தின்மீது கட்டமுடியும்.
13ஒவ்வொருவனின் வேலையும் இறுதியில்
(கிறிஸ்து மக்களை நியாயம் தீர்க்கிற நாளில்)
பகிரங்கப்படுத்தப்படும். அந்த நாளில் ஒவ்வொ
ருவனின் பணியையும் அக்கினி சோதிக்கும்.
14அஸ்திபாரத்தில் ஒருவன் கட்டிய கட்டிடம்
நிலைக்குமாயின் அவன் தகுந்த நற்பலன்
பெறுவான். 15ஆனால், ஒருவனின் கட்டிடம்
எரிந்து போகுமானால் அவன் நஷ்டம் அடை
வான். அந்த மனிதன் காப்பாற்றப்படுவான்.
எனினும் அக்கினியினின்று தப்பி வந்தாற்
போன்று ஒரு நிலையை அவன் அடைவான்.

16நீங்களே தேவனுடைய ஆலயம் என்பதை
நீங்கள் அறிவீர்கள். தேவனுடைய ஆவியான
வர் உங்களில் வாழ்கிறார். 17தேவனுடைய

ஆலயத்தை அழிக்கும் ஒருவனை தேவன்
அழிப்பார். ஏன்? தேவனுடைய ஆலயம் பரிசுத்
தமானது. நீங்கள் தேவனுடைய ஆலயமாவீர்
கள்.

18உங்களை நீங்களே ஏமாற்றிக் கொள்ளா
தீர்கள். உங்களில் ஒருவன் தன்னை இவ்வுல
கில் ஞானமுள்ளவனாக நினைத்தால் அவன்
முட்டாளாக வேண்டும். இந்த வகையில் அவன்
உண்மையான ஞானியாகிறான். 19ஏன்? ஏனெ
னில் இந்த உலகத்து ஞானத்தை தேவன்
மடமையானதாகவே கருதுகிறார். அது வேத
வாக்கியங்களில் எழுதப்பட்டுள்ளது. "அவர்
(தேவன்) ஞானிகள் தங்கள் தந்திர வழிகளை
பயன்படுத்துகையில் அவர்களை மடக்கிப்
பிடிக்கிறார்"* என்று எழு தப்பட்டிருக்கிறது.
20தேவன் ஞானிகளின் எண்ணத்தை அறி
வார். அவர்களுடைய எண்ணங்கள் பயனற்
றவை என்பதை தேவன் அறிவார்.* 21என
வே, நீங்கள் மனிதரைப் பற்றி பெருமை
பாராட்டாதீர்கள். எல்லாப் பொருள்களும் உங்
களுக்கு உரியனவே. 22பவுல், அப்பொல்லோ,
கேபா (பேதுரு), உலகம், வாழ்வு, மரணம்,
நிகழ்காலம், எதிர்காலம் இவை எல்லாம் உங்
களுடையவையே. 23நீங்கள் கிறிஸ்துவுக்குரிய
வர்கள். கிறிஸ்து தேவனுக்கு உரியவர்.

### கிறிஸ்துவின் அப்போஸ்தலர்கள்

4 மக்கள் நம்மைப்பற்றி நினைக்க வேண்டி
யது இதுவாகும். நாம் கிறிஸ்துவின் பணி
யாட்களே. தேவன் தமது இரகசியமான உண்
மைகளை ஒப்படைத்திருக்கிற மக்கள் நாமே.
2ஒரு விஷயத்தில் நம்பிக்கைக்கு உரியவனாக
இருக்கிற ஒருவன் அந்நம்பிக்கைக்குத் தான்
தகுதியானவனே என்று காட்டவேண்டும். 3நீங்
கள் எனக்கு நீதி வழங்கினால் அதைப்
பொருட்படுத்தமாட்டேன். எந்த உலகத்து நீதி
மன்றமும் எனக்கு நியாயம் தீர்ப்பதைக்கூட
பொருட்டாகக் கொள்ளமாட்டேன். நான் என
க்கு நீதி வழங்கமாட்டேன். 4நான் எந்தத் தவ
றும் இழைத்ததாக எனக்குத் தெரியவில்லை.
ஆனால், அது என்னைக் களங்கம் அற்றவ
னாக மாற்றாது. என்னை நியாயம் தீர்க்கிறவர்
கர்த்தர் ஒருவரே. 5எனவே தகுந்த நேரம் வரும்
முன்பு நீதி வழங்காதீர்கள். கர்த்தர் வரும்வரை
காத்திருங்கள். அவர் இருளில் மறைந்திருப்
பவற்றின் மீது ஒளியை அனுப்புவார். மக்க
ளின் மனதிலிருக்கும் இரகசியமான விஷயங்
களை அவர் வெளிப்படுத்துவார். ஒவ்வொரு
மனிதனுக்கும் உரிய கீர்த்தியை அவனவனுக்
குக் கிடைக்கும்படியாகச் செய்வார்.

6சகோதர சகோதரிகளே! அப்பொல்லோ
வையும், என்னையும் இவற்றில் உதாரணங்க
ளாக நான் உங்களுக்குக் காட்டினேன். எழுதப்
பட்டுள்ள சொற்களின் பொருளை எங்களிடமி
ருந்து நீங்கள் அறிந்து கொள்ளுமாறு இதைச்
செய்தேன். "(வேத வாக்கியங்களில்) எழுதி
இருப்பதைப் பின்பற்றி நடவுங்கள்." அப்
போது நீங்கள் ஒருவனைக் குறித்துப் பெருமை
பாராட்டி, இன்னொருவனை வெறுக்கமாட்டீர்
கள். 7நீங்கள் பிற மக்களை விட சிறந்தவர்கள்
என்று யார் கூறினார்கள்? உங்களுக்குக்
கொடுக்கப்பட்டவற்றையே நீங்கள் அனுபவிக்
கிறீர்கள். உங்களுக்குத் தரப்பட்டவையே உங்க
ளுக்கு வாய்த்திருக்கையில் அவற்றை உங்கள்
வல்லமையால் பெற்றதாக நீங்கள் ஏன் பெரு
மை அடையவேண்டும்?

8உங்களுக்கு வேண்டிய அனைத்தையும்
நீங்கள் பெற்றிருப்பதாக நினைக்கிறீர்கள். நீங்
கள் செல்வந்தர்களென எண்ணுகிறீர்கள். எங்
கள் உதவியின்றி நீங்கள் ஆளுபவர்களாக
விளங்குவதாக கருதுகிறீர்கள். நீங்கள் உண்
மையிலேயே மன்னர்களாக விளங்க வேண்
டுமென நான் விரும்புகிறேன். அப்போது,
நாங்களும் உங்களோடுகூட ஆளுபவர்களாக
இருந்திருப்போம். 9ஆனால் தேவன் எனக்கும்
பிற அப்போஸ்தலர்களுக்கும் கடைசியான
இடத்தையே கொடுத்திருப்பதாக எனக்குத் தோ
ன்றுகிறது. எல்லாரும் பார்த்திருக்க மரண
தண்டனை அளிக்கப்பட்ட மனிதர்களைப்
போன்றவர்கள் நாங்கள். தேவ தூதர்களும்
மனிதர்களும் முழு உலகமும் பார்த்திருக்கும்
ஒரு காட்சியைப் போன்றவர்கள் நாங்கள்.
10கிறிஸ்துவுக்கு நாங்கள் மூடர்கள். ஆனால்
கிறிஸ்துவுக்குள் ஞானிகளாக நீங்கள் உங்க
ளைக் கருதுகிறீர்கள். நாங்கள் பலவீனர்கள்.
ஆனால் நீங்கள் பலசாலிகளாக நினைக்கிறீர்
கள். மக்கள் உங்களைக் கௌரவிக்கின்றனர்.
ஆனால் அவர்கள் எங்களை கௌரவப்படுத்து
வதில்லை. 11இப்போதும் குடிப்பதற்கும், உண்
பதற்கும் தேவையான பொருள்கள் எங்களுக்
குக் கிடைப்பதில்லை. எங்களுக்கு வேண்டிய
ஆடைகள் இருப்பதில்லை. அவ்வப்போது பிற
ரால் அடிக்கப்படுகிறோம். எங்களுக்கு வீடுகள்
இல்லை. 12எங்களுக்குத் தேவையான உண
வின்பொருட்டு எங்கள் கைகளால் கடினமாக
உழைக்கிறோம். மக்கள் எங்களை சபிக்கிறார்
கள், ஆனால் நாங்கள் அவர்களை ஆசீர்வதிக்
கிறோம். நாங்கள் மோசமான முறையில் நடத்
தப்படுகிறபோது பொறுமையுடன் சகித்துக்
கொள்கிறோம். மக்கள் குறை கூறுகையில்
பொறுத்துக் கொள்கிறோம். 13மக்கள் எங்க
ளைக் குறித்துத் தீமைகளைப் பேசினாலும்,
நாங்கள் அவர்களைக் குறித்து நல்ல
வற்றையே பேசுகிறோம். பூமியின் கழிவுப்
பொருள்களாகவும், அழுக்காகவுமே மக்கள்
எங்களை இதுவரைக்கும் நடத்தி வந்துள்ள
னர். 14நீங்கள் வெட்கமடையுமாறு செய்ய நான்
முயலவில்லை. உங்களை எனது சொந்தக்
குழந்தைகளெனக் கருதி இவற்றையெல்லாம்
உங்களுக்கு முன் எச்சரிக்கையாய் எழுதுகி
றேன். 15கிறிஸ்துவில் பதினாயிரம் போதகர்

---

**அவர் ... பிடிக்கிறார்** *யோபு 5:13.*

**தேவன் ... அறிவார்** *சங்கீதம் 94:11.*

களை நீங்கள் பெற்றிருக்கலாம். ஆனால் உங்க
ளுக்குப் பல தந்தையர் இல்லை. நற்செய்தியின்
மூலமாக கிறிஸ்து இயேசுவில் நான் உங்களுக்
குத் தந்தையானேன். [16]நீங்களும் என்னைப்
போலவே இருக்கும்படி நான் உங்களை வேண்
டுகிறேன். [17]அதனாலேயே நான் தீமோத்தே
யுவை உங்களிடம் அனுப்புகிறேன். கர்த்தருக்
குள் அவன் என் மகன் ஆவான். நான் தீமோத்
தேயுவை நேசிக்கிறேன். அவன் உண்மையுள்
ளவன். கிறிஸ்து இயேசுவில் என் வாழ்வின்
நெறியை நீங்கள் நினைவுகூருவதற்கு அவன்
உதவி செய்வான். எல்லா சபைகளிலும் அந்த
வாழ்க்கை நெறியையே நான் போதிக்கிறேன்.
[18]நான் உங்களிடம் மீண்டும் வரமாட்டேன்
என எண்ணி உங்களில் சிலர் தற்பெருமை
யால் நிரம்பி இருக்கிறீர்கள். [19]ஆனால் மிக
விரைவில் உங்களிடம் வருவேன். தேவன்
நான் வரவேண்டுமென விரும்பினால் நான்
வருவேன். அப்போது தற்பெருமை பாராட்டு
வோர் சொல்வதை அல்ல, செயலில் காட்டு
வதைக் காண்பேன். [20]தேவனுடைய இராஜ்யம்
பேச்சல்ல, பெலத்திலே என்பதால் இதைக்
காண விரும்புகிறேன். [21]உங்கள் விருப்பம்
என்ன? நான் உங்களிடம் தண்டனை தர
வருவதா? அல்லது அன்பு, மென்மை ஆகிய
வற்றோடு வருவதா?

### சபையின் ஒரு தார்மீகச் சிக்கல்

5 பாலுறவு தொடர்பான பாவங்கள் உங்களி
டம் உள்ளன, என்று மக்கள் உண்மையா
கவே கூறுகின்றனர். அவை தேவனை அறி
யாத மக்களிடம் கூட இல்லாத தீய வகையான
பாலுறவு தொடர்பான பாவங்கள் ஆகும். ஒரு
வன் அவனது தந்தையின் மனைவியுடன்
உறவு கொண்டிருக்கிறான் என்று மக்கள்
கூறுகின்றனர். [2]எனினும் நீங்கள் உங்களைக்
குறித்துப் பெருமையடைகின்றீர்கள். அதற்குப்
பதிலாக, ஆழ்ந்த வருத்தம் கொண்டிருக்க
வேண்டும். அந்தப் பாவத்தைச் செய்தவனை
உங்களிடமிருந்து விலக்கி வைக்க வேண்டும்.
[3]என்னுடைய சரீரம் உங்களோடு இருக்கிற
தில்லை. ஆனால் ஆவியில் நான் உங்களோடு
இருக்கிறேன். உங்களோடு நான் அங்கே இருந்
திருந்தால் எப்படிச் செய்திருப்பேனோ, அதே
போல இப்பாவத்தைச் செய்த மனிதனை நான்
ஏற்கெனவே நியாயம் தீர்த்துவிட்டேன். [4]நம்
கர்த்தராகிய இயேசுவின் பெயரால் ஒன்று
கூடுங்கள், நான் ஆவியில் உங்களோடு இருப்
பேன். நம் கர்த்தராகிய இயேசுவின் வல்லமை
உங்களோடு இருக்கும். [5]இந்த மனிதனைச் சாத்
தானிடம் ஒப்படையுங்கள். அப்போது பாவம்
நிரம்பிய அவனது சுயம் அழிக்கப்படும். அவ
னது ஆவியோ கர்த்தர் வரும் நாளில் காக்கப்
படும்.
[6]நீங்கள் தற்பெருமை பாராட்டுவது நல்
லதல்ல. உங்களுக்கு இந்த பழமொழி தெரியும்.
"சிறிது புளிப்பு மாவானது எல்லா மாவையும்
புளிக்க வைக்கும்." [7]புளித்த பழைய மாவை
(பாவத்தை) அகற்றுங்கள். இதனால் புதிய
மாவாக நீங்கள் ஆகமுடியும். நீங்கள் புளிக்காத
அப்பமாக ஏற்கெனவே இருக்கிறீர்கள். ஆம்
நமது பஸ்கா ஆட்டுக் குட்டியாகிய* கிறிஸ்
துவோ ஏற்கெனவே நமக்காகக் கொல்லப்
பட்டுள்ளார். [8]எனவே நமது பஸ்கா விருந்தை
உண்போமாக. ஆனால் புளித்த பழைய
மாவைக் கொண்ட அப்பத்தை உண்ணக்
கூடாது. புளித்த மாவு பாவத்தையும் தவறுக
ளையும் குறிக்கும். ஆனால் நாம் புளிக்காத
மாவுடைய அப்பத்தை உண்போம். அது
நன்மை, உண்மை ஆகியவற்றைக் குறிக்கும்
அப்பமாகும்.
[9]பாலுறவில் பாவம் செய்யும் மக்களோடு
நீங்கள் தொடர்பு கொள்ளக் கூடாது என்று
என் கடிதத்தில் எழுதி இருந்தேன். [10]உலக
இயல்பின்படி வாழ்கின்ற மக்களோடு நீங்கள்
தொடர்பு கொள்ளக்கூடாது என்று நான் கருத
வில்லை. உலக இயல்பின்படியான வாழ்வை
உடைய அம்மக்களும் பாலுறவு ரீதியாக
பாவச் செயல்களைச் செய்கின்றனர். அவர்
கள் சுயநலம் உள்ளவர்களாகவோ, பிறரை
ஏமாற்றுபவராகவோ உள்ளனர். அவர்கள்
உருவங்களை வணங்குகின்றனர். அவர்களை
விட்டு விலக வேண்டுமானால் நீங்கள் இந்த
உலகத்தை விட்டுப் போக வேண்டியதிருக்கும்.
[11]நீங்கள் தொடர்புகொள்ளக் கூடாத மக்களை
உங்களுக்கு இனம் காட்டுவதற்காகவே இதை
எழுதுகிறேன். தன்னைக் கிறிஸ்துவுக்குள் உங்
கள் சகோதரனாகக் கூறியும் பாலுறவில்
பாவம் செய்கின்றவனுடனும், தன்னலம் பொ
ருந்தியவனுடனும், உருவங்களை வணங்கு
பவனோடும், மற்றவர்கள் மீது களங்கம் சுமத்
துபவனோடும், மது அருந்துபவனோடும், மக்
களை ஏமாற்றுகின்றவனோடும் நீங்கள் தொட
ர்பு கொள்ளக் கூடாது. அப்படிப்பட்டவர்க
ளோடு அமர்ந்து உணவு உட்கொள்ளுதலும்
கூடாது.
[12-13]சபையின் அங்கம் அல்லாத அந்த மனி
தர்களைப் பற்றித் தீர்ப்புக் கூறுவது எனது
வேலையல்ல. தேவன் அவர்களுக்குத் தீர்ப்ப
ளிப்பார். சபையின் அங்கத்தினருக்கு நீங்கள்
தீர்ப்பு வழங்கவேண்டும். "தீயவனை உன்னி
டமிருந்து விலக்கிவிடு" என்று (வேதவாக்
கியங்களில்) எழுதப்பட்டிருக்கிறது.

### பிரச்சனைகளைத் தீர்த்தல்

6 உங்களில் ஒருவனுக்கு இன்னொருவனு
க்கு எதிராக ஏதேனும் பிரச்சனை உருவா
கும்போது நீதிமன்றத்திலுள்ள நியாயாதிபதிக
ளிடம் நீங்கள் போவதென்ன? தேவனோடு

---

**பஸ்கா அப்பம்** இது ஒவ்வொரு ஆண்டும் யூதர்கள் பஸ்காவின்போது உண்ணும் புளிப்பி ல்லாத அப்பம். பஸ்கா அப்பம் புளிப்பில்லாது இருப்பது போலவே, கிறிஸ்தவர்கள் பாவம் இல்லாது இருப் பார்கள் என்று பவுல் கருதுகிறார்.

சரியானவராக அந்த மனிதர்கள் இருப்ப
தில்லை. ஆகவே அந்த மனிதர்கள் உங்களுக்கு
நீதி வழங்க நீங்கள் அனுமதிப்பதேன்? தேவனு
டைய மனிதர்கள் அதனைத் தீர்மானிக்க நீங்
கள் சம்மதிக்காதது ஏன்? 2தேவனுடைய மனி
தர்கள் உலகத்திற்கு நீதி வழங்குவர் என்பது
கண்டிப்பாக உங்களுக்குத் தெரியும். நீங்கள்
உலகத்திற்கு நீதி வழங்கக் கூடுமாயின்
இத்தகைய சிறு பிரச்சனைகளையும் நியாயம்
தீர்க்க முடியும். 3எதிர்காலத்தில் நீங்கள் தேவ
தூதர்களையே நியாயம் தீர்ப்பீர்கள் என்பது
உங்களுக்குத் தெரியும். எனவே, இந்த வாழ்க்
கையின் காரியங்களை நாம் நியாயம் தீர்க்க
முடியும். 4எனவே நியாயம் தீர்க்கக்கூடிய
கருத்து வேறுபாடுகள் உங்களிடையே இருக்கு
மானால், ஏன் அப்பிரச்சனைகளைச் சபை
யின் அங்கத்தினரல்லாத மனிதர்களிடம் எடுத்
துச் செல்கிறீர்கள்? அந்த மனிதர்கள் சபை
யைப் பொறுத்த அளவில் பொறுப்பற்றவர்
கள். 5நீங்கள் வெட்கப்படும்படியாக இதனைக்
கூறுகிறேன். நிச்சயமாய் உங்கள் மத்திய
லேயே இரு சகோதரர்களுக்கு (இயேசுவை
விசுவாசிப்பவர்களுக்கு) இடையே உருவாகும்
பிரச்சனைகளைத் தீர்த்து வைக்கக்கூடிய
ஞானமுள்ள சிலர் இருக்கிறார்கள். 6ஆனால்
இப்போதோ ஒரு சகோதரன் மற்றொரு சகோ
தரனுக்கு எதிராக நீதிமன்றத்துக்குப் போகி
றான். இயேசுவை நம்பாதவர்களான மனிதர்
கள் அவர்கள் பிரச்சனைகளைத் தீர்த்து வைக்
கும்படியாக எதற்காக அனுமதிக்கிறீர்கள்?

7உங்களிடையே வழக்குகள் இருக்கிறது
என்னும் உண்மை தோல்வியின் ஒரு குறியீடு
ஆகும். அதை விட மற்றொருவன் செய்யும்
தவறுகளையும் ஏமாற்றுவதையும் பொறுத்
துக் கொள்வதுமே மேலானதாகும். 8ஆனால்
நீங்களே உங்களுக்குள் தவறிழைத்து ஏமாற்
றுகிறீர்கள். கிறிஸ்துவுக்குள் உங்கள் சொந்த
சகோதரர்களுக்கே இதைச் செய்கிறீர்கள்.

9-10தவறிழைக்கும் மக்களுக்குத் தேவனு
டைய இராஜ்யத்தில் பங்கு இல்லை என்பது
உங்களுக்கு நிச்சயமாய்த் தெரியும். ஏமாற்றப்ப
டாதீர்கள். பாலுறவில் பாவம் செய்யும் மக்க
ளும், உருவங்களை வழிபடும் மக்களும், பிற
பெண்களை நாடும் மனிதர்களும், மற்ற மனிதர்
கள் தம்மை பாலுறவுக்காகப் பயன்படுத்த
அனுமதிக்கும் மனிதர்களும், பிறமனிதர்க
ளோடு பாலுறவு கொள்ளும் மனிதர்களும்,
களவு செய்வோரும், தன்னலம் உடையோரும்,
குடிப்பழக்கம் உள்ளவர்களும், தீயவற்றை பிற
ருக்குச் சொல்லும் மனிதர்களும், ஏமாற்று
வோர்களுமாகிய மனிதர்களும் தேவனுடைய
இராஜ்யத்தை அடைய மாட்டார்கள். 11முன்னர்
உங்களில் சிலரும் அவ்வாறு வாழ்ந்தீர்கள்.
ஆனால் நீங்கள் தூய்மையாய்க் கழுவப்பட்டீர்
கள், நீங்கள் பரிசுத்தமாக்கப்பட்டீர்கள். கர்த்த
ரின் பெயரால் தேவனோடு சரியானவர்களாக
நீங்கள் உருவாக்கப்பட்டீர்கள்.

### சரீரம் - தேவமகிமைக்கு

12"எல்லாப் பொருள்களும் எனக்கு அனு
மதிக்கப்பட்டுள்ளன." ஆனால், அனைத்து
பொருள்களும் நல்லவை அல்ல. "எல்லாப்
பொருள்களும் எனக்கு அனுமதிக்கப்பட்டுள்
ளன." ஆனால், எந்தப் பொருளும் எனக்கு
எஜமானனாக நான் விடமாட்டேன். 13"வயிற்
றுக்கு உணவு. உணவுக்காக வயிறு" ஆம்.
ஆனால் தேவன் இரண்டையும் அழிப்பார்.
சரீரம் பாலுறவு தொடர்பான பாவத்திற்காக
அமைந்ததன்று. ஆனால் சரீரம் கர்த்தருக்குரி
யது. மேலும் கர்த்தர் சரீரத்துக்குரியவர்
.14தேவனுடைய வல்லமையால் தேவன் கர்த்த
ராகிய இயேசுவை மரணத்தினின்று எழுப்பி
னார். தேவன் நம்மையும் மரணத்தினின்று
எழுப்புவார். 15உங்கள் சரீரமும் கிறிஸ்துவின்
பாகங்கள் என்பது உங்களுக்குக் கண்டிப்
பாய்த் தெரியும். எனவே, நான் கிறிஸ்துவின்
பாகங்களை எடுத்து ஒரு வேசியின் பாகங்க
ளோடு சேர்க்கக் கூடாது. 16"இருவர் ஒன்றா
வார்" என்று எழுதப்பட்டிருக்கிறது. அதனால்
வேசியோடு உடலுறவு கொண்ட ஒருவன் அவ
ளோடு ஒன்றாகிறான் என்பது உங்களுக்குத்
தெரியும். 17ஆனால் தேவனோடு தன்னை
இணைக்கிற மனிதன் ஆவியில் அவரோடு
ஒன்றுபடுகிறான்.

18உடலுறவிலான பாவத்தை விட்டு வில
குங்கள். ஒரு மனிதன் செய்கிற பிற பாவங்கள்
அவன் சரீரத்தோடு சம்பந்தப்பட்டவையல்ல.
உடலுறவு தொடர்பான பாவம் செய்கிறவன்
தன் சரீரத்துக்கு எதிராகப் பாவம் செய்கிறான்.
19பரிசுத்த ஆவியானவர் தங்கும் இடமாக உங்
கள் சரீரம் உள்ளது. பரிசுத்த ஆவியானவர்
உங்களில் உள்ளார். தேவனிடமிருந்து பரிசுத்த
ஆவியை நீங்கள் பெற்றீர்கள். நீங்கள் உங்களுக்
குச் சொந்தமல்ல. 20தேவன் விலை கொடுத்து
உங்களை மீட்டுக்கொண்டார். உங்களது சரீரத்
தால் அவரை மகிமைப் படுத்துங்கள்.

### திருமணம் குறித்த போதனைகள்

7 இப்போது, நீங்கள் எனக்கு எழுதிய
விஷயங்களைக் குறித்து விவாதிப்பேன்.
ஒரு மனிதன் திருமணம் செய்து கொள்ளாமல்
இருப்பது நல்லது. 2ஆனால் பாலுறவினால்
ஏற்படும் பாவம் எப்போதும் ஆபத்துக்கு
ரியதென்பதால் ஒவ்வொரு ஆணும் தன்
சொந்த மனைவியோடு வாழ்தல் வேண்டும்.
ஒவ்வொரு பெண்ணும் அவளது சொந்த கண
வனோடு இருத்தல் வேண்டும். 3ஒரு மனைவி
என்கிற அளவில் எவற்றையெல்லாம் கணவ
னிடமிருந்து பெறக்கூடுமோ, அவை அனைத்
தையும் கணவன் அவனது மனைவிக்கு வழங்
கவேண்டும். அவ்வாறே ஒரு கணவன் என்கிற
அளவில் எவற்றையெல்லாம் மனைவியிடமி
ருந்து பெறக்கூடுமோ அவை அனைத்தையும்
மனைவி தன் கணவனுக்கு வழங்குதல் வேண்
டும். 4மனைவிக்கு அவளது சரீரத்தின் மீது

சொந்தம் பாராட்டும் அதிகாரம் கிடையாது.
அவள் சரீரத்தின் மீது அவளது கணவனுக்கே
அதிகாரம் உண்டு. கணவனுக்கு அவன் சரீரத்
தின் மீது எந்த அதிகாரமும் கிடையாது.
அவன் மனைவிக்கே அவனது சரீரத்தின்மீது
அதிகாரம் உண்டு. 5கணவனும் மனைவியும்
ஒருவருக்கொருவர் சரீரத்தைப் பகிர்ந்து
கொள்ள மறுப்பு தெரிவிக்காதீர்கள். ஆனால்
விதிவிலக்காக சில காலத்திற்குப் பாலுறவில்
ஈடுபடாமல் இருப்பதென்றால் நீங்கள் இருவரு
மாக ஒப்பந்தத்திற்கு வரவேண்டும். பிரார்த்
தனையில் ஈடுபடுவதற்காக இதை நீங்கள்
செய்யலாம். பின்னர் இருவரும் ஒருமித்து
வாழ்தல் வேண்டும். இது எதற்காக எனில்,
பலவீனமான தருணங்களில் உங்களைச் சாத்
தான் கவர்ந்திழுத்து விடாமல் இருப்பதற்கா
கும். 6நீங்கள் சில காலம் பிரிந்திருப்பதற்கு
அனுமதி அளிப்பதற்காகவே நான் இதனைச்
சொல்கிறேன். இது கட்டளை அல்ல. 7எல்லா
ரும் என்னைப் போல இருக்கவேண்டும்
என்று நான் விரும்புகிறேன். ஆனால் ஒவ்
வொருவனும் அவனுக்குரிய வரத்தைத் தேவ
னிடம் இருந்து பெற்றிருக்கிறான். ஒருவனுக்கு
ஒருவகை வரமும், இன்னொருவனுக்கு வேறு
வகை வரமும் அளிக்கப்பட்டுள்ளன.

8திருமணம் செய்யாதவர்களுக்காகவும்,
விதவைகளுக்காகவும் இப்போது இதனைக்
கூறுகின்றேன். என்னைப்போல தனித்து வாழ்
தல் அவர்களுக்கு நல்லது. 9ஆனால் சுய
கட்டுப்பாடு இல்லையெனில், அவர்கள் திரும
ணம் செய்து கொள்ளவேண்டும். பாலுறவு
ஆசையினால் வெந்துபோவதைக் காட்டிலும்
திருமணம் புரிந்து கொள்வது நல்லது.

10திருமணம் புரிந்தவர்களுக்காக இப்போது
இந்தக் கட்டளையை இடுகிறேன். (இந்த ஆணை
என்னுடையதன்று, ஆனால் கர்த்தருடையது)
மனைவி கணவனை விட்டுப் பிரியக் கூடாது.
11ஆனால், மனைவி கணவனைப் பிரிந்தால்
அவள் மீண்டும் திருமணம் செய்துகொள்ளக்
கூடாது. அல்லது, அவளுடைய கணவனோ
டேயே நல்லுறவுடன் மீண்டும் வாழவேண்டும்.
கணவனும் மனைவியை விவாகரத்து செய்
யக்கூடாது.

12மற்ற எல்லாருக்காகவும் இதனைக் கூறுகி
றேன். (நானே இவற்றைக் கூறுகிறேன். கர்த்தர்
அல்ல) கிறிஸ்துவுக்குள்ளான ஒரு சகோதரன்
விசுவாசமற்ற ஒருத்தியை மணந்திருக்கக்கூ
டும். அவள் அவனோடு வாழ விரும்பினால்
அவன் அவளை விவாகரத்து செய்யக்கூடாது.
13விசுவாசமற்ற கணவனோடு ஒரு பெண்
வாழ்தல் கூடும். அவளோடு அவன் வாழ
விரும்பினால், அவனை அவள் விவாகரத்து
செய்யக்கூடாது. 14விசுவாசமற்ற கணவன்
விசுவாசம் உள்ள மனைவி மூலமாக பரிசுத்த
மாக்கப்படுவான். விசுவாசமற்ற மனைவி
விசுவாசமுள்ள கணவனால் பரிசுத்தமாக்கப்ப
டுவாள். இது உண்மையில்லையெனில் உங்
கள் பிள்ளைகள் பரிசுத்தமற்றவர்களாகி விடு
வார்கள். ஆனால் இப்போது உங்கள் பிள்ளை
கள் பரிசுத்தமானவர்கள்.

15விசுவாசமற்ற ஒருவன் விலக எண்ணி
னால், அவன் விலகி வாழட்டும். அவ்வாறு
நிகழ்ந்தால் கிறிஸ்துவுக்குள்ளான சகோத
ரனோ அல்லது சகோதரியோ விடுதலை பெறு
வார். அமைதி நிரம்பிய வாழ்க்கைக்காக
தேவன் நம்மை அழைத்தார். 16மனைவியே!
நீ ஒருவேளை உன் கணவனை காப்பாற்றக்
கூடும். கணவனே, நீ ஒருவேளை உன் மனை
வியை காப்பாற்றக்கூடும். பிற்காலத்தில் நிக
ழப் போவதை நீங்கள் தற்சமயம் அறியமாட்டீர்
கள்.

## தேவன் அழைத்தபடியே வாழுங்கள்

17தேவன் உங்களுக்குத் தந்த வாழ்வின்ப
டியே ஒவ்வொருவனும் வாழ்ந்து கொண்டிருக்
கட்டும். தேவன் உங்களை அழைத்தபோது
நீங்கள் இருந்தபடியே வாழுங்கள். எல்லா
சபைகளிலும் நான் உருவாக்கிய விதி இது
தான். 18அழைக்கப்பட்டபோது ஒருவன் விருத்
தசேதனம் செய்யப்பட்டவனாக இருந்தால்,
பின்னர் அதன் அடையாளங்களை மாற்ற
அவன் முயற்சி செய்யக்கூடாது. அழைக்கப்
பட்டபோது விருத்தசேதனம் செய்யப்படாதவ
னாக இருந்தால், பிறகு அவன் விருத்தசேத
னம் செய்துகொள்ளக்கூடாது. 19ஒருவன் விருத்
தசேதனம் செய்யப்பட்டவனா, செய்யப்படாத
வனா என்பது முக்கியமில்லை. தேவனுடைய
கட்டளைகளுக்குக் கீழ்ப்படிவதே முக்கியமான
காரியம். 20தேவன் அழைத்தபோது இருந்தப
டியே ஒவ்வொருவனும் இருக்கட்டும். 21தேவன்
அழைத்தபோது நீ அடிமையாய் இருந்தால்
நீ அதுபற்றிக் கவலைப்படாதே. ஆனால் நீ
சுதந்தரமானவனாக இருந்தால், பிறகு எல்லா
வகைகளிலும் வாய்ப்பைப் பயன்படுத்து.
22கர்த்தர் அழைத்தபோது அடிமையாய் இருந்த
வன் கர்த்தருக்குள் சுதந்திர மனிதனாக இருக்கி
றான். அவன் கர்த்தருக்குரியவன். அழைக்கப்
பட்டபோது சுதந்தர மனிதனாக இருந்தவனோ
இப்போது கிறிஸ்துவுக்கு அடிமையாக இருக்
கிறான். 23நீங்கள் விலை கொடுத்து வாங்கப்
பட்டீர்கள். எனவே மனிதருக்கு அடிமை ஆகா
தீர்கள். 24சகோதரர்களே, சகோதரிகளே! தேவ
னோடான உங்கள் புது வாழ்க்கையில், உங்க
ளில் ஒவ்வொருவரும் நீங்கள் அழைக்கப்பட்ட
போது இருந்தபடியே வாழ்க்கையைத் தொடர
வேண்டும்.

## திருமணம் குறித்த கேள்விகள்

25திருமணம் செய்து கொள்ளாதவர்களைப்
பற்றி இப்போது எழுதுகிறேன். கர்த்தரிடமி
ருந்து இதுபற்றிய கட்டளை எதுவும் எனக்கு
வரவில்லை. ஆனால், என் கருத்தைச் சொல்கி
றேன். கர்த்தர் என்னிடம் இரக்கம் காட்டுவதால்
என்னை நீங்கள் நம்பலாம். 26இது சச்சரவு

களின் காலம். எனவே நீங்கள் இருக்கிறபடியே
(திருமணம் ஆகாதபடியே) வாழ்வது உங்க
ளுக்கு நல்லது என நினைக்கிறேன். 27உங்க
ளுக்கு மனைவி இருந்தால் அவளை விலக்கி
வைக்க முற்படாதீர்கள். நீங்கள் திருமணமா
காதவராக இருந்தால் ஒரு மனைவியைத் தேட
முயலாதீர்கள். 28ஆனால் நீங்கள் திருமணம்
செய்ய முடிவுசெய்தால், அது பாவமல்ல. திரு
மணமாகாத ஒரு பெண் திருமணம் செய்து
கொள்வதும் பாவமல்ல. ஆனால் திருமணம்
செய்து கொள்பவர்களுக்கோ இந்த வாழ்க்
கையில் ஏராளமான தொல்லைகள். நீங்கள்
அத்தொல்லைகளிலிருந்து விடுபட்டவர்க
ளாய் இருக்க வேண்டுமென விரும்புகிறேன்.
29சகோதர சகோதரிகளே, நான் கருதுவது
இதுதான். நமக்கு அதிக காலம் தரப்பட
வில்லை. இப்போதிருந்தே மனைவியுள்ளவர்
கள் மனைவி இல்லாதவர்களைப்போல தங்
கள் நேரத்தை கர்த்தரின் சேவைக்காகப் பயன்
படுத்துதல் வேண்டும். 30துக்கம் உடையவர்கள்
துக்கமில்லாதவர்களைப் போல வாழ்தல்
வேண்டும். சந்தோஷம் உடையவர்கள் சந்தோ
ஷம் அற்றவர்களைப் போல வாழவேண்டும்.
பொருள்களை வாங்கும் மனிதர்கள் ஏதுமற்ற
வர்கள்போல இருக்கவேண்டும். 31இந்த உலகப்
பொருள்களைப் பயன்படுத்துபவர்கள், அந்தப்
பொருட்கள் முக்கியமானவை அல்ல என்பது
போன்று வாழவேண்டும். இந்த உலகமும் இந்த
உலகத்தின் வழிகளும் மறைந்துபோகும். என
வே, நீங்கள் இவ்வாறு வாழவேண்டும்.

32நீங்கள் கவலையினின்று விடுபட வேண்
டுமென நான் விரும்புகிறேன். திருமணம் ஆகா
தவன் கர்த்தரின் வேலையில் மும்முரமாய்
ஈடுபடுகிறான். அவன் கர்த்தரை மகிழ்ச்சிப்
படுத்த முயற்சி செய்கிறான். 33ஆனால், திரும
ணமானவனோ உலகத்துப் பொருள்கள்
தொடர்பான வேலைகளில் மும்முரமாய் ஈடுப
டுகிறான். அவன் மனைவியை மகிழ்ச்சிப்
படுத்த முயற்சிக்கிறான். 34அவன் இரண்டு
காரியங்களை நினைவில் கொள்ளவேண்டும்.
மனைவியை மகிழ்ச்சிப்படுத்துவதும், கர்த்
தரை மகிழ்ச்சிப்படுத்துவதும் ஆகியவை
அவை. திருமணம் ஆகாத பெண்ணோ, ஒரு
இளம்பெண்ணோ கர்த்தரின் வேலையில்
முனைவாள். கர்த்தருக்கு சரீரத்தையும் ஆன்
மாவையும் முழுக்க அர்ப்பணிக்க விரும்புகி
றாள். ஆனால், திருமணமான பெண்ணோ
உலக காரியங்களில் தீவிரமாக ஈடுபடுகிறாள்.
அவள் கணவனை மகிழ்ச்சிப்படுத்த முயற்சி
செய்கிறாள். 35உங்களுக்கு உதவிசெய்வதற்கா
கவே இவற்றைச் சொல்கிறேன். உங்களைக்
கட்டுப்படுத்துவதற்காக அல்ல. ஆனால் நீங்கள்
தக்க வழியில் நடக்க வேண்டுமென விரும்புகி
றேன். உங்கள் நேரத்தைப் பிற பொருள்களுக்
காகச் செலவிடாமல் உங்களை முழுக்க தேவ
னுக்குக் கொடுக்க வேண்டுமென நான் விரும்
புகிறேன்.

36ஒருவனின் மகள் திருமணமாகும் வய
தைக் கடந்துவிட்டபட்சத்தில், அப்பெண்ணின்
தந்தை அவளுக்குச் செய்யவேண்டியதைச்
செய்யவில்லை என நினைக்கலாம். திரும
ணம் என்பது முக்கியமானது என அவன்
நினைக்கலாம். தனக்கு விருப்பமானதைச்
செய்யவேண்டும். திருமணம் செய்துகொள்ள
அவளை அனுமதிக்கவேண்டும். அது பாவ
மல்ல. 37ஆனால் இன்னொரு மனிதன் மனதில்
திடமானவனாக இருக்கக்கூடும். அங்கு திரும
ணத்துக்குத் தேவையிராது. அவன் விருப்பப்
படியே செய்ய அவனுக்கு உரிமையுண்டு.
தனது கன்னிப் பெண்ணுக்குத் திருமணம்
முடித்துவைக்க அவன் விரும்பாவிட்டால் அப்
போது அவன் சரியான செயலையே செய்கி
றான். 38தனது கன்னிப் பெண்ணாகிய மக
ளைத் திருமணம் முடித்து வைப்பவனும் சரி
யான செயலைச் செய்கிறான். தனது கன்னிப்
பெண்ணாகிய மகளைத் திருமணம் முடித்து
வைக்காதவன் அதைக் காட்டிலும் சிறப்பான
செயலைச் செய்கிறான்.*

39எவ்வளவு காலம் கணவன் உயிரோடு
இருக்கிறானோ அதுவரைக்கும் ஒரு பெண்
அவனோடு சேர்ந்து வாழ்தல் வேண்டும்.
ஆனால் அவள் கணவன் இறந்தால், அபபெண்
தான் விரும்புகிற யாரையேனும் மணந்து
கொள்ளும் உரிமை பெறுகின்றாள். ஆனால்,
கர்த்தருக்குள் (தேவனுக்குள்) அவள் திரும
ணம் செய்துகொள்ள வேண்டும். 40பெண் மீண்
டும் திருமணம் செய்து கொள்ளாவிட்டால்
சந்தோஷமாய் இருக்கிறாள். இது எனது
கருத்து. தேவனுடைய ஆவி எனக்குள் இருப்ப
தாக நான் நம்புகிறேன்.

## விக்கிரத்துக்குப் படைக்கப்பட்ட உணவு

8 விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்ட இறை
ச்சி குறித்து இப்போது எழுதுவேன். “நாம்
அறிவுடையவர்கள்” என்பது நம் அனைவருக்
கும் தெரியும். “அறிவு” உங்களைப் பெருமை
உடையவர்களாக மாற்றும். ஆனால், அன்பு
பிறருக்கு உதவி செய்யுமாறு உங்களை மாற்
றும். 2தனக்கு ஏதோ தெரியுமென எண்ணுகிற
ஒருவனுக்கு, இருக்கவேண்டிய அளவுக்கு

---

*__வாக்கியம் 36-38__ இன்னொரு மொழிபெயர்ப்பு 36தான்
தன் கன்னிக்கு நியாயம் செய்யவில்லை என்று
ஒருவன் நினைக்கலாம். அப்பெண் திருமணத்
துக்குரிய நல்ல வயதைத் தாண்டியிருக்கலாம்.
எனவே அவன் அவளை மணந்துகொள்ள எண்ண
லாம். அவன் விரும்புவதை செய்யலாம். அவர்கள்
மணந்து கொள்ளலாம். இதில் பாவமில்லை.
37ஆனால் அடுத்தவர்களுக்கு அவன் மனம்பற்றிய
உறுதி இருக்க வேண்டும். அங்கு திருமணத்திற்குத்
தேவை இல்லாமல் இருந்தால் அவன் செய்வதில்
சுதந்திரம் உள்ளது. அவன் மனமாற அக்கன்னிப்
பெண்ணைத் திருமணமாகாமல் வைத்திருக்க எண்
ணினால் அவன் சரியானவற்றையே செய்யவேண்
டும். 38எனவே ஒருவன் கன்னியை மணந்து கொள்வ
தும் சரியே.*

ஞானம் இருப்பதில்லை. 3ஆனால், தேவனை
நேசிக்கிற மனிதனோ தேவனால் அறியப்பட்ட
வன். 4எனவே விக்கிரகங்களுக்குப் படைக்கப்
பட்ட இறைச்சி உண்பதைப் பற்றி நான் கூறு
வது இதுவே: விக்கிரகமானது இவ்வுலகத்தில்
ஒரு பொருட்டல்ல என்பது நமக்குத் தெரியும்.
ஒரே ஒரு தேவனே உள்ளார் என்பதையும்
நாம் அறிவோம். 5பரலோகத்திலும் பூலோகத்தி
லும் தேவர்களாக அழைக்கப்படும் பல பொரு
ள்கள் இருக்கின்றன. எனினும் அவை நமக்கு
முக்கியமல்ல. “தேவனென்றும்,” “கர்த்தரென்
றும்” மனிதர்கள் கருதுகின்ற பல பொருள்கள்
உண்டு 6ஆனால் நமக்கோ ஒரே ஒரு தேவன்
உள்ளார். அவர் நமது பிதாவே. எல்லாம்
அவரிலிருந்தே வந்தன. நாம் அவருக்காக
வாழ்கிறோம். ஒரே ஒரு கர்த்தரே உண்டு.
அவர் இயேசு கிறிஸ்து ஆவார். எல்லாப்
பொருள்களும் இயேசுவின் மூலமாக உண்டாக்
கப்பட்டன. நாம் அவர் மூலமாகவே உயிரைப்
பெறுகிறோம்.
7ஆனால் எல்லோரும் இதனை அறியார்.
விக்கிரக வழிபாட்டுக்குப் பழகிப்போன சிலர்
இருக்கிறார்கள். எனவே இறைச்சி உண்ணும்
போது அது விக்கிரகத்துக்குரியது என்ற
எண்ணம் அவர்களுக்கு உண்டாகிறது. இந்த
இறைச்சியைச் சாப்பிடுவது சரியா என்பதில்
அவர்களுக்கு நம்பிக்கை இல்லை. எனவே
அதனைச் சாப்பிடும்போது அவர்கள் குற்ற
மனப்பான்மை உடையவர்களாக இருக்கிறார்
கள். 8ஆனால், இறைச்சியுண்பது தேவனுக்கு
நெருக்கமாக நம்மை அழைத்துச் செல்லாது.
இறைச்சியுண்ணாமையும் தேவனுக்குக் குறை
வான மகிழ்ச்சியைத் தருபவர்களாக நம்மை
ஆக்காது.
9ஆனால், உங்கள் சுதந்திரத்தைக் குறித்துக்
கவனமாக இருங்கள். விசுவாசத்தில் வலிமை
யற்ற மக்களை உங்கள் சுதந்திரம் பாவத்தில்
விழக் காரணமாக இருக்கும். 10உங்களுக்குப்
புரிந்துகொள்ளும் திறமை (அறிவு) இருக்கிறது.
எனவே விக்கிரகங்களுக்குரிய கோயிலில்
உண்பதை நீங்கள் இயல்பானதாகக் கருதலாம்.
ஆனால் விசுவாசம் குறைவுள்ள மனிதன் உங்
களை அங்கு பார்க்கக் கூடும். விக்கிரகங்க
ளுக்குப் படைக்கப்பட்ட உணவை உண்பதற்கு
அவன் முற்பட இது வழிவகுக்கும். ஆனால்,
அது சரியானதல்ல என்றும் அவன் நினைப்
பான். 11உங்கள் அறிவினால் பலவீனமான
இந்த சகோதரன் அழிக்கப்படுவான். ஆனால்
இந்தச் சகோதரனுக்காகவும் இயேசு மரித்தார்.
12கிறிஸ்துவுக்குள்ளான உங்கள் சகோதர
சகோதரிகளுக்கு எதிராக நீங்கள் இவ்வாறு
பாவம் செய்தாலும் அவர்கள் தவறென
நினைக்கிற காரியங்களைச் செய்யும்படியாகத்
தூண்டி அவர்களைத் துன்புறுத்தினாலும் நீங்
கள் கிறிஸ்துவுக்கு எதிராக பாவம் செய்
கின்றீர்கள். 13நான் உண்ணும் உணவு எனது
சகோதரனைப் பாவம் செய்யத் தூண்டினால்
நான் மீண்டும் இறைச்சி சாப்பிடவே மாட்
டேன். எனது சகோதரன் மீண்டும் பாவம்
செய்யாதபடி இறைச்சி உண்ணுவதை விட்டு
விடுவேன்.

9 நான் ஒரு சுதந்திரமான மனிதன். நான்
ஒரு அப்போஸ்தலன். நமது கர்த்தராகிய
இயேசுவை நான் பார்த்திருக்கிறேன். கர்த்த
ரில் எனது பணிக்கு நீங்கள் உதாரணமாவீர்
கள். 2மற்ற மக்கள் என்னை அப்போஸ்தல
னாக ஒருவேளை ஏற்றுக்கொள்ள மாட்டார்
கள். ஆனால், நீங்கள் நிச்சயமாக என்னை
அப்போஸ்தலனாக ஏற்றுக்கொண்டிருக்கிறீர்
கள். கர்த்தரில் நான் ஒரு அப்போஸ்தலன்
என்பதற்கு நீங்களே சாட்சிகள்.
3சில மனிதர்கள் என்னை நியாயம் தீர்க்க
விரும்புகிறார்கள். நான் இந்த பதிலை அவர்க
ளுக்கு அளிக்கிறேன். 4உண்ணவும், பருகவும்
நமக்கு உரிமை இருக்கிறது அல்லவா? 5நாம்
பயணம் செய்யும்போது விசுவாசத்திற்குள்
ளான மனைவியை அழைத்துச் செல்ல
உரிமை இருக்கிறது அல்லவா? மற்ற அப்
போஸ்தலர்களும், கர்த்தரின் சகோதரர்களும்,
கேபாவும் இதைச் செய்கிறார்கள். 6பர்னபாவும்
நானும் மட்டுமே எங்கள் வாழ்க்கைக்கு சம்
பாதிக்கவேண்டி இருக்கிறது. 7படையில்
சேவை புரியும் எந்த வீரனும் தன் செலவுக்குத்
தன் சொந்தப் பணத்தை கொடுப்பதில்லை.
திராட்சையை விதைக்கிற யாரும் அதன்
பழத்தை உண்ணாமல் இருப்பதில்லை.
மந்தையை மேய்க்கிற எவரும் அதன் பாலைப்
பருகாமல் இருப்பதில்லை.
8இவை மனிதன் நினைப்பவை மாத்திர
மல்ல. தேவனின் சட்டமும் அவற்றையே கூறு
கின்றன. 9ஆம், மோசேயின் சட்டத்தில் அது
எழுதப்பட்டுள்ளது “உழைக்கும் மிருகத்தை,
தானியத்தைப் பிரிக்கப் பயன்படுத்தும்போது
அதன் வாயை மூடாதே. அது தானியத்தை
உண்ணாதபடி தடை செய்யாதே.”* தேவன்
இதைக் கூறியபோது, அவர் உழைக்கும்
மிருகங்களைப்பற்றி மட்டுமே குறிப்பிட்டாரா?
இல்லை. 10இவ்வாக்கியம் நம்மைப் பற்றிக்
குறிக்கவில்லையா? ஆம் வேதவாக்கியங்கள்
நமக்காக எழுதப்பட்டதால் எல்லா வகையி
லும் இது நம்மையே குறிக்கிறது. தம்
வேலைக்கு சிறிதளவு தானியம் கிடைக்கும்
என்ற நம்பிக்கையில் உழுகிறவனும், தானி
யத்தை அறுவடை செய்கிறவனும் அந்தந்த
வேலையைச் செய்யவேண்டும். 11நாங்கள்
ஆன்மீக விதையை உங்களில் விதைத்துள்
ளோம். ஆகவே இந்த வாழ்க்கையில் உங்களு
டைய சில பொருள்களை நாங்கள் எங்கள்
வாழ்க்கைக்காக அறுவடை செய்யக்கூடும்.
இது அதிகமாக ஆசைப்படுவதல்ல. 12பிறர்
உங்களிடமிருந்து பொருளைப் பெறும் உரி
மையைப் பெற்றுள்ளார்கள். எனவே எங்க

**உழைக்கும் … செய்யாதே** *உபாகமம் 25:4 பார்க்க*

*ளுக்கும் நிச்சயமாய் இந்த உரிமை உண்டு.
ஆனால், இந்த உரிமையை நாங்கள் பயன்
படுத்தவில்லை. இல்லை, பிறர் கிறிஸ்துவின்
நற்செய்திக்குக் கீழ்ப்படிவதைத் தடுக்காமலி
ருப்பதற்காக எல்லாவற்றையும் நாங்கள் சகித்
துக்கொள்கிறோம். 13தேவாலயத்தில் பணி
விடை செய்பவர்களுக்கு உணவு தேவாலயத்
தில் இருந்து கிடைக்கிறது. பலிபீடத்தில் பணி
செய்பவருக்குப் பலிபீடத்தில் படைக்கப்பட்ட
வற்றில் ஒரு பகுதி கிட்டும். 14நற்செய் தியை
அறிவிப்போரின் வாழ்க்கைக்குரிய பொருள்
அந்த வேலையிலிருந்தே அவர்களுக் குக்
கிடைக்க வேண்டுமென கர்த்தர் கட்டளை
யிட்டிருக்கிறார்.*

*15ஆனால் இந்த உரிமைகள் எதையும் நான்
பயன்படுத்தவில்லை. இவற்றைப் பெறவேண்
டுமென்று முயற்சி செய்யவும் இல்லை. இதை
உங்களுக்கு எழுதுவதினால் என் நோக்கமும்
அதுவல்ல. பெருமைப்படுவதற்குரிய கார
ணத்தை என்னிடமிருந்து அபகரித்துச் செல்
லப்படுவதைவிட நான் இறப்பது நல்லதாகும்.
16நற்செய்தியைப் போதிப்பது நான் பெருமைப்
படுவதற்குரிய காரணமல்ல. நற்செய்தியைப்
போதிப்பது எனது கடமை. நற்செய்தியைப்
போதிப்பது என்பது நான் கண்டிப்பாக
செய்யவேண்டியது. அதைச் செய்யாமலிருப்
பது எனக்கு தீமையாகும். 17நானே என் தேர்
வுக்குத் தகுந்தபடி நற்செய்தியைப் போதித்
தால் நான் ஒரு வெகுமதிக்குத் தகுதியுடையவ
னாகிறேன். ஆனால் எனக்கு வேறு வழி
யில்லை. நான் நற்செய்தியைப் போதிக்க
வேண்டும். எனக்குக் கொடுக்கப்பட்ட கட
மையை நான் செய்கிறேன். 18எனக்கு என்ன
பலன் கிடைக்கிறது? நற்செய்தியை எங்கும்
பரப்புவதே எனக்கு கிட்டும் வெகுமதி. எனவே
நற்செய்தி எனக்கு வழங்குகிற “பலன் பெறு
தல்” என்கிற உரிமையை நான் பயன்படுத்த
வில்லை.*

*19நான் சுதந்திரமானவன். யாருக்கும் உரிய
வன் அல்ல. ஆனால் எல்லா மனிதருக்கும்
என்னை அடிமையாக்குகிறேன். என்னால்
இயன்ற அளவுக்கு மக்களைக் காப்பதற்காக
இதைச் செய்கிறேன். 20யூதர்களிடம் நான் யூத
னைப் போலானேன். யூதர்களை காப்பதற்காக
இதைச் செய்தேன். நான் சட்டத்தின் ஆளுகைக்
குக் கட்டுப்படாதவன்தான். ஆனால் சட்டப்படி
வாழும் மக்களின் முன்பு சட்டப்படி வாழும்
மனிதனாகவே நான் ஆனேன். சட்டத்தால்
ஆளப்படுகிற மக்களைக் காப்பாற்றவே நான்
இதைச் செய்தேன். 21சட்டத்தின் கீழ் இல்லாத
மக்களிடம் சட்டத்தைப் பின்பற்றாதவனாக
நடந்து கொண்டேன். சட்டத்தின்படி நடவாத
மக்களை காப்பதற்காக நான் இதைச் செய்
தேன். (ஆனால் தேவனின் சட்டத்தை நான்
மீறவில்லை. கிறிஸ்துவின் சட்டப்படியே நான்
ஆளப்படுகிறேன்) 22பலவீனமான மனிதரை
அவர்கள் கர்த்தருக்கென்று ஆதாயம் செய்யும்
படி பலவீனமானவனைப் போல நடந்து
கொண்டேன். எல்லா மனிதர்களுக்கும் நான்
எல்லாரையும்போல நடந்து கொண்டேன்.
எந்த வகையிலாவது மனிதர்கள் இரட்சிக்கப்
பட வேண்டுமென இவ்வாறு செய்தேன்.
23நற்செய்தியின் பொருட்டு இவற்றையெல்லாம்
செய்கிறேன். நற்செய்தியின் ஆசீர்வாதத்தில்
பங்குபெற விரும்பி இவற்றைச் செய்கிறேன்.*

*24ஒரு பந்தயத்தில் எல்லா ஓட்டக்காரர்களும்
ஓடுவது உங்களுக்குத் தெரியும். ஆனால் ஒரு
வனே பரிசைப் பெறுவான். எனவே அதைப்
போன்று ஓடுங்கள். வெற்றி பெறுவதற்காக
ஓடுங்கள். 25பந்தயங்களில் பங்கு பெறுகிறவர்
கள் கடுமையான பயிற்சியை மேற்கொள்வர்.
ஒரு கிரீடத்தை வெல்வதற்காக இதைச் செய்
வார்கள். கொஞ்ச காலத்தில் அழியக் கூடிய
உலக ரீதியான கிரீடம் அது. ஆனால் நாம்
பெறும் கிரீடமோ அழியாது நிலைநிற்கும்.
26குறிக்கோளோடு ஓடுகிற மனிதனைப்
போன்று நானும் ஓடுகிறேன். காற்றோடு
மோதாமல் இலக்கில் தாக்குகிற குத்துச்
சண்டை வீரனைப் போல போரிடுகிறேன்.
27எனது சொந்த சரீரத்தையே நான் அடக்குகி
றேன். அதை எனக்கு அடிமையாக்குகிறேன்.
நான் பிறருக்குப் போதித்த பின்பு நானே
புறந்தள்ளி விழாதபடிக்கு (தேவனால் அப்பு
றப்படுத்தப் படாதபடிக்கு) இதைச் செய்கிறேன்.*

### யூதர்களைப் போல இராதீர்

*10 சகோதர சகோதரிகளே, மோசேயைப்
பின்பற்றிய நமது முன்னோர்களுக்கு
நேர்ந்தது என்னவென்று நீங்கள் அறிந்து
கொள்ளுங்கள்: அவர்கள் எல்லாரும் மேகத்
தின் கீழ் இருந்தார்கள். அவர்கள் அனைவரும்
கடல்வழியே கடந்து சென்றார்கள். 2அந்த மக்
கள் எல்லாரும் மேகத்திலும் கடலிலும்
மோசேயோடு உள்ள நல்லுறவில் ஞானஸ்
நானம் செய்யப்பட்டார்கள். 3ஒரே வகையான
ஆன்மீக உணவை அவர்கள் அனைவரும்
உட்கொண்டார்கள். 4ஒரே வகையான ஆன்மீக
பானத்தை அவர்கள் பருகினார்கள். அவர்க
ளோடிருந்த ஆன்மீகப் பாறையில் இருந்து
அவர்கள் பருகினர். அந்தப் பாறை கிறிஸ்து.
5ஆனால் அம்மக்கள் பலர் தேவனுக்கு உகந்த
வர்களாய் இருக்கவில்லை. வனாந்தரத்தில்
அவர்கள் கொல்லப்பட்டார்கள்.*

*6நடந்தேறிய இக்காரியங்கள் நமக்கு உதார
ணங்களாக அமையும். அந்த மக்கள் செய்த
தீய காரியத்தைச் செய்ய விரும்புவதினின்று
இவை நம்மைத் தடுத்து நிறுத்தும். 7அந்த
மக்களில் சிலர் செய்தது போல் விக்கிரகங்
களை வணங்காதீர்கள். “மக்கள் உண்பதற்கா
கவும் பருகுவதற்காகவும் அமர்ந்தனர். மக்கள்
நடனமாடுவதற்காக எழுந்து நின்றனர்”*
என்று எழுதப்பட்டிருக்கிறது. 8அந்த மக்களுள்*

---

***மக்கள் ... நின்றனர்*** *யாத். 32:6.*

சிலர் செய்ததைப்போல் பாலுறவு பாவங்
களை நாம் செய்யக் கூடாது. ஒரே நாளில்
தம் பாவத்தினால், 23000 பேர் இறந்தனர். 9அம்
மக்களில் சிலர் செய்தது போல் நாம் கர்த்த
ரைச் சோதித்துப் பார்க்கக் கூடாது. கர்த்த
ரைச் சோதித்ததால் அவர்கள் பாம்புகளினால்
கொல்லப்பட்டார்கள். 10அம்மக்களுள் சிலர்
செய்தது போல் முறுமுறுக்காதீர்கள். அழிவுக்
கான தேவ தூதனால் அம்மக்கள் கொல்லப்பட்
டார்கள்.

11அம்மக்களுக்கு நடந்தவை நமக்கு உதார
ணங்கள் ஆகும். நமக்கு எச்சரிக்கையாக
அவை எழுதப்பட்டுள்ளன. அப்பழைய வரலா
றுகள் முடிவடையும் காலத்தில் நாம் வாழ்கி
றோம். 12அதனால், உறுதியாக நிற்பதாக எண்
ணும் ஒருவன் விழுந்துவிடாதபடி கவனமாக
இருக்க வேண்டும். 13எல்லா மனிதர்களுக்கும்
வரும் சோதனைகளே உங்களுக்கும் வரும்.
ஆனால் நீங்கள் தேவனை நம்ப முடியும். நீங்
கள் தாங்க இயலாத அளவு சோதனைகளைத்
தேவன் உங்களுக்குத் தரமாட்டார். உங்களுக்
குச் சோதனை வரும்போது அச்சோதனையில்
இருந்து விடுபடவும் தேவன் உங்களுக்கு
வழிகாட்டுவார். அப்போது நீங்கள் சோதனை
யைத் தாங்கிக் கொள்ளக்கூடும்.

14என் அன்புக்குரிய நண்பர்களே, அத
னால் நீங்கள் விக்கிரக வழிபாட்டிலிருந்து
விலகுங்கள். 15நீங்கள் அறிவுள்ள மனிதர்கள்
என்பதால் உங்களோடு பேசுகிறேன். நான்
சொல்வதை நீங்களே சரியா, தவறா எனத்
தீர்மானித்துக் கொள்ளுங்கள். 16நாம் நன்றியறி
தலுடன் பங்கு பெறும் ஆசீர்வாதத்தின் பாத்
திரம் கிறிஸ்துவின் இரத்தத்தைப் பங்கிடுவதா
கும். நாம் பகிர்ந்துண்ணும் அப்பமோ கிறிஸ்
துவின் சரீரத்தைப் பகிர்தலாகும். 17ஒரு அப்
பம் உள்ளது. நாமோ பலர். ஆனால் அந்த
ஒரே அப்பத்தை நாம் பகிர்ந்து கொள்கிறோம்.
எனவே நாம் உண்மையாகவே ஒரே சரீரமாக
இருக்கிறோம்.

18இஸ்ரவேல் மக்களை (யூதர்களை) நினைத்
துப்பாருங்கள். படைக்கப்பட்டவற்றைப் புசிப்
பவர்கள் பலிபீடத்துடன் நல்லுறவு கொண்டி
ருக்கிறார்கள் அல்லவா. 19விக்கிரகங்களுக்குப்
படைக்கப்பட்ட உணவு முக்கியத்துவம் உடை
யது என்று சொல்ல நான் முன்வரவில்லை.
விக்கிரகம் ஒரு குறிப்பிடத்தக்க பொருள் என
வும் நான் கூறவில்லை. 20விக்கிரகங்களுக்குப்
படைக்கப்பட்ட பொருள்கள் பிசாசுகளுக்கே
கொடுக்கப்படுகின்றன, தேவனுக்கல்ல. நீங்கள்
பிசாசுகளோடு எந்தப் பொருளையும் பகிர்ந்து
கொள்வதை நான் விரும்ப மாட்டேன். 21கர்த்த
ருடைய பாத்திரத்திலிருந்தும் பிசாசுகளின்
பாத்திரத்திலும் நீங்கள் பருக முடியாது. கர்த்
தரின் மேசையிலும் பிசாசுகளின் மேசையி
லும் உங்களால் உண்ண முடியாது. 22கர்த்
தரை எரிச்சல் கொள்ளச் செய்யலாமா? நாம்
அவரைவிட பலசாலிகளா? இல்லை.

### உங்கள் சுதந்திரம் எதற்கு?

23"எல்லாப் பொருள்களும் அனுமதிக்கப்பட்
டுள்ளன." ஆம், ஆனால் எல்லாப் பொருள்க
ளும் நல்லதல்ல. "எல்லாப் பொருள்களும்
அனுமதிக்கப்பட்டவை"எனினும், சில பொரு
ள்கள் பக்தியில் வளருவதற்குப் பிறருக்கு உத
வுவதில்லை. 24தனக்கு மட்டுமே உதவக்கூடிய
காரியங்களை ஒருவன் செய்ய முயலக்கூடாது.
பிறருக்குப் பயன்படக்கூடிய செயல்களை
அவன் செய்ய முயற்சி செய்தல் வேண்டும்.

25சந்தையில் விற்கப்படும் எந்த இறைச்
சியையும் சாப்பிடுங்கள். சரி அல்லது தவறு
என்பது பற்றி (அதைச் சாப்பிடுவது தொடர்
பாக) எந்தக் கேள்வியையும் கேட்காதீர்கள்.
26"இந்த உலகமும் அதிலுள்ள அனைத்தும்
கர்த்தருக்கு உரியவை."* ஆதலால் நீங்கள்
அதைச் சாப்பிடலாம்.

27அவிசுவாசியான ஒரு மனிதன் அவ
னோடு உண்ணுவதற்கு உங்களை அழைக்கக்
கூடும். நீங்கள் போக விரும்பினால், உங்கள்
முன் வைக்கப்படும் உணவு எதுவாயினும்
அதனை உண்ணுங்கள். சாப்பிடத் தகுந்ததா,
இல்லையா என அறியும்பொருட்டு வினா
எழுப்பாதீர்கள். 28ஆனால் ஒருவன் உங்க
ளுக்கு "அது விக்கிரகங்களுக்குப் படைக்கப்
பட்ட உணவு" என்று கூறினால் பின்னர்
அதை உண்ணுவது குற்றமாகும். ஏனெனில்
அது குற்றம் என மக்கள் நினைக்கிறார்கள்.
அதைக்கூறிய மனிதனின் மனச்சாட்சியை நீங்
கள் கெடுக்கக் கூடாது. 29நீங்கள் அது குற்ற
மென நினைப்பதாக நான் கருதவில்லை.
ஆனால் மற்ற மனிதன் அதை குற்றமென
எண்ணுகிறான். அதனால் நான் அந்த இறைச்
சியை உண்ணமாட்டேன். மற்றொரு மனிதன்
என்ன நினைப்பானோ என்கிற எண்ணத்
தால் எனது சுதந்திரம் தீர்மானிக்கப்பட நான்
அனுமதிக்கமாட்டேன். 30நான் உணவை நன்றி
யுணர்வுடன் உண்ணுகிறேன். எனவே தேவ
னுக்கு நான் நன்றி தெரிவிக்கிற ஏதோ சிலவற்
றில் என்னைப்பற்றி பிறர் விமர்சிப்பதை
நான் விரும்புவதில்லை.

31எனவே உண்டாலும், பருகினாலும்,
வேறு எதைச் செய்தாலும் ஒவ்வொன்றையும்
தேவனுடைய மகிமைக்காகச் செய்யுங்கள்.
32யூதர்கள், கிரேக்கர்கள் அல்லது தேவனு
டைய சபையார் தவறிழைக்கும்படிச் செய்ய
வைக்கிற எந்தச் செயலையும் செய்யாதீர்கள்.
33நானும் அதனையே செய்கிறேன். எல்லாரை
யும் எல்லா வகைகளிலும் திருப்திப்படுத்த
முனைகிறேன். எனக்குச் சந்தோஷம் தரக் கூடி
யவற்றை நான் செய்ய முயற்சிக்கவில்லை.
ஆனால் அநேக மக்களுக்கு சந்தோஷம் தரக்
கூடியவற்றைச் செய்ய முயற்சிக்கிறேன். பிறர்
இரட்சிக்கப்படுவதற்காக பலருக்குப் பயன்படு
வதையே செய்ய முயற்சி செய்கிறேன்.

---

***இந்த ... உரியவை*** *சங்கீதம் 24:1; 50:12; 89:11.*

11 நான் கிறிஸ்துவை உதாரணமாகப் பின்
பற்றுவதுபோல, என்னை உதாரணமா
கப் பின்பற்றுங்கள்.

### தலைமைக்குக் கீழ்ப்படிதல்

2நீங்கள் எல்லாவற்றிலும் என்னை நினை
வுகூருவதால் உங்களைப் புகழ்கிறேன். நான்
உங்களுக்கு வழங்கியிருக்கிற போதனைகளை
நீங்கள் பின்பற்றிக் கொண்டுள்ளீர்கள். 3ஆ
னால் நீங்கள், இதைப் புரிந்துகொள்ள வேண்டு
மென விரும்புகிறேன். ஒவ்வொரு மனிதனின்
தலைவரும் கிறிஸ்துவே. பெண்ணின் தலை
வன் ஆணாவான். கிறிஸ்துவின் தலைவர்
தேவனே. 4தீர்க்கதரிசனம் சொல்கிறவனோ
அல்லது பிரார்த்திக்கிறவனோ தலையை மூடி
யிருந்தால் அது அவன் தலைக்கு இழுக்கைத்
தரும். 5தீர்க்கதரிசனம் சொல்கிறவளும் பிரார்த்
தனை செய்கிறவளும் தலையை மூடிக்கொண்
டிருக்க வேண்டும். அவ்வாறு தலையை மூடி
யிராவிட்டால் அது அவள் தலைக்கு இழுக்
கைத் தரும். தலைமயிரை மழித்துக்கொண்ட
பெண்ணுக்கு அவள் ஒப்பாவாள். 6ஒரு பெண்
தனது தலையை மூடியிராவிட்டால் (முக்காடு
போடாவிட்டால்) அவள் தலை மயிரை மழிப்ப
தற்கு ஒப்பாகும். தலை மயிரை குறைப்பதோ,
மழிப்பதோ பெண்ணுக்கு இழிவைத் தரும்.
எனவே அவள் தனது தலையை மூடியி
ருக்க வேண்டும். 7ஆனால், ஓர் ஆண் தனது
தலையை மூடக்கூடாது. ஏனெனில் அவன்
தேவனைப் போல அமைக்கப்பட்டவன்.
அவன் தேவனுக்கு மகிமையாய் அமைபவன்.
ஆனால் பெண்ணோ ஆணுக்கு (கணவனுக்கு)
மகிமையாய் அமைபவள். 8பெண்ணிலிருந்து
ஆண் தோன்றவில்லை. ஆணிலிருந்து பெண்
தோன்றினாள். 9ஆண் பெண்ணுக்காகப் படை
க்கப்படவில்லை. பெண்ணோ ஆணுக்காகப்
படைக்கப்பட்டாள். 10அதனால்தான் பெண் ஒரு
வனுக்கு அடங்கியவள் என்பதைக் காட்டும்ப
டியாக தனது தலையை மூடியிருக்க வேண்
டும். தேவதூதர்களுக்காகவும் அவள் இதைச்
செய்தல் வேண்டும்.

11ஆனால் கர்த்தருக்குள் பெண் ஆணுக்கு
முக்கியமானவள். அவ்வாறே ஆணும் பெண்
ணுக்கு முக்கியமானவன். 12ஆணிடமிருந்து
பெண் தோன்றியதால் இது உண்மையாகிறது.
ஆனால் பெண்ணிடம் இருந்து ஆண் பிறக்கி
றான். உண்மையாகவே ஒவ்வொன்றும் தேவ
னிடம் இருந்து வருகிறது. 13இதை நீங்களே
முடிவு செய்யுங்கள். தனது தலையை மறைக்
காமல் தேவனிடம் பிரார்த்தனை செய்வது
ஒரு பெண்ணுக்கு உகந்ததா? 14நீளமான மயி
ரோடு இருப்பது ஆணுக்கு இழுக்கானது என்
பதை இயற்கையே உணர்த்துகிறது. 15ஒரு
பெண்ணுக்கு நீளமான கூந்தலிருப்பது அவ
ளுக்கு கௌரவமாகும். ஏனெனில் ஒரு மகி
மையாகவே அது அவளுக்குத் தரப்பட்டிருக்கி
றது. 16இதைக் குறித்துச் சிலர் இன்னும் விவா
திக்க விரும்பலாம். ஆனால் நாங்களும், தேவ
னுடைய சபைகளும் அம்மக்கள் இதைப்பற்றி
வாக்குவாதம் செய்வதை ஏற்பதில்லை.

### கர்த்தரின் திருவிருந்து

17இப்போது உங்களுக்குச் சொல்பவற்றில்
நான் உங்களைப் புகழமாட்டேன். நீங்கள்
ஒன்று சேர்வது உங்களுக்குத் தொல்லை உரு
வாகுவதில் முடிகிறது. 18முதலில், ஒரு சபை
யாக நீங்கள் சேரும்போது உங்களுக்குள் பிரி
வினைகள் உண்டு என்று நான் கேள்விப்பட்
டேன். அதில் சிலவற்றை நான் நம்புகிறேன்.
19பிரிவினைகள் இருப்பது தேவைதான். உங்க
ளில் யார் சரியான காரியத்தைச் செய்கிறவர்
என்பதைத் தெளிவுபடுத்த அது உதவும். 20நீங்
கள் ஒன்று கூடுகையில் கர்த்தரின் திருவி
ருந்தை* உண்மையாகப் புசிப்பதில்லை.
21ஏன்? ஏனெனில் நீங்கள் சாப்பிடும்போது
இன்னொருவருக்காக காத்திராது உண்ணுகி
றீர்கள். சிலருக்குப் போதுமான அளவு சாப்
பிடக் கிடைப்பதில்லை. ஆனால் மற்றும் சிலர்
போதைக்கு ஆளாகும் அளவுக்கு உட்கொள்கி
றார்கள். 22உங்கள் வீடுகளில் நீங்கள் சாப்பிட
வும், குடிக்கவும் செய்யலாம். தேவனுடைய
சபையினர் முக்கியமற்றவரென நீங்கள் நினை
ப்பதாக எனக்குப் படுகிறது. நீங்கள் ஏழை
களை தர்மசங் கடத்திற்கு உள்ளாக்குகிறீர்கள்.
நான் என்ன கூற முடியும்? உங்களை இதற்
காகப் புகழ்வதா? நான் உங்களைப் புகழேன்.

23நான் உங்களுக்குச் சொன்ன போதனை
உண்மையில் கர்த்தரால் எனக்குக் கொடுக்கப்
பட்டது ஆகும். இயேசு கொலை செய்யப்படு
வதற்காக ஒப்புவிக்கப்பட்ட இரவில் அவர்
அப்பத்தை எடுத்து நன்றி கூறினார். 24அந்த
அப்பத்தைப் பகிர்ந்து அவர் "இதை புசியுங்
கள். இது எனது சரீரமாகும், இது உங்களுக்கு
ரியது. என்னை நினைவு கூருவதற்காக
இதைச் செய்யுங்கள்" என்றார். 25அவர்கள்
அதைச் சாப்பிட்டபின், இயேசு திராட்சை
இரசக் கோப்பையை எடுத்து பகிர்ந்தளித்தார்.
"தேவனிடமிருந்து அவரது மக்களுக்கு அளிக்
கப்பட்ட புது உடன்படிக்கையை இந்த இரசக்
கோப்பை காட்டுகிறது! எனது இரத்தத்தில்
(மரணத்தில்) இந்த உடன்படிக்கை ஆரம்பமாகி
றது. நீங்கள் இதைப் பருகும்போது, என்னை
நினைப்பதற்காக அவ்வாறு செய்யுங்கள்"
என்றார். 26ஒவ்வொரு முறையும் அப்பத்தைச்
சாப்பிடும்போதும் இந்த பானத்தைப் பருகும்
போதும், கர்த்தர் வரும்வரையில் கர்த்தரு
டைய மரணத்தைப் பிறருக்கு அறிவிக்கிறீர்
கள்.

27எனவே தகுதியற்ற வகையில் இந்த அப்
பத்தை உண்டாலோ, அல்லது கர்த்தரின்

---

**கர்த்தரின் திருவிருந்து** இயேசு தன் நினைவாக உண்ண வேண்டும் என்று தன் சீடர்களிடம் சொன்னது. லூக்கா 22:14-20.

இந்தப் பாத்திரத்தில் பருகினாலோ, அப்போது
அந்த மனிதன் கர்த்தரின் சரீரத்துக்கும், இரத்
தத்துக்கும் எதிராகப் பாவம் செய்தவனாகி
றான். 28இந்த அப்பத்தை பகிர்ந்துகொள்வதற்கு
முன்னரும், இந்த பாத்திரத்தில் இருந்து பருகும்
முன்னரும் ஒவ்வொருவனும் தன் இதயத்தைப்
பரீட்சித்துப் பார்த்துக்கொள்ளவேண்டும். 29கர்
த்தருடைய சரீரத்தின் பொருளை நிதானித்து
அறியாமல் ஒருவன் இந்த அப்பத்தை உண்
ணவோ இந்த பானத்தைப் பருகவோ செய்
தால் அந்த மனிதன் உண்பதாலும் பருகுவதா
லும் குற்றவாளியாக நியாயம் தீர்க்கப்படு
வான். 30எனவேதான், உங்களில் பலர் நோயுற்
றவராகவும் பலவீனராகவும் காணப்படுகிறீர்
கள். பலர் இறந்தும் போய்விட் டார்கள். 31நாமே
நம்மைச் சரியான வழியில் நியாயம் தீர்த்திருந்
தோமானால் தேவன் நம்மை நியாயம் தீர்த்
திருக்கமாட்டார். 32ஆனால், தேவன் நம்மை
நியாயம் தீர்க்கும்போது, நமக்குச் சரியான
வழியைக் காட்டும்படி நமக்குத் தண்டனை
அளிக்கிறார். நாம் இந்த உலகத்திலுள்ள பிற
மனிதரோடு குற்றம் சாட்டப்படாதபடிக்கு
தேவன் இதைச் செய்கிறார். 33சகோதர சகோ
தரிகளே! எனவே, நீங்கள் ஒன்று சேர்ந்து
உண்ணுவதற்கு வருகையில் பிறருக்காகக்
காத்திருங்கள். 34ஒருவன் மிகுந்த பசியால்
வாடினால், அவன் வீட்டில் உண்ணட்டும்.
தேவனுடைய நியாயத்தீர்ப்பு உங்கள்மேல்
வராதபடிக்கு நீங்கள் ஒன்று கூடுகையில்
இதைச் செய்யுங்கள். நான் வரும்போது நீங்கள்
செய்ய வேண்டிய பிற காரியங்களைக்
குறித்து உங்களுக்குக் கூறுவேன்.

### பரிசுத்த ஆவியானவரின் வரங்கள்

12 சகோதர சகோதரிகளே, இப்போது நீங்
கள் ஆவியின் வரங்களைப் பற்றிப்
புரிந்துகொள்ள வேண்டுமென நான் விரும்புகி
றேன். 2நீங்கள் விசுவாசம் உடையவராக
மாறும் முன்னர், நீங்கள் வாழ்ந்த வாழ்க்
கையை எண்ணிப் பாருங்கள். பிறர் உங்கள்
மீது செல்வாக்கு செலுத்துவதற்கும் உயிரற்ற
விக்கிரகங்களை வணங்குவதற்கும் உங்களை
நீங்கள் அனுமதித்தீர்கள். 3தேவனுடைய ஆவி
யானவரின் உதவியால் பேசுகிற எவனும்
“இயேசு சபிக்கப்படட்டும்” என்று கூறுவதி
ல்லை என்பதை உங்களுக்குக் கூறுகிறேன்.
பரிசுத்த ஆவியானவரின் உதவியின்றி ஒருவ
னும் “இயேசுவே கர்த்தர்” என்பதைக் கூற
முடியாது. 4ஆவிக்குரிய வரங்கள் பல வகை
உண்டு. ஆனால், அனைத்தும் அதே ஆவியா
னவரால் வருபவை. 5ஊழியம் செய்வதற்குப்
பல வழிகள் உண்டு. ஆனால் அந்த வழிகள்
அனைத்தும் கர்த்தரிடமிருந்தே வருபவை.
6மனிதரிடம் தேவன் செயல்படும் வழிகள் பல
உண்டு. ஆனால் அவை அனைத்தும் நமக்குள்
செயல்படுகிற தேவனிடமிருந்து வருபவை
நாம் ஒவ்வொன்றையும் செய்ய தேவன் நம்மில்
செயல்படுகிறார். 7ஆவியானவரின் வரங்க
ளில் சில ஒவ்வொரு மனிதனிடமும் காணப்ப
டும். பிறருக்கு உதவும்படியாய் ஆவியானவர்
இதை ஒவ்வொருவருக்கும் அளிப்பார். 8ஒருவ
னுக்கு ஞானத்துடன் பேசும் ஆற்றலைப் பரி
சுத்த ஆவியானவர் வழங்குகிறார். அதே பரி
சுத்த ஆவியானவர் அறிவோடு பேசும் ஆற்
றலை இன்னொருவனுக்குக் கொடுக்கிறார்.
9அதே பரிசுத்த ஆவியானவர் விசுவாசத்தை
ஒருவனுக்கு அளிக்கிறார். குணப்படுத்தும்
வல்லமையை மற்றொருவனுக்கு அதே பரி
சுத்த ஆவியானவர் தருகிறார். 10அதிசயங்க
ளைச் செய்யும் சக்தியை இன்னொரு மனித
னுக்கு ஆவியானவர் கொடுக்கிறார், இன்னொ
ருவனுக்குத் தீர்க்கதரிசனம் சொல்லும் திற
னையும், மற்றொருவனுக்கு நல்ல, தீய ஆவிக
ளின் வேறுபாட்டைக் காணும் திறனையும்
அளிக்கிறார். பல்வேறு மொழிகளிலும் பேசும்
ஆற்றலை ஒருவனுக்கும், அம்மொழிகளை
விளக்கியுரைக்கும் திறமையை மற்றொருவ
னுக்கும் அளிக்கிறார். 11ஒரே ஆவியானவரே
இவற்றையெல்லாம் செய்கிறார். ஒவ்வொருவ
னுக்கும் எதனைக் கொடுக்க வேண்டும் என்
பதை ஆவியானவரே தீர்மானிக்கிறார்!

### கிறிஸ்துவின் சரீரம்

12ஒருவனின் சரீரம் முழுமையான ஒன்றாக
இருந்தாலும், அதில் பல உறுப்புகள் உண்டு.
ஆம், சரீரம் பல உறுப்புகளால் ஆனது.
ஆனால், அத்தனை உறுப்புகளும் ஒரே சரீரத்
துக்குரியவை. கிறிஸ்துவும் அதைப் போன்ற
வர். 13நம்மில் சிலர் யூதர்கள். மற்றும் சிலர்
கிரேக்கர்கள் (யூதரல்லாதவர்), சிலர் அடிமை
கள். சிலர் சுதந்திரமானவர்கள். ஆனால் நாம்
எல்லாரும் ஒரே சரீரமாக ஒரே ஆவியானவர்
மூலம் ஞானஸ்நானம் பெற்றோம். நாம் எல்லா
ரும் ஒரே ஆவியைப் பெற்றோம்.

14ஒருவனின் சரீரம் பல்வேறு உறுப்புக்க
ளைக் கொண்டது. 15பாதம் சொல்லக்கூடும்,
“நான் கையல்ல, எனவே நான் சரீரத்துக்குச்
சொந்தமானதல்ல.” இப்படிச் சொல்வதால்
பாதம் சரீரத்தின் உறுப்பாக இருப்பதைத்
தவிர்க்க முடியாது. 16காது சொல்லக்கூடும்,
“நான் கண்ணல்ல. எனவே இந்த சரீரத்தைச்
சார்ந்தவன் அல்ல.” இப்படிச் சொல்வதால்
காது சரீரத்தின் உறுப்பாக இருப்பதைத்
தவிர்க்க முடியாது. 17சரீரம் முழுவதும் கண்
ணாகச் செயல்படுமேயானால், அது கேட்க
முடியாது. சரீரம் முழுவதும் காதாகச் செயல்ப
டுமேயானால், சரீரத்தால் எதையும் முகர்ந்து
பார்க்க முடியாது. 18-19சரீரத்தின் உறுப்புகள்
எல்லாம் ஒரேவகை உறுப்புகளாக இருந்தால்
அப்போது சரீரம் இருப்பதில்லை. தேவன்
உண்மையாகவே தாம் விரும்பியபடி சரீரத்
தின் உறுப்புகளை சரீரத்தில் அமைத்தார்.
சரீரத்தில் ஒவ்வொரு உறுப்புக்கும் ஓர் இட
த்தை அமைத்தார். 20எனவே, பல உறுப்புக

ளும் ஒரே சரீரமாக அமைந்தன. 21கண்
கையிடம் "எனக்கு நீ தேவை இல்லை" என்று
கூறமுடியாது. தலை பாதத்தி டம் "நீ எனக்குத்
தேவையில்லை" என்று கூறமுடியாது. 22பல
மற்றவையாக தோற்றம் தரும் சரீரத்தின்
உறுப்புகள் மிக முக்கியமானவை. 23சரீரத்
தின் தகுதி குறைந்த உறுப்புகளாக நாம்
கருதுபவற்றிற்கு அதிகமான அக்கறை
காட்டுகிறோம். வெளிக்காட்ட விரும்பாத
உறுப்புகளுக்குத் தனிப்பட்ட பாதுகாப்பு அளி
க்கிறோம். 24சரீரத்தின் அழகிய உறுப்புகளுக்கு
இத்தகைய பாதுகாப்பு தேவையில்லை.
ஆனால் கௌரவிக்கத்தக்க உறுப்புகளைக்
கௌரவிக்கிற விதத்தில் சரீரத்தின் உறுப்
புக்களை தேவன் ஒழுங்குபடுத்தினார். 25நமமு
டைய சரீரம் பிரிக்கப்படாதபடிக்கு தேவன்
இதைச் செய்தார். வெவ்வேறு உறுப்புகளும்
பிறவற்றையும் பாதுகாக்க வேண்டும் என்று
தேவன் இதைச் செய்தார். 26சரீரத்தின் உறுப்பு
களில் ஏதேனும் ஒன்றிற்குத் தொல்லை நேர்ந்
தாலும், மற்ற எல்லா உறுப்புக்களும் அதோடு
துன்புறும். நம் சரீரத்தின் ஓர் உறுப்புக்குப்
பெருமை நேர்ந்தாலும் பிற எல்லா உறுப்
புகளும் அப்பெருமையில் பங்கு கொள்ளும்.
27நீங்கள் எல்லாரும் இணைந்து கிறிஸ்து
வின் சரீரமாக இருக்கிறீர்கள். நீங்கள் ஒவ்வொ
ருவரும் சரீரத்தின் உறுப்பாக அமைகிறீர்கள்.
28முதலில் அப்போஸ்தலராகச் சிலரையும்,
இரண்டாவதாக தீர்க்கதரிசிகளாகவும், மூன்றா
வதாக போதகர்களாகவும், பிறகு அதிசயங்க
ளைச் செய்கிறவர்களாகவும், மற்றவர்களுக்கு
உதவுகிறவர்களாகவும், வழி நடத்த வல்லவர்
களாகவும், பல்வேறு மொழிகளைப் பேச
வல்லவர்களாகவும் சபையில் நியமிக்கிறார்.
29எல்லா மனிதர்களும் அப்போஸ்தலர்கள்
அல்ல. எல்லா மனிதர்களும் தீர்க்கதரிசிக
ளல்ல. எல்லா மனிதர்களும் போதகர்களு
மல்ல. எல்லாரும் அதிசயங்களைச் செய்ய
முடியாது. 30குணப்படுத்தும் ஆற்றலும் எல்
லார்க்கும் வாய்ப்பதில்லை. எல்லாருக்கும்
வெவ்வேறு வகையான மொழிகளைப் பேசமு
டியாது. எல்லாரும் அவற்றை விளக்கவும்
முடியாது. 31ஆவியானவரின் சிறந்த வரங்
களைப் பெற நீங்கள் உண்மையாகவே
விரும்ப வேண்டும்.

### அன்பே சிறந்த வரம்

13 நான் இப்போது மிகச் சிறந்த வழி
யைக் காட்டுவேன். மனிதர்களுடைய
தும், தேவதூதர்களுடையதுமான வெவ்வேறு
மொழிகளை நான் பேசக்கூடும். ஆனால் என்
னிடம் அன்பு இல்லையானால் நான் சப்தமி
டும் மணியைப் போலவும், தாளமிடும் கரு
வியைப் போலவும் இருப்பேன். 2தீர்க்கதரிச
னம் உரைக்கும் வரம் எனக்கு இருக்கலாம்.
தேவனுடைய இரகசியமான காரியங்களை
நான் உணர்ந்து கொள்ளக்கூடும். எல்லாம்
அறிந்திருக்கக்கூடும். மலைகளை அசைக்க
வல்ல அரிய விசுவாசம் எனக்கு இருக்கக்
கூடும். ஆனால் இவையிருந்தும் என்னிடம்
அன்பு இல்லையானால் மேற்கண்ட செய்கைக
ளைச் செய்வதால் எனக்கு எவ்வித பயனு
மில்லை. 3மக்களுக்கு உணவு கொடுக்க என்னி
டமிருக்கிற ஒவ்வொன்றையும் நான் கொடுக்க
லாம். என் சரீரத்தையே கூட காணிக்கைப்
பொருளாகக் கொடுக்கலாம். ஆனால் என்னி
டம் அன்பு இல்லையென்றால் இக்காரியங்க
ளைச் செய்வதன் மூலம் எனக்கு எவ்வித
லாபமும் இல்லை. 4அன்பு பொறுமை உள்
ளது. தன்னை புகழாது, அன்பு தற்பெருமை
பாராட்டாது. அன்பு பொறாமை அற்றது.
5அன்பு கடுமையானதன்று. அன்பு தன்னல
மற்றது. அன்பு எளிதாக கோபம் அடையாது.
தனக்கு எதிராக இழைக்கப்படும் தீங்குகளை
யும் அன்பு நினைவுகொள்ளாது. 6அன்பு தீமை
யைக் கண்டு மகிழ்வதில்லை. ஆனால் உண்
மையைக் கண்டு மகிழ்கிறது. 7அன்பு எல்லா
வற்றையும் பொறுமையாய் ஏற்கும். அன்பு
எப்போதும் நம்பும். அன்பு கைவிடுவதில்லை,
எப்போதும் உறுதியுடன் தொடரும். 8அன்பு
முடிவற்றது. தீர்க்கதரிசன வரங்கள் முடிவுடை
யவை. பலமொழிகளைப் பேசும் வரங்களும்
உண்டு. அவற்றிற்கும் முடிவுண்டு. அறிவென்
னும் வரமும் உண்டு. ஆனால் அதுவும்
முடிவு கொண்டது. 9நமது அறிவும் தீர்க்கதரிச
னம் கூறும் திறனும் முழுமையுறாதவை.
எனவே அவற்றிற்கு முடிவு உண்டு. 10முழுமை
யான ஒன்று வருகிற பொழுது முழுமையுறாத
பொருள்கள் முடிவுறும். 11நான் குழந்தையாய்
இருந்தபோது, குழந்தையைப் போலப் பேசி
னேன். குழந்தையைப் போலச் சிந்தித்தேன்.
குழந்தையைப் போலவே திட்டமிட்டேன். நான்
பெரிய மனிதனானபோது குழந்தைத் தனமான
வழிகளை விட்டுவிட்டேன். 12அதுவே நம்
அனைவருக்கும் பொருந்தும். தெளிவற்ற கண்
ணாடிக்குள் பார்ப்பதுபோல நாம் இப்போது
பார்க்கிறோம். எதிர்காலத்தில் தெளிவான
பார்வை நமக்கு உருவாகும். இப்போது ஒரு
பகுதியே எனக்குத் தெரியும். தேவன் என்னை
அறிந்து கொண்டதுபோல அப்போது நான்
முழுக்க அறிவேன். 13எனவே இந்த மூன்றும்
நிலைத்திருக்கிறது. விசுவாசம், நம்பிக்கை,
அன்பு. இவற்றுள் அன்பே மிக மேன்மையா
னது.

### ஆவியின் வரங்களைப் பயன்படுத்துங்கள்

14 அன்பை நாடுங்கள். ஆவியானவரின்
வரங்களைப் பெற விரும்புங்கள். தீர்க்க
தரிசனம் சொல்லும் வரத்திற்காக பெரிதும்
முயலுங்கள். 2ஏனென்று உங்களுக்கு விளக்கு
கிறேன். வேறுமொழியில் பேசும் வரத்தைப்
பெற்றவன் மக்களிடம் அதனைப் பேசவி
ல்லை. அவன் தேவனிடம் பேசுகிறான். வேறு
எவரும் அவனைப் புரிந்து கொள்வதில்லை.

அவன் ஆவியானவர் மூலமாக இரகசியங்
களை வெளிப்படுத்துகிறான். [3]ஆனால் தீர்க்க
தரிசனம் சொல்கிற ஒருவன் மக்களிடம் பேசுகி
றான். அவன் மக்களுக்கு வல்லமை, உற்சாகம்,
ஆறுதல் ஆகியவற்றைக் கொடுக்கிறான்.

[4]வேறு மொழியில் பேசுகிறவன் அவனுக்கு
மட்டுமே பயன்படுகிறான். ஆனால் தீர்க்கதரிச
னம் சொல்கிறவன் சபை முழுமைக்கும் பயன்
படுகிறான். [5]நீங்கள் எல்லாரும் வேறு மொழி
களில் பேசும் வரத்தைப் பெற வேண்டுமென
விரும்புகிறேன். ஆனால் நீங்கள் தீர்க்கதரிச
னம் சொல்வதை இன்னும் அதிகமாய் விரும்
புகிறேன். வேறு மொழிகளில் பேசுகிற மனித
னைவிட தீர்க்கதரிசனம் சொல்லக்கூடிய மனி
தன் சிறந்தவன். வேறு மொழிகளைப் பேசும்
மனிதன் அவற்றை விளக்கிக் கூற முடியுமா
னால் அவனும் தீர்க்கதரிசனம் சொல்கிற
வனை ஒத்தவன். அப்போது சபையும் அவன்
கூறுவதன் மூலமாகப் பயன் அடைய முடியும்.

[6]சகோதர, சகோதரிகளே, நான் வெவ்வேறு
மொழிகளில் பேசுபவனாக உங்களிடம் வந்
தால் அது உங்களுக்குப் பயன்படுமா? இல்
லை, நான் புதிய உண்மை அல்லது அறிவு,
அல்லது தீர்க்கதரிசனம், அல்லது போதனை
ஆகியவற்றை உரைக்கும்படியாய் உங்களிடம்
வந்தால் அது உங்களுக்குப் பயன்படும்.
[7]குழல், வீணை ஆகிய உயிரற்ற பொருட்கள்
ஒலியெழுப்புவதைப் போன்று அது அமைந்து
விடும். வெவ்வேறு விதமான இசையொலிகள்
தெளிவாக எழுப்பப்படாவிட்டால், இசைக்கும்
இசையை நீங்கள் புரிந்து கொள்ள இயலாது.
இசையைப் புரிந்து கொள்வதற்கு ஒவ்வொரு
ராகமும் தெளிவாக மீட்டப்படுதல் வேண்டும்.
[8]யுத்தத்தின்போது எக்காள முழக்கம் சரியாக
முழக்கப்படாவிட்டால் வீரர்களுக்குப் போருக்
குத் தயார் செய்துகொள்ள வேண்டிய நேரம்
அதுவென்பது தெரிய வராது. [9]அதுவே
உங்களுக்கும் பொருந்தும். உங்கள் வாயின்
வார்த்தைகள் தெளிவாக இருக்கட்டும். நீங்கள்
தெளிவாகப் பேசாவிட்டால் உங்கள் கருத்
தைப் பிறர் புரிந்துகொள்ள முடியாது. [10]இவ்வு
லகில் பலவகையான பேச்சு மொழிகள்
உண்டு என்பதும் அவை பொருள் பொருந்தி
யவை என்பதும் உண்மை. [11]ஒருவன் என்னி
டம் கூறுவதன் பொருளை நான் புரிந்து
கொள்ள முடியாவிட்டால், அவன் விசித்திர
மாகப் பேசுவதாக நானும், நான் விசித்திர
மாகப் பேசுவதாய் அவனும் எண்ணக்கூடும்.
[12]அதுவே உங்களுக்கும் பொருந்தும். நீங்கள்
ஆன்மீக வரங்களைப் பெற விரும்புகிறீர்கள்.
சபை உறுதியாய் வளருவதற்குரிய வரங்
களைப் பெற்றுக்கொள்ள முயற்சி செய்யுங்
கள். [13]ஆகவே வேறு மொழியில் பேசும் வரத்
தைப் பெற்ற ஒருவன் அதை விளக்கிக் கூறும்
திறமையை அடையும் பொருட்டு பிரார்த்
தனை செய்யவேண்டும். [14]நான் வேறு மொழி
யில் பிரார்த்தித்தால் என் ஆவி பிரார்த்திக்
கும். ஆனால் என் மனம் எச்செயலையும்
செய்யாது. [15]எனவே, நான் என்ன செய்ய
வேண்டும்? நான் எனது ஆவியால் பிரார்த்திக்
கும்போது, என் மனதாலும் பிரார்த்திப்பேன்.
எனது ஆவியால் நான் பாடுகையில், என்
மனதாலும் பாடுவேன். [16]உங்கள் ஆவியால்
நீங்கள் தேவனை வாழ்த்தக்கூடும். நீங்கள் நன்
றியறிதலுக்கான பிரார்த்தனையைக் கூறும்
போது அதைப் புரிந்துகொளளாத ஒருவன்
“ஆமென்” என்று சொல்லமுடியாது. ஏன்?
அவனுக்கு நீங்கள் சொல்வது என்னவென்று
தெரியாது. [17]நீங்கள் தேவனுக்கு நல்லமுறை
யில் நன்றி தெரிவிக்கக்கூடும். ஆனால் மற்ற
மனிதன் அதனால் பயன் அடையவில்லை.

[18]உங்களைக் காட்டிலும் சிறந்த முறையில்
வெவ்வேறு மொழிகளைப் பேசும் வரத்தை
நான் பெற்றிருப்பதற்காகத் தேவனுக்கு நன்றி
கூறுகிறேன். [19]ஆனால், சபையின் கூட்டங்க
ளில் நான் புரியக் கூடிய மொழியில் ஐந்து
வார்த்தைகளைப் பேசுவதையே, புரியாத மொ
ழியில் ஆயிரம் வார்த்தைகளைப் பேசுவதைக்
காட்டிலும் விரும்புவேன். நான் பிறருக்குப்
போதிக்கும்படியாக, எனது புரிந்துகொள்ளும்
தன்மையோடு பேசுவதையே தேர்ந்து கொள்கி
றேன்.

[20]சகோதர சகோதரிகளே, குழந்தைகளைப்
போல யோசிக்காதீர்கள். தீய காரியங்களில்,
குழந்தைகளைப் போல இருங்கள். ஆனால்
சிந்திக்கும்போது மனிதரைப் போல சிந்தியுங்
கள்.

21 “வெவ்வேறு மொழிகளைப் பேசும் மனி
தர்களையும், வேற்று மக்களின் மொழி
களையும் பயன்படுத்தி இந்த மக்க
ளோடு பேசுவேன். அப்போதும் இந்த
மக்கள் எனக்குக் கீழ்ப்படிய மாட்டார்
கள்” ஏசாயா *28:11-12*

என்று எழுதப்பட்டிருக்கிறது. இவ்வாறு கர்த்
தர் சொல்கிறார்.

[22]எனவே, வெவ்வேறு மொழிகளில் பேசும்
வரம் விசுவாசமற்ற மக்களுக்கு நிரூபணத்தின்
ஒரு அடையாளமாகும், விசுவாசமுள்ள மக்க
ளுக்கு அல்ல. தீர்க்கதரிசனம் விசுவாசமுள்ள
மக்களுக்கேயொழிய, விசுவாசமற்ற மக்களுக்
கல்ல. [23]சபையினர் எல்லோரும் கூடி இருக்
கையில் நீங்கள் அனைவரும் (வெவ்வேறு
மொழிகளில்) பேசுவதாக வைத்துக்கொள்
வோம். விசுவாசமற்றவர்களோ, உங்களைப்
புரிந்துகொள்ள முடியாதவர்களோ அப்போது
வந்தால் அவர்கள் உங்களை பைத்தியம் பிடித்
தவர்களாகக் கருதுவர். [24]ஆனால், நீங்கள்
தீர்க்கதரிசனம் உரைக்கும்போது விசுவாசமற்
றவனோ, புரிந்து கொள்ளும் தன்மை இல்லாத
மனிதனோ அங்கு வந்தால் அந்த மனிதனின்
பாவம் அவனுக்கு உணர்த்தப்படும். நீங்கள்
கூறும் காரியங்களின்படியே அவன் நியாயம்
தீர்க்கப்படுவான். [25]அவன் உள்ளத்தின் இரகசி

யங்கள் அவனுக்குத் தெரிவிக்கப்படும். என
வே அந்த மனிதன் தலை குனிந்து வீழ்ந்து
தேவனை வணங்குவான். “உண்மையாகவே,
தேவன் உங்களோடு இருக்கிறார்” என்று
அவன் கூறுவான்.

## உங்கள் ஐக்கியம்

26எனவே, சகோதர சகோதரிகளே, நீங்கள்
என்ன செய்ய வேண்டும்? நீங்கள் சந்திக்கும்
போது ஒருவரிடம் சங்கீதம் இருக்கிறது. மற்
றொருவரிடம் போதனை இருக்கிறது. இன்
னொருவரிடம் தேவனிடம் இருந்து பெற்ற
புதிய செய்தி இருக்கிறது. ஒருவர் வேறு
மொழியைப் பேசக்கூடும். இன்னொருவர்
அதனை விளக்கியுரைக்கக் கூடும். இந்தக்
காரியங்களின் நோக்கம் சபை வளருவதற்கு
உதவுவதாக இருக்க வேண்டும். 27நீங்கள்
சந்திக்கும்போது வேறு மொழிகளில் ஒருவர்
உங்களோடு பேசினால் இருவராக மட்டுமே
இருக்க வேண்டும். மூன்று பேருக்குமேல்
இதைச் செய்யக்கூடாது. அவர்கள் ஒருவ
ருக்குப் பின் ஒருவர் பேசவேண்டும். இன்னொ
ருவர் அவர்கள் பேசுவதை விளக்க
வேண்டும். 28அவ்வாறு விளக்கக்கூடியவர்
அங்கே இல்லையென்றால் சபையினர் சந்திக்
கும்போது வேறு மொழியில் பேசுகின்றவர்
அமைதியாக இருக்க வேண்டும். தன்னிடமும்
தேவனிடமும் மட்டுமே பேசிக்கொண்டு அவர்
இருத்தல் வேண்டும்.

29இரண்டு அல்லது மூன்று தீர்க்கதரிசிகள்
மட்டுமே பேச வேண்டும். அவர்கள் கூறுவ
தைப் பிறர் நிதானிக்கவேண்டும். 30சபையில்
இருப்பவரில் ஒருவர் தேவனிடமிருந்து ஏதே
னும் செய்தியைப் பெற்றால் முதலில் பேசுகி
றவர் உடனே பேசுவதை நிறுத்த வேண்டும்.
31இந்த முறையில் ஒருவருக்குப் பின் ஒருவராக
நீங்கள் தீர்க்கதரிசனம் உரைக்க முடியும்.
அவ்வாறாக எல்லா மக்களும் பயிற்சியும்,
உற்சாகமும் பெறுவார்கள். 32தீர்க்கதரிசிகளின்
ஆவிகளும்கூட தீர்க்கதரிசிகளால் கட்டுப்படுத்
தப்பட முடியும். 33தேவன் குழப்பத்தின் தேவ
னல்ல. அவர் சமாதானத்தின் தேவனாவார்.

34சபைக் கூட்டங்களில் பெண்கள் அமைதி
யாக இருக்க வேண்டும். தேவனுடைய மக்களு
டைய எல்லா சபைகளிலும் அவ்வாறே
இருக்க வேண்டும். பெண்கள் பேசுவதற்கு
அனுமதிக்கப்படமாட்டார்கள். அவர்கள் அடக்
கமுடையோராக இருத்தல் வேண்டும். மோசே
யின் சட்டமும் இதையே கூறுகிறது. 35பெண்
கள் எதையேனும் அறிந்து கொள்ள விரும்
பினால் வீட்டில் தங்கள் கணவரைக் கேட்டுத்
தெரிந்து கொள்ள வேண்டும். சபைக்
கூட்டத்தில் பேசுவது பெண்ணுக்கு இழுக்
கானது. 36தேவனுடைய போதனை உங்களிட
மிருந்து வந்ததா? இல்லை. அல்லது தேவனு
டைய போதனையைப் பெற்றவர்கள் நீங்கள்
மட்டுமா? இல்லை.

37உங்களில் ஒருவன் தன்னைத் தீர்க்கதரி
சியாகக் கருதினாலோ அல்லது ஆவியின்
வரம் பெற்றிருப்பதாக எண்ணினாலோ,
அவன் நான் உங்களுக்கு எழுதுவதை கர்த்த
ரின் கட்டளையாக அடையாளம் கண்டு
கொள்ளட்டும். 38இதை அந்த மனிதன் அறிய
வில்லையென்றால் அவன் தேவனால் அறியப்
படாதவன்.

39எனவே, சகோதர சகோதரிகளே, நீங்கள்
தீர்க்கதரிசனம் உரைப்பதை விரும்புங்கள்.
அதே சமயத்தில் மக்கள் வேறு மொழிகளில்
பேசும் வரத்தைத் தடுக்காதீர்கள். 40ஆனால்
தகுதியானதும் ஒழுங்கானதுமான வகையில்
ஒவ்வொன்றும் செய்யப்பட வேண்டும்.

## கிறிஸ்துவைப் பற்றிய நற்செய்தி

15 சகோதர சகோதரிகளே, உங்களுக்குக்
கூறிய நற்செய்தியை இப்போது நீங்கள்
நினைவு கூறவேண்டும் என்று நான் விரும்பு
கிறேன். நீங்கள் இச்செய்தியைப் பெற்றீர்கள்.
அச்செய்தியில் உறுதியாய்த் தொடருங்கள்.
2நீங்கள் இந்நற்செய்தியால் இரட்சிக்கப்பட்டிருக்
கிறீர்கள். ஆனால் நான் உங்களுக்குச் சொன்ன
வற்றை தொடர்ந்து நம்புங்கள். அங்ஙனம்
செய்யாத பட்சத்தில் உங்களின் விசுவாசம்
வீணாய்ப் போகும்.

3நான் பெற்ற செய்தியை உங்களுக்கு
அறிவித்தேன். நான் உங்களுக்கு மிக முக்கிய
மான விஷயங்களைக் கூறினேன். வேதவாக்கி
யங்கள் கூறியபடியே, கிறிஸ்து நமது பாவங்க
ளுக்காக மரித்தார். 4வேத வாக்கியங்கள்
கூறியபடியே கிறிஸ்து அடக்கம் செய்யப்பட்டு
மூன்றாம் நாளில் உயிரோடு எழுப்பப்பட்டார்.
5கிறிஸ்து தன்னைப் பேதுருவுக்கும் பின்னர்
பன்னிரண்டு அப்போஸ்தலருக்கும் காட்சிய
ளித்தார். 6அதற்குப் பிறகு கிறிஸ்து 500 சகோ
தரர்களுக்கும் மேற்பட்டவர்களுக்கு ஒரே சமயத்
தில் தன்னை வெளிப்படுத்தினார். அவர்களில்
பலர் இன்னும் உயிரோடு இருக்கிறார்கள்.
சிலர் மறைந்து விட்டனர். 7அதன் பின்னர்
கிறிஸ்து யாக்கோபுக்கும் பிறகு மீண்டும் எல்
லாச் சீஷர்களுக்கும் காட்சியளித்தார். 8இறுதி
யாக வழக்கமற்ற முறையில் பிறந்த ஒருவ
னைப் போன்ற எனக்கும் கிறிஸ்து தன்னை
காண்பித்தார். 9மற்ற எல்லா அப்போஸ்த
லர்களும் என்னைக் காட்டிலும் சிறந்தவர்கள்.
நான் தேவனுடைய சபையைத் துன்பப்படுத்தி
யவன். எனவே அப்போஸ்தலன் என்று
அழைக்கப்படுவதற்கும் நான் தகுதியுடைய
வன் அல்ல. 10ஆனால் தேவனுடைய இரக்கத்தி
னால் இப்போதைய எனது தகுதியைப்
பெற்றேன். தேவன் என்னிடம் காட்டிய இரக்கம்
வீணாய்ப் போகவில்லை. நான் மற்ற எல்லா
அப்போஸ்தலரைக் காட்டிலும் கடினமாய்
உழைத்தேன். (ஆனால், உண்மையில் உழைப்
பவன் நான் அல்ல. தேவனுடைய இரக்கமே
என்னோடு இருந்தது.) 11நான் உங்களுக்குப்

போதித்தேனா, அல்லது மற்ற அப்போஸ்தலர்
கள் உங்களுக்குப் போதித்தார்களா என்பது
முக்கியமில்லை. நாங்கள் எல்லாரும் ஒரே
விஷயத்தையே போதிக்கிறோம். இதையே
நீங்களும் நம்பினீர்கள்.

## நமது உயிர்த்தெழுதல்

[12]கிறிஸ்து மரணத்தில் இருந்து எழுப்பப்
பட்டார் என்று போதிக்கிறோம். மக்கள் மர
ணத்திலிருந்து எழுப்பப்பட முடியாது என்று
உங்களில் சிலர் கூறுவதேன்? [13]மக்கள் மரணத்
திலிருந்து எழுப்பப்பட மாட்டார்கள் என்றால்
கிறிஸ்துவும் ஒருபோதும் மரணத்திலிருந்து
எழுப்பப்படவில்லை எனலாம். [14]மரணத்திலி
ருந்து ஒருபோதும் கிறிஸ்து எழுப்பப்பட்டிருக்
கவில்லை எனில், பிறகு எங்கள் போதனை
எந்தத் தகுதியுமற்றது. மேலும் உங்கள் விசு
வாசம் தகுதியற்றதாகிறது. [15]நாம் தேவனைப்
பற்றி பொய்யுரைக்கும் களங்கம் உடையவர்
கள் ஆவோம். ஏனென்றால் தேவன் கிறிஸ்
துவை மரணத்தில் இருந்து எழுப்பினா
ரென்று நாம் தேவனைக் குறித்துப் போதித்
துள்ளோம். மக்கள் மரணத்திலிருந்து எழுப்
பப்படுவதில்லை என்றால் கிறிஸ்துவும் தேவ
னால் மரணத்திலிருந்து எழுப்பப்படவில்லை
எனலாம். [16]இறந்தோர் எழுப்பப்படாவிட்டால்
கிறிஸ்துவும் கூட எழுப்பப்பட்டிருக்கவில்லை
எனலாம். [17]கிறிஸ்து எழுப்பப்படவில்லை
என்றால் உங்கள் விசுவாசம் வீணானது. இன்
னும் நீங்கள் அனைவரும் பாவிகளாக இருக்கி
றீர்கள். [18]ஏற்கெனவே இறந்துபோன கிறிஸ்து
வின் மக்களும் அழிந்துபோயிருப்பார்கள்.
[19]இவ்வாழ்க்கைக்காக மட்டுமே கிறிஸ்துவில்
நம்பிக்கை வைத்திருப்போமானால் வேறெவ
ரைக் காட்டிலும் நாமே அதிக பரிதாபத்துக்
குரியவர்களாகக் காணப்படுவோம்.

[20]ஏற்கெனவே மரணமடைந்த விசுவாசி
களில் முதல்வராய் கிறிஸ்து உண்மையாகவே
மரணத்திலிருந்து எழுப்பப்பட்டார். [21]ஒரு மனி
தனின் (ஆதாமின்) செய்கையினால் மனிதர்க
ளுக்கு மரணம் நேர்கிறது. மரணத்தில் இருந்து
எழும்புதலும் ஒரு மனிதனால் (கிறிஸ்துவால்)
நேர்கிறது. [22]ஆதாமில் நாம் எல்லாரும் இறக்கி
றோம். அதைப்போன்று கிறிஸ்துவில் நாம்
அனைவரும் மீண்டும் வாழ அனுமதிக்கப்
படுகிறோம். [23]ஆனால் தகுந்த வரிசைப்படியே
ஒவ்வொரு மனிதனும் எழுப்பப்படுவான். கிறி
ஸ்து முதலில் எழுப்பப்பட்டார். கிறிஸ்து மீண்
டும் வரும்போது கிறிஸ்துவின் மக்கள் உயி
ரோடு எழுப்பப்படுவார்கள். [24]அப்போது
முடிவு வரும், எல்லா ஆட்சியாளர்களையும்,
அதிகாரிகளையும், சக்திகளையும் கிறிஸ்து
அழிப்பார். பிதாவாகிய தேவனிடம் கிறிஸ்து
இராஜ்யத்தை ஒப்படைப்பார். [25]கிறிஸ்துவின்
அதிகாரத்துக்குள் எல்லா பகைவர்களும்
வரும் வரைக்கும் கிறிஸ்து ஆளவேண்டும்.
[26]கடைசி யில் அழிக்கப்படும் சத்துரு மரணம்
ஆகும். [27]"தேவன் அவரது அதிகாரத்துக்குள்
எல்லாவற்றையும் வைத்தார்"* என்று வேத
வாக்கியங்கள் சொல்கின்றன. "எல்லாப்
பொருள்களும் அவரது (கிறிஸ்துவின்) அதிகா
ரத்துக்கு உட்பட்டது" எனும்போது தேவனை
உள்ளடக்கிக் கூறவில்லை என்பது தெளிவாகி
றது. எல்லாவற்றையும் கிறிஸ்துவின் அதிகா
ரத்துக்குட்படுத்தியவர் தேவனே. [28]எல்லாம்
கிறிஸ்துவின் அதிகாரத்துக்குட்படுத்தப்பட்ட
தும் தேவனுடைய அதிகாரத்துக்குள் குமா
ரனும் (கிறிஸ்துவும்) உட்படுத்தப்படுவார்.
அனைத்தையும் கிறிஸ்துவின் கட்டுப்பாட்டின்
கீழ் தேவனே உட்படுத்துகிறார். தேவன் எல்லா
வற்றின் மீதும் முழுமையாக ஆட்சியாளராக
இருக்கும் வகையில் கிறிஸ்து தேவனுக்கு உட்
படுத்தப்பட்டு இருக்கிறார்.

[29]மரணத்திலிருந்து மக்கள் எழுப்பப்பட
மாட்டார்கள் என்றால், ஞானஸ்நானம் பெற்ற
மக்கள் மரணமடைந்தவர்களுக்குச் செய்யவே
ண்டியதென்ன? மரணமடைந்த மக்கள் எழுப்
பப்படவில்லை என்றால் மக்கள் அவர்களுக்
காக ஞானஸ்நானம் பெறுவதேன்? [30]நமது
நிலை என்ன? ஒவ்வொரு மணி நேரமும்
ஏன் நாம் ஆபத்துக்குள்ளாகிறோம்? [31]நான்
தினமும் மரணமடைகிறேன். கிறிஸ்து இயேசு
வாகிய நமது கர்த்தருக்குள் நான் உங்களைக்
குறித்துப் பெருமை பாராட்டுவது போன்ற
உண்மை அதுவாகும். [32]எபேசுவில் கொடிய
விலங்குகளோடு என் பெருமையை திருப்
திப்படுத்தும் எண்ணத்தோடு போராடினேன்
என்று கூறினால் எனக்கு எந்த நன்மையு
மில்லை. மக்கள் மரணத்தில் இருந்து எழுப்
பப்படுவதில்லை என்றால், "நாம் நாளை மர
ணம் அடையக்கூடுமென்பதால் உண்டு பருகு
வோம்."* என்று சொல்லலாமே. [33]முட்டா
ளாக்கப்படாதீர்கள். "தீய நண்பர்கள் நல்ல
பழக்கங்களைக் கெடுப்பார்கள்." [34]சரியானபடி
சிந்திக்க ஆரம்பியுங்கள். பாவம் செய்யாதீர்
கள். உங்களில் சிலர் தேவனை அறியவி
ல்லை. நீங்கள் வெட்கப்படும்படியாக இதைக்
கூறுகிறேன்.

## மகிமையின் சரீரம்

[35]"எப்படி இறந்தோர் எழுப்பப்படுவர்?
அவர்களுக்கு எத்தகைய சரீரம் அமையும்?"
என்று சிலர் கேட்கக்கூடும். [36]என்ன ஒரு
தேவையற்ற கேள்வி! எதையேனும் விதைத்
தால் அது மீண்டும் உயிர்பெற்று வளருவதற்கு
முன் பூமியில் விழுந்து மடியும். [37]அது பூமியில்
இருந்து வளரும்போது பெறுகின்ற "தோற்
றத்தை" அதைப் பூமியில் விதைக்கும்போது
பெற்றிருப்பதில்லை. நீங்கள் விதைப்பது
கோதுமை அல்லது வேறு ஏதாவது ஒரு
தானிய விதை மட்டுமே. [38]ஆனால் தேவன்

---

**தேவன் ... வைத்தார்** *சங்கீதம் 8:6*

**நாம் ... பருகுவோம்** *ஏசாயா 22:13; 56:12.*

அதற்கு என வகுக்கப்பட்டுள்ள ஓர் உருவைக்
கொடுக்கிறார். ஒவ்வொரு வகையான விதைக்
கும் அதற்குரிய உருவத்தை அளிக்கிறார்.
39மாம்சத்திலான உயிர்கள் அனைத்தும் ஒரே
வகையான உருவைப் பெற்றிருக்கவில்லை.
மனிதர் ஒரு வகை உருவையும், விலங்குகள்
மற்றொரு வகை உருவத்தையும், பறவைகள்
இன்னொரு வகை தோற்றத்தையும் மீன்கள்
பிறிதொரு அமைப்பையும் பெற்றிருக்கின்றன.
40வானத்துக்குரிய சரீரங்களும் உண்டு. மண்
ணுக்குரிய சரீரங்களும் உண்டு. வானத்துக்
குரிய சரீரங்களின் அழகு ஒருவகையானது.
மண்ணுக்குரிய சரீரங்களின் அழகு மற்றொரு
வகையானது. 41சூரியனுக்கு ஒரு வகை அழ
கும், சந்திரனுக்கு மற்றொரு வகை அழகும்,
நட்சத்திரங்களுக்கு வேறு வகையான அழகும்
உண்டு. ஒவ்வொரு நட்சத்திரமும் அழகில்
வேறுபட்டது.

42மரணமடைந்த மக்கள் எழுப்பப்படும்
போதும் இவ்வாறே நிகழும். மரணத்தின்பின்
“புதைக்கப்பட்ட” சரீரம் கெட்டு அழியும்.
ஆனால் எழுப்பப்பட்ட சரீரம் அழிவற்ற வாழ்
வைக் கொண்டிருக்கும். 43சரீரம் “புதைக்கப்
படுகிறபோது” மரணத்திற்கு எந்த கௌரவ
மும் இல்லை. ஆனால் அது மீண்டும் எழுப்பப்
படும்போது அது மகிமையில் எழுப்பப்படு
கிறது. புதைக்கப்படுகிறபோது பலவீனமாக
இருக்கிறது. ஆனால் அது ஆற்றலில் எழுப்
பப்படுகிறது. 44“அடக்கம் செய்யப்பட்ட” சரீரம்
பூத சரீரம். எழுப்பப்படும்போது அது ஆவிக்
குரிய சரீரமாகும். பூத சரீரம் ஒன்று உண்டு.
எனவே ஆவிக்குரிய சரீரமும் உண்டு. 45இதே
பொருளில் “முதல் மனிதன் (ஆதாம்) உயிருள்
ளவனானான்.”* இறுதி ஆதாமாகிய கிறிஸ்
துவோ உயிரளிக்கும் ஆவியானவரானார்
என்று வேதவாக்கியம் கூறுகிறது. 46ஆவிக்
குரிய சரீரம் முதலில் தோன்றவில்லை. இயற்
கையான சரீரத்துக்குரிய மனிதனே முதலில்
தோன்றினான். பின்னரே ஆவிக்குரிய மனித
னின் தோற்றம் அமைந்தது. 47முதல் மனிதன்
பூமியின் மண்ணிலிருந்து வந்தவன். இரண்
டாம் மனிதன் (கிறிஸ்து) பரலோகத்திலிருந்து
வந்தவர். 48மக்கள் பூமிக்குச் சொந்தமானவர்
கள். அவர்கள் பூமியில் இருந்து வந்த முதல்
மனிதனைப் போன்றவர்கள். ஆனால் பரலோ
கத்துக்குரிய மனிதர்கள் பரலோகத்திலிருந்து
வந்த மனிதனைப் போன்றவர்கள். 49நாம்
பூமியிலிருந்து வந்த மனிதனைப் போன்று
அமைக்கப்பட்டோம். எனவே பரலோகத்திலி
ருந்து வந்த மனிதனைப் போன்றும் அமைக்
கப்படுவோம்.

50சகோதர சகோதரிகளே! நான் இதை உங்க
ளுக்குக் கூறுகிறேன். மாம்சமும், இரத்தமும்
(பூதசரீரம்) தேவனுடைய இராஜ்யத்தில் இருக்க
முடியாது! அழியத்தக்க பொருள் அழிவற்ற
பொருளின் பாகமாக மாற முடியாது!
51ஆனால் நான் கூறும் இரகசியத்தைக் கேளுங்
கள். நாம் எல்லாரும் மரணமடைவதில்லை.
நாம் மாற்றமுறுவோம். 52கணத்தில் அது
நிகழும். கண்ணிமைக்கும் நேரத்துக்குள் நமது
மாற்றம் நிகழும். கடைசி எக்காளம் முழங்கும்
போது இது நடக்கும். எக்காளம் முழங்கும்,
மரித்த விசுவாசிகள் எப்போதும் வாழும்
படியாய் எழுப்பப்படுவார்கள். நாமும் கூட
முழுமையாய் மாற்றம் அடைவோம். 53அழியக்
கூடிய இந்த சரீரம் என்றும் அழிவின்மையால்
தன்னைப் போர்த்திக் கொள்ளவேண்டும்.
மரணமுறும் இந்த உடம்பு மரணமின்மையால்
தன்னைப் போர்த்திக் கொள்ள வேண்டும்.
54எனவே அழியக்கூடிய இந்த சரீரம் அழிவின்
மையால் தன்னைப் போர்த்திக்கொள்ளும்.
மரணத்திற்குள்ளாகும் இச்சரீரம் மரணமின்
மையால் தன்னைப் போர்த்திக் கொள்ளும்.
இது நடந்தேறும்போது வேதவாக்கியத்தின்
வாசகம் உண்மையாகும்.

“மரணம் வெற்றிக்குள் விழுங்கப்பட்டது”
ஏசாயா *25:8*

55 “மரணமே, உன் வெற்றி எங்கே?
பாதாளமே, அழிக்கும் உன் வல்லமை
எங்கே?”

ஓசியா *13:14*

56மரணத்தின் ஆற்றலே பாவம். பாவத்தின்
ஆற்றலே சட்டமாகும். 57நாம் தேவனுக்கு நன்றி
கூறுவோம். நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்
துவின் மூலமாக அவர் நமக்கு வெற்றியை
அருளினார்.

58எனவே என் அன்பான சகோதர சகோத
ரிகளே, உறுதியாய் நில்லுங்கள். எதுவும்
உங்களை மாற்றாமல் இருக்கட்டும். எப்போ
தும் முழுமையாக உங்களைக் கர்த்தரின்
பணிக்கு ஒப்புக்கொடுங்கள். கர்த்தருக்கான
உங்கள் பணி வீணாகப் போவதில்லை என்
பது உங்களுக்குத் தெரியும்.

### பிற விசுவாசிகளின் காணிக்கை

16 தேவனுடைய மக்களுக்காகப் பணத்தை
வசூலிப்பதுப்பற்றி இப்போது உங்க
ளுக்கு எழுதுவேன். கலாத்திய சபைகளுக்கு
நான் கூறியுள்ளபடியே நீங்களும் செய்யுங்கள்.
2ஒவ்வொரு வாரத்தின் முதல் நாளிலும் உங்க
ளில் ஒவ்வொருவனும் தங்கள் வரவுக்கேற்ப
எவ்வளவு பணத்தைச் சேமிக்க முடியுமோ
அத்தனையையும் சேமித்து வையுங்கள். நீங்
கள் இந்த பணத்தை ஒரு விசேஷமான இடத்தில்
பாதுகாப்பாக வையுங்கள். அவ்வாறாயின்
நான் வந்த பின் நீங்கள் பணத்தைத் திரட்டும்
சிரமம் உங்களுக்கு இருக்காது. 3நான் வரும்
போது உங்கள் வெகுமதியை எருசலேமிற்கு
எடுத்துச் செல்வதற்காகச் சில மனிதர்களை

---

**முதல் ... உயிருள்ளவன்** ஆதி. *2:7.*

அனுப்புவேன். நீங்கள் அனுப்புவதற்கு
இசைந்த மனிதர்களையே உங்களிடம் அனுப்பு
வேன். அறிமுகக் கடிதம் கொடுத்து அவர்
களை அனுப்புவேன். 4நானும் அவர்களோடு
போவது நல்லது எனத் தோன்றினால், அந்த
மனிதரை என்னோடு அழைத்துச் செல்வேன்.

## பவுலின் திட்டங்கள்

5நான் மக்கதோனியாவின் வழியாகப்
போகத் திட்டமிட்டுள்ளேன். நான் மக்கதோ
னியா வழியாகப் போனபின் உங்களிடம் வரு
வேன். 6நான் உங்களிடம் சில காலம் இருக்
கக் கூடும். பனிக்காலம் முழுவதும் நான்
தங்கக்கூடும். பிறகு நான் எங்கெங்கு சென்றா
லும் என் பயணத்திற்கு நீங்கள் உதவமுடியும்.
7நான் இந்த சமயத்தில் மட்டும் போகிற வழி
யில் உங்களைப் பார்க்க விரும்பவில்லை.
கர்த்தர் விரும்பினால் உங்களோடு நீண்ட
காலம் தங்க விரும்புகிறேன். 8பெந்தெகோஸ்து
வரைக்கும் எபேசுவில் தங்கி இருப்பேன்.
9பெரிய வளர்ச்சியுறும் பணி எனக்கு இப்
போது தரப்பட்டுள்ளதால் அந்த நல்ல வாய்ப்
பைப் பயன்படுத்தும்படிக்கு இங்கு தங்கு
வேன். அதற்கு எதிராக வேலை செய்வோர்
பலர் உள்ளனர்.

10தீமோத்தேயு உங்களிடம் வரக்கூடும்.
அவன் உங்களோடு பயமில்லாமல் இருக்க
உதவுங்கள். என்னைப்போலவே அவனும்
கர்த்தருக்காகப் பணியாற்றுகிறான். 11எனவே
உங்களில் ஒருவரும் தீமோத்தேயுவை ஏற்றுக்
கொள்ள மறுக்கக் கூடாது. என்னிடம் அவன்
வரமுடியும் வகையில் அவனது பயணம்
அமைதி நிரம்பியதாக இருப்பதற்கு உதவுங்
கள். சகோதரர்களுடன் சேர்ந்து அவன் என்
னிடம் வருவதை எதிர்பார்க்கிறேன்.

12இப்போது நமது சகோதரன் அப்பொல்
லோவைக் குறித்து எழுதுகிறேன். பிற சகோ
தரர்களுடன் சேர்ந்து அவன் உங்களைச்
சந்திக்க வேண்டுமென மிகவும் ஊக்கமூட்டி
னேன். அவன் இப்போது உங்களிடம் வருவ
தில்லை என உறுதியாகக் கூறினான். அவ
னுக்கு வாய்ப்பு கிடைக்கும்போது அவன்
உங்களிடம் வருவான்.

## பவுல் கடிதத்தை முடிக்கிறார்

13கவனமாக இருங்கள். விசுவாசத்தில் வலி
வுறுங்கள். தைரியம் கொள்ளுங்கள். வன்மை
யுடன் இருங்கள். 14அன்பினால் ஒவ்வொன்
றையும் செய்யுங்கள்.

15அகாயாவில் ஸ்தேவானும் அவனது
குடும்பத்தாரும், முதன் முதலில் விசுவாசம்
கொண்டவர்கள் என்பதை அறிவீர்கள். அவர்
கள் தங்களைத் தேவனுடைய மக்களுக்குச்
செய்யும் சேவைக்காக ஒப்புவித்துள்ளார்கள்.
சகோதர சகோதரிகளே!

16இத்தகையோரின் தலைமையை ஒத்துக்
கொள்ளும்படியும் அவர்களோடு சேவை செய்
கிற ஒவ்வொருவரையும் ஒப்புக்கொள்ளும்படி
யும் நான் உங்களிடம் கேட்டுக்கொள்கிறேன்.

17ஸ்தேவான், பொர்த்துனாத்து, அகாயுக்கு
ஆகியோர் வந்ததை அறிந்து சந்தோஷப்பட்
டேன். நீங்கள் இங்கு இல்லை. ஆனால் அவர்
கள் உங்கள் இடத்தை நிரப்பியுள்ளார்கள்.
18எனது ஆவிக்கும் உங்கள் ஆவிக்கும் அவர்
கள் ஓய்வளித்துள்ளார்கள். இத்தகைய மனித
ரின் மதிப்பை நீங்கள் அடையாளம் கண்டு
கொள்ளவேண்டும்.

19ஆசியாவின் சபையினர் உங்களை வாழ்
த்துகிறார்கள். ஆக்கில்லாவும், பிரிஸ்கில்லா
ளும் கர்த்தருக்குள் உங்களை வாழ்த்துகிறார்
கள். அவர்களின் வீட்டில் சந்திக்கிற சபையும்
உங்களை வாழ்த்துகிறது. 20இங்குள்ள எல்லா
சகோதர சகோதரிகளும் உங்களுக்கு வாழ்த்
துக்களைத் தெரிவிக்கிறார்கள். நீங்கள் சந்திக்
கையில் பரிசுத்த முத்தத்தின் மூலம் ஒருவரை
யொருவர் வாழ்த்திக்கொள்ளுங்கள்.

21பவுல் ஆகிய நான் இந்த வாழ்த்துதலை
என் சொந்தக் கையினால் எழுதுகிறேன்.

22கர்த்தரை நேசிக்காத எவனொருவனும்
தேவனிடமிருந்து எந்நாளும் பிரிந்தவனாக
முற்றிலும் அழிந்துபோனவனாக இருப்பா
னாக. கர்த்தரே, வாரும்

23கர்த்தராகிய இயேசுவின் கிருபை உங்க
ளோடு இருப்பதாக!

24கிறிஸ்து இயேசுவில் என் அன்பு உங்கள்
அனைவரோடும்கூட இருப்பதாக!

# கொரிந்தியருக்கு எழுதிய இரண்டாம் கடிதம்

1 இயேசு கிறிஸ்துவின் அப்போஸ்தலனாகிய
பவுல் எழுதுவது, நான் அப்போஸ்தலன்
ஆனேன். ஏனென்றால் நான் அவ்விதம் ஆவ
தையே தேவன் விரும்பினார். கிறிஸ்துவில்
நமது சகோதரனாகிய தீமோத்தேயுவிடமிருந்
தும்.

கொரிந்து நகரின் தேவனுடைய சபைக்கும்
அகாயா நாடெங்கும் உள்ள எல்லா பரிசுத்த
வான்களுக்கும் எழுதுகிறதாவது,

2நம்முடைய பிதாவாகிய தேவனாலும்,
கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினாலும் உங்க
ளுக்குக் கிருபையும் சமாதானமும் உண்டாவ
தாக.

### பவுல் தேவனுக்கு நன்றி கூறுதல்

3நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின்
பிதாவாகிய தேவனை வாழ்த்துங்கள். தேவ
னே இரக்கம் நிறைந்த பிதா. எல்லா விதமான
ஆறுதல்களுக்கும் உறைவிடம் அவர்தான்.
4நாம் துன்பத்தில் இருக்கும் ஒவ்வொரு முறை
யும் அவர் ஆறுதல் வழங்குகிறார். இது எந்த
வகையிலாவது மற்றவர்கள் துன்பத்தில் இருக்
கும்போது நாம் ஆறுதல் வழங்கத் துணையா
யிருக்கும். நம்மைத் தேவன் ஆறுதல்படுத்து
வதைப் போலவே நாம் அவர்களையும் ஆறு
தல் படுத்தவேண்டும். 5கிறிஸ்துவின் அநேக
துன்பங்களில் நாம் பங்கு கொண்டால் கிறிஸ்
துவிடமிருந்து நமக்கு மிகுந்த ஆறுதலும்
கிடைக்கும். 6நாங்கள் தொல்லைக்குட்பட்டால்
அது உங்களின் இரட்சிப்புக்காகவும் ஆறுத
லுக்காகவும்தான். நாங்கள் ஆறுதல் பெற்றால்
அது உங்களின் ஆறுதலுக்காகத்தான். எங்க
ளுக்கு நேரும் தொல்லைகள் போல உங்க
ளுக்கு நேரும் தொல்லைகளை நீங்கள் பொறு
மையுடன் தாங்கிக்கொள்ள இது உதவும்.
7உங்களுக்கான எங்கள் நம்பிக்கை பலமா
னது. எங்கள் துன்பங்களில் நீங்களும் பங்கு
கொள்வீர்கள் என்பதை அறிவோம். எனவே,
எங்கள் ஆறுதலிலும் உங்களுக்குப் பங்கு
உண்டு என்பதை நாங்கள் அறிவோம்.

8சகோதர சகோதரிகளே, ஆசியா நாட்டில்
நாங்கள் பட்ட துன்பங்களைப் பற்றி நீங்களும்
தெரிந்து கொள்ளவேண்டும் என விரும்புகி
றோம். அங்கே எங்களுக்குப் பெரும் பாரங்
கள் இருந்தன. அந்த பாரங்கள் எங்கள் பலத்
தைவிட பெரிது. வாழ்க்கைப் பற்றிய நம்பிக்
கையையே நாங்கள் இழந்து விட்டோம்.
9உண்மையாகவே நாங்கள் இறந்துபோவோம்
என மனதிற்குள் எண்ணினோம். நம்மீது நம்
பிக்கை வைக்காமல் தேவன்மீது நம்பிக்கை
வைப்பதை நாம் உணரும்பொருட்டு இது
இவ்வகையில் நடந்தது. அவர் மரணத்திலி
ருந்து மக்களை எழுப்பியவர். 10இது போன்ற
மரண ஆபத்துகளில் இருந்து தேவன்
எங்களைக் காப்பாற்றினார். அவர் தொடர்ந்து
நம்மைக் காப்பாற்றுவார். நாங்கள் அவர் மீது
தான் நம்பிக்கையை வைத்திருக்கிறோம்.
அவரே தொடர்ந்து நம்மைக் காப்பாற்றுவார்.
11நீங்கள் உங்களது பிரார்த்தனைகள் மூலம்
எங்களுக்கு உதவலாம். ஏராளமான மக்கள்
எங்களுக்காக நன்றி சொல்வர். அவர்களின்
பிரார்த்தனைகளால் தேவன் எங்களை ஆசீர்
வதிப்பார்.

### பவுலின் திட்டங்களில் மாற்றம்

12இதற்காக நாங்கள் பெருமைப்படுகிறோம்.
நான் இதனை மனப்பூர்வமாகக் கூறுவேன்.
இது உண்மையானது. நாங்கள் இந்த உலகத்
தில் செய்த அனைத்தையும் தேவன் தந்த
நேர்மையும் சுத்தமும் கொண்ட இதயத்தோடு
செய்தோம். நாங்கள் உங்களிடம் செய்த
காரியங்களில் இது மேலும் உண்மையானது.
இவற்றை நாங்கள் தேவனுடைய கிருபையால்
செய்தோம் உலகிலுள்ள ஞானத்தால் செய்ய
வில்லை. 13உங்களால் வாசித்து புரிந்துகொள்
ளத் தக்கவற்றை மட்டுமே உங்களுக்கு எழுதுகி
றோம். 14எங்களைப்பற்றி ஏற்கனவே சில காரி
யங்களை நீங்கள் புரிந்து கொண்டிருப்பதைப்
போல இதையும் நீங்கள் புரிந்துகொள்ள முடி
யும் என்று நம்புகிறோம். எங்களுக்காகப்
பெருமை அடைய முடியும் என்பதைப் புரிந்து
கொள்வீர்கள் என்று நம்புகிறேன். இது கர்த்த
ராகிய இயேசு கிறிஸ்து மீண்டும் வரும்போது
உங்களுக்காக நாங்கள் பெருமைப்படுவதைப்
போன்றிருக்கும்.

15நான் இவற்றைப் பற்றியெல்லாம் மிகவும்
உறுதியாக இருந்தேன். அதனால்தான் முதலில்
உங்களைச் சந்திக்கத் திட்டமிட்டேன். பிறகு
நீங்கள் இரண்டுமுறை ஆசீர்வதிக்கப்பட்டவர்க
ளாவீர்கள். 16மக்கதோனியாவுக்குப் போகிற
வழியில் உங்களைச் சந்திக்கத் திட்டமிட்டேன்.
பிறகு திரும்பும் வழியில் மீண்டும் உங்களைச்
சந்திக்கத் திட்டமிட்டேன். யூதேயாவுக்குப்
போகும்போது உங்கள் உதவியைப் பெற

விரும்பினேன். 17நான் சிந்தித்துப் பார்க்காமலேயே இத்திட்டங்களை வகுத்தேன் என்று நினைக்கிறீர்களா? அல்லது நான் ''ஆமாம், ஆமாம்'' என்றும் அதே நேரத்தில் "இல்லை, இல்லை" என்றும் சொல்லும்படியான இந்த உலகத்தின் திட்டங்களைப் போன்றே இத்திட்டங்களும் இருக்கின்றன என்று நினைக்கிறீர்களா?

18ஆனால் தேவனை நம்ப முடியுமானால், பிறகு நாங்கள் சொல்பவை ஒரே நேரத்தில் "ஆமாம் என்றும்" "இல்லை என்றும்" இருக்காது என நம்பமுடியும். 19என்னாலும், சில்வானுவினாலும், தீமோத்தேயுவினாலும் போதிக்கப்பட்ட தேவனுடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்து வெறும் "ஆமாம்" மற்றும் "இல்லை" போல அல்லர். கிறிஸ்துவுக்குள் அது எல்லா காலத்திலும் "ஆமாம்" மட்டும் தான். 20தேவனுடைய வாக்குறுதிகள் எல்லாம் இயேசு கிறிஸ்துவுக்குள் "ஆம்" என்றுள்ளது. ஆகவேதான் தேவனுடைய மகிமையை கிறிஸ்துவின் வழியாகச் சொல்லும்போது "ஆமென்"* என்கிறோம். 21நீங்களும் நாங்களும் கிறிஸ்துவுக்கு உரியவர்களே என்பதைத் தேவனே உறுதியாக்கினார். நமக்கு ஞானஸ்நானம் வழங்கிய வரும் அவரே. 22நாம் அவரைச் சார்ந்தவர் என்பதைக் காட்ட அவரே முத்திரையிட்டார். அவர் தம்முடைய ஆவியை நம் இதயத்தில் நிரப்பினார். அது அவர் தமது வாக்குறுதிகளை நிறைவேற்றுவார் என்பதற்கான உறுதிப்பத்திரமும் நிருபணமுமாயிற்று.

23நான் சொல்வதெல்லாம் உண்மை. இதற்குத் தேவனே சாட்சி. நான் கொரிந்து நகருக்கு வராததற்குக் காரணம் உங்களைத் தண்டிக்கக் கூடாது என்பதும் உங்களைப் புண்படுத்தி விடக்கூடாது என்பதும்தான். 24நாங்கள் உங்கள் விசுவாசத்தைக் கட்டுப்படுத்துகிறோம் என்று நான் எண்ணவில்லை. நீங்கள் உங்கள் விசுவாசத்தில் பலமாய் இருக்கிறீர்கள். உங்கள் மகிழ்ச்சிக்காக உங்களோடு பணிபுரிபவர்களாக இருக்கிறோம்.

2 எனது அடுத்த சந்திப்பு உங்ளைத் துயரப்படுத்தக்கூடாது என்று முடிவு செய்துவிட்டேன். 2நான் உங்களைத் துயரப்படுத்தினால், பின்னர் யார் என்னை மகிழ்ச்சிப்படுத்துவர்?. நான் துயரப்படுத்திய நீங்கள்தானே என்னை மகிழ்ச்சிப்படுத்த முடியும்? 3இந்தக் காரணத்துக்காகத் தான் உங்களுக்கு கடிதம் எழுதினேன். அதனால் உங்களைச் சந்திக்கும் போது, என்னை மகிழ்ச்சிப்படுத்தப்போகும் உங்களைத் துயரப்படுத்தமாட்டேன். எனது மகிழ்ச்சியை நீங்கள் அனைவரும் பகிர்ந்து கொள்வீர்கள் என்று உறுதியாக எண்ணுகிறேன்.

4நான் இதற்கு முன்பு உங்களுக்கு எழுதும்போது மனதில் தொல்லைகளையும், துயரங்களையும் கொண்டிருந்தேன். நான் என் கண்ணீராலேயே எழுதினேன். உங்களைத் துயரப்படுத்த வேண்டுமென்று அதை எழுதவில்லை. உங்கள் மீதுள்ள என் அளவற்ற அன்பை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டுமென அவ்வாறு எழுதினேன்.

### தவறு செய்தவனை மன்னியுங்கள்

5உங்கள் கூட்டத்திலுள்ள ஒருவனே துயரத்துக்குக் காரணமாக இருந்தான். எனக்கு மட்டுமல்ல, உங்கள் அனைவரின் துயரத்துக்கும் அவனே காரணமாக இருந்தான். அதாவது, ஏதாவது ஒரு வழியில் (நான் மிகைப்படுத்த விரும்பவில்லை) எல்லாருக்கும் துயரமுண்டாக அவன் காரணமாக இருந்தான். 6உங்களில் பலர் அவனுக்குத் தந்த தண்டனையே போதுமானது. 7ஆனால் இப்பொழுது அவனை மன்னித்து ஆதரவு அளிக்க வேண்டும். அது அவனை அதிக துயரத்தில் ஆழ்ந்து போகாதபடி காக்கும். 8நீங்கள் அவனை நேசிக்கிறீர்கள் என்பதை அவனுக்குக் காட்டவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதனால்தான் நான் உங்களுக்கு எழுதினேன். 9நீங்கள் எல்லாவற்றிலும் பணிவுடன் இருக்கிறீர்களா என்று சோதித்து அறியவே எழுதினேன். 10நீங்கள் யாரையாவது மன்னித்தால் அவர்களை நானும் மன்னித்து விடுகிறேன். நான் மன்னிப்பவை அனைத்தும் (மன்னிக்கப்பட ஏதேனும் இருக்கும் பட்சத்தில்) உங்கள் பொருட்டே ஆகும். கிறிஸ்து எங்களோடு இருக்கிறார். 11சாத்தான் என்னிடமிருந்த எதையும் வெல்ல முடியாதவகையில் இதைச் செய்தேன். சாத்தானின் சதிதிட்டங்களையும் நாம் நன்றாக அறிவோம்.

### துரோவாவில் பவுலின் பணி

12கிறிஸ்துவின் நற்செய்தியைப் பரப்புவதற்காக நான் துரோவாவிற்குப் போனேன். கர்த்தர் அங்கு எனக்கு நல்ல வாய்ப்பினைத் தந்தார். 13அங்கே எனது சகோதரன் தீத்துவைப் பார்க்காததால் நான் அமைதியற்று இருந்தேன். எனவே நான் அங்குள்ளவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு மக்கதோனியாவிற்குப் போனேன்.

### கிறிஸ்துவின் மூலம் வெற்றி

14தேவனுக்கு நன்றி. தேவன் எப்பொழுதும் எங்களை கிறிஸ்துவின் மூலம் வெற்றி பெறும்படி வழி நடத்துகிறார். இனிய மணமுள்ள வாசனைப் பொருளைப் போன்று எல்லா இடங்களிலும் தேவன் தனது அறிவைப் பரப்ப நம்மைப் பயன்படுத்துகிறார். 15இரட்சிக்கப்படுகிறவர்களுக்கிடையிலும் கெட்டுப் போவோரிடையே நாங்கள் கிறிஸ்துவின் நறுமணமாக இருக்கிறோம். இதுவே நாங்கள் தேவனுக்கு தரும் காணிக்கை. 16கெட்டுப்போவோரிடையே இறப்புக்கு ஏதுவான மரணத்தின் வாசனையாக இருக்கிறோம். இரட்சிக்கப்படுகிறவர்க

---

**ஆமென்** ஆமென் என்று சொன்னால் ஏற்றுக் கொள்ளுகிறேன் என்று பொருள்.

ளுக்குள்ளே வாழ்க்கைக்கு ஏதுவான ஜீவ
வாசனையாக இருக்கிறோம். இவைகளை
செயல்படுத்தத் தகுதியானவன் யார்? 17மற்ற
வர்களைப் போன்று, நாங்கள் தேவனுடைய
வார்த் தையை இலாபத்துக்காக விற்பதில்லை.
ஆனால் தேவனுக்கு முன்னால் கிறிஸ்துவுக்
குள் உண்மையையே பேசுகிறோம். தேவனால்
அனுப்பப்பட்டவர்களைப் போல் நாங்கள்
பேசுகிறோம்.

## புதிய உடன்படிக்கை

3 நாங்கள் மீண்டும் எங்களைப் பற்றியே
பெருமையாகப் பேசிக்கொள்ள ஆரம்
பித்து விட்டோமா? மற்றவர்களைப் போன்று
எனக்கோ அல்லது என்னிடமிருந்தோ அறி
முக நிருபங்கள் தேவையா? 2எங்கள் நிருபம்
நீங்கள் தான். எங்கள் இதயங்களில் நீங்கள்
எழுதப்பட்டிருக்கிறீர்கள். அனைவராலும்
அறியப்படுகிறவர்களாகவும், வாசிக்கப்படுகி
றவர்களாகவும் இருக்கிறீர்கள். 3கிறிஸ்துவிடமி
ருந்து எங்கள் மூலம் அனுப்பிய நிருபம் நீங்
கள்தான் என்று காட்டிவிட்டீர்கள். இந்நிருபம்
மையால் எழுதப்படவில்லை. ஜீவனுள்ள
தேவனுடைய ஆவியால் எழுதப்பட்டுள்ளது.
இது கற்பலகையின்* மீது எழுதப்படவில்லை.
மனித இதயங்களின் மீது எழுதப்பட்டுள்ளது.
4கிறிஸ்துவின் மூலம் தேவனுக்கு முன்னால்
உறுதியாக நம்புவதால் எங்களால் இவற்றைச்
சொல்ல முடிகிறது. 5எங்களால் நல்லதாக எத
னையும் செய்ய முடியும் என்று நாங்கள்
கருதுவதாக அர்த்தம் இல்லை. செய்யவேண்
டிய எல்லாக் காரியங்களுக்குமான வல்ல
மையை எங்களுக்குத் தருபவர் தேவனே
ஆவார்.
6புது உடன்படிக்கை ஊழியராக இருக்
கும்படி அவரே எங்களைத் தகுதியுள்ளவர்
ஆக்கினார். இந்த புதிய ஒப்பந்தம் வெறும்
எழுத்துப் பூர்வமான ஒப்பந்தமாய் இராமல்
ஆவிக்குரியதாக இருக்கிறது. எழுத்துப் பூர்வ
மான சட்டம் மரணத்தைக் கொண்டு வருகிறது.
ஆவியோ வாழ்வைத் தருகிறது.

## புதிய உடன்படிக்கையும் மகிமையும்

7மரணத்துக்கு வழி வகுக்கும் சேவைக்
குரிய பிரமாணங்கள் கற்களில் எழுதப்பட்டன.
அது தேவனுடைய மகிமையோடு வந்தது.
அதனால் மோசேயின் முகம் ஒளி பெற்றது.
அந்த ஒளி இஸ்ரவேல் மக்களைப் பார்க்க
இயலாதபடி செய்தது. அந்த மகிமை பிறகு
மறைந்துபோனது. 8எனவே ஆவிக்குரிய
சேவை நிச்சயமாக மிகுந்த மகிமையுடைய
தாக இருக்கும். 9மக்களை நியாயம் தீர்க்கிற
சேவைகள் மகிமையுடையதாக இருக்கும்
போது தேவனுக்கும் மனிதனுக்குமிடையே
சீரான உறவுக்கு உதவும் சேவைகளும் மிகுந்த
மகிமை உடையதாக இருக்கும். 10பழைய
சேவைகளும் மகிமைக்குரியதே. எனினும்
புதிய சேவைகளால் வரும் மகிமையோடு
ஒப்பிடும்போது அதன் பெருமை அழிந்துபோ
கிறது. 11மறைந்து போகிறவை மகிமையுடைய
தாகக் கருதப்படுமானால் என்றென்றும் நிலை
த்து இருப்பவை மிகுந்த மகிமையுடையதே.
12எங்களுக்கு இந்த நம்பிக்கை இருப்பதால்
நாங்கள் தைரியமாக இருக்கிறோம். 13நாங்கள்
மோசேயைப் போன்றில்லை. அவர் தன்
முகத்தை முக்காடிட்டு மூடி மறைத்துக் கொண்
டார். அவரது முகத்தை இஸ்ரவேல் மக்களால்
பார்க்க முடியவில்லை. அந்த வெளிச்சமும்
மறைந்து போயிற்று. அவர்கள் அதன் மறை
வைப் பார்ப்பதை மோசே விரும்பவில்லை.
14ஆனால் அவர்கள் மனமும் அடைத் திருந்தது.
அவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை.
இப்பொழுதும் கூட அந்த முக்காடு அவர்கள்
பழைய ஏற்பாட்டைப் புரிந்து கொள்ள முடியா
தபடி செய்கின்றது. அந்த முக்காடு கிறிஸ்து
வால் தான் விலக்கப்படுகிறது. 15ஆனாலும்
கூட இன்று, மக்கள் மோசேயின் சட்டத்தை
வாசிக்கும்போது அவர்களின் மனம் மூடிக்
கொண்டிருக்கிறது. 16ஆனால் எவனொருவன்
மாற்றம் பெற்று, கர்த்தரைப் பின்பற்றுகி
றானோ அவனுக்கு அந்த முக்காடு விலக்கப்
படுகிறது. 17கர்த்தரே ஆவியாய் இருக்கிறார்.
எங்கெல்லாம் அந்த ஆவியானவர் உள்ளாரோ
அங்கெல்லாம் விடுதலை உண்டு. 18நமது முகங்
கள் மூடப்பட்டில்லை. நாமெல்லாரும் தேவனு
டைய மகிமையைக் காட்டுகிறோம். நாம் அவ
ரைப்போன்று மாற்றப்பட்டுக்கொண்டிருக்கி
றோம். நம்முள் எழும் இம்மாற்றம் மேலும்
மேலும் மகிமையைத் தருகிறது. இம்மகிமை
ஆவியாக இருக்கிற கர்த்தரிடமிருந்து வருகி
றது.

## ஆன்மாவுக்குரிய பொக்கிஷம்

4 தேவன் தன் கிருபையால் இந்தப் பணி
யை எங்களுக்குக் கொடுத்தார். ஆகை
யால் இதனை விட்டுவிடமாட்டோம். 2ஆனால்
இரகசியமானதும் வெட்கப்படத்தக்கதுமான
வழிகளில் இருந்து விலகி இருக்கிறோம். நாங்
கள் தந்திரங்களைப் பயன் படுத்துவதில்லை;
தேவனுடைய போதனைகளையும் இழிவாக்
குவதில்லை. நாங்கள் உண்மையைத் தெளி
வாகப் போதிக்கிறோம். நாங்கள் யார் என்
பதை இப்படித்தான் மக்களுக்குப் புலப்படுத்து
கிறோம். இது, நாம் தேவனுக்கு முன் எத்த
கைய மக்கள் என்பதையும் அவர்கள் மனதிற்
குக் காட்டுகிறது. 3நாம் பரப்புகிற நற்செய்தி
மறை பொருளாக இருக்கலாம். ஆனால் அது
கெட்டுப் போகிறவர்கட்கே மறைபொருளாய்
இருக்கும். 4இந்த உலகத்தை ஆள்பவனாகிய*
சாத்தான் விசுவாசம் இல்லாதவர்களின்

**கற்பலகை** தேவன் மோசேக்கு கொடுத்தச் சட்டம். அது கற்பலகையில் எழுதப்பட்டிருந்தது. யாத்தி 24:12; 25:16.

**ஆள்பவன்** கட்டுப்பாட்டில் வைதிருப்பவன்.

*மனதைக் குருடாக்கினான். அவர்களால் கிறி
ஸ்துவின் நற்செய்தியின் ஒளியைப் பார்க்க
இயலாது. கிறிஸ்துவின் மகிமைக்குரிய நற்
செய்தியையும் அறியார்கள். கிறிஸ்து மட்டுமே
தேவன் போன்று இருப்பவர். 5நாங்கள் எங்க
ளைப்பற்றி பிரச்சாரம் செய்வதில்லை.
ஆனால், இயேசு கிறிஸ்துவே நமது கர்த்தர்
என்றும் நாங்கள் இயேசுவுக்காக உங்களு
டைய ஊழியக்காரர்கள் என்றும் பிரச்சாரம்
செய்கிறோம். 6“இருளிலிருந்து வெளிச்சம்
பிரகாசிக்கும்” என்று தேவன் ஒருமுறை
சொன்னார். எங்கள் இதயங்களில் வெளிச்
சத்தை ஏற்படுத்திய தேவனும் இவரே ஆவார்.
தேவனுடைய மகிமையை கிறிஸ்துவின் முகத்
தில் தெரியச் செய்வதன் மூலம் அவர் எங்க
ளுக்கு ஒளியைத் தந்தார்.*

*7இப்பொக்கிஷத்தை நாம் தேவனிடமிருந்து
பெற்றுள்ளோம். ஆனால் நாங்களோ பொக்கி
ஷத்தைத் தாங்கியுள்ள மண்ஜாடிகளைப்
போன்றே இருக்கிறோம். இப்பேராற்றலானது
எங்களிடமிருந்து அல்ல, தேவனிடம் இருந்தே
வருகிறது என்பதை இது காட்டும். 8எங்க
ளைச் சுற்றிலும் தொல்லைகள் உள்ளன.
ஆனால் அவற்றால் நாங்கள் தோல்வி அடைய
வில்லை. அவ்வப்போது செய்வது தெரியா
மல் திகைக்கிறோம். ஆனால் முயற்சி செய்
வதை ஒருபோதும் கைவிடவில்லை. 9நாங்கள்
தண்டிக்கப்படுகிறோம். ஆனால் தேவன் எங்க
ளைக் கைவிடவில்லை. சிலநேரங்களில் நாங்
கள் தூக்கியெறியப்படுகிறோம். ஆனால் அழி
ந்து போகவில்லை. 10எங்கள் சொந்த சரீரங்க
ளில் இயேசுவின் மரணத்தைச் சுமந்து திரிகி
றோம். அதனால் எங்கள் சரீரங்களில் இயேசு
வின் வாழ்வும் புலப்படவேண்டும் என்பதற்
காகவே மரணத்தைச் சுமந்து திரிகிறோம்.
11நாங்கள் உயிரோடு இருக்கிறோம் என்றா
லும் இயேசுவுக்காக எப்போதும் மரண ஆபத்
தில் உள்ளோம். அழியும் நம் சரீரங்களில்
இயேசுவின் வாழ்வைக் காணமுடியும் என்ப
தற்காகவே இது எங்களுக்கு நேர்ந்திருக்கிறது.
12ஆகையால் மரணம் எங்களுக்குள் பணிபுரி
கிறது; வாழ்வு உங்களுக்குள் பணிபுரிகிறது.*

*13“நான் விசுவாசித்தேன், அதனால் பேசுகி
றேன்”* என்று எழுதப்பட்டுள்ளது. எங்கள்
விசுவாசமும் அத்தகையதுதான். நாங்கள்
விசுவாசிக்கிறோம், அதனால் பேசுகிறோம்.
14தேவன் இயேசுவை மரணத்திலிருந்து எழுப்
பினார். அதோடு இயேசுவுடன் தேவன் எங்க
ளையும் எழுப்புவார் என்று அறிவோம்.
தேவன் உங்களோடு எங்களையும் ஒன்று
சேர்ப்பார். நாம் அவருக்கு முன் நிற்போம்.
15இவை எல்லாம் உங்களுக்காகத்தான். ஆகை
யால் தேவனுடைய கிருபை, மென்மேலும்
மிகுதியான மக்களுக்கு வழங்கப்படுகிறது.
இது, மேலும் தேவனுடைய மகிமைக்காக
அதிக அளவில் நன்றிகளைக் குவிக்கும்.*

### விசுவாசத்தால் வாழ்தல்

*16அதனால் நாங்கள் ஒருபோதும் பலவீனர்க
ளாக ஆவதில்லை. எங்களது சரீரம் வேண்டு
மானால் முதுமையாலும் பலவீனத்தாலும்
சோர்வடையலாம். ஆனால் எங்களுக்குள்
இருக்கிற ஆவி ஒவ்வொரு நாளும் புதிதாக்கப்
படுகிறது. 17தற்சமயத்திற்கு சிற்சில தொந்தரவு
கள் எங்களுக்கு உண்டு. எனினும் அவை,
முடிவற்ற மகிமையைப் பெறவே எங்களுக்கு
உதவும். அந்த முடிவற்ற மகிமையானது இந்தத்
தொல்லைகளை விட மிகப் பெரியது. 18ஆகை
யால் நம்மால் காண முடிந்தவற்றைப் பற்றி
யல்ல, காண முடியாதவற்றைப் பற்றியே நாங்
கள் சிந்திக்கிறோம். காணப்படுகிறவை தற்கா
லிகமானவை. காணப்படாதவையோ நிரந்தர
மானவை.*

*5 பூமியில் வாழ்வதற்குக் கிடைத்த கூடாரம்
போன்ற நம் சரீரம் அழியக் கூடியது என்
பதை நாம் அறிவோம். ஆனால் அது நிக
ழும்போது தேவன் நாம் வாழ்வதற்கென்று
ஓர் இடம் வைத்துள்ளார். அது மனிதர்களால்
அமைக்கப்பட்ட இடமல்ல. அது பரலோகத்தில்
உள்ள வீடு. அது என்றென்றும் நிலைத்திருப்
பது. 2ஆனால் நாம் இப்பொழுது இந்த சரீரத்
தால் சோர்வுற்றிருக்கிறோம். பரலோக வீட்
டைத் தேவன் கொடுக்கவேண்டுமென்று கேட்
டுக் கொள்கிறோம். 3அது நம்மை ஆடையுள்ள
வர்களைப் போலாக்கும். நாம் நிர்வாணமான
வர்களைப்போல இருக்கமாட்டோம். 4நம் கூடா
ரம் போன்ற இந்த சரீரத்தில் வாழும் வரை
பாரமுள்ளவர்களாய் துன்பப்படுகிறோம். இந்த
சரீரத்தை விட்டுவிட வேண்டுமென்று நான்
கூறவில்லை. ஆனால் நாம் பரலோக வீட்டால்
போர்த்தப்பட வேண்டும் என்றே விரும்பு
கிறேன். பிறகு அழிவடையும் இந்த சரீரம்
உயிருடன் நிறைந்திருக்கும். 5இதற்காகத்தான்
தேவன் நம்மை ஆயத்தம் செய்திருக்கிறார்.
ஆவி என்னும் அச்சாரத்தைத் தந்து நமக்கு
புதிய வாழ்க்கையை உறுதிப்படுத்துகிறார்.*

*6எனவே நாம் எப்பொழுதும் தைரியத்
தோடு இருக்கிறோம். நாம் இந்த சரீரத்தில்
இருக்கும் வரை கர்த்தரை விட்டு விலகி
இருக்கிறோம் என்பதைத் தெரிந்து கொள்ள
வேண்டும். 7நாம் எதை நம்புகிறோமோ அதன்
படி வாழ்கிறோம். நாம் எதை பார்க்கிறோமோ
அதன்படி வாழவில்லை. 8எனவே தான்
நமக்கு தன்னம்பிக்கை வேண்டும் என்கிறேன்.
நாம் உண்மையாகவே இந்த சரீரத்தை விட்டு
விலகி பரலோகத்தில் கர்த்தரோடு இருக்கவே
விரும்புகிறோம். 9தேவனைத் திருப்திப்படுத்
துவதே வாழ்க்கையில் நமது ஒரே குறிக்கோள்.
இங்கே இந்த சரீரத்தில் வாழ்ந்தாலும் அங்கே
கர்த்தரோடு இருந்தாலும் தேவனைத் திருப்
திப்படுத்தவே விரும்புகிறோம்.*

*10நியாயந்தீர்க்கப்படுவதற்காக நாம் அனை
வரும் கிறிஸ்துவின் முன்பு நிற்க வேண்டும்.
ஒவ்வொருவனும் அவனவனுக்குரியதைப்
பெறுவான். உலகில் சரீரத்துடன் பூமியில்*

---

**நான் ... பேசுகிறேன்** *சங்கீதம் 116:10.*

வசிக்கும்போது அவனவன் செய்த நன்மை
அல்லது தீமைகளுக்குத் தகுந்தபடியே தீர்ப்ப
ளிக்கப்படுவான்.

## தூண்டிவிடும் தேவ அன்பு

11கர்த்தருக்குப் பயப்படுவது என்றால்
என்ன பொருள் என நாம் அறிவோம். எனவே
மக்கள் உண்மையை ஏற்றுக்கொள்ளும்படி
உதவ நாங்கள் முயற்சி செய்கிறோம். உண்மை
யில் நாங்கள் யார் என்பது தேவனுக்குத்
தெரியும். எங்களைப் பற்றி உங்கள் இதயங்
களுக்கும் தெரியும் என்று நம்புகிறேன். 12நாங்
கள் மீண்டும் உங்களுக்கு எங்களை நிரூ
பித்துக் கொள்ள முயற்சி செய்யவில்லை.
ஆனால் எங்களைப் பற்றி நாங்கள் சொல்லிக்
கொண்டிருக்கிறோம். எங்களைக் குறித்து நீங்
கள் பெருமைப்பட்டுக் கொள்வதற்கான கார
ணங்களையும் சொல்லியிருக்கிறோம். இப்
போது வெளிப்படையாய்த் தெரியும் சில
காரணங்களுக்காகத் தம்மைத்தாமே பாராட்
டிக்கொள்ளும் சிலருக்குத் தெரிவிக்க உங்க
ளிடம் ஒரு பதில் உள்ளது. ஒரு மனிதனின்
இதயத்துக்குள் என்ன இருக்கிறது என்பதைப்
பற்றிக் கவலை இல்லாதவர்கள் அவர்கள்.
13நாங்கள் பைத்தியம் என்றால் அதுவும் தேவ
னுக்காகத்தான். நாங்கள் தெளிந்த, சரியான
புத்தி உள்ளவர்கள் என்றால் அதுவும் உங்க
ளுக்காகத்தான். 14கிறிஸ்துவின் அன்பு எங்க
ளைத் தூண்டி விடுகிறது. ஏனென்றால் ஒவ்
வொருவருக்குமாக அவர் இறந்தார் என்பது,
அனைவருமே இறந்துவிட்டதையே குறிக்கும்
என்று நமக்குத் தெரியும். 15கிறிஸ்து மக்கள்
அனைவருக்காகவும் இறந்து போனதால்,
உயிரோடு இருக்கிறவர்கள் இனிமேல் தங்க
ளுக்கென்று இராமல், தங்களுக்காக மரித்து
எழுந்த கிறிஸ்துவுக்காக உயிர் வாழவேண்
டும்.

16எனவே, இந்த நேரத்திலிருந்து, நாங்கள்
ஒருவரையும் மற்ற உலக மக்களைப் போன்று
சரீரத்தில் அறியமாட்டோம். முன்பு நாங்களும்
மற்றவர்களைப் போன்றே கிறிஸ்துவை சரீரத்
தில் அறிந்திருந்தோம். இனிமேல் அவ்வாறு
எண்ணவில்லை. 17எவராவது கிறிஸ்துவுக்
குள் இருந்தால் அவன் புதிதாகப் படைக்கப்
பட்டவனாகிறான். பழையவை மறைந்தன.
அனைத்தும் புதியவை ஆயின. 18இவை
அனைத்தும் தேவனிடமிருந்து வந்தன. கிறிஸ்
துவின் மூலம் தேவன் அவருக்கும் நமக்கும்
இடையில் சமாதானத்தை உருவாக்கினார்.
மக்களை சமாதானத்திற்குள் கொண்டு வந்து
சேர்க்கும் பணியை எங்களுக்குக் கொடுத்தி
ருக்கிறார். 19தேவன் கிறிஸ்துவுக்குள் இருந்
தார். அவருக்கும் உலகத்துக்கும் இடையில்
சமாதானத்தை உருவாக்கினார் என்று சொல்
கிறேன். கிறிஸ்துவுக்குள், தம் பாவங்கள்
குறித்து குற்ற உணர்ச்சி கொண்ட மக்களைத்
தேவன் குற்றவாளிகளாக நிறுத்துவதில்லை.
இச்சமாதானச் செய்தியை மக்களுக்குத் தெரி
விக்கும் பொருட்டு எங்களுக்குக் கொடுத்தார்.
20எனவே, கிறிஸ்துவுக்காகப் பேச நாங்கள்
அனுப்பப்பட்டிருக்கிறோம். எங்கள் மூலம் தே
வன் உங்களை அழைக்கிறார். நாங்கள் கிறிஸ்
துவுக்காகப் பேசுகிறோம். நீங்கள் அனைவரும்
தேவனோடு சமாதானமாக இருக்க வேண்டுகி
றோம். 21கிறிஸ்துவிடம் பாவம் இல்லை.
ஆனால் தேவன் நமக்காக அவரைப் பாவம்
ஆக்கினார். நாம் கிறிஸ்துவுக்குள் தேவனுக்கு
ஏற்றவர்களாக இருக்கவேண்டும் என்பதற்
காக தேவன் இதைச் செய்தார்.

6 நாங்கள் தேவனோடு சேர்ந்து பணியாற்று
கிறவர்கள். எனவே, தேவனிடமிருந்து நீங்
கள் பெற்ற கிருபையை பயனற்ற வகையில்
வீணடிக்க வேண்டாம் என உங்களைக் கேட்
டுக் கொள்ளுகிறேன்.

2 “நான் சரியான சமயத்தில் உன்னைக்
கேட்டேன். இரட்சிப்புக்கான நாளில்
நான் உதவி செய்தேன்”

*ஏசாயா 49:8*

என்று தேவன் கூறுகிறார். அவர் சொன்ன
“சரியான நேரம்” என்பது இதுதான் என்று
உங்களுக்குக் கூறுகிறேன். “இரட்சிப்புக்கான
நாளும்” இதுதான்.

3எங்களின் பணியில் எவரும் குற்றம் கண்
டுபிடிப்பதை நாங்கள் விரும்பவில்லை. ஆனா
லும் மற்றவர்களுக்குப் பிரச்சனையாய் இருக்
கும் எதையுமே நாங்கள் செய்யவில்லை.
4ஆனால், அனைத்து வழிகளிலும் நாங்கள்
தேவனுடைய ஊழியக்காரர்கள் என்பதைக்
காட்டிவருகிறோம். பல கஷ்டங்களிலும், பிரச்
சனைகளிலும், துன்பங்களிலும் இதனை நாங்
கள் வெளிப்படுத்துகிறோம். 5நாங்கள் அடிக்
கப்பட்டுச் சிறையில் தள்ளப்படுகிறோம். மக்
கள் அதிர்ச்சியடைந்து எங்களுடன் மோதுகி
றார்கள். நாங்கள் கடின வேலைகளைச் செய்கி
றோம். சில நேரங்களில் உணவும், உறக்கமும்
இல்லாமல் இருக்கிறோம். 6எங்கள் அறிவி
னாலும், பொறுமையாலும், இரக்கத்தாலும்,
தூய வாழ்க்கையாலும் நாங்கள் தேவனுடைய
ஊழியர்கள் எனக் காட்டிக் கொள்கிறோம்.
7நாங்கள் இதனைப் பரிசுத்த ஆவியாலும்,
தூய அன்பாலும், உண்மையான பேச்சாலும்,
தேவனுடைய வல்லமையாலும் வெளிப்படுத்
துகிறோம். எங்கள் சரியான வாழ்க்கையைப்
பயன்படுத்தி எல்லாவற்றிலும் இருந்தும் எங்
களைக் காத்துக் கொள்கிறோம். 8சிலர் எங்
களை மதிக்கிறார்கள். மற்றும் சிலர் எங்களை
அவமானப்படுத்துகிறார்கள். சிலர் எங்க
ளைப் பற்றி நல்ல செய்திகளையும் வேறு
சிலர் கெட்ட செய்திகளையும் பரப்புகிறார்கள்.
சிலர் எங்களைப் பொய்யர்கள் என்று குற்றம்
சுமத்துகிறார்கள். ஆனால் நாங்கள் உண்மை
யையே பேசுகிறோம். 9இன்னும் சிலருக்கு
நாங்கள் முக்கியமற்றவர்கள். ஆனால் நாங்கள்
எல்லாருக்கும் நன்கு அறிமுகமானவர்கள்.

நாங்கள் மடிந்து போவதுபோல் இருக்கிறோம்.
ஆனால் தொடர்ந்து வாழ்கிறோம். நாங்கள்
தண்டிக்கப்படுகிறோம். ஆனால் கொல்லப்பட
வில்லை. 10எங்களுக்கு நிறைய சோகம்
உண்டு. ஆனால் நாங்கள் எப்பொழுதும் மகிழ்
ச்சியுடன் இருக்கிறோம். நாங்கள் ஏழைகள்
தான். ஆனால் பலரைச் செல்வராக்குகிறோம்.
எங்களுக்கென்று எதுவுமில்லை. ஆனால்
உண்மையில் எங்களுக்கு எல்லாம் இருக்கி
றது.
11கொரிந்தியர்களாகிய உங்களிடம் நாங்கள்
வெளிப்படையாகப் பேசியிருக்கிறோம். எங்
கள் மனதைத் திறந்து காட்டியிருக்கிறோம்.
12உங்களிடம் நாங்கள் கொண்ட அன்பு எப்
பொழுதும் குறையவில்லை. அதைத் தடுத்த
தும் இல்லை. ஆனால் எங்கள்மீது உங்களிடம்
உள்ள அன்பே தடுக்கப்பட்டிருக்கிறது. 13நீங்
கள் எனது பிள்ளைகள் என்ற முறையில்
தான் நான் பேசுகிறேன். நாங்கள் செய்வது
போலவே நீங்களும் உங்கள் இதயங்களைத்
திறந்து காட்டுவீர்களா?

### கிறிஸ்தவர் அல்லாதவர்களோடு வாழ்வது எப்படி?

14நீங்கள் விசுவாசம் இல்லாத மற்ற மக்க
ளைப் போன்றவர்கள் அல்லர். எனவே நீங்
களாகவே சென்று அவர்களோடு சேராதீர்கள்.
நல்லவையும் கெட்டவையும் சேரக் கூடாது.
வெளிச்சமும் இருட்டும் சேர்ந்திருக்க முடியாது.
15எப்படி கிறிஸ்துவும் சாத்தானும் உடன்பாடு
கொள்ள முடியும்? ஒரு விசுவாசிக்கும், விசு
வாசம் இல்லாதவனுக்கும் பொதுவாக என்ன
இருக்க முடியும்?
16தேவனுடைய ஆலயமானது வெறும்
சிலைகளோடு எவ்வாறு ஒப்பந்தம் செய்ய
முடியும்.? நாம் ஜீவனுள்ள தேவன் வாழும்
ஆலயங்களைப் போன்றுள்ளோம்.

“நான் அவர்களோடு வாழ்வேன்;
நடப்பேன்; நான் அவர்களது தேவனாக
இருப்பேன். அவர்களே எனது மக்களாக
இருப்பார்கள்.’

லேவி. 26:11-12

17 “எனவே அவர்களை விட்டுவிட்டு
வெளியே வாருங்கள். அவர்களிடமி
ருந்து தனியாக உங்களைப் பிரித்துக்
கொள்ளுங்கள். சுத்தமில்லாத எதையும்
தொடவேண்டாம். நான் உங்களை ஏற்
றுக் கொள்வேன்”.

ஏசாயா 52:11

18 “நான் உங்களின் பிதாவாக இருப்பேன்.
நீங்கள் எனது மகன்களாகவும் மகள்க
ளாகவும் இருப்பீர்கள் என்கிறார்
எல்லா வல்லமையும் கொண்ட கர்த்
தர்”

2 சாமுவேல் 7:14; 7:8

என்று தேவன் கூறுகிறார்.

7 அன்புள்ள நண்பர்களே! தேவனிடமிருந்து
இந்த வாக்குறுதிகளைப் பெற்றிருக்கி
றோம். எனவே, நாம் நம் சரீரத்தையும், ஆத்து
மாவையும் அசுத்தப்படுத்தும் எதனிடமிருந்
தும் முழுக்க முழுக்க விலகி நம்மை நாமே
தூய்மைப்படுத்திக் கொள்ளவேண்டும். நாம்
நமது வாழ்க்கை முறையிலேயே மிகச் சரியாக
இருக்க முயற்சி செய்யவேண்டும். ஏனென்
றால் நாம் தேவனை மதிக்கிறோம்.

### பவுலின் மகிழ்ச்சி

2எங்களுக்காக உங்கள் இதயங்களைத் திறந்
து வைத்திருங்கள். நாங்கள் யாருக்கும் தீமை
செய்ததில்லை. நாங்கள் எவரது நம்பிக்கை
யையும் அழித்ததில்லை; எவரையும் ஏமாற்றி
யதில்லை. 3உங்களைக் குற்றம் சாட்டுவதற்
காக இதனைக் கூற வில்லை. எங்கள் வாழ்வும்
சாவும் உங்கள் உடனே இருக்கும் அளவுக்கு
உங்களை நாங்கள் நேசிக்கிறோம் என்பதை
ஏற்கெனவே உங்களுக்குச் சொல்லி இருக்கி
றேன். 4நான் உங்களைப் பற்றி உறுதியாக
உணர்கிறேன். உங்களைப் பற்றி பெருமைப்
படுகிறேன். நீங்கள் எனக்கு மிகுந்த தைரியம்
கொடுக்கிறீர்கள். அதனால் அனைத்து துன்பங்
களுக்கு இடையிலும் நான் மிகவும் சந்தோஷ
மாக இருக்கிறேன்.
5நாங்கள் மக்கதோனியாவுக்கு வந்தபோது
எங்களுக்கு ஒய்வு இல்லாமல் இருந்தது. எங்
களைச் சுற்றிலும் நெருக்கடிகள் இருந்தன.
நாங்கள் வெளியே போராடிக் கொண்டும்
உள்ளுக்குள் பயந்துகொண்டும் இருந்தோம்.
6ஆனால் தேவன் துன்பப்படுகிறவர்களுக்கு
ஆறுதல் தருகிறார். தீத்து வந்தபோது தேவன்
ஆறுதல் தந்தார். 7அவனது வருகையிலும்,
நீங்கள் அவனுக்கு கொடுத்த ஆறுதலாலும்
நாங்கள் ஆறுதலடைந்தோம். என்னை நீங்கள்
பார்க்க விரும்பியதைப் பற்றி தீத்து கூறினான்.
உங்களது தவறுகளுக்கு நீங்கள் வருந்தியது
பற்றியும் கூறினான். என்மீது நீங்கள் கொண்ட
அக்கறையைப் பற்றி அவன் சொன்னபோது
மகிழ்ச்சி அடைந்தேன்.
8நான் உங்களுக்கு எழுதிய நிருபம் ஏதே
னும் வருத்தத்தை தந்திருக்குமானால் அதை
எழுதியதற்காக நான் இப்பொழுது வருத்தப்
படவில்லை. அந்நிருபம் உங்களுக்கு வருத்
தத்தை தந்தது என அறிவேன். அதற்காக
அப்பொழுது வருந்தினேன். ஆனால் அது
கொஞ்ச காலத்துக்குத்தான் உங்களுக்குத் துய
ரத்தைத் தந்தது. 9இப்பொழுது மகிழ்ச்சியாக
இருக்கிறேன். இது நீங்கள் துயரப்படும்படி
ஆனதால் அன்று. அத்துயரம் உங்கள் இதயங்
களை மாற்றியதற்காக நான் மகிழ்கிறேன்.
தேவனுடைய விருப்பப்படியே நீங்கள் துக்கப்
பட்டீர்கள். எனவே நீங்கள் எங்களால் எவ்வ
கையிலும் பாதிக்கபபடவில்லை. 10தேவனு
டைய விருப்பப்படி நேரும் வருத்தம் ஒருவ
னது இதயத்தை மாற்றி, வாழ்வையும்
மாற்றுகிறது. அவனுக்கு இரட்சிப்பையும் தரு

*கிறது. அதற்காக வருத்தப்பட வேண்டாம்.
ஆனால் உலக ரீதியிலான துயரங்களோ
மரணத்தை வரவழைக்கின்றது.* **11**
*தேவனின்
விருப்பப்படியே நீங்கள் வருத்தம் அடைந்தீர்
கள். இப்பொழுது அவ்வருத்தம் உங்களுக்கு
எதைக் கொண்டு வந்தது என்று பாருங்கள்.
அது உங்களிடம் ஜாக்கிரதையை உருவாக்கி
யது. குற்றமற்றவர்கள் என உங்களை நிரூபிக்
கத் தூண்டியது. அது கோபத்தையும், பயத்தை
யும் தந்தது. அது என்னைக் காணத் தூண்டி
யது. அது உங்களை அக்கறை கொள்ளச்
செய்தது. அது நல்லவற்றைச் செய்ய ஒரு
காரணமாயிற்று. இக்காரியத்தில் எவ்விதத்
திலும் நீங்களும் குற்றம் இல்லாதவர்கள்
என்று உங்களை நிரூபித்துக் கொண்டீர்கள்.*
**12**
*நான் உங்களுக்கு நிருபம் எழுதியதின் கார
ணம் ஒருவன் தவறு இழைத்து விட்டான்
என்பதாலல்ல, அதே போல ஒருவன் பாதிக்கப்
பட்டு விட்டான் என்பதாலும் உங்களுக்கு
நிருபம் எழுதவில்லை. தேவனுக்கு முன்பாக
உங்களுக்காக நாங்கள் கொண்டுள்ள அக்க
றையை நீங்கள் காணும்பொருட்டே அப்படி
எழுதினேன். இதனால்தான் நாங்கள் ஆறுதல
டைந்தோம்.*

**13**
*நாங்கள் மிகவும் ஆறுதலடைந்தோம். தீத்து
மகிழ்ச்சியாக இருப்பதை அறிந்து நாங்களும்
மகிழ்ச்சியடைந்தோம். அவன் நலமடைய நீங்
கள் அனைவரும் உதவினீர்கள்.* **14**
*உங்களைப்
பற்றி தீத்துவிடம் பெருமையாகச் சொன்
னவை அனைத்தும் உண்மை என்பதை நீங்
கள் நிரூபித்து விட்டீர்கள். உங்களுக்கு நாங்
கள் சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் உண்
மையாகும்.* **15**
*நீங்கள் கீழ்ப்படியத் தயாராக
இருக்கீறீர்கள். இதை நினைத்து தீத்து உங்கள்
மீது உறுதியான அன்பைக் கொண்டிருக்கி
றான். நீங்கள் அவனைப் பயத்தோடும் மரியா
தையோடும் ஏற்றுக் கொண்டீர்கள்.* **16**
*நான்
உங்களை முழுமையாக நம்பலாம் என்பதில்
பெரிதும் மகிழ்ச்சி அடைகிறேன்.*

### கிறிஸ்தவர்களின் கொடுக்கும் தன்மை

**8**
*சகோதர சகோதரிகளே இப்போது மக்க
தோனியா சபைகளுக்குத் தேவன் காட்டிய
கிருபையைப் பற்றி நீங்கள் அறிந்து கொள்ள
வேண்டும் என நாங்கள் விரும்புகிறோம்.*
**2**
*அந்த விசுவாசிகள் பெருந்தொல்லைகளால்
சோதிக்கப்பட்டனர். அவர்கள் மிகவும் ஏழை
மக்கள். ஆனால் தமக்குண்டான மிகுந்த மகிழ்ச்
சியால் அவர்கள் அதிகமாகக் கொடுத்தார்கள்.*
**3**
*தம்மால் முடிந்த அளவு அவர்கள் கொடுத்
தார்கள் என்று என்னால் சொல்ல முடியும்.
அந்த விசுவாசிகள் தங்களால் முடிந்த அள
வுக்கும் மீறி கொடுத்தார்கள். இதனை அவர்
கள் சுதந்தரமாகச் செய்தனர். எவரும் அவர்
களை அவ்வாறு செய்யுமாறு வற்புறுத்த
வில்லை.* **4**
*ஆனால் அவர்கள் மீண்டும் மீண்டும்
எங்களைக் கேட்டார்கள். தேவனுடைய மக்க
ளுக்கான சேவையில் பங்குகொள்ள அனும
திக்க வேண்டுமென்று திரும்பத் திரும்பவேண்
டினர்.* **5**
*நாம் எதிர்பார்த்திராத வகையில்
அவர்கள் கொடுத்தார்கள். அவர்கள் தம் பணத்
தைக் கொடுப்பதற்கு முன்னால் கர்த்தருக்கும்
எங்களுக்கும் தம்மையே கொடுத்தார்கள்.
இதைத்தான் தேவனும் விரும்புகிறார்.* **6**
*என
வே தீத்து இந்த நல்ல காரியத்தைத் தொடங்
கினபடியே முடிக்கவும் வேண்டுமென்று கேட்
டுக் கொண்டோம்.* **7**
*நம்பிக்கையிலும், பேச்சி
லும், அறிவிலும், உண்மை விருப்பத்தோடு
உதவுவதிலும், எங்கள் மேலுள்ள அன்பிலும்
நீங்கள் செல்வந்தராய் இருக்கிறீர்கள். இந்த
கொடுக்கும் நற்காரியத்திலும் நீங்கள் செல்வந்
தராய் இருக்கவேண்டும்.*

**8**
*கொடுக்க வேண்டுமென்று உங்களுக்குக்
கட்டளையிடவில்லை, ஆனால் உங்கள் அன்பு
உண்மையான அன்பென்று நாங்கள் பார்க்க
விரும்புகிறோம். மற்றவர்களும் உண்மையில்
உதவ விரும்புவதை உங்களுக்குக் காட்டவே
இதைச் செய்கிறோம்.* **9**
*கர்த்தராகிய இயேசு
கிறிஸ்துவின் கருணையை நீங்கள் அறிவீர்
கள். கிறிஸ்து தேவனோடு செல்வந்தராயி
ருந்தார். ஆனால் உங்களுக்காக அவர் ஏழை
யானார். அதன் மூலம் அவர் உங்களைச்
செல்வந்தர்களாக்க விரும்பினார்.*

**10**
*உங்கள் நன்மைக்காகவே நீங்கள் இதைச்
செய்ய வேண்டுமென நான் சொல்ல விரும்பு
கிறேன். சென்ற ஆண்டில் கொடுக்க விரும்பிய
தில் நீங்களே முதலாவதாக இருந்தீர்கள். அது
போல் கொடுப்பதிலும் முதலாவதாக இருந்தீர்
கள்.* **11**
*எனவே, இப்பொழுது தொடங்கிய செய
லை முடித்துவிடுங்கள். பிறகு உங்கள் செயலா
னது உங்களுடைய விருப்பத்துக்கு ஏற்றதாக
அமையும். உங்களிடம் இருப்பதைக் கொடுங்
கள்.*

**12**
*நீங்கள் விரும்பிக் கொடுத்தால் அது
ஏற்றுக்கொள்ளப்படும். உங்களது கொடுத்தலா
னது உங்களிடம் இல்லாததை வைத்து தீர்மா
னிக்கப்படாது; இருப்பதைக் கொண்டே தீர்மா
னிக்கப்படும்.* **13**
*மற்றவர்கள் சௌகரியமாக
இருக்கையில் நீங்கள் மட்டும் தொல்லைப்
படுவதை நாங்கள் விரும்பவில்லை. எல்லாம்
சமமாக இருக்கவேண்டும் என்று விரும்புகி
றோம்.*

**14**
*இப்பொழுது உங்களிடம் நிறைய உள்
ளது. அவற்றைத் தேவையானவர்களுக்குக்
கொடுங்கள். அவர்களிடம் மிகுதியாக இருக்
கும்போது அவர்கள் உங்களுக்குத் தேவையா
னதைக் கொடுத்து உதவுவார்கள். இப்படியே
எல்லாம் சமமாகும்.*

**15** *“அதிகமாகச் சேர்த்தவன் எவனும் அதி
கமாக வைத்திருப்பதில்லை. குறை
வாக இருப்பவன் எவனும் குறைவு
டன் இருப்பதில்லை”*

*யாத். 16:18*

*என்று எழுதப்பட்டுள்ளது.*

### தீத்துவும் அவனது குழுவும்

[16]உங்கள் மீது எனக்கிருக்கும் அன்பைப் போலவே தீத்துவின் இதயத்திலும் அன்பைத் தந்ததற்காகத் தேவனுக்கு நன்றி செலுத்துகிறேன். அவன் என்னைப் போலவே உங்களிடம் அன்பாய் இருக்கிறான். [17]நாங்கள் செய்யச் சொன்னதையெல்லாம் தீத்து ஏற்றுக்கொண்டான். அவன் உங்களிடம் வர பெரிதும் விரும்பினான். இது அவனது சொந்த முயற்சியே ஆகும். [18]நாங்கள் தீத்துவோடு ஒரு சகோதரனையும் அனுப்பி வைத்தோம். அச்சகோதரன் அனைத்து சபைகளாலும் அவனது சிறப்பான ஊழியத்துக்காகப் பாராட்டப்படுகிறவன் [19]அதோடு, இக்காணிக்கைப் பணத்தை சுமந்துச் செல்லும்போது எங்களுக்குத் துணையாக இருக்க சபைகளால் நியமிக்கப்பட்டவனே இச்சகோதரன் ஆவான். தேவனுக்கு மகிமை உண்டாகவே நாங்கள் இச்சேவையைச் செய்துக்கொண்டிருக்கிறோம். சேவை செய்யும் எங்கள் விருப்பத்தைப் புலப்படுத்தவும் இதைச் செய்கிறோம். [20]இப்பெரிய தொகையை கையாள்வது குறித்து நாங்கள் கொள்ளும் அக்கறைகளைப் பற்றி யாரும் விமர்சனம் செய்துவிடக்கூடாது எனக் கூடுமான வரையில் எச்சரிக்கையாய் உள்ளோம். [21]சரியானவற்றைச் செய்யவே நாங்கள் முயல்கிறோம். தேவனுக்கு முன்பாக மட்டுமல்ல, மக்களுக்கு முன்பாகவும் நேர்மையாகப்படுவதை மட்டுமே செய்ய விரும்புகிறோம்.

[22]இவர்களோடு எங்கள் சகோதரனையும் அனுப்புகிறோம். அவன் எப்பொழுதும் உதவத் தயாராய் இருப்பான். பல வழிகளில் அவன் இதை நிருபித்திருக்கிறான். உங்கள் மீது அதிக அளவு நம்பிக்கை கொண்டிருப்பதால் அதிக அளவில் உதவ அவன் விரும்புகிறான்.

[23]தீத்துவைப் பற்றிக் கூறுவதானால், அவன் எனது கூட்டாளி. உங்களுக்கு உதவுவதற்காக என்னோடு பணிபுரிபவன். மற்ற சகோதரர்களைப் பற்றி கூறுவதானால் அவர்கள் சபைகளால் அனுப்பப்பட்டவர்கள். அவர்கள் கிறிஸ்துவுக்குப் புகழ் சேர்த்தவர்கள். [24]எனவே, உங்களது உண்மையான அன்பை அவர்களுக்குக் காட்டுங்கள். ஏன் உங்களை நினைத்துப் பெருமைப் பாராட்டுகிறோம் என்பதையும் அவர்களுக்குக் காட்டுங்கள். பிறகு எல்லா சபைகளும் இதைப் பார்க்க முடியும்.

### உடன் கிறிஸ்தவர்களுக்கு உதவுதல்

9 தேவனுடைய மக்களுக்கு செய்ய வேண்டிய இந்த உதவி பற்றி உங்களுக்கு நான் அதிகமாக எழுத வேண்டிய தேவையில்லை. [2]நீங்கள் உதவ விரும்புவதை நான் அறிவேன். மக்கதோனியா மக்களிடம் நான் இதைப்பற்றி பெருமையாகப் பேசி இருக்கிறேன். அகாயாவிலுள்ள நீங்கள் உதவி செய்ய ஓராண்டாகத் தயாராய் உள்ளீர்கள் என்பதைக் கூறி இருக்கிறேன். உங்களது உற்சாகம் இங்குள்ள பலரையும் தூண்டியது. [3]ஆனால் நான் சகோதரர்களை உங்களிடம் அனுப்புகிறேன். இக்காரியத்தில் உங்களைப்பற்றி நாங்கள் சொன்ன பாராட்டுகள் பொய்யாகப் போகாமல் நான் சொன்னபடி நீங்கள் ஆயத்தமாக இருங்கள். [4]நான் சில மக்கதோனியர்களோடு அங்கே வரும்போது நீங்கள் தயாராய் இல்லாமல் இருந்தீர்களெனில் அதனால் எனக்கு மிகவும் வெட்கம் உண்டாகும். ஏனென்றால் உங்களைப் பற்றி அவ்வளவு உறுதியாகக் கூறியிருக்கிறேன். (அது உங்களுக்கும் அவமானத்தைத் தரும்.) [5]ஆகையால் நாங்கள் வருவதற்கு முன்னரே எங்கள் சகோதரர்களை உங்களிடம் அனுப்பி வைப்பது அவசியம் என்று நினைத்தேன். நீங்கள் ஏற்கெனவே சொன்னபடி விருப்பமுடன் பொருட்களைக் கொடுத்து உதவுங்கள். அச்சகோதரர்கள் அவற்றைச் சேர்த்துத் தயாராக வைத்திருப்பர்.

[6]“கொஞ்சமாக விதைக்கிறவன் கொஞ்சமாகவே அறுவடை செய்வான். மிகுதியாக விதைக்கிறவனோ மிகுதியாகவே அறுவடை செய்வான்” என்பதை நினைவில் இருத்திக் கொள்ளுங்கள். [7]ஒவ்வொருவனும், தன் இதயத்தில் எதைக் கொடுக்க வேண்டுமென்று தீர்மானிக்கிறானோ அதைக் கொடுப்பானாக. கொடுப்பதுப் பற்றி எவருக்காவது வருத்தம் ஏற்படுமானால் அவன் கொடுக்காமலேயே இருக்கட்டும். கட்டாயத்தின் பேரில் எவரும் கொடுக்க வேண்டாம். மகிழ்ச்சியோடு கொடுப்பவனையே தேவன் அதிகமாக நேசிக்கிறார். [8]அவர்களுக்குத் தேவைக்கு மிகுதியான ஆசீர்வாதத்தைத் தேவனால் கொடுக்க முடியும். பிறகு உங்களிடமும் ஏராளமான செல்வம் சேரும். ஒவ்வொரு நற்செயலுக்கும் கொடுக்கப் போதுமான செல்வம் உங்களிடம் இருக்கும்.

> [9] “அவன் தாராளமாக ஏழைகளுக்குக்
> கொடுக்கிறான். அவனுடைய கருணை
> என்றென்றும் தொடர்ந்து நிற்கும்.”
> உபா. 25:4

என்று எழுதப்பட்டுள்ளது. [10]தேவனே விதைக்கிறவனுக்கு விதையைக் கொடுக்கிறார். உண்பதற்கு அவரே அப்பத்தையும் கொடுக்கிறார். அவர் ஆன்மாவிற்குரிய விதையைக் கொடுப்பார். அதனை வளர்க்கவும் செய்வார். உங்களது நீதியினிமித்தம் சிறந்த அறுவடையையும் பெருகச் செய்வார்.[11]தாராளமாய்க் கொடுக்கும் அளவுக்கு எல்லா வகையிலும் தேவன் உங்களைச் செல்வந்தர் ஆக்குவார். நீங்கள் எங்கள் மூலமாகக் கொடுத்தால் மக்கள் தேவனுக்கு நன்றி சொல்வர். [12]தேவைப்படும் தேவனுடைய மக்களுக்கு நீங்கள் உதவிசெய்வது பெரும் சேவையாகும். இதற்கு இணையானது வேறில்லை. தேவனுக்கு அளவு கடந்த நன்றிகளை இது கொண்டு வரும். [13]நீங்கள் செய்யும் இச்சேவையானது உங்கள் விசுவாசத்திற்கான நல்ல சாட்சியாகும். இதற்காக மக்கள்

தேவனைப் பாராட்டுவர். நீங்கள் விசுவாசிப்ப
தாக ஒத்துக்கொள்ளும் கிறிஸ்துவின் நற்செய்
தியை நீங்கள் பின்பற்றுவதால் மக்கள் அவ
ருக்கு நன்றி சொல்வார்கள். ஏனெனில் அவர்
களின் தேவைகளிலும் ஒவ்வொருவரின்
தேவைகளிலும் நீங்கள் தாராளமாக பங்கு
கொள்கிறீர்கள். 14அந்த மக்கள் தேவனிடம்
ஜெபிக்கும்போது, அவர்கள் உங்களோடு இரு
க்கவே விரும்புவர். ஏனென்றால் தேவன் உங்
களுக்கு மிகுதியாகக் கிருபை செய்திருக்கி
றார். 15தேவன் அருள்செய்த விளக்க இயலாத
வியக்கத்தக்க கிருபைக்காக நன்றி செலுத்து
வோமாக.

### பவுலும் – தேவசபையும்

10 நான் பவுல். உங்களை வேண்டிக்கொள்
கிறேன். கிறிஸ்துவின் கருணையோ
டும், சாந்தத்தோடும் கேட்டுக் கொள்கிறேன்.
நான் உங்களோடு இருக்கும்போது தாழ்மையு
டையவனாகவும் உங்களை விட்டு தூரமாயி
ருக்கும்போது உங்கள்மேல் கண்டிப்புடனும்
இருப்பதாக சிலர் என்னிடம் கூறுகிறார்கள்.
2நாங்கள் உலக நடைமுறைப்படி வாழ்ந்து
கொண்டிருப்பதாகச் சிலர் நினைக்கின்றனர்.
நான் அங்கு வரும்போது அவர்களிடம் நான்
தைரியமாக இருக்கவேண்டும். நான் அங்கு
வரும்போது, உங்களிடம் கண்டிப்பாய் அந்த
தைரியத்தைப் பயன்படுத்தாதபடிக்கு இருக்க
நான் பிராத்திக்கிறேன். 3நாம் மனிதர்கள்.
ஆனால் உலகம் போரிடும் முறையைப்
போலவே போரிடுவதில்லை. 4உலகத்தார்
பயன்படுத்தும் ஆயுதங்களிருந்து முற்றிலும்
மாறான வேறுவகையான ஆயுதங்களைப்
பயன்படுத்துகிறோம். நமது ஆயுதங்களுக்கான
சக்தியைத் தேவனிடமிருந்து பெறுகிறோம்.
இவை பகைவர்களின் வலிமையான இடங்
களை அழித்துவிடும். நாம் மக்களின் விவாதங்
களை அழிக்கிறோம். 5தேவனுடைய ஞானத்
திற்கு எதிராகத் தோன்றும் பெருமிதங்களை
யெல்லாம் நாம் அழித்து வருகிறோம். அவர்க
ளின் சிந்தனைகளைக் கவர்ந்து கிறிஸ்துவுக்கு
அடிபணியுமாறு செய்கிறோம். 6அடிபணியாத
எவரையும் தண்டிக்கத் தயாராக இருக்கி
றோம். முதலில் நீங்கள் முழுமையாக அடிபணி
யுமாறு விரும்புகிறோம்.

7உங்களுக்கு முன்னாலுள்ள உண்மை
களை நீங்கள் கவனித்துக்கொள்ள வேண்டும்.
ஒருவன் தன்னைக் கிறிஸ்துவுக்கு உரியவன்
என்று நம்புவானேயானால் பிறரைப்போ
லவே நாங்களும் கிறிஸ்துவுக்கு உரியவர்கள்
என்பதைக் கவனத்தில் கொள்ளவேண்டும்.
8கர்த்தர் எங்களுக்குக் கொடுத்த அதிகாரத்
தைப் பற்றி நாங்கள் இன்னும் பெருமைப்
பட்டுக் கொள்ளலாம் என்பது உண்மை.
ஆனால் உங்களைத் தூக்கியெறிய இந்த அதி
காரத்தை எங்களுக்கு கொடுக்கவில்லை; உங்க
ளைப் பலப்படுத்தவே கொடுத்திருக்கிறார்.
அதனால் அதுபற்றி பெருமைப்பட்டுக்கொள்ள
நான் வெட்கப்படவில்லை. 9இந்த நிருபத்தின்
மூலம் உங்களைப் பயமுறுத்துகிறவனாய்
நான் தோன்றாதபடிக்கு இதைச் சொல்லுகி
றேன். 10ஆனால் சிலரோ, "பவுலின் நிருபங்கள்
பலமுள்ளவை; மிகவும் முக்கியமானவை.
ஆனால் அவன் எங்களோடு இருக்கும்போது
பலவீனனாக இருக்கிறான். அவன் பேச்சு
எந்தப் பயனையும் விளைவிப்பதில்லை"
என்று சொல்கிறார்கள். 11"நாங்கள் இப்பொ
ழுது அங்கே உங்களோடு இல்லை. அதனால்
நிருபத்தின் மூலம் பேசுகிறோம். ஆனால் நாங்
கள் உங்களோடு இருக்கும்போதும் நிருபத்தில்
உள்ளது போலவே செயல்படும் அதிகாரத்து
டன் இருப்போம்" என்பதை அவர்கள் உணர்
ந்துகொள்ள வேண்டும்.

12தம்மைத் தாமே முக்கியமானவர்கள்
என்று பெருமை பேசிக்கொள்ளும் குழுவுடன்
சேர நாங்கள் விரும்பவில்லை. எங்களை
அவர்களோடு ஒப்பிட்டுப் பார்க்க விரும்பமாட்
டோம். அவர்களைப் போன்று ஆகவும் விரும்
பமாட்டோம். அவர்கள் தங்களைக் கொண்டே
தங்களை அளக்கிறார்கள். தங்களைக்
கொண்டே தங்களை ஒப்பிடுகின்றனர். அவர்
கள் அறிவுள்ளவர்கள் அல்ல. 13எங்களுக்குத்
தரப்பட்ட வேலைகளின் அளவை மீறி எப்போ
தும் பெருமை பேசிக்கொள்ள மாட்டோம்.
தேவன் எங்களுக்குக் கொடுத்த பணியின்
அளவிற்கே பெருமை கொள்ளுகிறோம். உங்
கள் நடுவில் இதுவும் எங்கள் வேலைகளுள்
ஒன்றாக இருக்கிறது. 14அளவுமீறி பெருமை
பேசித் திரிபவர்கள் அல்ல நாங்கள். நாங்கள்
உங்களிடம் வராமல் இருந்திருந்தால் எங்க
ளைப் பற்றி அளவுக்கு மீறி பெருமை பேசி
இருப்போம். ஆனால் நாங்கள் கிறிஸ்துவின்
நற்செய்தியோடு உங்களிடம் வந்தோம். 15மற்ற
வர்களுடைய வேலைக்குட்பட்டு எங்கள் அள
வைக் கடந்து பெருமை பாராட்டமாட்டோம்.
உங்கள் விசுவாசம் வளர்ந்துகொண்டே இருக்
கும் என்றும் உங்களிடையே எங்கள் வேலை
யானது மென்மேலும் வளர்ச்சியடைய நீங்கள்
உதவுவீர்கள் என்றும் நம்புகிறோம். 16உங்கள்
இருப்பிடத்துக்கு அப்பாலும் நாங்கள் நற்செய்
தியைப் பரப்ப விரும்புகிறோம். மற்றவர்க
ளால் ஏற்கெனவே செய்து முடிக்கப்பட்டதை
எங்களால் செய்யப்பட்டதாக கூறி பெருமைப்
படமாட்டோம். 17ஆனால், "பெருமை பாராட்டு
கிற ஒருவன் கர்த்தரில் பெருமை பாராட்டுவா
னாக."* 18தன்னைத்தானே நல்லவன் என்று
கூறிக்கொள்கிறவன் நல்லவன் அல்ல. கர்த்த
ரால் நல்லவன் என்று ஏற்றுக்கொள்ளப்படுகி
றவனே நல்லவன்.

### பவுலும் – போலி அப்போஸ்தலர்களும்

11 நான் கொஞ்சம் முட்டாளாக இருந்தா
லும் என்னை நீங்கள் பொறுத்துக்
கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன்.

---

**பெருமை ... பாராட்டுவானாக** எரே. 9:24.

ஏற்கெனவே என்னை நீங்கள் பொறுத்துக்
கொண்டிருக்கிறீர்கள். 2நான் உங்களை
நினைத்து பெருமை படுகிறேன். இது தேவனிட
மிருந்து வந்த பெருமை ஆகும். நான் உங்க
ளைக் கிறிஸ்துவுக்குத் தருவதாய் வாக்குறுதி
கொடுத்தேன். கிறிஸ்துவே உங்களது ஒரே
மணவாளன். அவரது தூய மணப்பெண்ணாக
உங்களை அவருக்குக் கொடுக்க விரும்புகி
றேன். 3எனினும் கிறிஸ்துவிடமுள்ள உங்கள்
முழு அர்ப்பணிப்பில் இருந்து விலகும்படி
உங்கள் மனம் கெடுக்கப்படுமோ என்று அஞ்சு
கிறேன். பாம்பின் (சாத்தான்) தந்திர வழிகளின்
மூலம் ஏவாள் வஞ்சிக்கப்பட்டதைப் போல
உங்களுக்கும் நேரும். 4நாங்கள் சொன்னதற்கு
மாறாக இயேசுவைப் பற்றி போதிக்க வரும்
எவரையும் நம்பி சகித்து கொள்கிறீர்கள். நீங்
கள் எங்களிடமிருந்து பெற்ற ஆவிக்கும் நற்
செய்திக்கும் மாறுபட்ட ஆவியையும் நற்செய்தி
யையும் ஏற்றுக்கொள்கிறீர்கள். ஆகவே
என்னையும் சகித்துக் கொள்ளுங்கள். 5மகா
பிரதான அப்போஸ்தலரை விட நான் ஒன்றி
லும் குறைவு உள்ளவன் அல்லன் என எண்
ணுகிறேன். 6நான் பயிற்சி பெற்ற பேச்சாளன்
இல்லை என்பது உண்மைதான். ஆனால்
எனக்குப் போதிய ஞானம் உண்டு. நாங்கள்
அவற்றை உங்களுக்கு எல்லா வழிகளிலும்
தெளிவாக வெளிப்படுத்தியுள்ளோம்.

7நான் உங்களுக்கு இலவசமாக தேவனு
டைய நற்செய்தியைப் போதித்திருக்கிறேன்.
உங்களை உயர்த்துவதற்காக நான் பணிந்து
போயிருக்கிறேன். அதனைத் தவறு என்று
எண்ணுகிறீர்களா? 8உங்களைக் கவனித்துக்
கொள்ளும்பொருட்டு மற்ற சபைகளிடம்
இருந்து பணத்தைப் பெற்றேன். 9நான் உங்க
ளோடு இருக்கும்போது, எனது தேவைகளுக்
காக உங்களைத் துன்புறுத்தியதில்லை.
எனக்கு தேவையானவற்றையெல்லாம் மக்க
தோனியாவிலிருந்து வந்த சகோதரர்கள்
கொடுத்தனர். எந்த வகையிலும் நான் உங்க
ளுக்குப் பாரமாக இருக்கவில்லை. இனிமே
லும் பாரமாக இருக்கமாட்டேன். 10இதைப்
பற்றி நான் பெருமைபட்டுக் கொள்வதை அகா
யாவிலுள்ள* எவரும் என்னைத் தடுத்து
நிறுத்த முடியாது. இதனை நான் என்னோடு
இருக்கிற கிறிஸ்துவின் சத்தியத்தைக்கொண்டு
கூறுகிறேன். 11உங்களுக்குப் பாரமாயிருக்க
விரும்பவில்லை என்று ஏன் கூறுகிறேன்.
உங்கள் மீது எனக்கு அன்பில்லையா? உண்டு.
அதைப்பற்றி தேவன் நன்கு அறிவார்.

12நான் இப்பொழுது செய்வதைத் தொடர்ந்து
செய்வேன். ஏனென்றால் எங்கள்மீது குற்றம்
கண்டுபிடிக்க காரணம் தேடுகிறவர்களுக்குக்
காரணம் கிடைக்கக்கூடாது. தம் வேலையைப்
பற்றி பெருமை பேசுகிறவர்கள் தம் வேலை
யை நம் வேலையைப் போன்ற ஒன்றாகச்
சொல்லிக்கொள்ள விரும்புவார்கள். 13அப்ப
டிப்பட்டவர்கள் உண்மையான அப்போஸ்தலர்
கள் அல்லர்; பொய் நிறைந்த பணியாளர்கள்.
அவர்கள் கிறிஸ்துவினுடைய அப்போஸ்தலர்
களின் வேடத்தைத் தரித்துக் கொள்ளுகி
றார்கள். 14இது எங்களை வியப்படையச் செய்
யவில்லை. ஏனென்றால், சாத்தானே ஒளியின்
தூதனாக* மாறுவேடம் அணிந்திருக்கிறான்.
15எனவே சாத்தானின் வேலைக்காரர்கள் நீதி
யின் வேலைக்காரர்களைப் போன்று வேட
மிடுவது வியப்புக்குரியதல்ல. ஆனால் இவர்
கள் இறுதியில் தங்கள் செயலுக்காகத் தண்டிக்
கப்படுவர்.

### பவுலும் - அவரது துன்பங்களும்

16நான் மீண்டும் கூறுகிறேன். நான் அறிவற்
றவன் என்று எவரும் எண்ண வேண்டாம்.
ஆனால் நீ என்னை அறிவற்றவன் என்று
எண்ணினால் ஒரு அறிவற்றவனை ஏற்றுக்
கொள்வது போல் என்னையும் ஏற்றுக்கொள்.
பின்பு இதைப் பற்றி நானும் பெருமைப்பட்டுக்
கொள்ளுவேன். 17ஏனென்றால் என்னைப்
பற்றி நான் உறுதியாக இருக்கிறேன். நான்
கர்த்தரைப் போன்று பேசுபவன் அல்லன்.
நான் அறிவற்றவன் போன்றே பெருமை
பாராட்டுகிறேன். 18உலகத்தில் ஏராளமானவர்
கள் தம்மைப்பற்றி பெருமைபட்டுக் கொள்ளுகி
றார்கள். நானும் பெருமைப்பட்டுக் கொள்
ளுகிறேன். 19நீங்கள் புத்திசாலிகள். எனவே
புத்தியற்றவர்களோடு நீங்கள் சகிப்புத் தன்மை
யோடு நடந்து கொள்ளுங்கள். 20நீங்கள் சகித்
துக் கொள்வீர்கள் என்று எனக்குத் தெரியும்.
ஒருவன் உங்களைக் கட்டாயப்படுத்தி காரியங்
களைச் செய்யச் சொன்னாலும், ஒருவன் உங்
களை முழுமையாகப் பயன்படுத்திக் கொண்
டாலும், ஒருவன் உங்களை ஏமாற்றினாலும்,
ஒருவன் தன்னை உயர்த்திக் கொண்டாலும்,
ஒருவன் உங்கள் முகத்தில் அறைந்தாலும்
நீங்கள் அனைத்தையும் பொறுத்துக் கொள்வீர்
கள். 21இதனைச் சொல்லவே வெட்கமாக இருக்
கிறது. ஆனால் இவற்றையெல்லாம் செய்வ
தற்கு நாம் பலவீனம் உள்ளவர்களாய் இருக்கி
றோம்.

எவனாவது தன்னைப் பாராட்டிப் பேச
தைரியம் உள்ளவனாய் இருந்தால் நானும்
தைரியம் உள்ளவனாய் இருப்பேன். (நான்
அறிவற்றவனைப் போன்று பேசிக்கொண்டி
ருக்கிறேன்.) 22அவர்கள் எபிரேயர்களாக இருந்
தால் நானும் அவ்வாறே இருக்கிறேன். அவர்
கள் இஸ்ரவேல் தேசத்தைச் சேர்ந்தவர்களாக
இருந்தால் நானும் அவ்வாறே இருக்கிறேன்.
அவர்கள் ஆபிரகாமின் குடும்பத்தில் உள்ளவர்
களாக இருந்தால் நானும் அவ்வாறே இருக்கி
றேன்.

***அகாயா*** கொரிந்து இருந்த கிரேக்கத்தின் தென்ப
குதி.

**ஒளியின் தூதன்** தேவனுடைய தூதுவன் போல
சாத்தான் மக்களை ஏமாற்றி தன்னை தேவனிடமி
ருந்து வந்ததாக எண்ணச் செய்தான்.

23அவர்கள் கிறிஸ்துவுக்குச் சேவைசெய்
பவர்களானால் நான் அவர்களை விட மிகுதி
யாகச் செய்துகொண்டே இருக்கிறேன். (நான்
பைத்தியக்காரனைப் போன்று பேசுகிறேன்)
நான் அவர்களை விடக் கடினமாக உழைத்தி
ருக்கிறேன். நான் பல முறைகள் சிறைபட்டிருக்
கிறேன். நான் மிக அதிகமாக அடி வாங்கி
இருக்கிறேன். நான் பலமுறை மரணத்தின்
அருகில் சென்று வந்திருக்கிறேன். 24நான் யூதர்
களால் சவுக்கால் முப்பத்தொன்பது அடிகளை
ஐந்து தடவை பெற்றிருக்கிறேன். 25மூன்று
முறை மிலாறுகளால் அடிபட்டேன். ஒருமுறை
நான் கல்லால் எறியப்பட்டு ஏறக்குறைய
சாகும் தருவாயில் இருந்தேன். மூன்று முறை
கப்பல் விபத்தில் சிக்கிக் கொண்டேன். ஒரு
முறை கடலிலேயே ஒரு இராப்பகல் முழுவதை
யும் கழித்தேன். 26நான் பலமுறை பயணங்கள்
செய்திருக்கிறேன். நான் ஆறுகளாலும், கள்ளர்
களாலும், யூதமக்களாலும், யூதரல்லாதவர்க
ளாலும் ஆபத்துக்குட்பட்டிருக்கிறேன். நகரங்க
ளுக்குள்ளும், மக்களே வசிக்காத இடங்களி
லும், கடலுக்குள்ளேயும், ஆபத்துகளில் சிக்கி
யிருக்கிறேன். சகோதரர்கள் என்று சொல்லிக்
கொண்டு உண்மையில் சகோதரர்களாக இல்
லாத சிலராலும் நான் ஆபத்துக்குள்ளானேன்.
27நான் பலமுறை கடினமாக உழைக்க, கடின
மான சோர்வூட்டத்தக்கவற்றைச் செய்ய
நேர்ந்தது. பல தடவை நான் தூங்காமல் இருந்தி
ருக்கிறேன். பல முறை நான் உணவில்லாமல்
பட்டினியாகவும், தாகத்தோடும் இருந்திருக்கி
றேன். பல சமயங்களில் உண்ணுவதற்கு எது
வுமேயற்ற நிலையில் இருந்திருக்கிறேன். குளி
ரில் ஆடையில்லாமல் நிர்வாணமாகவும்
இருந்திருக்கிறேன்.

28இவற்றைத் தவிர மேலும் பல பிரச்சனை
களும் எனக்குண்டு. குறிப்பாக எல்லா சபை
களைப் பற்றியும் ஒவ்வொரு நாளும் கவலைப்
பட்டுக் கொண்டிருக்கிறேன். 29ஒருவன் பலவீன
மடைவதைக் கண்டால் நானும் பலவீனனாகி
விடுகிறேன். ஒருவன் பாவம் செய்வதைப்
பார்த்தால் கோபத்தால் நான் எரிச்சலாகி விடு
கிறேன்.

30நான் என்னையே பாராட்டிக் கொள்ள
வேண்டுமானால் என் பலவீனத்தை வெளிப்ப
டுத்தும் காரியங்களைக் குறித்தே பெருமை
பாராட்டிக்கொள்ள வேண்டும். 31நான் பொய்
சொல்வதில்லையென்று தேவனுக்குத் தெரி
யும். அவரே தேவன். அவரே கர்த்தராகிய
இயேசு கிறிஸ்துவின் பிதா. அவர் எக்காலத்தி
லும் பாராட்டுக்கு உரியவர். 32நான் தமஸ்கு
வில் இருந்தபோது, அரேத்தா அரசனுடைய
படைத் தளபதி என்னைக் கைது செய்ய
விரும்பினான். அதற்காக நகரைச் சுற்றி காவ
லர்களை நிறுத்தினான். 33ஆனால் சில நண்
பர்கள் என்னைக் கூடைக்குள் வைத்து சுவரில்
ஒரு சிறிய துளை செய்து அதன் வழியே
என்னை இறக்கிவிட்டனர். எனவே நான் அந்த
படைத் தளபதியிடமிருந்து தப்பினேன்.

### பவுலின் சிறப்பான ஆசீர்வாதம்

12 நான் தொடர்ந்து என்னைப் பாராட்டிக்
கொள்வது எனக்கு தகுதியாயிராது.
எனினும் நான் இப்போது கர்த்தரின் தரிசனங்
களையும், வெளிப்பாடுகளையும் பற்றிப் பேசு
கிறேன். 2கிறிஸ்துவுக்கு உள்ளான ஒரு மனி
தனை நான் அறிவேன். அவன் பதினான்கு
ஆண்டுகளுக்கு முன்னரே மூன்றாவது வானம்
வரை தூக்கி எடுத்துச் செல்லப்பட்டான்.
அவன் சரீரத்தில் இருந்தானா, சரீரத்திற்கு
வெளியே இருந்தானா என்பது எனக்குத் தெரி
யாது. ஆனால் தேவனுக்குத் தெரியும். 3அவன்
பரலோகத்துக்குத் தூக்கி எடுத்துச் செல்லப்
பட்டதை நான் அறிவேன். அப்போது அவன்
சரீரத்தோடு இருந்தானா இல்லையா என்பது
எனக்குத் தெரியாது. ஆனால் விளக்க இயலாத
சிலவற்றை அவன் கேட்டிருக்கிறான். மனித
னால் சொல்ல அனுமதிக்கப்படாதவற்றை
கேட்டிருக்கிறான். 5நான் இவனைப் பாராட்
டிப் பேசுவேன். ஆனால் என்னைப் பற்றி
பாராட்டிப் பேச மாட்டேன். நான் எனது
பலவீனத்தைப் பற்றி மட்டுமே பாராட்டிக்
கொள்வேன். 6நான் என்னையே பாராட்டிப்
பேசிக்கொள்ள வேண்டும் என்று விரும்பி
னால் நான் முட்டாளாக இருக்கமாட்டேன்.
ஏனென்றால் நான் உண்மையைச் சொல்லி
விடுவேன். அதோடு நான் சொல்வதையும்
செய்வதையும் காணும் மக்கள் என்னைப்
பற்றி மிகுதியாக நினைத்துக் கொள்வார்கள்.
அதனால் என்னைப்பற்றி நானே பெருமைப்
பேசிக் கொள்ள மாட்டேன்.

7எனக்குக் காட்டப்பட்ட அதிசயங்களைக்
குறித்து நான் அதிகம் பெருமைப்பட்டுக்கொள்
ளக் கூடாது. வேதனை மிக்க ஒரு பிரச்சனை
எனக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. (மாம்சத்தில்
ஒரு முள் என்பது அதன் பொருள்) அது
சாத்தானிடம் இருந்து அனுப்பப்பட்ட தூது
வன். நான் அதிக அளவு பெருமைப் பாராட்
டிக் கொள்வதில் இருந்து அது என்னை
அடித்துக் கட்டுப்படுத்தும். 8அப்பிரச்சனை
யில் இருந்து என்னைக் காப்பாற்றும்படி நான்
மூன்று முறை கர்த்தரிடம் வேண்டிகொண்
டேன். 9ஆனால் கர்த்தரோ என்னிடம், "என்
கிருபை உனக்குப் போதும். நீ பலவீனப்படும்
போது என் பெலன் உனக்குள் முழுமை
யாகும்" என்றார். எனவே நான் என் பல
வீனத்தைப் பற்றி மேன்மைப்படுத்தி பேசுவ
தில் மகிழ்ச்சியடைகிறேன். ஏனெனில் கிறிஸ்
துவின் வல்லமை என்மேல் தங்கியிருக்கிறது.
10எனவே பலவீனனாக இருக்கும்போது நான்
மகிழ்ச்சியடைகிறேன். மக்கள் என்னைப்பற்றி
அவதூறாக பேசும்போதும் மகிழ்ச்சி அடைகி
றேன். எனக்கு கஷ்ட காலங்கள் வரும்போது
மகிழ்ச்சி அடைகிறேன். மக்கள் என்னை
மோசமாக நடத்தும் போதும் நான் மகிழ்ச்சி
அடைகிறேன். எனக்குப் பிரச்சனைகள் வரும்
போது நான் மகிழ்ச்சி அடைகிறேன். இவை
அனைத்தும் கிறிஸ்துவுக்காகத்தான். நான் பல

வீனப்படும் போதெல்லாம், உண்மையில் பல
முள்ளவன் ஆகிறேன்.

## கொரிந்து கிறிஸ்தவர்கள் மேல் பவுலின் அன்பு

11நான் முட்டாளைப் போன்று பேசிக்
கொண்டிருந்திருக்கிறேன். இவ்வாறு நீங்களே
என்னைச் செய்தீர்கள். நீங்களெல்லாம் என்
னைப் பாராட்டியிருக்கலாம். நான் அதற்கு
தகுதியுடையவன் அல்லன். எனினும் என்
னை “அந்த மகா பிரதான அப்போஸ்தலர்க
ளோடு” ஒப்பிடும்போது நான் குறைந்தவன்
அல்லன். 12நான் உங்களோடு இருந்தபோது,
நான் அப்போஸ்தலன் என்பதை நிரூபிக்கும்
வகையில் பலவற்றைச் செய்தேன். நான்
அடையாளங்களையும், அதிசயங்களையும்,
அற்புதங்களையும் பொறுமையோடு செய்
தேன்.
13எனவே ஏனைய சபைகளைப் போன்று
நீங்களும் எல்லாவற்றையும் பெற்றீர்கள்.
உங்களுக்கு எதிலும் குறைவில்லை. ஆனால்
ஒரு வேறுபாடு. நான் எவ்வகையிலும்
உங்களுக்குப் பாரமாக இருக்கவில்லை. இது
தான் குறை. இதற்காக என்னை மன்னியுங்
கள்.
14மூன்றாவது முறையாக இப்பொழுது உங்
களிடம் வர நான் தயாராக உள்ளேன். நான்
உங்களுக்குப் பாரமாக இருக்கமாட்டேன். உங்
களுக்கு உரிய எந்தப் பொருளையும் நான்
சொந்தம் கொண்டாடமாட்டேன். நான் உங்
களை மட்டுமே விரும்புகிறேன். பெற்றோ
ருக்குப் பொருட்களைச் சேர்த்துவைக்க வேண்
டியவர்கள் பிள்ளைகள் அல்ல. பெற்றோர்
களே பிள்ளைகளுக்குப் பொருட்களைச்
சேர்த்து வைக்கவேண்டும். 15எனவே, நான்
எனக்குரியவற்றையெல்லாம் உங்களுக்காகச்
செலவு செய்வதில் மகிழ்ச்சியாக உள்ளேன்.
நான் என்னையும் உங்களுக்காகத் தருவேன்.
நான் உங்களை மிகுதியாக நேசித்தால் நீங்கள்
என்னைக் குறைவாக நேசிப்பீர்களா?
16நான் உங்களுக்குப் பாரமாக இல்லை
என்பது தெளிவாயிற்று. ஆனால் என்னைத்
தந்திரமானவன் என்றும், பொய்சொல்லி
உங்களை வசப்படுத்திவிட்டேன் என்றும்
எண்ணுகிறீர்கள். 17நான் யாரையாவது அனு
ப்பி உங்களை ஏமாற்றி இருக்கிறேனா? இல்
லையே. நீங்களும் அதை அறிவீர்கள். 18உங்க
ளிடம் செல்லுமாறு நான் தீத்துவை அனுப்பி
னேன். எங்கள் சகோதரனையும் அவனோடு
சேர்த்து அனுப்பினேன். தீத்து உங்களை
ஏமாற்றவில்லை. அல்லவா? தீத்துவும் நானும்
ஒரே ஆவியால் வழி நடத்தப்பட்டு ஒரே வித
மான வாழ்வை நடத்தினோம்.
19காலமெல்லாம் எங்களின் பாதுகாப்புக்
காக பேசுகிறோம் என்று நினைக்கிறீர்களா?
தேவனுக்கு முன்பாக கிறிஸ்துவுக்குள் பேசுகி
றோம். நீங்கள் எமது பிரியமான நண்பர்கள்.
நாங்கள் செய்வது எல்லாம் உங்களைப் பலப்
படுத்துவதற்காகத்தான். 20நான் இவற்றையெல்
லாம் ஏன் செய்கிறேன்? உங்களிடம் நான்
வரும் போது, நீங்கள் எதிர்பார்க்கிறபடி
நானும் நான் எதிர்பார்க்கிறபடி நீங்களும் இல்
லாமல் போகக்கூடாது என்று அஞ்சுகிறேன்.
விரோதம், பொறாமை, கோபம், சுயநலம்,
தீய பேச்சு, மோசமான பெருமிதம், குழப்பம்
போன்றவற்றால் நீங்கள் அழியக்கூடாது
என்று அஞ்சுகிறேன். 21மீண்டும் நான் உங்க
ளிடம் வரும்போது தேவன் என்னை உங்கள்
முன் தாழ்த்தி விடுவாரோ என்று அஞ்சுகி
றேன். பலர் தாங்கள் செய்த அசுத்தம், வேசித்
தனம், பாலியல் குற்றங்கள் போன்ற பாவங்க
ளைத் தொடக்கத்தில் செய்து, பிறகு மாறாம
லும், அதற்காக மனம் வருந்தாமலும் இருப்
பதைப் பற்றியும் நான் துக்கப்பட வேண்டியி
ருக்குமோ என்று அஞ்சுகிறேன்.

## இறுதி எச்சரிக்கைகளும் வாழ்த்துக்களும்

13 மூன்றாவது முறையாக நான் மீண்டும்
வருவேன். “எல்லா குற்றச் சாட்டுகளும்
இரண்டு மூன்று சாட்சிகளால்தான் உறுதிப்பட
வேண்டும்.”* என்பதை நினைத்துக் கொள்
ளுங்கள். 2நான் இரண்டாவது முறை உங்க
ளோடு இருந்தபோது பாவம் செய்தவர்களை
எச்சரித்திருந்தேன். இப்பொழுது உங்களிடம்
இருந்து விலகி இருக்கிறேன். பாவம்செய்த
மற்ற எல்லாரையும் எச்சரிக்கிறேன். நான்
உங்களிடம் மீண்டும் வரும்போது உங்கள்
பாவங்களுக்காக உங்களைத் தண்டிப்பேன்.
3கிறிஸ்து என் மூலம் பேசுகிறார் என்பதற்கு
உங்களுக்கு ஆதாரம் வேண்டுமா? (உங்களை
நான் தண்டிக்கும்போது, நீங்கள் அதைப்
பார்ப்பீர்கள்.) அவர் உங்களிடத்தில் பலவீன
ராக இல்லை; வல்லவராய் இருக்கிறார். 4சிலு
வையில் அறையப்படும் போது கிறிஸ்து பல
வீனமானவராயிருந்தார் என்பது உண்மை.
ஆனால் தேவனுடைய வல்லமையால் இப்
போது வாழ்கிறார். நாமும் கிறிஸ்துவுக்குள்
பலவீனராக இருக்கிறோம் என்பது உண்மை.
ஆனால் தேவனுடைய வல்லமையால் நாங்கள்
உங்களுக்காக கிறிஸ்துவுக்குள் உயிரோடு
இருப்போம்.
5நீங்கள் உங்களையே பாருங்கள். விசுவா
சத்தில் வாழ்கிறீர்களா என உங்களை நீங்களே
சோதித்துப் பாருங்கள். இயேசு கிறிஸ்து உங்க
ளுக்குள் இருக்கிறாரா, இல்லையா என்று
உங்களுக்குத் தெரியும். நீங்கள் சோதனையில்
தோற்றுவிட்டால் கிறிஸ்து உங்களோடு
இல்லை.
6நாங்கள் சோதனையில் தோற்றவர்கள்
இல்லை என்பதை நீங்கள் அடையாளம் கண்டு
கொள்வீர்கள் என்று நம்புகிறேன். 7நீங்கள்
தவறாக எதுவும் செய்யக் கூடாது என்பதே
தேவனிடம் எங்கள் பிரார்த்தனை. நாங்கள்
சோதனையில் வெற்றி பெற்றோமா

---

**எல்லா ... வேண்டும்** உபா. 19:15.

இல்லையா என்பது முக்கியமல்ல. நாங்கள்
சோதனையில் தோற்றவர்கள் என மக்கள்
நினைக்க நேர்ந்தாலும் கூட நீங்கள் நேர்மை
யானதைச் செய்யவேண்டும் என்பதுதான்
முக்கியம். 8உண்மைக்கு எதிரானவற்றை
எங்களால் செய்ய முடியாது. எங்களால் உண்
மைக்குரியதை மட்டுமே செய்யமுடியும். 9நீங்
கள் பலமுள்ளவர்களாய் இருக்கும்வரை நாங்
கள் பெலவீனராய் இருப்பதைக் குறித்து எங்க
ளுக்கு மகிழ்ச்சியே. நீங்கள் மென்மேலும் பல
முள்ளவர்களாகும்படிக்கு பிரார்த்தனை செய்
கிறோம். 10நாங்கள் உங்களோடு இல்லாததால்
இதை எழுதுகிறேன். எனவே உங்களிடம்
வரும்போது என்னிடம் உள்ள ஆற்றலைப்
பயன்படுத்தி உங்களைத் தண்டிக்க மாட்டேன்.
கர்த்தர் எனக்கு உங்களைப் பலப்படுத்தவே
வல்லமை கொடுத்துள்ளார்; உங்களை அழிக்க
அல்ல.

11சகோதர சகோதரிகளே, மகிழ்ச்சியோடு
இருங்கள். முழுமை பெற முயலுங்கள். நான்
செய்யச் சொன்னவற்றைச் செய்யுங்கள். ஒருவ
ருக்கொருவர் மனதார ஒத்துப் போங்கள். சமா
தானத்தோடு வாழுங்கள். அப்பொழுது அன்
புக்கும் சமாதானத்திற்கும் உரிய தேவன் உங்க
ளோடு இருப்பார். 12ஒருவரையொருவர் பரி
சுத்தமான முத்தத்தால் வாழ்த்துங்கள். 13தேவ
னுடைய பரிசுத்தவான்களெல்லாரும் உங்க
ளுக்கு வாழ்த்துக்களைக் கூறுகிறார்கள்.

14கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் கிரு
பையும், தேவனின் அன்பும், பரிசுத்த ஆவியா
னவரின் ஐக்கியமும் உங்கள் அனைவரோடும்
இருப்பதாக.

# கலாத்தியருக்கு எழுதிய கடிதம்

1 அப்போஸ்தலனாகிய பவுல் எழுதுவதா
வது: நான் மனிதர்களால் தேர்ந்தெடுக்கப்
பட்ட அப்போஸ்தலன் அல்ல. நான் மனிதர்
களிடமிருந்து அனுப்பப்படவில்லை. இயேசு
கிறிஸ்துவும், பிதாவாகிய தேவனும் என்னை
அப்போஸ்தலனாக ஆக்கினார்கள். தேவன்
ஒருவரே இயேசுவை மரணத்தில் இருந்து
உயிர்த்தெழும்படி செய்தவர்.
2இந்த நிருபம் என்னோடு இருக்கிற என்
சகோதரர்கள் அனைவரும் கலாத்தியா* நாட்
டில் உள்ள சபைகளுக்கு அனுப்புவது.
3பிதாவாகிய தேவனாலும், நம்முடைய
கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவாலும் உங்க
ளுக்குக் கிருபையும், சமாதானமும் உண்டாகட்
டும். 4இயேசு நமது பாவங்களுக்காகத் தம்மைத்
தாமே ஒப்புக் கொடுத்தார். நாம் வாழ்ந்து
கொண்டிருக்கிற கெட்ட உலகில் இருந்து விடு
தலை பெறுவதற்காக அவர் இதைச் செய்தார்.
இதனையே பிதாவாகிய தேவனும் விரும்பி
னார். 5தேவனுடைய மகிமை எல்லா காலங்க
ளிலும் இருப்பதாக. ஆமென்.

### ஒரே ஒரு உண்மையான நற்செய்தி

6கொஞ்சக் காலத்துக்கு முன்பு தேவன்
தன்னைப் பின்பற்றும்படி உங்களை அழைத்
தார். அவர் உங்களைத் தன் கிருபையால்
கிறிஸ்துவின் மூலமாக அழைத்தார். ஆனால்
இப்பொழுது உங்களைக் கண்டு நான்
ஆச்சரியப்படுகிறேன். ஏற்கெனவே நீங்கள்
அவர் வழியில் இருந்து மாறிவிட்டீர்கள் 7உண்
மையில் வேறு ஒரு நற்செய்தி என்பது
இல்லை. ஆனால் சிலர் உங்களைக் குழப்பிக்
கொண்டிருக்கிறார்கள். அவர்கள் கிறிஸ்து
வின் நற்செய்தியை மாற்றிவிட விரும்புகிறார்
கள். 8நாங்கள் உங்களுக்கு உண்மையான
நற்செய்தியைக் கூறினோம். எனவே நாங்
களோ அல்லது வானத்திலிருந்து வந்த ஒரு
தேவதூதனோ வேறொரு நற்செய்தியை உங்க
ளுக்குக் கூறினால் அவன் கடிந்துகொள்ளப்பட
வேண்டும். 9நான் ஏற்கெனவே இதனைச்
சொன்னேன். அதனை இப்போது மறுபடியும்
கூறுகின்றேன். நீங்கள் ஏற்கெனவே உண்மை
யான நற்செய்தியை ஏற்றுக்கொண்டிருக்கிறீர்
கள். நீங்கள் இரட்சிக்கப்படுவதற்கு வேறு
வழியை எவரேனும் உங்களுக்குக் கூறினால்
அவன் கடிந்துகொள்ளப்படவேண்டும். 10என்
னை ஏற்றுக்கொள்ளும்படி செய்ய நான் மக்க
ளிடம் முயற்சி செய்கிறேன் என்று நினைக்
கிறீர்களா? இல்லை. நான் தேவனுக்கு வேண்
டியவனாக இருக்க மட்டுமே முயற்சி செய்
கிறேன். நான் மனிதர்களைத் திருப்திப்படுத்
தவா முயற்சி செய்துகொண்டிருக்கிறேன்?
அவ்வாறு நான் மனிதர்களை திருப்திப்படுத்
திக் கொண்டிருந்தால் இயேசு கிறிஸ்துவின்
ஊழியனாக நான் இருக்கமுடியாது.

### பவுலின் அதிகாரம் தேவனிடமிருந்து வந்தது

11சகோதரர்களே, என்னால் பிரசங்கிக்கப்
பட்ட நற்செய்தியானது மனிதர்களால் உரு
வாக்கப்பட்டதல்ல. இதனை நீங்கள் தெரிந்து
கொள்ளவேண்டும் என்று நான் விரும்புகி
றேன். 12நான் இந்த நற்செய்தியை மனிதர்களி
டம் இருந்து பெறவில்லை. எந்த மனிதனும்
நற்செய்தியை எனக்குக் கற்பிக்கவில்லை.
இயேசு கிறிஸ்து இதனை எனக்குக் கொடுத்
தார். மக்களிடம் நான் சொல்லவேண்டும் என்
பதற்காகவே அவர் எனக்கு வெளிப்படுத்தி
னார்.
13நீங்கள் எனது கடந்த கால வாழ்வைப்
பற்றி அறிந்திருக்கிறீர்கள். நான் யூதர்களின்
மதத்தில் இருந்தேன். தேவனுடைய சபையை
நான் மிகவும் துன்புறுத்தினேன். அதனை
அழித்துவிட முயன்றேன். 14நான் யூதர்களின்
மதத்தில் தலைவனாக இருந்தேன். என்
வயதுள்ள மற்ற யூதர்களைவிட நான் அதிக
செயல்கள் செய்தேன். மற்றவர்களை விட நான்
பழைய மரபு விதிகளைக் கடுமையாகக்
கடைப்பிடிக்க முயன்றேன். அவ்விதிகள் நமது
முன்னோர்களிடமிருந்து நாம் பெற்றவை
ஆகும்.
15ஆனால் நான் பிறப்பதற்கு முன்னரே
தேவன் எனக்காக வேறு ஒரு தனித் திட்டம்
வைத்திருந்தார். அதனால் அவர் கிருபையாக
என்னை அழைத்தார். அவரிடம் எனக்காக
வேறு திட்டங்கள் இருந்தன. 16நான் யூதர்
அல்லாதவர்களிடம் போய் இயேசு கிறிஸ்து
வின் நற்செய்தியைப் போதிக்க வேண்டும்
என்று தேவன் விரும்பினார். எனவே அவர்
தமது குமாரனை எனக்கு வெளிப்படுத்தினார்.
தேவன் என்னை அழைத்தபோது, வேறு எந்த
மனிதரிடமிருந்தும் நான் ஆலோசனையோ,
அறிவுரையோ கேட்கவில்லை. 17எருசலேமில்

---

***கலாத்தியா*** *தன் முதல் பயணத்தில் பவுல் சபைகளை ஆரம்பித்தப் பகுதியாக இது பெரும்பாலும் இருக்கக் கூடும்.*

உள்ள அப்போஸ்தலர்களையும் நான் போய்ப்
பார்க்கவில்லை. அவர்கள் எல்லாம் எனக்கு
முன்னரே அப்போஸ்தலர்களாய் இருக்கிறவர்
கள். ஆனால் நான் யாருக்காகவும் காத்திருக்
காமல் அரேபியாவுக்குப் போனேன். பிறகு
அங்கிருந்து தமஸ்கு என்ற நகருக்குத் திரும்பி
வந்தேன்.

18மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு, நான்
எருசலேமுக்குப் போனேன். நான் பேதுரு
வைச்* சந்திக்க விரும்பினேன். அவரோடு
பதினைந்து நாட்கள் நான் தங்கி இருந்தேன்.
19வேறு எந்த அப்போஸ்தலர்களையும் அங்கு
நான் சந்திக்கவில்லை. இயேசுவின் சகோதர
னான யாக்கோபை மட்டும் சந்தித்தேன். 20நான்
எழுதுபவை எல்லாம் பொய் அல்ல என்று
தேவனுக்குத் தெரியும். 21பிறகு சீரியா, சிலி
சியா போன்ற பகுதிகளுக்கு நான் சென்றேன்.
22யூதேயாவில் இருக்கிற சபைகளில் உள்ள
வர்கள் என்னை இதற்கு முன்னால் பார்த்த
தில்லை.

23அவர்கள் என்னைப்பற்றி சிலவற்றைக்
கேள்விப்பட்டிருந்தார்கள். அதாவது, "முன்பு
நம்மைத் துன்பப்படுத்தியவனே தான் அழிக்க
நினைத்த விசுவாசத்தைக் குறித்து இப்பொ
ழுது பிரசங்கம் செய்கிறான்." 24எனவே
விசுவாசிகள் என்னைக் குறித்துத் தேவனைப்
புகழ்ந்தனர்.

### பிற அப்போஸ்தலர்களும் பவுலை ஏற்றுக்கொண்டனர்

2 பதினான்கு ஆண்டுகளுக்குப் பின்பு எருச
லேமுக்கு நான் மீண்டும் சென்றேன். பர்ன
பாவோடு நான் சென்றேன். கூடவே தீத்துவை
யும் அழைத்துச் சென்றேன். 2தேவன் எனக்குக்
கட்டளை இட்டபடியும், வழிகாட்டியபடியும்
நான் விசுவாசிகளின் தலைவர்களைக் காண
ப்போனேன். நாங்கள் தனிமையில் இருக்கும்
போது யூதர் அல்லாதவர்களிடம் நான் போதிக்
கும் நற்செய்தியை அவர்களிடம் சொன்னேன்.
எனது பணியை அவர்கள் புரிந்துகொள்ள
வேண்டும் என்று விரும்பினேன். இதனால்
நான் ஏற்கெனவே செய்தவையும் இப்பொழுது
செய்து கொண்டிருப்பதுவும் வீணாகாமல்
இருக்கும். 3-4என்னுடன் தீத்து இருந்தான்.
அவன் ஒரு கிரேக்கன். ஆயினும் அந்தத் தலை
வர்கள், தீத்துவை விருத்தசேதனம் செய்து
கொள்ளும்படி கட்டாயப்படுத்த வில்லை. இது
போன்ற சிக்கல்களைப் பற்றிப் பேசவேண்டிய
தேவை எங்களுக்கு ஏற்பட்டது. ஏனென்றால்
சில போலிச் சகோதரர்கள் இரகசியமாய் எங்
கள் குழுவில் சேர்ந்திருந்தனர். அவர்கள்
ஒற்றர்களைப் போல இருந்தனர். இயேசு கிறிஸ்
துவுக்குள் நமக்கு உண்டான சுதந்தரத்தை
அவர்கள் அறிய விரும்பினர். 5ஆனால் அந்த
போலிச் சகோதரர்கள் விருப்பப்படி நாங்கள்
எதையும் ஒப்புக் கொள்ளவில்லை. தொடர்ந்து
நற்செய்தியின் முழு உண்மை உங்களோடு
இருப்பதையே நாங்கள் விரும்பினோம்.

6மிக முக்கியமாய்க் கருதப்பட்ட அந்த மனி
தர்கள் நான் பிரசங்கம் செய்த நற்செய்தியில்
எந்த மாற்றமும் செய்யவில்லை. அவர்கள்
"முக்கியமானவர்களா" இல்லையா என்பது
பற்றி நான் கவலைப்படவில்லை. தேவனுக்கு
முன்னால் அனைவரும் சமம்தானே. 7அதற்கு
மாறாக அத்தலைவர்கள் பேதுருவைப்
போன்றே எனக்கும் தேவன் சிறப்புப் பணிக
ளைக் கொடுத்திருப்பதாக உணர்ந்தனர்.
தேவன் பேதுருவிடம், யூதர்களுக்கு நற்செய்தி
யைப் பிரசங்கிக்கும்படி ஆணையிட்டிருந்தார்.
ஆனால் எனக்கோ, யூதர் அல்லாதவர்க
ளுக்குப் போதிக்கும்படி தேவன் ஆணையிட்டி
ருந்தார். 8ஒரு அப்போஸ்தலனைப்போலப்
பணியாற்றும்படி பேதுருவுக்குத் தேவன் அதி
காரத்தைத் தந்தார். யூதர்களுக்குப் பேதுருவும்
ஒரு அப்போஸ்தலனாகவே இருந்தான். நானும்
ஒரு அப்போஸ்தலனைப்போல பணியாற்ற
தேவன் எனக்கு அதிகாரம் கொடுத்திருந்தார்.
ஆனால் நானோ யூதர் அல்லாதவர்களுக்காக
அப்போஸ்தலனாக இருக்கிறேன். 9யாக்கோபு,
பேதுரு, யோவான் ஆகியோர் தலைவர்களாக
இருந்தனர். தேவன் எனக்குச் சிறப்பு வரத்
தைக் கொடுத்திருப்பதாக அவர்கள் எண்ணி
னர். அதனால் அவர்கள் என்னையும், பர்ன
பாவையும் ஏற்றுக்கொண்டனர். அவர்கள் எங்
களிடம், "நாங்கள் உங்களை ஏற்றுக்கொள்கி
றோம். நாங்கள் யூதர்களுக்குப் போதனை
செய்கிறோம். யூதர் அல்லாதவர்களிடம் நீங்கள்
செல்லுங்கள்" என்றார்கள். 10ஏழை மக்களை
நினைத்துக் கொள்ளும்படி மட்டும் அவர்கள்
எனக்குச் சொன்னார்கள். இதுதான் நான்
சிறப்பாக என்னை அர்ப்பணித்த ஒன்றாக
இருந்தது.

### பேதுருவின் தவறைப் பவுல் வெளிப்படுத்துதல்

11அந்தியோகியாவுக்குப் பேதுரு வந்தார்.
அவர் செய்தவற்றுள் சில சரியானவை அல்ல.
அவர் தவறு செய்தார். அதனால் அவரோடு
நேருக்கு நேராக எதிர்த்தேன். 12அந்தியோகியா
வுக்கு அவர் வந்தபோது, யூதர் அல்லாதவர்க
ளோடு அவர் சேர்ந்தார். அவர்களோடு
உணவு உட்கொண்டார். ஆனால் யாக்கோபிட
மிருந்து அனுப்பியிருந்த சில யூதர்கள் வந்த
போது, யூதர் அல்லாதவர்களோடு சேர்ந்து
உணவு உண்ணப் பேதுரு மறுத்துவிட்டார்.
அவர்களிடமிருந்து விலகிக்கொண்டார். அவர்
யூதர்களுக்குப் பயந்துவிட்டார். ஏனென்றால்
யூதர்கள், யூதர் அல்லாதவர்களும் விருத்த
சேதனம் செய்து கொள்ளவேண்டும் என்று
நம்புகின்றவர்கள். 13ஆகையால் பேதுரு பொய்
முகக்காரராக இருந்தார். ஏனைய யூதர்களும்
அவரோடு சேர்ந்து கொண்டனர். எனவே

---

**பேதுரு** பேதுருவுக்குரிய யூதப்பெயர் 'கேபா' என்று பிரதி கூறுகிறது. இவன் இயேசுவின் பன்னிரெண்டு சீஷர்களுள் ஒருவன்.

*அவர்களும் பொய்முகக்காரர்கள். இதனால் பர்*
*னபாவும் பாதிக்கப்பட்டான். 14யூதர்கள் செய்*
*வதை நான் பார்த்தேன். அவர்கள் நற்செய்தி*
*யின் முழு உண்மையைப் பின்பற்றவில்லை.*
*எனவே எல்லாரும் கேட்கும்படியே நேரடி*
*யாய் பேதுருவிடம் சென்று நான் கண்டித்*
*தேன். "பேதுரு நீங்கள் ஒரு யூதர். ஆனால்*
*நீங்கள் ஒரு யூதரைப் போல வாழவில்லை.*
*நீங்கள் யூதர் அல்லாதவரைப் போல வாழ்கி*
*றீர்கள். இவ்வாறு இருக்க நீங்கள் எப்படி*
*யூதர் அல்லாதவர்களை யூதர்கள் போல வாழ*
*வேண்டும் என்று கட்டாயப்படுத்த முடியும்?"*
*என்று கேட்டேன்.*
*15யூதர் அல்லாதவர்களைப் போன்றும்,*
*பாவிகளைப் போன்றும் யூதர்களாகிய நாம்*
*பிறக்கவில்லை. நாம் யூதர்களைப் போலப்*
*பிறந்தோம். 16சட்டங்களின் விதி முறைகளை*
*ஒருவன் பின்பற்றுவதினாலேயே தேவனுக்கு*
*வேண்டியவனாக முடியாது என்பது எங்க*
*ளுக்குத் தெரியும். இயேசு கிறிஸ்துவின் மீது*
*எவன் நம்பிக்கை வைக்கிறானோ அவனே*
*தேவனுக்கு வேண்டியவனாகிறான். எனவே,*
*நாம் இயேசு கிறிஸ்துவிடம் நம்பிக்கை வைத்தி*
*ருக்கிறோம். ஏனென்றால் நாம் தேவனுக்கு*
*வேண்டியவர்களாக வேண்டும். நாம் சட்டங்*
*களைப் பின்பற்றுவதால் அல்ல, இயேசுவின்*
*மீது விசுவாசம் வைப்பதாலேயே தேவனுக்கு*
*வேண்டியவர்களாக இருக்கிறோம். இது உண்*
*மை. ஏனென்றால் சட்டங்களைப் பின்பற்றுவ*
*தன் மூலம் எவரொருவரும் தேவனுக்கு வேண்*
*டியவராக முடியாது.*
*17யூதர்களாகிய நாம் கிறிஸ்துவிடம் வந்துள்*
*ளோம். காரணம், நாம் தேவனுக்கு வேண்டிய*
*வர்களாக வேண்டும். எனவே, நாம் பாவிகள்*
*என்பது தெளிவாகிறது. இதற்குக் கிறிஸ்து*
*காரணம் ஆவாரா? இல்லை. 18ஆனால், நான்*
*விட்டுவிட்டவற்றை மீண்டும் போதிக்கத்*
*தொடங்கினால் நானும் தவறானவன் என்று*
*கருதப்படுவேன். 19சட்டங்களுக்காக வாழ்வது*
*என்பதை நான் விட்டுவிட்டேன். அச்சட்டங்*
*களோ என்னைக் கொன்றுவிட்டது. நான் விதி*
*முறையின்படி இறந்துபோனேன். எனினும்*
*தேவனுக்காக வாழ்ந்து கொண்டிருக்கிறேன்.*
*எனது கடந்தகால வாழ்வு கிறிஸ்துவோடு*
*சிலுவையில் இறந்தது. 20நான் இப்போது*
*வாழ்ந்துகொண்டிருக்கிற வாழ்வு எனக்கா*
*னது அல்ல. இயேசு கிறிஸ்து இப்போது என்*
*னில் வாழ்ந்து கொண்டிருக்கிறார். இப்போது*
*இந்த சரீரத்திலே நான் வாழ்ந்தாலும் தேவனு*
*டைய குமாரன் மீதுள்ள விசுவாசத்தால்*
*வாழ்கிறேன். இயேசு ஒருவரே என்மீது அன்பு*
*கொண்டவர். என்னை இரட்சிப்பதற்காக*
*அவர் தன்னையேத் தந்தவர். 21இந்தக் கிருபை*
*தேவனிடமிருந்து வந்தது. இது எனக்கு மிகவும்*
*முக்கியமானது. ஏனென்றால் சட்டத்தின் மூலம்*
*மனிதன் திருந்தி நீதிமானாக முடியுமென்றால்*
*இயேசு கிறிஸ்துவின் மரணம் தேவையில்லா*
*மல் போயிருக்கும்.*

### விசுவாசத்தின் மூலமே தேவனுடைய ஆசீர்வாதம் கிடைக்கிறது

3 *இயேசு கிறிஸ்து சிலுவையில் மரணம்*
*அடைந்தார் என்பது பற்றி மிகத் தெளி*
*வாகக் கலாத்திய மக்களாகிய உங்களுக்குச்*
*சொல்லப்பட்டது. ஆனால் நீங்களோ புத்தியற்ற*
*வர்களாய் இருந்தீர்கள். எவரையோ உங்களி*
*டம் தந்திரம் செய்ய அனுமதித்து விட்டீர்கள்.*
*2இதைப்பற்றி எனக்குக் கூறுங்கள். பரிசுத்த*
*ஆவியானவரை நீங்கள் எப்படிப் பெற்றுக்*
*கொண்டீர்கள்? சட்டங்களைப் பின்பற்றுவதன்*
*மூலம் ஆவியானவரை ஏற்றுக் கொண்டீர்*
*களா? இல்லை. நீங்கள் ஆவியைப் பெற்றீர்கள்.*
*ஏனென்றால் நீங்கள் நற்செய்தியைக் கேள்விப்*
*பட்டு நம்பினீர்கள். 3ஆவியானவரால் நீங்கள்*
*கிறிஸ்துவில் உங்கள் வாழ்க்கையைத் தொடங்*
*கினீர்கள். இப்பொழுது உங்கள் சொந்த மாம்*
*சீக பலத்தால் தொடர முயற்சி செய்கிறீர்களா?*
*எவ்வளவு புத்தியற்றவர்கள் நீங்கள்? 4பலவ*
*கையிலும் அனுபவங்களை நீங்கள் பெற்றிருக்*
*கிறீர்கள். அவை எல்லாம் வீணாக வேண்*
*டுமா? அவை வீணாகாது என்று எனக்கு*
*நம்பிக்கை இருக்கிறது. 5நீங்கள் சட்டங்களைப்*
*பின்பற்றுவதால் தேவன் உங்களுக்கு ஆவி*
*யைக் கொடுக்கிறாரா? இல்லை. நீங்கள் சட்டங்*
*களைப்பின்பற்றுவதால் தேவன் உங்களிடம்*
*அற்புதங்களைச் செய்கிறாரா? இல்லை. உங்க*
*ளுக்கு அவர் ஆவியைக் கொடுத்ததும், அற்பு*
*தங்களை நடப்பித்ததும் நீங்கள் நற்செய்தியைக்*
*கேட்டு நம்பினீர்கள் என்பதால்தான்.*
*6ஆபிரகாமைப் பற்றியும், வேதவாக்கியங்*
*கள் அதையேக் கூறுகிறது. "ஆபிரகாம் தேவ*
*னை விசுவாசித்தார். அவரது விசுவாசத்தை*
*தேவன் ஏற்றுக்கொண்டார். இது அவரை*
*தேவனுக்கு முன்பு நீதிமானாக்கியது."* 7ஆக*
*வே ஒன்றைத் தெரிந்துகொள்ளுங்கள். தேவன்*
*மீது விசுவாசம் வைக்கிறவர்களே ஆபிரகா*
*மின் உண்மையான பிள்ளைகள். 8எதிர்காலத்*
*தில் என்ன நடக்கும் என்பது பற்றியும் வேத*
*வாக்கியங்கள் கூறியது. யூதர் அல்லாத மக்*
*களைச் சரியான வழியில் அவர்களின் விசு*
*வாசத்தின் மூலமே தேவன் வழிநடத்துவார்.*
*"பூமியில் உள்ள மக்களையெல்லாம் ஆசீர்*
*வதிக்க, ஆபிரகாமே, தேவன் உன்னைப் பயன்*
*படுத்துவார்"* என்று சுவிசேஷமாய் முன்*
*அறிவித்தது. 9ஆபிரகாம் இதை நம்பினார்.*
*நம்பியதால், அவர் ஆசீர்வதிக்கப்பட்டது*
*போலவே, நம்பிக்கையுள்ள அனைவரும் ஆசீ*
*ர்வதிக்கப்படுவர். 10ஆனால் சட்டத்தின்படி*
*வாழ்பவர்கள் எவரும் சாபத்துக்குள்ளாவார்*
*கள். ஏனென்றால் "ஒருவன் சட்டங்களைத்*
*தன் வாழ்நாள் முழுவதும் கடைப்பிடிக்க*
*வேண்டும். இல்லாவிட்டால் அவன் சபிக்கப்*
*படுவான்"* என்று சட்டங்களின் நூலில் எழு*

---

**ஆபிரகாம் … நீதிமானாக்கியது** *ஆதி.* 15:6.

**பூமியில் … பயன்படுத்துவார்** *ஆதி.* 12:3.

**ஒருவன் … படுவான்** *உபா.* 27:26.

தப்பட்டுள்ளது. [11]ஆகவே எவனும், சட்டத்தின் மூலம் தேவனுக்கு வேண்டியவனாவதில்லை என்பது தெளிவாக உள்ளது. ஏனெனில், "வேதவாக்கியங்களில் விசுவாசத்தினாலே தேவனுக்கு வேண்டியவனாக இருக்கிறவன் எப்போதும் வாழ்வான்"* என்று சொல்லி இருப்பதே இதன் காரணம். [12]விசுவாசம் சட்டம் அடிப்படையில் இயங்குவது அல்ல. அது வேறுபட்ட வழியைப் பயன்படுத்துகிறது. "எவனொருவன் சட்டங்களைக் கடைப்பிடிக் கிறானோ அவனே வாழ்வான்" என்று சட்டங் கள் கூறும். [13]நம்மீது சட்டங்களானது சாபம் போட்டுள்ளது. ஆனால் கிறிஸ்து அச்சாபத்தை விலக்கிவிட்டார். தன்னையே அவர் சாபத் துக்கு உள்ளாக்கிக் கொண்டார். "எப்பொழுது ஒருவனது சரீரம் மரத்திலே தொங்க*விடப்படு கிறதோ அவனே சாபத்துக்கு உள்ளாகி றான்"* என்று எழுதப்பட்டிருக்கிறது. [14]கிறி ஸ்து இதனைச் செய்தார். அதனால் தேவனு டைய ஆசீர்வாதம் அனைத்து மக்களுக்கும் கிடைக்கிறது. தேவன் ஆபிரகாமையும் ஆசீர் வதிப்பதாக வாக்குக் கொடுத்திருக்கிறார். இந்த ஆசீர்வாதம் இயேசு கிறிஸ்துவின் மூலமாய்த் தான் வருகிறது. இயேசு மரித்தார். அதனால் தேவனுடைய வாக்குறுதிப்படி பரிசுத்த ஆவி யைப் பெற்றோம். விசுவாசத்தின் மூலம், நாம் அவ்வாக்குறுதிகளைப் பெறுகிறோம்.

### சட்டமும் வாக்குறுதியும்

[15]சகோதர சகோதரிகளே உங்களுக்கு ஒரு எடுத்துக்காட்டுச் சொல்கிறேன். மனிதர்களுக் குரிய உடன்படிக்கையைப் பற்றி எண்ணிப் பாருங்கள். இவ்வாறு மனிதர்களுக்குள் அதி காரப் பூர்வமாக உடன்படிக்கை ஏற்பட்டப் பிறகு, யாரும் அதில் உள்ளவற்றைத் தள்ளுவ தும் இல்லை. புதிதாகச் சேர்த்துக் கொள்ளு வதும் இல்லை. எவரொருவரும் அவற்றை ஒதுக்குவதும் இல்லை. [16]ஆபிரகாமுக்கும் அவ னது சந்ததிக்கும் தேவன் ஒரு வாக்குத்தத் தம் கொடுத்திருந்தார். அவர் "உன் சந்ததி களுக்கு" என்று பன்மையில் சொல்லாமல் "உன் சந்ததிக்கு" என்று ஒருமையில் சொல்லி இருக்கிறார். எனவே இது கிறிஸ்துவையே குறிக்கும். [17]எனவே நான் சொல்வது என்ன வென்றால் சட்டங்கள் வருவதற்கு முன்பே ஆபிரகாமிடம் தேவன் ஓர் உடன்படிக்கையை அதிகாரப் பூர்வமாகச் செய்திருக்கிறார். சட்டங் களோ 430 ஆண்டுகளுக்குப் பின்னர் வந்தது. எனவே அது அந்த உடன்படிக்கையை எவ்வ கையிலும் பாதிக்காது. தேவன் ஆபிரகா முக்குச் செய்து கொடுத்த வாக்குத்தத்தமும் தவறாதது. [18]தேவனுடைய வாக்குறுதியை நாம் சட்டங்களைப் பின்பற்றி வருவதன் மூலம் அடைய முடியுமா? முடியாது. அப்படியானால் தேவன் கொடுத்தது வாக்குறுதி ஆகாது. ஆனால் தேவனோ தன் ஆசீர்வாதங்களைத் தன் வாக்குத்தத்தத்தின் மூலம் இலவசமாய் ஆபிரகாமுக்குக் கொடுத்தார். [19]அப்படியென் றால் சட்டங்களின் நோக்கம் என்ன? அவை மனிதர் செய்யும் தீமைகளை அவர்களுக்குச் சுட்டிக்காட்டின. ஆபிரகாமின் சிறப்பான வாரிசு வரும்வரை இச்சட்டம் தொடர்ந்து பயன்பட்டது. தேவன் இந்த வாரிசைப் (கிறி ஸ்து) பற்றியே வாக்குறுதிக் கொடுத்திருக்கி றார். இச்சட்டங்கள் தேவதூதர்கள் மூலமாகக் கொடுக்கப்பட்டது. தேவதூதர்கள் மோசேயை மத்தியஸ்தராகப் பயன்படுத்தி சட்டங்களை மனிதர்களுக்கு வழங்கினர். [20]மத்தியஸ்தன் ஒருவன் மட்டுமல்ல, ஆனால் தேவன் ஒருவராக மட்டுமே இருக்கிறார்.

### மோசேயின் சட்டங்களுடைய நோக்கம்

[21]இதனால் சட்டம் தேவனுடைய வாக்குறு திக்கு எதிரானவை என்று பொருள் கொள்ள முடியுமா? முடியாது. மனிதர்களுக்கு ஜீவ னைக் கொடுக்கக்கூடிய ஒரு சட்டம் இருந்தால் பிறகு நாம் அதனைக் கடைப்பிடித்து வாழ்வ தன் மூலமே தேவனுக்கு வேண்டியவராக முடியும். [22]ஆனால் இதுவும் உண்மை கிடை யாது. ஏனென்றால் எல்லா மனிதர்களும் பாவத்தால் கட்டப்பட்டுள்ளதாக வேதவாக்கி யங்கள் கூறுகிறது. எனவே தேவனுடைய வாக்குறுதி, விசுவாசத்தின் மூலமே கிடைக்கி றது. இயேசு கிறிஸ்துவின் மீது நம்பிக்கை வைப்பவர்களுக்கே வாக்குறுதி வந்து சேரும்.

[23]இந்த விசுவாசம் வருவதற்கு முன்னால் நாம் எல்லாரும் சட்டத்தால் சிறைப் படுத்தப் பட்டிருந்தோம். தேவன் நமக்கு விசுவாசத்திற் குரிய வழியை வெளிப்படுத்தும்வரை நமக்கு விடுதலை இல்லாதிருந்தது. [24]எனவே, கிறி ஸ்து வரும்வரை சட்டம் நமது எஜமானனாக இருந்தது. இயேசு வந்தபிறகு நாம் விசுவாசத் தின் மூலமாக தேவனுக்கு வேண்டியவர்களாக ஆனோம்.

[25]இப்போது விசுவாசத்துக்கு உரிய வழி வந்துவிட்டது. எனவே, நாம் இனிமேல் சட்டத்தின் கீழ் வாழவேண்டியதில்லை.

[26-27]நீங்கள் அனைவரும் கிறிஸ்துவுக்குள் ஞானஸ்நானம் பெற்றிருக்கிறீர்கள். எனவே நீங்கள் அனைவரும் கிறிஸ்துவை அணிந்து கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் அனைவரும் விசுவாசத்தின் வழியில் இயேசு கிறிஸ்துவுக் குள் தேவனுடைய பிள்ளைகள் ஆகிவிட்டீர் கள் என்பதை இது காட்டும். [28]இப்போது கிறிஸ்துவுக்குள் யூதர்கள், கிரேக்கர்கள் என்று எந்த வேறுபாடுகளும் இல்லை. அடிமைகள், சுதந்தரமானவர்கள் என்றும் வேறுபாடுகள் இல்லை. ஆண், பெண் என்றும் வேறுபாடு இல்லை. கிறிஸ்துவாகிய இயேசுவின் முன் நீங்கள் அனைவரும் சமம்தான். [29]நீங்கள் கிறிஸ்துவைச் சேர்ந்தவர்கள். எனவே நீங்கள் ஆபிரகாமின் பரம்பரையினர். ஆகவே தேவன்

---

***விசுவாசம் ... வாழ்வான்*** ஆபகூக் 2:4.
***மரத்திலே தொங்க*** உபா. 21:22-23.
***எப்பொழுது ... உள்ளாகிறான்*** உபா. 21:23.

ஆபிரகாமுக்குக் கொடுத்த வாக்குறுதிகளை
நீங்கள் அனைவரும் பெற்றுக் கொள்கிறீர்கள்.
4 இதை உங்களுக்குச் சொல்ல நான் விரும்
புகிறேன். ஒருவன் தன் சொத்துக்களுக்
கெல்லாம் உரிமையுடையவனாய் இருந்தும்
அவன் சிறுபிள்ளையாய் இருந்தால் அவனுக்
கும் அடிமைக்கும் எந்த வேறுபாடும் இல்லை.
2ஏனென்றால் அவன் குழந்தை. அவன் தன்
பாதுகாப்பாளர்களின் கட்டுப்பாட்டில் இருக்கி
றான். ஆனால் தன் தந்தையின்படி குறித்த
வயதை அடையும்போது அவன் சுதந்தரம்
உள்ளவனாக விளங்குகிறான். 3நாமும் இதைப்
போலத்தான். நாம் எல்லாரும் குழந்தைகளைப்
போன்றவர்கள். நாம் பயனற்ற சட்டங்களுக்கு
அடிமையாய் இருந்தோம். 4ஆனால் சரியான
நேரம் வந்தபோது, தேவன் தன் மகனை
அனுப்பினார். தேவனுடைய குமாரன் ஒரு
பெண்ணினிடத்தில் பிறந்தார். அவரும் விதி
முறைகளின்படியே வாழ்ந்தார். 5இதனைச்
செய்ததன் மூலம், சட்டங்களுக்கு அடிமைப்பட்
டுக் கிடந்த மக்களுக்குத் தேவன் விடுதலையை
வழங்கினார். நம்மை அவரது பிள்ளைகளாக
ஆக்கவேண்டும் என்பது தான் இவரது நோக்
கம்.

6நீங்கள் தேவனுடைய பிள்ளைகள். அத
னால்தான் தேவன் தம் மகனின் ஆவியை
நமது இதயங்களுக்குள் அனுப்பி னார். ஆவி
யானவரும் “பிதாவே, அன்பான பிதாவே”
என்று கதறுகிறார். 7ஆகையால் இப்பொழுது
நீங்கள் முன்புபோல அடிமைகள் அல்ல. நீங்
கள் தேவனுடைய பிள்ளைகள். அவர் வாக்கு
றுதிப்படி உங்களுக்குத் தருவார். ஏனென்றால்
நீங்கள் அவரது பிள்ளைகளாயிருக்கிறீர்கள்.

### கலாத்திய கிறிஸ்தவர்கள் மீது பவுலின் அன்பு

8முன்பு நீங்கள் தேவனை அறிந்திருக்க
வில்லை. மெய்யாகவே தேவன் அல்லாத கட
வுள்களுக்கு நீங்கள் அடிமைகளாகி இருந்தீர்
கள். 9ஆனால் இப்போது நீங்கள் உண்மை
யான தேவனை அறிந்து கொண்டீர்கள். உண்
மையில் அவர் உங்களை அறிந்துகொண்ட
தேவன். எனவே எதற்காக நீங்கள் மறுபடியும்
அந்தப் பலவீனமான, மோசமான ஆவிகளுக்கு
அடிமைகளாக விரும்புகிறீர்கள். 10நீங்கள் இப்
போதும் சிறப்பான நாட்கள், மாதங்கள், பரு
வங்கள், ஆண்டுகள் பற்றிச் சட்டங்கள் கூறு
வதைப் பின்பற்ற விரும்புகிறீர்கள். 11நான்
உங்களை எண்ணி அஞ்சுகிறேன். நான் உங்க
ளுக்காக உழைத்ததெல்லாம் வீணாய்ப்
போயிற்றோ என்று அஞ்சுகிறேன்.

12சகோதர சகோதரிகளே நானும் உங்க
ளைப் போன்றவன். எனவே, நீங்கள் என்
னைப்போல மாறுங்கள். நீங்கள் என் முன்பு
நல்லவர்களாகவே இருக்கிறீர்கள். 13உங்களி
டம் நான் முதன்முதல் எதற்காக வந்தேன்
என்பதை நினைத்துப் பாருங்கள். ஏனென்
றால் அப்போது நான் நோயாளியாய் இருந்
தேன். அப்போதுதான் நான் நற்செய்தியை
உங்களுக்குப் போதித்தேன். 14எனது நோய்
உங்களுக்குப் பாரமாயிற்று. எனினும் நீங்கள்
என்னை வெறுக்கவில்லை. என்னை விலக்க
வில்லை. என்னைத் தேவதூதனைப் போல
வரவேற்றீர்கள். என்னை இயேசு கிறிஸ்து
வைப்போன்று ஏற்றுக்கொண்டீர்கள். 15அப்
போது நீங்கள் மகிழ்ச்சியாக இருந்தீர்கள்.
இப்போது அந்த மகிழ்ச்சி எங்கே போயிற்று?
எனக்கு உதவுவதற்காக நீங்கள் எதை வேண்
டுமானாலும் செய்யத் தயாராக இருந்தீர்கள்
என்று நினைக்கிறேன். உங்களால் முடியு
மானால் உங்கள் கண்களையும் பிடுங்கி
எடுத்து எனக்குத் தரத் தயாராக இருந்தீர்கள்.
16இப்பொழுது நான் உண்மையைச் சொல்வ
தால் உங்களுக்கு எதிரியாகி விட்டேனா?

17அவர்கள் உங்களைத் தேடி கடுமையாய்
உழைக்கிறார்கள். ஆனால், இது உங்கள் நன்
மைக்காக அல்ல. அது எங்களுக்கு எதிரா
யிற்று. என்னைப் பிரிந்து நீங்கள் அவர்
களைப் பின்பற்றவேண்டும் என்றே விரும்புகி
றார்கள். 18நோக்கம் நல்லதாக இருக்கும்
பட்சத்தில் மக்கள் உங்களிடம் ஆர்வம் காட்டு
வது நல்லது. இது எப்பொழுதும் உண்மை.
உங்களோடு நான் இருக்கும்போது மட்டுமல்ல,
உங்களை விட்டு விலகிய பிறகும் அவர்கள்
உங்கள் மீது ஆர்வம் காட்டவேண்டும். 19என்
சிறு பிள்ளைகளே! மீண்டும் நான் உங்களுக்
காக வேதனைப்படுகிறேன். இது ஒரு பெண்
ணின் பிரசவவேதனையைப் போன்றது.
இயேசுவைப்போன்று நீங்கள் ஆகும்வரை
நான் இவ்வேதனையை அடைவேன். 20நான்
இப்போது உங்களுடன் இருப்பதை விரும்புகி
றேன். பின்னர் வேண்டுமானால் உங்களோடு
பேசினவிதத்தை மாற்றிக்கொள்ள முடியும்.
உங்களைக் குறித்து என்ன செய்வதென்று
எனக்குத் தெரியவில்லை.

### ஆகார், சாராளின் சான்று

21உங்களில் சிலர் இப்பொழுதும் மோசே
யின் சட்டங்களுக்குக் கட்டுப்பட்டிருக்க விரும்
புகிறீர்கள். எனக்குச் சொல்லுங்கள். சட்டம்
என்னச் சொல்லுகின்றது என கவனிக்கவில்
லையா? 22ஆபிரகாமுக்கு இரண்டுப் பிள்ளை
கள் உண்டு. ஒருவனின் தாய் ஒரு அடிமைப்
பெண். இன்னொருவனின் தாய் சுதந்தரமான
வள். 23அடிமைப்பெண்ணின் மகன் சாதாரண
முறையில் பிறந்தான். அடுத்த பெண்ணின்
மகனோ தேவன் ஆபிரகாமுக்குக் கொடுத்த
வாக்குறுதியின்படி பிறந்தவன். 24இந்த உண்
மையானச் சம்பவம் நமக்கு ஒரு சித்திரத்தை
உருவாக்கிக் காட்டுகிறது. இந்த இரண்டு
பெண்களும் தேவன் மனிதனோடு செய்து
கொண்ட இரண்டு உடன்படிக்கைகளைப்
போன்றவர்கள். ஒன்று சீனாய் மலையில்
தேவன் மனிதனோடு செய்த உடன்படிக்கை.
இந்த உடன்படிக்கைக்குக் கீழ்ப்பட்ட மக்கள்
எல்லோரும் அடிமைகளைப் போன்றவர்கள்.

ஆகார் இந்த உடன்படிக்கைக்கு உரியவள்.
25ஆகையால் ஆகார் என்பவள் அரேபியா
வின் சீனாய் மலையைப் போன்று விளங்கி
னாள். இவள் தற்போதுள்ள எருசலேம் நகரத்
தின் படமாயிருக்கிறாள். இந்த நகரமும் அடி
மைப்பட்டிருக்கிறது. அதிலுள்ள யூத மக்களும்
அடிமைப்பட்டு இருக்கின்றனர். 26ஆனால்
மேலிருக்கிற பரலோக எருசலேம் சுதந்தரமான
பெண்ணைப் போன்றது. இதுவே நமது தாய்.
27கீழ்க்கண்டவாறு எழுதப்பட்டிருக்கிறது.

> "பிள்ளை பெறாத மலடியே! மகிழ்ச்சி
> யாய் இரு. எப்போதும் நீ குழந்தை
> பெறாதவள். உனக்குப் பிரசவவேதனை
> என்னவெனத் தெரியாது. அதனால் நீ
> மகிழ்ச்சியுடன் சத்தமிடு. கணவனுள்ள
> பெண்ணைவிட தனியாகஇருக்கிறப்
> பெண்ணுக்கே அதிகப் பிள்ளைகள்
> உண்டு."
>
> ஏசாயா 54:1

28-29ஆபிரகாமின் ஒரு பிள்ளை சாதாரண
முறையில் பிறந்தவன். அவரது இன்னொரு
பிள்ளை தேவனுடைய வாக்குறுதிப்படி ஆவி
யானவரின் வல்லமையால் பிறந்தான். சகோ
தர சகோதரிகளே, ஈசாக்கைப்போல நீங்களும்
வாக்குறுதியால் வந்த பிள்ளைகளே! சாதா
ரண முறையில் பிறந்தவன், ஈசாக்கை மிக
மோசமாக நடத்தினான். அதுபோலவே இன்
றும் நடைபெறுகிறது. 30ஆனால் வேதவாக்கி
யங்கள் என்ன கூறுகிறது? "அடிமைப் பெண்
ணையும் அவளது மகனையும் தூக்கி எறியுங்
கள். அடிமையாய் இல்லாதவளின் மகன் அவ
னது தந்தைக்குரியவற்றை எல்லாம் பெற்றுக்
கொள்வான். ஆனால் அடிமைப் பெண்ணின்
மகனோ எதையும் பெற்றுக் கொள்ளமாட்
டான்."* 31ஆகையால் சகோதர சகோதரிகளே,
நாம் அடிமைப்பெண்ணின் பிள்ளைகள்
அல்ல. நாம் சுதந்தரமான பெண்ணின் பிள்ளை
கள்.

### சுதந்தரத்தைப் பாதுகாத்துக்கொள்

5 நமக்கு இப்போது சுதந்தரம் இருக்கிறது.
கிறிஸ்து நம்மைச் சுதந்தரம் உள்ளவர்கள்
ஆக்கினார். எனவே உறுதியாய் நில்லுங்கள்.
மாறாதீர்கள். மீண்டும் அடிமைகளாக மறுத்து
விடுங்கள். 2கவனியுங்கள்! நான்தான் பவுல்.
நீங்கள் விருத்தசேதனம் செய்துகொண்டு சட்
டத்தின் அடிமைகளானால் கிறிஸ்து உங்க
ளுக்கு எவ்வகையிலும் பயன்படமாட்டார்.
3மீண்டும் எல்லோரையும் நான் எச்சரிக்கை
செய்கிறேன். நீங்கள் விருத்தசேதனம் செய்து
கொண்டால் சட்டத்திற்க்குக் கீழ்ப்பட்டே இருக்க
வேண்டும். 4சட்டத்தைப் பின்பற்றி நீங்கள்
தேவனுக்கு வேண்டியவராக முயன்றால், கிறி
ஸ்துவோடு உங்களுக்கு உள்ள தொடர்பு அற்
றுப்போகும். தேவனுடைய இரக்கத்தை விட்டு
விட்டீர்கள். 5ஆனால் தேவனுடைய கிருபை
மூலமாக தேவனுக்கு வேண்டியவர்களாக
ஆவோம் என்று விசுவாசிக்கிறோம். ஆவியா
னவரின் உதவியோடு அதற்காகக் காத்திருக்கி
றோம். 6ஒருவன் இயேசு கிறிஸ்துவுக்குள்
வாழ்வானேயானால் பின்னர் அவன் விருத்த
சேதனம் செய்துகொண்டானா, இல்லையா
என்பது பிரச்சனை இல்லை. அன்பும் விசுவா
சமுமே மிகவும் முக்கியமானது.
7பந்தயத்தில் நீங்கள் நன்றாக ஓடினீர்கள்.
நீங்கள் உண்மைக்குக் கீழ்ப்படிந்தீர்கள்.
ஆனால் இப்போது உண்மையின் வழியில்
இருந்து உங்களைத் தடுத்தது யார்? 8உங்க
ளைத் தடம் புரளச் செய்தக் காரியம் உங்க
ளைத் தேர்ந்தெடுத்த தேவனிடமிருந்து வர
வில்லை. 9கவனமாய் இருங்கள். "புளிப்புள்ள
மிகச் சிறிதளவு மாவுகூட பிசைந்த மாவு
எல்லாவற்றையும் புளிக்கும்படிச் செய்து
விடும்." (மிகச் சிறிதான ஒன்றுகூட பெரிய
சிக்கலை உருவாக்கிவிடும்.) 10வேறுவிதமாக
நீங்கள் சிந்திக்க மாட்டீர்கள் என்று தேவ
னுக்குள் நான் நம்பிக்கையாய் இருக்கிறேன்.
சிலர் வேறுவிதமாக உங்களைக் குழப்புகிறார்
கள். அவ்வாறு குழப்புகிறவன் எவனாக இருந்
தாலும் அவன் நிச்சயம் தண்டிக்கப்படுவான்.
11சகோதர சகோதரிகளே! மக்கள் விருத்த
சேதனம் செய்து கொள்ள வேண்டும் என்று
நான் என்றும் போதித்ததில்லை. அவ்வாறு
நான் செய்திருந்தால் ஏன் இவ்வாறு துன்பப்
படவேண்டும்? மக்கள் விருத்தசேதனம் செய்து
கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தி இருந்
தால் சிலுவையை ஏற்பதுபற்றி வரும் தடை
நிறுத்தப்பட்டிருக்கும். 12உங்களைக் குழப்பிக்
கொண்டிருக்கும் அவர்கள் விருத்தசேதனத்து
டன் துண்டித்துக் கொள்ளவும் வேண்டும்
என்று விரும்புகிறேன்.
13சகோதர சகோதரிகளே, நீங்கள் சுதந்தர
மாக இருக்க அழைக்கப்பட்டீர்கள் பாவக்
காரியங்களுக்காக அச்சுதந்தரத்தைப் பயன்ப
டுத்தாதீர்கள். ஆனால் ஒருவருக்கொருவர் அன்
புடன் சேவை செய்யுங்கள். 14"உன்னை நீ
நேசிப்பதுபோன்று மற்றவர்களையும் நேசிப்
பாயாக" என்ற ஒரு வாக்கியத்திலேயே
மொத்த சட்டமும் அடங்கி இருக்கிறது. 15நீங்கள்
ஒருவரையொருவர் தொடர்ந்து கடித்தும்,
கிழித்தும் வந்தீர்களேயானால் முழுவதுமாய்
அழிந்து போவீர்கள். இதுபற்றி எச்சரிக்கை
யாய் இருங்கள்.

### ஆவியும் மனித இயல்பும்

16ஆகையால், உங்களுக்குச் சொல்லிக்
கொள்கிறேன். ஆவிக்கு ஏற்றபடி நடந்து கொள்
ளுங்கள். பிறகு நீங்கள் மாம்ச இச்சையை
நிறைவேற்றமாட்டீர்கள். 17ஆவிக்கு எதிராக
மாம்ச இச்சையும், மாம்ச இச்சைக்கு எதிராக
ஆவியும் செயல்பட விரும்புகிறது. இவை ஒன்
றுக்கொன்று எதிரானவை. ஆகையால் நீங்

**அடிமை ... கொள்ளமாட்டான்** ஆதி. 21:10

*கள் உண்மையில் விரும்புவதை உங்களால்
செய்ய முடியாது. 18உங்களை ஆவியானவர்
வழி நடத்தும்படி அனுமதித்தால், நீங்கள் சட்
டங்களுக்குக் கீழ்ப்பட்டவர்கள் அல்ல.*

*19மாம்சத்தின் செயற்பாடுகள் தெளிவாய்
உள்ளன. அவை விபசாரம், வேசித்தனம்,
அசுத்தம், காமவிகாரம், 20விக்கிரக வழிபாடு,
பில்லிசூனியம், பகைமை, விரோதங்கள்,
வைராக்கியங்கள், கோபங்கள், சுயநல ஆசை
கள், பிரிவினைகள், கோஷ்டிப் பூசல்கள்,
21பொறாமை, குடிவெறி, களியாட்டங்கள் என்
பன. நான் ஏற்கெனவே உங்களை எச்சரித்தது
போன்று இப்போதும் எச்சரிக்கிறேன். இத்த
கையப் பாவங்களைச் செய்பவர்கள் தேவனு
டைய இராஜ்யத்துக்குள் இடம்பெற முடியாது.
22ஆனால், ஆவியானவர் நமக்கு அன்பு,
மகிழ்ச்சி, சமாதானம், பொறுமை, கருணை,
நன்மை, விசுவாசம், 23நற்பண்பு, தன்னடக்கம்,
ஆகிய நற்கனிகளை உருவாக்குகின்றார்.
இவற்றைத் தவறு என்று எந்தச் சட்டமும்
கூறுவதில்லை. 24இயேசு கிறிஸ்துவைச் சேர்ந்
தவர்கள் மாம்சத்தைச் சிலுவையில் கொன்று
விட்டார்கள். அவர்கள் ஆசைகளையும் கெட்ட
விருப்பங்களையும் கூட விட்டிருக்கிறார்கள்.
25ஆவியானவரிடம் இருந்து நாம் புதிய வாழ்க்
கையைப் பெற்றிருக்கிறோம். எனவே நாம்
அவரைப் பின்பற்ற வேண்டும். 26வீண் புகழ்ச்
சியை விரும்பக் கூடாது. நாம் ஒருவருக்கொரு
வர் தொந்தரவு கொடுக்காமல் இருக்க வேண்
டும். நாம் ஒருவருக்கொருவர் பொறாமை
கொள்ளாமலும் இருக்க வேண்டும்.*

### ஒருவருக்கொருவர் உதவுக

*6 சகோதர சகோதரிகளே, உங்கள் குழுவில்
உள்ள ஒருவன் தவறு செய்யலாம். ஆவிக்
குரியவர்களாகிய நீங்கள் அவனிடம் போக
வேண்டும். அவன் நல்ல வழிக்கு வர சாந்தத்
தோடு உதவவேண்டும். ஆனால் கவனமாக
இருங்கள். நீங்கள் பாவம் செய்யத் தூண்டப்
படலாம். 2உங்களுக்குச் சுமையாக இருக்கும்
போது ஒருவருக்கு ஒருவர் உதவி செய்து
கொள்ளுங்கள். நீங்கள் இதனைச் செய்யும்
போது கிறிஸ்துவின் ஆணைகளுக்கு உண்
மையாகவே கீழ்ப்படிகிறீர்கள். 3முக்கியத்து
வம் இல்லாத ஒருவன் தன்னைப் பெரிதும்
முக்கியத்துவம் கொண்டவனாக நினைத்துக்
கொள்வானேயானால், அது தன்னைத்தானே
முட்டாளாக்கிக் கொள்ளும் காரியமாகும். 4ஒரு
வன் தன்னை மற்றவர்களோடு ஒப்பிட்டுப்
பார்க்கக் கூடாது. அவனவன் தனது செயல்க
ளைச் சீர்தூக்கிப் பார்ப்பானாக. பிறகு அவன்
தன்னால் செய்ய முடிந்த காரியங்களைப் பற்றி
பெருமைப்பட்டுக்கொள்ள இடமிருக்கும். 5ஒவ்
வொருவனும் தன் பொறுப்புகளை ஒப்புக்
கொள்ளவேண்டும்.*

*6வேத வசனத்தில் போதிக்கப்படுகிறவன்,
போதிக்கிறவனுக்கு எல்லா நன்மைகளையும்
பங்கு வைத்துக் கொடுப்பானாக.*

### வாழ்க்கை என்பது வயலில் நடுவது போன்றது

*7புத்தியற்றவர்களாகாதீர்கள். உங்களால்
தேவனை ஏமாற்ற முடியாது. ஒருவன் விதைக்
கிறதையே அறுப்பான். 8பாவம் நிறைந்த தன்
சுயத்தைத் திருப்தி செய்யும் பொருட்டு வாழத்
தொடங்குவானேயானால், பாவம் நிறைந்த
அவன் சுயமானது நிலையான மரணத்தையே
தரும். ஆனால் பரிசுத்த ஆவியைத் திருப்திப்
படுத்தும் பொருட்டு ஒருவன் வாழத் தொடங்கு
வானேயானால், அழிவற்ற வாழ்வை ஆவியா
னவரிடமிருந்து பெறுவான். 9நாம் நன்மை
யைச் செய்வதில் சோர்வடையாமல் இருந்தால்
சரியான நேரத்தில் அழிவில்லாத வாழ்வு என்
னும் விளைச்சலைப் பெறுவோம். நம் செயல்
களில் என்றும் பின் வாங்கக் கூடாது. 10எவர்
ஒருவருக்கும் நன்மை செய்யும் வாய்ப்பு கிட்
டும்போதெல்லாம், நாம் செய்யவேண்டும். குறி
ப்பாக தேவனிடம் விசுவாசம் கொண்டுள்ள
குடும்பங்களுக்கு நன்மை செய்யவேண்டும்.*

### பவுல் தன் நிருபத்தை முடித்தல்

*11இதை நானே எழுதிக் கொண்டிருக்கி
றேன். கடிதங்கள் எவ்வளவு பெரியவை
என்று பாருங்கள். 12சிலர் உங்களை விருத்த
சேதனம் செய்யுமாறு கட்டாயப்படுத்திக்
கொண்டிருக்கிறார்கள். சில மக்கள் தம்மை
ஏற்றுக்கொள்வார்கள் எனபதன் பொருட்டு
அவர்கள் இதனைச் செய்கிறார்கள். அவர்கள்
கிறிஸ்துவின் சிலுவையை பிரசங்கித்தால்
துன்பப்பட நேரும் என அஞ்சுகிறார்கள்.
13விருத்தசேதனம் செய்துகொண்ட அவர்
களோ சட்டத்தை மேற்கொள்ளாமல் இருக்கி
றார்கள். அப்படி இருந்தும் அவர்கள் உங்
களை விருத்தசேதனம் செய்து கொள்ளும்படி
கட்டாயப்படுத்துகிறார்கள். அவர்கள் உங்
களைச் செய்ய வைப்பதில் பெருமைப்பட
மட்டும் விரும்புகிறார்கள். 14இது போன்
றவற்றைக் குறித்து நான் பெருமையடித்துக்
கொள்ளமாட்டேன் என்பதில் நம்பிக்கைக்
கொள்கிறேன். இயேசு கிறிஸ்துவின் சிலுவை
ஒன்றே நான் பெருமைப்படத் தக்கது.
சிலுவையில் இயேசு இறந்து போனதால்
எனக்கு இந்த உலகமே செத்துப்போனது. இந்த
உலகத்துக்கு நான் செத்துப்போனேன். 15ஒரு
மனிதன் விருத்தசேதனம் செய்துகொண்ட
வனா இல்லையா என்பது முக்கியமல்ல.
தேவனால் புதுப் படைப்பாக ஆக்கப்படுவது
தான் முக்கியம். 16இந்தச் சட்டத்தின் முறைப்படி
வாழ்கிற தேவனுடைய இஸ்ரவேலர்களுக்குச்
சமாதானமும் கிருபையும் உண்டாவதாக.
17இனிமேல் எந்தத் தொந்தரவும் எனக்குத்
தரவேண்டாம். எனது சரீரத்தில் வடுக்களை
ஏற்றிருக்கிறேன். இந்த வடுக்கள் நான் இயேசு
கிறிஸ்துவைச் சேர்ந்தவன் என்பதைக் காட்
டும். 18என் சகோதர சகோதரிகளே, நம்முடைய
தேவனாகிய இயேசு கிறிஸ்துவின் கிருபை
உங்கள் ஆவியோடு கூட இருக்கட்டும் என்று
பிரார்த்தனை செய்கிறேன். ஆமென்.*

# எபேசியருக்கு எழுதிய கடிதம்

1 இயேசு கிறிஸ்துவின் அப்போஸ்தலனாகிய
பவுல் எழுதுவது, தேவனுடைய விருப்பத்
துக்கிணங்க நான் ஒரு அப்போஸ்தலனாயி
ருக்கிறேன். இயேசு கிறிஸ்துவின் மீது நம்
பிக்கை வைத்து எபேசுவிலே வாழும் மக்க
ளுக்காக இந்நிருபம் எழுதப்பட்டது. 2பிதாவா
கிய தேவனிடமிருந்தும், இயேசு கிறிஸ்துவிட
மிருந்தும் உங்களுக்குச் சமாதானம் உண்டாகட்
டும்.

### கிறிஸ்துவுக்குள் ஆவியானவரின் ஆசீர்வாதம்

3நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து
வின் பிதாவாகிய தேவனுக்கு ஸ்தோத்திரம்.
பரலோகத்தில் அவர் கிறிஸ்துவுக்குள் ஆவிக்
குரிய சகல ஆசிகளையும் நமக்குத் தந்துள்
ளார். 4உலகம் படைக்கப்படுவதற்கு முன்னரே
தேவன் நம்மை கிறிஸ்துவுக்குள் தேர்ந்தெடுத்து
உள்ளார். தமக்கு முன்பாக நாம் அன்பில்
தூய்மையானவர்களும், குற்றமில்லாதவர்களு
மாய் இருப்பதற்காகவே நம்மை அவர் தேர்ந்
தெடுத்தார். 5உலகம் படைக்கப்படுவதற்கு முன்
னரே, நம்மைத் தம் பிள்ளைகளாய் கிறிஸ்து
மூலமாகத் தேர்ந்தெடுக்க தேவன் முடிவு
செய்து விட்டார். தேவன் செய்ய விரும்பிய
தும் அதுவே ஆகும். அதுவே அவருக்கு
மகிழ்ச்சியைத் தந்தது. 6அவரது வியக்கத்தக்க
கருணை அவருக்கு மகிமை உண்டாக்கியது.
அவர் தன் கிருபையால் நமக்கு இலவசமாய்
அதை தான் நேசிக்கிற மகனான இயேசு
மூலமாக நமக்குத் தந்தார். 7கிறிஸ்துவின் இரத்
தத்தால் நாம் விடுதலை பெற்றோம். தேவனின்
வளமான இரக்கத்தால் நமது பாவங்கள்
மன்னிக்கப்பட்டன. 8தேவன் அவரது இரக்
கத்தை முழுமையாகவும் இலவசமாகவும்
தந்தார். 9தேவன் முழு ஞானத்தோடும், பலத்
தோடும் அவரது இரகசியத் திட்டத்தை நாம்
அறியச் செய்தார். 10சரியான நேரம் வரும்
போது தனது திட்டத்தை நிறைவேற்ற வேண்
டும் என்பது தேவன் ஏற்கெனவே செய்த
முடிவு. பரலோகத்திலும், பூமியிலும் உள்ள
அனைத்து பொருள்களும் ஒன்று கூடி
கிறிஸ்துவின் கீழ் இருக்க வேண்டும் என்பது
தான் தேவனுடைய திட்டம். 11நாம் கிறிஸ்துவுக்
குள் தேவனின் மக்களாக தேர்ந்தெடுக்கப்
பட்டோம். தேவன் நம்மைத் தேர்ந்தெடுப்பது
பற்றி ஏற்கனவே திட்டமிட்டிருந்தார்; ஏனென்
றால் அதுதான் அவர் விருப்பம். அவரது
விருப்பத்திற்கும், முடிவுக்கும் ஏற்றவாறு
அவர் எல்லாவற்றையும் சரிசெய்து கொள்
வார். 12கிறிஸ்துவின் மீது நம்பிக்கை வைத்த
வர்களில் நாமே முதல் மக்கள். நாம் தேவனின்
மகிமைக்குப் புகழ் சேர்ப்போம் என்பதனால்
தேர்ந்தெடுக்கப்பட்டோம். 13இந்தப் பெருமை
உங்களையும் சேரும். நீங்களும் உங்கள் இரட்
சிப்புக்காக உண்மையான நற்செய்தியை கேட்
டீர்கள். நீங்கள் நற்செய்தியைக் கேட்டதால்
கிறிஸ்துவின்மேல் நம்பிக்கை வைத்தீர்கள்.
தேவன் தந்த அவரது வாக்குறுதிப்படி பரி
சுத்த ஆவியால் கிறிஸ்துவில் உங்களுக்கு
அடையாளக் குறியிடப்பட்டீர்கள். 14தேவன்
தம் மக்களுக்கு வாக்களித்தபடி நாம் பெறு
வோம் என்பதற்கு பரிசுத்த ஆவியானவரே
உத்திரவாதமாய் உள்ளார். தேவனைச் சேர்ந்த
வர்க்கு இது முழு விடுதலை தரும். தேவனின்
மகிமைக்குப் புகழ்ச்சியைத் தேடித் தருவது
தான் இவை எல்லாவற்றின் நோக்கமாக
இருக்கும்.

### பவுலின் பிரார்த்தனை

15-16அதனால்தான் எனது பிரார்த்தனைக
ளில் உங்களை நினைத்துக் கொண்டு உங்க
ளுக்காக எப்போதும் தேவனுக்கு நன்றி
சொல்கிறேன். இயேசு கிறிஸ்துவின் மேலுள்ள
உங்கள் விசுவாசத்தையும், தேவனின் மக்க
ளின் மேலுள்ள உங்கள் அன்பையும் குறித்து
நான் கேள்விப்பட்டதில் இருந்து நான் இதனை
எப்போதும் செய்து கொண்டிருக்கிறேன். 17நம்
முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின்
தேவனும், பிதாவுமானவரிடம் எப்போதும்
நான் பிரார்த்தனை செய்கிறேன். அதில்
தேவனை அறிந்து கொள்வதற்கான ஞானத்
தையும், தெளிவையும் அளிக்கிற ஆவியை
உங்களுக்குத் தர வேண்டும் என வேண்டுகி
றேன். 18உங்கள் இதயத்தில் மிகப்பெரிய புரிந்
துகொள்ளுதல் ஏற்பட வேண்டும் என்று நான்
பிரார்த்தனை செய்கிறேன். பிறகு தேவன்
நம்மைத் தேர்ந்தெடுத்திருப்பது விசுவாசத்
தோடு தொடர்புடையது என்பதைப் புரிந்து
கொள்வீர்கள் என்பதில் உங்களுக்கு நம்
பிக்கை வேண்டும். தம் தூய்மையான மக்க
ளுக்குக் கொடுப்பதற்காகத் தந்த ஆசீர்வாதங்
கள் மிகப் பெரியதும், புகழுடையதும் என்ப
தை நீங்கள் உணர வேண்டும். 19தேவனுடைய
வல்லமை மிக உயர்ந்தது, அளக்க இயலாதது
என்றும் தேவன்மேல் நம்பிக்கையுள்ள நீங்கள்

தெரிந்துகொள்ள வேண்டும். அவ்வல்லமை
இறந்துபோன இயேசுவைத் தேவன் உயிர்த்
தெழுப்பும்படி செய்தது. [20]தேவன் இயேசு
கிறிஸ்துவைத் தனது வலது பக்கத்தில் அமர
வைத்தார். [21]ஆள்வோர்களையும், அதிகாரி
களையும், அரசர்களையும் விட கிறிஸ்துவை
மேலானவராகத் தேவன் செய்தார். இந்த
உலகத்திலும் அடுத்த உலகத்திலும் வல்லமை
யுள்ள அனைத்தையும்விட கிறிஸ்து வல்லமை
மிக்கவர். [22]தேவன் எல்லாவற்றையும் கிறிஸ்து
வின் அதிகாரத்துக்குள் வைத்து விட்டார்.
திருச்சபையில் உள்ள அனைத்துக்கும் அவ
ரையே தலைவராக ஆக்கிவிட்டார். [23]திருச்
சபை என்பது கிறிஸ்துவின் சரீரம். சபையா
னது கிறிஸ்துவினால் நிரப்பப்பட்டுள்ளது.
அவர் எல்லாவற்றையும் எல்லாவற்றாலும்
நிரப்பத்தக்கவர்.

## இறப்பிலிருந்து வாழ்வுக்கு

2 கடந்த காலத்தில் உங்கள் ஆன்மீகமான
வாழ்வு செத்துப் போயிற்று. இதற்கு, உங்
களது பாவங்களும், தேவனுக்கு எதிரான
உங்களது கெட்ட செயல்களுமே காரணம் [2]ஆம்,
கடந்த காலத்தில் பாவங்களில் வாழ்ந்தீர்கள்.
உலகம் வாழ்கிறபடி வாழ்ந்தீர்கள். பூமியில்
தீய சக்திகளின் ஆள்வோர்களை பின்பற்றினீர்
கள். தேவனுக்குக் கீழ்ப்படிய மறந்த அந்த
மக்களுக்குள் தீய ஆவி வேலை செய்கிறது.
[3]கடந்த காலத்தில் நாம் அனைவரும் அவர்
களைப் போலவே வாழ்ந்தோம். நமது மன
விருப்பப்படி பாவத்தில் வாழ்ந்தோம். நமது
மனமும் சரீரமும் விரும்பியதையே நாம் செய்
தோம். நாம் தீயவர்களாய் இருந்தோம். நமது
வாழ்க்கை முறையின் காரணமாக தேவனின்
கோபத்தால் நாம் துன்பப்பட வேண்டும். மற்ற
அனைத்து மக்களைப் போலவே நாமும்
இருந்தோம். [4]ஆனால் தேவனுடைய இரக்கம்
மிகப் பெரியது. தேவன் நம்மை மிகுதியாக
நேசித்தார். [5]ஆன்மீகப்படி நாம் இறந்துபோ
னோம். தேவனுக்கு எதிரான காரியங்களைச்
செய்ததால் இறந்துபோனோம். தேவன் கிறிஸ்
துவுடன் புது வாழ்க்கையைத் தந்தார். தேவ
னின் கிருபையால் நீங்கள் இரட்சிக்கப்பட்டீர்
கள். [6]கிறிஸ்துவோடு நம்மையும் தேவன்
உயிர்த்தெழ செய்தார். பரலோகத்தில் நமக்
கென்று இருக்கைகளையும் ஏற்படுத்தினார்.
இயேசு கிறிஸ்துவுக்குள் இருக்கிற நமக்காக
தேவன் இதைச் செய்தார். [7]தேவன் இதைச்
செய்ததால் எதிர்காலம் முழுவதும் அவர்
தனது செல்வம்மிக்க இரக்கத்தையும் உயர்ந்த
தயவையும் காட்டுவார். அவர் இதையும்
கிறிஸ்துவுக்குள் நமக்குச் செய்வார். [8]தேவனு
டைய இரக்கத்தால் நீங்கள் இரட்சிக்கப்பட்டீர்
கள். அந்தக் கிருபையை நீங்கள் உங்களது
விசுவாசத்தினால் பெற்றீர்கள். உங்களை நீங்
களே இரட்சித்துக் கொள்ள முடியாது. இது
தேவனிடமிருந்து கிடைக்கும் பரிசு. [9]நீங்கள்
செய்த செயல்களால் நீங்கள் இரட்சிக்கப்பட
வில்லை. எனவே தன்னைத் தானே இரட்சித்
துக் கொண்டதாக ஒருவனும் பெருமைப்
பட்டுக்கொள்ள முடியாது. [10]நாம் எப்படி இருக்
கிறோமோ அப்படியே தேவன் நம்மை படைத்
தார். நாம் நற்செயல்கள் செய்யும்படி கிறிஸ்
துவுக்குள் நம்மைப் புதிய மக்களாக்கினார்.
தேவன் ஏற்கெனவே நமக்காக அந்நற்செயல்
கள் பற்றித் திட்டமிட்டிருக்கிறார். நமது வாழ்வு
அந்நற்செயல்களோடு இணைய வேண்டும்
என்றே தேவன் திட்டமிட்டிருக்கிறார்.

## கிறிஸ்துவில் ஒன்றாகுதல்

[11]நீங்கள் யூதர் அல்லாதவர்களாகப் பிறந்தீர்
கள். உங்களை யூதர்கள் "விருத்தசேதனம் செய்
யாதவர்கள்" என்று அழைக்கிறார்கள். அவர்
கள் தங்களை "விருத்தசேதனம் செய்தவர்கள்"
என்று அழைத்துக் கொள்கிறார்கள். இந்த
விருத்தசேதனம் என்பது யூதர்கள் தங்கள்
சரீரத்தில் செய்து கொள்ளும் ஏதோ ஒன்று
தான். [12]கடந்த காலத்தில் கிறிஸ்து இல்லாமல்
நீங்கள் இருந்தீர்கள் என்பதை நினைவு கூறுங்
கள். நீங்கள் இஸ்ரவேலின் மக்கள் அல்ல.
தேவன் தம் மக்களுக்குச் செய்து கொடுத்த
ஒப்பந்தத்தில் உங்களுக்கு எவ்விதப் பங்கும்
இல்லை. உங்களுக்குத் தேவனைப் பற்றி தெரி
யாது. அவர் மீது நம்பிக்கையும் இல்லை.
[13]ஆமாம், ஒரு முறை தேவனை விட்டு வெகு
தொலைவில் நீங்கள் இருந்தீர்கள். ஆனால்
இப்பொழுது தேவனோடு நெருக்கமாக இருக்கி
றீர்கள். கிறிஸ்துவின் இரத்தமே உங்களை
தேவனின் அருகில் கொண்டு வந்தது. [14]இப்
பொழுது கிறிஸ்துவால் நமக்குச் சமாதானம்
கிடைத்தது. கிறிஸ்து யூதர்களையும், யூதர்
அல்லாதவர்களையும் ஒரே மக்களாக்கினார்.
இவர்களுக்கு இடையில் ஒரு சுவர் இருப்பது
போலப் பிரிக்கப் பட்டிருந்தனர். ஒருவரை
ஒருவர் வெறுத்தனர். கிறிஸ்து தமது சரீரத்
தைக் கொடுத்து பகை என்னும் சுவரை
உடைத்தெறிந்தார். [15]யூதர்களின் சட்டங்கள்
ஏராளமான கட்டளைகளையும், விதிகளையும்
உடையன. ஆனால் கிறிஸ்து அச்சட்டத்தை
ஒரு முடிவுக்குக் கொண்டு வந்தார். யூதர்,
யூதர் அல்லாதவர் என்னும் இந்த இரு பிரிவு
களையும் ஒன்றாக்குவது அவர் நோக்கம்.
இதை அவர் சிலுவையில் இறந்ததன் மூலம்
செய்து சமாதானத்தைக் கொண்டுவந்தார்.
[16]இரு பிரிவுகளுக்கும் இடையே இருந்த பகை
யைச் சிலுவையின் மூலம் முடிவடையச்
செய்தார். [17]தேவனை விட்டு வெகு தொலை
வில் இருந்த யூதர் அல்லாத உங்களிடம்
கிறிஸ்து வந்து சமாதானத்தை அறிவித்தார்.
அவர் தேவனுக்கு மிக நெருக்கமாய் இருந்த
யூதர்களுக்கும் சமாதானத்தை அறிவித்தார்.
[18]ஆமாம்! கிறிஸ்து மூலமாக நாம் அனைவரும்
ஒரே ஆவிக்குள் பிதாவாகிய தேவனிடம் வரு
வதற்கு உரிமை பெற்றோம். [19]ஆகவே யூதர்
அல்லாதவர்களாகிய நீங்கள் இப்பொழுது அந்
நிய தேசத்தில் பார்வையாளர்களோ அல்லது

தற்காலிக குடிமக்களோ அல்ல, தேவனின்
பரிசுத்தமான மக்களோடு நீங்களும் ஒரே குடி
மக்களாகி விட்டீர்கள். 20விசுவாசிகளான நீங்
கள் அவருக்குச் சொந்தமான கட்டிடத்தை
போன்றவர்கள். அக்கட்டிடத்தில் அப்போஸ்த
லர்களும் தீர்க்கதரிசிகளும் அஸ்திபாரக்கல்*
போன்றவர்கள். கிறிஸ்து ஒருவர்தான் இக்கட்
டிடத்தின் மிக முக்கியமான கல்லாவார். 21அந்த
முழு கட்டிடமும் கிறிஸ்துவோடு இணைக்கப்
பட்டுள்ளது. கிறிஸ்து அதனை வளர்த்து கர்த்த
ருக்குள் புனிதமான ஆலயமாக ஆக்கி விடுகி
றார்.

22கிறிஸ்துவுக்குள் நீங்களும் யூதர்களோடு
சேர்ந்து கட்டப்பட்டிருக்கிறீர்கள். ஆவியால்
தேவன் வாழும் ஆலயமாக நீங்களும் கட்டப்
பட்டு வருகிறீர்கள்

### பவுலின் பணி

3 நான் இயேசு கிறிஸ்துவின் கைதியாக
இருக்கிறேன். யூதர் அல்லாத உங்களுக்கா
கவே நான் அவ்வாறு இருக்கிறேன். 2தேவன்
தம் இரக்கத்தாலேயே இந்த வேலையை
எனக்குக் கொடுத்தார் என்பது உறுதியாக
உங்களுக்குத் தெரியும். உங்களுக்கு உதவி
செய்வதற்காகவே தேவன் எனக்கு இந்த
வேலையைக் கொடுத்தார். 3தேவன் தனது
இரகசிய திட்டத்தை எனக்குத் தெரியும்படி
செய்தார். அதை எனக்கு காட்டினார். நான்
ஏற்கெனவே அதைப்பற்றி விளக்கமாக எழுதி
யுள்ளேன். 4நான் எழுதினதையெல்லாம் நீங்
கள் படிப்பீர்களேயானால் பின்னர் கிறிஸ்
துவைப் பற்றிய இரகசிய உண்மையை நான்
புரிந்திருக்கிறேன் என்பதை நீங்கள் கண்டு
கொள்ள முடியும். 5முற்காலங்களில் வாழ்ந்த
மக்களுக்கு இந்த இரகசியம் சொல்லப்பட
வில்லை. ஆனால் இப்போது ஆவியின் மூலம்
தேவன் அந்த இரகசிய உண்மையை அவரது
அப்போஸ்தலர்களுக்கும், தீர்க்கதரிசிகளுக்கு
புலப்படுத்தினார். 6இதுதான் அந்த உண்மை.
தேவன் தனது மக்களுக்குக் குறிப்பாக யூத
மக்களுக்குக் கொடுத்த அத்தனையும் யூதர்
அல்லாதவர்களுக்கும் கொடுப்பார். ஒரே குழு
வில் யூதர்களோடு யூதர் அல்லாதவர்களும்
சேர்ந்து இருப்பார்கள். தேவன் இயேசு கிறிஸ்
துவுக்குள் செய்த வாக்குறுதியில் அவர்கள்
யாவரும் பங்கு பெறுவர். யூதர் அல்லாதவர்
களும் நற்செய்தியினாலேயே இவற்றை அடை
கிறார்கள். 7தேவனின் சிறப்புப் பரிசாகிய
அவரது கிருபையால் நற்செய்தியைக் கூறுகிற
தொண்டனானேன். தேவன் தன்னுடைய வல்ல
மையைப் பயன்படுத்தி அந்தக் கிருபையை
எனக்குத் தந்தார். 8தேவனின் பிள்ளைகளில்
நானே முக்கியத்துவம் மிகக்குறைந்தவன்.
ஆனால் யூதர் அல்லாதவராகிய உங்களுக்கு
நான் கிறிஸ்துவின் உயர்வு பற்றிய நற்செய்
தியைச் சொல்லும் வாய்ப்பு பெற்றேன். அவ
ரது உயர்வு சொல்லமுடியாத அளவுக்கு மிகப்
பெரியது. 9தேவனைப் பற்றிய இரகசிய உண்
மையை அனைத்து மக்களிடமும் சொல்லு
கின்ற அரிய பணியைத் தேவன் எனக்குக்
கொடுத்திருக்கிறார். தொடக்கக் காலத்திலி
ருந்தே இந்த இரகசிய உண்மை தேவனிடம்
மறைத்து வைக்கப்பட்டிருக்கிறது. எல்லாவற்
றையும் படைத்தது தேவன் ஒருவரே. 10பரலோ
கத்தில் உள்ள ஆளுகைகளும், அதிகாரங்களும்
தேவனின் அளவற்ற பலவகை ஞானத்தையும்
சபையின் மூலம் தெரிய வரும்படிச் செய்வதே
தேவனுடைய நோக்கமாகும். 11தொடக்க காலத்
திலிருந்தே இது தேவனின் திட்டம். தேவன்
தன் திட்டப்படியே செய்து வருகிறார். 12கிறிஸ்
துவால் நாம் தைரியத்தோடும் முழு விசுவாசத்
தோடும் தேவன் முன் வந்து சேரமுடியும்.
நாம் இவற்றை கிறிஸ்து மீதுள்ள விசு
வாசத்தால் செய்ய முடியும். 13நான் உங்களுக்
காக பட்ட துன்பங்களால் நீங்கள் நம்பிக்கை
யில் தளர வேண்டாம் என்றும் தைரியம்
இழக்கவேண்டாம் என்றும், உங்களைக் கேட்
டுக் கொள்கிறேன். எனது துயரங்கள் உங்க
ளுக்குப் புகழ்ச்சியைக் கொண்டு வரும்.

### கிறிஸ்துவின் அன்பு

14ஆகையால் நான் பிதாவாகிய தேவன்
முன் மண்டியிட்டு பிரார்த்தனை செய்கிறேன்.
15அவரிடத்தில் இருந்து பரலோகத்திலும், பூமி
யிலும் உள்ள எல்லாக் குடும்பங்களும் தம்
உண்மையான பெயரைப் பெறும் 16உங்கள்
ஆவிக்குள் நீங்கள் வல்லமையுடைவர்களாக
இருக்க விரும்புகிறேன். நான் பிதாவை அவ
ரது உயர்ந்த மகிமையின் நிமித்தம் கேட்கி
றேன். அவர் தமது ஆவியின் மூலமாக அந்த
வல்லமையைத் தருவார். 17கிறிஸ்து உங்கள்
இதயத்தில் விசுவாசத்தின் மூலம் வாழ நான்
பிரார்த்தனை செய்கிறேன். உங்கள் வாழ்க்கை
அன்பால் கட்டப்படவும், அன்பில் வல்லமை
யாக இருக்கவும் நான் பிரார்த்தனை செய்கி
றேன்,

18நீங்களும் தேவனின் பரிசுத்தமான
மக்களும் உயர்ந்த கிறிஸ்துவின் அன்பைப்
புரிந்துகொள்ளும் சக்தியைப் பெற வேண்டும்.
19அவரது அன்பு எவ்வளவு அகலமானது,
எவ்வளவு நீளமானது, எவ்வளவு உயரமா
னது, எவ்வளவு ஆழமானது என்பதை நீங்கள்
புரிந்து கொள்ள வேண்டும் என்று நான்
பிரார்த்தனை செய்கிறேன்.

20இவ்வாறு தேவனின் சகல முழுமையி
லும் நீங்கள் நிறைக்கப்படுவீர்கள். நாம் கேட்
பதை விடவும், நினைப்பதை விடவும் தேவன்
நமக்கு மிகுதியாக செய்யத்தக்கவர். தேவனின்
வல்லமை நமக்குள் உள்ளது. 21சபையிலே
இயேசு கிறிஸ்துவின் மூலமாக எப்போதும்
தலைமுறை தலைமுறைக்கும் எல்லாக் காலங்
களிலும் தேவனுக்கு மகிமையுண்டாவதாக.
ஆமென்.

---

**அஸ்திபாரக்கல்** மூலைக்கல். ஒரு கட்டிடத்தின் முதலும் முக்கியமுமான கல்.

### சரீரத்தின் ஒற்றுமை

4 நான் கர்த்தரைச் சார்ந்தவனாதலால்
சிறையில் இருக்கிறேன். தேவன் உங்
களை தம் மக்களாகத் தேர்ந்தெடுத்தார். தேவ
னுடைய மக்கள் வாழும் முறைப்படி நீங்களும்
வாழவேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்
கொள்கிறேன். 2எப்போதும் பணிவும், சாந்த
மும் உடையவர்களாக இருங்கள். பொறுமை
யோடு ஒருவரை ஒருவர் அன்புடன் ஏற்றுக்
கொள்ளுங்கள். 3நீங்கள் ஆவியின் மூலமாகச்
சமாதானத்துடன் ஒன்று சேர்ந்திருக்கிறீர்கள்.
இதே வழியில் உங்களால் முடிந்த அனைத்
தையும் செய்துவாருங்கள். சமாதானம் உங்கள்
அனைவரையும் ஒன்றிணைக்கட்டும். 4ஒரே சரீ
ரமும் ஒரே ஆவியும் தான் உள்ளது. ஒரே
பொதுவான விசுவாசம் கொள்ள தேவன் உங்
களை அழைக்கிறார். 5ஒரே கர்த்தரும், ஒரே
விசுவாசமும், ஒரே ஞானஸ்நானமும் உள்ளன.
6எல்லாருக்கும் ஒரே பிதாவான தேவன்
உண்டு. அவர் எல்லாவற்றையும் ஆள்பவர்.
அவர் எல்லா இடங்களிலும் எல்லாவற்றிலும்
இருப்பவர். 7நம்மில் ஒவ்வொருவருக்கும்
கிறிஸ்து ஒரு சிறப்புப் பரிசு கொடுத்திருக்கி
றார், கிறிஸ்து ஒவ்வொருவருக்கும் எதைக்
கொடுக்க விரும்புகிறாரோ அதையே அவர்
கள் பெற்றுக் கொள்கிறார்கள். 8அதனால் இவ்
வாறு எழுதப்பட்டிருக்கிறது.

> *அவர் உயரத்தில் ஏறி ஆகாயத்துக்குள் சென்றார். அவர் சிறைபட்டவர்களை சிறையாக்கி, அவர்களுக்கு வரங்களையும் கொடுத்தார்.*
>
> *சங்கீதம் 68:18*

9அவர் மேலே சென்றார் என்று சொல்லும்
போது அதன் பொருள் என்ன? முதலில் அவர்
பூமிக்குக் கீழிறங்கி வந்தார் என்பது பொரு
ளாகிறது. 10எனவே இயேசு இறங்கி வந்தார்.
பின் அவரே மேலேயும் சென்றார். அவர்
எல்லா வானங்களுக்கும் மேலே ஏறிச் சென்
றார். கிறிஸ்து தாமாகவே எல்லாவற்றையும்
நிரப்புவதற்காக அப்படி செய்தார். 11அதே
கிறிஸ்து மக்களுக்கு வரங்களைக் கொடுத்தார்.
சிலரை அப்போஸ்தலராக்கினார், சிலரை
தீர்க்கதரிசிகளாக்கினார், சிலரை சுவிசேஷகர்
களாக்கினார். சிலரை தேவனின் மக்களைப்
பற்றி அக்கறை கொள்ளும் மேய்ப்பர்களாக்கி
னர், சிலரை போதிப்பவர்களாக்கினார். 12கிறி
ஸ்துவின் பரிசுத்தவான்களைச் சேவை செய்ய
தேவன் பல வரங்களைக் கொடுத்தார். கிறிஸ்
துவின் சபையானது வல்லமை பெறவே
அவர் வரங்களைக் கொடுத்தார். 13நாம் அனை
வரும் அதே நம்பிக்கையில் ஒன்றுபடவேண்
டும். தேவனுடைய குமாரனைப் பற்றிய அறி
வைப் பெறவேண்டி, அதுவரை இவ்வேலை
தொடர வேண்டும். நாம் முழுமை பெற்றவர்க
ளாக மாற வேண்டும். நாம் கிறிஸ்துவைப்
போல் ஆகும்வரை வளர வேண்டும். அவரது
முழுமையைப் பெறவேண்டும். 14நாம் இன்னும்
குழந்தைகள்போல் இருப்பதை நிறுத்த வேண்
டும். அலைகளால் அலைக்கழிக்கப்படும் கப்ப
லைப்போல சிலர் அடிக்கடி மனம் மாறிக்
கொண்டிருக்கிறார்கள். நாம் அவர்களைப்
போன்று இருப்பதையும் நிறுத்த வேண்டும்.
நம்மைத் தந்திரமாகச் சிக்க வைக்க சிலர்
முயலும்போது நாம் அவர்கள் பின்னால்
போகக்கூடாது. 15.நாம் அன்புடன் உண்மை
யை மட்டும் பேசுவோம். எல்லா வழிகளிலும்
நாம் இயேசுவைப் போன்று வளருவோம்.
கிறிஸ்து தலையும் நாம் சரீரமும் ஆவோம்.
16இந்த முழு சரீரமும் அவரைச் சார்ந்தது.
எல்லா உறுப்புகளும் ஒன்று சேர்ந்து வளருகி
றது. ஒவ்வொரு உறுப்பும் அதனதன் வேலை
யைச் செய்து வருகின்றது. அனைத்தும்
சேர்ந்து முழுசரீரம் உருவாகி, அன்போடு
வலிமை கொண்டதாக வளர உதவுகிறது.

### நீங்கள் வாழ வேண்டிய வழி

17கர்த்தருக்காக நான் உங்களுக்கு இதைச்
சொல்கிறேன். நான் எச்சரிப்பதாவது: நம்
பிக்கை அற்றவர்களைப் போன்று நீங்களும்
தொடர்ந்து வாழக் கூடாது. அவர்களது சிந்த
னைகள் பயனற்றவை. 18அந்த மக்கள் புரிந்து
கொள்ள மாட்டார்கள். அவர்களின் மனம் மூடி
யது, இதயம் கடினமானது, அவர்களுக்கு ஒன்
றும் தெரியாது. எனவே தேவன் கொடுக்கிற
வாழ்க்கை அவர்களுக்கு இல்லை. 19அவர்கள்
தங்கள் வெட்க உண்ர்வை இழந்து விட்டனர்.
தீயவற்றைச் செய்வதற்காகவே தங்கள் வாழ்க்
கையை பயன்படுத்துகிறார்கள். எல்லா வகை
யான கெட்ட செயல்களையும் செய்ய அவர்கள்
மேலும் மேலும் விரும்புகிறார்கள். 20ஆனால்
நீங்கள் கிறிஸ்துவின் மூலமாகக் கற்றுக்
கொண்டவை அந்த கெட்டவற்றைப் போன்ற
தல்ல. 21அவரைப் பற்றி உங்களுக்குச் சொல்
லப்பட்டுள்ளது எது என்பது எனக்குத் தெரி
யும். நீங்கள் அவருக்குள் இருக்கிறீர்கள்.
எனவே உங்களுக்கு உண்மையானது கற்
பிக்கப்பட்டிருக்கிறது. ஆமாம், அந்த உண்மை
இயேசுவிடம் உள்ளது. 22உங்கள் பழைய
வாழ்க்கை முறைகளை விட்டுவிடவும், எப்
பொழுதும் தீமையை தருகிற பழைய குணங்
களை ஒதுக்கவும் உங்களுக்குக் கற்பிக்கப்பட்டி
ருக்கிறது. அது மேலும் மோசமாகிவிட்டது.
ஏனென்றால் அவர்கள் தீயவற்றால் முட்டாள்க
ளாக்கப்பட்டு அவற்றையே புதுப்பிக்க விரும்
புகிறார்கள் 23ஆனால் நீங்கள் உங்கள் இதயத்
தில் புதியவர்களாகும்படி கற்பிக்கப்பட்டிருக்
கிறீர்கள். 24நீங்கள் புதிய மனிதனாக இருக்கக்
கற்பிக்கப்பட்டிருக்கிறீர்கள். அந்தப் புதிய மனி
தன் தேவனைப்போன்று செய்யப்படுகிறான்.
உண்மையான நீதியிலும், பரிசுத்தத்திலும்
இருக்கிறான். 25எனவே நீங்கள் பொய் சொல்
வதை நிறுத்துங்கள். ஒருவருக்கொருவர் எப்
பொழுதும் உண்மையையே பேசுங்கள்.

*ஏனென்றால் நாம் அனைவரும் ஒரே சரீரத்தின்
பல்வேறு உறுப்புகளாகச் சேர்ந்திருக்கிறோம்.
**26**உங்கள் கோபம் உங்களைப் பாவம் செய்யக்
கொண்டு செல்லுமளவு அனுமதிக்காதீர்கள்.
நாள் முழுவதும் கோபம் உடையவர்களாக
இருக்காதீர்கள். **27**உங்களை வீழ்த்துவதற்குரிய
வழியைப் பிசாசுக்குக் கொடுக்க வேண்டாம்.
**28**ஒருவன் திருடுகின்றவனாக இருந்தால் தன்
திருட்டை நிறுத்துவானாக. அவன் வேலை
செய்ய தொடங்கட்டும். அவன் தனது கைகளை
நல்ல செயல்களைச் செய்வதற்குப் பயன்படுத்
தட்டும். பிறகு ஏழைகளோடு பகிர்ந்துகொள்ள
அவனுக்கென்று சில இருக்கும்.*

***29**நீங்கள் பேசும்போது தீயவற்றைச் சொல்
லாதீர்கள். ஆனால் மற்றவர்களுக்குப் பயன்
தரத்தக்கதும், மற்றவர்களைப் பலமுள்ளதாக்கு
கிறவைகளை மட்டும் பேசுங்கள். அதனால்
உங்கள் பேச்சைக் கேட்பவர்களுக்கு உங்கள்
பேச்சு ஆசீர்வாதங்களைக் கொண்டு வரும்.
**30**பரிசுத்த ஆவியானவரைச் சோகப்படுத்தாதீர்
கள். நீங்கள் தேவனுக்குரியவராக இருக்கிறீர்
கள் என்பதற்கு ஆவியானவரே சான்றாக
உள்ளார். தேவன் உங்களுக்குச் சரியான நேரத்
தில் விடுதலை தருவார் என்பதைக் காட்டவே
தேவன் பரிசுத்த ஆவியானவரை உங்களுக்
குத் தந்துள்ளார். **31**கசப்பும், கோபமும், மூர்க்
கமும் அடையாதீர்கள். கோபத்தில் சத்தம் இடா
தீர்கள். கடுஞ்சொற்களைச் சொல்லாதீர்கள்.
பாவங்களை (எப்பொழுதும்) செய்யாதீர்கள்.
**32**ஒருவருக்கொருவர் தயவாயும், மன உருக்க
மாயும் இருங்கள். கிறிஸ்துவுக்குள் தேவன்
உங்களை மன்னித்து விடுவதைப் போல நீங்க
ளும் மற்றவர்களை மன்னித்து விடுங்கள்.*

**5** *நீங்கள் தேவனால் நேசிக்கப்படுகிற அவ
ரது பிள்ளைகள். எனவே, தேவனைப்
போல ஆக முயலுங்கள். **2**அன்புக்குரிய ஒரு
வாழ்க்கையை வாழுங்கள். கிறிஸ்து நம்மை
நேசித்தது போலவே மற்றவர்களை நேசியுங்
கள். கிறிஸ்து தம்மையே நமக்கு ஒப்புங்கொ
டுத்துவிட்டார். இனிய நறுமணம் உடைய
காணிக்கையாகவும், பலியாகவும் தேவனுக்
குத் தம்மைத் தந்தார். **3**ஆனால் உங்களிடையே
மோகத்திற்குறிய பாவங்கள் இருக்கக்கூடாது.
உங்களிடம் எவ்வகையான தீயசெயல்களும்,
பொருளாசையும் இருக்கக் கூடாது. ஏனென்
றால் இவை தேவனுடைய புனிதமான மக்க
ளுக்கு ஏற்றதல்ல. **4**நீங்கள் வம்பு பேசக் கூடாது.
முட்டாள்தனங்களும், பரியாசங்களும் பேசக்கூ
டாது. இவை உங்களுக்குப் பொருத்தமானவை
அல்ல. நீங்கள் தேவனுக்கு ஸ்தோத்திரம்
செலுத்த வேண்டும். **5**பாலியல் பாவங்கள்
செய்பவனும், தீய செயல் புரிபவனும், தனக்கு
மேலும் மேலும் வேண்டும் என ஆசைப்படும்
சுயநலக்காரனுமான விக்கிரக வணக்கம்
செய்பவனும் தேவனுடையதும், கிறிஸ்துவு
டையதுமாகிய இராஜ்யத்தில் இடம் பெறுவ
தில்லை. இதைப்பற்றி நீங்கள் தெரிந்திருக்க
வேண்டும்.*

***6**உங்களிடம் உண்மை இல்லாதவற்றைச்
சொல்லி உங்களை எவரும் முட்டாளாக ஆக்கி
விட அனுமதிக்காதீர்கள். கீழ்ப்படியாதவர்கள்
மீது தேவனைக் கோபம் கொள்ள அத்தீய
செயல்கள் செய்கிறது. **7**எனவே அவர்களோடு
இத்தகைய தீய செயல்களைச் செய்யாதீர்கள்.
**8**கடந்த காலத்தில் நீங்கள் இருளில் இருந்தீர்கள்.
இப்போழுது தேவனுடைய வெளிச்சத்தில்
இருக்கிறீர்கள். எனவே நீங்கள் வெளிச்சத்தின்
பிள்ளைகளைப் போன்று நடக்க வேண்டும்.
**9**வெளிச்சமானது எல்லாவகையான நன்மைக
ளையும், சரியான வாழ்க்கையையும், உண்
மையையும் கொண்டு வரும். **10**தேவனுக்கு
விருப்பமானது எது என்பதைக் கற்றுக்கொள்
ளுங்கள். **11**இருட்டில் வாழ்பவர்கள் செய்கின்ற
பாவங்களை எல்லாம் நீங்கள் செய்யாதீர்கள்.
அவற்றைச் செய்வதால் உங்களுக்கு நன்மை
வருவதில்லை. இருட்டில் செய்யப்படுபவை
எல்லாம் தவறானவை என்பதை எடுத்துக்
காட்ட நீங்கள் நற்செயல்களைச் செய்யுங்கள்.
**12**அவர்கள் இருட்டில் இரகசியமாகச் செய்ப
வற்றைக் குறிப்பிடுவது கூட வெட்கப்படத்
தக்கது ஆகும். **13**அவற்றை நாம் தவறானவை
என்று காட்டும்பொழுது அவற்றை எளிதாகப்
பார்ப்பதற்கு வெளிச்சம் உதவும். **14**எளிதாகப்
பார்ப்பதுபோல் இருக்கிற எல்லாப் பொருள்க
ளும் தமக்குள் வெளிச்சமுடையதாகி விடும்.
அதனால்தான் நாம் கூறுகிறோம்.*

> *“தூங்குகின்றவர்களே எழும்புங்கள், மர
> ணத்திலிருந்து எழும்புங்கள். கிறிஸ்து
> உங்கள்மீது பிரகாசமாயிருப்பார்.”*

***15**எனவே எப்படி வாழ்வது என்பதில் எச்ச
ரிக்கையாய் இருங்கள். ஞானம் இல்லாதவர்
கள் வாழ்வதுபோன்று வாழாதீர்கள். ஞானத்
தோடு வாழுங்கள். **16**நீங்கள் உங்களுக்குக்
கிடைத்துள்ள ஒவ்வொரு வாய்ப்பையும் பயன்
படுத்தி நற்செயல்களைச் செய்யுங்கள். ஏனென்
றால் நாம் கெட்ட காலங்களில் வாழ்கிறோம்.
**17**ஆகையால் முட்டாள்தனமாக உங்கள் வாழ்க்
கையை வீணாக்கி விடாதீர்கள். பிதா உங்க
ளிடம் என்ன விரும்புகிறார் என்பதை அறிந்
துகொள்ளுங்கள். **18**மதுபானவெறி கொள்ளா
தீர்கள். உங்கள் ஆன்மீக வாழ்வை அது அழித்
துவிடும். ஆவியால் நிரப்பப்பட்டவர்களாக
இருங்கள். **19**சங்கீதங்களினாலும், கீர்த்தனை
களினாலும், பக்திப் பாடல்களினாலும் ஒருவ
ருக்கொருவர் பேசிக்கொள்ளுங்கள். உங்கள்
இதயத்தில் கர்த்தருக்காக இசையுடன்பாடுங்
கள். **20**பிதாவாகிய தேவனுக்கு எப்போதும்
எல்லாவற்றிற்காகவும் நன்றி செலுத்துங்கள்.
அதனைக் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின்
பெயரில் செலுத்துங்கள்.*

### கணவன்களும், மனைவிமார்களும்

***21**ஒருவருக்கொருவர் கீழ்ப்படிய விருப்ப
மாய் இருங்கள். கிறிஸ்துவின் மீதுள்ள மரியா*

தையின் பொருட்டு இதைச் செய்யுங்கள்.
[22]மனைவிமார்களே! நீங்கள் கர்த்தருக்குக்
கீழ்ப்படிவது போலவே கணவனுக்கும் கீழ்ப்ப
டியுங்கள். [23]சபைக்குத் தலையாகக் கிறிஸ்து
இருக்கிறார். மனைவியின் தலையாக இருப்
பது கணவன் தான். சபை கிறிஸ்துவின் சரீ
ரம் போன்றது. சரீரத்தின் இரட்சகராய் கிறி
ஸ்து இருக்கிறார். [24]கிறிஸ்துவின் அதிகாரத்
துக்குள் சபை உள்ளது. இதைப் போன்று
தான் மனைவிகளாகிய நீங்களும் உள்ளீர்கள்.
எல்லா வகையிலும் நீங்கள் உங்கள் கணவர்க
ளின் அதிகாரத்திற்குள்தான் இருக்கிறீர்கள்.

[25]கணவன்மார்களே! கிறிஸ்து சபையை
நேசிக்கிறதுபோல நீங்கள் உங்கள் மனைவி
யரை நேசியுங்கள். கிறிஸ்து சபைக்காகவே
இறந்தார். [26]சபையை புனிதமாக்கவே அவர்
இறந்தார். சரீரத்தைத் தண்ணீரால் கழுவி
தூய்மைப்படுத்துவது போலவே திருவசனத்
தைப் பயன்படுத்தி சபையைத் தூய்மை செய்
கிறார். [27]கிறிஸ்து இறந்து போனதால் அவர்
சபையை அழகு மிக்க மணமகளைப் போன்று
ஆக்க, தம்மையே தந்தார். இதனால் சபை
புனிதமானதாக, குற்றம் இல்லாததாக, கேடோ,
பாவமோ, வேறு தவறுகளோ நடைபெறாத
இடமாக ஆக்க விரும்பினார். இதுபோல [28]கண
வர்கள் மனைவிமார்களை நேசிக்கவேண்டும்.
அவர்கள் தம் சொந்த சரீரத்தைப் போன்று
மனைவியை நேசிப்பது தன்னையே நேசிப்
பது போன்றதாகும். [29]ஏனென்றால் எவன்
ஒருவனும் தன் சொந்த சரீரத்தை வெறுக்
கமாட்டான். ஒவவொருவனும் தம் சரீரத்தை
நல்ல உணவு கொடுத்து காப்பாற்றுவான்.
இதைத்தான் கிறிஸ்துவும் சபைக்காகச் செய்
தார். [30]ஏனென்றால் நாம் அவரது உறுப்புக்
கள். [31]“ஒரு மனிதன் தனது தந்தையையும்
தாயையும் விட்டுவிலகி மனைவியோடு
சேர்ந்து கொள்கிறான். இருவரும் ஒருவராகி
விடுகிறார்கள்” என்று எழுதப்பட்டிருக்
கிறது * [32]நான் கிறிஸ்துவைப் பற்றியும் சபை
யைப் பற்றியும் பேசிக் கொண்டிருக்கிறேன்.
இதிலுள்ள இரகசியமான உண்மை மிக முக்கி
யமானது. [33]எனினும் ஒவ்வொருவரும் உங்
களை நேசிப்பது போலவே மனைவியை நேசி
யுங்கள். மனைவியும் கணவனுக்கு மரியாதை
கொடுக்கவேண்டும்.

### பிள்ளைகளும் பெற்றோர்களும்

6 பிள்ளைகளே கர்த்தர் விரும்புவது போல
நீங்கள் உங்கள் பெற்றோருக்குக் கீழ்ப்படி
யுங்கள். இதுவே நீங்கள் செய்ய வேண்டிய
சரியான செயலாகும். [2]“நீங்கள் உங்களுடைய
தாய்க்கும் தகப்பனுக்கும் மரியாதை கொடுக்க
வேண்டும்”* என்று கட்டளை கூறுகிறது. இது
தான் முதல் கட்டளை. அதிலே ஒரு வாக்குறுதி
உள்ளது. [3]“பிறகு எல்லாம் உங்களுக்கு நல்ல
தாகும். நீங்கள் பூமியில் நீண்ட வாழ்வைப்
பெறுவீர்கள்!” என்பதுதான் அந்த வாக்கு
றுதி. [4]தந்தைமார்களே! உங்கள் குழந்தை
களைக் கோபப்படுத்தாதீர்கள். கர்த்தருக்கேற்ற
கல்வியாலும், பயிற்சியாலும் அவர்களை
மேலான நிலைக்குக் கொண்டு வாருங்கள்.

### அடிமைகளும், எஜமானர்களும்

[5]அடிமைகளே பூமியில் உள்ள உங்கள்
எஜமானர்களுக்கு அச்சத்தோடும், மரியாதை
யோடும் கீழ்படிந்திருங்கள். நீங்கள் கிறிஸ்து
வுக்குக் கீழ்ப்படிவது போன்று உண்மையான
மனதோடு கீழ்ப்படியுங்கள். [6]அவர்கள் கவனித்
துக் கொண்டு இருக்கும்போது மட்டும் நல்
லெண்ணத்தைப் பெற உங்கள் எஜமானர்க
ளுக்கு கீழ்ப்படியக் கூடாது; நீங்கள் கிறிஸ்
துவுக்குக் கீழ்ப்படிவதுபோலக் கீழ்ப்படி
யுங்கள். தேவன் விரும்புவதை நீங்கள் முழு
மனதுடன் செய்யுங்கள். [7]உங்கள் வேலையைச்
செய்யுங்கள். சந்தோஷமாய் செய்யுங்கள். கர்த்
தருக்குச் சேவை செய்வதுபோல எண்ணுங்
கள். மனிதருக்குச் சேவை செய்வதாக எண்
ணாதீர்கள். [8]அவரவர் செய்யும் நற்செயலுக்கு
ஏற்றபடி ஒவ்வொருவருக்கும் கர்த்தர் பலன்
தருவார் என்பதை நினைவில் கொள்ளுங்கள்.
அவர்கள் அடிமைகள்போல இருந்தாலும் சரி,
இல்லாவிட்டாலும் சரி ஒவ்வொருவரும் தத்தம்
நற்செயலுக்கு ஏற்றபடி பலன்களைப் பெறு
வர்.

[9]எஜமானர்களே, இதைப்போன்றே நீங்க
ளும் உங்கள் அடிமைகளிடம் நல்லவர்களாக
வும் இருங்கள். அவர்களை மிரட்டாதீர்கள்.
உங்களுக்கும் உங்கள் அடிமைகளுக்கும் எஜ
மானராய் இருக்கிற தேவன் பரலோகத்தில்
இருக்கிறார் என்பதைத் தெரிந்து கொள்ளுங்
கள். அவர் எல்லாரையும் ஒன்று போலவே
நியாயந்தீர்க்கிறார்.

### தேவனின் முழு ஆயுதங்களையும் அணிந்து கொள்க

[10]இறுதியாக நான் எழுதுவது யாதெனில்:
அவரது பெரும் பலத்தால் நீங்கள் உங்களைப்
பலப்படுத்திக்கொள்ளுங்கள் என்று கூறுகி
றேன். [11]அவரது முழு ஆயுதங்களையும் அணிந்
துகொள்ளுங்கள். அதற்குப்பிறகு உங்களால்
சாத்தானின் தந்திரங்களை எதிர்த்துப்போராட
முடியும். [12]நமது போராட்டம் பூமியிலுள்ள
மக்களை எதிர்த்தல்ல. நாம் இருட்டில் உள்ள
அரசர்களையும், அதிகாரிகளையும், அதிகா
ரங்களையும் எதிர்த்தே போராடுகிறோம்.
வானமண்டலங்களில் உள்ள பொல்லாத ஆவி
களின்சேனைகளுக்கு எதிராகப் போர் செய்கி
றோம். [13]அதனால்தான் தேவனின் முழுக்கவ
சங்களும் உங்களுக்குத் தேவை. அப்போது
தான் உங்களால் தீங்குநாளில் எதிர்த்து பலத்
துடன் இருக்க முடியும். போர் முடித்த பிறகும்
வல்லமையுடன் நிற்க முடியும். [14]எனவே
உண்மை என்னும் இடுப்புக் கச்சையைக்

---

**ஒரு … எழுதப்பட்டிருக்கிறது** ஆதி. 2:24.

**நீங்கள் … வேண்டும்** யாத். 20:12, உபா. 5:16.

கட்டிக்கொண்டு வலிமையாகுங்கள். சரியான
வாழ்க்கை என்னும் கவசத்தை உங்கள் மார்
பில் அணிந்து கொள்ளுங்கள். 15சமாதானத்
தின் நற்செய்தி என்னும் செருப்புகளை உங்
கள் கால்களில் அணிந்துகொண்டு முழு தயார்
நிலையில் நில்லுங்கள். 16நம்பிக்கை என்னும்
கேடயத்தைக் கைகளில் தாங்கிக் கொள்ளுங்
கள். சாத்தான் எறியும் அம்புகளை அதனால்
தடுத்துவிட முடியும். 17தேவனின் வார்த்தை
என்னும் தலைக் கவசத்தை அணிந்துகொள்க!
ஆவி என்னும் வாளை எடுத்துக்கொள்க.
அது தேவனின் போதகங்களாகும். 18எப்பொ
ழுதும் ஆவிக்குள் பிரார்த்தனை செய்யுங்கள்.
எல்லா வகையான பிரார்த்தனைகளையும்
செய்து உங்களுக்குத் தேவையான அனைத்
தையும் கேளுங்கள். இதனைச் செய்வதற்கு
எப்பொழுதும் தயாராக இருங்கள். ஒருபோ
தும் மனம் தளராதீர்கள். எப்பொழுதும்
தேவனுடைய எல்லாப் பிள்ளைகளுக்காகவும்
பிரார்த்தனை செய்யுங்கள்.

19எனக்காகவும் பிரார்த்தனை செய்யுங்கள்,
அப்பொழுது நான் பேசும்போது தேவன்
எனக்கு வார்த்தைகளைக் கொடுப்பார். நான்
அச்சம் இல்லாமல் சுவிசேஷத்தின் இரகசிய
உண்மைகளைப் போதிக்க வேண்டும். 20நற்
செய்தியைப் போதிக்கும் பணி என்னுடை
யது. அதை இப்பொழுது சிறைக்குள் இருந்து
செய்கிறேன். இதற்கான தைரியத்தை நான்
பெற்றுக் கொள்ள எனக்காகப் பிரார்த்தனை
செய்யுங்கள்.

### இறுதி வாழ்த்துக்கள்

21நான் நேசிக்கிற நம் சகோதரன் தீகிக்
குவை உங்களிடம் அனுப்புவேன். கர்த்தரின்
பணியில் அவன் நம்பிக்கைக்குரிய தொண்
டன். எனக்கு ஏற்பட்ட எல்லாவற்றையும்
அவன் உங்களுக்குக் கூறுவான். அப்பொழுது
உங்களுக்கு என் நிலை என்னவென்றும்,
நான் செய்து கொண்டிருப்பது என்னவென்
றும் தெரியும். 22அதற்காகத்தான் நான்
அவனை அனுப்புகின்றேன். எனவே நாங்கள்
எப்படி இருக்கிறோம் என்பதை நீங்கள்
தெரிந்துகொள்ளவும், உங்களைத் தைரியப்
படுத்தவும் நான் அவனை அனுப்புகிறேன்.

23பிதாவாகிய தேவனிடமிருந்தும், கர்த்தரா
கிய இயேசு கிறிஸ்துவிடமிருந்தும் உங்களுக்கு
நம்பிக்கையோடு கூடிய சமாதானமும் அன்பும்
கிடைப்பதாக. 24நம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்
துவிடம் அழியாத அன்புள்ள அனைவருக்கும்
தேவனின் இரக்கம் உண்டாவதாக. ஆமென்.

# பிலிப்பியருக்கு எழுதிய கடிதம்

1 இயேசு கிறிஸ்துவின் ஊழியர்களாகிய பவு
லும் தீமோத்தேயுவும் பிலிப்பி நகரத்தில்
கிறிஸ்து இயேசுவுக்குள் வாழ்கிற தேவனு
டைய பரிசுத்த மக்களுக்கும் உங்கள் கண்கா
ணிப்பாளர்களுக்கும், விசேஷ உதவியாளர்க
ளுக்கும், உங்கள் மூப்பர்களுக்கும் சிறப்பு
உதவியாளர்களுக்கும் எழுதுவது.
2நம்முடைய பிதாவாகிய தேவனாலும் கர்த்
தராகிய இயேசு கிறிஸ்துவினாலும் கிருபை
யும், சமாதானமும் உங்களுக்கு உண்டாவதாக.

### பவுலின் பிரார்த்தனை

3எப்போதும் உங்களை நினைத்துக்
கொண்டு நான் தேவனுக்கு நன்றி சொல்கி
றேன். 4உங்கள் அனைவருக்காக எப்போதும்
மகிழ்ச்சியோடு நான் பிரார்த்தனை செய்கி
றேன். 5மக்களிடம் நான் நற்செய்தியைக் கூறும்
போது அதற்கு உதவி செய்த உங்கள் அனைவ
ருக்காக தேவனுக்கு நன்றி செலுத்துகிறேன்.
நீங்கள் சுவிசேஷத்தை நம்பிய நாள் முதல்
நீங்கள் நற்கிரியைகளில் பங்கேற்று எனக்கு
உதவியுள்ளீர்கள். 6உங்களில் தேவன் நற்
செயல்களைச் செய்யத் தொடங்கினார். அவர்
இதை உங்களில் தொடர்ந்து செய்து கொண்
டிருக்கிறார். இயேசு கிறிஸ்து மீண்டும் வரும்
போது தேவன் தன் வேலையை உங்கள்
மூலம் செய்து முடிப்பார். அதைப் பற்றி நான்
உறுதியாய் இருக்கிறேன்.
7உங்கள் அனைவரையும் குறித்து இவ்
வாறு நான் நினைப்பது சரியென்று எண்ணு
கிறேன். இதில் நான் உறுதியாகவும் உள்ளேன்.
ஏனென்றால் உங்களை என் இதயத்தில் வைத்
திருக்கிறேன். நான் உங்களை மிக நெருக்கமாக
உணர்கிறேன். எனெனில் நீங்கள் அனைவரும்
என்னோடு தேவனுடைய கிருபையை பகிர்
ந்து கொள்கிறீர்கள். நான் சிறையில் இருக்கிற
போதும், நற்செய்திக்காக உத்தரவு சொல்லி
அதைத் திடப்படுத்தி வருகிறதிலும், நீங்கள்
தேவனுடைய கிருபையை என்னோடு பங்கிட்
டுக் கொள்கிறீர்கள். 8உங்களைப் பார்க்க நான்
மிகவும் விரும்புகிறேன் என்று தேவனுக்குத்
தெரியும். கிறிஸ்து இயேசுவின் அன்புடன்
உங்கள் அனைவரையும் நான் நேசிக்கிறேன்.
9 உங்களுக்காக என்னுடைய பிரார்த்தனை
இதுவே:

உங்கள் அன்பு மேலும் மேலும் வளர்வ
தாக. உங்களுக்கு அறிவும், அன்போடு
கூட புரிந்து கொள்ளுதலும் உண்டாவ
தாக.
10 பிறகு நன்மைக்கும் தீமைக்கும் உள்ள
வேறுபாட்டை உங்களால் கண்டு
கொண்டு, நன்மையை மட்டும் தேர்ந்
தெடுத்துக் கொள்ளவும் கிறிஸ்து வரும்
போது நீங்கள் தூய்மையடையவும்,
தவறு இல்லாதவர்களாக இருக்கவும்,
11 இயேசு கிறிஸ்துவின் உதவியுடன்,
அவர் மூலம் நீங்கள் பல நற்செயல்
களைச் செய்து தேவனுக்கு மகிமை
யையும் பாராட்டுகளையும் சேர்க்க
வேண்டும்.

### பவுலின் துன்பங்கள் கர்த்தரின் வேலைக்கு உதவியது

12சகோதர சகோதரிகளே! எனக்கு ஏற்பட்ட
அந்தத் துன்பங்கள் எல்லாம் நற்செய்தியைப்
பரப்புகிற பணிக்கே உதவியது என்பதை
நீங்கள் தெரிந்துகொள்ளவேண்டும் என விரும்
புகிறேன். 13சிறைக்குள் நான் ஏன் இருக்கி
றேன் என்பது தெளிவாகிறது. ஏனென்றால்
நான் கிறிஸ்துவின் நம்பிக்கையாளன். காவ
லர்களுக்கும், மற்ற மக்களுக்கும் இது தெரியும்.
14இன்னும் நான் சிறைப்பட்டிருக்கிறேன். அது
நன்மைக்குத்தான் என்று பல விசுவாசிகள்
இப்போது எண்ணுகின்றனர். எனவே கிறிஸ்
துவைப் பற்றிய நற்செய்தியை அச்சமில்லா
மல் பரப்புவதில் மேலும் தைரியம் உள்ளவர்
களாக இருக்கிறார்கள்.
15கிறிஸ்துவைப் பற்றிச் சிலர் பிரச்சாரம்
செய்கிறார்கள், என்றாலும் அவர்கள் பொறா
மையும், கசப்புணர்வும் கொண்டவர்களாக
உள்ளார்கள். இன்னும் சிலர் உதவி செய்யும்
விருப்பத்தோடு கிறிஸ்துவைப் பற்றி பிரச்சா
ரம் செய்கிறார்கள். 16இவர்கள், அன்பினால்
கிறிஸ்துவைப்பற்றி பிரச்சாரம் செய்கின்றனர்.
தேவன் எனக்கு இந்தப் பணியை நற்செய்தி
யைப் பாதுகாப்பதற்காகத் தந்துள்ளார் என்
பதை இவர்கள் அறிவர். 17மற்றவர்களோ தன்
னலம் காரணமாக கிறிஸ்துவைப் பற்றி பிரச்
சாரம் செய்கின்றனர். அவர்களின் பிரச்சார
நோக்கம் தவறானது. சிறைக்குள் எனக்கு
தொல்லைகளை உருவாக்க அவர்கள் விரும்பு
கின்றனர்.
18அவர்கள் எனக்குத் தொல்லை கொடுத்
தால் அதைப் பற்றி நான் கவலைப்படப் போவ
தில்லை. மக்களிடம் அவர்கள் இயேசுவைப்

பற்றிக் கூறுகிறார்கள் என்பதுதான் முக்கிய
மான விஷயம். நானும் இயேசுவைப் பற்றி
அவர்கள் மக்களிடம் சொல்ல வேண்டும்
என்றே விரும்புகிறேன். அவர்கள் அதைச்
சரியான நோக்கத்தோடு செய்ய வேண்டும்.
ஆனால் அவர்கள் தவறான நோக்கத்தோடு
போலியாகப் பிரச்சாரம் செய்தாலும் கூட
நான் மகிழ்ச்சியடைகிறேன். ஏனென்றால்
அவர்கள் கிறிஸ்துவைப் பற்றிப் பேசுகிறார்
கள். இதனால் தொடர்ந்து நான் மகிழ்ச்சியடை
வேன். 19எனக்காக நீங்கள் பிரார்த்தனை
செய்து கொண்டிருக்கிறீர்கள். இயேசு கிறிஸ்து
வின் பரிசுத்த ஆவியானவர் எனக்கு உதவு
கிறார். ஆகையால் இந்தத் துன்பங்கள் எனக்கு
விடுதலையைத் தரும் என்று எனக்குத் தெரி
யும். 20எதிலும் நான் கிறிஸ்துவிடம் தவறமாட்
டேன். இதுவே நான் விரும்புவதும், நம்புவதும்
கூட. இந்த உலகத்தில் என் வாழ்வில் நான்
இயேசுவின் உயர்வைக் காட்ட வேண்டும்.
அதனை வெளிப்படுத்தும் தைரியத்தை எப்
போதும்போல இப்போதும் பெறுவேன்
என்று நான் நம்புகிறேன். நான் வாழ்ந்தாலும்
சரி, மரித்தாலும் சரி இதைச் செய்ய விரும்
புகிறேன். 21கிறிஸ்துவை என் வாழ்வின் ஜீவ
னாக நம்புகிறேன். இதனால் நான் இறந்து
போனாலும் எனக்கு லாபம்தான். 22இந்த சரீரத்
தில் நான் தொடர்ந்து வாழ்ந்தால் கர்த்தருக்குத்
தொண்டு செய்ய என்னால் முடியும். ஆனால்
வாழ்வு, சாவு என்பவற்றில் எதைத் தேர்ந்
தெடுப்பது? எனக்குத் தெரியவில்லை.
23வாழ்வு, சாவு இரண்டிலொன்றைத் தேர்ந்
தெடுப்பது கடினமானது. இந்த வாழ்க்கையை
விட்டுவிட்டு நான் கிறிஸ்துவோடு வாழ
விரும்புகிறேன். அது சிறந்தது. 24ஆனால் நான்
சரீரத்தில் தரித்திருப்பது உங்களுக்கு மிக
அவசியம். 25உங்களுக்கு நான் தேவையான
வன் என்பதை அறிவேன். அதனால் உங்க
ளோடு இருக்க நான் விரும்புகிறேன். உங்கள்
நம்பிக்கையில் நீங்கள் மகிழ்ச்சியுடன் வளர
வும் நான் உதவுவேன். 26மீண்டும் உங்களோடு
நான் இருக்கும்போது நீங்கள் கிறிஸ்துவாகிய
இயேசுவுக்குள் மிகவும் மகிழ்ச்சியாய் இருப்
பீர்கள்.

27நற்செய்திக்குப் பொருந்துகிற வாழ்வை
வாழ்வது பற்றி உறுதிசெய்து கொள்ளுங்கள்.
பிறகு உங்களைப் பார்வையிட நான் வந்
தாலோ அல்லது உங்களை விட்டு நான் தூரம்
போனாலோ உங்களைப் பற்றி நான் நல்ல
செய்திகளையே கேள்விப்படுவேன். நற்செய்தி
யிலிருந்து வரும் நம்பிக்கைக்காக நீங்கள்
தொடர்ந்து பலத்தோடு பொது நோக்கத்துக்காக
ஒன்று சேர்ந்து குழுவாகப் பணியாற்றுகிறீர்
கள் என்று நான் கேள்விப்படுவேன். 28உங்க
ளுக்கு எதிரான மக்களைப்பற்றி நீங்கள் அச்
சப்பட வேண்டாம். உங்கள் பகைவர்கள் இழப்
புக்குள்ளாவர். நீங்கள் இரட்சிக்கப்படுவீர்கள்.
இச்சான்றுகள் தேவனிடமிருந்து வந்தன.
29ஏனென்றால் கிறிஸ்துவினிடத்தில் நம்பிக்
கை செலுத்துவதற்கு மாத்திரமல்ல, அவர்
நிமித்தமாகப் பாடுபடுவதற்கும் உங்களுக்கு
அருளப்பட்டிருக்கிறது. 30நான் உங்களோடு
இருந்தபோது நற்செய்திக்கு எதிராக இருந்த
மக்களுடன் நான் எதிர்கொள்ள நேர்ந்த
போராட்டங்களை நீங்கள் பார்த்தீர்கள். இப்
போது நான் எதிர்கொண்டு வரும் போராட்டங்
களைப் பற்றியும் நீங்கள் கேள்விப்படுகிறீர்
கள். நீங்களும் இது போன்ற போராட்டங்களை
எதிர்கொள்ள வேண்டும்.

### ஒருவரோடு ஒருவர் ஒற்றுமையுடனும் கரிசனையுடனும் இருங்கள்

2 நான் உங்களைச் செய்யச் சொல்ல
கிறிஸ்துவுக்குள் வேறு செயல்கள், உள்ள
னவா? அன்பினாலே யாதொரு தேறுதலும்
உண்டாகுமா? ஆவியினாலே யாதொரு ஐக்கி
யமும் உண்டாகுமா? உங்களுக்கு இரக்கமும்
கருணையும் உள்ளனவா? 2உங்களிடம் இவை
இருந்தால் எனக்காகச் செய்ய வேண்டும்
என்று சில காரியத்தைக் கேட்டுக் கொள்
வேன். இது எனக்குப் பெரும் மகிழ்ச்சியைத்
தரும். ஒரே காரியத்தைப்பற்றிய நம்பிக்கை
யில் உங்கள் அனைவரது மனமும் ஒன்று
சேரவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.
ஒருவருடன் ஒருவர் அன்புடன் இணைந்து
கொள்ளுங்கள். நீங்கள் ஒருவரை ஒருவர்
ஏற்றுக்கொண்டு, ஒரே நோக்கம் உடையவர்க
ளாக இருங்கள். 3நீங்கள் இச்செயல்களைச்
செய்யும்போது தன்னலமும், வீண்பெருமை
யும் கொள்ள வேண்டாம். பணிவுடன் இருங்
கள். நீங்கள் உங்களுக்குத் தரும் மரியாதை
யைவிட மற்ற வர்களுக்கு அதிக மரியாதை
யைத் தாருங்கள். 4நீங்கள் உங்கள் வாழ்வில்
மட்டும் அல்லாமல் மற்றவர் வாழ்விலும் ஆர்
வம் கொள்ளுங்கள்.

### தன்னலமற்ற குணத்தை கிறிஸ்து விடமிருந்து கற்றல்

5உங்கள் வாழ்வில் நீங்கள் இயேசு கிறிஸ்து
வைப் போன்று சிந்திக்கவும், செயல்படவும்
வேண்டும். 6கிறிஸ்து அவரளவில் எல்லாவற்
றிலும் தேவனனப் போன்றிருந்தார். அவர்
தேவனுக்கு நிகரானவராயிருந்தார். ஆனால்
தேவனுக்குச் சமமாக இருப்பதை கொள்ளை
யில் கிடைத்த அரிய பொருளாக அவர்
நினைத்ததில்லை.

7தேவனோடு இருந்த தனது இடத்தைக்
அவர் விட்டுக்கொடுத்து, தேவனது ஊழியர்
வடிவை எடுத்தார். மனிதராகப் பிறந்து அடி
மையைப் போல அவர் வாழ்ந்தார். 8மனித
னாக அவர் வாழும்போது தேவனுக்கு முன்பு
கீழ்ப்படிந்தவராக இருந்தார். மரணம் வரைக்
கும் அவர் பணிவுள்ளவராக இருந்தார். முடி
வில் சிலுவையிலே இறந்தார்.

9தேவனுக்குக் கிறிஸ்து பணிந்தார். ஆகை
யால் தேவன் அவரை மிக முக்கியமான
இடத்துக்கு உயர்த்தி விட்டார். தேவன் அவரது

*பெயரை மற்ற எல்லாப் பெயர்களையும் விட
உயர்வாக்கினார். 10அனைவரும் இயேசுவின்
பெயருக்கு முன்பு தலைகுனிந்தே இருக்க
வேண்டும் என்பதற்காகவே தேவன் இதனைச்
செய்தார். பரலோகத்திலும், பூலோகத்திலும்,
பூமிக்குக் கீழுள்ள உலகத்திலும் உள்ளவர்கள்
அவரைப் பணிவார்கள்.* 11“இயேசு கிறிஸ்
துவே நமது கர்த்தர்” என்று அனைவரும்
அறிக்கை செய்வர். அவர்கள் இதனைச் சொல்
லும்போது பிதாவாகிய தேவனுக்கு மகிமை
சேரும்.*

### தேவன் விரும்புகிற மக்களாய் இருங்கள்

*12என்னுடைய அன்பு நண்பர்களே! எப்
பொழுதும் நீங்கள் கீழ்ப்படிந்து இருங்கள். உங்
களோடு நான் இருந்தபோது நீங்கள் தேவனுக்
குக் கீழ்ப்பட்டிருந்தீர்கள். உங்களோடு நான்
இல்லாதபோது நீங்கள் தேவனுக்குக் கீழ்ப்படிந்
தவர்களாக இருப்பது மிகவும் முக்கியமான
ஒன்றாகும். நான் தூரமாயிருக்கிறபோது நீங்
கள் தேவனிடம் மரியாதையும் அச்சமும்
கொண்டு உங்கள் இரட்சிப்பு நிறைவேற
முயற்சி செய்யுங்கள். 13ஆமாம், தேவன் உங்க
ளில் பணியாற்றுகிறார். அவர் தம்முடைய
தயவுள்ள சித்தத்தின்படி விருப்பத்தையும்,
செய்கையையும் உங்களில் உண்டாக்குகிறார்.
அவற்றைச் செய்ய உங்களுக்குத் தேவனே
பலத்தைக் கொடுக்கிறார்.*

*14முறுமுறுப்பு அல்லது வாக்குவாதம், இல்
லாமல் எல்லாவற்றையும் செய்யுங்கள். 15அப்
போதுதான் எதுவுமறியாதவர்களாகவும், எந்
தத் தவறும் இல்லாதவர்களாகவும் இருப்பீர்
கள். நீங்கள் தேவனுடைய குற்றமற்ற பிள்ளை
களாக இருப்பீர்கள். ஆனால் உங்களைச் சுற்றி
லும் உள்ள பாவம் செய்கிற கெட்டவர்களோடு
நீங்கள் வாழ்கிறீர்கள். அவர்களுக்கு மத்தியில்
இருட்டின் நடுவில் விளக்குபோன்று பிரகாசிக்
கிறீர்கள். 16வாழ்வைக்கொடுக்கும் போத
னையை அந்த மக்களுக்கும் நீங்கள் வழங்குங்
கள். கிறிஸ்து மீண்டும் வரும்போது இது
பற்றி நான் மிகவும் பெருமை அடைவேன்.
எனது பணி வீணாகவில்லை என்றும் நான்
பெருமைகொள்வேன். ஏனென்றால் பந்தயத்
தில் ஓடி நான் வென்றவனாவேன்.*

*17தேவனுக்கு ஊழியம் செய்து உங்கள்
வாழ்வைத் தியாகம் செய்ய உங்கள் விசுவா
சம் தூண்டும். உங்கள் தியாகத்தோடு என்
இரத்தத்தையும் தரத் தயாராக உள்ளேன்.
ஆனால் அது நடந்தேறினால் நான் முழுமை
யாக மகிழ்வேன். நான் உங்களோடு பெரிதும்
மகிழ்ச்சி அடைவேன். 18மகிழ்ச்சியாக இருங்
கள். என்னோடு முழு மகிழ்ச்சி அடையுங்கள்.*

### தீமோத்தேயு, எப்பாப்பிரோதீத்து பற்றிய செய்திகள்

*19தீமோத்தேயுவை உங்களிடம் விரைவில்
அனுப்ப நான் கர்த்தராகிய இயேசுவுக்குள்
நம்புகிறேன். நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்
என்பதை அறிந்து கொள்வதில் நான் மகிழ்ச்சி
அடைவேன். 20தீமோத்தேயுவை போன்று
வேறு ஒருவரும் என்னிடம் இல்லை. உண்
மையிலேயே அவன் உங்கள் மேல் அதிக
கரிசனையுள்ளவன். 21மற்ற அனைவரும் தங்
கள் சொந்த வாழ்க்கையில் மட்டும் ஆர்வமாக
உள்ளனர். அவர்களுக்கு இயேசு கிறிஸ்து
வுக்கு ஊழியம் செய்வதில் விருப்பம் இல்லை.
22தீமோத்தேயு எப்படிப்பட்டவன் என்பது
உங்களுக்குத் தெரியும். நற்செய்தியைப் பரப்பு
வதில் அவன் என்னோடு பணி செய்திருக்கி
றான் என்பது உங்களுக்கு தெரியும். அவன்
ஒரு மகன் தந்தைக்குத் தொண்டு செய்வது
போன்று செய்தான். 23விரைவில் அவனை
உங்களிடம் அனுப்பத் திட்டமிட்டுள்ளேன்.
எனக்கு என்ன நேரும் என்பதை அறிந்து
கொள்ளும்போது நான் அவனை உங்களிடம்
அனுப்பி வைப்பேன். 24உங்களிடம் நான்
விரைவில் வர நமது கர்த்தர் உதவுவார்
என்பதில் உறுதியாக இருக்கிறேன்.*

*25எப்பாப்பிரோதீத்து கிறிஸ்துவுக்குள் என்
சகோதரன். கிறிஸ்துவின் சேவையில் அவன்
என்னோடு பணியாற்றி வருகிறான். எனக்கு
உதவி தேவைப்பட்டபோது அவனை என்னி
டம் அனுப்பினீர்கள். இப்போது அவனை உங்
களிடம் அனுப்பி வைக்க வேண்டும் என
எண்ணுகிறேன். 26உங்கள் அனைவரையும்
பார்க்க அவன் விரும்புகிறான். அதனால் உங்
களிடம் அவனை அனுப்பி வைக்க விரும்புகி
றேன். அவன் நோயுற்றதை நீங்கள் கேள்விப்
பட்டதால் சங்கடப்படுகிறான். 27அவன் நோ
யால் சாவுக்கு அருகில் இருந்தான். தேவன்
அவனுக்கு மட்டுமல்ல எனக்கும் கூட உதவி
னார். ஆகவே எனக்கு துக்கத்தின் மேல் துக்கம்
உண்டாகவில்லை. 28எனவே, அவனை நான்
உங்களிடம் அனுப்பி வைக்கப் பெரிதும்
விரும்புகிறேன். நீங்கள் அவனைப் பார்க்
கும்போது உங்களுக்கு மகிழ்ச்சி உண்டாகும்.
நானும் உங்களைப் பற்றி கவலைப்படுவதை
நிறுத்த முடியும். 29கர்த்தருக்குள் நீங்கள் அவ
னைப் பெருமகிழ்ச்சியோடு வரவேற்றுக்
கொள்ளுங்கள். எப்பாப்பிரோதீத்து போன்ற
வர்களுக்கு மரியாதை செய்யுங்கள். 30அவன்
கிறிஸ்துவுக்கான பணியால் ஏறக்குறைய
இறந்தான். அதனால் அவனுக்குக் கனம்
தாருங்கள். அவன் தன் வாழ்வை ஆபத்துக்கு
உட்படுத்தினான். அவன் இதனைச் செய்தான்.
எனவே அவன் எனக்கு உதவ முடிந்தது.
இது போன்ற உதவியை உங்களால் எனக்கு
செய்ய முடியாது.*

### மற்ற எல்லாவற்றையும் விட கிறிஸ்துவே முக்கியமானவர்

*3 இப்போதும் என் சகோதர சகோதரிகளே!
கர்த்தருக்குள் மகிழ்ச்சியாய் இருங்கள்.
அவற்றையே மீண்டும் எழுதுவதில் எனக்கு
எவ்விதமான தொந்தரவும் இல்லை. ஆனால்*

---

**அனைவரும் ... பணிவார்கள்** *ஏசாயா* 45:23

இது நீங்கள் ஆயத்தமாக இருக்க உதவியாக இருக்கும். [2]பாவம் செய்கிற மக்களிடம் எச்சரிக்கையாய் இருங்கள். அவர்கள் நாய்களைப் போன்றவர்கள். அவர்கள் நீங்கள் விருத்த சேதனம் செய்யும்படி பலவந்தப்படுத்துவார்கள். [3]ஆனால் உண்மையில் நாம் விருத்த சேதனம் உள்ளவர்கள். நாம் தேவனை அவரது ஆவியின் மூலம் வழிபட்டு வருகிறோம். நாம் இயேசு கிறிஸ்துவுக்குள் இருப்பதில் பெருமைப்படுகிறோம். நம்மீதோ, நமது செயல்களின் மீதோ நாம் நம்பிக்கை வைப்பதில்லை. [4]என் மீது நான் நம்பிக்கை வைக்க முடியும் என்றாலும் நான் நம்பிக்கை வைப்பதில்லை. வேறு யாராவது ஒருவர் தன் மீது நம்பிக்கை வைக்கக் காரணம் இருக்கும் என்று கருதினால், எனக்கும் என் மீது நம்பிக்கை வைக்க நிறைய காரணங்கள் உள்ளன. [5]நான் பிறந்த எட்டு நாட்களுக்குப் பின் விருத்த சேதனம் செய்யப்பட்டேன். நான் இஸ்ரவேலைச் சேர்ந்தவன். பென்யமீன் குடும்பத்தில் இருந்து வந்தவன். நான் எபிரேயன் (யூதன்). என் பெற்றோர்களும் எபிரேயர்கள். மோசேயின் சட்டங்கள் எனக்கு மிகவும் முக்கியமாக இருந்தது. அதனால் தான் பரிசேயனாக ஆனேன். [6]நான் எனது யூத மத வெறி காரணமாக சபைகளைத் துன்புறுத்தி வந்தேன். எவனொருவனும் என்மீது நான் மோசேயின் சட்டங்களை கைக்கொள்வதைக் குறித்து குற்றம் சாட்ட முடியவில்லை. [7]ஒரு காலத்தில் எனக்கு இவை முக்கியமாய்த் தோன்றியது. ஆனால் கிறிஸ்துவுக்கு முன்னால் அவை பயனற்றுப் போய்விட்டன. [8]அவை மட்டுமல்ல எனது கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவை அறிகிற அறிவின் மேன்மைக்காக எல்லாவற்றையும் நஷ்டம் என்று எண்ணிக் கொண்டிருக்கிறேன். [9]இதனால்தான் நான் கிறிஸ்துவுக்குள் இருக்கிறேன். கிறிஸ்துவுக்குள் நான் தேவனுக்கு வேண்டியவனாகிறேன். நான் சட்டங்களைப் பின்பற்றியதால் இப்பேறு பெறவில்லை. தேவனிடமிருந்து விசுவாசத்தின் மூலம் இது எனக்கு வந்தது. நான் கிறிஸ்துவிடம் கொண்ட விசுவாசத்தைப் பயன்படுத்தி தேவன் தனக்கு ஏற்றவனாகச் செய்து கொண்டார். [10]அவரையும் அவரது உயிர்த்தெழுதலின் வல்லமையையும் நான் அறிந்து கொள்ள விரும்புகிறேன். அவரது துன்பத்தில் பங்கு கொள்ளவும் மரணத்தில் அவரைப் போல் ஆகவும் விரும்புகிறேன். [11]அவற்றை நான் பெறுவேனேயானால் பிறகு மரணத்தில் இருந்தும் உயிர்த்தெழுந்து வருவேன் என்ற நம்பிக்கை பெறுவேன்.

### குறிக்கோளை எட்டுவதற்கான முயற்சி

[12]நான் எப்படி இருக்க வேண்டுமென தேவன் விரும்புகிறாரோ அப்படி நான் ஏற்கெனவே இருக்கிறேன் என்று எண்ணவில்லை. நான் இன்றுவரைகூட எனக்காக கிறிஸ்துவால் ஆக்கப்பட்ட அந்த குறிக்கோளை அடையவில்லை. ஆனால் தொடர்ந்து அந்த குறிக்கோளை அடைவதற்கான முயற்சியில் ஈடுபட்டிருக்கிறேன். [13]சகோதர சகோதரிகளே! இன்னும் அந்த இலக்கை நான் அடையவில்லை என்று எனக்குத் தெரியும். ஆனால் எப்பொழுதும் நான் ஒன்றை மட்டும் செய்து வருகிறேன். அதாவது கடந்த காலத்தில் உள்ளவற்றை நான் மறந்து விடுகிறேன். என் முன்னால் உள்ள குறிக்கோளை அடைய எவ்வளவு முயல முடியுமோ அவ்வளவு முயலுகிறேன். [14]குறிக்கோளை அடைந்து பரிசு பெறுவதற்கான முயற்சியையும் விடாமல் தொடர்ந்து நான் கைக்கொண்டு வருகிறேன். அது என்னுடையது. ஏனென்றால் அத்தகைய வாழ்வுக்குத்தான் இயேசு கிறிஸ்துவின் மூலம் தேவன் என்னை அழைத்திருக்கிறார்.

[15]ஆன்மீகத்தில் வளர்ந்து முழுமை அடைந்துள்ள நாம் அனைவரும் இத்தகைய வழியில் எண்ண வேண்டும். நீங்கள் ஏற்றுக்கொள்ள முடியாத வகையில் மேற்கூறிய விஷயங்களில் ஏதேனும் இருந்தால் தேவன் அதை உங்களுக்குத் தெளிவுபடுத்துவார். [16]ஆனாலும் நாம் ஏற்கெனவே செய்வது போல நாம் அடைந்த உண்மையைப் பின் தொடர்வதைத் தொடர்ந்து செய்யவேண்டும்.

[17]சகோதர சகோதரிகளே! நீங்கள் அனைவரும் என்னைப் போன்று வாழ முயல வேண்டும். நாங்கள் காட்டிய சட்டங்களை மேற்கொண்டு வாழ்பவர்களை அப்படியே பின்பற்ற முயலுங்கள். [18]இயேசுவின் சிலுவைக்கு விரோதமாகப் பலர் வாழ்ந்து வருகின்றனர். இத்தகையவர்களைப் பற்றி நான் அடிக்கடி கூறி வருகிறேன். இப்பொழுதும் அவர்களைப் பற்றிக் கூறுவதை எண்ணும்போது எனக்கு அழுகையே வருகிறது. [19]இத்தகையோரின் வாழ்க்கை முறை இவர்களை அழிவின் பாதைக்கே அழைத்துச் செல்லும். அவர்கள் தேவனுக்குச் சேவை செய்வதில்லை. அவர்கள் தம்மைத் திருப்திப் படுத்திக் கொள்வதற்காகவே வாழ்கிறார்கள். அவர்கள் வெட்கப் படத்தக்க செயல்களைச் செய்வதோடு அதைப் பற்றி பெருமைப்பட்டுக் கொள்ளவும் செய்கிறார்கள். அவர்கள் பூமியில் உள்ளவற்றைப் பற்றி மட்டுமே நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். [20]ஆனால், நம் குடியிருப்போ பரலோகத்தில் உள்ளது. நம்முடைய இரட்சகர் பரலோகத்தில் இருந்து வருவார். அவருக்காகவே நாம் காத்திருக்கிறோம். நமது இரட்சகர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே. [21]அவர் இத்தகைய நமது அற்பமான சரீரங்களை மாற்றி தம்முடைய மகிமை மிக்க சரீரம்போல ஆக்கி விடுவார். அவர் இதனைத் தம் வல்லமையால் செய்வார். அந்த வல்லமையால் அவர் எல்லாவற்றையும் ஆளத்தக்கவர்.

### செய்யத்தக்க சில

4 என்னுடைய அன்பான சகோதர சகோதரிகளே! நான் உங்களை நேசிக்கிறேன். உங்களைப் பார்க்க விரும்புகிறேன். நீங்கள்

*எனக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தீர்கள். உங்க
ளைப்பற்றி நான் பெருமைப்படுகிறேன். நான்
சொன்னதைப் போன்று நீங்கள் கர்த்தரைத்
தொடர்ந்து பின்பற்றி வாழுங்கள்.* **2***கர்த்
தருக்குள் ஒரே சிந்தையாய் இருக்க எயோதி
யாளுக்கும் சிந்திகேயாளுக்கும் புத்தி சொல்லு
கிறேன்.* **3***ஏனென்றால் நீங்கள் என்னோடு
உண்மையாய்ப் பணிபுரிகிறீர்கள். எனது நண்
பர்களே! அப்பெண்களுக்கு உதவுமாறு உங்
களை வேண்டிக் கொள்கிறேன். அவர்கள்
நற்செய்தியை மக்களிடம் பரப்பிட உதவினார்
கள். அவர்கள் கிலேமந்தோடும் மற்றவர்க
ளோடும் சேர்ந்து எனக்கு உதவினார்கள்.
அவர்களின் பெயர்கள் ஜீவ புஸ்தகத்தில்*
எழுதப்பட்டுள்ளன.*

**4***எப்பொழுதும் கர்த்தருக்குள் முழுமை
யான மகிழ்ச்சியோடு இருங்கள். நான் மீண்டும்
கூறுகிறேன். முழு மகிழ்ச்சியோடு இருங்கள்.*

**5***நீங்கள் சாந்தமும் கருணையும் கொண்
டவர்கள் என்பதை மக்கள் எல்லாரும் தெரிந்
துகொள்ளட்டும். கர்த்தர் விரைவில் வருவார்.*
**6***நீங்கள் எதைப் பற்றியும் கவலைப்பட வேண்
டாம். உங்களுக்கு வேண்டிய எல்லாவற்றுக்கா
கவும் தேவனிடம் பிரார்த்தனை செய்து
கேளுங்கள். நீங்கள் பிரார்த்தனை செய்யும்
பொழுதெல்லாம் நன்றி செலுத்துங்கள்* **7***தேவ
னுடைய சமாதானம், உங்கள் இதயத்தையும்
மனதையும் இயேசு கிறிஸ்துவுக்குள் பாதுகாக்
கும். தேவன் தரும் சமாதானம் மிக உயர்ந்தது.
நம்மால் புரிந்துகொள்ள முடியாதது.*

**8***இப்போது, சகோதர சகோதரிகளே! தொடர்
ந்து உங்கள் மனதில் உண்மையும், பெருமை
யும், நீதியும், தூய்மையும், அன்பும், அழகும்,
மரியாதையும், உயர்வும் கொண்ட எல்லாவற்
றையும் சிந்தித்துக் கொள்ளுங்கள்.* **9***என்னிடமி
ருந்து நீங்கள் கற்றவற்றையும், பெற்றவற்றை
யும், கண்டவற்றையும், கேட்டவற்றையும் மட்
டும் நீங்கள் செய்யுங்கள். சமாதானம் கொடுக்
கிற தேவன் உங்களோடிருப்பார்.*

### *பிலிப்பி நகரக் கிறிஸ்தவர்களுக்கு பவுல் நன்றி சொல்கிறார்*

**10***மீண்டும் என்னிடம் நீங்கள் அக்கறை காட்
டுவதற்காக எனக்குக் கர்த்தருக்குள் மிகவும்
மகிழ்ச்சி. நீங்கள் எப்பொழுதும் அக்கறை
கொண்டவர்கள். ஆனால் அதை வெளிப்படுத்த
உங்களுக்கு வேறு வழி இருக்கவில்லை.*
**11***எனக்குத் தேவைகள் உள்ளன என்பதற்காக
இவற்றையெல்லாம் நான் உங்களுக்கு கூற
வில்லை. எனக்கு இருக்கிற சூழ்நிலையில்
நான் திருப்தி அடைந்த உணர்வில் இருக்கி
றேன்.* **12***ஏழ்மையில் இருக்கும்போது எப்படி
வாழ்வது என்று நான் அறிந்திருக்கிறேன்.
செல்வம் இருக்கும்போதும் எப்படி வாழ்வது
என்று நான் அறிந்திருக்கிறேன். எல்லாவற்றி
லும் எப்பொழுதும் மகிழ்ச்சியாய் இருப்பது
எப்படி என்று எனக்குத் தெரியும். அந்த
இரகசியத்தை நான் கற்றிருக்கிறேன். எனக்கு
உண்ணுவதற்கு இருந்தபோதும் சரி, இல்லாத
போதும் சரி. நான் மகிழ்ச்சியாய் இருக்கிறேன்.
எனக்கு தேவையானவை அனைத்தும் இருந்த
போதும் சரி, இல்லாதபோதும் சரி, மகிழ்ச்சியு
டன் நான் இருக்கக் கற்றிருக்கிறேன்.* **13***கிறிஸ்
துவின் மூலம் எனக்கு எல்லாவற்றையும்
செய்ய வலிமை இருக்கிறது. ஏனென்றால்
அவர் எனக்குப் பலத்தைக் கொடுக்கிறார்.*

**14***ஆனால் எனக்கு உதவி தேவைப்பட்ட
போது நீங்கள் உதவி செய்தீர்கள் என்பது
நன்று.* **15***பிலிப்பியில் இருக்கிற நீங்கள், அங்கே
நான் நற்செய்தியைப் பிரச்சாரம் செய்யத்
தொடங்கிய நிலையை எண்ணிப் பாருங்கள்.
மக்கதோனியாவை விட்டு நான் வந்தபோது
எனக்கு ஆதரவு கொடுத்தது, உங்கள் சபை
மட்டுமே.* **16***நான் தெசலோனிக்கேயில் இருந்த
போது எனக்கு பலமுறை தேவைகளுக்கெல்
லாம் அனுப்பி வைத்தீர்கள்.* **17***உண்மையில்,
நான் உங்களிடமிருந்து பரிசுப் பொருள்களை
பெற்றுக்கொள்ள விரும்பவில்லை. ஆனால்
உங்கள் கணக்குக்குப் பலன் பெருகும்படியே
நாடுகிறேன்.* **18***எனக்குத் தேவைப்பட்ட போதெ
ல்லாம் பொருள்கள் கிடைத்தன. தேவைக்கு
அதிகமாகவும் கிடைக்கின்றன. உங்கள்
பரிசை எப்பாப்பிரோதீத்து கொண்டு வந்த
தன் மூலம் எனக்குத் தேவையான அனைத்
தும் கிடைத்தன. உங்களது பரிசுகள் தேவனுக்
கான மணமிக்க பலியைப்போல இருந்தன.
அப்பலியை தேவன் ஏற்றுக்கொண்டார். அது
அவருக்கு விருப்பமானதாயிற்று.* **19***இயேசு
கிறிஸ்துவின் மகிமையால் நமது தேவன் மிக
உயர்ந்த செல்வந்தராக இருக்கிறார். அவர்
அச்செல்வத்தைப் பயன்படுத்தி உமக்குத்
தேவையானவற்றையெல்லாம் கொடுப்பார்.*
**20***நமது பிதாவாகிய தேவனுக்கு மகிமை என்
றென்றைக்கும் உண்டாவதாக. ஆமென்.*

**21***கிறிஸ்துவின் மக்கள் அனைவரும் ஒருவ
ரையொருவர் பார்க்கும்போது வாழ்த்துதல்
கூறுங்கள். என்னோடு இருக்கிற தேவனுடைய
மக்களும் உங்களுக்கு வாழ்த்துதல் கூறுகிறார்
கள்.* **22***பரிசுத்தமான அனைத்து மக்களும்,
சிறப்பாக இராயனுடைய அரண்மனையிலுள்
ளவர்களும் உங்களுக்கு வாழ்த்து சொல்
லுகிறார்கள்.*

**23***கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் கிரு
பை உங்கள் அனைவரோடும் இருப்பதாக.*

---

***ஜீவ புஸ்தகத்தில்*** *தேவனுடைய பிள்ளைகளின் பெயர்கள் எழுதப்பட்ட ஜீவ புஸ்தகம். வெளி* 3:5; 21:27.

# கொலோசெயருக்கு எழுதிய கடிதம்

1 தேவனுடைய விருப்பப்படியே இயேசு கிறி
ஸ்துவின் அப்போஸ்தலனாயிருக்கும் பவு
லும், கிறிஸ்துவுக்குள் நமது சகோதரரான
தீமோத்தேயுவும் எழுதுவதாவது,
2கொலோசெ நகரில் கிறிஸ்துவுக்குள் பரி
சுத்தமும், விசுவாசமும் கொண்ட சகோதரர்க
ளுக்கும் சகோதரிகளுக்கும் நமது பிதாவாகிய
தேவனிடமிருந்து கிருபையும், சமாதானமும்
உண்டாவதாக.
3எங்களது பிரார்த்தனைகளில் உங்களுக்
காக நாங்கள் தேவனுக்கு எப்பொழுதும் நன்றி
செலுத்துகிறோம். நம்முடைய கர்த்தராகிய
இயேசு கிறிஸ்துவின் பிதாவே தேவன்.
4இயேசு கிறிஸ்துவுக்குள் நீங்கள் கொண்டுள்ள
விசுவாசத்தையும் தேவனுடைய மக்கள் மீது
நீங்கள் கொண்டுள்ள அன்பை பற்றியும் கேள்
விப்பட்டோம். அதற்காக தேவனுக்கு நன்றி
சொல்கிறோம். 5இயேசு கிறிஸ்துவின் மீதும்,
தேவனுடைய மக்கள் மீதும் நீங்கள் அன்பு
கொண்டுள்ளீர்கள். ஏனெனில் நீங்கள் விசுவா
சத்தை உடையவர்களாக இருக்கிறீர்கள். நீங்
கள் விசுவாசிக்கும் காரியங்கள் உங்களுக்
காகப் பரலோகத்தில் வைக்கப்பட்டிருக்கின்
றன என்பதை நீங்கள் அறிவீர்கள். உங்களுக்
குச் சொல்லப்பட்ட நற்செய்தியைக் குறித்து
நீங்கள் கேள்விப்பட்ட உண்மையான போத
னைகளால் இந்த விசுவாசத்தைக் கற்றுக்
கொண்டீர்கள். 6இந்த உலகத்தில் எல்லா இடங்
களிலும் நற்செய்தியானது ஆசீர்வாதத்தையும்,
வளர்ச்சியையும் கொடுக்கிறது. நீங்கள் அவற்
றைக் கேட்ட நாள் முதலாகவும், தேவனுடைய
கிருபை பற்றிய உண்மையை அறிந்து
கொண்ட நாள் முதலாகவும் உங்களுக்கும்
ஆசீர்வாதமும், வளர்ச்சியும் ஏற்படுகிறது.
7எப்பாப்பிராவிடமிருந்து நீங்கள் தேவனு
டைய கிருபையைப் பற்றி உணர்ந்திருக்
கிறீர்கள். அவன் எங்களோடு சேர்ந்து சேவை
செய்கிறான். நாங்கள் அவனை நேசிக்கிறோம்.
அவன் கிறிஸ்துவில் விசுவாசமுள்ள ஒரு
ஊழியன். 8எப்பாப்பிராவும் நீங்கள் பரிசுத்த
ஆவிக்குள் கொண்டிருக்கும் அன்பைக் குறித்
துக் கூறினான். 9உங்களைப் பற்றிய இந்தச்
செய்திகளைக் கேட்ட நாள் முதலாக உங்களுக்
காக நாங்கள் தொடர்ந்து பிரார்த்தனை செய்து
கொண்டிருக்கிறோம். உங்களுக்காக நாங்கள்
செய்யும் பிரார்த்தனையாவது:

தேவன் விரும்பும் அனைத்தையும்
நீங்கள் அறிந்து கொள்ளவும், நீங்கள்
பெரும் ஞானத்தையும், ஆவிக்குரியவற்
றைப் பற்றிய தெளிவையும் பெறவும்,
10 இத்தகைய உங்களது வாழ்க்கை முறை
யானது கர்த்தருக்கு மகிமையைத்தர
வும், எல்லா வகையிலும் அவரைத்
திருப்திப்படுத்தவும் நீங்கள் எல்லா
வகையான நற்செயல்களையும் செய்ய
வும், தேவனைப் பற்றிய அறிவில் வள
ரவும்,
11 தேவன் தனது சொந்த வல்லமையால்
உங்களைப் பலப்படுத்தவும், அதனால்
துன்பங்கள் வரும்போது அவரை
விட்டு நீங்கள் விலகாமல் இருக்கவும்
அதற்கான பொறுமையோடும், மகிழ்ச்
சியோடும் இருக்கவும் வேண்டுமென்
பதே.

12பிறகு நீங்கள் நம் பிதாவுக்கு நன்றி சொல்
லலாம். அவர் தான் ஏற்பாடு செய்த காரியங்
களில் பங்குகொள்ளும் பொருட்டு உங்களைத்
தகுதியுள்ளவர்கள் ஆக்கினார். அவர் வெளிச்
சத்தில் வாழ்கிற அவரது மக்கள் அனைவருக்
காகவும் இதை ஆயத்தம் செய்கிறார். 13இரு
ளின் அதிகாரங்களிலிருந்து நம்மை அவர்
விடுதலை செய்திருக்கிறார். நம்மை அவரது
அன்பு மகனான இயேசு கிறிஸ்துவின் இராஜ்
யத்துக்குள் கொண்டு வந்தார். 14நமது பாவங்க
ளுக்குரிய விலையை அவர் கொடுத்தார். அவ
ருக்குள் நமது பாவங்கள் மன்னிக்கப்பட்டன.

### கிறிஸ்துவைப் பார்க்கும்போது நாம் தேவனைக் காண்கிறோம்

15ஒருவராலும் தேவனைக் காண இயலாது.
ஆனால் இயேசு தேவனைப் போன்றவர்.
படைக்கப்பட்ட அனைத்து பொருட்களின்
மேலும் இயேசுவே ஆட்சியாளர். 16பரலோகத்
திலும் பூலோகத்திலும் உள்ள அனைத்துப்
பொருட்களும் இயேசுவின் வல்லமையால்
படைக்கப்பட்டவை. அவை கண்ணால் காண
ப்படுகிறவை, காணப்படாதவை, ஆன்மீகச் சக்
திகள், அதிகாரங்கள், பிரபுக்கள், ஆள்வோர்
கள் என அனைத்துமே அவருக்காகவும்,
அவர் மூலமாகவும் படைக்கப்பட்டவை. 17எது
வும் படைக்கப்படுவதற்கு முன்னரே கிறிஸ்து
இருந்தார். அவராலேயே அனைத்துப் பொருட்
களும் தொடர்ந்து இருக்கின்றன. 18கிறிஸ்து
தான் சரீரத்தின் தலையாக இருக்கிறார் (சரீரம்
என்பது சபையாகும்). எல்லாப் பொருட்க

ளுமே அவராலேயே வருகின்றன. அவரே
கர்த்தர். அவர் மரணத்திலிருந்து உயிர்த்தெழுந்
தார். எல்லாவற்றையும் விட இயேசுவே அதி
முக்கியமானவர். 19கிறிஸ்துவில் சகலமும்
வாழ்வதே தேவனுடைய விருப்பமாக இருந்
தது. 20பரலோகத்திலும், பூலோகத்திலும்
உள்ள அனைத்துப் பொருள்களையும் கிறிஸ்
துவின் மூலமாகத் தனக்குள்ளேயே திரும்பவும்
கொண்டு வருவதில் தேவன் மகிழ்ச்சியடைந்
தார். சிலுவையில் கிறிஸ்து இரத்தம் சிந்தி
யதன் மூலம் உலகில் தேவன் சமாதானத்தை
உருவாக்கினார்.

21ஒரு காலத்தில் நீங்கள் தேவனை விட்டுப்
பிரிந்தீர்கள். உங்கள் மனதில் தேவனுக்குப்
பகைவராக இருந்தீர்கள், ஏனென்றால் நீங்கள்
செய்த எல்லா செயல்களும் தேவனுக்கு எதிரா
னவை. 22ஆனால் இப்போது கிறிஸ்து மீண்டும்
உங்களை தேவனுக்கு நண்பர்களாக்கிவிட்
டார். கிறிஸ்து இதனைத் தனது மரணத்தின்
மூலம் தான் சரீரத்தில் இருக்கும்போது செய்
தார். இதன் மூலம் அவர் உங்களைப் பரிசுத்த
முள்ளவர்களாகவும், உங்களில் குற்றம் இல்லா
தவர்களாகவும், தேவனால் நீங்கள் பாவிகள்
என்று தீர்ப்பளிக்க முடியாத வகையில்
தேவன் முன் நிறுத்துகிறார். 23நீங்கள் கேட்ட
றிந்த நற்செய்தியில் தொடர்ந்து விசுவாசம்
கொண்டவர்களாக இருந்தால், உங்களுக்காக
கிறிஸ்து இதைச் செய்வார். உங்கள் விசுவாசத்
தில் தொடர்ந்து உறுதியாகவும், ஸ்திரமாகவும்
இருக்கவேண்டும். நற்செய்தியின் மூலம் பெற்ற
விசுவாசத்தில் இருந்து கொஞ்சம் கூட விலகக்
கூடாது. இந்த நற்செய்தியே உலகம் முழுவதும்
சொல்லப்பட்டிருக்கிறது. பவுலாகிய நான்
அந்த நற்செய்தியைப் பரவலாக ஆக்கும்
பொருட்டு உதவி செய்கிறேன்.

### சபைகளுக்காகப் பவுலின் பணி

24உங்களுக்காகக் பாடுபடுவதைக் குறித்து
நான் மகிழ்கிறேன். சரீரமாகிய சபைக்காக
கிறிஸ்து இன்னும் துன்புற்றுக் கொண்டி
ருக்கிறார். அத்துன்பத்தில் ஒரு பங்கை நானும்
பெற்றுக் கொள்கிறேன். அவரது சரீரமாகிய
சபைக்காக நான் துன்புறுகிறேன். 25ஏனென்
றால் தேவன் எனக்கு இந்தச் சிறப்புக்குரிய
வேலையைக் கொடுத்திருக்கிறார். இந்தப்
பணி உங்களுக்கு உதவுகிறது. தேவனுடைய
போதனையை முழுமையாய்க் கூறுவதுதான்
என் பணி. 26இந்தப் போதனைதான் இரகசிய
உண்மை. இது உலகம் படைக்கப்பட்ட காலம்
முதல் மறைத்து வைக்கப்பட்டிருந்தது. இது
எல்லா மக்களிடமிருந்தும் மறைக்கப்பட்டிருந்
தது. இப்போது தேவனுடைய பரிசுத்தமான
மக்களுக்கு மட்டும் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.
27தேவன், தனது மக்கள், இந்தச் செல்வமும்,
உன்னதமுமிக்க இரகசிய உண்மையைத்
தெரிந்துகொள்ள வேண்டும் என்று முடிவு
செய்தார். அந்த உயர்ந்த உண்மை உலகி
லுள்ள மக்கள் அனைவருக்கும் உரியது.
கிறிஸ்துதான் அந்த உண்மை. அவர் உங்க
ளில் இருக்கிறார். அவரே நம் மகிமைக்கான
ஒரே நம்பிக்கையாக இருக்கிறார்.. 28எனவே
நாம் மக்களிடம் தொடர்ந்து கிறிஸ்துவைப்
பற்றிப் போதனை செய்கிறோம். நம் முழு
அறிவையும் ஒவ்வொருவரையும் பலப்படுத்த
வும், ஒவ்வொருவருக்கும் போதிக்கவும் பயன்
படுத்துகிறோம். கிறிஸ்துவுக்குள் ஆன்மீக
முழுமை பெற்ற மக்களைப் போன்று ஏனைய
மக்களையும் நாம் தேவனுக்கு முன்பாகக்
கொண்டு வர முயற்சி செய்து கொண்டிருக்கி
றோம். 29கிறிஸ்து எனக்குக் கொடுத்திருக்கிற
முழு சக்தியையும் பயன்படுத்தி, இதைச் செய்
வதற்காகத்தான் நான் உழைத்து வருகிறேன்.
அச்சக்தி எனக்குள் வேலை செய்கிறது.

2 உங்களுக்கு உதவ நான் கடுமையான
முயற்சிகளில் ஈடுபட்டு வருகிறேன் என்
பதை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும் என
விரும்புகிறேன். லவோதிக்கேயா மக்களுக்கும்,
என்னை இதுவரை காணாத ஏனைய மக்க
ளுக்கும் நான் உதவிசெய்ய முயல்கிறேன்.
2அவர்களைப் பலப்படுத்தவும், அன்புடன்
ஒன்று சேர்த்துக் கொள்ளவும் விரும்புகிறேன்.
உறுதியான விசுவாசம் என்னும் செல்வத்தை
அவர்கள் பெற வேண்டும் என்று விரும்புகி
றேன். அந்த விசுவாசம் சரியான அறிவில்
இருந்து பிறக்க வேண்டும் என்றும் விரும்புகி
றேன். தேவன் வெளிப்படுத்திய இரகசிய உண்
மையை அனைவரும் அறிந்துகொள்ள வேண்
டும் என்றும் விரும்புகிறேன். அந்த உண்மை
கிறிஸ்து தான். 3கிறிஸ்துவுக்குள் ஞானத்தின்
எல்லாக் கருவூலங்களும், அறிவும் பாதுகாக்
கப்பட்டிருக்கிறது.

4தோற்றத்தில் உண்மை போன்ற பொய்க
ளைச் சொல்லி உங்களை யாரும் முட்டா
ளாக்கி விடக்கூடாது என்பதற்காக இவ்வள
வையும் உங்களுக்கு எழுதுகிறேன். 5அங்கே
நான் உங்களோடு இல்லை. எனினும் எனது
இதயம் உங்களோடு உள்ளது. உங்களது நல்ல
வாழ்வைக் காணும்போதும் கிறிஸ்துவுக்குள்
உறுதியான விசுவாசத்தைக் காணும்போதும்
நான் மகிழ்வடைகிறேன்.

### கிறிஸ்துவில் தொடர்ந்து வாழுங்கள்

6கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை நீங்கள்
அடைந்துள்ளீர்கள். எனவே எதையும் மாற்றிக்
கொள்ளாமல் தொடர்ந்து அவரை பின்பற்றி
வாழுங்கள். 7கிறிஸ்துவை மட்டும் நீங்கள்
சார்ந்திருங்கள். வாழ்க்கையும், பலமும் அவரி
டமிருந்து வருகின்றன. உங்களுக்கு அந்த
உண்மை கற்பிக்கப்பட்டிருக்கிறது. அந்த உண்
மையான போதனையில் நீங்கள் தொடர்ந்து
உறுதியாக இருக்கவேண்டும். எப்பொழுதும்
நன்றி உள்ளவர்களாய் இருங்கள். 8பொய்யான
எண்ணங்களாலும், பொருளற்ற சொற்களா
லும் எவரும் உங்களை வழிநடத்திச் செல்லா
தபடி உறுதியாய் இருங்கள். இத்தகைய எண்
ணங்கள் கிறிஸ்துவிடமிருந்து வராது. மக்களி

*டமிருந்தே வருகிறது. இவை உலக மக்களின் பயனற்ற எண்ணங்கள். 9தேவனுடைய முழுமை கிறிஸ்துவிடம் வாழ்கிறது. 10கிறிஸ்துவுக்குள் நீங்கள் முழுமையாக இருக்கிறீர்கள். உங்களுக்கு வேறு எதுவும் தேவை இல்லை. அனைத்து அதிகாரங்களையும் ஆள்வோர்களையும் ஆளுபவர் கிறிஸ்து ஆவார்.*

*11கிறிஸ்துவுக்குள் நீங்கள் வித்தியாசமான விருத்தசேதனத்தைப் பெற்றிருக்கிறீர்கள். இது வேறு எவரின் கையாலும் செய்யப்பட்டதன்று. உங்களுடைய பழைய பாவம் மிக்க சுபாவத்தின் சக்தியிலிருந்து கிறிஸ்துவின் விருத்தசேதனம் வழியாக விடுதலையாக்கப்பட்டீர்கள். இது கிறிஸ்துவின் விருத்தசேதனமாகும். 12நீங்கள் ஞானஸ்நானம் பெற்றபோது உங்கள் பழைமை இறந்து கிறிஸ்துவோடு புதைக்கப்பட்டது. அந்த ஞானஸ்நானத்தில் கிறிஸ்துவுடன் நீங்களும் உயிர்த்தெழுந்தீர்கள். ஏனென்றால் நீங்கள் தேவனுடைய சக்தியில் விசுவாசமாய் இருந்தீர்கள். கிறிஸ்துவை மரணத்திலிருந்து உயிர்த்தெழச் செய்ததன்மூலம் தேவன் தன் வல்லமையை வெளிப்படுத்திவிட்டார். 13உங்களது பாவங்களாலும் பாவம் மிக்க சுய சுபாவத்தின் சக்தியிலிருந்தும் விடுபட முடியாததாலும் ஆன்மீக நிலையில் இறந்திருந்தீர்கள். ஆனால், தேவன் உங்களைக் கிறிஸ்துவுடன் உயிருடன் இருக்கச் செய்தார். அவர் நமது பாவங்களையும் மன்னித்து விட்டார். 14தேவனுடைய சட்டங்களை நாம் மீறி விட்டதால் நாம் கடன்பட்டிருந்தோம். எந்தெந்த சட்டங்களை நாம் மீறினோம் என்பதை அக்கடன் பட்டியலிட்டது. ஆனால் தேவன் அந்தக் கடனை நமக்கு மன்னித்து விட்டார். தேவன் அக்கடனை அப்புறப்படுத்தி ஆணிகளால் சிலுவையில் அறைந்து விட்டார். 15தேவன் ஆன்மீக நிலையில் ஆள்வோர்களையும் அதிகாரங்களையும் தோற்கடித்தார். இவ்வெற்றியை அவர் சிலுவையின் மூலம் பெற்றார். அவை பலமற்றவை என்பதைத் தேவன் உலகுக்குக் காட்டினார்.*

### மனிதனின் சட்டத்தை பின்பற்றாதீர்கள்

*16ஆகையால், உண்பதைப் பற்றியும், குடிப்பதைப் பற்றியும், பண்டிகைகள், பௌர்ணமிகள், ஓய்வு நாட்கள் ஆகிய யூதர்களின் பழக்கவழக்கங்களைக் குறித்தும் எவரும் சட்டங்கள் உருவாக்க நீங்கள் அனுமதிக்காதீர்கள். மனித விதிமுறைகளைப் பின்பற்றாதீர்கள். 17கடந்த காலத்தில், இவை நிழலாக இருந்து எதிர்காலத்தில் வருவதைச் சுட்டிக்காட்டியது. ஆனால் புதிதாக வந்தவை கிறிஸ்துவில் காணப்படுகின்றன. 18சிலர் தாழ்மையுள்ளவர்கள் போல் நடிப்பதில் மகிழ்ச்சியடைகிறார்கள். அவர்கள் தேவ தூதர்களை வழிபட விரும்புவர். அவர்கள் எப்பொழுதும் தாங்கள் கண்ட தரிசனங்களையும், கனவுகளையும் பற்றியே பேசிக்கொண்டிருப்பர். அவர்கள் "நீங்கள் தவறானவர்கள், உங்களால் எதுவும் செய்ய முடியாது" என்று கூறுவர். எனவே அவர்களை எதுவும் சொல்ல அனுமதிக்காதீர்கள். அவர்களுக்கு எப்பொழுதும் முட்டாள்தனமான பெருமிதமே இருக்கிறது. ஏனென்றால் அவர்கள் மனிதர்களின் எண்ணங்களைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கிறார்களே ஒழிய தேவனுடைய எண்ணங்களைப் பற்றி சிந்திப்பதில்லை. 19அவர்கள், தலையாகிய கிறிஸ்துவின் அதிகாரத்துக்குள் தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்வதில்லை. முழு சரீரமும் கிறிஸ்துவைச் சார்ந்துள்ளது. அவரால் நம் சரீரத்தின் எல்லா உறுப்புகளும் ஒன்றுக்கொன்று அக்கறை கொள்கிறது. மேலும் அவை ஒன்றுக்கொன்று உதவியும் செய்கிறது. இது சரீரத்தை வலிமைப்படுத்தி ஒன்றாய்ச் சேர்க்கிறது. தேவன் விரும்புகிற விதத்திலேயே சரீரம் வளருகின்றது.*

*20நீங்கள் கிறிஸ்துவோடு இறந்தீர்கள். உலகத்தின் பயனற்ற சட்டதிட்டங்களில் இருந்தும் விடுதலை பெற்றீர்கள். எனினும் நீங்கள் இந்த உலகத்தைச் சார்ந்தவர்களைப் போன்று நடித்து வருகிறீர்கள். 21"இதனை உண்ணக்கூடாது." "அதனைச் சுவைபார்க்கக்கூடாது" "அதனைச் தொடக்கூடாது" என்கிறீர்கள் 22ஏன் இன்னும் இதுபோன்ற சட்டதிட்டங்களைப் பின்பற்றுகிறீர்கள்? இவை பயன்படுத்தப்பட்டவுடன் போய்விடும். இச்சட்டதிட்டங்கள் பூலோகத்தைப் பற்றியவை. இவை மனிதர்களின் கட்டளைகளும், போதனைகளுமேயாகும். தேவனுடயவை அல்ல. 23இவை புத்திசாலித்தனமாய்த் தோன்றலாம். ஆனால் இச்சட்டங்கள் போலிப் பணிவும் சரீரத்தைத் தண்டிக்கக் கூடியதுமான மனிதரால் உருவாக்கப்பட்ட மதத்தின் சட்டங்கள் மட்டுமே ஆகும். ஆனால் இவை மக்கள் பாவத்தில் இருந்து விடுபட உதவாது.*

### கிறிஸ்துவில் புதிய வாழ்க்கை

*3 கிறிஸ்துவோடு நீங்கள் மரணத்திலிருந்து உயிர்த்தெழுந்து விட்டீர்கள். எனவே, பரலோகத்தில் உள்ளவற்றைப் பெற முயற்சி செய்யுங்கள். அங்கே தேவனுடைய வலது பக்கத்தில் கிறிஸ்து வீற்றிருக்கிறார். 2பூமியில் உள்ளவற்றைப் பற்றி சிந்திக்காமல் பரலோகில் உள்ளவற்றைப் பற்றிச் சிந்தியுங்கள். 3உங்கள் பழைய பாவ சுபாவமானது இறந்து போயிற்று. தேவனுக்குள் கிறிஸ்துவோடு உங்கள் புதிய வாழ்க்கை மறைந்திருக்கிறது. 4கிறிஸ்துவே உங்கள் வாழ்க்கை. அவர் மீண்டும் வரும்போது அவரது மகிமையில் பங்கு கொள்வீர்கள்.*

*5தீமை, பாலியல் குற்றம், பாவ காரியங்களின் ஆளுகைக்கு உள்ளாகுதல், மோகம், தீய ஆசைகள் போன்ற உங்கள் பாவங்களை வாழ்விலிருந்து விலக்குங்கள். போலியான கடவுளுக்குச் சேவை செய்வது என்பதே இவ்விருப்பங்களின் உண்மை அர்த்தம். 6இவை தேவனைக் கோபப்படுத்தும். 7இவற்றை நீங்களும்*

உங்கள் கடந்துபோன பாவ வாழ்க்கையில் செய்தீர்கள்.

8ஆனால் இப்பொழுது கோபம், மூர்க்கம், அடுத்தவர் மனம் புண்படும்படி பேசுதல், கெட்ட வார்த்தைகளை உபயோகித்தல் ஆகிய வற்றை உங்கள் வாழ்வில் இருந்து விலக்கி வையுங்கள். 9ஒருவருக்கொருவர் பொய் சொல் லாதீர்கள். ஏனென்றால் முன்பு நீங்கள் செய்து வந்த பாவச் செயல்களோடு உங்கள் கடந்த கால பாவ வாழ்க்கையை விட்டிருக்கிறீர்கள். 10நீங்கள் புதிய வாழ்க்கையை வாழ இருக்கிறீர் கள். உங்கள் புதிய வாழ்க்கையில் நீங்களும் தொடர்ச்சியாக புதியவர் ஆகிறீர்கள். நீங்கள் உங்களைப் படைத்த தேவனைப் போல மாறி வருகிறீர்கள். இப்புதிய வாழ்க்கை உங்களுக் குத் தேவனைப் பற்றிய உண்மை அறிவைக் கொடுக்கும். 11இப்புதிய வாழ்வில் கிரேக்கர்க ளுக்கும், யூதர்களுக்கும் இடையே எந்த வேறு பாடும் இல்லை. விருத்தசேதனம் செய்தவர் களுக்கும், செய்யாதவர்களுக்கும் இடையே எந்த வேறுபாடும் இல்லை. நாகரீகமுள்ளவ னென்றும் நாகரீகமில்லாதவனென்றும் வேறு பாடில்லை. அடிமைகளுக்கும் சுதந்திரமான வர்களுக்கும் இடையே வேறுபாடுகள் எதுவும் இல்லை. ஆனால் விசுவாசமுள்ள அனைவரிட மும் கிறிஸ்து இருக்கிறார். எல்லாவற்றையும் விட அவரே அவர்களுக்கு முக்கியமானவர்.

12தேவன் உங்களைத் தேர்ந்தெடுத்து, தன் பரிசுத்த மக்களாக்கினார். அவர் உங்களை நேசிக்கிறார். ஆகவே எப்பொழுதும் நல்லவற் றையே செய்யுங்கள். இரக்கத்தோடும் அருளு ணர்வோடும் பிறரிடம் மனவுருக்கம், பணிவு, சாந்தம், பொறுமை ஆகியவற்றைக் கடைபிடி யுங்கள். 13ஒருவர்மேல் ஒருவர் கோபப்படா தீர்கள். மன்னித்து விடுங்கள். மற்றொருவன் உங்களுக்கு எதிராகத் தவறு செய்தால் அதை மன்னியுங்கள். நீங்கள் மற்றவர்களை மன்னிக் கவேண்டும். ஏனென்றால் கர்த்தர் உங்களை மன்னித்தார். 14இவை அனைத்தையும் செய் யுங்கள், ஆனால் ஒருவருக்கொருவர் அன்பு செலுத்துவதுதான் மிக முக்கியமானது. அன்பு ஒன்றுதான் உங்கள் அனைவரையும் முழு ஒருமையுடன் ஒற்றுமையாகச் சேர்க்க வல்லது. 15கிறிஸ்துவின் சமாதானம் உங்கள் சிந்தனை களை ஆள்வதாக. இதற்காக நீங்கள் ஒரே சரீரமாக அழைக்கப்பட்டீர்கள். எப்போதும் நன்றியுள்ளவர்களாய் இருங்கள். 16கிறிஸ்து வின் போதனைகள் உங்களுக்குள் சிறந்த செல் வமாக இருக்கட்டும். ஒருவருக்கொருவர் போதிக்கவும், பலப்படுத்தவும் உங்கள் முழு ஞானத்தையும் பயன்படுத்துங்கள். உங்கள் இதயத்தில் தேவனுக்கு நன்றி செலுத்தும் வகையில் சங்கீதம், கீர்த்தனைகள், ஞானப் பாட்டு போன்றவற்றைத் தேவனைக் குறித்து உங்கள் இதயங்களில் சுரக்கும் நன்றியுணர் வோடு பாடுங்கள். 17நீங்கள் சொல்கின்றவற் றையும் செய்கின்றவற்றையும் உங்கள் கர்த்த ராகிய இயேசுவின் பெயரிலேயே செயயுங் கள். பிதாவாகிய தேவனுக்கு இயேசுவின் மூலம் நன்றி செலுத்துங்கள்.

### மற்றவர்களோடு உங்கள் புதிய வாழ்க்கை

18மனைவிமார்களே! உங்கள் கணவரின் அதிகாரத்துக்குக் கீழ்ப்படியுங்கள். கர்த்தருக் குள் நீங்கள் செய்யத்தக்க சரியான செயல் இதுவே. 19கணவன்மார்களே! உங்கள் மனை வியரை நேசியுங்கள். அவர்களோடு சாந்த மாய் இருங்கள். 20குழந்தைகளே! எல்லா வகை யிலும் உங்கள் பெற்றோருக்குக் கீழ்ப்படியுங் கள். இதுவே கர்த்தரை மகிழ்ச்சிப்படுத்து கிறது. 21பிதாக்களே! உங்கள் பிள்ளைகளை விரக்தியடையச் செய்யாதீர்கள். அவர்க ளோடு கடுமையாக இருந்தால் அவர்கள் முயற்சி செய்யும் தம் ஆவலை இழந்து விடு வார்கள்.

22வேலைக்காரர்களே! எல்லா வகையிலும் உங்கள் மண்ணுலக எஜமானர்களுக்குக் கீழ்ப் படிந்திருங்கள். உங்கள் எஜமானர்கள் உங்க ளுக்கு அருகில் இல்லாதபோதும், எல்லாக் காலங்களிலும் கீழ்ப்படியுங்கள். மனிதர்களை நீங்கள் சந்தோஷப்படுத்தவில்லை என்பதை மனதில் வைத்துக்கொள்ளுங்கள். ஆனால் அதைச் செய்து கொண்டிருப்பது நீங்கள் தேவனை மதிக்கிறீர்கள் என்பதாகும். நீங்கள் கர்த்தரை மதிப்பவர்கள், ஆதலால் கபடமில்லா மல் பணி செய்யுங்கள். 23நீங்கள் எந்த வேலை செய்தாலும் அதனை இதயப்பூர்வமாகச் செய் யுங்கள். மனிதருக்காக அல்ல, கர்த்தருக்காகச் செய்கிறோம் என்று எண்ணுங்கள். 24நீங்கள் உங்களுக்குரிய விருதைக் கர்த்தரிடம் இருந்து பெறுவீர்கள் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். வாக்களித்தபடி அவர் உங்க ளுக்குத் தருவார். நீங்கள் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்குச் சேவை செய்கிறீர்கள். 25எவ னொருவன் தவறு செய்கிறானோ, அவன் அத்தவறுக்காகத் தண்டிக்கப்படுவான் என் பதை மறவாதீர்கள். கர்த்தர் அனைவரையும் சமமாகவே நடத்துகிறார்.

4 எஜமானர்களே! உங்கள் வேலைக்காரர் களுக்கு நீதியும் செம்மையுமானதைச் செய் யுங்கள். பரலோகத்தில் உங்களுக்கு ஒரு எஜ மானர் இருக்கிறார் என்பதை நீங்கள் நினை வில் வைத்துக் கொள்ளுங்கள்.

### கிறிஸ்தவர்களுக்குப் போதித்த கருத்துக்கள்

2தொடர்ந்து பிரார்த்தனை செய்யுங்கள். நீங்கள் பிரார்த்தனை செய்யும்போது, மன தைத் தயார் நிலையில் வைத்திருங்கள். மேலும் தேவனுக்கு நன்றி செலுத்துங்கள். 3எங்களுக்காகவும் பிரார்த்தனை செய்யுங்கள். தேவனுடைய செய்தியை நாங்கள் மக்களிடம் பரப்பிட வாய்ப்பு அளிக்குமாறு அவரை வேண்டுங்கள். கிறிஸ்துவைப் பற்றி தேவன் வெளிப்படுத்தியிருக்கிற இரகசிய உண்மை யை நாங்கள் பிரச்சாரம் செய்ய பிரார்த்தனை செய்யுங்கள். இதனைப் பிரச்சாரம் செய்ததால்

*நான் சிறையில் இருக்கிறேன். 4இந்த உண்மை
யை நான் மக்களிடம் தெளிவு படுத்த முடியும்.
இதுவே நான் செய்ய வேண்டியதாகும். 5கிறிஸ்
தவர்கள் அல்லாதவர்களோடு சேர்ந்து வாழும்
போது எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும்
என்பதில் ஞானமுடையவர்களாக இருங்கள்.
உங்களால் முடிந்த வரை நல்வழியில் உங்கள்
காலத்தைச் செலவு செய்யுங்கள். 6நீங்கள்
பேசும்போது கருணையுடனும், ஞானத்துட
னும் இருங்கள். பிறகு, உங்களால் எவருக்கும்
பதில் சொல்ல இயலும்.*

### பவுலோடிருந்த மக்களைப்பற்றிய செய்தி

*7தீகிக்கு கிறிஸ்துவுக்குள் என் அன்பான
சகோதரன். கர்த்தருக்குள் அவன் நம்பிக்
கைக்கு உரிய ஊழியன். என்னோடு பணி
யாற்றும் கர்த்தரின் வேலையாள். என் வாழ்
வில் நடைபெற்றுக் கொண்டிருக்கிற எல்லா
வற்றையும் அவன் உங்களுக்கு கூறுவான்.
8அதற்காகத் தான் அவனையும் அனுப்
புகிறேன். நாங்கள் எப்படி இருக்கிறோம்
என்பதை நீங்கள் அறிந்துகொள்ள வேண்டும்.
உங்களை உற்சாகப்படுத்த அவனை அனுப்
புகிறேன். 9ஒநேசிமுவோடு அவனை அனுப்
புகிறேன். ஒநேசிமுவும் கிறிஸ்துவுக்குள் எனது
அன்பான நம்பிக்கைக்கு உரிய சகோதரன்.
அவன் உங்கள் கூட்டத்திலிருந்து வந்தவன்.
எங்களைப் பற்றிய செய்திகளை எல்லாம்
தீகிக்குவும், ஒநேசிமுவும் உங்களிடம் கூறுவார்
கள்.*

*10அரிஸ்தர்க்கு தன் வாழ்த்துக்களை உங்க
ளுக்குத் தெரிவிக்கிறான். அவன் என்னோடு
சிறையில் இருக்கிறான். பர்னபாவின் உறவி
னனான மாற்கும் வாழ்த்து கூறுகிறான். நான்
ஏற்கெனவே சொன்ன தகவல்களின்படி இவன்
வந்தால் வரவேற்றுக் கொள்ளுங்கள். 11இயேசு
வும் வாழ்த்து கூறுகிறான். (யுஸ்து என்பது
அவனது மறுபெயர்) யூதர்களாகிய இவர்கள்
தேவனுடைய இராஜ்யத்திற்காக என்னோடு
பாடுபடுகிறார்கள். இவர்கள் எனக்கு ஆறுத
லாக இருக்கிறார்கள்.*

*12எப்பாப்பிராவும் வாழ்த்து கூறுகிறான்.
அவன் இயேசு கிறிஸ்துவின் ஊழியன். அவ
னும் உங்கள் கூட்டத்தைச் சேர்ந்தவன். அவன்
எப்போதும் உங்களுக்காகவே பிரார்த்தனை
செய்கிறான். நீங்கள் ஆன்மீக வாழ்வில் முழு
மை பெறவும், தேவன் விரும்புகிறவைகளை
நீங்கள் பெறவேண்டும் என்றும் அவன் பிரா
ர்த்திக்கிறான்.*

*13அவன் உங்களுக்காகவும் லவோதிக்கேய
ருக்காகவும், எராப்போலியர்க்காகவும் கடு
மையாகப் பாடுபட்டான் என அவனுக்காக
நான் சான்றுரைக்கிறேன். 14தேமாவும் நமது
அன்பான நண்பனும் மருத்துவனுமான லூக்
காவும் உங்களுக்கு வாழ்த்து கூறுகிறார்கள்.
15லவோதிக்கேயாவில் உள்ள சகோதர சகோ
தரிகளுக்கும் வாழ்த்து கூறுங்கள். நிம்பாவுக்
கும் அவனது வீட்டில் கூடுகிற சபைக்கும்
வாழ்த்து கூறுங்கள். 16உங்களிடத்தில் இந்த
கடிதம் வாசிக்கப்பட்ட பின்பு லவோதிக்கேயா
சபைக்கும் வாசிக்க ஏற்பாடு செய்யுங்கள்.
நான் லவோதிக்கேயா சபைக்கு எழுதிய நிரு
பத்தையும் வாசியுங்கள். 17அர்க்கிப்பைக்
கண்டு, "கர்த்தர் நமக்குக் கொடுத்த பணியை
முழுமையாய் செய்வதில் உறுதியாய் இரு"
என்று சொல்லுங்கள். 18பவுலாகிய நானே
என் கையால் எழுதி உங்களை வாழ்த்துகி
றேன். நான் சிறையில் இருப்பதை நினை
வுபடுத்திக் கொள்ளுங்கள். தேவனுடைய
கிருபை உங்களோடு இருப்பதாக. ஆமென்.*

# தெசலோனிக்கேயருக்கு எழுதிய முதலாம் கடிதம்

1 பவுலும், சில்வானும், தீமோத்தேயும் பிதா
வாகிய தேவனுக்குள்ளும் இயேசு கிறிஸ்து
வாகிய கர்த்தருக்குள்ளும் இருக்கும் தெசலோ
னிக்கேயாவில் உள்ள சபையோருக்கு எழுது
வது. தேவனுடைய கிருபையும் சமாதானமும்
உங்களோடு இருப்பதாக.

### தெசலோனிக்கேயர்களின் வாழ்வும், விசுவாசமும்

2நாங்கள் பிரார்த்தனை செய்யும் பொழு
தெல்லாம் உங்களை நினைவு கூருகிறோம்.
உங்கள் அனைவருக்காகவும் தொடர்ந்து தேவ
னிடம் நன்றி கூறுகிறோம். 3பிதாவாகிய
தேவனிடம் பிரார்த்தனை செய்யும்பொழுதெல்
லாம் விசுவாசத்தினாலும், அன்பினாலும்
நீங்கள் செய்தவற்றுக்காகவும் அவருக்கு நன்றி
செலுத்துகிறோம். கர்த்தராகிய இயேசு கிறிஸ்
துவின் மீதுள்ள நம்பிக்கையில் நீங்கள் உறுதி
யுடன் இருப்பதற்காக நாங்கள் அவருக்கு நன்றி
செலுத்துகிறோம். 4சகோதர சகோதரிகளே,
தேவன் உங்களிடம் அன்பாய் இருக்கிறார்.
அவர் உங்களைத் தமக்காகத் தேர்ந்தெடுத்தி
ருக்கிறார் என்று நாங்கள் அறிவோம். 5உங்க
ளிடம் நற்செய்தியைக் கொண்டு வந்தோம்.
ஆனால் நாங்கள் வார்த்தையை மட்டும் பயன்
படுத்தவில்லை, அதிகாரத்தையும் பயன்படுத்
தினோம். பரிசுத்த ஆவியானவரோடும் முழு
உறுதியோடும் நாங்கள் அதைக் கொண்டு
வந்தோம். உங்களோடு நாங்கள் இருந்த போது
எப்படி வாழ்ந்தோம் என்பதை நீங்கள் அறிவீர்
கள். உங்களுக்கு உதவும் வகையிலேயே
வாழ்ந்தோம். 6நீங்கள் எங்களைப் போலவும்,
கர்த்தரைப் போலவும் ஆனீர்கள். நீங்கள் மிக
வும் துன்புற்றீர்கள், எனினும் மகிழ்ச்சியோடு
போதனைகளை ஏற்றுக்கொண்டீர்கள். பரி
சுத்த ஆவியானவர் உங்களுக்கு அந்த மகிழ்ச்
சியைத் தந்தார். 7மக்கதோனியா, அகாயா
ஆகிய நகரங்களில் உள்ள விசுவாசிகளுக்கு
நீங்கள் எடுத்துக்காட்டு ஆனீர்கள். 8உங்கள்
மூலம் மக்கதோனியாவிலும், அகாயாவிலும்
தேவனுடைய போதனை பரவியது. தேவனு
டைய பேரில் உள்ள உங்கள் விசுவாசம்
எல்லா இடங்களுக்கும் தெரிய வந்தது. எனவே
உங்கள் விசுவாசத்தைப் பற்றி நாங்கள் எது
வும் சொல்ல வேண்டியதில்லை. 9நீங்கள் எங்
களை ஏற்றுக் கொண்ட நல் வழியைப் பற்றி
எல்லா இடத்திலும் இருக்கிற மக்கள்
கூறுகிறார்கள். நீங்கள் எப்படி உருவ வழி
பாட்டை நிறுத்தினீர்கள் என்பதையும், உண்
மையான, ஜீவனுள்ள தேவனுக்கு சேவை
செய்யும் மாற்றத்தைப் பெற்றீர்கள் என்பதை
யும் கூறுகிறார்கள். 10உருவ வழிபாட்டை
நிறுத்திவிட்டு பரலோகத்திலிருந்து வரப்போ
கும் தேவனுடைய குமாரனுக்காக நீங்கள்
காத்திருக்கிறீர்கள். தேவன் தன் குமாரனை
மரணத்திலிருந்து உயிர்த்தெழச் செய்தார்.
இயேசுவாகிய அவரே, நியாயத்தீர்ப்பு அளிக்
கப் போகும் தேவனுடைய கோபத்திலிருந்து
நம்மை இரட்சிக்கிறவர்.

### தெசலோனிக்கேயாவில் பவுலின் பணி

2 சகோதர சகோதரிகளே! உங்களை நாடி
நாங்கள் வந்தது வீணாகவில்லை என்
பதை நீங்கள் அறிவீர்கள். 2உங்களிடம் வரு
முன்பு நாங்கள் பிலிப்பியில் துன்புற்றோம்.
அங்குள்ள மக்கள் எங்களுக்கு எதிராகக் கெட்
டதாகப் பேசினார்கள். உங்களுக்கு அவை
பற்றித் தெரியும். நாங்கள் உங்களிடம் வந்த
போது பலர் எதிர்த்தார்கள். ஆனால் தைரிய
மாக இருக்க தேவன் உதவினார். நற்செய்
தியை உங்களிடம் கூறவும் உதவி செய்தார்.
3நாங்கள் மக்களுக்கு ஊக்கமூட்டுகிறோம்
(போதிக்கிறோம்). ஒருவரும் எங்களை முட்டா
ளாக்கவில்லை. நாங்கள் தீயவர்கள் அல்லர்.
மக்களிடம் நாங்கள் தந்திரம் செய்ய முயற்சிக்க
வில்லை. 4நாங்கள் நற்செய்தியைப் பரப்புகி
றோம். ஏனென்றால் எங்களை சோதித்து
அறிந்த பின் நற்செய்தியைச் சொல்லும்
பொருட்டு தேவன் எங்கள் மேல் நம்பிக்கை
வைத்துள்ளார். ஆகவே நாங்கள் மனிதர்க
ளைத் திருப்திப்படுத்த விரும்பவில்லை. தேவ
னைத் திருப்திப்படுத்தவே விரும்புகிறோம்.
தேவன் ஒருவரே நம் இதயங்களைத் தொடர்ந்து
சோதனை செய்ய வல்லவர். 5உங்களைப்
பற்றி உங்களுக்குப் பிடித்த வகையில் முகஸ்
துதி செய்து திருப்திப்படுத்த நாங்கள் ஒரு
போதும் முயலவில்லை என்பது உங்களுக்குத்
தெரியும். நாங்கள் உங்கள் பணத்தையும்
பெற்றுக் கொள்ள முயற்சி செய்யவில்லை.
உங்களிடம் மறைக்கத்தக்க சுயநலம் எதுவும்
எங்களிடம் இருந்ததில்லை. இது உண்மை
என்பது தேவனுக்குத் தெரியும். 6எவ்வித
பாராட்டையும் மக்களிடம் நாங்கள் எதிர்
பார்க்கவில்லை. உங்களிடமிருந்தோ வேறு

*யாரிடமிருந்தோ நாங்கள் எந்தப் பாராட்டை*
*யும் எதிர்பார்க்கவில்லை.*
*7நாங்கள் கிறிஸ்துவின் அப்போஸ்தலர்.*
*எனவே நாங்கள் உங்களோடு இருக்கும்போது*
*சில காரியங்களை நீங்கள் செய்யும்பொருட்டு*
*உங்கள் மீது அதிகாரம் செலுத்தி இருக்ககூடும்.*
*எனினும் நாங்கள் மென்மையாகவே நடந்து*
*கொண்டோம். ஒரு தாய் தன் குழந்தையைப்*
*பாதுகாப்பதுபோன்று இருந்தோம். 8உங்களை*
*நாங்கள் பெரிதும் நேசித்தோம். எனவே, தேவ*
*னுடைய நற்செய்தியை உங்களோடு பகிர்ந்து*
*கொள்வதில் மகிழ்ச்சியடைந்தோம். அதோடு*
*மட்டுமல்லாமல், எங்கள் வாழ்க்கையையும்*
*உங்களோடு பகிர்ந்து கொள்வதில் மகிழ்ந்*
*தோம். 9சகோதர சகோதரிகளே! நாங்கள் எவ்*
*வளவு கடுமையாக உழைத்தோம் என்பதை*
*நீங்கள் நினைவில் வைத்திருப்பதை நான்*
*அறிவேன். இரவும் பகலுமாக நாங்கள் பணி*
*யாற்றினோம். தேவனுடைய நற்செய்தியைப்*
*பரப்பும் பொழுது உங்களில் எவர்மீதும் எவ்*
*விதமான பொருளாதார பாரத்தையும் சுமத்த*
*விரும்பவில்லை.*
*10விசுவாசிகளாகிய உங்களோடு நாங்கள்*
*இருந்தபோது தூய்மையும் நீதியும் உள்ள வழி*
*யில் குற்றமற்று வாழ்ந்தோம். இது உண்மை*
*என உங்களுக்குத் தெரியும். தேவனுக்கும் இது*
*உண்மை எனத் தெரியும். 11ஒரு தந்தை தன்*
*பிள்ளைகளை நடத்துவது போன்று நாங்கள்*
*உங்களை நடத்தினோம் என்பது உங்களுக்குத்*
*தெரியும். 12நாங்கள் உங்களைப் பலப்படுத்தி*
*னோம். உங்களுக்கு ஆறுதல் அளித்தோம்.*
*தேவனுக்கான நல்வாழ்க்கையை வாழுமாறு*
*கூறினோம். தேவன் தமது இராஜ்யத்திற்கும்*
*மகிமைக்கும் உங்களை அழைக்கிறார்.*
*13நீங்கள் நற்செய்தியை ஏற்றுக்கொண்ட*
*விதத்திற்காக நாங்கள் தேவனுக்கு தொடர்ந்து*
*நன்றி செலுத்துகிறோம். எங்களிடமிருந்து*
*நீங்கள் நற்செய்தியைக் கேட்டீர்கள். அது மனி*
*தர்களின் வார்த்தையன்று, தேவனுடைய வார்*
*த்தை என்றும் ஏற்றுக் கொண்டீர்கள். அது*
*உண்மையில் தேவனுடைய செய்திதான். அது*
*விசுவாசமுள்ள உங்களிடம் பலன் தருகிறது.*
*14சகோதர சகோதரிகளே! நீங்கள் யூதேயாவில்*
*உள்ள கிறிஸ்துவுக்குள் இருக்கும் சபைகளைப்*
*போன்றிருக்கிறீர்கள். யூதேயாவில் உள்ள*
*தேவனுடைய மக்கள் மற்ற யூதர்களால் மிகவும்*
*துன்புறுத்தப்பட்டார்கள், நீங்களும் உங்கள்*
*சொந்த நாட்டு மக்களால் அதே விதமாக துன்*
*புறுத்தப்பட்டீர்கள். 15அந்த யூதர்கள் கர்த்த*
*ராகிய கிறிஸ்துவைக் கொன்றார்கள். மேலும்*
*அவர்கள் தீர்க்கதரிசிகளையும் கொன்றார்கள்.*
*எங்களை யூதேயாவை விட்டு வெளியேறும்*
*படி அவர்கள் வற்புறுத்தினார்கள். தேவன்*
*அவர்களுடன் மகிழ்ச்சியாயில்லை. அவர்கள்*
*மக்களனைவருக்கும் எதிராக உள்ளனர்.*
*16யூதர்கள் அல்லாதவர்களுக்கு நாங்கள் போத*
*னை செய்வதை அவர்கள் தடுக்க முயற்*
*சிக்கிறார்கள். யூதர் அல்லாதவர்கள் இரட்சிக்*
*கப்படும்பொருட்டு நாங்கள் அவர்களுக்குப்*
*போதிக்கிறோம். ஆனால் அந்த யூதர்களோ*
*தாம் ஏற்கெனவே செய்த பாவங்களோடு*
*மேலும் மேலும் பாவம் செய்து கொண்டிருக்கி*
*றார்கள். இப்போது தேவனுடைய கோபம்*
*முழுமையாக அவர்கள் மீது வந்துள்ளது.*

### *மீண்டும் அவர்களைப் பார்க்க பவுலின் விருப்பம்*

*17சகோதர சகோதரிகளே! கொஞ்ச கால*
*மாக நாங்கள் உங்களிடம் இருந்து பிரிக்கப்*
*பட்டிருந்தோம். (அங்கே நாங்கள் உங்களோடு*
*இல்லாவிட்டாலும் எங்கள் நினைவுகள் உங்க*
*ளோடு இருந்தன.) உங்களைப் பார்க்க நாங்கள்*
*மிகவும் விரும்பினோம். அதற்காக மிகவும்*
*கடுமையாய் முயற்சி செய்தோம். 18ஆம், உங்க*
*ளிடம் வர நாங்கள் விரும்பினோம். உண்மை*
*யில் பவுலாகிய நான் பலமுறை வர முயன்*
*றேன். ஆனால் சாத்தான் எங்களைத் தடுத்து*
*விட்டான். 19நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்து*
*வரும்போது நாங்கள் பெருமைப்படக்கூடிய*
*எங்களது நம்பிக்கையும், மகிழ்ச்சியும், கிரீட*
*மும் நீங்கள் தானே. 20உண்மையில் நீங்களே*
*எங்கள் மகிழ்ச்சியும் மகிமையும் ஆவீர்கள்.*
*3 நாங்கள் உங்களிடம் வரமுடியவில்லை.*
*ஆனால் காத்திருப்பது மிகவும் கொடு*
*மையாக இருந்தது. 2ஆகையால் உங்களிடம்*
*தீமோத்தேயுவை அனுப்ப தீர்மானித்தேன்.*
*நான் மட்டும் அத்தேனேயில் இருந்தேன்.*
*தீமோத்தேயு எங்கள் சகோதரன். தேவனுக்காக*
*அவன் எங்களோடு பணியாற்றுகிறான்.*
*கிறிஸ்துவைப் பற்றிய நற்செய்தியை நாங்கள்*
*கூறிட தேவன் உதவுகிறார். நீங்கள் உங்கள்*
*விசுவாசத்தில் பலம்பெறவும், உங்களை உற்*
*சாகமூட்டவும் தீமோத்தேயுவை அனுப்பிவைத்*
*தோம். 3எங்களுக்கு ஏற்பட்ட சிக்கல்களால்*
*நீங்கள் மனம் தவிக்காமல் இருக்கும்பொருட்டு*
*தீமோத்தேயுவை அனுப்பினோம். இத்தகைய*
*துன்பங்களைச் சகித்துக்கொள்ளவே நாம் நிய*
*மிக்கப்பட்டிருக்கிறோம் என்பதையும் நீங்கள்*
*அறிவீர்கள். 4நாங்கள் உங்களோடு இருந்த*
*போதுகூட இப்படி பலவிதமான துன்பங்களை*
*ஏற்கவேண்டும் என்பது பற்றி ஏற்கெனவே*
*கூறியிருக்கிறோம். எனவே இவை நாங்கள்*
*சொன்னபடிதான் நிகழ்ந்துள்ளன என்பதை*
*நீங்கள் அறிவீர்கள். 5இதற்காகத்தான் நான்*
*உங்களிடம் தீமோத்தேயுவை, உங்கள் விசு*
*வாசத்தைப்பற்றி அறிந்துகொள்ள அனுப்பி*
*வைத்தேன். மேலும் என்னால் காத்திருக்க*
*முடியாத நிலையில்தான் நான் தீமோத்தே*
*யுவை அனுப்பி வைத்தேன். மக்களைத் தீய*
*வற்றினால் இழுத்து கவர்ச்சிக்கும் பிசாசு உங்*
*களைத் தோல்வியுறச் செய்து விடுவானோ*
*என்றும் எங்களின் உழைப்பு வீணாய்ப்*
*போகுமோ என்றும் நான் பயந்திருந்தேன்.*
*6ஆனால் உங்களிடமிருந்து தீமோத்தேயு*
*திரும்பி வந்தான். உங்களது அன்பு மற்றும்*
*விசுவாசம் பற்றிய நல்ல செய்திகளை அவன்*

கூறினான். நல்வழியில் நீங்கள் எப்போதும்
எங்களை நினைத்துக் கொள்வதாகவும் எங்
களை நீங்கள் மீண்டும் பார்க்க விரும்புவதாக
வும் கூறினான். அதுபோலத்தான் நாங்களும்
உங்களைப் பார்க்க விரும்புகிறோம். 7எனவே,
சகோதர சகோதரிகளே! உங்கள் விசுவாசத்
தால் உங்களைப் பற்றி ஆறுதல் அடைந்திருக்
கிறோம். எங்களுக்கு துன்பங்களும், சிக்கல்க
ளும் உள்ளன. எனினும், நாங்கள் ஆறுதல
டைந்திருக்கிறோம். 8நீங்கள் உறுதியாக கர்த்த
ருக்குள் இருக்கும்போது எங்கள் வாழ்வு
முழுமை பெறுவதாக உணர்கிறோம். 9உங்க
ளால் தேவனுக்கு முன்பு நாங்கள் பெரும்
மகிழ்ச்சியோடு இருக்கிறோம். ஆகவே உங்க
ளுக்காகத் தேவனுக்கு நன்றி சொல்கிறோம்.
ஆனால் எங்கள் முழு மகிழ்ச்சிக்கும் எங்க
ளால் போதுமான நன்றி சொல்ல முடியாது.
10இரவும் பகலுமாக நாங்கள் உங்களுக்காக
மிகவும் உறுதியோடு தொடர்ந்து பிரார்த்தனை
செய்கிறோம். நாங்கள் அங்கே வந்து உங்களை
மீண்டும் பார்க்கவும், உங்கள் விசுவாசத்தைப்
பலப்படுத்துவதற்கான செயல்களைச் செய்ய
வும் பிரார்த்தனை செய்கிறோம்.
11பிதாவாகிய தேவனும், கர்த்தராகிய இயே
சுவும் எங்களுக்கு உங்களிடம் வருவதற்கான
வழியைத் தயார் செய்யட்டும் என்று பிரார்த்
தனை செய்கிறோம். 12உங்கள் அன்பைக் கர்த்
தர் வளரச் செய்ய பிராத்திக்கிறோம். ஒருவருக்
கொருவர் அன்பு செய்யவும் எல்லா மக்களிட
மும் அன்பு செய்யவும் அவர் உங்களுக்கு
உதவ பிரார்த்திக்கிறோம். நாங்கள் உங்களை
நேசிப்பதுபோன்று நீங்கள் மற்றவர்களை
நேசிக்கவேண்டும் என்று பிரார்த்தனை செய்
கிறோம்.
13உங்கள் இதயம் உறுதியாகும்படியாக
நாங்கள் இந்த பிரார்த்தனையைச் செய்கி
றோம். அப்பொழுது கர்த்தராகிய இயேசு தம்
பரிசுத்த மக்களோடு வரும்போது நீங்கள் பிதா
வாகிய தேவன் முன் பரிசுத்தராகவும், குற்ற
மற்றவர்களாகவும் நிற்பீர்கள்.

## தேவனை மகிழ்வூட்டும் வாழ்க்கை

4 சகோதர சகோதரிகளே! நான் உங்களுக்கு
வேறு சிலவற்றைச் சொல்ல விரும்புகி
றேன். தேவனுக்குப் பிடித்தமான வாழ்க்
கையை எவ்வாறு வாழவேண்டும் என்று
நாங்கள் உங்களுக்குக் கற்பித்தோம். நீங்கள்
அத்தகைய விதத்தில் வாழ்ந்து கொண்டிருக்கி
றீர்கள். மென்மேலும் அவ்வாறு வாழ கர்த்த
ராகிய இயேசுவின் பேரில் உங்களைக் கேட்
டுக்கொள்வதோடு ஊக்கப்படுத்தவும் செய்கி
றோம். 2நாங்கள் செய்யச் சொன்னவற்றை
நீங்கள் அறிவீர்கள். அவற்றை நாங்கள் கர்த்த
ராகிய இயேசுவின் அதிகாரத்தால் சொன்
னோம். 3நீங்கள் பரிசுத்தமுடன் இருக்க தேவன்
விரும்புகிறார். நீங்கள் பாலியல் குற்றத்தில்
இருந்து விலகி இருக்கவேண்டுமென்று அவர்
விரும்புகிறார். 4உங்கள் சரீரத்தைக் கட்டுப்ப
டுத்த நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும். உங்
கள் சரீரத்தைத் தூய்மையாய் வைத்துக்கொள்
ளுங்கள். அது தேவனுக்குப் பெருமை சேர்க்
கும். 5உங்கள் சரீரத்தை வெறித்தனமான உண
ர்வுகளுக்கு ஒப்படைக்காதீர்கள். தேவனை
அறிந்து கொள்ளாதவர்கள்தான் அதனை
அதற்குப் பயன்படுத்துவார்கள். 6உங்களில்
எவரும் கிறிஸ்துவுக்குள் இருக்கும் உங்கள்
சகோதரர்களை இக்காரியத்தில் ஏமாற்றவோ,
கெடுதல் செய்யவோ முயற்சி செய்யாதீர்கள்.
அவ்வாறு செய்பவர்களைக் கர்த்தர் தண்டிப்
பார். இதைப்பற்றி உங்களுக்கு ஏற்கெனவே
சொல்லி எச்சரித்திருக்கிறோம். 7நாம் பரிசுத்த
மாய் இருக்கும்படி தேவன் அழைத்தார். நாம்
பாவங்களில் வாழ்வதை அவர் விரும்ப
வில்லை. 8எனவே இந்தப் போதனைக்குக்
கீழ்ப்படிய மறுக்கிறவன், மனிதருக்கு அல்ல,
தேவனுக்கே கீழ்ப்படிய மறுக்கிறான். அவர்
ஒருவரே நமக்கு பரிசுத்த ஆவியானவரைத்
தர வல்லவர்.
9கிறிஸ்துவுக்குள், உங்கள் சகோதர சகோத
ரிகளுடன் அன்பாய் இருங்கள் என்று உங்க
ளுக்கு எழுதவேண்டியதில்லை. ஒருவரை
ஒருவர் நேசிக்க தேவன் ஏற்கெனவே உங்களுக்
குப் போதித்திருக்கிறார். 10மக்கதோனியாவில்
உள்ள எல்லா சகோதரர்களிடமும், சகோதரி
களிடமும் அன்பு செலுத்துகிறீர்கள். மேலும்
மேலும் அன்பு செய்யுமாறு உங்களை ஊக்கப்
படுத்துகிறோம்.
11சமாதானத்துக்குரிய வாழ்க்கையை வாழ
நீங்கள் எல்லா செயல்களையும் செய்யுங்கள்.
உங்கள் சொந்த காரியங்களில் கவனமாய்
இருங்கள், சொந்த வேலைகளைச் செய்யுங்கள்.
இவற்றையெல்லாம் செய்யுமாறு ஏற்கெனவே
சொல்லி இருக்கிறோம். 12இவற்றை எல்லாம்
நீங்கள் செய்யும்போது விசுவாசமற்ற மக்கள்
உங்கள் வாழ்வு முறையை மதிப்பார்கள். உங்
கள் தேவைக்கு வேறு எவரையும் சார்ந்
திருக்கவேண்டிய அவசியம் இல்லாதிருக்கும்.

## கர்த்தரின் வருகை

13சகோதர சகோதரிகளே! இறந்துபோனவர்
களைப்பற்றி நீங்கள் அறிந்துகொள்ள வேண்
டும் என்று நாங்கள் விரும்புகிறோம். ஏனைய
நம்பிக்கையற்ற மக்களைப் போன்று நீங்கள்
வருத்தம் கொள்வதை நாங்கள் விரும்புவ
தில்லை. 14இயேசு இறந்தார், ஆனால் அவர்
உயிர்த்தெழுந்தார் என்று விசுவாசிக்கிறோம்.
ஆகையால் இயேசுவை விசுவாசித்து மரித்
துப்போன எல்லாரையும் தேவன் இயேசு
வோடுகூட ஒன்று சேர்ப்பார். 15கர்த்தரின்
செய்தியையே நாங்கள் இப்போது உங்களுக்
குக் கூறுகிறோம். இப்பொழுது வாழ்ந்து
கொண்டிருக்கிற நாம் கர்த்தர் வரும்போதும்
ஒருவேளை வாழ்ந்துகொண்டிருப்போம். ஏற்
கெனவே மரித்தவர்கள் கர்த்தரோடு இருப்பார்
கள். உயிரோடிருக்கிற நாமும் அவரோடி
ருப்போம். ஆனால் நாம் அவர்களுக்கு (ஏற்

கெனவே இறந்தவர்களுக்கு) முந்திக்கொள்வ
தில்லை.
16கர்த்தர் அவராகவே பரலோகத்தில்
இருந்து வருவார். அங்கே உரத்த கட்டளை
இருக்கும். அக்கட்டளை பிரதான தேவதூதனு
டையதாக இருக்கும். தேவ எக்காளமும் கேட்
கும். அப்பொழுது கிறிஸ்துவுக்குள் இறந்து
போனவர்கள் முதலில் உயிர்த்தெழுவார்கள்.
17அதற்குப் பிறகு, அவர்களோடு அப்பொழுது
வாழும் நாமும் எடுத்துச் செல்லப்படுவோம்.
கர்த்தரை வானவெளியில் சந்திப்போம். அதன்
பின் எப்பொழுதும் கர்த்தரோடு இருப்போம்.
18ஆகவே இவ்வார்த்தைகளால் ஒருவரை
யொருவர் தேற்றிக் கொள்ளுங்கள்.

## கர்த்தரின் வருகைக்காகத் தயாராகுங்கள்

5 சகோதர சகோதரிகளே, இப்பொழுது
இவை நடக்கும் காலத்தையும் தேதியையும்
எழுதத் தேவை இல்லை. 2கர்த்தர் வரும் நாள்
இரவில் திருடன் திடீரென்று வருவதுபோல்
ஆச்சரியமாக இருக்கும் என்பது உங்களுக்கு
நன்றாகத் தெரியும். 3“நாங்கள் சமாதானத்தோ
டும், பாதுகாப்போடும் இருக்கிறோம்” என்று
மக்கள் சொல்வார்கள். அப்பொழுது அவர்க
ளுக்கு அழிவு திடீரென வரும். அவ்வழிவு
கர்ப்பவதியின் பிரசவ வேதனைபோன்று திடீ
ரென வரும். அவர்கள் தப்ப முடியாது.
4ஆனால் நீங்கள் இருட்டில் வாழவில்லை.
எனவே திருடனைப் போல அந்த நாள் உங்க
ளுக்கு ஆச்சரியத்தைத் தராது. 5நீங்கள் யாவ
ரும் வெளிச்சத்தைச் சேர்ந்தவர்கள், நீங்கள்
பகலுக்குரியவர்கள். நாம் இருளைச் (பாவத்
தைச்) சேர்ந்தவர்கள் இல்லை. நாம் இரவுக்கு
ரியவர்களும் இல்லை. 6எனவே நாம் ஏனைய
மக்களைப்போன்று இருக்கக் கூடாது. நாம்
தூங்கிக்கொண்டிருக்கக் கூடாது. விழிப்புட
னும், சுயகட்டுப்பாட்டுடனும் இருக்கவேண்டும்.
7தூங்கும் மக்கள் இரவுப்பொழுதில் தூங்குவார்
கள். குடித்து வெறிகொள்பவர்கள் இரவுப்
பொழுதில் குடிப்பார்கள். 8ஆனால் நாம்
பகலுக்குரியவர்கள் (நன்மை). எனவே நம்மை
நாமே கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும்.
நம்மைக் காத்துக் கொள்வதற்காக விசுவாசம்,
அன்பு என்னும் மார்புக் கவசத்தை அணிந்து
கொள்வோம். நம் தலைக்கவசமாய் இரட்சிப்
பின் நம்பிக்கை அமையும். 9தேவன் தம்
கோபத்தை நம்மேல் காட்டுவதற்காக நம்மைத்
தேர்ந்தெடுக்கவில்லை. நம் கர்த்தராகிய இயேசு
கிறிஸ்துவின் மூலம் இரட்சிப்பு அடையவே
தேர்ந்தெடுத்தார். 10அவரோடு நாம் அனைவ
ரும் இணைந்து வாழும்பொருட்டு, நமக்காக
அவர் இறந்தார். எனவே, இயேசு வரும்போது,
நாம் உயிருடன் இருக்கிறோமோ அல்லது
இறந்துபோவோமா என்பது முக்கியமில்லை.
11எனவே ஒருவருக்கொருவர் ஆறுதலாய்
இருங்கள். மேலும் நீங்கள் செய்து கொண்டி
ருப்பது போல ஒருவரையொருவர் பலப்படுத்
துங்கள்.

## இறுதி அறிவிப்புகளும், வாழ்த்துக்களும்

12சகோதர சகோதரிகளே! உங்களோடு கடு
மையாய் உழைப்பவர்களுக்கு மதிப்பளியுங்
கள். கர்த்தருக்குள் அவர்களே உங்கள் தலை
வர்கள். ஆத்தும அளவில் அவர்களே உங்க
ளுக்கு வழிகாட்டுகிறார்கள். 13அவர்கள் செய்து
கொண்டிருக்கிற செயலுக்காக அவர்களை
அன்போடு மதியுங்கள். ஒருவருக்கொருவர்
சமாதானமாய் வாழுங்கள். 14சகோதர சகோ
தரிகளே! உழைக்காத மக்களை எச்சரிக்கை
செய்யுங்கள் என்று கேட்டுக்கொள்கிறோம்.
அஞ்சுகிறவர்களை உற்சாகப்படுத்துங்கள்.
பலவீனமானவர்களுக்கு உதவுங்கள். எல்லாரி
டமும் பொறுமையாய் இருங்கள். 15ஒருவரும்
தீமைக்குத் தீமை செய்யாதபடி பார்த்துக்
கொள்ளுங்கள். ஒருவருக்கொருவர் எப்பொழு
தும் நன்மை செய்துகொள்ளவும் எல்லா
ருக்கும் நன்மை செய்யவும் முயலுங்கள்.
16எப்பொழுதும் மகிழ்ச்சியாய் இருங்கள்.
17பிரார்த்தனை செய்வதை நிறுத்தாதீர்கள்.
18தேவனுக்கு எப்பொழுதும் நன்றி செலுத்துங்
கள். இயேசு கிறிஸ்துவில் இதையே உங்களி
டம் தேவன் விரும்புகிறார்.
19பரிசுத்தாவியானவருக்கான வேலையை
நிறுத்தாதீர்கள். 20தீர்க்கதரிசனங்களை முக்கிய
மற்ற ஒன்றாக எண்ணாதீர்கள். 21ஆனால் எல்
லாவற்றையும் சோதித்து அறியுங்கள். நல்ல
வற்றை வைத்துக் கொள்ளுங்கள். 22எல்லா
வகையான தீமைகளில் இருந்தும் விலகி
இருங்கள்.
23சமாதானத்தின் தேவன்தாமே உங்களை
முழுமையாகப் பரிசுத்தமாக்கும் பொருட்டு
தேவனிடம் பிரார்த்தனை செய்கிறோம். நம்
கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வரும்போது
உங்கள் ஆவி, ஆன்மா, சரீரம் முழுதும் குற்ற
மில்லாததாய் இருக்கும்படி காக்கப்படுவதாக.
24உங்களை அழைக்கிற தேவன் இவற்றை
உங்களுக்குச் செய்வார். அவரை நம்புங்கள்.
25சகோதர சகோதரிகளே! எங்களுக்காகப்
பிரார்த்தனை செய்யுங்கள். 26நீங்கள் சந்திக்
கும்போது ஒருவரையொருவர் பரிசுத்தமாக
முத்தமிட்டுக் கொள்ளுங்கள் 27அனைத்து சகோ
தர சகோதரிகளிடமும் இந்த நிருபம் வாசிக்கப்
படவேண்டும் என்று உங்களுக்குக் கர்த்தரின்
அதிகாரத்தால் ஆணையிட்டுக் கூறுகிறேன்.
28நம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின்
கிருபை உங்களுடன் இருப்பதாக!

# தெசலோனிக்கேயருக்கு எழுதிய இரண்டாம் கடிதம்

1 தெசலோனிக்கேயாவில் இருக்கும் சபை
க்கு பவுல், சில்வான், தீமோத்தேயு ஆகி
யோர் எழுதிக்கொள்வது, பிதாவாகிய தேவ
னுக்குள்ளும், கர்த்தராகிய இயேசு கிறிஸ்
துவுக்குள்ளும் நீங்கள் இருக்கிறீர்கள். 2உங்க
ளுக்கு நம்முடைய பிதாவாகிய தேவனாலும்,
கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினாலும் கிரு
பையும் சமாதானமும் உண்டாவதாக.
3உங்களுக்காக எப்பொழுதும் தேவனுக்கு
நன்றி செலுத்துகிறோம். அதுவே செய்வதற்கு
உரியது என்பதால் நாங்கள் அதனைச் செய்
கின்றோம். உங்கள் விசுவாசம் மேலும்
மேலும் வளருவதால் அப்படிச் செய்கிறோம்.
உங்களில் ஒருவருக்கொருவரிடம் உள்ள அன்
பும் வளர்கின்றது. 4தேவனுடைய ஏனைய
சபைகளில் உங்களைப் பற்றி நாங்கள் பெரு
மையாய்ப் பேசிக்கொள்கிறோம். விசுவாசத்தி
லும், பலத்திலும் நீங்கள் தொடர்ந்து இருப்பது
குறித்து மற்ற சபைகளுக்கு நாங்கள் கூறுகி
றோம். நீங்கள் பல உபத்திரவங்களையும், துன்
பங்களையும் அடைந்தீர்கள். எனினும் தொடர்
ந்து விசுவாசமும் பலமும் உடையவர்களாய்
நீங்கள் இருக்கிறீர்கள்.

### தேவனுடைய தீர்ப்பு பற்றி பவுல் சொல்கிறார்

5தேவன் தன் தீர்ப்பில் சரியாக உள்ளார்
என்பதற்கு அதுவே நிரூபணமாக இருக்கிறது.
தேவன் தன் இராஜ்யத்துக்கு ஏற்றவர்களாக
நீங்கள் இருக்கவேண்டும் என விரும்புகிறார்.
உங்கள் துன்பங்கள் கூட அந்த இராஜ்யத்துக்
காகத்தான். 6எது சரியானதோ அதையே
தேவன் செய்வார். உங்களுக்கு யார் துன்பம்
தருகிறார்களோ அவர்களுக்கு தேவன் துன்பம்
தருவார். 7துன்பப்படுகிற உங்களுக்கு தேவன்
இளைப்பாறுதலைத் தருவார். எங்களுக்கும்
சமாதானத்தைத் தருவார். கர்த்தராகிய இயேசு
வின் வருகையின்போது தேவன் எங்களுக்கு
இந்த உதவியைச் செய்வார். இயேசு பரலோ
கத்தில் இருந்து வல்லமை வாய்ந்த தம் தேவ
தூதர்களோடு வருவார். 8பரலோகத்திலிருந்து
அவர் வரும்போது, தேவனை அறியாதவர்க
ளைத் தண்டிப்பதற்காக எரிகின்ற அக்கினி
யோடும் வருவார். கர்த்தராகிய இயேசு கிறிஸ்
துவின் நற்செய்திக்குக் கீழ்ப்படியாதவர்கள்
எல்லாரையும் அவர் தண்டிப்பார். 9என்றென்
றும் நித்திய அழிவுகள் நேரும் வகையில்
அவர்கள் தண்டிக்கப்படுவார்கள். அவர்கள்
கர்த்தரோடு இருக்க அனுமதிக்கப்படமாட்டார்
கள். அவருடைய பெரும் வல்லமையிடம்
இருந்து அவர்கள் விலக்கி வைக்கப்படுவார்
கள். 10தம் பரிசுத்த மக்களோடு மகிமைப்படுத்
தப்படவும், எல்லா விசுவாசிகளுக்கும் தம்
மகிமையைப் புலப்படுத்தவும் கர்த்தராகிய
இயேசு வரும் நாளில் இவை நிகழும். விசு
வாசம் உள்ளவர்களெல்லாம் இயேசுவோடு
சேர்ந்து கொண்டு மகிழ்ச்சி அடைவார்கள்.
அந்த விசுவாசிகளின் கூட்டத்தில் நீங்களும்
இருப்பீர்கள். ஏனென்றால் நாங்கள் சொன்
னவற்றை நீங்கள் விசுவாசித்தீர்கள். 11அதற்
காகத்தான் நாங்கள் எப்பொழுதும் உங்களுக்
காகப் பிரார்த்தனை செய்கிறோம். உங்களை
நல்வழியில் வாழச் செய்யுமாறு நாங்கள்
தேவனை வேண்டுகிறோம். இதற்காகவே தேவ
னால் நீங்கள் அழைக்கப்பட்டீர்கள். நல்லதைச்
செய்யவேண்டும் என்னும் ஆவல் உங்களிடம்
இருக்கிறது. உங்களது விசுவாசம் உங்களைப்
பணியாற்ற வைக்கும். மேலும் மேலும் இத்த
கைய செயலைச் செய்ய தேவன் உங்களுக்கு
உதவுமாறு நாங்கள் அவரை வேண்டுகிறோம்.
12கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமம்
உங்களில் மகிமை அடையும் பொருட்டே
இவை அனைத்திற்காகவும் நாங்கள் பிரார்த்
தனை செய்கிறோம். உங்களில் அவர் மகிமை
யடைவார். அவரில் நீங்கள் மகிமையடை
வீர்கள். அம்மகிமை நம் தேவனும், கர்த்தரு
மான இயேசு கிறிஸ்துவின் கிருபையிலிருந்து
வருகிறது.

### தீயச்செயல்கள் நிகழும்

2 சகோதர, சகோதரிகளே! கர்த்தராகிய
இயேசு கிறிஸ்து வருவதுபற்றிச் சில காரி
யங்கள் சொல்ல வேண்டியது உள்ளன. நாம்
எப்போது அவரோடு ஒன்று சேருவோம் என்
பது பற்றிப் பேச நாங்கள் விரும்புகிறோம்.
2கர்த்தர் வரும் நாள் ஏற்கனவே வந்துவிட்ட
தென கேள்விப்பட்டால், மனக்கலக்கமோ,
பயமோ அடைந்து விடாதீர்கள். சிலர் இத
னைத் தீர்க்கதரிசனமாகவோ, செய்தியாகவோ
சொல்லலாம், அல்லது ஒருவன் எங்களிடத்தில்
இருந்து கூட ஒரு கடிதம் வந்ததாகக் கூறி
உங்களை ஏமாற்றப் பார்க்கலாம். 3எவரும்
உங்களை எவ்விதத்திலும் முட்டாள் ஆக்
காமல் பார்த்துக் கொள்ளுங்கள். ஏனெனில்

*விசுவாச மறுதலிப்பும், அழிவின் மகனாகிய*
*பாவமனிதனும் தோன்றும் வரை அந்த நாள்*
*வராது. பாவமனிதன் நரகத்துக்கு உரியவன்.*
**4**அவன் தேவனுக்கும் மனிதர்களின் வழிபாடு
களுக்கும் எதிரானவன். அவன் தேவனுடைய
ஆலயத்திற்கும் சென்று அங்கே உட்காருவான்.
பிறகு, தன்னை தேவனைவிட உயர்ந்தவனாக
காட்டிக்கொள்வான்.

**5**இக்காரியங்கள் நிகழும் என்பது பற்றி
முன்னரே நான் உங்களிடம் கூறினேன், ஞாப
கம் இருக்கிறதா? **6**அவனை இப்போது தடுத்து
நிறுத்தி இருப்பது யாரென்று உங்களுக்குத்
தெரியும். அவன் இப்போது தடுக்கப்பட்டிருப்
பது சரியான நேரத்தில் வெளிப்படும் பொருட்
டுத்தான். **7**பாவத்தின் இரகசிய சக்தி ஏற்கெ
னவே உலகத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கி
றது. ஆனால் அவனைத் தடுத்து நிறுத்தும்
வல்லமை உடையவர் ஒருவரே! அவன் முழு
மையாகத் தன் வழியில் இருந்து விலக்கப்ப
டும்வரை அவனைத் தடுத்து நிறுத்துவார்
அவர். **8**பிறகு அந்த பாவ மனிதன் வெளிப்படு
வான். கர்த்தராகிய இயேசு தன் வாயில்
இருந்து வரும் சுவாசத்தினால் அவனைக்
கொல்வார். அவர் தன் பெருமைமிகு வருகை
யின் மூலமே அந்த பாவமனிதனை அழிப்பார்.
**9**சாத்தானின் சக்தியாலேயே பாவமனிதன்
வருவான். அவனுக்குப் பெரும் சக்தி இருக்
கும். அதனால் போலி அற்புதங்களையும்
அடையாளங்களையும் செய்வான். **10**பாவமனி
தன் எல்லாவிதமான பாவங்களையும் செய்து
ஆன்மீக அளவில் தான் வஞ்சிக்கும் மக்களை
ஏமாற்ற பல தந்திரங்கள் செய்வான். உண்
மையை நேசிக்க மறுத்ததால் அம்மக்கள் ஆன்
மீக அளவில் தொலைந்து போனவர்கள் ஆகி
றார்கள். (உண்மையை நேசித்திருந்தால் அவர்
கள் இரட்சிக்கப்பட்டிருப்பார்கள்.) **11**ஆனால்
அவர்கள் உண்மையை நேசிக்க மறுத்தார்கள்.
எனவே, அவர்கள் பொய்யை நம்பத்தக்கதாய்
போலி நம்பிக்கை என்னும் ஆற்றலை அவர்
களுக்குள் தேவன் அனுப்புகிறார். **12**எனவே,
உண்மையை நம்பாத மக்கள் எல்லாரும் தண்
டிக்கப்படுவார்கள். அவர்கள் உண்மையை
நம்பவில்லை. பாவச் செயல்கள் செய்வதிலே
மகிழ்ந்தார்கள்.

### மீட்கப்படுவதற்காக நீங்கள் தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள்

**13**சகோதர, சகோதரிகளே! கர்த்தர் உங்களி
டம் அன்புடன் இருக்கிறார். நீங்கள் இரட்சிக்கப்
படுவதற்காகவே தேவன் ஆரம்பத்திலேயே
உங்களைத் தேர்ந்தெடுத்தார். ஆகவே, உங்க
ளுக்காக எப்பொழுதும் நாங்கள் தேவனுக்கு
நன்றி செலுத்துகிறோம். உங்களைப் பரிசுத்தப்
படுத்துகிற பரிசுத்த ஆவியானவராலும், உண்
மையின் மீது நீங்கள் வைக்கும் விசுவாசத்
தாலும் இரட்சிக்கப்படுகிறீர்கள். **14**அந்த இரட்
சிப்பை அடைய உங்களைத் தேவன் அழைத்
தார். நாங்கள் பரப்புகிற நற்செய்தியைப் பயன்
படுத்தி நீங்கள் நமது கர்த்தராகிய இயேசு
கிறிஸ்துவின் மகிமையை அடையும்பொருட்டு
தேவன் உங்களை அழைத்தார். **15**சகோதர
சகோதரிகளே! ஆகையால் உறுதியாய் நில்
லுங்கள். எங்கள் போதனைகளில் தொடர்ந்து
நம்பிக்கை வையுங்கள். அவற்றை நாங்கள்
பிரசங்கங்கள் மூலமும், நிருபங்களின் மூல
மும் உங்களுக்குப் போதித்திருக்கிறோம்.
**16-17**நம்மை நேசித்தும், நமக்கு நல்ல விசுவா
சத்தைக் கொடுத்தும், எக்காலத்திலும் தொடர்
கிற ஆறுதலை வழங்கியும் வருகிற இயேசு
கிறிஸ்துவாகிய கர்த்தரும், நம் பிதாவாகிய
தேவனும் தொடர்ந்து உங்களை ஆறுதல்படுத்த
வும், நீங்கள் சொல்கிற, மற்றும் செய்கிற
ஒவ்வொரு நற்செயலிலும் உங்களை வலிமை
யுறச் செய்யவும் நாங்கள் பிரார்த்தனை செய்
கிறோம்.

### எங்களுக்காகப் பிரார்த்தனை செய்யுங்கள்

**3** சகோதர சகோதரிகளே! எங்களுக்காகப்
பிரார்த்தனை செய்யுங்கள். கர்த்தரின்
போதனை தொடர்ந்து வேகமாகப் பரவ வேண்
டும். அப்போதனையை மக்கள் ஏற்றுக் கனப்
படுத்தவேண்டும். உங்களிடம் அது பரவி
இருப்பதுபோன்று மற்றவர்களிடமும் பரவ
வேண்டும். இதற்காகப் பிரார்த்தனை செய்யுங்
கள். **2**கெட்ட, தீய மனிதர்களிடமிருந்து நாங்கள்
காப்பாற்றப் படவேண்டும் என்று பிரார்த்
தனை செய்யுங்கள். (எல்லா மக்களும் கர்த்தரி
டம் விசுவாசம் வைக்கவில்லை)

**3**ஆனால் கர்த்தர் உண்மையுள்ளவர். அவர்
உங்களுக்குப் பலத்தைக் கொடுத்து தீமையி
னின்று (சாத்தான்) உங்களைப் பாதுகாப்பார்.
**4**மேலும், நாங்கள் வழி காட்டியபடியே நீங்கள்
நடந்துகொள்கிறீர்கள் என்றும், இனிமேலும்
நடந்து கொள்வீர்கள் என்றும் உங்களைக்
குறித்து கர்த்தருக்குள் நம்பிக்கை வைத்திருக்
கிறோம். **5**தேவனுடைய அன்புக்குள்ளும், கிறி
ஸ்துவின் பொறுமைக்குள்ளும் உங்கள் இத
யம் இருக்க கர்த்தர் வழிகாட்டவேண்டும் என்
றும் பிரார்த்தனை செய்கிறோம்.

### வேலைக்கான பொறுப்புகள்

**6**சகோதர சகோதரிகளே! நம் கர்த்தராகிய
இயேசு கிறிஸ்துவின் அதிகாரத்தால் உங்க
ளுக்கு ஆணை இடுகிறோம். வேலை செய்ய
மறுக்கிற விசுவாசியிடம் இருந்து விலகிச்
செல்லுங்கள். வேலை செய்ய மறுக்கிறவர்கள்,
எங்களிடமிருந்து நீங்கள் பெற்ற போதனை
யைப் பின்பற்றுகிறவர்கள் அல்ல. **7**நாங்கள்
வாழ்வது போன்றே நீங்களும் வாழவேண்டும்
என்பதை நீங்கள் அறிவீர்கள். உங்களோடு
நாங்கள் இருந்தபோது சோம்பேறிகளாக இருந்
ததில்லை. **8**அடுத்தவர்கள் உணவை உண்ட
போது அதற்குரிய பணத்தைக் கொடுத்துவிட்
டோம். நாங்கள் மேலும் மேலும் வேலை
செய்தோம். எனவே, எவருக்கும் தொந்தரவு
தந்ததில்லை. நாங்கள் இரவும் பகலுமாக
உழைத்தோம். **9**எங்களுக்கு உதவும்படி உங்க

*ளிடம் கேட்க எங்களுக்கு உரிமை இருந்தது.
ஆனால் எங்கள் தேவைக்கு நாங்களே வேலை
செய்தோம். எனவே உங்களுக்கு முன்மாதிரி
யாக நாங்கள் இருந்தோம். இதனை நீங்கள்
பின்பற்ற வேண்டும். **10**“ஒரு மனிதன் வேலை
செய்யாவிடில் அவன் உண்ணக்கூடாது”
என்று உங்களோடு இருந்தபோது நாங்கள்
இந்த விதியைத் தந்தோம்.*

***11**உங்கள் கூட்டத்தில் உள்ள சிலர் உழைக்க
மறுப்பதாகக் கேள்விப்படுகிறோம். அவர்கள்
எதுவும் செய்வதில்லை. அவர்கள் ஏனைய
மக்களின் வாழ்வில் குறுக்கிடுபவர்களாக
இருக்கிறார்கள். **12**மற்றவர்களுக்குத் தொந்தரவு
தரவேண்டாம் என்று அவர்களுக்கு ஆணை
இடுகிறோம். உழைத்து உங்கள் உணவை சம்
பாதித்துக் கொள்ளுங்கள் என்று கூறுகிறோம்.
நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின்
பேரில் இதனைக் கேட்டுக்கொள்கிறோம்.
**13**சகோதர சகோதரிகளே! நல்லவற்றைச் செய்
வதில் சோர்வு அடையாதீர்கள்.*

***14**இந்த நிருபத்தில் சொல்லப்பட்ட வற்றிற்கு
எவனொருவன் பணிய மறுக்கிறானோ
அவன் யாரென்று அறிந்துகொள்ளுங்கள்.
அவனோடு சேராதீர்கள். பிறகு அதற்காக
அவன் வெட்கப்படுவான். **15**ஆனால் அவனை
ஒரு பகைவனைப் போல நடத்தாதீர்கள். ஒரு
சகோதரனைப் போன்று எச்சரிக்கை செய்
யுங்கள்.*

### *இறுதி வார்த்தைகள்*

***16**சமாதானத்தின் கர்த்தர் உங்களுக்கு எப்
பொழுதும் சமாதானத்தைத் தருவாராக. அவர்
எப்பொழுதும் எல்லா வழியிலும் சமாதானத்
தைத் தரவேண்டும் என்று பிரார்த்தனை செய்
கிறோம். கர்த்தர் உங்கள் அனைவரோடும்
இருப்பாராக.*

***17**பவுலாகிய நான் என் சொந்தக் கையா
லேயே இவ்வாழ்த்துக்களை எழுதி முடிக்கி
றேன். என் அனைத்து நிருபங்களிலும் இம்மு
றையில் தான் நான் கையெழுத்திடுகிறேன்.
நான் எழுதும் விதம் இதுவே.*

***18**நம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின்
கிருபை உங்கள் அனைவரோடும் இருப்
பதாக.*

# தீமோத்தேயுவுக்கு எழுதிய முதலாம் கடிதம்

1 நம்முடைய இரட்சகராக இருக்கிற தேவ
னும், நம்முடைய நம்பிக்கையாக இருக்கிற
இயேசு கிறிஸ்துவும் ஆணை இட்டபடியே
இயேசு கிறிஸ்துவின் அப்போஸ்தலனாய்
இருக்கிற பவுல்.
2விசுவாசத்தில் உண்மையான மகனாக
இருக்கும் தீமோத்தேயுவுக்கு எழுதுவது. நமது
பிதாவாகிய தேவனாலும் நமது கர்த்தராகிய
இயேசு கிறிஸ்துவினாலும், கிருபையும், இரக்
கமும், சமாதானமும் உண்டாவதாக.

## தவறான போதனைகளுக்கு எதிரான எச்சரிக்கைகள்

3எபேசு நகரத்தில் நீ இருக்கவேண்டும்
என்று விரும்புகிறேன். நான் மக்கதோனியா
வுக்குப் போனபோது நீ அவ்வாறு செய்யும்
படி கேட்டேன். எபேசு நகரில் சிலர் தவறான
வற்றைப் போதித்து வருகிறார்கள். இதுபோல
செய்யவேண்டாம் என்று ஆணையிட்டுச்
சொல்லும்பொருட்டு நீ அங்கே தங்கி இரு.
4உண்மையற்ற கட்டுக்கதைகளைக் கேட்டு
காலத்தை வீணாக்கவேண்டாம் என்றும் குடு
ம்ப வரலாற்றுப் பட்டியல்களை கேட்க வேண்
டாம் என்றும் கூறு. அவை வெறும் விவாதங்
களை மட்டுமே உருவாக்கும். அவை தேவனு
டைய பணிக்கு உதவாதவை. விசுவாசத்தின்
மூலமே தேவனுடைய பணி நடைபெறும். 5மக்
கள் அன்பு கொள்ள வேண்டும் என்பதே
இக்கட்டளையின் நோக்கம். இந்த அன்பைப்
பெற மக்கள் தூய இதயத்தைப் பெறவேண்டும்.
எது சரியானது என்று எண்ணுகிறார்களோ
அதைச் செய்ய வேண்டும். உண்மையான
விசுவாசம் கொள்ளவேண்டும். 6சிலர் இக்காரி
யங்களைச் செய்யத் தவறினார்கள். ஆகை
யால் அவர்கள் அதிலிருந்து விலகி ஒன்றுக்
கும் உதவாத காரியங்களைப் பற்றி இப்பொ
ழுது பேசுகிறார்கள். 7அந்த மக்கள் நியாயப்
பிரமாண போதகர்களாக இருக்க விரும்புகி
றார்கள். ஆனால், அவர்களுக்குத் தாம் என்ன
சொல்கிறோம் என்பது தெரியவில்லை.
அதோடு தாம் உறுதியாகச் சொல்கின்றவற்
றைப் பற்றியும் புரிந்துகொள்ளவில்லை.
8ஒருவன் சட்டத்தைச் சரியாகப் பயன்படுத்
தினால் அச்சட்டம் நல்லதென்று அறிந்திருக்கி
றோம். 9சட்டமானது நல்ல மனிதர்களுக்காக
உருவாக்கப்படவில்லை என்பதும் எங்க
ளுக்கு தெரியும். சட்டத்துக்கு எதிரானவர்களுக்
காகவும், பின்பற்ற மறுப்பவர்களுக்காகவும்
இச்சட்டம் உருவாக்கப்பட்டது. இது தேவனுக்கு
எதிரானவர்களுக்காகவும், பாவிகளுக்காக
வும், பக்தியில்லாதவர்களுக்காகவும், தூய்மை
யற்றவர்களுக்காகவும், தம் பெற்றோரைக்
கொல்கிறவர்களுக்காகவும், கொலைக்காரர்க
ளுக்காகவும் உருவாக்கப்பட்டது. 10விபசாரம்,
ஓரினக்கலவி, அடிமை, விற்பனை, பொய்,
ஏமாற்று, தேவனின் உண்மை போதனைக்கு
எதிர்ப்பு போன்றவற்றைச் செய்கின்ற மக்க
ளுக்கு உரியது. 11சொல்லும்படி தேவன் என்
னிடம் ஒப்படைத்த நற்செய்தியின் ஒரு பகு
தியே என் போதனையாகும். பெருமைமிகு
அந்நற்செய்தி மகிமையின் தேவனிடமிருந்து
வருகிறது.

## தேவனுடைய கிருபைக்காக நன்றி செலுத்துதல்

12நம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கு
நான் நன்றி கூறுகிறேன், ஏனெனில் என்னை
விசுவாசமுள்ளவனாகக் கண்டுணர்ந்து
சேவை செய்யும்பொருட்டு அவர் எனக்கு
இப்பணியைக் கொடுத்திருக்கிறார். அவர்
எனக்குப் பலத்தைக் கொடுத்திருக்கிறார்.
13முன்பு நான் கிறிஸ்துவுக்கு எதிராகப் பேசி
துன்பப்படுத்தி, கொடுமையான காரியங்க
ளைச் செய்தேன். ஆனால் தேவன் என்னிடம்
கருணையோடு இருந்தார். ஏனென்றால், செய்
வதை இன்னதென்று அறியாமல் நான் செய்
தேன். அவரை நம்பாதபோது தான் அவற்
றைச் செய்தேன். 14ஆனால் கர்த்தராகிய அவர்
தம் முழுமையான கிருபையை எனக்குத் தந்
தார். அதோடு கிறிஸ்து இயேசுவில் விசுவாச
மும் அன்பும் வந்தது.
15நான் என்ன சொல்கிறேனோ, அவை
உண்மையானவை. நீங்கள் அவற்றை முழு
மையாக ஏற்றுக்கொள்ளவேண்டும். பாவி
களை மீட்பதற்காகவே கிறிஸ்துவாகிய இயேசு
இந்த உலகத்துக்கு வந்தார். அவர்களுள் நான்
மிக மோசமானவன். 16ஆனால் எனக்குக் கரு
ணை அளிக்கப்பட்டது. அதனால் என் மூலம்
இயேசு கிறிஸ்து எல்லையற்ற பொறுமை
உடையவர் என்று புலப்படுத்தி விட்டார்.
கிறிஸ்து தனது பொறுமையை எல்லா பாவிக
ளிலும் மோசமான என்னிடம் காட்டினார்.
அவரை விசுவாசிக்கிறவர்கள் நித்திய வாழ்
வைப் பெறுவர் என்பதற்கு எடுத்துக்காட்டாக

நான் இருக்கும்படியாக கிறிஸ்து விரும்பி
னார். 17கனமும், மகிமையும் நிரந்தரமான
அரசருக்கு இருப்பதாக. அவர் அழிக்கப் படா
தவர். பார்க்கப்படாதவர். அந்த ஒரே தேவ
னுக்கே எப்பொழுதும் கனமும், மகிமையும்
உண்டாவதாக.

18தீமோத்தேயுவே, நீ என் மகனைப் போன்
றவன். நான் உனக்கு ஓர் ஆணையிடுகிறேன்.
உன்னைக் குறித்து முன்பு சொல்லப்பட்ட
தீர்க்கதரிசனங்களின்படியே விசுவாசத்திற்
காக மாபெரும் போரில் நீ ஈடுபடு. இதுவே
எனது ஆணை. 19தொடர்ந்து விசுவாசம்
கொள். உனக்கு நியாயமானது என்று தெரிந்
ததைச் செய். சிலர் இதனைச் செய்யவில்லை.
எனவே அவர்கள் விசுவாசத்திலிருந்து விலகி
விழுந்தார்கள். 20இமனேயும், அலெக்சாண்ட
ரும் இத்தகு இரண்டு உதாரணங்கள். தேவ
னுக்கு எதிராகப் பேசக்கூடாது என்பதைக்
கற்றுக்கொள்ளும் பொருட்டு நான் அவர்
களைச் சாத்தானிடம் ஒப்படைத்து விட்டேன்.

### ஆண்களுக்கும் பெண்களுக்குமான சில விதிமுறைகள்

2 எல்லாருக்குமாக பிரார்த்தனை செய்யுங்
கள் என்று முதலில் உங்களைக் கேட்டுக்
கொள்கிறேன். எல்லாரையும் பற்றி தேவனிடம்
பேசுங்கள். அவர்களுக்குத் தேவையானவற்
றைப் பற்றி கேளுங்கள். அவரிடம் நன்றியுணர்
வுடன் இருங்கள். 2அரசர்களுக்காகவும், அதி
காரம் உள்ளவர்களுக்காகவும் நீங்கள் பிரார்த்
தனை செய்ய வேண்டும். முழுக்க முழுக்கச்
சேவையும், தேவனைக் குறித்த மரியாதையும்
அமைதியும், சமாதானமும் உள்ள வாழ்வை
நாம் பெறும்பொருட்டு அத்தலைவர்களுக்
காகப் பிரார்த்தனை செய்யுங்கள். 3இது நன்று.
நம் மீட்பரான தேவனுக்கு இது மிகவும் விருப்
பமானது. 4அனைத்து மக்களும் மீட்கப்பட
வேண்டும் என்று தேவன் விரும்புகிறார்.
அனைத்து மக்களும் உண்மையை அறிந்து
கொள்ளவேண்டும் என்றும் தேவன் ஆசைப்
படுகிறார். 5ஒரே ஒரு தேவனே இருக்கிறார்.
மனிதர்கள் தேவனை அடைவதற்கும் ஒரே
ஒரு வழிதான் உள்ளது. அவ்வழி மனிதனாகப்
பிறந்த கிறிஸ்துவாகிய இயேசுவின் மூலம்
உருவாகிறது. 6அனைத்து மக்களின் பாவங்க
ளுக்காகவும் அவர் தன்னையே தந்துவிட்டார்.
தேவன் எல்லாறையும் மீட்க விரும்புகிறார்
என்பதற்கு இயேசுவே சாட்சி. அவர் சரியான
நேரத்தில் வந்தார். 7அதனால்தான் நற்செய்
தியைப் பரப்புவதற்காக, நான் தேர்ந்தெடுக்
கப்பட்டேன். அதனால்தான் நான் அப்போஸ்
தலனாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டேன். (நான்
உண்மையைத் தான் சொல்கிறேன். பொய்
சொல்லவில்லை) யூதர் அல்லாதவர்களுக்கான
போதகராகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன். நான்
அவர்கள் விசுவாசம் கொள்ளவும், உண்
மையை அறிந்துகொள்ளவும் போதிக்கிறேன்.
8ஆண்மக்கள் எல்லா இடத்திலும் பிரார்த்திக்க
வேண்டும் என்று விரும்புகிறேன். கைகளை
உயர்த்தி ஜெபம்செய்யும் இவர்கள் தூய்மையா
னவர்களாக இருக்கவேண்டும். இவர்கள் கோப
மும், தர்க்கமும் இல்லாதவர்களாக இருக்க
வேண்டும்.

9பெண்கள் தமக்குப் பொருத்தமான ஆடை
களை அணியவேண்டுமென்று விரும்புகி
றேன். மரியாதைக் குரிய விதத்தில் அவர்கள்
ஆடைகள் இருக்கவேண்டும். எளிமையாகவும்,
சரியான சிந்தனை உடையவர்களாகவும்
அவர்கள் இருக்கவேண்டும். அவர்கள் நவநா
கரீகமான தலையலங்காரமும், பொன், முத்து
நகையலங்காரங்களும், விலையுயர்ந்த ஆடை
அலங்காரங்களும் இல்லாமல் இருப்பார்களாக.
10ஆனால், அவர்கள் அழகானவர்களாகத்
தோன்ற நற்செயல்களைச் செய்யவேண்டும்.
தேவனை வழிபடுகிற பெண்கள் அவ்விதத்தி
லேயே தங்களை அலங்கரித்துக் கொள்ள
வேண்டும்.

11பெண்கள் எல்லாவற்றிலும் அடக்கம்
உடையவராய் இருந்து அமைதியோடு கற்றுக்
கொள்ளவேண்டும். 12ஆணுக்கு ஒரு பெண்
கற்பிக்க நான் ஒத்துக்கொள்ளமாட்டேன்.
அதோடு ஆண் மீது ஒரு பெண் அதிகாரம்
செலுத்தவும் நான் ஒத்துக்கொள்ளமாட்டேன்.
பெண்கள் தொடர்ந்து எப்போதும் அமைதி
யாக இருக்கவேண்டும். 13ஏனெனில் ஆதாமே
முதலில் படைக்கப்பட்டான். ஏவாள் பிறகு
தான் படைக்கப்பட்டாள். 14அதோடு, சாத்தா
னின் தந்திரத்துக்குள் ஆதாம் அகப்பட
வில்லை. பெண்தான் முதலில் தந்திரத்துக்குள்
சிக்கி பாவியானாள். 15தொடர்ந்து விசுவாச
மும் அன்பும் புனிதமும் கொண்டு நல்ல
வழியில் கட்டுப்பாட்டோடு பெண்கள் நடந்து
கொண்டால், அவர்கள் தம் பிள்ளைப்பேற்றின்
மூலம் இரட்சிக்கப்படுவார்கள்.

### சபையில் தலைவர்கள்

3 நான் சொல்வதெல்லாம் உண்மையே,
மூப்பரின் சேவையை விரும்புகிறவன்
நல்ல வேலையைச் செய்வதையே விரும்புகி
றான். 2ஒரு மூப்பன் நல்லவனாகவே இருக்க
வேண்டும். அவன் தன்னைக் குற்றம் சாட்டப்ப
டாதவனாகப் பார்த்துக்கொள்ள வேண்டும்.
அவன் ஒரே ஒரு மனைவியை உடையவனாக
வும், சுயக்கட்டுப்பாடும், ஞானமும் கொண்டவ
னாகவும் இருக்கவேண்டும். மற்றவர்களால்
மதிக்கப்பட வேண்டும். மக்களை உபசரிப்பவ
னாக இருக்க வேண்டும். நல்ல போதகனாகவும்
இருக்க வேண்டும். 3அவன் மது அருந்துபவ
னாகவும், சண்டையிட விரும்புகிறவனாகவும்
இருக்கக் கூடாது. அவன் பொறுமையும், சமா
தானமும் உடையவனாக இருக்கவேண்டும்.
அதோடு அவன் பண ஆசை இல்லாதவனாக
வும் இருக்கவேண்டும். 4அவன் தன் குடும்பத்
தில் சிறந்த தலைவனாக இருக்கவேண்டும்.
அதாவது அவனது பிள்ளைகள் அவனிடம்
முழு மரியாதையோடு கீழ்ப்படிந்து நடக்க

வேண்டும். [5]ஒருவன் தன் சொந்தக் குடும்பத்
தில் நல்லதொரு தலைவனாக இருக்க தெரியா
விட்டால், பிறகு எப்படி அவனால் தேவனு
டைய சபைப்பொறுப்பை ஏற்று நடத்த முடி
யும்? [6]ஆனால் மூப்பராக வருகிற ஒருவன்
புதிதாக விசுவாசம் கொண்டவனாக இருக்கக்
கூடாது. இதில் அவன் பெருமைப்படுவதற்கு
எதுவும் இல்லை. அவ்வாறு செய்தால் அவன்
தற்பெருமைக்காகத் தண்டிக்கப்படுவான். அது
சாத்தான் பெற்ற தண்டனையைப்போன்று
இருக்கும். [7]சபையில் இல்லாதவர்களின் மரி
யாதையையும் பெற்றவனாக மூப்பர் இருக்க
வேண்டும். பிறகு அவன் மற்றவர்களால் விமர்
சிக்கப்படாமல் இருப்பான். சாத்தானின் தந்தி
ரத்துக்கும் பலியாகாமல் இருப்பான்.

### சபையில் உள்ள உதவியாளர்கள்

[8]இதே விதத்திலேயே மக்களின் மரியா
தைக்கு உரியவர்களாக சிறப்பு உதவியாளர்
களும் இருக்கவேண்டும். அவர்கள் நினைப்
பொன்றும் சொல்லொன்றுமாக இல்லாமலும்,
மதுக்குடியர்களாக இல்லாமலும் இருக்க
வேண்டும். மற்றவர்களை ஏமாற்றி செல்வம்
சேர்ப்பவர்களாகவும் இருக்கக் கூடாது. [9]அவர்
கள், தேவன் நமக்கு வெளிக்காட்டிய உண்மை
களைக் கடைப்பிடிக்கிறவர்களாகவும், சரி
யெனப்படுவதை மட்டுமே செய்பவர்களாகவும்
இருக்க வேண்டும். [10]முதலில் நீங்கள் அவர்
களைச் சோதனை செய்யுங்கள். அவர்களில்
எதுவும் குற்றம் இல்லாவிட்டால் பிறகு அவர்
கள் விசேஷ உதவியாளர்களாக சேவைசெய்ய
முடியும். [11]இதைப்போலவே மற்றவர்கள் மதிக்
கத்தக்கவர்களாக பெண்கள் இருக்கவேண்டும்.
பிறர்மேல் அவதூறு போசாதவர்களாகவும்
இருக்கவேண்டும். அவர்கள் சுயக்கட்டுப்பாடு
உள்ளவர்களாகவும், எல்லாவற்றிலும் உண்
மை உள்ளவர்களாகவும் இருக்கவேண்டும்.
[12]விசேஷ உதவியாளர்களாக இருப்பவர்கள்
ஒரே ஒரு மனைவி உடையவர்களாக இருக்க
வேண்டும். அவர்கள் தம் பிள்ளைகளுக்கும்
குடும்பங்களுக்கும் நல்ல தலைவர்களாக இருக்
கவேண்டும். [13]இவ்வாறு நல்ல வழியில்
சேவை செய்கிறவர்கள் ஒரு மரியாதைக்குரிய
நிலையை அடைவார்கள். இயேசு கிறிஸ்து
வின் மீதுள்ள விசுவாசத்தில் மேலும் உறுதி
பெறுவார்கள்.

### நம் வாழ்க்கையின் இரகசியம்

[14]விரைவில் நான் உங்களிடம் வருவேன்
என நம்புகிறேன். ஆனால் இப்பொழுது இதை
உங்களுக்கு எழுதிக் கொண்டிருக்கிறேன்.
[15]பிறகு நான் விரைவில் வராவிட்டாலும்
தேவனுடைய குடும்பத்தில் என்னென்ன செய்
யவேண்டும் என்பது குறித்து நீங்கள் தெரிந்
துகொள்வீர்கள். தேவனுடைய குடும்பம் என்
பது ஜீவனுள்ள தேவனின் சபைதான். உண்
மையின் தூணாகவும் அடித்தளமாகவும் சபை
இருக்கிறது. [16]நம் வழிபாட்டு வாழ்வின் இரகசி
யம் எந்த சந்தேகத்துக்கும் இடம் இல்லாமல்
மிக உயர்ந்தது ஆகும்.

> “கிறிஸ்து மனித சரீரத்துடன் காட்சியளித்
> தார். அவர் நீதியானவர் என்பதை ஆவி
> யானவர் நிரூபித்தார். தேவதூதர்களால்
> காணப்பட்டார். யூதர் அல்லாதவர்களின்
> தேசங்களில் அவரைப் பற்றிய நற்செய்தி
> பரப்பப்பட்டது. உலகெங்கிலுமுள்ள மக்
> கள் அவர்மேல் விசுவாசம் கொண்டனர்.
> அவர் மகிமையுடன் வானுலகிற்கு எடுத்
> துக்கொள்ளப்பட்டார்.”

### தவறான போதகர்களைப் பற்றிய எச்சரிக்கை

4 வருங்காலத்தில் சிலர் உண்மையான
போதனையை நம்புவதை நிறுத்திவிடு
வார்கள் என்று தூய ஆவியானவர் கூறி
இருக்கிறார். அவர்கள் பொய் சொல்லும் ஆவி
களுக்குத் தலை வணங்குவார்கள். அவர்கள்
பிசாசுகளின் போதனைகளைப் பின்பற்று
வார்கள். [2]பொய்யும், தந்திரமும் உடையவர்
கள் மூலம் அத்தீய போதனைகள் வருகிறது.
அந்த மக்கள் சரி எது, தவறு எது என்று
பார்க்கமாட்டார்கள். அவர்களுடைய புரிந்து
கொள்ளும் தன்மை, சூடு போடப்பட்டு, அழிக்
கப்பட்டதைப் போன்றது. [3]அவர்கள் திரும
ணம் செய்யக்கூடாது என்கின்றனர். சில
உணவு வகைகளை உண்ணக்கூடாது என்று
கூறுகின்றனர். ஆனால் அந்த உணவுகளை
தேவனே படைத்திருக்கிறார். நம்புகிறவர்க
ளும், உண்மையை அறிந்தவர்களும் அவற்றை
நன்றியோடு உண்ணலாம். [4]தேவனால் படைக்
கப்பட்ட அனைத்துமே நல்லதுதான். நன்றிக்
கடனாகப் பெறுகிறவரையில் தேவனால் உரு
வாக்கப்பட்ட எதையும் மறுக்கக்கூடாது. [5]தேவ
னால் படைக்கப்பட்டவை எல்லாம் தேவனு
டைய வார்த்தையாலும் பிரார்த்தனைகளா
லும் தூய்மையாக்கப்படும்.

### இயேசு கிறிஸ்துவின் நல்ல வேலையாளாக இரு

[6]அங்குள்ள சகோதர சகோதரிகளிடமும்
இவற்றைக் கூறு. இவை நீ இயேசு கிறிஸ்து
வின் நல்ல வேலையாள் என்பதைக் காட்டும்.
விசுவாசமான வார்த்தைகளாலும், பின்பற்றப்
படுகிற நல்ல போதனையாலும் நீ பலப்ப
டுத்தப்படுகிறாய் என்றும் காட்டுவாய். [7]மக்கள்
சொல்கிற அர்த்தமற்ற கதைகள் தேவனுடைய
உண்மையோடு சற்றும் பொருந்தாதவை.
அவற்றின் கூற்றுக்களைப் பின்பற்றாதே. தேவ
னுக்கு உண்மையான சேவையைச் செய்ய
கற்றுக்கொள். [8]உடற்பயிற்சியானது சில வழிக
ளில் உதவிகரமானது. ஆனால் தேவபக்தியா
னது எல்லா வழிகளிலும் உதவுவதாகும். அது
இவ்வாழ்க்கைக்கு மட்டு மல்லாமல் இனிவரும்
வாழ்வுக்கும் ஆசீர்வாதம் தரும். [9]நான் சொல்வ
தெல்லாம் உண்மை. அவற்றை முழுமையாக
நீ ஏற்றுக்கொள்ளவேண்டும். [10]இதற்காகத்தான்
நாம் உழைக்கிறோம். போராடுகிறோம்; தேவ

னில் விசுவாசம் கொள்கிறோம்; அவரே
அனைத்து மக்களின் மீட்பராக இருக்கிறார்.
அதோடு விசுவாசிகளுக்குச் சிறப்பான முறை
யில் மீட்பராக இருக்கிறார்.

11கட்டளையிட்டு இவ் விஷயங்களைப்
போதனை செய். 12நீ இளமையாக இருக்கிறாய்.
ஆனால் உன்னை முக்கியம் அற்றவனாக
நடத்த யாரையும் அனுமதிக்காதே. விசுவாசம்
உடையவர்கள் எப்படி வாழவேண்டும் என்ப
தற்கு முன்மாதிரியாக இரு. வார்த்தையிலும்,
வாழும் வகையிலும், அன்பிலும், விசுவாசத்
திலும், தூய நடத்தையிலும் விசுவாசிகளுக்கு
முன் மாதிரியாக இரு. 13மக்களுக்குத் தொடர்
ந்து வேதவாக்கியங்களை வாசித்துக்காட்டு,.
அவர்களைப் பலப்படுத்து, அவர்களுக்குப்
போதனை செய். நான் வரும் வரை இவற்றைச்
செய்.

14உனக்குக் கிடைத்துள்ள வரத்தைப்
பயன்படுத்த நினைவுகொள். மூப்பராகிய
சபையோர் உன் மேல் கைகளை வைத்த
போது தீர்க்கதரிசனத்தின் மூலம் இந்த வரத்
தைப் பெற்றாய். 15இவற்றைத் தொடர்ந்து செய்.
இவற்றுக்காக உன் வாழ்வைக் கொடு. பிறகு,
உன் பணியின் வளர்ச்சியை அனைவரும்
கண்டுகொள்வர். 16உன் வாழ்விலும் போத
னையைக் குறித்து எச்சரிக்கையாக இரு.
சரியாய் வாழ்ந்து இவற்றைப் போதனை செய்.
அதனால் உன் வாழ்வையும், உன் போதனை
யைக் கேட்பவர்களின் வாழ்வையும் நீ காப்
பாற்றிக்கொள்ள முடியும்.

### மற்றவர்களோடு வாழ்வதற்கான சில விதிமுறைகள்

5 முதியோர்களிடம் கோபமாகப் பேசாதே.
ஆனால் அவர்களைத் தந்தையாக மதித்து
நடத்து. இளைஞர்களை சகோதரர்களாக
மதித்து நடத்து. 2முதிய பெண்களைத் தாயாகக்
கருது. வயது குறைந்த பெண்களைச் சகோதரி
களாகப் நினை. அவர்களை எப்பொழுதும்
நல்ல முறையில் நடத்து.

3உண்மையிலேயே தனியாக உள்ள வித
வைகளைப் பாதுகாத்து மதித்து நட. 4ஆனால்
ஒரு விதவைக்கு பிள்ளைகளோ, பேரப்பிள்
ளைகளோ இருந்தால், இவர்கள் தம் பெற்றோர்
களுக்கு உதவுவதன் மூலம் தன் குடும்பத்தை
மதிக்கவேண்டும் என்பதை முதலில் கற்க
வேண்டும். இவர்கள் இதைச் செய்தால் பெற்
றோர்களுக்கும் மூதாதையர்களுக்கும் நன்றிக்
கடன் செலுத்தியவர்களாவார்கள். இதையே
தேவன் ஒப்புக்கொள்கிறார். 5விதவையாக
இருக்கும் ஒருத்தி தேவனை தன் ஒரே விசுவாச
மாகக் கொண்டிருப்பாள். இரவு பகல் என
அவள் எப்பொழுதும் பிரார்த்தனை செய்
வாள். தேவனிடம் உதவியை வேண்டுவாள்.
6தனக்குச் சந்தோஷம் தரும் செயல்களைச்
செய்வதிலேயே ஒரு விதவை தன் வாழ்வை
கழித்தாளெனில் உயிரோடு இருந்தாலும் இறந்
தவளுக்குச் சமமாவாள். 7அங்குள்ள விசுவாசி
களிடம் தங்கள் குடும்பத்தைக் கவனித்துக்
கொள்ளும்படி கூறு. அதனால் மற்றவர்கள்
அவர்கள் தவறாக நடந்துகொள்கிறார்கள்
என்று கூற மாட்டார்கள். 8ஒருவன் தன் சொந்த
மக்களிடமும் அக்கறை காட்டவேண்டும். அதை
விட முக்கியமாக அவன் தன் சொந்தக் குடும்
பத்தில் அக்கறை காட்ட வேண்டும். ஒருவன்
இதைச் செய்யாவிட்டால் பிறகு அவன் உண்
மையான விசுவாசத்தை கைவிட்டவன் ஆகி
றான். அவன் விசுவாசம் அற்றவனை விட
மோசமானவனாகிறான்.

9உன் விதவைகள் பட்டியலில் சேர்க்கப்பட,
விதவையானவளுக்கு அறுபது வயதுக்கு
மேலாகி இருக்கவேண்டும். அவள் தன் கணவ
னுக்கு உண்மையானவளாக இருந்திருக்க
வேண்டும். 10நல்ல காரியங்களைச் செய்யும்
ஒரு பெண் என அறியப்பட்டிருக்கவேண்டும்.
அதாவது பிள்ளைகளை வளர்த்தல், வீட்டில்
அந்நியர்களை உபசரித்தல், தூயவர்களின்
கால்களைக் கழுவுதல், துன்பப்படுகிறவர்க
ளுக்குத் துணை புரிதல் போன்று தன்
வாழ்க்கை முழுவதும் பலவித நன்மைகளைச்
செய்தல் வேண்டும்.

11அந்த பட்டியலில் இளம் விதவைகளைச்
சேர்க்காதீர்கள். அவர்கள் கிறிஸ்துவுக்குத்
தம்மை ஒப்படைத்தாலும், பலமான காம
ஆசைகளால் அவரை விட்டு வெளியே இழுக்
கப்படுவர். அவர்கள் மீண்டும் திருமணம் செய்
துகொள்ள விரும்பலாம். 12இதற்காகவே அவர்
கள் குற்றவாளியாவார்கள். தாங்கள் முதலில்
வாக்குறுதி கொடுத்தபடி நடந்து கொள்ளாத
தால் குற்றவாளியாவார்கள். 13இவர்கள் வீடு
வீடாகப் போய்த் தங்கள் நேரத்தை வீணாகப்
போக்குவார்கள். அது மட்டும் அல்ல, வீண்
பேச்சு பேசுவார்கள். மேலும் மற்ற மனிதர்க
ளின் வாழ்க்கைகளைப் பற்றிய தகவல்களைத்
தெரிந்து கொள்வதில் ஆர்வமாக இருப்பார்
கள். அவர்கள் மற்றவர்களின் வாழ்க்கை பற்
றிய வதந்திகளையும், எதைச் சொல்லக்
கூடாதோ அவற்றையுமே சொல்வார்கள்.
14ஆகையால் இளம் விதவைகள் மீண்டும் திரு
மணம் செய்து, பிள்ளைகளைப் பெற்று, வீட்
டைக் கவனித்துக் கொள்வார்களாக. இதுவே
அவர்கள் செய்யவேண்டுமென நான் விரும்
புகிறேன். இந்த வழியில் அவர்கள் எதிரிக்கு
விமர்சிக்கும் வாய்ப்பை கொடுக்கமாட்டார்
கள்.

15ஆனால், ஏற்கெனவே சில இளம் வித
வைகள் சாத்தானைப் பின்பற்றத் தொடங்கி
விட்டார்கள்.

16விசுவாசமுள்ள ஒரு பெண்ணின் குடும்
பத்தில் எவரேனும் விதவைகள் இருந்தால்
அவர்கள் இவர்களுக்கு உதவி செய்யவேண்
டும். அவர்கள் கவனிக்கப்பட வேண்டும் என
உதவிகளுக்காக சபையில் சென்று தொந்தரவு
செய்யக்கூடாது. அப்பொழுது குடும்பமே அற்ற
விதவைகளைக் கவனிக்கும் பொறுப்பை
மட்டுமே சபை ஏற்றுக்கொள்ள இயலும்.

17சபைகளை நன்றாக நடத்திச் செல்லும்
மூப்பர்கள் தக்க கௌரவம் பெற வேண்டும்.
பேசுவதன் மூலமும், போதிப்பதன்மூலம்
உழைப்பவர்களாய் இருப்பவர்களே அத்தகு
கௌரவத்தைப் பெறுவர். 18ஏனென்றால்,
"பிணையல் அடிக்கிற மாட்டின் வாயைக்
கட்டாதே. அது உண்ணட்டும்*" என்று வேத
வாக்கியம் கூறுகிறது. உழைக்கிறவனுக்கு
அதற்கேற்ற கூலி கொடுக்கப்படவேண்டும்'*
என்றும் கூறுகிறது.

19மூப்பர்களுக்கு எதிரான குற்றச்சாட்டுக
ளைக் கவனிக்காதே, இரண்டு அல்லது மூன்று
சாட்சிகள் இருந்தால் அதை ஏற்றுக்கொள்.
20பாவம் செய்பவர்களைக் கண்டிக்கவேண்
டும். அதுவும் சபைக்கு முன்னால் மற்றவர்க
ளுக்கும் எச்சரிக்கையாக இருக்கும்படி கண்
டிக்கவேண்டும்.

21தேவனுக்கும், கர்த்தராகிய இயேசு கிறிஸ்
துவுக்கும், தேர்ந்தெடுக்கப்பட்ட தேவ தூதர்க
ளுக்கும் முன்பாக இவற்றை நீ செய்யவேண்
டும் என்று ஆணையிட்டுக் கூறுகிறேன். பார
பட்சத்தோடு ஒன்றும் செய்யாதே. அதைப்
பற்றி ஒவ்வொன்றையும் தெரிந்துகொள்ளும்
முன்பு முடிவு செய்யாதே.

22எவர் மீதும் கைகள் வைக்கும் முன்பு
எச்சரிக்கையோடு யோசி. மற்றவர்கள் செய்
யும் பாவங்களில் பங்கு கொள்ளவேண்டாம்.
உன்னைச் சுத்தம் உள்ளவனாக காத்துக்
கொள்.

23தீமோத்தேயுவே! நீ இதுவரை தண்ணீ
ரையே குடித்து வந்தாய். அதை நிறுத்தி
கொஞ்சம் திராட்சை இரசமும் குடி. அது
உன் வயிற்றுக்கு நல்லது. உனக்கு அடிக்கடி
வரும் வியாதியில் உனக்கு இது உதவக்கூடும்.

24சிலரது பாவங்கள் வெளிப்படையாக எல்
லாருக்கும் தெரியும்படியாக இருக்கும். அவர்
கள் நியாயம் தீர்க்கப்படுவார்கள் என்பதை
அவர்கள் பாவங்களே காட்டுகின்றன. ஆனால்
சிலரது பாவங்களோ தாமதமாகவே வெளிப்ப
டும். 25அவ்வாறே சிலரது நற்செயல்களும்
வெளிப்படையாகவே இருக்கும். அப்படி இல்
லாதவைகளும் மறைந்திருக்க முடியாது.

6 அடிமைகளாய் இருக்கிற அனைவரும்
தங்கள் எஜமானர்களுக்கு மரியாதை காட்
டவேண்டும். அவர்கள் இதனைச் செய்யும்
பொழுது தேவனுடைய பெயரும், நம் போத
னையும் விமர்சிக்கப்படாமல் இருக்கும். 2சில
அடிமைகளின் எஜமானர்கள் விசுவாசம்
உடையவர்களாய் இருப்பார்கள். அதனால்
அவர்கள் இருவரும் சகோதரர்களாய் இருப்
பார்கள். எனினும் அந்த அடிமைகள் தங்கள்
மரியாதையைக் குறைத்துக்கொள்ளக் கூடாது.
அவர்கள் மேலும் சிறப்பான முறையில் தங்
கள் வேலையைத் தங்கள் எஜமானர்களுக்
காகச் செய்யவேண்டும். ஏனென்றால் தாம்
நேசிக்கும் விசுவாசிகளுக்கு அந்த அடிமைகள்
உதவிக்கொண்டும் பயன் விளைவித்துக்
கொண்டும் இருக்கிறார்கள்.

### தவறான போதனையும் உண்மையான செல்வமும்

இக்காரியங்களைச் செய்ய நீ அவர்களுக்கு
இதனைப் போதிக்கவும் உற்சாகப்படுத்தவும்
வேண்டும். 3சிலர் தவறான போதனைகளைச்
செய்து வருகிறார்கள். நமது கர்த்தராகிய
இயேசு கிறிஸ்துவின் உண்மையான போத
னையை அவர்கள் பின்பற்றுவதில்லை. தேவ
னுக்குச் சேவை செய்கிற உண்மையான வழி
யையும் அவர்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்
கள். 4தவறான போதகன் தற்பெருமையை
உடையவன். அவனுக்கு எதுவும் புரியாது.
வாக்குவாதங்களின்மேல் ஒரு நோய் கொண்ட
உற்சாகத்தை உடையவனாக இருக்கிறான்.
அது பொறாமையையும், சண்டையையும்,
அவதூறுகளையும், பொல்லாத ஐயங்களை
யும் உண்டாக்குகின்றன. 5உக்கிரமான தீய
மனம் உடையவர்கள் வெறும் வாக்குவாதங்க
ளையே முடிவில் உருவாக்குகிறார்கள். அவர்
கள் உண்மையைத் தொலைத்துவிட்டார்கள்.
தேவனை சேவிப்பது செல்வந்தனாகும் வழி
என்று அவர்கள் நினைக்கிறார்கள்.

6தன்னிடம் இருப்பதே போதும் என்று
ஒருவன் திருப்தி அடைகிறானெனில் அத்து
டன் அவனுக்குள்ள தேவபக்தியானது மிகுந்த
இலாபமாயிருக்கும், என்பது உண்மை. 7நாம்
இந்த உலகத்துக்கு வரும்போது எதையும் நம்
மோடு கொண்டு வரவில்லை. நாம் இறக்கும்
போதும் எதையும் கொண்டு போகப்போவ
தில்லை. 8எனவே, நம்மிடம் உள்ள உணவு,
ஆடை ஆகியவற்றோடு திருப்தி அடைய
வேண்டும். 9மேலும் செல்வந்தராக விரும்புகிற
வர்கள் சோதனைக்கு உள்ளாகிறார்கள்.
அவர்கள் கண்ணிகளில் மாட்டிக்கொள்கி
றார்கள். முட்டாள்தனமானதும் ஆபத்தானது
மான ஆசைகளை வளர்த்துக்கொள்கிறார்கள்.
அவை அவர்களைப் பாதித்து, அழிக்கும்.
10பண ஆசையானது எல்லாவிதமான பாவங்
களுக்கும் வழி வகுக்கும். சிலர் மேலும்
மேலும் பணத்தை விரும்பி உண்மையான
போதனையை விட்டு விட்டார்கள். அதனால்
தம் துன்பத்துக்குத் தாமே காரணமாகிறார்கள்.

### நினைவுகொள்ளவேண்டிய சில விஷயங்கள்

11நீயோ தேவனுடைய மனிதன். எனவே
நீ இவற்றில் இருந்து விலகி இருக்க வேண்டும்.
சரியான வழியில் வாழ முயற்சி செய். தேவ
னுக்குச் சேவை செய். விசுவாசம், அன்பு,
பொறுமை, சாந்தம் ஆகியவற்றை வைத்துக்
கொள். 12விசுவாசம் வைத்தல் பந்தயத்தில்
ஓடுவது போன்றது. அதில் வெற்றிபெற கடுமை
யாகப் பாடுபடு. நித்தியஜீவனைப் பற்றிக்
கொள். அத்தகைய வாழ்க்கைக்காகவே நீ
அழைக்கப்பட்டாய், அநேக மக்களுக்கு முன்னி

---

**பிணையல் ... உண்ணட்டும்** *உபா.* 25:4

**உழைக்கிற ... வேண்**டும் லூக்கா 10:7

*லையில் கிறிஸ்துவின் பேருண்மையை நீ
அறிக்கை பண்ணியுமிருக்கிறாய். [13]தேவனுக்
கும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கும் முன்
பாக நான் ஒரு ஆணையை இடுகிறேன். பொந்
தியு பிலாத்துவின் முன்னால் நிற்கும்போது
அவர் பேருண்மைக்கு சாட்சியம் வழங்கின
வர். கிறிஸ்து இயேசு ஒருவரே எல்லா
வற்றிற்கும் வாழ்வளிக்கிறார். [14]அதனால் இப்
பொழுது உனக்குக் கூறுகிறேன், உனக்கு
ஆணையிட்டுள்ளபடி செய். நம் கர்த்தராகிய
இயேசு கிறிஸ்து திரும்பி வரும் வரை குற்றம்
இல்லாமலும் பிழை இல்லாமலும் சரியாகச்
செய். [15]தேவன் அதனைச் சரியான நேரத்தில்
நிகழும்படி செய்வார். தேவன் ஆசீர்வதிக்கப்
பட்டவராகவும், ஏக சக்கரவர்த்தியாகவும் இரு
க்கிறார். அவரே அரசர்களுக்கெல்லாம் அரச
ராகவும், கர்த்தர்களுக்கெல்லாம் கர்த்தராகவும்
விளங்குகிறார். [16]அவர் ஒருவரே என்றும்
மரிப்பதில்லை. அவர் யாராலும் அருகில்
நெருங்கி வரமுடியாத ஒளியில் வாழ்கிறார்.
எந்த மனிதனும் அவரை ஒருபோதும் பார்த்த
தில்லை. யாராலும் அவரைப் பார்க்கமுடி
யாது. என்றென்றைக்கும் அவருக்குக் கனமும்
வல்லமையும் உண்டாகுவதாக . ஆமென்.*

*[17]இந்த ஆணைகளைச் செல்வர்களிடம்
கூறு. பெருமிதம் கொள்ளவேண்டாம் என
அவர்களுக்குச் சொல். செல்வத்தின் மீது
விசுவாசம் நிரந்தரமாக வைக்கவேண்டாம்
என்றும், தேவன் மீது விசுவாசம் வைக்
குமாறும் கூறு. செல்வம் விசுவாசிப்பதற்கு
உரியதன்று. ஆனால் தேவன் நம்மை செழிப்
பாகப் பாதுகாக்கிறார். அவற்றை நாம் சந்தோ
ஷமாக அனுபவிக்க அவர் கொடுக்கிறார்.
[18]நல்ல செயல்களைச் செய்யுமாறு செல்வர்
களிடம் கூறு. வள்ளல்களாகவும், பகிர்ந்து
கொள்ள விரும்புகிறவர்களாகவும் இருக்கக்
கூறு. [19]இவற்றைச் செய்வதன் மூலம் அவர்கள்
பரலோகத்தில் ஒரு பொக்கிஷத்தைச் சேமித்து
வைக்கிறார்கள், அது அவர்களுக்குப் பல
மான அஸ்திபாரமாக எதிர்கால வாழ்வைக்
கட்ட உதவியாக இருக்கும். அதனால் உண்
மையான வாழ்வைப் பெறுவர்.*

*[20]தீமோத்தேயுவே, தேவன் உன்னிடம் நம்
பிக்கையுடன் பல நல்ல காரியங்களை தந்தி
ருக்கிறார். அவற்றைப் பாதுகாத்துக்கொள்.
தேவனிடமிருந்து வராத முட்டாள் தனமான
காரியங்களை பேசுகிறவர்களிடமிருந்து
விலகு. உண்மைக்கு எதிராக வாதம் செய்கிற
வர்களிடமிருந்தும் விலகிப் போ. அவர்கள்
‘ஞானம்’ என்று அழைப்பதெல்லாம் தவறான
‘ஞானம்’ ஆகும். [21]சிலர் தங்களிடம் அந்த
‘ஞானம்’ உள்ளதாகக் கூறிக்கொள்கிறார்கள்.
அவர்கள் உண்மையான போதனையில் இரு
ந்து விலகிப்போனார்கள்.*

*தேவனுடைய கிருபை உங்கள் அனைவ
ரோடும் இருப்பதாக!*

# தீமோத்தேயுவுக்கு எழுதிய இரண்டாம் கடிதம்

1 இயேசு கிறிஸ்துவின் அப்போஸ்தலனான
பவுல் எழுதுவது. தேவனின் விருப்பப்
படியே நான் அப்போஸ்தலனானேன். கிறிஸ்து
இயேசுவிலுள்ள வாழ்க்கையின் வாக்குறு
தியைப் பற்றி மக்களிடம் கூறுமாறு தேவன்
என்னை அனுப்பினார். 2தீமோத்தேயுவே! நீ
எனக்குப் பிரியமுள்ள மகனைப் போன்றவன்.
கிருபை, இரக்கம், சமாதானம் ஆகியவற்றை
நீ பிதாவாகிய தேவனாலும் கர்த்தராகிய
இயேசு கிறிஸ்துவினாலும் பெறுவாய் என்று
நம்புகிறேன்.

### நன்றி செலுத்துதலும் உற்சாகமூட்டுதலும்

3இரவிலும் பகலிலும் என் பிரார்த்தனைக
ளில் உன்னை எப்பொழுதும் நினைத்துக்
கொள்ளுகிறேன். என்னுடைய முன்னோர்
சேவைசெய்த தேவன் அவரே. நான் உனக்
காகக் தேவனுக்கு நன்றி செலுத்துகிறேன்.
நான் அறிந்த அளவில் சரியானதை மட்டுமே
செய்கிறேன். 4நீ எனக்காக சிந்திய கண்ணீர்த்
துளிகளை நான் நினைத்துப் பார்க்கிறேன்.
நான் உன்னைக் காண மிகவும் விரும்புகி
றேன். அதனால் நான் முழு மகிழ்ச்சியை
அடைய முடியும். 5நான் உனது உண்மையான
விசுவாசத்தை நினைத்துப் பார்க்கிறேன்.
அத்தகைய விசுவாசம் முதலில் உன் பாட்டி
யான லோவிசாளுக்கும் உன் தாயான ஐனி
க்கேயாளுக்கும் இருந்தது. அவர்களைப்
போன்றே உனக்கும் விசுவாசம் இருக்கிறது
என்று உறுதியாக நம்புகிறேன். 6ஆகவேதான்,
தேவன் உனக்குக் கொடுத்த வரத்தை நீ
நினைத்துப் பார்க்க வேண்டும் என்று விரும்
புகிறேன். நான் எனது கையை உன் மேல்
வைத்தபோதுதான் தேவன் அந்த வரத்தைக்
கொடுத்தார். இப்பொழுது அந்த வரத்தைப்
பயன்படுத்த வேண்டும், அது சிறு தீப்பொறி
எரிந்து பெரு நெருப்பாவதுபோல வளர
வேண்டும் என விரும்புகிறேன். 7அச்சத்தின்
ஆவியை தேவன் நமக்கு தராமல், சக்தியும்,
அன்பும், சுயக்கட்டுப்பாடும் உள்ள ஆவி
யையே தந்திருக்கிறார்.

8எனவே கர்த்தராகிய இயேசுவைப் பற்றி
மக்களிடம் எடுத்துச் சொல்ல வெட்கப்பட
வேண்டாம். என்னைக் குறித்தும், நான் கர்த்
தருக்காகச் சிறையில் இருப்பது குறித்தும்
வெட்கப்பட வேண்டாம். ஆனால் நற்செய்திக்
காக என்னோடு துன்பத்தை ஏற்றுக்கொள்
ளுங்கள். அதற்கான பலத்தைத் தேவன் தருகி
றார். 9தேவன் நம்மைக் காத்து தனது பரிசுத்த
மக்களாக்கினார். இது நமது முயற்சியால் நிகழ்
வதன்று. இது தேவனால் ஆவது. தம்
கிருபையால் நம்மை அழைப்பது அவரது
திட்டமாக இருந்தது. அவர் தனது கிருபையை
இயேசு கிறிஸ்துவின் மூலமாகவே படைப்பு
காலத்திற்கு முன்பிருந்தே வழங்குகிறார். 10அக்
கிருபை நமக்குப் தெளிவானது. நமது இரட்ச
கராகிய இயேசு கிறிஸ்து வந்தபோதுதான்
அக்கிருபை நமக்குப் புலப்படுத்தப்பட்டது.
இயேசு மரணத்தை அழித்து நமக்கெல்லாம்
நித்திய வாழ்வுக்குரிய வழியைக் காட்டினார்.
நற்செய்தியின் மூலமாகவே நமக்கு அவர் நித்
திய வாழ்வைப் பெறுவதற்கான வழியைக்
காட்டினார்.

11அந்த நற்செய்தியைச் சொல்வதற்காக
நான் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறேன். நான்
அவரது அப்போஸ்தலனாகவும், நற்செய்திக்
கான போதகனாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டேன்.
12நற்செய்தியைப் பரப்பிக்கொண்டிருப்பதால்
இப்போது துன்பப்படுத்தப்படுகிறேன். இதற்
காக நான் வெட்கப்படவில்லை. நான் நம்புகிற
இயேசுவைப்பற்றி எனக்குத் தெரியும். என்னி
டத்தில் நம்பி ஒப்படைத்தவற்றை அந்த நாள்
வரைக்கும் காத்துக்கொள்ளும் வல்லமை இயே
சுவுக்கு உண்டு. இதனை நான் உறுதியாக
நம்புகிறேன்.

13என்னிடமிருந்து நீங்கள் கேட்ட உண்மை
யான போதனைகளைப் பின்பற்றுங்கள்.
கிறிஸ்து இயேசுவுக்குள் அன்பும் விசுவாசமும்
கொண்டு அப்போதனைகளைப் பின்பற்றுங்
கள். அப்போதனைகள் நீங்கள் போதிக்க
வேண்டியவற்றைப்பற்றி உங்களுக்குச் சான்
றாகக் காட்டும். 14உங்களிடம் கொடுக்கப்பட்ட
உண்மைகளைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள்.
பரிசுத்த ஆவியானவர் நம்மில் இருக்கிறார்.
அவர் அவ்வுண்மைகளைப் பாதுகாக்க உதவு
வார்.

15ஆசிய நாடுகளில் உள்ள பலர் என்னை
விட்டு விலகி விட்டார்கள் என்பதை நீ அறி
வாய். பிகெல்லும் எர்மொகெனேயும் கூட
என்னை விட்டு விலகி விட்டனர். 16கர்த்தரான
வர் ஒநேசிப்போருவின் வீட்டாருக்குக் கிருபை
காட்டும்படி நான் பிரார்த்தனை செய்கி
றேன். பலமுறை அவன் எனக்கு உதவி
யிருக்கிறான். நான் சிறையில் இருந்தது பற்றி

அவன் வெட்கப்படவில்லை. 17அவன் ரோமு
க்கு வந்தபோது என்னைக் காணும் பொருட்டு
பல இடங்களில் கடைசி வரைக்கும் தேடியிருக்
கிறான். 18ஒநேசிப்போரு அந்த நாளில் கர்த்தரி
டமிருந்து கிருபை பெறவேண்டும் என்று நான்
கர்த்தரிடம் வேண்டுகிறேன். எபேசு நகரில்
அவன் எவ்வகையில் உதவியிருக்கிறான்
என்று உனக்கு நன்றாகவே தெரியும்.

### நம்பிக்கைக்குரிய வீரன்

2 தீமோத்தேயுவே, நீ என் மகனைப் போன்
றவன். இயேசு கிறிஸ்துவிற்குள் நாம்
கொண்டுள்ள கிருபையில் உறுதியாக இரு.
2நீ கேட்ட என் போதனைகள் மற்றவர்களுக்கும்
கூட போதிக்கப்பட வேண்டும். நீ விசுவாசம்
வைத்திருக்கிற மக்களிடம் எல்லாம் அதனைப்
போதிப்பாயாக. பிறகு அவர்களாலும் அவற்
றை ஏனைய மக்களுக்குப் போதிக்க முடியும்.
3நாம் அனுபவிக்க நேரும் துன்பங்களைப்
பகிர்ந்து கொள்வோம். அவற்றை ஒரு உண
மையான போர் வீரனைப்போன்று ஏற்றுக்
கொள்வோம்.4போர் வீரனாயிருக்கும் ஒருவன்
எப்பொழுதும் தனது மேலதிகாரியைத் திருப்
திப்படுத்தவே விரும்புவான். எனவே அவன்
மற்றவர்களைப் போன்று தன் பொழுதை
வேறுவகையில் போக்கமாட்டான். 5விதிமுறை
களின்படி போட்டியிடாமல் எந்த விளை
யாட்டு வீரனாலும் வெற்றி கிரீடத்தை அடைய
முடியாது. 6பாடு பட்டு விளைய வைக்கிற
விவசாயியே, விளைச்சலின் முதல்பகுதி
உணவை உண்பதற்குத் தகுதியானவன். 7நான்
சொல்லிக்கொண்டிருக்கிற விஷயங்களைப்
பற்றி எண்ணிப்பார். இவை பற்றிய முழுமை
யான அறிவை கர்த்தர் உனக்குத் தருவார்.
8இயேசு கிறிஸ்துவை ஞாபகப்படுத்திக் கொள்.
அவர் தாவீதின் குடும்பத்திலிருந்து வந்தவர்.
இறந்த பிறகு அவர் மரணத்திலிருந்து எழுந்
தார். இதுதான் நான் சொல்லும் நற்செய்தி.
9நான் இதனைச் சொல்வதால் பலவித துன்
பங்களுக்கு உட்படுகிறேன். நான் ஒரு குற்ற
வாளியைப் போல சங்கிலிகளால் பிணைத்
துக் கட்டப்பட்டிருக்கிறேன். ஆனால் தேவனு
டைய போதனைகள் கட்டப்படவில்லை.
10ஆகையால் நான் பொறுமையோடு அனை
த்து துன்பங்களையும் ஏற்றுக்கொள்கிறேன்.
தேவனால் தேர்ந்தெடுக்கப்பட அனைவருக்கும்
உதவும்பொருட்டே நான் இதனைச் செய்தேன்.
இதனால் மக்கள் இயேசு கிறிஸ்துவில் இரட்
சிப்பைப் பெறுவார்கள். அதனால் முடிவற்ற
மகிமையைப்பெறுவர்.

11 இந்தப் போதனை உண்மையானது: நாம்
இயேசுவோடு மரணமடைந்திருந்தால்
பிறகு நாமும் அவரோடு வாழ்வோம்.
12 நாம் துன்பங்களை ஏற்றுக்கொண்டால்
பிறகு அவரோடு ஆட்சியும் செய்வோம்.
நாம் அவரை ஏற்றுக்கொள்ள மறுத்தால்
பிறகு அவரும் நம்மை ஏற்க மறுப்பார்.
13 நாம் உண்மையுள்ளவராக இல்லாதிருந்
தாலும் அவர் தொடர்ந்து உண்மைக்
குரியவராக இருப்பார். ஏனென்றால்
அவர் தனக்குத்தானே உண்மையற்
றவராக இருக்க முடியாது.

### அங்கீகரிக்கப்பட்ட வேலையாள்

14மக்களிடம் இவற்றைத் தொடர்ந்து சொல்
லுங்கள். தேவையற்ற வாக்குவாதங்களில்
ஈடுபடாதபடி தேவனுக்கு முன்பு அவர்களுக்கு
எச்சரிக்கை செய்யுங்கள். அது எவருக்கும்
உதவாது. அதைக் கவனிப்பவர்களையும்
அழித்து விடும். 15தேவன் உங்களை ஏற்றுக்
கொள்கிறவகையில் அவரிடம் உங்களை ஒப்ப
டைக்க உங்களால் முடிந்த நல்லதைச் செய்யுங்
கள். தன் வேலையைப்பற்றி வெட்கப்படாத
வேலையாளாக இருங்கள். கிறிஸ்துவின் உண்
மையான போதனைகளைச் சரியான வழியில்
போதியுங்கள். 16தேவனிடமிருந்து பெறப்ப
டாத, பயன் இல்லாத காரியங்களைப் பேசு
வோரிடமிருந்து விலகி இருங்கள். அவ்வகை
பேச்சுகள் ஒருவனை மேலும் தேவனுக்கு
எதிராக்கும். 17அவர்களின் தீய போதனைகள்
சரீரத்துக்குள் நோய் பரவுவதுபோன்று பர
வும். இமெநேயுவும், பிலேத்துவும் இத்தகைய
வர்களே. 18அவர்களின் போதனைகள் உண்
மையிலிருந்து வெகு தொலைவில் இருக்கின்
றன. மரணத்திலிருந்து எழுங்காலம் ஏற்கெ
னவே நடந்து முடிந்துபோனது என்று அவர்
கள் போதிக்கிறார்கள். அந்த இருவரும் சில
மனிதர்களின் விசுவாசத்தை அழித்துவிட்டார்
கள். 19ஆனால் தேவனின் பலமான அஸ்திபா
ரம் அப்படியே தொடர்ந்து உள்ளது. அஸ்திபா
ரத்தின்மீது, 'கர்த்தருக்குத் தன்னைச் சேர்ந்த
வர்கள் எவரென்று தெரியும். கர்த்தரில் விசு
வாசம் கொள்கிற ஒவ்வொருவரும் தவறு செய்
வதை நிறுத்திக்கொள்ள வேண்டும்"* என்
னும் வாசகம் எழுதப்பட்டுள்ளது. 20ஒரு பெரிய
வீட்டில் பொன்னாலும், வெள்ளியாலும் செய்
யப்பட்ட பொருட்கள் உள்ளன. அதோடு மரத்
தாலும், மண்ணாலும் செய்யப்பட்ட பொருட்க
ளும் உள்ளன. சில பொருட்கள் சில விசேஷ
நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்படுகின்
றன. மற்றவை பிற காரியங்களுக்காக பயன்
படுத்தும் பொருட்டு உள்ளன. 21எவனொரு
வன் தீய காரியங்களில் ஈடுபடாமல் விலகி
தன்னைத் தானே சுத்தமாக வைத்துக்கொள்கி
றானோ அவன் சிறப்பான நோக்கங்களுக்
காகப் பயன்படுத்தப்படுவான். அவன் பரிசுத்த
மாக்கப்பட்டு எஜமானனுக்குப் பயன்படுபவ
னாக இருப்பான். அவன் எவ்வித நற்பணி
செய்யவும் தயாராக இருப்பான். 22ஓர் இளை
ஞன் செய்யவிரும்புகிற தீய செயல்களில்
இருந்து விலகி இருங்கள். சரியான வழியில்
வாழவும், விசுவாசம், அன்பு, சமாதானம் ஆகி
யவற்றைப் பெறவும் கடுமையாக முயற்சியுங்

---

**கர்த்தருக்கு ... வேண்டும்** எண். 16:5

கள். 23இவற்றை நீங்கள் சுத்தமான இதயம்
உள்ளவர்களோடும் கர்த்தரிடம் நம்பிக்கை
உள்ளவர்களோடும் சேர்ந்து செய்யுங்கள். முட்
டாள்தனமான அறிவற்ற விவாதங்களில் இருந்
தும் விலகி நில்லுங்கள். இப்படிப்பட்ட விவா
தங்கள் வளர்ந்து பெரிதாகும் என்பதை நீங்கள்
அறிவீர்கள். 24கர்த்தருடைய ஊழியன் சண்
டைக்காரனாக இருக்கக் கூடாது. அவன் எல்
லோரிடமும் இரக்கத்துடன் இருத்தல்வேண்டும்.
அவன் நல்ல போதகனாகவும் இருக்கவேண்
டும். அவன் பொறுமையுள்ளவனாக இருக்க
வேண்டும். 25தன் போதனையை எதிர்க்கிறவர்
களோடு கர்த்தரின் ஊழியன் மென்மையாகப்
பேச வேண்டும். அவர்களும் உண்மையை
ஒப்புக்கொள்ளும் வகையில் தேவன் அவர்க
ளின் மனத்தையும் மாற்றுவார். 26பிசாசான
வன் இத்தகைய மக்களை வலை போட்டுப்
பிடித்து தன் விருப்பப்படி செயல்பட வைப்
பான். எனினும் அவர்கள் விழித்தெழுந்து,
பிசாசு தன்னைப் பயன்படுத்துவதை அறிந்து,
தம்மைப் பிசாசின் வலைக்குள் இருந்து விடு
வித்துக்கொள்வர்.

## இறுதி நாட்கள்

3 இதை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள்.
இறுதி நாட்களில் ஏராளமான தொந்தரவு
கள் நேரும். 2அந்தக் காலங்களில் மக்கள் தம்
மையும் செல்வத்தையும் மட்டுமே விரும்புவர்.
அவர்கள் பெருமிதத்தோடும், செருக்கோடும்
இருப்பார்கள். அவர்கள் மக்களைப்பற்றி தீய
வற்றையே கூறுவர். பிள்ளைகள் பெற்றோ
ருக்கு அடிபணிய மாட்டார்கள். அவர்கள் நன்
றியில்லாத வர்களாவர். இரக்கமற்றவர்களாயி
ருப்பர். 3அடுத்தவர்களிடம் அன்பற்றவர்க
ளாய் மாறி விடுவார்கள். அவர்கள் மற்றவர்
களை மன்னிக்க மறுப்பர். அவர்கள் தீயவற்
றையே பேசுவார்கள். அவர்கள் சுயக்கட்டுப்
பாடு இல்லாமல் இருப்பர். கொடிய வன்முறை
யாளர்களாய் மாறி நல்லவற்றை வெறுக்கத்
தொடங்குவர். 4இறுதி நாட்களில் மக்கள் தம்
நண்பர்களுக்கே எதிராகிப் போவர். அவர்கள்
சிந்தனையின்றி முட்டாள்தனமாகச் செயல்படு
வர். அவர்கள் வீண்பெருமை கொண்டவர்க
ளாகவும் துரோகிகளாகவும் இருப்பர். அவர்
கள் இன்பத்தை விரும்பி, தேவனை நேசிக்
காதவர்களாக இருப்பர். 5அவர்கள் தேவ
னுக்குச் சேவை செய்வதுபோலத் தொடர்ந்து
நடிப்பார்கள். ஆனால் அவர்கள் வாழும்
வழியோ, தேவனுக்கு அவர்கள் உண்மையி
லேயே சேவை செய்யவில்லை என்பதைக்
காட்டிக் கொடுத்து விடும். தீமோத்தேயுவே
இவர்களிடமிருந்து விலகி இரு. 6சிலர் சில
வீடுகளுக்குப் போய் அங்குள்ள பலவீனமும்
பாவமும் உள்ள பெண்களை அடைவர். அப்
பெண்கள் பாவம் நிறைந்தவர்கள். அவர்கள்
செய்யவிரும்பிய பலதீய காரியங்களே அப்
பெண்களை பாவத்தில் ஈடுபடத் தூண்டும்.
7அப்பெண்கள் எப்போதும் புதிய போதனை
களை விரும்புவர். ஆனால் உண்மை பற்றிய
அறிவைப்பெற முடியாதவர்களாக இருப்பர்.
8யந்நேயையும், யம்பிரேயையும் நினைவுபடுத்
திக்கொள்ளுங்கள். அவர்கள் மோசேக்கு எதி
ரானவர்கள். இவர்களும் அவர்களைப் போன்
றே உண்மைக்கு எதிரானவர்கள். அவர்கள்
குழம்பிய எண்ணமுடையவர்கள். அவர்கள்
உண்மையைப் பற்றிய அறிவை அடைய
தவறி விட்டார்கள். 9ஆனால் அவர்கள் தம்
செயலில் மேற்கொண்டு எந்த வளர்ச்சியையும்
அடையமாட்டார்கள். அவர்களின் முட்டாள்த
னத்தை அனைவரும் பார்ப்பர். இதுவே யந்நே
யுக்கும், யம்பிரேயுக்கும் எற்பட்டது.

## இறுதி அறிவுரைகள்

10ஆனால் உனக்கு என்னைப்பற்றி எல்
லாம் தெரியும். நான் போதனை செய்வதுபற்றி
யும் என் வாழ்க்கைமுறை பற்றியும் நீ அறி
வாய். என் வாழ்வின் குறிக்கோள்பற்றியும்
நீ அறிவாய். எனது விசுவாசம், பொறுமை,
அன்பு ஆகியவற்றையும் நீ அறிவாய். நான்
முயற்சியைக் கைவிடமாட்டேன் என்பதையும்
அறிவாய். 11எனது உபத்திரவங்களையும்
நான் பட்ட துன்பங்களையும் பற்றி நீ அறிந்தி
ருக்கிறாய். அந்தியோகியா, இக்கோனியா,
லீஸ்திரா ஆகிய நகரங்களில் எனக்கு ஏற்பட்ட
வற்றைப் பற்றியும் நீ அறிவாய். ஆனால்
நான் அனுபவித்த எல்லா உபத்திரவங்
களிலிருந்தும் கர்த்தர் என்னைக் காப்பாற்றி
விட்டார். 12தேவன் விரும்புகிறபடி இயேசு
கிறிஸ்துவின் வழியில் செல்கிற எவருமே
இத்தகைய துன்பங்களைக் கண்டிப்பாக அனு
பவிக்கவேண்டி இருக்கும். 13தீயவர்களும்,
பிறரை ஏமாற்றுகிறவர்களும் மேலும் மேலும்
கெட்டுப்போவார்கள். அவர்கள் மற்றவர்களை
முட்டாளாக்குவார்கள். ஆனால் அதே சமயத்
தில் தம்மைத் தாமே முட்டாளாக்கிக் கொள்
வார்கள். 14நீ அறிந்த போதனைகளின்படி
தொடர்ந்து செல். அவை உண்மையான
போதனைகள் என்பதை அறிந்திருக்கிறாய்.
ஏனெனில் அவ்விஷயங்களை உனக்குப்
போதித்தவர்கள் மீது நம்பிக்கை வைக்கமுடி
யும் என்பதை நீ அறிவாய். 15நீ குழந்தைப்
பருவம் முதலாக பரிசுத்த வேதவாக்கியங்
களை அறிந்திருக்கிறாய். அவை உன்னை
ஞானவானாக மாற்றும் வல்லமைகொண்டது.
அந்த ஞானம் உனக்கு இயேசு கிறிஸ்துவில்
கொண்ட விசுவாசம் மூலம் இரட்சிப்பைப்பெற
வழிகாட்டும். 16அனைத்து வேதவாக்கியங்க
ளும் தேவனால் கொடுக்கப்பட்டவை. இவை
போதிக்கப் பயன்படும், வாழ்வில் தவறு
செய்கின்றவர்களுக்கு வழிகாட்டும். இது தவறு
களைத் திருத்தி நல் வழியில் வாழத் துணை
செய்யும். 17வேதவாக்கியங்களைப் பயன்
படுத்தி, தேவனுக்குச் சேவைசெய்கிறவன்,
ஆயத்தமுள்ளவனாகவும், ஒவ்வொரு நல்ல
வேலைக்கும் தேவையான அனைத்தையும்
உடையவனாகவும் இருப்பான்.

4 தேவனுக்கும் இயேசு கிறிஸ்துவுக்கும்
முன்னால் உனக்கு ஒரு கட்டளையை இடு
கிறேன். வாழ்கிறவர்கள் மத்தியிலும் இறந்த
வர்கள் மத்தியிலும், நியாயம் தீர்ப்பவர்
இயேசு ஒருவரே. இயேசுவுக்கென்று ஒரு
இராஜ்யம் உண்டு. அவர் மீண்டும் வருவார்.
எனவே நான் இந்த கட்டளையை வழங்குகி
றேன். 2மக்களிடம் நற்செய்தியைக் கூற எப்பொ
ழுதும் தயாராக இரு. மக்களிடம் அவர்கள்
செய்யவேண்டியவற்றைச் சொல்லு. அவர்கள்
தவறானவற்றைச் செய்யும்போது எடுத்துச்
சொல்லி தடுத்து நிறுத்து. நல்லதைச் செய்யும்
போது உற்சாகப்படுத்து. இவற்றை பொறுமை
யுடனும் கவனத்துடனும் போதி. 3மக்கள் உண்
மையான போதனைகளைக் கவனிக்காத
காலம் வரும். தம் ஒவ்வொரு விசித்திர விருப்
பத்தையும் சந்தோஷப்படுத்தும் ஏராளமான
போதகர்களை சேர்த்துக்கொள்வார்கள். அவர்
களுக்கு இது விருப்பமாக இருக்கும். மக்கள்
கேட்க விரும்புவதையே அவர்கள் கூறுவர்.
4மக்கள் உண்மையைக் கேட்பதை நிறுத்தி
விடுவர். அவர்கள் பொய்க்கதைகளைப்
போதிப்பவர்களைப் பின்பற்ற ஆரம்பித்துவி
டுவர். 5ஆனால் நீ எப்பொழுதும் உன்னைக்
கட்டுப்படுத்திக் கொள்ளவேண்டும். துன்பம்
வந்தாலும் அவற்றை ஏற்றுக்கொள்க. நற்
செய்தியைச் சொல்லும் வேலையைச் செய்க.
தேவனின் ஊழியனாக அனைத்து கடமைக
ளையும் செய்க.

6என் வாழ்க்கையை தேவனுக்கே காணிக்
கையாகத் தந்துவிட்டேன். இங்கே என் வாழ்வு
முடியும் காலம் நெருங்கி விட்டது. 7நான் நல்ல
போரிலே போராடியிருக்கிறேன். நான் பந்த
யத்தை முடித்து விட்டேன். நான் விசுவா
சத்தைப் பாதுகாத்திருக்கிறேன். 8இப்பொழுது
எனக்காக ஒரு கிரீடம் காத்திருக்கிறது. அந்த
நாளில் தேவன் என்னிடம் இதைக் கொடுப்
பார். கர்த்தரே நியாயம் தீர்க்கிறவர். அவர்
சரியாகச் செய்வார். அந்த நாளில் அவர்
எனக்கு கிரீடத்தைத் தருவார். அவரது வரு
கையை விரும்பி, அவருக்காகவே காத்திருக்
கிற அனைவருக்கும் அவர் கிரீடத்தைத் தரு
வார்.

### தனிப்பட்ட வார்த்தைகள்

9உன்னால் எவ்வளவு விரைவில் என்னி
டம் வர இயலுமோ அவ்வளவு விரைவில்
வர முயற்சி செய். 10தேமா இந்த உலகை
மிகு தியாக நேசித்தான். அதனாலேயே அவன்
என்னைவிட்டுப் போனான். அவன் தெசலோ
னிக்கே நகரத்துக்குப் போனான். கிரேஸ்கெ
கலாத்தியாவுக்குப் போனான். தீத்து தல்மாத்தி
யாவுக்குப் போனான். 11லூக்கா மட்டுமே என்
னோடு இருக்கிறான். நீ வரும்போது உன்
னோடு மாற்குவையும் அழைத்துவா. இங்கே
அவன் எனது பணிக்கு உதவியாக இருப்
பான். 12நான் தீகிக்குவை எபேசுவுக்கு அனுப்
பினேன்.

13நான் துரோவாவில் இருந்தபோது எனது
மேலங்கியை கார்ப்புவிடம் விட்டுவிட்டு வந்
தேன். நீ வரும்போது அதை எடுத்து வா.
எனது புத்தகங்களையும் எடுத்து வா. குறிப்
பாக தோலால் ஆன என் புத்தகச்சுருளை
எடுத்துவா. அவையே எனக்கு மிகவும்
தேவைப்படும் ஒன்றாகும். 14கொல்லனாகிய
அலெக்சாண்டர் எனக்கு எதிராகப் பல தீய
செயல்களைச் செய்தான். அவன் செய்த
செயல்களுக்குக் கர்த்தர் அவனைத் தண்டிப்
பார். 15அவன் உன்னையும் துன்புறுத்தாதபடி
பார்த்துக்கொள். அவன் நம் போதனைகளை
மோசமாக எதிர்த்தான்.

16முதல் முறையாக நானே என்னைத் தற்
காத்துக்கொண்டேன். எவரும் எனக்கு உதவ
வில்லை. எல்லோரும் விலகி விட்டனர். அவர்
களை மன்னிக்குமாறு தேவனிடம் வேண்டுகி
றேன். 17ஆனால் கர்த்தர் என்னோடு இருந்தார்.
அவர் எனக்குப் பலம் தந்தார். இவ்வகையில்
நற்செய்தியைப் போதிக்கும் என் வேலை முழு
மையாக நடைபெறும். யூதர் அல்லாதவர்கள்
அனைவரும் நற்செய்தியைக் கேட்கவேண்டும்
என்று கர்த்தரும் விரும்பினார். நான் சிங்கத்
தின் (எதிரியின்) வாயில் விழாமல் காப்பாற்
றப்பட்டேன். 18எவராவது என்னை அழிக்க
முயன்றால் கர்த்தர் என்னைக் காப்பாற்று
வார். அவர் பரலோக இராஜ்யத்திற்கு பாது
காப்பாகக் கொண்டுபோய் சேர்ப்பார். கர்த்த
ருக்கு எல்லாக் காலங்களிலும் மகிமை உண்
டாவதாக.

### இறுதி வாழ்த்துக்கள்

19பிரிஸ்கில்லாளுக்கும், ஆக்கில்லாவுக்கும்,
ஒநேசிப்போரின் வீட்டாருக்கும் என் வாழ்த்துக்
களைக் கூறு. 20கொரிந்து நகரில் எரஸ்து
இருந்துவிட்டான். மிலேத்துவில் துரோப்பீ
முவை நோயாளியாக விட்டுவிட்டு வந்தேன்.
21குளிர் காலத்துக்கு முன்னால் நீ வந்து சேரு
மாறு கடும் முயற்சி எடுத்துக்கொள். ஐபூலு
வும், புதேஞ்சும், லீனுவும், கலவுதியாளும்
கிறிஸ்துவில் உள்ள எல்லா சகோதரர்களும்
உன்னை வாழ்த்துகின்றனர்.

22உன் ஆவியோடுகூட கர்த்தர் இருப்பாராக.
அவரது கிருபை உங்களோடு இருப்பதாக.

# தீத்துவுக்கு எழுதிய கடிதம்

1 தேவனுடைய ஒரு ஊழியனும், இயேசு
கிறிஸ்துவின் அப்போஸ்தலனுமான பவுல்
எழுதிக்கொள்வது. தேவனால் தேர்ந்தெடுக்கப்
பட்ட மக்களின் விசுவாசத்துக்கு உதவும் பொ
ருட்டு நான் அனுப்பப்பட்டேன். மக்கள் உண்
மையை அறிந்துகொள்ள உதவுவதற்கே நான்
அனுப்பப்பட்டேன். எவ்வாறு தேவனுக்குச்
சேவை செய்ய வேண்டும் என்பதை அந்த
உண்மை நமக்குக் காட்டுகிறது. 2அந்த விசு
வாசமும் அறிவும் நித்திய வாழ்வுக்கான
நம்பிக்கையின் மூலமே வருகின்றது. அவ்
வாழ்க்கையை நமக்குத் தருவதாக தேவன்
வாக்குறுதி அளித்திருக்கிறார். தேவன் பொய்
சொல்வதில்லை. 3சரியான நேரத்தில் உலகம்
அவ்வாழ்வை அறிந்துகொள்ளுமாறு தேவன்
செய்தார். தேவன் தம் போதனைகள் மூலம்
இதனைச் செய்தார். அப்பணியில் என்னை
நம்பியிருக்கிறார். அவற்றை நான் போதித்து
வருகிறேன். ஏனென்றால், நமது இரட்சகராக
இருக்கிற தேவன் எனக்குக் கட்டளையிட்டிருக்
கிறார். 4தீத்துவுக்கு எழுதிக்கொள்வது. நாம்
ஒன் றாகப் பகிர்ந்துகொள்கிற விசுவாசத்தில்
நீ எனக்கு உண்மையான மகனைப் போன்ற
வன். கிருபையும், சமாதானமும் பிதாவாகிய
தேவனிடமிருந்தும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்
துவிடமிருந்தும் உண்டாவதாக.

### கிரேத்தாவில் தீத்துவின் பணி

5இன்னும் செய்யவேண்டிய பல செயல்
களை நீ செய்யும்பொருட்டும் உன்னை நான்
கிரேத்தாவில் ஏற்கெனவே உன்னிடம் சொன்
னபடி ஒவ்வொரு நகரத்திலும் மூப்பர்களை
நியமிக்கும் பொருட்டும் உன்னை அங்கே
விட்டுவந்தேன். 6மூப்பராக இருக்கிறவன்
எந்தத் தவறுகளையும் செய்யாத குற்றமற்றவ
னாக இருக்க வேண்டும். அவன் ஒரே ஒரு
மனைவியை உடையவனாக இருக்கவேண்
டும். அவனது பிள்ளைகள் விசுவாசிகளாக
இருக்க வேண்டும். கொடுமைக்காரர்களாக
வும், கீழ்ப்படியாதவர்களாகவும் அவர்கள்
இருக்கக் கூடாது. 7ஒரு மூப்பர் தேவனுடைய
பணியை கவனிக்கும் கடமையை உடையவர்.
எனவே, அவருக்குத் தவறு செய்தோம் என்ற
குற்ற உணர்வு இருக்கக்கூடாது. தற்பெருமை
யும், சுயநலமும், முன்கோபமும் இல்லாதவராக
இருக்கவேண்டும். அவர் குடிகாரனாக இருக்
கக்கூடாது. சண்டைப் பிரியனாக இருக்கக்
கூடாது. பிறரை ஏமாற்றிச் செல்வம் சேர்ப்ப
வராகவும் இருக்க கூடாது. 8தம் வீட்டில் அந்நிய
மக்களை வரவேற்று உபசரிக்கிறவராகவும்,
நல்லவற்றின் மீது அன்புடையவராகவும் மூப்
பர்கள் இருக்கவேண்டும். ஞானமும், நேர்மையு
மாய் வாழ்பவராகவும், தூய்மையும், சுய கட்
டுப்பாடும் உடையவராகவும் அவர் இருக்க
வேண்டும். 9நாம் போதிக்கின்றவற்றை மூப்பர்
உண்மையிலேயே பின்பற்றுபவராக இருக்க
வேண்டும். உண்மையான போதனையின்
மூலம் மக்களை உற்சாகப்படுத்த முடிந்தவராக
அவர் இருக்கவேண்டும். உண்மையான போத
னைகளுக்கு எதிரானவர்களை அவர்கள்
எங்கே தவறு செய்கிறார்கள் என்பதை
நிரூபிக்கும் வல்லமையும் வேண்டும்.

10பலர் பணிய மறுக்கிறார்கள். அவர்கள்
வீணான வார்த்தைகளைப் பேசி மக்களைத்
தவறான வழியில் நடத்திச் செல்கிறார்கள்.
குறிப்பாக யூதரல்லாதவர்கள் எல்லாரும்
விருத்தசேதனம் செய்யப்பட வேண்டுமென்று
சொல்கிற யூதர்களை நான் குறிப்பிடுகிறேன்.
11இத்தகையவர்களின் பேச்சு தவறானது என
மக்களுக்குச் சுட்டிக்காட்டும் திறமையுடையவ
ராக மூப்பர் இருத்தல்வேண்டும். பயனற்ற
இத்தகு பேச்சுக்களைப் பேசுவதை நிறுத்த
வேண்டும். எதைப் போதிக்கக்கூடாதோ அதை
யெல்லாம் போதித்து எல்லாக் குடும்பங்களை
யும் அவர்கள் அழிக்கிறார்கள். மக்களை ஏமா
ற்றிச் செல்வம் சேர்க்கவே அவர்கள் இவ்வாறு
போதிக்கிறார்கள். 12கிரேத்தாவில் வசிக்கும்
அவர்களின் சொந்த தீர்க்கதரிசி ஒருவர் கூட,
‘கிரேத்தா மக்கள் பொய்யர்கள், கெட்ட மிருகங்
கள். பெருவயிற்றுச் சோம்பேறிகள்’ என்று
கூறி இருக்கிறார். 13அந்தத் தீர்க்கதரிசி சொன்
னதெல்லாம் உண்மைதான். எனவே அவர்கள்
தவறானவர்கள் என்று கூறு. அவர்களிடம்
நீ கண்டிப்பாக இரு. பிறகே அவர்கள் விசு
வாசத்தில் பலம் பெறுவர். 14இவ்விதம் யூதக்
கதைகளை கவனித்துக் கேட்பதை அவர்கள்
நிறுத்துவார்கள். உண்மையைப் ஏற்றுக்
கொள்ள மறுக்கிற அவர்களின் கட்டளைகளை
யும் பின்பற்றுவதையும் நிறுத்துவார்கள்.
15தூய்மையா னவர்களுக்கு அனைத்தும் தூய்
மையாக இருக்கும். பாவம் நிறைந்தவர்களுக்
கும், நம்பிக்கை அற்றவர்களுக்கும் எதுவும்
தூய்மையாக இராது. உண்மையில் அவர்
களின் எண்ணங்கள் பாவம் உடையதாகும்.
அவர்களின் மனசாட்சி அழிக்கப்பட்டது.
16தேவனை அறிந்ததாக அவர்கள் கூறுகிறார்

கள். ஆனால் அவர்களின் செயல்களைப் பார்த்
தால் அவர்கள் தேவனை ஏற்றுக்கொள்ளாதது
தெரியும். அவர்கள் பயங்கரமானவர்கள்.
அவர்கள் அடக்கமில்லாதவர்கள், அவர்களால்
நன்மை செய்ய இயலாது.

### உண்மையான போதனையைப் பின் பற்றுதல்

2 பின்பற்ற வேண்டிய உண்மையான
போதனையை நீ மக்களுக்குக் கூற வேண்
டும். 2முதியவர்கள் சுயக் கட்டுப்பாடும், கௌர
வமும், ஞானமும் உடையவர்களாக இருக்க
போதனை செய். அவர்கள் விசுவாசத்திலும்
அன்பிலும், பொறுமையிலும் உறுதி உடை
யவர்களாக இருக்கவேண்டும்.
3மற்றும் வாழும் முறையில் பரிசுத்தமாய்
இருக்கும்பொருட்டு முதிய பெண்களிடம் போத
னை செய். மற்றவர்களை எதிர்த்து எதையும்
பேசவேண்டாம் என்றும், குடிப்பழக்கத்துக்கு
அடிமை ஆக வேண்டாம் என்றும் சொல்.
அப்பெண்கள் நல்லதைப் போதிக்கவேண்டும்.
4அவ்வழியில், அவர்கள் இளம் பெண்
களுக்குக் கணவன் மீதும் பிள்ளைகள் மீதும்
அன்பு கொள்ளுமாறு அறிவுறுத்த முடியும்.
5அவர்களுக்கு ஞானத்தோடும், பரிசுத்தத்தோ
டும் இருக்கும்படியும், வீட்டைப் பராமரித்தல்,
கருணை, கணவனுக்குக் கீழ்ப்படிதல் போன்ற
வற்றையும் அவர்கள் கற்பிக்க முடியும். பிறகு
தேவன் நமக்குத் தந்த போதனைகளைப் பற்றி
எவரும் விமர்சிக்க முடியாது.
6அந்தப்படியே இளைஞர்களையும் ஞான
மாயிருக்கும்படி கூறு. 7இளைஞர்களுக்கு
முன்மாதிரியாக ஒவ்வொரு விதத்திலும் நல்ல
செயல்களைச் செய்யவேண்டும். நேர்மையோ
டும் அக்கறையோடும் உன் போதனைகள்
இருக்கவேண்டும். 8பேசும்போது உண்மை
யையே பேசு. அதனால் எவரும் உன்னை
விமர்சிக்க முடியாது. நமக்கு எதிராக எதை
யும் தவறாகச் சொல்ல முடியாத நிலையில்
நம்மை எதிர்த்துப் பேச வரும் ஒவ்வொரு
வரும் வெட்கப்படுவர். 9அடிமைகளுக்கும்
அறிவுரை கூறு. அவர்கள் எப்பொழுதும்
தங்கள் எஜமானர்களுக்குக் கீழ்ப்படிய
வேண்டும். அவர்கள் தங்கள் எஜமானர்
களுக்கு விருப்பமானதையே செய்யவேண்
டும். அவர்கள் எதிர்வாதம் செய்யக் கூடாது.
10அவர்கள் எஜமானர்களுக்கு உரியதைத்
திருடக்கூடாது. அவர்கள் தம் நடத்தையின்
மூலம் முழுக்க முழுக்க தாங்கள் நம்பிக்
கைக்குத் தகுதியானவர்கள் என்பதைக் காட்ட
வேண்டும். நமது இரட்சகராகிய தேவனுடைய
போதனைகள் நல்லவை எனப் புலப்படும்படி
அவர்கள் இப்படி நடந்துகொள்ள வேண்டும்.
11நாம் வாழ வேண்டிய வழி இது தான்.
ஏனென்றால் தேவனுடைய கிருபை வந்திருக்
கிறது. அது அனைவரையும் இரட்சிக்கும்.
நமக்கும் அது தரப்பட்டிருக்கிறது. 12தேவ
னுக்கு எதிராக வாழாமல் இருக்கவும், உலகம்
விரும்புகிற தீய காரியங்களைச் செய்யாமல்
இருக்கவும் அக்கருணை ஞானத்தையும்,
நீதியையும், போதிக்கிறது. தேவபக்தியும்
உடையவர்களாக இவ்வுலகில் வாழ அது
கற்றுத்தருகிறது. 13நமது மகா தேவனும்,
இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்துவின் வரு
கைக்கு காத்திருக்கும்போது அவ்விதமாய்
நாம் வாழவேண்டும். அவரே நமது பெரும்
நம்பிக்கை. அவர் மகிமையுடன் வருவார்.
14நமக்காக அவர் தன்னையே தந்தார். அக்
கிரமங்களிலிருந்தும் நம்மை விடுவிக்க அவர்
இறந்தார். நற்செயல்களை எப்பொழுதும்
செய்ய ஆர்வமாக இருக்கும் அவருக்குச் சொந்
தமான மக்களாகிய நம்மைப் பரிசுத்த மனிதர்
களாக்க அவர் இறந்தார். 15மக்களிடம் இவற்
றைக் கூறு. உனக்கு முழு அதிகாரம் உண்டு.
அந்த அதிகாரத்தால் மக்களைப் பலப்படுத்து.
அவர்கள் என்ன செய்யவேண்டும் என்று
கூறு. நீ முக்கியமற்றவன் என மற்றவர்கள்
உன்னை நடத்தும் அளவுக்கு எவரையும் அனு
மதிக்காதே.

### வாழ்வதற்கேற்ற சரியான வழி

3 கீழ்க்கண்டவற்றைச் செய்ய நினைவில்
வைக்கும்படி மக்களிடம் சொல். ஆள்
வோரின் அதிகாரிகளுக்கும் அரசு அலுவல
கர்களுக்கும் அடங்கி இருக்கவும், நன்மை
செய்யத் தயாராக இருக்கவும், 2யாருக்கும்
எதிராகத் தீமையைப் பேசாமல் இருக்கவும்,
கீழ்ப்படியவும் மற்றவர்களோடு சமாதானமா
கவும், மென்மையாகவும் எல்லா மனிதர்
களிடமும் மரியாதை காட்டவும் இதனை
விசுவாசிகளிடம் கூறு.
3கடந்த காலத்தில் நாமும் முட்டாளாக
இருந்தோம். நம்மிடம் கீழ்ப்படிதல் இல்லை.
தவறுகிறவர்களாக நாம் இருந்தோம். பல வித
ஆசைகளுக்கும் இன்பங்களுக்கும் அடிமைப்
பட்டுக் கிடந்தோம். தீயவற்றைச் செய்து,
பொறாமையோடு வாழ்ந்தோம். மக்கள் நம்மை
வெறுத்தார்கள். நாமும் ஒருவரையொருவர்
வெறுத்தோம். 4ஆனால் பிறகு, இரட்சகராகிய
தேவனுடைய கிருபையும், அன்பும் வெளிப்
படுத்தப்பட்டன. 5தேவனுடன் சரியான வகை
யில் இருக்கும் பொருட்டு நாம் செய்த எந்த
நல்ல செயல்களாலும் இரட்சிக்கப்படவில்லை.
அவருடைய கிருபையால் நாம் இரட்சிக்கப்
பட்டோம். நம்மைப் புதிய மனிதர்களாக்கும்
சுத்திகரிப்பின் மூலமும், பரிசுத்த ஆவியின்
புதுப்பிக்கும் வல்லமை மூலமும் அவர் இரட்
சித்தார். 6அவர் நமது இரட்சகராகிய இயேசு
கிறிஸ்துவின் மூலம் அந்தப் பரிசுத்த ஆவியை
நம் மீது முழுமையாகப் பொழிந்தார். 7தேவ
னது கிருபையால் நாம் அவரோடு நீதி
மான்களானோம். தேவன் நமக்கு ஆவியைக்
கொடுத்தார். அதனால் நாம் நித்திய வாழ்வைப்
பெறமுடியும். அதுவே நாம் நம்பிக்கொண்டி
ருப்பதும் ஆகும். 8இந்தப் போதனை உண்மை
யானது. மக்கள் இதனைப் புரிந்துகொள்ள

*வேண்டும். இதனை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று நான் விரும்புகிறேன். அப்பொழுது தேவனை நம்பும் மக்கள் தம் வாழ்வை நன்மை செய்வதற்குப் பயன்படுத்த எச்சரிக்கையாக இருப்பர். இவை நல்லவை, எல்லா மக்களுக்கும் பயன் உள்ளவை.*

9*முட்டாள்தனமாக வாக்குவாதம் செய்
வோர், பயனற்ற குடும்பக் கதைகளைப் பேசு
வோர், சண்டைகளைத் தூண்டி விடுவோர்,
மோசேயின் சட்டங்களைக் குறித்து வாக்கு
வாதம் செய்வோர் ஆகியோரிடமிருந்து விலகி
இரு. அவை எதற்கும் பயனற்றவை, யாருக்
கும் உதவாதவை.* 10*எவனாவது வாக்கு
வாதங்களை உருவாக்கினால் அவனை எச்ச
ரிக்கை செய். அவன் மீண்டும் வாக்குவாதம்
செய்தால் மேலும் அவனை எச்சரிக்கை செய்.
அவன் மீண்டும் வாக்குவாதம் செய்ய ஆரம்
பித்தால் அவனது தொடர்பை விட்டு விடு.*
11*ஏனென்றால் இப்படிப்பட்ட ஒருவன் நிலை
தவறி, பாவம் செய்கிறவனாக இருக்கிறான்
என்பதை நீ அறிந்திருக்கிறாய். இவனது
பாவங்களே இவன் தவறானவன் என்பதை
நிரூபிக்கிறது.*

## *நினைவில் வைக்கவேண்டிய சில காரியங்கள்*

12*நான் உங்களிடம் அர்த்தெமாவையும்
தீகிக்குவையும் அனுப்புவேன். அவர்களை
நான் அனுப்புகிறபொழுது நீ நிக்கொப்போ
லிக்கு வந்து என்னைப் பார்க்க முயற்சி
செய். நான் மழைக்காலத்தில் அங்கே இருப்பது
என்று முடிவு செய்துள்ளேன்.* 13*வழக்கறிஞ
னான சேனாவுக்கும், அப்பொல்லோவுக்கும்
எவ்வித குறைவும் இல்லாதபடி அவர்களை
அனுப்பிவை. தமக்குத் தேவையான அனைத்
தையும் அடைய அவர்களுக்கு உன்னால்
முடிந்த அளவு உதவிசெய்.* 14*நன்மை செய்வ
தற்குரியதாக தம் வாழ்வைப் பயன்படுத்தும்
படி நம் மக்கள் கற்றுக்கொள்ளவேண்டும்.
தேவையானவர்களுக்கு நன்மை செய்ய
வேண்டும். பிறகு அவர்களின் வாழ்வு பயனற்
றதாக இருக்காது.* 15*என்னுடன் இருக்கிற
எல்லாரும் உனக்கு வாழ்த்து கூறுகின்றனர்.
விசுவாசத்தில் நம்மை சிநேகிக்கிறவர்களுக்கு
நீயும் வாழ்த்து கூறு.*

*உங்கள் அனைவரோடும் தேவனுடைய கிருபை இருப்பதாக.*

# பிலேமோனுக்கு எழுதிய கடிதம்

இயேசுகிறிஸ்துவுக்காக சிறைப்பட்டிருக்கிற
பவுலும் சகோதரனாகிய தீமோத்தேயுவும் எழு
துவது,
எங்கள் அன்புக்குரிய நண்பனும் எங்க
ளோடு பணியாற்றுகிறவனுமாகிய பிலேமோ
னுக்கு எழுதுவது. 2எங்கள் சகோதரியாகிய
அப்பியாவுக்கும், எங்களோடுள்ள ஊழியனா
கிய அர்க்கிப்புவுக்கும் உங்கள் வீட்டிலே கூடி
வருகிற சபைக்கும் எழுதுவது. 3நமது பிதாவா
கிய தேவனாலும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்
துவாலும் உங்களுக்குக் கிருபையும் சமாதான
மும் உண்டாகட்டும்.

### பிலேமோனின் அன்பும் விசுவாசமும்

4என் பிரார்த்தனைகளில் உங்களை
நினைத்துக்கொள்கிறேன். நான் எப்போதும்
உங்களுக்காக தேவனிடம் நன்றி செலுத்துகி
றேன். 5கர்த்தராகிய இயேசுவிடம் நீங்கள்
கொண்ட விசுவாசத்தையும் தேவனுடைய பரி
சுத்தமான அனைத்து மக்களிடமும் நீங்கள்
கொண்ட அன்பையும் பற்றி நான் கேள்விப்
படுகிறேன். உங்கள் விசுவாசத்துக்கும் அன்
புக்கும் தேவனுக்கு நன்றி செலுத்துகிறேன்.
6இயேசுவில் நாம் கொண்டுள்ள எல்லா நல்ல
வற்றையும் நீங்கள் புரிந்துகொள்ள, நீங்கள்
பகிர்ந்து கொள்ளும் விசுவாசம் உதவட்டும்
என நான் பிரார்த்திக்கிறேன். 7எனது சகோ
தரனே! தேவனுடைய மக்களிடம் நீ அன்பாக
இருந்தாய். அவர்களை மகிழ்ச்சி கொள்ளச்
செய்தாய். இது எனக்கு மட்டற்ற மகிழ்ச்
சியையும் ஆறுதலையும் கொடுத்திருக்கிறது.

### சகோதரனைப் போல ஒநேசிமுவை ஏற்றுக்கொள்

8நீங்கள் செய்யவேண்டிய சில காரியங்கள்
உள்ளன. நான் உங்களுக்கு கட்டளையிட முடி
யும். கிறிஸ்துவில் நம்முடைய உறவானது
அப்படி செய்யும் உரிமையைக் கொடுக்கிறது
என நான் உணருகிறேன். 9ஆனால், நான்
உங்களுக்குக் கட்டளையிடவில்லை. மாறாக
அன்பினிமித்தம் நான் இவற்றைச் செய்யுமாறு
உங்களை கேட்கிறேன். நான் பவுல். இப்போது
நான் ஒரு முதியவன். இயேசு கிறிஸ்துவுக்
காகச் சிறைப்பட்டவன். 1
0என் மகன் ஒநேசிமுக்காக உங்களைக்
கேட்டுக் கொள்கிறேன். நான் சிறையில்
இருந்தபோது அவன் எனக்கு விசுவாசத்தில்
மகன் ஆனான்.
11கடந்த காலத்தில் அவன் உங்களுக்குப்
பயனற்றவனாக இருந்தான். ஆனால் இப்
பொழுதோ அவன் உங்களுக்கும் எனக்கும்
பயனுள்ளவன்.
12நான் அவனை உங்களிடம் மீண்டும்
அனுப்புகிறேன். அவனுடன் என் இதயத்
தையும் சேர்த்து அனுப்புகிறேன். 13நற்செய்திக்
காகச் சிறைப்பட்டிருக்கிற எனக்குச் சேவை
செய்வதற்காக அவனை என்னோடு வைத்
திருக்க விரும்பினேன். எனக்குக் கிடைக்கும்
அவன் உதவி எனக்கு உதவுவதன்மூலம்
உண்மையில் உங்களிடமிருந்து வருகிறது.
14ஆனால் முதலில் உங்களைக் கேட்டுக்
கொள்ளாமல் நான் எதையும் செய்ய விரும்
பவில்லை. அதற் குப் பின்பு எனக்காக நீங்கள்
செய்கிற நல்ல காரியங்கள், என்னுடைய
வற்புறுத்தலுக்காக அல்லாமல் நீங்களாகவே
விரும்பிச் செய்தவையாக இருக்கும்.
15கொஞ்சகாலமாக ஒநேசிமு உங்களை விட்
டுப் பிரிந்திருந்தான். ஒருவேளை என்றென்
றைக்குமாக நீங்கள் அவனைத் திரும்பப்
பெறும் பொருட்டு இது நிகழ்ந்தது. 16இனிமேல்
ஒரு அடிமையாக அல்ல, அடிமைக்கும் மேலா
னவனாக, அன்புக்குரிய சகோதரனாக இருப்
பான். நான் அவனை மிகவும் நேசிக்கிறேன்.
நீங்கள் அதைவிட மேலாக நேசிக்கவேண்டும்.
கர்த்தருக்குள் அவனை மனிதனாகவும் நல்ல
சகோதரனாகவும் நீங்கள் நேசிக்கவேண்டும்.
17நீங்கள் என்னை நண்பனாக ஏற்றுக்
கொண்டால், பிறகு அவனையும் திரும்பவும்
ஏற்றுக்கொள்ளுங்கள். என்னை வரவேற்பது
போலவே அவனையும் வரவேற்றுக்கொள்
ளுங்கள்.
18அவன் உங்களிடம் ஏதாவது ஒருவ
கையில் செய்த குற்றங்களையும் கடன்களை
யும், என் கணக்கில் வைத்துக்கொள்ளுங்கள்.
19நான் பவுல். நானே என் கையால் உங்க
ளுக்கு இதனை எழுதுகிறேன். நான் ஒநேசிமு
வின் கடனைத் தீர்த்துவிடுவேன். உங்கள்
வாழ்வுக்காக நீங்கள் என்னிடம் கடன் பட்டுள்
ளதைப்பற்றி நான் ஒன்றும் சொல்லமாட்டேன்.
20எனவே என் சகோதரனே! ஒரு கிறிஸ்தவன்
என்கிற முறையில் எனக்குச் செய்யப்படும்
ஒரு உதவியாக நீங்கள் அதைச் செய்யவேண்
டும் என கேட்கிறேன். கிறிஸ்துவுக்குள் என்
இதயத்தை ஆறுதல் படுத்துங்கள். 21நான்
சொல்வதைக் காட்டிலும் அதிகமாக நீங்கள்
எனக்குச் செய்வீர்கள் என்று அறிவேன்.

*இதனை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள் என்ற உறுதி எனக்கு இருப்பதால் உங்களுக்கு இக்கடிதத்தை எழுதுகிறேன்.*

**22**மேலும் நான் தங்குவதற்காக ஓர் இடத்தை ஏற்பாடு செய்யுங்கள். உங்கள் வேண்டுதலுக்கு தேவன் செவிசாய்ப்பார் என்று நான் நம்புகிறேன். உங்கள் பிரார்த்தனைகள் மூலமாக நான் உங்களிடம் வரமுடியும் என்றும் நம்புகிறேன்.

### இறுதி வாழ்த்துக்கள்

**23**இயேசு கிறிஸ்துவுக்காக எப்பாப்பிராவும்
என்னோடு சிறை வைக்கப்பட்டிருக்கிறான்.
அவனும் உங்களுக்கு வாழ்த்து கூறுகிறான்.
**24**மாற்கு, அரிஸ்தர்க்கு, தேமா, லூக்கா போன்
றோரும் உங்களுக்கு வாழ்த்துரைக்கிறார்கள்.
இவர்கள் என்னோடு பணியாற்றுகிறார்கள்.
**25**நம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின்
கிருபை உங்கள் ஆவியுடன் இருப்பதாக.

# எபிரேயருக்கு எழுதிய கடிதம்

### தேவன் தன் குமாரன் மூலமாகப் பேசியிருக்கிறார்

1 கடந்த காலத்தில் தேவன், தீர்க்கதரிசிகள்
மூலம் நமது மக்களிடம் பேசியிருக்கிறார்.
அவர், பல வேறுபட்ட வழிகளிலும் பல சம
யங்களிலும் பேசினார். 2இப்போது இந்த
இறுதி நாட்களில் மீண்டும் தேவன் நம்மோடு
பேசியிருக்கிறார். அவர் தன் குமாரன் மூலம்
நம்மோடு பேசி இருக்கிறார். அவர் தன் குமா
ரன் மூலமாக இந்த முழு உலகையும் படைத்
தார். எல்லாவற்றிற்கும் உரிமையாளராக
தேவன் தன் குமாரனைத் தேர்ந்தெடுத்திருக்கி
றார்.
3அந்தக் குமாரன் தேவனுடைய மகிமையை
வெளிப்படுத்துகிறார். தேவனுடைய தன்
மையை முழுவதுமாக வெளிக்காட்டும் உருவ
மாக அவர் இருக்கிறார். அவர் தனது வலிமை
மிக்க கட்டளைகளினால் ஒவ்வொன்றையும்
ஒருங்கிணைத்து வைத்திருக்கிறார். குமாரனா
னவர் மக்களை பாவங்களிலிருந்து பரிசுத்தப்
படுத்தினார். பிறகு அவர் தேவனுடைய வலது
பக்கத்தில் பரலோகத்தில் அமர்ந்தார். 4அவர்
தேவதூதர்களை விட மிகச்சிறந்த பெயரை
தேவனிடமிருந்து பெற்றார். அவர் தேவதூதர்
களை விட மிகவும் சிறப்புக்குரியவரானார்.
5கீழ்க்கண்டவற்றை தேவன் ஒருபோதும் தேவ
தூதர்களிடம் சொன்னதில்லை,

> "நீர் எனது குமாரன், இன்று நான்
> உமக்குப் பிதா ஆனேன்."
>
> சங்கீதம் 2:7

அதோடு எந்த தேவதூதனிடமும் தேவன் இவ்
வாறு சொன்னதில்லை,

> "நான் அவரது பிதாவாக இருப்பேன்.
> அவர் எனது குமாரனாக இருப்பார்."
>
> 2 சாமுவேல் 7:14

6மேலும் தனது முதற்பேறான குமாரனைப்
பூமிக்கு அனுப்புகிறபோது,

> "தேவதூதர்கள் எல்லோரும் அந்த குமா
> ரனைத் தொழுது கொள்ளக்கடவர்கள்"
>
> உபாகமம் 32:43

என்று கூறினார். 7தேவன் தேவதூதர்களைப்
பற்றி கூறும் போது,

> "தேவன் தன் தேவதூதர்களைக் காற்
> றைப் போன்றும் தன் ஊழியர்களை
> நெருப்பு ஜுவாலைகளைப் போன்றும்
> செய்கிறார்"
>
> சங்கீதம் 104:4

எனக் குறிப்பிடுகிறார். 8ஆனால் தேவன் தம்
குமாரனைப் பற்றிச் சொல்லும்போது,

> "தேவனே! உமது சிம்மாசனம் என்
> றென்றைக்கும் உள்ளது. சரியான
> தீர்ப்புகளால் உமது இராஜ்யத்தை நீர்
> ஆள்வீர்.
> 9 நீர் நீதியை விரும்புகிறீர். அநீதியை
> வெறுக்கின்றீர். ஆகையால் தேவனே
> உமது தேவன் உம்மோடு இருப்பவர்
> களுக்குக் கொடுத்ததைக் காட்டிலும்
> பெருமகிழ்ச்சியை உமக்குத் தந்திருக்
> கிறார்."
>
> சங்கீதம் 45:6-7

10மேலும் தேவன்,

> "கர்த்தாவே, ஆரம்பத்தில் நீர் பூமியைப்
> படைத்தீர். மேலும் உமது கைகள் ஆகா
> யத்தைப் படைத்தன.
> 11 இவை மறைந்து போகலாம். ஆனால்
> நீரோ நிலைத்திருப்பீர். ஆடைகளைப்
> போன்று அனைத்தும் பழசாகிப்
> போகும்.
> 12 நீர் அவற்றை ஒரு சால்வையைப்
> போல மடித்துவிடுவீர். அவை ஓர்
> ஆடையைப் போன்று மாறும். ஆனால்
> நீரோ மாறவேமாட்டீர். உமது ஜீவன்
> ஒருபோதும் அழியாது"
>
> சங்கீதம் 102:25-27

என்றும் கூறுகிறார்.

13தேவன் எந்த தேவ தூதனிடமும்,

> "உமது பகைவர்களை உம்முடைய அதி
> காரத்துக்குக் கீழ்கொண்டு வரும்வரை
> எனது வலது பக்கத்தில் உட்காரும்"
>
> சங்கீதம் 110:1

என்று என்றைக்கும் சொன்னதில்லை.
14தேவதூதர்கள் எல்லாரும், தேவனுக்குச்
சேவை செய்துகொண்டிருக்கிற ஆவிகள்

ஆவார்கள். இரட்சிப்பைப் பெறப் போகிறவர்க
ளுக்கு உதவி செய்யும் பொருட்டு அவர்கள்
அனுப்பப்படுகிறார்கள்.

### நமது இரட்சிப்பானது சட்டங்களை விடப் பெரியது

2 ஆகையால், நமக்குச் சொல்லித்தரப்பட்ட
விஷயங்களைப் பின்பற்றுவதில் நாம் மிக
வும் கவனமாக இருக்கவேண்டும். அவ்வாறு
இருந்தால் உண்மை வழியில் இருந்து விலகா
மல் இருப்போம். 2தேவ தூதர்கள் மூலமாகத்
தேவனால் சொல்லப்பட்ட போதனை உண்மை
என புலப்படுத்தப்பட்டது. ஒவ்வொரு முறை
யும் அப்போதனைக்கு எதிராக யூதர்கள்
எதையேனும் செய்தனர் அல்லது அதைப்
பின்பற்றவில்லை என்ற ஒவ்வொரு முறையும்
அதற்காக அவர்கள் சரியான முறையில் தண்
டிக்கப்பட்டனர். 3நமக்கு அளிக்கப்பட்ட இரட்
சிப்பு மிக உயர்ந்தது. எனவே நாம் இந்த
இரட்சிப்பை முக்கியமானதாகக் கருதாமல்
வாழும் பட்சத்தில் நாமும் தண்டிக்கப்படு
வோம். இந்த இரட்சிப்பு கர்த்தராலேயே முதன்
முதலாக அறிவிக்கப்பட்டது. இந்த இரட்சிப்பு
உண்மையானது என்பதை அவரிடத்தில் கேட்
டவர்கள் நிரூபித்துள்ளனர்.
4அதிசயங்கள், பெரிய அடையாளங்கள்,
பலவகையான அற்புதங்கள் மூலம் தேவனும்
கூட அதை நிரூபித்துள்ளார். பரிசுத்த ஆவியா
னவரிடமிருந்து மக்களுக்கு வரங்களைக்
கொடுப்பதன் மூலமும் நிரூபித்துள்ளார். அவர்
விரும்பிய விதத்திலேயே அந்த வரங்களை
அவர் கொடுத்தார்.

### மனிதர்களை இரட்சிக்க மனிதர்களைப் போலானார் கிறிஸ்து

5வரப்போகிற புதிய உலகத்தை ஆள்பவர்க
ளாக தேவன் தேவதூதர்களைத் தேர்ந்தெடுக்க
வில்லை. நாம் பேசிக்கொண்டிருக்கிற உலகம்
அதுதான். 6சில இடத்தில் (வேதவாக்கியங்க
ளில்)

"தேவனே! நீர் ஏன் மனிதரைப் பற்றி
அக்கறைகொள்கிறீர்? மனித குமா
ரனைப் பற்றியும் ஏன் அக்கறை
கொள்கிறீர்? அவர் அவ்வளவு முக்கிய
மானவரா?
7 கொஞ்சநேரத்திற்கு தேவ தூதர்களை
விட அவரைச் சிறியவர் ஆக்கிவிட்
டீர். அவரை மகிமையாலும் கனத்
தாலும் முடி சூட்டினீர்.
8 நீர் எல்லாவற்றையும் அவரது கட்டுப்
பாட்டுக்குள் கொண்டு வந்தீர்"
சங்கீதம் 8:4-6

என்று எழுதப்பட்டுள்ளது.
இவ்வாறு அனைத்தையும் அவரது கட்டுப்
பாட்டுக்குள் தேவன் கொண்டு வந்துவிட்டதால்
அவருக்குக் கட்டுப்படாதது எதுவுமில்லை
எனலாம். ஆனால் அவர் அனைத்தையும் ஆள்
வதை நாம் இன்னும் பார்க்கவில்லை. 9சிறிது
காலத்திற்கு இயேசு தேவதூதர்களுக்கும் தாழ்ந்
தவராக்கப்பட்டிருந்தார். ஆனால் இப்போது
துன்பப்பட்டு மரித்ததால் மகிமையாலும்,
கௌரவத்தாலுமான முடிசூட்டிக் கொண்டிருப்
பதை நாம் பார்க்கிறோம். தேவனுடைய கிருபை
பயினால் ஒவ்வொரு மனிதனுக்காகவும்
இயேசு மரித்தார்.
10தேவனே அனைத்தையும் படைத்தவர்.
அனைத்தும் அவரது மகிமைக்காகவே உள்
ளன. தன் மகிமையைப் பகிர்ந்துகொள்ள
ஏராளமான மக்களை அவர் விரும்பினார்.
எனவே, தமக்குத் தேவையானனவற்றை
அவர் செய்தார். மக்களை இரட்சிப்புக்கு வழி
நடத்திச் செல்ல பூரணமானவராகத் தேவன்
இயேசுவை ஏற்படுத்தினர். இயேசு தன் துன்பத்
தால் ஒரு பூரண இரட்சகரானார்.
11மக்களைப் பரிசுத்தமாக்குகிறவரும் பரி
சுத்தமாக்கப்படுகிறவர்களும் ஒரே குடும்பத்
தைச் சேர்ந்தவர்கள் ஆவார்கள். எனவே
அவர்களைத் தம் சகோதரர்களாகவும் சகோத
ரிகளாகவும் அழைக்க இயேசு வெட்கம் கொள்
ளவில்லை.

12 "தேவனே உம்மைப்பற்றி நான் என்
சகோதர சகோதரிகளிடம் கூறுவேன்.
உம்முடைய மக்கள் கூட்டத்தின் நடுவில்
உம்மைப் புகழ்ந்து பாடுவேன்"
சங்கீதம் 22:22

என்று அவர் கூறுகிறார்.

13 "தேவன் மீது என் நம்பிக்கையை வைப்
பேன்" *
ஏசாயா 8:17

என்றும் அவர் சொல்கிறார்.

"தேவன் எனக்களித்த பிள்ளைகளோடு
நான் இங்கே இருக்கிறேன்"
ஏசாயா 8:18

என்று அவர் சொல்கிறார்.
14மாம்சீகமான உடலைக் கொண்ட மக்களே
அந்தப் பிள்ளைகள். ஆகவே இயேசுவும், அவர்
களைப் போன்றே மாறி அவர்களைப்
போன்றே அனுபவத்தையும் பெற்றார். மரண
அதிகாரத்தைத் தன்னோடு வைத்திருக்கிற
பிசாசை தனது மரணத்தின் மூலம் அழிக்கும்
பொருட்டு இயேசு இப்படி செய்தார். 15அவர்
களை விடுதலை செய்யும்பொருட்டே இயேசு
தம் பிள்ளைகளைப் போலாகி மரித்தார்.
மரண பயத்தின் காரணமாக தம் வாழ்க்கை
முழுக்க அவர்கள் அடிமையாக இருந்தார்கள்.
16இயேசு தேவதூதர்களுக்கு உதவி செய்ய

---

**தேவன் ... வைப்பேன்** *ஏசாயா* 8:18.

வரவில்லை என்பது வெளிப்படை. அவர்
ஆபிரகாமின் வழிவந்த மக்களுக்கே உதவ
வந்தார். 17இதனால் இயேசு, எல்லா வகையி
லும் அவர்களுக்கு சகோதரரைப் போல் இருப்
பது அவருக்கு முக்கியமாக இருந்தது. இவ்வ
ழியில் தேவனுக்கான சேவையில் அவர்களு
டைய இரக்கமும் நம்பிக்கையும் உள்ள பெரிய
போதகராக இருக்கவும், மக்களின் பாவங்க
ளுக்கு மன்னிப்பை வழங்கவும் அவரால் முடிந்
தது.

18இப்போது சோதனைகளை எதிர்கொள்
கிற மக்களுக்கு இயேசுவால் உதவி செய்ய
முடியும். இயேசுவும் துன்பங்களுக்கு உள்
ளாகி சோதனைகளுக்கு ஆட்பட்டவர் என்ப
தால், அவரால் உதவி செய்ய முடியும்.

## இயேசு மோசேயை விட பெரியவர்

3 எனவே, நீங்கள் அனைவரும் இயேசு
வைப் பற்றி சிந்தனை செய்ய வேண்டும்.
தேவன் இயேசுவை நம்மிடம் அனுப்பினார்.
அவர் நம் விசுவாசத்தின் பிரதான ஆசாரியர்
ஆவார். எனது பரிசுத்தமான சகோதர சகோத
ரிகளே! நான் இதை உங்களுக்காகக் கூறுகி
றேன். நீங்கள் தேவனால் அழைக்கப்பட்டி
ருக்கிறீர்கள். 2தேவன் இயேசுவை நம்மிடம்
அனுப்பி நமது பிரதான ஆசாரியர் ஆக்கி
னார். மோசே போன்று உண்மையுள்ளவராய்
முழுக்குடும்பத்தின் பொறுப்பும் இயேசுவிடம்
ஒப்படைக்கப்பட்டிருந்தது. 3ஒருவன் ஒரு வீட்
டைக் கட்டும்போது மக்கள் அந்த வீட்டை
விட மனிதனையே பெரிதும் மதிப்பர். இதே
போல, மோசேயைவிட அதிக மரியாதைக்கு
இயேசு தகுதியானவராக இருக்கிறார். 4(உண்
மையில்) தேவன் எல்லாவற்றையும் படைக்கி
றார் எனினும் ஒவ்வொரு வீடும் யாரோ
ஒருவனால் கட்டப்படுகிறது. 5மோசே தேவனு
டைய வீட்டில் ஒரு பணியாளைப் போன்று
உண்மையுள்ளவனாயிருந்தான். (தேவன்)
எதிர்காலத்தில் சொல்வதைப் பற்றி அவன்
சொன்னான். 6ஆனால் ஒரு மகனைப் போல
(வேலைக்காரனைப் போல அல்ல) தேவனு
டைய குடும்பத்தை ஆள்வதில் இயேசு
உண்மையுள்ளவராயிருக்கிறார். நம்மிடமுள்ள
மாபெரும் நம்பிக்கையினைத் தொடர்ந்து உறு
திப்படுத்தி மேன்மையாக எண்ணினால், விசு
வாசிகளாகிய நாம் தேவனுடைய குடும்பத்
தவர்களாயிருப்போம்.

## நாம் தேவனைத் தொடர்ந்து பின்பற்ற வேண்டும்

7 பரிசுத்த ஆவியானவர் சொல்வது
போல், "இன்று நீங்கள் தேவனுடைய
சத்தத்தைக் கேட்டால்,
8 வனாந்திரத்தில் நீங்கள் தேவனைச்
சோதித்தபோது, தேவனுக்கு எதிராக
நீங்கள் கலகம் செய்த கடந்த காலத்தைப்
போல உங்கள் இதயத்தைக் கடினப்
படுத்தாதீர்கள்.
9 நாற்பது வருடங்களாக வனாந்திரத்தில்
நான் செய்ததை உங்கள் மக்கள் பார்த்
தார்கள். ஆனால் அவர்கள் என்னை
யும் என் பொறுமையையும் சோதித்த
னர்.
10 எனவே நான் அவர்களிடம் கோபம்
கொண்டேன். 'அம் மக்களின் சிந்தனை
கள் எப்போதும் தவறாகவே இருக்
கின்றன. அம்மக்கள் என் வழிகளை
எப்போதும் புரிந்துகொண்டதில்லை'
என்று நான் சொன்னேன்.
11 எனவே நான் கோபத்தோடு, 'அவர்கள்
ஒருபோதும் எனது இளைப்பாறுதலுக்
குள் நுழைய முடியாது' என்று
ஆணையிட்டேன்."

*சங்கீதம் 95:7-11*

12எனவே சகோதர சகோதரிகளே! பாவம்
நிறைந்தவராகவும், ஜீவனுள்ள தேவனிடமி
ருந்து விலகுகிற நம்பிக்கையற்ற இருதயமுள்
ளோராகவும் உங்களில் யாரும் இல்லாதபடி
கவனமாயிருங்கள். 13ஆனால் ஒவ்வொரு
நாளும் ஒருவருக்கொருவர் உதவியாக இருங்
கள். 'இன்று' எனப்படும் நிலை இருக்கிற
போதே இதைச் செய்யுங்கள். உங்களில் யாரும்
பாவத்தால் முட்டாளாக்கப்படாதிருக்கவும்
உறுதியாக இருக்கவும் இதைச் செய்யுங்கள்.
14இது எதற்காக? தொடக்கத்தில் நாம் கொண்
டிருந்த நம்பிக்கையைத் தொடர்ந்து உறுதி
யாய் பற்றிக்கொண்டிருப்போமானால் நாம்
அனைவரும் கிறிஸ்துவுடன் பங்கு உள்ளவர்
களாக முடியும். 15இதைத்தான், "இன்று நீங்கள்
தேவனுடைய சத்தத்தைக் கேட்டால், தேவ
னுக்கு எதிராக நீங்கள் கலகம் செய்த கடந்த
காலத்தைப் போல உங்கள் இதயத்தைக் கடி
னப்படுத்தாதீர்கள். என்று வேதவாக்கியங்க
ளில் எழுதப்பட்டிருக்கிறது.

16யார் தேவனுடைய செய்தியைக் கேட்டு
அவருக்கு எதிராக மாறினார்கள்? எகிப்திலி
ருந்து மோசேயால் வழிநடத்தப்பட்டவர்கள்
அனைவரும் அப்படியே இருந்தார்கள்.
17மேலும் நாற்பது வருடங்களாக தேவன் யார்
மீது கோபம் கொண்டார்? பாவம் செய்தவர்கள்
மீது அல்லவா? அவர்களனைவரும் வனாந்
திரத்திலேயே மடிந்து போனார்கள்.

18எனது இளைப்பாறுதலுக்குள் பிரவே
சிக்க முடியாது என்று யாரிடம் தேவன் கூறி
னார்? அவருக்குக் கீழ்ப்படியாத மக்களிடம்
மட்டும்தானே கூறினார். 19எனவே, அந்த மக்
கள் தேவனுடைய இளைப்பாறுதலுக்குள்
நுழைய முடியாது என்றார். ஏன்? அவர்கள்
விசுவாசம் உடையவர்களாக இருக்கவில்லை.

4 தேவன் அந்த மக்களுக்குக் கொடுத்த
வாக்குறுதி இன்றும் நம்மிடம் உள்ளது.
தேவனுடைய இளைப்பாறுதலில் நாம் பிர
வேசிக்க முடியும் என்பதே அந்த வாக்குறுதி.
ஆகையால் உங்களில் யாரும் இவ்வாக்குறுதி
யைப் பெறுவதில் தவறக் கூடாது என்பதில்

எச்சரிக்கையாய் இருங்கள். [2]இரட்சிக்கப்படும் வழி அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது போல வே நமக்கும் அறிவிக்கப்பட்டது. ஆனால் அவர்கள் கேட்ட செய்தி அவர்களுக்குப் பயன் படாமல் போயிற்று. ஏன்? ஏனென்றால் அவர் கள் அதனை விசுவாசமில்லாமல் கேட்டனர். [3]விசுவாசித்த நம்மால் தேவனுடைய இளைப் பாறுதலில் நுழைய முடியும். தேவன் சொன்ன துபோல,

> "எனவே நான் கோபத்தோடு, 'அவர்கள் ஒருபோதும் எனது இளைப்பாறுதலுக்குள் நுழைய முடியாது' என்று ஆணையிட்டேன்"
>
> *சங்கீதம் 95:11*

தேவன் இதைச் சொன்னார். ஆனால் இவ்வுல கத்தை உருவாக்கின நேரமுதல் தம் வேலை யை தேவன் முடித்தார். [4]வாரத்தின் ஏழாவது நாளைப் பற்றித் தேவன் பேசினார் என்று எழுதப்பட்டிருக்கிறது, "ஏழாவது நாளில் தேவன் அனைத்து வேலைகளில் இருந்தும் ஓய்வு எடுத்தார்" [5]மேலும் அதே பகுதியில், மீண்டும், "அவர்கள் என்னுடைய இளைப்பா றுதலில் நுழைய முடியாது" என்றும் தேவன் கூறியிருக்கிறார்.

[6]சிலர் தேவனுடைய இளைப்பாறுதலில் நுழையப் போகிறார்கள் என்பது உண்மை. ஆனால் முதலில் நற்செய்தியைக் கேட்டவர்கள் தேவனுடைய இளைப்பாறுதலில் நுழைய வில்லை. அவர்கள் (தேவனுக்கு) கீழ்ப்படிய வில்லை என்பது தான் காரணம். [7]எனவே தேவன் இன்னொரு நாளைத் திட்டமிட்டார். அது "இன்று" என அழைக்கப்படுகிறது. பல ஆண்டுகளுக்குப் பிறகு இந்த நாளைக்குறித்து தாவீதின் மூலமாக ஏற்கெனவே மேற்கோள் காட்டிய பகுதியில் தேவன் பேசுகிறார்,

> "இன்று நீங்கள் தேவனுடைய சத்தத்தைக் கேட்டால், தேவனுக்கு எதிராக நீங்கள் கலகம் செய்த கடந்த காலத்தைப் போல உங்கள் இதயத்தைக் கடினப்படுத்தாதீர்கள்.
>
> *சங்கீதம் 95:7-8*

[8]தேவனுடைய வாக்குறுதிப்படி அவரது இளைப்பாறுதலுக்குள் யோசுவா மக்களை வழி நடத்தவில்லை என்பது தெரியும். ஏனென் றால் பின்னர் இளைப்பாறுதலுக்கு தேவன் 'இன்று' என இன்னொரு நாளை பற்றி கூறியி ருக்கிறாரே. [9]தேவனுடைய பிள்ளைகளுக்கு இளைப்பாறுதலுக்குரிய நாள் வர இருக்கிறது என்பதை இது காட்டுகிறது. [10]தேவன் தனது வேலைகளை முடித்த பிறகு ஓய்வெடுத்தார். தேவனைப் போன்று தம் பணிகளை முடித்த வர்களே தேவனுடைய இளைப்பாறுதலுக்குள் நுழைந்து ஓய்வெடுக்க முடியும்.

[11]எனவே தேவனுக்குக் கீழ்ப்படியாததற் காக பாலைவனத்தில் விழுந்து இறந்த (இஸ்ர வேலர்களின்) உதாரணங்களைப் பின்பற்றி நம்மில் யாரும் விழுந்து விடாதபடி நாம் தேவனுடைய இளைப்பாறுதலுக்குள் நுழைய கடினமாக முயற்சிப்போம். [12]தேவனுடைய வார்த்தையானது எப்பொழுதும் உயிரோடு இருப்பதும். செயல்படுவதுமாகும். அது இரு புறமும் கூரான வாளைவிட மிகவும் கூர்மை யானது. அது ஆன்மாவையும், ஆவியையும், எலும்புகளையும், கணுக்களையும் வெட்டிப் பிரிக்கிறது. அது நம் உள்ளான மனதின் எண்ணங்களையும், நம் இதயம் கொண்டுள்ள கருத்துக்களையும் நியாயம் தீர்க்கிறது. [13]தேவ னிடமிருந்து எதுவும் மறைக்கப்படவில்லை. அனைத்தையும் அவரால் தெளிவாகக் காண முடியும். அவருக்கு முன் எல்லாமே திறந்து வைக்கப்பட்டிருக்கிறது. நாம் வாழ்ந்த முறை யை அவரிடம் விவரிக்கவேண்டும்.

## தேவனுக்கு முன் வர நமக்கு இயேசு உதவுகிறார்

[14]நமக்கென்று ஒரு பெரிய பிரதான ஆசாரி யர் உண்டு. அவர் பரலோகத்தில் தேவனோடு இருக்கப் போயிருக்கிறார். அவரே தேவனு டைய குமாரனாகிய இயேசு. எனவே நாம் நமது விசுவாசத்தில் உறுதியுடையவர்களாய் இருப்போமாக. [15]பிரதான ஆசாரியராகிய இயேசுவால் நமது பலவீனங்களைப் புரிந்து கொள்ள முடியும். பூமியில் வாழ்ந்தபோது அனைத்து வகைகளிலும், நம்மைப்போலவே அவரும் சோதிக்கப்பட்டார். ஆனால் அவர் பாவமே செய்யவில்லை. [16]எனவே, நமக்குத் தேவைப்படும் சமயத்தில் தேவனுடைய கிரு பையும் இரக்கமும் நமக்குக் கிடைக்கும் வகை யில் கிருபை உள்ள சிம்மாசனத்தை நாம் அணுகலாம்.

5 ஒவ்வொரு பிரதான ஆசாரியனும் ஏனைய மனிதர்களுக்கு உதவும் பொருட்டு மனித ரின் மத்தியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு மனிதனே ஆவான். காணிக்கைகளையும், பாவங்களுக்கான பலிகளையும், மற்றும் மக் கள் தேவனுக்குச் செய்ய வேண்டியதையெல் லாம் அவன் செலுத்துகிறான். [2]அறியாமை உடையவர்களிடமும், தவறு செய்கிறவர்களிட மும் அந்த பிரதான ஆசாரியனால் மென்மை யாக இருக்க முடிகிறது. ஏனெனில் அவனும் பலவீனத்துக்குட்பட்டவனே ஆவான். [3]இதனால் தான், மற்றவர்களுக்காக காணிக்கைகளைச் செலுத்துவதற்கு முன்னால், தன் சொந்த பாவங்களுக்காக அவன் காணிக்கை செலுத்த வேண்டும்.

[4]பிரதான ஆசாரியனாக இருப்பது ஒரு கௌரவமாகும். ஆனால் தன்னைத் தானே யாரும் பிரதான ஆசாரியனாகத் தேர்ந்தெடுத் துக் கொள்வதில்லை. தேவன் ஆரோனைத்* தேர்ந்தெடுத்ததைப் போல, தேவனே அவ

---

**ஆரோன்** யூதர்களில் முதல் தலைமை ஆசாரி யன். இவன் மோசேயின் சகோதரன்.

னைத் தேர்ந்தெடுக்கவேண்டும். 5கிறிஸ்துவின்
செயலும் அப்படித்தான். பிரதான ஆசாரியன்
ஆகும் பெருமைக்கு அவர் தன்னைத்தானே
தேர்ந்தெடுக்கவில்லை. தேவன் அவரைத்
தேர்ந்தெடுத்தார். அவர் கிறிஸ்துவிடம்,

"நீர் எனது மகன். இன்று நான் உமக்குப்
பிதா ஆனேன்"
சங்கீதம் 2:7

என்று கூறினார்.

6இன்னொரு இடத்தில் தேவன் சொல்கிறார்,

"நீர் எப்பொழுதும் மெல்கிசேதேக்கைப்
போன்று ஆசாரியராக இருப்பீர்"
சங்கீதம் 110:4

7கிறிஸ்து பூமியில் வாழ்ந்தபோது, அவர்
தேவனிடம் உரத்த சத்தத்தோடும் கண்ணீரோ
டும் பிரார்த்தனை செய்தார். மரணத்திலிருந்து
அவரைக் காப்பாற்ற வல்ல ஒருவரிடம் அவர்
பிரார்த்தனை செய்தார். தேவன் மீது இயேசு
வுக்கு இருந்த மிகுந்த மரியாதையின் காரண
மாக தேவன் அப்பிரார்த்தனையை பின்னர்
கேட்டார். 8அவர் தேவனுடைய குமாரனாக
இருந்தாலும் கூட அவர் துன்பங்களின் மூலம்
கீழ்ப்படிதலைக் கற்றுக்கொண்டார். 9இயேசு
முழுமையானவரான பின்னர் தமக்குக் கீழ்ப்
படிகிற எல்லாருக்கும் நிரந்தர இரட்சிப்பின்
காரணரானார். 10இயேசு, மெல்கிசேதேக்கைப்
போன்றே பிரதான ஆசாரியராகத் தேவனால்
தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### விழாதிருக்க எச்சரிக்கை

11இதுபற்றிச் சொல்ல எங்களிடம் நிறைய
காரியங்கள் இருக்கின்றன. ஆனால் அவை
அனைத்தையும் உங்களுக்கு விளக்கிச் சொல்
வது கடினம். ஏனெனில் புரிந்துகொள்ள
முயல்வதையே நீங்கள் நிறுத்திவிட்டிருக்
கிறீர்கள். 12இப்போதைக்கு, நீங்கள் போதகராக
ஆகி இருக்க வேண்டும். ஆனால் இன்னும்
தேவனுடைய போதனைகள் என்னும் அடிப்ப
டைப் பாடங்களை உங்களுக்கே யாராவது
போதிக்கத் தேவையாய் இருக்கிறது. இன்னும்
உங்களுக்குப் பால் உணவே தேவைப்படுகி
றது. திட உணவுக்கு நீங்கள் தயாராயில்லை.
(அதாவது இன்னும் கடினமான போதனைகள்
அல்ல, எளிய போதனைகளே உங்களுக்குத்
தேவைப்படுகிறது). 13இன்னும் பால் தேவை
யாய் இருக்கிற குழந்தையைப் போல அடிப்
படைப் போதனை தேவையாய் இருக்கிற ஒரு
வன் சரியாக வாழ்வது பற்றிய சிரமமான
போதனைகளைப் புரிந்துகொள்ள முடியாது.
ஏனெனில் அவன் இன்னும் (ஆன்மீக அள
வில்) ஒரு குழந்தையே! 14திட உணவானது
குழந்தைப் பருவத்தைத் தாண்டியவர்களுக்கு
உரியது. நன்மை மற்றும் தீமை இரண்டுக்கும்
இடையிலான வித்தியாசத்தை அனுபவத்தின்
வாயிலாக அடையாளம் கண்டுகொள்ள அவர்
களுக்குப் பயிற்சியளிக்கப்பட்டிருக்கிறது.

6 ஆகையால் நாம் கிறிஸ்துவைப் பற்றிய
அடிப்படைப் போதனைகளிலிருந்து முன்
னேறிச் சென்று பூரணமடைய வேண்டும்.
செத்த செயல்களிலிருந்து விலகுதல் பற்றியும்,
தேவனில் விசுவாசம் வைப்பது பற்றியும்
உள்ள அடிப்படை போதனைகளையே மீண்
டும் மீண்டும் நாம் போதிக்க வேண்டாம்.
2ஞானஸ்நானம் பற்றியும், கைகளைத் தலை
மேல் வைப்பது பற்றியும் மரணத்திலிருந்து
உயிர்த்தெழுதல் பற்றியும், என்றென்றைக்கு
மான நியாயத்தீர்ப்புபற்றியும் ஏற்கெனவே
நமக்கு கற்பிக்கப்பட்டுள்ளது. இப்போது,
இதற்கு மேலும் தெரிந்துகொள்ளும் ஆர்வம்
கொண்டவர்களாக நாம் முன்னேறவேண்டும்.
3தேவன் விரும்பினால் நாம் இதைச் செய்
வோம்.

4-6கிறிஸ்துவின் வழியிலிருந்து விலகிய மக்
களை மீண்டும் அவ்வாழ்க்கைக்குக் கொண்டு
வர முடியுமா? உண்மையைக் கற்றுக்கொண்
டவர்களைப் பற்றி நான் பேசுகிறேன். அவர்
கள் தேவனுடைய நன்மைகளைப் பெற்றுக்
கொண்டனர். பரிசுத்த ஆவியானவரில் பங்கு
பெற்று தேவனுடைய செய்தியையும் வர
இருக்கிற காலத்தின் வல்லமையையும் அவர்
கள் ருசித்திருக்கிறார்கள். மேலும் அவை மிக
நல்லவை என அவர்கள் தமக்குத்தாமே கண்டு
கொண்டனர். ஆனால் பிறகு அவர்கள் கிறிஸ்
துவின் வழியைவிட்டு விலகினார்கள். மீண்
டும் அவர்கள் கிறிஸ்துவுக்குள் வருவது கடி
னம். ஏனென்றால் அவர்கள் கிறிஸ்துவை
மீண்டும் ஒரு முறை சிலுவையில் அறைந்து
விட்டனர். அவர்கள் கிறிஸ்துவுக்கு அவமா
னத்தை ஏற்படுத்திவிட்டனர்.

7அவர்கள் ஒரு வயலைப் போன்றவர்கள்.
அந்நிலம் மழை நீரை உறிஞ்சி தன்னை உழுகி
றவர்களுக்கு நல்விளைச்சலைக் கொடுத்தால்,
பிறகு அதைப் பற்றி மக்கள் நல்ல வார்த்
தைகளை சொல்கிறார்கள். ஆனால் முள்செடி
களையும் களைகளையும் தவிர வேறு எதை
யும் கொடுக்காத நிலத்தை மக்கள் சபிப்பார்
கள். மேலும், பிறகு அது எரியூட்டப்படும்.
8ஆனால் அந்த நிலம் முட்களையும் பூண்டு
களையும் வளர்த்தால் அது பயனற்றதாகும்.
அந்நிலம் அபாயகரமானது. தேவன் அதனைச்
சபிப்பார். அது நெருப்பால் அழிக்கப்படும்.

9அன்பான நண்பர்களே, நாங்கள் இவற்றை
யெல்லாம் உங்களுக்குக் கூறுகிறோம். ஆனால்
உண்மையில் உங்களிடமிருந்து சிறப்பான
வற்றை எதிர்பார்க்கிறோம். இரட்சிப்பிற்குரி
யதை நீங்கள் செய்வீர்கள் என்று உறுதியாக
நம்புகிறோம். 10தேவன் நீதியுள்ளவர். தேவன்
நீங்கள் செய்த காரியங்களையும் நீங்கள் அவரு
டைய மக்களுக்கு உதவி செய்தபோதும்,
தொடர்ந்து உதவி செய்கிற போதும் உங்கள்
அன்பையும் உங்கள் செயல்களையும் அவர்
மறக்க மாட்டார். 11நீங்கள் நம்பிக் கொண்டிருக்

கிற இரட்சிப்பை அடையும் பொருட்டு உங்கள்
வாழ்க்கை முழுதும் தொடர்ந்து உழைத்துக்
கொண்டிருக்கவேண்டும் என்பதே எங்கள்
விருப்பம் ஆகும். 12நீங்கள் சோம்பேறியாவதை
நாங்கள் விரும்பவில்லை. தேவனால் வாக்கு
றுதி அளிக்கப்பட்டதைப் பெறப்போகிற மக்
களைப் போன்று நீங்கள் இருக்க வேண்டும்
என்று விரும்புகிறோம். அவர்களிடம் பொறு
மையும் விடாமுயற்சியும் இருப்பதால் அவர்
கள் தேவனுடைய வாக்குறுதியைப் பெறுவார்
கள். 13தேவன் ஆபிரகாமிடம் ஒரு ஆணையிட்
டார். மேலும் ஆணையிட்டுச் சொல்ல தேவ
னைவிட மிகப் பெரியவர் யாரும் இல்லாத
தால், 14“நான் உண்மையாகவே உன்னை
ஆசீர்வதிக்கிறேன். நான் உனக்கு ஏராளமான
சந்ததிகளைக் கொடுப்பேன்”*என்று தன்
பெயரிலேயே ஆணையிட்டுச் சொன்னார்.
15இது நிகழும் வரை ஆபிரகாம் பொறுமை
யாகக் காத்திருந்தான். இறுதியில் அவன்
தேவனுடைய வாக்குறுதியின்படியே பெற்றுக்
கொண்டான். 16மக்கள் தங்களை விடப் பெரிய
வர்கள் பேரில் ஆணையிடுவார்கள். அவர்கள்
சொல்வது உண்மை என்பதை இந்த ஆணை
நிரூபித்து, மேலும் விவாதத்திற்கு ஒரு முற்
றுப்புள்ளி வைக்கிறது. 17தேவன் தன் வாக்கு
றுதியை உண்மையென்று நிரூபிக்க விரும்பி
னார். தன் ஆணையால் அதனை உறுதிப்படுத்
தினார். தனது நோக்கம் மாறாதது என்று
காண்பிக்கத் தேவன் விரும்பினார். அதனை
மக்கள் புரிந்துகொள்ளவேண்டும் என்று
விரும்பினார். 18அந்த இரண்டும் எப்பொழு
தும் மாறாதவை. தேவன் பொய் சொல்ல
மாட்டார். ஆணையிட்ட பிறகு அது பொய்க்
காது. அது நமக்கு ஆறுதலாய் இருக்கும்.
நமது நம்பிக்கையைப் பலப்படுத்தும். 19நமக்கு
இந்த நம்பிக்கை இருக்கிறது. இது நங்கூரம்
போன்றது. அது உறுதியும் வலிமையும் உடை
யது. அது நமது ஆன்மாவைக் காப்பாற்றும்.
மிகவும் பரிசுத்தமான இடங்களுக்கு அது
போகிறது. பரலோகத்து ஆலயத்தின் திரைக்
குப் பின்னாலும் போகிறது. 20இயேசு ஏற்கெ
னவே அங்கே நுழைந்திருக்கிறார். நமக்காக
அங்கே வழியைத் திறந்திருக்கிறார். இயேசு
பிரதான ஆசாரியராகி மெல்கிசேதேக்கைப்
போல* நிலைத்திருக்கிறார்.

### ஆசாரியன் மெல்கிசேதேக்

7 மெல்கிசேதேக் சாலேமின் அரசன். அவன்
மிக உயர்ந்த தேவனுடைய ஆசாரியனுமா
கவும் இருந்தான். அரசர்களை வென்றுவிட்டு
திரும்பி வந்துகொண்டிருந்த ஆபிரகாமை
மெல்கிசேதேக் சந்தித்து ஆசி வழங்கினான்.
2அதன் பிறகு, (போரில் கைப்பற்றியவற்றில்)
பத்தில் ஒரு பங்கை ஆபிரகாம் அவனுக்குக்
கொடுத்தான். (சாலேமின் அரசனான மெல்கி
சேதேக் என்ற பெயருக்கு இரு பொருள்
உண்டு. மெல்கிசேதேக் என்பதற்கு “நன்மை
யின் அரசன்” என்ற பொருளும் “சாலேமின்
அரசன்” என்பதற்கு “சமாதானத்தின் அரசன்”
என்ற பொருளும் உண்டு.) 3இவனது தாய்
தந்தையரைப் பற்றி எவருக்கும் தெரியாது.
எங்கிருந்து வந்தான் என்றும் தெரியாது.
எங்கே பிறந்தான், எப்போது இறந்தான் என்
றும் ஒருவருக்கும் தெரியாது. இவன் தேவனு
டைய குமாரனைப்போன்றவன். அவன் என்
றென்றைக்கும் ஆசாரியனாகவே இருக்கிறான்.
4போரில் கைப்பற்றிய பொருள்களில் பத்
தில் ஒரு பங்கை ஆபிரகாம் இவனுக்குக்
கொடுத்ததன் மூலம் இவன் எவ்வளவு முக்கி
யமானவன் என்பதை நீங்கள் அறிந்துகொள்ள
முடியும். 5இப்போது லேவியின் வாரிசுதாரர்க
ளாக உள்ள ஆசாரியர்கள் (யூதர்கள்) இஸ்ர
வேலைச் சேர்ந்த மக்களிடமிருந்து பத்தில்
ஒருபாகத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டு
மென சட்டம் கூறுகிறது. அதாவது ஆபிரகா
மின் குடும்பத்தைச் சார்ந்தவர்களாக இருப்
பினும் கூட மக்களிடமிருந்து இந்த பத்தில்
ஒரு பங்கை அவர்கள் வசூலிக்கிறார்கள். 6இப்
பொழுது மெல்கிசேதேக்குக்கு (லேவியின்
குடும்பத்தைச் சாராதவன்) ஆபிரகாமிடமி
ருந்து பத்தில் ஒன்றைப் பெற்றுக்கொண்டு
தேவனுடைய விசேஷ வாக்குறுதிகளை
பெற்ற ஆபிரகாமை ஆசீர்வதித்தான். 7மிகப்
பெரிய மனிதர்களே சிறியவர்களை ஆசீர்வா
தம் செய்வார்கள் என்பது அனைவருக்கும்
தெரியும். 8ஒரு புறத்தில் வாழ்ந்து மடிகிற
ஆசாரியர்களால் பத்தில் ஒரு பாகம் வசூலிக்
கப்படுகிறது. இன்னொரு புறத்தில் இன்னும்
உயிருடன் இருப்பதாக சொல்லப்படுகிற மெல்
கிசேதேக்கால் பத்தில் ஒரு பாகம் வசூலிக்கப்
படுகிறது. 9உண்மையில், ஆபிரகாமின் மூல
மாக லேவியே பத்தில் ஒரு பாகத்தை மெல்கி
சேதேக்குக்கு கொடுத்தான் என்று கூட நீங்கள்
சொல்லக்கூடும். 10ஏன்? ஏனெனில் மெல்கி
சேதேக் ஆபிரகாமைச் சந்தித்தபோது லேவி
இன்னும் பிறந்திருக்கவில்லை. தன் முன்னோ
ரான ஆபிரகாமின் சரீரத்திலேயே இன்னும்
அவன் இருந்தான்.
11லேவி பரம்பரை ஆசாரிய முறைமை
களை அடிப்படையாய்க் கொண்ட சட்டத்தை*
இஸ்ரவேல் மக்கள் பெற்றார்கள். ஆனால் இம்
முறைமையினால் மக்கள் ஆன்மீக முதிர்ச்
சியை அடையமுடியவில்லை, ஆரோனைப்
போல அல்லாமல் மெல்கிசேதேக்கு போன்ற
வேறொரு ஆசாரியன் அவசியமானார் 12ஆசா
ரியத்துவம் மாற்றப்பட்டால் நியாயப்பிரமாண
மும் மாற்றப்பட்டிருக்க வேண்டும். 13எப்போ
தும் (பலிபீடத்தில்) ஒரு ஆசாரியனாக சேவை
செய்திராத ஒரு குடும்பக் குழுவினைச் சேர்ந்த
ஒரு மனிதரைப் பற்றி இப்பகுதிகள் பேசுகின்

---

**நான் … கொடுப்பேன்** ஆதி. 22:17.

**மெல்கிசேதேக்** ஆபிரகாமின் காலத்தில் வாழ்ந்த ஆசாரியரும் அரசருமான ஒருவர். ஆதி. 14:17-24.

**சட்டம்** மோசேயின் சட்டம்.

றன. 14நமது கர்த்தர் யூதாவின் குடும்பக் குழு
விலிருந்து வந்தவர் என்பது தெளிவு.
மோசேயும் இந்தக் குடும்பக் குழுவிலிருந்து
வரும் ஆசாரியர்களைப் பற்றி எதுவும் கூற
வில்லை.

### மெல்கிசேதேக்கைப் போன்று இயேசுவும் ஒரு ஆசாரியர்

15மெல்கிசேதேக் போன்ற "ஒரு வித்தியாச
மான ஆசாரியர்" வருவார் என்பதால் இது
மேலும் தெளிவாகிறது. 16மாம்சீகமான பரம்
பரை பற்றிய சில சட்டங்களினால் ஆசாரிய
னாகாமல் அழிக்க முடியாத ஜீவனுக்குரிய
வல்லமையால் அவர் ஆசாரியனாகிறார்.
17"நீர் மெல்கிசேதேக்கைப் போன்று என்
றென்றைக்கும் உரிய ஆசாரியராக இருக்கி
றீர்*" என்று வேதவாக்கியங்களில் ஏற்கெ
னவே எழுதப்பட்டிருக்கிறது.
18ஆகவே அந்தப் பழைய சட்டம் இப்போது
மாற்றப்பட்டிருக்கிறது. ஏனெனில் பழைய சட்
டம் பலவீனமானதும், பயனற்றதுமாய் இருந்
தது. 19மோசேயின் நியாயப்பிரமாணமானது
எதையும் முழுமை ஆக்கவில்லை. எனவே
சிறிதளவேனும் நல்ல நம்பிக்கை நமக்கு
கொடுக்கப்பட்டது. மேலும் அதன் மூலமாகத்
தான் தேவனுக்கு அருகில் வருகிறோம்.
20இது மிக முக்கியமானது. மற்றவர்களை
(லேவியர்கள்) ஆசாரியர்களாக்கிய போது
ஆணை எதுவும் கொடுக்கப்பட வில்லை.
21ஆனால் இயேசுவைப் பிரதான ஆசாரிய
னாக்கியபோது தேவன் பிரமாணம் கொடுத்
தார்.

> "நீரே என்றென்றைக்கும் ஆசாரியனாக
> இருக்கிறீர்' என்று கர்த்தர் ஆணையிட்
> டுரைத்தார். மேலும் அவர் தன்
> மனதை மாற்றிக்கொள்ளமாட்டார்"
> சங்கீதம் 110:4

என்றும் அவர் சொன்னார்.
22மிகச் சிறந்த உடன்படிக்கைக்கு* இயே
சுவே ஒரு நிரூபணமாக இருக்கிறார் என்பதே
இதன் பொருள் ஆகும்.
23ஏனைய ஆசாரியர்கள் இறந்தார்கள்.
எனவே நிறைய ஆசாரியர்கள் இருக்க வேண்
டும். 24இயேசுவே என்றென்றைக்கும் நிலைத்
திருக்கக் கூடியவர். எனவே மாறா ஆசா
ரியத்துவம் கொண்டுள்ளார். 25எனவே தன்
மூலமாகத் தேவனிடம் வருகிறவர்களை இயே
சுவால் முழுமையாக இரட்சிக்க முடியும். ஏனெ
னில் நமக்காக பரிந்து பேச இயேசு எப்பொ
ழுதும் வாழ்கிறார்.

26ஆகவே, இயேசுவே நமக்குத் தேவையான
சிறந்த பிரதான ஆசாரியர். அவர் பரிசுத்தமா
னவர். அவரிடம் எவ்விதப் பாவங்களும்
இல்லை. அவர் குற்றமில்லாதவர். பாவிகளால்
பாதிக்கப்படாதவர். இவர் பரலோகத்தில்
மேலான நிலைக்கு உயர்த்தப்பட்டார். 27இவர்
மற்ற ஆசாரியர்களைப் போன்றவரல்லர்.
அவர்கள் ஒவ்வொரு நாளும் பலிசெலுத்த
வேண்டியிருந்தது. அவர்கள் முதலாவது தங்
கள் பாவங்களுக்காகவும், பின்பு மக்களின்
பாவங்களுக்காகவும் பலி செலுத்த வேண்
டியிருந்தது. ஆனால் இவரோ அவ்வாறில்லை.
அத்தகைய தேவையும் இவருக்கில்லை. இவர்
தன்னையே பலிகொடுத்திருக்கிறார். அதுவே
என்றென்றைக்கும் போதுமானது. 28மோசே
யின் சட்டம் மனிதர்களை ஆசாரியர்களாக
நியமிக்கிறது. அம் மனிதர்களுக்கு பலவீன
மிருந்தது. ஆனால் ஆணை அடங்கிய அந்தப்
பகுதி சட்டத்திற்குப் பிறகு வருகிறது. மேலும்
அது என்றென்றைக்குமாக பரிசுத்தமாக்கப்
பட்ட தேவனுடைய குமாரனான இயேசுவைப்
பிரதான ஆசாரியராக நியமித்தது.

### இயேசுவே நமது பிரதான ஆசாரியர்

8 பரலோகத்தில் தேவனுடைய சிம்மாச
னத்திற்கு வலதுபக்கமாய் வீற்றிருக்கிற
ஒரு பிரதான ஆசாரியர் நமக்கு இருக்கிறார்
என்பதையே நாங்கள் குறிப்பிட விரும்புகி
றோம். 2மேலும், பரிசுத்த இடத்திலும், மனிதர்
களால் அல்லாமல் தேவனால் ஸ்தாபிக்கப்பட்ட
பரிசுத்தக் கூடாரத்திலும் அவர் ஆசாரியராக
சேவை செய்து கொண்டிருக்கிறார்.
3காணிக்கைகளையும் பலிகளையும்
கொடுக்கும்பொருட்டு ஒரு பிரதான ஆசாரியன்
நியமிக்கப்பட்டிருக்கிறார். ஆதலால் வழங்குவ
தற்கு ஏதோ ஒன்று இயேசுவுக்கும் தேவை
யாயிருக்கிறது. 4நமது பிரதான ஆசாரியனும்
இப்போது பூமியில் இருந்திருந்தால், ஆசாரி
யனாக இருக்கமாட்டார். ஏனெனில் சட்டம்
விவரிக்கிற காணிக்கைகளை வழங்குகிற
ஆசாரியர்கள் ஏற்கெனவே இருக்கிறார்கள்.
5அவர்கள் புரியும் சேவையானது பரலோகத்
தில் உள்ள சேவையின் சாயலாகவும், நிழ
லாகவும் மட்டுமே இருக்கிறது. அதனால் தான்
பரிசுத்தக் கூடாரத்தை* மோசே ஸ்தாபிக்கப்
போகும்போது தேவன் எச்சரித்தார். "மலை
யிலே உனக்கு நான் காட்டிய மாதிரியின்
படியே நீ ஒவ்வொன்றையும் செய்ய உறுதி
யாய் இரு" என்று தேவன் சொன்னார். 6மிக
உயர்ந்த கடமையானது இயேசுவுக்குத் தரப்
பட்டது என்பதே இதன் பொருள் ஆகும்.
மேலும் இதே முறையில் அவர் நடுவராக
இருக்கிற உடன்படிக்கையும் உயர்வானதா

---

**நீர் ... இருக்கிறீர்** சங்கீதம் 110:4

**உடன்படிக்கை** தேவன் தம் மக்களுக்கு ஒரு ஒப்பந்தம் அல்லது உடன்படிக்கையைக் கொடுத்தார். யூதர்களுக்கு மோசேயின் சட்டங்கள் தான் உடன்படிக்கை. ஆனால் இப்போது தேவன் புதிய சிறந்த உடன்படிக்கையை கிறிஸ்துவின் மூலம் கொடுத்தார்.

**பரிசுத்த கூடாரம்** சிறப்பான கூடாரம். இதில் தேவனுக்கு யூத ஆசாரியர்கள் வழிபாடு நடத்துவார்கள். இங்கு தேவன் தம் மக்களோடு இருப்பார்.

கும். ஏனெனில், நல்ல வாக்குறுதிகளால் இந்த
உடன்படிக்கை நிறுவப்பட்டது.
7 பழைய உடன்படிக்கையில் எவ்விதக்
குறையும் இல்லாவிட்டால் இரண்டாவது உடன்
படிக்கைக்குத் தேவையில்லாமல் போயிருக்
கும்.
8 ஆனால் தேவன் மக்களிடம் சில பிழை
களைக் கண்டுபிடித்து அவர்களிடம்,

"இஸ்ரவேல்* மக்களோடும் யூதா* மக்க
ளோடும் ஒரு புதிய உடன்படிக்கையை
நான் ஏற்படுத்தும் காலம் வந்துகொண்
டிருக்கிறது என்று கர்த்தர் சொல்
கிறார்" என்றார்.

9 "அவர்கள் கையைப் பிடித்து அழைத்
துச் சென்று எகிப்துக்கு வெளியே
வழி நடத்தியபோது அவர்களுடைய
முன்னோர்களோடு நான் செய்து
கொண்ட உடன்படிக்கை போல அது
இருக்காது. அது வித்தியாசமாக இருக்
கும், ஏனெனில், அந்த உடன்படிக்
கைக்கு அவர்கள் உண்மையுள்ளவர்
களாக தொடர்ந்து இருக்கவில்லை என்
பதால் நான் அவர்களிடமிருந்து விலகி
னேன்." அக்காரியங்களைக் கர்த்தர்
சொன்னார்.

10 "அந்த நாட்களுக்குப்பின்பு இஸ்ரவேல்
மக்களோடு நான் செய்து கொள்ளும்
புதிய உடன்படிக்கையாகும் இது. நான்
எனது சட்டங்களை அவர்கள் மனங்
களில் பதித்து அவர்கள் இதயங்களின்
மேல் எழுதுவேன். நான் அவர்களின்
தேவனாக இருப்பேன். அவர்கள்
எனது பிள்ளைகளாக இருப்பார்கள்.

11 அதற்குப் பின்பு கூடவாழும் குடிமக
னுக்கோ அல்லது தேசத்தவனுக்கோ
கர்த்தரை அறிந்துகொள் எனப் போதிக்
கவேண்டிய அவசியம் ஒருவனுக்கும்
இருக்காது. ஏனெனில் சிறியவன் முதற்
கொண்டு பெரியவன் வரைக்கும் அவர்
கள் எல்லாரும் என்னை அறிவார்கள்.

12 ஏனெனில் நான் அவர்கள் எனக்கெதி
ராகச் செய்த தவறுகளை மன்னித்து
விடுவேன். அவர்களின் பாவங்களை
இனிமேல் நினையாது இருப்பேன்."

எரேமியா *31:31-34*

13 தேவன் இதனைப் புதிய உடன்படிக்கை
என்று அழைத்தபோது முதல் உடன்படிக்
கையை பழசாக்கினார். இப்போது பழமையா
னதும் நாள்பட்டிருக்கிறதுமான அந்த உடன்
படிக்கை விரைவில் மறைந்துபோகும்.

**இஸ்ரவேல்** யூத நாட்டின் வடபகுதி.

**யூதா** யூத நாட்டின் தென்பகுதி.

### பழைய உடன்படிக்கையின்படி வழிபாடு

9 முதலாம் உடன்படிக்கையானது வழிபாட்
டிற்கான விதிகளை உடையது. மனிதர்க
ளால் உருவாக்கப்பட்ட வழிபாட்டிற்கான
இடத்தை உடையது. 2 இந்த இடம் ஒரு கூடாரத்
துக்கு உள்ளே இருந்தது. கூடாரத்திற்குள் முன்
பகுதி உள்ள இடம் பரிசுத்தமான இடம் என
அழைக்கப்பட்டது. அந்தப் பரிசுத்தமான இடத்
தில் ஒரு குத்துவிளக்கும், ஒரு மேஜையும்,
தேவனுக்குப் படைக்கப்பட்ட சிறப்பான அப்
பங்களும் இருந்தன. 3 இரண்டாம் திரைக்குப்
பின்னே மிகப் பரிசுத்தமானது என அழைக்
கப்படும் இடம் இருந்தது. 4 அதில் பொன்னால்
செய்த தூபகலசமும் பழைய உடன்படிக்கை
வைக்கப்பட்ட பரிசுத்தமான பெட்டியும்* இருந்
தன. அப்பெட்டி தங்கத் தகட்டால் மூடி வைக்
கப்பட்டிருந்தது. அப்பெட்டிக்குள் மன்னா*
வைக்கப்படிருந்த தங்கப்பாத்திரமும் துளிர்த்த
இலைகளையுடைய ஆரோனின் கைத்தடியும்
இருந்தன. மேலும் பத்துக் கட்டளைகள்
பொறித்த உடன்படிக்கையின் கற்பலகைகளும்
இருந்தன. 5 அப்பெட்டியின் மேல் கிருபையா
கிய இருக்கையை மறைத்தபடி தேவனுடைய
விசேஷ தூதர்கள் இருந்தார்கள். (இப்பொழுது
இவற்றைப் பற்றிய உண்மையான விபரங்க
ளைச் சொல்ல காலம் போதாது.)
6 இவ்விதத்தில் எல்லாப் பொருள்களும்
ஆயத்தப்படுத்தப்பட்ட பிறகு, ஆராதனை
சேவையை செய்யும் பொருட்டு ஆசாரியர்கள்
முதலாம் பரிசுத்தக் கூடாரத்தில் நித்தமும் செல்
லத் தொடங்குவார்கள். 7 ஆனால் பிரதான ஆசா
ரியர் மட்டுமே மிகப் பரிசுத்தமான இரண்டாம்
அறைக்குள் பலியின் இரத்தத்தைச் சிந்தி
நுழைய முடியும். அவர் முதலில் தான் செய்த
பாவங்களுக்காகக் காணிக்கை செலுத்த
வேண்டும். அதற்குப்பிறகு தவறுசெய்து
கொண்டிருக்கிறோம் என்று தெரியாமலேயே
அறியாமையால் மக்கள் செய்த பாவங்களுக்
காக அவர் காணிக்கைகளை வழங்கவேண்
டும்.
8 முதலாம் கூடாரம் நிற்கும் வரையிலும்
மிகப் பரிசுத்தமான இடத்திற்குப் போகும்
வழியானது மூடப்பட்டிருக்கிறது என்பதைப்
புலப்படுத்தவே பரிசுத்த ஆவியானவர் இவ்வி
ரண்டு அறைகளையும் பயன்படுத்துகிறார்.
9 எல்லாமே நிகழ்காலத்தின் ஒரு அடையாளமா
னது. தாம் செலுத்தும் காணிக்கையாலும்,
பலிகளாலும் வழிபடுகிறவனின் மனசாட்சியா
னது முழுமைப்படுத்தப்படுவதில்லை. 10 ஏனெ
னில் உண்ணுதல், பருகுதல், சடங்குக் குளி
யல்கள் ஆகிய புற விஷயங்களைப் பற்றிய
காணிக்கைகளும் பலிகளுமாகவே இருக்கின்

**உடன்படிக்கை ... பெட்டி** மரப்பெட்டி தங்கத்தால் மூடப்பட்டது. இதில் தேவனுடைய சட்டங்கள் பதிக்கப்பட்ட இரு கற்பலகைகள் இருந்தன.

**மன்னா** யூத மக்களுக்கு தேவன் வனாந்திரத்தில் கொடுத்த உணவு.

*றன. இவ்விஷயங்கள் தேவனுடைய புதிய வழி உண்டாகும் வரைக்கும் பயன்படுகின்றன.*

### புதிய உடன்படிக்கையின்படி வழிபாடு

[11]*மேலும் இப்போது வரப்போகிற நன்மைகளுக்குரிய பிரதான ஆசாரியனாக கிறிஸ்து வந்திருக்கிறார். (சாதாரண கூடாரத்தின் வழியே அவர் வரவில்லை). மனிதக் கைகளால் உருவாக்கப்படாத உயர்ந்ததும், பரிசுத்தமானதுமான கூடாரத்தின் வழியே வந்தார். அக்கூடாரமானது தேவன் உருவாக்கிய இவ்வுலகத்தின் பகுதியல்ல.* [12]*மேலும் மிகப் பரிசுத்தமான கூடாரத்திற்குள் இயேசு நுழைந்தபோது, வெள்ளாட்டுக்கடாக்கள் மற்றும் காளைகளின் இரத்தத்தை அவர் பயன்படுத்தவில்லை. மிகப் பரிசுத்தமான கூடாரத்திற்குள் நுழைய அவர் தன் சொந்த இரத்தத்தையே பயன்படுத்தினார். எல்லா காலத்திற்கும் போதுமென்கிற அளவிற்கு ஒரே ஒரு முறைதான் அவர் அதற்குள் சென்றார். இவ்வழியில் நமக்கு அவர் நித்திய விடுதலையைப் பெற்றுத் தந்தார்.* [13]*வெள்ளாட்டுக்கடா காளை ஆகியவற்றின் இரத்தமும் தீட்டுப்பட்ட மக்கள் மீது தெளிக்கப்பட்ட கடாரியின் சாம்பலும் அவர்களைப் பரிசுத்தமாக்கிப் புறப்பரிசுத்தம் உடையவர்களாக்க முடியும்.* [14]*இது உண்மை எனில், கிறிஸ்துவின் இரத்தம் இதிலும் மிக்க வல்லமை உள்ளது என்பதை எண்ணிப் பாருங்கள். பரிசுத்த ஆவியானவர் மூலமாக தேவனுக்கு இயேசு தன்னைத்தானே ஒரு முழுமையான பலியாக வழங்கினார். ஆகவே நமக்கு ஆன்மீக மரணத்தைக் கொண்டு வருகிற தீய செயல்களில் இருந்து அவர் இரத்தமானது நம் இதயத்தை சுத்தமாக்கும். ஜீவனுள்ள தேவனை வழிபடும் வண்ணம் நாம் சுத்தமாக்கப்படுகிறோம்.*

[15]*கிறிஸ்து இறந்ததால், புதிய உடன்படிக்கையின்* * *நடுவராக அவர் ஆனார். இப்போது முதல் உடன்படிக்கையின் கீழ் செய்த தவறுகளில் இருந்து மக்களை விடுவிக்கும் கிறிஸ்துவின் மரணம் ஒன்றிருந்தது. அதனால், அழைக்கப்பட்டவர்கள் (இக்காரியங்களில் பகிர்ந்து கொள்ள) என்றென்றும் உரிமைகளைப் பெறுவர்.*

[16]*ஒரு மனிதன் இறக்கும்போது அவன் தன் மரண சாசனத்தை விட்டுச்செல்கிறான். ஆனால் அம்மரண சாசனத்தை எழுதியவன் இறந்துபோனான் என்பதை மக்கள் நிரூபிக்க வேண்டும்.* [17]*மரண சாசனத்தை எழுதியவன் வாழ்கிறான் என்றால் அந்த சாசனத்திற்குப் பொருள் இல்லை. அந்தச் சாசனத்தை அவன் இறந்த பிறகே பயன் படுத்தமுடியும்.* [18]*தேவனுக்கும் அவரது மக்களுக்கும் ஏற்பட்ட முதல் உடன்படிக்கையும் இது போலாயிற்று. இதுவும் இரத்தமில்லாமல் நன்மையடையவில்லை.* [19]*முதலில் மோசே சட்டத்தில் உள்ள ஒவ்வொரு கட்டளையையும் அறிவித்தான். பிறகு இளங்காளைகளின் இரத்தத்தைத் தண்ணீரோடும், சிவப்பான ஆட்டு மயிரோடும் ஈசோப்போடும்* * *கூட எடுத்து சட்டப் புத்தகத்தின் மேலும் மக்கள் மீதும் தெளிக்கப் பயன்படுத்தினான்.* [20]*"தேவன் உங்களுக்குக் கட்டளையிட்ட உடன்படிக்கையின் இரத்தம் இதுதான்" என்று மோசே கூறினான்.* [21]*இவ்வாறு பரிசுத்தக் கூடாரத்தின் மேலும் மோசே இரத்தத்தை தெளித்தான். அத்துடன் வழிபாட்டிற்குரிய அனைத்துப் பொருட்களின் மீதும் தெளித்தான்.* [22]*அனைத்தையும் இரத்தத்தால் சுத்தப்படுத்த முடியும் என்று சட்டம் சொல்கிறது. இரத்தம் இல்லாமல் எவ்வித பாவங்களும் மன்னிக்கப்பட மாட்டாது.*

### கிறிஸ்துவின் பலி பாவங்களை நீக்குகிறது

[23]*எனவே பரலோகத்தில் உள்ளவற்றின் சாயலாக உள்ள இவற்றை விலங்குகளைப் பலிகொடுத்து சுத்தம் செய்யவேண்டியது அவசியம் ஆகும். ஆனால் பரலோகத்தில் உள்ளவற்றிற்கு இதைவிடச் சிறப்பான பலிகள் அவசியம் ஆகும்.* [24]*கிறிஸ்து மிகப் பரிசுத்தமான இடத்திற்குப் போனார். ஆனால் உண்மையானதின் சாயலாக மனிதக் கைகளால் செய்யப்பட்ட இடத்திற்குப் போகவில்லை. கிறிஸ்து பரலோகத்திற்கே சென்றார். இப்போது அங்கே நமக்காக தேவனுக்கு முன் தோன்றுகிறார்.* [25]*ஒவ்வொரு ஆண்டும் தனக்குச் சொந்தமற்ற இரத்தத்தோடு (யூத) பிரதான ஆசாரியன் மிகப் பரிசுத்தமான இடத்திற்குள் செல்ல வேண்டும். ஆனால் மீண்டும் மீண்டும் கிறிஸ்து தன்னையே வழங்கிக் கொள்ள வேண்டியதில்லை.*

[26]*அப்படியானால் உலகம் உண்டானது முதல் அவர் அநேகந்தரம் இது போல் பாடுபட வேண்டியது இருந்திருக்கும். அவர் தம்மை தாமே பலியிடவேண்டியிருந்தது. அதனால் அவர் இந்தக் கடைசி காலத்தில் ஒரே ஒருதரம் தம்மைப் பலியிட்டார். இதன் மூலம் அவர் அனைவரது பாவங்களையும் நீக்கிவிட்டார்.* [27]*ஒவ்வொரு மனிதனும் ஒரு முறைமட்டுமே சாகிறான். அதன் பிறகு நியாயந்தீர்க்கப்படுகிறான்.* [28]*ஆகையால் ஒவ்வொருவரின் பாவங்களையும் தீர்க்கும்படி கிறிஸ்து ஒருமுறை மரித்தார். மேலும் கிறிஸ்து இரண்டாம் முறையும் வருவார், பாவங்களைத் தீர்க்கும்படி அல்ல. தமக்காகக் காத்துக் கொண்டிருக்கிறவர்களுக்கு இரட்சிப்பை அளிக்க வருவார்.*

### கிறிஸ்துவின் பலி நம்மை முழுமையாக்குகிறது

**10** *நியாயப்பிரமாணமானது எதிர்காலத்தில் நேரிடும் நன்மைகளைப் பற்றிய முழுமையற்ற ஒரு சித்திரத்தையே கொடுக்கி*

---

***புதிய உடன்படிக்கை*** *இது சிறந்த உடன்படிக்கை. இது தேவனால் இயேசுவின் மூலம் கொடுக்கப்பட்டது.*

***ஈசோப்*** *தூரிகை போன்று, திரவத்தை தெளிக்க பயன்பட்ட சிறப்பான செடி.*

றது. அது தெளிவற்றதாக உள்ளது. அது
உண்மையான விஷயங்களின் முழுச்சித்திரம்
அல்ல. அது மக்களிடம் ஒவ்வொரு ஆண்டும்
ஒரே மாதிரியான பலிகளைக் கொடுக்குமாறு
கூறுகிறது. தேவனை வழிபட வருகிறவர்க
ளும் அவ்வாறே கொடுத்து வருகின்றனர்.
நியாயப்பிரமாணம் அவர்களை என்றும்
முழுமையானவர்களாக ஆக்காது. 2சட்டம்
மனிதர்களை பூரணப்படுத்துமானால், வழங்
கப்பட்டுக்கொண்டிருக்கிற பலிகளும் நின்றி
ருக்கும். ஏனெனில் வழிபடுகிறவர்கள் ஏற்
கெனவே பரிசுத்தப்படுத்தப்பட்டு அவர்கள் தம்
பாவங்களுக்காகக் குற்ற உணர்ச்சி உடைய
வர்களாக இருக்கமாட்டார்கள். 3ஆனால் ஒவ்
வொரு ஆண்டும் வழங்கப் படுகிற அப்பலிகள்
அவர்களின் பாவங்களையே அவர்களுக்கு
நினைவுறுத்துகின்றன. 4ஏனென்றால் வெள்
ளாடு, கன்றுகுட்டி போன்றவற்றின் இரத்தம்
நமது பாவங்களை விலக்காது.
5ஆகவே கிறிஸ்து இந்த உலகத்துக்கு வரும்
போது, அவர்,

“நீர் (தேவன்) காணிக்கைகளையும் பலி
களையும் விரும்புவதில்லை. ஆனால்
எனக்காக ஒரு சரீரத்தை ஆயத்தம்
செய்தீர்.
6 மிருகங்களைக் கொன்றும் எரித்தும்
கொடுக்கப்படுகிற பலிகள் உம்மைச்
சந்தோஷப்படுத்தாது. பாவநிவாரண
பலிகளும் உம்மைச் திருப்திப்படுத்
தாது” எனறார்.
7 பிறகு நான், ‘தேவனே! இதோ இருக்
கிறேன். உம்முடைய விருப்பத்தை
நிறைவேற்ற வந்திருக்கிறேன். நியா
யப்பிரமாண புத்தகத்தில் என்னைக்
குறித்து எழுதியிருக்கிறது’ என்
றேன்.”

*சங்கீதம் 40:6-8*

8“நீர் பலிகளையும் காணிக்கைகளையும்
விரும்புவதில்லை. மிருகங்களைக் கொன்றும்
எரித்தும் கொடுக்கப்படுகிற பலிகளாலும்
பாவநிவாரண பலிகளாலும் நீர் திருப்தியுற
வில்லை” (இந்தப் பலிகள் எல்லாம் கட்டளை
யிடப்பட்டிருந்தாலும் கூட) என்று முதலில்
அவர் சொன்னார்.
9பிறகு கிறிஸ்து, “தேவனே! நான் இதோ
இருக்கிறேன். உம்முடைய விருப்பப்படி செய்
வதற்காக வந்திருக்கிறேன்” என்றார். ஆகவே
தேவன் முதலாவதுள்ள பலி முறைகளை ஒரு
முடிவுக்குக் கொண்டு வந்து தன் புதிய வழிக
ளைத் தொடங்கி விட்டார். 10இயேசு கிறிஸ்து
தேவனுடைய விருப்பப்படியே காரியங்களை
செய்தார். அதனால் அவரது இறப்பாகிய பலி
மூலம் நம்மைப் பரிசுத்தமாக்கினார். அவர்
இப்பலியை என்றென்றைக்கும் போதுமான
வகையில் ஒருமுறை செய்து முடித்தார். 11ஒவ்
வொரு நாளும் ஆசாரியர்கள் நின்றுகொண்டு
தமது மதச் சடங்குகளைச் செய்கின்றனர்.
அவர்கள் மீண்டும் மீண்டும் அதே பலிகளைக்
கொடுக்கின்றனர். ஆனால் அப்பலிகள் ஒரு
போதும் பாவங்களை நீக்காது. 12ஆனால்
கிறிஸ்து மக்களின் பாவங்களைப் போக்க
ஒரே ஒரு முறைதான் தன்னைப் பலிகொடுத்
தார். என்றென்றைக்கும் அது போதுமான
தாயிற்று. அவர் தேவனுடைய வலது புறத்தில்
அமர்ந்துகொண்டார். 13அவர் இப்பொழுது
தனது எதிரிகளைத் தன் அதிகாரத்திற்குள்
கொண்டுவர காத்துக் கொண்டிருக்கிறார்.
14ஒரே ஒரு பலியின் மூலம் அவர் என்றென்
றைக்கும் தம் மக்களை முழுமையாக்கி விட்
டார். அம்மக்களே பரிசுத்தமாக்கப்படுகிறார்
கள்.
15பரிசுத்த ஆவியானவரும் இதைப்பற்றி
சொல்லியிருக்கிறார்.

16 முதலில் அவர், “பிறிதொருகாலத்தில்
அவர்களோடு நான் செய்யப்போகிற
உடன்படிக்கை இதுதான். என் சட்டங்
களை அவர்கள் இதயங்களில் பதிய
வைப்பேன். மேலும் அவற்றை அவர்
களின் மனங்களில் எழுதுவேன்”

*எரேமியா 31:33*

என்று சொன்னார். மேலும்

17 “அவர்களின் பாவங்களையும் அவர்
கள் செய்த தீமைகளையும் நான் மன்
னித்துவிடுவேன். மீண்டும் அவற்றை
நான் நினைத்துப் பார்க்கமாட்டேன்”

*எரேமியா 31:34*

என்றார்.
18ஒரு முறை இப்பாவங்கள் அனைத்தும்
மன்னிக்கப்படுகின்றன. பிறகு பலிகளுக்கான
தேவை இல்லை.

### தேவனிடம் நெருங்கி வாருங்கள்

19ஆதலால் சகோதர சகோதரிகளே! மிகப்
பரிசுத்தமான இடத்திற்குள் நுழைய நாம் முழு
மையாக விடுதலை பெற்று விட்டோம். நாம்
அச்சம் இல்லாமல் இதனைச் செய்ய முடியும்.
ஏனென்றால் கிறிஸ்துவின் மரணம் நமக்காக
நிகழ்ந்து விட்டது. 20இப்போது மிகப்பரிசுத்த
மான இடத்தின் வழியை மூடிக்கொண்டி
ருக்கிற அத்திரைக்குள் நுழைய நம்மிடம் ஒரு
புதிய வழி இருக்கிறது. தன் சரீரத்தையே
பலியாகத் தந்து அப்புதிய வாழ்வின் வழியை
இயேசு திறந்தார். 21தேவனுடைய வீட்டின்
மேல் அதிகாரியான மாபெரும் ஆசாரியர்
ஒருவர் நமக்கு இருக்கிறார். 22நாம் சுத்தப்
படுத்தப்பட்டு குற்ற உணர்விலிருந்து விடுவிக்
கப்பட்டிருக்கிறோம். நமது சரீரங்கள் பரிசுத்த
நீரால் கழுவப்பட்டுள்ளன. எனவே உண்மை
யான இதயத்தோடும், விசுவாசம் நமக்களிக்
கிற உறுதியோடும் தேவனை நெருங்கி வாருங்

கள். 23மற்றவர்களுக்கு நாம் சொல்கிற நமது
நம்பிக்கையைப் பலமாகப் பற்றிக் கொள்
வோம். நமக்கு வாக்குறுதியளித்த ஒருவரை
நாம் நம்ப முடியும்.

### உறுதிபெற ஒருவருக்கு ஒருவர் உதவுங்கள்

24நாம் ஒருவரைப் பற்றி ஒருவர் சிந்திக்க
வேண்டும். நமது அன்பை வெளிப்படுத்தவும்
நன்மை செய்யவும் எவ்வாறு ஒருவருக்கொரு
வர் உதவுவது என்று பார்க்கவேண்டும்.
25சிலர் வழக்கமாய்ச் செய்வதுபோல நாம்
ஒன்றாகச் சந்திப்பதை நிறுத்திவிடக்கூடாது.
அதற்குப் பதிலாக, ஒருவரையொருவர் உற்சா
கப்படுத்தக் கொள்ளவேண்டும் குறிப்பாகக்
கிறிஸ்து திரும்பி வரும் அந்த நாள் மிக
விரைவில் வருவதை நாம் பார்ப்பது போல
செயல்படவேண்டும்.

### கிறிஸ்துவிடமிருந்து விலகாதீர்கள்

26நாம் உண்மையை உணர்ந்துவிட்ட பின்
னர் வெளிப்படையாக தொடர்ந்து பாவங்க
ளைச் செய்து வந்தால் பிறகு நம் பாவங்க
ளுக்கு வேறு எந்த பலியும் இல்லை. 27நாம்
தொடர்ந்து பாவம் செய்தால், நம்மிடம் நியாயத்
தீர்ப்புக்கான அச்சமும் பகைவர்களை அழிக்
கும் கோபமான நெருப்புமே இருக்கும்.
28மோசேயினுடைய சட்டத்தை ஒருவன் ஒதுக்கி
னால் அக்குற்றத்தை உறுதிப்படுத்த இரண்டு
அல்லது மூன்று சாட்சிகளே போதுமானதாக
இருந்தன. அவன் மன்னிக்கப்படவில்லை,
அவன் கொல்லப்பட்டான். 29ஆகவே தேவனு
டைய குமாரன்மேல் வெறுப்பைக் காட்டுகிற
வன் எவ்வளவு மோசமான தண்டனைக்கு
உரியவன் என்பதை யோசித்துப் பாருங்கள்.
அவன் (இயேசுவின்) இரத்தத்தைப் பரிசுத்த
மற்றதாக நினைத்தான். புதிய உடன்படிக்கை
யின்படி இயேசு சிந்திய அந்த இரத்தம்தான்
அம்மனிதனைப் பரிசுத்தமாக்கிய உடன்
படிக்கையின் இரத்தமாகும். தனக்குக் கிருபை
காட்டிய ஆவியையே அம்மனிதன் அவமானப்
படுத்தினான்.

30“நான், மக்கள் செய்கிற பாவங்களுக்குத்
தண்டனை தருவேன். நானே பதிலுக்குப் பதில்
செய்வேன்”* என்று தேவன் சொன்னதை
நாம் அறிவோம். அதோடு, “கர்த்தர் தன் மக்
களை நியாயம் தீர்ப்பார்”* என்றும் சொன்
னார். 31ஜீவனுள்ள தேவனுடைய கைகளில்
விழுவது ஒரு பாவிக்கு மிகப் பயங்கரமாக
இருக்கும்.

### உனது தைரியத்தையும் மகிழ்ச்சியையும் விட்டுவிடாதே

32நீங்கள் முதன்முதலாக உண்மையை அறி
ந்துகொண்ட நாட்களை நினைத்துப் பாருங்
கள். பல சோதனைகளை நீங்கள் சகித்துக்
கொண்டீர்கள். எனினும் நீங்கள் உறுதியாக
இருந்தீர்கள். 33சில வேளைகளில் வெறுக்கத்
தக்க காரியங்களைப் பற்றி உங்களிடம் சொன்
னார்கள். பலர் முன்னிலையில் உங்களைக்
குற்றம் சுமத்தித் தண்டித்தார்கள்.* சில
வேளைகளில் அப்படி நடத்தப்பட்டவர்களுக்
கும் நீங்கள் உதவியாய் இருந்தீர்கள். 34ஆமாம்,
நீங்கள் சிறையில் இருந்த அவர்களுக்கு உதவி,
அவர்கள் துன்பத்தில் பங்கு கொண்டீர்கள்.
உங்கள் சொத்து உங்களிடமிருந்து அபகரிக்கப்
பட்டபோதும் நீங்களும் அதை மகிழ்வோடு
ஒத்துக் கொண்டீர்கள். ஏனெனில், இதைவிட
வும் மதிப்புமிக்க நிலையான சொத்து உங்க
ளுக்கு உண்டு என்று நீங்கள் அறிவீர்கள்.

35எனவே முன்பு நீங்கள் வைத்திருந்த தைரி
யத்தை விட்டுவிடாதீர்கள். உங்கள் தைரியம்
உங்களுக்குப் பலனைத் தரும். 36நீங்கள் பொறு
மையாக இருக்கவேண்டும். தேவனுக்கு விருப்
பமானவற்றை நீங்கள் செய்த பிறகு, நிச்சயம்
தேவன் வாக்களித்ததை நீங்கள் பெறுவீர்கள்.
37கொஞ்ச காலத்தில்,

> “வரவேண்டியவர் வருவார், அவர் தாம
> திக்கமாட்டார்.
> 38 விசுவாசத்தினாலே நீதிமானாக இருக்
> கிறவன் பிழைப்பான். அவன் அச்சத்
> தால் இதிலிருந்து பின்வாங்குவானே
> யானால் நான் அவன்மீது பிரியமாக
> இருக்கமாட்டேன்.”
>
> உபாகமம் *32:35*

39ஆனால், நாம் கெட்டுப்போகும்படி பின்
வாங்குகிறவர்களாய் இருக்கக்கூடாது. நாம்
விசுவாசம் உடையவர்களாகவும் இரட்சிக்கப்
படுகிறவர்களாகவும் இருக்கவேண்டும்.

### விசுவாசம்

11 நாம் நம்புகிறவற்றின் மீது கொண்டுள்ள
உறுதிதான் விசுவாசம் ஆகும். நாம்
கண்ணால் பார்க்காவிட்டாலும் கூட உண்மை
யான ஒன்றை நம்புவது தான் விசுவாசம்.
2முன்பு வாழ்ந்தவர்களை தேவன் பெரிதும்
விரும்பினார். ஏனென்றால் அவர்கள் இது
போன்ற விசுவாசம் கொண்டவர்களாய் இருந்
தார்கள்.

3தேவன் தமது ஆணையால் இந்த முழு
உலகையும் படைத்தார் என்று நாம் நம்ப
விசுவாசம் உதவுகிறது. அதாவது நாம் பார்க்
கின்ற பொருட்கள் எல்லாம் பார்க்கப்படாத
ஒன்றால் உருவாக்கப் பட்டதை உணர்ந்து
கொள்கிறோம்.

4காயீனும் ஆபேலும் தேவனுக்குப் பலி
கொடுத்தார்கள். ஆனால் ஆபேலின் பலி, அவ
னது விசுவாசம் காரணமாக உயர்வாகக்
கருதப்பட்டது. தேவனும் அதையே விரும்பி

---

**நானே ... செய்வேன்** உபா. 32:35.
**கர்த்தர் ... தீர்ப்பார்** சங்கீதம் 135:14.

**தண்டிக்கிறார்கள்** தீமை செய்தல் அல்லது காயப்படுத்துதல்.

*ஏற்றுக்கொண்டார். ஆகவே அவனை நல்லவன் என்று அழைத்தார். அவன் இறந்து போனான். எனினும் அவன் தன் விசுவாசத்தின் வழியே இன்னும் பேசிக்கொண்டிருக்கிறான்.*

5ஏனோக்கு இறக்கவில்லை. இந்தப் பூமியில் இருந்து எடுத்துக் கொள்ளப்பட்டான். அவன் எடுத்துக் கொள்ளப்படுவதற்கு முன் தேவனுக்கு விருப்பமானவனாக இருந்தான். தேவன் அவனை தன்னிடம் எடுத்துக்கொண்டார். அதனால் மக்கள் அதன் பிறகு அவனைக் கண்டு கொள்ள முடியவில்லை. இது அவனது விசுவாசத்தினாலேயே ஆயிற்று. 6விசுவாசம் இல்லாமல் எவனும் தேவனுக்கு விருப்பமானவனாக இருக்கமுடியாது. தேவனிடத்தில் வருகிறவன் அவர் உண்மையாகவே இருக்கிறார் என நம்பிக்கை கொள்கிறான். அதோடு தம்மைத் தேடுகிறவர்களுக்குப் பலன் கொடுப்பார் என்றும் நம்பிக்கை கொள்ள வேண்டும்.

7நோவா, இதுவரை அவன் காணாததைப் பற்றி தேவனால் எச்சரிக்கை செய்யப்பட்டான். ஆனால் நோவா தேவன் மீது விசுவாசமும், மரியாதையும் கொண்டிருந்தான். எனவே அவன் பெரிய கப்பலைச் செய்து தன் குடும்பத்தைக் காப்பாற்றிக்கொண்டான். தனது விசுவாசத்தின் மூலமாக இந்த உலகம் தவறானது என்பதை நோவா நிரூபித்தான். இதனால் விசுவாசத்தின் வழியாக தேவனுக்கு முன் நீதிமான்களாகக் கருதப்பட்ட சிலருள் ஒருவனானான்.

8தேவன் ஆபிரகாமை அழைத்தார். அவர் வாக்களித்தப்படி ஒரு இடத்துக்குப் பயணம் போகச் சொன்னார். அவனுக்கு அந்த இடம் எங்கே உள்ளது என்று தெரியாது. எனினும் அவனுக்கு விசுவாசம் இருந்ததால், தேவனுக்குக் கீழ்ப்படிந்து அவர் சொன்னபடி பயணம் செய்தான். 9தேவன் தருவதாக வாக்களித்த நாட்டில் ஆபிரகாம் வாழ்ந்தான். அங்கே ஒரு பரதேசியைப்போல அலைந்தான். எனினும் அவன் விசுவாசம் வைத்திருந்தான். ஈசாக்கு, யாக்கோபு, ஆகியோரோடு கூடாரத்தில் குடியிருந்தான் அவர்களும் தேவனுடைய வாக்குறுதியைப் பெற்றார்கள். 10ஆபிரகாம், உண்மையான அஸ்திபாரம் இடப்பட்ட தேவனுடைய நகரத்துக்காக* காத்திருந்தான்.

11ஆபிரகாம் மிகவும் முதியவன். குழந்தைப் பேற்றுக்கான வாய்ப்பு இல்லாதவன். சாராளும் அப்படியே. ஆபிரகாம் தேவனிடம் விசுவாசம் வைத்ததால் அவர்களுக்குக் குழந்தை பிறந்தது. 12அவன் ஏறக்குறைய இறந்து போகின்றவனைப் போன்று இருந்தான். ஆனால் அவனிடமிருந்து முதுமை பருவத்தில் ஒரு பரம்பரை தோன்றி வானத்து நட்சத்திரங்களைப் போன்று விளங்கியது. கடற்கரையில் உள்ள மணலைப்போன்று ஏராளமான மக்கள் அவனிடமிருந்து வெளிப்பட்டனர். 13இந்த மாபெரும் மனிதர்கள் அனைவரும் இறுதிவரை தங்கள் விசுவாசத்துடனேயே வாழ்ந்தனர். இவர்கள் வாக்களிக்கப்பட்டதைப் பெற்றுக்கொள்ளாமல், வெகுதூரத்திலே அவற்றைக் கண்டு, நம்பி அணைத்துக் கொண்டனர். பூலோகத்தில் தாம் அந்நியர்களாகவும், பரதேசிகளாகவும் இருந்ததை அவர்கள் வெளிப்படையாக ஒத்துக்கொண்டனர். 14அவர்கள் தம் சொந்த தேசத்தை இன்னும் தேடிக் கொண்டிருக்கிறார்கள் என்பதையே இத்தகைய விஷயங்களைப் பேசுகிறவர்கள் உணர்த்துகிறார்கள். 15அவர்கள் தாங்கள் விட்டுவந்த நாட்டைப்பற்றி நினைத்திருந்தார்களேயானால் அவர்கள் அதற்குத் திரும்பிபோக சமயம் கிடைத்திருக்குமே. 16ஆனால் அவர்கள் பரலோகம் என்னும் சிறப்பான நாட்டிற்குப் போகக் காத்திருக்கிறார்கள். எனவே தேவன் தன்னை அவர்களது தேவன் என்று அழைத்துக்கொள்வதில் வெட்கப்படுவதில்லை. தேவன் அவர்களுக்காக ஒரு நகரத்தை உருவாக்கியிருக்கிறார்.

17-18தேவன் ஆபிரகாமின் விசுவாசத்தைச் சோதித்தார். ஆபிரகாமிடம் ஈசாக்கைப் பலி கொடுக்கும்படி தேவன் சொன்னார். ஆபிரகாமும் விசுவாசத்தின் காரணமாக அந்த கட்டளையைப் பின்பற்றினான், ஏனென்றால் ஏற்கெனவே தேவன் ஆபிரகாமுக்கு வாக்களித்துள்ளார். "ஈசாக்கு மூலம் உன் பரம்பரை வளரும்" என்றும் கூறியுள்ளார். ஆனாலும் ஒரே மகனான அந்த ஈசாக்கைப் பலிகொடுக்க ஆபிரகாம் முன் வந்தான்.

19தேவன் மக்களை மரணத்திலிருந்து எழுப்புவார் என ஆபிரகாம் நம்பினான். உண்மையில் அதுபோன்றே ஆபிரகாம் அவன் மகனைக் கொல்லாதபடி தேவன் தடுத்துவிட்டார். இதுவும் மரணத்திலிருந்து எழுப்பியதுபோலாயிற்று.

20யாக்கோபையும் ஏசாவையும் ஈசாக்கு ஆசீர்வதித்தான். ஈசாக்கு இதனை விசுவாசத்தின் அடிப்படையில் செய்தான். 21யாக்கோபு யோசேப்பின் மகன்களில் ஒவ்வொருவரையும் ஆசீர்வதித்தான். யாக்கோபு தான் இறந்து கொண்டிருக்கும்போது இதனைச் செய்தான். அவன் தனது கோலின் முனையில் சாய்ந்து கொண்டு தொழுதான். யாக்கோபு இப்படிச் செய்ததற்கும் அவனது விசுவாசமே காரணமாகும்.

22யோசேப்பு இறந்து கொண்டிருந்த நேரத்தில், இஸ்ரவேலர்கள் எகிப்தை விட்டுப் போவதைப் பற்றி பேசினான். அவன் இதனை விசுவாசத்தால் சொன்னான். தனது சரீரத்தை என்ன செய்யவேண்டும் என்பதைப் பற்றியும் மக்களிடம் சொன்னான்.

23மோசே பிறந்த பிறகு, அவன் அழகாக இருந்ததை அவன் பெற்றோர்கள் கண்டு மூன்று மாத காலத்திற்கு (எகிப்து அரசனிமி

---

**நகரம் தேவனுடை**ய மக்கள் அவரோடு வாழும் ஆன்மீகமான நகரம். இதனைச் பரம எருசலேம் என்றும் அழைப்பர். எபி. 12:22.

ருந்து) மறைத்து வைத்தார்கள். விசுவாசத்தின் அடிப்படையிலேயே இதைச் செய்தனர். அரச கட்டளைக்குப் பயப்படாமல் இதை செய்தனர்.

**24**மோசே வளர்ந்து பெரியவன் ஆனான். பார்வோனுடைய மகளின் மகன் என அழைக்கப்படுவதை மறுத்தான்.

**25**பாவத்துக்குரிய தற்காலிக சந்தோஷத்தை அனுபவிப்பதை விட தேவனுடைய மக்களோடு துன்பத்தை அனுபவிப்பதையே அவன் தேர்ந்தெடுத்தான். **26**எகிப்தின் கருவூலத்தை விட கிறிஸ்துவுக்காகத் தாங்கிக் கொண்ட பாடுகளை மதிப்பு மிக்கதாக அவன் நினைத்தான். ஏனெனில் வர இருக்கிற பலனுக்காக அவன் பார்த்திருந்தான். **27**மோசே எகிப்திலிருந்து வெளியேறினான். தன் விசுவாசத்தின் அடிப்படையில் அப்படிச் செய்தான். அவன் அரசனின் கோபத்துக்கும் அஞ்சவில்லை. அவன் தொடர்ந்து உறுதியாக இருந்தான். ஒருவராலும் பார்க்க இயலாத தேவனை அவனால் பார்க்க முடிந்தது. **28**அவன் பஸ்காவைத் தயார் செய்தான். கதவின் மீது இரத்தத்தைப் பூசினான். யூதமக்களின் முதல் ஆண் குழந்தையை மரணதூதன்* கொல்லாதபடிக்கு இதை செய்தான். மோசே இதனை விசுவாசத்தோடு செய்தான்.

**29**மோசே தன் மக்களை அழைத்துக் கொண்டு போனான். அப்போது செங்கடல் காய்ந்த தரையைப் போலாயிற்று. அவர்களின் விசுவாசமே இதற்குக் காரணமாகும். எகிப்தியர்களும் அவ்வாறே கடலைக் கடக்க முனைந்து அமிழ்ந்து போனார்கள்.

**30**எரிகோவின் சுவர்கள், தேவனது மக்களின் விசுவாசத்தினால் விழுந்துபோனது. அவர்கள் ஏழு நாட்கள் அந்த சுவர்களைச் சுற்றி வந்தனர். அப்புறம் அச்சுவர்கள் விழுந்தன. **31**ராகாப் என்னும் விலைமாதும் இஸ்ரவேல் ஒற்றர்களை நண்பர்களைப் போல வரவேற்றாள். அவளது விசுவாசத்தின் காரணமாக கீழ்ப்படியாதவர்கள் கொல்லப்பட்டபோது அவள் தன் வீட்டாருடன் சேதமடையாமல் தப்பினாள்.

**32**பின்னும் வேறு எடுத்துக்காட்டுகளை நான் சொல்லவேண்டுமா! கிதியோன், பாராக், சிம்சோன், யெப்தா, தாவீது, சாமுவேல் என்பவர்களையும் தீர்க்கதரிசிகளையும் குறித்து விளக்கிச் சொல்ல காலம் போதாது.

**33**விசுவாசத்தாலேயே அவர்கள் அரசுகளை வெற்றிகொண்டார்கள். நீதியை வலியுறுத்தினார்கள். தேவனுடைய வாக்குறுதிகளை பெற்றுக்கொண்டார்கள். சிலர் சிங்கங்களின் வாய்களை மூடினார்கள். **34**சிலர் நெருப்பின் உக்கிரத்தைக் குறைத்தார்கள். வாளின் சாவிலிருந்து தப்பினார்கள். பலவீனத்திலிருந்து அவர்கள் பலம் பெற்று அந்நியப் படைகளைத் தோற்கடித்து யுத்தத்தில் ஆற்றல் மிக்கவர்களாக இருந்தார்கள். **35**இறந்துபோன தங்களுடையவர்களை பெண்கள் மீண்டும் அடைந்தார்கள். மற்றவர்கள் வாதைக்குள்ளானபோதும் விடுபட மறுத்தார்கள். மரணத்திலிருந்து ஒரு சிறந்த வாழ்விற்கென உயிரோடு எழுப்பப்படுவதற்காக இதனைச் செய்தார்கள். **36**வேறு சிலர் கேலிசெய்யப்பட்டனர்; அடிக்கப்பட்டனர்; கட்டப்பட்டு சிறையில் தள்ளப்பட்டனர். **37**சிலர் கல்லால் எறியப்பட்டார்கள்; வாள்களினால் இரண்டு துண்டாக்கப்பட்டு கொல்லப்பட்டார்கள். சிலர் செம்மறியாட்டுத் தோலையும், வெள்ளாட்டுத் தோலையும், போர்த்துக் கொண்டு திரிந்து ஏழ்மையையும், துன்பத்தையும், கசப்புகளையும் அனுபவித்தனர். **38**உலகம் அந்த உத்தமர்களுக்கு உகந்ததாக இல்லை. அவர்கள் மலைகளிலும் பாலைவனங்களிலும் அலைந்து திரிந்தனர். மலைக்குகைகளிலும் பூமியில் உள்ள பொந்துகளிலும் வாழ்ந்தார்கள். **39**தம் விசுவாசத்தாலேயே அவர்கள் புகழப்படுகின்றனர். ஆனால் இவர்களில் எவரும் தேவனுடைய வாக்குறுதியை அடையவில்லை. **40**தேவன் நமக்குச் சிறந்த சிலவற்றைத் தர திட்டமிட்டிருந்தார். பிறகு நம்மோடு சேர்ந்து மட்டுமே அவர்களும் முழுமைப் படுத்தப்படுவார்கள்.

### இயேசுவின் முன்மாதிரியை நாமும் பின்பற்றுவோம்

12 நம்மைச் சுற்றிலும் விசுவாசமுடையவர்கள் ஏராளமாக இருக்கிறார்கள். விசுவாசம் என்றால் என்ன பொருள் என்று அவர்களது வாழ்க்கை நமக்குக் கூறுகின்றது. நாமும் அவர்களைப் போல வாழவேண்டும். நம் முன் நடக்கும் பந்தயத்தில் நாமும் பங்கெடுத்து ஓடவேண்டும். நம் முயற்சியில் இருந்து நாம் என்றும் பின்வாங்கக்கூடாது. நம்மைத் தடுத்து நிறுத்துகிற எதையும் நமது வாழ்விலிருந்து தூக்கி எறியவேண்டும். நம்மைப் பற்றுகிற பாவங்களையும் விலக்கிவிட வேண்டும். **2**நாம் இயேசுவை முன்மாதிரியாகக் கொண்டு பின்பற்றவேண்டும். நம் விசுவாசத்தின் தலைவரே இயேசுதான். நமது விசுவாசத்தை அவர் முழுமையாக்குகிறார். அவர் சிலுவையில் துன்புற்று மரணம் அடைந்தார். ஆனால் சிலுவையின் அவமானத்தை பொருட்படுத்தாமல் சிலுவையின் துன்பங்களை அவர் ஏற்றுக்கொண்டார். தேவன் அவருக்கு முன்னால் வைக்கப்போகிற மகிழ்ச்சிக்காகவே இத்தனையையும் ஏற்றுக்கொண்டார். எனவே இப்போது அவர் தேவனுடைய வலது புறத்தில் வீற்றிருக்கிறார். **3**இயேசுவைப் பற்றி நினைத்துப்பாருங்கள். பாவிகள் அவருக்கு எதிராகச் செயல்புரிந்தபோது அவர் அதனைப் பொறுமையாக ஏற்றுக்கொண்டார். இயேசு செய்தது போலவே நீங்களும் பொறுமையோடு சோர்ந்து போகாமல் இருங்கள்.

---

**மரண தூதன்** அழிப்பவர். எகிப்திய மக்களைத் தண்டிக்க ஒவ்வொரு வீட்டிலும் உள்ள மூத்த குழந்தையைக் கொன்று வருமாறு தேவன் அனுப்பிய தூதன். (யாத். 12:29-32.)

### தேவன் பிதாவைப் போன்றவர்

[4]நீங்கள் பாவத்துக்கு எதிராகப் போராடிக்
கொண்டிருக்கிறீர்கள். ஆனால் உங்கள்
போராட்டம் இன்னும் நீங்கள் கொல்லப்படுகிற
அளவுக்கு வன்மையாகவில்லை. [5]நீங்கள்
தேவனுடைய பிள்ளைகள். அவர் உங்கள்
ஆறுதலுக்காகவே பேசுகிறார். நீங்கள் அந்த
வார்த்தைகளை மறந்துவிட்டீர்கள்.

“என் மகனே! கர்த்தர் உன்னைத் தண்
டிக்கும்போது அதனை அற்பமாக
எண்ணாதே. அவர் உன்னைத் திருத்
தும்போது உன் முயற்சியைக் கை
விட்டுவிடாதே.
6 தம் நேசத்துக்குரிய ஒவ்வொருவரை
யும் கர்த்தர் தண்டிக்கிறார். தம் மக்க
ளாக ஏற்றுக்கொள்கின்ற எல்லோரை
யும் தண்டித்துத் திருத்துகிறார்.”
நீதிமொழிகள் 3:11-12

[7]எனவே ஒரு பிதாவின் தண்டனை என்று
எல்லாத் துன்பங்களையும் ஏற்றுக்கொள்ளுங்
கள். ஒரு தந்தை தன் மகனைத் தண்டிப்பது
போன்றே தேவன் உன்னையும் தண்டித்திருக்
கிறார். எல்லாப் பிள்ளைகளுமே தம் தந்தைக
ளால் தண்டிக்கப்பட்டிருக்கிறார்கள். [8]நீங்கள்
எந்த நாளிலும் தண்டிக்கப்படாவிட்டால் உண்
மையில் தேவனுடைய பிள்ளைகள் ஆக
வில்லை என்று பொருள். [9]இங்கே பூமியில்
தண்டிக்கிற தந்தைகளையே நாம் கொண்டிருக்
கிறோம். அதற்காக அவர்களை நாம் மதிக்கி
றோம். ஆகவே நம் ஆன்மீகத் தந்தைக்கு மிக
அதிகமாக அடங்கி நடக்க வேண்டும். நாம்
இதனைச் செய்தால் நமக்கு வாழ்வு உண்டு.
[10]உலகில் உள்ள தந்தைகளின் தண்டனை
கொஞ்ச காலத்திற்குரியது. அவர்கள் தங்க
ளின் சிந்தனைக்குச் சரியாகத் தோன்று
கிறதையே செய்கிறார்கள். ஆனால் தேவன்
நமக்கு உதவி செய்வதற்காகவே தண்டிக்கி
றார். எனவே நாமும் அவரைப் போன்று
பரிசுத்தமாகலாம். [11]எந்தத் தண்டனையும்
அந்நேரத்தில் மகிழ்ச்சிக்குரியதாக இருப்ப
தில்லை! ஆனால், பிறகு அதில் பழகியவர்கள்,
நேர்மையான வாழ்விலிருந்து வருகிற சமா
தானத்தை அனுபவிப்பார்கள்.

### எவ்வாறு வாழ்வது என்பதில் எச்சரிக்கையாக இருங்கள்

[12]நீங்கள் பலவீனமாகிவிட்டீர்கள். மீண்டும்
உங்களைப் பலப்படுத்திக்கொள்ளுங்கள். [13]சரி
யான வழியில் நடவுங்கள், அப்போது தான்
இரட்சிக்கப்படுவீர்கள். உங்கள் பலவீனம் எந்த
இழப்புக்கும் காரணமாகக் கூடாது.
[14]எல்லோரோடும் சமாதானமாய் இருக்க
முயலுங்கள். பரிசுத்தமான வாழ்க்கையை
வாழ முயலுங்கள். ஏனெனில், அது இல்லாமல்
யாராலும் கர்த்தரைக் காணமுடியாது. [15]ஒரு
வனும் தேவனுடைய கிருபையைத் தவறவிடா
தபடிக்கும் மக்களுக்கு விஷமூட்ட வளரும் விஷ
வேரைப் போல உங்கள் குழுவுக்கு யாராலும்
தொல்லை வராதபடிக்கும் உறுதிசெய்யுங்கள்.
[16]எவரும் பாலியல் பாவத்தைச் செய்யாதபடி
எச்சரிக்கையாயிருங்கள். எவரும் ஏசாவைப்
போல் ஆகாதபடி எச்சரிக்கையாய் இருங்கள்.
ஏசா தன் குடும்பத்தின் மூத்த மகன். தன்
தந்தையின் சொத்தில் அவனுக்கு இரட்டைப்
பங்கு கிடைத்திருக்கவேண்டும். ஆனால் ஏசா
தன் வாரிசுரிமையைப்பற்றி அக்கறை கொள்
ளவில்லை. ஒரு வேளை உணவுக்காக அவற்
றை விற்றுவிட்டான். [17]பிறகு ஏசா (தன் தந்தை
யின்) ஆசியைப்பெற விரும்பியபோதிலும்,
கண்ணீர்விட்டு கதறிக் கெஞ்சினாலும் கூட
அவனால் அதைப் பெற முடியவில்லை. ஏனெ
னில் மன மாறுதலுக்கு வழி காணாமல்
போனான். [18]நீங்கள் புதிய இடத்திற்கு வந்தி
ருக்கிறீர்கள். உங்களால் தொடமுடிகிற இட
மில்லை இது. நெருப்பு எரிவதும், அடர்த்தி
யான மேகங்களாலும் இருட்டாலும், புயலா
லும் சூழ்ந்த மலையில்லை இது. [19]எக்காள
சத்தத்தைக் கேட்டோ அல்லது கட்டளையிடும்
ஒரு குரலைக் கேட்டோ நீங்கள் அந்த இடத்
துக்கு வரவில்லை. வார்த்தைகளின் சத்தமும்
எழும்பாது. அந்தச் சத்தத்தைக் கேட்டவர்கள்
மீண்டும் தங்களுக்கு வார்த்தை சொல்லப்
படாதபடிக்கு வேண்டிக் கொண்டார்கள்.
[20]ஏனென்றால் “ஒரு மிருகமாகிலும் அம்மலை
யைத் தொட்டால் கற்களால் அடிபட்டுச் சாக
வேண்டியதிருக்கும்”* என்ற கட்டளையைக்
கேட்க அவர்கள் விரும்பவில்லை. [21]“நான்
பயத்தால் நடுங்குகிறேன்”* என்று மோசேயும்
சொல்லத்தக்கதாக அந்தக் காட்சி அவ்வளவு
பயங்கரமாக இருந்தது.
[22]ஆனால் நீங்கள் அது போன்ற இடத்துக்கு
வரவில்லை. இந்தப் புதிய இடத்தின் பெயர்
சீயோன் மலை. தேவன் வசிக்கும் நகரத்திற்கு
வந்திருக்கிறீர்கள். இது பரலோகமான எருச
லேம். ஆயிரக்கணக்கான தேவதூதர்கள்
மகிழ்ச்சியோடு கூடுகிற இடம். [23]இங்கே பர
லோகத்தில் பெயரெழுதப்பட்ட முதற்பேறான
வர்களின் சர்வ சங்கமாகிய சபை உள்ளது.
எல்லோரையும் நியாயம் தீர்க்கிற நீதிபதியாக
தேவன் இருக்கிறார். முழுமையாக்கப்பட்ட
நீதிமான்களின் ஆவிகள் உள்ளன. [24]இயேசுவி
டம் வந்திருக்கிறீர்கள். அவரே தம் மக்களுக்கு
தேவனிடமிருந்து புதிய உடன்படிக்கையைக்
கொண்டு வந்தவர். ஆபேலின் இரத்தம் பேசி
யதைவிட நன்மைகளைப் பேசுகிற, தெளிக்
கப்பட்ட இயேசுவின் இரத்தமிருக்கும் இடத்
துக்கு நீங்கள் வந்து சேர்ந்தீர்கள்.
[25]எச்சரிக்கையாய் இருங்கள். தேவன்
பேசும் போது கவனிக்கத் தவறாதீர்கள். பூமி
யில் எச்சரிக்கப்பட்டபோதும் கூட இஸ்ரவேல்

---

**ஒரு ... வேண்டியதிருக்கும்** யாத். 19:12-13.

**நான் பயத்தால் நடுங்குகிறேன்** உபா. 9:19.

*மக்கள் இது போலத்தான் கவனிக்க மறுத்தார்
கள். அதனால் அவர்களால் தப்பிக்க முடியா
மல் போய் விட்டது. இப்போது பரலோகத்திலி
ருந்து தேவன் பேசுகிறார். அதைக் கவனிக்க
மறுக்கிறவர்கள் முன்பை விட மோசமான
நிலையை அடைவார்கள். 26அவருடைய
பேச்சு அப்போது பூமியை அசைத்தது. இப்
பொழுதோ அவர் “இன்னொருமுறை நான்
பூமியை மாத்திரமல்ல, வானத்தையும்
அசைப்பேன்”* என்று வாக்குறுதி அளித்
திருக்கிறார். 27“இன்னொரு முறை” என்பது
என்னால் உருவாக்கப்பட்டவை எல்லாம்
அழிக்கப்படும் எனப் பொருள்படும். அவை
அசையத்தக்க பொருட்களே. அசைக்கக் கூடாத
பொருட்களே என்றும் நிலைத்திருக்கும்.*

*28அசைக்கப்பட முடியாத ஓர் இராஜ்யத்தை
நாம் பெற்றுக்கொண்டிருப்பதால் நாம் நன்றி
சொல்லவேண்டும். மிகவும் அச்சத்தோடும் மரி
யாதையோடும் கூடிய ஒப்புக்கொள்ளத்தக்க
ஒரு வழியில் நாம் தேவனை வழிபட வேண்
டும். 29ஏனென்றால் நமது தேவன் அனைத்
தையும் அழிக்கும் நெருப்பைப் போன்றவர்.*

13 *கிறிஸ்துவுக்குள் நீங்கள் சகோதர சகோ
தரிகளாவீர்கள். தொடர்ந்து ஒருவரை
ஒருவர் நேசியுங்கள். 2மக்களை உங்கள் வீட்
டில் ஏற்றுக்கொண்டு அவர்களுக்கு எப்பொ
ழுதும் உதவிசெய்யுங்கள். இதனால் சிலர்
அறியாமலேயே தேவ தூதர்களையும் உபசரிப்
பதுண்டு. 3நீங்களும் அவர்களோடு சிறையில்
இருப்பதுபோல சிறையிலுள்ள மக்களை
நினைத்துக்கொள்ளுங்கள். நீங்களே துன்ப
முறுவதைப்போல, துன்பமுற்றுக் கொண்டி
ருப்பவர்களையும் நினைத்துக் கொள்ளுங்கள்.*

*4திருமணம் என்பது அனைவராலும் மதிக்
கத்தக்கது. இது இரண்டு பேருக்கு இடையில்
மிகப் பரிசுத்தமாகக் கருதப்படுகிறது. விபசா
ரம், சோரம் போன்ற பாலியல் குற்றங்களைச்
செய்கின்றவர்களை தேவன் கடுமையாகத்
தண்டிப்பார். 5பண ஆசையில் இருந்து உனது
வாழ்வை விலக்கிவை. உன்னிடம் இருப்
பதைக் கொண்டு திருப்தி அடைந்துகொள்.
தேவன்,*

> *“நான் உன்னை ஒருபோதும் கைவிட
> மாட்டேன். நான் உன்னை விட்டு
> விலகமாட்டேன்”*
>
> *உபாகமம் 31:6*

*என்று கூறியிருக்கிறார். 6எனவே,*

> *“கர்த்தர் எனக்கு உதவுபவர். நான்
> அச்சப்பட தேவையில்லை. எவரும்
> எனக்கு எதுவும்செய்ய முடியாது”*

*என்று உறுதியாக நீங்கள் சொல்லலாம்.*

*7உங்கள் தலைவர்களை நினைத்துப் பாரு
ங்கள். அவர்கள் தேவனுடைய செய்தியைக்
கற்றுத்தந்தார்கள். அவர்கள் எவ்வாறு வாழ்
ந்து மடிந்தார்கள் என எண்ணுங்கள். அவர்
களின் விசுவாசத்தைக் கடைப்பிடியுங்கள்.
8இயேசுகிறிஸ்து நேற்றும், இன்றும், நாளையும்
எப்போதும் ஒரே மாதிரியாக இருப்பவர்.*

*9எல்லா வகையான தவறான உபதேசங்க
ளும் உங்களை தவறான வழியில் செலுத்தாத
படிக்கு கவனமாக இருங்கள். உங்கள் இதயம்
தேவனுடைய கிருபையால் பலம் பெறட்டும்.
அது உணவு பற்றிய சட்டங்களால் நிறையா
மல் இருக்கட்டும். அது உங்களுக்குப் பயன்
தராது.*

*10பரிசுத்த கூடாரத்தில் சேவை செய்கிற
அந்த யூத ஆசாரியர்கள் இருந்து சாப்பிடும்
உரிமையற்ற ஒரு பலி நம்மிடம் உண்டு. 11பிர
தான ஆசாரியர் மிருக இரத்தத்தை எடுத்துக்
கொண்டு மிகப் பரிசுத்தமான இடத்திற்குள்
செல்லுகிறார். அவர் பாவங்களுக்காக அத
னைச் செலுத்துகிறார். ஆனால் அந்த மிருகங்
களின் சரீரம் வெளியே எரிக்கப்படுகிறது.
12எனவே, இயேசுவும் நகரத்திற்கு வெளியே
துன்பப்பட்டார். அவர் தன் இரத்தத்தைப்
பாவத்துக்காகவே சிந்தினார். தன் மக்களை
பரிசுத்தப்படுத்துவதற்காக இரத்தம் சிந்தி மரித்
தார். 13எனவே, நாம் கூடாரத்துக்கு வெளியே
சென்று அவருடைய அவமானத்தில் பகிர்ந்து
கொள்வோம். இயேசுவுக்கு நேர்ந்த அதே
அவமானத்தை நாமும் ஏற்றுக்கொள்ளவேண்
டும். 14இந்த உலகத்தில் என்றென்றும்
நிலைத்திருக்கிற ஒரு நகரம் இல்லை. ஆனால்
எதிர்காலத்தில் வரப்போகிற என்றென்றைக்
கும் நிலைத்திருக்கிற நகரத்திற்காகக்
காத்திருக்கிறோம். 15எனவே, அவர் மூலமாக
நம் தினசரி துதி காணிக்கையை நாம் தேவ
னுக்கு வழங்குவோம். அது அவர் பெயரைத்
துதிக்கும் உதடுகளின் கனியாகும். 16மற்ற
வர்களுக்கு நன்மை செய்யவும், பகிர்ந்து
கொள்ளவும் மறக்காதீர்கள். இவையே தேவன்
விரும்பும் பலியாகும்.*

*17உங்கள் தலைவர்களுக்குக் கீழ்ப்படியுங்
கள். அவர்களின் அதிகாரங்களுக்குப் கட்டுப்
பட்டு நடவுங்கள். அவர்கள் உங்கள் மேல்
பொறுப்புள்ளவர்கள். அவர்கள் உங்கள் ஆன்
மாவைக் காப்பாற்ற முயல்கிறார்கள். அவர்
கள் துக்கத்தோடு அல்ல சந்தோஷத்தோடு
அவற்றை செய்பவர்கள். நீங்கள் அவர்களுக்
குப் பணியாமல் அவர்களின் பணியை கடி
னப்படுத்தினால் அது எவ்வகையிலும் உங்க
ளுக்கு உதவாது.*

*18எங்களுக்காகத் தொடர்ந்து பிரார்த்தனை
செய்யுங்கள். சுத்தமான மனசாட்சி உடையவர்
களாய் நாங்கள் இருக்கிறோம் என்றும், எப்
போதும் நல்ல செயல்களையே செய்ய விரும்
புகிறோம் என்றும் நாங்கள் உறுதி கூறுகி
றோம்.*

*19உங்களிடத்தில் நான் மிக விரைவில் வரு
வதற்கு வேண்டிக்கொள்ளும்படி கேட்டுக்
கொள்கிறேன். நான் மற்ற அனைத்தையும்*

---

***இன்னொரு ... அசைப்பேன்*** *ஆகாய* 2:6.

விட இதனையே பெரிதும் விரும்புகிறேன்.
20-21சமாதானத்தின் தேவன் எல்லா நன்மை களையும் உங்களுக்குக் கொடுக்க வேண்டும் என்று நான் பிரார்த்தனை செய்கிறேன். எனவே அவர் விரும்புகிறபடி நீங்கள் செய் யுங்கள். தேவன் ஒருவரே தம் மந்தையின் பெரிய மேய்ப்பராகிய கர்த்தராகிய இயே சுவை மரணத்திலிருந்து நித்திய உடன் படிக்கையின் இரத்தத்தினால் எழுப்பினார். அவர் விரும்புவதை நீங்கள் செய்யும்படிக்கு ஒவ்வொரு விதமான நன்மையையும் செய்யும் திறமையை உங்களுக்கு வழங்கவேண்டும் என நான் வேண்டுகிறேன். இயேசுவுக்கு என் றென்றும் மகிமை உண்டாவதாக. ஆமென்.

22என் சகோதர சகோதரிகளே! உங்களை உற்சாகப்படுத்த நான் எழுதிய சிறு செய் தியை நீங்கள் பொறுமையுடன் கேட்கவேண் டும் எனக் கேட்டுக்கொள்கிறேன். இவை உங்க ளைப் பலப்படுத்தும். இது நீண்ட நிருபம் அன்று.
23நம் சகோதரன் தீமோத்தேயு சிறை க்கு வெளியே உள்ளான் என்பதை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும் என்று விரும்புகி றேன். அவன் மிக விரைவில் வந்து சேர்ந் தால், நாங்கள் இருவருமே சேர்ந்து உங்களைப் பார்ப்போம்.

24உங்கள் தலைவர்களுக்கும், தேவனுடைய பிள்ளைகளுக்கும் என் வாழ்த்துதலைச் சொல் லுங்கள். இத்தாலியில் உள்ள தேவனுடைய பிள்ளைகள் உங்களுக்கு வாழ்த்து கூறுகிறார் கள்.

25உங்கள் அனைவரோடும் தேவனுடைய கிருபை இருப்பதாக.

# யாக்கோபு எழுதிய கடிதம்

1 தேவனுக்கும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து
வுக்கும் ஊழியனான யாக்கோபு, உலக
மெங்கும் பரவியுள்ள (தேவனுடைய மக்க
ளான) பன்னிரண்டு குடிகளுக்கும் வாழ்த்துக்
களோடு எழுதிக்கொள்வது:

## விசுவாசமும் ஞானமும்

2எனது சகோதர சகோதரிகளே, உங்களுக்
குப் பலவகையான தொந்தரவுகள் இருக்கும்.
ஆனால் இவை நிகழும்போது இதற்காக
மகிழ்ச்சி அடையுங்கள். 3ஏனென்றால், இத்
தொந்தரவுகள் உங்களது விசுவாசத்தைச்
சோதிக்கின்றன என நீங்கள் அறியுங்கள்.
இவை உங்களுக்குப் பொறுமையைத் தருகின்
றது. 4நீங்கள் செய்யும் ஒவ்வொரு காரியத்தி
லும் பொறுமை வெளிப்படக்கடவது. அப்பொ
றுமை உங்களை, நீங்கள் ஒன்றிலும் குறை
வுள்ளவர்களாக இல்லாமல் முழுமையும் நிறை
வும் உள்ளவர்களாக ஆக்கி தன் பணியை
நிறைவு செய்யும். 5ஆனால் உங்களில் எவருக்
கேனும் ஞானம் வேண்டுமானால் நீங்கள்
தேவனிடம்தான் கேட்டுக்கொள்ள வேண்டும்.
தேவன் தாராளமானவர். கேட்கின்ற ஒவ்வொ
ருவருக்கும் கொடுப்பதில் அவர் மகிழ்வடைகி
றார். ஆகையால் தேவன் உங்களுக்கு ஞானத்
தைக் கொடுப்பார். 6ஆனால் நீங்கள் தேவனை
கேட்டுக்கொள்ளும்போது உங்களுக்கு அவர்
மீது விசுவாசம் வேண்டும். தேவனைச் சந்தே
கித்தல் கூடாது. சந்தேகப்படுகிறவன் கடலில்
உள்ள அலைகளைப் போன்றவன். காற்று
அந்த அலைகளை மேலும் கீழுமாகப் புரட்டும்.
7-8சந்தேகப்படுகிறவன் ஒரே நேரத்தில் இரண்டு
வேறுபட்ட சிந்தனைகளை உடையவனாக
இருக்கிறான். அவன் தான் செய்கின்ற எதைப்
பற்றியும் தீர்மானிக்க முடியாதவன். இத்தகை
யவன் கர்த்தரிடமிருந்து எதையும் பெற்றுக்
கொள்ள முடியாது.

## உண்மையான செல்வம்

9தேவன் தன்னை (ஆன்மீக ஆசிகளில்) செல்
வந்தனாக ஆக்கியிருக்கிறார் என ஒரு ஏழைச்
சகோதரன் அல்லது சகோதரி பெருமைப்
படவேண்டும். 10மேலும் தேவன் தன்னைப்
பணிவுள்ளவனாக ஆக்கியிருக்கிறார் என ஒரு
பணக்காரச் சகோதரன் அல்லது சகோதரி
பெருமைப்பட வேண்டும். எப்படி? “அவன்
ஒரு காட்டுப்பூவைப்போல உதிர்ந்து போ
வான்” என்று தேவன் சொன்னார். 11சூரியன்
உதயமானதும் கொஞ்சம் கொஞ்சமாகச் சூடா
கிறது. சூரிய வெப்பமானது செடிகளைக் காய
வைக்கிறது. பூ உதிர்ந்து விடுகின்றது. அந்த
பூ அழகாக இருந்தது. ஆனால் அது வாடிப்
போய் விடுகிறது. பணக்காரனும் அப்படித்
தான். அவன் தன் வியாபாரத்துக்காகத் திட்ட
மிடும்போது இறந்துபோவான்.

## தேவனிடமிருந்து சோதனைகள் வருவதில்லை

12சோதிக்கப்படும்போது உறுதியாய் இருக்
கிற மனிதன் மிகுந்த பாக்கியவான் ஆகிறான்.
ஏனெனில் தான் நேசிக்கிறவர்களுக்குத் தரு
வதாக தேவன் வாக்களித்த (நித்திய) வாழ்வு
என்னும் பரிசை, சோதனையில் தேறிவிடும்
போது அவன் பெறுவான். 13ஒரு மனிதன்
சோதிக்கப்படும்போது, “அந்த சோதனை
தேவனிடமிருந்து உண்டாகிறது” என்று
அவன் சொல்லக் கூடாது. பொல்லாங்கினால்
தேவன் சோதிக்கப்படுவதில்லை. மேலும்
தேவன் ஒருவரையும் சோதிப்பதும் இல்லை.
14அவனவன் தனது சுய ஆசைகளாலேயே
இழுக்கப்பட்டு சிக்குண்டு சோதிக்கப்படுகி
றான். 15இந்த ஆசையானது கருத்தரித்து பாவத்
தைப் பிறப்பிக்கிறது. மேலும் பாவம் முழுமை
யடையும்போது மரணத்தைத் தருகிறது.
16எனது அன்புக்குரிய சகோதர சகோத
ரிகளே, ஏமாற்றப்படாமல் இருங்கள். 17எல்லா
நன்மைகளும் தேவனிடமிருந்தே வருகின்றன.
ஒவ்வொரு முழுமையான வரமும் அவரிடமி
ருந்தே வருகின்றது. இவை, சூரியன், சந்திரன்,
நடசத்திரங்கள் போன்றவற்றை உருவாக்கிய
பிதாவிடமிருந்தே வருகின்றன. அவர் மாறுவ
தில்லை. எப்பொழுதும் ஒரே மாதிரியாக இருக்
கிறார். 18உண்மையான வார்த்தை மூலமே
தேவன் நமக்கு வாழ்க்கையைத் தர முடிவு
செய்துள்ளார். அவரால் படைக்கப்பட்ட
அனைத்திலும் நம்மையே முக்கியமானவை
யாகக் கருதுகிறார்.

## கவனிப்பதும் கீழ்ப்படிவதும்

19எனது அன்புக்குரிய சகோதர சகோதரி
களே, கேட்பதில் தீவிரமாகவும், பேசுவதில்
பொறுமையாகவும், கோபிப்பதில் தாமதமாக
வும் இருங்கள். 20ஒருவனின் கோபமானது,
அவனைத் தேவன் விரும்புகிற நல் வழியில்
நடத்தாது. 21எனவே உங்களைச் சுற்றி மிகுந்த
அளவில் இருக்கிற எல்லாவிதமான அழுக்

கையும், தீமையையும் நீங்கள் ஒழித்து விட்டு
உங்கள் ஆன்மாவைக் காப்பாற்ற வல்ல போத
னையை பணிவுடன் ஏற்றுக்கொள்ளுங்கள்.
22தேவன் சொல்கிறபடி செய்கிறவர்களாக
இருங்கள். போதனையைக் கேட்கிறவர்களாக
மட்டுமே இருந்து தம்மைத் தாமே வஞ்சித்துக்
கொள்கிறவர்களாக இருக்காதீர்கள். 23ஒருவன்
தேவனுடைய போதனையைக் கேட்டு விட்டு
எதுவும் செயல்படாமல் இருந்தால் அது ஒரு
வன் கண்ணாடியின் முன் நின்று தன் பிம்பத்
தைத் தானே பார்த்துக்கொள்வது போன்றது
ஆகும். 24அவன் தன்னைத் தானே பார்த்து,
அந்த இடம் விட்டுப் போனபிறகு தன் சாயல்
இன்னதென்பதை மறந்து விடுவான். இதுவும்
அதைப் போன்றதுதான். 25முழுமையான தேவ
னுடைய சட்டத்தை ஆழமாக ஆராய்ந்து, கேட்டு
மறந்து விடுகிறவனாக இல்லாமல் தொடர்ந்து
அதைப் படித்து அதன்படி நடக்கிறவன் தான்
செய்வதில் உண்மையில் ஆசீர்வதிக்கப்பட்டவ
னாக இருக்கிறான். தேவனுடைய சட்டம் மக்
களை விடுதலையடையச் செய்கிறது.

### தேவனை வழிபடுகிற உண்மையான வழி

26தெய்வ பக்தி உள்ளவன் என ஒருவன்
தன்னைப்பற்றி எண்ணிக்கொள்ளலாம். ஆ
னால் தன் நாக்கை அவன் அடக்கிக் கொள்
ளவில்லையெனில், தன்னைத்தானே அவன்
முட்டாளாக்கிக்கொள்கிறான். அவன் “தெய்வ
பக்தி” பயனற்றதாக இருக்கின்றது. 27பிதாவா
கிய தேவன் தூய்மையானதும் குற்றமற்றது
மென எண்ணுகிற வழிபாடு என்பது உதவி
தேவைப்படுகிற விதவைகள், அனாதைகள்
ஆகியோர்மேல் அக்கறை கொள்வதும் உலகத்
தால் கறைபடாதபடிக்குத் தன்னைக் காத்துக்
கொள்வதுமே ஆகும்.

### அனைவரையும் நேசியுங்கள்

2 அன்புக்குரிய சகோதர சகோதரிகளே, நம்
மகிமைமிக்க கர்த்தராகிய இயேசுவில்
நீங்கள் விசுவாசிகளாயிருக்கும் போது, பார
பட்சமாக இருக்காதீர்கள். 2உதாரணமாக ஒரு
வன், சிறந்த ஆடைகளையும் தங்க மோதிரங்
களையும் அணிந்தவனாக உங்களிடம் வர
லாம். இன்னொருவன் ஏழையாக பழைய
அழுக்கான ஆடைகளை அணிந்தவனாக வர
லாம். 3நீங்கள் செல்வந்தனிடம் அதிகம் அக்
கறை காட்டுகிறீர்கள். “நல்ல ஆசனத்தில்
அமருங்கள்” என்று கூறுகிறீர்கள். ஆனால்
ஒரு ஏழை வந்தால் அவனை நிற்க வைக்
கிறீர்கள். அல்லது தரையிலே உட்காரும்படி
கூறுகிறீர்கள். 4இப்படிச் செய்யும் போது சிலர்
மற்றவர்களை விட மிகவும் முக்கியமானவர்
கள் என்பது போல உங்களில் சிலரை நடத்
துகிறீர்கள் அப்போது தகாத நோக்கங்கள்
உள்ள நீதிபதியாக நீங்கள் ஆகிறீர்கள். 5அன்
பான சகோதர சகோதரிகளே, உலகம் ஏழை
யாகப் பார்க்கிற ஒருவனை விசுவாசத்தில்
செல்வந்தனாகத் தேவன் தேர்ந்தெடுத்தார் என்
பது உண்மையில்லையா? தான் நேசிப்பவர்
களுக்குத் தருவதாகக் தேவன் வாக்களித்த
இராஜ்யத்தை அந்த ஏழை மக்கள் பெறுவார்
கள். 6ஆனால் நீங்கள் ஏழைகளை மதிக்க
வில்லை என்பதைப் புலப்படுத்தினீர்கள்.
செல்வந்தர்களே உங்களைக் கட்டுப்படுத்திக்
கொள்கிறார்கள் என்பது உண்மை இல்
லையா? நீதிமன்றத்திற்குள் உங்களை இழுப்
பது அவர்கள் அல்லவா? 7நீங்கள் எந்தப்
பெயரால் அழைக்கப்படுகிறீர்களோ அந்த
நல்ல பெயரைப் பழித்துப் பேசுகிறவர்கள்
அவர்கள் அல்லவா?

8ஒரு சட்டம் மற்ற சட்டங்களை ஆளுகின்றது.
“நீ உன்னை நேசிப்பது போன்று மற்றவர்
களையும் நேசிப்பாயாக”* என்று வேதவாக்
கியங்களில் எழுதப்பட்ட சட்டம்தான் மிகச்
சிறந்த சட்டமாகும். நீ இச்சட்டத்தின்படி செய்
தால் பிறகு நீ சரியானதைச் செய்கிறாய்.
9ஆனால் நீ ஒருவனை மற்றவர்களை விட
முக்கியமாக நடத்தினால் பிறகு நீ பாவம்
செய்தவன் ஆகிறாய். நீ மிக உயர்ந்த தேவனின்
சட்டத்தை உடைத்த குற்றவாளி ஆகிறாய். 10ஒரு
வன் தேவனின் அனைத்து கட்டளைகளையும்
கடைப்பிடிப்பவனாக இருக்கலாம், ஆனால்
அவன் ஒரே ஒரு கட்டளைக்குக் கீழ்ப்படியாமல்
இருந்தால், பிறகு அவன் அனைத்து கட்டளை
களையும் உடைத்தவனாகிறான். 11“விபசாரம்
செய்யாமல் இருப்பாயாக”* என்று தேவன்
கூறினார். அதோடு “கொலை செய்யாமல்
இருப்பாயாக”* என்றும் கூறியுள்ளார். என
வே, நீ விபசாரம் செய்யாமல் இருந்து,
கொலை மட்டும் செய்வாயானால், பிறகு நீ
சட்டத்தில் கட்டளைகளை உடைத்தவன் ஆகி
றாய். 12உங்களை விடுவிக்கிற சட்டத்தால் நியா
யந்தீர்க்கப்பட்ட மக்களைப்போல நீங்கள் பேச
வும் வாழவும் வேண்டும். 13மற்ற மனிதர்கள்மீது
கருணைகாட்ட ஒருவன் தவறினால், அவனை
நியாயந்தீர்க்கும் போது தேவன் அவன் மீது
கருணை காட்டத் தவறுவார். மனிதர்கள்மீது
கருணை காட்டுகிறவன் நியாயத்தீர்ப்பு நாளில்
பயமின்றி நிற்க முடியும்.

### விசுவாசமும் நற்செயல்களும்

14எனது சகோதர சகோதரிகளே ஒருவன்
விசுவாசம் கொண்டவனாக தன்னைப் பற்றி
கூறிக்கொண்டு காரியரீதியாக எதுவும் செய்
யாமல் இருப்பானேயானால் அவனது விசு
வாசத்தால் எந்த பயனும் இல்லை. அத்தகைய
விசுவாசம் யாரையாவது இரட்சிக்குமா?
15கிறிஸ்துவுக்குள் ஒரு சகோதரனோ சகோ
தரியோ உண்ண உணவும் உடுக்க உடையும்
தேவைப்பட்டவராக இருக்கலாம். 16நீங்கள் அவ

---

**நீ ... நேசிப்பாயாக** லேவி. 19:18.

**விபசாரம் ... இருப்பாயாக** யாத். 20:14. உபா 5:18.

**கொலை ... இருப்பாயாக** யாத் 20:13; உபா. 5:17.

னிடம் “தேவன் உன்னோடு இருக்கிறார்.
இருக்க வசதியான இடமும், உண்ண நல்ல
உணவும் உனக்குக் கிட்டும் என்று நம்புகி
றேன்” என்று சொல்லலாம். ஆனால் அப்படி
சொல்லிவிட்டு எதுவும் கொடுக்காமல் இருந்
தால் அதனால் எந்தப் பயனுமில்லை. உங்கள்
வார்த்தைகளுக்கு எந்த அர்த்தமும் இல்லை.
17இதுபோலத்தான் விசுவாசமும், செயலின்
மையால் இறந்துவிடுகிறது.
18ஒருவன், “உன்னிடம் விசுவாசம் உள்ளது.
ஆனால் நான் செயல் புரிகிறேன். செயல்களற்ற
உன் விசுவாசத்தை நீ காட்டு. நான் செய்கிற
செயல்கள் மூலம் நான் என் விசுவாசத்தைக்
காட்டுவேன்” என்று கூறலாம். 19ஒரே ஒரு
தேவன் தான் இருக்கிறார் என்று நீ நம்புகி
றாயா? நல்லது. ஆனால் பிசாசுகள் கூட அதை
நம்பி பயத்தால் நடுங்குகின்றன. 20நீ புத்தி
யில்லாதவன். செயலற்ற விசுவாசம் என்பது
உயிரற்றது என்பதை நீ அறியமாட்டாயா?
21தன் மகன் ஈசாக்கைப் பலிபீடத்தில் காணிக்
கையாக்கியபோது (தன்) செயல்கள் மூலம்
ஆபிரகாம் நீதிமானாக்கப்பட்டான். 22இதனால்
நீ ஆபிரகாமின் விசுவாசமும் அவனது செய
லும் ஒருங்கே செயல்பட்டதைக் காண இயலும்.
அவனது செயல்கள் அவனது விசுவாசத்தை
முழுமையாக்கியது.
23எனவே “ஆபிரகாம் தேவனை நம்பி
னான். அது அவனை நீதிமானாக்கியது”*
என்கிற பகுதிக்கு இது முழுமையான பொரு
ளைத் தருகிறது. மேலும், இதனால்தான்
“தேவனின் நண்பன்” என்று அவன்
அழைக்கப்பட்டான். 24எனவே ஒருவன் வெறும்
விசுவாசத்தால் மட்டுமல்ல, தான் செய்கிற
காரியங்களால் நீதிமானாக்கப்படுகிறான் என்
பதை நீங்கள் பார்க்க முடியும்.
25ராகாப் இன்னொரு எடுத்து காட்டாகும்.
அவள் ஒரு விலைமகள். ஆனால் அவள்
தனது செயல்களால் தேவனுக்கு முன் நீதி
யுள்ளவளாக்கப்படடாள். அவள் தேவனுடைய
பிள்ளைகளான ஒற்றர்களைத் தன் வீட்டிற்குள்
வைத்திருந்து, அவர்கள் தப்பிச் செல்ல உத
வினாள்.* 26எனவேதான் ஆவி இல்லாத ஓர்
சரீரம் இறந்ததாயிருக்கிறதைப்போல செயல்
கள் அற்ற விசுவாசம் கூட இறந்ததாயிருக்கி
றது.

## நாம் சொல்வதைக் கட்டுப்படுத்துதல்

3 எனது சகோதர சகோதரிகளே, உங்களில்
பலர் போதகர்களாகக் கூடாது. ஏனென்
றால் போதிப்பவர்களாகிய நாம் மற்றவர்
களைவிட அதிகமாக நியாயந்தீர்க்கப்படு
வோம் என்பதை நீங்கள் அறிவீர்கள். 2நாமெல்
லோரும் பல தவறுகளைச் செய்கிறோம். ஒரு
வன் எப்பொழுதும் தவறாகப் பேசாதவனாக
இருந்தால் அவன் முழுமையானவனாகிறான்.
அவன் தனது முழு சரீரத்தையும் கட்டுப் படுத்
தும் வல்லமை பெற்றவனாகிறான். 3நாம்
குதிரைகளை அடக்க வேண்டுமானால் அவற்
றின் வாயிலே கடிவாளத்தைப் போடுகிறோம்.
அதன்மூலம் அதன் முழு சரீரத்தையும் கட்டுப்
பாட்டுக்குள் கொண்டுவருகிறோம். 4இது
போலத் தான் கப்பலிலும். ஒரு கப்பல் மிகப்
பெரியது; அது பெருங்காற்றால் தள்ளப்படு
வது. ஆனால் சிறு சுக்கான் அந்த முழு கப்
பலையும் இயக்கப் பயன்படுகின்றது. சுக்
கானை இயக்குபவனுக்குக் கப்பலை எங்கே
கொண்டு போவது என்று தெரியும். அவன்
விரும்புகிற இடத்துக்கே கப்பல் போகும்.
5நமது நாக்கும் அப்படித்தான். அது சரீரத்தின்
ஒரு சிறிய உறுப்பு. ஆனால் அது பெரிய
காரியங்களைச் செய்வதைப் பற்றி பெருமை
பேசுகிறது. மேலும் சிறிய ஒரு நெருப்புப்
பொறி எப்படி ஒரு முழுக் காட்டையே எரித்
துவிட முடியும் என்பதைப்பற்றி எண்ணுங்
கள்.
6மேலும் நாக்கு உண்மையில் நெருப்புப்
பொறியாக இருக்கிறது. நம் சரீர உறுப்புக
ளின் நடுவில் தீமைகளை மூட்டி விடுகிறது.
நாக்கு தன் தீமையை சரீரம் முழுக்கப் பரப்பி
நம் முழு வாழ்வையும் சிக்கலாக்கி வைக்கி
றது. நரகத்திலுள்ள நெருப்பால் நாக்கு கொழுத்
தப்படுகிறது. 7மக்கள் எல்லாவகையான மிரு
கங்கள், பறவைகள், ஊர்வன, நீர்வாழ்வன
ஆகியவற்றையெல்லாம் அடக்கும் வலிமை
பெற்றவர்கள். 8ஆனால் நாவானது அடங்
காததும் சாவுக்கேதுவான விஷம் நிறைந்தது
மாக இருக்கிறது. 9அந்த நாவால்தான் நம்
பிதாவாகிய கர்த்தரைத் துதிக்கிறோம். அவர்
சாயலில் உருவாக்கப்பட்ட மனிதர்களையும்
பழிக்கிறோம். 10துதித்தலும் பழித்தலும் ஒரே
வாயில் இருந்துதான் வருகின்றன. என்
சகோதர சகோதரிகளே, அப்படி நடக்கக்
கூடாது. 11ஒரே ஊற்றுக்கண்ணிலிருந்து இனிப்
பும், கசப்புமான நீர் சுரக்க முடியாது. 12என்
சகோதர சகோதரிகளே, அத்திமரம் ஒலிவப்
பழங்களையும், திராட்சைச்செடி அத்திப் பழங்
களையும் கொடுக்குமா? அவ்வாறே உவர்ப்
பான நீரூற்று இனிப்பான நீரைக் கொடுக்காது.

## உண்மையான ஞானம்

13உங்களில் ஞானமும், விவேகமும் பொருந்
திய ஒருவன் இருந்தால் தன் நன்னடத்தையின்
மூலம் பணிவோடு நற்காரியங்களைச் செய்து
அதை அவன் புலப்படுத்தட்டும். 14உங்கள் இத
யத்தில் கசப்பான பொறாமையும் சுயநலமும்
இருந் தால், உங்கள் ஞானத்தைப் பற்றி நீங்கள்
பெருமைப்பட முடியாது. அப்பெருமைப் பாரா
ட்டுதல் உண்மையை மறைக்கிற ஒரு பொய்யா
கவே இருக்கும். 15அவ்வித ஞானம் சொர்க்
கத்தில் இருந்து வருவதில்லை. சுயநல வேட்
கைகளிலிருந்தும், பேய்த்தனத்திலிருந்தும்
உருவாகும் இந்த உலகத்திலிருந்து அது வரு

---

**ஆபிரகாம் … நீதிமானாக்கியது** *ஆதி.* 15:6.

**அவள் … உதவினாள்** *ராகாப்பின் சரித்திரம் யோசுவா* 2:1-21.

கிறது. 16எங்கே பொறாமையும், சுயநலமும்
உள்ளதோ அங்கே குழப்பமும் எல்லா வகை
பாவங்களும் இருக்கும். 17ஆனால் மேலிருந்து
வருகிற ஞானம் முதலாவதாக தூய்மையாக
இருக்கிறது. பிறகு சமாதானமாகவும், இணக்க
முள்ளதாகவும், எளிதில் மகிழ்ச்சிப்படுத்த
முடிந்ததாகவும், கருணை நிறைந்ததாகவும் பல
நற்செயல்களை உருவாக்குவதாகவும் இருக்கி
றது. பாரபட்ச மற்றதாகவும் போலித்தன்
மையற்றதாகவும் கூட இருக்கிறது. 18சமாதான
மான வழியிலே சமாதானத்துக்காக உழைக்
கிற மக்கள் நீதியாகிய வாழ்வின் பலனைப்
பெறுகின்றார்கள்.

## தேவனுக்கு உங்களையே கொடுங்கள்

4 உங்களுக்குள்ளே சண்டைகளும், வாக்கு
வாதங்களும் எங்கிருந்து வருகின்றன?
உங்கள் சரீர உறுப்புகள் ஒன்றுக்கொன்று
தொடர்ந்து சண்டையிட்டுக்கொள்ளக் கார
ணமாக இருக்கிற உங்கள் உள் ஆசைகளில்
இருந்து இவை வரவில்லையா? 2நீங்கள் சில
வற்றை விரும்புகிறீர்கள். ஆனால் அவை
கிடைப்பதில்லை. எனவே கொலைகாரராக
வும் பொறாமை உள்ளவர்களாகவும் மாறு
கிறீர்கள். அப்படியும் நீங்கள் விரும்புகிற
வற்றை அடைய முடியாமல் போகிறது. நீங்கள்
அதனால் சண்டையும் சச்சரவும் செய்கிறீர்கள்.
நீங்கள் தேவனிடம் கேட்டுக் கொள்ளாததால்
எதையும் பெறுவதில்லை. 3மேலும் தவறான
நோக்கங்களோடு நீங்கள் கேட்பதால், நீங்கள்
கேட்கிறபோது எதையும் பெறுவதில்லை.
சொந்த இன்பத்தில் திளைக்கும் வகையில்
நீங்கள் கேட்கிறீர்கள். 4தன் கணவனின் நம்
பிக்கைக்கு உரியவளாக இல்லாத ஒரு பெண்
ணைப் போல நீங்கள் இருக்கிறீர்கள். உலகின்
பகுதியாக இருக்க விரும்புதல் என்பது
தேவனை வெறுப்பதுபோல் என்று நீங்கள்
அறியமாட்டீர்களா? 5அல்லது “தேவன் நமக்
குள் வசிக்க வைத்த ஆவியானவர் நம்மில்
வைராக்கியத்தோடு இருக்கிறார்”* என்று
வேதவாக்கியத்தில் எழுதப்பட்டிருப்பதை
பொருளற்றது என நீங்கள் எண்ணுகிறீர்களா?
6ஆனால் நம்மீதான அவரது கிருபை மிகவும்
உயர்ந்தது. வேத வாக்கியத்தில் எழுதப்பட்டி
ருப்பது போல, “பெருமைப் பாராட்டுபவர்க
ளுக்கு எதிராகத் தேவன் இருக்கிறார். ஆனால்
அவர் பணிவான மக்களுக்கு கிருபையை
வழங்குகிறார்.” 7எனவே, உங்களையே தேவ
னிடம் ஒப்படையுங்கள். சாத்தானை எதிர்த்து
நில்லுங்கள். அவன் ஓடிவிடுவான். 8தேவனை
நெருங்கி வாருங்கள் தேவன் உங்களிடம்
நெருங்கி வருவார். நீங்கள் பாவிகள். எனவே,
உங்கள் வாழ்விலிருந்து பாவத்தை அப்புறப்ப
டுத்துங்கள்.* நீங்கள் தேவனையும் உலகத்தை
யும் ஒரே நேரத்தில் பின்பற்ற முயல்கிறீர்கள்.
உங்கள் சிந்தனைகளைப் பரிசுத்தமாக வைத்
துக்கொள்ளுங்கள். 9சோகமாயிருங்கள்; வருத்த
மாய் இருங்கள். உங்கள் சிரிப்பை அழுகை
யாக மாற்றுங்கள். உங்கள் மகிழ்ச்சியைச்
சோகமாக மாற்றுங்கள். 10தேவனின் முன்
பணிவோடு வணங்குங்கள். அவர் உங்களை
உயர்த்துவார்.

## நீங்கள் நியாயாதிபதி அல்ல

11சகோதர சகோதரிகளே, தீயகாரியங்க
ளைப் பேசிக்கொண்டிருப்பதை நிறுத்துங்கள்.
கிறிஸ்துவில் உன் சகோதரனை அவமானப்
படுத்துவது அல்லது அவனை நியாயம் தீர்ப்
பது என்பது அவன் பின் பற்றுகிற சட்டத்தை
அவமானப்படுத்துவதற்கு சமமாகும். உன்
சகோதரனை நியாயம் தீர்த்தால் அவன் பின்
பற்றிக் கொண்டிருந்த சட்டத்தையே நியாயம்
தீர்க்கிறாய் என்பதே அதன் பொருளாகும்.
12சட்டத்தை உருவாக்கியவர் ஒரே ஒருவரே
இருக்கிறார். அவர் தேவனாவார். சட்டத்
தையே கேள்விக்குட்படுத்தினால், சட்டத்திற்
குக் கட்டுப்பட்ட குடிமகனாக இருப்பதை விட்டு
நீ நீதிபதியாகிறாய் என்பது பொருளாகும்.
சட்டத்தைக் காப்பாற்றவும், அழிக்கவும் அதி
காரம் கொண்டவர் அவர் ஒருவரே. எனவே
உன் சகோதரனையும் சகோதரியையும் நீதான்
நியாயம் தீர்க்க வேண்டும் என நினைக்க நீ
யார்?

## தேவன் உன் வாழ்வைத் தீர்மானிக்கட்டும்

13“இன்று அல்லது நாளை நாம் ஒரு நகரத்
திற்குப் போவோம். அங்கே ஓராண்டு தங்கு
வோம். வியாபாரம் செய்து பணம் சம்பாதிப்
போம்” என்று உங்களில் சிலர் கூறுகிறார்கள்.
கவனியுங்கள். 14“நாளை என்ன நடக்கும்
என்று உங்களுக்குத் தெரியாது. உங்கள் வாழ்
க்கை பனி புகையைப் போன்றது. கொஞ்ச
காலத்திற்கே உங்களால் பார்க்கமுடியும்.
ஆனால் பிறகு மறைந்துவிடும் என்பதை
நினைத்துப் பாருங்கள்.” 15எனவே, “தேவனின்
விருப்பம் இருந்தால் நாம் வாழ்வோம். இதை
அல்லது அதைச் செய்வோம்” என்று எண்
ணுங்கள். 16ஆனால், இப்போது நீங்கள் செய்யத்
திட்டமிட்டிருக்கிற பெரிய காரியங்கள் எல்லா
வற்றைப்பற்றியும் பெருமை பாராட்டிக் கொள்
கிறீர்கள். அது தவறாகும். 17எனவே இப்போது
கவனம் செலுத்துங்கள். ஒருவனுக்கு நன்மை
செய்யத் தெரிந்திருந்தும் அதைச் செய்யாமல்
போனால், அவன் ஒரு பாவியாகிறான்.

## சுய நலமிக்க பணக்காரர்கள் தண்டிக்கப்படுவர்

5 பணக்காரர்களே! கவனியுங்கள், கதறுங்
கள், துக்கமாயிருங்கள். ஏனென்றால்
பெரும் துன்பம் உங்களுக்கு வரப் போகிறது.
2உங்கள் செல்வம் அழுகியது, எதற்கும் பய
னற்றது. உங்கள் ஆடைகள் செல்லரித்துப்
போகும். 3உங்கள் தங்கமும் வெள்ளியும் துருப்

---

**தேவன் ... இருக்கிறார்** யாத். 20:5.

**பெருமை ... வழங்குகிறார்** நீதி. 3:34.

பிடித்துப் போகும். அந்தத் துருவே நீங்கள் தவறானவர்கள் என்பதை நிரூபிக்கும். அது உங்கள் சரீரத்தை நெருப்புபோல எரித்து விடும். உங்கள் கடைசி நாட்களில் செல்வத் தைச் சேர்த்தீர்கள். [4]மக்கள் உங்கள் வயல்க ளில் வேலை செய்தார்கள். ஆனால் அவர்க ளுக்கு நீங்கள் கூலி கொடுக்கவில்லை. அவர் கள் கூலிகளை நீங்கள் வைத்துக் கொண் டீர்கள். இப்போது அவர்கள் மீண்டும் உங்க ளைப் பார்த்து கூக்குரலிடுகிறார்கள். கூலிக்கா ரர்களின் கதறல்களை அனைத்து அதிகார முமுள்ள கர்த்தர் கேட்டார். [5]பூமியில் உங்கள் வாழ்வானது செல்வமிக்கது. உங்கள் விருப் பத்தின்படி கிடைப்பதைக் கொண்டு திருப்தி அடைகிறீர்கள். உங்களை நீங்கள் கொழுக்க வைத்து வெட்டப்படப்போகிற மிருகங்களைப் போல் ஆகிறீர்கள். [6]நல்ல மக்களுக்கு நீங்கள் இரக்கம் காட்டவில்லை. உங்களை எதிர்த்து நிற்காத நல்ல மக்களை நீங்கள் தண்டித்துக் கொலை செய்தீர்கள்.

### பொறுமையாய் இருங்கள்

[7]சகோதர சகோதரிகளே, பொறுமையாக இருங்கள். கர்த்தராகிய இயேசு வருவார். காலம் வரும்வரை பொறுமையாக இருங்கள். ஒரு விவசாயி தன் பயிர் வளர்ந்து அறுவடை யாகும்வரை காத்திருக்கிறான். தன் பயிருக் காக வேண்டி முதல் மழைக்கும் இறுதி மழைக் கும். அவன் மிகப் பொறுமையாக காத்திருக்கி றான். [8]நீங்களும் கூடப் பொறுமையாக இருக்க வேண்டும். நம்பிக்கையை விட்டு விடாதீர்கள். கர்த்தராகிய இயேசு சீக்கிரம் வருவார். [9]சகோ தர சகோதரிகளே, உங்களை நீங்களே குற்ற வாளியாக நியாயம் தீர்த்துக் கொள்ளா தபடிக்கு ஒருவரை ஒருவர் எதிர்த்து புகார்கள் செய்வதை நிறுத்துங்கள். பாருங்கள், கத வுக்கு வெளியே (உள்ளே வரத் தயாராக) நீதிபதி (தேவன்) நின்றுகொண்டிருக்கிறார். [10]துன்பப் படுதலுக்கும் பொறுமைக்கும் ஒரு உதாரணமாக கர்த்தரின் பெயரில் பேசிய தீர்க்கதரிசிகளைப் பாருங்கள் [11]சகித்துக் கொண்டதால் இப்போது நாம் அவர்களை "ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்" என்று அழைக்கி றோம். நீங்கள் யோபின் பொறுமையைப்பற்றி கேள்விப்பட்டிருக்கிறீர்கள். அவரது அனை த்து துன்பங்களுக்கும் பிறகு கர்த்தர் உதவி னார். இது, தேவன் கிருபையும், இரக்கமும் உடையவர் என்பதைக் காட்டும்.

### நீங்கள் சொல்வதைப் பற்றி எச்சரிக்கையாக இருங்கள்

[12]எனது சகோதர சகோதரிகளே, இது மிக வும் முக்கியமானது. பரலோகம் அல்லது பூமி யின் பெயரைப் பயன்படுத்தி ஆணையிடு வதை நிறுத்துங்கள். உண்மையில், எந்த ஆணையுமே இடாதீர்கள். உங்கள் 'ஆமாம்' என்பது 'ஆமாமாகவே' இருக்க வேண்டும். மேலும் உங்கள் 'இல்லை' என்பது 'இல்லை' யாகவே இருக்கவேண்டும். நீங்கள் குற்றவாளி யாக நியாயம் தீர்க்கப்படாதபடிக்கு இதை மட்டுமே சொல்லுங்கள்.

### பிரார்த்தனையின் அதிகாரம்

[13]உங்களில் எவருக்கேனும் துன்பம் வந் தால் அவர்கள் பிரார்த்தனை செய்ய வேண் டும். உங்களில் யாரேனும் மகிழ்ச்சியுடன் இருந்தால் அவர்கள் பாடவேண்டும். [14]உங்க ளில் எவருக்கேனும் நோய் வந்தால் ஆலயத் தில் உள்ள மூப்பர்களை அழைக்கவேண்டும். அவர்கள் கர்த்தரின் பெயரால் எண்ணெயைத் தடவி பிரார்த்தனை செய்யவேண்டும். [15]விசு வாசத்தோடு செய்யப்படுகிற எந்தப் பிரார்த் தனையும் பயன் தரும். அது நோயைக் குண மாக்கும்.

[16]நீங்கள் செய்த தவறுகளை ஒருவ ருக்கொருவர் சொல்லிக் கொள்ளுங்கள். பிறகு ஒருவருக்காக ஒருவர் பிரார்த்தனை செய்யுங் கள். இவ்வாறு செய்தால் தேவன் குணப்ப டுத்துவார். நல்லவர்கள் பிரார்த்தனை செய் தால் நன்மைகள் நிகழும். [17]எலியாவும்* நம் மைப் போன்ற ஒருவன் தான். மழை பெய்யக் கூடாது என்று பிரார்த்தனை செய்தான். என வே மூன்றரை வருடங்களாக மழை இல்லாமல் இருந்தது. மழை வேண்டுமென எலியா பிரார் த்தனை செய்தான். [18]எலியாவின் பிரார்த்த னைக்குப் பின் மழை வந்தது. பயிர்கள் செழித் தன.

### ஆன்மாவைக் காப்பாற்றுதல்

[19]எனது சகோதர சகோதரிகளே, உங்களில் ஒருவன் உண்மையிலிருந்து விலகிப் போக லாம். இன்னொருவன் அவனைத் திரும்பவும் அழைத்துவரலாம். [20]இதை நினைவிலிருத்திக் கொள்ளுங்கள். தவறான வழியிலிருந்து ஒரு பாவியைத் திருப்புகிற ஒருவன் அம்மனித னின் ஆன்மாவைக் காப்பாற்றி பல பாவங் களை அழிக்கிறான்.

---

**எலியா** எலியா கி மு 850 ல் தேவனுக்காக பேசியவர்.

# பேதுரு எழுதிய முதலாம் கடிதம்

1 இயேசு கிறிஸ்துவின் அப்போஸ்தலனாகிய
பேதுருவிடமிருந்து பொந்து, கலாத்தியா,
கப்பத்தோக்கியா, ஆசியா, பித்தினியா ஆகிய
இடங்களெங்கும் அந்நியர்களாக சிதறி வாழ்
ந்து கொண்டிருக்கிற தேவனுடைய மக்களுக்கு.
2 பிதாவாகிய தேவன் நெடுங்காலத்துக்கு
முன்பே செய்த திட்டப்படி தேவனுடைய மக்க
ளாக இருக்க நீங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டீர்கள்.
ஆவியானவரின் சேவை வழியாக அவருக்கு
நீங்கள் அர்ப்பணிக்கப்பட்டீர்கள். தேவனுக்குக்
கீழ்ப்படியவும் இயேசு கிறிஸ்துவின் இரத்தம்
தெளிக்கப்பட்டு பரிசுத்தமடையவும் நீங்கள்
தேர்ந்தெடுக்கப்பட்டீர்கள். கிருபையையும்,
சமாதானத்தையும் தேவன் உங்களுக்கு மென்
மேலும் வழங்குவாராக.

### வாழும் நம்பிக்கை

3 கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் பிதாவா
கிய தேவனுக்கு மகிமை உண்டாவதாக.
தேவன் தம் இரக்கத்தால் அழிவில்லாத ஒரு
நம்பிக்கையை நாம் அடையும்பொருட்டு
இயேசு கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலின்
மூலம் நமக்குப் புது வாழ்வையளித்தார். 4 இப்
பொழுது தேவன் தம்முடைய பிள்ளைகளுக்கு
பரலோகத்தில் வைத்திருக்கின்ற ஆசீர்வாதங்
களை நம்பிக் கையோடு எதிர்பார்க்கின்றோம்.
அந்த ஆசீர்வாதங்கள் அழிவற்றது; அழிக்கப்
படமுடியாதது; அதன் அழகு மாறாதது. 5 இந்த
ஆசீர்வாதங்கள் உங்களுக்கு உரியவை. இறுதி
நேரத்தில் தம் வல்லமையை வெளிப்படுத்தத்
தயாராக இருக்கிற இரட்சிப்புக்காக விசுவாசத்
தின் மூலம் தேவனுடைய வல்லமையால் நீங்
கள் பாதுகாக்கப்படுகிறீர்கள். 6 இது உங்களு
க்கு மிக்க மகிழ்ச்சியை தரும். சில சமயங்க
ளில் பல்வேறு வகைப்பட்ட தொந்தரவுகள்
உங்களுக்குத் துயரத்தைத் தரலாம். 7 ஏன்
இந்தத் துன்பங்கள் நிகழ்கின்றன? உங்கள் விசு
வாசம் பரிசுத்தமானது (உண்மையானது)
என்று நிரூபிப்பதற்கேயாகும். இந்த விசுவா
சத்தின் பரிசுத்தம் பொன்னைக் காட்டிலும்
சிறந்தது. பொன்னின் சுத்தத் தன்மை நெருப்
பால் சோதித்தறியப்படு கிறது. ஆனால் பொன்
அழிவுறும். இயேசு கிறிஸ்து வரும்போது,
உங்கள் விசுவாசத்தின் பரிசுத்தமானது உங்க
ளுக்கு கனத்தையும், மகிமையையும், புகழ்ச்
சியையும் கொடுக்கும். 8 நீங்கள் கிறிஸ்துவைப்
பார்த்ததில்லை. அப்படியிருந்தும் அவரை
நேசிக்கிறீர்கள். நீங்கள் இப்போது அவரைப்
பார்க்கமுடிவதில்லை. ஆனால் அவரை விசு
வாசிக்கிறீர்கள். சொல்லமுடியாத சந்தோஷத்
தால் உங்கள் மனம் நிரம்பும். அச்சந்தோஷம்
மகிமை மிகுந்தது. 9 உங்கள் விசுவாசம் ஒரு
குறிக்கோளை உடையது. இறுதியில் உங்கள்
ஆத்தும இரட்சிப்பாகிய நற்பலனைப் பெறுவீர்
கள். 10 உங்களுக்குக் காட்டப்படவேண்டிய கிரு
பையைப்பற்றி தீர்க்கதரிசனம் சொன்ன தீர்க்க
தரிசிகள் கவனமாக ஆராய்ந்து இந்த இரட்சிப்
பைப்பற்றி அறிய முயன்றிருக்கிறார்கள்.
11 இயேசு கிறிஸ்துவின் ஆவியானவர் அத்தீர்க்
கதரிசிகளிடம் இருந்தார். கிறிஸ்துவுக்கு நேர
இருக்கிற துன்பங்களைப்பற்றியும் அதைத்
தொடர்ந்து வரப்போகும் மகிமையைப்பற்றி
யும் அந்த ஆவியானவர் ஏற்கெனவே சொல்லி
யிருக்கிறார். அந்த ஆவியானவர் எதைக்
குறித்து பேசுகிறார் என்று அறிய தீர்க்கதரிசி
கள் முயன்றார்கள். அச்சம்பவங்கள் நடக்கும்
நேரம் மற்றும் சூழ்நிலை பற்றி அறிய தீர்க்கதரி
சிகள் முயன்றார்கள். 12 அவர்கள் செய்தபணி
அவர்களுக்குரியதல்லவென்று அந்தத் தீர்க்கத
ரிசிகளுக்கு உணர்த்தப்பட்டது. தீர்க்கதரிசிகள்
உங்களுக்காகப் பணியாற்றினார்கள். இவ்வி
ஷயங்களைப் பற்றி அவர்கள் பேசியபொழுது
அவர்கள் உங்களுக்குச் சேவை செய்து
கொண்டிருந்தனர். நற்செய்தியை உங்களுக்குப்
போதித்த மனிதர்களே அச்செய்திகளையும்
உங்களுக்குக் கூறியிருக்கிறார்கள். பரலோகத்
தில் இருந்து அனுப்பப்பட்ட பரிசுத்த ஆவியா
னவரின் உதவியால் அவர்கள் அதை உங்க
ளுக்குக் கூறினார்கள். தேவதூதர்களும் அறிந்
துகொள்ள விரும்புகின்ற காரியங்கள் உங்க
ளுக்கு அறிவிக்கப்பட்டன.

### பரிசுத்த வாழ்க்கைக்கான அழைப்பு

13 எனவே உங்கள் மனங்களைச் சேவைக்கு
ஆயத்தப்படுத்தி, தன்னடக்கத் தோடிருங்கள்.
இயேசு கிறிஸ்து தோன்றும் போது உங்க
ளுக்கு வாய்க்கப்போகிற கிருபையின் பரிசின்
மீது முழு நம்பிக்கை கொள்ளுங்கள். 14 கடந்த
காலத்தில் இந்த காரியங்களை நீங்கள் புரிந்து
கொள்ள வில்லை. எனவே நீங்கள் விரும்பிய
தீய செயல்களைச் செய்துவந்தீர்கள். ஆனால்
இப்போது கீழ்ப்படிகிற தேவனுடைய பிள்ளை
களாக இருக்கிறீர்கள். எனவே ஏற்கெனவே
நீங்கள் கொண்டிருந்த தீய ஆசைகளுக்கு ஏற்ப

வாழ்வதை நிறுத்துங்கள். **15**உங்களை
அழைத்த தேவன் பரிசுத்தமானவர். ஆதலால்
நீங்களும் நீங்கள் செய்கிற ஒவ்வொரு காரியத்
திலும் பரிசுத்தமானவர்களாக இருங்கள்.
**16**வேதவாக்கியங்களில் இவ்வாறு எழுதப்
பட்டுள்ளது. “நான் பரிசுத்தராக இருப்பதால்,
நீங்களும் பரிசுத்தராய் இருங்கள்.”

**17**தேவனிடம் நீங்கள் பிரார்த்தனை செய்யுங்
கள். அவரைப் பிதா என்று அழையுங்கள்.
ஒவ்வொரு மனிதனின் வேலையையும் சம
மாக நோக்கி தேவன் பாரபட்சம் இன்றி நியா
யம் வழங்குகிறார். எனவே நீங்கள் இவ்வுல
கில் வாழும்போது தேவனிடம் பயத்தோடும்,
மரியாதையோடும் வாழவேண்டும். **18**நீங்கள்
கடந்த காலத்தில் தகுதியற்ற வாழ்க்கை வாழ்ந்
துக்கொண்டிருந்தீர்கள். உங்கள் முன்னோர்
கள் மூலமாக அவ்வாழ்க்கை முறையை நீங்
கள் அறிந்துகொண்டீர்கள். அப்படிப்பட்ட
வாழ்விலிருந்து நீங்கள் இரட்சிக்கப்பட்டீர்கள்
என அறிவீர்கள். இந்த இரட்சிப்பு அழியும்
பொருட்களாகிய பொன், வெள்ளி போன்றவற்
றால் அல்ல, **19**குற்றம் குறையில்லாத ஆட்டுக்
குட்டியான இயேசு கிறிஸ்துவின் விலைமதிப்
பற்ற இரத்தத்தினால் (மரணத்தினால்) நிகழ்ந்
ததாகும். **20**உலகம் உருவாக்கப்படும் முன்னே
கிறிஸ்து தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால்
அவர் உங்கள் பயனுக்காக இந்தக் கடைசி
நாட்களில் வெளிப்படுத்தப்பட்டார். **21**நீங்கள்
கிறிஸ்துவின் மூலமாக தேவனை விசுவாசிக்
கிறீர்கள். தேவன் கிறிஸ்துவை மரணத்தி
னின்று எழுப்பி அவருக்கு மகிமையை
அளித்தார். எனவே உங்கள் விசுவாசமும்
நம்பிக்கையும் தேவனில் உள்ளன.

**22**உண்மைக்குக் கீழ்ப்படிவதன் மூலம் உங்க
ளை நீங்களே பரிசுத்தமுடையோராக ஆக்கிக்
கொண்டீர்கள். இதன் மூலம் உங்கள் உண்மை
யான சகோதர அன்பைக் காட்ட முடியும்.
எனவே இப்பொழுது பரிசுத்தமான இதயத்
தோடு ஒருவரையொருவர் ஆழமாக நேசியுங்
கள். **23**நீங்கள் மறுபடியும் பிறந்திருப்பது
அழியத்தக்க விதையில் இருந்து அல்ல, அழிே
வயற்ற விதையின் மூலம் ஆகும். எப்போதும்
தொடரும் தேவனுடைய அழிவில்லாத விதை
யாகிய வசனங்களினால் மீண்டும் பிறந்துள்
ளீர்கள்.

**24**வேதவாக்கியங்கள்,

> “எல்லா மனிதர்களும் புல்லைப் போன்
> றவர்கள். புல்லின் மலரைப் போன்றே
> அவர்களின் மகிமையும் காணப்படும்.
> புல் உலர்ந்துபோகிறது. பூக்கள் உதிர்
> கின்றன.
> **25** ஆனால் கர்த்தரின் வார்த்தையோ
> என்றும் நிலைத்திருக்கிறது”
>
> *ஏசாயா 40:6-8*

என்று சொல்கிறது. இந்த வார்த்தையே (போத
னையே) உங்களுக்குச் சொல்லப்பட்டது.

### ஜீவனுள்ள கல்லும் பரிசுத்தமான நாடும்

**2** எனவே எல்லாவிதமான தீமைகளிலிருந்
தும் விலகி இருங்கள். பொய் கூறாதீர்கள்.
போலியாக இருக்காதீர்கள். பொறாமை கொள்
ளாதீர்கள். மக்களைக் குறித்துத் தீயன கூறாதீர்
கள். இவற்றையெல்லாம் உங்கள் வாழ்க்கையி
லிருந்து அப்புறப்படுத்துங்கள். **2**புதிதாகப்
பிறந்த குழந்தைகளைப் போல இருங்கள். உங்
களை ஆவியில் வளர்க்கும் பரிசுத்த பாலைப்
போன்ற வேதவசனங்கள்மேல் பசியுடையவர்
களாக இருங்கள். அதைப்பருகுவதால் நீங்கள்
வளர்ந்து காப்பாற்றப்படுவீர்கள். **3**கர்த்தரின்
நன்மைகளை நீங்கள் ஏற்கெனவே ருசித்துள்
ளீர்கள்.

**4**கர்த்தர் இயேசு ஜீவனுள்ள “தலைக் கல்
லாக” இருக்கிறார். உலக மக்களால் ஒதுக்கப்
பட்ட கல்லாக அவர் இருந்தார். ஆனால்
தேவன் தேர்ந்தெடுத்த கல் அவர் தான். தேவ
னிடம் அவர் விலைமதிப்புள்ளவராக இருக்
கிறார். எனவே அவரிடம் வாருங்கள். **5**நீங்க
ளும் ஜீவனுள்ள கற்களைப் போன்றிருக்
கிறீர்கள். ஓர் ஆன்மீக ஆலயத்தைக் கட்ட உங்க
ளை தேவன் பயன்படுத்துகிறார். நீங்கள்
இயேசு கிறிஸ்து வழியாக தேவன் ஏற்கத்தக்க
ஆவிக்குரிய பலிகளைக் கொடுக்கும் பரிசுத்த
ஆசாரியராக வேண்டும். இயேசு கிறிஸ்துவின்
மூலமாக நீங்கள் அப்பலிகளைக் கொடுங்கள்.
**6**வேதவாக்கியம் சொல்கிறது!

> “பாருங்கள், நான் ஒரு விலையுயர்ந்த
> கல்லைத் தேர்ந்தெடுத்துள்ளேன். அக்
> கல்லை (இயேசுவை) சீயோன் என்னு
> மிடத்தில் வைத்தேன். அவரை நம்புகிற
> மனிதன் எப்போதும் வெட்கமுறு
> வதில்லை.”
>
> *ஏசாயா 28:16*

**7**நம்புகிற மக்களுக்கு அவர் கௌரவத்துக்கு
ரியதாகிறார். ஆனால் நம்பிக்கையற்ற மக்க
ளுக்கோ, அவர் கட்டுபவர்கள்,

> “வேண்டாமென்று தள்ளிய கல்லாகி
> றது. ஆனால் அக்கல்லே மிக முக்கிய
> மான கல்லாயிற்று”
>
> *சங்கீதம் 118:22*

என்பதற்கேற்ப இருக்கிறார். **8**நம்பிக்கையற்ற
மக்களுக்கோ, அவர்,

> “மக்களை இடறச் செய்யும் கல்லாவார்.
> மக்களை விழவைக்கும் கல்லாவார்”
>
> *ஏசாயா 8:14*

என்பதற்கேற்ப இருக்கிறார். தேவனுடைய
செய்திக்குக் கீழ்ப்படியாததால் மக்கள் இடறுகி
றார்கள். அம்மக்களுக்கு தேவன் திட்டமிட்டி
ருப்பது இதுவே.

9ஆனால் நீங்களோ தேர்ந்தெடுக்கப்பட்ட
மக்கள். நீங்கள் அரசரின் ஆசாரியர். நீங்கள்
ஒரு பரிசுத்த தேசம். நீங்கள் தேவனுக்குச்
சொந்தமான மக்கள். தேவன் தாம் செய்த
எல்லா அற்புதமான காரியங்களையும் சொல்
வதற்காக உங்களைத் தேர்ந்தெடுத்தார். அவ
ரது அற்புதமான ஒளிக்கு இருளிலிருந்து அவர்
உங்களை வர வழைத்தார். 10ஒரு காலத்தில்
நீங்கள் தேவனுடைய மனிதர்களாக இருக்க
வில்லை. ஆனால் இப்போது தேவனுடைய
மக்களாக இருக்கிறீர்கள். ஒரு காலத்தில் தேவ
னுடைய இரக்கத்தை நீங்கள் பெறவில்லை.
ஆனால் இப்போது நீங்கள் தேவனிடமிருந்து
இரக்கத்தைப் பெற்றுள்ளீர்கள்.

### தேவனுக்காக வாழுங்கள்

11அன்பான நண்பர்களே, நீங்கள் இந்த சமு
கத்தில் வாழ்கிற அந்நியர்கள் போலவும் புதிய
விருந்தாளிகள் போலவும் இருக்கிறீர்கள். உங்
கள் சரீரங்கள் செய்ய விழையும் தீய காரியங்
களை விட்டு விலகுமாறு நான் உங்களை
கேட்கிறேன். இவை உங்கள் ஆன்மாவுக்கு
எதிராகப் போராடுகின்றன. 12தேவனிடம்
நம்பிக்கையற்ற மக்கள் உங்களைச் சுற்றிலும்
வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். நீங்கள் தவறு
செய்கிறீர்கள் என்று இம்மக்கள் கூறக்கூடும்.
எனவே நல்வாழ்க்கை வாழுங்கள். அப்போது
அவர்கள் உங்கள் நற்செய்கைகளைக் காண்
பார்கள். அவர் வரும் நாளில் அவர்கள் தேவ
னுக்கு மகிமையைக் கொடுப்பார்கள்.

### ஒவ்வொரு மனித அதிகாரத்திற்கும் கீழ்ப்படியுங்கள்

13இவ்வுலகில் அதிகாரமுள்ள மக்களுக்குக்
கீழ்ப்படியுங்கள். இதனைக் கர்த்தருக்காகச்
செய்யுங்கள். உயர்ந்த அளவில் அதிகாரம்
செலுத்தும் அரசனுக்குக் கீழ்ப்படியுங்கள்.
14அரசனால் அனுப்பப்பட்ட ஆளுநர்களுக்குக்
கீழ்ப்படியுங்கள். அவர்கள் தவறு செய்பவர்
களைத் தண்டிப்பதற்கும் நல்லவற்றைச் செய்ப
வர்களைப் புகழ்வதற்கும் அனுப்பப்பட்டுள்
ளார்கள். 15எனவே புண்படுத்தும் வார்த்தை
களைப் பேசும் முட்டாள் மனிதர்களின் வாயை
அடைக்கும் பொருட்டு நற்செயல்களைச் செய்
யுங்கள். இதையே தேவன் விரும்புகிறார்.
16சுதந்திரமான மனிதரைப் போன்று வாழுங்
கள். தீயன செய்வதற்கு ஒரு காரணமாக உங்
கள் விடுதலையைப் பயன்படுத்தாதீர்கள். நீங்
கள் தேவனுக்குச் சேவை செய்பவர்களாகவே
வாழுங்கள். 17எல்லாருக்கும் மரியாதை செலு
த்துங்கள். தேவனுடைய குடும்பத்தில் எல்லா
சகோதரர்களையும் சகோதரிகளையும் நேசி
யுங்கள். தேவனுக்கு அஞ்சுங்கள். அரசனை
மதியுங்கள்.

### கிறிஸ்துவின் துன்பத்திற்கு எடுத்துக்காட்டு

18அடிமைகளே, உங்கள் எஜமானர்களின்
அதிகாரத்தை ஏற்றுக்கொள்ளுங்கள். இதை
எல்லா மரியாதையோடும் செய்யுங்கள். நல்ல
இரக்கமுள்ள எஜமானருக்குக் கீழ்ப்படியுங்கள்.
முரட்டுத்தனமான எஜமானருக்கும் கீழ்ப்படி
யுங்கள். 19ஒருவன் எந்தத் தவறும் செய்யாத
போதும் அவன் துன்பப்பட வேண்டியதிருக்
கும். ஒருவன் தேவனை எண்ணிக்கொண்டே,
துன்பத்தை அனுபவிப்பானாயின், அது தேவ
னைச் சந்தோஷப்படுத்தும். 20ஆனால் நீங்கள்
செய்த தவறுக்காகத் தண்டிக்கப்பட்டால், அத்
தண்டனையை அனுபவிப்பதற்காக உங்க
ளைப் புகழவேண்டியிராது. ஆனால் நன்மை
செய்வதற்காக நீங்கள் துன்புற்றால் அது தேவ
னுக்கு சந்தோஷம் தரும். 21அதைச் செய்வ
தற்காகவே நீங்கள் அழைக்கப்பட்டிருக்கிறீர்
கள். நீங்கள் பின் பற்றும்படியாக கிறிஸ்து
ஓர் எடுத்துக் காட்டை உங்களுக்குத் தந்தார்.
அவர் செய்ததைப் போலவே நீங்களும் செய்ய
வேண்டும். கிறிஸ்து உங்களுக்காகத் துன்புற்ற
தால் நீங்கள் துன்பப்படும்போது பொறுமை
யாக இருக்கவேண்டும்.

22 "அவர் (கிறிஸ்து) பாவமேதும் செய்ய
வில்லை. அவரது வாயில் எந்தப்
பொய்யும் வெளிவரவில்லை."
*ஏசாயா 53:9*

23மக்கள் கிறிஸ்துவிடம் தீயவற்றைப் பேசி
னார்கள். ஆனால் அவர் அவர்களுக்கு எந்தத்
தீய பதிலையும் தரவில்லை. கிறிஸ்து துன்புற்
றார். ஆனால் அவர் மக்களுக்கு எதிராகப்
பேசவில்லை. இல்லை! தேவன் தன்னைக்
கவனித்துக்கொள்ளுமாறு கிறிஸ்து விட்டு
விட்டார். தேவன் சரியான முறையில் நியாயந்
தீர்க்கிறார். 24சிலுவையின் மேல் கிறிஸ்து
தம் சரீரத்தில் நம் பாவங்களையும் சுமந்தார்.
நாம் பாவங்களுக்காக வாழ்வதை நிறுத்தி,
நேர்மையாக வாழ்வதற்காக அவர் இதைச்
செய்தார். அவரது (கிறிஸ்துவின்) காயங்களி
னால் நீங்கள் குணமாக்கப்பட்டீர்கள். 25தவ
றான வழியில் சென்ற ஆடுகளைப் போல
நீங்கள் இருக்கிறீர்கள். இப்போது நீங்கள் மேய்
ப்பனாகிய ஆன்மாவைக் காக்கிறவரிடம் வந்
துவிட்டீர்கள்.

### மனைவியரும் கணவன்மார்களும்

3 அவ்வாறே மனைவியராகிய நீங்கள், உங்
கள் கணவன்மாரின் அதிகாரத்தை ஏற்றுக்
கொள்ளவேண்டும். தேவனுடைய போதனை
களை உங்களில் சிலரது கணவன்மார்கள்
ஏற்றுக்கொள்ளவில்லையென்றால் கூட, எப்
பேச்சுமில்லாமல் தம் நடத்தையின் மூலம்
அவர்களின் மனைவிமார்கள் அவர்களை
வலியுறுத்தவேண்டும். 2உங்கள் பரிசுத்த மரி
யாதைக்குரிய நடத்தையை அவர்கள் காண்
பார்கள். 3கூந்தல், பொன் ஆபரணங்கள் மற்
றும் ஆடை வகைகள் ஆகிய புற அழகுகளால்
ஆனதாக உங்கள் அழகு இருக்கக்கூடாது. 4உள்
மனதினுடையதும் இதயத்தினுடையதுமான

அமைதியும் மென்மையுமான அழகாக உங்கள்
அழகு இருக்கவேண்டும். அந்த அழகு ஒரு
நாளும் அழியாது. இது தேவனுடைய பார்வை
யில் மிகவும் விலை உயர்ந்ததாகும். 5பல
லாண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்து தேவனில்
நம்பிக்கைக் கொண்ட பரிசுத்த பெண்கள் அவ்
வாறே வாழ்ந்தனர். இவ்வாறாகவே அவர்கள்
தங்களை அழகுபடுத்திக்கொண்டனர். அவர்
கள் கணவன்மாரின் அதிகாரத்தை ஏற்றுக்
கொண்டனர். 6நான் சாராளைப் போன்ற
பெண்களைக் குறித்துக் கூறுகிறேன். அவள்
தனது கணவனாகிய ஆபிரகாமுக்குக் கீழ்ப்
படிந்தாள். அவனை எஜமானென்று அழைத்
தாள். நீங்கள் சரியானவற்றைச் செய்து
எதைப்பற்றியும் அஞ்சாதவர்களாய் வாழ்ந்
தால் சாராளின் உண்மையான மக்களாய்
இருப்பீர்கள்.

7அவ்வாறே கணவன்மாராகிய நீங்களும்
உங்கள் மனைவியரோடு திருமண வாழ்வு
பற்றிய (கிறிஸ்தவ) புரிந்து கொள்ளுதலின்படி
வாழவேண்டும். நீங்கள் உங்கள் மனைவி
யரை மதிக்கவேண்டும். ஏனெனில் அவர்கள்
உங்களைக் காட்டிலும் எளியவர்கள். அதே
சமயத்தில் உங்களுக்கு வாழ்வளித்த தேவனு
டைய கிருபையில் அவர்களும் கூட்டு வாரிசு
தாரர்கள் ஆவார்கள். உங்கள் பிரார்த்த
னைக்கு எந்த தொந்தரவும் நேராமல் இருக்க
இவற்றைச் செய்யுங்கள்.

## நேர்மையினிமித்தம் துன்பம்

8எனவே நீங்கள் யாவரும் ஒன்றிணைந்து
அமைதியாக வாழவேண்டும். ஒருவரையொரு
வர் புரிந்துகொள்ள முயற்சியுங்கள். ஒருவரை
யொருவர் சகோதரரைப் போல நேசியுங்கள்.
இரக்கமுள்ளவர்களாகவும், அருளுடையவர்க
ளாகவும் இருங்கள். 9உங்களுக்கு ஒருவன்
தீமை செய்து விட்டதால் பழிக்குப் பழி வாங்
கும் எண்ணத்துடன் அவனுக்குத் தீமை செய்
யாதீர்கள். உங்களை ஒருவன் அவமானப்
படுத்தினால், பதிலுக்கு நீங்கள் அவமானப்
படுத்தாதீர்கள். ஆனால் அவனை ஆசீர்வதிக்
கும்படியாக தேவனை வேண்டுங்கள். நீங்கள்
ஆசியைப் பெற அழைக்கப்பட்டீர்கள் என்ப
தால் இதைச் செய்யுங்கள் 10வேதவாக்கியம்
கூறுகிறது:

> "வாழ்க்கையை நேசிக்கவும் நல்ல நாட்
> களை அனுபவிக்கவும் விரும்புகிற
> மனிதன் தீயவற்றைப் பேசுவதை நிறுத்
> தல் வேண்டும்.
> 11 அவன் தீமை செய்வதை விட்டு நன்மை
> செய்யவேண்டும். அவன் அமைதியை
> நாடி, அதைப் பெற முயலவேண்டும்.
> 12 கர்த்தர் நல்ல மனிதரைக் காண்கிறார்.
> அவர்களுடைய பிரார்த்தனைகளைக்
> கேட்கிறார். ஆனால் தீமைசெய்யும் மனி
> தருக்கு கர்த்தர் எதிரானவர்."
>
> *சங்கீதம் 34:12-16*

13எப்போதும் நன்மை செய்யவே நீங்கள்
முயன்று கொண்டிருந்தால் ஒருவனும் உங்க
ளைத் துன்புறுத்த முடியாது. 14ஆனால் சரி
யானதைச் செய்கையில் நீங்கள் துன்பம்
அடைந்தால் கூட, உங்களுக்கு நல்லதே ஆகும்.
"உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களைக்
கண்டு அஞ்சாதீர்கள். கவலை கொள்ளாதீர்
கள்." 15ஆனால் உங்கள் இதயங்களில் கர்த்த
ராகிய கிறிஸ்துவை பரிசுத்தம் பண்ணுங்கள்.
உங்கள் நம்பிக்கையைப் பற்றி விளக்கிக்
கூறும்படியாக கேட்போருக்குப் பதில் கூறுவ
தற்கு எப்போதும் தயாராக இருங்கள்.
16ஆனால் அவர்களுக்கு மரியாதையோடும்
மென்மையாகவும் பதில் கூறுங்கள். உங்கள்
மனசாட்சியைச் சுத்தமாக வைத்துக்கொள்ளுங்
கள். அவ்வாறு செய்யும்போது கிறிஸ்துவைப்
பின்பற்றும் உங்கள் நடத்தையைக் குறை
கூறிப் பேசுகின்ற மக்கள் வெட்கமடைவார்கள்.
கிறிஸ்துவில் நீங்கள் வாழும் நல் வாழ்க்
கைக்கு எதிராக அவர்கள் பேசுகிறார்கள்.
அவர்கள் உங்களுக்கெதிராகப் பேசியவற்றிற்
காக வெட்கமடைவார்கள். 17தவறு செய்வ
தைக் காட்டிலும், தேவனுடைய விருப்பம்
இதுதான் எனில் நன்மை செய்வதற்காக துன்
புறுவது நல்லது. 18ஏனெனில் ஒட்டுமொத்தமாக
நம் பாவங்களுக்காக கிறிஸ்துவும் மரித்தார்.
குற்றம் நிறைந்த மனிதர்களுக்காக பாவ
மேயில்லாத அவர் இறந்தார். இதன்மூலம் உங்
களைத் தேவனிடம் வழிகாட்டினார். இயற்கை
யான மனித வாழ்வில் அவர் மரணமடைய
நேரிட்டது. ஆனால் உயர்ந்த ஆன்மீக நிலை
யில் அவர் மீண்டும் எழுப்பப்பட்டார்.
19சிறைச்சாலைகளில் உள்ள ஆவிகளுக்கு,
இந்த ஆவி நிலையிலேயே சென்று அறி
வித்தார். 20நோவாவின் காலத்தில் அந்த ஆவி
கள் தேவனுக்குக் கீழ்ப்படிய மறுத்தன. நோவா
பேழையை (கப்பலை) அமைக்கும்போது
தேவன் அவற்றிற்காகப் பொறுமையாகக்
காத்துக்கொண்டிருந்தார். மிகச் சில மக்களா
கிய எட்டுப் பேர் மட்டுமே பேழையில் காப்
பாற்றப்பட்டார்கள். தண்ணீரினால் இம்மக்கள்
மீட்கப்பட்டார்கள். 21இன்று நீங்கள் இரட்சிக்கப்
படுகின்ற ஞானஸ்நானத்திற்கு அந்தத் தண்
ணீர் ஒப்பானது. ஞானஸ்நானம் சரீரத்திலி
ருந்து அழுக்கை விலக்குவதில்லை. ஆனால்
தேவனிடம் தூய உள்ளத்தை வேண்டுவதே
ஞானஸ்நானம். இயேசு கிறிஸ்து மரணத்தி
னின்று எழுப்பப்பட்டதால் இவை அனைத்
தும் நடக்கின்றன. 22இப்போது இயேசு பரலோ
கத்திற்குப் போய்விட்டார். அவர் தேவனுடைய
வலது பக்கத்தில் இருக்கிறார். அவர் தேவ
தூதர்களையும், அதிகாரங்களையும், ஆற்றல்
வாய்ந்தோரையும் ஆளுகிறார்.

## மாற்றப்பட்ட வாழ்க்கை

4 கிறிஸ்து தம் சரீரத்தில் இருக்கும் போது
துன்புற்றார். கிறிஸ்துவை யொத்த சிந்த
னையை மேற்கொண்டு நீங்கள் உங்களைப்

பலப்படுத்திக்கொள்ள வேண்டும். சரீரத்தில் மரணமுறுகிற மனிதனோ பாவத்தினின்று நீங்குகிறான். [2]தேவன் விரும்புகிறவற்றைச் செய்யவும் மனிதர்கள் செய்ய விரும்புகிறவற்றை இனிமேலும் செய்யாமல் இருக்கவும் உங்கள் உலக வாழ்வின் மீதியான காலத்தை நீங்கள் பயன்படுத்திக் கொள்ளுங்கள். [3]பாலுறவுப் பாவங்களில் ஈடுபடுதல், தீயவிருப்பங்கள், குடிப்பழக்கம், மது அருந்தும் விருந்துகள், தடைசெய்யப்பட்ட உருவவழிபாடு ஆகிய நம்பிக்கை அற்றோர் செய்ய விரும்புகிற காரியங்களைச் செய்வதில் ஏற்கெனவே உங்களின் பெரும்பாலான நேரத்தைச் செலவழித்துவிட்டீர்கள். [4]இந்த குரூரமும் பாவமும் நிறைந்த வாழ்க்கை முறையில் நீங்கள் ஈடுபடாததை அந்த நம்பிக்கையற்றோர் விநோதமாக கருதுகிறார்கள். உங்களைக் குறித்து மோசமான முறையில் பேசுகிறார்கள். [5]வாழ்கிறவர்களையும் இறந்து போனவர்களையும் நியாயம் தீர்க்கத் தயாராய் இருக்கிற ஒருவருக்கு (கிறிஸ்துவுக்கு) செய்த காரியங்களுக்கு அவர்கள் விளக்கமளிக்கவேண்டும். [6]இக்காரணங்களுக்காக இப்போது இறந்துவிட்ட விசுவாசிகளுக்கும் நற்செய்தியானது போதிக்கப்பட்டது. இதன் மூலம் அவர்களின் உலக வாழ்க்கையின்போது மோசமான வகையில் மனிதர்களால் நியாயம் தீர்க்கப்பட்டாலும், ஆவியால் தேவன் முன்னிலையில் அவர்கள் வாழ்ந்தார்கள்.

### தேவனுடைய வரங்களில் நல்ல அதிகாரிகளாக இருங்கள்

[7]எல்லாம் முடிகிற காலம் நெருங்குகிறது. எனவே உங்கள் மனங்களைத் தெளிவுடையதாக வைத்திருங்கள். நீங்கள் பிரார்த்தனை செய்ய அது உதவும். [8]அன்பு எத்தனையோ பாவங்களை மூடி விடுவதால் ஒருவரையொருவர் ஆழமாக நேசியுங்கள். எல்லாவற்றிலும் மிக முக்கியமானது இதுவே ஆகும். [9]குற்றம் சாட்டாமல் உங்கள் வீடுகளை ஒருவரோடொருவர் பகிர்ந்து கொள்ளுங்கள்.

[10]உங்களில் ஒவ்வொரு வரும் தேவனிடமிருந்து வரங்களைப் பெற்றுக்கொண்டீர்கள். பல வகையான வழிகளில் தேவன் தம் இரக்கத்தை உங்களுக்குக் காட்டியுள்ளார். தேவனுடைய வரங்களைப் பயன்படுத்தும் பொறுப்புக்கு உரியவர்களான பணியாட்களைப்போல நீங்கள் இருக்கிறீர்கள். எனவே நல்ல பணியாட்களாக இருந்து தேவனுடைய வரங்களைப் ஒருவருக்கொருவர் சேவை செய்வதற்குப் பயன்படுத்துங்கள். [11]பேசுகிற மனிதன் தேவனிடமிருந்து வார்த்தைகளை கொண்டு வருவது போல பேச வேண்டும். சேவை செய்யும் மனிதன் தேவன் தரும் வல்லமையோடு சேவை புரிதல் வேண்டும். இயேசு கிறிஸ்துவின் மூலமாக தேவன் எல்லாவற்றிலும் மகிமையுறும்படி நீங்கள், இக்காரியங்களைச் செய்யவேண்டும்.

### கிறிஸ்தவனாகத் துன்புறுதல்

[12]எனது நண்பர்களே, நீங்கள் தற்சமயம் அனுபவிக்கிற வருத்தங்களையும் இன்னல்களையும் கண்டு ஆச்சரியப்படாதீர்கள். இவை உங்கள் விசுவாசத்தை சோதிப்பன. ஏதோ விசித்திரமான செயல் உங்களுக்கு நிகழ்வதாக நினைக்காதீர்கள். [13]கிறிஸ்துவின் துன்பங்களில் நீங்களும் பங்கெடுத்துக் கொள்வதால், நீங்கள் சந்தோஷப்படவேண்டும். இதன் மூலம் கிறிஸ்து தம் மகிமையைக் காட்டும்போது நீங்கள் மகிழ்ச்சி அடைந்து, சந்தோஷத்தால் மனம் நிறைவீர்கள். [14]நீங்கள் கிறிஸ்துவைப் பின்பற்றுவதால், மக்கள் உங்களை பற்றி தீயன கூறும்போது, நீங்கள் ஆசீர்வதிக்கப்படுவீர்கள். தேவனுடைய மகிமை மிக்க ஆவியானவர் உங்களோடிருப்பதால் நீங்கள் ஆசீர்வதிக்கப்படுகிறீர்கள். [15]உங்களில் யாரும் கொலைகாரர்களாகவோ, திருடர்களாகவோ, அடுத்தவர்களின் காரியங்களில் தலையிடுகிறவர்களாகவோ, இக்காரியங்களுக்கான தண்டனையை அனுபவிக்கிறவர்களாகவோ இருக்கக்கூடாது. [16]ஒருவன் கிறிஸ்துவுக்காகத் துன்புறுவதற்காக வெட்கப்படக்கூடாது. அப்பெயருக்காக (கிறிஸ்தவன்) நீங்கள் தேவனை வாழ்த்தவேண்டும். [17]நியாயந் தீர்க்கப்படுதல் ஆரம்பமாகும் காலம் இது. தேவனுடைய குடும்பத்தில் அந்நியாயத் தீர்ப்பு ஆரம்பமாகும். நியாயத்தீர்ப்பு நம்மிடத்தில் ஆரம்பித்தால் தேவனுடைய நற்செய்திக்குக் கீழ்ப்படியாத மக்களுக்கு என்ன நிகழும்?" [18]"ஒரு நல்ல மனிதனே இரட்சிக்கப்படுவது மிகவும் கடுமையானது என்றால், தேவனுக்கு எதிரானவனும், பாவத்தால் நிரம்பியவனுமான மனிதனுக்கு என்ன நேரிடக்கூடும்?" [19]தேவனுடைய விருப்பப்படி துன்புறுகிற மக்கள் தங்கள் ஆன்மாக்களை அவரிடம் ஒப்படைக்க வேண்டும். தேவன் அவற்றை உண்டாக்கினார், எனவே அவர்கள் அவரை நம்பலாம். ஆகையால் அவர்கள் தொடர்ந்து நன்மை செய்யவேண்டும்.

### தேவனுடைய மந்தை

5 உங்கள் குழுவிலுள்ள முதியோருக்கு இப்பொழுது நான் சிலவற்றைக் கூறவேண்டும். நானும் ஒரு முதியவன். நான் கிறிஸ்துவின் துன்பங்களை நேரில் கண்டிருக்கிறேன். நமக்குக் காட்டப்படும் மகிமையிலும் நான் பங்கு கொள்வேன். [2]ஒரு ஆட்டுமந்தையைக் கவனித்துக்கொள்கிற மேய்ப்பர்கள்போல உங்கள் பொறுப்பில் இருக்கிற மக்களின் கூட்டத்தைக் கவனித்துக் கொள்ளவேண்டுமென நான் உங்களை கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். அவர்கள் தேவனுடைய கூட்டத்தினர். விருப்பத்தோடு அவர்களைக் கவனித்துக் கொள்ளுங்கள். எவ்விதமான நிர்ப்பந்தத்தின் காரணமாகவும் அப்படிச் செய்யவேண்டாம். நீங்கள் அதை விருப்பத்தோடு செய்யவேண்டு

மென தேவன் விரும்புகிறார். பணத்துக்காகப்
பேராசை பிடித்திருப்பதால் கண்காணிப்பா
ளர்களைப் போலச் சேவை செய்யாதீர்கள்.
சேவை செய்யும் வாஞ்சை இருப்பதால்
சேவை செய்யுங்கள். [3]நீங்கள் பொறுப்பேற்
றுள்ள மக்களிடம் கொடுமையான அதிகாரி
யாக நடந்துகொள்ளாதீர்கள். ஆனால் அம்மக்க
ளுக்கு முன்மாதிரியாக இருங்கள். [4]அப்போது,
தலைமை மேய்ப்பர் (கிறிஸ்து) வரும்போது
நீங்கள் கிரீடம் பெறுவீர்கள். அக்கிரீடம் மகி
மை நிரம்பியதாகவும், ஒருபோதும் அழகு
குன்றாததாகவும் இருக்கும்.

[5]இளைஞர்களே, நான் உங்களுக்கும் சில
வற்றைச் சொல்லவேண்டும். முதியோரின்
அதிகாரத்திற்கு நீங்கள் கட்டுப்பட வேண்டும்.
ஒருவருக்கொருவர் தாழ்மையோடு சேவை
புரிந்துகொள்ள வேண்டும்.

> "அகம்பாவம்மிக்க மனிதருக்கு தேவன்
> எதிரானவர். ஆனால் தாழ்மையுள்ள
> மனிதருக்கு தேவன் கிருபை அளிக்
> கிறார்."
>
> நீதிமொழிகள் 3:34

[6]எனவே தேவனுடைய வல்லமை வாய்ந்த
கைகளுக்குக் கீழே தாழ்மையோடு இருங்கள்.
தகுந்த காலம் வரும்போது அவர் உங்களை
உயர்த்துவார். [7]அவர் உங்களைக் கவனிப்ப
தால் உங்கள் கவலைகளை அவரிடம் விட்டு
விடுங்கள்.

[8]உங்களைக் கட்டுப்படுத்திக்கொண்டு கவன
மாக வாழுங்கள்! பிசாசு உங்கள் பகைவன்.
உண்ணும்பொருட்டு எந்த மனிதனாவது அகப்
படுவானா என்று தேடிக்கொண்டே கர்ச்சிக்
கிற சிங்கத்தைப் போலவே அவன் அலைகி
றான். பிசாசைப் பின்பற்ற மறுத்துவிடுங்கள்.
[9]உங்கள் விசுவாசத்தில் உறுதியாக நில்லுங்
கள். நீங்கள் அனுபவிக்கிற அதே துன்பங்
களை உலகத்தின் எல்லா பாகங்களிலுமுள்ள
உங்கள் சகோதரரும் சகோதரிகளும் அனுப
விக்கிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியும்.

[10]ஆம், குறுகிய காலம் நீங்கள் துன்பப்ப
டுவீர்கள். ஆனால் அதற்குப் பிறகு, தேவன்
எல்லாவற்றையும் சரிப்படுத்துவார். அவர்
உங்களைப் பலப்படுத்துவார். அவர் உங்க
ளைத் தாங்கிக் கொண்டு, நீங்கள் விழாதபடி
பாதுகாப்பார். எல்லா கிருபையையும் அரு
ளுகின்ற தேவன் அவரே. கிறிஸ்துவின் மகி
மையில் பங்குகொள்ளும்படி அவர் உங்களை
அழைத்தார். அம்மகிமை என்றென்றும் தொட
ரும். [11]எல்லா வல்லமையும் என்றென்றும்
அவருக்குரியது. ஆமென்.

### இறுதி வாழ்த்துக்கள்

[12]சில்வானுவின் உதவியோடு இந்தச் சிறிய
நிருபத்தை உங்களுக்கு எழுதினேன். அவன்
நம்பிக்கைக்குத் தகுதியான கிறிஸ்தவ சகோ
தரன் என்பதை நான் அறிவேன். உங்களை
உற்சாகப்படுத்தவும் உங்களுக்கு உறுதிப்படுத்
தவும் இதுவே தேவனுடைய உண்மையான
கிருபை என்பதை எழுதி இருக்கிறேன். அந்த
கிருபையில் உறுதியாக நில்லுங்கள்.

[13]பாபிலோனில் இருக்கும் சபை உங்களை
வாழ்த்துகிறது. அம்மக்களும் உங்களைப்
போலவே தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். கிறிஸ்து
வில் எனது மகனாகிய மாற்கும் உங்களை
வாழ்த்துகிறான். [14]நீங்கள் சந்திக்கும்போது ஒரு
வருக்கொருவர் அன்பினால் முத்தமிடுங்கள்.

கிறிஸ்துவிலுள்ள உங்கள் எல்லோருக்கும்
சமாதானம் உண்டாகட்டும்.

# பேதுரு எழுதிய இரண்டாம் கடிதம்

1 இயேசு கிறிஸ்துவின் ஊழியக்காரனும்,
அப்போஸ்தலனுமாகிய சீமோன் பேதுருவி
டமிருந்து, எங்களைப் போலவே மதிப்பு மிக்க
விசுவாசத்தைப் பெற்ற மக்களாகிய உங்க
ளுக்கு. நம்முடைய தேவனுடைய நீதியாலும்
இரட்சகராகிய இயேசு கிறிஸ்துவாலும் இந்த
விசுவாசத்தை நீங்கள் பெற்றீர்கள். சரியான
தையே அவர் செய்கிறார். 2 தேவனை உண்மை
யாக அறிவதன் மூலமும் நமது கர்த்தராகிய
இயேசுவின் மூலமும் உங்களுக்கு மென்
மேலும் கிருபையும் சமாதானமும் கொடுக்
கப்படுவதாக!

### நமக்கு தேவையான எல்லாவற்றையும் தேவன் கொடுத்திருக்கிறார்

3 தேவனுடைய வல்லமை இயேசுவிடம்
உள்ளது. நாம் வாழ்வதற்கும், தேவனுக்குச்
சேவை செய்வதற்கும் தேவையான எல்லாவற்
றையும் அவரது வல்லமை நமக்குக் கொடுத்
திருக்கிறது. நாம் அவரை அறிவதால் நமக்கு
இவை கொடுக்கப்பட்டுள்ளன. இயேசு தன்
மகிமையாலும், கருணையினாலும் நம்மை
அழைத்தார். 4 அவரது மகிமையாலும், நன்மை
யினாலும் அவர் நமக்கு வாக்களித்த மிகப்
பெரிய உயர்ந்த பரிசுகளைக் கொடுத்திருக்
கிறார். அப்பரிசுகளால் நீங்கள் தேவனுடைய
தன்மையை பகிர்ந்து அடைய முடியும். தீய
ஆசைகளால் உலகில் உருவாகும் அழிவுகளி
லிருந்து நீங்கள் தப்பிக்க முடியும். 5 உங்களுக்கு
இந்த ஆசிகள் இருப்பதால், நல்லதை உரு
வாக்கவும், நல்லவற்றின் மூலம் அறிவை உரு
வாக்கவும் உங்கள் விசுவாசத்தின் மூலம்
எல்லா முயற்சிகளையும் நீங்கள் எடுக்கவேண்
டும். 6 அறிவால் சுயக்கட்டுப்பாட்டை உரு
வாக்கவும், சுயக்கட்டுப்பாட்டால் சகிப்புத்தன்
மையை உருவாக்கவும், சகிப்புத்தன்மையால்
தேவனுக்கான அர்ப்பணிப்பை உருவாக்கவும்
முயலவேண்டும். 7 தேவபக்தியின் மூலம் சகோ
தர சகோதரிகளின்மேல் நேசமும், உங்கள்
சகோதர சகோதரிகளின் மேல் உள்ள இந்த
நேசத்தின் மூலம் அன்பை உருவாக்கவும்
முயற்சி செய்யுங்கள். 8 இவையனைத்தும் உங்க
ளைத் துடிப்பானவர்களாகவும், ஆக்கம் உள்ள
வர்களாகவும் ஆக்கும். நம் கர்த்தராகிய இயேசு
கிறிஸ்துவைப்பற்றி முழுக்க அறிந்து கொள்ள
இத்தகுதிகள் உங்களுக்கு உதவும். 9 ஆனால்
இவையனைத்தும் ஒருவனிடம் இல்லாதிருந்
தால் அவனால் தெளிவாகப் பார்க்க இயலாது.
அம்மனிதன் குருடனாக இருப்பான். தனது
பழைய பாவங்களினின்று அவன் கழுவப்
பட்டவன் என்பதை அவன் மறந்து போனவ
னாவான்.

10 எனது சகோதர சகோதரிகளே, தேவன்
உங்களை அழைத்து, அவருக்குரியோராகத்
தேர்ந்துகொண்டார். எனவே (தேவனால்
வரும் இரட்சிப்புக்கு) உங்கள் அழைப்பையும்
தேர்வையும் நிரந்தரமாக்கிக்கொள்ள இன்னும்
அதிக ஆவலுடையவர்களாக நீங்கள் இருக்க
வேண்டும். அவையனைத்தையும் நீங்கள்
செய்தால், நீங்கள் ஒருபோதும் வீழ்ச்சியடைவ
தில்லை. 11 நமது கர்த்தரும் இரட்சகருமாகிய
இயேசு கிறிஸ்துவின் நித்திய இராஜ்யத்தில்
நீங்கள் மிகச் சிறந்த வரவேற்பைப் பெறுவீர்
கள்.

12 நீங்கள் இக்காரியங்களை அறிவீர்கள். உங்
களிடமுள்ள உண்மையில் நீங்கள் உறுதியுடன்
உறுதிப்பட்டிருக்கிறீர்கள். ஆனால் இக்காரி
யங்களை நினைவூட்ட நான் எப்போதும் உதவு
வேன். 13 நான் இச்சரீரத்தில் வாழ்ந்துகொண்டி
ருக்கும்வரை இக்காரியங்களை நீங்கள்
நினைவு கூர்வதற்கு உதவுவதை என் கடமை
என்று நான் எண்ணுகிறேன். 14 இந்த சரீரத்தி
னின்று விரைவில் நான் நீங்கவேண்டும் என்
பதை அறிவேன். நமது கர்த்தராகிய இயேசு
கிறிஸ்து அதை எனக்குக் காட்டியுள்ளார்.
15 என் மறைவுக்குப் பிறகு எல்லா நேரங்களி
லும் இக்காரியங்களை நீங்கள் நினைவுகூர்ந்து
கொள்ளும் பொருட்டு என்னால் இயன்ற
அளவு செய்வேன்.

### கிறிஸ்துவின் மகிமையை நாங்கள் கண்டோம்

16 இயேசு கிறிஸ்து வல்லமையோடு வரு
வார் என நாங்கள் உங்களிடம் சொன்னபோது
புத்திசாலித்தனமாக கண்டு பிடிக்கப்பட்ட
கட்டுக்கதைகளை நாங்கள் சார்ந்திருக்க
வில்லை. அதற்கு மாறாக, அவருடைய மாட்
சிமையை நாங்களே கண்டோம். 17 மிகவும்
மகிமை வாய்ந்தவரிடமிருந்து (தேவனின்)
விசேஷ குரலானது அவரை வந்தடைந்த
போது பிதாவாகிய தேவனிடமிருந்து அவர்
கௌரவமும் மகிமையையும் பெற்றார். அக்கு
ரல், “இவர் என் அருமை மகன். நான் இவ
ரைக் குறித்து சந்தோஷப்படுகிறேன்” என்றது.

18நாங்கள் அக்குரலைக் கேட்டோம். பரிசுத்த
மலையின்மீது நாங்கள் இயேசுவோடிருக்கும்
போது பரலோகத்திலிருந்து அக்குரல் வந்தது.
19தீர்க்கதரிசிகளின் செய்தியானது நம்ப
கமானவை என்று நாங்கள் நம்புகிறோம். தீர்க்
கதரிசிகள் சொன்னவற்றைப் பின்பற்றுவது
உங்களுக்கு நல்லது. அவர்கள் கூறியவை,
பொழுது விடிந்து, உங்கள் இதயங்களில் விடி
வெள்ளி எழுகிறவரைக்கும் இருளில் ஒளிவி
டும் தீபத்தைப் போன்றவை. 20நீங்கள் இதைப்
புரிந்துகொள்வது மிகவும் முக்கியம். எந்தத்
தீர்க்கத்தரிசியின் சொந்த விளக்கத்திலிருந்
தும் வேத வாக்கியத்தின் எந்தத் தீர்க்கதரிசன
மும் வெளிப்படுவதில்லை. 21ஒரு மனிதன்
சொல்ல நினைத்ததிலிருந்து எந்தத் தீர்க்கதரிச
னமும் வந்ததில்லை. ஆனால் மக்கள் பரிசுத்த
ஆவியானவரால் வழிநடத்தப்பட்டு தேவனிடமி
ருந்து வந்த செய்திகளைக் குறித்துப் பேசினார்
கள்.

### போலிப் போதகர்கள்

2 கடந்த காலத்தில் தேவனுடைய மக்கள்
மத்தியில் போலியான தீர்க்கதரிசிகளும்
இருந்தனர். அதே வழியில், உங்கள் குழுவி
லும் போலிப் போதகர்கள் கூட இருப்பார்கள்.
யாரும் பார்க்காத வகையில் இப்போலிப்
போதகர்கள் மோசமான போதனைகளை அறி
முகப் படுத்துவார்கள். தங்களை மீட்டுக்கொண்
டவரும், தங்களுக்கு விடுதலையைப் பெற்றுத்
தந்தவருமான எஜமானரை (இயேசுவை)
அவர்கள் ஏற்றுக்கொள்ள மறுப்பார்கள். என
வே அவர்கள் விரைவில் தங்களை அழித்துக்
கொள்வார்கள். 2அவர்கள் செய்கிற தீய செயல்
களில் பலரும் அவர்களைப் பின் பற்றுவார்
கள். அம்மக்களினால் பிற மக்கள் உண்மை
வழியைக் குறித்து தீயவற்றைப் பேசுவர்.
3அவர்களின் பேராசையால் அந்தப் போலிப்
போதகர்கள் உண்மையற்ற போலியான போத
னைகள் மூலம் உங்களைப் பயன்படுத்திக்
கொள்வார்கள். வெகு காலத்திற்கு முன்பே
தேவன் அவர்களுக்குத் தண்டனையை அறி
வித்தார். இது வெறும் அச்சமூட்டத்தக்க பேச்சு
அல்ல, அவர்களின் அழிவு தயாராகக் காத்தி
ருக்கிறது.
4தேவதூதர்கள் பாவம் செய்தபோது,
தேவன் அவர்களைத் தண்டனையின்றி விடு
தலைபெற அனுமதிக்கவில்லை. தேவன் அவர்
களை நியாயந்தீர்க்கிற நாள் வரைக்கும்
அடைந்திருக்கும்பொருட்டு நரகத்தின் இருட்டு
மூலைகளில் எறிந்தார். 5ஆதிகாலத்தில்
வாழ்ந்த தீய மக்களையும் தேவன் தண்டித்தார்.
தேவனுக்கு எதிரான மக்கள் நிறைந்த உலகின்
மேல் தேவன் வெள்ளம் பெருகியோடச் செய்
தார். ஆனால் நோவாவையும், நோவாவோடு
வேறு ஏழு பேரையும் தேவன் காப்பாற்றி
னார். சரியான வழியில் வாழ்வதுபற்றி மக்க
ளுக்குப் போதித்த மனிதன் நோவா ஆவான்.
6சோதோம், கொமோரா என்னும் தீய நகரங்
களையும் தேவன் தண்டித்தார். சாம்பலைத்
தவிர வேறெதுவும் இல்லாத வகையில் தேவன்
அந்த நகரங்களை நெருப்பால் முற்றிலும்
அழித்தார். தேவனுக்கு எதிரான மக்களுக்கு
நடக்கவிருப்பதைத் தெரிவிக்கும் எடுத்துக்காட்
டாக தேவன் அந்நகரங்களுக்குச் செய்தார்.
7ஆனால் தேவன் அந்நகரங்களினின்று லோத்
துவைக் காப்பாற்றினார். லோத்து மிக நல்ல
மனிதன். எந்த சட்டமுமற்ற மனிதர்களின் அநீ
தியான நடத்தையால் அவன் தொந்தரவுக்கு
உள்ளாகி இருந்தான். 8(லோத்து நல்ல மனிதன்.
ஆனால் நாள்தோறும் அவன் அத்தீய மனித
ரோடு வாழ்ந்து வந்தான். அவன் பார்த்ததும்
கேட்டதுமாகிய தீய காரியங்களினால் லோத்
தின் நல்ல மனம் வேதனையடைந்திருந்தது)
9ஆம், தேவன் இந்தக் காரியங்கள் எல்லா
வற்றையும் செய்தார். ஆகவே தமக்குச் சேவை
செய்கிற மக்களை எப்படி இரட்சிப்பது என
கர்த்தர் (தேவன்) அறிவார். மேலும் நியாயம்
தீர்க்கிற நாள்வரை தீயவர்களைத் தண்டிப்பது
எப்படி என்றும் அறிவார். 10குறிப்பாக பாவ
ங்களால் நிறைந்து ஊழல்கள் மலிந்த வழி
யைப் பின்பற்றுகிறவர்களுக்கும் கர்த்தரின்
அதிகாரத்தை மீறுகிறவர்களுக்கும் இத்தண்
டனை கிடைக்கும். போலிப் போதகர்கள் அவர்
கள் விரும்பும் அனைத்தையும் செய்வார்கள்.
மட்டுமன்றி, தங்களைக் குறித்து அவர்கள்
பெருமை பாராட்டிக் கொள்வார்கள். மகிமை
மிக்க தேவதூதர்களைக் குறித்துத் தீயவற்றைப்
பேசுவதற்கும் அவர்கள் அஞ்சமாட்டார்கள்.
11இந்தப் போலிப் போதகர்களைக் காட்டிலும்
தேவதூதர்கள் வலிமையும் ஆற்றலும் மிக்கவர்
கள். ஆனால் தேவதூதர்களும்கூட கர்த்தரின்
முன்னிலையில் இந்தப் போலிப் போதகர்க
ளைப் பற்றிக் குற்றம் சாட்டும் போது அவ
மானப்படுத்தும் வார்த்தைகளைப் பயன்ப
டுத்துவதில்லை. 12தாம் அறியாத விஷயங்
களைப்பற்றி அவர்கள் பேசுகிறார்கள். இம்மக்
கள் காரணகாரியமின்றி வெறும் உந்துதலால்
செயல்படும் மிருகங்களைப்போன்றவர்கள்.
பிடித்துக் கொல்லப் படுவதற்காகப் பிறக்கின்ற
காட்டு மிருகங்களைப்போல இம்மக்களும்
அழிக்கப்படுவார்கள். 13இந்தப் போலிப் போத
கர்கள் பலர் துன்புறக் காரணமாக இருந்திருக்
கிறார்கள். அவர்களும் துன்புறுத்தப்படுவார்
கள். அவர்கள் செய்ததற்கு அவர்கள் பெறும்
சம்பளம் அதுவேயாகும். பகல் நேரத்தில்
பெரிய விருந்துகளில் சுகித்திருப்பதையே
அவர்கள் சந்தோஷமாக எண்ணுகிறார்கள்.
கரும் புள்ளிகளாகவும், (உங்களுக்கு அவமா
னம் தருகிற) கறைகளாகவும் இருக்கிறார்கள்.
அவர்கள் உங்களோடு உணவுக்கு வரும்
போது தம் தந்திரம் நிறைந்த மகிழ்ச்சிகளி
லேயே ஈடுபடுவார்கள். 14ஒரு பெண்ணைப்
பார்க்கும் போதெல்லாம் அவளை அடைய
விரும்புகிறார்கள். இந்தத் தீய போதகர்கள்
இந்த வகையில் எப்போதும் பாவம் செய்து
கொண்டிருக்கிறார்கள். அவர்கள் வலிமை

யற்ற மக்களைப் பாவ வலையில் சிக்கும்படி
யாகச் செய்கிறார்கள். அவர்கள் தம் இதயங்
களுக்கு பேராசை கொள்ளும் பயிற்சியை
அளித்திருக்கிறார்கள். அவர்கள் சாபம் பெற்ற
வர்கள்.

15இந்தப் போலிப் போதகர்கள் சரியான
வழியிலிருந்து விலகி, தவறான வழிக்குச்
சென்றார்கள். அவர்கள் பிலேயாம் சென்ற
வழியைப் பின்பற்றினார்கள். பிலேயாம்
பேயோரின் மகன். தவறு செய்ய மக்கள்
கொடுக்கும் கூலியை அவன் நேசித்தான்.
16ஆனால் அவன் தவறு செய்வதிலிருந்து ஒரு
கழுதை அவனைத் தடுத்தது. கழுதையோ
பேச இயலாத ஒரு மிருகம். ஆனால் அந்தக்
கழுதை மனித குரலில் பேசி அத்தீர்க்கதரிசி
யின் (பிலேயாம்) பைத்தியக்காரத்தனமான
சிந்தனையைத் தடுத்தது.

17அந்தப் போலிப் போதகர்களோ நீரில்லாத
ஊற்றுக்களைப் போன்றவர்கள். அவர்கள்
புயலினால் அடித்துச் செல்லப் படுகின்ற
மேகங்களைப் போன்றவர்கள். அவர்களுக்
காக காரிருள் நிரம்பிய இடம் ஒதுக்கப்பட்டுள்
ளது. 18அவர்களின் பேச்சு கவர்ச்சிகரமாக
இருக்கும். ஆனால் உண்மையில் அது தகுதி
யற்றது. அவர்கள் மக்களைப் பாவ வலைக்
குள் செலுத்துகிறார்கள். பாவங்களின் செல்
வாக்கில் இருந்து தப்பிக்க ஆரம்பித்திருக்கிற
வர்களை அவர்கள் தவறான பாதையில் வழி
நடத்துகிறார்கள். தங்கள் பாவ சரீரங்களில்
மக்கள் செய்ய விரும்பும் பொல்லாப்புகளைப்
பயன்படுத்தி அப்போலிப்போதகர்கள் இத
னைச் செய்கிறார்கள். 19போலிப் போதகர்கள்
அம்மக்களுக்கு விடுதலையைப் பற்றி வாக்கு
றுதி அளிக்கிறார்கள். ஆனால் போலிப் போத
கர்களே இன்னும் விடுதலை அடையவில்லை.
மிகவும் மோசமான பழக்கங்களுக்கு அவர்கள்
அடிமைகளாக இருக்கிறார்கள். ஒருவனை ஆக்
கிரமிக்கும் பொருளுக்கு அவன் அடிமையாகி
றான்.

20உலகத்தின் தீமைகளிலிருந்து அம்மக்கள்
தப்பித்து விட்டார்கள். நமது கர்த்தரும்
இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்துவை அறிந்த
தால் அவர்கள் தப்பித்தார்கள். மீண்டும் அத்தீ
மைகளிடையே அவர்கள் அகப்பட்டு பலியா
னால், அவர்களது இறுதி நிலமை, அவர்களு
டைய முந்தைய நிலமையைக்காட்டிலும் மிக
மோசமாக இருக்கும். 21ஆம், தமக்கு கொடுக்
கப்பட்ட பரிசுத்த கட்டளையைப்பற்றி அறிந்து,
அதன் பிறகு அதிலிருந்து பிறழ்வதைக் காட்டி
லும் இத்தகைய மக்கள் சரியான வழியைப்
பற்றி தெரிந்துகொள்ளாமலேயே இருப்பது
நல்லதாகும்.

22“நாயானது வாந்தியெடுத்தபின், அந்த
வாந்தியையே உண்ண வரும்” மற்றும், “ஒரு
பன்றியைக் கழுவிய பின்னரும், அப்பன்றி
சேற்றிற்குச் சென்று புரளும்” ஆகிய பழமொழி
களைப் போன்றவை அம்மக்களின் செயல்
ஆகும்.

### இயேசு திரும்பவும் வருவார்

3 எனது நண்பர்களே, நான் உங்களுக்கு
எழுதும் இரண்டாம் நிருபம் இது. உங்கள்
நேர்மையான மனங்கள் சிலவற்றை நினை
வுபடுத்திக் கொள்ளும்வகையில் நான் உங்க
ளுக்கு இரண்டு நிருபங்களை எழுதினேன்.
2கடந்தகாலத்தில் பரிசுத்த தீர்க்கதரிசிகள்
கூறிய வார்த்தைகளை நீங்கள் நினைவு
படுத்திக்கொள்ள வேண்டுமென்று நான்
விரும்புகிறேன். நமது கர்த்தரும் இரட்சகரும்
நமக்கு அளித்த கட்டளையை நினைவுபடுத்
திக்கொள்ளுங்கள். அப்போஸ்தலர்கள் மூல
மாக அக்கட்டளையை அவர் நமக்கு அளித்
தார். 3கடைசி நாட்களில் நடக்கவிருப்பதை
நீங்கள் புரிந்துகொள்ள வேண்டுமென்பது முக்
கியம். மக்கள் உங்களைப் பார்த்து நகைப்பார்
கள். அவர்கள் செய்ய விரும்புகிற தீய காரியங்
களைப் பின்பற்றி அம்மக்கள் வாழ்வார்கள்.
4அம்மக்கள், “அவர், (இயேசு) மீண்டும் வருவ
தாக வாக்களித்துள்ளார். அவர் எங்கே? நம்
தந்தையர் மரித்திருக்கிறார்கள். ஆனால்
படைப்பின் ஆரம்பத்திலிருந்து உலகம் இருந்த
வகையிலேயே தொடர்கிறது” என்பார்கள்.
5ஆனால் அவர்கள் இந்த எண்ணத்தை தக்க
வைத்துக்கொள்ளும்போது, நெடுங்காலத்
திற்கு முன் நடந்ததை அவர்கள் மறந்து விடுகி
றார்கள். நெடுங்காலத்திற்கு முன்பு வானங்கள்
இருந்தன. பூமி இருந்தது, தண்ணீருக்கு
வெளியே, தண்ணீரின் மூலமாகவே, பூமி
வெளிப்படும்படி தேவன் உருவாக்கினார்.
6இவையாவும் தேவனுடைய வார்த்தையாலே
உண்டாயின. பிற்காலத்தில் இந்த உலகம்
வெள்ளத்தால் நிரப்பப்பட்டு அழிக்கப்பட்டது.
7ஆனால் தேவனுடைய அந்த வார்த்தையா
லேயே இன்றைய வானமும் பூமியும் நெருப்
பால் அழிபடும் பொருட்டு பாதுகாக்கப்பட்
டுள்ளன. தேவனுக்கு எதிரான மக்கள் நியா
யம் தீர்க்கப்பட்டு அழிக்கப்படும் நாளுக்காக
அவை வைக்கப்பட்டுள்ளன. 8ஆனால் அன்
பான நண்பர்களே, இந்த ஒரு காரியத்தை
நீங்கள் மறவாதீர்கள். கர்த்தருக்கு ஒருநாள்
ஆயிரம் ஆண்டுகளைப் போன்றது. ஆயிரம்
ஆண்டுகளோ ஒரு நாளைப்போன்றவை.
9கர்த்தர் வாக்குறுதி அளித்ததைச் செய்வதில்
சிலமக்கள் நிதானத்தைப் பற்றி கருதுவதைப்
போன்று உங்களோடு மிகவும் பொறுமையாக
இருக்கிறார். எந்த மனிதனும் இழக்கப்படு
வதை கர்த்தர் விரும்பவில்லை. ஒவ்வொருவ
னும் அவனது இதயத்தை மாற்றி, பாவம்
செய்வதை விட்டுவிட வேண்டுமென்று கர்த்தர்
விரும்புகிறார்.

10திருடன் வருவதைப் போன்று கர்த்தர்
மீண்டும் வருகிற நாளும் ஆச்சரிய மானதாக
இருக்கும். மிகுந்த சத்தத்தோடு வானம் மறை
யும். வானிலுள்ள எல்லாப் பொருள்களும்
நெருப்பால் அழிக்கப்படும். பூமியும் அதி
லுள்ள மக்களும் அதிலுள்ள சகலமும் நெருப்
பிலிடப்பட்டது போலாகும். 11நான் உங்களுக்

குக் கூறியபடியே எல்லாப் பொருட்களும் அழி
யும். எனவே நீங்கள் எந்த வகையான மனிதர்
களாக இருக்க விரும்புகிறீர்கள்? நீங்கள்
பரிசுத்த வாழ்க்கை வாழ்ந்து, தேவனுக்குச்
சேவை செய்யவேண்டும். [12]தேவனுடைய
நாளின் வருகைக்காக ஆவலுடன் காத்திருங்
கள். அந்த நாள் வருகிறபோது, வானம் நெருப்
பால் அழிக்கப்படும். வானிலுள்ள பொருள்
கள் அனைத்தும் வெப்பத்தால் உருகும்.
[13]ஆனால் தேவன் நமக்கு ஒரு வாக்குறுதியைத்
தந்தார். அவர் தந்த வாக்குறுதிக்காகவே காத்
திருக்கிறோம். நன்மை நிலைபெற்றிருக்கும்
இடமாக காணப்படும் ஒரு புதிய வானம்,
ஒரு புதிய பூமி பற்றியதே அவ்வாக்குறுதியா
கும். [14]எனவே அன்பான நண்பர்களே இவ்வி
ஷயங்களுக்காக நீங்கள் காத்துக்கொண்டிருப்ப
தால், தேவனுடைய பார்வையில் கறை இல்லா
மலும் குற்றம் இல்லாமலும் இருக்க உங்களால்
முடிந்த வரைக்கும் உழைக்க வேண்டும். தேவ
னோடு சமாதானமாக இருக்க முயலுங்கள்.
[15]நம் கர்த்தரின் பொறுமையை இரட்சிப்பாக
எண்ணுங்கள். தேவன் அளித்த ஞானத்தினால்
நமது அன்பான சகோதரர் பவுல் உங்களுக்கு
எழுதியபோது இதையே உங்களுக்குக் கூறி
னார். [16]பவுல் அவரது எல்லா நிருபங்களிலும்
இக்காரியங்களைக்குறித்து இவ்வாறே எழுது
கிறார். புரிந்துகொள்ள கடினமான விஷயங்
கள் சில சமயங்களில் அவருடைய நிருபங்க
ளில் சொல்லப்பட்டிருக்கின்றன. அறியாமை
உள்ளவர்களும், விசுவாசத்தில் நிரந்தரமற்ற
வர்களும் அவ்விஷயங்களைத் தவறான முறை
யில் எடுத்துரைக்கிறார்கள். இதே முறையில்
மற்ற வேதவாக்கியங்களையும் அவர்கள் தவ
றாக எடுத்துரைக்கிறார்கள். அவ்வாறு செய்வ
தால் அவர்கள் தங்களையே அழித்துக் கொண்
டிருக்கின்றனர்.

[17]அன்பான நண்பர்களே, உங்களுக்கு ஏற்
கெனவே இதைப் பற்றித் தெரியும். எனவே
எச்சரிக்கையாக இருங்கள். தாங்கள் செய்கிற
தவறான காரியங்களால் அத்தீய மக்கள் உங்க
ளைத் தவறாக வழி நடத்தாதபடிக்குப் பார்த்
துக்கொள்ளுங்கள். உங்கள் உறுதியான நிலை
யிலிருந்து விழுந்து விடாதபடி மிகவும் எச்ச
ரிக்கையாக இருங்கள். [18]கிருபையிலும், நமது
கர்த்தரும் இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்
துவைப் பற்றிய அறிவிலும், வளர்ச்சியடை
யுங்கள். அவருக்கே இப்போதும் எப்போதும்
மகிமை உண்டாவதாக! ஆமென்.

# யோவான் எழுதிய முதலாம் கடிதம்

1 உலகம் தோன்றுவதற்கு முன்பே இருந்த
சிலவற்றைப் பற்றி நாங்கள் உங்களுக்குச்
சொல்கிறோம்.

> இதை நாங்கள் கேட்டோம், எங்கள்
> கண்களாலேயே பார்த்தோம், நாங்கள்
> நோக்கினோம். எங்கள் கைகளால்
> தொட்டோம்.

ஜீவன் தரும் வார்த்தையைக் (கிறிஸ்து)
குறித்து நாங்கள் உங்களுக்கு எழுதுகிறோம்.
2அந்த ஜீவன் எங்களுக்கு வெளிப்படுத்தப்
பட்டது. நாங்கள் அதைப் பார்த்தோம். நாங்கள்
அதற்கான சான்றுகளைத் தரமுடியும். நாங்கள்
இப்போது அந்த ஜீவனைக்குறித்து உங்களுக்
குக் கூறுகிறோம். அது என்றென்றும் தொட
ரும் ஜீவனாகும். பிதாவாகிய தேவனோடு
இருந்த ஜீவன் அது. தேவன் இந்த ஜீவனை
எங்களுக்கு வெளிப்படுத்தினார். 3எங்களோடு
நீங்களும் இவற்றில் பங்குள்ளவர்களாகும்படி,
நாங்கள் பார்த்தும் கேட்டுமிருக்கிற காரியங்
களை இப்போது உங்களுக்குச் சொல்கிறோம்.
பிதாவாகிய தேவன், அவரது குமாரனாகிய
இயேசு கிறிஸ்து ஆகியோரோடு கூடிய ஐக்கி
யத்தில் நாம் ஒருமித்துப் பங்கு பெறுகிறோம்.
4நம் மகிழ்ச்சி முழுமையாகும்படி இக்காரியங்
களை உங்களுக்கு எழுதுகிறோம்.

### தேவன் நமது பாவங்களை மன்னிக்கிறார்

5தேவனிடமிருந்து நாங்கள் கேட்ட உண்மை
யான போதனை இதுவே ஆகும். அதை இப்
போது உங்களுக்குச் சொல்கிறோம். தேவன்
ஒளியானவர் (நல்லவர்). தேவனில் இருள்
(பாவம்) இல்லை. 6ஆகையால் நாம் தேவ
னோடு நெருக்கமான உறவு உடையவர்கள்
என்று சொல்லிக்கொண்டே இருளில் (பாவத்
தில்) தொடர்ந்து வாழ்வோமானால், பிறகு
நாம் பொய்யர்களாயிருக்கிறோம். அப்படியா
னால், நாம் உண்மையைப் பின்பற்றாதவர்
களாக இருக்கிறோம். 7தேவன் ஒளியில் (நன்
மையில்) இருக்கிறார். நாமும் கூட ஒளியில்
வாழவேண்டும். தேவன் ஒளியில் இருப்பது
போல நாம் ஒளியில் வாழ்ந்தால் ஒருவரோ
டொருவர் நெருக்கமான ஐக்கியமாக இருக்கி
றோம். மேலும் அவருடைய குமாரனாகிய
இயேசுவின் இரத்தமானது எல்லா பாவங்களி
லிருந்தும் நம்மைச் சுத்தமாக்குகிறது.
8நமக்குப் பாவமில்லையென்று நாம் கூறி
னால் நம்மை நாமே முட்டாளாக்கிக் கொள்வ
தோடு, நம்மில் உண்மையும் இருக்காது.
9ஆனால் நாம் நம் பாவங்களை ஒத்துக்கொண்
டால் தேவன் நமது பாவங்களை மன்னிப்பார்.
நாம் தேவனை நம்ப முடியும். தேவன் சரியான
தையே செய்கிறார். நாம் செய்த எல்லா பாவங்
களிலுமிருந்தும் தேவன் நம்மைச் சுத்தமாக்
குவார். 10நாம் பாவம் செய்ததில்லை என்று
கூறினால் அதன்மூலம் தேவனைப் பொய்ய
ராக்குகிறோம். நாம் தேவனின் உண்மையான
போதனையையும் ஏற்றுக் கொள்வதில்லை.

### இயேசு நமது உதவியாளர்

2 எனது அன்பான பிள்ளைகளே, நீங்கள்
பாவம் செய்யாதிருக்கும்படிக்கு நான் உங்
களுக்கு இந்தக் கடிதத்தை எழுதுகிறேன்.
ஆனால் ஒருவன் பாவம் செய்தால் இயேசு
கிறிஸ்து நமக்கு உதவுகிறார். அவர் நீதியுள்ள
வர். பிதாவாகிய தேவனுக்கு முன்பாக இயேசு
நமக்காகப் பரிந்து பேசுவார். 2நமது பாவங்கள்
நம்மிலிருந்து நீக்கப்படும் வழி இயேசுவே.
எல்லா மக்களின் பாவங்களும் நீக்கப்படும்
வழி இயேசுவே.
3நாம் செய்யும்படியாக தேவன் கூறியவற்
றிற்கு நாம் கீழ்ப்படிந்தால், நாம் தேவனை
உண்மையாக அறிந்திருக்கிறோம் என்பதில்
உறுதியாக இருக்கலாம். 4ஒருவன், “நான் தேவ
னை அறிவேன்!” என்கிறான். ஆனால் அவன்
தேவனின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிய
வில்லையென்றால் அவன் ஒரு பொய்யன்.
அவனில் உண்மை இல்லை. 5ஆனால் ஒருவன்
தேவனின் போதனைக்குக் கீழ்ப்படியும்போது,
அம்மனிதனில் தேவனின் அன்பு முழுமை
பெற்றிருக்கும். நாம் தேவனைப் பின்பற்றுகி
றோம் என்பதை இவ்வாறே அறிந்துகொள்கி
றோம். 6ஒரு மனிதன் தான் தேவனில் வாழ்வ
தாகக் கூறினால், அவன் இயேசு வாழ்ந்ததைப்
போன்று வாழவேண்டும்.

### பிற மக்களை நேசிக்கும்படியாக தேவன் கட்டளையிட்டார்

7எனது அன்பான நண்பர்களே, நான் உங்க
ளுக்கு ஒரு புதிய கட்டளையை எழுதவில்லை.
துவக்கத்திலிருந்தே உங்களுக்கு அளிக்கப்பட்ட
கட்டளை அது. நீங்கள் ஏற்கெனவே கேட்ட
போதனையே இக்கட்டளையாகும். 8இருந்த
போதிலும் இக் கட்டளையை ஒரு புதிய கட்ட
ளையாக உங்களுக்கு எழுதுகிறேன். இக்கட்
டளை உண்மையானது. இதன் உண்மையை

*இயேசுவிலும் மற்றும் உங்களிலும் நீங்கள் காணலாம். இருள் (பாவம்) நீங்கிக் கொண்டிருக்கிறது. உண்மை ஒளி ஏற்கெனவே ஒளி வீசிக்கொண்டிருக்கிறது.*

*9ஒரு மனிதன், "நான் ஒளியில் இருக்கிறேன்" என்கிறான். ஆனால் அவன் அவனது சகோதரனை வெறுக்கிறானென்றால், அவன் இன்னும் இருளில் (பாவத்தில்) இருக்கிறான்
என்றே பொருள்படும். 10தன் சகோதரனை நேசிக்கிற மனிதன் ஒளியில் இருக்கிறான். பாவத்திற்குக் காரணமாக இருக்கிற எதுவும்
அவனிடம் இல்லை. 11ஆனால் சகோதரனை வெறுக்கிற ஒருவன் இருளில் இருக்கிறான். அவன் இருளில் வாழ்கிறான். அவன் எங்குப் போய்க்கொண்டிருக்கிறான் என்பது அம்மனிதனுக்குத் தெரியாது. ஏன்? இருள் அவனைக் குருடனாக்கியிருக்கின்றது.*

*12 அன்பான பிள்ளைகளே, இயேசுவின் மூலமாக உங்கள் பாவங்கள் மன்னிக்கப்பட்டதால் உங்களுக்கு நான் எழுதுகிறேன்.*
*13 தந்தையரே, துவக்கத்திலிருந்தே இருக்கின்ற ஒருவரை நீங்கள் அறிந்திருப்பதால் நான் உங்களுக்கு எழுதுகிறேன். இளைஞர்களே, தீயவனை (பிசாசை) நீங்கள் வென்றதால் நான் உங்களுக்கு எழுதுகிறேன்.*
*14 பிள்ளைகளே, பிதாவை நீங்கள் அறிந்திருப்பதால் நான் உங்களுக்கு எழுதுகிறேன். தந்தையரே, துவக்கத்திலிருந்தே இருக்கின்ற ஒருவரை நீங்கள் அறிந்திருப்பதால் நான் உங்களுக்கு எழுதுகிறேன். இளைஞரே, நீங்கள் பலமானவர்களாக இருப்பதால் உங்களுக்கு எழுதுகிறேன். ஏனெனில் வார்த்தை உங்களில் உள்ளது. தீயவனை (நீங்கள்) வெற்றிகொண்டீர்கள். எனவே நான் உங்களுக்கு எழுதுகிறேன்.*

*15உலகத்தையோ, உலகத்தின் பொருள்களையோ நேசிக்காதீர்கள். ஒருவன் உலகை நேசித்தால், பிதாவின் அன்பு அம்மனிதனில் இருப்பதில்லை. 16இவை உலகின் தீய காரியங்களாகும்.*

*பாவமிக்க சுயத்தை திருப்திப்படுத்தும் பொருள்களை விரும்புதல், நாம் பார்க்கிற பாவமிக்க பொருள்களை விரும்புதல், நம்மிடம் உள்ள பொருள்களால் மிகவும் கர்வமாக உணர்தல்,*

*இவற்றில் ஒன்றேனும் பிதாவினிடமிருந்து (தேவனிடமிருந்து) வருவதில்லை. இவை அனைத்தும் உலகிலிருந்து வருவன. 17உலகம் மறைந்துபோகிறது. மனிதர்கள் விரும்பும் உலகத்தின் எல்லாப் பொருள்களும் அழிந்து போகின்றன. தேவன் விரும்புவதைச் செய்யும் மனிதனோ என்றென்றும் வாழ்கிறான்.*

### கிறிஸ்துவின் பகைவரைப் பின்பற்றாதீர்கள்

*18எனது அன்பான பிள்ளைகளே, முடிவு நெருங்குகிறது. போலிக் கிறிஸ்து வந்து கொண்டிருப்பதைக் குறித்து நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். கிறிஸ்துவின் பகைவர்கள் பலர் இங்கு ஏற்கனவே உள்ளனர். எனவே முடிவு நெருங்குகிறது என்பதை நாம் அறி
வோம். 19நமது குழுவிலேயே கிறிஸ்துவின் பகைவர்கள் இருந்தனர். ஆனால் அவர்கள் நம்மை விட்டுச் சென்றுவிட்டனர். அவர்கள் நம்மோடு சேர்ந்தவர்களாக வாழவில்லை. உண்மையிலேயே நம் குழுவில் உள்ளவர்களாக அவர்கள் இருந்திருந்தால், அவர்கள் நம்மோடு தங்கியிருப்பார்கள். ஆனால் அவர்கள் நம்மைப் பிரிந்தனர். அவர்களில் ஒருவர் கூட நம்மோடு உண்மையாகச் சேர்ந்திருந்ததில்லை என்பதை இது காட்டுகிறது.*

*20புனிதமான ஒருவர் (தேவன்) உங்களுக்குக் கொடுத்த பரிசை நீங்கள் பெற்றிருக்கிறீர்கள். எனவே உங்கள் எல்லோருக்கும் உண்மை
தெரியும். 21ஏன் நான் உங்களுக்கு எழுதுகிறேன்? நீங்கள் உண்மையை அறியாததால் எழுதுகிறேனா? இல்லை! நீங்கள் உண்மையை அறிந்திருப்பதாலேயே இக்கடிதத்தை எழுதுகிறேன். உண்மையிலிருந்து எந்தப் பொய்யும் வருவதில்லை என்பதையும் நீங்கள் அறிவீர்கள்.*

*22எனவே யார் பொய்யன்? இயேசுவை கிறிஸ்துவல்ல என்று கூறுபவனே பொய்யன். அவனே போலிக் கிறிஸ்து. அம்மனிதன் பிதாவிலோ (தேவனிலோ) அல்லது குமாரனிலோ (கிறிஸ்துவிலோ) நம்பிக்கை வைப்பதில்லை.
23ஒருவன் குமாரனில் நம்பிக்கை வைக்காமலிருந்தால் அவன் பிதாவை உடையவனல்ல. குமாரனை ஏற்கிற ஒருவனுக்கு பிதாவும்கூட இருக்கிறார்.*

*24துவக்கத்திலிருந்தே நீங்கள் கேட்ட போதனையைப் பின்பற்றுவதைத் தொடருங்கள். அப்போதனையைத் தொடர்ந்து பின்பற்றினால், நீங்கள் குமாரனிலும் (கிறிஸ்துவிலும்) பிதாவிலும் (தேவனிலும்) நிலைத்திருப்பீர்
கள். 25நமக்கு குமாரன் வாக்களித்த நித்திய ஜீவன் இதுதான்.*

*26உங்களைத் தவறான வழிக்குள் நடத்த முயன்று கொண்டிருக்கிற மக்களைக் குறித்தே இக்கடிதத்தை எழுதிக்கொண்டிருக்கிறேன்.
27கிறிஸ்து உங்களுக்குக் கொடுத்த சிறப்பான அபிஷேகம் உங்களிடையே நிலைத்திருக்கிறது. எனவே உங்களுக்குப் போதிப்பதற்கு எந்த மனிதனும் தேவையில்லை. அவர் உங்களுக்குக் கொடுத்த அந்த அபிஷேகமானது எல்லாவற்றையும் உங்களுக்குப் போதிக்கிறது. அந்த அபிஷேகம் உண்மையானது. அது பொய்யானதன்று. எனவே அவரது அபிஷேகம் போதித்ததைப்போல கிறிஸ்துவில் வாழ்வதைத் தொடருங்கள்.*

28ஆம், எனது அன்பான பிள்ளைகளே,
அவரில் வாழுங்கள். நாம் இதைச் செய்தால்
கிறிஸ்து மீண்டும் வரும் நாளில் அச்சமற்ற
வர்களாக இருக்க முடியும். அவர் வரும்போது
நாம் மறைந்து கொள்ளவோ, வெட்கமடை
யவோ தேவையில்லை. 29கிறிஸ்து நீதியுள்ள
வர் என்பது உங்களுக்குத் தெரியும். ஆகை
யால் நீதியைச் செய்கின்ற எல்லா மக்களும்
தேவனின் பிள்ளைகளே என்பதையும் நீங்கள்
அறிவீர்கள்.

### நாம் தேவனின் பிள்ளைகள்

3 பிதா நம்மை மிகவும் நேசித்தார்! நாம்
தேவனின் பிள்ளைகள் என்று அழைக்கப்
படுகிறோம். ஆனால் உலகத்தின் மக்களோ
நாம் தேவனின் பிள்ளைகள் என்பதைப்
புரிந்துகொள்வதில்லை. அதற்குக் காரணம்
தேவனை அவர்கள் அறியாமல் இருப்பது
ஆகும். 2அன்பான நண்பர்களே, நாம் இப்
போது தேவனின் பிள்ளைகள். நாம் எதிர்
காலத்தில் எவ்வாறு இருப்போம் என்பது
இன்னும் நமக்குக் காட்டப்படவில்லை. கிறி
ஸ்து மீண்டும் வரும்போது நாம் அவரைப்
போல இருப்போம் என்பதை நாம் அறிவோம்.
3கிறிஸ்து தூய்மையானவர். கிறிஸ்துவில்
இந்த நம்பிக்கையுள்ள ஒவ்வொரு மனிதனும்
கிறிஸ்துவைப் போலவே தன்னைத் தூய்மை
யாக வைத்துக்கொள்கிறான்.

4ஒருவன் பாவம் செய்யும்போது, அவன்
தேவனின் நியாயப்பிரமாணத்தை மீறுகிறான்.
ஆம், தேவனின் நியாயப்பிர மாணத்திற்கு
எதிராக வாழ்வதைப்போன்றதே பாவம் செய்
தலாகும். 5மனிதரின் பாவங்களை நீக்குவதற்
காக கிறிஸ்து வந்தார் என்பது உங்களுக்குத்
தெரியும். கிறிஸ்துவில் பாவம் இல்லை. 6என
வே கிறிஸ்துவில் வாழ்கிற மனிதனும் பாவத்
தைச் செய்வதில்லை. ஒருவன் தொடர்ந்து
பாவம் செய்தால், அவன் கிறிஸ்துவை உண்
மையாகவே புரிந்துகொண்டதில்லை என்றும்,
கிறிஸ்துவை அறிந்துகொண்டதே இல்லை
என்றுமே பொருள்படும்.

7அன்பான பிள்ளைகளே, தவறான வழிக்
குள் ஒருவன் உங்களை நடத்தாதபடிக்குப்
பார்த்துக்கொள்ளுங்கள். கிறிஸ்து நீதியுள்ள
வர். கிறிஸ்துவைப் போல சரியானவராக
இருப்பதற்கு ஒரு மனிதன் சரியானதை மட்
டுமே செய்யவேண்டும். 8துவக்கத்திலிருந்தே
பிசாசு பாவம் செய்து கொண்டிருக்கிறான்.
பாவத்தைத் தொடர்ந்து செய்யும் மனிதன்
பிசாசுக்குரியவன். தேவ குமாரன் பிசாசின்
செயலை அழிக்கும் பொருட்டே வந்தார்.

9தேவன் ஒருவனை அவரது பிள்ளை யாக
மாற்றும்போது அவன் பாவத்தைத் தொடர்ந்து
செய்வதில்லை. ஏன்? தேவன் அவனுக்கு
அளித்த புதுவாழ்க்கை அவனில் நிலைத்திருக்
கிறது. எனவே அம்மனிதன் பாவத்தில் தொடர
முடியாது. ஏன்? அவன் தேவனின் பிள்ளை
யாக மாறியிருக்கிறான். 10எனவே தேவனின்
பிள்ளைகள் யாரென்பதையும் பிசாசின் பிள்
ளைகள் யாரென்பதையும் நாம் பார்க்க முடி
யும். மேலும் தனது சகோதரனை நேசிக்காத
ஒருவனும் தேவனின் பிள்ளை இல்லை.

### நாம் ஒருவரையொருவர் நேசிக்கவேண்டும்

11துவக்கத்திலிருந்தே நீங்கள் கேட்டிருக் கிற
போதனை இது. நாம் ஒருவரையொரு வர்
நேசிக்கவேண்டும். 12காயீனைப்போல இராதீர்
கள். காயீன் தீயவனுக்கு (பிசாசுக்கு) உரியவ
னாக இருந்தான். காயீன் அவனது சகோத
ரனை (ஆபேலை) கொன்றான். ஆனால் காயீன்
அவனது சகோதரனை ஏன் கொன்றான்?
காயீன் செய்ததை தீயனவாக இருந்ததாலும்,
அவன் சகோதரன் (ஆபேல்) செய்ததை நல்ல
னவாக இருந்ததாலுமே.

13சகோதர சகோதரிகளே, இவ்வுலகத் தின்
மக்கள் உங்களை வெறுக்கும்போது ஆச்சரி
யப்படாதீர்கள். 14நாம் மரணத்தை (பாவத்தை)
விட்டு, ஜீவனுக்குள் வந்திருக்கிறோம் என்
பதை நாம் அறிவோம். கிறிஸ்துவில் நமது
சகோதரரையும் சகோதரிகளையும் நாம் நேசிப்
பதால் இதனை அறிவோம். சகோதரனை
நேசிக்காத மனிதன் இன்னும் மரணத்தில்
இருக்கிறான். 15தன் சகோதரனை வெறுக்கிற
ஒருவன் கொலையாளி ஆவான். எந்த
கொலை யாளிக்கும் தேவன் தரும் நித்திய
வாழ்வு இல்லை என்பதையும் நீங்கள் அறிவீர்
கள். 16உண்மையான அன்பு எதுவென்பதை
இவ்வாறே நாம் அறிவோம். இயேசு அவ
ரது ஜீவனை நமக்காகக் கொடுத்தார். எனவே
நாம் நமது ஜீவனைக் கிறிஸ்துவில் நமது
சகோதரருக்காகவும் சகோதரிகளுக்காகவும்
கொடுக்க வேண்டும். 17தேவைப்பட்ட பொருள்
கள் எல்லாவற் றையும் பெறுகிற அளவுக்கு
போதுமான செல்வந்தனாக ஒரு விசுவாசி
(ஒரு கிறிஸ்தவன்) இருக்கிறான் என்று வைத்
துக்கொள்வோம். ஏழையானவனும் தேவை
யான பொருள்கள் கிடைக்காதவனுமாகிய
கிறிஸ்துவில் சகோதரனை அவன் பார்க்கி
றான். தேவையானவற்றைப் பெற்ற சகோதரன்
ஏழை சகோதரனுக்கு உதவாமலிருந்தால்
பயன் என்ன? அவன் இதயத்தில் தேவனின்
அன்பு இல்லை. 18எனது பிள்ளைகளே, நம்
அன்பு வார்த்தைகளிலும் பேச்சிலும் மட்டும்
இருக்கலாகாது. நம் அன்பு உண்மையான
அன்பாக இருக்க வேண்டும். நாம் செய்கிற
காரியங்களால் நமது அன்பை வெளிப்படுத்த
வேண்டும்.

19-20நாம் உண்மையின் வழியைச் சார்ந்த
வர்கள் என்பதை இந்த வழியால் அறியலாம்.
நம்மைக் குற்றவாளிகளாக நமது இருதயங்
களே உணர்த்தும்போது, நமது இருதயங்
களைக் காட்டிலும் தேவன் உயர்ந்தவராக
இருப்பதால் அவர் எல்லாவற்றையும் அறி
வார். 21எனது அன்பான நண்பர்களே, நாம்
தவறு செய்து கொண்டிருக்கிறோம் என்பதை
உணராவிட்டால் நாம் தேவனிடம் அச்சமற்ற

வர்களாக இருக்கமுடியும். 22நாம் கேட்கிற
பொருட்களைத் தேவன் கொடுப்பார். நாம்
தேவனின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிவதா
லும், தேவனை மகிழ்வூட்டுகிற காரியங்க
ளைச் செய்வதாலும் இவற்றைப் பெறு
கிறோம். 23தேவன் கட்டளையிடுவது இதுவே.
நாம் குமாரனாகிய இயேசு கிறிஸ்துவில் விசு
வாசம் வைத்து, ஒருவரையொருவர் நேசிக்க
வேண்டும். இது தேவனின் கட்டளை ஆகும்.
24தேவனின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிகிற
மனிதன் தேவனில் வாழ்கிறான். தேவனும்
அம்மனிதனில் வாழ்கிறார். தேவன் நம்மில்
வாழ்கிறார் என்பதை நாம் எப்படி அறிகி
றோம்? தேவன் நமக்களித்த ஆவியானவரால்
நாம் அறிகிறோம்.

### தவறான போதகர்களைக் குறித்து யோவானின் எச்சரிக்கை

4 எனது அன்பான நண்பர்களே, இவ்வு
லகில் பல தவறான போதகர்கள் இப்
போது வாழ்கிறார்கள். எனவே எல்லா ஆவி
களையும் நம்பாதீர்கள். தேவனிடமிருந்து வந்த
வையா எனப் பார்ப்பதற்கு அந்த ஆவிகளை
சோதித்துப்பாருங்கள். 2தேவனின் ஆவியை
அறியும் வகை இதுவே ஆகும். ஓர் ஆவி,
“இயேசு பூமிக்கு வந்து மனிதனான கிறிஸ்து
என்பதை நான் நம்புகிறேன்” என்று கூறும்.
அந்த ஆவி தேவனிடமிருந்து வந்தது. 3இன்
னோர் ஆவி இயேசுவைக் குறித்து இவ்வாறு
கூற மறுக்கிறது, இது தேவனிடமிருந்து வந்த
ஆவி அல்ல. போலி கிறிஸ்து வந்துகொண்டி
ருப்பதை நீங்கள் கேட்டிருக்கிறீர்கள். இப்
போது போலி கிறிஸ்து ஏற்கெனவே உலகில்
வந்திருக்கிறான்.

4எனது அன்பான பிள்ளைகளே, நீங்கள்
தேவனுக்குச் சொந்தமானவர்கள். எனவே நீங்
கள் அவர்களை (தவறான போதகர்களை)
வெற்றிகொண்டிருக்கிறீர்கள். ஏன்? உங்களில்
இருப்பவர் (தேவன்) உலகத்து மக்களில் இருப்
பவனை (பிசாசை)க் காட்டிலும் பெரியவர்.
5அம்மக்களோ உலகத்தைச் சேர்ந்தவர்கள்.
எனவே அவர்கள் கூறுபவை உலகத்திற்குரி
யவை. அவர்கள் கூறுவதை உலகம் கேட்கி
றது. 6ஆனால் நாம் தேவனுக்குரியவர்கள்.
எனவே தேவனை அறிந்த மக்கள் நம் பேச்
சைக் கேட்கிறார்கள். ஆனால் தேவனிடமி
ருந்து வராத மக்கள் நம் பேச்சைக் கேட்ப
தில்லை. இப்படித்தான் உண்மையான ஆவி
யானவரையும், பொய்யான பிற ஆவிகளை
யும் தெரிந்து கொள்கிறோம்.

### அன்பு தேவனிடமிருந்து வருகிறது

7அன்பான நண்பர்களே, தேவனிடமிருந்து
அன்பு வருவதால் நாம் ஒருவரையொருவர்
நேசிக்கவேண்டும். பிறரை நேசிக்கிறவன்
தேவனின் பிள்ளையாயிருக்கிறான். எனவே
பிறரை நேசிக்கிறவன் தேவனை அறிகிறான்.
8பிறரை நேசிக்காதவன் தேவனை அறியமாட்
டான். ஏனெனில் தேவன் அன்பாயிருக்கிறார்.
9தேவன் அவரது ஒரே குமாரனை அவர்
மூலமாக நமக்கு வாழ்வளிக்கும் பொருட்டு
இவ்வுலகத்திற்கு அனுப்பினார். தேவன் தன்
அன்பை இவ்விதம் நமக்குப் புலப்படுத்தினார்.
10தேவன் நம்மிடம் காட்டும் அன்பே உண்மை
யான அன்பாகும். நாம் தேவனிடம் காட்டும்
அன்பல்ல. தேவன் நமது பாவங்களை நீக்கும்
வழியாக அவரது குமாரனை அனுப்பினார்.

11அன்பான நண்பர்களே, தேவன் நம்மை
இவ்வளவு அதிகமாக நேசித்தார்! எனவே
நாமும் ஒருவரையொருவர் நேசிக்க வேண்டும்.
12எந்த மனிதனும் தேவனைக் கண்டதில்லை.
ஆனால் நாம் ஒருவரையொருவர் நேசித்தால்
அப்போது தேவன் நம்மில் வசிப்பார். நாம்
ஒருவரையொருவர் நேசித்தால் அப்போது
தேவனின் அன்பு அதன் குறிக்கோளை அடை
கிறது. அது நம்மில் முழுமை பெறுகிறது.
13நாம் தேவனிலும் தேவன் நம்மிலும் வாழ்
வதை அறிந்திருக்கிறோம். தேவன் நமக்கு
அவரது ஆவியானவரைக் கொடுத்ததால் நாம்
இதனை அறிகிறோம். 14தேவன் குமாரனை
இவ்வுலகின் மீட்பராக அனுப்பினார் என்
பதை நாம் கண்டிருக்கிறோம். இப்போது மக்க
ளுக்கு அதையே நாம் கூறுகிறோம். 15ஒரு
மனிதன், “இயேசு தேவனின் குமாரன் என்
பதை நம்புகிறேன்” என்று சொன்னால் அப்
போது தேவன் அமமனிதனில் வாழ்கிறார்.
அம்மனிதனும் தேவனில் வாழ்கிறான்.
16தேவன் நமக்காகக் கொண்டுள்ள அன்பை
அதனால் அறிகிறோம். அந்த அன்பை நாம்
நம்புகிறோம்.

தேவன் அன்பாக இருக்கிறார். அன்பில்
வாழ்கிற மனிதன் தேவனில் வாழ்கிறான்.
தேவனும் அம்மனிதனில் வாழ்கிறார். 17தேவ
னின் அன்பு நம்மில் முழுமையடைந்தால்,
தேவன் நம்மை நியாயந்தீர்க்கும் நாளில் நாம்
அச்சமின்றி இருக்க முடியும். இவ்வுலகில் நாம்
அவரைப்போல இருப்பதால், நாம் அச்சமில்
லாமல் இருப்போம். 18தேவனின் அன்பு எங்கே
இருக்கிறதோ, அங்கே அச்சம் இருக்காது. ஏன்?
தேவனின் முழுமையான அன்பு அச்சத்தை
அகற்றுகிறது. தேவன் தரும் தண்டனையே
ஒருவனை அச்சுறுத்துகிறது. எனவே அச்ச
முள்ள மனிதனிடம் தேவனின் அன்பு முழுமை
பெறவில்லை.

19முதலில் தேவன் நம்மை நேசித்ததால்,
நாம் நேசிக்கிறோம். 20ஒருவன், “நான் தேவ
னை நேசிக்கிறேன்” என்று கூறியும், அம்மனி
தன் கிறிஸ்துவில் அவனது சகோதரனையோ,
சகோதரியையோ வெறுத்தால் அப்போது
அம்மனிதன் பொய்யன் ஆகிறான். அம்மனி
தன் தான் காண்கிற சகோதரனை நேசிப்ப
தில்லை. எனவே அவன் ஒருபோதும் கண்டி
ராத தேவனை நேசிக்க இயலாது. 21தேவனை
நேசிக்கிற ஒருவன் அவனது சகோதரனையும்
நேசிக்க வேண்டும் என்பதே அவர் (தேவன்)
நமக்கு வழங்கிய கட்டளை ஆகும்.

### தேவனின் மக்கள் உலகை எதிர்த்து வெற்றி பெறுகிறார்கள்

5 இயேசுவே கிறிஸ்து என நம்புகிற மக்கள்
தேவனின் பிள்ளைகளாவர். பிதாவை
(தேவனை) நேசிக்கிற மனிதன் தேவனின் பிள்
ளைகளையும் நேசிக்கிறான். 2நாம் தேவனின்
பிள்ளைகளை நேசிக்கிறோம் என்பதை
எவ்வாறு அறிவோம்? தேவனை நேசிப்பதா
லும், அவரது கட்டளைகளுக்குக் கீழ்ப்படிவ
தினாலும் அறிகிறோம். 3தேவனை நேசித்தல்
என்பது அவரது கட்டளைகளுக்குக் கீழ்ப்படி
தல் என்று பொருள்படும். தேவனின் கட்ட
ளைகள் நமக்கு மிகவும் கடினமானவையல்ல.
4ஏன்? தேவனின் பிள்ளையாகிய ஒவ்வொரு
மனிதனும் உலகை எதிர்த்து வெல்கிற ஆற்றல்
பெற்றிருக்கிறான். 5நமது விசுவாசமே உலகத்
திற்கு எதிராக வென்றது. எனவே உலகை
எதிர்த்து வெற்றியடைகிற மனிதன் யார்?
இயேசு தேவனின் குமாரன் என்று நம்புகிற
ஒருவனே ஆவான்.

### தேவன் நமக்கு அவரது குமாரனைக் குறித்துக் கூறினார்

6இயேசு கிறிஸ்துவே நம்மிடம் வந்தவர்.
இயேசு நீரோடும் இரத்தத்தோடும் வந்தவர்.
இயேசு நீரினால் மட்டுமே வரவில்லை. இல்
லை, இயேசு நீரினாலும் இரத்தத்தினாலும்
வந்தார். இது உண்மையென்று நமக்கு ஆவி
யானவர் கூறுகிறார். ஆவியானவர் உண்மை
யாவார். 7எனவே இயேசுவைக் குறித்து
நமக்குக் கூறும் மூன்று சாட்சிகள் இருக்கின்
றன. 8ஆவி, நீர், இரத்தம் இந்த மூன்று சாட்சி
களும் ஒப்புக் கொள்கின்றன. 9சிலவற்றை
உண்மையானவையாக மக்கள் கூறும்போது
அவற்றை நம்புகிறோம். ஆனால் தேவன்
சொல்வது அதைக் காட்டிலும் முக்கியமானது.
இதுவே தேவன் நமக்குக் கூறியதாகும். அவரது
சொந்த குமாரனைக் குறித்து உண்மையை
அவர் நமக்குக் கூறினார். 10தேவனின் குமா
ரனை நம்புகிற மனிதன் தேவன் நமக்குக்
கூறிய உண்மையை தனக்குள் கொண்டிருக்கி
றான். தேவனை நம்பாத மனிதனோ தேவ
னைப் பொய்யராக்குகிறான். ஏன்? தேவன்
அவரது குமாரனைக் குறித்துக் கூறிய செய்தி
களை அம்மனிதன் நம்பவில்லை. 11இதுவே
தேவன் நமக்குக் கூறியதாகும். தேவன் நமக்கு
நித்தியஜீவனைக் கொடுத்துள்ளார். மேலும்
இந்த நித்தியஜீவன் அவரது குமாரனில் உள்
ளது. 12குமாரனைக் கொண்டிருக்கிற மனித
னுக்கு உண்மையான ஜீவன் உண்டு. ஆனால்
தேவனின் குமாரனைக் கொண்டிராத ஒருவன்
அந்த ஜீவனைக் கொண்டிருப்பதில்லை.

### நமக்கு இப்போது நித்தியஜீவன் உண்டு

13தேவனின் குமாரனை நம்புகிற மக்களா
கிய உங்களுக்கு இந்தக் கடிதத்தை நான் எழு
துகிறேன். உங்களுக்கு இப்போது நித்திய
ஜீவன் கிடைத்திருக்கிறது என்பதை நீங்கள்
அறியும்படியாக இதை எழுதுகிறேன். 14எந்த
ஐயமுமின்றி நாம் தேவனிடம் வரமுடியும்.
அவர் மனம் ஒத்துக்கொள்கிற எதனையும்
நாம் தேவனிடம் வேண்டுகிறபோது, நாம் கேட்
பதை தேவன் கவனிக்கிறார். 15நாம் அவரிடம்
கேட்கும் ஒவ்வொரு முறையும் தேவன் கவனித்
துக் கேட்கிறார். எனவே, நாம் தேவனிட
மிருந்து கேட்கிற பொருட்களை அவர் நமக்குத்
தருவார் என்பதை நாம் அறிகிறோம்.

16கிறிஸ்துவில் சகோதரனோ சகோதரியோ
நித்திய மரணத்திற்குள் வழி நடத்தாத பாவம்
(நிலை) செய்வதை ஒருவன் பார்க்கிறான்
என்று வைத்துக்கொள்வோம். அப்பாவம்
செய்கிற அந்த சகோதரன் அல்லது சகோத
ரிக்காக பிரார்த்தனை செய்தல் வேண்டும்.
அப்போது தேவன் அச்சகோதரன் அல்லது
சகோதரிக்கு ஜீவனைக் கொடுப்பார். நித்திய
மரணத்திற்குள் வழி நடத்தாத பாவத்தைச்
செய்கிற மக்களைக் குறித்து நான் பேசிக்
கொண்டிருக்கிறேன். மரணத்திற்குள் வழிநடத்
தும் பாவமுண்டு. அத்தகைய பாவத்திற்காக
ஒரு மனிதன் பிரார்த்தனை செய்யவேண்டு
மென்று நான் சொல்லவில்லை. 17தவறு செய்
வது எப்பொழுதும் பாவமாகும். ஆனால் நித்
திய மரணத்திற்குள் வழிநடத்தாத பாவமு
முண்டு.

18தேவனின் பிள்ளையாக மாறிய மனிதன்
பாவம் செய்வதைத் தொடர்வதில்லை என்
பதை நாம் அறிவோம். தேவனின் குமாரன்,
தேவனின் பிள்ளையைப் பாதுகாக்கிறார்.
தீயவனால் (பிசாசு) அம்மனிதனைத் துன்பு
றுத்த இயலாது. 19நாம் தேவனுக்கு உரிய
வர்கள் என்பதை நாம் அறிவோம். ஆனால்
தீயவனோ உலகம் முழுவதையும் கட்டுப்
படுத்துகிறான். 20தேவ குமாரன் வந்திருக்கி
றார் என்பதை நாம் அறிவோம். தேவனின்
குமாரன் நமக்குத் தெளிவை கொடுத்திருக்கி
றார். உண்மையான தேவனை இப்போது நாம்
அறிய முடியும். தேவனே உண்மையான ஒரு
வர். அந்த உண்மையான தேவனிடமும் அவ
ரது குமாரனாகிய இயேசு கிறிஸ்துவிடமும்
நமது ஜீவன் உள்ளது. அவரே உண்மையான
தேவனும், அவரே நித்திய ஜீவனுமானவர்.
21ஆகையால், அன்பான மக்களே, விக்கிரகங்க
ளாகிய போலிக் கடவுள்களை விட்டு நீங்கள்
தூர விலகுங்கள்.

# யோவான் எழுதிய இரண்டாம் கடிதம்

*மூப்பனாகிய நான்,*

*தேவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட பெண்ணிற்கும்* அவளது குழந்தைகளுக்கும் எழுதுவது. நான் உங்கள் அனைவரையும் உண்மையான நற்செய்தியின்படி நேசிக்கிறேன். உண்மையை அறிந்த அனைவரும் உங்களை நேசிக்கிறார்கள்.* **2***நம் அனைவருக்குள்ளும் இருக்கிற உண்மையால் நாங்கள் உங்களை நேசிக்கிறோம். என்றென்றைக்கும் இந்த உண்மை நம்மோடு கூட இருக்கும்*

**3***பிதாவாகிய தேவனிடமிருந்தும், அவரது மகனாகிய இயேசு கிறிஸ்துவிடமிருந்தும் கிருபையும், இரக்கமும், சமாதானமும், அமைதியும் நம்மோடு இருப்பதாக. உண்மை, அன்பு, ஆகியவற்றின் மூலமாக நாம் இந்த ஆசீர்வாதங்களைப் பெறுகிறோம்.*

**4***உங்கள் குழந்தைகளில் சிலரைக் குறித்து அறிவதில் நான் சந்தோஷமடைகிறேன். பிதா (தேவன்) நமக்குக் கட்டளையிட்டபடியே, அவர்கள் உண்மையின் வழியைப் பின்பற்றுகிறார்கள் என்பதை அறிந்து நான் சந்தோஷப்படுகிறேன்.* **5***இப்போதும், அன்பான பெண்மணியே, நான் உனக்குக் கூறுகிறேன், நாம் ஒருவரையொருவர் நேசிக்கவேண்டும். இது புது கட்டளையல்ல, தொடக்கத்திலிருந்தே, நாம் பெற்ற அதே கட்டளையாகும்.* **6***நாம் வாழும்படியாக அவர் கட்டளையிட்ட வழியில் வாழ்வதே அன்புகாட்டுவதாகும். தேவனின் கட்டளையும் இதுவே. நீங்கள் அன்பின் வாழ்க்கையை வாழுங்கள். தொடக்கத்தில் இருந்தே நீங்கள் கேள்விப்பட்ட கட்டளையும் இது தான்.* **7***இப்போது உலகில் அநேக தவறான போதகர்கள் இருக்கிறார்கள். இயேசு கிறிஸ்து பூமிக்கு வந்து ஒரு மனிதனானார் என்பதை இந்தத் தவறான போதகர்கள் சொல்ல மறுக்கிறார்கள். இந்த உண்மையை சொல்ல மறுக்கிற மனிதன் தவறான போதகனும் போலிக் கிறிஸ்துவுமாயிருக்கிறான்.* **8***எச்சரிக்கையாயிருங்கள்! உங்கள் செயல்களுக்குரிய நற்பலனை இழந்துவிடாதிருங்கள். உங்களுக்குரிய எல்லாப் பலன்களையும் பெறுவதில் எச்சரிக்கையாக இருங்கள்.*

**9***கிறிஸ்துவின் போதனைகளை மட்டுமே பின்பற்றுவதை ஒருவன் தொடர வேண்டும். கிறிஸ்துவின் போதனைகளை ஒருவன் மாற்றினால், அம்மனிதனிடம் தேவன் இல்லை. ஆனால் தேவனின் போதனைகளைத் தொடர்ந்து ஒரு மனிதன் பின்பற்றினால், அம்மனிதன் பிதா, குமாரன் ஆகிய இருவரையும் ஏற்றுக் கொள்கிறான்.* **10***ஒருவன் இப்போதனையைக் கொண்டுவராமல் உங்களிடம் வந்தால் அவனை உங்கள் வீட்டில் ஏற்காதீர்கள். அவனை வரவேற்காதீர்கள்.* **11***நீங்கள் அவனை ஏற்றுக் கொண்டால் அவனது தீய செயல்களுக்கும் நீங்களும் உதவியவராவீர்கள்.*

**12***நான் உங்களிடம் கூற வேண்டியது மிகுதி. ஆனால் தாளையும், மையையும் பயன்படுத்த விரும்பவில்லை. பதிலாக, உங்களிடம் வர எண்ணுகிறேன். அப்போது நாம் ஒருமித்துப் பேச இயலும். அது நம்மை மகிழ்ச்சிக்குள்ளாக்கும்.*

**13***தேவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட உங்கள் சகோதரியின் குழந்தைகள் தங்கள் அன்பை உங்களுக்குத் தெரியப்படுத்துகிறார்கள்.*

---

**பெண்** *இது ஒரு பெண்ணைக் குறிக்கலாம். அல்லது இந்த நிருபத்தில் ஒரு சபையையும் குறிக்கும் என்றால், அவளுடைய குழந்தைகள் என்பது சபையின் மக்களைக் குறிக்கும்.*

# யோவான் எழுதிய மூன்றாம் கடிதம்

மூப்பனாகிய நான்,
உண்மையினால் நான் நேசிக்கும் எனது
அன்பான நண்பன் காயுவுக்கு எழுதுவது,
2எனது அன்பான நண்பனே, உனது
ஆன்மா நலமாயிருக்கும் வண்ணம் ஒவ்வொரு
வகையிலும் நீ நலமாயிருக்க வேண்டுமென
நான் பிரார்த்திக்கிறேன். 3உனது வாழ்க்கை
யில் உள்ள உண்மையைக் குறித்துச் சில
சகோதரர்கள் என்னிடம் வந்து கூறினர். உண்
மையின் வழியை நீ தொடர்ந்து பின்பற்று
வதை அவர்கள் எனக்குக் கூறினர். இது
எனக்குச் சந்தோஷம் கொடுத்தது. 4உண்மை
யின் வழியை எனது பிள்ளைகள் பின்பற்று
கிறார்கள் என்பதைக் கேட்கும்போது எனக்கு
அளவு கடந்த சந்தோஷம் உண்டாகிறது.
5எனது அன்பான நண்பனே, கிறிஸ்துவில்
சகோதரருக்கு உதவுவதில் நீ தொடர்ந்து ஈடுப
டுவது நல்லது. உனக்குத் தெரியாத சகோ
தரருக்கும். நீ உதவிக்கொண்டிருக்கிறாய்! 6இச்
சகோதரர்கள் உனது அன்பைக் குறித்து
சபைக்கு கூறினர். அவர்கள் பயணத்தைத்
தொடருவதற்குத் தயவுசெய்து நீ உதவு.
தேவனை மகிழ்ச்சிப்படுத்தும் வழியில் அவர்
களுக்கு உதவு. 7கிறிஸ்துவின் சேவைக்காக
இச்சகோதரர்கள் பயணம் மேற்கொண்டனர்.
தேவனில் விசுவாசமற்றோரிடமிருந்து அவர்
கள் எந்தவித உதவியையும் ஏற்கவில்லை.
8எனவே இச்சகோதரருக்கு நாம் உதவவேண்
டும். நாம் அவர்களுக்கு உதவும்போது, உண்
மைக்கான அவர்கள் வேலையில் நாமும் பங்கு
கொள்வோம்.
9நான் சபைக்கு ஒரு நிருபம் எழுதினேன்.
ஆனால் நாங்கள் சொல்வதைத் தியோத்தி
ரேப்பு கேட்கவில்லை. எப்போதும் அவர்களுக்
குத் தலைவனாக இருப்பதற்கு அவன் விரும்
புகிறான்.
10தியோத்திரேப்பு செய்வது தவறு
என்பதை நான் வரும்போது பேசுவேன்.
அவன் எங்களைக் குறித்துப் பொய் கூறி,
தீயன பேசுகிறான். அவன் செய்வது இது
மட்டுமல்ல. கிறிஸ்துவின் சேவையில் ஈடுபட்
டுள்ள சகோதரருக்கு உதவவும் மறுக்கிறான்.
சகோதரருக்கு உதவ விரும்பும் மக்களையும்
தியோத்திரேப்பு தடுக்கிறான். அவர்கள் சபை
யினின்று விலகும்படியாகச் செய்கிறான்.
11எனது அன்பான நண்பனே, தீயவற்றைப்
பின்பற்றாதே. நல்லவற்றைப் பின்பற்று. நல்ல
வற்றைச் செய்கிற மனிதன் தேவனிடமிருந்து
வந்தவன். தீயவை செய்யும் மனிதனோ,
தேவனை அறியாதவன்.
12தெமெத்திரியுவைப் பற்றி எல்லா மக்க
ளும் நல்லபடியாகப் பேசுகிறார்கள். அவர்கள்
கூறுவதோடு உண்மையும் ஒத்துப்போகிறது.
அவனைக் குறித்து நாங்களும் நல்லவற்றையே
சொல்கிறோம். நாங்கள் கூறுவது உண்மை
யென்பதும் உனக்குத் தெரியும்.
13உனக்கு நான் கூற வேண்டிய பல செய்தி
கள் உள்ளன. ஆனால் எழுதுகோலையும்
மையையும் பயன்படுத்த விரும்புவில்லை.
14நான் உன்னை விரைவில் சந்திக்க விரும்பு
கிறேன். அப்போது நாம் ஒருமித்துக் கூடிப்
பேசலாம். 15உனக்கு சமாதானம் உண்டாகட்
டும். என்னோடிருக்கும் நண்பர்கள் உனக்குத்
தங்கள் அன்பைத் தெரிவிக்கிறார்கள். அங்
குள்ள நம் நண்பர்கள் ஒவ்வொருவருக்கும்
எங்கள் அன்பைத் தெரியப்படுத்து.

# யூதா எழுதிய கடிதம்

*யாக்கோபின் சகோதரனும், இயேசு கிறிஸ்துவின் பணியாளுமாகிய யூதாவிடமிருந்து,*

*தேவனால் அழைக்கப்பட்டிருக்கிற எல்லா மக்களுக்கும் எழுதப்படுவது. பிதாவாகிய தேவன் உங்களை நேசிக்கிறார். நீங்கள் இயேசு கிறிஸ்துவுக்குள் தேவனால் பாதுகாக்கப்பட்டிருக்கிறீர்கள்.*

**2***எல்லா இரக்கமும், சமாதானமும், அன்பும் உங்களுக்குரியதாகுக.*

### தவறு செய்கிற மக்களை தேவன் தண்டிப்பார்

**3***அன்பான நண்பர்களே, நாம் எல்லோரும் ஒருமித்துப் பங்கு கொள்கிற மீட்பைக் குறித்து உங்களுக்கு எழுத வேண்டுமென நான் மிகவும் விரும்பினேன். ஆனால் வேறு சிலவற்றைக் குறித்து உங்களுக்கு எழுதவேண்டியதன் தேவையை நான் உணர்ந்தேன். தேவன் தம் பரிசுத்தமான மக்களுக்கு எல்லா காலத்திற்குமாகக் கொடுத்த விசுவாசத்திற்காகப் போராடுமாறு உங்களை உற்சாகப்படுத்த விரும்புகிறேன்.* **4***சிலர் உங்கள் கூட்டத்தில் இரகசியமாகப் புகுந்திருக்கிறார்கள். அவர்களுக்கான தண்டனையை வெகுகாலத்திற்கு முன்பே வேதவாக்கியங்கள் கூறியுள்ளன. வெகு காலத்திற்கு முன் தீர்க்கதரிசிகள் இம்மக்களைக் குறித்து எழுதினார்கள். இம்மக்கள் தேவனுக்கு எதிரானவர்கள். அவர்கள் தேவனுடைய கருணையை பாலியல் அநீதிகளுக்கு ஒரு அனுமதியாக மாற்றிவிட்டிருக்கிறார்கள். நமது ஒரே ஆண்டவரும் கர்த்தருமாகிய இயேசு கிறிஸ்துவைப் பின்பற்ற இம்மக்கள் மறுக்கிறார்கள்.*

**5***நீங்கள் ஏற்கெனவே அறிந்துள்ளவற்றை நினைவுகூருவதற்கு உங்களுக்கு உதவ நான் விரும்புகிறேன். ஒரு காலத்தில் எகிப்து நாட்டுக்கு வெளியே தம் மக்களை அழைத்து வந்ததன் மூலம் கர்த்தர் அவர்களைக் காப்பாற்றியதை நினைவு கூருங்கள். பிற்காலத்தில் விசுவாசமற்ற எல்லா மக்களையும் கர்த்தர் அழித்தார்.* **6***தம் அதிகாரத்தைத் தக்க வைத்துக் கொள்ளாது தம் சொந்த இடத்திலிருந்து வெளியேறிய தேவதூதர்களைப்பற்றி உங்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன். மேலும், இதனால் அவர்களையெல்லாம் கர்த்தர் இருளில் வைத்திருக்கிறார். அவர்கள் அறுக்கமுடியாத நிரந்தரமான சங்கிலிகளால் கட்டப்பட்டிருக்கிறார்கள். மிகப்பெரும் நாளில் நியாயந்தீர்க்கப்படுவதற்காக அவர் அவர்களை வைத்திருக்கிறார்.* **7***சோதோம், கொமோரா, நகரங்களையும் அவற்றைச் சுற்றியிருந்த நகரங்களையும்கூட நினைவுகூருங்கள். அந்த தேவ தூதர்களைப் போன்றே அவையும் பாலியல் நீதிகளை இழந்து இயற்கைக்கு மாறான பாலியல் உறவுகளில் மூழ்கின. நித்திய அக்கினியாகிய தண்டனையில் இப்பொழுது அவை துன்புறுகின்றன. நாம் பார்த்தறிவதற்கு தேவனுடைய தண்டனைக்கு ஓர் எடுத்துக்காட்டாக அவை இருக்கின்றன.* **8***உங்கள் கூட்டத்தில் நுழைந்திருக்கிற மக்களின் வழியும் இதுவே. அவர்கள் கனவுகளால் வழிகாட்டப்படுகிறார்கள். அவர்கள் தம் பாலியல் பாவங்களால் தம்மை அசுத்தப்படுத்திக் கொள்கிறார்கள். அவர்கள் கர்த்தரின் அதிகாரத்தைத் தள்ளி விட்டு, மகிமைபொருந்திய தேவதூதர்களுக்கு எதிராகப் பேசுகிறார்கள்.* **9***ஆனால் பிரதான தேவதூதனாகிய மிகாவேல் மோசேயின் உடலுக்காக பிசாசோடு விவாதித்தபொழுது, பழியுரைத்ததற்காக பிசாசைத் தண்டிக்க வேண்டுமென மிகாவேல் முடிவுகட்டவில்லை. (கர்த்தரின் தீர்ப்புக்காக மிகாவேல் கோரிக்கை விடுத்தான்.) “கர்த்தர் உன்னைத் தண்டிக்கட்டும்” என்று மட்டும் அவன் சொன்னான்.* **10***ஆனால் புரிந்து கொள்ளாத காரியங்களை இம்மக்கள் விமர்சிக்கிறார்கள். பகுத்தறிவற்ற சில மிருகங்களைப் போல, தாமாகவே சிலவற்றைப்பற்றி அவர்கள் அறிந்துகொள்கிறார்கள். ஆனால் இவற்றாலேயே அவர்கள் அழிக்கப்படுகிறார்கள்.* **11***அது அவர்களுக்கு மிக மோசமானதாக இருக்கும். காயீன் சென்ற பாதையை இந்த மக்களும் பின்பற்றுகிறார்கள். பணம் பெறுவதற்காக பிலேயாமின் தவறான வழியைப் பின்பற்ற இவர்கள் தம்மைத்தாமே ஒப்படைத்திருக்கிறார்கள். கோரா செய்ததைப் போல இந்த மக்களும் தேவனுக்கு எதிராக மோதுகிறார்கள். அவர்களும் கோராவைப் போல அழிக்கபடுவார்கள்.* **12***உங்கள் அன்பின் விருந்துகளில் உங்களோடு அச்சமின்றி விருந்துண்ணும் இவர்கள் தண்ணீருக்குள் மூழ்கியிருக்கும் பாறைகள் போல இருக்கிறார்கள். அவர்கள் தம்மைப் பற்றி மட்டுமே அக்கறை கொள்ளும் மேய்ப்பர்களாவார்கள். அவர்கள் காற்றால் அடித்துச் செல்லப்படுகிற மழை பொழியாத மேகங்களைப் போன்றவர்கள். அவர்கள் அறுவடைக்காலத்தில் கனிகொடுக்காத மரங்களைப் போன்றவர்கள். எனவே*

பூமியில் இருந்து அவர்கள் அப்புறப்படுத்
தப்படுகிறார்கள். அவர்கள் இருமுறை மரணம்
அடைகிறார்கள். 13அவர்கள் கடலின் பெரும்
அலைகளைப் போன்றவர்கள். கடலலைகள்
தம் நுரைக்கழிவுகளை வீசியடித்து கரையில்
ஒதுக்குவதுபோல அவர்கள் தம் வெட்கத்துக்கு
ரிய காரியங்களை செய்கிறார்கள். எங்கெங்
கும் அம்மக்கள் (இயல்பான சுற்றிலிருந்து
விலகி) வானில் திரியும் விண்மீன்களைப்
போன்றவர்கள். மிகுந்த கரிய இருளில் ஓர்
இடம் அம்மக்களுக்காக நிரந்தரமாக ஒதுக்
கப்பட்டிருக்கிறது.

14ஆதாமின் ஏழாம் தலைமுறையினனான
ஏனோக்கு இம்மக்களைக் குறித்து தீர்க்கதரிச
னம் கூறினான். "பாருங்கள், பல்லாயிரக்க
ணக்கான தம் தூய தேவ தூதர்களோடு கர்த்தர்
வந்து கொண்டிருக்கிறார். 15எல்லா மக்களை
யும் நியாயந் தீர்ப்பதற்காகவும், தம் தீய செயல்
களாலும், பாவம் நிறைந்த இம்மக்கள் தேவ
னுக்கு எதிராகச் சொன்ன முரட்டுத் தனமான
வார்த்தைகளாலும் தேவனை எதிர்த்தவர்
களை தண்டிக்கவும் கர்த்தர் வந்து கொண்டி
ருக்கிறார்." என்று கூறினான். 16இம்மக்கள்
எப்போதும் குறை கூறி குற்றம் கண்டுபிடிக்கி
றார்கள். அவர்கள் செய்யவிரும்பும் தீய காரி
யங்களை அவர்கள் எப்போதும் செய்கிறார்
கள். அவர்கள் தங்களைப் பற்றி பெருமையாய்
பேசுகிறார்கள். தாங்கள் விரும்புவதைப் பெறு
வதற்காக மட்டுமே அவர்கள் பிறரைக் குறித்து
நல்லவை கூறுவர்.

## ஓர் எச்சரிக்கையும் செய்யவேண்டிய காரியங்களும்

17அன்பான நண்பர்களே, முன்னர் கர்த்தர்
இயேசு கிறிஸ்துவின் அப்போஸ்தலர்கள் கூறி
யவற்றை நினைவுகூருங்கள். 18சீஷர்கள் உங்க
ளிடம், "கடைசி நாட்களில் தேவனைக் குறித்து
நகைக்கிறவர்களும், தேவனுக்கு எதிரான தம்
தீய ஆசைகளைப் பின்பற்றுகிறவர்களும்
இருப்பார்கள்" என்றனர். 19அவர்களே உங்க
ளைப் பிரிக்கிறவர்கள். பாவம் மிகுந்த சுயம்
விரும்புகின்ற காரியங்களை மட்டுமே அவர்
கள் செய்கிறார்கள். அவர்களிடம் ஆவியா
னவர் இல்லை.

20ஆனால் அன்பான நண்பர்களே, மிகவும்
பரிசுத்தமான விசுவாசத்தை அடிப்படை
யாகக் கொண்டு உங்களை நீங்களே பலமுள்ள
வர்களாக வளர்த்துக்கொள்ள வேண்டும்.
பரிசுத்த ஆவியானவரின் உதவியோடு கூட
பிரார்த்தனை செய்யுங்கள்.

21தேவனுடைய அன்பில் உங்களை வைத்
துக்கொள்ளுங்கள். உங்களுக்கு நித்திய
ஜீவனை கொடுக்க கர்த்தராகிய இயேசு கிறிஸ்
துவின் கருணைக்காகக் காத்திருங்கள்.

22பெலவீனமுள்ள மக்களிடம் இரக்கம்
கொள்ளுங்கள். 23நெருப்பிலிருந்து விடுவிப்ப
தன் மூலம் மற்றவர்களைக் காப்பாற்றுங்கள்.
சிறு எச்சரிக்கையுணர்வோடு இரக்கம் காட்ட
வேண்டிய சிலர் இருக்கிறார்கள். பாவத்தி
னால் அழுக்கேறிய அவர்களது ஆடைகளை
யும் கூட வெறுத்து விடுங்கள்.

## தேவனை வாழ்த்துங்கள்

24நீங்கள் தடுக்கி விழுந்துவிடாதபடி செய்ய
வும், தம் மகிமையின் முன் எந்த பிழையு
மின்றி உங்களை அழைக்கவும், அளவற்ற
மகிழ்ச்சியை உங்களுக்கு அளிக்கவும், அவ
ரால் (தேவனால்) முடியும். 25அவர் ஒருவரே
தேவன். அவரே நம் மீட்பர். அவருக்கே மகி
மை, பெருமை, வல்லமை, அதிகாரம் அனைத்
தும் நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின்
மூலமாக கடந்தகாலம் முழுக்கவும் நிகழ்காலத்
துக்கும் என்றென்றைக்குமாக உண்டாவதாக.
ஆமென்.

# யோவானுக்கு வெளிப்படுத்தின விசேஷம்

1 இது இயேசு கிறிஸ்து வெளிப்படுத்தின
விசேஷம்.* விரைவில் நடைபெறப் போகி
றவை எவையென்று தன் ஊழியர்களுக்குத்
தெரிவிக்கும்பொருட்டு இயேசுவுக்குத் தேவன்
இதை வழங்கினார். கிறிஸ்து தன் தேவதூ
தனை அனுப்பி தன் ஊழியனாகிய யோவான்
இதனைத் தெரிந்து கொள்ளுமாறு செய்தார்.
2தான் பார்த்த எல்லாவற்றையும் யோவான்
சொல்லி இருக்கிறான். தேவனிடமிருந்து வரு
கிற செய்தியாகிய இவ்வுண்மையையே
இயேசு அவனிடம் சொன்னார். 3தேவனிடமி
ருந்து வந்த இச்செய்திகளை வாசிக்கிற எவ
னும் ஆசீர்வதிக்கப்பட்டவன். இச்செய்தியைக்
கேள்விப்படுகிறவர்களும் இதில் எழுதியுள்ள
படி நடக்கின்றவர்களும் ஆசீர்வதிக்கப்பட்டவர்
கள். காலம் குறுகினதாயிருக்கிறது.

### இயேசுவின் செய்திகளை சபைகளுக்கு யோவான் எழுதுகிறார்

4ஆசியாவில் உள்ள ஏழு சபைகளுக்கும்
யோவான் எழுதுவது:
எப்பொழுதும் இருக்கிறவரும் இருந்தவரும்
இனிமேல் வரப்போகிறவருமான ஒருவராலும்
(தேவனாலும்), அவரது சிம்மாசனத்துக்கு
முன்பாக இருக்கிற ஏழு ஆவிகளாலும் இயேசு
கிறிஸ்துவினாலும் உங்களுக்கு இரக்கமும்
சமாதானமும் உண்டாவதாக. 5இயேசுவே
உண்மையுள்ள சாட்சியாக இருக்கிறார். மர
ணத்தில் இருந்து உயிர்த்தெழுந்தவர்களுள் முத
லானவர் அவரே ஆவார். பூமியில் உள்ள
அரசர்களுக்கு எல்லாம் அதிபதி இயேசு.
6இயேசுவே நம்மை நேசிக்கிறவர். அவரே
தமது இரத்தத்தால் நமது பாவங்களில் இருந்து
நம்மை விடுதலை செய்தவர். தமது பிதாவா
கிய தேவனின் முன்னிலையில் நம்மை ஆசாரி
யர்களாக்கி, அரசு ஒன்றை உருவாக்கியிருக்கி
றார். அவருக்கு மகிமையும், வல்லமையும்
எப்போதும் உண்டாவதாக! ஆமென். 7பாருங்
கள், இயேசு மேகங்களுடனே வருகிறுர். ஒவ்
வொருவரும் அவரைக் காண்பார்கள். அவ
ரைக் குத்தினவர்களும் அவரைக் காண்பார்
கள். பூமியில் உள்ள அனைத்து மக்களும்
அவரை பார்த்து, அவருக்காகப் புலம்புவார்
கள். ஆமாம். அது அப்படியே நடக்கும்.
ஆமென்.
8கர்த்தர் கூறுகிறார்: “நான் அல்பாவும் ஒமே
காவுமாய்* இருக்கிறேன். நான் இருக்கிறவரா
கவும், இருந்தவராகவும், இனி வருகிறவரு
மாய் இருக்கிற சர்வ வல்லமை உள்ளவரா
யிருக்கிறேன்.”
9நான் யோவான், கிறிஸ்துவில் நான் உங்
கள் சகோதரன். இயேசுவின் நிமித்தம் வரும்
துன்பங்களுக்கும், இராஜ்யத்துக்கும், பொறு
மைக்கும் நாம் பங்காளிகள். தேவனின் செய்
தியைப் போதித்துக் கொண்டிருந்ததற்காக
வும், இயேசுவைப் பற்றிய சாட்சியின் நிமித்த
மாகவும் பத்மு* என்னும் தீவிற்கு நான் நாடு
கடத்தப்பட்டேன். 10கர்த்தருடைய நாளில் பரி
சுத்த ஆவியானவர் என்னை ஆட்கொண்டார்.
அப்பொழுது ஒரு பெரிய சத்தத்தை எனக்குப்
பின்பாகக் கேட்டேன். அது எக்காள சத்தம்
போல் இருந்தது. 11அந்த சத்தம், “நீ பார்க்கின்ற
எல்லாவற்றையும் ஒரு புத்தகத்தில் எழுது.
அதனை ஏழு சபைகளுக்கும் அனுப்பு. அவை
ஆசியாவில் உள்ள எபேசு, சிமிர்னா பெர்கமு,
தியத்தீரா, சர்தை, பிலதெல்பியா, லவோதிக்
கேயா என்னும் நகரங்களில் உள்ளன” என்று
கூறியது.
12என்னோடு பேசிக்கொண்டிருந்தவர் யார்
என அறிய நான் திரும்பிப் பார்த்தேன். நான்
ஏழு பொன்னாலான குத்து விளக்குகளைப்
பார்த்தேன். 13அவற்றுக்கு மத்தியில் “மனித
குமாரனைப் போன்ற” ஒருவரைக் கண்டேன்.
அவர் நீண்ட மேல் அங்கியை அணிந்திருந்
தார். அவர் மார்பில் பொன்னால் ஆன கச்சை
கட்டப்பட்டிருந்தது. 14அவரது தலையும், முடி
யும் வெண்பஞ்சைப் போலவும், பனியைப்
போலவும் வெளுப்பாய் இருந்தது. அவரது
கண்கள் அக்கினி சுவாலையைப் போன்றிருந்
தன. 15அவரது பாதங்கள் உலைக்களத்தில்
காய்ந்துகொண்டிருக்கிற ஒளிமிக்க வெண்க

---

**வெளிப்படுத்தின விசேஷம்** மறைவாகப் பொதிந்துள்ள உண்மையை வெளிப்படுத்துவதும், புரிய வைப்பதுமான காரியம்.

**அல்பா, ஒமேகா** இவை கிரேக்கத்தின் முதலும் முடிவுமான எழுத்துக்கள். இது ஆரம்பத்தையும் முடிவையும் காட்டும்.

**பத்மு** ஏஜீயன் கடலில் உள்ள சிறிய தீவு. ஆசியா மைனர் கடற்கரை அருகில் உள்ளது (தற்கால துருக்கி).

லம்போல் இருந்தன. அவரது சத்தம் பெரு
வெள்ளத்தின் இரைச்சலைப்போல் இருந்தது.
16அவர் தனது வலதுகையில் ஏழு நட்சத்திரங்
களைப் பிடித்துக்கொண்டிருந்தார். அவர்
வாயில் இருந்து இருபக்கமும் கூர்மையுள்ள
வாள் வெளிப்பட்டது. அவர் முகம் உச்சி
நேரத்தில் ஒளிவீசும் சூரியனைப்போல ஒளி
வீசியது.

17நான் அவரைக் கண்டதும் இறந்தவனைப்
போல அவரது பாதங்களில் விழுந்தேன்.
அவர் தனது வலது கையை என்மீது வைத்து,
“பயப்படாதே, நானே முந்தினவரும், பிந்தினவ
ரும் ஆக இருக்கிறேன். 18நான் வாழ்கிற ஒருவ
ராக இருக்கிறேன். நான் இறந்தேன். ஆனால்
இப்போது சதாகாலங்களிலும் உயிரோடு
இருக்கிறேன். என்னிடம் மரணத்துக்கும்,
பாதாளத்துக்கும்* உரிய திறவுகோல்கள் உள்
ளன. 19எனவே, நீ பார்த்தவற்றையெல்லாம்
எழுது. இப்பொழுது நடப்பதையும், இனிமேல்
நடக்கப்போவதையும் எழுது. 20எனது வலது
கையில் உள்ள ஏழு நட்சத்திரங்களின் இரகசி
யத்தையும் ஏழு பொன் குத்து விளக்குகளின்
இரகசியத்தையும் எழுது. நீ கண்ட ஏழு குத்து
விளக்குகளும் ஏழு சபைகளாகும். ஏழு நட்சத்
திரங்களும் அந்த சபைகளில் உள்ள தூதர்களா
கும்.

### எபேசு சபைக்கு இயேசுவின் நிருபம்

2 “எபேசு சபையின் தூதனுக்கு எழுத
வேண்டியது:
“தனது வலதுகையில் ஏழு நட்சத்திரங்
களை ஏந்திக்கொண்டு ஏழு பொன் குத்து
விளக்குகளின் மத்தியிலே உலாவுகிறவர்
உனக்கு இதனைக் கூறுகின்றார். 2நீ என்ன
செய்கிறாய் என்று எனக்குத் தெரியும். நீ
கடினமாக வேலை செய்கிறாய். உன் செயல்
களை நீ விட்டு விடுவதில்லை. கெட்ட மக்களை
நீ ஏற்றுக் கொள்வதில்லை என்று எனக்குத்
தெரியும். உண்மையில் அப்போஸ்தலர்கள்
இல்லாமல் வெளியே தங்களை அப்போஸ்தலர்
என்று சொல்லித் திரிபவர்களை நீ சோதனை
செய்திருக்கிறாய். அவர்கள் பொய்யர்கள் என்
பதைக் கண்டு பிடித்திருக்கிறாய். 3நீ விலகிப்
போகாமல், தொடர்ந்து முயற்சி செய்து கொண்
டிருக்கிறாய். நீ என் நிமித்தம் துன்பங்களைத்
தாங்கிக்கொள்கிறாய். நீ இவற்றைச் செய்வதில்
சோர்வு இல்லாமலும் இருக்கிறாய்.

4“ஆனால் சில காரியங்களில் உன்மேல்
எனக்குக் குறை உண்டு. நீ துவக்க காலத்தில்
கொண்டிருந்த அன்பை இப்போது விட்டுவிட்
டாய். 5எனவே விழுவதற்கு முன்பு எங்கிருந்
தாய் என்பதை நினைத்துப்பார். உன் மனதை
மாற்றிக்கொள். துவக்க காலத்தில் செய்தவை
களை தொடர்ந்து செய். நீ மாறாவிட்டால்
நான் உன்னிடம் வந்து உனது விளக்குத்
தண்டை அதனிடத்தில் இருந்து நீக்கிவிடு
வேன். 6ஆனால் நீ செய்கிறதில் சரியானவை
யும் உண்டு. நான் வெறுப்பதைப் போலவே
நீ நிக்கொலாய்கள்* செய்வதை வெறுக்கிறாய்.

7“ஆவியானவர் சபைகளுக்குச் சொல்வ
தைக் கேட்கிற யாவரும் கவனிக்க வேண்டும்.
வெற்றி பெறுகிறவனுக்கு தேவனுடைய
தோட்டத்திலுள்ள ஜீவவிருட்சத்தின் கனியைச்
சாப்பிடும் உரிமையை நான் கொடுப்பேன்.

### சிமிர்னா சபைக்கு இயேசுவின் நிருபம்

8“சிமிர்னா சபையின் தூதனுக்கு எழுத
வேண்டியது:
“துவக்கமும், முடிவுமாயிருப்பவர் இவை
களை உனக்குக் கூறுகின்றார். அவர்தான்
இறந்து, மரணத்தில் இருந்து மீண்டும் உயிரு
டன் எழுந்தவர். 9உங்கள் துன்பங்களை நான்
அறிவேன். நீங்கள் ஏழைகள் என்பது எனக்
குத் தெரியும். ஆனால் உண்மையில் நீங்கள்
செல்வந் தர்கள். தம்மைத் தாமே யூதர்கள்
என்று அழைத்துக் கொள்கிறவர்களால் உங்க
ளைப் பற்றிச் சொல்லப்பட்ட கெட்ட செய்தி
களை நான் அறிவேன். ஆனால் உண்மையில்
அவர்கள் யூதர்கள் அல்ல. அவர்கள் சாத்தா
னின் கூட்டத்தினர். 10உங்களுக்கு நிகழ்வதைக்
குறித்து அச்சப்பட வேண்டாம். பிசாசு உங்க
ளில் சிலரைச் சிறையில் போடுவான். அவன்
உங்களைச் சோதிப்பதற்காகவே அவ்வாறு
செய்கிறான். நீங்கள் பத்து நாட்கள் துன்பப்படு
வீர்கள். ஆனால் இறக்கவேண்டியதாக இருந்தா
லும் உண்மையானவர்களாக இருங்கள். நீ
இறுதிவரை உண்மையாயிருந்தால் ஜீவ கிரீ
டத்தை உனக்குத் தருவேன். 11சபைகளுக்கு
ஆவியானவர் கூறுவதைக் கேட்கிற யாவரும்
கவனிக்க வேண்டும். ஜெயம் பெறுகிறவன்
எவனோ, அவன் இரண்டாவது மரணத்தி
னால் பாதிக்கப்படமாட்டான்.

### பெர்கமு சபைக்கு இயேசுவின் நிருபம்

12“பெர்கமு சபையின் தூதனுக்கு எழுத
வேண்டியது:
“இருபக்கமும் கூர்மையான வாளைக்
கொண்டிருக்கிறவர் இதனை உங்களுக்குக்
கூறுகிறார். 13நீ எங்கே வாழ்கிறாய் என்று
எனக்குத் தெரியும். சாத்தானுடைய சிம்மாச
னம் இருக்கிற இடத்தில் நீ இருக்கிறாய். ஆனால்
நீ எனக்கு உண்மையானவனாக இருக்கிறாய்.
அந்திப்பாசின் காலத்திலும் என்மீதுள்ள உன்
விசுவாசத்தை நீ மறுத்ததில்லை. அந்திப்பா
எனது உண்மையுள்ள சாட்சி. அவன் உங்கள்
நகரத்தில் கொல்லப்பட்டான். உங்கள் நகரம்
சாத்தான் வாழுமிடம்.

14“ஆனாலும் உனக்கு எதிரான சில காரி
யங்கள் என்னிடம் உண்டு. உங்கள் கூட்டத்தில்
உள்ள சிலர் பிலேயாமின் உபதேசத்தைப்

---

**பாதாளம்** மரணத்திற்குப் பின்பு மக்கள் செல்லும் இடம்.

**நிக்கொலாய்** தவறான கொள்கைகளைப் பின்பற்றும் ஒரு மதக்குழு.

பின்பற்றிக் கொண்டிருக்கிறார்கள். பிலேயாம்
இஸ்ரவேலைப் பாவத்துக்கு வழிநடத்தப்
பாலாக் என்பவனால் பலவந்தப்படுத்தப்பட்ட
வனாவான். இதனால் அவர்கள் விக்கிரகங்க
ளுக்குப் படைக்கப்பட்டதை உண்டு, பாலியல்
பாவங்களும் செய்தனர். [15]இதுபோலவே உங்
கள் கூட்டத்தில் நிக்கொலாய் மதத்தவர்களின்
போதகத்தைப் பின்பற்றுகிறவர்களும் இருக்கி
றார்கள். [16]எனவே உங்கள் மனதை மாற்றிக்
கொள்ளுங்கள். மாறாவிட்டால் நான் விரை
வில் உங்களிடம் வருவேன். என் வாயின்
வாளால் அவர்களோடு போரிடுவேன்.
[17]“சபைகளுக்கு ஆவியானவர் கூறுவதைக்
கேட்கிற யாவரும் கவனிக்கவேண்டும்!
“ஜெயம் பெறுகிறவனுக்கு நான் மறைவான
மன்னாவைக் கொடுப்பேன்.* அதோடு அவ
னுக்கு வெள்ளைக் கல்லையும் கொடுப்பேன்.
அக்கல்லில் புதிய பெயர் எழுதப்பட்டிருக்கும்.
ஒருவருக்கும் அந்தப் பெயர் தெரியாது. அக்
கல்லை எவன் பெறுகிறானோ அவன் ஒரு
வனே அந்தப் புதிய பெயரை அறிந்து கொள்
வான்.

## தியத்தீரா சபைக்கு இயேசுவின் நிருபம்

“தியத்தீரா சபையின் தூதனுக்கு எழுத
வேண்டியது:
[18]“தேவனின் குமாரன் இவற்றைக் கூறுகி
றார். அவர் ஒருவரே அக்கினிபோல ஒளி
விடும் கண்களையும், பிரகாசமான வெண்
கலம் போன்ற ஒளிதரும் பாதங்களையும்
கொண்டவர். அவர் உனக்குச் சொல்வது இது
தான். [19]நீ செய்கின்றவற்றை நான் அறிவேன்.
நான் உன் அன்பையும், விசுவாசத்தையும்,
சேவையையும், பொறுமையையும் அறிவேன்.
துவக்கக்காலத்தை விட இப்போது நீ அதி
மாகச் செய்வதையும் நான் அறிவேன். [20]“எனி
னும் உனக்கு எதிரான சில காரியங்கள்
என்னிடம் உள்ளன. ஏசபேல் என்னும் பெண்
ணுக்குத் தனது விருப்பம்போல வாழ நீ இடம்
கொடுக்கிறாய். அவள் தன்னைத் தீர்க்கதரிசி
என்கிறாள். அவள் தன் உபதேசத்தால் என்
மக்களை என்னை விட்டுத் தூரமாக்குகின்
றாள். அவளால் அவர்கள் பாலியல் பாவங்க
ளைச் செய்கிறார்கள். மற்றும் விக்கிரகங்க
ளுக்குப் படைக்கப்பட்டதை உண்கிறார்கள்.
[21]அவள் தன் மனதை மாற்றிக்கொள்ளவும்,
தன் பாவங்களில் இருந்து விலகவும் நான்
அவகாசம் கொடுத்தேன். ஆனால் அவள் மாற
விரும்பவில்லை. [22]எனவே அவளையும், அவ
ளோடு பாவம் செய்தவர்களையும் நான் அவ
ளுடைய படுக்கையில் எறிந்து அவர்களை
மிகவும் வருந்தச் செய்வேன். அவளுடைய
செய்கைகளிலிருந்து அவர்கள் மாறாவிட்டால்.
[23]நான் இப்பொழுதே இதனை நிகழ்த்துவேன்.
அவளை பின்பற்றுகிறவர்களையும் நான்
கொல்லுவேன். அப்பொழுது எல்லாச் சபை
களும் ‘நான் மக்களின் எண்ணங்களையும்,
உணர்வுகளையும் அறிந்துள்ளவர்’ என்பதை
அறிவார்கள். உங்களில் ஒவ்வொருவருக்கும்
உங்கள் செயல்களுக்கு ஏற்ற பலன் தருவேன்.
[24]“ஆனால் தியத்தீராவில் உள்ள மற்றவர்
கள் சிலர் அவளது போதகத்தைப் பின்பற்ற
வில்லை. அவர்கள் சொல்லும் சாத்தானின்
ஆழமான ரகசியங்களையும் நீ அறிந்திருக்க
வில்லை. எனவே உங்கள் மீது இதைத்தவிர
வேறு சுமைகளை சுமத்த மாட்டேன். [25]நான்
வருகிறவரை இதனையே தொடர்ந்து செய்து
வாருங்கள்.
[26]“இதில் இறுதிவரை இதுபோல் இருந்து
வெற்றி பெறுகிறவர்களுக்கு மற்ற தேசங்களின்
மேல் நான் அதிகாரத்தைக் கொடுப்பேன்.

[27] ‘அவன் அவர்களை இரும்புக் கோலால்
ஆள்வான். மண்பாண்டங்களைப்போல்
தூள்தூளாக அவர்களை நொறுக்கு
வான்.’ *சங்கீதம் 2:9*

[28]என் பிதாவிடமிருந்து இந்த வல்லமையை
நான் பெற்றுக்கொண்டேன் மேலும் நான் அவ
னுக்கு விடிவெள்ளி நட்சத்திரத்தைக் கொடுப்
பேன். [29]சபைகளுக்கு ஆவியானவர் கூறுவ
தைக் கேட்கின்ற யாவரும் கவனிக்க வேண்
டும்.

## சர்தை சபைக்கு இயேசுவின் நிருபம்

3 “சர்தை சபையின் தூதனுக்கு எழுதவேண்
டியது:
“ஏழு ஆவிகளையும் ஏழு நட்சத்திரங்களை
யும் கொண்டிருக்கிறவர் இவைகளை உனக்கு
கூறுகிறார். நீங்கள் செய்பவற்றை நான் அறி
வேன். நீங்கள் உயிர் வாழ்வதாக மக்கள்
கூறுகிறார்கள். ஆனால் உண்மையில் நீங்கள்
செத்துப் போனவர்களே. [2]எழும்புங்கள். செத்
துப் போகிற நிலையில் உள்ளவற்றை
வலிமையுள்ளதாய் ஆக்குங்கள். முழுமை
யாய்ச் சாகும் முன் பலப்படுத்திக் கொள்ளுங்
கள். தேவனுக்கு நீ செய்ததெல்லாம் போது
மானதாக இல்லை என நான் காண்கின்றேன்.
[3]எனவே நீங்கள் பெற்றவற்றையும், கேள்விப்
பட்டவற்றையும் மறவாதீர்கள். அவற்றுக்கு
அடிபணியுங்கள். உங்கள் மனதையும், வாழ்
வையும் மாற்றுங்கள். நீங்கள் விழித்தெழுங்
கள். அல்லது நான் திருடனைப்போல வந்து
உங்களை ஆச்சரியப்படுத்துவேன். எப்பொ
ழுது நான் வருவேன் என உங்களுக்குத்
தெரியாது. [4]ஆனால் உங்கள் குழுவில் சிலர்
பரிசுத்தமானவர்களாக இருக்கிறார்கள். அவர்
கள் என்னோடு நடப்பார்கள். அவர்கள் வெள்
ளை ஆடைகளை அணிவார்கள். ஏனென்றால்
அதற்கு அவர்கள் தகுதியானவர்கள். [5]வெற்றி
பெறுகிற ஒவ்வொருவரும் இவர்களைப்
போல் வெண்ணிற ஆடைகளை அணிந்து
கொள்வார்கள். நான் அவர்களது பெயர்களை
ஜீவப் புத்தகத்திலிருந்து எடுத்துப்போட மாட்

---

**மன்னா** பரலோகத்திலுள்ள உணவு. தேவன் தன் மக்கள் வனாந்தரத்திலிருக்கும் போது கொடுத்தது.

டேன். அவர்கள் என்னைச் சேர்ந்தவர்கள்.
இதனை நான் என் பிதாவின் முன்பும், தூதர்க
ளுக்கு முன்பும் சொல்வேன். 6சபைகளுக்கு
ஆவியானவர் சொல்வதை கேட்கிற யாவரும்
கவனிக்க வேண்டும்.

### பிலதெல்பியா சபைக்கு இயேசுவின் நிருபம்

7"பிலதெல்பியா சபையின் தூதனுக்கு எழு
தவேண்டியது: "உண்மையுள்ளவரும் பரிசுத்த
முள்ளவரும் இவைகளை உனக்குக் கூறுகி
றார். அவர் தாவீதின் (வீட்டின்) திறவுகோலை
உடையவராக இருக்கின்றார். அவர் ஒரு கத
வைத் திறந்தால், அதை யாராலும் மூடமுடி
யாது. மேலும் அவர் கதவை மூடினால் யாரா
லும் அதைத் திறக்க முடியாது. 8நீ செய்ப
வற்றை நான் அறிவேன். நான் உங்களுக்கு
முன்னால் திறந்த வாசலை வைக்கிறேன்.
அதனை எவராலும் அடைக்க முடியாது. நீங்
கள் பலவீனமானவர்கள் என்பது எனக்குத்
தெரியும். ஆனால் என் உபதேசத்தை நீங்கள்
பின்பற்றினீர்கள். என் பெயரைச் சொல்ல
நீங்கள் பயப்படவில்லை. 9கவனியுங்கள், சாத்
தானைச் சேர்ந்த கூட்டம் ஒன்று உள்ளது.
அவர்கள் தம்மை யூதர்கள் எனக் கூறுகிறார்
கள். உண்மையில் அவர்கள் பொய்யர்களே!
அவர்கள் உண்மையான யூதர்கள் அல்லர்.
அவர்களை உங்கள் முன் அடிபணிந்து வணங்
கச் செய்வேன். என்னால் நேசிக்கப்படுகிற
மக்கள் நீங்கள் என்பதை அவர்கள் அறிவர்.
10எனது கட்டளைகளை நீங்கள் பின்பற்றி
பொறுமையாக இருந்தீர்கள். அதனால் துன்ப
காலத்தில் உங்களைப் பாதுகாப்பேன். முழு
உலகமும் துன்பப்படும்போது நீங்கள் தப்பித்
துக் கொள்வீர்கள். அத்துன்பம் உலகில்
வாழும் மக்களைச் சோதிக்கும்.
11"நான் விரைவில் வருகிறேன். இப்பொ
ழுது உள்ள வழியில் தொடர்ந்து செல்லுங்கள்.
அப்பொழுது எவராலும் உங்கள் கிரீடத்தை
எடுத்துக்கொள்ள முடியாது. 12இதில் வெற்றி
பெறுகிறவன் என் தேவனின் ஆலயத்தில்,
சிறந்த தூணாக விளங்குவான். இதில் வெற்றி
பெறுகிறவனுக்காக நான் இதனைச் செய்
வேன். அவன் எப்போதும் தேவனின் ஆல
யத்தை விட்டு விலகமாட்டான். அவன்மேல்
எனது தேவனின் பெயரை எழுதுவேன்.
அவன் மேல் எனது தேவனுடைய நகரத்தின்
பெயரையும் எழுதுவேன். அந்த நகரத்தின்
பெயர் புதிய எருசலேம். பரலோகத்திலிருக்
கின்ற என் தேவனிடமிருந்து இந்நகரம் இறங்கி
வந்துகொண்டிருக்கின்றது. நான் எனது புதிய
பெயரையும் அவன் மீது எழுதுவேன். 13சபை
களுக்கு ஆவி யானவர் கூறுவதைக் கேட்கின்ற
யாவரும் கவனிக்க வேண்டும்.

### லவோதிக்கேயா சபைக்கு இயேசுவின் நிருபம்

14"லவோதிக்கேயா சபைக்கு எழுத வேண்
டியது:
"ஆமென்* என்பவர் உங்களுக்கு இவற்
றைக் கூறுகிறார். அவரே உண்மையும் சத்திய
மும் உள்ள சாட்சி. தேவனால் படைக்கப்பட்ட
வற்றையெல்லாம் ஆள்பவர் அவர். 15அவர்
கூறுவது: நீ செய்பவற்றை நான் அறிவேன்.
நீ அனலானவனும் அல்ல, குளிர்ந்தவனும்
அல்ல. ஆனால் நீ குளிராகவோ அனலாகவோ
இருக்கவேண்டும் என்று விரும்புகிறேன். 16நீ
வெப்பமாக மட்டுமே உள்ளாய். நீ அன
லாகவோ குளிராகவோ இல்லை. எனவே
உன்னைத் துப்பிவிடத் தயாராக உள்ளேன்.
17உன்னைச் செல்வன் என்று நீ சொல்லிக்
கொள்கிறாய். உன்னிடம் எல்லாம் உள்ளது.
உனக்கு எதுவும் தேவை இல்லை என்று நீ
நினைக்கிறாய். ஆனால் உண்மையில் நீ பரிதா
பத்திற்குரியவன், ஏழை, குருடன், நிர்வாணி.
18நெருப்பால் தூய்மையாக்கப்பட்ட தங்கத்தை
என்னிடமிருந்து வாங்குமாறு உனக்கு நான்
அறிவுறுத்துகிறேன். பின்னரே நீ உண்மை
யான செல்வந்தன் ஆவாய். வெண்ணிற ஆடை
யை வாங்கிக் கொள்ளுங்கள். பிறகு நீங்கள்
நிர்வாணத்தை மூடிக் கொள்ளலாம். உங்கள்
கண்களுக்கான மருந்தை வாங்கிக் கொள்ளுங்
கள். பிறகு உங்களால் உண்மையாகப் பார்க்க
முடியும்.
19நான் நேசிக்கிற மக்களைத் திருத்து
வேன், தண்டிப்பேன். எனவே கடினமாய்
முயற்சி செய்யுங்கள். உங்கள் மனதையும்
வாழ்வையும் மாற்றிக் கொள்ளுங்கள். 20இதோ,
நான் கதவருகில் நின்று தட்டுகிறேன். எனது
குரலைக் கேட்டு ஒருவன் கதவைத் திறந்தால்,
நான் உள்ளே வந்து அவனோடு உணவு
உண்பேன். அவனும் என்னோடு உணவு
உண்பான்.
21"வெற்றி பெறுகிற ஒவ்வொருவனையும்
என் சிம்மாசனத்தில் என்னோடு அமரச் செய்
வேன். அதுபோலவே நான் வெற்றிகொண்டு
என் பிதாவோடு சிம்மாசனத்தில் உட்கார்
ந்தேன். 22கேட்கிற சக்தி கொண்ட ஒவ்வொ
ருவனும் ஆவியானவர் சபைகளுக்குக் கூறுவ
தைக் கேட்பானாக."

### யோவான் பரலோகத்தைப் பார்த்தல்

4 பிறகு நான் பார்த்தேன். அங்கே எனக்கு
முன்னே பரலோகத்தின் கதவு திறந்திருந்
தது. என்னிடம் முன்பு பேசிய அதே குரலை
அங்கு கேட்டேன். அக்குரல் எக்காளத்தைப்
போன்று ஒலித்தது, "இங்கே ஏறிவா. இதற்
கப்புறம் என்ன நிகழவேண்டும் என்பதை
உனக்குக் காட்டுகிறேன்" என்றது அக்குரல்.
2பின்னர் ஆவியானவரால் ஆட்கொள்ளப்பட்
டேன். பரலோகத்தில் ஒரு சிம்மாசனம்
எனக்கு முன்பாக இருந்தது. அதன்மேல்

---

**ஆமென்** இயேசுவின் பெயரைப் போல இது இங்கு பயன்படுத்தப்படுகிறது. இதன் பொருள், உண்மையான சில விஷயங்களை உறுதியாய் ஒப்புக்கொள்வது.

ஒருவர் வீற்றிருந்தார். 3அவர் பார்ப்பதற்கு
வைரக்கல்லும், பதுமராகக்கல்லும் போல
இருந்தார். அந்த சிம்மாசனத்தைச் சுற்றி மரக
தம் போன்ற ஒரு வானவில் இருந்தது. 4சிம்மா
சனத்தைச் சுற்றி இருபத்திநான்கு சிறிய சிம்
மாசனங்கள் இருந்தன. அந்த இருபத்திநான்கு
சிறிய சிம்மாசனங்களில் இருபத்திநான்கு மூப்
பர்கள் (தலைவர்கள்) அமர்ந்திருந்தனர். மூப்
பர்கள் வெண்ணிற ஆடைகளை அணிந்திருந்த
னர். அவர்கள் தலையில் தங்க கிரீடங்கள்
இருந்தன. 5சிம்மாசனத்திலிருந்து மின்னல்கள்
ஒளிர்ந்தன. இடியோசை கேட்டது. சிம்மாசனத்
திற்கு முன்பு ஏழு விளக்குகள் எரிந்துகொண்
டிருந்தன. அந்த ஏழு விளக்குகள் தேவனு
டைய ஏழு ஆவிகளாகும். 6அந்தச் சிம்மாசனத்
துக்கு முன்பாகப் பார்ப்பதற்கு கண்ணாடிக்
கடல் போல ஒன்றிருந்தது. அக்கடல் பளிங்கு
போல் தெளிவாகவும் இருந்தது.

அந்தச் சிம்மாசனத்தின் முன்னாலும் பக்
கங்களிலும் நான்கு ஜீவன்கள் இருந்தன.
அவற்றிற்கு முன்புறமும் பின்புறமும் கண்கள்
நிறைந்திருந்தன. 7அந்த முதல் ஜீவன் சிங்
கத்தைப் போன்றிருந்தது. இரண்டாவது ஜீவன்
காளையைப் போல இருந்தது. மூன்றாவது
ஜீவனுக்கு மனிதனைப் போல முகமிருந்தது.
நான்காவது ஜீவன் பறக்கும் கழுகைப் போன்
றிருந்தது. 8இந்த நான்கு ஜீவன்களுக்கும் ஆறு
சிறகுகள் இருந்தன. இவற்றுக்கு உள்ளேயும்
வெளியேயும் கண்கள் இருந்தன. இரவும், பக
லும் அவை நிறுத்தாமல் கீழ்க்கண்டவற்றைக்
கூறிக் கொண்டிருந்தன:

“சகல வல்லமையும் உள்ளவராகிய
கர்த்தராகிய தேவன் பரிசுத்தர், பரிசுத்
தர், பரிசுத்தர், அவர் எப்போதும்
இருந்தார், இருக்கிறார், இனிமேல்
வரப்போகிறார்.”

9அந்த உயிர்வாழும் ஜீவன்கள் சிம்மாசனத்
தின்மேல் வீற்றிருப்பவருக்கு மகிமையையும்,
பெருமையையும் நன்றியையும் செலுத்துகின்
றன. அவரே எல்லாக் காலங்களிலும் வாழ்ந்து
கொண்டிருப்பவர். எப்பொழுதும் அந்த உயிர்
வாழும் ஜீவன்கள் இப்புகழ்ச்சியைச் செய்து
கொண்டிருக்கின்றன. 10அந்த இருபத்தி நான்கு
மூப்பர்களும் தேவனுக்கு முன் குனிந்து
வணங்குகின்றனர். எப்பொழுதும் வாழ்ந்து
கொண்டிருக்கின்றவரை மூப்பர்கள் வணங்கு
கின்றனர். அவர்கள் தங்கள் கிரீடங்களைக்
கழற்றி சிம்மாசனத்தின் முன் வைத்து விட்டு
கீழ்க்கண்டவாறு கூறுகின்றனர்:

11 “எங்கள் கர்த்தரும் தேவனுமானவரே!
மகிமைக்கும், கனத்திற்கும், வல்ல
மைக்கும் தகுதியானவர் நீர் அதிகா
ரமும் உள்ளவர். எல்லாவற்றையும்
படைத்தவர் நீர். உம் விருப்பத்தா
லேயே யாவும் படைக்கப்பட்டு நிலைத்
திருக்கவும் செய்கின்றன.”

5 சிம்மாசனத்தின் மேல் உட்கார்ந்திருப்பவ
ரின் வலது கைப்பக்கத்தில் எழுதப்பட்ட
ஒரு தோல் சுருளைக்* கண்டேன். அதில்
இருபக்கமும் எழுதப்பட்டிருந்தது. அது மூடி
வைக்கப்பட்டு ஏழு முத்திரைகளும் இடப்பட்டி
ருந்தன. 2ஒரு சக்தி வாய்ந்த தேவதூதனையும்
நான் கண்டேன். அவன் உரத்த குரலில்
அழைத்து “இம்முத்திரைகளை உடைத்து
இந்தச் தோல் சுருளைத் திறந்து விடுகிற தகுதி
உள்ளவன் யார்?” என்று கேட்டான். 3ஆனால்
பரலோகத்திலோ, பூமியிலோ, பூமிக்கு அடி
யிலோ இருக்கிற எவரும் இதுவரை அம்
முத்திரைகளை உடைத்து திறந்து உள்ளே
பார்க்க இயலவில்லை. 4எவரும் அந்தத் தோல்
சுருளைத் திறந்து உள்ளே இருப்பதைப் பார்க்
காததால் நான் மிகவும் அழுதேன். 5ஆனால்
முதியவர்களுள் ஒருவர் என்னிடம், “அழாதே!
யூதர் குலத்தில் பிறந்த சிங்கமான இயேசு
வெற்றிபெற்றார். அவர் தாவீதின் வழி வந்த
வர். அவர் ஏழு முத்திரைகளையும் உடைத்து
இந்தத் தோல் சுருளைத் திறந்து பார்க்கும்
ஆற் றல் உள்ளவர்.” 6பிறகு ஒரு ஆட்டுக்குட்டி
சிம்மாசனத்தின் மத்தியில் நிற்பதைக் கண்
டேன். அதனைச் சுற்றி நான்கு ஜீவன்களும்
இருந்தன. மூப்பர்களும் அதனைச் சுற்றி இருந்
தனர். அந்த ஆட்டுக்குட்டி கொல்லப்பட்டது
போல தோன்றியது. அதற்கு ஏழு கொம்புக
ளும் ஏழு கண்களும் இருந்தன. அவை தேவனு
டைய ஏழு ஆவிகளாகும். அவை உலக
மெங்கும் அனுப்பப்பட்டவை. 7அந்த ஆட்டுக்
குட்டி தேவனுடைய வலது கையிலிருந்த
தோல்சுருளை எடுத்தது. 8உடனே உயிர்
வாழும் ஜீவன்களும் இருபத்துநான்கு மூப்பர்க
ளும் அந்த ஆட்டுக்குட்டியைப் பணிந்து வணங்
கினர். ஒவ்வொருவரிடமும் ஒரு இசைக்கருவி
இருந்தது. அதோடு தூபவர்க்கத்தால் நிறைந்த
பொற் கலசங்ளையும் அவர்கள் பிடித்திருந்த
னர். அத்தூபவர்க்கங்கள் நிறைந்த பொற்
கலசங்கள் தேவனுடைய பரிசுத்தமான மக்க
ளின் பிராத்தனைகளைக் குறிக்கின்றன. 9அவ
ர்கள் அந்த ஆட்டுக் குட்டிக்காகப் புதியபாட
லைப் பாடினர்.

“தோல் சுருளை எடுக்க நீரே தகுதியுள்ள
வர். அதன் முத்திரைகளையும் நீரே
உடைக்கத்தக்கவர். ஏனென்றால் நீர்
கொல்லப்பட்டவர் உம் குருதியால்
தேவனுக்காக மக்களை மீட்டுக்கொண்ட
வர். அவர்கள் பல்வேறு இனத்தை,
மொழியை நாட்டை, குழுவைச் சேர்ந்த
வர்கள்.

10 நீர் நம் தேவனுக்காக ஒரு இராஜ்யத்தை
யும், ஆசாரியர்களையும் உருவாக்
கினீர். அவர்கள் இந்த உலகத்தை
ஆளுவார்கள்.”

---

**சுருள்** நீளமான சுருட்டப்பட்ட தாள் அல்லது தோல். எழுதப்பயன்படுவது.

11பிறகு நான் பல தூதர்களைப் பார்த்தேன்.
அவர்களது குரலைக் கேட்டேன். அத்தூதர்கள்
சிம்மாசனத்தை சூழ்ந்து இருந்தனர். அவர்கள்
ஜீவன்களையும், முதியவர்களையும் சூழ்ந்து
இருந்தனர். அவர்களின் எண்ணிக்கை ஆயி
ரம் ஆயிரமாகவும் பத்தாயிரம் பத்தாயிரமாக
வும் இருந்தது. 12அந்தத் தூதர்கள் உரத்த குர
லில் கீழ்க்கண்டவாறு பாடினார்கள்.

"கொல்லப்பட்ட இந்த ஆட்டுக்குட்டியான
வரே வல்லமையை, செல்வத்தை,
ஞானத்தை, பலத்தை, புகழை, மகி
மையை, பாராட்டுகளைப் பெற்றுக்
கொள்ளத் தகுதியானவர்."

13பிறகு பரலோகத்தில் உள்ள அத்தனை
உயிருள்ள ஜீவன்களும், பூமியிலும் கடலிலும்
பூமிக்கு அடியிலுள்ள உலகிலுமுள்ள அத்
தனை உயிருள்ள ஜீவன்களும் கீழ்க்கண்ட
வாறு சொல்வதைக் கேட்டேன்.

"சிம்மாசனத்தின்மேல் வீற்றிருக்கிறவ
ருக்கும் ஆட்டுக்குட்டியானவருக்கும்
பாராட்டுகளும், கனமும், புகழும் அதி
காரமும் சதா காலங்களிலும் உண்டா
கட்டும்."

14இதைக் கேட்டு அந்த நான்கு உயிருள்ள
ஜீவன்களும் "ஆமென்" என்று சொல்லின.
மூப்பர்களும் பணிந்து வணங்கினர்.

6 பின்பு ஏழு முத்திரைகளுள் முதல் முத்தி
ரையை ஆட்டுக்குட்டியானவர் உடைப்
பதைக் கண்டேன். அப்போது நான்கு உயி
ருள்ள ஜீவன்களுள் ஒன்று இடிபோன்ற குர
லில் பேசத் தொடங்கு வதைக் கேட்டேன்.
"வா!" என்று சொன்னது அக்குரல். 2நான்
பார்த்தபோது எனக்கு முன்பாக ஒரு
வெள்ளைக் குதிரை இருப்பதைப் பார்த்தேன்.
அக்குதிரையில் சவாரி செய்தவன் ஒரு
வில்லைப் பிடித்திருந்தான். அவனுக்கு ஒரு
கிரீடம் கொடுக்கப்பட்டது. அவன் பகைவர்
களை வீழ்த்துவதற்காகச் சென்றான். வெல்
வதற்காகவே புறப்பட்டுப் போனான்.

3ஆட்டுக்குட்டியானவர் இரண்டாம் முத்தி
ரையை உடைத்தார். அப்போது இரண்டாவது
உயிருள்ள ஜீவன் "வா!" என்று சொல்வதைக்
கேட்டேன். 4பிறகு இன்னொரு குதிரை வெளி
யே வந்தது. அது தீ போன்ற சிவப்பு வண்ணம்
கொண்டது. அதன்மேல் இருந்தவனுக்கு உல
கத்தில் உள்ள சமாதானத்தை எடுத்துவிடவும்,
பூமியில் உள்ள மக்கள் ஒருவரை ஒருவர்
கொல்வதற்குமான அதிகாரமும் கொடுக்கப்பட்
டது. அத்துடன் அவனுக்கு ஒரு பெரிய வாளும்
தரப்பட்டது.

5ஆட்டுக் குட்டியானவர் மூன்றாவது முத்தி
ரையை உடைத்தார். அப்போது மூன்றாவது
உயிருள்ள ஜீவன், "வா!" என்று என்னிடம்
கூறியதைக் கேட்டேன். நான் பார்த்தபோது
ஒரு கறுப்புக் குதிரை வெளியே வந்தது.
அதன்மேல் இருந்தவன் தராசு ஒன்றைக்
கையில் வைத்திருந்தான். 6அப்பொழுது ஒரு
வகை சப்தத்தைக் கேட்டேன். அச்சப்தம்
நான்கு உயிருள்ள ஜீவன்களின் மத்தியிலி
ருந்தே வந்தது. "ஒரு நாள் கூலியாக ஒரு
படி கோதுமை. ஒருநாள் கூலியாக மூன்றுபடி
வாற்கோதுமை எண்ணெயையும், திராட்சை
இரசத்தையும் வீணாக்காதே" என்று கூறிற்று.

7ஆட்டுக்குட்டியானவர் நான்காம் முத்தி
ரையை உடைத்தார். அப்போது நான்காம்
உயிருள்ள ஜீவன் "வா!" என்று அழைத்தது.
8நான் பார்த்தபோது மங்கிய நிறமுள்ள ஒரு
குதிரை வந்தது. இக்குதிரையை ஓட்டி
வந்தவனுக்கு "மரணம்" என்று பெயர்.
மேலும் அவனுக்குப் பின்னால் "பாதாளம்"
நெருக்கமாய் வந்து கொண்டிருந்தது. உலகில்
உள்ள கால் பங்கு மக்களின்மேல் அவனுக்கு
அதிகாரம் கொடுக்கப்பட்டது. வாளாலும்,
பஞ்சத்தாலும் நோயாலும் காட்டு மிருகங்களா
லும் மக்களைக் கொல்லும் அதிகாரத்தை
அவன் பெற்றான்.

9ஆட்டுக்குட்டியானவர் ஐந்தாவது முத்திரை
யையும் உடைத்தார். அப்பொழுது பலிபீடத்
தின் கீழே தம் விசுவாசத்திற்காகவும், (கிறிஸ்து
பற்றிய நற்செய்திகளைக் குறித்து) சாட்சி
சொன்னதற்காகவும் கொல்லப்பட்டவர்களின்
ஆன்மாக்களை நான் பார்த்தேன். 10அந்த ஆன்
மாக்கள் உரத்த குரலில் சத்தமிட்டன. "பரிசுத்த
மும் உண்மையும் உள்ள தேவனே! எங்களைக்
கொன்றதற்காக உலகில் வாழ்ந்து கொண்டி
ருக்கிற மக்களை நியாயம் தீர்த்துத் தண்டிக்க
எவ்வளவு காலம் ஆகும்?" என்றன. 11பிறகு
ஒவ்வொரு ஆன்மாவுக்கும் வெள்ளை அங்
கிகள் கொடுக்கப்பட்டன. பிறகு சிறிது நேரத்
திற்குக் காத்திருக்கும்படி அவற்றிற்குச் சொல்
லப்பட்டது. கொல்லப்படப்போகிற அவர்
களைப் போன்ற கிறிஸ்துவின் சேவையி
லுள்ள எல்லா சக ஊழியர்களும் உண்மை
யில் கொல்லப்படுவதுவரை அவை காத்தி
ருக்க வேண்டும்.

12ஆட்டுக்குட்டியானவர் ஆறாவது முத்தி
ரையை உடைப்பதைக் கவனித்தேன். அப்
போது பெரிய நில நடுக்கம் ஏற்பட்டது. சூரி
யன் இருண்டது. (இறந்தவனுக்காக) துக்கம்
கொண்டாடுகிறவன் அணிகிற ஆடைகள்
போல அது கருத்தது. நிலவு இரத்தம்போல
சிவப்பானது. 13வானத்து நட்சத்திரங்கள்,
புயல் காலத்தில் அத்தி மரத்திலிருந்து அத்திப்
பழங்கள் உதிருவதுபோன்று பூமியில் உதிர்ந்
தன. 14வானம் இரண்டாகப் பிளந்தது. அது
தோல் சுருளைப் போல சுருண்டு கொண்டது!
மலைகளும், தீவுகளும் தங்களது இடத்தை
விட்டு நகர்ந்தன. என்று கூறினார்கள்.

15மக்கள் குகைகளிலும், மலைப்புறங்களி
லும் ஒளிந்து கொண்டனர். அவர்களுடன் அர
சர்களும், ஆள்வோர்களும், அதிகாரிகளும்,
செல்வந்தர்களும் இருந்தனர். அடிமைகளும்

சுதந்தரமானவர்களும் அவர்களோடு ஒளிந்து
கொண்டனர். [16]மக்கள் மலைகளையும் பாறை
களையும் பார்த்து "எங்கள்மேல் விழுங்கள்.
சிம்மாசனத்தில் இருப்பவரின் பார்வையில்
இருந்தும் ஆட்டுக்குட்டியானவரின் கோபத்
திலிருந்தும் எங்களை மறைத்து விடுங்கள்.
[17]அவர்கள் தம் கோபத்தைக் காட்டுகிற தருண
மாகிய மாபெரும் நாள் வந்துவிட்டது. அதனை
எதிர்த்து ஒருவராலும் நிற்கமுடியாது."

### 1,44,000 இஸ்ரவேல் மக்கள்

7 அதற்குப் பிறகு நான்கு தேவதூதர்கள்
பூமியின் நான்கு மூலைகளிலும் நிற்பதைக்
கண்டேன். நான்கு தூதர்களும் நான்கு காற்று
களையும் பிடித்து வைத்திருந்தனர். பூமியின்
மீதும் கடலின் மீதும் மரத்தின் மீதும் காற்று
அடியாதபடிக்குக் கட்டுப்படுத்தினர். [2]பிறகு
கிழக்குத் திசையில் இருந்து ஒரு தேவதூதன்
வருவதைக் கண்டேன். அவனிடம் ஜீவனுள்ள
தேவனுடைய முத்திரைக்கோல் இருந்தது. அந்
தத் தூதன் உரத்த குரலில் ஏனைய நான்கு
தூதர்களையும் அழைத்தான். அந்த நான்கு
தூதர்களுக்கும் தேவன் பூமியையும் கடலையும்
சேதப்படுத்துவதற்கு உரிய அதிகாரத்தைக்
கொடுத்திருந்தார். [3]அவர்களிடம் அந்தத் தேவ
தூதன், "நாம் நமது தேவனின் தொண்டர்க
ளுக்கு அவர்கள் நெற்றியில் அடையாளக்குறி
இடவேண்டும். அதுவரை பூமியையும் கடலை
யும் மரங்க ளையும் சேதப்படுத்தாமல் இருங்
கள்" என்று கூறினான். [4]பிறகு முத்திரையிடப்
பட்டவர்களின் எண்ணிக்கையைக் கேடடேன்.
இஸ்ரவேலின் பல்வேறு குடும்பக் குழுக்களி
லிருந்து அவர்கள் 1,44,000 பேர் இருந்தார்கள்.

5 யூதா குடும்பத்திலிருந்து
முத்திரையிடப்பட்டவர்கள் 12,000
ரூபன் குடும்பத்திலிருந்து
முத்திரையிடப்பட்டவர்கள் 12,000
காத் குடும்பத்திலிருந்து
முத்திரையிடப்பட்டவர்கள் 12,000
6 ஆசேர் குடும்பத்திலிருந்து
முத்திரையிடப்பட்டவர்கள் 12,000
நப்தலி குடும்பத்திலிருந்து
முத்திரையிடப்பட்டவர்கள் 12,000
மனாசே குடும்பத்திலிருந்து
முத்திரையிடப்பட்டவர்கள் 12,000
7 சிமியோன் குடும்பத்திலிருந்து
முத்திரையிடப்பட்டவர்கள் 12,000
லேவி குடும்பத்திலிருந்து
முத்திரையிடப்பட்டவர்கள் 12,000
இசக்கார் குடும்பத்திலிருந்து
முத்திரையிடப்பட்டவர்கள் 12,000
8 செபுலோன் குடும்பத்திலிருந்து
முத்திரையிடப்பட்டவர்கள் 12,000
யோசேப்பு குடும்பத்திலிருந்து
முத்திரையிடப்பட்டவர்கள் 12,000
பென்யமீன் குடும்பத்திலிருந்து
முத்திரையிடப்பட்டவர்கள் 12,000

### பெருங்கூட்டம்

[9]பிறகு நான் பார்த்தபோது மக்கள் கூட்டம்
கூட்டமாக இருந்தனர். ஒரு மனிதனால் எண்ண
முடியாத அளவுக்கு அவர்கள் அதிக எண்
ணிக்கை உடையவர்களாக இருந்தார்கள்.
அவர்கள் சகல நாடுகளிலும், பழங்குடிகளி
லும், இனங்களிலும், மொழிகளிலும், இருந்து
வந்தவர்கள். அவர்கள் சிம்மாசனத்தின் முன்
னும், ஆட்டுக்குட்டியானவர் முன்னும் நின்ற
னர். அவர்கள் வெள்ளை அங்கிகளை
அணிந்து தம் கைகளில் குருத்தோலைகளைப்
பிடித்திருந்தனர். [10]அவர்கள் உரத்த குரலில்
"சிம்மாசனத்தின்மேல் வீற்றிருக்கும் நம் தேவ
னுக்கும், ஆட்டுக் குட்டியானவருக்கும் வெற்றி
உரியது!" என்று குரல் எழுப்பினர். [11]அங்கே
நான்கு உயிருள்ள ஜீவன்களும் மூப்பர்களும்
இருந்தனர். அவர்களையும் சிம்மாசனத்தையும்
சுற்றி தேவதூதர்கள் நின்றனர். அவர்கள் தலை
குனிந்து பணிவுடன் வழிபட்டார்கள். [12]அவர்
கள், "ஆமென்! எங்கள் தேவனுக்குத் துதியும்,
மகிமையும், ஞானமும், ஸ்தோத்திரமும், கன
மும், வல்லமையும், பலமும் எல்லாக் காலங்
களிலும் உண்டாவதாக! ஆமென்" என்றனர்.

[13]பிறகு மூப்பர்களில் ஒருவர் என்னிடம்,
"வெள்ளை அங்கி அணிந்த இவர்கள் யார்?
எங்கிருந்து இவர்கள் வந்தனர்?" என்று கேட்
டார்.

[14]அதற்கு நான், "ஐயா, அது உங்களுக்கே
தெரியும்" என்றேன்.
அந்த மூப்பரோ, "இவர்கள் மிகுந்த கஷ்டத்
தில் இருந்து வந்திருக்கிறார்கள். இவர்கள்
தங்கள் ஆடைகளை ஆட்டுக் குட்டியானவரின்
இரத்தத்தில் தோய்த்து* உடுத்தியவர்கள்.
இப்பொழுது இவர்கள் வெண்மையாகவும்
தூய்மையாகவும் இருக்கின்றனர். [15]"எனவே
இப்பொழுது இவர்கள் சிம்மாசனத்தில் உள்ள
தேவனின் முன்னால் நிற்கின்றனர். அவர்கள்
இரவும் பகலும் அவருடைய ஆலயத்தில் தேவ
னை வழிபடுகின்றனர். சிம்மாசனத்தில்
வீற்றிருக்கும் தேவன் அவர்களைக் காப்பாற்
றுவார். [16]இவர்களுக்கு ஒருபோதும் மீண்டும்
பசி வருவதில்லை. இவர்களுக்கு ஒருபோதும்
தாகமும் எடுப்பதில்லை. சூரியன் இவர்க
ளைச் சுடுவதில்லை. வெப்பமும் இவர்களைத்
தாக்குவதில்லை. [17]சிம்மாசனத்தின் நடுவில்
உள்ள ஆட்டுக்குட்டியானவரே இவர்களின்
மேய்ப்பராகி இவர்கள் அனைவரையும் ஜீவ
தண்ணீருள்ள ஊற்றுக்கு அழைத்துச் செல்
வார். இவர்களின் கண்களில் இருந்து பெருகும்
ஒவ்வொரு கண்ணீர்த் துளியையும் தேவன்
துடைத்து விடுவார்."

---

**தோய்த்து** அவர்கள் இயேசுவில் விசுவாசம் உடை
யவர்கள். எனவே அவர்களின் பாவங்கள் மன்னிக்
கப்பட்டன.

### ஏழாவது முத்திரை

8 ஆட்டுக் குட்டியானவர் ஏழாவது முத்தி
ரையை உடைத்தார். அப்போது ஏறக்கு
றைய அரை மணி நேரத்துக்குப் பரலோகம்
முழுவதும் அமைதி ஏற்பட்டது. 2தேவனுக்கு
முன்னர் ஏழு தேவதூதர்கள் நின்றுகொண்
டிருப்பதைக் கண்டேன். அவர்களுக்கு ஏழு
எக்காளங்கள் கொடுக்கப்பட்டன.

3இன்னொரு தூதன் வந்து பலிபீடத்தின்
அருகில் நின்றான். அவன் தூபம் காட்டும்
பொற்கலசத்தைப் பிடித்திருந்தான். தேவனு
டைய பரிசுத்த மக்களின் பிரார்த்தனைக
ளோடு பொற்பீடத்தின் மீது எரிக்கும் பொரு
ட்டு அவனிடம் மிகுதியான தூபவர்க்கம்
கொடுக்கப்பட்டது. 4தூதனின் கையில் உள்ள
கலசத்தில் இருந்து தூபப் புகையானது தேவ
னிடம் சென்றது. அது தேவனுடைய மக்களது
பிரார்த்தனைகளோடும் சென்றது. 5பின்பு
அந்த தூதன் தூபகலசத்தை எடுத்தான். பின்பு
அதைப் பலிபீடத்து நெருப்பால் நிரப்பினான்.
பின் அதனைப் பூமியில் வீசியெறிந்தான்.
அதன் பிறகு அங்கே மின்னலும், இடியும்,
வேறு சப்தங்களும், நிலநடுக்கமும் ஏற்பட்டன.

### ஏழு தூதர்களும் தம் எக்காளங்களை ஊதுதல்

6பிறகு ஏழு தூதர்களும் தம் ஏழு எக்காளங்
களையும் ஊதத் தயாரானார்கள். 7முதல்
தூதன் தன் எக்காளத்தை ஊதினான். அப்
போது இரத்தம் கலந்த கல் மழையும் நெருப்பும்
உண்டாகி பூமியிலே விழுந்தன. இதனால்
மூன்றில் ஒரு பங்கு பூமியும், மூன்றில் ஒரு
பங்கு மரங்களும் எரிந்துபோயின. பசும்புற்க
ளெல்லாம் கரிந்து போயின.

8இரண்டாம் தூதன் தன் எக்காளத்தை ஊதி
னான். அதனால் நெருப்பு பற்றி எரிகின்ற
மலை போன்ற ஒன்று கடலில் எறியப்பட்டது.
எனவே கடலின் மூன்றில் ஒரு பகுதி இரத்தமா
யிற்று. 9கடலில் உயிர் வாழ்கின்ற உயிர்களில்
மூன்றில் ஒரு பகுதி செத்துப்போனது. கப்பல்க
ளில் மூன்றில் ஒரு பகுதி அழிந்துபோயிற்று.
10மூன்றாம் தூதன் தன் எக்காளத்தை ஊதி
னான். பிறகு வானில் உள்ள ஒரு பெரிய
நட்சத்திரம் தீப்பந்தம்போல எரிந்து விழுந்தது.
அது ஆறுகளில் மூன்றில் ஒரு பகுதி மீதும்
நீரூற்றுகளின் மீதும் விழுந்தது. 11அந்த நட்சத்
திரத்தின் பெயர் எட்டி.* அதனால் தண்ணீரில்
மூன்றில் ஒரு பகுதி எட்டியைப் போன்று
கசப்பாயிற்று. அவற்றைக் குடித்த ஏராளமான
மக்கள் இறந்துபோயினர்.

12நான்காம் தூதன் தன் எக்காளத்தை
எடுத்து ஊதினான். அதனால் மூன்றில் ஒரு
பகுதியான சூரியனும், சந்திரனும், நட்சத்திரங்
களும் சேதப்பட்டன. அவற்றில் மூன்றில் ஒரு
பங்கு இருண்டது. இரவிலும், பகலிலும் மூன்
றில் ஒரு பாகம் வெளிச்சம் இல்லாமல்
போனது.

13நான் கவனித்துக் கொண்டிருக்கும் போது
வானில் பறந்து கொண்டிருந்த ஒரு கழுகின்
சத்தத்தைக் கேட்டேன். அது உரத்த குரலில்,
"ஆபத்து ஆபத்து, பூமியில் உயிருடன் வாழ்ப
வர்களுக்கு ஆபத்து. எஞ்சிய மற்ற மூன்று
தேவ தூதர்கள் தம் எக்காளங்களை ஊதும்
போது ஆபத்து நேரும்" என்றது.

9 ஐந்தாம் தூதன் தன் எக்காளத்தை ஊதி
னான். அப்போது ஒரு நட்சத்திரம் ஆகாயத்
திலிருந்து மண்ணில் விழுந்ததைக் கண்டேன்.
அதற்குப் பாதாள உலகத்துக்குச் செல்லும்
வழியின் திறவுகோல் கொடுக்கப்பட்டது. 2அந்த
நட்சத்திரம் பாதாள உலகத்தின் வழியைத்
திறந்தது. பெரிய சூளையில் இருந்து புகை
வருவது போன்று பாதாளத்தில் இருந்து புகை
வந்தது. அப்புகையால் சூரியனும் ஆகாயமும்
இருண்டது. 3அப்புகையில் இருந்து வெட்டுக்கி
ளிகள் புறப்பட்டுப் பூமியின் மேல் பறந்து
வந்தன. அவற்றுக்குத் தேளுக்கு ஒப்பான வல்
லமை கொடுக்கப்பட்டது. 4பூமியில் உள்ள புல்
லையோ செடி கொடிகளையோ, மரத்தையோ
சேதமாக்ககூடாது என்று வெட்டுக்கிளிக
ளுக்கு ஆணை இருந்தது. தேவனுடைய முத்தி
ரையைத் தம் நெற்றியில் தாங்காத மனிதர்
களை மாத்திரம் சேதப்படுத்த அவ்வெட்டுக்
கிளிகளுக்கு உத்தரவு இருந்தது. 5மக்களுக்கு
ஐந்து மாதங்கள் தொந்தரவு தருமாறு வெட்டுக்
கிளிகளுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருந்
தது. அவற்றுக்கு மனிதரைக் கொல்லும் அதி
காரம் கொடுக்கப்படவில்லை. மக்களுக்கு ஏற்
பட்ட வலியானது தேளால் கொட்டப்பட்ட மக்
கள் பெறும் வலிபோன்றிருந்தது. 6அத்தகைய
நாட்களில் மக்கள் செத்துப் போவதற்குரிய
வழியைத் தேடுவார்கள். ஆனால் அவர்களால்
முடியாது. அவர்கள் சாக விரும்பினாலும்
சாவானது அவர்களிடமிருந்து ஒளிந்து கொள்
ளும்.

7வெட்டுக்கிளிகள், போருக்குத் தயார் செய்
யப்பட்ட குதிரைகளைப்போல இருந்தன.
அவற்றின் தலைகளின் மேல் பொன் மயமான
கிரீடங்கள் போன்றவை இருந்தன. அவை
மனித முகங்களையும், 8பெண்களின் கூந்த
லைப் போல நீண்ட தலை மயிரையும், சிங்கத்
தினுடையதைப் போன்ற பற்களையும் கொண்
டிருந்தன. 9அவற்றின் மார்புகள் இரும்புக்
கவசங்களைப் போல இருந்தன. அவற்றின்
சிறகுகளிலிருந்து புறப்படும் ஓசையானது
யுத்தகளத்தில் நுழையும் குதிரைகள் பூட்டிய
ரதங்களின் இரைச்சலைப்போல இருந்தது.
10அந்த வெட்டுக் கிளிகளுக்குத் தேள்களுக்
கிருப்பதைப்போன்ற கொடுக்குகள் இருந்தன.
ஐந்து மாத காலத்து வலியுண்டாகக் காரண
மாக இருக்கும் சக்தி, அவற்றின் வால்களில்
இருந்தது, 11பாதாளத்தின் தூதனை அவை
அரசனாகக் கொண்டிருந்தன. அவனுடைய
பெயரானது எபிரேய மொழியில் அபெத்

---

**எட்டி** ஒரு நட்சத்திரத்தின் பெயர். இது துன்பத்திற்கு அடையாளம் ஆயிற்று.

தோன்* (அழிக்கிறவன்) என்று அழைக்கப்
படுகிறது. கிரேக்க மொழியில் அவன் பெயர்
அப்பொல்லியோன் என்று அழைக்கப்படுகி
றது.
[12]முதலாம் ஆபத்து கடந்துபோயிற்று. ஆனா
லும் எச்சரிக்கையாயிருங்கள். இன்னும்
இரண்டு ஆபத்துக்கள் வர இருக்கின்றன.
[13]ஆறாவது தேவதூதன் தன் எக்காளத்தை
ஊதினான். அப்போது தேவனுக்கு முன்பாக
இருந்த பொற்பீடத்தின் நான்கு கொம்புகளிலு
மிருந்து ஒரு சத்தம் வருவதைக் கேட்டேன்.
[14]பிறகு அச்சத்தம் அந்த ஆறாம் தூதனிடம்
(எக்காளத்தைப் பிடித்துக் கொண்டிருந்தவனி
டம்) "ஐபிராத் என்னும் நதிக்கரையில் கட்டப்
பட்டிருக்கிற நான்கு தூதர்களையும் அவிழ்த்து
விடு" என்று சொல்லக்கேட்டேன். [15]எனவே,
அந்த ஆண்டுக்கும், அந்த மாதத்துக்கும், நாளுக்
கும், மணிக்கும் ஆயத்தமாக்கப்பட்டிருந்த அந்த
நான்கு தூதர்களும் விடுவிக்கப்பட்டார்கள்.
உலகில் உள்ள மக்களில் மூன்றில் ஒரு பங்கி
னரைக் கொல்லும்படிக்கு அவர்கள் விடுதலை
செய்யப்பட்டார்கள். [16]அவர்களது படையில்
குதிரைகளின் எண்ணிக்கை எவ்வளவு
என்று நான் கேள்விப்பட்டேன். அவை இரு
பது கோடி ஆகும்.
[17]குதிரைகளையும் அதன்மேல் வீற்றிருந்த
வர்களையும் நான் எனது தரிசனத்தில் கண்
டேன். அவர்கள் நெருப்பைப்போல சிவந்த
நிறமும், நீல நிறமும், கந்தகம் போன்ற மஞ்சள்
நிறமுமான மார்புக் கவசங்களை அணிந்திருந்
தனர். அக் குதிரைகளின் தலைகள் சிங்கத்தின்
தலைகளைப் போன்று விளங்கின. அக்கு
திரைகளின் வாயில் இருந்து நெருப்பும், புகை
யும், கந்தகமும் வெளிவந்தன. [18]குதிரையின்
வாயில் இருந்து வெளிவந்த புகையாலும்
நெருப்பாலும், கந்தகத்தாலும் உலகில் உள்ள
மூன்றில் ஒரு பங்கு மக்கள் கொல்லப்பட்டார்
கள். [19]அக்குதிரைகளின் பலமானது அவற்
றின் வாயிலும் வாலிலும் இருந்தது. அவற்
றின் வால்கள் பாம்புகளைப் போன்று இருந்
தது. அவற்றில் மனிதரைக் கடிக்கும் தலைக
ளும் இருந்தன.
[20]பிறகு எஞ்சிய மனிதர்கள் (இத்தீய சக்திக
ளால் கொல்லப்படாதவர்கள்) கைகளால்
அவர்கள் செய்த விக்கிரகங்கள் பற்றி தம்
மனதை மாற்றிக்கொள்ளவில்லை. பொன்,
வெள்ளி, செம்பு, கல், மரம் போன்றவற்றால்
செய்யப்பட்ட, பார்க்கவோ, கேட்கவோ, நடக்
கவோ செய்யாத பேய்களையும் விக்கிரகங்க
ளையும் வழிபடுவதனை அவர்கள் நிறுத்த
வில்லை. (அவ்வுருவங்கள் பார்க்கவோ கேட்
கவோ நடக்கவோ முடியாதவைகள்). [21]இம்மக்
கள் தம் இதயத்தையும், வாழ்வையும் மாற்றிக்
கொள்ளவில்லை. இவர்கள் மற்றவர்களைக்
கொல்லும் வழக்கத்தையும் விடவில்லை. தம்
தீயமந்திரங்கள், பாலியல் பாவங்கள், திருட்டு
வேலைகள் போன்றவற்றையும் விடவில்லை.

### தேவதூதனும் ஒரு சிறு தோல்சுருளும்

10 பிறகு நான் பரலோகத்தில் இருந்து
இறங்கி வந்த ஒரு பலமுள்ள தேவதூத
னைக் கண்டேன். அவனை மேகங்கள் ஆடை
யைப் போல சுற்றியிருந்தன. அவனது தலை
யைச்சுற்றி வானவில் இருந்தது. அவனது
முகம் சூரியனைப் போன்று இருந்தது. அவ
னது கால்களோ நெருப்புத் தூண்களைப்
போன்று விளங்கின. [2]அந்தத் தூதன் தன்
கையில் சிறு தோல்சுருள் ஒன்றை வைத்திருந்
தான். அத்தோல்சுருள் திறந்திருந்தது. அத்
தூதன் தன் வலதுகாலைக் கடலிலும் இடது
காலைப் பூமியிலும் வைத்தான். [3]சிங்கம்
கர்ஜிப்பதைப்போன்று அத்தூதன் சத்தமிட்
டான். பின் ஏழு இடிகளும் சத்தமாக முழங்கின.
[4]அந்த ஏழு இடிகளும் சொல்லச் சொல்ல
நான் எழுதத் தொடங்கினேன். ஆனால் அப்
போது பரலோகத்தில் இருந்து ஒரு குரல்
கேட்டது. அது "ஏழு இடிகளும் சொல்வதை
நீ எழுதாதே. அவற்றை இரகசியமாய் மூடி
வை" என்று சொன்னது.
[5]கடலின் மேலும் பூமியின் மேலும் நின்று
கொண்டிருந்த தேவதூதன் தன் கையை பர
லோகத்துக்கு நேராக உயர்த்தியதைப் பார்த்
தேன். [6]எல்லாக் காலங்களிலும் ஜீவிக்கிற
தேவனின் வல்லமையால் அத்தூதன் ஆணை
யிட்டான். தேவனே வானத்தையும் அதில் உள்
ளவற்றையும் படைத்தவர். அவரே பூமியையும்
அதில் உள்ள அனைத்தையும் படைத்தவர்.
அவரே கடலையும் அதில் உள்ளவற்றையும்
படைத்தவர். அந்தத் தூதன், "இனி தாமதம்
இருக்காது" [7]ஏழாம் தூதன் எக்காளத்தை
ஊதத் தயாராக இருக்கும் நாட்களில் தேவனு
டைய இரகசியத் திட்டம் நிறைவேறும். தேவன்
தன் ஊழியக்காரரிடமும், தீர்க்கதரிசிகளிடமும்
கூறிய நற்செய்தி தான் அத்திட்டம்" என்றான்.
[8]மீண்டும் அதே குரலை நான் பரலோகத்
திலிருந்து கேட்டேன். அக்குரல் என்னிடம்,
"போ, அத்தூதன் கையில் உள்ள திறந்திருக்
கும் தோல்சுருளை வாங்கிக் கொள். கடலிலும்,
பூமியிலும் நிற்கிற தூதனே இவன்" என்றது.
[9]எனவே, நான் அத்தூதனிடம் சென்று அச்
சிறு தோல்சுருளைத் தருமாறு கேட்டேன்.
அத்தூதன் என்னிடம் "இத்தோல் சுருளை
எடுத்துத் தின்றுவிடு. இது உன் வயிற்றில்
கசப்பாக இருக்கும். ஆனால் உன் வாயில்
இது தேனைப்போன்று இனிக்கும்", என்றான்.
[10]அதனால் தூதனின் கையில் இருந்து அச்சிறு
தோல் சுருளை நான் வாங்கினேன். அதனை
நான் தின்றேன். அது என் வாயில் தேனைப்
போன்று இனித்தது. ஆனால் அது என் வயிற்
றுக்குப் போனதும் கசந்தது. [11]அப்போது
அவன் என்னிடம் "நீ மறுபடியும் பல்வேறு
இனங்கள், நாடுகள், மொழிகள், அரசர்கள்

---

**அபெத்தோன்** பழைய ஏற்பாட்டில் இப்பெயர் மரணத்
திற்குரிய இடத்தை குறித்தது யோபு. 26:6;
சங்கீதம் 88:11.

ஆகியோரைப்பற்றித் தீர்க்கதரிசனம் சொல்ல
வேண்டும்” என்றான்.

## இரண்டு சாட்சிகள்

11 பிறகு கைக்கோல் போன்ற ஒரு அளவு
கோல் என்னிடம் கொடுக்கப்பட்டது.
அப்போது தேவதூதன் நின்று என்னிடம்,
“போ, போய் தேவனுடைய ஆலயத்தையும்,
பலிபீடத்தையும் அளந்து பார், அதற்குள் வழி
பட்டுக் கொண்டிருப்பவர்களையும் அளந்து
பார்.” 2ஆலயத்திற்கு வெளியே இருக்கிற
பிரகாரம் யூதர் அல்லாதவர்களுக்காகக்
கொடுக்கப்பட்டிருக்கிறது. அதை அளக்காதே.
அந்த மக்கள் பரிசுத்த நகரத்தில் 42 மாதங்கள்
நடமாடுவார்கள். 3நான் எனது இரண்டு சாட்சி
களுக்கும் 1260 நாட்களின் அளவிற்குத் தீர்க்க
தரிசனம் சொல்ல அதிகாரம் கொடுப்பேன்.
அவர்கள் முரட்டுத் துணியாலான ஆடையை
அணிந்திருப்பார்கள்” என்றான். 4இரண்டு
ஒலிவ மரங்களும் பூமியின் கர்த்தருக்கு முன்னி
லையில் இருக்கிற இரு விளக்குத்தண்டுகளும்
இந்த இரு சாட்சிகளாகும். 5எவராவது சாட்சி
களைச் சேதப்படுத்த முயற்சித்தால், சாட்சி
களின் வாயில் இருந்து நெருப்பு வந்து எதிரி
களை அழித்துவிடும். எவரொருவர் சாட்சிக
ளைச் சேதப்படுத்த முயன்றாலும் அவர்கள்
இதுபோலவே அழிக்கப்படுவர். 6அவர்கள்
தீர்க்கதரிசனம் சொல்லி வருகிற நாள்களில்
மழை பெய்துவிடாதபடி வானத்தை அடைக்க
அவர்களுக்கு வல்லமை உண்டு. அவர்க
ளுக்குத் தண்ணீரை இரத்தம் ஆக்குகிற வல்ல
மையும் உண்டு. விரும்பும்போதெல்லாம்
அடிக்கடி பூமியைச் சகலவிதமான வாதை
களாலும் வாதிக்கவும் அவர்களுக்கு எல்லா
விதமான அதிகாரமும் உண்டு.

7அந்த இரு சாட்சிகளும் தங்களது செய்தி
களைச் சொல்லி முடித்தபின், பாதாளத்தில்
இருந்து வெளிவருகிற மிருகம் அவர்களைத்
எதிர்த்து சண்டையிடும். அம்மிருகம் அவர்க
ளைத் தோற்கடித்து அவர்களைக் கொல்லும்.
8பிறகு ஞானார்த்தமாக சோதோம் என்றும்
எகிப்து என்றும் அழைக்கப்படுகிற அந்த
மகா நகரத்தின் தெருக்களில் அச்சாட்சிகளின்
சடலங்கள் கிடக்கும். கர்த்தர் சிலுவையில்
அறையப்பட்டு, மரணமடைந்த நகரமும் இது
தான். 9ஒவ்வொரு இனத்திலும், பழங்குடி
யிலும் மொழியிலும், நாட்டிலும் உள்ள
மக்கள், மூன்றரை நாள்களுக்கு நகர வீதிகளில்
அப்பிணங்களைக் காண்பார்கள். அவற்றை
அடக்கம் செய்ய அவர்கள் மறுப்பர். 10அந்த
இருவரும் இறந்துபோனதற்காக, பூமியில்
உள்ள அனைத்து மக்களும் மகிழ்ச்சி அடை
வர். அவர்கள் விருந்து நடத்தி தமக்குள் பரிசு
களை அளிப்பர். அச்சாட்சிகள் உலகில் உள்ள
மக்களுக்கு மிகுதியாகத் துன்பம் அளித்ததால்
தான் அம்மக்கள் இவ்வாறு நடந்துகொள்
வார்கள்.

11ஆனால் மூன்றரை நாட்களுக்குப்பின்,
அந்த இருவரின் சடலங்களுக்கும் தேவனிட
மிருந்து வெளிப்பட்ட ஓர் உயிர்மூச்சு ஜீவ
னைக் கொடுத்தது. அவர்கள் எழுந்து நின்றார்
கள். இதைப் பார்த்தவர்கள் அச்சத்தால்
நடுங்கினர். 12பின்னர் அவ்விரு சாட்சிகளும்
பரலோகத்தில் இருந்து வந்த ஒரு குரலைக்
கேட்டனர். அது “இங்கே வாருங்கள்” என்று
அழைத்தது. அவர்கள் மேகங்களின் வழி
யாகப் பரலோகத்துக்குப் போனார்கள். அவர்
கள் போவதை அவர்களுடைய பகைவர்கள்
கவனித்தனர்.

13அதே நேரத்தில் ஒரு பெரிய நில நடுக்கம்
ஏற்பட்டது. அந்நகரின் பத்தில் ஒரு பகுதி
அழிந்துபோனது. அந்நில நடுக்கத்தால் ஏழா
யிரம் மக்கள் இறந்து போயினர். இறந்து
போகாத மற்றவர்கள் மிகவும் பயந்து போனா
ர்கள். அவர்கள் பரலோகத்தில் உள்ள தேவ
னை மகிமைப்படுத்தினர்.

14இரண்டாவது பேராபத்தும் நடந்து முடிந்
தது. மூன்றாம் பேராபத்து விரைவில் வர
இருக்கிறது.

## ஏழாவது எக்காளம்

15ஏழாவது தேவதூதன் தன் எக்காளத்தை
ஊதினான். அப்போது பரலோகத்தில் உரத்த
சத்தங்கள் கேட்டன. அவை:

“உலகத்தின் இராஜ்யம் இப்போது
கர்த்தருக்கும் அவருடைய கிறிஸ்துவுக்
கும் சொந்தமாயிற்று. அவர் எல்லாக்
காலங்களிலும் ஆள்வார்”

என்றன.

16பிறகு தம் சிம்மாசனங்களில் தேவனுக்கு
முன்பாக உட்கார்ந்திருந்த 24மூப்பர்களும் தரை
யில்படும்படி தலைகுனிந்து தேவனை வழிபட்
டனர்.

17அந்த மூப்பர்கள்,

“சகல வல்லமையும் வாய்ந்த கர்த்த
ராகிய தேவனே, நாங்கள் நன்றி
செலுத்துகிறோம். நீரே இருக்கிறவரும்
இருந்தவரும் ஆவீர். உம் மிகப் பெரிய
வல்லைமையைப் பயன்படுத்தி ஆளத்
தொடங்கியதால் நாங்கள் உமக்கு நன்றி
செலுத்துகிறோம்.
18 உலகில் உள்ள மக்கள் எல்லாம் கோப
மாக இருந்தனர். ஆனால், இது உம்
கோபத்துக்குரிய காலம். இதுவே இறந்
துபோனவர்கள் நியாயம் தீர்க்கப்படும்
காலம். உங்கள் ஊழியர்களாகிய தீர்க்க
தரிசிகளும் உங்கள் பரிசுத்தவான்களும்
பலன்பெறும் காலம். சிறியோராயினும்
பெரியோராயினும் சரி, உம்மீது மதிப்
புடைய மக்கள் சிறப்பு பெறுகிற காலம்.
உலகை அழிக்கிறவர்கள் அழிந்து போ
கிற காலமும் இதுவே” என்று சொன்
னார்கள்.

[19]*பிறகு தேவனுடைய ஆலயம் பரலோகத்
தில் திறக்கப்பட்டது. அந்த ஆலயத்தில் தேவ
னுடைய உடன்படிக்கையின் பெட்டி காணப்
பட்டது பின்னர் மின்னலும், இடி முழக்கங்க
ளும், நிலநடுக்கங்களும், பெருங் கல்மழையும்
உண்டாயிற்று.*

### ஒரு பெண்ணும், இராட்சச பாம்பும்

12 *அத்துடன் பரலோகத்தில் ஓர் அதிசயம்
காணப்பட்டது: ஒரு பெண் சூரியனை
அணிந்திருந்தாள். அவளது பாதங்களின் கீழே
சந்திரன் இருந்தது. அவளது தலையின்மேல்
பன்னிரண்டு நட்சத்திரங்கள் உள்ள கிரீடம்
இருந்தது.* [2]*அவள் கருவுற்றிருந்தாள். அவள்
வலியால் கதறினாள். ஏனெனில் அவள் குழந்
தை பெறுகிற நிலையில் இருந்தாள்.* [3]*பிறகு
இன்னொரு அதிசயமும் பரலோகத்தில்
காணப்பட்டது. மிகப் பெரிய சிவப்பு வண்ண
முடைய இராட்சசப் பாம்பு தோன்றியது.
அதற்கு ஏழு தலைகளிருந்தன. ஏழு தலைகளி
லும் ஏழு கிரீடங்கள் இருந்தன. அத்துடன்
பத்து கொம்புகளும் அதற்கு இருந்தன.* [4]*அதன்
வால் உயர்ந்து வானில் உள்ள நட்சத்திரங்
களில் மூன்றில் ஒரு பங்கை இழுத்து அவற்
றைத் தரையில் வீசி எறிந்தன. பிள்ளை பெறு
கிற நிலையில் இருந்த அப்பெண்ணின் முன்பு
அந்தப் பாம்பு எழுந்து நின்றது. அவளுக்குக்
குழந்தை பிறந்ததும் அதைத் தின்ன அப்பாம்பு
தயாராக இருந்தது.* [5]*அப்பெண் ஒரு ஆண்
குழந்தையைப் பெற்றெடுத்தாள். அவன் எல்
லா தேசங்களையும் இரும்புக் கோலால் ஆட்சி
செய்வான். பிறகு அக் குழந்தை தேவனுடைய
முன்னிலையிலும் சிம்மாசனத்தின் முன்னி
லையிலும் எடுத்துச் செல்லப்பட்டது.* [6]*அப்
பெண் தேவனால் தயார் செய்யப்பட்ட இட
மான பாலைவனத்திற்குள் ஓடினாள். அங்கே*
1260 *நாள்கள் கவனித்துக்கொள்ளப்படுவாள்.*

[7]*பின்பு பரலோகத்தில் ஒரு போர் உருவா
யிற்று. அந்த இராட்சசப் பாம்புடன் மிகா
வேலும்* அவனைச் சார்ந்த தேவ தூதர்களும்
போரிட்டார்கள். பாம்பும், அதன் தூதர்களும்
திருப்பித் தாக்கினார்கள்.* [8]*பாம்பு போதுமான
வல்லமை உடையதாய் இல்லை. இராட்சப்
பாம்பும், அதன் தூதர்களும் பரலோகத்தில்
தம் இடத்தை இழந்தார்கள்.* [9]*அப்பாம்பு பரலோ
கத்தில் இருந்து தூக்கி எறியப்பட்டது. (பிசாசு
என்றும் சாத்தான் என்றும் அழைக்கப்படு
கின்ற பழைய பாம்புதான் இந்த இராட்சசப்
பாம்பு ஆகும். அவன் உலகம் முழுவதையும்
தவறான வழிக்குள் நடத்துகிறான்) பாம்பும்
அதன் தூதர்களும் பூமியில் வீசி எறியப்பட்
டார்கள்.*

[10]*அப்போது நான் பரலோகத்தில் ஓர் உரத்த
குரலைக் கேட்டேன். அது, “வெற்றியும் வல்ல
மையும் நம் தேவனுடைய இராஜ்யமும், அவரு
டைய கிறிஸ்துவின் அதிகாரமும் இப்போது
வந்திருக்கின்றன. ஏனெனில் நமது சகோதரர்
கள்மேல் குற்றம் சுமத்தியவன் புறந்தள்ளப்பட்
டான். நம் தேவனுக்கு முன்பாக இரவும் பக
லும் நம் சகோதரர்கள்மேல் குற்றம் சுமத்திய
வன் அவனே ஆவான்.* [11]*“நமது சகோதரர்கள்
ஆட்டுக்குட்டியானவரின் இரத்தத்தாலும், தங்
கள் சாட்சியின் வசனத்தாலும் சாத்தானை
வென்றார்கள். அவர்கள் தம் வாழ்வைக்கூட
அதிகம் நேசிக்கவில்லை. அவர்கள் மரணத்
துக்கும் அஞ்சவில்லை.* [12]*எனவே, பரலோகங்
களே! அவற்றில் வாழ்பவர்களே! மகிழ்ச்சி
அடையுங்கள். ஆனால் பூமிக்கும் கடலுக்கும்
ஆபத்தாகும். ஏனெனில் சாத்தான் உங்களிடம்
வந்து விட்டான். அவன் கோபத்தோடு இருக்
கின்றான். அவனது காலம் அதிகம் இல்லை
என்பது அவனுக்குத் தெரியும்” என்றது.*

[13]*இராட்சசப் பாம்பானது தான் பூமியில்
வீசி எறியப்பட்டதை அறிந்து கொண்டது.
ஆகையால் அது ஆண்பிள்ளையைப் பெற்ற
அந்தப் பெண்ணைத் துரத்தியது.* [14]*ஆனால்
அப்பெண்ணுக்குப் பெருங்கழுகின் இரண்டு
சிறகுகள் கொடுக்கப்பட்டன. அவற்றால் அவள்
பாலைவனத்தில் தனக்காக தயார் செய்யப்
பட்ட இடத்துக்குப் பறந்து செல்லமுடிந்தது.
பாம்பிடமிருந்து அவள் அங்கே மூன்றரை
வருட காலத்திற்கு கவனித்துக் கொள்ளப்பட்
டாள்.* [15]*பிறகு அப்பாம்பு தன் வாயில் இருந்து
நதியைப்போன்று நீரை வெளியிட்டது. வெள்
ளம் அப்பெண்ணைக் இழுத்துப்போக ஏது
வாக அந்நீர் அவளை நோக்கிச் சென்றது.*
[16]*ஆனால் பூமி அப்பெண்ணுக்கு உதவியது.
பூமி தன் வாயைத் திறந்து இராட்சசப் பாம்பின்
வாயில் இருந்து வெளிவரும் வெள்ளத்தை
விழுங்கியது.* [17]*பின்னும் அப்பாம்புக்கு அப்
பெண்ணின்மீது மிகுந்த கோபம் இருந்தது.
அவளது மற்ற பிள்ளைகளோடு போரிட அப்
பாம்பு புறப்பட்டுப்போயிற்று. தேவனுடைய
கட்டளைக்கு கீழ்படிகிறவர்களும், இயேசு
போதித்த உண்மையைக் கொண்டிருப்பவர்க
ளுமே அவளுடைய மற்ற பிள்ளைகள் ஆவார்
கள்.* [18]*அந்த இராட்சசப் பாம்பு கடற்கரையில்
நின்றது.*

### இரண்டு மிருகங்கள்

13 *பின்பு கடலுக்குள் இருந்து ஒரு மிருகம்
வெளிவருவதைக் கண்டேன். அதற்குப்
பத்து கொம்புகளும் ஏழு தலைகளும் இருந்தன.
அதன் ஒவ்வொரு கொம்பின் மேலும் ஒரு
கிரீடம் இருந்தது. அதன் ஒவ்வொரு தலைமீதும்
ஒரு கெட்ட பெயர் எழுதப்பட்டிருந்தது.* [2]*அந்த
மிருகம் பார்ப்பதற்கு ஒரு சிறுத்தையைப்
போன்று இருந்தது. அதன் கால்கள் கரடியின்
கால்களைப் போலவும் அதன் வாய் சிங்கத்
தின் வாயைப்போலவும் இருந்தன. இராட்சசப்
பாம்பானது அம்மிருகத்துக்குத் தன் முழு பலத்
தையும், சிம்மாசனத்தையும், அதிகாரத்தையும்
கொடுத்தது.* [3]*அம்மிருகத்தின் தலைகளில்*

---

**மீகாவேல்** *தேவதூதர்களுக்குத் தலைமையான
தூதன். யூதா 9.*

ஒன்று சாவுக்கேதுவாகக் காயம்பட்டது
போலக் காணப்பட்டது. சாவுக்கேதுவான அக்
காயம் குணப்படுத்தப்பட்டது. உலகில் உள்ள
அத்தனை பேரும் அதனைக் கண்டு ஆச்
சரியப்பட்டு அம்மிருகத்தைப் பின்பற்றினர்.
4இராட்சசப் பாம்பு அந்த மிருகத்துக்கு
அனைத்து பலத்தையும் கொடுத்ததால் மக்கள்
அப்பாம்பை வழிபடத் தொடங்கினர். மக்கள்
அம்மிருகத்தையும் வழிபட்டனர். அவர்கள்,
“இம்மிருகத்தைப்போன்று பலமிக்கது வேறு
என்ன இருக்கிறது? அதனை எதிர்த்து யாரால்
போரிட முடியும்?” என்று பேசிக்கொண்டனர்.
5அம்மிருகம் பெருமையானவற்றையும், தீய
வார்த்தைகளையும் பேச அனுமதிக்கப்பட்டது.
நாற்பத்திரண்டு மாதங்கள் தன் அதிகாரத்தைச்
செலுத்த அம்மிருகம் அனுமதிக்கப்பட்டது.
6அம்மிருகம் தன் வாயைத் திறந்து தேவனுக்கு
எதிரானவற்றைப் பேசியது. அது தேவனு
டைய பெயருக்கு எதிராகவும், தேவன் வாழும்
இடத்துக்கு எதிராகவும், பரலோகத்தில் வாழ்
பவர்களுக்கு எதிராகவும் பேசியது. 7தேவனு
டைய பரிசுத்த மக்களுக்கு எதிராகப் போரிட்டு
வெற்றி பெறும் அதிகாரமும் அந்த மிருகத்
துக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. உலகில் உள்ள
ஒவ்வொரு குல, இன, மொழி, நாட்டின் மீதும்
அதற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது. 8உலகில்
வாழும் அத்தனை மக்களும் அந்த மிருகத்தை
வழிபடுவார்கள். இவர்கள், உலகத்தின்
துவக்கக்காலம் முதல் ஆட்டுக்குட்டியானவரின்
ஜீவ புத்தகத்தில் பெயர்கள் எழுதப்படாத மக்
கள் ஆவார்கள்.

9கேட்கிற சக்தி உள்ளவன் எவனும் இத
னைக் கேட்பானாக.

10எவனொருவன் சிறைப்படுத்திக்
கொண்டு போகிறானோ அவன் சிறை
பட்டுப் போவான். எவனொருவன்
வாளால் கொல்பவனாக இருக்கிறா
னோ அவன் வாளால் கொல்லப்பட்டுப்
போவான்.

இதன் பொருள், “தேவனுடைய பரிசுத்த
வான்கள் பொறுமையும் விசுவாசமும் கொண்
டிருக்க வேண்டும்” என்பதாகும்.

11பிறகு வேறொரு மிருகம் பூமிக்குள்
இருந்து வெளிவருவதைப் பார்த்தேன். அதற்கு
ஆட்டுக்குட்டியைப்போன்று இரண்டு கொம்பு
கள் இருந்தன. ஆனால் அது இராட்சசப் பாம்
பினைப்போன்று பேசியது. 12இது முதல் மிரு
கத்தின் முன்னே நிற்கிறது. முதல் மிருகம்
பயன்படுத்திய அதே சக்தியை இதுவும் பயன்
படுத்துகிறது. அது பூமியில் வாழ்கிற மக்கள்
அனைவரையும் அந்த முதல் மிருகத்தை
வழிபடுமாறு தன் ஆற்றலைப் பயன்படுத்து
கிறது. அந்த முதல் மிருகமே குணப்படுத்தப்
பட்ட மரணக் காயத்தைக் கொண்டிருந்தது.
13இந்த இரண்டாம் மிருகம் மாபெரும் அற்புதங்
களைச் செய்கிறது. மக்கள் கவனித்துக் கொண்
டிருக்கும்போதே வானத்திலிருந்து பூமிக்கு
நெருப்பை வரச் செய்கிறது. 14அந்த முதல்
மிருகத்தின் முன்னிலையில் தனக்குக் கொடுக்
கப்பட்டிருக்கிற ஆற்றலினால் அற்புதங்களை
நிகழ்த்தி, பூமியில் வசிக்கிற மக்களை இம்
மிருகம் வஞ்சிக்கிறது. முதல் மிருகத்தைச்
கௌரவிக்க ஒரு விக்கிரகத்தைச் செய்யுமாறு
இரண்டாவது மிருகம் மக்களுக்கு ஆணையிட்
டது. வாளால் காயம் அடைந்தாலும் கூட
இறக்காத மிருகம் இதுவாகும். 15முதல் மிருகத்
தின் உருவச் சிலைக்கு உயிர் கொடுக்கிற
வல்லமை இரண்டாவது மிருகத்துக்குக்
கொடுக்கப்பட்டது. பிறகு அந்த உருவச்சி
லையால் பேசவும், அதை வணங்காதவரைக்
கொல்லும்படி மக்கள் அனைவருக்கும்
ஆணையிடவும் முடிந்தது. 16இரண்டாவது மிரு
கமும் மக்கள் அனைவரையும் அவர்கள் பெரி
யவர்களாக இருந்தாலும் சரி, சிறியவர்களாக
இருந்தாலும் சரி, அவர்கள் செல்வந்தர்களாக
இருந்தாலும் சரி ஏழைகளாக இருந்தாலும்
சரி, அவர்கள் சுதந்தரமானவர்களாக இருந்தா
லும் சரி, அடிமைகளாக இருந்தாலும் சரி
அவர்களின் வலக்கையிலாவது நெற்றியிலா
வது முத்திரை பெறும்படியும் வலியுறுத்தி
யது. 17எந்த ஒரு மனிதனுக்கும் அந்த அடை
யாளக்குறி இல்லாமல் விற்கவோ, வாங்கவோ
முடியவில்லை. அந்த அடையாளம் என்பது
மிருகத்தின் பெயர் அல்லது பெயரின் எண்
ணாகும். 18புரிந்து கொள்ளக் கூடிய அறிவுள்ள
வன் எவனும் அம்மிருகத்தின் எண்ணைப்
புரிந்து கொள்ளமுடியும். அந்த எண் ஒரு
மனிதனின் எண்ணாகும். அவனது எண் 666
ஆகும்.

### மீட்கப்பட்டவர்களின் பாடல்

14 பிறகு நான் பார்த்தபோது என் முன்
னால் ஆட்டுக்குட்டியானவரைக் கண்
டேன். அவர் சீயோன் மலைமீது நின்று
கொண்டிருந்தார். அவரோடு ஒரு லட்சத்து
நாற்பத்து நாலாயிரம் மக்கள் இருந்தனர். அவர்
களது நெற்றியில் ஆட்டுக் குட்டியானவரின்
பெயரும் அவரது பிதாவின் பெயரும் எழுதப்
பட்டு இருந்தது. 2பெருவெள்ளத்தின் இரைச்
சலைப் போலவும் இடியின் பெரு முழக்கத்
தைப் போலவும் ஒரு சத்தம் பரலோகத்தில்
ஏற்பட்டதைக் கேட்டேன். அச்சத்தம் சுரமண்
டலக்காரர்களால் தம் சுரமண்டலங்களை
வாசிக்கிற ஓசையைப்போல இருந்தது. 3மக்கள்
ஒரு புதிய பாடலைச் சிம்மாசனத்துக்கு முன்
பாகவும் நான்கு உயிருள்ள ஜீவன்களின் முன்
பாகவும் மூப்பர்களின் முன்பாகவும் பாடினர்.
அப்புதிய பாடலை ஒரு லட்சத்து நாற்பத்து
நாலாயிரம் மக்கள் மட்டுமே கற்றுக்கொள்ள
முடிந்தது. அவர்களே பூமியில் இருந்து மீட்கப்
பட்டவர்கள். வேறு எவராலும் அப்பாடலைக்
கற்றுக் கொள்ள முடியவில்லை. 4அந்த ஒரு
லட்சத்து நாற்பத்து நாலாயிரம் மக்களும்
பெண்களால் தம்மை மாசுபடுத்திக் கொள்ளா

தவர்கள். அவர்கள் தம்மைச் சுத்தமாய் வைத்
திருந்தனர். ஆட்டுக்குட்டியானவர் எங்கெல்
லாம் போகிறாரோ அங்கெல்லாம் அவர்கள்
பின்தொடர்ந்து செல்கிறவர்கள். இந்த ஒரு
லட்சத்து நாற்பத்து நாலாயிரம் மக்கள் மட்டும்
பூமியில் இருந்து மீட்கப்பட்டவர்கள். இவர்களே
ஆட்டுக்குட்டியானவருக்கும் தேவனுக்கும் அர்
ப்பணிக்கப்பட்ட முதல் மனிதர்கள். 5இவர்கள்
பொய் சொல்லும் குற்றத்துக்கு ஆளாகாதவர்
கள். இவர்கள் குற்றம் அற்றவர்களாக இருக்கி
றார்கள்.

### மூன்று தேவதூதர்கள்

6பிறகு, இன்னொரு தேவதூதன் உயரே
காற்றில் பறந்து வருவதை நான் பார்த்தேன்.
பூமியிலே வாழ்கிற ஒவ்வொரு குல, தேச,
மொழி, இனத்தவருக்கும் அறிவிக்கும்படியான
நித்திய நற்செய்தியை அத்தூதன் வைத்திருந்
தான். 7அவன் உரத்தகுரலில், "தேவனுக்குப்
பயப்படுங்கள். அவருக்கு புகழ் செலுத்துங்
கள். அவர் எல்லா மக்களுக்கும் நீயாயத்தீர்ப்பு
கொடுக்கும் வேளை வந்திருக்கிறது. தேவனை
வழிபடுங்கள். அவர் பரலோகத்தைப் படைத்
தார். பூமியையும், கடலையும் நீரூற்றுகளையும்
படைத்தார்" என்றான்.
8பிறகு இரண்டாம் தேவதூதன் முதல் தூத
னைப் பின்தொடர்ந்து வந்தான். அவன்,
"அவள் அழிக்கப்பட்டாள். பாபிலோன் என்
னும் மாநகரம் அழிக்கப்பட்டது. அவள் தன்
வேசித்தனமானதும் தேவனுடைய கோபமா
னதுமான மதுவை எல்லா தேசங்களுக்கும்
குடிக்க கொடுத்தாள்" என்றான்.
9மூன்றாவது தேவதூதன் மற்ற இரு தூதர்
களையும் பின் தொடர்ந்து வந்தான். அவன்
உரத்த குரலில், "எவனொருவன் மிருகத்தை
யும், மிருகத்தின் உருவத்தையும் வழிபடுகி
றானோ, எவனொருவன் மிருகத்தின் அடை
யாளத்தை தன் முன் நெற்றியிலோ, கையிலோ
பதித்துக்கொள்கிறானோ அவனுக்குக் கேடு
உருவாகும். 10அவன் தேவனுடைய கோபமா
கிய மதுவைக் குடிப்பான். அவன் ஆட்டுக்
குட்டியானவருக்கும், பரிசுத்த தேவதூதர்க
ளுக்கும் முன்பாக அக்கினியாலும் கந்தகத்தா
லும் துன்புறுத்தப்படுவான். 11அவர்களது
வாதையின் புகை சதாகாலங்களிலும் எழும்
பிக்கொண்டிருக்கும். மிருகத்தையும் அதன்
உருவத்தையும் வழிபடுகிறவர்களுக்கும்
அதன் பெயரின் அடையாளக் குறியை
உடைய மக்களுக்கும் இரவும் பகலும் எக்கால
மும் ஓய்வு இருக்காது" என்றான். 12இதன்
பொருள் யாதெனில் தேவனுடைய பரிசுத்த
வான்கள் பொறுமையுடன் இருக்கவேண்டும்.
அவர்கள் தேவனுடைய கட்டளைகளுக்குக்
கீழ்ப்படிகிறவர்களாகவும், இயேசுவில் தம்
விசுவாசத்தைப் பற்றிக்கொள்கிறவர்களாக
வும் இருக்கவேண்டும்.
13பிறகு, பரலோகத்தில் இருந்து ஒரு சத்தம்
உண்டானதைக் கேட்டேன். அது "இதை
எழுது: கிறிஸ்துவுக்குள் மரிக்கிறவர்கள்
இப்பொழுதிலிருந்து ஆசீர்வதிக்கப்பட்டவர்
கள்" என்றது.
"ஆமாம் அவர்கள் தங்கள் கடினமான
வேலைகளை விட்டுவிட்டு ஓய்வுபெறுவார்
கள். அவர்களது (நல்ல) செயல்கள் அவர்க
ளோடு தங்கும், இது முற்றிலும் உண்மை"
என்று ஆவியானவரும் கூறுகிறார்.

### பூமி அறுவடையாகுதல்

14நான் பார்த்தபோது எனக்கு முன்னால்
வெண்ணிற ஒரு மேகத்தைக் கண்டேன். அம்
மேகத்தின் மீது மனித குமாரனைப் போன்ற
ஒருவர் உட்கார்ந்திருந்தார். அவரது தலையில்
பொன் கிரீடம் இருந்தது. அவரது கையிலோ
கூர்மையான அரிவாள் இருந்தது. 15பிறகு இன்
னொரு தேவதூதன் ஆலயத்திலிருந்து வெளி
யே வந்தான். அவன் மேகத்தின்மேல் இருப்ப
வரைப் பார்த்து, "அறுவடைக்கு உரிய காலம்
வந்துவிட்டது. பூமியின் பயிரும் முதிர்ந்து
விட்டது. எனவே உங்கள் அரிவாளை எடுத்து
அறுவடை செய்யுங்கள்" என்றான். 16அப்
போது மேகத்தின்மேல் உட்கார்ந்திருந்தவர்
தனது அரிவாளைப் பூமியின்மேல் நீட்டினார்.
பூமியின் விளைச்சல் அறுவடை ஆயிற்று.
17பிறகு இன்னொரு தேவதூதன் பரலோகத்
திலுள்ள ஆலயத்தை விட்டு வெளியே வந்
தான். அவனும் ஒரு கூர்மையான அரிவாளை
வைத்திருந்தான். 18பின்பு இன்னொரு தேவ
தூதன் பலிபீடத்தில் இருந்து வெளியே வந்
தான். நெருப்பின் மீது இவனுக்கு வல்லமை
இருந்தது. கூர்மையான அரிவாளை வைத்தி
ருந்த தேவதூதனை அழைத்து, அவன், "பூமி
யின் திராட்சைகள் பழுத்திருக்கின்றன. கூர்
மையான உன் அரிவாளை எடு. பூமியின்
திராட்சைக் குலைகளை கூரிய உன் அரிவா
ளால் அறுத்துச் சேகரி" என்று உரத்த குரலில்
கூறினான். 19அதனால் அத்தூதன் அரிவா
ளைப் பூமியின் மீது நீட்டி பூமியின் திராட்சைப்
பழங்களை அறுத்து, தேவனுடைய கோப
மாகிய பெரிய ஆலையிலே போட்டான். 20நக
ரத்துக்கு வெளியிலிருந்த அந்த ஆலையிலே
திராட்சைப் பழங்கள் நசுக்கப்பட்டன. அதிலி
ருந்து இரத்தம் வெளிப்பட்டது. அது குதிரை
களின் தலை உயரத்திற்கு 200 மைல் தூரத்
துக்குப் பொங்கி எழுந்தது.

### இறுதி வாதைகள்

15 பரலோகத்தில் நான் இன்னொரு அற்பு
தத்தைப் பார்த்தேன். அது பெரிதும்
ஆச்சரியமுமானது. ஏழு தேவ தூதர்கள் ஏழு
துன்பங்களைக் கொண்டு வந்தார்கள். இவை
தான் இறுதியான துன்பங்கள். ஏனென்றால்
இதற்குப் பிறகு தேவனுடைய கோபம் முடிந்து
விடுகிறது.
2நெருப்பு கலந்த கண்ணாடி கடல் போன்ற
ஒன்றைக் கண்டேன். மிருகத்தையும், அதன்
உருவத்தையும் அதன் எண்ணையும் வென்ற

மக்கள் அனைவரும் கடலருகே நின்று கொண்
டிருந்தனர். அவர்களிடம் தேவன் கொடுத்த
இசைக் கருவிகள் இருந்தன. 3அவர்கள் தேவ
னுடைய ஊழியராகிய மோசேயின் பாடலை
யும், ஆட்டுக்குட்டியானவரின் பாடலையும்
பாடினர்:

"சர்வ வல்லமையுள்ள தேவனே! நீர்
செய்தவை எல்லாம் பெரியவை, அற்
புதமானவை. நாடுகளின் அரசரே!
உமது வழிகளெல்லாம் நீதியும் உண்
மையுமானவை.
4 கர்த்தாவே! மக்கள் அனைவரும்
உமக்கு அஞ்சுவார்கள். எல்லாரும்
உம் பெயரைப் போற்றுவார்கள். நீர்
ஒருவரே பரிசுத்தமானவர் எல்லா
மக்களும் உம் முன் வந்து உம்மை
வழிபடுவார்கள். ஏனெனில் நீர் நீதி
யானவற்றையே செய்கிறீர் என்பது
தெளிவு."

5இதற்கு பிறகு பரலோகத்தில் நான் ஆலயத்
தைப் பார்த்தேன். (இது தேவன் இருக்கிற
பரிசுத்தமான இடம்) அந்த ஆலயம் திறக்கப்
பட்டது. 6ஏழு துன்பங்களையுடைய ஏழு
தேவதூதர்களும் ஆலயத்திலிருந்து வெளியே
வந்தனர். அவர்கள் பளபளக்கிற சுத்தமான
மெல்லிய ஆடையை அணிந்திருந்தனர். அவர்
கள் தம் மார்பைச் சுற்றி பொன்னால் ஆன
கச்சைகளைக் கட்டியிருந்தார்கள். 7நான்கு
ஜீவன்களுள் ஒன்று ஏழு தேவ தூதர்களுக்கும்
ஏழு பொற்கிண்ணங்களைக் கொடுத்தது. அக்
கிண்ணங்கள் சதாகாலங்களிலும் ஜீவிக்கிற
தேவனுடைய கோபத்தால் நிறைந்திருந்தன.
8தேவனுடைய மகிமையிலிருந்தும் வல்லமை
யிலிருந்தும் வருகிற புகையால் ஆலயம்
நிறைந்துவிட்டது. ஏழு தேவதூதர்களின் ஏழு
துன்பங்களும் முடிகிற வரையில் எவராலும்
ஆலயத்துக்குள் நுழைய முடியவில்லை.

### தேவ கோபத்தின் கிண்ணங்கள்

16 பிறகு, நான் ஆலயத்தில் இருந்து ஒரு
பெரிய சத்தத்தைக் கேட்டேன். அக்குரல்
ஏழு தேவதூதர்களிடம் "தேவனுடைய கோப
த்தை பூமியின் மீது சென்று ஊற்றுங்கள்"
என்றது.
2முதல் தேவதூதன் போனான். அவன் தன்
கிண்ணத்தில் இருந்ததை பூமியில் ஊற்றி
னான். பிறகு மிருகத்தின் அடையாளத்தை
உடையவர்களும் அதன் உருவச் சிலையை
வணங்கியவர்களுமாகிய மக்கள் அனைவருக்
கும் அசிங்கமானதும் வேதனை மிக்கதுமான
கொப்புளங்கள் உண்டாயின.
3இரண்டாவது தேவதூதன் தன் கிண்ணத்
தில் இருந்ததை கடலில் வீசினான். உடனே
கடல் இறந்து போனவனின் இரத்தத்தைப் போ
லானது. கடலில் இருந்த ஒவ்வொரு உயிரி
னமும் இறந்தது.
4மூன்றாவது தேவதூதன் தன் கிண்ணத்தில்
இருந்ததை நதிகளிலும், நீர் ஊற்றுக்களிலும்
வீசி எறிந்தான். அதனால் நதிகளும், நீர் ஊற்
றுகளும் இரத்தமாயிற்று. 5நீரின் தூதன் தேவ
னிடம் கூறுவதைக் கேட்டேன்: அவன்,

"எப்பொழுதும் இருக்கிறவரும் இருந்த
வரும் நீர் ஒருவரே. பரிசுத்தமான
ஒருவரும் நீரே. நீர் செய்த இந்நியாயத்
தீர்ப்புகளில் நீர் நீதிமானாக இருக்
கிறீர்.
6 உம்முடைய பரிசுத்தவான்களின் இரத்
தத்தையும் உம்முடைய தீர்க்கதரிசி
களின் இரத்தத்தையும் மக்கள் சிந்
தினர். அதனால் இப்பொழுது அவர்
கள் குடிக்க இரத்தத்தையே கொடுத்
தீர்கள். அவர்களுக்குத் தகுதியானது
இதுவே"

என்று கூறினான்.

7 அதற்கு பலிபீடமானது,

"ஆம், சர்வவல்லமைமிக்க தேவனாகிய
கர்த்தாவே, உம் நியாயத்தீர்ப்புகள்
உண்மையும் நீதியுமானவை" என்று
சொல்வதைக் கேட்டேன்.

8நான்காவது தேவதூதன் தன் கிண்ணத்தில்
இருந்ததைச் சூரியன் மீது போட்டான். அத
னால் சூரியன் மக்களை நெருப்பாக எரிக்கும்
சக்தியைப் பெற்றது. 9மக்கள் பெருவெப்பத்
தால் எரிக்கப்பட்டனர். அவர்கள் தேவனு
டைய பெயரைச் சபித்தார்கள். இதுபோன்ற
துன்பங்களை எல்லாம் கட்டுப்படுத்தக் கூடி
யவர் தேவன் ஒருவரே ஆவார். ஆனால் மக்க
ளோ தங்கள் இதயத்தையும் வாழ்வையும்
மாற்றி தேவனுக்கு மகிமை செலுத்த மறுத்
தனர்.
10ஐந்தாவது தேவதூதன் தன் கிண்ணத்தில்
இருந்தவற்றை மிருகத்தின் சிம்மாசனத்தின்
மீது எறிந்தான். அதனால் மிருகத்தின் இராஜ்
யம் இருண்டுபோனது. மக்கள் வேதனையால்
தங்கள் நாவுகளைக் கடித்துக்கொண்டனர்.
11மக்கள் தம் வலியின் நிமித்தமாகவும் தம்
கொப்புளங்களின் நிமித்தமாகவும் பரலோகத்
தின் தேவனை சபித்தார்கள். ஆனால் அவர்
கள் தங்கள் மனத்தை மாற்றிக்கொள்ளவோ,
தங்கள் தீய செயல்களில் இருந்து விலகவோ
விரும்பவில்லை.
12ஆறாம் தேவதூதன் தன் கிண்ணத்தில்
இருந்ததை ஐபிராத்து என்னும் பெரிய ஆற்
றில் எறிந்தான். அதிலுள்ள நீர் வற்றிப்
போனது. அதனால் கீழ்நாட்டில் உள்ள
அரசர்கள் வர வழி தயார் ஆயிற்று. 13பின்பு
நான், தவளைபோல தோற்றம் அளித்த மூன்று
அசிங்கமான கெட்ட ஆவிகளைக் கண்டேன்.
இராட்சச பாம்பின் வாயிலிருந்தும், மிருகத்
தின் வாயிலிருந்தும், போலித் தீர்க்கதரிசியின்
வாயில் இருந்தும் அவை வெளிவந்தன.

14இந்தக் கெட்ட ஆவிகளே பிசாசுகளின் ஆவி
கள். அவை அற்புதங்களைச் செய்யும் ஆற்றல்
பெற்றிருக்கின்றன. அவை உலகிலுள்ள அத்
தனை அரசர்களிடமும் செல்கின்றன. சர்வ
வல்லமையுள்ள தேவனின் மாபெரும் நாளின்
யுத்தத்திற்கு அரசர்களை ஒன்று திரட்ட அவை
வெளியே செல்கின்றன.
15“கவனியுங்கள். ஒரு திருடனைப்போல
நான் வருவேன். எவன் விழித்துக் கொண்டும்,
தன்னுடன் தன் ஆடைகளை வைத்துக் கொண்
டும் இருக்கிறானோ அவன் மகிழ்ச்சியாய்
இருப்பான். பிறகு அவன் நிர்வாணமாக
அலையமாட்டான். மற்றவர்கள் பார்வையில்
வெட்கப்படாமல் இருப்பான்.”
16கெட்ட ஆவிகள் அரசர்களை ஓரிடத்தில்
ஒன்று சேர்த்தன. அந்த இடத்தின் பெயர்
எபிரேய மொழியில் அர்மெகதோன் என்று
அழைக்கப்படுகிறது.
17ஏழாவது தேவதூதன் தன் கிண்ணத்தில்
இருந்தவற்றை காற்றில் தூவினான். அதனால்
ஆலயத்திலுள்ள சிம்மாசனத்தில் இருந்து ஒரு
பெரும் குரல் ஒலித்தது. அது, “அது முடிந்தது”
என்று சொன்னது. 18பிறகு மின்னல்கள் மின்
னின, ஓசைகள் எழுந்தன, இடி முழங்கியது.
பூமி அதிர்ந்தது. பூமியில் மனிதர்கள் படைக்
கப்பட்ட பிறகு உருவான நில அதிர்ச்சியி
லேயே இதுதான் மிக மோசமான நில
அதிர்ச்சி. 19மிகப்பெரிய அந்த நகரம் மூன்றா
கப் பிளந்து போயிற்று. நாடுகளில் உள்ள
நகரங்கள் அழிந்து போயின. தேவன் மகா
நகரமாகிய பாபிலோனை தண்டிக்க மறக்க
வில்லை. அந்த நகரத்துக்கு அவர் தனது
கடுமையான கோபமாகிய மது நிறைந்த
கோப்பையைக் கொடுத்தார். 20எல்லா தீவுக
ளும் மறைந்தன. மலைகள் எல்லாம் இல்லாமல்
போயின. 21இராட்சசத்தனமான கல்மழை
வானில் இருந்து மக்கள் மீது பெய்தது. ஒவ்
வொரு மழைக்கல்லும் ஒரு உப்பு மூட்டை
யினைப் போன்று கனத்திருந்தது. இந்தப்
பெருந்துன்பத்தால் மக்கள் தேவனை மேலும்
சபித்தார்கள். இத்துன்பம் மகா துன்பமாய்
இருந்தது.

### மிருகத்தின்மேல் பெண்மணி

17 ஏழு தூதர்களில் ஒரு தூதன் வந்து
என்னிடம் பேசினான். ஏழு கிண்ணம்
வைத்திருந்த ஏழு தூதர்களில் இத்தூதனும்
ஒருவன். அவன், “வா. ஒரு பிரசித்தி பெற்ற
வேசிக்கு வரப்போகும் தண்டனையை உனக்
குக் காட்டுவேன். அவள் திரளான தண்ணீர்
களின்மேல் உட்கார்ந்திருக்கிறவள். 2பூமியில்
உள்ள அரசர்கள் அந்த வேசியோடு பாவம்
செய்தார்கள். அவளது வேசித்தனமாகிய மது
வால் உலகில் உள்ள மக்கள் நிலை தடுமாறிய
வர்கள் ஆனார்கள்” என்றான்.
3ஆவியானவரால் என்னைப் பாலைவனத்
துக்கு அத்தூதன் கொண்டுபோனான். அங்கே
ஒரு பெண் ஒரு சிவப்பு நிறமுள்ள மிருகத்
தின்மேல் உட்கார்ந்து கொண்டிருப்பதைப்
பார்த்தேன். அந்த மிருகத்தின்மேல் தீய பெயர்
கள் எழுதப்பட்டிருந்தன. அதற்கு ஏழு தலைக
ளும் பத்து கொம்புகளும் இருந்தன. 4இரத்த
வண்ணத்தில் சிவப்பும் இரத்தாம்பரமுமான
ஆடை அந்த பெண்ணுக்கு அணிவிக்கப்
பட்டது. அவள் பொன்னாலும் நகைகளாலும்,
முத்துக்களாலும் தன்னை அலங்கரித்திருந்
தாள். அவள் கையில் ஒரு பொன் கோப்பை
யை வைத்திருந்தாள். இக்கோப்பை அருவருப்
பாலும், வேசித்தனமாகிய அசிங்கத்தாலும்
நிறைந்திருந்தது. 5அவளது நெற்றியில் அவ
ளுக்குரிய பட்டப் பெயர் எழுதப்பட்டிருந்தது.
அப்பட்டப் பெயருக்கு ஒரு மறைபொருளும்
உண்டு. எழுதப்பட்டிருந்த வாசகம் இது தான்:

மகா பாபிலோன் வேசிகளுக்கும்
பூமியில் உள்ள
அருவருப்புகளுக்கும் தாய்!

6அப்பெண் குடித்திருந்ததை நான் பார்த்
தேன். அவள் தேவனின் பரிசுத்தமான மக்க
ளின் இரத்தத்தாலும், இயேசுவின் சாட்சிகளின்
இரத்தத்தாலும் நிலைதடுமாறி இருந்தாள்.
அவளைப் பார்த்தபோது எனக்கு மிகவும்
அதிசயமாக இருந்தது. 7அப்போது தூதன்
என்னைப் பார்த்து, “ஏன் அதிசயப்படுகி
றாய்? நான் இவளுடைய இரகசியத்தையும்,
இவளைச் சுமக்கிற ஏழு தலைகளையும், பத்து
கொம்புகளையும் கொண்ட அம்மிருகத்தின் இர
கசியத்தையும் உனக்குக் கூறுகிறேன். 8நீ கண்ட
மிருகம் முன்பொரு காலத்தில் உயிருடன்
இருந்தது. ஆனால் இப்போது அது உயிருடன்
இல்லை. அது உயிரடைந்து அடித்தள மற்ற
பாதாளத்தில் இருந்து ஏறி வந்து அழிவை
நோக்கிப் போகிறது. இந்த உலகத்தில் வாழும்
மக்கள் இம்மிருகத்தைக் காணும்போது ஆச்சரி
யப்படுவார்கள். காரணம் இது ஒரு காலத்தில்
உயிரோடு இருந்தது. பின் இராமல் போனது.
ஆனால், மீண்டும் வரப்போகிறது. இம்மக்க
ளின் பெயர்கள் ஜீவ புத்தகத்தில் உலகம்
தொடங்கின நாள் முதல் எழுதப்படாமல் இருக்
கிறது.
9“இதைப் புரிந்துகொள்ள உனக்கு ஞான
முள்ள மனம் வேண்டும். அந்த ஏழு தலைக
ளும் அந்தப்பெண் உட்கார்ந்து கொண்டிருக்
கிற ஏழு மலைகள் ஆகும். அவை ஏழு அர
சர்களுமாகும். 10இவர் களில் ஐந்து பேர் விழுந்
தார்கள். ஒருவன் இருக்கிறான். இன்னொரு
வன் இன்னும் வரவில்லை. அவன் வந்த
பிறகு கொஞ்ச காலம்தான் உயிரோடு இருப்
பான். 11இருந்ததும் இராததுமாகிய மிருகமே
எட்டாம் அரசனாவான். அவன் அந்த ஏழில்
ஒருவனாக இருந்து அழிவை நோக்கிச் செல்
வான்.
12“நீ பார்த்த பத்து கொம்புகளும் பத்து
அரசர்களாகும். இந்தப் பத்து பேரும் இன்னும்

*தம் இராஜ்யங்களைப் பெற்றுக்கொள்ள வில்லை. எனினும் இந்த மிருகத்துடன் சேர்ந்து ஒரு மணி நேரம் ஆள்வதற்கு உரிய அதிகாரத்தைப் பெற்றுள்ளார்கள்.* 13*இவர்கள் ஒரே நோக்கம் உடையவர்கள். அவர்கள் தம் சக்தியையும் அதிகாரத்தையும் அந்த மிருகத் துக்குக் கொடுப்பார்கள்.* 14*இவர்கள் ஆட்டுக் குட்டியானவருடன் போர் செய்வார்கள். ஆனால் இவர்களை ஆட்டுக் குட்டியானவர் தோற்கடிப்பார். ஏனென்றால் அவர் கர்த்தர் களின் கர்த்தர், அரசர்களின் அரசர். அவர் தாம் அழைத்தவர்களாகிய தம்முடைய தேர்ந் தெடுத்தவர்களோடும், நம்பிக்கைக்குரியவர்க ளோடும் கூட அவர்களை தோற்கடிப்பார்" என்று சொன்னான்.*

15"*பிறகு அந்தத் தூதன் என்னிடம் "அந்த வேசி உட்கார்ந்திருக்கிற நீர்நிலைகளைப் பார்த்தாய் அல்லவா. அந்த நீர்நிலைகள் தான் உலகத்தில் உள்ள மக்கள், குடிகள், தேசங்கள், மொழிகளாக இருக்கின்றன.* 16*நீ பார்த்த அந்த மிருகமும் அதன் பத்து கொம்புகளும்" அந்த வேசியை வெறுப்பர். அவளிடம் உள்ள அனைத்தையும் அவர்கள் பறித்துக் கொண்டு அவளை நிர்வாணமாக விட்டுவிடுவர். அவர் கள் அவளது உடலைத் தின்பார்கள். அவர்கள் அவளை நெருப்பால் சுட்டெரிப்பார்கள்.* 17*தன் குறிக்கோளை நிறைவேற்ற, அந்த பத்துக் கொம்புகளும் விருப்பம் கொள்ள தேவன் கார ணமானார். ஆளுவதற்குரிய அவர்கள் அதி காரத்தை அம்மிருகத்துக்குக் கொடுக்க ஒப்புக் கொண்டனர். தேவன் சொன்னவை நிறைவே றும் காலம்வரை அவர்கள் ஆளுவார்கள்.* 18*பூமியின் அரசர்கள் மீது அரசாள்கிற மகா நகரமானது நீ பார்த்த பெண்ணாகும்" என்று சொன்னான்.*

### பாபிலோன் அழிக்கப்படுதல்

18 *பிறகு வேறொரு தூதன் பரலோகத்தில் இருந்து இறங்கி வருவதைக் கண்டேன். அவனுக்கு மிகுதியான அதிகாரம் இருந்தது. அவனுடைய மகிமையால் பூமி ஒளி பெற்றது.* 2*அத்தூதன் உரத்த குரலில் கூவினான்:*

"*அவள் அழிக்கப்பட்டாள்! மாநகரமான பாபிலோன் அழிக்கப்பட்டது! அவள் (பாபிலோன்) பிசாசுகளின் குடியிருப் பானாள் அந்நகரம் ஒவ்வொரு அசுத்த மான ஆவியும் வசிக்கிற இடமாயிற்று. எல்லாவிதமான அசுத்தமான பறவை களுக்கும் அது ஒரு கூடானது. அசுத் தமானதும் வெறுக்கத்தக்கதுமான ஒவ்வொரு மிருகத்திற்கும் அது ஒரு நகரமாயிற்று.*

3 *அவளுடைய வேசித்தனத்தினுடைய தும் தேவ னுடைய கோபமானதுமான மதுவை எல்லாத் தேசங்களும் குடித்தன. உலகிலுள்ள அரசர்கள் அவளோடு வேசித்தனம் செய்தார்கள், உலகி லுள்ள வியாபாரிகள் அவளது மாபெ ரும் செல்வச் செழிப்பில் இருந்து செல் வர்கள் ஆனார்கள்.*

4*பிறகு நான் பரலோகத்திலிருந்து இன் னொரு குரலையும் கேட்டேன்.*

"*ஓ! என் மக்களே, அவளுடைய பாவத் தில் உங்களுக்கு பங்கில்லாதபடிக்கு வெளியே வாருங்கள். பிறகு அவளுக் கிருக்கும் வாதைகள் எதுவும் உங் களுக்கிருக்காது.*

5 *அந்நகரத்தின் பாவங்கள் பரலோகம் வரை எட்டிவிட்டன. தேவன் அவளது குற்றங்களை மறக்கவில்லை.*

6 *அவள் (மற்றவர்களுக்கு) கொடுத் ததைப்போலவே நீங்களும் அந் நகருக்கு கொடுங்கள். அவள் கொடுத் ததைப்போல இருமடங்கு திருப்பிச் செலுத்துங்கள். மற்றவர்களுக்கு அவள் தயாரித்த அடர்த்தியான மதுவைப்போல இருமடங்கு அடர்த் தியான மதுவை அவளுக்காகத் தயார் செய்யுங்கள்.*

7 *அவள் தனக்கு செல்வ வாழ்வையும் அதிக மகிமையையும் அளித்துக் கொண்டாள். அதே அளவு துன்பத் தையும் துக்கத்தையும் அவளுக்குக் கொடுங்கள். அவள் தனக்குத்தானே, 'என் சிம்மாசனத்தில் உட்கார்ந்துக் கொண்டிருக்கிறநான் ஒரு ராணி. நான் விதவை அல்ல. நான் எக்காலத்திலும் துக்கப்படமாட்டேன்.' என்று சொல் லிக்கொள்கிறாள்.*

8 *எனவே ஒருநாளில் இக்கேடுகள் அவ ளுக்கு வரும். அவை மரணம், அழுகை, பெரும் பசியாய் இருக்கும். அவள் நெருப்பால் அழிக்கப்படுவாள். ஏனென்றால் அவளை நியாயந்தீர்க் கிற தேவனாகிய கர்த்தர் வல்லமை யுள்ளவர்."*

9*அவளோடு வேசித்தனம் புரிந்து அவளு டைய செல்வத்தைப் பகிர்ந்துகொண்ட பூமி யின் எல்லா அரசர்களும் அவள் எரியும் போது வரும் புகையைக் காண்பார்கள். அவ ளது மரணத்துக்காக அவர்கள் அழுது துக்கப் படுவார்கள்.* 10*அவளது துன்பத்தைக் கண்டு அரசர்கள் அஞ்சி விலகி நிற்பார்கள். அவர் கள் சொல்வார்கள்:*

"*பயங்கரம்! எவ்வளவு பயங்கரம், மாநகரமே, சக்திமிக்க பாபிலோன் நகரமே! உனது தண்டனை ஒரு மணி நேரத்தில் வந்து விட்டது!"*

11*அவளுக்காக உலகிலுள்ள வியாபாரிகள் அழுது துக்கப்படுவார்கள். இப்பொழுது அவர்*

*களின் பொருள்களை வாங்குவதற்கு யாரும்*
*இல்லை என்பது தான் அவர்களின் துயரத்துக்*
*குக் காரணம்.* **12***அவர்கள் தங்கம், வெள்ளி,*
*நகைகள், முத்துக்கள், மெல்லிய ஆடை, இரத்*
*தாம்பர ஆடை, பட்டு ஆடை, சிவப்பு ஆடை,*
*எல்லாவிதமான வாசனைக் கட்டைகள், தந்தத்*
*தால், தங்கத்தால் செய்யப்பட்ட அனைத்து*
*விதமான பொருள்கள், விலையுயர்ந்த மரப்*
*பொருட்கள், வெண்கலப் பொருட்கள், இரும்*
*புப் பொருள்கள், வெள்ளைக்கல் பொருட்கள்,*
*ஆகியவற்றை விற்கின்றனர்.* **13***இலவங்கப்*
*பட்டை, தூபவர்க்கம், தைலங்கள், சாம்பி*
*ராணி, திராட்சை இரசம், ஒலிவ எண்ணெய்,*
*மெல்லிய மாவு, கோதுமை, மாடு, ஆடு,*
*குதிரைகள், இரதங்கள், மனிதர்களின் சரீரங்*
*கள் மற்றும் ஆன்மாக்கள் போன்றவற்றையும்*
*அவர்கள் விற்கின்றனர்.*

**14** *“ஓ பாபிலோனே, நீ விரும்பிய பொருட்*
*களெல்லாம் உன்னை விட்டுப் போய்*
*விட்டன. உன் செல்வமும் நாகரீகமும்*
*மறைந்து விட்டன. உன்னால் அவற்றை*
*மீண்டும் பெற இயலாது”*

**15***உலகிலுள்ள வியாபாரிகள் அவளது*
*துயரங்களுக்கு அஞ்சி அவளை விட்டு விலகு*
*வார்கள். இவர்களே பலவற்றை அவளிடம்*
*விற்று செல்வம் குவித்தார்கள். அவர்கள்*
*அழுதுதுக்கப்படுவார்கள்.* **16***அவர்கள் சொல்*
*வார்கள்:*

*“பயங்கரம்! எப்படிப்பட்ட பயங்கரம்*
*அந்த மாநகரத்துக்கு ஏற்பட்டுள்ளது!*
*அவள் மெல்லியதுணி, பீதாம்பரம்,*
*சிவப்பாடைகளை அணிந்திருந்தாள்.*
*அவள் தங்கம், நகைகள், முத்துக்கள்*
*ஆகியவற்றால் சிங்காரிக்கப்பட்டாள்.*
**17** *அத்தனை செல்வமும் ஒரு மணி நேரத்*
*துக்குள் அழிக்கப்பட்டது.”*

*எல்லா கடல் தலைவர்களும், மாலுமிகளும்,*
*கப்பற் பயணிகளும், கடலில் சம்பாதித்தவர்க*
*ளும் பாபிலோனை விட்டு விலகி நின்றனர்.*
**18***அவள் எரியும் புகையைக் கண்டனர். அவர்*
*கள் உரத்த குரலில், “இது போன்ற ஒரு*
*மகா நகரம் எங்கேனும் உண்டா?” என்று*
*கேட்டனர்.* **19***தங்கள் தலைமேல் புழுதியைப்*
*போட்டுக்கொண்டார்கள். அவர்கள் அழுது*
*துக்கப்பட்டார்கள். அவர்கள் சத்தமாய்க் கூறி*
*னார்கள்:*

*“பயங்கரம்! எப்படிப்பட்ட பயங்கரம்*
*அந்த மாநகரத்துக்கு ஏற்பட்டுள்ளது!*
*கடலில் சொந்தக் கப்பல்களுள்ள*
*அனைவரும் அவளது செல்வத்தால்*
*பணக்காரர்கள் ஆனார்கள்! ஆனால்*
*அவளோ ஒரு மணிநேரத்தில் அழிந்து*
*போனாள்!*

**20** *பரலோகமே! இதற்காக மகிழ்ச்சியோ*
*டிரு. தேவனுடைய பரிசுத்தமான மக்*
*களே! அப்போஸ்தலர்களே, தீர்க்க*
*தரிசிகளே மகிழ்ச்சி அடையுங்கள்!*
*அவள் உங்களுக்குச் செய்த கேடுகளுக்*
*காக தேவன் அவளைத் தண்டித்து*
*விட்டார்.”*

**21***அப்போது சக்திமிக்க தூதன் ஒருவன்*
*ஒரு பெரும்பாறையைத் தூக்கி வந்தான். அது*
*ஒரு பெரிய எந்திரக்கல்லைப்* போல இருந்*
*தது. கடலில் அப்பாறையைப் போட்டு விட்டு*
*தூதன் சொன்னான்:*

*“இவ்வாறுதான் பாபிலோன் நகரமும்*
*தூக்கி எறியப்படும். அந்நகரம் மீண்டும்*
*ஒருக்காலும் காணப்படாமல் போகும்.*
**22** *சுரமண்டலங்களையும் மற்ற இசைக்*
*கருவிகளையும் நாதசுரங்களையும எக்*
*காளங்களையும் மக்கள் வாசித்து*
*எழுப்பும் இசை ஒருபோதும் இனி உன்*
*னிடத்தில் கேட்காது. எந்த துறையின்*
*தொழிலாளியும் இனி உன்னிடத்தில்*
*காணப்படமாட்டான். எந்திரங்களின்*
*ஓசை இனி உன்னிடம் கேட்கப்படுவ*
*தில்லை.*
**23** *இனி விளக்குகளின் ஒளி உன்னிடம்*
*பிரகாசிக்காது. மணமகன் மணமகள்*
*ஆகியோரின் சத்தங்கள் இனி உன்*
*னிடம் கேட்காது. உன் வியாபாரிகள்*
*உலகில் சிறந்தவர்களாக இருந்தார்கள்.*
*உலக நாடுகள் எல்லாம் உன் மாயத்*
*தால் மோசம் செய்யப்பட்டன.*
**24** *தீர்க்கதரிசிகள், தேவனுடைய பரிசுத்த*
*மக்கள் மற்றும் பூமியின்மேல் கொல்லப்*
*பட்டிருக்கிற மக்கள் அனைவருடைய*
*துமான இரத்தத்தால் (மரணம்) அவள்*
*(பாபிலோன்) குற்ற உணர்வோடு இருக்*
*கிறாள்.”*

### *பரலோகத்தில் தேவனைப் புகழ்தல்*

**19** *இதற்குப்பிறகு பரலோகத்தில் உள்ள*
*ஏராளமான மக்களின் ஓசையைப்*
*போல ஒலித்ததைக் கேட்டேன், அவர்*
*கள்,*

*“அல்லேலுயா தேவனைத் துதியுங்கள்,*
*வெற்றியும், மகிமையும், வல்லமையும்*
*நம் தேவனுக்கு உரியது.*
**2** *அவரது நியாயத்தீர்ப்புகள் உண்*
*மையும் நேர்மையுமானவை. நமது*
*தேவன் மாபெரும் வேசியைத் தண்டித்*
*துவிட்டார். இந்த உலகத்தை தன் வே*
*சித்தனத்தால் கெடுத்தவள் அவளே.*
*அவள் கொன்ற தமது ஊழியர்களின்*
*இரத்தத்துக்கு தேவன் பழிவாங்கி*

---

***எந்திரக்கல்*** *வட்டமான பெரிய, மாவரைக்கும் கல்.*

னார்" என்று சொல்லிக்கொண்டிருந்
தார்கள்.

3 பரலோகத்திலுள்ள மக்கள்,

"அல்லேலூயா! அவள் எரிவதால்
வரும் புகை என்றென்றைக்கும் எழும்
பிக்கொண்டிருக்கும்"

என்றும் சொன்னார்கள்.

4 பிறகு இருபத்திநான்கு மூப்பர்களும்,
நான்கு ஜீவன்களும் பணிந்து வணங்கி, சிம்
மாசனத்தில் வீற்றிருந்த தேவனை வழிபட்
டனர்.

"ஆமென் அல்லேலூயா"என அவர்கள்
சொன்னார்கள்.

5 பின்னர் சிம்மாசனத்தில் இருந்து ஒரு குரல்
வந்தது. அது,

"நமது தேவனுக்கு சேவை செய்யும்
அனைத்து மக்களே, அவரைத் துதியுங்
கள். நமது தேவனுக்கு மகிமையளிக்
கும் பெரியோரும் சிறியோருமான
மக்களே, நமது தேவனைத் துதியுங்
கள்! "

என்று கூறியது.

6 அதற்குப் பிறகு ஏராளமான மக்களின்
ஓசையைப்போல ஒலித்ததைக் கேட்டேன். அது
பெருவெள்ளத்தின் இரைச்சலைப்போலவும்
இடியோசைபோலவும் கேட்டது. அவர்கள்
சொன்னார்கள்:

"அல்லேலூயா, நமது தேவனாகிய கர்த்
தர் ஆளுகிறார். அவரே சர்வவல்லமை
யுள்ளவர்.
7 நாம் ஆனந்தமும் மகிழ்ச்சியும் அடை
வோம். தேவனுக்கு மகிமையைக்
கொடுப்போம்! ஏனெனில் ஆட்டுக்
குட்டியானவரின் (இயேசு) திருமணம்
வந்தது. ஆட்டுக்குட்டியானவரின் மண
மகள் (சபை) தன்னைத் தயாராக்கிக்
கொண்டாள்.
8 மெல்லிய ஆடைகள் அவள் அணியும்
படியாகத் தரப்பட்டன. அந்த ஆடைகள்
பளபளப்பானவை, சுத்தமானவை."

(மெல்லிய ஆடை என்பது தேவனுடைய
பரிசுத்தமான மக்களின் நற்செயலைக் குறிக்
கும்.)

9 பிறகு அத்தூதன், "ஆட்டுக்குட்டியானவ
ரின் திருமண நாளில் விருந்துண்ண அழைக்
கப்பட்டவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்.
இதனை எழுதிவைத்துக்கொள்" என்றான்.
"இவை தேவனுடைய உண்மையான வார்த்
தைகள்" என்றும் சொன்னான்.

10 பிறகு நான் அந்தத் தூதனை வணங்கு
வதற்காகக் குனிந்தேன். ஆனால் அந்தத் தூதன்
என்னிடம், "என்னை வணங்கவேண்டாம்.
இயேசுவின் உண்மையைக் கைக்கொண்
டுள்ள உன்னைப் போலவும் உன் சகோதரர்
களைப் போலவும் நான் ஒரு ஊழியக்காரன்.
தேவனை வணங்கு. ஏனென்றால் இயேசுவின்
உண்மை தீர்க்கதரிசனத்தின் ஆவியாய் இருக்கி
றது" என்றான்.

## வெள்ளைக் குதிரையின்மேல் சவாரி செய்பவர்

11 பிறகு, நான் பரலோகம் திறப்பதைக் கண்
டேன். எனக்கு முன்னால் ஒரு வெள்ளைக்
குதிரை நின்றது. அதன்மீது இருந்தவர் நம்
பிக்கை என்றும் உண்மை யென்றும் அழைக்
கப்படுகிறார். அவர் நியாயம் தீர்ப்பதிலும்
போர் செய்வதிலும் மிக சரியாக இருக்கிறார்.
12 அவரது கண்கள் எரிகிற நெருப்புபோல
ஜொலித்தது. அவரது தலையில் பல கிரீடங்
கள் இருந்தன. அவரது பெயர் அவருக்கு
மேல் எழுதப்பட்டிருந்தது. அப்பெயர் அவ
ருக்கு மட்டுமே தெரிந்திருந்தது. வேறு எவருக்
கும் அப்பெயர் தெரியாது. 13 அவர் இரத்தத்
தால் நனைக்கப்பட்டிருந்த அங்கியை அணிந்
திருந்தார். அவர் பெயரே தேவனுடைய
வார்த்தை ஆகும். 14 பரலோகத்தின் படைகள்
அவரைப் பின் தொடர்ந்தன. அவர்கள் வெள்
ளைக் குதிரைகளின் மேல் வந்தனர். அவர்கள்
வெள்ளையும் சுத்தமுமான மெல்லிய
ஆடையை அணிந்திருந்தனர். 15 அவரது வாயி
லிருந்து கூர்மையான வாள் வெளியே வருகி
றது. அவர் பிற நாடுகளை வெல்ல அதனைப்
பயன்படுத்துவார். அவர் இரும்புக் கோலால்
அத்தேசங்களை ஆள்வார். அவர் சர்வ வல்ல
மையுள்ள தேவனுடய கோபமாகிய ஆலையி
லுள்ள திராட்சையை மிதிப்பார். 16 அவரது
ஆடையின் மேலும் தொடையின் மேலும்

"இராஜாதி இராஜா, கர்த்தாதி கர்த்தர்"

என்னும் பெயர் எழுதப்பட்டிருந்தது.

17 பின்பு ஒரு தேவதூதன் சூரியனில் நிற்கக்
கண்டேன். வானத்தில் பறந்துகொண்டிருந்த
அனைத்து பறவைகளிடமும் அவன் உரத்தகுர
லில் சொல்லிக்கொண்டிருந்தான். "தேவனு
டைய சிறந்த விருந்துக்கு அனைவரும்
சேர்ந்து வாருங்கள். 18 அரசர்கள், சேனைத்த
லைவர்கள், புகழ்பெற்ற மனிதர்கள் ஆகியோ
ரின் சரீரங்களை உண்ணமுடியும் வண்ணம்
ஒருங்கிணைந்து வாருங்கள். குதிரைகள் மற்
றும், குதிரைகளின் மேல் சவாரி செய்தவர்
களின் உடல்களைத் தின்னவும், சுதந்தரமான
வர்கள், அடிமைகள், சிறியவர்கள், பெரியவர்
கள் ஆகிய மக்கள் அனைவரின் சரீரங்களைத்
தின்னவும் வாருங்கள்" என்றான்.

[19]பிறகு நான் அந்தக் குதிரையின் மேல்
ஏறி இருக்கிறவரையும் அவரது படையையும்
எதிர்த்துப் போரிட அந்த மிருகமும் தன்
படைகளுடன் பூமியின் அரசர்களும் ஒருங்கி
ணைந்ததைக் கண்டேன். [20]ஆனால், அந்த
மிருகம் பிடிபட்டது. போலித் தீர்க்கதரிசியும்
பிடிபட்டான். இவனே அந்த மிருகத்திற்காக
அற்புதங்களைச் செய்தவன். மிருகத்தின்
அடையாளத்தைக் கொண்டிருந்தவர்களையும்
மிருக விக்கிரகத்தை வழிபட்டவர்களையும்
இவ்வற்புதங்களால் அவன் வஞ்சித்தான்.
போலித் தீர்க்கதரிசியும் மிருகமும் கந்தகம்
எரிகிற நெருப்புக் கடலில் உயிரோடு போடப்
பட்டார்கள். [21]குதிரையின் மேல் வந்தவரின்
வாயிலிருந்து வெளிவந்த வாளால் அவர்களு
டைய படைகள் கொல்லப்பட்டன. அவர்களின்
சரீரங்களைப் பறவைகள் திருப்தியுறும்வரை
தின்றன.

### ஆயிரம் ஆண்டுகள்

20 பரலோகத்தில் இருந்து ஒருதூதன் கீழே
இறங்கி வருவதைக் கண்டேன். அவ
னிடம் பாதாள உலகத்தின் திறவு கோல் இருந்
தது. அவன் தன் கையில் ஒரு நீண்ட சங்கிலி
யையும் வைத்திருந்தான். [2]சாத்தான் எனப்ப
டும் பழைய பாம்பாகிய ராட்சசப் பாம்பை
அவன் பிடித்தான். அவன் அப்பாம்பை ஆயி
ரம் ஆண்டு காலத்துக்குச் சங்கிலியால் கட்டிப்
போட்டான். [3]அவன் அப்பாம்பைப் பாதாளத்
திற்குள் எறிந்து மூடினான். ஆயிரம் ஆண்டு
கள் முடியும்வரை பூமியின் மக்களை அது
வஞ்சிக்காதபடிக்குப் பூட்டி முத்திரையிட்டான்.
அதன் பிறகு கொஞ்சக் காலத்துக்குப் பாம்
பினை விடுதலை செய்யவேண்டும்.

### சாத்தானின் தோல்வி

[4]பிறகு நான் சில சிம்மாசனங்களைப் பார்த்
தேன். அவற்றின்மேல் சிலர் அமர்ந்திருந்தனர்.
நியாயந்தீர்க்கிற அதிகாரம் கொடுக்கப்பட்டி
ருந்த மக்கள் இவர்களே ஆவார்கள். அப்போது
இயேசுவைப் பற்றிய சாட்சிக்காகவும் தேவனு
டைய செய்திக்காவும் தலை வெட்டப்பட்டவர்க
ளின் ஆன்மாக்களைக் கண்டேன். அவர்கள்
அம் மிருகத்தையோ அல்லது அதனுடைய
உருவத்தையோ வழிபடவில்லை. அவர்கள்
அம்மிருகத்தின் அடையாளக் குறியை தம்
முன் நெற்றியிலோ கைகளிலோ பெற்றிருக்
கவில்லை. அவர்கள் மீண்டும் உயிர்த்
தெழுந்து கிறிஸ்துவோடு ஆயிரம் வருஷங்
கள் அரசாண்டார்கள். [5](மற்ற இறந்த மக்கள்
1000 ஆண்டுகள் முடியும் மட்டும் உயிரடைய
வில்லை) இதுவே முதலாம் உயிர்த்தெழுதல்
ஆகும். [6]இந்த முதலாம் உயிர்த்தெழுதலில்
பங்கு பெற்றவர்களே ஆசீர்வதிக்கப்பட்டவர்
களும், பரிசுத்தமானவர்களும் ஆவார்கள்.
அவர்கள் மீது இரண்டாம் மரணத்துக்கு அதி
காரம் இல்லை. அவர்கள் தேவனுக்கும் கிறிஸ்
துவுக்கும் ஆசாரியராய் இருப்பார்கள். அவர்
கள் இயேசுவோடு கூட ஆயிரம் ஆண்டுக்
காலம் ஆட்சி செய்வார்கள்.
[7]ஆயிரம் ஆண்டுக் காலம் முடிந்த பிறகு,
சிறையிலிருந்து சாத்தான் விடுதலை செய்யப்
படுவான். [8]அவன் உலகின் அனைத்து பாகங்
களிலும் உள்ள தேசங்களில் இருக்கிற
கோகையும் மாகோகையும் வஞ்சிக்கச்செல்
வான். போர் செய்வதற்காக மக்களை ஒன்று
திரட்டுவான். ஏராளமான மக்கள் கடற்கரை
யில் உள்ள மணலைப் போன்று எண்
ணிக்கையில் கூடுவர். [9]சாத்தானின் படை
எங்கும் பரந்தது. பூமியெங்கும் பரந்து தேவனு
டைய மக்களுடைய முகாமையும் தேவன்
நேசிக்கிற நகரையும் வளைந்து கொண்டது.
ஆனால் பரலோகத்தில் இருந்து நெருப்பு கீழே
வந்து சாத்தானின் படையை அழித்து விட்டது.
[10]மக்களைத் தந்திரத்தால் ஏமாற்றி வந்த சாத்
தான், கந்தகம் எரியும் நெருப்புக் கடலுக்குள்
வீசப்பட்டான். அவனோடு, அந்த மிருகமும்,
போலித் தீர்க்கதரிசியும் வீசப்பட்டனர். அவர்
கள் இரவும் பகலும் சதாகாலங்களிலும்
வதைக்கப்படுவார்கள்.

### வெள்ளை சிம்மாசனம்

[11]பிறகு, ஒரு பெரிய வெள்ளை சிம்மாச
னத்தையும் அதன் மேல் வீற்றிருக்கிறவரை
யும் நான் கண்டேன். அவர் பார்வையிலிருந்து
வானமும், பூமியும் விலகி மறைந்தன.
[12]மேலும் இறந்துபோன பெரியவர்களும், சிறி
யவர்களும் சிம்மாசனத்தின் முன்னே நிற்
பதைக் கண்டேன். ஜீவப் புத்தகம் திறக்கப்
பட்டது. வேறு சில புத்தகங்களும் திறக்கப்
பட்டன. இறந்து போனவர்கள் அவர்களது
செயல்களால் நியாயம் தீர்க்கப்பட்டனர். இவை
எல்லாம் அந்தப் புத்தகங்களில் எழுதப்பட்
டிருக்கின்றன. [13]கடல் தன்னுள் இறந்துபோன
வர்களை ஒப்படைத்தது. மரணமும், பாதாள
மும் தங்களிடமிருந்த இறந்தவர்களை ஒப்
படைத்தன. ஒவ்வொரு மனிதனும் தான்
செய்த நற்செயல்களைப் பொறுத்து நியாயம்
தீர்க்கப்பட்டான். [14]அப்போது மரணமும் பாதா
ளமும் நெருப்புக் கடலிலே தள்ளப்பட்டன. இந்த
நெருப்புக் கடலே இரண்டாம் மரணமாகும்.
[15]ஜீவப் புத்தகத்தில் எழுதப்பட்டவனாகக்
காணப்படாதவன் எவனோ, அவன் நெருப்புக்
கடலிலே தள்ளப்பட்டான்.

### புதிய எருசலேம்

21 பிறகு நான் புதிய வானத்தையும் புதிய
பூமியையும் கண்டேன். முதலாவது
வானமும், பூமியும் மறைந்து போயிற்று. இப்
போது கடல் இல்லை. [2]தேவனிடமிருந்து பர
லோகத்தை விட்டு கீழே இறங்கிவரும் பரிசுத்த
நகரைக் கண்டேன். தேவன் அனுப்பிய அந்த
கரமே புதிய எருசலேம்.* அது, தன் கண

---

**புதிய எருசலேம்** தேவனுடைய மக்கள் அவரோடு வாழும் பரிசுத்த நகரம்.

வனுக்காக அலங்கரிக்கப்பட்ட மணமகளைப்
போல தயார்படுத்தப்பட்டது. 3சிம்மாசனத்திலி
ருந்து ஓர் உரத்தகுரல் கேட்டது: “இப்போது
தேவனுடைய வீடு அவரது மக்களோடு உள்
ளது. அவர் அவர்களோடு வாழ்வார். அவர்
களே அவரது மக்களாக இருப்பார்கள். தேவன்
தாமே அவர்களோடிருந்து அவர்களுடைய
தேவனாய் இருப்பார். 4அவர்களின் கண்க
ளில் வடியும் கண்ணீரைத் தேவன் துடைப்
பார். இனிமேல் அங்கே மரணம் இருக்காது.
துக்கமும், அழுகையும், வேதனையும் இல்லா
மல் போகும். பழைய முறைகள் எல்லாம்
போய்விட்டன” என்றது.

5சிம்மாசனத்தில் இருந்தவர், “பார்! நான்
எல்லாவற்றையும் புதிதாகப்படைத்துக்
கொண்டிருக்கிறேன்” என்றார். “பிறகு இத
னையும் எழுதிக்கொள். ஏனென்றால் இந்த
வார்த்தைகள் உண்மையானவை. நம்பிக்
கைக்குரியவை” என்றார்.

6சிம்மாசனத்தில் இருந்தவர் என்னிடம்,
“இது முடிந்து விட்டது. நானே அல்பாவும்
ஒமேகாவுமாய் இருக்கிறேன். அதாவது நானே
துவக்கமும் முடிவுமாக இருக்கிறேன். நான்
தாகமாய் இருக்கிறவனுக்கு ஜீவ நீரூற்றி
லிருந்து நீரைக் கொடுப்பேன். 7எவன் ஒருவன்
வெற்றி பெறுகிறானோ அவனுக்கு இவை
எல்லாம் கொடுக்கப்படும். அவனுக்கு நான்
தேவனாகவும் அவன் எனக்கு மகனாகவும்
இருப்பான். 8ஆனால் கோழைகளாக இருப்
பவர்களும், நம்ப மறுப்பவர்களும், பயங்கர
மான காரியங்களைச் செய்பவர்களும்,
கொலைகாரர்களும், பாலியல் குற்றங்கள் செய்
பவர்களும், மந்திர சூன்ய வேலை செய்
பவர்களும், உருவ வழிபாடு செய்பவர்களும்,
பொய்யர்களும் கந்தகம் எரியும் நெருப்புக்
கடலுள் தள்ளப்படுவார்கள். இதுவே இரண்
டாம் மரணம்” என்றார்.

9ஏழு தேவதூதர்களுள் ஒருவன் என்னிடம்
வந்தான். இவன் ஏழு இறுதி வாதைகள்
நிறைந்த ஏழு கிண்ணங்களைக் கொண்டிருந்த
தூதர்களில் ஒருவன். அத்தூதன் என்னிடம்,
“என்னுடன் வா. நான் ஆட்டுக்குட்டியானவ
ரின் மனைவியாகப்போகும் மணமகளைக்
காட்டுவேன்” என்றான். 10அவன் ஆவியான
வரால் (அவர் ஆற்றலால்) என்னை மிகப்
பெரிய உயர்ந்த மலை ஒன்றுக்கு தூக்கிச்
சென்றான். அவன் எனக்கு எருசலேம் என்ற
பரிசுத்தமான நகரத்தைக் காட்டினான். அது
தேவனிடமிருந்து வானினின்று வெளிப்பட்டு
கீழே இறங்கிக் கொண்டிருந்தது. 11அது தேவ
னுடைய மகிமையால் ஒளி வீசிக் கொண்
டிருந்தது. அது விலையுயர்ந்த இரத்தினக்கல்
லைப் போன்றும், பளிங்கு போல சுத்தமான
வைரக்கல்லைப் போன்றும் மின்னியது.
12அது தன்னைச் சுற்றிலும் மிகவும் உயர்ந்த
பன்னிரண்டு வாசல்களையுடைய மாபெரும்
மதிலைக் கொண்டிருந்தது. அந்தப் பன்னி
ரண்டு வாசல்களிலும், பன்னிரண்டு தேவதூ
தர்கள் இருந்தார்கள். ஒவ்வொரு வாசலிலும்
இஸ்ரவேலில் உள்ள பன்னிரண்டு குடும்பங்
களில் ஒரு குடும்பத்தின் பெயர் எழுதப்பட்டி
ருந்தது. 13கிழக்கே மூன்று வாசல்களும்,
வடக்கே மூன்று வாசல்களும், தெற்கே மூன்று
வாசல்களும், மேற்கே மூன்று வாசல்களும்
இருந்தன. 14நகரத்தின் சுவர்கள் பன்னிரண்டு
அஸ்திபாரக் கற்களால் கட்டப்படிருந்தன. அக்
கற்களில் ஆட்டுக்குட்டியானவரின் பன்னி
ரண்டு அப்போஸ்தலர்களின் பெயர்களும் எழு
தப்பட்டிருந்தன.

15என்னோடு பேசிக்கொண்டிருந்த தேவ
தூதனின் கைகளில் நகரையும் அதன் வாசல்க
ளையும் அதன் மதிலையும் அளப்பதற்காக
பொன்னாலான ஒரு அளவு கோல் இருந்தது.
16அந்நகரம் சதுர வடிவில் அமைக்கப்பட்டி
ருந்தது. அதனுடைய நீளம் அகலத்துக்குச்
சமமாக இருந்தது. அத்தூதன் நகரத்தைத் தன்
கோலால் அளந்தான். அது 12,000 ஸ்தாதி *
நீளமும் 12000 ஸ்தாதி அகலமும் கொண்ட
அளவுடையதாய் இருந்தது. அதன் உயரமும்
அவ்வாறே 12000 ஸ்தாதி அளவுடையதாயி
ருந்தது. 17அத்தூதன் மதிலையும் அளந்தான்.
அது மனித அளவின்படி அதாவது தூதனு
டைய முன்னங்கையால் 144 முழ உயரம்
இருந்தது. 18அச்சுவர் வைரக்கல்லால் ஆனது.
நகரம் தூய பளிங்குபோன்ற தங்கத்தால்
அமைக்கப்பட்டிருந்தது. 19நகரத்தின் சுவர்
களுக்கான அஸ்திபாரக் கற்கள் விலை
உயர்ந்த நகைகளால் அலங்கரிக்கப்பட்டிருந்
தன. அதன் முதல் அஸ்திபாரக்கல் வைரக்கல்.
இரண்டாவது கல் இந்திரநீலம். மூன்றாவது
சந்திரகாந்தம். நான்காவது மரகதம். 20ஐந்தா
வது கோமேதகம், ஆறாவது பதுமராகம்.
ஏழாவது சுவர்ணரத்தினம். எட்டாவது படிகப்
பச்சை. ஒன்பதாவது புஷ்பராகம். பத்தாவது
வைடூரியம். பதினோராவது கல் சுநீரம்.
பன்னிரண்டாவது சுகந்தி. 21பன்னிரண்டு வாச
ல்களும் பன்னிரண்டு முத்துக்களாய் இருந்தன.
ஒவ்வொரு வாசலும் ஒவ்வொரு முத்தாய்
இருந்தது. அந்த நகரத் தெரு தூயப் பொன்
னால் ஆக்கப்பட்டது. கண்ணாடியைப்போல
அந்தப் பொன் சுத்தமாயிருந்தது.

22அந்நகரத்தில் ஆலயம் எதையும் நான்
காணவில்லை. சர்வவல்லமையுள்ள தேவனா
கிய கர்த்தரும் ஆட்டுக்குட்டியானவருமே
அதன் ஆலயமாக இருக்கின்றனர். 23அந்ந
கரத்துக்கு ஒளி தர சூரியனோ சந்திரனோ
தேவையில்லை. தேவனுடைய மகிமை அங்கு
ஒளி வீசுகிறது. ஆட்டுக்குட்டியானவரே அங்கு
ஒளியாக இருக்கிறார். 24இரட்சிக்கப்படுகிற மக்
கள் அனைவரும் அதின் ஒளியில் நடப்பார்
கள். உலகில் உள்ள அரசர்கள் தம் மகிமையை
அந்நகருக்குள் கொண்டு வருவார்கள். 25எந்நா
ளிலும் நகரத்தின் வாசல் கதவுகள் அடைக்

---

**ஸ்தாதி** 1 ஸ்தாதி 200 அடிகள் நீளம் கொண்டது. ரோமானிய மைலில் எட்டில் ஒரு பங்கு.

கப்படாமல் இருக்கும். ஏனென்றால் அந்நகரில்
இரவு என்பதே இல்லை. 26அவர்கள் தேசங்க
ளின் மகிமையும் கௌரவமும் அதற்குள்
கொண்டு வரப்படும். 27சுத்தமற்ற எதுவும் அந்ந
கருக்குள் நுழைவதில்லை. வெட்கப்படத்தக்க
செயல்களைச் செய்பவர்களும் பொய் சொல்
பவர்களும் அந்நகருக்குள் பிரவேசிப்ப
தில்லை. ஆட்டுக்குட்டியானவரின் ஜீவப்புத்த
கத்தில் எவருடைய பெயர்கள் எழுதப்பட்
டுள்ளனவோ அவர்கள் மட்டுமே அங்கு போக
முடியும்.

22 பின்னர் அந்தத் தூதன் ஜீவதண்ணீர்
ஓடுகின்ற ஆற்றினை எனக்குக் காட்டி
னான். அது பளிங்குபோன்று பிரகாசமாக
இருந்தது. அது தேவனும் ஆட்டுக் குட்டியானவ
ரும் இருந்த சிம்மாசனத்தில் இருந்து பாய்ந்தது.
2அது நகரத்தெருவின் நடுவில் பாய்ந்தது.
அந்த ஆற்றின் ஒவ்வொரு கரையிலும் வாழ்
வின் மரம் இருந்தது. அது ஆண்டுக்குப் பன்னி
ரண்டு முறை கனிகளைத் தருகிறது. ஒவ்
வொரு மாதமும் அது கனிதருகிறது. அம்மரத்
தின் இலைகள் மக்களின் நோயைக் குணமாக்
கும் தன்மையுடையவை. 3தேவனால் குற்றம்
என நியாயந்தீர்க்கப்படுகிற எதுவும் அந்ந
கருக்குள் இருக்காது. தேவனுடைய சிம்மாசன
மும் ஆட்டுக்குட்டியானவரும் அங்கே இருப்
பார்கள். 4தேவனுடைய ஊழியக்காரர்கள்
அவரை வழிபடுவர். அவர்கள் அவரது முகத்
தைப் பார்ப்பார்கள். அவர்களின் நெற்றியில்
தேவனுடைய பெயர் எழுதப்பட்டிருக்கும்.
5அங்கு மீண்டும் இரவு வராது. அங்குள்ள
மக்களுக்கு விளக்கின் ஒளியோ சூரியனின்
ஒளியோ தேவைப்படாது. தேவனாகிய கர்த்
தரே அவர்களுக்கு வெளிச்சம் தருவார். அவர்
கள் அரசர்களைப்போன்று எல்லாக் காலங்
களிலும் அரசாளுவர்.

6அந்தத் தூதன் என்னிடம், “இந்த வார்த்தை
கள் உண்மையானவை, நம்பத் தகுந்தவை.
பரிசுத்த தீர்க்கதரிசிகளின் ஆவிகளின் தேவ
னாக இருக்கிற கர்த்தர் உடனடியாக என்ன
நடக்க வேண்டுமென தம் ஊழியர்களுக்குக்
காட்ட தன் தூதனை அனுப்பினார்.”

7“இதோ, சீக்கிரமாய் வருகிறேன். இந்த
நூலில் உள்ள தீர்க்கதரிசன வசனங்களைக்
கடைப்பிடிக்கிறவன் ஆசீர்வதிக்கப்படுவான்”
என்றான்.

8நான் யோவான், நானே இவற்றைக் காண
வும் கேட்கவும் செய்தேன். இவற்றை நான்
பார்த்தும் கேட்டும் முடிந்த பின்னால், இவற்
றை எனக்கு காட்டிய அத் தூதனின் கால்களில்
விழுந்து வணங்கக் குனிந்தேன். 9ஆனால்
அத்தூதன் என்னிடம், “என்னை வணங்க
வேண்டாம். நானும் உன்னைப்போல ஒரு
ஊழியன் மட்டுமே. தீர்க்கதரிசிகளாகிய உன்
சகோதரர்களைப் போன்றவன் நான். இந்நூ
லிலுள்ள வசனங்களுக்குக் கீழ்ப்படிகிற மற்ற
வர்களைப்போல நானும் ஒருவனே. நீ
தேவனை வணங்கு” என்றான்.

10மேலும் அத்தூதன் என்னிடம், “இந்
நூலில் உள்ள தீர்க்கதரிசனமான வசனங்களை
இரகசியம் போல் மூடிவைக்க வேண்டாம்.
இவை நிகழ்வதற்குரிய காலம் நெருங்கிக்
கொண்டிருக்கிறது. 11அநியாயம் செய்கிறவன்
தொடர்ந்து அநியாயம் செய்யட்டும். அசுத்த
மாய் இருக்கிறவன் மேலும் அசுத்தமாய் இருக்
கட்டும். பரிசுத்தவான் மேலும் பரிசுத்தவா
னாய் இருக்கட்டும்.

12கவனி! நான் விரைவில் வருவேன். என்
னோடு பலன்களைக் கொண்டுவருவேன். ஒவ்
வொருவனுக்கும் அவனவனுடைய செயல்
களுக்கு பலன் அளிப்பேன். 13நானே அல்பா
வும் ஒமேகாவுமாக இருக்கிறேன்; நானே முந்தி
னவரும், பிந்தினவருமாய் இருக்கிறேன்.
நானே துவக்கமும் முடிவுமாய் இருக்கிறேன்.

14“தேவனுடைய கட்டளைகளின்படி செய்கி
றவர்கள் பாக்கியவான்கள். அவர்களுக்கு
வாழ்வின் மரத்தில் உள்ள கனிகளைப் புசிப்
பதற்கு உரிமை இருக்கும். அவர்கள் வாசல்
வழியாக நகரத்துக்குள் நுழைய முடியும். 15நக
ரத்துக்கு வெளியே, நாய் போன்றவர்களும்,
சூனியக்காரர்களும், விபசாரகர்களும்,
கொலைகாரர்களும், உருவ வழிபாடு செய்ப
வர்களும், பொய்யை விரும்பி, அதின்படி
செய்பவர்களும் இருப்பார்கள்.

16“இயேசுவாகிய நான் சபைகளில் இவற்
றை உங்களுக்குச் சொல்லும் பொருட்டு என்
தூதனை அனுப்பினேன். நான் தாவீதின்
குடும்ப வாரிசு. நான் பிரகாசமான விடி
வெள்ளியாக இருக்கிறேன்” என்றார்.

17ஆவியானவரும் மணமகளும் (சபையும்)
“வாருங்கள்” என்கிறார்கள். இதைக் கேட்பவர்
களும் “வாருங்கள்” என்று சொல்லவேண்டும்.
தாகமாய் இருக்கிறவன் வருவானாக. விருப்
பம் உள்ளவன் ஜீவ தண்ணீரைப் பெறுவா
னாக. 18இந்நூலில் உள்ள தீர்க்கதரிசன வசனங்
களைக் கேட்கிற யாவருக்கும் நான் சாட்சியாக
எச்சரிக்கிறேன். “எவனாவது ஒருவன் இவை
களோடு எதையாவது கூட்டினால் இந்நூலில்
எழுதப்பட்டிருக்கிற துன்பங்களை தேவன்
அவன் மேல் கூட்டுவார்.

19எவனாவது ஒருவன் தீர்க்கதரிசனப்
புத்தக வசனங்களிலிருந்து எதையேனும் நீக்கி
னால், இந்நூலில் எழுதப்பட்டிருக்கிற வாழ்
வின் மரத்திலிருந்தும் பரிசுத்த நகரிலிருந்தும்
அவனுடைய பங்கைத் தேவன் நீக்கி விடுவார்.

20இவ்வார்த்தைகள் உண்மையென சாட்சி
யாய் அறிவிக்கிறவர் இயேசுவே. இப்போது
அவர், “ஆம், நான் விரைவில் வருகிறேன்”
என்று சொல்கிறார்.

ஆமென். கர்த்தராகிய இயேசுவே, வாரும்!

21கர்த்தராகிய இயேசுவின் கிருபை உங்கள்
அனைவரோடும் இருப்பதாக!

# License Agreement for Bible Texts

***World Bible Translation Center***
***Last Updated: September 21, 2006***



World Bible Translation Center
P.O. Box 820648
Fort Worth, Texas 76182, USA
Telephone: 1-817-595-1664
Toll-Free in US: 1-888-54-BIBLE
E-mail: info@wbtc.com

**WBTC's web site –** World Bible Translation Center's web site: http://www.wbtc.org

**Order online –** To order a copy of our texts online, go to: http://www.wbtc.org

**Current license agreement –** *This license is subject to change without notice. The current license can be found at:* http://www.wbtc.org/downloads/biblelicense.htm

**Trouble viewing this file –** If the text in this document does not display correctly, use Adobe Acrobat Reader 5.0 or higher. Download Adobe Acrobat Reader from:
http://www.adobe.com/products/acrobat/readstep2.html

**Viewing Chinese or Korean PDFs –** To view the Chinese or Korean PDFs, it may be necessary to download the Chinese Simplified or Korean font pack from Adobe. Download the font packs from:
http://www.adobe.com/products/acrobat/acrrasianfontpack.html